# தேவாரத் திருப்பதிகங்கள்



கங்கை வெளியீடு

அடங்கன்முறை

# தேவாரத் திருப்பதிகங்கள்

*பதிப்பாசிரியர்*

பேராசிரியர். அ.ச.ஞானசம்பந்தன்






கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.

| | | | |
|---|---|---|---|
| முதற்பதிப்பு | : | ஜுலை | 1998 |
| நான்காம் பதிப்பு | : | அக்டோபர் | 2002 |
| ஏழாம் பதிப்பு | : | ஆகஸ்ட் | 2013 |
| எட்டாம் பதிப்பு | : | ஜனவரி | 2016 |
| ஒன்பதாம் பதிப்பு | : | செப்டம்பர் | 2017 |



24-7-98 அன்று நடைபெற்ற சேக்கிழார் விழாவில் வெளியிடப் பெற்றது.

**விலை : ரூ. 800.00**

---

| | | |
|---|---|---|
| Title | : | ADANGANMURAI THEVARA THIRUPPATHIKANGAL |
| Editor | : | A.S. GNANASAMBANDAN |
| Subject | : | Devotional Songs |
| Language | : | Tamil |
| Edition | : | Ninth Edition, September 2017 |
| Pages | : | 148+1440=1588 |
| Published by | : | GANGAI PUTHAKA NILAYAM<br>23, Deenadayalu Street,<br>Thyagarayanagar, Chennai - 17. |
| Price | : | Rs. 800.00 |

---

Printed at : Bala Offset, Chennai - 42. Ph : 22431730 / 43037730

# பதிப்பாசிரியன் முன்னுரை

**(அ. ச. ஞானசம்பந்தன்)**

மிக மிக இளவயதிலேயே தந்தையார் பெருஞ்சொல் விளக்கனார் அ. மு. சரவண முதலியார் அவர்களோடு சொற்பொழிவுகளுக்குச் செல்லும் வாய்ப்பை இறைவன் தந்தான். 1925இல் (9ஆவது வயதில்)மேடையேறத் தொடங்கியதிலிருந்து, தேவாரம், திருவாசகம், பெரியபுராணம் ஆகிய நூல்களைக் கற்கவும், மனப்பாடம் செய்யவும் ஓர் இன்றியமையாமை ஏற்பட்டது. அன்றியும் 1925 முதல் 1940 வரை லால்குடி, பூவாளூர், திருமங்கலம் ஆகிய ஊர்களில் வசந்த உற்சவம் ஒவ்வொரு ஊரிலும், பத்து நாட்களுக்கு மிகச் சிறப்பாக நடைபெற்றுவந்ததைக் கண்டுள்ளேன். இவ்விழாக்களில் "அடங்கன் முறை அய்யா" என்று சொல்லப்படும் வேதாரண்யம் அருணாசல தேசிகர், வைத்தியலிங்க தேசிகர், குரங்காடுதுறை சுப்ரமணிய தேசிகர், திருக்களர் சுந்தரேச தேசிகர், சாமிஅய்யா தேசிகர் ஆகியவருடன் திருநெல்வேலி சுந்தரமூர்த்தி ஓதுவா மூர்த்திகள் முதலிய பேரிசைவாணர்களின் தேவாரக் குழுவின் இசையை இந்த முப்பது நாட்களும் கேட்கும் வாய்ப்பு, பல பிறப்புகளில் செய்த புண்ணியத்தின் பயனாக அந்த வயதிலேயே கிடைத்தது.

இக்காரணங்களால் தேவாரங்களிலும் திருவாசகத்திலும் எல்லையற்ற ஈடுபாடும் அவற்றை ஓதுவார்கள் உள்ளம் உருகிப் பாடும்பொழுது தோன்றும் உணர்வும் அந்த இளவயதில் மிகப் பெரிய தாக்கத்தை என்பால் ஏற்படுத்தின. வாழ்க்கையின் எந்தச் சந்தர்ப்பத்திலும், எந்தச் சூழ்நிலையிலும், எந்த நிகழ்ச்சிகளிலும், அவற்றிற்கு ஏற்ற முறையில் பாடக் கூடிய பண்கள் தேவாரத்தில் அமைந்திருப்பதை நாளாவட்டத்தில் அறிந்துகொள்ள முடிந்தது. அந்த இளவயதில், பாட்டின் பொருளை உணரமுடியாத நிலையிலும் பாடல்களின் இசை அமைப்பும், உணர்ந்து பாடும் ஓதுவா மூர்த்திகளின் பாடும் முறையும் பெரும் ஈடுபாட்டை உண்டாக்கின என்பதில் ஐயமில்லை. மிக இளவயதில் ஏற்பட்ட இந்தத் தாக்கம் சென்ற 72 ஆண்டுகளாக உள்ளத்தின் எங்கோ ஒரு மூலையில் தன் கடமையைச் செய்து வந்துள்ளது.

1935 முதல் கல்லூரி நாட்களில் தேவாரங்களில் அதிகம் ஈடுபட வாய்ப்பு ஏற்படவில்லை. ஆனாலும் வாரந்தோறும் தவறாமல் சொற்பொழிவுக்காக வெளியூர் செல்லும் பழக்கம் இருந்து வந்தது. அம்முறையில் பிறர் பேசும் பேச்சுக்களைக் கேட்கும்

வாய்ப்பும் கிடைத்தது. அவர்களில் பெரும்பான்மையானவர்கள் மரபு பற்றியே பேசினார்கள். ஆதலின் ஓர் எதிர்ப்பு உணர்வும் உள்ளத்தில் தோன்றி வளரலாயிற்று. மாபெரும் புரட்சிகளைச் செய்த திருஞானசம்பந்தரிடம்கூட அக்காலச் சைவப் பெருமக்கள் எத்தகைய புதுமையையும் காணவில்லை. திருநீலகண்ட யாழ்ப்பாணரை, பிள்ளையார் உடன்வைத்துக் கொண்டதிலும் இந்தச் சைவப் பெருமக்கள் எவ்விதப் புதுமையையும் காண வில்லை. 1940களில் பகுத்தறிவு இயக்கம் வலுப்பட ஆரம்பித்த பொழுது அவர்களது வினாக்களுக்கு விடையிறுக்கும் நிலையிலும் அவர்கள் இல்லை. நாயன்மார்களுடைய வரலாறுகளும் அவர்கள் பாடிய பாடல்களும் ஆராய்ச்சிக்கோ, வினாவிற்கோ அப்பாற் பட்டவை என்று இப்பெருமக்கள் கருதி வந்தனர்; கூறி வந்தனர். இதன் பயனாக 1940களில் மிகப் பெரும்பான்மையான சைவ இளைஞர்கள்கூடப் பெரியபுராணம், தேவாரம் என்பவற்றில் எவ்வித ஈடுபாடும் இல்லாமல் இருந்தனர். அம்மட்டோடு இல்லாமல் பகுத்தறிவுவாதிகளின் தாக்கத்தால் மேலும் குழம்பினர். இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் இவ்விளைஞர்கள் தேவார, திருவாசகங்களைக் கற்காமல் இருந்ததில் வியப்பு இல்லை; இவற்றைக் கற்பது தவறு என்று கூறிய பகுத்தறிவுவாதிகளில் ஒருவர்கூட, தேவாரம், திருவாசகம், பெரியபுராணம், கம்பராமாயணம் ஆகியவற்றில் ஒரு பாடலைக்கூடப் படிக்க வில்லை. படிக்காமலேயே இதனைப் படிப்பது தவறு என்று ஒருவர் கூறினார்; படிக்காமலேயே அந்த இளைஞர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

காலம் ஓடிச் சென்றது. இப்பொழுது நிலைமை பெரும்பாலும் மாறிவிட்டது என்று சொல்லலாம். ஆங்காங்கே சிறிய கோயில் முதல் பெரிய கோயில்வரை எல்லாக் கோயில்களிலும் கூட்டம் நிரம்பி வழிவதைக் காணலாம். தெய்வங்களைப் பற்றி இக்காலக் கவிஞர்கள் பலரும் பாடியவற்றை இசையமைப்பாளர்கள் நல்ல முறையில் இசையமைப்புச் செய்துள்ளமையால் அவை பல இடங்களிலும் பாடப் பெறுகின்றன. ஆனால் தேவார, திருவாசகங்கள் போன்ற பாடல்களில் காணப்பெறும் கருத்தாழமும் மந்திர சக்தியும் இக்காலப் பாடல்களில் இல்லையென்பது தெளிவு. இப்படிப்பட்ட நிலையில் ஏழு திருமுறைகளையும் முடிந்தால் ஏனைய ஐந்து திருமுறைகளையும்கூடப் பதிப்பித்து வெளியிட வேண்டும் என்று எழுந்த எண்ணம் என்னுடைய மனத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. ஆனால் இம்மாபெரும் பணியைச் செய்யத் தேவையான பெரும்பொருளைச் சேகரிக்கும் ஆற்றல் என்பால் இல்லை என்பதை அறிந்து என் விருப்பத்தை வெளியிடாமல் இருந்துவந்தேன். இறைவன் திருவருள் செயற்படத் துவங்கியது. வியப்பிலும் வியப்பு என்னவென்றால் வானதி

திருநாவுக்கரசு மகனார் திரு. இராமநாதன் திடீரென்று தொலைபேசியில் ஒருநாள் என்னை அழைத்தார். மறுநாளே நேரே வந்து முதல் ஏழு திருமுறைகளையும் வெளியிடும் விருப்பத்தைத் தெரிவித்தார். நான் பதிப்பாசிரியனாகப் பணிபுரிய ஏற்றுக் கொண்டால் உடனே அதற்குரிய பணியைத் தொடங்கலாம் என்றார். 'பழம் நழுவிப் பாலில் விழுந்து, பின் அதுவும் நழுவி வாயில் விழுந்த' பழமொழியை நினைவூட்டும் முறையில் சில மணித் துளிகளில் இம்மாபெரும் பணியைத் தொடங்கும் முயற்சி கைகூடலாயிற்று.

**இப்பதிப்பின் வரலாறு:**

தமிழகத்தைப் பொறுத்தவரை சைவ சமயம்பற்றிய பெரும் நூல்களை வெளியிடும் பணியைச் சைவ சித்தாந்த மஹா சமாஜம் 1925 முதல் செய்துவந்தது. அந்த மஹா சமாஜத்தின் தூணாக விளங்கியவர் அமரர் மா. பாலசுப்ரமணிய முதலியார் ஆவார். அவருக்கு உதவியாகக் கடலூர் தி. கி. நாராயணசாமி நாயுடு, தமிழ்த் தென்றல் திரு. வி. க., எஸ். வையாபுரிப் பிள்ளை, சச்சிதானந்தம் பிள்ளை, ருக்மணி குக்கர் உரிமையாளர் சோமசுந்தரம் செட்டியார், பல்கலைச்செல்வர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் ஆகிய பெருமக்கள் மஹாசமாஜத்தை வளர்த்ததுடன் நூல் வெளியிடும் பணியினையும் செய்துவந்தனர். இவருள் மா. பா., தி. கி. நா. நாயுடு, வையாபுரிப் பிள்ளை, திரு. வி. க. ஆகிய நால்வருமே ஏடுகளை வைத்துச் சோதித்து முதன்முதலாக ஏழு திருமுறைகளையும் 1926லும் 1932லும் வெளியிட்டனர். இப் பதிப்புக்கள் என்ன காரணத்தாலோ, டிம்மி அளவில் அச்சிடப் படாமல் கிரௌன் அளவிலேயே வெளியிடப் பெற்றன. திருஞானசம்பந்தர், நாவரசர், சுந்தரர் ஆகியோர் பாடல்கள் இசைப் பாடல்கள் ஆதலின் விருத்தப்பா வடிவுக்கு அடங்காமல் ஐந்து சீர், ஆறு சீர் என்ற முறையில் நீண்டு இருந்தன. கிரௌன் அளவில் இவற்றை அடக்க முடியாமையால் சீர் பிரிக்காமல் வெளியிட்டனர். 1935ஆம் ஆண்டுப் பதிப்பில் மறுபடியும் சீர் பிரித்து எழுத்துக்களைச் சிறிதாக்கி வெளியிட முயன்றனர். அப்படியும் அடங்காத பாடல்களின் அடிகளை மடக்கி, அவ்வடியின் அடிப் பகுதிகளிலேயே அச்சிட்டு வெளியிட்டனர். கடைசிவரை 12 திருமுறைகளையும், கிரௌன் அளவிலேயே வெளியிட்டதால் இக்குறைபாட்டை நீக்க இயலவில்லை.

1940இல் அடங்கன்முறை என்ற பெயரில் ஏழு திருமுறை களையும் ஒன்றாக்கி அப்பாடல்களுக்குத் தொடர் எண் கொடுத்து மிக அற்புதமான முறையில் மா. பா. அவர்கள் வெளியிட்டார்கள். அப்பதிப்பில் எழுத்துக்களைப் பெரிதாக்கியமையின், நாவரசின் கலிவிருத்தப் பாடல்களாகிய திருக்குறுந்தொகையைக் கூட மடக்கி

அச்சடிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. சீர் பிரிக்காமல் இந்நூல் வெளியிடப் பெற்றமையால் பின்னர் வந்தவர்கள் விருப்பம் போல் சீர் பிரித்து வெளியிட்டனர்.

பல ஆண்டுகள் தேவாரத்தை ஆராய்ந்து மா. பா. அவர்கள் தயாரித்த அரும்பொருள் அகராதி யாழ்ப்பாணம் சாமிநாத பண்டிதர் பதிப்புத் தொடங்கி, தருமபுரம், திருப்பனந்தாள் ஆகிய மடங்கள் வெளியிட்ட பதிப்புக்கள்வரை எந்தப் பதிப்பிற்கும் இல்லாத தனிச்சிறப்பு ஆகும். ஏழு திருமுறைகளுக்கும் தொடர்எண் கொடுக்கப்பட்டுவிட்டமையால் ஒரே கருத்து மூவர் பாடல்களில் எங்கெங்கே உள்ளன என்பதை மிகச்சுருக்கமாக, அவ் வெண்களைக் குறிப்பிட்டுக்காட்டுவதன் மூலம் செய்ய முடிந்தது. இவற்றுடன் திருவாசகப்பாடல் எண்ணையும் குறித்துள்ளார். இப்பணியைத் தாம் ஒருவராகவே செய்து முடித்த பெருமை மா. பா. அவர்களையே சாரும்.

அரும்பொருள் அகராதியின் இறுதிப்பகுதியில் சமயகுரவர் மூவரின் பாடல்களுள் வரும் சில கருத்துக்கள் ஆழ்வார் பெருமக்களின் பாடல்களிலும் காணப்படுவதைக் கண்ட மா. பா. ஒப்புமைப்பகுதி என்ற தலைப்பில் இதையும் சேர்த்து வெளியிட்டார்.

அன்றைய சைவ உலகத்திற்கு இது பெரும் கொடுமையாகப் பட்டது. அன்றைய சைவ உலகில் இருந்த மறைமலை அடிகள் முதலான பேறிஞர்கள்கூட நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைத் தொட்டதுகூட இல்லை. அவருள் சிலர் இவற்றைப் படிப்பது பெரும்பாவம் என்றே கருதினர். இந்தக் குறுகிய மனப்பான்மை யாளர்களிடையே மா. பா. ஒப்புமைப் பகுதி வெளியிட்டது பெருங்குழப்பத்தை உண்டாக்கிற்று. அம்மட்டோடு நில்லாமல் மா. பா. அவர்கள் ஆண்டாள் திருப்பாவையையும், பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தையும் சேர்த்துத் திருப்பாவை வியாக்கியானம் என்ற பெயரில் வெளியிட்டார்.

சைவப் பெருமக்களுக்கு இது பொறுக்கவில்லை. அது கண்டு வியப்பு அடைந்த மா. பா. தாம் வெளியிட்ட திருப்பாவை நூலில், பதிப்பாசிரியர் "மயிலை மாதவதாஸன்" என்ற பெயரில் அந்நூலை வெளியிட்டார் என்றாலும் பழஞ் சைவர்கள் அவரைத் தூற்றத் தொடங்கினர். அதன் விளைவாக மா. பா. சைவ சித்தாந்த மஹாசமாஜத்தை விட்டே வெளியேறினார். சமாஜத்தின் செயலாளராக இருந்த அவர், பெருஞ்செல்வராக இருந்தமையாலும் துறவிபோல் வாழ்ந்தமையாலும் 24 மணி நேரத்தையும் சமய வளர்ச்சிக்கே செலவிட்டார். அவர் வெளியேறிய பிறகு வீழ்ச்சி

அடைந்த சைவ சித்தாந்த மஹாசமாஜம் பல்லாண்டு செயலிழந்து நின்று 1980களில் சைவ சித்தாந்தப் பெருமன்றம் என்ற புதிய பெயருடன் பணிபுரியத் தொடங்கியது.

இன்று வெளியாகும் இப்பதிப்பு 1935லும், 40லும், மா. பா. அவர்கள் வெளியிட்ட பதிப்பை முழுவதுமாகப் பின்பற்றியுள்ளது. அவற்றில் இருந்த மிகச்சில அச்சுப் பிழைகள் நீக்கப்பட்டது தவிர வேறு மாற்றம் ஏதும் செய்யப்பெறவில்லை. பின்னர் வந்தவர்கள் தேவாரம்போன்ற இசைப் பாக்களையும், சிந்தாமணிபோன்ற விருத்தப்பாக்களையும் ஒன்றாகக் கருதி விட்டனர். நாலுசீர், ஐந்துசீர், ஆறுசீர் என்ற முறையில் முதல் அடியில் எத்தனை சீரோ அத்தனை சீர்களே அடுத்த அடிகளில் வர வேண்டும் என்று கருதிவிட்டனர்; அவ்வாறே பதிப்பித்தும் விட்டனர்.

திருஞானசம்பந்தர் 19 பண்களிலும், பல புதிய தாளங்களிலும் பாடல்களைப் பாடினார். அவர் பாடலுக்கு அனுசரணையாக இருந்த நரம்புக் கருவி யாழ் என்பதாகும். யாழின் தனித்தனி நரம்புகள் பறித்து (plucking) வாசிக்கப்படுதலின் தனித்தனி சுரங்கள் பேசுமே தவிரக் கமகங்கள் தோன்ற வாய்ப்பே இல்லை. திருஞானசம்பந்தப் பெருமான் காரைக்காலை அடுத்த தருமபுரத்தில் பாடிய "மாதர் மடப்பிடியும்'' என்ற பாடல் பழைய பண் முறையை மாற்றி, கமகப் பொழிவோடு பாடப் பெற்றதாதலின் யாழ்முரி என்ற பெயரைப் பெறலாயிற்று. இதன் விரிவை மதுரை P.T.R. கமலத்தியாகராஜன் அவர்கள் அண்மையில் எழுதி வெளியிட்ட 'இசைத் தமிழின் உண்மை வரலாறு ' என்ற நூலில் காணலாம்.

பிள்ளையாரே ஈரடி மேல்வைப்பு, நாலடி மேல்வைப்பு, மாலை மாற்று, யமகம், திருவிருக்குக்குறள் முதலிய புத்தம் புதிய பண் அமைப்புகளுடன் பாடல்களைப் பாடினார். ஆதலின் இவற்றை எல்லாம் 9ஆம் நூற்றாண்டில் முழு வடிவு பெற்ற விருத்தப் பாடல்களோடு ஒப்ப வைத்து எண்ணுவது சரி அன்று.

சங்க காலத்தில் பரிபாடல், கலிப்பா என்பவை இசைப் பாடல்களாக இருந்தன. அடுத்து, சிலப்பதிகாரத்தின் கானல்வரியில் இசைப்பாடல்கள் இடம் பெற்றன. அவையே வடிவம் மாறி நான்காம் நூற்றாண்டில் காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகங்களாகத் தோன்றின. அவை சற்று விரிவடைந்து ஆறாம் நூற்றாண்டில் நாவரசரின் நான்காம் திருமுறையாக வடிவெடுத்தன. அப்பர் பெருமானும் திருக்குறுந்தொகை, திருநேரிசை, திருவிருத்தம், திருத்தாண்டகம் ஆகிய புதுவகைப் பாடல்களைப் பாடினார். திருவிருத்தம் முதலியவை கட்டளைக் கலித்துறையாக அமைந்துள்ளன. அவருடைய திருத்தாண்டகம்

(ஆறாம் திருமுறை) அவருக்கு முன்னும், பின்னும் தமிழ் இசைப் பாடல்களில் இடம் பெறவில்லை. ஆழ்வாரின் திருநெடுந் தாண்டகம், திருக்குறுந்தாண்டகம், என்பவையும் நாவரசரை அடியொற்றி வந்தவையேயாகும். என்ன காரணத்தினாலோ பிற்காலத்தில் இவ்வகைப் பாடல்கள் தோன்றவே இல்லை. ஆறாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்த நாவரசப் பெருமானின், "பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்'' (6959) என்று தொடங்கும், அடைவுத் திருத்தாண்டகம் ஆழ்ந்து சிந்திப்பதற்கு உரியது. பல்லவர் ஆட்சி ஓரளவு கால்கொண்ட காலம் அது. அவர்கள் அனைவரும் வைதிகர்கள், வேதவழிப்படி யாகம் செய்பவர்கள். அப்படிப்பட்டவர்கள் காலத்தில் தமிழகத்தில் புதிய சிவன் கோயில்கள் கட்டப்பட்டிருக்க மாட்டா. ஆனால் நாவரசரின் இப்பாடல் தமிழகத்தில் அன்று சிறப்புப் பெற்றிருந்த பலவகைக் கோயில்களைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது. (1) பெருங்கோயில் என்று பெயர் பெறும் கோயில்கள் எழுபத்தெட்டு இருந்ததாக இப்பாடல் கூறுகின்றது. இவற்றை அல்லாமல் (2) கரக்கோயில், (3) ஞாழற் கோயில், (4) கொகுடிக் கோயில், (5) இளங்கோயில், (6) மணிக் கோயில், (7) ஆலக்கோயில் என்ற பெயர்கள் அவ்வக் கோயில்கள் அமைந்துள்ள வகையினை ஒட்டி வந்த பெயர்களேயாகும். குடமுழுக்கு நடைபெற வேண்டிய காலத்தில் கருவறையில் உள்ள படிமங்களை எடுத்துத் தனியே ஓரிடத்து வைத்து வழிபடுதல் இன்றும் உண்டு. இதனை "பாலாலயம்'' என்ற வடமொழிப் பெயரால் கூறுவர். இந்த வடமொழிப் பெயர், பெருமான் கூறிய "இளங்கோயில்'' என்ற தமிழ்ச் சொல்லின் மொழிபெயர்ப்பேயாகும். பெருமான் காலத்திலேயே இத்தனை வகைக் கோயில்கள் கட்டப்பட்டு இருந்தன என்பதை அறிகின்றோம்.

திருஞானசம்பந்தர் பதிகங்கள் அனைத்திலும் எட்டாவது பாடல் இலங்கை மன்னன் கைலை மலையெடுத்த கதையைக் கூறும். நாவரசர் பெருமானின் திருத்தாண்டகப் பதிகங்கள் பெரும்பாலானவற்றிலும் பத்தாவது பாடலில் இக்கதையே பேசப் பெறுகிறது. இவ்விருவர் கூற்றிலும் ஒரு வேறுபாட்டைக் காண முடியும். பிள்ளையார் பாடலில் இராவணனை விரல் ஊன்றி நெரித்தார் என்று மட்டுமே கூறப்பட்டிருக்கும். ஆனால் நாவரசர் பாடலில் நெரிபட்டதோடு நிறுத்தாமல், இவன் சாமகானம் பாடிய உடன் அதற்கு மகிழ்ந்த இறைவன் அவனை மன்னித்து அருள் புரிந்தான் என்ற செய்தியும் பாடப் பெற்றிருக்கும். அப்பர் பெருமானின் பாடல்களில் சாமகானம் பாடிய செய்தி பெரும்பாலான பதிகங்களில் வருவதால் இச்செய்தியை வைத்துக் கொண்டு இக்கால ஆராய்ச்சியாளர் சிலர் இராவணனுக்கு, சாமகானம் பாடுமாறு சொல்லிக் கொடுத்தவர் வாகீச முனிவர்

என்றும், இக்குற்றத்திற்காக அவரே நாவரசராகப் பிறந்து, சூலை நோய் என்ற தண்டனையைப் பெற்றார் என்றும் கூறுவர். இவ்வாராய்ச்சி எவ்வித ஆதாரமும் இல்லாத வெற்றுரையாகும்.

இருக்கு வேதத்திலும், கிருஷ்ணயசுர் வேதத்திலும், "ஓங்காரம்'' பேசப்படவில்லை. அதற்குப் பின்னர் ஓங்காரம் சிறப்புப் பெற்று லலிதாதிரிசதியில் "ஏகாட்சரியை'' என்று இடம் பெற்றுள்ளது. நாவரசர் தேவாரத்தில், ஓங்காரத் தொருவன் காண் (6894) (7625) என்றும். ஓங்காரத்து உட் பொருள் தான் ஆயினானை (6920) (7041) என்றெல்லாம் வருவது சிந்தனைக் குரியது. அதுவரை தமிழர் வழிபாட்டு முறையில் அதிகம் இடம் பெறாத ஓங்காரம் நாவரசர் பாடலில் விளக்கம் பெறுவது ஒரு புதுமையாகும்.

தமிழகத்தில் விநாயகர் வழிபாடு எப்போது தோன்றிற்று என்ற ஆராய்ச்சி இன்றும் நடைபெற்று வருகின்றது. சிறுத்தொண்டர் என்ற பரஞ்சோதியார்தான் வாதாபிப் போரில் வெற்றி பெற்றுத் திரும்புகையில் விநாயகரைக் கொண்டுவந்தார் என்ற செய்தியே இதுவரை ஏற்றுக் கொள்ளப்பெற்று வந்தது.

முத்துசாமி தீட்சிதரின் "வாதாபி கணபதிம்பஜேகம்'' என்ற கீர்த்தனையும் இக்கருத்துக்கு அனுசரணையாக இருந்து வந்தது. இதன் எதிராக நாவரசர் பெருமான் பல இடங்களில் முருகவேட்குத் தந்தைகாண் தண் கடமா முகத்தனார்க்குத் தாதைகாண் (6902), அறுமுகனோடானை முகற்கு அப்பன் தன்னை (6983) மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன், (7015) (6379) என்று குறிக்கின்றார்.

எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய "ஆதி சங்கர பகவத் பாதரை'' "ஷண்மத ஸ்தாபனாச்சார்ய'', என்று குறிப்பிடு வார்கள். ஆனால் அவருக்கு இரண்டரை நூற்றாண்டு முற்பட்ட நாவரசர் பெருமான் அறுவகைச் சமயத்தைக் குறிப்பிடுகின்றார். எனவே, காணாபத்யம் தொடங்கி வைணவம் ஈறாக உள்ள அறுவகை அகச் சமயங்களும் நாவரசர் காலத்திலேய சிறந்து விளங்கின என்பதைப் பின்வரும் அவர் பாடல் அறிவிக்கின்றது.

**. . . தாமரையான் நான்முகனுந்தானேயாகி. . . .**
**. . தொண்டர்க்கு அங்கங்கே அறுசமயமாகிநின்ற. . . (6928)**

என்ற இப்பாடலிலிருந்து மும்மூர்த்திகளும் ஒருவனே என்றும் அறுவகைச் சமயத்தாராலும், வெவ்வேறு பெயர்களில்

வழிபடப்படுபவன் இறைவன் ஒருவனே என்றும் நாவரசர் கருதினார் என்பதை அறியமுடியகின்றது.

**புதியது புனைதல்:**

காழிப்பிள்ளையார் பாடத் தொடங்குவதற்கு ஏறத்தாழ 30 ஆண்டுகளுக்கு முன்னரே நாவுக்கரசப் பெருமான் பாடத் தொடங்கி விட்டார். அப்போது அவருக்கு வயது 35 இருக்க வேண்டும். நான்காம் திருமுறையில் உள்ள அவரது பாடல்களில் மூன்று வகைப் பாடல்கள் உள்ளன. 1 முதல் 21 பதிகம்வரை தாளத்தோடு பாடப்படும் இசைப் பாடல்களாகவும், 22 முதல் 79 முடிய திருநேரிசை என்ற பெயரில் உள்ள விருத்தப்பாக்களாகவும், 80 முதல் 113 வரை திருவிருத்தம் என்ற பெயரில் உள்ள விருத்தப்பாக்களாகவும் அமைந்துள்ளன. திருநேரிசை, விருத்தம் ஆகிய இரண்டுமே கட்டளைக் கலித்துறைப் பாடல்களாகும். எனவே, தமிழ் இலக்கியத்தில் முதன்முதலாக விருத்தப்பாக்களை அதிகமாகப் புகுத்திய பெருமை திருநாவுக்கரசரையே சாரும். அதிகமாக என்று கூறுவதன் காரணம் ஒன்று உண்டு. நாவரசர் பெருமானுக்கு 2 நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவராகிய காரைக்காலம்மையார் தமிழ் இலக்கியத்தில் புதுவகைப் பாடல்களை முதன் முதலாகப் புகுத்திய பெருமைக்குரியவர் ஆவார். அவரது "மூத்த திருப்பதிகம்'' இரண்டும் (நட்டபாடை, இந்தளம்) தாளத்துடன் பாடப்படும் இந்தளப் பண்களாகும். அவருடைய "இரட்டை மணிமாலை'' – கட்டளைக் கலித்துறை, வெண்பா என்ற இரண்டு வகைப் புதுமைகளைப் புகுத்தியது. நூற்றுக்கும் மேற்பட்ட வெண்பாக்களைக் கொண்ட "அற்புதத் திருவந்தாதி''யும் அவரது படைப்புதான். அவ்வாறாயின் தமிழ்க் கவிதை உலகில் தாளத்துடன் பாடப்படும் பண்களையும், கட்டளைக் கலித்துறையையும் வெண்பாவையும் முதன்முதலில் புகுத்திய பெருமை அம்மையாரையே சாரும். வெண்பாக்களை அந்தாதியாகத் தொடுக்கும் தனிச்சிறப்பும் அவருக்கே உரியதாகும்.

நாவரசரின் ஐந்தாம் திருமுறை முழுவதும் "திருக்குறுந் தொகை'' என்ற பெயரில் அமைந்துள்ள கலிவிருத்தப் பாடல்களே ஆகும். ஆறாம் திருமுறை முழுவதும்– எண்சீர் நாலடி கொண்ட பாடல்களும் அறுசீர் நாலடி கொண்ட பாடல்களும்– "திருத்தாண்டகம்'' என்ற புதுவகைப் பாடல்களாகும். பண்ணோடு இயைந்த பாடல், கட்டளைக் கலித்துறை, வெண்பா ஆகிய இம்மூன்றும் தமிழ் இலக்கியத்திற்கு அம்மையார் தந்த கொடையாகும். திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் ஆகிய நான்கும் நாவுக்கரசர் தந்த கொடையாகும். தமிழ்ஞானசம்பந்தர், "திருஎழுகூற்றிருக்கை'', "மாலைமாற்று'',

"யமகம்", "திருவிருக்குக் குறள்", "ஈரடிமேல் வைப்பு", "நாலடிமேல் வைப்பு", ஆகிய புதுவகைப் பாடல்களை 7ஆம் நூற்றாண்டில் தமிழ் மொழிக்குக் கொடையாகத் தந்துள்ளார்.

**திருஎழுகூற்றிருக்கை பற்றிய குறிப்பு:**

திரு எழு கூற்றிருக்கை என்ற பகுதி பொருள் சொல்வதற்கு ஓரளவு கடினமானதாகும். பிள்ளையாருக்குப் பிறகு ஒன்றரை நூற்றாண்டு கழித்து வந்த திருமங்கை மன்னர் இம்முறையைப் பின்பற்றி திருஎழு கூற்றிருக்கையை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பாடியுள்ளார்.

அடுத்தபடியாக, பதினைந்தாம் நூற்றாண்டில் அருணகிரியார் இம்முயற்சியில் ஈடுபட்டு ஒருபாடல் பாடியுள்ளார். இவர்களைத் தவிர இன்றுவரை வேறு எந்தக் கவிஞனும் இந்த முயற்சியில் ஈடுபடவில்லை. பிள்ளையார் பாடிய முதல் திருமுறையில் 128ஆவது திருப்பதிகமாகத் திருஎழுகூற்றிருக்கை அமைந்துள்ளது. இப்பாடல் சீர்காழிப் பெருமானைப் பற்றிப் பாடியதாகும். 47 அடிகளை உடைய இப்பாடலில் முதல் ஐந்து வரிகளில் ஒன்று இரண்டு மூன்று – மூன்று இரண்டு ஒன்று எண்களைப் பயன்படுத்தி உள்ளதைக் காணலாம். ஆறு முதல் ஒன்பது வரிகளில் 1, 2, 3, 4..... 3, 2, 1 என்ற முறையிலும் 10 முதல் 14 வரிகளில் 1, 2, 3, 4, 5.... 4, 3, 2, 1 என்ற முறையிலும் பாடியுள்ளமையும் 14 முதல் 19 வரையிலுள்ள வரிகளில் 1 முதல் 6 வரை ஏறு முகத்திலும் 5 முதல் 1 வரை இறங்கு முகத்திலும் பாடியுள்ளமையும் காணலாம். இப்பகுதியில் 6ஆம் எண்ணை "அறுத்தனை " என்ற சொல்லால் காட்டியுள்ளார். அடுத்த பகுதியில் (20 முதல் 24 வரை) ஏழு என்ற எண்ணை குறிப்பு வகையால் உணர்த்த "எழுத்து" என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். அடுத்துள்ள (25–30) வரிகளில் 6 முதல் 1 வரை இறங்கு முகமாக உள்ளதைக் காணலாம். "இகலிய ஐந்து உணர்" (26ஆவது வரி) என்ற தொடரில் ஐந்தாவது எண்ணையும் பயன்படுத்துவதைக் காணலாம். இனி அடுத்து 38ஆவது வரியில் தொடங்கி 42ஆவது வரிக்குள் ஏழு முதல் ஒன்று வரை இறங்கு முகமாக எண்கள் அமைந்துள்ளமை காணலாம்.

எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பழைய பண் முறைகளைப் பின்பற்றியே பாடியுள்ளார். காழிப் பிள்ளையாரை அடியொற்றி இவரும் முடுகு வண்ணத்தில் பதிகங்களை இயற்றியுள்ளார்.

ஆறாம்நூற்றாண்டின் இடைப்பகுதியில் நாவரசர் பெருமானால் தோற்றுவிக்கப்பட்ட இவ்விசைப் பாடல்கள் ஏழாம் நூற்றாண்டின்

தொடக்கத்தில் காழிப் பிள்ளையாரால் பலப்பல வடிவங்களைப் பெறலாயிற்று. எட்டாம் நூற்றாண்டில் வந்த சுந்தரர்கூடப் புதிய முயற்சியில் இறங்காமல் பழைய 18 பண்களை அடித்தளமாகக் கொண்டு பாடியுள்ளார். இப்பழைய பண்கள் என்ன இலக்கணம் வாய்ந்தவை, இக்காலத்தில் எந்த ராகத்தோடு இவை பொருந்து கின்றன, என்பவை பற்றிப் பல ஆராய்ச்சிகள் செய்யப்பெற்று வருகின்றன. விபுலானந்த அடிகளாரின் "யாழ் நூல்" விஞ்ஞான அடிப்படையில் இந்த ஆய்வை மேற்கொண்டது. பரம்பரையாகத் தேவாரத்தைப் பாடி வரும் ஓதுவார்கள் என்ன ராகம் பாடுகிறார்களோ அவையே இன்று காணப்பெறும் கர்நாடக ராகங்களுடன் ஒப்புமை செய்யப்பெற்று வருகின்றன.

தேவாரங்களைப் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கும் ஒருகாலத்தில் இசை அமைக்கப் பெற்றிருந்தமையை பிரபந்தத்தின் வெளியீடுகளில் காணலாம். பிரபந்தப் பதிப்புகளில் நாளா வட்டத்தில் இப் பண்களின் பெயர்கள் பதிகத்தின் தொடக்கத்தில் எழுதப் பெறாமல் பதிகத்தின் முடிவில் சிறு எழுத்துக்களில் குறிக்கப் பெற்றுள்ளன. மேலும் இந்தப் பண்களைப் பிரபந்தப் பாடல்களுக்கு அமைத்துப் பாடும் பழக்கம் மிகப் பழங் காலத்திலேயே கைவிடப்பட்டது என்பது தெரியவருகிறது. முதலில் பதிகங்களின் தொடக்கத்தில் குறிக்கப் பெற்றிருந்த பண்களின் பெயர்கள் பதிகத்தின் இறுதிக்குச் சென்றமை இப்பழம் பண்களின் பெயர்களை ஒழித்துக்கட்டுவதற்குரிய முயற்சியே ஆகும். இதுபற்றிச் சிந்திக்கும்பொழுது இரண்டு காரணங்களை அடிப்படையாகக் கொண்டு இந்த மாற்றம் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று நினைப்பதில் தவறு இல்லை.

தென்கலை, வடகலை போராட்டம் வலுப்பெற்ற காலத்தில் வடகலையார் போற்றும் வேதத்தைப்போல் தமிழ் வேதமாகிய பிரபந்தங்களையும் பாட வேண்டுமென்று முனைந்துள்ளனர். அதன் பயனாகத் திவ்யப் பிரபந்தத்திலுள்ள பல்வேறு வகைப்பட்ட இசைப் பாடல்களையும் வேதங்களைப் போன்றே பாட முற்பட்டது முதற் காரணமாகும். இரண்டாவது காரணம், சைவ, வைணவப் போராட்டத்தின் விளைவாகும். பழைய பண் முறையில் பிரபந்தத்தைப் பாடினால் அவை தேவாரங்களைப்போல அமைந்து விடும் என்ற காரணத்தினால் பண்களின் பெயர்களை அடிக்குறிப்பில் பதிப்பித்தனர்.

இசைப்பாடல்கள் இசைக்கும், தாளத்திற்கும் முதலிடம் தந்து பாடப் பெற்றமையின் சீர்ப் பிரிவினையில் முதல் அடிக்கும், இரண்டாம் அடிக்கும் வேறுபாடு பெற்றிருப்பது உண்மை. பிள்ளையாரின் ஒரே பாடலிற்கூட முதல் அடியில் நான்கு சீரும் இரண்டாம் அடியில் ஐந்து சீரும் மூன்றாம் அடியில் நான்கு சீரும்

நான்காம் அடியில் ஐந்து சீரும் பெற்றுள்ளதைக் காணலாம். சமாஜப் பதிப்பு நீங்லாக ஏனைய பதிப்புகளில் விருத்தப் பாக்களோடு இவற்றை ஒப்பவைத்து எண்ணி, ஒன்று மூன்றாம் அடிகளில் உள்ள நான்கு சீர்களையும் ஐந்து சீர்களாகப் பிரித்து நான்கு அடிகளும் ஒரே மாதிரி ஐந்து சீர்களைப் பெற்றுவருமாறு பதிப்பித்தனர். யாழ்ப்பாண சாமிநாத பண்டிதர் பதிப்பும் இந்த முறைக்கு விலக்கல்ல. இசைப் பாடலின் வேறுபாட்டை அறிந்து நான்கு அடிகளும் ஒரேமாதிரி அமைய வேண்டும் என்ற கருத்தை ஒதுக்கிவிட்டுப் பாடப் பெறுகின்ற முறையில் எப்படிச் சீர்கள் அமைகின்றனவோ அப்படியே பதிப்பித்த பெருமை மா. பா. அவர்களுக்கே உரியதாகும். அதனால்தான் இப்பதிப்பு சமாஜப் பதிப்பை அடியொற்றி அதனை அப்படியே ஏற்றுக்கொண்டு வெளி வருகிறது. 1940இல் வெளிவந்த அடங்கன்முறை என்னிடம் உள்ளது. ஆனால் 1932–35இல் வெளிவந்த ஒன்று முதல் மூன்று, நான்கு முதல் ஆறு, ஏழு ஆகிய திருமுறைகள், என்னிடம் இருந்தவை காணாமல் போய்விட்டமையால், அவற்றைத் தேடும் பணியில் ஈடு பட்டேன். இறைவன் திருவருள் கூடிவந்தமையின், இன்று நம்மிடையே வாழும் மாபெரும் சைவ சித்தாந்தியும், மூதறிஞரும், திருமுறை வல்லுனருமாகிய திருவாளர் சி. அருணைவடிவேல் முதலியார் அவர்களிடம் இப்பழைய நூல்கள் இருந்தமையால் அவர் உதவியை நாடினேன். அவர்களும் மனமுவந்து கொடுத்து உதவினார்கள். எனவே 65 ஆண்டுகளுக்குப் பிறகு அப்பழைய பதிப்பை வெளிக்கொணரும் முயற்சிக்கு உறுதுணையாக இருந்த திரு. முதலியார் அவர்கட்கும், அவருடைய மகனார் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர். அ. பாலறாவாயன் அவர்களுக்கும் நன்றி உரியதாகும்.

**பழமையா? புதுமையா?**

ஏறத்தாழ 40 ஆண்டுகளுக்கு முன்னர் 'மர்ரே கம்பெனி' தலைவரான திரு எஸ். ராஜம் அவர்கள் சங்க நூல்கள், பிரபந்தம், இராமாயணம் ஆகிய நூல்களை அச்சிட்டு வெளியிட விரும்பிய பொழுது அதற்காக ஒரு பதிப்பாசிரியர் குழு நிர்மாணிக்கப் பட்டது. அக்குழு சங்க இலக்கியப் பாடல்களில் சொற்களைப் பிரித்துப் போட்டால்ஒழிய உண்மையான பயன் கிட்டாது என்ற முடிவுக்கு வந்து, பலருடைய எதிர்ப்புக்கு இடையே, சங்கப் பாடல்களையும், பிரபந்தம், இராமாயணம் ஆகியவற்றையும் வெறும் சீர், சந்தி மட்டும் பிரிக்காமல் சொற்களையே பிரித்து அச்சிட்டது. அதன் பயனாக உரையாசிரியர் உதவி இல்லாமல் பலரும் இப்பாடல்களைப் படித்துப் பெருமளவு புரிந்து கொள்ள முடிந்தது. அக்குழுவில் இடம் பெற்றிருந்தவர்களில் நான் ஒருவன் மட்டுமே எஞ்சியுள்ளேன். திருமுறைகளைச் சொல் பிரித்து அச்சிட்டால் பலரும் படித்துப்

புரிந்துகொள்ள வாய்ப்பாக இருக்கும் என்பதை நன்கு அறிந்து இருந்தேன். ஒரு, இரு பதிகங்களை சொல் பிரித்து எழுதிப் பார்த்த பொழுது பெருங்குறை ஒன்று தட்டுப்பட்டது. பலகாலம் தேவாரத்தில் ஊடாடிய காரணத்தால் அக்குறை என்ன என்பதை எளிதில் அறிந்து கொள்ள முடிந்தது.

பொதுவாகத் தேவாரப் பாடல்களும், சிறப்பாகத் திருஞானசம்பந்தர் பாடல்களாகிய முதல் மூன்று திருமுறைகளும் இறைவன் புகழைப் பாடும் வெறும் இசைப் பாடல்கள் மட்டும் அல்ல என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். இறைவன் புகழ் பாடும் பாடல்கள் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் ஆகியவற்றில் தொடங்கி இருபதாம் நூற்றாண்டில் வள்ளலார், பாரதியார் வரை தொடர்கின்றன. ஆனால் அடங்கன்முறை என்று சொல்லப்படும் ஏழு திருமுறைகளும் மேலே குறிப்பிடப்பட்ட தெய்வம் பற்றிய பாடல்களில் இருந்து முற்றிலும் வேறானவை என்பதை அறிந்து கொள்ள வேண்டும். இசைப்பா என்ற முறையில் இவை வேறானவை என்பது ஒருபுறமிக்க, சொல் ஆட்சியில் இப் பாடல்களில் ஒரு புதுமை காணப்படுகிறது. இரண்டு அல்லது மூன்றாம் அடியில் காணப்படும் சொற்களைச் சந்தி, சீர் என்று பிரிக்காமல் அப்படியே படித்தால் புதுமையான ஒரு வகை ஓசை தோன்றக் காணலாம். இப்படிப் படிக்கும் முறையில், விளம்பமாகப் படித்தாலும், இடைநிலையாகப் படித்தாலும், துரிதமாகப் படித்தாலும் இச்சொற்கள் சேர்ந்து இசைக்கும் பொழுது ஒரு வகையான ஓசை தோன்றுவதைக் காண முடியும். இதனையே மந்திரங்கள் என்று கூறினர்.

காழிப்பிள்ளையார் பாடல்களில் பல பதிகங்கள் "திருவிராகம்" என்ற தலைப்பைப் பெற்றிருக்கும். இச்சொல்லின் பொருள் "முடுகு" வைத்து பாடுதல் என்பதாகும். "முடுகு வண்ணம்" என்பதைத் தொல்காப்பியமே குறிப்பிடுவதால் முடுகு வைத்துப் பாடுவது என்பது மிகப் பழமையான ஒன்று என்று தெரிகின்றது. ஆனால் ஏழாம் நூற்றாண்டில் காழிப்பிள்ளையாரும் 15ஆம் நூற்றாண்டில் அருணகிரியாரும் தவிர வேறு யாரும் இம்முடுகு முறையை அதிகம் பயன்படுத்தவில்லை.

காழிப்பிள்ளையார் பாடிய திருவிராகப் பாடல்களில் பெரும்பாலும் இரண்டு, நான்காம் அடிகள் வெவ்வேறு முடுகு களைப் பெற்று அமைந்திருத்தலால் அவற்றைப் பாடும்பொழுது அல்லது படிக்கும் பொழுது மிகக் கவனமாக இருக்க வேண்டும். இசை அமைப்பிலும், தாளக் கட்டுப்பாட்டிலும் இப்பாடல்கள்

அமைந்திருப்பதால் அதனைக் கேட்டு இன்பம் அடையும் நாம் மேலே செல்வதில்லை. அமைதியாக ஓரிடத்தில் இருந்து இப்பாடல்களை மெல்லச் சொல்லிப் பார்த்தால் உண்டாகும் ஓசைநயம் ஏதோ மந்திரங்களை உச்சரிப்பதுபோன்ற நினைவை உண்டாக்கும். காழிப்பிள்ளையாரின் எல்லாப் பாடல்களுக்கும் இவை பொதுத்தன்மை என்றாலும், திருவிராகப் பாடல்களில் இவற்றை அதிகம் காண முடியும்.

இப்பாடல்கள் மந்திரங்கள் என்ற எண்ணம் வலுப்பெற வேறு சில கருத்துக்களும் உதவின. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த காழிப்பிள்ளையாரும் அதே நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் வாழ்ந்த நம்மாழ்வாரும் பல வகையிலும் ஒற்றுமை உடையவர்கள். இருவரும் மூன்று வயதிலேயே இறை உணர்வை முழுவதுமாகப் பெற்றுப் பாடியவர்கள் என்பதை நாம் அறிவோம். இவர்கள் இருவரும் தங்கள் பாடல்கள் தங்களுடைய மனம், சொல், சிந்தனை என்பவற்றின் துணைக்கொண்டு தோன்றியவை அல்ல என்பதையும் தங்களைக் கருவியாகக் கொண்டு இறைவனே பேசுகிறான் என்பதையும் வெளிப்படையாகக் கூறியுள்ளனர்.

'திரு இலம்பயங்கோட்டூர்' திருப்பதிகத்தில் 825ஆம் பாடலில் "எனதுரை தனதுரையாக" எனப் பிள்ளையார் கூறுவதைக் கூர்ந்து நோக்க வேண்டும். சுமார் நூறாண்டு கழித்துத் தோன்றிய சடகோபர் இதே கருத்தைச் சற்று விரிவாக்கிப் பின்வருமாறு பாடுவதைக் காணலாம்.

**என்னை தன்னாக்கி என்னால் தன்னை**
**இன்தமிழ் பாடிய ஈசனை**

**(நாலாயிர திவ்ய பிரபந்தம் – 2332)**

என்றும்,

**என்நெஞ்சத்து உள்ளிருந்து,**
**இங்கு இருந்தமிழ் நூல் இவை மொழிந்து – (3132)**

என்றும் பாடுவதை நோக்கும் பொழுது காழிப்பிள்ளையாரின் நாலாயிரத்துச் சொச்சம் பாடல்களும் நம்மாழ்வாரின் ஆயிரத்துச் சொச்சம் பாடல்களும் (திருவாய்மொழி) இவர்களைக் கருவியாகக் கொண்டு உயிர்களை உய்விப்பதற்காக இறைவனே பாடினான் என்பதை எளிதாக உணர முடியும்.

இக்கருத்து சத்தியமானது என்று அறிவிக்க இவ்விருவர் பாடல்களிலும் காணப்படும் ஓர் உண்மையை இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டும். இவர்கள் இருவரும் பதிகம் என்ற பெயரில் பத்துப் பாடல்களை ஒவ்வொரு தலத்திலும் உறைகின்ற இறைவன்

பெயரில் பாடினர். பத்தாவது பாடலை அடுத்து 11ஆவது பாடல் ஒன்று, ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் காணப்பெறும்.

வைணவப் பெருமக்கள் இந்தப் பதினோராம் பாடலை "பலஸ்ருதி" என்று கூறுவர். ஸ்ருதி என்றால் வேத வாக்கியம் என்று பொருள்படும். வேதம் எப்படி மாறாததோ அதுபோல இந்தப் பத்துப் பாடல்களும் தவறாமல் பயன் தரும் என்ற கருத்தில் பலனைச் சொல்கின்ற ஸ்ருதி வாக்கியம் என்ற பொருளில் பதினோராவது பாடலைப் பல ஸ்ருதி என்று கூறினர். பிள்ளையார், நம்மாழ்வார் ஆகியோர் பாடல்களில் பத்துப் பாடல்களை அடுத்து வரும் பதினோராவது பாடல் மேலே உள்ள பத்துப் பாடல்களையும் படிப்பவர் இன்னபயனைப் பெறுவார்கள் என்று சொல்வதாகும். பலனைச் சொல்கின்ற ஸ்ருதி வாக்கியம் என்ற பெயர் எவ்வளவு பொருத்தமானது என்பதை இப்பொழுது நாம் அறிய முடிகின்றது.

ஒருவர் தாம் பாடிய பாடல்களைப் படிப்பவர்கள் இன்ன பலனை அடைவார்கள் என்று கூறுவது அவ்வளவு பொருத்தம் உடையதா என்ற வினாத் தோன்றுவது நியாயமே. இந்த ஐயம் தோன்றாமல் இருப்பதற்காகத்தான் போலும், 'இப்பாடல்கள் எம்முடையவை அல்ல; இறைவனே பாடினான்' என்ற கருத்தைத் தெரிவிக்கும் வகையில் எனதுரை அன்று இவை தனதுரை என்று பிள்ளையாரும், 'இன்கவி பாடுவித்த ஈசன்' என்று சொல்லாமல். 'இன்கவி பாடிய ஈசன்' என்று நம்மாழ்வாரும் கூறிப் போந்தனர். எனவே, இப்பாடல்கள் மந்திரங்கள் என்பது வெளிப்படை. இறைவனே பாடினான் என்று சொல்லாமல் விட்டிருப்பினும் "நிறைமொழி மாந்தர்களாகிய" இவர்கள் போன்றவர்கள் ஆணையில் பிறந்த "மறை மொழிகளாகிய" இவை மந்திரங்களே என்பதை மிகப் பழைய காலத்திலேயே தொல்காப்பியனார் சொல்லிச் சென்றார்.

இப்பாடல்கள் மந்திரங்கள் என்ற எண்ணம் வரப்பெற்றவுடன் இவற்றைச் சொல் பிரித்து அச்சிட வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தை விட்டு நீங்கலாயிற்று. மந்திரங்கட்கு இருவகைப் பயன் உண்டு. முதலாவது, ஓசைப் பயன். (Phonetic value) இரண்டாவது, சொல்லின் பொருட் பயன் (Semantic value). மந்திரங்கள் சொல்லின் பொருட் பயனைவிட சொல்லோசைப் பயனை மிகுதியாகப் பெற்றுள்ளன. எனவே, தேவாரப் பாடல்களின் பொருளை அறிவதைவிட அவற்றைப் படிப்பதால் ஏற்படும் பயன் மிகுதியாகும். இக்கருத்தை மனத்திற் கொண்டே சொல்பிரித்து அச்சிடாமல் அப்படியே அச்சிட்டுள்ளோம்.

**சிக்கல்களும் முடிவுகளும்:**

இப்பாடல்களை முற்காலத்தில் பதிப்பித்தவர்கள் விருத்தப் பாக்களாகவே கருதி முதல் அடியில் நான்கு அல்லது ஆறு சீர்கள் வந்தால் அடுத்த இரண்டு, மூன்று, நான்கு ஆகிய அடிகளில் நான்கு அல்லது ஆறு சீர்களே இருத்தல் வேண்டும் என்ற கருத்தில் பல இடங்களில் சீர் பிரித்து அச்சிட்டனர். இம்முறைக்கு முதலில் வித்தூன்றியவர் யாழ்ப்பாணம் சாமிநாத பண்டிதர் ஆவார். மா. பா. அவர்கள், தாம் முதலில் வெளியிட்ட பதிப்பில் இவை இசைப்பா என்று உணர்ந்து, இச்சீர் வரிசைகளை ஒதுக்கி விட்டு விடுகின்றார். உதாரணமாகச் சுந்தரர் பாடல்களில் திருப்பனையூரில் பாடப் பெற்ற,

> **மாட மாளிகை கோபுரத் தொடு மண்டபம் வளரும் வளர்பொழில்**
> **பாடல் வண்டறையும் பழனத் திருப்ப னையூர்த் – (8106)**

என்ற பாடலில் முதல் அடியில் ஏழு சீரும் இரண்டாவது அடியில் ஐந்து சீரும் வருவதைக் காணலாம். இதேபோல் மூன்றாம் அடியில் ஏழு சீரும் நான்காம் அடியில் ஐந்து சீரும் அமைந்துள்ளதைக் காணலாம். இப்பதிகம் முழுவதும் இம் முறையைப் பின்பற்றி அமைந்துள்ளது. திருஞானசம்பந்தர் பாடல்களிலும் இதுபோன்ற அமைப்பை நிரம்பக் காணலாம்.

காழிப்பிள்ளையாரின் மூன்றாம் திருமுறையில் உள்ள "வாழ்க அந்தணர்" என்று தொடங்கும் பொதுப்பதிகத்தின், முதல் மூன்று பாடல்கள் நான்கு சீர் கொண்ட நான்கடிகளுடன் அமைந்துள்ளன. அதே பதிகத்தின் 4 முதல் 10 வரை உள்ள பாடல்கள் ஒவ்வொரு அடியும் ஐந்து சீர்களுடன் விளங்குவதைக் காணலாம். எனவே முதல்அடிச் சீர்கள் ஏனைய அடிகளிலும் வரவேண்டும் என்ற கட்டுப்பாடோ, முதற்பாடல் அமைந்துள்ள சீர் முறையே ஏனைய ஒன்பது பாடல்களில் வரவேண்டும் என்ற கட்டுப்பாடோ மூவர் முதலிகள் காலத்தில் இல்லை என்பது தெளிவு.

இவற்றை மனத்திற்கொண்டு மா. பா. அவர்களின் 1935ஆம் ஆண்டுப் பதிப்பை ஆதாரமாக வைத்து இந்நூல் வெளியாகிறது. இத்தகைய பாடல்களில் ஏழு சீர்களை ஐந்து சீர்களாக மாற்ற முடியும். என்றாலும் அவ்வாறு மாற்றம் செய்தால் இவை இசைப்பாட்டின் தன்மை இழந்து விருத்தப்பாக்களாக மாறிவிடும். இசைப்பாவில் தோன்றும் சீர் பற்றிய சிக்கல்களுக்கு மா. பா. கண்ட முடிவை இப்பதிப்பு முழுமையாக ஏற்றுக் கொள்கிறது.

மூவர் திருமுறைகளிலும் ஒரு சில பதிகங்களில் சில பாடல்கள் விடப்பட்டுள்ளதைக் காணலாம். ஏடுகளில் இருந்து பெயர்த்து எழுதுவோர் கவனக் குறைவு காரணமாகவே இத்தவறு நிகழ்ந்திருக்க வேண்டும். இரண்டாம் திருமுறையில் திருவாரூரில்

பாடப்பெற்ற 79ஆவது பதிகத்திலுள்ள 2325ஆவது பாடல் தந்தையார் போயினார், தாயரும் போயினார் என்று தொடங்குகிறது. இது சற்றுப் புதுமையானது. இதனைப் பாடுகின்ற காலத்தில் பிள்ளையாரின் தாய் தந்தையர் இருவரும் உயிருடன்தான் இருந்தனர். அந்த இளம்பிள்ளைக்கு உலக நிலையாமைப் பற்றி திடீரென்று ஏதோ எண்ணம் தோன்றியிருக்க வேண்டும். இதன் விளைவாக முகிழ்த்த பாடல் இதுவாகும். இதேபோல் பொறி புலன்களால் ஏற்படும் தொல்லைகளை அனுபவிக்காத இளவயது உடைய பிள்ளையார் திருவலிவலப் பதிகத்தில் 543ஆவது பாடலில் தாயும் நீயே தந்தை நீயே என்று தொடங்கி, "ஆயமாய காயந்தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார் மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவலம் மேயவனே" எனக் கூறுகிறார். அந்த இளம் வயதிலும் இந்த உடம்பு எடுத்த காரணத்தினால் உடம்புக்குரிய பொறிபுலன் சேட்டைகள் ஒரு வினாடி அவரைப் பாதித்தன போலும்.

காழிப்பிள்ளையார் பாடத் தொடங்கிய முதல் திருமுறையில் இருந்து மூன்றாம் திருமுறை வரை உள்ள 483 பதிகங்களிலும் (கல்வெட்டில் கிடைத்த 484ஆவது பதிகம் திருவிடைவாய் உள்பட) ஒரு முறைவைப்பு அமைந்திருப்பதைக் காணலாம். ஒவ்வொரு பதிகத்திலும் 8ஆவது பாடலில், வரை எடுத்த இலங்கையர்கோன் கதையும், 9ஆவது பாடலில் நான்முகனும், மாலும் அடிமுடி தேடிய கதையும், 10ஆவது பாடலில் சமண, சாக்கியர்களைச் சாடும் கருத்தும் அமைந்திருப்பதைக் காணலாம். என்ன காரணத்தாலோ இரண்டாம் திருமுறையில் 43ஆவது பதிகமாக அமைந்துள்ள புள்ளிருக்கு வேளூர்ப் பதிகம் இம்முறை வைப்புக்கு முற்றிலும் மாறுபட்டு உள்ளது. 8, 9, 10 பாடல்கள் வரை எடுத்த கதையையோ, அடிமுடி தேடிய கதையையோ, சமண சாக்கியர் சாடலையோ பேசவே இல்லை. இதற்குப் பதிலாக சம்பாதி, சடாயு கதையும் இராவணனிடம் போர் செய்த கதையும் மட்டுமே பேசப் பட்டுள்ளன. இதன் காரணம் அறிதல் நம்முடைய சிற்றறிவுக்கு அப்பாற்பட்டதாகும். இதேபோன்று 15ஆவது திருகாட்டுப்பள்ளிப் பதிகம் இந்த முறைவைப்பை விட்டுவிட்டது.

வாழ்க்கையின் எந்த நிலையில் என்ன நேர்ந்தாலும் அந்த நேரத்தில் வரும் துன்பங்களைப் போக்கிக் கொள்ளச் சில குறிப்பிட்ட பதிகங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. வாழ்க்கை நடத்துவதற்கு அடிப்படையாக உள்ள பொருட் செல்வத்தைப் பெறுவதற்குக்கூடத் திருஞானசம்பந்தரின் திருவாவடுதுறைப் பதிகம் உதவுகின்றது. கண்பார்வை இழந்தவர்கள் பயன் அடையச் சுந்தரமூர்த்திகளின் சில பதிகங்கள் உதவுகின்றன. திருமணம்

ஆகாதவர்கள் பாடிப் பயன் அடையும்படியும் சில பதிகங்கள் உள்ளன. தொட்டதற்கெல்லாம் நேரம் காலம் பார்க்கும் சில மக்கள் அவ்வறியாமையினின்று நீங்கி நெஞ்சுரம் கொள்ளக் கோளறு பதிகம் உதவுகிறது. தமிழகத்தில் உள்ள ஆயிரக்கணக்கானவர்கள் இப்பதிகங்களின் பொருளைக்கூட அறிந்து கொள்ளாமல் அவற்றைப் பாராயணம் செய்து தம் குறைகளைப் போக்கிக் கொள் கிறார்கள் என்பதைப் பலரும் அறிவர். யாரேனும் ஒருவர் இவற்றைப் படித்துப் பயன் பெறுவார்களேயானால் அதனை வெளியில் சொல்லக்கூடாது என்ற சம்பிரதாயம் இந்நாட்டில் உள்ளது. இவற்றை எல்லாம் மனத்திற்கொண்டு ஏழு திருமுறைகளையும் ஒரே நூலாகக் கொண்டுவரவேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் தோன்றியதுபோல் கங்கைப் புத்தக நிலைய உரிமையாளர் திரு. இராமநாதனுக்கும் தோன்றியது திருவருட்குறிப்பே ஆகும்.

இந்நாட்டு மக்கள் பெரும்பாலோர் இந்நூலை வாங்கிப் படித்து இம்மை, மறுமைப் பயன்களை எய்த வேண்டும் என்பதே திரு. இராமநாதன் அவர்களின் நோக்கமாகும். எஞ்சி உள்ள திருமுறைகளையும் அடுத்து வெளியிடக் கங்கைப் புத்தக நிலையத்தார் முடிவு செய்துள்ளனர். அவ்வாறு நடை பெற்றால் அது இந்நாட்டு மக்களுக்குச் செய்த பெருந்தொண்டாகும்.

பழங்காலத்தில் தனித்தனி எழுத்துக்களை ஒன்று சேர்த்து அச்சிடும் பணியில் பலப்பல பிரச்சனைகள் இருந்து வந்தன. கணிப்பொறி மூலம் அச்சேற்றும் பொழுது அப்பிரச்சனைகள் யாவும் தீர்ந்துவிட்டன என்றாலும் தமிழ் நூல்களுக்கே உரிய அச்சுப் பிழைகள் என்னை அச்சுறுத்தி வந்தன. மேலும் இசைப் பாடல்களை அச்சிடும் பொழுது இசைக்கு ஏற்பச் சொற்கள் பிரிக்கப்பட்டிருத்தலின், ஓரளவு அதில் பயிற்சி உள்ளவர்களே இதனைச் செம்மை செய்ய முடியும். இந்த அரும்பணியை மேற்கொள்ள இறைவன் இரண்டு பேர்களை நியமித்தான். யாழ்ப்பாணம் ச. மார்க்கண்டு அவர்களும் பாடியைச் சேர்ந்த காளப்ப சேதுபதி அவர்களும் அப்பணியை மேற்கொண்டார்கள். மார்க்கண்டு அவர்கள் ஓசை பிறழாமல் மூலத்தைப் படிக்க, காளப்ப சேதுபதி கூடுமானவரை அச்சுப்பிழை வராமல் அடிகளைத் திருத்தி வந்தார். கண்பார்வை இன்மையால் அவர்கள் படிப்பதைக் காதில் கேட்டே என்னால் ஆன திருத்தங்களைச் சொல்லி வந்தேன். திருத்தப்பட்ட அடிகளை இவர்களே பார்த்தால் பிழைகள் கண்ணில்படா என்ற காரணத்தால் வேறு இரண்டு பெருமக்களின் உதவியை நாடினேன். பாடியைச் சேர்ந்த 80 வயதைக் கடந்த இளைஞரான திரு. கு. சீனிவாச நாயக்கர் திருமுறையில் எல்லையற்ற ஈடுபாடு கொண்டு திருவலிதாயக்

கோயிலில் திருமுறை முற்றோதலைத் தொடர்ந்து செய்து வருகிறார். எனவே திருத்தப்பட்ட படிவங்களை அவர் சரிபார்த்து மறுபடியும் சரிபார்க்கப் பாடியில் உள்ள திரு. S. கிருஷ்ணமூர்த்தி ஐயரின் உழைப்பை நாடினேன். ஆழ்ந்த கல்வியும் அடக்கமும் ஒருங்கே அமைந்த S. கிருஷ்ணமூர்த்தி ஐயர் இரண்டாவது முறையாகப் படிவங்களைப் பார்த்துத் திருத்தம் செய்தார். இந் நால்வருடைய உழைப்பு, நன்றிக்கும் புகழ்ச்சிக்கும் அப்பாற்பட்டது ஆகும். அவர்கள் எந்தப்பணியை மேற்கொண்டார்களோ அந்தப் பணியின் ஆதி கர்த்தாக்களான மூவர் முதலிகளின் நல்லாசிகள் அவர்களுக்குக் கிட்டுவதாகட்டும். கணிப்பொறி மூலம் அச்சிடப்படுவதால் இவர்கள் உழைப்பு இன்னும் பல நூற்றாண்டுகள் தமிழ் மக்களுக்குப் பேருதவி புரியும். பின்னே வரும் தலைமுறையினர் இவர்கள் செய்த உதவியினை நன்றிப் பெருக்கோடு நினைவர். இவர்கள் நால்வருக்கும் என்னுடைய நல்வாழ்த்துக்கள் உரியன.

பல லட்சங்கள் செலவாகும் இந்த மாபெரும் பணியை ஏற்றுக் கொண்டு பெருமகிழ்ச்சியோடு இதனை அச்சிட்டு உதவ முன்வந்த கங்கைப் புத்தக உரிமையாளர் திரு. இராமநாதனுக்கும் அவருடைய தந்தையாரும் என் நண்பருமாகிய திரு. வானதி திருநாவுக்கரசு அவர்களுக்கும் என்னுடைய நல்வாழ்த்துக்கள் என்றும் உரியன வாகும். தமிழ் உலகமும் அவர்கள் இருவர்க்கும் கடமைப் பட்டுள்ளது.

1500 பக்கங்களுக்கும் அதிகமாக உள்ள இதனை மிகப் பழைய பிரதிகளையே துணையாகக் கொண்டு கணிப்பொறி மூலம் தட்டச்சுச் செய்த திருமதிகள். சிவகாமி, சத்தியவாணி ஆகிய இருவருக்கும், ‘சிவசக்தி பிரிண்டர்ஸ்’ உரிமையாளர்கள் திருமதிகள். சிவகாமசுந்தரி யோகீஸ்வரன், ஞா. மீரா ஆகிய இருவருக்கும் என் நல்வாழ்த்துக்கள் உரியன.

வாழ்க்கையின் கடைசிப் பக்கத்தைப் படித்துக் கொண்டிருக்கும் கண்பார்வை முழுவதையும் இழந்த எனக்கு இறைவன் ஏன் இந்தப் பணியைச் செய்ய ஆணையிட்டான் என்பதை எவ்வளவு சிந்தித்தும் புரிந்து கொள்ள முடியவில்லை. அத்திருவருளுக்கு முற்றிலுமாக என்னைக் காணிக்கை ஆக்குவதைத் தவிர வேறு ஒன்றும் செய்வதற்கு இல்லை. இறுதி வரை எங்கள் மூதாதையர் ஆன நாவரசர் பெருமானுடைய “என் கடன் பணி செய்து கிடப்பதே” என்பதையே என் குறிக்கோளாகக் கொண்டு எஞ்சிய வாழ்நாளை அவன் பணியிலேயே கழிப்பேன் என்னும் உறுதியுடையேன்.

சென்னை–83
மார்ச்சு,98

**அ. ச. ஞானசம்பந்தன்**

## தேவாரப் பாடல்களின் பதிக எண்ணிக்கையும் பாடல் எண்ணிக்கையும்

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய,

| | | |
|---|---|---|
| முதல் திருமுறை | 136 பதிகங்கள் | – 1469 பாடல்கள் |
| இரண்டாம் திருமுறை | 122 பதிகங்கள் | – 1331 பாடல்கள் |
| மூன்றாம் திருமுறை | 126 பதிகங்கள் | – 1358 பாடல்கள் |

(திருவிடைவாய் கல்வெட்டுப் பதிகம் உள்பட)

### திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய,

| | | |
|---|---|---|
| நான்காம் திருமுறை | 113 பதிகங்கள் | – 1070 பாடல்கள் |
| ஐந்தாம் திருமுறை | 100 பதிகங்கள் | – 1015 பாடல்கள் |
| ஆறாம் திருமுறை | 99 பதிகங்கள் | – 981 பாடல்கள் |

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய,

| | | |
|---|---|---|
| ஏழாம் திருமுறை | 100 பதிகங்கள் | – 1026 பாடல்கள் |

பதிகங்கள் மொத்தம் – 796

பாடல்கள் மொத்தம் – 8250

## பொருளடக்கம்

உ

சிவமயம்

# அரும்பொருளகராதி

ம. பாலசுப்பிரமணிய முதலியார் தொகுத்தது

*இவ்வகராதியில் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. இதிற் குறிக்கப் பெற்றுள்ளவைகளைத் தவிர வேறு பொருள்கள் தேவாரத்தில் இல்லை என்று எவரும் எண்ணுதல் கூடாது. இதை அடிப்படையாகக் கொண்டு, தேவாரம் ஓதும் அன்பர்கள் பன்மடங்கு பெருக்கி இன்புற வேண்டும் என்பதே இச் சிறு பணியின் நோக்கம். ஏறக்குறயை 1300 ஆண்டுகட்கு முன்பு, தேவார முதலிகள் மூவர் காலத்தில், தமிழ் நாடு இருந்தநிலை, சைவ மக்கள் நாகரிகம், இறைவழிபாடு, திருக் கோயிற்பகுதிகள், திருவிழாக்கள், தமிழர் வள்ளன்மை, புலவர் கட்கு ஆதரவு, பெண்மக்கள் சிறப்பு, அரசர்கள் பற்றிய செய்திகள், தமிழகத்தின் நிலவள நீர்வளங்கள், அந்தணர் ஒழுக்கம், யோகிகள் ஞானிகள் சமய வாழ்க்கை, புறச்சமயிகள் பழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றைக் கண்ணாடியிற் காண்பது போலவே பார்க்கலாம். ஏறக்குறைய இக்காலத்திலிருந்த ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும் இவற்றையெல்லாம் கண்டு ஒப்பிட்டு மகிழலாம். இத்தகைய தெளிவான சான்றுகள் ஒப்பியல் ஆராய்ச்சித்துறையில் உழைக்கும் பேரறிஞர்கட்குப் பெரும் பயனளிக்கும். பொதுவாக மேற்கூறிய செம்பொருள் களைக் கொண்டுள்ள தேவாரப்பாசுரங்கள், சிறப்பாகத் தமிழ் நாட்டில் சிவபெருமானிடத்திலும் சிவாலயங்களிடத்திலும் தமிழ் மக்கள் கொண்டிருந்த அன்பையும் அறிவையும் பெருக்கி, அவர்களுடைய உண்மையான இன்பவாழ்க்கையை நன்றாக நிலைபெறச் செய்தன என்பதை எவரும் எக்காலத்திலும் மறக்கலாகாது.*

## அகச்சமயிகள்

*காதலாற் சைவர் பாசுபதர்கள் வணங்கும்...715, உருத்திரபல கணத்தார். விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் கபாலிகள் தெருவினிற்பொலியும் திருவாரூர் 4358, வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள் 4356.*

**அகச்சான்றுகள்**

**(அப்பர் சுவாமிகள் வரலாற்றில்)** இடபம் பொறிக்க விண்ணப்பம் 5188, இறைவன் தம்மை வா என்றழைத்தது 5727, 5728, ஐயாறடைந்த வழி (யாதும் சுவடுபடாமல்) 4179, கதவைத் திருமறைக்காட்டில் திறக்கப்பாடியது 5321, 5331, 5734, கயிலை சென்றது 4183, கல் மேல் மிதந்தது 4262, 5954, சமணர் அழி வெய்தியது 5818, சமணர் மறைத்த இலிங்கம் வெளிப்பட்டது 5810, சிவபூசை செய்தது 4164, 5050, சூலம் பொறிக்க விண்ணப்பம் 5186, சூலையால் வருந்தியது 4161, 4162, 4164, 4165, 4202, 4933, 7209, திருவடி சூட்டக் கேட்டது 5091, திருவடி சூட்டப்பெற்றது 4522, 6380—90, 6927, திருவடிமுத்தி எய்தியது 7215—24, நஞ்சுண்டது 4841, நீற்றறை குளிர்ந்தது 6112, படிக் காசு பெற்றது 5733, வயது முதிர்ந்தது 4919, 4920, **(சம்பந்தமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்)** அரசர்களுடன் வழிபட்டு ஆசீர் வதித்தது 2777, 2779, ஆண்பனை குலை ஈன்றது 590, இறைவனை யாசித்துப் பொன் பெற்றது, (தந்தையாருக்கு வேள்வி செய்தற் பொருட்டு கொடுத்தது) 2834—44, ஆலங்காட் ஈசன் தன்னை வழிபடச் செய்தது 481, ஏடு ஆற்றில் எதிர் சென்றது 3382, 4023, ஏட்டை எரியில் இட்டது 3734—44, ஓடம் விட்டது 2861, கதவடைக்கப்பாடியது 1862, சமணரைத் திருநீறு அழிக்கும் என்று உறுதி கூறியது 2397, சமணர்களை வென்றது 1023, 3829, சமணர்களோடு வாது செய்தது 3301, 3956—66, சமணர்கள் வைத்த தீ பாண்டியற்கு ஆயது 3339, 3344, 3349, ஞானப்பால் உண்டது 3053, தந்தையார் பியல் மீதிருந்து பாடியது 2387, பாண்டியன் சுரம் தீர்த்தது 2188, பாண்டியனது தேவியாருக்குத் தைரியம் கூறியது 3211—21, முத்திவேண்டி நின்றது 4144, வாசிதீரப்பாடிப் படிகாசு பெற்றது 992, 993, வீட்டின்பம் தமது திருமணத்திற் கலந்து கொண்டார் அனைவருக்கும் அருளியது 4137—47, **(சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்)** ஆவண ஓலை காட்டி இறைவன் ஆட்கொண்டது 7400, 7917, இல்லறம் நடத்தியது 8243, 8244, ஊன்றுகோல் கேட்டது 7777, ஊன்றுகோல் பெற்றது 8135, கண் இழந்தது 7924, 8131, 8189, 8198, கயிலை நாதன் நம்தமர் ஊரன் என்றது 8249, கயிலையில் திரு அணுக்கத்தொண்டு புரிந்தது 7942, காஞ்சிபுரத்தில் ஒரு கண்பெற்றது 7848—58, குருகாவூரில் பொதி சோறு பெற்றது 7515, கூடலை யாற்றூருக்கு வழிகாட்டி இறைவன் மறைந்தது 8086—95, சங்கிலி நாச்சியாரை இறைவன் மணம் செய்வித்தது 7752, சிற்றின்பத்தைத் திருவருள் நினைவோடு அனுபவித்தது 7683, தவநெறி வேண்டிப் பெற்றது 7347—57, தாய்தந்தையர்

*சிவபதமடைந்தது 7437, திருவடி தீட்கைஷ செய்யப்பெற்றது 7607, திருவாரூரில் மற்றைக்கண் வேண்டியது (பெற்றது) 8189, தூதனாக இறைவன் உதவிசெய்தது 7919, 8084, தோழனாக இறைவன் திருவிளையாடல் புரிந்தது 7751, 7919, 8243, நெல் பெற்றுக் குண்டையூரிலிருந்து திருவாரூரில் தமது மாளிகையில் சேர்ப்பதற்கு ஆட்களை வேண்டிப் பெற்றது 7423—32, நோயால் வருந்தியது 7934—7936, நோய் தீரப்பெற்றது 7975, 7977, பரவைநாச்சியாரை இறைவன் மணம் செய்வித்தது 7751, பிச்சை யெடுத்துத் திருக்கச்சூரீசன் சோறளித்தது 7639, 7640, 7644, பொன்னை இறைவன் திருமுதுகுன்றில் அளித்தது 7474, பொன்னைத் திருஆரூர்க் கமலாலயத்தில் எடுத்தது 7473—81, பொன்னையும் ஆடைகளையும் பெற்றது 7392, 7521, 7687, மகிழமரத்தின் கீழ் சபதம் 8134, 8135, மனைவாழ்க்கையை இறுதியில் வெறுத்தது 7263, யானையைக் கயிலைநாதன் அனுப்பியது 8241—49, யானைமீது கயிலை செல்லும் வழியில் ஓதிய பதிகத்தை அஞ்சைக்களத்தீசனுக்கு அறிவிக்குமாறு கடலரை யனுக்குக் கட்டளையிட்டது 8250, வன்தொண்டன் என்ற பெயர் பெற்றது 7392, வேந்தர் மூவரும் உடனிருப்பத் திருப்பரங்குன்றில் வழிபாடு செய்தது 7245.*

### அகத்திய முனிவர் சிவபூசை செய்து அருள் பெற்றது

*மங்கலக்குடி யீசனை...அகத்தியனும் அர்ச்சித்தாரன்றே 5960, சந்திமூன்றிலும் தாபரம் நிறுத்தி சகளி செய்திறைஞ் சகத்தியர் தமக்குச் சிந்து மாமணியணிதிருப்பொதியில் சேர்வு நல்கிய செல்வம் 7893.*

### அகத்துறைப் பாடல்கள்

*3, 6, 603—606, 608, 610, 645—55, 678—89, 787—97, 820—29, 1655—64, 1819—28, 3492—3502, 3872—78, 3912—22, 4210—19, 4272—81, 5101—10, 5295—97, 5513—22, 5625—33, 5675—89, 5758—69, 6095—6100, 6330—39, 6370—79, 6501, 6593—99, 6691, 6694—98, 6826—30, 7596—7605, 8150.*

### அகப்பூசை

*சினமலி யறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவி யமனன்உணர்வொடு மலர்மிசையெழு தருபொருள் நியதமும் உணர்பவர் தனதெழுலுருவது கொடு அடைதரு பரன் 221, பத்திப்பேர் வித்திட்டே பரந்தத ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே...நாலந்தக் கரணமும் ஒரு நெறியாய்ச் சித்திக்கே*

உய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்பரம்பொருள் சேர்வார் 1365, அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர்தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர் 1421, சிந்தைவெள்ளப் புனலாட்டி செஞ்சொல் மாலை அடி சேர்த்தி எந்தை பெம்மான் என்னம்மான் என்பார் 4313, காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப் பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே 4897, உயிராவணம் இருந்து உற்று நோக்கி உள்ளக் கிழியின் உருவெழுதி உயிராவணம் செய்திட்டுன் கைத்தந்தால் உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி 6495.

## அஞ்சாமை

கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டு போவார்...அஞ்சல் நெஞ்சே 2325, காலன் அங்கி...நல்ல நல்ல 2391, இடியும் மின்னும் அஞ்சிடும் 2392, பாலன் ஈங்கிவன் என்று நீ பரிவெய்திடேல் 3211—21, உடையார் ஒருவர்தமர் நாம் அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை 4169—78, மண்பாதலம் புக்கு மால்கடல் மூடி மற்றேழுலகம் விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே 5079, வானம் துளங்கில்என் மண் கம்பமாகில்என்...ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட் உத்தமர்க்கே 5215, நமனை அஞ்சோம் 7205, நாவலந் தீவகத்தினுக்கு நாதரான காவலரே விடுத்தாரேனும் கடவமலோம் 7210, தருமனார் தமர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான் 8137—46.

## அடியார் பெருமை தன்மை இலக்கணம்

பெரியார் கழல் என்றும் தொழுதேத்த உள்நிலாவி அவர் சிந்தையுள் நீங்கா ஒருவன் 14, அருள்பேணிப் பொய்யிலாத மனத்தார் 16, உரைகளெல்லாம் உணர்வெய்தி நல்லா உத்தமராய் உயர்ந்தார் 46, மெய்யராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து செய்யரானார் 540, கொள்கையினால் உயர்ந்த நிறையுடையார் 559, அடியார்பண்பு இகழ்வார்கள் ஆதர்களே 1288, பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே...பரம்பொருள் சேர்வார் 1365, அகனமர்ந்த அன்பினராய் அறு பகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர் கோயில் 1421, வீடு ஞானமும்

*வேண்டுதிரேல்...பாடு ஞானம் வல்லார் அடி சேர்வது ஞானமே 1490, செடிகொள் நோயின் அடையார் திறம்பார் செறுதீவினை கடிய கூற்றமும் கண்டகலும்...அடியார் அடியார்கட்கே 1544, கொன்றைத் தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருள் அலவே 1912, நமன்தூதர் ஆலமிடற்றான் அடியார் என்று அடர அஞ்சுவரே 1986, பத்தியாரத் தொழுதேத்த முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்றம் முடுகாதே 2108, கண்முத்தரும்பக் கழற்சேவடி கைதொழுவார்கள் உள்முத்தரும்ப உவகை தருவான் 2126, அடியவர்மேல் வினை கனலிடைச் செதிள் அன்றே 2590, தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி எளிதாமே 2603, தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கிச் சுரும்பார் மலர் இண்டை கட்டி வழிபாடு, செய்யுமிடம் 2703, நாவினாலே நவின்றேத்தல் ஓவார் செவித்துளைகளால் யாவும் கேளார் அவன் பெருமை யல்லால் அடியார்கள் 2717, தொண்டர்கள் குதியும் கொள்வர் விதியும் செய்வர் 2785, சொல் தெரியாப் பொருள் சோதிக்கப்பால் நின்ற சோதிதான் மற்று அறியா அடியார்கள் தம் சிந்தையுள் மன்னுமே 2898, அஞ்சுபுலன் வென்று அறுவகைப் பொருள் தெரிந்து எழு இசைக்கிளவியால் வெம்சினம் ஒழித்தவர்கள் 3644, பொய்யன்பிலா அடித்தொண் டர்க்குத் தொண்டராம் புண்ணியமே 5142, பரவுமின் பணிமின் பணிவாரொடே விரவுமின் விரவாரை விடுமினே 5658, எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்படிகால் எமையாண்ட பெம்மான்...அடியார்க்கடியேன் ஆவேனே 7762, அழுமலர்க்கண் இணையடிவார்க்கல்லால் அறிவரிது அவன் திருஅடியிணை இரண்டும் 7826, விற்றுக்கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி ஆட்பட்டேன் 8189.*

## அடைமொழிச் சிறப்பு

**சம்பந்தர் தேவாரத்தில் :–(குலச்சிறையார்)** *வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளை நீறணியும் கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை 4091, கணங்களாய் வரினும் தமி யராய்வரினும் அடியவர் தங்களைக் கண்டால் குணங் கொடுபணியும் குலச்சிறை 4093, நலமிலராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற குலமிலராகக் குலமதுண் டாகக் தவம்பணி குலச்சிறை 4095, நாவணங்கியல்பாம் அஞ் செழுத் தோதி நல்லராய் நல்லியல்பாரும் கோவணம் பூதிசாதனம் கண்டால் தொழுதெழு குலச்சிறை 4097, தொண்டராயுள்ளார். திசை திசை தோறும் தொழுது தன்குணத்தினைக் குலாவக் கண்டு நாள்தோறும் இன்புறுகின்ற குலச்சிறை 4099,*

*(கோச்செங்கட்சோழன்) செருவிலாரும் புலி செங்கயலானை யினால் 2771, தென்னன்கோழி எழில்வஞ்சியும் ஓங்கு செங்கோலினான் மன்னன் 2772, வடமனீடு புகழ்ப்பூழியன் தென்னவன் கோழிமன் அடல்மன் 2773, அந்தண்மா மானதன் நேரியன் செம்பியன் 2774, சீரினால் அங்கொளிர் தென்னவன் செம்பியன் வில்லவன் 2777, ஒண்புலால் வேல்மிகவல்லவன் ஒங்கெழிற்கிள்ளி 2778, குரிசில் செங்கண்ணவன் 2998, செங்கண்நல் இறை 3002, செம்மியர் செறிகழல் இறை 3006,* **(சண்டேசுவரர்)** *பீரடைந்த பாலதாட்டப் பேணாதவன்தாதை வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் 521, வந்தமணலால் இலிங்கம் மண்ணியின்கட் பாலாட்டும் சிந்தை செய்வோன் 670, முதலிய பல* **(சிறுத்தொண்டர்)** *பொடி நுகரும் சிறுத்தொண்டர் 665, கன்னவில்தோள் சிறுத்தொண்டன் 3472, சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன் 3473, தேனமர்தார்ச் சிறுத் தொண்டன் 3474, சீருலாம் சிறுத்தொண்டன் 3475, செருவடிதோட் சிறுத்தொண்டன் 3477, சீராளன் சிறுத் தொண்டன் 3478, சிறப்புலவன் சிறுத்தொண்டன் 3479, வெந்த நிறணிமார்பன் சிறுத்தொண்டன் 3480,* **(திருநீலகண்ட யாழ்ப்பாணர்)** *தாணு எனையாளுடையான் தன் அடியார்க் கன்புடைமை பாணன் 675, தக்கபூமனைச் சுற்றக்கருளொடே தாரமுய்த்தது பாணற்கருளொடெ 4040,* **(நமிநந்தியடிகள்)** *தாவி அவனுடனிருந்தும் காணாத தற்பரனை ஆவிதனில் அஞ்சொடுக்கி அங்கணனென்று ஆதரிக்கும் நாவியல்சீர் நமி நந்தியடிகள் 672,* **(நீலநக்கர்)** *நிறையினார் நீலநக்கன் நெடுமா நகரென்று தொண்டர் அறையுமூர் 3426,* **(மங்கையர்க்கரசி)** *மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை வரிவளைக்கை மடமானி பங்கயச் செல்வி பாண்டிமாதேவி 4090, செந்துவர் வாயாள் சேலனகண்ணாள் சிவன் திருநீற்றினை வளர்கும் பந்தனை விரலாள் பாண்டிமா தேவி 4092, செய்யதாமரைமேல் அன்னமேயனைய சேயிழை திருநுதற் செல்விபையரவல்குற் பாண்டிமாதேவி 4094, முத்தின் தாழ் வடமும் சந்தனக் குழம்பும் நீறும் தன்மார்பினில் முயங்கப் பத்தியார்கின்ற பாண்டிமாதேவி 4096, மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னுமணிமுடிச் சோழன்தன் மகளாம் பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி 4098, பன்னலம் புணரும் பாண்டிமாதேவி 4100, மானினேர்விழி மாதராய் வழுதிக்கும் மாபெருந்தேவி 3211,* **(முருக நாயனார்)** *சாந்தமும் புகையும் கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன் செய்கோலம் 2466, மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதும் செய்முடிமேல் வாச*

*மாமலருடையார் 2468,* **(அப்பர் தேவாரத்தில்:) (அப்பூதியடிகள்)** *அஞ்சிப்போய்க்கலி மெலிய அழலோம்பும் அப்பூதி 4281,* **(அமர்நீதி நாயனார்)** *நல்லூரகத் தேகீட் கொண்ட கோவணம் காவென்று சொல்லிக் கிறிபடத்தான் வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கொர் வாணிகனை 5107,* **(கணம்புல்லர்)** *நல் அருந்தவத்த கணம்புல்லர் 4642,* **(கண்ணப்பர்)** *காப்பதோர் வில்லும் அம்பும்... 4640, குவப்பெருந்தடக்கைவேடன்... தவப்பெருந்தேவு செய்தார் 4794,* **(சாக்கிய நாயனார்)** *கல்லினால் எறிந்து கஞ்சிதாமுணும் சாக்கியனார் 4639,* **(திருஞானசம்பந்தர்)** *திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப்பாடி அடைப்பித்தார் 5734,* **(நமிநந்தியடிகள்)** *அடித்தொண்டன் நம்பிநந்தி 5145, பொடிக் கொண்டு பூசிப்புகுந்தொண்டர் பாதம் பொறுத்த பொற்பால் அடித்தொண்டன் நந்தியென்பான் 5147,* **(மார்க்கண்டேயர்)** *சேலின் நேரனைய கண்ணார்திறம்விட்டுச் சிவனுக்கன்பாய்ப் பாலும் நல்தயிர் நெய்யோடு பலபல ஆட்டி என்றும் மாலினைத் தவிரநின்ற மார்க்கண்டன் 4470, நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமம் செய்து ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தணனார் 4635, தோடுலா மலர்கள் தூவித்தொழுதெழு மார்க்கண்டேயன் 4787, மருள்துயர் தீர அன்றர்ச்சித்தமாணி 5174, பதத்தெழுமந்திரம் அஞ்செழுத்தோதிப் பரிவினொடும் இதத்தெழுமாணி 5175, வானவர்கோனை மனமகிழ்ந்து குறித்தெழுமாணி 5177, வானவர்கோனைக் குளிர்ந்தெழுந்து பழக்கமொடர்ச் சித்தமாணி 5178 முதலியபல* **(சுந்தரர் தேவாரத்தில்) (கோட்புலி நாயனார்)** *கூடாமன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி 7379,* **(திருஞானசம்பந்தர்)** *நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் 7787, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் 7866, நல்லிசை ஞானசம்பந்தன் 7905, தமிழ் ஞானசம்பந்தன் 8025, ஊனமில்காழி தன்னுள் உயர்ஞான சம்பந்தன் 8217,* **(திருநாவுக்கரசர்)** *இணைகொள் ஏழெழுநூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன் 7890, நாவின் மிசையரையன் 8025* **(சண்டேசுவர நாயனார்)** *அணிகொள் ஆடை அம்பூண் அணிமாலை அமுது செய்தமுதம் பெறுசண்டி 7890,* **(குண்டியடிகள்)** *தண்டுடைத்தண்டி 7962,* **(புகழ்த்துணை நாயனார்)** *அகத்தடிமை செய்யும் அந்தணன்...நன்றிப் புகழ்த்துணை 7312, திருத்தொண்டத் தொகையுள்வரும் அடை மொழிகள் இல்லையே என்னாத இயற்பகை, வெல்லுமாமிகவல்ல மெய்ப்பொருள், விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர், அல்லிமென்முல்லை யந்தார் அமர்நீதி 7617, இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர், கலைமலிந்தசீர்நம்பி கண்ணப்பர்,*

**(தேவாரம் திருமந்திரம்)** *முன்னையது தேவாரஎண்* பின்னையது திருமந்திர எண்:- *போதொடு நீர் சுமந்தேத்தி 50* பூவொடு நீர் சுமந்தேத்தி 1838, *சீதமும் வெம்மையுமாகி 417* தீயினும் வெய்யன் புனலினுந்தண்ணியன் 8, *பேரருளாளர் பிறவியிற் சேரார்...கேடிலர் 833* பிறப்பிலி... பேரருளாளன் இறப்பிலி 25, *கருவினாலன்றியே கருவெலா மாயவன் உருவினாலன்றியே உருவு செய்தானிடம் 3172* உருவன்றியே நின்றுருவம் புணர்க்கும் கருவன்றியே நின்றுதான் கருவாகும் 2340,

**(தேவாரமும் நாலாயிர திவ்வியப் பிரபந்தமும்)** (*பிரபந்த எண்கள் வேங்கடசாமி ரெட்டியார் 1981ஆம்* பதிப்பு) *முன்னையது* தேவாரஎண் பின்னையது திவ்யப்ரபந்த எண்:- *எனது உள்ளங்கவர் கள்வன் 1—10* என்னுள்ளங்கொண்ட கள்வனை 1575, *மண்ணும் புனல் உயிரும் வருகாற்றும் சுடர்மூன்றும் விண்ணும் முழுதானான் 111* புகழுநல் ஒருவன் என்கோ பொருவில் சீர்ப்பூமி என்கோ திகழும் தண்பரவையென்கோ தீயென்கோவாயுவென்கோ நிகழுமாகாச மென்கோ நீள்சுடர் இரண்டுமென்கோ... கண்ணனை 2337, *(தேவாரத்தில் 571, 7163=பிரபந்தத்தில் 2337) அழவல்லவர் ஆடியும் பாடி எழவல்லவர்...நல்லவர் 373, (தேவாரத்தில் 2126, 3320 முதலியபல)*=உள்ளஞ்சோர உகந்து எதிர்விம்மி...கண்ண நீர்கள் துள்ளம்சோர...439, உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கணணீர்சோர...நாராயணா வென்னும் நாமம் 952, *அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல் 415 (1748, 2593, 4530, 6412 முதலியபல)*=அந்தமாய் ஆதியாகி 1306 *முதலிய பல, நிலனொடுவானும் நீரொடுதீயும் வாயுமாகி...புண்ணியர் 451* பாரும் நீர் எரிகாற்றினோடு ஆகாசமும் இவையாயினான் (பிர- 1024 முதலியபல) *மருங்களியார் பிடிவாயில் வாழ்வெதிரின் முளைவாரிக் கருங்களியானை கொடுக்கும் கற்குடி 462* = வரைசெய்மாக் களிறிளவெதிர் வளர்முளையளை மிகு தேன்தோய்த்துப் பிரசவாரி தன்இளம் பிடக்கருள் செய்யும் 962, *சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச வீற்றிருந்த அன்னங்காள் 650, தேவாரத்தில் 1417, 4087, 4151 முதலியன)* = அன்னமாமலர் அரவிந்தத்தமளியில் பெடையொடு மினிதமர செந்நெலார் கவரிக்குலை வீசுதண் திருவயிந்திரபுரம் 1154, (பிரபந்தம் 1619, 1752 முதலியன) *பானாறு மலர்ச்சூதப் பல்லவங்கள் அவை கோதி ஏனோர்க்கும் இனிதாக மொழியும் எழில் இளங்குயிலே 652* = சினையார் தேமாஞ் செந்தளிர்க் கோதிக் குயில் கூவும், பிர-1489, *சிறையாரும் மடக்கிளியே*

இங்கேவா...பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே 654=திருமாலைப் பாடக்கேட்டு... மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே 2065, தேனினுமினியர் பாலன நீற்றர் தீங்கரும் பனையார் தம் திருவடி தொழுவார் ஊன் நயந்துருக உவகைகள் தருவார் 832=தொண்டர்தங்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பினை...கற்பகத்தை 1088 முதலியபல, கொல்லை முல்லை மெல்லரும்பீனும் குற்றலம் 1071=கொல்லை முல்லை மெல்லரும்பீனும் குறுங்குடி 1804 பக்கம் வாழைப்பாய் கனியோடு பலவின்தேன் கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம் 1072=தூங்குதண் பலவின்கனி தொகு வாழையின் கனியொடு மாங்கனி சேங்குதண்புனல் சூழ் திருக்கோட்டியூர் 1845, எண்ணார் முத்தமீன்று மரகதம் போற் காய்த்துக் கண்ணார் கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி 1105=கருங்கமுகு பசும்பாளை வெண்முத்தீன்று காயெல்லாம் மரகதமாய்ப் பவளங்காட்ட செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்திருக்கோவலூர் 1144, தேவாரம் 1383—பிரபந்தம் 1182, 1263, 1597 முதலியன, தேவாரம் 1419= பிரபந்தம் 1260, 1491, 1754 முதலியன. வீடும் ஞானமும் வேண்டுதிரேல் விரதங்களால் வாடி ஞானம் என்னாவது எந்தை.... பாடும் ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே 1490=ஊன்வாடஉண்ணுதுயிர் காவலிட் டுடலிற்பிரியாப் புலன் ஐந்தும் நொந்துதாம் வாட வாடத் தவம் செய்யவேண்டா.... திருச்சித்ரகூடம் சென்று சேர்மின்களே 1158= பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும் ஐந்து நெருப் பிடையே நிற்கவும் நீர் வேண்டா..... வெஃகாவே.... தொழுதால் அஃகாவே தீவினைகளாய்ந்து 3459, செடிகொள்நோயின் அடையார் திறம்பார் செறு தீவினைகடிய கூற்றமும் கண்டகலும்..... திருவாஞ்சியத்தடிகள் பாதம் அடைந்தார் அடியார் அடியார்கட்கே 1544=அவன்தமர் எவ் வினையராகிலும் ...நமன்தமரால் ஆராயப்பட்டறியார் 3238, ஆமாத்தூரம்மானைக் காணுதகண், கூறாத நா, கேளாத செவி, நினையாதார் நெஞ்சம் 1942—48=காணுதார்கண், கேளாச்செவி–2012–21 வாயவனை அல்லது வாழ்த்தாது, கை...கண், செவி வழிபடு நன் மறையன் தன்மேலடர் வேங்காலனுயிர் விண்ட பினை நமன் தூதர் ஆலமிடற்றானடியா ரென்றடர அஞ்சுவரே 1986=(2136 மேலே காண்க) அப்பாவுன் அடியலால் அரற்றாது என்நா 2840 சீருடைக்கழல் அலால் செந்தை செய்யேன் 2841=மற்றோர் தெய்வம் எண்ணேன் உன்னை யென்மனத்து வைத்துப் பெற்றேன் 1472, நனவிலும் கனவிலும் நாளும் தன்னொளி

*நினைவிலும் எனக்கு வந்தெய்து நின்மலன் 3020*=கனவில் கண்டேனின்று 1568, *மந்த்ரம் அன பாவங்கள்.... சிந்தும் வல்வினை... நமச்சிவாயவே 3325*=குன்றனைய குற்றம் செயினும்.... ஆழிக்கையான் திறனுரையே சிந்தித்திரு 2122, *சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொல்மாலை அடிச்சேர்த்தி எந்தை பெம்மான் என் எம்மான் என்பார் பாவ நாசமே 4313*=அன்பினால் ஞானநீர் கொண்டாட்டுவன் 2046, சொற்களென்னும் தூயமாமாலை கொண்டு சூட்டுவன் 2047, *விரிவிலா அறிவினார் கள் வேறொரு சமயம் செய்த எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும் 4744*=வணங்கும் துறைகள் பலபல ஆக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபல ஆக்கி..3675, யாவையும் யவரும் தானாய் அவரவர் சமயந்தோறும் தோய்விலன் 2346; *உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந் தறிதியென்று வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே 4886*=உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதி யென்று வெள்ளிக்போய் என்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே 905; *உள்ளமே தகளியாக மடம்படும் உணர்நெய்யட்டி உயிரெனும் திரிமயக்கி இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில் கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே 4887*=அன்பேதகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை இடுதிரியா நன்புருகி ஞானச்சுடர் விளக்கேற்றினேன் 3284, *வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்....4942*=மானிடப்பிறவி....கொள்க....உறுதியே வேண்டினாரே 2039, *தென்திசைக்கே உந்திடும்போது மறக்கினும் என்னைக் குறிக் கொண்மினே 5082, (5084, 5085, 5087, 5089, 5090)*=எய்ப்பென்னை வந்து நலியும் போதங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன் அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே 423, (424, 426, 427, 429–31) *அல்லல் என் செயும் அருவினை என்செயும் தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்...அடிமை பூண்டேனுக்கே 5232(5270—78)*=வினையால் அடர்ப்படார் வெந்நரகில் சேரார் தினை யேனும் தீக்கதிக்கட் செல்லார்....தொழுதக்கால் 3248, முதலிய பல; *ஆரியம் தமிழோடிசையானவன் 5404, வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் 7104*=செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி 2055; *விடையுடையானிடம் நல்லமே பரவுமின் பணிமின் பணிவாரோடே விரவுமின் விரவாரை விடுமினே 5658*=எம்மடியார்கள் தம் ஈட்டம் கண்டிடக் கூடுமேல் அதுகாணும் கண்பயன் ஆவதே 658, (659– 667) *ஆமாத்தூர்*

*அழகனை நெஞ்சினால் நினைந்தேன் நினைவெய்தலும் வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே 5667,* (பத்திவெள்ளம் பரந்தது 5669) =பிறவியென்னும் கடலும் வற்றிப் பெரும் பதமாகின்றதால்....464, *புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே (6244—53)* =உண்ணுநாள் பசியாவதொன் றில்லை ஓவாதே நமோ நாரணு என்று எண்ணு நாளும் இருக்கெ சுச்சாமவேத நாண்மலர் கொண்டுனபாதம் நண்ணு நாள் அவைதத்துறுமாகிலென்றெனக் கவை பட்டினிநாளே 438, *நல்வினையும் தீவினையுமானான் 6351*=பாவமும் அறமும் வீடும் இன்பமும் துன்பமும் தானும் கோவமும் அருளும் அல்லாக் குணங்களுமாய எந்தை 1296; *ஆலைப்படு கரும்பின் சாறுபோல அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத்தான்காண் 6764*=தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம் 1543; *அடியேன் தன்னைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித்தான் 6786, (6926, 7079)*= என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன் தமிழ்பாடிய ஈசனை 2832, (2833–2842) *பொன்னானாய் மணி யானாய்....என்னானாய் என்னானாய் 7179*=பொன்னானாய்... என்னானாய் என்னானாய் 2061; *சங்கநிதி பதுமநிதி...ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கன் பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே 7182*=குலந்தாங்கு சாதிகள்.... சண்டாளர்களாகிலும் வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற்காள் என்றுள் கலந்தார் அடியார் தம்மடியார் எம்அடிகளே 2378, *வெறுத்தேன் மனவாழ்க்கையை விட்டொழிந் தேன் 7263*=வேண்டேன் மனை வாழ்க்கையை 1448–1456; *நெய்யும் பாலும்.... 7266 (உங்களுக்காட் செய்ய மாட்டோம் (7267)*=நும்மைத் தொழுதோம்... 1328–1337, *நொந்தா ஒண்சுடரே 7433*=நந்தாவிளக்கே 1218, *ஆடுமின் அன்புடையீர் அடிக்காட் பட்ட தூளி கொண்டு சூடுமின் தொண்டருள்ளீர் 7445*= தொண்டரடிப்பொடி ஆடநாம்பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னுவதே 659; *பொய்யா தென் உயிருட் புகுந்தாய் இன்னம் போந்தறியாய் 7507*=வந்தாய் என்மனத்தே வந்து நீ புகுந்த பின்னை எந்தாய் போயறியாய் 1732; *தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்....பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள் 7564—74*=சொன்னால் விரோதம் இது ஆகிலும் சொல்லுவன்...2392–2402; *படையெலாம் பகடார ஆளிலும்.7580*=அடிசேர் முடியினராகி ....2416; *ஏழிசையாய் இசைப் பயனாய் இன் அமுதாய் என்னுடைய தோழனுமாய் 7751*=ஏழிசையின் சுவைதன்னை 1269; *எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்*

படிகால் எமையாண்ட பெம்மான் 7762=எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ்படிகால் தொடங்கி வந்து வழி வழி ஆட்செய்கின்றோம் 6, எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம் 502 முதலிய பல, அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத....சிந்தையால் வந்துன் திருஅடி யடைந்தேன் 7784—93=வாணிலா முறுவல்... வந்துன் திருவடி யடைந்தேன் 998–1007; மறையவன் ஒருமாணி வந்தடைய....அன்பொடு மடைந்தேன் 7896—7900=ஏழை ஏதலன் கீழ்மகன்....அடியிணை யடைந்தேன் 1418–27; செல்லல் உற அரிய சிவன் சீபர்ப்பதமலை 8035=சென்றுகாண்டற்கரிய கோயில் சிங்கவேள் குன்றமே 1012; இந்திரன்மால் பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம் வந்தெதிர்கொள்ள என்னை...8249= முடியுடை வானவர் முறை முறை எதிர்கொள்ள கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகினர் 3762 (தேவாரப் பாசுரங்கட்கும் எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, பதினென் கீழ்க்கணக்கு முதலிய வற்றிலுள்ள பல பாடல்கட்கும் பலவகை எதிரொலி நயங்களைத் தொகுப்பின் நூற்றுக்கணக்காக விரியும் என்றஞ்சி விடுத்தோம், சங்கநூற் பயிற்சி மிக்குடைய பேரறிஞர்கள் ஆராய்ந்து தனிப் பெருநூல்களாக வெளியிடுதல் சிறந்த தமிழ்த் தொண்டாகும்).

## ஐந்தெழுத்தின் பெருமை

துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும் நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்....அஞ்செழுத்துமே 3031 (3032—41) காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே 3320 (3321—3330) கடுத்தவாளரக்கன் கைலையன் றெடுத்தகரமுரஞ்சிரநெரிந்தலற அடர்த்ததோர் விரலால் அஞ் செழுத்துரைக்க அருளினன் 4086, நாவணங்கியல்பாம் அஞ்செழுத்தோதி நல்லராய் நல்லியல் பாகும்... 4097, நற்றுணை யாவது நமச்சிவாயவே 4262, நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே 4263, 4264—71, மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப் பெற்றால் வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே 4907, படைக்கலமாக உன் நாமத் தெழுத்தஞ்சு என் நாவிற்கொண் டேன் 4945, சித்தம் ஒருக்கிச் சிவாயநம என்றிருக்கின் அல்லால்... அத்தன் அருள் பெறல் ஆமோ அறிவிலாப் பேதை நெஞ்சே 5075, உனதருளால் திருவாய் பொலியச் சிவாயநம என்று நீறணிந்தேன் தருவாய்

சிவகதி நீ 5076, விக்கி அஞ்செழுத்தும் ஒத்தொழிந்து உம்மை மறக்கினும் என்னைக் குறிக் கொண்மினே 5084, நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும் சரம் அன்றுரைக்கத் தருதி கண்டாய் எங்கள் சங்கரனே 5153, பஞ்சமந்திரம் ஓதும் பரமனார் 5334, நான் துஞ்சும் போழ்து நின் நாமத்திரு எழுத் தஞ்சும் தோன்ற அருளும் ஐயாறரே 5495, வல்லவாறு சிவாய நம என்று நல்லம் மேவிய நாதனடிதொழ வெல்லவந்த வினைப் பகை வீடுமே 5659, ஏதும் ஒன்றும் அறிவிலாராயினும் ஓதி அஞ்செழுத்தும் உணர்வார்கட்குப் பேதமின்றி அவரவர் உள்ளத்தே மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே 5830, அரும் தவம் தரும் அஞ்செழுத்தோதினால் பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர் மருந்தும் ஆகுவர் மன்னுமாற் பேறரே 5833, நமச்சி வாயவே ஞானமும் கல்வியும் நமச்சிவாயவே நானறிவிச்சையும் நமச்சிவாயவ நா நவின்றேத்துமே நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே 6113, மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின் மறவேன் 6713, வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயான் 6745, சிவாய நம என்னும் சிந்தைச் சுருதினை 6861, அஞ்செழுத்தும் வாய் நவில வல்லோர்க்கென்றும் சிறந்தான் 6909, திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்....செத்துப் பிறப் பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே 7178, சீரார் நமச்சிவாயம் சொல்ல வந்தோம் நாவல்....சுடர் நயனச் சோதியையே தொடர் வுற்றோமே 7208, நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே 7712—7721, அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி 8066.

## ஐம்புலன்கள் பொறிகள்

ஐந்து புலங்களைக் கட்டவர் போற்ற அந்தண்புகலி நிலாவிய புண்ணியன் 41, ஆயமாய காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றலொட்டார் 543, பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே....பரம்பொருள் சேர்வார் தாமே 1365, ஐம்புலன்கள் செற்று மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவம் புரியும் முதுகுன்றமே 1414, அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர்தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர் 1421, புலந்தாங்கி ஐம்புலனும் செற்றார் வாழும் பூம்புகலி 2056, தொண்டர் அஞ்சுகளிலும் அடக்கி... வழிபாடு செய்யுமிடம் 2703, மெய்வரையான் மகள் பாகன் தன்னை விரும்ப உடல்வாழும ஐவரை ஆசறுத்தாளும் என்ப 3924, அஞ்சுகொலாம் அவர்வெல் புலனாவன 4339, வென்ற ஐம்புலன்கள் தம்மை விலக்குதற்குரியீர் 4415, மெய்ய

*னாய் வாழமாட்டேன் வேண்டிற் றொன்றைவர் வேண்டார் 4418, அஞ்சினால் அடர்க்கப்பட்டிங் குழிதரும் ஆதனேன் 4421, அஞ்சையும் அடக்கி ஆற்றலுடையனாய் அநேககாலம் வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பகீரதன் 4868, அஞ்சப்புலனிவற்றால் ஆட்ட அட்டுண்டரு நோய்க்கிடமாய உடலின் தன்மை 6668, வஞ்சக்கள்வர் ஐவரையும் என் மேற்றரவறுத்தாய் அவர் வேண்டும் காரியம் இங்காவதில்லை 7217, அழிப்பர் ஐவர்புரவுடையார்கள் 7842, ஐம்புலன் என்வசமல்ல 7844, ஐவகை அரையரவராகி ஆட்சிகொண் டொருகால் அவர் நீங்கார் 7845.*

### ஐவேள்வி

*அங்கம் ஆறோடும் அருமறைகள் ஐவேள்வி தங்கினார் 1920, ஆறங்கம் ஐவேள்வி இணைந்த நால்வேதம் 4116.*

### ஒலிக்கருவிகள்

*இடக்கை 3618, உடுக்கை 710, கத்திரிகை 3618, கல்லவடம் 3652, 8080, கல்லிசை 4110 (=இசை தரும் கல்தூண்களா?) கழல் 17, 57, குடமுழா 812, 7193, குழல் 17, 49, 474, 6533 கைநரம்பு 2503, கொக்கரை 6533, கொட்டு 1263 கொடுகொட்டி 812, 6538, சங்கு 73, 187, சச்சரி 6533, சல்லரி 7593, சிலம்பு 17, 771 சிறுகுழல் 486, தகுணிச்சம் 7593, தக்கை 574, 7593, தண்டு 710 தண்ணுமை 2491, 7593, தமருகம் 2892, தழங்கு மொந்தை 574, தாளம் 474, 710, 5166 துடி 3618, துத்திரி 3618, துந்துபி 3572, நரல் சுரிசங்கு 2918 படகம் 3618, படுதம் 2337, பணிலம் 3616, 3658, பறை 187, 486 பாலையாழ் 1172, 2350, பிடவம் 6341, பேரி 1874, மணி 73, மருவம் 3585, முரசு 73, முரவம் 3599, முழவம் 17, 59 முழா 474, மொந்தை 574, 6533 மோந்தை 474, யாழ் 49, 486, வட்டணை 3606 வீணை 474, 6533, வீளை 727.*

### ஒலிக் குறிப்புச் சொற்கள்

*ஆ 1651, ஆ ஆ 965, ஆயோ 744, கணகண 223 கலகல 48, 3541 கிணின் 2594 சயசய 214 சலசல 48, 228, 2455 தந்தத்திந் தத்தடம் 1516 தெத்தென 3714, தென்னுதெனுத்தெத்தெனு 7240, தென்னென 3717 தேந்தாம் 1399.*

### ஒற்றியூர் ஆரூர் பற்றிய சிலேடை நயம்

*ஆரம்பாம்பு வாழ்வதாரூர் (?) ஒற்றியூரேல் உம்மதன்று 7274, ஊருமதொற்றியூர் மற்றையூர் பெற்றவா நாமறியோம் 7404, ஒற்றியூரென்ற ஊனத்தினாலது தானோ அற்றப்பட ஆரூர*

*தென்றகன்றாயோ 7551 ஊர்தானாவ துலகேழும் உடையார்க்கு ஒற்றியூர் ஆரூர் 7770.*

## கடவுளைப் பற்றிய குறிப்புக்கள்

**(அகரம்போன்ற தலைவர்)** *அகரமுதலானை அணி ஆப்ப னூரானை 952 அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய் 7252,* **(அந்தம் ஆதி)** *ஆதியார் அந்தம் ஆயினார் 1748, அந்தமும் ஆதியும் ஆகி நின்றீர் 5082,* **(அரியர் எளியர்)** *அயனும் மாலும் ஆர்க்கும் அறிவரியான் 795, தன்மையாரும் அறிவாரில்லை 1525, மலரவன்மால் எண் வசுக்கள் ஏகாத சர்கள் இரைக்கும் அமிர் தர்க்கறிய வொண்ணுன் 5118, அரிஅயன் இந்திரன் சந்திராதித்தர் அமரரெல்லாம் உரியநின் கொற்றக் கடைத் தலையார் உணங்காக் கிடந்தார் 5120, போந்தவர்க்குச் சேயார் அடியார்க்கு அணியவர் 7421, தொழுவார்க் கெளியாய் 7654, தேடிமால் அயன்காண் பரியானைச் சித்தமும் தெளிவார்க் கெளியானை 7799, அடைந்தவர்க் கமுதாயிடுவானைத் தொண்டரைப் பெரிதும் உகப்பானை...நல்லவர்க்கணியானவன் தன்னை 7803, உகந்து உள்கி நண்ணுதார்க்ரியானை அடியேற்கெளியானை 7833, சான்று காட்டுதற்கரியவன்....எளியவன் தன்னைத் தன்னில் ஆம்மனத்தார்க்கு 7910,* **(அருள்புரியும்வகை)** *நானாவித உருவாய் நமை ஆள்வான் 91, அடிகூடுவார்தம்மை தவழ்திருமகள் வணங்கவைத்துப் பெய்தவன் பெருமழை உலக முய்யச் செய்தவன் 1221, நம்மானம் மாற்றி நமக்கருளாய் நின்றபெம்மான் 1581, எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும்...இங்கே யென்றருள் புரியும் எம்பெருமான் 1900, ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான்புகில் அளவில்லை கிளக்க வேண்டா 3375, தெரிபுரி சிந்தையார்க்குத் தெளிவலால் அருளுமில்லை 4554, கண்டலாதருளுமில்லை கலந்தபின் பிரிவதில்லை 4555, உற்றநோய் தீர்ப்பர்போலும் உறுதுணை யாவர்போலும் 4698, அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய்வான் 6245, அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்து 6248, கலைஞானம் கல்லாமே கற்பித்தானை.... பணிவார்கட் கங்கங்கே பற்றானானை 6353, சிந்தைசெய்து சிவமூர்த்தி என்றெழுவார் சிந்தையுள்ளால் உற்றதோர் நோய்களைந் திவ்வுலகமெல்லாம் காட்டுவான் 6368, நினைந்துருகும் அடியாரை நையவைத்தார் நில்லாமே தீ வினைகள் நீங்கவைத்தார் 6380, மறுபிறவி அறுத்தருளும் 6429, ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் 6432, வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னை 6440, தயாமூலதன்மமென்னும் தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க்*

கெல்லாம் நலம் கொடுக்கும் நம்பி 6449, வேண்டுவார் வேண்டுவதே ஈவான் 6475, மூலநோய் தீர்க்கும் முதல்வன் 6483, நன்றருளித் தீதகற்றும் நம்பிரான் 6549, மனத்திருந்த கருத் தறிந்து முடிப்பாய் நீயே 6625, செல்வாய செல்வம் தருவாய் நீயே 6629, நினையா என் நெஞ்சை நினைவித்தானைக் கல்லாதன எல்லாம் கற்பித் தானைக் காணுதன எல்லாம் காட்டினானைச் சொல்லாதன எல்லாம் சொல்லியென்னைத் தொடர்ந்திங்கு அடியேனை ஆளாக்கொண்டு பொல்லா என்நோய் தீர்த்த புனிதன் தன்னை 6671, அல்லற்கடல் நின்றும் ஏறவாங்கி நெறி தான் இது என்று காட்டினானை 6674, முத்திகாட்டும் ஏணியை இடர்க் கடலுட் சுழிக்கப்பட்டிங்கு இளைக்கின்றேற்கு அக்கரைக்கே ஏறவாங்கும் தோணியை 6704, பிரிவிலா அடியார்க் கென்றும் வாராத செல்வம் வருவிப்பானை மந்திரம் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை 6791, அடியேன் தன்னைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித் தானை 6926, நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழி தருமிக் கருளினோன் 7000, அடியார் செய்த அனாசாரம் பொறுத்தருளி அவர்மேல் என்றும் சீறாதபெருமான் 7042, பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாயன்றே..... எம் பெருமான் திருக்கருணை யிருந்தவாறே 7180, அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்...இப்படியன்..... இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே 7293, கலந்தார்க் கருள் செய்திடும் கற்பகமே 7653, எல்லார்க்கும் இல்லையென்னாதருள் செய்வார் 7767, பொன்னும் மெய்ப் பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானைப் பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப் பணிப்பானை 7827, செல் அடியே நெருக்கித் திறம்பாது சேர்ந்தவர்க்கே சித்திமுத்தி செய்வானை நல்லடியார் மனத்து எய்ப்பினில் வைப்பை நான் உறுகுறை அறிந்து அருள்புரிவானை 7902, பந்தித்தவல்வினைப் பற்றுஅறப் பிறவிப்படுகடல் பரப்புத் தவிர்ப்பானை....சிவலோகம் திறந்து ஏத்த வல்லானை 7907, கள்ளமே பேசிக் குற்றமே செயினும் குணமெனக் கொள்ளும் கொள்கையால் மிகைபல செய்தேன் 7927, அடியாரை ஊழ்வினை நலிய வொட்டாரே 7995, தருமனார் தமர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான் 8137—46, வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை ஏறவைக்க ஆனை அருள் புரிந்தான் நொடித்தான்மலை உத்தமனே 8242, **(அழைத்தால் வருவார்)** பவன் எனும் நாமம் பிடித்துத் திரிந்துபன்னாள் அழைத்தால் இவன் எனைப் பன்னாள்

அழைப்பொழியான் என்று எதிர்ப்படுமே 5216, **(அன்பர்கட் கெளியர் வஞ்சகர்க்கரியர்)** போற்றிசைத் தென்றும் பணிவாரை மெய்ய நின்றபெருமான் 16, கரவாடும் வன்னெஞ் சர்க்கரியானைக் கரவார்பால் விரவாடும் பொருமானை 4220, சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன் நாடொறும் நல்குவான் நலன் 4267, மெய்யர் மெய்ந்நின்றவர்க்கு அல்லாத வாக்கு என்றும்பொய்யர் 4314. திருந்தா மனமுடையார் திறத்து என்றும் பொருந்தார் 4316, தமக்கன்பு பட்டவர்பாரமும் பூண்பர் 4325, கள்ளமுள்ள மனத்தவர் காண்கிலார் 6028, வஞ்சனையால் அஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயான் 6745, நேசன்காண் நேசர்க்கு நேசம் தன்பால் இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக் கூசன் காண் கூசாதார் நெஞ்சு தஞ்சேகுடி கொண்ட குழகன்காண் 6895, வஞ்சம் கொண்டார் மனம் சேரகிலார்.... தஞ்சம்கொண்டார் தமக்கென்றும் இருக்கை 7416, மெய்யர்க்கு மெய்ப்பொருளான விமலன் 7690, மெய்யனை மெய்யில் நின் றுணர்வானை மெய்யிலாதவர் தங்களுக்கெல்லாம் பொய்யனை 7815, வஞ்சமனத் திறையுநெஞ் சணுகாதவனை... பாவகமின்றி மெய்யேபற்றுமவர்க்கமுதை 8082, வஞ்சமற்றமனத்தாரை மறவாத பிறப்பிலி 8103, **(ஆகாசமூர்த்தியும் மந்திரமுமாவர்)** ஆகாச மூர்த்தியாம்.....காட்சிக்கெளியனுமாம் 6394, அஞ்சுமடக்கியங்கே ஆகாய மந்திரமும் ஆனானாகும் 6401, **(ஆண் பெண் அலி)** பெண்ஆண் அலியாகும்பித்தா 961, பெண்ணானை ஆணானைப் பேடியானை 6465, பெண்ணவனை ஆணவனைப் பேடானானை 6849, பெண்ணோடாண் அலியாய்ப் பிறவாஉரு ஆனவனே 7508, **(ஆதிரைநாள் உகந்தார்)** ஞாலத்தார் ஆதிரை நாளினான் 3106, ஆதியன் ஆதிரையன் 3449, ஆதிரைநாள் உகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே 4195, ஆதிரைநாள் ஆதரித்த அம்மான் 7028, ஆதியன் ஆதிரையன் 8209, **(ஆத்ம பந்து)** உறவுமாகி அற்றவர்களுக்கு மாநிதிகொடுத்து 3985, சிந்தையான் நினைவார்களைச் சிக்கெனப் பந்துவாக்கி உயக்கொளும் 5946, உறவிலேன் உனையன்றி மற்றடியேன் 7938, **(ஆயிரம் பேருடையார்)** பாற்றுறை மேவிய பத்து நூறு பெயரனை 611, பேர் ஆயிரமும் பிதற்றத்திரும் பிணி தானே 2103, ஆயிரம்பேர் மிகஉடையார் 2490, நாமம் நூறாயிரம் சொல்லி வானோர்தொழு நாதன் 2871, ஞானப்பேராயிரம் பேரினான் 3078, பாரினார் தொழுதெழு பரவு பல்லாயிரம் பேரினார் 3091, ஆயிரம்பேர் உகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே 4197, பேராயிரம் பரவிவானோர் ஏத்தும் பெம்மான் 6791, பேரும் ஓராயிரம் பேர் உடையார் 7404, பேர் ஓர் ஆயிரமும்

*உடையானை 7804* **(ஆரா அமுது)** *ஐயனை ஆரா அமுதினை 5021, அத்தனை ஆரா அமுதினை 5024, அருத்தனை ஆரா அமுதினை 5030,* **(ஆரியமும் தமிழும் ஆவார்)** *ஆரியம் தமிழேடிசையானவன் 5404, ஆரியன்கண்டாய் தமிழன் கண்டாய் 6479, செந்தமிழோடாரியனைச் சீரியானை 6710, வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் 7104,* **(ஆறுசமயம் வகுத்த தலவர்)** *ஒத்தாறு சமயங்கட்கொரு தலைவன் 1405, முன்னம் இருமூன்று சமயங்களாவையாகிப் பின்னையருள் செய்தபிறையாளன் 1779, ஆறுசமயம் ஓதியும் உணர்ந்ததும் உளதேவர் தொழ நின்றருள்செய் ஒருவன் 3563, மிக்க சமயங்கள் ஆறினுருவாகி நின்ற தழலோன் 4294, அறுவகைச் சமயம் வைத்தார் 4487, விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்து எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும் 4744, ஆறுசமயத்தவரவரைத் தேற்றும் தகையன 5130, சமயம் அவை ஆறினுக்கும் தலைவன் 6900, அறிவினால் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க்கங்கே ஆரருள் புரிந்து 7792,* **(ஆனையார்)** *வெள்ளிமால்வரை போல்வதோர் ஆனையார் 5596, ஞானமாகிய நன்குணர் ஆனையார் 5597, மண்ணுளாரை மயக்குறும் ஆனையார் 5601, வல்வினை தீர்த்திடும் ஆனையார் 5602,* **(இம்மை மறுமை வீடாவார்)** *மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும் விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றான் 4276, சேய உலகமும் செல்சார்வும் ஆனானை 4347, மறுமையும் இம்மையாவார் 4484, போவதோர் நெறியுமானார் 4513,* **(இயக்குபவர்)** *ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே.... ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடாதாரே..... காட்டு வித்தால் ஆரொருவர் காணாதாரே 7175,* **(இறக்கும்போது அஞ்சேல் என்பார்)** *புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறி மயங்கி அறிவழிந்திட்டு ஐமேல் உந்தி அலமந்த போதாக அஞ்சேல் என்ற அருள் செய்வான் 1394,* **(இனியர் இனிமை தருபவர்)** *நினைவார் நினைய இனியான் 801, தேனினும் இனியர்... தீம் கரும்பனையார்.... ஊன் நயந்துருக உவகைகள் தருவார் 832, சொல்நயமுடையவர் 3706. கனியினும் கட்டிபட்ட கரும்பினும்.... இனியன் 5372 என்னிலும இனியான் ஒருவன் உளன் 5433, ஈசன் எனும் கனி இனிது சாலவும் 6128, எனக்கினியவன் தமக்கினியவன் எழுமையும் மனக்கினியவன் 7953,* **(இன்ப துன்பம் கடந்தவர்)** *துன்பமொடு இன்பமெதெல்லாம் கடந்தவர் 459, இன்பன்காண் துன்பங்கள் இல்லாதான் காண் 6724,* **(இன்பம் தருபவர்)** *சங்கரனார் தம்மைப் போலத் தம் அடியார்க்கும் இன்பம் அளிப்பவர் 2573, என்னையோர் உருவமாக்கி இன்புஇருத்தி.... அருள் செய்த*

ஆரூரர் 4201, என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்.... சடையானைத் தொழுமினே 5644, இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை... சேவடியிணையே குறுகினோமே 7205, பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானை 7827, **(உடையார் ஆண்டார்)** அத்தன் நமை ஆள்வான் 167, என்னை உடையான் 803, பரவு வாரையும் உடையார் பழித்திழ்வாரையும் உடையார் 2490, என்னையும் உடையார் போலும் 4856, என்னை ஆண்டானை அறிவரிய சிந்தையானை 6922, அத்தா உனக்காளாய் இனி அல்லேன் எனல் ஆமே 7225, மீளா அடிமை உமக்கே ஆளாய் 8188, விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன் 8189, **(உயிர்க்குயிரா யிருப்பவர்)** உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேதம் நிரை சேரப் படைத்து அவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் 1419, ஆன்மாவின் இடமதாகி உசிர்ப்பெனும் உணர்வும் உள்ளார் 4603, உள்ளமாய் உள்ளத்தே நின்றாய்போற்றி 6570, உள்ளத்தினுள்ளே நின்ற கருவே என் கற்பகமே 6712, ஊனுகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகிப் பிற அனைத்தும் நீயாய் நின்றாய் 6864, **(உருகினால் வருவார்)** உருமெல்கி நாளும் உருகில் ஆராத இன்பன் அகலாத அன்பன் 2423, உள்ளம் உருகில் உடனுவார் 2672, உள்ளுளே உருகிநின்றங் குகப்பவர்க் கன்பர் போலும் 4817, சித்தத்து உருகிச் சிவன் எம்பிரான் என்று...பிதற்றுகின்றார் பிணி தீர்த்தருளய் 5196, உருகி நைபவர் உள்ளம் குளிருமே 6016, என்புருகும் அடியார் தங்கள் அம்மான் 6707, உருகுமனத் தடியவர்கட் கூறும் தேன் 7078, மிகச் சிறந்துருகிப் பரசுவார் வினைப்பற்றறுப்பான் 7913, சிந்தை உள் உருகிச் செப்ப வல்லார்க்கு இறந்து போக்கில்லை வரவில்லை 7921, **(உருவை அறிதல் முடியாது)** இன்னஉரு இன்ன நிறம் என்று அறிவதேல் அரிது 3562, இன்னவுருஎன் றறி வொண்ணாதான்காண் 6739, **(உலகமாய் வேறாய் உடனாய் நிற்பர்)** ஈறாய்முதல் ஒன்றாய் இரு பெண் ஆண்குணம் மூன்றாய் மாமறை நான்காய்வரு பூதம் அவை ஐந்தாய் ஆறார்சுவை ஏழோசையோ டெட்டுத் திசைதானாய் வேறாய்உடன் ஆனான் 109, பல்கதிரோன் மதிபார் எற்று நீர் தீக்காலுமேலை விண் இயமானனோடு.... வேறுமானான் 571, பூவின்கண் வாசனை மலைநிலநீர் தீவளி ஆகாசமாம் ஈசன் 4225, விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணும் நிலனும் திரிதருவாயுவல்லர் செறு தீயுமல்லர் தெளிநீருமல்லர் தெரியில் அரிதருகண்ணியாளை ஒரு பாகமாக அருள் காரணத்தில் வருவார் 4231, பாலின் நெய்யர்.... விறகிடைத்தீயர் 4781, விறகில்

*தீயினன் பாலில்படு நெய்போல் மறைய நின்றுளன் 6121, எல்லா உலகமும் ஆனாய் நீயே...ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே 6629, மண்ணல்லை விண்ணல்லை... ஒற்றியூர் உடையகோவே 6699, இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்றுமாகி அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி... நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே 7163, தரிக்கும் தரைநீர்தழல் காற்று அந்தரம் சந்திரன் சவிதா இயமானன் ஆனீர் 7309, மண்நீர்தீ வெளிகால் வருபூதங்களாகி மற்றும் பெண்ணோ டாணலியாய்ப் பிறவா உரு ஆனவனே 7508, ஒரு மேக முகிலாகி ஒத்துலகம் தானாய் உர்வனவும் நிற்பனவும் ஊழிகளும் தானாய்ப் பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப் புனைந்தவன் 7629,* **(எட்டு குணங்கள் உடையவர்)** *எண்குணங்களும்....தலைவன் 1405, எட்டுகொலாம் அவர் ஈறில் பெருங்குணம் 4342, கலைஞானிகள் காதல் எண்குணத்தவன் காண் 5861, எட்டுவான் குணத்துஈசன் 6109, பரமர்போலும் எண்குணத்தார் 6405, இறையவனை மறைய வனை எண்குணத்தினனை 7630,* **(எண்ணும் எழுத்தும் ஆவார்)** *எண் ஆனாய் எழுத்தானாய் எழுத்தினுக்கோர் இயல்பானாய் 4288, எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர் 5026, எண்ணானாய் எழுத்தானாய் 6364,* **(எய்ப்பினில் வைப்பு)** *எய்ப்பானார்க் கின்புறு.... தேனளித்தூறிய... எனையும் ஆள உரியான் 1636, நல்லடியார் மனத்து எய்ப்பினில் வைப்பை நான் உறுகுறை யறிந்து அருள்புரி வானை 7902, (எழுத அரியவர்) ஏவணச் சிலையினாரை யாவரே எழுதுவாரே, 4905, இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே 7203,* **(ஐந்தொழில் செய்பவர்)** *படைப்பும் நிலை இறுதிப் பயன்... உடையான் 88, படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை 1382, பல்லுலகினில் உயிர் வாழ்க்கை கண்டநாதர் 2633, தோற்றமும் கேடும் வைப்பார் உயிர்கட் கெலாம் 2889, விச்சின்றி நாறு செய்வான் 4191, ஆக்காதே யாதொன்றும் ஆக்கினான் 6354, முறைமையால் எல்லாம் படைக்கின்றானே ஏத்தவனாய் ஏழுலகும் ஆயினானே இன்பனாய்த் துன்பம் களைகின்றானே காத்தவனாய் எல்லாம் தான் காண்கின்றானே 6681, கண்ணவனாய் உலகெல்லாம் காக்கின்றானே.... விண்ணவனாய் விண்ணவர்க்கும் அருள்செய் வானே 6684, பூதலமும் மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை செய்வானை 6747, பத்தர்க்கு முத்திகாட்டும் வரத்தானை 6750, உடம்பின் உள்ளால் கருவீன்ற வெங்களவை அறிவான்தன்னை 7097, மாதாவாகிப் பிதாவாகி மக்களாகி.... அழல்வண்ண*

வண்ணர்தாம் நின்றவாறே 7169, புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே 7215, முத்தா முத்திதரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா 7754, **(ஓங்காரத்துட்பொருள்)** ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் 6643, ஓங்காரத்துட்பொருளை 6875, ஓங்கார மெய்ப் பொருளை 7097, ஓங்காரத்துருவாகி நின்றானை 7901, **(கடமை)** தன் கடன் அடியேனையும் தாங்குதல் என்கடன் பணி செய்து கிடப்பதே 5420, **(கணக்கெழுதுவர்)** தொழுது தூமலர்த் தூவித் துதித்து நின்று அழுது காமுற்று அரற்றுகின்றாரையும் பொழுதுபோக்கிப் புறக்கணிப்பாரையும் எழுதும் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே 5440, **(கருத்தறிந்து முடிப்பார்)** மனத்துள் நின்ற கருத் தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னை 6440, மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே 6625, (கருவிலே அருள்வர்) கருவுற்ற காலத்தே என்னையாண்டு கழற்போது தந்தளித்த கள்வர் 7129, **(கற்றவர் தொழுகை)** கற்றல் கேட்டல் உடையார் பெரியார் கழல் கையல் தொழுதேத்தப் பெற்றம் உர்ந்த பிரமாபுரம் மேவிய மெம்மான் 2, கற்றார்கள் ஏத்தும் கபாலீச்சரம் அமர்ந்தான் 1979, கற்று முற்றினார் தொழும் கழுமவலம் 2538, பிறைநுதலீர் உமைப் பேணுதல் கற்றறிவோர்கள் தம் கடனே 3836, கற்றவர்கள் உண்ணும் கனி 6563, கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறையூரிற் பாண்டிக்கொடுமுடி 7712, **(காட்டுமுபகாரம் செய்வர்)** காட்டினா ரெனவும்...பசுபதியாரே 4103, ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர் 5486, காணாத எல்லாம் காட்டினான் 6671, தூநெறிக்கு வழிகாட்டும் தொழிலார் 7121, தன் திறமும் அறிவித்து நெறியும் காட்டி 7141, காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே 7175, காட்டுதியேல் இன்னம் காண்பன் .....காணாத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே 8164, **(குருவாய் வருவார்)** நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு மாலடைத்த நால்வர் கேட்க நல்கிய நல் அறத்தை ஆல்அடைந்த நீழல்மேவி அருமறை சொன்னதென்னே 515, நிலையான நெய்த்தானனைக்குரவனை 5566, ஆன் ஏறேறும் குரவனாம் 6394, **(குற்றமும் குணமும் ஆவார்)** குற்றமின்மை உண்மை நீ 554, குற்றம்நீ குணங்கள் நீ.... முற்றும் நீ 3352, குற்ற நம்பி 7873, **(சதுரர்)** சடையிடைப்புனல் வைத்த சதுரன் 1204, சடையிற்கங்கை தரித்த சதுரர் 5634, **(சமணசாக்கிய மதம் ஆக்கியவர்)** அணைவில் சமண்சாக்கியம் ஆக்கியவாறே 1860, அமண்தேரர் சொல்லிய சொற்களான பொய் ஆக்கி நின்றவன் 2024, **(சமயங்களை வகுத்தவர்)** ஆயாதன சமயம் பல அறியாத அந்நெறியின் தாயானவன் உயிர்கட்கு முன் தலையானவன் 112,

*முறைத்திற முறப்பொருள் தெரிந்து.... சமயங்களை வகுத்தவன் 3648, வைதிகமும் மாதவமும் மற்றும் உலகத்தெண்ணில் பொருளாய அவை படைத்த.... பெருமான் 3662, பல்வேறு சமயங்கள் கருதியானை 6156, கொண்டசமயத்தார் தேவனாகி 6393,* **(சர்வசாக்ஷியாவர்)** *உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்தறிதி 4886,* **(சர்வ பரிபூரணர்)** *குறைவிலா நிறைவே குணமில் குணமே 1572, குறைவிலா நிறைவே குணக்குன்றே 7938,* **(செயலும் பயனுமாவார்)** *விதியாய் விளைவாய் விளைவின் பயனாகி 316, நல்குரவும் இன்பமும் நலங் களவையாகி வல்வினைகள் திர்த் தருளும் மைந்தன் 1781.* **(சென்றடையாத செல்வர்)** *சென்றடையாத திருவுடையான் 1058, சென்றடையாத் திருவுடையான் 5136, சென்றடையாச் செல்வன்தான் காண் 7104,* **(சொற்பொருள் போல்வர்)** *சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானை 4226, சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும் 6527,* **(சோதிப்பவர்)** *சொல்லுவார் சொல் எல்லாம் சோதிப்பான் 6398,* **(சோதியா யிருப்பவர்)** *சுடர்விடு சோதியெம் பெருமான் 440, சோதியே சுடரே 2009, சுடர்விட்டுளன் எங்கள் சோதி 3376, சோதியாய்ச் சுடரும் ஆனார் 4530, சோதியெனும் சுடரை 7630, சோதியைச் சுடர்போல் ஒளியானை 7865,* **(ஞானம் நிறைந்தவர்)** *ஞானத்திரளாய் நின்ற பெருமான் 745, நமை ஆளுடைய ஞான முதல்வன் 3564, காரணக் கலைஞானக் கடவுள் 5909, ஞான மூர்த்தியை நான் மறக்கிற்பனே 6146, ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன பூரணன் 6321, ஞானப்பெருங்கடல் 6468,* **(தத்துவம் கடந்தவர்)** *ஐயஞ்சின் அப்புறத்தான் 4199, தத்துவம் தலை கண்டறி வாரிலை..... தத்துவன் அலன்தண் புகலூரனே 5691, தானன்றி வேறொன்றில்லாத் தத்துவன் 6748,* **(தம்மை அடைந்தார்க்கு அருள்தருவார்)** *சார்ந்தவர்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன் 1222, தன் அடியார்க்கிங்கே என்றருள் புரியும் எம்பெருமான் 1900 தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவான் 1905, பரிவார்க்கு அமுதம் அனையார் ஆசைதீரக் கொடுப்பார் 2341,* **(தாய்தந்தை சுற்றமாவார்)** *தாயு நீயே தந்தை நீயே சங்கரனே 543, தாயானே தந்தையுமாகிய தன்மைகள் ஆயானே 1626, தாயுறு தன்மையாய தலைவன் 2402, தாய்களாயினார் பல்லுயிர்க்கும் 2578, தந்தையும் தாயுமாகி 4445, தந்தையாய்த் தாயுமாகி 4479, ஈன்றாளுமாய் எனக்கெந்தையுமாய் உடன் தோன்றினராய் 5071, இம்மூவுலகுக்கு அன்னையும் அத்தனும் ஆவாய் 5210, அப்பன் நீ அம்மை நீ....அன்புடைய மாமனுமாமியு நீ....ஒரு குலமும் சுற்றமும் ஒருருநீ 7173, தாயும் தந்தை பல்லுயிர்க்கும் தாமே ஆயதலைவனார் 7766,* **(துணையாய்**

**அருள்வர்)** அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை 6248, வாய்த்த வழித்துணையாம் 6650, துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் 7173, எனக்கார் துணை நீயலதே 7503—12, மற்றொரு துணையினி மறுமைக்கும் காணேன்.... துணையென்று நான் தொழப்பட்ட ஒண்சுடர் 7818, **(தொண்டர் குற்றேவல் செய்து மகிழ்வர்)** தொழுவார்தம் குற்றேவலைக் குறிக்கொண்டிருக்கும் குழகா 6290, குறையுடை யார் குற்றேவல் கொள்வான் 6328, நாடும் தொண்டர் குற்றேவல் தாம் மகிழ்ந்த குழகர் 6456, **(தொண்டர் செய்யும் பிழைபொறுப்பவர்)** பழையதம் அடியார் செய்த பாவமும் பிழையும் தீர்ப்பர் 5606, அன்பர் பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன் கடனன்றே 6718, அடியார் செய்த அனாசாரம் பொறுத்தருளி அவர்மேல் என்றும் சீறாத பெருமான் 7042, நாயேன் பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாயன்றே 7180, என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப்பணிப்பானை 7827, **(தொண்டர் தொழுகையே வாழ்க்கையின் மூலதனம்)** கேடிலா மணியைத் தொழல் அல்லது கெழுமுதல் அறியோமே 2661, **(நுச்சுவார்க்கு இனியர்)** இச்சையால் மலர்கள் தூவி இரவொடு பகலும் தம்மை நச்சுவார்க்கினியர் போலும் 4797, நச்சிநாளும் நயந்தடியார்தொழ.... 5696 **(நன்மை தீமை கடந்தவர்)** நன்மை தீதென்று ஒன்றிலாத நான்மறையோன் 695, **(நன்மை யுடையவர் தருபவர்)** நன்றுடையானைத் தீயதிலானை 1058, நல்லானை நான்மறை...வல்லானை 1580, தாயினும் நல்ல தலைவர் 4125, நல்லானை....துகள் ஏதும் இல்லானை 4226, நல்லர்... வல்லர்வல்வினை தீர்க்கும் மருந்துகள் 5748, நல்லான் காண்...பணிவார்க்குத் தொல்வான் ஈயவல்லான் காண் 6722, நலம் பெரியன....நங்கோனிடம் அறிந்தோம் 7950, **(நின்மலர்)** நீரார் நீறு சாந்தம் வைத்த நின்மலன் 704, நீதியாகக் கொண்டங் கருளும் நிமலன் 720, விகிர்தத்துருக் கொள்விமலன் 2375, மிக வல்ல நிமலன் தன்னை நின்மலனை 7145, அடியேனை ஆட் கொண்ட அமலர் 7191 நின்மலனே நீலகண்டா 7222 நின்மலன் ஊர்வினவில் 7386, **(நீதியானவர்)** நீதியார் நினைந்தாய நான் மறை ஓதி 1765, நீதியவன் நித்தன் 1801, நீதியர் நெடுந்தகையர் 1825, நீதி நின்னையல்லால் நெறியாது நினைந்தறியேன் 3389, நீதியைநிறைவை 5245, நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதி 6149, நீதியானை நியமநெறிகளை ஓதியானை 6157, **(நூல்கள் ஒழுக்கம் வகுத்தவர்)** அடியார்மேல் தீவினை நோய்வாராமே அறங் கொண்டு சிவதன்மம் உரைத்தபிரான் 1933, தொகுத்தவன் அருமறையங்கம் ஆகமம் வகுத்தவன் 3047, வைதிகமும் மாதவ

*மும் மற்றும் உலகத்து எண்ணில் பொருளாயவை படைத்த இமையோர்கள் பெருமான் 3662, அங்கங்கள் ஆறும் நான்கும் அந்தணர்க்கருளிச் செய்து 4451, அரியன அங்கம் வேதம் அந்தணர்க்கருளும் வைத்தார் 4455,* **(நெஞ்சமே கோயிலாக் கொண்டவர்)** *நஞ்சடைகண்டர் நெஞ்சு இடமாக நண்ணுவர் நம்மை நயந்து 472, நெஞ்சம் புகுந் தென்னை நினைவிப்பார் 481, நிறைபெற்ற அடியார்கள் நெஞ்சுளானே 1285, வேயுறுதோளி பங்கன்.....என் உளமே புகுந்த அதனால் 2388—2397, நெஞ்சமே..... பெருந்தகையிருந்ததே 3055— 3058, நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் 4160, என் உள்ளம் கோயிலாக்கி அன்பிருத்தி.... அருள்செய்த ஆருரர் 4201, நெஞ்சிருள் கூரும்போது நிலாப் பாரித் தஞ்சுடராய் நின்றான் 4352, சடையுடையாய் எப்போதும் என் நெஞ்சிடங் கொள்ளவளைத்துக் கொண்டிருந்தேன் 4364, நின்றன் பாதம் நடுப்பட நெஞ்சின் உள்ளே மாட்டினீர் 4389, பணிபவர் நெஞ்சத்துள்ளார் 4411, தொண்டர் அகமலால் கோயில் இல்லை. 4559, நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வினானே 4706, இமையாமுக்கணர் என்நெஞ்சத்துள்ளவர் 5698, நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்குநிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன் 6120, என் மனமே கோயிலாக இருந்தானை 6707, தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே 6854—62, நெஞ்சந்தன்னுள் நிலாவாத புலால் உடம்பே புகுந்து நின்ற கற்பகமே 7176, வைத்தனன் தனக்கே தலையும் என்நாவும் நெஞ்சமும் 7358,* **(பசுக்களின் பாசம் போக்குவர்)** *விளையாததொர் பரிசில் வருபசுபாச வேதனை ஒண்தளையாயின தவிர அருள் தலைவன் 121, பாசம் அறுப்பீர்காள் ஈசன் அணியாரூர் வாசமலர்தூவ நேசமாகுமே 986, பாசமான களைவார் பரிவார்க்கு அமுதம் அனையார் 2341, பந்தபாசம் அறுத்தெனை ஆட்கொண்ட மைந்தன் 5853, பாசத்தைப் பற்றறுக்கலாகும் நெஞ்சே பரஞ்சோதீ பண்டரங்கா.... எம்பெருமான் என்றென்றே ஏத்தாநில்லே 6561,* **(பசுபதியாவார்)** *பசுபதியதன் மிசைவரு பசுபதி 232, பாலனாம் விருத்தனாம் பசுபதிதானாம் 822, பெண் ஆண் பாகமாய் நின்ற பசுபதி 4228, பசுபதீ பாவநாசா 4655, எம்மை ஆளும் பசுபதியே 5189—96, பசுபதியைப் பாசுபத வேடத்தானை 7142, பண்டை நம்பலமனமும் களைந்தொன் றாய்ப் பசுபதி பதிவினவி 7821,* **(பண்பாடல்கள் விரும்புவார்)** *பண் நிலாவும் மறைபாடலினான் 14, பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத் தமிழ் அவையும்.... விண்ணும் முழுதானான் 111, பண்ணினர் மறைபாடலன் 627, பண்ணின் நல்ல மொழியார்....*

வண்ணம்பாடி வலிபாடித் தம் வாய்மொழிபாடவே அண்ணல் கேட்டுகந்தான் 1527, பண் ஒளிசேர் நான்மறையான் பாடலி னோடாடலினான் 1922, பண்ஒன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் 1935, பண்ண வண்ணத்தராகிப் பாடலொடாடலறாத விண்ண வண்ணத்தராய விரிபுகலூரர் 2467, பண்உலாம் பாடல் வீணை பயில்வான் 3423, பண் அமர்வீணையினான் 3452, பண் அமரும் நான் மறையர் 3674, பண்ணின் இன்மொழி கேட்கும் பரமன் 5405, பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்கு அண்ணித் தாகும் அமுது 5671, பண் இடைத் தமிழ் ஒப்பாய் 7518, பாட்டகத்திசையாகி நின்றான் 7861, பண்ணுதலைப்பயனார் பாடலும் நீடுதலும் பங்கய மாதனையார் பத்தியும் முத்தியளித் தெண்ணுதலைப் பெருமான் 8081, **(பதிஞானம் திருவடி ஞானம் தருவார்)** நெறி நீர்மையர் நீள்வானவர் நினையும் நினைவாகி அறி நீர்மையில் எய்தும் அவர்க்கறியும் அறிவருளி 179, அருதவம் முயல்பவர் தனதடி அடைவகை நினை அரன் 222, தவமுயல் தருமுனிவர்கள் தமமலம் அறுவகை மன நினைதரும் மறைவனம் அமர் தருபரமன் 231, **(பந்தம்வீடு ஆவார் தருவார்)** உருவமும் உயிருமாகி ஓதிய உலகுக் கெல்லாம்பெருவினை பிறப்பு வீடாய் நின்ற எம்பெருமான் 4769, எண் திசைக்கும் பந்தமும் வீடும் பரப்புகின்றீர் 5082, நல்வினையும் தீவினையும் ஆனான் 6351, **(பருமை பெருமை நுட்பம் உடையவர்)** நுண்ணி யான் மிகப்பெரியான் 661, சடைமுடியன் பெருமையன் சிறுமையன் 1306, பெரியாய் சிறியாய் பிறையாய் 1684, பரியர் நுண்ணியர் பார்த்தற்கரியவர் 5497, அணுவை....பெரியானை 6244, சிறியையாய்ப் பெரியையாய் நின்ற நாளோ 6588, **(பல உருவமுடையவர்)** நானாவித உருவாய் நமையாள்வான் 91, பல உருவன் நிலையானான் 131, கருவினாலன்றியே கருவெலாமாய வன் உருவினாலன்றியே உருவுசெய்தான் 3172, ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும் 6432, **(பித்தர் சித்தர் முத்தர்)** பெண் ஆண் அலியாகும் பித்தா 961, சித்தர்தாள் தொழ முத்தராவரே 1039, முத்தன் மிகுமூவிலை நல்வேலன் 1830, பித்தனைப் பெருங்காடு அரங்காவுடை முத்தனை முளைவெண் மதிசூடியைச் சித்தனை 5244, பித்தன்காண்.... முத்தன்காண்..... சித்தன்காண் 7107, பித்தா பிறைசூடீ 7225, முத்தா முத்தி தரவல்ல.....சித்தா 7754, **(பிறப்பு பிணி இழப்பு இறப்பிலர்)** முத்தியர் மூப்பிலர் 77, பிறப்பில் பெருமானை 865, பிறப்பாதி யில்லான் 1440, இறப்பொடு பிறப் பிலானை 4876, பிறப்பிலிபேர் நந்தி 4931, நூறுகோடி பிரமர்கள்

*நொந்தினார் ஆறுகோடி நாராயணர் அங்ஙனே ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர் ஈறிலாதவன் ஈசன்ஒருவனே 6236, பிறப்பிலார் இறப்பிலார் பிணி ஒன்றில்லார் 6347, பாலனாய் வளர்ந்திலாப் பான்மையான் 6587, பிறவாதும் இறவாதும் பெருகினான் 6982, மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை இறப்ப தில்லை7402, பிறவாய் இறவாய் பேணுய்மூவாய் 7644,* **(புதியர் பழையர் புராணர் சாரணர்)** *புராணர் 1421, பூரணன்காண் புண்ணியன்காண் புராணன்தான் காண் சாரணன்காண் சந்திரன்காண் 6321, புதியனவுமாய் மிகவும் பழையான் 6356, பாலர்சாலப் பழையர் 6418, புராணன் தானேயாகி 7172, சாரணன் தந்தை எம்பிரான் 7720,* **(புனிதர் உத்தமர் புண்ணியர் நாவலர் காவலர் நேசர்)** *புகலி நிலாவிய புண்ணியனே 34—44, ஈச என்நேச 34, நேசனை நெஞ்சினுள் நிறைவாய் நின்ற ஈசனை 6222, நாவலனை....அனலோன் போற்றும் காவலனை 7131, உருத் திரனை...உத்தமனை 7135, அமுதைத் தேனைப் புண்ணியனை 7144, புணர்வரியபெருமானைப் புனிதன் தன்னை 7151, உன் அடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே 7215, 7217—7224, நெற்றி ஒற்றைக்கண் படைத்துவந்த உத்தமன் 7383, எனை ஆளுங்கொண்ட நாவலனார் 7391, இன் அமுதாய் என்னுடைய தோழனுமாய் 7751,* **(போக போக்கியமாவார்)** *பழமாகிப் பழத்தில் நின்ற இரதங்கள் நுகர்வானும் தானேயாகி 7167, பொன்னானாய் மணியானாய் போகமானாய் 7179,* **(மந்திரமும் தந்திரமும் மருந்துமாவார்)** *மந்திரத்தான் தந்திரத்தான் 658, மருந்து வேண்டில் இவை மந்திரங்கள் இவை 3063, மருந்தவை மந்திரம் மறுமை நன்னெறியவை 3788, மந்திரமும் தந்திரமும் ஆனார் போலும் 6402, மந்திரமும் தந்திரமும் மருந்தமாகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான் 6791,* **(மந்திரிப்பார் மனத்துளர்)** *வாயானை மந்திரிப்பார் மனத்துளானை. 6745, மருந்தானை மந்திரிப்பார் மனத்துளானை 6874,* **(மறக்கருணை செய்பவர்)** *துக்கமா மூடர் துயரிலே வீழ்ப்பர் போலும் 4701,* **(மும்மூர்த்திகளும் சதுர்த்தப் பொருளும் ஆவார்)** *புவம் வளிகனல் புனல் புவி...சுரர் முதலியர் திகழ்தரும் உயிரவையவை தமபவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய சிவன் 217, உலகுகள் நிலை பெறுவகை நினைவொடு மிகும் அலைகடல் நடு அறிதுயில் அமர் அரிஉரு இயல்பரன் 218, அவையவை முழுவதும் அழிவகை நினைவொடு முதலுரு இயல்பரன் 219, மூவராய முதல்வர் முறையாலே தேவரெல்லாம் வணங்கும்.... அடிகள் 284, மூவருமாகி இருவருமாகி முதல்வனுமாய் நின்ற மூர்த்தி 449, விரைமலரோன்*

செங்கண்மால் ஈசன் என்னும் மூவராய முதல் ஒருவன் 570, வரியாய மலரானும் வையம் தன்னை உரிதாய அளந்தானும் உள்ளுதற்கங்கரியானும் அறியாத கள்ளில் மேயான் பெரியான் 1290, படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகள் ஆயினை 1382, மாலுமோர்பாகர் பங்கயத் தயனுமோர் பாலர் ஆதியாய் நடுவாய் அந்தமாய் நின்ற அடிகளார் 4084, மூவராய் முதலாய் நின்ற மூர்த்தி 5589, ஒருருவே மூவுருவமான நாளோ 6583, ஒருருவின் மூவுருவாய் ஒன்றாய் நின்ற விருத்தன் 7087, **(யோகியாயவர்)** மங்கையைக் கெழுவின யோகினர் 4256, பரமனே பரமயோகி 4387, கல்லாடை மேற்கொண்ட காபாலி 6324, தூவெளுத்த கோவணத்தை அரையில் ஆர்த்த கீளான் 6914, **(வாட்டம் தீர்ப்பவர்)** வாட்டம் தீர்க்கவும் வல்லர் மாற்பேறரே 5835, வாட்டம் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே 6046, வாடிய வாட்டம் தவிர்ப்பான் 6480, மருளாதார் தம்மனத்தில்வ ாட்டம் தீர்ப்பாய் 7218, **(வாழ்க்கையில் எல்லா நலங்களும் தருவார்)** சிவபுரம் நினைபவர் திருமகளொடு திகழ்வரே 218, சிவபுரமது நினைபவர் செயமகள் தலைவரே 220, சிவபுரம் நினைபவர் கலைமகள் தர நிகழ்வரே 221, சிவபுரம் நினைபவர் வழிபுவி திகழுமே 225, மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலும் கண்புகார் பிணியறியார் 1906, பேய் அடையா பிரிவு எய்தும் பிள்ளையினோடு உள்ள நினைவாயினவே வரம் பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும் 1983, ஆசை தீரக் கொடுப்பார் 2341, மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும் எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறை விலை 3052, வேண்டுவார் வேண்டுவதே ஈவான் 6475, அடியார் கள் வேண்டிற்று ஈயும் விண்ணவனே விண்ணப்பம் கேட்டு நல்கும் செய்யவனே 6690, பூதலமும் மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை செய்வானை 6747, துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ 7173, இருநிலத்தில் எமக்கு எதிராவாரும் இல்லை 7209, இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்து எலாம் 7564, முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை....கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும் 7691, கந்தமுதல் ஆடை ஆபரணம் பண்டாரத்தே எனக்குப் பணித்தருள வேண்டும் 7695, ஆரூர் புகப்பெய்த அருநிதியம் அதனில் தோற்றமிகு முக்கூறில் ஒருகூறு வேண்டும் 7698, பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகைமேல் ஓர் பொற் பூவும்பட்டிகையும் புரிந்தருள வேண்டும் கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும் 7700, பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமும் திருவும் புணர்ப்பானை 7827, **(விருப்பு வெறுப்பு இல்லாதவர்)** வேண்டாமை

*வேண்டுவதும் இல்லான் 6709,* **(விரைவில் அருள்பவர்)** *தன்னை நோக்கித் தொழுதெழுவார்க்கெலாம் பின்னை என்னார் 5607, துக்கம் தொடர்ந்துவந் தடரும்போது அரனுய் அருள்செய்பவர் 5744,* **(வினைகளை எல்லாம் அறுப்பார்)** *(வினைகள் மூவகை— சங்சீதம் எனும் தொல்வினை, பழவினை, பிராரத்தம் எனும் உள்வினை நிகழ்வினை, ஆகாமியம் எனும் மேல்வினை வருவினை) அடியார்மேல் பையநின்ற வினைபாற்றுவர் 16, அடியிணை தொழ வருவினை எனும் உரை பொடிபட 200, அடியிணை தொழுமவர் அருவினை எழுமையும் இல 203, நிறையால் வணங்க நில்லா வினைகளே 266, கடவுளைமெய்யால் வணங்க மேவாவினைகளே 267, அடியார் தங்கள் வருமேல்வினையோடு பந்தித்திருந்த பாவம் தீர்க்கும் 749, எருதே இனிதூர்வர்..... விருதாம் வினைதீர்ப்பே 1026, தொல்வினை நம்மேல் நில்லாவே 1087, இரந்தேத்தும் அவர்க்கு அதிரும் வினையாயின ஆசறுமே 1694, எத்தொழில ரேனும் நினைப்புடை மனத்தவர் வினைப்பகையும் நீயே 1791, தொழும் அடியவர்மேல் வினை கனலிடைச் செதிளன்றே 2590, அடியரை முன்வினை மூடாவே 2594, ஏத்தவல்லார்வினை தேய்வது திண்ணமே 2597, வெண் திங்கள் சூடினாய் அருளாய் சுருங்க எம் தொல்வினையே 2801, சொலவலார் அவர் தொல் வினை தீருமே 3297, நினைப்பவர் வினைகள் தீர்ப்பாய் 4711, பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன்.....ஐயாறன் அடித்தலமே 5041, அண்ணுமலை கைதொழக் கெட்டுப் போம் வினை கேடில்லை 5270, அண்ணுமலைக் கைதொழ ஓடிப்போகும் நம்மேலை வினைகளே 5273, ஓடிப்போம் நமது உள்ள வினைகளே 5274, ஆரூரரைத் தூரத்தே தொழுவார்வினை தூளியே 5298, பண்டை வல்வினை நில்லா பறையுமே 5300, முந்தியவல் வினைகள் தீர்ப்பான் 6536, வலஞ்சுழியே என்பீராகில் வல்வினைகள் தீர்ந்து வான் ஆளலாமே 7158, வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு மிக இரங்கி அருள் புரிந்து வீடு பேறாக்கம் பெய்தான் 7613, பிறவிவேர் அறுக்கும் கரும்பு 7822, பந்தித்த வல்வினைப் பற்று அறப் பிறவிப் படுகடல் பரப்புத் தவிர்ப்பான் 7907, பாட்டும் பாடிப் பரவித்திரிவார் ஈட்டும் வினைகள் தீர்ப்பார் 8147, வல்வினைப்பட்டு ஆழமுகந்த என்னை அதுமாற்றி அமரரெல்லாம் சூழ அருள்புரிந்து தொண்டனேன் பரமல்ல தொரு வேழம் அருள் புரிந்தான் 8244,* **(வேதம் அருளியவர் பாடுபவர்)** *விழையா ருள்ளம் நன்கெழு நாவில் வினைகெட வேதம் ஆறங்கம் பிழையா வண்ணம் பண்ணியவாற்றால் பெரியோரேத்தும் பெருமான் 454, வேதம் ஓதி வெண்ணூல்*

பூண்டு வெள்ளை எருதேறிப் பூதம் சூழப் பொலிய வருவார் 722, மறைகள் நிறைநாவர் 769, வேதங்கள் வேறு வேறு தெரித்தவன் 1218, வேதர் வேதமெலாம் முறையால்விரித்து ஓத நின்ற ஒருவனார் 1450, வேத நாவினர் 1879, மறைதரு வெள்ளமேறி வளர்கோயில் மன்னி இனிதாயிருந்த மணி 2376, வேதவித்தாய் வெள்ளைநீறு பூசி 2737, சாமம் பாடுவர் 3002, வேதனுர்வெண் மழு ஏந்தினார் 3112, வேதமாய் வேள்வியாகி...... ஆதியாய் நின்ற பெம்மான் 3421, எண்ணுடை இருக்குமாகி இருக்கினுட் பொருளுமாகி 4626, பாடினுர் சாமவேதம் 4824, சாமவேத கந்தருவம் விரும்புமே 6276, சந்தோக சாமம் ஓதும் வாயானை 6745, விரிந்தானைக் குவிந்தானை வேதவித்தை 7100, வேதம் ஓதி வெண்ணீறுபூசி....மகிழ்வீர் 7728, **(வேள்வியை விரும்பு வார் வேள்வியாவார்)** கற்றாங்கு எரியோம்பிக் கலியை வராமே செற்றார் 864, புந்தியினால் மறைவழியே புல்பரப்பி நெல் சமிதை கையில் கொண்டு வெந்தழலின் வேட்டுலகின் மிக அளிப்போர் 1424, மறையோர்கள் ஓமம் வளர்தூமம் ஓடி..... வான் மறைத்து நிறைகின்ற கொச்சைவயம் 2371, வேதமாய் வேள்வி யாகி..... நின்றபெம்மான் 3421, வேத வேள்வியை நிந்தனை செய் துழல் ஆதமில்லி அமணெடுதேரரை வாதில்வென்றழிக்கத் திருவுள்ளமே 3956, வேதத்தா னென்பர் வேள்வியுளா னென்பர் 5340, எரிபெருக்குவர் அவ்வெரி ஈசன துருவருக்கம் ஆவதுணர் கிலார் 6240, தூய நெய்யால் வட்டக் குண்டத்தில் எரிவளர்த் தோம்பி மறை பயில்வார் அட்டுக்கொண் டுண்பதறிந் தோமேல் நாம் இவர்க்கு ஆட்படோமே 7403, வேதனை வேத வேள்வியர் வணங்கும் விமலனை 7919. (சிவபெருமான் தலைப்பிலும் பார்க்க.)

**கண்ணப்ப நாயனார்**

கானலைக்கும் அவன்கண் இடந்து அப்ப நீள்வான் அலைக்கும் தேவுவைத்தான் 3176, வாய் கலசமாக வழிபாடு செயும் வேடன் மலராகு நயனம் காய் கணையினல் இடந்து ஈசன் அடிகூடு காளத்தி மலையே 3540, கண்ணப்பர்க்கருள் செய்த கயிலை எங்களண்ணல் 3973, காப்பதோர் வில்லும் அம்பும் கையதோர் இறைச்சிப் பாரம் தோற்பெரும் செருப்புத் தொட்டுத் துயு வாய்க்கலசம் ஆட்டித் தீப்பெரும் கண்கள் செய்ய குருதிநீர் ஒழுகத் தன் கண் கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனுரே 4640, குவப்பெரும் தடக்கை வேடன் கொடும்சிலை இறைச்சிப் பாரம் துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூய வாய்க்கலசம் ஆட்ட உவப் பெரும்

*குருதி சோர ஒரு கணை இடந் தங்கப்பத் தவப்பெருந் தேவு செய்தார் சாய்க்காடு மேவினூரே 4794, கண்ணப்பன் கண் அப்பக் கண்டுகந்தார் 6365, கண்ணப்பர்க் கருள் செய்த காளைகண்டாய் 6642, கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன் 7618, கண்ணப்பன் கனம் புல்லன் என்றிவர்கள் குற்றம் செய்யினும் குணம் எனக் கருதும் கொள்கை கண்டு 7787, கணைகொள் கண்ணப்பன் என்றிவர் பெற்ற காதல் இன்னருள் ஆதரித்தடைந்தேன் 7890, எறிந்த சண்டி இடந்த கண்ணப்பன் ஏத்து பத்தர்கட் கேற்றம் நல்கினீர் 8121.*

## கலியைவென்ற மறையோர்

*எரி ஓம்பிக்கலியை வாராமே செற்றார் வாழ்தில்லை 864 கலி கடந்த கையான்...... சம்பந்தன் 1535 கலிகடிந்த கையார் மருவும் கலிக்காழி 1997 கலியைவென்ற மறையாளர்தம் கலிக் காழி 2281 கலிகெட அந்தணாளர் கலைமேவு சிந்தையுடையார் 2372 கலிகடந்த கையார் கடற்காழி 3259 ஒழுகலரிது அழிகலியில் உழிஉலகு பழி பெருகு வழியை நினையா முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி குழுவினொடு கெழுவு சிவன் 3525 கலியைவென்ற வேதியர்கள்.... வீழிமிழலை 4085 கலிவலம் கெட ஆரழல் ஓம்பும்.....வலிவலம் 7911.*

## கிரிப்ரதக்ஷணம் செய்யும் பழக்கம்

*வள்ளலிருந்த மலையதனை வலம் செய்தல் வாய்மை என உள்ளம் கொள்ளாது 3875.*

## குபேரன் தோழமை

*பனிவளர் மாமலைக்கு மருகன் குபேரனொடு தோழமை கொள் பகவன் 2371 மித்திர வச்சிரவணற்கு விருப்பர் போலும் 6781 நிதியாளன் தோழனை நீடூரானை 6940 தும்பியுரி போர்த் தானைத் தோழன் விட்ட அடலாழித் தேருடைய இலங்கைக் கோனை அருவரைக்கீழ் அடர்த்தானை 7140.*

## குலச்சிறை நாயனார் வழிபட்ட முறை

*வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன்....... குலச் சிறை 4091 கணங்களாய் வரினும் தமியராய் வரினும் அடியவர் தங்களைக் கண்டால் குணங்கொடு பணியும் குலச்சிறை 4093 நலமிலராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற குலமிலராகக் குலம துண்டாகத் தவம்பணி குலச்சிறை 4095 நாவணங்*

கியல்பாம் அஞ்செழுத்தோதி நல்லராய் நல்லியல்பாகும் கோவணம் பூதி சாதனம் கண்டால் தொழு தெழு குலச்சிறை 4097 தொண்டராய் உள்ளார் திசை திசை தோறும் தொழுது தன் குணத்தினைக் குலாவக் கண்டு நாள்தோறும் இன்புறுகின்ற குலச்சிறை 4099.

## குலம்

குலவராகக் குலம் இலருமாகக் குணம் புகழும்கால் உலகில் நல்ல கதிபெறுவர் 2719 குலம் இலராகிலம் குலத்துக் கேற்பதோர் நலமிகக் கொடுப்பத நமச்சிவாயவே 4267 நாசமாய குலநலம் சுற்றங்கள் 5542 சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர் 5832 குலம் கெடுத்துக்கோள் நீக்கவல்லான் 6449 எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி..... ஈசன் திறமே பேணிக்கவராதே தொழும் அடியார் நெஞ்சின் உள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே 6856 ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே 7182.

## குறிகளும் அடையாளமும்

குறிகளும் அடையாளமும் கோயிலும் நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும் அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும் பொறியிலீர் மனம் என்கொல் புகாததே 6117.

## கொடையாளர் மிக்க தமிழ்நாடு

கலை நிலவிய புலவர்கள் இடர்களை தருகொடை பயில் பவர் 208 தரு நிகர் கொடையினர் செறிவொடு திகழ்தருமிழலை 215 இரவலர் துயர் கெடுவகை நினை இமையவர்புரம் எழில் பெறவளர்மரம் நிகர்கொடை மனிதர்கள் பயில் மறைவனம் 229 உரவார் கலையின் கவிதைப் புலவர்க்கொரு நாளும் கரவாவண் கைக் கற்றவர் சேரும் கலிக்காழி 1102 விலங்கலமர் புயல் மறந்து மீன் சனிபுக்கு ஊன் சலிக்கும் காலம் தானும் கலங்கல் இலாமனப் பெருவண்கை உடைய மெய்யர் வாழ் கழுமலம் 1385 வேளாளர் என்றவர்கள் வள்ளண்மையால் மிக்கிருக்கும் தாளாளர் ஆக்கூர் 1919 இன்மையாற் சென்றிரந்தார்க்கு இல்லை யென்னாது ஈந்துவக்கும் தன்மையார் ஆக்கூர் 1925 கொடை யுடை வண்கையாளர் மறையோர்கள் என்றும் வளர்கின்ற கொச்சைவயம் 2368 கலையின் மேவுமனத்தோர் இரப் போர்க்குக் கரப்பிலார் பொலியும்.....புகலி 2797 புலவாணர்

*வறுமை விடுத்தலை மதித்து நிதிநல்கும் அவர் மல்குபதி வேதவனமே 3621 வையம் விலைமாறிடினும் ஏறு புகழ்மிக்கு இழிவிலாத வகையார் வெய்யமொழி தண்புலவருக் குரை செயாத அவர் வேதிகுடி 3640 பாவலர்கள் ஓசை இயல் கேள்வியதறாத கொடையாளர் 3643 இரப்பவர்க்கீயவைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார் கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார் 4541.*

## கோச்செங்கட்சோழன்

*கோடடைந்தமால்களிற்றுக் கோச்செங்கணற்கருள் செய்..... சேய்ஞலூர் மேயவனே 520 செங்கட் பெயர் கொண்டவன் செம்பியர்கோன் அங்கட்கருணை பெரிதாயவனே 1714 சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தானூர் 2152 அந்தண்மா மானதன் நேரியன் செம்பியன் ஆக்கிய எந்தை மூக்கீச்சரம் 2774 செய்யகண் வளவன் முன் செய்த கோயிலே 2988 செம்பியன் கோச்செங்கணன் செய் கோயிலே 2990 அம்பர் மாநகர்க் குரிசில் செங்கண்ணவன் கோயில் 2998 (2999, 3002, 3006) செம்பியன்கோச்செங்கண் நிருபர் தண்டலை நீணெறி 3336 சிட்டப் பட்டார்க்கெளியான் செங்கண் வேட்டுவப்பட்டங் கட்டும் சென்னியான்பதி 4142 சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழற்பந்தர் செய்து உலந்தவன் இறந்தபோதே கோச் செங்கணனுமாகக் கலந்த நீர்க்காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள் குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே 4637 நலந்திகழ்வாயின் நூலால் சருகிலைப் பந்தர் செய்த சிலந்தியை அரசதாள அருளினாய் 4765 (4789, 6448, 6477, 6899, 6994) புத்தியினால் சிலந்தியும் தன் வாயின் நூலால் பொதுப் பந்தர் அது இழைத்துச் சருகால் மேய்ந்த சித்தியினால் அரசாண்டு சிறப்புச் செய்யச் சிவகணத்துப் புகப்பெய்தார் 7071.*

## கோயில்கள் பற்றிய குறிப்புக்கள்

**(அர்ச்சனைகள்)** *சந்திபல அர்ச்சனைகள் செய்ய அமர் கின்ற அழகன் 3603, செந்தமிழர் தெய்வமறை நாவர் செழுநற் கலை தெரிந்த அவரோடு அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனை கள் செய்ய அமர்கின்ற அரனூர் 3660,* **(கல்மதில் முதலியன)** *சிலைமலிமதிள்....மிழலை 208, சிலைமலி மதிள்சிவபுரம் 218, கல்லியல் இஞ்சி மஞ்சமர் கண்ணார் கோயில் 1093, சிலைமதில் வேணுபுரம் 1260, (1270, 1335, 3051, 3354, 3388, 3459, 3842, 3853 முதலியன)* **(கோபுரங்கள்)** *இலங்கு கோபுரம் தீண்டு மதியம்*

வேலை அரவுக்குப் புற்றுக் கலை நிரம்பாத் திங்கட்கு வானம் திருஓற்றியூரர் திருமுடியே 4989, கொய்ம்மலர்க் கொன்றை துழாய் வன்னி மத்தமும் கூவிளமும் மெய்ம்மலர் வேய்ந்த விரிசடைக் கற்றை விண்ணோர் பெருமான் 5015, விரிசடைமேல் வெள்ளித் தகடன்ன வெண்பிறை சூடி வெள்ளென்பணிந்து 5208, பவளத்தடவரை போலும் திண்தோள்கள் அத்தோள் மிசையே பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை அச்சடைமேல் பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகம் அந்நாகத் தொடும் பவளக்கண் வாலமதி எந்தை சூடும்பனி மலரே 5218, அட்ட மாமலர் சூடி அடும்பொடு வட்ட புன்சடை மாமறைக் காடரோ 5315, கனலும் கண்ணியும் தண் மதியோடுடன் புனலும் கொன்றையும் சூடும் புரிசடை 5435, வண்டோங்கு செங்கமலக் கழுநீர் மல்கும் மதமத்தம் சேர்சடை மேல் மதியம் சூடித் திண்தோள்கள் ஆயிரமும் வீசி 6691, நிலா அலைத்த பாம்பினொடு நிறை நீர்க்கங்கை ஆறலைத்த சடைமுடியும் அம் பொன் தோளும் அடியவர்க்குக் காட்டியருள் புரிவார் 6989, கற்றுதைந்த நன்னீர் அலையுடையார் சடையெட்டும் சுழல அரு நடம்செய் நிலையுடையார் 7418, **(அணி, ஆயுதம், படை, பூண்)** முற்றலாமை, இளநாகம், ஏனமுளைக் கொம்பு, வற்றலோடு 2, கறைமலிதிரிசிகை படை அடல் கனல் மழுஎழுதர வெறிமறி முறைமுறை ஒலி தமருகம் உடைதலை முகிழ்மலிகணி வடமுகம் உரைதருகரன் 233, அக்கினொடு ஆமை பூண்டு 438, திகழ் சுத்திக்கையர் கட்டங்கத்தர் 715, கச்சும் ஒள்வாளும் கட்டிய உடையர் 838, கவரியும் குடையும் பிச்சமும் பிறவும் 838, **(இவை எடுபிடிகள்)** பரசுஎனும் படை ஆள்வீர் 2347, கணிச்சியம் படைச் செல்வர் 2534, கலையிலங்கும் மழு கட்டங்கம் கண்டிகை குண்டலம் விலையிலங்கும் மணி......தாழ்வடம் சூலம் தமருகம் 2892, பொடிநாறு மேனியர் பூதிப்பையர் புலித்தோலர் பொங்கரவர் பூணநூலர் 6363, செத்தவர் தம் தலைமாலை கையில் ஏந்திச் சிரமாலை சூடி......புத்தகம் கைக்கொண்டு 6374, ஆமை பூண்டு வெண்தோடு பெய்து இடங்கை வீணை ஏந்தி 6378, வடிவேறு திரிசூலம் 6422, பற்றார் தம்மேல் சேணுக வரைவில்லால் எரித்தல் தோன்றும் செத்தவர்தம் எலும்பினால் செறியச் செய்த பூணும் அரைஞாணும் பொலிந்து தோன்றும் 6423, படை மலிந்த மழுவாளும் மானும் தோன்றும்......விடை யோடு கொடியும் தோன்றும் 6425, கேழல் மருப்போட்டு மணி வயிரக் கோவை தோன்றும் 6430, பஞ்சவடி மார்பினன் 7135, கட்டு வாங்கம் தரித்தபிரான் 7800, சலந்தரன் ஆகம் இருபிள

*வாக்கிய சக்கரம்முன்......நெடுமாற் கருள் செய்தபிரான் 8223,* **(வழிபாட்டுக்குப் பத்திர புஷ்பம் முதலியன)** *அஷ்ட புஷ்பம் 5770—5779, 7450, எருக்கு 438, கரந்தை 658,கனகி, 231, கூவிளம் 67, கொக்கிறகு 771, கொங்கு 255, கொன்றை 904, செருந்தி · 255, நந்திவட்டம் 5112, நொச்சி 8221, மகிழ் 837, மத்தம் 67, முருக்கு 837, வன்னி 384, வேங்கை 816,* **(பொதுவாகக் கிடைக்கும் மலர் ஏதேனும் எனும் பொருளில்)** *பெறுமலர் கொண்டு தொண்டர் வழிபாடு செய்யல் ஒழி பாடிலாத பெருமான் 2379.*

### சிவபெருமான் பொதுக்குறிப்புக்கள்

*சர்வசங்கார காலத்திலிருப்பவர் 234, திருநீற்றுக்குழையல் உடையவர் 704, குன்றமெல்லாம் உடையான் 3436, பொதிகை இடங்கொண்டார் 853, சாமிதாதை 2722, கனகமலையனைய காட்சியான் 6766.*

### சிவபெருமான் மூர்த்தங்கள்

*சிவமஹா புராணம், சிவபராக்கிரமம், காஞ்சிப்புராணம், உபதேச காண்டம் முதலிய நூல்களில் இவை விரிவாகக் கூறப் படுகின்றன. அஷ்டாஷ்ட மூர்த்தங்கள் (64) ஆகிய இவற்றுள் சில வற்றைப் பற்றி அடங்கன் முறையில் ஒவ்வொரு குறிப்பே இங்கு, தரப்படுகின்றது அர்த்தநாரீசுவரர் 3937, உமாமஹேசர் 97, ஏகபாதர் 234, ஏகபாதத் திரிமூர்த்தி 1382, கங்காதரர் 2567, கங்கா விஸர்ஜனர் 4113, கங்காளர் 6528, கருடாந்திகர் 6780, கர்த்ரு சாதாக்கியர்* **(சிவலிங்கத்தில் நான்முகமுடைய ஒருபகுதி)** *4338, கல்யாணசுந்தரர் 7380, கஜபுத்தர் 4472, கஜாந்திகர் 1988, காமதஹனர் 4819, காலசம்ஹாரர் 212, கிராதர் 6585, குரு 5566, கூர்மசம்ஹாரர் 2, கேசவார்த்த மூர்த்தி 4804, சகலசிவம் 3545, சக்ரதானர் 4638, சண்ட தாண்டவர் 4824, சண்டே சானுக்ரஹர் 6431, சதாசிவர் 6972, சதாநிருத்தர் 4528, சந்திரசேகரர் 1, சரப மூர்த்தி 7275, சார்த்தூலஹரர் 733, சிம்ஹக்னர் 8235, சுகாசனர் 5377, சோமாஸ்கந்தர் 6478, தக்ஷயஜ்ஞஹதர் 7191, தக்ஷிணாமூர்த்தி 7894, திரிபுராந்தகர் 113, பாசுபதர் 6743, பிரம்மசிரச்சேதர் 1411, பிக்ஷாடனர் 12, புஜங்கத்ராஸர் 2, பைரவர் 2891, ரக்தபிக்ஷாப்ர தானர் 7183, ரிஷபாரூடர் 1, லிங்கமூர்த்தி 6577, லிங்கோத்பவர் 138, வராஹசம்ஹாரர் 2, விஷாபஹரணர் 228, ஜலந்தரவத மூர்த்தி 4112.*

### சிறுதெய்வ வழிபாடு கூடாது

*அங்கதிரோன் அவனை அண்ணலாக் கருதவேண்டா 4569, செத்து செத்துப் பிறப்பதேதேவென்று பத்திசெய் மனப்பாறைகட் கேறுமோ 6235, யாதோர் தேவர் எனப்படுவார்க்கெலாம் மாதே வன் அலால் தேவர்மற் றில்லையே 6237, எரிபெருக்குவர் அவ் வெரி ஈசனதுருவருக்கம் ஆவதுணர்கிலார் 6240, அருக்கன்பாதம் வணங்குவர் அந்தியில் அருக்கன் ஆவான் அரன் உரு அல்லனோ 6241, அமுதருந்தப் பெறார் பேயர் பேய்முலை உண்டுயிர் போக்கிய மாயன் மாயத்துப்பட்ட மனத்தரே 6242, சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம் சிவபெரு மான் திருஅடியே சேரப் பெற்றோம் 7209.*

### சிறுத்தொண்ட நாயனார்

*பொடி நுகரும் சிறுத்தொண்டர்க் கருள் செய்யும் பொருட் டாகக் கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச்சரத்தானே 665, செங் காட்டங்குடி மேய சிறுத்தொண்டன் பணிசெய்ய (3471—3480) கல்நவில்தோள் சிறுத்தொண்டன் 3472, சிட்டன்சீர்ச் சிறுத் தொண்டன் 3473, செருவடிதோள் சிறுத்தொண்டன் 3477, சீராளன் சிறுத்தொண்டன் 3478, சிறப்புலவன் சிறுத்தொண்டன் 3479, செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டர் 7622.*

### சிறுத்தொண்டர் என்றசொல் வழக்காறு

*வணங்கும் சிறுத்தொண்டர் வைகல் ஏத்தும்......ஆலங்காட் டெம் அடிகளே 487, குற்றாலம்....எயிலெய்த சிலையான்மேய நன் னகர்போலும் சிறுதொண்டீர் 1073, சிறுத்தொண்டர் உள்ளமெல் லாம் உள்கி.....கழுக்குன்றே 1117, பழகவல்ல சிறுத்தொண்டர் பாவின்னிசைக் கருகாவூர் 3290.*

### சுந்தரமூர்த்தி சுவாமிகள் பற்றிய குறிப்புக்கள்

*வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன் 7263, கையில் ஒன்றும் காணமில்லை 7266, வேண்டிக் கொள்வேன் தவ நெறியே 7347—56, வைத்தனன் தனக்கே தலையும் என் நாவும் நெஞ்சமும் வஞ்சமொன்றின்றி உய்த்தனன் தனக்கே திருவடிக்கு அடிமை 7358, எழுமையும் அடியேன் அடியவர்க் கடியனுமானேன் உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும் 7368, கருதேன் எருதேறும் கண்ணு நின்னலதறியேன் தொண்டரடித் தொழுவார் தொழக்கண்டு தொழுதேன் என் வினைபோக 7378, தன்மையினுல் அடியேனைத் தாம் ஆட் கொண்ட நாட்சபை முன் வன்மைகள் பேசிட வன்றொண்டன் என்பதோர் வாழ்வுதந்தார் 7392, கூடவர் மன்னன் குல*

நாவலூர்க் கோன் 7411, நீளநினைந்தடியேன் உமைநித்தலும் கைதொழுவேன் 7423, நொந்தா ஒண்சுடரே.....வந்தாய்போய் அறியாய் மனமே புகுந்துநின்ற சிந்தாயெந்தை பிரான் 7433, உன்னையல்லால் உரையேன்நா அதனால் உடலில் உயிர் உள்ளளவும் 7440, அன்னே உன்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே 7463, எம்மான் எம்அனை என்றெனக்கு எள்தனைச் சார்வாகார் 7465, மறையார்தம் குரிசில் வயல் நாவல் ஆரூரன் 7482, பொய்யாது என்உயிருட் புகுந்தாய் இன்னம் போந்தறியாய் 7507, மலை மலிந்ததோள் ஆரூரன் வனப்பகை அப்பன் 7533, செடியனுகிலும் தீயனுகிலும் தம்மையே மனம் சிந்திக்கும் அடியன் ஊரன் 7563, நாவலூரன் வனப்பகை அப்பன் சடையன் தன் சிறுவன் வன் தொண்டன் ஊரன் 7574, நித்தமாக நினைந்து உள்ளமேத்தித் தொழும் அத்தன் அம்பொற் கழல் அடிகள் ஆரூரரைச் சித்தம் வைத்த புகழ்ச்சிங்கடியப்பன் மெய்ப்பத்தன் ஊரன் 7606, எம்மான்தன் அடிக்கொண்டென் முடிமேல் வைத்திடுமென்னும் ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன் 7607, அரனடியே அடைந்திட்ட சடையன் இசைஞானி காதலன் திருநாவலூர்க் கோன் 7627, உரையினார் மதயானை நாவலாரூரன் 7638, ஆரூரன் பேர்முடி வைத்த மன்னுபுலவன் வயல் நாவலர்கோன் செஞ்சொல் நாவன் வன்றொண்டன் 7648, பித்தன் ஒப்பான் அடித் தொண்டன் ஊரன் 7669, திருவொற்றியூர் புக்குச் சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென்தோள் தடமுலை ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே 7683, முத்தாரம் இலங்கிமிளிர் மணி வயிரக் கோவை அவை பூணத் தந்தருளி.....கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும் 7691, வேம்பினோடு தீம் கரும்பு விரவி எனைத்தீர்த்தீர்........ காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டும் 7692, கந்தமுதல் ஆடை ஆபரணம் பண்டாரத்தே எனக்குப் பணித்தருள வேண்டும் 7695, ஆரூர் புகப்பெய்த அருநிதியம் அதனில் தோற்ற மிகுமுக் கூறில் ஒருகூறு வேண்டும்......காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டும் 7698, பொறிவிரவு நற்புகர்கொள் பொற் சுரிகை மேலோர் பொற் பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும் கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும் 7700, பண்மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன் 7701, மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன் 7712, உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே 7712—7720, பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்....மூர்க்கனேன் எத்தனை நாள் பிரிந்திருக்கேன்

என் ஆரூர் இறைவனையே 7742 (7743—7752) என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசிகளுக்குடனாகி மாழை ஒண் கண் பரவையைத் தந்து ஆண்டானை மதியிலா ஏழையேன் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 7751, பொய்யே செய்து புறம் புறமே திரிவேன் தன்னைப் போகாமே மெய்யே வந்திங் கெனையாண்ட மெய்யா 7755, எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்படிகால் எமையாண்ட வெம்மான் 7762, அழுக்குமெய் கொடுன் திருவடி அடைந்தேன்..... பிழைப் பனாகிலும் திருவடிப் பிழையேன் வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால் மற்று நான் அறியேன் மறுமாற்றம் 7774, மானை நோக்கியர் கண்வலைப் பட்டு வருந்தியான் உற்ற வல்வினைக்கு அஞ்சி.....உயிரொடு நரகத்து அழுந்தாமை ஊனமுள்ளன தீர்த்தருள் செய்யாய் 7779, மகத்திற் புக்கதோர் சனிஎனக்கு ஆனாய்.......அகத்திற் பெண்டுகள் நான்ஒன்று சொன்னால் அழையேல் போகுருடா எனத்தரியேன் 7782, நான்மறை அங்கம் ஓதிய நாவன் சீலம் தான் பெரிதும் மிக வல்ல சிறுவன் வன்றொண்டன் 7783, உளங்குளிர் தமிழ் ஊரன் வன் றொண்டன் சடையன்காதலன் வனப்பகை அப்பன் நலங்கிளர் வயல் நாவலர் வேந்தன் நங்கை சிங்கடி தந்தை 7816, சாதலும் பிறத்தலும் தவிர்த்தெனை வகுத்துத் தன் அருள் தந்த எம்தலைவன் 7817, பொன்னும் மெய்ப்பொருளும் தருவானைப் போகமம் திருவும் புணர்ப்பானைப் பின்னைஎன் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப் பணிப்பானை..... ஆரூரானை மறக்கலுமாமே 7827, காரிகை காரணமாக ஆரூரை மறத்தற்கரியானை அம்மான்தன் திருப்பேர் கொண்ட தொண்டன் ஆரூரன் அடிநாய் 7837, ஏழைமானிட இன்பினை நோக்கி இளையவர் வலைப்பட்டிருந்து 7846, கம்பன் எம்மானைக் காணக்கண் அடியேன் பெற்றவாறே (7848—7857) நாடெலாம் புகழ் நாவலூராளி நம்பி வன்றொண்டன் 7888 புரண்டு வீழ்ந்து நின்பொன் மலர்ப் பாதம் போற்றி போற்றி என்று அன்பொடு புலம்பி அருண்டென் மேல்வினைக் கஞ்சி வந்தடைந்தேன் 7897, வாரத்தால் உனநாமங்கள் பரவி வழிபட்டு உன்திறமே நினைந்துருகி ஆர்வத்தோடு வந்து அடியினை அடைந்தேன் 7899, நாத்தான் உன்திறமே திறம்பாது நண்ணி அண்ணித் தமுதம் பொதிந்தூறும் ஆத்தானை அடியேன் தனக்கு 7904, தொண்டனேன் அறியாமை அறிந்து கல்இயல் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டி என்களைகளை அறுக்கும் வல்லியல் வானவர் வணங்க நின்றானை 7905, வெண்ணெய் நல்லூரில் அற்புதப் பழ ஆவணம் காட்டி அடியனா என்னை ஆளதுகொண்ட நற்பதத்தை 7917. அடியேற்கு எளிவந்த

தூதனைத் தன்னைத் தோழமை அருளித் தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை 7919, திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்கு உன் சீருடைக் கழல்கள் என்றெண்ணி ஒருவரை மதியாது உறாமைகள் செய்தும் ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன் 7922, சங்கிலிக்கா என்கண் கொண்ட பண்ப நின் அடியேன் படுதுயர் களையாய் 7924, கள்ளமே பேசிக் குற்றமே செயினும் குணம் எனக்கொள்ளும் கொள்கையால் மிகை பல செய்தேன் 7927, மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை வலிய வந்து எனை ஆண்டு கொண்டானே 7934, சிங்கடி அப்பன் அணுக்க வன்தொண்டன் 7942 அருங்குலத் தருந்தமிழ் ஊரன் வன் தொண்டன் 7963, அருத்தம் பெரிதும் உகப்பன் அலவலையேன் அலந்தார்கள் ஒருத்தர்க் குதவியேன் அல்லேன் உற்றவர்க்கும் துணை அல்லேன் பொருத்தமேல் ஒன்றும் இலாதேன் 7969, மிண்டர்க்கு மிண்டலால் பேசேன் 7971, நமர்பிறர் என்பதறியேன் நான் கண்டதே கண்டு வாழ்வேன் தமரம் பெரிதும் உகப்பன் தக்காவா றொன்று மிலாதேன் 7972, ஆசைபல அறுக்கில்லேன் ஆரையும் அன்றி உரைப்பேன் பேசில் சழக்கலால் பேசேன் பிழைப்புடையேன் மனம் தன்னால் ஓசை பெரிதும் உகப்பேன் 7973, திருமருவும் திரள் தோளான்...நாவலாரூரன் 7974, செடியனேன் நாயேன்...என் உடம்படும்பிணி இடர் கெடுத் தானை 7975, சொல்லுமாறு அறிகிலேன் எம் பெருமானைத் தொடர்ந்தடும் கடும் பிணித்தொடர் வறுத்தானை 7977, திரிபுரம் நீறெழச் செற்ற அங்கையான் கழலடியன்றி, மற்றறியான் அடியவர்க் கடியவன் தொழுவன் ஆரூரன் 7984, ஆனைக் காவுடை ஆதிபொன் அடியின் நீழலே சரணாக நின்று அருள்கூர நினைந்து வாழவல்ல வன்தொண்டன் 7994 வாஞ்சியத்துள் ஏழை பாகனை யல்லால் இறையெனக் கருதுதல் இலமே 8003, பரவும் பரிசொன்றறியேன் நான் பண்டே உம்மைப் பயிலாதேன் இரவும் பகலும் நினைந்தாலும் எய்த நினையமாட்டேன் நான் 8005, எங்கே போவேன் ஆயிடினும் அங்கே வந்து என் மனத்தீராய்ச் சங்கை ஒன்றும் இன்றியே தலைநாள்கடைநாள் ஒக்கவே 8006, கதிர்க்கொள் பசியை ஒத்தே நான் கண்டேன் உம்மைக் காணாதேன் எதிர்த்து நீந்த மாட்டேன் நான் எம்மான் தம்மான்தம்மானே 8013, கூடி அடியார் இருந்தாலும் குணமொன்றில்லீர் குறிப்பில்லீர் ஊடி இருந்தும் உணர்கிலேன் உம்மைத் தொண்டன் ஊரனேன் 8015, நாவின் மிசை அரையன்னொடு தமிழ் ஞானசம்பந்தன் யாவர் சிவனடியார்களுக்கடியான் அடித் தொண்டன் 8025, மறையார் புகழ் ஊரன் அடித்தொண்டன் 8045, மல்லின்மல்குதிரள்தோள்

ஊரன் 8055, நாவலர் கோமான் ஆரூரன் 8065, கானப்பேர் உறை காளையை ஒண்சீர் உறைதண் தமிழால் உன்னி மனத்து அயரா உள்ளுருகிப் பரவும் ஒண்பொழில் நாவலர் கோனாகிய ஆரூரன் 8085, திருவாரூர்ச் சிவன்பேர் சென்னியில் வைத்த ஆரூரன் அடித்தொண்டன் அடியன் சொல்லடிநாய் 8105, பிழையுளன பொறுத்திடுவர் என்று அடியேன் பிழைத்தக்கால் பழியதனைப் பாராதே படலம் என் கண்மறைப்பித்தாய்...கோயில் உளாயோ என்ன... உள்ளிருந்து உளோம் போகீர் என்றானே 8126, கொன்றையினாய் போய் மகிழ்க்கீழிரு என்று சொன்ன எனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே என்ன வல்லபெருமானே 8134, மான்திகழும் சங்கிலியைத் தந்து வருபயன்களெல்லாம் தோன்ற அருள் செய்தளித்தாய்...ஊன்றுவதோர்கோல் அருளி உளோம் போகீர் என்றானே 8135 எத்தான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே உற்றாய் என்று உன்னையே உள்குகின்றேன் உணர்ந்து உள்ளத்தால் 8157, அவிநாசியே கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே 8160, கூத்தா உனக்குநான் ஆள்பட்ட குற்றமும் குற்றமே 8162, நந்தி உனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே 8163, காணாத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே 8164, மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே....ஆளாயிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால் வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே 8188, விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன் குற்றம் ஒன்றும் செய்ததில்லை கொத்தை ஆக்கினீர் எற்றுக்கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர் மற்றைக் கண்தான் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே 8189, பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர் 8198, சேடியல் சிங்கி தந்தை சடையன் திருவாரூரன் 8229, வானை மதித்து அமரர் வலம்செய்து எனை ஏறவைக்க ஆனைஅருள் புரிந்தான் 8242, மந்திரம் ஒன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன் சுந்தர வேடங்களால் துரிசே செயும் தொண்டன் 8243, வாழ்வை உகந்த நெஞ்சே மடவார் தங்கள் வல்வினைப்பட்டு ஆழமுகந்த என்னை அதுமாற்றி அமரரெல்லாம் சூழ அருள்புரிந்து தொண்டனேன் பரமல்லதொரு வேழம் அருள் புரிந்தான் 8244, வெள்ளையானையின் மேல் என்உடல் காட்டுவித்தான் 8245, இந்திரன்மால் பிரமன் எழிலார் மிகுதேவர் எல்லாம் வந்து எதிர்கொள்ள என்னை மத்த யானை அருள்புரிந்து மந்திரமா முனிவர் இவன் ஆரென எம்பெருமான் நம் தமர் ஊரன் என்றான் நொடித்தான்மலை உத்தமனே 8249 நாவலவூரன்

சொன்ன...பத்தினையும் ஆழிகடல் அரையா அஞ்சையப்பர்க்கு அறிவிப்பதே 8250, (மேற்கூறிய குறிப்புக்களில் சுந்தரர் உடல் வளம் உயிர்வளம் அடிமை வளம் வாழ்க்கை வளம் சொல்நய வளம் முதலிய பலவற்றையும் பிரித்துப் பிரித்துச் சுவைத் தின்புறுக. பரவை நாச்சியார் சங்கிலி நாச்சியார் சிங்கடியார் வனப்பாகையார் பற்றிய குறிப்புக்களைத் தொகுத்தால் விரியும் என்றஞ்சி விடுத்தாம். அன்பர்கள் நிரப்புக்கொள்க.)

## சைவக்கொடி வீடுகளில் பறந்தது

நீடுமாட மாளிகைக்கொடி அருக்கன் மண்டலத்தணாவும் அந்தணாரூர் 2561, குலவு...கொடிநெடு மாடங்கள்...கடிக்குளம் 2600, பெரியமாடத்துயரும் கொடியின் மிடைவால் வெயிற்புரி விலாத... புகலி 2794, கொடிநெடு மாளிகை.....மருவிய ஏடகம் 3141, வெண்கொடி மாடம் ஓங்கு விறல் வெங்குரு 3437, மாடங்கள் மாளிகை மீதெழுகொடி மதியம் தீண்டி வந்துலவிய திருநெல்வேலி 3791, நீள்கொடி மாடமலி...நல்லூர் 5110.

## ஞானிகள் முனிவர் யோகிகள்

உலகில் சாவாதவர் பிறவாதவர் தவமே மிக உடையார் மூவாத பன்முனிவர் 124, சினமலியறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவிய மனனுணர்வொடு மலர்மிசை எழுதரு பொருள் நியதமும் உணர்பவர் 221, பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே... மெய்ப்பரம் பொருள் சேர்வார்தாமே 1365, ஞானிகளா யுள்ளார்கள்...ஐம்புலன்கள் செற்று மோனிகளாய் முனிச் செல்வர் தனித்திருந்து தவம் புரியும் முதுகுன்றமே 1414, அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் 1421, ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர் ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்தேனை வழிதிறந் தேத்துவார் 3033, ஊனமிலராகி உயர் நற்றவமெய் கற்றவை யுணர்ந்த அடியார் ஞானமிக நின்று தொழ 3561, ஒன்றவே உணர்திராகில் ஓங்காரத் தொருவனாகும் வென்ற ஐம்புலன்கள் தம்மை விலக்குதற்குரியீர் எல்லாம் 4415, புலன்களைப் போகநீக்கிப் புந்தியை ஒடுங்கவைத்து இலங்களைப் போகநின்ற இரண்டையும் நீக்கி ஒன்றாய் மலங்களை மாற்றவல்லார். மனத்தினுள் போகாமாகிச் சினங்களைக் களைவர் 4480, ஞானத்தை விளக்கை ஏற்றி நாடியுள் விரவ வல்லார் ஊனத்தை ஒழிப்பர் போலும் 4604, மெய்ம்மையாம் உழவைச் செய்து...சிவகதி விளையும் அன்றே 4895, ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்...ஞானத்தாய் உனைநானும்

*தொழுவனே 6124, உயிராவணம் இருந்து உற்றுநோக்கி உள்ளக் கிழியின் உருஎழுதி உயிராவணம் செய்திட்டுன் கைத்தந்தால் உணரப்படுவாரோ டொட்டி வாழ்த்தி 6495, ஐம்பெருமா பூதங்கள் ஒருவீர் வேண்டிற் றொருவீர் வேண்டீர் ஈண்டிவ் அவனியெல்லாம் உம்பரமே உம் வசமே ஆக்கவல்லீர்க் கில்லையேல் நுகர்போகம் யானேல்...அரனைக் காண்பேன் தடைப்படுவேனாக் கருதித் தருக்கேன் மின்னே 6513, நாடுவன் நாடுவன் நாபிக்குமேலே ஓர்நால்விரல் 7688.*

## தக்கன் வேள்வியை அழித்தது

*மலைமகள் தனை இகழ்வது செய்த மதியறு சிறுமனவனது உயர் தலையினொடு அழல் உருவன கரம் அற முனிவு செய்தவன் 208, தக்கனது பெருவேள்விச் சந்திரன் இந்திரன் எச்சன் அருக்கன் அங்கி மிக்கவிதாதாவினொடும் விதிவழியே தண்டித்த விமலர் 1407, நாவினாள் மூக்கு அரிவித்த நம்பர் 2795, தாமலார் போலவே தக்கனார் வேள்வியை ஊமனார் தம்கனா ஆக்கினான் 3152, சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமும் முன் இயங்கு பரிதியான் பல்லும் இறுத்து அவர்க்கருளும் பரமனார் 4072, தக்கன் தன் வேள்வி தகர்த்தவன் 5005, தக்கனது பெருவேள்வி தகர்த்தானாகி 6928, தக்கனது வேள்வி கெடச் சாடினான் 6983, எச்சன் நிணத்தலை கொண்டார் பகன்கண் கொண்டார் இரவிகளில் ஒருவன் பல் இறுத்துக்கொண்டார் மெச்சன் வியாத்திரன் தலையும் வேறாக் கொண்டார் விறல்அங்கி கரம் கொண்டார் வேள்வி காத்து உச்ச நமன்தாள் அறுத்தார் சந்திரனை உதைத்தார் உணர்விலாத் தக்கன் தன் வேள்வி எல்லாம் அச்சம் எழ அழித்துக்கொண்டு அருளும் செய்தார் 7191, பெற்றிமை ஒன்றறியாத தக்கனது வேள்விப் பெருந்தேவர் சிரம்தோள் பல்கரம் கண் பீடழியச் செற்று மதிக்கலை சிதையத் திரு விரலால் தேய்வித் தருள்பெருகு சிவபெருமான் 7385, கொண்டாடுதல் புரியா வருதக்கன் பெருவேள்விச் செண்டாடுதல் புரிந்தான் 8064, கருதாதவர் வேள்வி அவி உண்ணற்கு இமையவரை உருண்டோட உதைத்து உகந்து நண்ணற் கரிய பிரான் 8213.*

## தசகாரியம்

*பத்துக்கொலாம் அடியார் செய்கை தானே 4344.*

## தத்துவங்கள்

*தத்துவன் 1159, தத்துவனார் 1398, முப்பதும் முப்பத்தாறும் முப்பதும் இடுகுரம்பை 4678. தொக்கு நின்றைவர் தொண்ணூற்றறுவரும் துய்க்கமெய்த 4811, தத்துவத்துயர்வு நீர்மைப் படுத்திலேன் 4831, தத்துவனாய் 6682.*

## தமிழும் சைவமும்.

*திருநெறியதமிழ் 11, செந்தமிழோர்கள் பரவிஏத்தும் சீர் கொள் செங்காட்டங்குடி 62, பண்ணும் பதம்ஏழும் பலஓசைத் தமிழவையும்...முழுதானான் 111, தமிழ்ஞானம் மிகுபந்தன் குன்றாத் தமிழ் 194, ஞானமிக்கதண் தமிழால் ஞானசம்பந்தன் சொன்ன கோலமிக்கமாலை 558, பேரியல் இன்தமிழால்... ஞானசம்பந்தன் சொன்ன பண்ணார் பாடல் 700, தமிழின் நீர்மைபேசித் தாளம்வீணைபண்ணி நல்லமுழவம் மொந்தை மல்கு பாடல் செய்கையிடமோவார் 794, தமிழின்விரகன் உரைத்ததமிழ்மாலை 808 நற்றமிழ்க் கின்துணைஞானசம்பந்தன் 830, தமிழ்ச்சொலும் வடசொலும் தாள்நிழல்சேர 834, இணையில் சம்பந்தன் பேசும்தமிழ் 881, ஞானசம்பந்தன் ஞானத்தமிழ் 1270, செந்தமிழ் பரப்புறு திருப்புகலி 1785, தமிழ்க் கிழமை ஞானன் 1796,, பலந்தரு தமிழ்க்கிளவி 1807, தமிழ்விரகன் தான்சொன்ன தமிழ் 2267, ஞாலமல்கும்தமிழ் 2301, தென்தமிழ் கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர் 2362, நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன் 2366, தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி எழில் நரம்பெடுத்துத் துஞ்சுநெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு தொல்புகலூர் 2470, கற்று முற்றினார் தொழும் கழுமலத் தருந்தமிழ் 2538, முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன் ஒண்தமிழ் மாலை 2822, ஆரியத்தொடு செந் தமிழ்ப் பயன் அறிகிலா அந்தகர் 3214, தமிழ் நாதன் ஞானசம்பந்தன் 3221, அந்தண் மதுரைத் தொகை ஆக்கினான் 3382, செந்தமிழர் தெய்வமறை நாவர் செழுநற்கலை தெரிந்த அவரோடு அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அரன் 3660, தமிழோடிசை பாடல் மறந்தறியேன் 4164, ஆரூர் இனிதமரந்தார் தாம்படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ் மாலைகளால் நாம்படிமக்கலம் செய்து தொழுது உய்மட நெஞ்சமே 5146, ஆரியம் தமிழோடிசை ஆனவன் 5404, திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப் பாடி அடைப் பித்தாருந் நின்றார் 5734, வாயிருந் தமிழே படித்தாளுறா ஆயிரம்*

*சமணும் அழிவாக்கினான் 5818, ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் 6479, நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் 7000 பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்து என் சிந்தை மயக்கறுத்த திரு அருளினான் 7079, வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் காண் 7104, பன்னிய செந்தமிழறியேன் கவியேன் மாட்டேன்... பொறியிலேனை... ஆளாக் கொண்ட தென்எறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தை 7141, ஆரூரன் சொன்ன பாவணத் தமிழ் 7275, பொய்யாத் தமிழூரன் உரைத்தன 7357, பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே 7467, ஆரூரன் சொன்ன சீரூர் செந்தமிழ்கள் 7492 பண்ணிடைத் தமிழ் ஒப்பாய் 7518, ஆரூரன்...உளங்குளிர்தமிழ் மாலை 7522, கலை மலிந்ததென் புலவர் கற்றோர் தம் இடர் தீர்க்கும் கருப்பறியலூர் 7533, தமிழ்ச் சீரினால் நெஞ்சினாலே புறம்பயம்தொழுது 7584, செந்தமிழ்த் திறம்வல்லிரோ.. பைஞ்ஞீலியீர் 7588, வன்தொண்டன் சொன்ன செஞ்சொல் தமிழ்மாலைகள் 7658, ஆரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள் 7773, நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் 7787, வன்தொண்டன் உள்ளத்தால் உகந்து அன்பினால் சொன்ன அருந்தமிழ் 7793, சிங்கடி தந்தை பயந்த பலங்கிளர் தமிழ் 7816, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் 7866, திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியும் செல்வத்தென் திருநின்றியூர் 7890 நல்லிசை ஞான சம்பந்தனும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லி ஏத்து கப்பான் 7905, திருப்புகழ்விருப்பால் பன்னலந் தமிழால் பாடு வேற்கருளாய் 7925, அருங்குலத் தருந்தமிழ்ஊரன் 7963, வாழ வல்லவன் தொண்டன்வண் தமிழ்மாலை 7994, அல்லல் அவை தீரச் சொன்ன தமிழ்மாலைகள் 8035, தொண்டன் உரை செய்த குறையாத்தமிழ் 8045, அதிசயம் இது என்று நாடிய இன்தமிழால் நாவலவூரன் சொல் பாடல்கள் 8095, திருமிழலை இருந்துநீர் தமிழோடிசைகேட்கும் இச்சையால் காசுநித்தல் நல்கினீர் 8123, தண்தமிழ் நூற்புலவாணர்க்கோர் அம்மானே 8204.*

**தயாமூல தன்மம்**

*தயாமூலதன்மம் என்னும் தத்துவத்தின் வழி நின்று தாழ்ந்தோர்க்கெல்லாம் நலம் கொடுக்கும் நம்பி 6449, தயாமூலம் தன்மவழி எனக்கு நல்கி மனம் திருத்தும் மழபாடி வயிரத்தூணே 6649.*

**தலங்கள் சில**

*(தலச் சிறப்பகராதியில் விரிவுகாண்க)* **(அண்ணாமலை)** *திருமாமணிதிகழ மண்ணார்ந்தன அருவித்திரள் மழலை முழவதிரும் அண்ணாமலை 97, பீலிம்மயில்பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்சூலிம்மணி தரைமேனிறைசொரியும் விரிசாரல் ஆலிம்மழை தவழும் பொழில் அண்ணாமலை 99, மரவஞ்சிலை தரளம் மிகுமணிஉந்துவெள்ளருவி அரவம்செய முரவம்படும் அண்ணாமலை 101, கடல்வண்ணனும்...மலர் மேலுறை கேடில்புகழோனும் அளவாவணம் அழலாகிய அண்ணாமலையண்ணல் 105, தூமாமழைநின்றதிர வெருவித் தொறு வின்னிரையோடும் ஆமாம்பிணைவந்தணையும் சாரல் அண்ணாமலை 743, ஏனத்திரளோடினமான்கரடி இழியும் இரவின்கண் ஆனைத்திரள் வந்தணையும் சாரல் அண்ணா மலை 745, முதுவேய் உகுத்த முத்தம் பல கொண்டுகூடிக் குறவர்மடவார் குவித்துக் கொள்ளவம்மின் என்று ஆடிப்பாடி அளக்கும்சாரல் அண்ணாமலை 751, அருவி பொன்சொரியும் அண்ணாமலை 4769, அரிகுலமமலிந்த அண்ணாமலை 4772, அரவுமிழ் மணிகொள்சோதி அணிஅணாமலை 4773, அற்றம் தீர்க்கும் அண்ணாமலை 5271, அல்லல் தீர்க்கும் அண்ணாமலை 5272, அண்டத்தோங்கும் அண்ணாமலை 5277* **(அதிகை)** *திருநின்றறொருகையால் திருஆம் அதிகை 497, வளங்கொள் புனல்சூழ்ந்த வயலார் அதிகை 498, கடியார் கழுநீலம் மலரும் அதிகை 501, வேழம் பொரு தெண்ணீர் அதிகை வீரட்டானத்து 503, ஆர்த்தார் புனல்சூழ் அதிகைக்கெடில வீரட்டானம் 4168, சித்தவடமும் அதிகைச் சேணுயர் வீரட்டம் சூழ்ந்து தத்தும் கெடிலப்புனலும் 4171, வண்டுகொப்பளித்த தீந்தேன்வரிக்கயல் பருகிமாந்தக் கெண்டைகொப்பளித்த தெண்ணீர்க் கெடில வீரட்டம் 4406, அல்வியம் பழனவேலி அதிகை வீரட்டம் 4414, பழனம்சேர்கழனித் தெங்கின்மடலை நீர்கழியஓடி அதனிடை மணிகள் சிந்தும் கெடிலவீரட்டம் 4439, மாசில்ஒள்...கெடில வட கரைத்தே எந்தை வீரட்டமே 5160, வில்லால் மூஎயில் எய்தவன் வீரட்டம் 5762, தெய்வப்புனல், கெடில நாடன்னடி திரு வீரட்டானத் தெம்செல்வன் அடி 6299, செல்வப் புனல்கெடில வீரட்டம் 6307, தீர்த்தப்புனல் கெடில வடவீரட்டம் 6308, இரும்புனல் வந்தெறி வடகெடில வீரட்டானத் துறைவான் 7609.* **(ஆரூர்)** *சோலையில் வண்டினங்கள் சுரும்போ டிசை முரலச் சூழ்ந்த ஆலையின் வெம்புகை போய் முகில் தோயும் ஆரூர் 1134, கெண்டை கொண்டலர்ந்த கண்ணினார்கன் கீத ஓசை போய்*

அண்டர் அண்டம் ஊடறுக்கும் அந்தண் ஆரூர் 2562, பஞ்சியாரு மெல்லடிப் பணைத்த கொங்கை நுண்இடை அஞ் சொலார் அரங்கெடுக்கும் அந்தண் ஆரூர் 2564, தெங்கினூடு போகி வாழை கொத்திறுத்து மாவின்மேல் அங்கண் மந்திமுந்தி யேறும்அந்தண் ஆரூர் 2567, நிரைத்தமாளிகைத் திருவின் நேர் அனார்கள் வெண்ணகை அரத்தவாய் மடந்தைமார்கள் ஆடும் ஆரூர் 2568, வல்லிசோலை சூதநீடு மன்னு வீதிபொன்னுலா வல்லிமா தமர்ந்திருந்த அந்தண் ஆரூர் 2571, தேசமல்கிய தென்திரு ஆரூர் 3286, தேங்காவிநாறும் திரு ஆரூர்த்தொன்னகர் 4349, மாடங்கள் நீண்ட மாளிகை மேலெழு கொடிவான் இளம்மதி தீண்டி வந்துலவும் திரு ஆரூர் 4356, அரம்பைய ரொடருளிப் பாடியர் உரிமையில் தொழுவார் உருத்திர பல்கணத்தார் விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபலிகள் தெருவினில் பொலியும் திரு ஆரூர் 4358, அஞ்சணை வேலி ஆரூர் 4672, திண்ணிய மாமதில் ஆரூர் 5140, திருப்பொலி ஆரூர் 5141. அயிராவணம் எறாது ஆன் ஏறு ஏறி அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட அயிராவணமே 6495, முழுதுலகில் வானவர்கள் முற்றம் கூடி முடியால் உறவணங்கி முற்றம்பற்றி அழுது திரு அடிக்கே பூசை செய்ய இருக்கின்றான் ஊர்போலும் ஆரூர் 6496, செம்பொன் செய்மணிமாடத் திருவாரூரில் திருமூலட்டானம் 6543, திக்கெலாம் நிறைந்த புகழ்த்திருவாரூர் 6544, நறப்படு பூமலர்தூபம் தீபம் நல்ல நறும் சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூரில் திருமூலட்டானத் தெம்செல்வன் 6547, தென்றலார் மணங்கமழும் திருவாரூர் 6549, இருங்கனக மதிலாரூர் மூலட்டானம் 6573, திறைகொணர்ந்தீண்டித் தேவர் செம் பொனும்மணியும்தூவி அரைகழல் இறைஞ்சும் ஆரூர் 7297, அண்டவாணர் தொழும் அடிகள் ஆரூரர் 7601, அன்னம்வைகும் வயல் பழனத்தணி ஆரூர் 7827, குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும் அமரன் இருப்பதும் ஆரூர் 7972, தென்றல் மணம் கமழும் தென்திருவாரூர் 8067, **(ஐயாறு)** மலையாரமும் மாமணி சந்தோடு அலையார்புனல்சேரும் ஐயாறு 382, மறைகொண்டநல்வானவர்தம்மில் அறையும்ஒலிசேரும் ஐயாறு 385, தவராசர்கள் தாமரையானோடவர்தாம் அணை அந்தண் ஐயாறு 391, வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழைஎன்றஞ்சிச் சிலமந்தி அலமந்து மரம்ஏறிமுகில் பார்க்கும் திருஐயாறே 1394, கமழ்தார்வீதித்தேரோடும் அரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலும் திருஐயாறே 1398, காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாடக் கவினார்வீதித்

தேந்தாம் என்றரங்கேறிச் சேழிழையார் நடம் ஆடும் திருஐயாறே 1399, தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண்வளரும் திருஐயாறே 1400, அறையிளம் பூங்குயில் ஆலும் ஐயாறு 4182, முத்திசையும் புனற் பொன்னி மொய்பவளம் கொழித்துந்தப் பத்தர் பலர் நீர் மூழ்கிப் பலகாலும் பணிந்தேத்த எத்திசையும் வானவர்கள் எம்பெருமான் என இறைஞ்சும் அத்திசையாம் ஐயாறர் 4290, வாலியார் வணங்கிஏத்தும் திருஐயாறு 4543, தேசத்தார் பரவிஏத்தும் திரு ஐயாறு 4545, விதிர்த்து மேகம் மழைபொழிய வெள்ளம் பரந்து நுரைசிதறி அதிர்க்கும் திரைக் காவிரிக் கோட்டத் தையாறு 8013, **(கச்சிஏகம்பம்)** குருந்தம் மல்லிகை கோங்குமாதவி நல்லகுராமரவம் திருந்துபைம்பொழில் கச்சிஏகம்பம் 1428, மாகந்தோய் மணிமாடமாமதிற் கச்சிமா நகருள் ஏகம்பம் 1432, கரவில் வண்கையினார்கள் வாழ்கலிக் கச்சிமாநகருள் மரவம்சூழ்பொழில் ஏகம்பம் 1434, கலிக்கச்சியுள் புடையே பொன்மலரும் கம்பைக்கர ஏகம்பம் 1594, தழுவத்தொடே கதிர்கொள் பூண்முலைக் கம்பமிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்பமிருப்பதே 4030, மதிற்கச்சிஏகம்பமேயான் 4228, (கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர் 4589) எண்திசையோரும் ஏத்தநின்ற ஏகம்பன் 4598, வானவர் ஈட்டம் பணி யறிவான் வந்து நின்றார் அயனும் திருமாலும் மதிற்கச்சியாய் 5123, இச்சையால் உமை நங்கை வழிபடக் கொச்சையார் குறுகார் செறிதீம்பொழில் கச்சியேகம்பமே 5696, அணி அமரர்க்கிறை காப்பதாய கடிபொழில் ஏகம்பம் 5712, எழிலாரும் பொழிலார் கச்சி ஏகம்பன் 6883—6902, உமைநங்கை... தழுவவெளிப்பட்ட கள்ளக்கம்பன் 7857, **(காழி)** உயர்பரந்த உலகின் முதலாகிய ஓரூர் இது என்னப்பேர் பரந்த பிரமாபுரம் 3, கருமைபெற்ற கடல் கொள்ள மிந்ததோர் காலம் இது என்னப் பெருமைபெற்ற பிரமாபுரம் 5, துயரிலங்கும் உலகில் பல ஊழிகள் தோன்றும் பொழுதெல்லாம் பெயரிலங்கு பிரமாபுரம் 8, மாநிலத்தில் அயலின்மையால் அமரர்புகலால் மலிந்த பூம்புகலி 680, செங்கோல் நடாவிப் பல்லுயிர்க்கும் செய்வினை மெய்தெரிய வெங்கோத்தருமன் மேவி ஆண்ட வெங்குரு 681, எங்கும் ஆழ்கடலால் அழுங்கத் துணி நீர்பணியத் தான் மிதந்த தோணிபுரம் 682, தெய்வத்தருவளரும் பொழில் புறவம் 2257, **(காளத்தி)** முத்துமாமணிகளும் முழுமலர்த்திரள் களும் ஏத்து மாமுகலியின் கரையினில்...காளத்தி 3186, அட்ட மாசித்திகள் அணைதரு காளத்தி 3189, வாய்கலசமாக வழிபாடு செயும் வேடன் மலராகு நயனம் காய்கணையினால் இடந்து ஈசன் அடிகூடு காளத்தி 3540, தனதுருவம் அறிவரிய சகலசிவன்

மேவு...காளத்தி 3545, காளத்தி காணப்பட்ட கணநாதன் காண் 6319, கண்டார் காதலிக்கும் கணநாதன் எம் காளத்தியாய் 7483, **(கோயில்=சிதம்பரம், தில்லை)** கற்று ஆங்கு எரியோம்பிக் கலியை வாராமே செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம் 864, பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட்டு எரியோம்பும் சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம்பலம் 865, செல்வநெடுமாடம் சென்று சேண் ஓங்கிச் செல்வமதி தோயச் செல்வம் உயர்கின்ற செல்வர் வாழ்தில்லைச் சிற்றம்பலம் 868, அந்தணர் பிரியாத சிற்றம்பலம் 2801, மறையோர் தில்லை நல்லவர் பிரியாத சிற்றம்பலம் 2802, சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலம் 2803, தில்லை தன்னுள் சீரினால் வழிபாடு ஒழியாததோர் செம்மையால் அழகாய சிற்றம்பலம் 2809, ஊறும் இன்தமிழால் உயர்ந்தார் உறைதில்லை தன்னுள் ஏறு தொல்புகழ் ஏந்து சிற்றம்பலம் 2811, ஞாலமாம் தில்லை தன்னுள் நவின்ற சிற்றம்பலம் 4385, செந்தியா வேள்வி ஓவாத்தில்லைச் சிற்றம்பலம் 4390, வையகம் தன்னில் மிக்க மல்கு சிற்றம்பலம் 4393, தினைத்தனை வேதம் குன்றாத் தில்லைச் சிற்றம்பலம் 4394, திண் உண்ட திருவேமிக்க தில்லைச் சிற்றம்பலம் 4396, பாளையுடைக்கமுகு ஓங்கிப்பன்மாடம் நெருங்கி எங்கும் வாளையுடைப்புனல் வந்தெறி வாழ்வயல் தில்லை 4928, திருவுடை அந்தணர் வாழ்கின்றதில்லை 4929, இணையடிகள் தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற்றம் பலம் 4934, அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம் 5229, சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம்பலம் 5234, சுடர்ச்செம்பொனின் அம்பலம் 5245, செய்ய மாதுறை சிற்றம்பலம் 5246, தூய செம் பொன்னினால் எழுதி மேய்ந்த சிற்றம்பலம் 5247, மாடமொடு மாளிகைகள் மல்குதில்லை மணி திகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை ஆடுவான் 6585, பல்லவர்க்குத் திறை கொடாத மன்னவரை மறுக்கம் செய்யும் பெருமையார்..... சிற்றம்பலம் 8140, முட்டாதே முச்சந்தி மூவாயிரவர்.....சிற்றம்பலம் 8143, **(திருநெல் வேலி)** தென்றல் வந்துலவிய திருநெல்வேலி 3789, திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி 3794, கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை சிந்துபூந்துறை கமல் திருநெல்வேலி 3795, திங்கள் நாள் விழமல்கு திருநெல்வேலி 3796, **(திருப்பாதிரிப் புலியூர்)** முன்னம் நின்ற முடக்கால் முயற்கருள் செய்து நீள்புன்னை நின்று கமழ் பாதிரிப்புலியூர் 2780, போக நல்லார் பயிலும் பாதிரிப்புலியூர் 2784, மதிய மொய்த்த கதிர்போல் ஒளிம் மணற்கானல் வாய்ப் புதியமுத்தம் திகழ்ப்பாதிரிப்புலியூர் 2785, அன்னம் தாவும் அணியார் பொழில் மணியார் புன்னை பொன்னந் தாதுசொரி பாதிரிப்புலியூர் 2788, தேயமெல்லாம்

நின்றிறைஞ்சும் திருப்பாதிரிப்புலியூர் 5074, பண்ணூர்ந்தமைந்த பொருள்கள் பயில் பாதிரிப்புலியூர் 5077, தொழுவார்க்கிரங்கி இருந்தருள் செய் பாதிரிப்புலியூர் 5078, **(திருப்புகலூர்)** மண்ணி லாவும் அடியார் குடிமைத்தொழில் மல்கும் புகலூர் 14, ஊரின் மல்கிவளர் செம்மையினால் உயர்வெய்தும் புகலூர் 15, அருள் பேணிப் பொய் இலாத மனத்தார் பிரியாது பொருந்தும் புகலூர் 16, விழவினோசை அடியார் மிடைவுற்று விரும்பிப் பொலிந்தெங்கும் முழவின் ஓசை முந்நீர் அயர்வெய்த முழங்கும் புகலூர் 17, பொன் இலங்கு மணி மாளிகைமேல் மதிதோயும் புகலூர் 19, கயல்வளாவிய கழனி கருநிறக்குவளை கண்மலரும் வயல்வளாவிய புகலூர் 2465, தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி எழில் நரம்பெடுத்துத் துஞ்சு நெஞ்சிருள் நீங்கத் தொழு தெழுதொல்புகலூர் 2470, பூம்பொய்கை சூழ்ந்த புகலூர் 2721, பூமியெல்லாம் புகழ் செல்வம் மல்கும் புகலூர் 2722, தீர்த்தமே திகழும் பொய்கைத் திருப்புகலூர் 4682, புன்னை மலர்த் தலை வண்டுறங்கும் புகலூர் 5168, புன்னைத்தாது பொழில் புகலூர் 5693, பூம்புகலூர் 7217—24, பூணிபூண்டுழல் புட்சிலம்பும் தண் புகலூர் 7566, புள்ளெலாம் சென்று சேரும் பூம்புகலூர் 7571, பொத்தில் ஆந்தைகள் பாட்டறாப் புகலூர் 7572, பொய்கைவாவியின் மேதிபாய் புகலூர் 7573, **(பேரம்பலம் சிற்றம்பலம்)** பிறைவந்திறை தாக்கும் பேரம்பலம் தில்லைச் சிறை வண்டறை ஓவாச் சிற்றம்பலம் 867, கூத்துகந்த பேரம்பலத் துறைவாய் 2021, வையமார் பொதுவினில் மறையவர் தொழுதெழ நடமதாடும் 3800, **(மயிலாப்பூர்)** மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலைக் கட்டு இட்டங் கொண்டான் கபாலீச்சரம் 1971, மாமயிலைவண்மறுகில் துளக்கில் கபாலீச்சரம் 1973, ஊர்திரை வேலை உலாவும் உயர்மயிலைக் கூர்தருவேல் வல்லார் கொற்றம் கொள்சேரி தனில் கார்தரு சோலைக் கபாலீச்சரம் 1974, மடலார்ந்த தெங்கின் மயிலை 1976, மலிவிழாவீதி மடநல்லார் மாமயிலை 1977, கண்ணார் மயிலைக் கபாலீச்சரம் 1978, கற்றார்கள் ஏத்தும் காபாலீச்சரம் 1979, கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சரம் 1980, கானமர் சோலைக் கபாலீச்சரம் 1981, மங்குல் மதிதவழும் மாடவீதி மயிலாப்பு 6254, மயிலாப்பில் மன்னினார் மன்னி ஏத்தும் பெருநீர் வளர்சடையான் 6318, வடிவுடைய மங்கையும் தாமும் எல்லாம் வருவாரை எதிர்கண்டோம் மயிலாப்புள்ளே 6696, துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றும்சோதித் தொன் மயிலை 7624, **(மறைக்காடு)** இரவலர் துயர்கெடுவகை நினை இமையவர்புரம் எழில்பெற வளர்மரநிகர் கொடை மனிதர்கள்

பயில் மறைவனம் 229, மழைதவழ் தருபொழில் நிலவிய மறைவனம் 230, மலர்மகள் நிலவிய மறை வனம் 238, வங்கக்கடல்சூழ் மறைக்காடு 1863, பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி மலரால் வழிபாடு செய் மாமறைக்காடு 1867, வெண்மணற்கானல் பொருகடல் திரை தவழ் முத்தம் கங்குல் ஆரிருள் போழும்கலி மறைக்காடு 2453, மழலைவண்டியாழ் செயும் மறைக்காடு 2457, பெரியசீர் மறைக்காடு 2462, ஊறுபொருள் இன்தமிழ் இயற்கிளவி தேரும்மடமாதர் உடனார் வேறுதிசை ஆடவர்கள் கூற இசை தேரும் எழில்வேதவனம் 3617, மெய்த்தகையபத்தரொடு சித்தர்கள் மிடைந்துகளும் வேதவனம் 3618, விஞ்சக இயக்கர் முனிவக்கணம் நிறைந்துமிடை வேதவனம் 3620, புலவாணர் வறுமை விடுத்தலை மதித்து நிதிநல்குமவர் மல்குபதி வேதவனம் 3621, நிறைமறைக் காடுதன்னில் நீண்டெரி தீபம் தன்னைக் கறைநிறத்தெலி தன்மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்டநிறை கடல் மண்ணும்விண்ணும் நீண்ட வானுலகம் எல்லாம் குறைவறக்கொடுப்பர் 4641, திருவினார் செல்வம் மல்கு விழாவணி மருவினார் வலங்கொள் மறைக்காடர் 5318, மண்ணினார் வலம் செய் மறைக்காடர் 5321, பூக்கும்தாழை புறணியருகெலாம் ஆக்கும் தண் பொழில் சூழ்மறைக்காடு 5326, பரவை வலம் புரியொடு சலஞ்சலங் கொணர்ந் தெற்றும் மறைக்காடு 7950, **(முதுகுன்றம்= விருத்தாசலம்)** சாவாதவர் பிறவாதவர் தவமே மிக உடையார் மூவாத பன்முனிவர் தொழுமுதுகுன்று 124, மடவார் கடிகுறிஞ்சி யது பாடி முருகன்னது பெருமை பகர் முதுகுன்று 128, பனிமுது பௌவமுந்நீர் நீடுபாரும் முழுதும் ஓடி அண்டர் நிலை கெடலும் நாடுதானும் ஊடுமோடி ஞாலமும் நான் முகனும் ஊடுகாணமூடும் வெள்ளத் துயர்ந்தது முதுகுன்றே 573, முக்கனியின் சாறு ஒழுகிச் சேறுலரா நீள்வயல் சூழ்முது குன்றமே 1407, சிறுமிமார்கள் முறங்களினால் கொழித்து மணி செலவிலக்கி முத்துலைப்பெய் முதுகுன்றமே 1411, திருகல் வேய்கள் சிறிதே வளையச் சிறுமந்தி முருகின் பணைமேல் இருந்து நடம்செய் முதுகுன்றே 2165, உரையினார் ஒலியென ஓங்கு முத்தாறு மெய்த்திரையினார் எறிபுனல் திருமுது குன்றமே 3162, முத்திதரும் உயர் முதுகுன்றம் 3868, பதினெண் கணமும் சூழ முரசார் வந்ததிர முதுகுன்றம் அமர்ந்தவனே 7480, கண்டகர் வாளிகள் வில்லிகள் புறம் காக்கும் சீர்மொண்ட கைவேள்வி முழக்கறா முதுகுன்றரே 7661, மாடமதிலணி கோபுரமணி மண்டபமுடி முகில் தவழ்சோலை சூழ்முது குன்றரே 7663, எத்திசையும் திரையேற மோதிக் கரைகண்மேல்

முத்தி முத்தாறு வலம் செயும் முதுகுன்றரே 7668, **(வீழிமிழலை)** வண்டாமரை மலர்மேல் மட அன்னம் நடை பயில வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம் மிழலை 116, கலை நிலவிய புலவர்கள் இடர்களை தருகொடை பயில்பவர் மி குசிலை மலிமதிள் புடைதழுவிய திகழ்பொழில் வளர் திருமி ழலை 208, கீதத்திசையோடம் கேள்விக் கிடையோடும் வேதத்தொலி ஓவா வீழிமிழலை 883, மிகுபுகழ் நிலமலி மிழலை 1337, பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயன்றோதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்டு சொல்லும் மிழலை 1416, வரைசேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டுபாட விரைசேர் பொன் இதழிதர மென்கரந்தள் கைஏற்கும் மிழலை 1419, புந்தியினால் மறைவழியே புல்பரப்பி நெய்சமிதை கையில் கொண்டு வெந்தழ லின் வேட்டுலகின் மிக ளிப்போர் சேருமூர் மிழலை 1424, பண்ணமரும் மென்மொழியார் பாலகரைப் பராட்டும் ஓசை கேட்டும் விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோடும் இழியும் மிழலை 1425, விண்ணிழி விமான முடை விண்ணவர் பிரான்மருவு வீழிநகர் 3659, விலங்கல் ஒண்மதிலணி மிழலை 3860, நீற்றினை நிறையப் பூசி.....அவன் கொணர்ந் திழிச்சும் கோயில் வீற்றிருந் தளிப்பர் வீழிமிழலையுள் விகிர்தனாரே 4784, பிடித்துத் திரியும் வேய்த்தொழிலாளர் மிழலை 5084, திருமிழலை மடங்கல் பூண்ட விமானமும் மண்மிசை வந்திழிச்சிய வான நாட்டையும் அடங்கள் வீழிகொண்டீர் 8117, திருமிழலை இருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித்தல் நல்கினீர் 8123, வேத வேதியர் வேத நீதியர் ஓதுவார் விரிநீர் மிழலை 8125.

**தலவகைகள்**

1884—1894, **(க்ஷேத்திரக் கோவையுள்)** பலவைப்புத் தலங் களும், களம் காடு குளம் துறை பாடி பாழி எனமுடியும் பெயர் களுடைய தலங்களின் எண்ணிக்கையும் கூறப்படுகின்றன. வைப்புத் தலங்களுள் சிறப்பாக அறப்பள்ளி 1887, கோழி 2772, நெற்குன்றம் 1892, பேரூர் 1884, வஞ்சி 2772, வாதவூர் 1890, வாரணசி(=காசி) 1890, இப்பதிகம் கூறும் 5 களங்களுள் இப்போ துள்ளவை அஞ்சைக்களம் நெடுங்களம் வேட்களம் ஆக மூன்று, காடுகள் ஆலங்காடு, கச்சிநெறிக் காரைக் காடு, கொள்ளிக்காடு, சாய்க்காடு, தலைச்சங்காடு, தலையாலங்காடு, பனங்காடு, மறைக்காடு, வெண்காடு, வேற்காடு ஆக 10, (பதிகம் கூறுவது 9) குளம் ஒன்று கடிக்குளம் (பதிகத்தில் 3) துறைகள் அன்பிலாலந்

துறை, ஆவடு துறை, கடம்பந்துறை, தென்குரங்காடுதுறை, வட குரங்காடுதுறை, சோற்றுத்துறை, பராய்த்துறை, பாலைத்துறை, பாற்றுறை, பேணுபெருந்துறை, மயிலாடுதுறை, மாந்துறை, வெண்டுறை ஆக 13, (பதிகத்தில் 8) பாடிகள் ஆப்பாடி, எதிர் கொள்பாடி, மழபாடி ஆக 3, (பதிகத்தில் 4) பாழி அரதைப் பெரும்பாழி (பதிகத்தில் 3) **(அப்பர் தேவாரத்தில்)** க்ஷேத்திரக் கோவை அடைவுத் திருத்தாண்டகம் எனும் 2 பதிகங்களில் (6944—6965) ஆறு, ஈச்சரம், ஊர், களம், கா, காடு, குடி, குளம், கோயில், பள்ளி, வாயில், வீரட்டம் என முடியும் பெயர்களை உடைய தலங்களும் கூறப்படுகின்றன. பல வைப்புத் தலங்கள் கூறப்படுகின்றன. முக்கியமானவை சில உஞ்சேனை மாகாளம், உருத்திரகோடி, எழுமூர், ஏமகூடம், ஏமப்பேறூர், கச்சிப்பலதளி கள், கந்தமாதனம், காம்பீலி, குமரி, கொடுங்கோளூர், சேற்றூர், தக்களூர், தஞ்சை, தவத்துறை, திங்களூர் 6497, திண்டீச்சரம், துறையூர், தெள்ளாறு, நியமம், பிடவூர், பிரம்பில், புலிவலம், பெருந்துறை, பேரூர், பொதியில், மகேந்திரமாமாலை, மூவலூர் (5887), வழவூர்வீரட்டம், வாரணசி, விந்தமாமலை **(சுந்தரர் தேவாரத்தில்)** சில முக்கியமான வைப்புத் தலங்கள் புரிசை 7341, திருக்காரிகரை 7536, வடபேறூர் 7537, பெருமூர் 7538, காட்டூர் 7702, பேரூர் 7705, நாங்கூர் 7707.

**தலையாய மனிதர்**

ஏகம்பம் மேவினாரைத் தலையினால் வணங்கவல்லார் தலைவர்க்குத் தலைவர் தாமே 4594, கனிமனத்தொடு கண்களும் நீர்மல்கிப் புனிதனை....போற்றுவார் மனிதரில் தலையான மனிதரே 5885.

**திரிபுரம் எரித்த வரலாறு**

இடர் காவாய் என வானோர் எல்லாம் ஒரு தேராய் அயன் மறை பூட்டி நின்றுய்ப்ப வல்லாய் எரி காற்றீர்க்கு அரிகோல் வாசுகிநாண் கல்வில்லால் எயிர் எய்தான் 113, திரிபுரம் ஒரு நொடியினில் எரிசென்று கொள்வகை சிறுமுறுவல் கொடொளி பெற நின்றவன் 1342, பார் இதனை நலிந்து அமரர் பயம் எய்தச் சயம் எய்தும் பரிசு வெம்மைப்போர் இசையும் புரம் மூன்றும் பொன்ற ஒருசிலை வளைத்தோன் 1386, குன்ற வார்சிலை நாண் அரவு அரிவாளி கூரெரிகாற்றின் மும்மதில் வென்றவாறு எங்ஙனே 2004, காவல் மிக்க மாநகர் காய்ந்து வெம் கனல் படக் கோவமிக்க நெற்றியான் 2544, விண்ணிலார் இமையவர் மெய்ம்மகிழ்ந்தேத்தவே எண்ணிலார் முப்புரம் எரியுண நகை

*செய்தார் 3102, முதுசினவி லவுணர்புரம் மூன்றும் ஒருநொடி வரையில் மூள எரி செய் சதுரர் 3538, இடும்பை காவாய் எனக் கடைதூங்குமணியைக் கையாலமரர் நாவாய் அசைத்த ஒலி யொலி மாறியதில்லை அப்பால் தீயாய் எரிந்தது பொடியாய்க் கழிந்த திரிபுரமே 5220, அரனே எனு நீசராய் நெடுமால் செய்த மாயத்தால் ஈசன் ஓர் சரம் எய்ய எரிந்துபோய் நாசமானார் திரிபுர நாதரே 5952, பூண் நாகம் நாணுகப் பொருப்பு வில்லாக் கையினுர் அம்பெரிகால் ஈர்க்குக் கோலாக் கடுந்தவத்தோர் நெடும்புரங்கள் கனல்வாய் வீழ்ந்த செய்யினுர் 7103, கொடியுடை மும்மதில் வெந்தழியக் குன்றம் வில்லா நாணியிற்கோல் ஒன்றினுல் இடிபட எய்தெரித்தீர் இமைக்கும் அளவில் உமக்கார் எதிர் எம்பெருமான் 7310, நிற்பானும் கமலத்தில் இருப்பானும் முதலா நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி அவர்க்காய் வெற்பார்வில் அரவு நாண் எரி அம்பால் விரவார்புரம் மூன்றும் எரிவித்த விகிர்தன் 7384.*

## திரிபுரம் எரித்து மூவர்க் கருளியது

*புரத்தார் பொடிபடத் தன்அடிபணி மூவர்கட் கோவாவரத் தான் மிக அளித்தான் 114, மூவார் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கருள் செய்தார் 743, மிக்க எயில் உக்கற முனிந்து தொழு மூவர் மகிழத்தக்க அருள் பக்கமுற வைத்த அரனுர் 3639, மூஎயில் செற்ற ஞான்று உய்ந்த மூவரில் இருவர்நின்திருக் கோயிலின் வாய்தல்காவலாளர் என்றேவிய பின்னை ஒருவன் நீ.......மாநடம் மகிழ மணிமுழா முழக்க அருள் செய்த தேவதேவ 7791, ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ உன்னிய மூவர்நின் சரணம் புக்கு மற்று அவர் பொன்உலகாளப் புகழினால் அருள் ஈந்தமை அறிந்து 7900, (திரிபுரம் எரித்தபோது தண்டிப்பட்டவர்கள் வித்யுன்மாலி, தாருகாக்ஷன், கமலாக்ஷன் என்ற மூவர், அருள் செய்யப்பெற்றவர் வீரத்தன், பரமயோகன், குணபரன் என்ற மூவர். இதை உபதேசகாண்டம் திரிபுர விஜயச்சருக்கத்தில், 2, 269, 270—ம் பாடல்களால் அறியலாம். சிலர் முற்கூறிய மூவரே அருள் செய்யப்பெற்றவர் எனக் கூறுதல் பொருந்தாது,, அம்மூவர் மாண்டதை 550—ம் பாசுரம் கூறும்.)*

## திருநீறு

*செய்யமேனி வெளிய பொடிப்பூசுவர் 16, சுண்ண வெண் ணீறு துதைதிலங்கு நூலுடையான் 47, மார்பலகம் நீரார் நீறு சாந்தம் வைத்த நின்மலன் 704, கைப்பூசு நீற்றான் கபாலீச்சரம் அமர்ந்தான் 1975, மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு*

சுந்தரமாவது நீறு 2178, வேதத்திலுள்ளது நீறு 2179, முத்திதருவது நீறு.....பத்திதருவது நீறு சித்தி தருவது நீறு 2180, எயிலது அட்டதுநீறு.....பாக்கியமாவது நீறு.....சுத்தமதாவது நீறு 2184, பராவணம் ஆவது நீறு பாவம் அறுப்பது நீறு 2185, மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடிநீறு 2186, புத்தரொடமணை வாதில் அழிவிக்கும் அண்ணல் திருநீறு செம்மை திடமே 2397, சாந்தம் வெண்ணீறெனப் பூசி வெள்ளம் சடை வைத்தவர் 2769, வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்டன் 3480, வெள்ளை நீறணியும்.....குலச்சிறை 4091, சிவன் திருநீற்றினை வளர்க்கும்.....பாண்டிமாதேவி 4092, பூதிசா சனம் கண்டால் தொழுதெழு குலச்சிறை 4097, வெண்ணீற் றுமைபாகத்தன் 4143, நீற்றினை நிறையப்பூசி நித்தலும்நியமம் செய்து ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தணனார் (மார்க்கண்டேயர்) 4635, நீற்றினை நிறையப்பூசி நித்தல் ஆயிரம்பூக் கொண்டு ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக் கண் நிறையவிட்ட ஆற்றலுக்கு ஆழி நல்கி 4784, மந்திரம் நமச்சிவாய ஆக நீறணியப் பெற்றால் வெந்துறும் வினையும் நோயும் 4907, செம்மை வெண்ணீறு பூசும் சிவனவன் தேவதேவன் 4916, பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்....காணப்பெற்றால் மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே 4941, சிவாயநம என்று நீறணிந்தேன் தருவாய் சிவகதிநீ 5076, செய்ய திருமேனி வெண்ணீறாடி 6336, பொடி யேறு திருமேனி பொலிந்து தோன்றும் 6422, நீற்றினையும் நெற்றி மேலிட்டார் 6522, எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி.....ஈசன் திறமே பேணிக் கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே 6856, திருவெண்ணீறணியாத திருஇல் ஊரும்...... ஊரல்ல அடவிகாடே 7177 அருநோயக்ள் கெட வெண்ணீறு அணியாராகில்.....செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே 7178, நீறணியும் கோலமே நிகழப் பெற்றோம்.....பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்பணி கேட்கக் கடவோமோ 7207, நீற்றாரும் மேனியராய் நினைவார்தம் உள்ளத்தே நிறைந்து தோன்றும் 7524, பொய்யாத வாய்மையால் பொடிப்பூசி போற்றிசைத்துப் பூசைசெய்து, 7528, வாஞ்சியத் தடிகள் மறுவிலாத வெண்ணீறு பூசுதல் மன்னும் ஒன்றுடைத்தே 7996.

## தேவாரம் ஓதுதல் கேட்டல் பயன் முதலியன

திருநெறிய தமிழ் வல்லவர் தொல் வினைதீர்தல் எளிதாமே 11, தமிழ் மாலை பற்றி என்றும் இசை பாடிய மாந்தர்பரமன் அடி சேர்ந்து குற்றமின்றிக் குறைபாடொழியாப் புகழ் ஓங்கிப்

பொலிவாரே 22, பாட வல்லார் குளிர்வானத் துயர்வாரே 33, பண் இயல் பாட வல்லார்கள் இந்தப் பாரொடுவிண் பரிபாலகரே 44, இமையவர் ஏத்த இருப்பர்தாமே 75, சிவகதி யைப் பெறுவாரே 96, வல்லார் சொலக் கேட்டவர் எல்லாம் ஊழின்மலி வினைபோயிட உயர்வான் அடைவாரே 118, செல்வன் அடி சேர்வர் சிவகதியே 162, மலர்மகள் கலைமகள் சயமகள் இனமலி புகழ்மகள் இசைதர இருநிலனிடை இனிதமர்வரே 216, செவிக்கினிதாக வல்லார்க் கெளிதாம் பிறவா வகைவீடே 337, சேர்ந்த இடம் எல்லாம் தீர்த்தமாகச் சேர்வாரே 492, ஈசனோடே மன்னி இருப்பாரே 547, சிவலோகம் சேர்வாரே 655, அமுதும் நக்கும் அன்பு செய்வார் அல்லல் அறுப்பாரே 797, பத்திமையாலே பாடியும் ஆடியும் பயிலவல்லார்கள் விண்ணவர் விமானம் கொடு வர ஏறி வியன் உலகாண்டு வீற்றிருப்பவர் தாமே 819, இம்மையின் வீடு எளிதாமே 830, சொல்லுதல் கேட்டல் வல்லார் துன்பம் துடைப்பாரே 1142, பற்றுவர் ஈசன் பொற்பாதங்களே 1227, சொல்லிடல் கேட்டல் வல்லோர் தொல்லை வானவர் தங்களொடும் செல்குவர் சீரருளாற் பெறலாம் சிவலோகமதே 1270, ஒண்சொலினிவை மாலை உரு எணத் தவமாமே 1281, இசை இயல்பா வஞ்சத் தேய்வின்றிக்கே மனம்கொளப் பயிற்றுவோர் மார்பே சேர்வாள் வானோர் சீர் மதிநூல் மடவரலே 1369, இருநிலத்தில் ஈசன் எனும் இயல்பி னோரே 1426, புக்கிருப்பார் புவலோகத்தே 1622, வாய்ந்த வாறேத்துவார் வானுலகாள்வாரே 1633, இசைகூரவந்த வணம் ஏத்தும் அவர் வானம் உடையாரே 1785, பொன் அடைந்தார் போகங்கள் பல அடைந்தார் புண்ணியரே 1905, மண்பொலிய வாழ்ந்து அவர்போய் வான்பொலியப் புகுவாரே 1992, சொல்லு வார்க்கும் கேட்பார்க்கும் துயரம் இல்லையே 2080, எம்பெரு மான் கழல்கள் பிரியாரே 2166, ஓதும் அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணைநமதே 2398, கூறுவாரையும் கேட்கவல்லா ரையும் குற்றங்கள் குறுகாவே 2593, இசைகற்றுவலார் சொலக் கேட்ட உகந்தவர் தம்மை வாதியவினை மறுமைக்கும் இம்மைக் கும் வருத்தம் வந்தடையவே 2626, வேந்தராகி உலகாண்டு வீடு கதிபெறுவரே 2713, உம்பரார் எதிர்கொள உயர்பதி அணைவரே 3139, நரைதிரை இன்றியே நன்னெறி சேர்வரே 3158, ஒருத்தராகி லும் பலர்களாகிலும் உரைசெய்வார் உயர்ந்தார்களே 3210, உருத்திரர் எனப்பெற்று அமரலோகம் மிகவாழ்வர் பிரியார் அவர் பெரும் புகழொடே 3569, கோழையா அழைப்பினும் கூடுவார் நீடுவானுலகினூடே 3787, ஐயுறவில்லை பிறப்பறுத்தல் 3922, வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற்

காணையும் நமதே 4078, மன்னவராகி ஓர்விண் முழுதாள்பவரே 7255, உரைப்பார்களும் கேட்பவரும் சீரூர்தரு தேவர்கணங்க ளொடும் இணங்கிச் சிவலோகமதெய்துவரே 7317, மெய்யே பெறுவார்கள் தவநெறிதானே 7357, பாரும் விசும்புந்தொழுப் பரமன் அடிகூடுவரே 7422, சீரார் சிவலோகத்திருப்பவர்தாமே 7553, பாடும் அடியார் கேட்பார் மேல்பாவமான பறையுமே 7773, பத்தராய்முத்தி தாம் பெறுவாரே 7804, நரைப்புமூப்பொடு நடலையும் ,ன்றி நாதன் சேவடி நண்ணுவர் தாமே 7847, இறந்து போக்கில்லை வரவில்லயாகி இன்ப வெள்ளத்துள் இருப்பர்கள் இனிதே 7921, மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே 8085.

## நஞ்சுண்ட பெருமை

உலகு உய்யக்காரின் மல்கு கடல் நஞ்ச மதுண்ட கடவுள் 15, மத்தா வரை நிறுவிக் கடல்கடைந்து அவ்விட முண்ட தொத்தார் தருமணி நீள் முடிச்சுடர் வண்ணன் 119, தட நிலவிய மலை நிறுவியொர் தழலுமிழ் தருபட அரவுகொடு அடல் அசுர ரொடு அமரர்கள் அலைகடல் கடைவுழி எழுமிகு சினவிடம் அடைதரு மிடறுடையவன் 206, சிலைதனை நடுவிடை நிறுவி யொர் சினமலி அரவது கொடு திவிதலமலி சுரர் அசுரர்கள் ஒலி சலசல கடல் கடை வுழிமிகு கொலைமலி விடம் எழ அவருடல் குலைதர அது நுகர்பவன் 228, நஞ்சினை உண்டு ஆரமுதம் அமரர்க்கருளி 422, கனைத்தெழுந்த வெண்திரை சூழ் கடலிடை நஞ்சுதன்னைத் தினைததனையா மிடற்றில் வைத்த திருந்தியதேவ 560, உண்ணற்கரிய நஞ்சை உண்டு ஒரு தோழம் தேவர் விண்ணிற் பொலிய அமுதமளித்த.....அண்ணல் 804, நாகம்தான் கயிறாக நளிர்வரை அதற்கு மத்தாகப்பாகம் தேவரொடசுரர் படுகடல் அளறெழக் கடையவேக நஞ்செழ ஆங்கே வெருவோடும் இரிந்தெங்கும் ஓட ஆகம் தன்னில் வைத்து அமிர்தம் ஆக்குவித்தான் 2459, வானவர்கள் தானவர் கள் வாதைபட வந்தொரு மாகடல்விடம் தான் அமுது செய்து அருள்புரிந்த சிவன் 3537, எண்பெரிய வானவர்கள் நின்று துதிசெய்ய இறையே கருணையாய் உண்பரிய நஞ்சதனை உண்டு உலகமுய்ய அருள் உத்தமன் 3630, இமையோர் இரிந்து பயமாய்த் திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு சுடுவான் எழுந்து.....மாவிடத்தை எரியாமல் உண்ட அவன் 4292, வடங் கெழுமலை மத்தாக வானவர் அசுரரொடு கடைந்திட எழுந்த நஞ்சம் கண்டு பஃறேவர் அஞ்சி அடைந்து நும்சரணம் என்ன அருள் பெரிதுடையராகித் தடங்கடல் நஞ்சம் உண்டார். 4788, பொங்கி நின்றெழுந்த கடல் நஞ்சினைப் பங்கி உண்டதோர்

*தெய்வம் உண்டோ சொலாய் 5559, சங்கை ஒன்றின்றியே தேவர் வேண்டச் சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச் சிங்கமே 7216, கடிக்கும் அரவால்மலையால் அமரர்க்கடலைக் கடைய எழுகாளகூடம் ஒடிக்கும் உலகங்களை என்று அதனை உமக்கே அமுதாக உண்டீர் உமிழீர் 7316, முன்தான் கடல்நஞ்சம் உண்ட அதனுலோபின் தான் பரவைக்கு உபகாரம் செய்தாயோ 7545, விடம் சுட வந்தமரர் தொழ அங்கு அலக்கண் தீர்த்து அவ்விடம் உண்டுகந்த அம்மான் 7744, கோலமால் வரைமத் தென நாட்டிக்கோளரவுசுற்றிக் கடைந்தெழுந்த ஆலம் நஞ்சு கண்டவர் மிகஇரிய அமரர்கட்கு அருள்புரிவது கூ நி நீலமார் கடல் விடந்தனை உண்டு கண்டத்தே வைத்த பித்தநீ செய்த சீலம் 7788, வங்கம் மேவிய வேலைநஞ்சுஎழ வஞ்சகர்கள் கூடித் தங்கள் மேல் அடராமை உண்என உண்டு இருள் கண்டன் 7986.*

### நரஸ்துதி ஒழிக

*தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் சார்விலும் தொண்டர் தருகிலாப் பொய்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள் 7564, மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக் கிவனென்று கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை. பொடிக்கொள் மேனியெம் புண்ணியன் புகலூரைப் பாடுமின் புலவீர்காள் 7565 (7566—73.*

### நளன் பூசித்தது

*வளங்கெழுவு தீபமொடு தூபம் மலர்தூவி நளன்கெழுவி நாளும் வழிபாடுசெய் நள்ளாறே 1821.*

### நாளும் கோளும் தீமை செய்யா

*அரண்நாமம் கேளாய் நம்கிளை கிளைக்கும் கேடுபடாத் திறம் அருளிக் கோளாய நீக்குமவன் கோளிலி எம்பெருமானே 667, ஆதிப் பிரான் அடிகள் அடைந்து ஏத்தவே கோளும் நாள் அவை போய் அறும் குற்றம் இல்லார்களே 1575, வேயுறு தோளிபங்கள்.....என் உளமே புகுந்த அதனால் ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி பாம்பிரண்டும் உடனே ஆசறும் நல்லநல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே 2388, ஒன்பதொடொன்றோடேழு பதினெட்டொடாறு முடனாய நாட்கள் அவைதாம் அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே 2389 (கார்த்திகை நக்ஷத்திரத்தை முதலாகக் கொண்டு எண்ணும் அக்காலத்திய*

வழக்கத்தின்படி பிராயணத்திற்கு ஆகாதநாட்கள், 9 பூரம், 1 கார்த்திகை, 7 ஆயிலியம், 18 பூராடம், கார்த்திகையிலிருந்து தலைகீழாக எண்ணும் போது 6 பூரட்டாதி ஆகிய இவற்றையே சம்பந்தர் இப்பாசுரத்தில் குறிப்பதாகச் சில அறிஞர்கள் கூறுவதுண்டு) கோளும் நாளும் தீய வேனும் நன்காம் குறிக்கொண்மினே 2763.

## நிந்தாஸ்துதி

(இறைவன்பெருமை கூறும்போது நிந்தைபோல் தோன்றும்) தமராயினார் அண்டம் ஆளத்தான் வனனில் வாழ்க்கை கொண்டாடிப்பாடி இவ்வையமாப்பலி தேர்ந்ததே 3200, குன்றின் மங்கைவெருவுறப் புழைநெடுங்கை நன்மா வுரித்து அது போர்த்துகந்த பொலிவதே 3203, பரவு வானவர்க்காக வார் கடல் நஞ்சம் உண்டபரிசதே 3204, அயன்பொய்ச்சிரம் அயனகவ் வதரிந்து மற்றதில் ஊண் உகந்த அருத்தியே 3205, சூடினூர் கங்கையாளைச் சூடிய துழனிகேட்டங்கு ஊடினுள் நங்கையா ளும் ஊடலை ஒழிக்கவேண்டிப் பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே ஆடினார் 4428, வெண்தலை கையில் ஏந்தி மிகவு மூர்பலி கொண்டென்றும் உண்டதுமில்லை சொல்லில் உண்டது நஞ்சுதன்னை 4761, சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கில் தொண்டாய் அடைந்தார் அல்லற்படக் கண்டு பின் என் கொடுத்தி 4981, ஒன்றரைக்கண்ணன் கண்டூர் ஒற்றியூர் உறை உத்தமனே 4986, பிறரிடை நீ ஒற்றிகொண்டாய் ஒற்றியூரை யும் கைவிட்டுறும் என்றெண்ணி விற்றிகண்டாய் 4987, பிடிமத வாரணம் பேணும் துரகம் நிற்கப் பெரிய இடிகுரல் வெள்ளெருதேறு மிது என்னைகொல் 5151, வில்தாங்கிய கரம் வேல் நெடுங்கண்ணி வியன்கரமே நற்றாள் நெடுஞ்சிலை நாண் வலித்த கரம் நின்கரமே செற்றார் புரம்செற்ற சேவகம் என்னை 5152, உடுகூறையும்சோறும் தந்து ஆள்கில்லீர் 7243, தேவியார் கொற்று அட்டி ஆளார் உங்களுக்கு ஆட்செய்ய மாட்டோம் 7267, ஆபத்காலத்தடிகேள் உம்மை ஒற்றி வைத்திங் குண்ணலா மோ 7268, கச்சிமூதூர் காமக்கோட்டம் உண்டாகநீர் போய் ஊரிடும் பிச்சை கொள்வதென்னே 7271, ஆரம் பாம்பு வாழ்வது ஆரூர் ஒற்றியூரேல் உம்மதன்று 7274, அடியாரும் நீரும் அகம் தொறும் பாடிப்படைத்த பொருளெலாம் உமையாளுக்கோ 7663.

**நைச்யானுஸந்தானம்**

(தாழ்வை வாய்விட்டுக் கூறுதல்) மூவர் பதிகங்களில் தாழ்மை என்ற தலைப்பிலுள்ளவை, முன்னம் அடியனே அறியாமையினால்.... ஆளும் பட்டேன் 4162, கதி ஒன்றும் அறியாதே.....உழிதர்வேற்கு 4206, போவதோர் நெறியும்காணேன் 4420, பாழுக்கே நீர் இறைத்தேன் 4469, ஓம்பினேன் கூட்டிடை வாளா 4612, நீதிஏதும் அறிவிலேன் 4679, குறிக்கோள் இலாது கெட்டேன் 4815, பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன் 7180, குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன் குற்றமேபெரிதுடையேன்.....ஈயமாட்டேன் 7181, வந்த சொல்லுமின் மூடனேனுக்கு 7559, பொய்யே செய்தபுறம் புறமே திரிவேன் 7755, கல்லில் வலியமனத்தேன் 7966, அலந்தார்கள் ஒருத்தர்க் குதவியே னல்லேன் உற்றவர்க்கும் துணையல்லேன் 7969, ஆசை பல அறுக்கில்லேன்.....ஓசைபெரிதும் உகப்பேன் 7973, பரவும் பரிசொன்றறியேன் 8005, அடையறியேன் தலையறியேன் 8127.

**பகீரதன் கங்கைகொணர்ந்தது**

பாரகம் விளங்கிய பகீரதன் அருந்தவம் முயன்ற பணி கண்டு ஆரருள் புரிந்து அலைகொள் கங்கைசடை ஏற்ற அரன் 3542, பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்படர் சடைக்கரந்த நீர்க்கங்கை தாங்குதல் தவிர்த்துத்தராதலத் திழித்த தத்துவன் 4113, மையறு மனத்தனுய பகீரதன் வரங்கள் வேண்ட ஐயமில் அமரர் ஏத்த ஆயிரம் முகமதாகி வையகம் நெளியப் பாய்வான் வந்திழி கங்கையென்னும் தையலைச் சடையில் ஏற்றார் 4793, பண்டு பகீரதன் வேண்ட ஆர்த்து வந்திழியும் புனற்கங்கை நங்கை யாளை நின்சடை மிசைக்கரந்ததீர்த்தனே 7790, பணிந்த பார்த்தன் பகீரதன் பலபத்தர் சித்தர்க்குப் பண்டு நல்கினீர் 8122.

**பஞ்சகவ்வியம்**

ஆன் அஞ்சாடும் முடியான் 1528, ஆனிலங் கிளரைந்து மாடுவர் 2454, ஆனில் நல்ஐந்துகந்தாடுவர் 3792, ஆவினுக் கருங்கலம் அரன் அஞ்சாடுதல் 4263, அஞ்சுகொலாம் அவர் ஆடினதாமே 4339, ஆன் அஞ்சும் ஆடும் அமரர்கள் தம் பெருமானை 7634, பாலொடான் அஞ்சும் ஆடவல்லானை 7913, (பஞ்சகவ்வியம் என்பது பசும்பால், பசுந்தயிர், பசுநெய், பசுவின் சாணம், பசு வின் சிறுநீர் ஆகிய ஐந்து. சாணம், சிறுநீர் ஆகிய இரண்டையும் நீக்கிச் சிலர் வெண்ணெய் திரட்டுப் பால் என்பது ஆகமங் கட்கும் உலக வழக்குக்கும் கல்வெட்டில் பதிவு

| தொடர் எண் | பதிகம் | பாட்டு முதற்குறிப்பு | திருமுறை | பதிக எண் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| | பொது (தொடர்ச்சி) | | | | |
| 37. | நின்ற திருத்தாண்டகம் | இருநிலனாய்த் தீயாகி | 6 | 94 | 1108 |
| 38. | நினைந்த திருநேரிசை | முத்தினை மணியை | 4 | 74 | 698 |
| 39. | திருநீலகண்டம் | அவ்வினைக் கிவ்வினை | 1 | 116 | 178 |
| 40. | பஞ்சாக்கர பதிகம் | துஞ்சலும் துஞ்சலில்லாத | 3 | 22 | 440 |
| 41. | பசுபதி திருவிருத்தம் | சாம்பலைப்பூசி | 4 | 110 | 741 |
| 42. | பலவகைத் திருத்தாண்டகம் | நேர்ந்தொருத்தி யொருபாகத் | 6 | 93 | 1105 |
| 43. | திருப்பாசுரம் | வாழ்க அந்தணர் | 3 | 54 | 485 |
| 44. | பாவநாசத் திருக்குறுந்தொகை | பாவமும் பழிபற்றற | 5 | 99 | 883 |
| 45. | பாவநாசப் பதிகம் | பற்றற்றார்சேர் | 4 | 15 | 621 |
| 46. | மறக்கிற்பனே என்னும் திருக்குறுந்தொகை | காசனைக் கனலை | 5 | 93 | 872 |
| 47. | மறுமாற்றத் திருத்தாண்டகம் | நாமார்க்கும் குடியல்லோம் | 6 | 98 | 1118 |
| 48. | மனத்தொகைத் திருக்குறுந்தொகை | பொன்னுள்ளத் திரள் பொன்சடை | 5 | 96 | 877 |
| 49. | முடிப்பது கங்கை (திருவஞ்சைக் களம்) | முடிப்பது கங்கை | 7 | 144 | 1201 |
| 50. | விடந்தீர்த்த பதிகம் | ஒன்றுகொலாம் அவர் சிந்தை | 4 | 18 | 625 |
| 51. | திரு வினாத் திருத்தாண்டகம் | அண்டங்கடந்த சுவடுமுண்டோ | 6 | 97 | 1115 |

# துயர் துடைக்கும் பதிகங்கள்

| தொடர் எண் | பதிகம் | பாட்டு முதற்குறிப்பு | திருமுறை | பதிக எண் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1. | கண்ணொளி பெற | அழுக்குமெய் | 7 | 54 | 1216 |
| | | ஆலந்தான் | 7 | 61 | 1234 |
| 2. | வறுமைதீர | இடரினும் தளரினும் | 3 | 4 | 413 |
| 3. | பழவினைநீங்க | அவ்வினைக்கு இவ்வினை | 1 | 116 | 178 |
| 4. | வயிற்றுநோய்நீங்க | கூற்றாயினவாறு | 4 | 1 | 599 |
| 5. | திருமணம் கைகூட | அயிலாடும் அம்பு | 2 | 16 | 239 |
| 6. | மகப்பேறு பெற | கண்காட்டு நுதலானும் | 2 | 48 | 236 |
| 7. | மகளிர் கரு நிலைபெற | குருகாம் | 6 | 15 | 922 |
| | | முத்திலங்கு | 3 | 46 | 473 |
| 8. | கோள்களை வெல்ல | வேயுறுதோளி | 2 | 85 | 346 |
| 9. | விடத்தை இறக்க | ஒன்று கொலாம் | 4 | 18 | 625 |
| 10. | அனைத்து இடர்களும் நீங்க | மறை யுடையாய் | 1 | 52 | 82 |

# திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப் பாடல்கள்

முதல் திருமுறை

136 பதிகங்கள் – 1469 பாடல்கள்

இரண்டாம் திருமுறை

122 பதிகங்கள் – 1331 பாடல்கள்

மூன்றாம் திருமுறை

126 பதிகங்கள் – 1358 பாடல்கள்

(திருவிடைவாய் கல்வெட்டுப் பதிகம் உள்பட)

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முதல் திருமுறை

## 1. திருப்பிரமபுரம் : பண் – நட்டபாடை

1. தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடி
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 1

2. முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னுப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழு தேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 2

3. நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரஎன் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 3

4. விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 4

5. ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 5

6. மறைகலந்தஒலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரஎன் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 6

7. சடைமுயங்குபுன லன்னனலன்னெரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 7

8. வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலஊழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 8

9. தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 9

10. புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 10

11. அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 2. திருப்புகலூர் : பண் – நட்டபாடை

12. குறிகலந்தஇசை பாடலினனசை யாலிவ்வுலகெல்லாம்
நெறிகலந்ததொரு நீர்மையனுயெரு தேறிப்பலிபேணி
முறிகலந்ததொரு தோலரைமேலுடை யானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புகலூரே 1

13. காதிலங்குகுழை யன்னிழைசேர்திரு மார்பன்னொருபாகம்
மாதிலங்குதிரு மேனியினான்கரு மானின்னுரியாடை
மீதிலங்கஅணிந் தானிமையோர்தொழ மேவும்மிடஞ்சோலைப்
போதிலங்குநசை யால்வரிவண்டிசை பாடும்புகலூரே. 2

14. பண்ணிலாவும்மறை பாடலினானிறை சேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழ லென்றுந்தொழு தேத்த
உண்ணிலாவியவர் சிந்தையுள்நீங்கா வொருவன்னிடமென்பர்
மண்ணிலாவும்மடி யார்குடிமைத்தொழில் மல்கும்புகலூரே. 3

15. நீரின்மல்குசடை யன்விடையன்னடை யார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலை யேசிலையாகமு னிந்தானுலகுய்யக்
காரின்மல்குகடல் நஞ்சமதுண்ட கடவுள்ளிடமென்பர்
ஊரின்மல்கிவளர் செம்மையினாலுயர் வெய்தும்புகலூரே. 4

16. செய்யமேனிவெளி யபொடிப்பூசுவர் சேரும்மடியார்மேல்
பையநின்றவினை பாற்றுவர்போற்றிசைத் தென்றும்பணி வாரை
மெய்யநின்றபெரு மானுறையும்மிட மென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத் தார்பிரியாதுபொ ருந்தும்புகலூரே. 5

17. கழலினோசைசிலம் பின்னொலியோசை கலிக்கப்பயில்கானில்
குழலினோசைகுறட் பாரிடம்போற்றக் குனித்தாரிடமென்பர்
விழவினோசையடி யார்மிடைவுற்று விரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந் நீரயர்வெய்த முழங்கும்புகலூரே. 6

18. வெள்ளமார்ந்துமிளிர் செஞ்சடைதன்மேல் விளங்கும்மதிசூடி
உள்ளமார்ந்தவடி யார்தொழுதேத்த வுகக்கும்மருள்தந்தெம்
கள்ளமார்ந்துகழி யப்பழிதீர்த்த கடவுள்ளிடமென்பர்
புள்ளையார்ந்தவய லின்விளைவால்வள மல்கும்புகலூரே. 7

19. தென்னிலங்கையரை யன்வரைபற்றி யெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிர லால்நெரிவித்திசை கேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடை யான்மடமாதொடு மேவும்மிடமென்பர்
பொன்னிலங்குமணி மாளிகைமேல்மதி தோயும்புகலூரே. 8

20. நாகம்வைத்தமுடி யானடிகைதொழு தேத்தும்மடியார்கள்
ஆகம்வைத்தபெரு மான்பிரமன்னொடு மாலுந்தொழுதேத்த
ஏகம்வைத்தஎரி யாய்மிகவோங்கிய எம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழி லின்நிழலான்மது வாரும்புகலூரே. 9

21. செய்தவத்தர்மிகு தேரர்கள்சாக்கியர் செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழி யைத்தவிர்வார்கள் கடவுள்ளிடம்போலும்
கொய்துபத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல் வாருயர்வானக மெய்தும்புகலூரே. 10

22. புற்றில்வாழுமர வம்மரையார்த்தவன் மேவும்புகலூரைக்
கற்றுநல்லவவர் காழியுள்ஞானசம் பந்தன்தமிழ்மாலை
பற்றியென்றும்மிசை பாடியமாந்தர் பரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறை பாடொழியாப்புக ழோங்கிப்பொலிவாரே.11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 3. திருவலிதாயம் : பண் – நட்டபாடை

23. பத்தரோடுபல ரும்பொலியம்மல ரங்கைப்புனல்தூவி
ஒத்தசொல்லியுல கத்தவர்தாந்தொழு தேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை கின்றவலிதாயம்
சித்தம்வைத்தஅடி யாரவர்மேலடை யாமற்றிடர்நோயே. 1

24. படையிலங்குகர மெட்டுடையான்படி றாகக்கனலேந்திக்
கடையிலங்குமனை யிற்பலிகொண்டுணுங் கள்வன்னுறைகோயில்
மடையிலங்குபொழி லின்நிழல்வாய்மது வீசும்வலிதாயம்
அடையநின்றவடி யார்க்கடையாவினை அல்லற்றுயர்தானே. 2

25. ஐயனொய்யன்னணி யன்பிணியில்லவ ரென்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்திரு மாதோடுறைகோயில்
வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர் கின்றவலிதாயம்
உய்யும்வண்ணந்நினை மின்னினைந்தால்வினை தீருந்நலமாமே. 3

26. ஒற்றையேறதுடை யான்நடமாடியோர் பூதப்படைசூழப்
புற்றில்நாகமரை யார்த்துழல்கின்றஎம் பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட வுள்கும்வலிதாயம்
பற்றிவாழும்மது வேசரணுவது பாடும்மடியார்க்கே. 4

27. புந்தியொன்றிநினை வார்வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்னதொரு பேரொளியானமர் கோயிலயலெங்கும்
மந்திவந்துகடு வன்னொடுங்கூடி வணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதவவர் தம்மடும்வெந்துயர் தீர்தலெளிதன்றே. 5

28. ஊனியன்றதலை யிற்பலிகொண்டுல கத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரிபோத்துழல் கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறை வைத்தஎம்மாதி மகிழும்வலிதாயம்
தேனியன்றநறு மாமலர்கொண்டுநின் றேத்தத்தெளிவாமே. 6

29. கண்ணிறைந்தவிழி யின்னழலால்வரு காமன்னுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொரு பால்மகிழ்வெய்தியபெம்மானுறைகோயில்
மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள் வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்த பெருமான்கழலேத்த நம்முண்மைக்கதியாமே. 7

30. கடலில்நஞ்சமமு துண்டிமையோர்தொழு தேத்தநடமாடி
அடலிலங்கையரை யன்வலிசெற்றரு ளெம்மானமர்கோயில்
மடலிலங்குகமு கின்பலவின்மது விம்மும்வலிதாயம்
உடலிலங்குமுயி ருள்ளளவுந்தொழ வுள்ளத்துயர்போமே. 8

31. பெரியமேருவரை யேசிலையாமலை வுற்றாரெயில்மூன்றும்
எரியஎய்தவொரு வன்னிருவர்க்கறி வொண்ணாவடிவாகும்
எரியதாகியுற வோங்கியவன்வலி தாயந்தொழுதேத்த
உரியராகவுடை யார்பெரியாரென வுள்கும்முலகோரே. 9

32. ஆசியாரமொழியாரமண்சாக்கிய ரல்லாதவர்கூடி
ஏசியீரமில ராய்மொழிசெய்தவர் சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரஅடி யார்க்கருள்செய்து வளர்ந்தான்வலிதாயம்
பேசுமார்வமுடை யாரடியாரெனப் பேணும்பெரியோரே. 10

33. வண்டுவைகும்மண மல்கியசோலை வளரும்வலிதாயத்
தண்டவாணனடி யுள்குதலாலருள் மாலைத்தமிழாகக்
கண்டல்வைகுகடற் காழியுள்ஞானசம் பந்தன்தமிழ்பத்துங்
கொண்டுவைகியிசை பாடவல்லார்குளிர் வானத்துயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 4. திருப்புகலியும் திருவீழிமிழலையும் : பண் – நட்டபாடை

### வினாவுரை

34. மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற வாணுதல்
மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழி யாமறை யோர்களேத்தப் புகலி
நிலாவிய புண்ணியனே
எம்மிறை யேயிமை யாதமுக்கண் ஈசஎன்
நேசஇதென் கொல்சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 1

35. கழல்மல்கு பந்தொடம் மானைமுற்றில் கற்றவர்
சிற்றிடைக் கன்னிமார்கள்
பொழில்மல்கு கிள்ளையைச் சொற்பயிற்றும் புகலி
நிலாவிய புண்ணியனே
எழில்மல ரோன்சிர மேந்தியுண்டோர் இன்புறு
செல்வமி தென்கொல்சொல்லாய்
மிழலையுள் வேதிய ரேத்தி வாழ்த்த
விண்ணிழி கோயில்விரும்பியதே. 2

36. கன்னிய ராடல் கலந்துமிக்க கந்துக
வாடை கலந்துங்கப்
பொன்னியல் மாடம் நெருங்குசெல்வப் புகலி
நிலாவிய புண்ணியனே
இன்னிசை யாழ்மொழி யாளோர்பாகத் தெம்மிறை
யேயிது என்கொல்சொல்லாய்
மின்னியல் நுண்ணிடை யார்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 3

37. நாகப ணந்திக ழல்குல்மல்கு நன்னுதல்
மான்விழி மங்கையோடும்
பூகவ னம்பொழில் சூழ்ந்தஅந்தண் புகலி
நிலாவிய புண்ணியனே
ஏகபெ ருந்தகை யாயபெம்மான் எம்மிறை
யேயிது என்கொல்சொல்லாய்
மேகமு ரிஞ்செயில் சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 4

38. சந்தள றேறுத டங்கொள்கொங்கைத் தையலொ
டுந்தள ராதவாய்மைப்
புந்தியி னான்மறை யோர்களேத்தும் புகலி
நிலாவிய புண்ணியனே
எந்தமை யாளுடை யீசஎம்மான் எம்மிறை
யேயிது என்கொல்சொல்லாய்
வெந்தவெண் நீறணி வார்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 5

39. சங்கொளி யிப்பி சுறாமகரந் தாங்கிநிரந்து
தரங்க மேன்மேற்
பொங்கொலி நீர்சுமந் தோங்குசெம்மைப் புகலி
நிலாவிய புண்ணியனே

எங்கள்பி ரானிமை யோர்கள்பெம்மான் எம்மிறை
யேயிது என்கொல்சொல்லாய்
வெங்கதிர் தோய்பொழில் சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 6

40. காமனெ ரிப்பிழம் பாகநோக்கிக் காம்பன
தோளியொ டுங்கலந்து
பூமரு நான்முகன் போல்வரேத்தப் புகலி
நிலாவிய புண்ணியனே
ஈமவ னத்தெரி யாட்டுகந்த எம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
வீமரு தண்பொழில் சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 7

41. இலங்கையர் வேந்தெழில் வாய்த்ததிண்டோள் இற்றல
றவ்விர லொற்றியைந்து
புலங்களைக் கட்டவர் போற்றஅந்தண் புகலி
நிலாவிய புண்ணியனே
இலங்கெரி யேந்திநின் றெல்லியாடும் எம்மிறை
யேயிது என்கொல்சொல்லாய்
விலங்கலொண் மாளிகை சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 8

42. செறிமுள ரித்தவி சேறியாறுஞ் செற்றதில்
வீற்றிருந் தானுமற்றைப்
பொறியர வத்தணை யானுங்காணாப் புகலி
நிலாவிய புண்ணியனே
எறிமழு வோடிள மான்கையின்றி யிருந்தபி
ரானிது என்கொல்சொல்லாய்
வெறிகமழ் பூம்பொழில் சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 9

43. பத்தர் கணம்பணிந் தேத்தவாய்த்த பான்மைய
தன்றியும் பல்சமணும்
புத்தரும் நின்றலர் தூற்றஅந்தண் புகலி
நிலாவிய புண்ணியனே
எத்தவத் தோர்க்குமி லக்காய்நின்ற எம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
வித்தகர் வாழ்பொழில் சூழ்மிழலை விண்ணிழி
கோயில் விரும்பியதே. 10

44. விண்ணிழி கோயில் விரும்பிமேவும் வித்தக
மென்கொலி தென்றுசொல்லிப்
புண்ணிய னைப்புக லிந்நிலாவு பூங்கொடி
யோடிருந் தானைப்போற்றி
நண்ணிய கீர்த்தி நலங்கொள்கேள்வி நான்மறை
ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணியல் பாடல்வல் லார்களிந்தப் பாரொடு
விண்பரி பாலகரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 5. கீழைத்திருக்காட்டுப்பள்ளி : பண் – நட்டபாடை

45. செய்யரு கேபுனல் பாயவோங்கிச் செங்கயல்
பாயச் சிலமலர்த்தேன்
கையரு கேகனி வாழையீன்று கானலெல்
லாங்கமழ் காட்டுப்பள்ளிப்
பையரு கேயழல் வாயவைவாய்ப் பாம்பணை
யான்பணைத் தோளிபாகம்
மெய்யரு கேயுடை யானையுள்கி விண்டவர்
ஏறுவர் மேலுலகே. 1

46. திரைகளெல் லாமல ருஞ்சுமந்து செழுமணி
முத்தொடு பொன்வரன்றிக்
கரைகளெல் லாமணி சேர்ந்துரிஞ்சிக் காவிரி
கால்பொரு காட்டுப்பள்ளி
உரைகளெல் லாமுணர் வெய்திநல்ல வுத்தம
ராயுயர்ந் தாருலகில்
அரவமெல் லாமரை யார்த்தசெல்வர்க் காட்செய
அல்ல லறுக்கலாமே. 2

47. தோலுடை யான்வண்ணப் போர்வையினான் சுண்ணவெண்
ணீறு துதைந்திலங்கு
நூலுடை யானிமை யோர்பெருமான் நுண்ணறி
வால்வழி பாடுசெய்யுங்
காலுடை யான் கரி தாயகண்டன்
காதலிக்கப்படுங் காட்டுப்பள்ளி
மேலுடை யானிமை யாதமுக்கண் மின்னிடை
யாளொடும் வேண்டினானே. 3

48. சலசல சந்தகி லோடுமுந்திச் சந்தன
மேகரை சார்த்தியெங்கும்
பலபல வாய்த்தலை யார்த்துமண்டிப் பாய்ந்திழி
காவிரிப் பாங்கரின்வாய்க்
கலகல நின்றதி ருங்கழலான் காதலிக்
கப்படுங் காட்டுப்பள்ளிச்
சொலவல தொண்டர்க ளேத்தநின்ற சூலம்வல்
லான்கழல் சொல்லுவோமே. 4

49. தளையவிழ் தண்ணிற நீலநெய்தல் தாமரை
செங்கழு நீருமெல்லாங்
களையவி ழுங்குழ லார்கடியக் காதலிக்
கப்படுங் காட்டுப்பள்ளித்
துளைபயி லுங்குழல் யாழ்முரலத் துன்னிய
இன்னிசை யாற்றுதைந்த
அளைபயில் பாம்பரையார்த்த செல்வர்க் காட்செய
அல்ல லறுக்கலாமே. 5

50. முடிகையி னாற்றொடு மோட்டுழவர் முன்கைத்
தருக்கைக் கரும்பின்கட்டிக்
கடிகையி னாலெறி காட்டுப்பள்ளி காதல்செய்
தான்கரி தாயகண்டன்
பொடியணி மேனியி னானையுள்கிப் போதொடு
நீர்சுமந் தேத்திமுன்னின்று
அடிகையி னாற்றொழ வல்லதொண்டர் அருவினையைத்துரந்
தாட்செய் வாரே. 6

51. பிறையுடை யான்பெரி யோர்கள்பெம்மான் பெய்கழல்
நாடொறும் பேணியேத்த
மறையுடை யான்மழு வாளுடையான் வார்தரு
மால்கடல் நஞ்சமுண்ட
கறையுடை யான்கன லாடுகண்ணாற் காமனைக்
காய்ந்தவன் காட்டுப்பள்ளிக்
குறையுடை யான்குறட் பூதச்செல்வன் குரைகழ
லேகைகள் கூப்பினோமே. 7

52. செற்றவர் தம்மர ணம்மவற்றைச் செவ்வழல்
வாயெரியூட்டி நின்றுங்
கற்றவர் தாந்தொழு தேத்தநின்றான் காதலிக்
கப்படுங் காட்டுப்பள்ளி
உற்றவர் தாமுணர் வெய்திநல்ல வும்பருள்
ளார்தொழு தேத்தநின்ற
பெற்றம ரும்பெரு மானையல்லாற் பேசுவது
மற்றோர் பேச்சிலோமே. 8

53. ஒண்துவ ரார்துகி லாடைமெய்போர்த் துச்சிகொ
ளாமையுண் டேயுரைக்குங்
குண்டர்க ளோடரைக் கூறையில்லார் கூறுவ
தாங்குண மல்லகண்டீர்
அண்டம றையவன் மாலுங்காணா ஆதியி
னானுறை காட்டுப்பள்ளி
வண்டம ரும்மலர்க் கொன்றைமாலை வார்சடை
யான்கழல் வாழ்த்துவோமே. 9

54. பொன்னியல் தாமரை நீலநெய்தல் போதுகளாற்பொலி
வெய்து பொய்கைக்
கன்னியர் தாங்குடை காட்டுப்பள்ளிக் காதல
னைக்கடற் காழியர்கோன்
துன்னிய இன்னிசை யாற்றுதைந்து சொல்லிய
ஞானசம் பந்தனல்ல
தன்னிசை யாற்சொன்ன மாலைபத்துந் தாங்கவல்
லார்புகழ் தாங்குவாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 6. திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும் :
## பண் – நட்டபாடை
## வினாவுரை

55. அங்கமும் வேதமும் ஓதுநாவர் அந்தணர்
நாளு மடிபரவ
மங்குல் மதிதவழ் மாடவீதி மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
செங்கய லார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்

கங்குல் விளங்கெரி யேந்தியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 1

56. நெய்தவழ் மூவெரி காவலோம்பு நேர்புரி
நூன்மறை யாளரேத்த
மைதவழ் மாட மலிந்தவீதி மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
செய்தவ நான்மறை யோர்களேத்துஞ் சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
கைதவழ் கூரெரி யேந்தியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 2

57. தோலொடு நூலிழை சேர்ந்தமார்பர் தொகுமறையோர்கள்
வளர்த்த செந்தீ
மால்புகை போய்விம்மு மாடவீதி மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
சேல்புல்கு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
கால்புல்கு பைங்கழ லார்க்கஆடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 3

58. நாமரு கேள்வியர் வேள்வியோவா நான்மறை
யோர்வழி பாடுசெய்ய
மாமரு வும்மணிக் கோயில்மேய மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
தேமரு பூம்பொழிற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
காமரு சீர்மகிழ்ந் தெல்லியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 4

59. பாடல் முழவும் விழவுமோவாப் பன்மறை
யோரவர் தாம்பரவ
மாட நெடுங்கொடி விண்தடவு மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
சேடக மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
காடக மேயிட மாகஆடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 5

60. புனையழ லோம்புகை யந்தணாளர் பொன்னடி
நாடொறும் போற்றிசைப்ப
மனைகெழு மாடம் மலிந்தவீதி மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
சினைகெழு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
கனைவளர் கூரெரி யேந்தியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 6,7

61. பூண்டங்கு மார்பி னிலங்கைவேந்தன் பொன்னெடுந்
தோள்வரை யாலடர்த்து
மாண்டங்கு நூன்மறை யோர்பரவ மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
சேண்டங்கு மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
காண்டங்கு தோள்பெயர்த் தெல்லியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 8

62. அந்தமு மாதியும் நான்முகனு மரவணை
யானு மறிவரிய
மந்திர வேதங்க ளோதுநாவர் மருகல்
நிலாவிய மைந்தசொல்லாய்
செந்தமி ழோர்கள் பரவியேத்துஞ் சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
கந்த மகிற்புகை யேகமழுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 9

63. இலைமரு தேய்ழ காகநாளு மிடுதுவர்க்
காயொடு சுக்குத்தின்னும்
நிலையமண் தேரரை நீங்கிநின்று நீதரல்
லார்தொழும் மாமருகல்
மலைமகள் தோள்புணர் வாயருளாய் மாசில்செங்
காட்டங் குடியதனுள்
கலைமல்கு தோலுடுத் தெல்லியாடுங் கணபதி
யீச்சரங் காமுறவே. 10

64. நாலுங் குலைக்கமு கோங்குகாழி ஞானசம்
பந்தன் நலந்திகழும்
மாலின் மதிதவழ் மாடமோங்கு மருகலின்
மற்றதன் மேல்மொழிந்த

சேலுங் கயலுந் திளைத்தகண்ணார் சீர்கொள்செங்
காட்டங் குடியதனுள்
சூலம்வல் லான்கழலேத்து பாடல் சொல்லவல்
லார்வினை யில்லையாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 7. திருநள்ளாறும் திருஆலவாயும் :
## பண் – நட்டபாடை

### வினாவுரை

65. பாடக மெல்லடிப் பாவையோடும் படுபிணக்
காடிடம் பற்றிநின்று
நாடக மாடுநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவ
ரொடுந்தொழு தேத்திவாழ்த்த
ஆடக மாட நெருங்குகூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 1

66. திங்களம் போதுஞ் செழும்புனலுஞ் செஞ்சடை
மாட்டயல் வைத்துகந்து
நங்கண் மகிழுநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
பொங்கிள மென்முலை யார்களோடும் புனமயில்
ஆட நிலாமுளைக்கும்
அங்கழ கச்சுதை மாடக்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 2

67. தண்ணறு மத்தமுங் கூவிளமும் வெண்டலை
மாலையுந்தாங்கி யார்க்கும்
நண்ண லரியநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துட
னேத்தப் புனையிழையார்
அண்ணலின் பாட லெடுக்குங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 3

68. பூவினில் வாசம் புனலிற் பொற்புப்
புதுவிரைச் சாந்தினினாற்றத்தோடு
நாவினிற் பாடல்நள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
தேவர்கள் தானவர் சித்தர்விச்சா தரர்கணத்
தோடுஞ் சிறந்துபொங்கி
ஆவினி லைந்துகந் தாட்டுங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 4

69. செம்பொன்செய் மாலையும் வாசிகையுந் திருந்து
புகையுமவியும் பாட்டும்
நம்பும் பெருமைநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
உம்பரு நாகரு லகந்தானு மொலிகடல்
சூழ்ந்த வுலகத்தோரும்
அம்புத நால்களால் நீடுங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 5

70. பாகமுந் தேவியை வைத்துக்கொண்டு பைவிரி
துத்திப்பரிய பேழ்வாய்
நாகமும் பூண்டநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
போகமு நின்னை மனத்து வைத்துப்புண்ணியர்
நண்ணும் புணர்வுபூண்ட
ஆகமு டையவர் சேருங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 6

71. கோவண ஆடையு நீறுப்பூச்சுங் கொடுமழு
ஏந்தலுஞ் செஞ்சடையும்
நாவணப் பாட்டுநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
பூவண மேனி யிளையமாதர் பொன்னும்
மணியுங் கொழித்தெடுத்து
ஆவண வீதியி லாடுங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 7

72. இலங்கை யிராவணன் வெற்பெடுக்க எழில்விர
லூன்றி யிசைவிரும்பி
நலங்கொளச் சேர்ந்தநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்

புலன்களைச் செற்றுப் பொறியைநீக்கிப் புந்தியி
லுந்நினைச் சிந்தைசெய்யும்
அலங்கல்நல் லார்க ளமருங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 8

73. பணியுடை மாலும் மலரினோனும் பன்றியும்
வென்றிப் பறவையாயும்
நணுக லரியநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்
மணியொலி சங்கொலி யோடுமற்றை மாமுர
சின்னொலி யென்றுமோவா
தணிகிளர் வேந்தர் புகுதுங்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 9

74. தடுக்குடைக் கையருஞ் சாக்கியருஞ் சாதியில்
நீங்கிய வத்தவத்தர்
நடுக்குற நின்றநள் ளாறுடைய நம்பெரு
மானிது என்கொல்சொல்லாய்,
எடுக்கும் விழவுந்நன் னாள்விழவு மிரும்பலி
யின்பினோ டெத்திசையும்,
அடுக்கும் பெருமைசேர் மாடக்கூடல் ஆலவா
யின்க ணமர்ந்தவாறே. 10

75. அன்புடை யானை யரனைக்கூடல் ஆலவாய்
மேவிய தென்கொலென்று
நன்பொனை நாதனை நள்ளாற்றானை நயம்பெறப்
போற்றி நலங்குலாவும்
பொன்புடை சூழ்தரு மாடக்காழிப் பூசுரன்
ஞானசம் பந்தன்சொன்ன
இன்புடைப் பாடல்கள் பத்தும்வல்லா ரிமையவ
ரேத்த இருப்பர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருஆவூர்ப் பசுபதீச்சரம் : பண் – நட்டபாடை

76. புண்ணியர் பூதியர் பூதநாதர் புடைபடுவார்தம்
மனத்தார் திங்கட்
கண்ணிய ரென்றென்று காதலாளர் கைதொழு
தேத்த இருந்தவூராம்
விண்ணுயர் மாளிகை மாடவீதி விரைகமழ்
சோலைசு லாவியெங்கும்
பண்ணியல் பாடல றாதஆவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 1

77. முத்தியர் மூப்பில ராப்பினுள்ளார் முக்கணர்
தக்கன்றன் வேள்விசாடும்
அத்திய ரென்றென் றடியரேத்தும் ஐய
னணங்கொ டிருந்தவூராம்
தொத்திய லும்பொழில் மாடுவண்டு துதைந்தெங்குந்
தூமதுப் பாயக்கோயிற்
பத்திமைப் பாடல றாதஆவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 2

78. பொங்கி வரும்புனல் சென்னிவைத்தார் போம்வழி
வந்திழி வேற்றமானார்
இங்குயர் ஞானத்தர் வானோரேத்தும் இறையவ
ரென்றுமி ருந்தவூராம்
தெங்குயர் சோலைசே ராலைசாலி திளைக்கும்
விளைவயல் சேரும்பொய்கைப்
பங்கய மங்கை விரும்புமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 3

79. தேவியோர் கூறின ரேறதேறுஞ் செலவினர்
நல்குரவென்னை நீக்கும்
ஆவிய ரந்தண ரல்லல்தீர்க்கும் அப்பனா
ரங்கே யமர்ந்தவூராம்
பூவிய லும்பொழில் வாசம்வீசப் புரிகுழ
லார்சுவ டொற்றிமுற்றப்
பாவியல் பாடல றாதஆவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 4

80. இந்தணை யுஞ்சடை யார்விடையா ரிப்பிறப்
பென்னை யறுக்கவல்லார்
வந்தணைந் தின்னிசை பாடுவார்பால் மன்னினர்

மன்னி யிருந்தவூராம்
கொந்தணை யுங்குழ லார்விழவிற் கூட்ட
மிடையிடை சேரும்வீதிப்
பந்தணை யும்விர லார்தமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 5

81. குற்ற மறுத்தார் குணத்தினுள்ளார் கும்பிடு
வார்தமக் கன்புசெய்வார்
ஒற்றை விடையினர் நெற்றிக்கண்ணா ருறைபதி
யாகுஞ் செறிகொள்மாடம்
சுற்றிய வாசலின் மாதர்விழாச் சொற்கவி
பாடநி தானம்நல்கப்
பற்றிய கையினர் வாழுமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 6

82. நீறுடை யார்நெடு மால்வணங்கு நிமிர்சடை
யார்நினை வார்தமுள்ளம்
கூறுடை யாருடை கோவணத்தார் குவலய
மேத்த இருந்தவூராம்
தாறுடை வாழையிற் கூழைமந்தி தகுகனி
யுண்டுமின் டிட்டினத்தைப்
பாறிடப் பாய்ந்துப யிலுமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 7

83. வெண்டலை மாலை விரவிப்பூண்ட மெய்யுடை
யார்விற லாரரக்கன்
வண்டமர் பூமுடி செற்றுகந்த மைந்தரி
டம்வள மோங்கியெங்கும்
கண்டவர் சிந்தைக் கருத்தின்மிக்கார் கதியரு
ளென்றுகை யாரக்கூப்பிப்
பண்டலர் கொண்டு பயிலுமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 8

84. மாலு மயனும் வணங்கிநேட மற்றவ
ருக்கெரி யாகிநீண்ட
சீல மறிவரி தாகிநின்ற செம்மையி
னாரவர் சேருமூராம்
கோல விழாவி னரங்கதேறிக் கொடியிடை
மாதர்கள் மைந்தரோடும்
பாலென வேமொழிந் தேத்துமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 9

85\. பின்னிய தாழ்சடை யார்பிதற்றும் பேதைய
ராஞ்சமண் சாக்கியர்கள்
தன்னிய லும்முரை கொள்ளகில்லாச் சைவ
ரிடந்தள வேறுசோலைத்
துன்னிய மாதரு மைந்தர்தாமுஞ் சுனையிடை
மூழ்கித் தொடர்ந்தசிந்தைப்
பன்னிய பாடல் பயிலுமாவூர்ப் பசுபதி
யீச்சரம் பாடுநாவே. 10

86\. எண்டிசை யாரும்வ ணங்கியேத்தும் எம்பெரு
மானையெழில்கொ ளாவூர்ப்,
பண்டுரி யார்சிலர் தொண்டர் போற்றும் பசுபதி
யீச்சரத் தாதிதன்மேல்,
கண்டல்கண் மிண்டிய கானற்காழிக் கவுணியன்
ஞானசம் பந்தன்சொன்ன,
கொண்டினி தாவிசை பாடியாடிக் கூடும
வருடை யார்கள்வானே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 9. திருவேணுபுரம் : பண் – நட்டபாடை

87\. வண்டார்குழ லரிவையொடு பிரியாவகை பாகம்
பெண்டான்மிக வானான்பிறைச் சென்னிப்பெரு மானூர்
தண்டாமரை மலராளுறை தவளந்நெடு மாடம்
விண்டாங்குவ போலும்மிகு வேணுபுர மதுவே. 1

88\. படைப்புந்நிலை யிறுதிப்பயன் பருமையொடு நேர்மை
கிடைப்பல்கண முடையான்கிறி பூதப்படை யானூர்
புடைப்பாளையின் கமுகின்னொடு புன்னைமலர் நாற்றம்
விடைத்தேவரு தென்றல்மிகு வேணுபுர மதுவே. 2

89\. கடந்தாங்கிய கரியையவர் வெருவவுரி போர்த்துப்
படந்தாங்கிய அரவக்குழைப் பரமேட்டிதன் பழவூர்
நடந்தாங்கிய நடையார்நல பவளத்துவர் வாய்மேல்
விடந்தாங்கிய கண்ணார்பயில் வேணுபுர மதுவே. 3

90\. தக்கன்றன சிரமொன்றினை யரிவித்தவன் றனக்கு
மிக்கவ்வர மருள்செய்தஎம் விண்ணோர்பெரு மானூர்

பக்கம்பல மயிலாடிட மேகம்முழ வதிர
மிக்கம்மது வண்டார்பொழில் வேணுபுர மதுவே. 4

91. நானாவித வுருவாய்நமை யாள்வான்நணு காதார்
வானார்திரி புரமூன்றெரி யுண்ணச்சிலை தொட்டான்
தேனார்ந்தெழு கதலிக்கனி யுண்பான்திகழ் மந்தி
மேனோக்கிநின் றிறங்கும்பொழில் வேணுபுர மதுவே. 5

92. மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருவிம்மிக அஞ்சக்
கண்ணார்சல மூடிக்கட லோங்கவ்வுயர்ந் தானூர்
தண்ணார்நறுங் கமலம்மலர் சாயவ்விள வாளை
விண்ணார்குதி கொள்ளும்வியன் வேணுபுர மதுவே. 6,7

93. மலையான்மக ளஞ்சவ்வரை யெடுத்தவ்வலி யரக்கன்
தலைதோளவை நெரியச்சர ணுகிர்வைத்தவன் றன்னூர்
கலையாறொடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம்
விலையாயின சொற்றேர்தரு வேணுபுர மதுவே. 8

94. வயமுண்டவ மாலும்மடி காணாதல மாக்கும்
பயனாகிய பிரமன்படு தலையேந்திய பரனூர்
கயமேவிய சங்கந்தரு கழிவிட்டுயர் செந்நெல்
வியன்மேவிவந் துறங்கும்பொழில் வேணுபுர மதுவே. 9

95. மாசேறிய வுடலாரமண் குழுக்கள்ளொடு தேரர்
தேசேறிய பாதம்வணங் காமைத்தெரி யானூர்
தூசேறிய வல்குற்றுடி யிடையார்துணை முலையார்
வீசேறிய புருவத்தவர் வேணுபுர மதுவே. 10

96. வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந் தன்னைப்
பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தன்தன பாடல்
ஏதத்தினை யில்லாவிவை பத்தும்மிசை வல்லார்
கேதத்தினை யில்லார்சிவ கெதியைப்பெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 10. திருவண்ணாமலை : பண் – நட்டபாடை

97. உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே. 1

98. தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுவன்மிசை சிறுநுண்டுளி சிதற
ஆமாம்பிணை யணையும்பொழி லண்ணாமலை யண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை யிலரே. 2

99. பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்
சூலிம்மணி தரைமேனிறை சொரியும்விரி சாரல்
ஆலிம்மழை தவழும்பொழி லண்ணாமலை யண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரன புகழே. 3

100. உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுல கெல்லாம்
எதிரும்பலி யுணலாகவு மெருதேறுவ தல்லால்
முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொள அடிமேல்
அதிருங்கழ லடிகட்கிட மண்ணாமலை யதுவே. 4

101. மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள் ளருவி
அரவஞ்செய முரவம்படு மண்ணாமலை யண்ணல்
உரவஞ்சடை யுலவும்புன லுடனாவது மோரார்
குரவங்கமழ் நறுமென்குழ லுமைபுல்குதல் குணமே. 5

102. பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கடல் நஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரது பருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல் பரவி
உருகும்மன முடையார்தமக் குறுநோயடை யாவே 6

103. கரிகாலன குடர்கொள்வன கழுகாடிய காட்டில்
நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவை யுருள
எரியாடிய இறைவர்க்கிட மினவண்டிசை முரல
அரியாடிய கண்ணாளொடு மண்ணாமலை யதுவே. 7

104. ஒளிறூபுலி யதளாடைய னுமையஞ்சுதல் பொருட்டால்
பிளிறூகுரல் மதவாரண வதனம்பிடித் துரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன்னிரா வணனை
அளறூபட அடர்த்தானிட மண்ணாமலை யதுவே. 8

105. விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவண மழலாகிய அண்ணாமலை யண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடி சரணே. 9

106. வேர்வந்துற மாசூர்தர வெயில்நின்றுழல் வாரும்
மார்பம்புதை மலிசீவர மறையாவரு வாரும்
ஆரம்பர்த முரைகொள்ளன்மின் அண்ணாமலை யண்ணல்
கூர்வெண்மழுப் படையான்நல்ல கழல்சேர்வது குணமே. 10

107. வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரி சாரல்
அம்புந்திமு வெயிலெய்தவ னண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுள் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவ ரடிபேணுதல் தவமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 11. திருவீழிமிழலை : பண் – நட்டபாடை

108. சடையார்புன லுடையானொரு சரிகோவண முடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படை யுடையான்
மடமான்விழி யுமைமாதிட முடையானெனை யுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழ லையே. 1

109. ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்
ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே. 2

110. வம்மின்னடி யீர்நாண்மல ரிட்டுத்தொழு துய்ய
உம்மன்பினொ டெம்மன்புசெய் தீசன்னுறை கோயில்
மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித்திசை யெங்கும்
விம்மும்பொழில் சூழ்தண்வயல் வீழிம்மிழ லையே. 3

111. பண்ணும்பத மேழும்பல வோசைத்தமி ழவையும்
உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொலி பலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர் மூன்றும்
விண்ணும்முழு தானானிடம் வீழிம்மிழ லையே. 4

112. ஆயாதன சமயம்பல அறியாதவ னெறியின்
தாயானவ னுயிர்கட்குமுன் றலையானவன் மறைமுத்
தீயானவன் சிவனெம்மிறை செல்வத்திரு வாரூர்
மேயானவ னுறையும்மிடம் வீழிம்மிழ லையே. 5

113. கல்லால்நிழற் கீழாயிடர் காவாயென வானோர்
எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப
வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்
வில்லாலெயி லெய்தானிடம் வீழிம்மிழ லையே. 6

114. கரத்தான்மலி சிரத்தான்கரி யுரித்தாயதொர் படத்தான்
புரத்தார்பொடி படத்தன்னடி பணிமூவர்கட் கோவா
வரத்தான்மிக அளித்தானிடம் வளர்புன்னைமுத் தரும்பி
விரைத்தாதுபொன் மணியீன்றணி வீழிம்மிழ லையே. 7

115. முன்னிற்பவ ரில்லாமுர ணரக்கன்வட கயிலை
தன்னைப்பிடித் தெடுத்தான்முடி தடந்தோளிற வூன்றிப்
பின்னைப்பணிந் தேத்தப்பெரு வாள்பேரொடுங் கொடுத்த
மின்னிற்பொலி சடையானிடம் வீழிம்மிழ லையே. 8

116. பண்டேமுல குண்டானவை கண்டானுமுன் னறியா
ஒண்டீயுரு வானானுறை கோயில்நிறை பொய்கை
வண்டாமரை மலர்மேல்மட அன்னம்நடை பயில
வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழ லையே. 9

117. மசங்கற்சமண் மண்டைக்கையர் குண்டக்குண மிலிகள்
இசங்கும்பிறப் பறுத்தானிட மிருந்தேன்களித் திரைத்துப்
பசும்பொற்கிளி களிமஞ்ஞைகள் ஒளிகொண்டெழு பகலோன்
விசும்பைப்பொலி விக்கும்பொழில் வீழிம்மிழ லையே. 10

118. வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனை விரைசேர்
காழிந்நகர்க் கலைஞானசம் பந்தன்தமிழ் பத்தும்
யாழின்னிசை வல்லார்சொலக் கேட்டாரவ ரெல்லாம்
ஊழின்மலி வினைபோயிட வுயர்வானடை வாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 12. திருமுதுகுன்றம் : பண் – நட்டபாடை

119. மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விட முண்ட
தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணன திடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகி லொளிர்குங்குமங் கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே. 1

120. தழையார்வட வியவீதனில் தவமேபுரி சைவன்
இழையாரிடை மடவாளொடு மினிதாவுறை யிடமாம்
மழைவானிடை முழவவ்வெழில் வளைவாளுகி ரெரிகண்
முழைவாளரி குமிறும்முயர் முதுகுன்றடை வோமே. 2

121. விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்
களையார்தரு கதிராயிர முடையவ்வவ னோடு
முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடை வோமே. 3

122. சுரர்மாதவர் தொகுகின்னர ரவரோதொலை வில்லா
நரரானபன் முனிவர்தொழ விருந்தானிடம் நலமார்
அரசார்வர வணிபொற்கல னவைகொண்டுபன் னாளும்
முரசார்வரு மணமொய்ம்புடை முதுகுன்றடை வோமே. 4

123. அறையார்கழ லந்தன்றனை யயில்மூவிலை யழகார்
கறையார்நெடு வேலின்மிசை யேற்றுனிடங் கருதில்
மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவை கொண்டு
முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடை வோமே. 5

124. ஏவார்சிலை யெயினன்னுரு வாகியெழில் விசயற்
கோவாதவின் னருள்செய்தவெம் மொருவற்கிட முலகில்
சாவாதவர் பிறவாதவர் தவமேமிக வுடையார்
மூவாதபன் முனிவர்தொழு முதுகுன்றடை வோமே. 6

125. தழல்சேர்தரு திருமேனியர் சசிசேர்சடை முடியர்
மழமால்விடை மிகவேறிய மறையோனுறை கோயில்
விழவோடொலி மிகுமங்கையர் தகுமாடக சாலை
முழவோடிசை நடமுன்செயு முதுகுன்றடை வோமே. 7

126 செதுவாய்மைகள் கருதிவ்வரை யெடுத்ததிற லரக்கன்
கதுவாய்கள்பத் தலறியிடக் கண்டானுறை கோயில்
மதுவாயசெங் காந்தள்மலர் நிறையக்குறை வில்லா
முதுவேய்கள்முத் துதிரும்பொழில் முதுகுன்றடை வோமே. 8

127. இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறி வரிய
செயலாடிய தீயாருரு வாகியெழு செல்வன்
புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பைத்தடத் தருகே
முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடை வோமே. 9

128. அருகரொடு புத்தரவ ரறியாவரன் மலையான்
மருகன்வரு மிடபக்கொடி யுடையானிடம் மலரார்
கருகுகுழல் மடவார்கடி குறிஞ்சியது பாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடை வோமே. 10

129. முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைம்மிகு தொல்சீர்ப்
புகலிந்நகர் மறைஞானசம் பந்தன்னுரை செய்த
நிகரில்லன தமிழ்மாலைக ளிசையோடிவை பத்தும்
பகரும்மடி யவர்கட்கிடர் பாவம்மடை யாவே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 13. திருவியலூர் : பண் – நட்டபாடை

130. குரவங்கமழ் நறுமென்குழ லரிவையவள் வெருவப்
பொருவெங்கரி படவென்றத னுரிவையுட லணிவோன்
அரவும்மலை புனலும்மிள மதியுந்நகு தலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்விய லூரே. 1

131. ஏறார்தரு மொருவன்பல வுருவன்னிலை யானான்
ஆறார்தரு சடையன்னன லுருவன்புரி வுடையான்
மாறார்புர மெரியச்சிலை வளைவித்தவன் மடவாள்
வீறார்தர நின்றானிடம் விரிநீர்விய லூரே. 2

132. செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனை தோறும்
பெய்ம்மின்பலி யெனநின்றிசை பகர்வாரவ ரிடமாம்
உம்மென்றெழு மருவித்திரள் வரைபற்றிட வுரைமேல்
விம்மும்பொழில் கெழுவும்வயல் விரிநீர்விய லூரே. 3

133. அடைவாகிய அடியார்தொழ அலரோன்தலை யதனில்
மடவாரிடு பலிவந்துண லுடையானவ னிடமாம்
கடையார்தர அகிலார்கழை முத்தந்நிரை சிந்தி
மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்விய லூரே. 4

134. எண்ணார்தரு பயனாயய னவனாய்மிகு கலையாய்ப்
பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறை யவனாய்க்
கண்ணார்தரு முருவாகிய கடவுள்ளிட மெனலாம்
விண்ணோரொடு மண்ணோர்தொழு விரிநீர்விய லூரே. 5

135. வசைவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலை யறிவான்
திசையுற்றவர் காணச்செரு மலைவானிலை யவனை
அசையப்பொரு தசையாவண மவனுக்குயர் படைகள்
விசையற்கருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. 6

136. மானாரர வுடையானிர வுடையான் பகல்நட்டம்
ஊனார்தரு முயிரானுயர் விசையான்விளை பொருள்கள்
தானாகிய தலைவன்னென நினைவாரவ ரிடமாம்
மேனாடிய விண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. 7

137. பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத் தான்றன்
கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீண்முடி நெரிந்து
சிரமாயின கதறச்செறி கழல்சேர்திரு வடியின்
விரலாலடர் வித்தானிடம் விரிநீர்விய லூரே. 8

138. வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொரு வகையால்
அளம்பட்டறி வொண்ணாவகை யழலாகிய அண்ணல்
உளம்பட்டெழு தழற்றூணதன் நடுவேயொரு வுருவம்
விளம்பட்டருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. 9

139. தடுக்காலுடல் மறைப்பாரவர் தவர்சீவர மூடிப்
பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்நமர் பெரியோர்
கடற்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள் செய்த
விடைச்சேர்தரு கொடியானிடம் விரிநீர்விய லூரே. 10

140. விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்விய லூரைத்
தளங்கொண்டதொர் புகலித்தகு தமிழ்ஞானசம் பந்தன்
துளங்கில்தமிழ் பரவித்தொழு மடியாரவ ரென்றும்
விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும்முடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. திருக்கொடுங்குன்றம் : பண் – நட்டபாடை

141. வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
ஆனிற்பொலி வைந்தும்மமர்ந் தாடியுல கேத்தத்
தேனிற்பொலி மொழியாளொடு மேயான்றிரு நகரே. 1

142. மயில்புல்குதண் பெடையோடுட னாடும்வளர் சாரல்
குயிலின்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங் குன்றம்
அயில்வேல்மலி நெடுவெஞ்சுட ரனலேந்திநின் றாடி
எயில்முன்படெ எய்தானவன் மேயவ்வெழில் நகரே. 2

143. மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமல ருந்திக்
குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடை தன்மேல்
வளர்கொன்றையு மதமத்தமும் வைத்தான்வள நகரே. 3

144. பருமாமத கரியோடரி யிரியும்விரி சாரல்
குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங் குன்றம்
பொருமாவெயில் வரைவிற்றரு கணையிற்பொடி செய்த
பெருமானவ னுமையாளொடும் மேவும்பெரு நகரே. 4

145. மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரை யிழியும்
கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங் குன்றம்
நாகத்தொடு மிளவெண்பிறை சூடிந்நல மங்கை
பாகத்தவ னிமையோர்தொழ மேவும்பழ நகரே. 5

146. கைம்மாமத கரியின்னின மிடியின்குர லதிரக்
கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங் குன்றம்
அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள் செய்யும்
பெம்மானவ னிமையோர்தொழ மேவும்பெரு நகரே. 6

147. மரவத்தொடு மணமாதவி மௌவல்லது விண்ட
குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங் குன்றம்
அரவத்தொடு மிளவெண்பிறை விரவும்மலர்க் கொன்றை
நிரவச்சடை முடிமேலுடன் வைத்தானெடு நகரே. 7

148. முட்டாமுது கரியின்னின முதுவேய்களை முனிந்து
குட்டாச்சுனை யவைமண்டிநின் றாடுங்கொடுங் குன்றம்
ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவை யுடனே
பிட்டானவ னுமையாளொடு மேவும்பெருநகரே. 8

149. அறையும்மரி குரலோசையை யஞ்சியடு மானை
குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங் குன்றம்
மறையும்மவை யுடையானென நெடியானென விவர்கள்
இறையும்மறி வொண்ணாதவன் மேயவ்வெழில் நகரே. 9

150. மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்மலை தன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங் குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங் கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழ நகரே. 10

151. கூனற்பிறை சடைமேல்மிக வுடையான்கொடுங் குன்றைக்
கானற்கழு மலமாநகர்த் தலைவன்னல கவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொள்தமிழ் வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழி லோரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 15. திருநெய்த்தானம் : பண் – நட்டபாடை

152. மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய வொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமானிட நெய்த்தானமெ னீரே. 1

153. பறையும்பழி பாவம்படு துயரம்பல தீரும்
பிறையும்புன லரவும்படு சடையெம்பெரு மானூர்
அறையும்புனல் வருகாவிரி யலைசேர்வட கரைமேல்
நிறையும்புனை மடவார்பயில் நெய்த்தானமெ னீரே. 2

154. பேயாயின பாடப்பெரு நடமாடிய பெருமான்
வேயாயின தோளிக்கொரு பாகம்மிக வுடையான்
தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய் தலைவன்
நேயாடிய பெருமானிட நெய்த்தானமெ னீரே. 3

155. சுடுநீறணி யண்ணற்சுடர் சூலம்மன லேந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன்னுறை யிடமாம்
கடுவாளிள வரவாடுமிழ் கடல்நஞ்சம துண்டான்
நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெ னீரே. 4

156. நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரை யுந்திப்
பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந் தேத்தும்
நிகரான்மண லிடுதண்கரை நிகழ்வாயநெய்த் தான
நகரானடி யேத்தந்நமை நடலையடை யாவே. 5

157. விடையார்கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளை யெலும்பும்
உடையார்நறு மாலைசடை யுடையாரவர் மேய
புடைபேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்தநெய்த் தானம்
அடையாதவ ரென்றும்ம மருகலம்மடை யாரே. 6

158. நிழலார்வயல் கமழ்சோலைகள் நிறைகின்றநெய்த் தானத்
தழலானவ னனலங்கையி லேந்தியழ காய
கழலானடி நாளுங்கழ லாதேவிட லின்றித்
தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழு வாரே. 7

159. அறையார்கட லிலங்கைக்கிறை யணிசேர்கயி லாயம்
இறையாரமு னெடுத்தானிரு பதுதோளிற வூன்றி
நிறையார்புனல் நெய்த்தானன்நல் நிகழ்சேவடி பரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல் கதியே. 8

160. கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரை யானும்
சீலம்மறி வரிதாயொளி திகழ்வாயநெய்த் தானம்
காலம்பெற மலர்நீரவை தூவித்தொழு தேத்தும்
ஞாலம்புக ழடியாருட லுறுநோய்நலி யாவே. 9

161. மத்தம்மலி சித்தத்திறை மதியில்லவர் சமணர்
புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினை யேன்மின்
நித்தம்பயில் நிமலன்னுறை நெய்த்தானம தேத்தும்
சித்தம்முடை யடியாருடல் செறுநோயடை யாவே. 10

162. தலமல்கிய புனற்காழியுள் தமிழ்ஞானசம் பந்தன்
நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனை நிகரில்
பலமல்கிய பாடல்லிவை பத்தும்மிக வல்லார்
சிலமல்கிய செல்வன்னடி சேர்வர்சிவ கதியே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 16. திருப்புள்ளமங்கை திருஆலந்துறை : பண் – நட்டபாடை

163. பாலுந்துறு திரளாயின பரமன்பிர மன்றான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புள மங்கைக்
காலன்திற லறச்சாடிய கடவுள்ளிடங் கருதில்
ஆலந்துறை தொழுவார்தமை யடையாவினை தானே. 1

164. மலையான்மகள் கணவன்மலி கடல்சூழ்தரு தன்மைப்
புலையாயின களைவானிடம் பொழில்சூழ்புள மங்கைக்
கலையால்மலி மறையோரவர் கருதித்தொழு தேத்த
அலையார்புனல் வருகாவிரி யாலந்துறை யதுவே. 2

165. கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடை முடிமேல்
பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புள மங்கைச்
சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ் திருவாலந்
துறையானவ னறையார்கழல் தொழுமின்துதி செய்தே. 3

166. தணியார்மதி யரவின்னொடு வைத்தானிடம் மொய்த்தெம்
பணியாயவ னடியார்தொழு தேத்தும்புள மங்கை
மணியார்தரு கனகம்மவை வயிரத்திர ளோடும்
அணியார்மண லணைகாவிரி யாலந்துறை யதுவே. 4

167. மெய்த்தன்னுறும் வினைதீர்வகை தொழுமின் செழுமலரின்
கொத்தின்னொடு சந்தாரகில் கொணர்காவிரிக் கரைமேல்
பொத்தின்னிடை யாந்தைபல பாடும்புள மங்கை
அத்தன்னமை யாள்வானிட மாலந்துறை யதுவே. 5

168. மன்னானவன் னுலகிற்கொரு மழையானவன் பிழையில்
பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ்புள மங்கை
என்னானவ னிசையானவ னிளஞாயிறின் சோதி
அன்னானவ னுறையும்மிட மாலந்துறை யதுவே. 6

169. முடியார்தரு சடைமேல்முளை யிளவெண்மதி சூடிப்
பொடியாடிய திருமேனியர் பொழில்சூழ்புள மங்கைக்
கடியார்மலர் புனல்கொண்டுதன் கழலேதொழு தேத்தும்
அடியார்தமக் கினியானிட மாலந்துறை யதுவே. 7

170. இலங்கைமனன் முடிதோளிற எழிலார்திரு விரலால்
விலங்கல்லிடை யடர்த்தானிடம் வேதம்பயின் றேத்திப்
புலன்கள்தமை வென்றார்புக ழவர்வாழ்புற மங்கை
அலங்கல்மலி சடையானிட மாலந்துறை யதுவே. 8

171. செறியார்தரு வெள்ளைத்திரு நீற்றின்திரு முண்டப்
பொறியார்தரு புரிநூல்வரை மார்பன்புள மங்கை
வெறியார்தரு கமலத்தயன் மாலுந்தனை நாடி
அறியாவகை நின்றானிட மாலந்துறை யதுவே. 9

172. நீதியறி யாதாரமண் கையரொடு மண்டைப்
போதியவ ரோதும்முரை கொள்ளார்புள மங்கை
ஆதியவர் கோயில்திரு வாலந்துறை தொழுமின்
சாதிம்மிகு வானோர்தொழு தன்மைபெற லாமே. 10

173. பொந்தின்னிடைத் தேனூறிய பொழில்சூழ்புள மங்கை
அந்தண்புனல் வருகாவிரி யாலந்துறை யரனைக்
கந்தம்மலி கமழ்காழியுட் கலைஞானசம் பந்தன்
சந்தம்மலி பாடல்சொலி யாடத்தவ மாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 17. திருஇடும்பாவனம் : பண் – நட்டபாடை

174. மனமார்தரு மடவாரொடு மகிழ்மைந்தர்கள் மலர்தூய்த்
தனமார்தரு சங்கக்கடல் வங்கத்திர ளுந்திச்
சினமார்தரு திறல்வாளெயிற் றரக்கன்மிகு குன்றில்
இனமாதவ ரிறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே. 1

175. மலையார்தரு மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
நிலையார்தரு நிமலன்வலி நிலவும்புக ழொளிசேர்
கலையார்தரு புலவோரவர் காவல்மிகு குன்றில்
இலையார்தரு பொழில்சூழ்தரு மிடும்பாவன மிதுவே. 2

176. சீலம்மிகு சித்தத்தவர் சிந்தித்தெழு மெந்தை
ஞாலம்மிகு கடல்சூழ்தரு முலகத்தவர் நலமார்
கோலம்மிகு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்
ஏலங்கமழ் பொழில்சூழ்தரு மிடும்பாவன மிதுவே. 3

177. பொழிலார்தரு குலைவாழைக ளெழிலார்திகழ் போழ்தில்
தொழிலான்மிகு தொண்டரவர் தொழுதாடிய முன்றில்
குழலார்தரு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்
எழிலார்தரு மிறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே. 4

178. பந்தார்விர லுமையாளொரு பங்காகங்கை முடிமேல்
செந்தாமரை மலர்மல்கிய செழுநீர்வயற் கரைமேல்
கொந்தார்மலர் புன்னைமகிழ் குரவங்கமழ் குன்றில்
எந்தாயென விருந்தானிட மிடும்பாவன மிதுவே. 5

179. நெறிநீர்மையர் நீள்வானவர் நினையுந்நினை வாகி
அறிநீர்மையி லெய்தும்மவர்க் கறியும்மறி வருளிக்
குறிநீர்மையர் குணமார்தரு மணமார்தரு குன்றில்
எறிநீர்வயல் புடைசூழ்தரு மிடும்பாவன மிதுவே. 6

180. நீறேறிய திருமேனியர் நிலவும்முல கெல்லாம்
பாறேறிய படுவெண்டலை கையிற்பலி வாங்காக்
கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
ஏறேறிய இறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே. 7

181. தேரார்தரு திகழ்வாளெயிற் றரக்கன்சிவன் மலையை
ஓராதெடுத் தார்த்தான்முடி யொருபஃதவை நெரித்துக்
கூரார்தரு கொலைவாளொடு குணநாமமுங் கொடுத்த
ஏரார்தரு மிறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே. 8

182. பொருளார்தரு மறையோர்புகழ் விருத்தர்பொலி மலிசீர்த்
தெருளார்தரு சிந்தையொடு சந்தம்மலர் பலதூய்
மருளார்தரு மாயன்னயன் காணார்மய லெய்த
இருளார்தரு கண்டர்க்கிட மிடும்பாவன மிதுவே. 9

183. தடுக்கையுட னிடுக்கித்தலை பறித்துச்சமண் நடப்பார்
உடுக்கைபல துவர்க்கூறைக ளுடம்பிட்டுழல் வாரும்
மடுக்கண்மலர் வயல்சேர்செந்நெல் மலிநீர்மலர்க் கரைமேல்
இடுக்கண்பல களைவானிட மிடும்பாவன மிதுவே. 10

184. கொடியார்நெடு மாடக்குன்ற ளூரிற்கரைக் கோல
இடியார்கட லடிவீழ்தரு மிடும்பாவனத் திறையை
அடியாயுமந் தணர்காழியு ளணிஞானசம் பந்தன்
படியாற்சொன்ன பாடல்சொலப் பறையும்வினை தானே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 18. திருநின்றியூர் : பண் – நட்டபாடை

185. சூலம்படை சுண்ணப்பொடி சாந்தஞ்சுடு நீறு
பாலம்மதி பவளச்சடை முடிமேலது பண்டைக்
காலன்வலி காலினொடு போக்கிக்கடி கமழும்
நீலம்மலர்ப் பொய்கைநின்றி யூரின்னிலை யோர்க்கே. 1

186. அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மில ரடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்
பச்சம்முடை யடிகள்திருப் பாதம்பணி வாரே. 2

187. பறையின்னொலி சங்கின்னொலி பாங்காரவு மார
அறையும்மொலி யெங்கும்மவை யறிவாரவர் தன்மை
நிறையும்புனல் சடைமேலுடை யடிகள்நின்றி யூரில்
உறையும்மிறை யல்லதென துள்ளம் முணராதே. 3

188. பூண்டவ்வரை மார்பிற்புரி நூலன்விரி கொன்றை
ஈண்டவ்வத னோடும்மொரு பாலம்மதி யதனைத்
தீண்டும்பொழில் சூழ்ந்ததிரு நின்றியது தன்னில்
ஆண்டகழல் தொழிலல்லது அறியாரவ ரறிவே. 4

189. குழலின்னிசை வண்டின்னிசை கண்டுகுயில் கூவும்
நிழலின்னெழில் தாழ்ந்தபொழில் சூழ்ந்தநின்றி யூரில்
அழலின்வல னங்கையது ஏந்தியன லாடுங்
கழலின்னொலி யாடும்புரி கடவுள்களை கண்ணே. 5

190. முரன்முறு வல்வெண்ணகை யுடையாளொரு பாகம்
சாரன்மதி யதனோடுடன் சலவஞ்சடை வைத்த
வீரன்மலி யழகார்பொழில் மிடையுந்திரு நின்றி
ஊரன்கழ லல்லாதென துள்ளமுண ராதே. 6

191. பற்றியொரு தலைகையினி லேந்திப்பலி தேரும்
பெற்றியது வாகித்திரி தேவர்பெரு மானார்
சுற்றியொரு வேங்கையத ளோடும்பிறை சூடும்
நெற்றியொரு கண்ணார்நின்றி யூரின்னிலை யாரே. 7,8

192. நல்லம்மலர் மேலானொடு ஞாலம்மது வுண்டான்
அல்லரென ஆவரென நின்றும்மறி வரிய
நெல்லின்பொழில் சூழ்ந்தநின்றி யூரின்னிலை யாரெஞ்
செல்வரடி யல்லாதென சிந்தையுண ராதே. 9

193. நெறியில்வரு பேராவகை நினையாநினை வொன்றை
அறிவில்சம ணாதருரை கேட்டும்மய ராதே
நெறியில்லவர் குறிகள்நினை யாதேநின்றி யூரில்
மறியேந்திய கையானடி வாழ்த்தும்மது வாழ்த்தே. 10

194. குன்றம்மது எடுத்தானுடல் தோளுந்நெரி வாக
நின்றங்கொரு விரலாலுற வைத்தான்நின்றி யூரை
நன்றார்தரு புகலித்தமிழ் ஞானம்மிகு பந்தன்
குன்றாத்தமிழ் சொல்லக்குறை வின்றிநிறை புகழே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 19. திருக்கழுமலம் : திருவிராகம். பண் – நட்டபாடை

195. பிறையணி படர்சடை முடியிடை பெருகிய புனலுடை யவனிறை
இறையணி வளையிணை முலையவ ளிணைவன தெழிலுடை யிடவகை
கறையணிபொழினிறைவயலணிகழுமலமமர்கனலுருவினன்
நறையணிமலர்நறுவிரைபுல்குநலமலிகழல்தொழன்மருவுமே. 1

196. பிணிபடு கடல்பிற விகளற லெளிதுள ததுபெரு கியதிரை
அணிபடு கழுமல மினிதம ரனலுரு வினனவிர் சடைமிசை
தணிபடு கதிர்வள ரிளமதி புனைவனை யுமைதலை வனைநிற
மணிபடு கறைமிடறனைநல மலிகழ லிணைதொழன் மருவுமே. 2

197. வரியுறு புலியத ளுடையினன் வளர்பிறை யொளிகிளர் கதிர்பொதி
விரியுறு சடைவிரை புரைபொழில் விழவொலி மலிகழு மலமமர்
எரியுறு நிறஇறை வனதடி யிரவொடு பகல்பர வுவர்தம
தெரியுறு வினைசெறி கதிர்முனை யிருள்கெட நனிநினை வெய்துமதே. 3

198. வினைகெட மனநினை வதுமுடி கெனினனி தொழுதெழு குலமதி
புனைகொடி யிடைபொருள் தருபடு களிறின துரிபுதை யுடலினன்
மனைகுட வயிறுடை யனசில வருகுறள் படையுடை யவன்மலி
கனைகட லடைகழு மலமமர் கதிர்மதி யினனதிர் கழல்களே. 4

199. தலைமதி புனல்விட அரவிவை தலைமைய தொருசடை யிடையுடன்
நிலைமரு வவொரிட மருளின னிழன்மழு வினொடழல் கணையினன்
மலைமரு வியசிலை தனின்மதி லெரியுண மனமரு வினனல
கலைமரு வியபுற வணிதரு கழுமல மினிதமர் தலைவனே. 5

200. வரைபொரு திழியரு விகள்பல பருகொரு கடல்வரி மணலிடை
கரைபொரு திரையொலி கெழுமிய கழுமல மமர்கன லுருவினன்
அரைபொரு புலியத ளுடையின னடியிணை தொழவரு வினையெனும்
உரைபொடி படவுறு துயர்கெட வுயருல கெய்தலொரு தலைமையே. 6

201. முதிருறு கதிர்வள ரிளமதி சடையனை நறநிறை தலைதனில்
உதிருறு மயிர்பிணை தவிர்தசை யுடைபுலி யதளிடை யிருள்கடி
கதிருறு சுடரொளி கெழுமிய கழுமல மமர்மழு மலிபடை
அதிருறு கழலடி களதடி தொழுமறி வலதறி வறியமே. 7

202. கடலென நிறநெடு முடியவ னடுதிறல் தெறவடி சரணென
அடல்நிறை படையரு ளியபுக ழரவரை யினனணி கிளர்பிறை
விடநிறை மிடறுடை யவன்விரி சடையவன் விடையுடை யவனுமை
உடனுறை பதிகள்தன் மறுகுடை யுயர்கழு மலவியன் நகரதே. 8

203. கொழுமல ருறைபதி யுடையவ னெடியவ னெனவிவர் களுமவன்
விழுமையை யளவறி கிலரிறை விரைபுணர் பொழிலணி விழவமர்
கழுமல மமர்கன லுருவின னடியிணை தொழுமவ ரருவினை
எழுமையு மிலநில வகைதனி லெளிதிமை யவர்விய னுலகமே. 9

204. அமைவன துவரிழு கியதுகி லணியுடை யினரம ணுருவர்கள்
சமையமு மொருபொரு ளெனுமவை சலநெறி யனஅற வுரைகளும்
இமையவர் தொழுகழு மலமம ரிறைவன தடிபர வுவர்தமை
நமையல வினைநல னடைதலி லுயர்நெறி நனிநணு குவர்களே. 10

205. பெருகிய தமிழ்விர கினன்மலி பெயரவ னுறைபிணர் திரையொடு
கருகிய நிறவிரி கடலடை கழுமல முறைவிட மெனநனி
பெருகிய சிவனடி பரவிய பிணைமொழி யனவொரு பதுமுடன்
மருவிய மனமுடை யவர்மதி யுடையவர் விதியுடை யவர்களே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 20. திருவீழிமிழலை : திருவிராகம். பண் – நட்டபாடை

206. தடநில வியமலை நிறுவியொர் தழலுமிழ் தருபட அரவுகொ
டடலசு ரரொடம ரர்களலை கடல்கடை வழியெழு மிகுசின
விடமடை தருமிட றுடையவன் விடைமிசை வருமவ னுறைபதி
திடமலி தருமறை முறையுணர் மறையவர் நிறைதிரு மிழலையே. 1

207. தரையொடு திவிதல நலிதரு தகுதிற லுறுசல தரனது
வரையன தலைவிசை யொடுவரு திகிரியை அரிபெற அருளினன்
உரைமலி தருசுர நதிமதி பொதிசடை யவனுறை பதிமிகு
திரைமலி கடல்மண லணிதரு பெறுதிடர் வளர்திரு மிழலையே. 2

208. மலைமகள் தனையிகழ் வதுசெய்த மதியறு சிறுமன வனதுயர்
தலையினொ டழலுருவனகர மறமுனி வுசெய்தவ னுறைபதி
கலைநில வியபுல வர்களிடர் களைதரு கொடைபயில் பவர்மிகு
சிலைமலி மதிள்புடை தழுவிய திகழ்பொழில் வளர்திரு மிழலையே. 3

209. மருவலர் புரமெரி யினின்மடி தரவொரு கணைசெல நிறுவிய
பெருவலி யினனல மலிதரு கரனுர மிகுபிண மமர்வன
இருளிடை யடையுற வொடுநட விசையுறு பரனினி துறைபதி
தெருவினில் வருபெரு விழவொலி மலிதர வளர்திரு மிழலையே. 4

210. அணிபெறு வடமர நிழலினி லமர்வொடு மடியிணை யிருவர்கள்
பணிதர அறநெறி மறையொடு மருளிய பரனுறை விடமொளி
மணிபொரு வருமர கதநில மலிபுன லணைதரு வயலணி
திணிபொழில் தருமண மதுநுக ரறுபத முரல்திரு மிழலையே. 5

211. வசையறு வலிவன சரவுரு வதுகொடு நினைவரு தவமுயல்
விசையன திறன்மலை மகளறி வுறுதிற லமர்மிடல் கொடுசெய்து
அசைவில படையருள் புரிதரு மவனுறை பதியது மிகுதரு
திசையினின் மலர்குல வியசெறி பொழின்மலி தருதிரு மிழலையே. 6

212. நலமலி தருமறை மொழியொடு நதியுறு புனல்புகை யொளிமுதல்
மலரவை கொடுவழி படுதிறன் மறையவ னுயிரது கொளவரு
சலமலி தருமற லிதனுயிர் கெடவுதை செய்தவ னுறைபதி
திலகமி தெனவுல குகள்புகழ் தருபொழி லணிதிரு மிழலையே. 7

213. அரனுறை தருகயி லையைநிலை குலைவது செய்ததச முகனது
கரமிரு பதுநெரி தரவிர னிறுவிய கழலடி யுடையவன்
வரன்முறை யுலகவை தருமலர் வளர்மறை யவன்வழி வழுவிய
சிரமது கொடுபலி திரிதரு சிவனுறை பதிதிரு மிழலையே. 8

214. அயனொடு மெழிலமர் மலர்மகள் மகிழ்கண னளவிட லொழியவொர்
பயமுறு வகைதழ னிகழ்வதொர் படியுரு வதுவர வரன்முறை
சயசய வெனுமிகு துதிசெய வெளியுரு வியவவ னுறைபதி
செயநில வியமதில் மதியது தவழ்தர வுயர்திரு மிழலையே. 9

215. இகழுரு வொடுபறி தலைகொடு மிழிதொழில் மலிசமண் விரகினர்
திகழ்துவ ருடையுடல் பொதிபவர் கெடவடி யவர்மிக வருளிய
புகழுடை யிறையுறை பதிபுன லணிகடல் புடைதழு வியபுவி
திகழ்சுரர் தருநிகர் கொடையினர் செறிவொடு திகழ்திருமி ழலையே. 10

216. சினமலி கரியுரி செய்தசிவ னுறைதரு திருமி ழலையைமிகு
தனமனர் சிரபுர நகரிறை தமிழ்விர கனதுரை யொருபதும்
மனமகிழ் வொடுபயில் பவரெழின் மலர்மகள் கலைமகள் சயமகள்
இனமலி புகழ்மக ளிசைதர விருநில னிடையினி தமர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 21. திருச்சிவபுரம் : திருவிராகம். பண் – நட்டபாடை

217. புவம்வளி கனல்புனல் புவிகலை யுரைமறை திரிகுண மமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரு முயிரவை யவைதம
பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய
சிவனது சிவபுர நினைபவர் செழுநில னினில்நிலை பெறுவரே. 1

218. மலைபல வளர்தரு புவியிடை மறைதரு வழிமலி மனிதர்கள்
நிலைமலி சுரர்முத லுலகுகள் நிலைபெறு வகைநினை வொடுமிகும்
அலைகடல் நடுவறி துயிலம ரரியுரு வியல்பர னுறைபதி
சிலைமலி மதில்சிவ புரநினை பவர்திரு மகளொடு திகழ்வரே. 2

219. பழுதில கடல்புடை தழுவிய படிமுத லியவுல குகள்மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலமலி தருமுயி ரவையவை
முழுவது மழிவகை நினைவொடு முதலுரு வியல்பர முறைபதி
செழுமணி யணிசிவ புரநகர் தொழுமவர் புகழ்மிகு முலகிலே. 3

220. நறைமலி தருமள றொடுமுகை நகுமலர் புகைமிகு வளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடு மடியவர்
குறைவில பதமணை தரவருள் குணமுடை யிறையுறை வனபதி
சிறைபுன லமர்சிவ புரமது நினைபவர் செயமகள் தலைவரே. 4

221. சினமலி யறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறுவிய
மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொருள் நியதமு முணர்பவர்
தனதெழி லுருவது கொடுவடை தகுபர னுறைவது நகர்மதிள்
கனமரு வியசிவ புரநினை பவர்கலை மகள்தர நிகழ்வரே. 5

222. சுருதிகள் பலநல முதல்கலை துகளறு வகைபயில் வொடுமிகு
உருவிய லுலகவை புகழ்தர வழியொழு குமெயுறு பொறியொழி
அருதவ முயல்பவர் தனதடி யடைவகை நினையர னுறையபதி
திருவளர் சிவபுர நினைபவர் திகழ்குல னிலனிடை நிகழுமே. 6

223. கதமிகு கருவுரு வொடுபுகி ரிடவட வரைகண கணவென
மதமிகு நெடுமுக னமர்வளை மதிதிக ழெயிறத னுதிமிசை
இதமமர் புவியது நிறுவிய எழிலரி வழிபட வருள்செய்த
பதமுடை யவனமர் சிவபுர நினைபவர் நிலவுவர் படியிலே. 7

224. அசைவுறு தவமுயல் வினிலய னருளினில் வருவலி கொடுசிவன்
இசைகயி லையையெழு தருவகை யிருபது கரமவை நிறுவிய
நிசிசரன் முடியுடை தரவொரு விரல்பணி கொளுமவ னுறைபதி
திசைமலி சிவபுர நினைபவர் செழுநில னினில்நிகழ் வுடையரே. 8

225. அடல்மலி படையரி யயனொடு மறிவரி யதொரழல் மலிதரு
சுடருரு வொடுநிகழ் தரவவர் வெருவொடுதுதியது செயவெதிர்
விடமலி களநுத லமர்கண துடையுரு வெளிபடு மவன்நகர்
திடமலி பொழிலெழில் சிவபுர நினைபவர் வழிபுவி திகழுமே. 9

226. குணமறி வுகள்நிலை யிலபொரு ளுரைமரு வியபொருள் களுமில
திணமெனு மவரொடு செதுமதி மிகுசம ணருமலி தமதுகை
உணலுடை யவருணர் வருபர னுறைதரு பதியுல கினில்நல
கணமரு வியசிவ புரநினைபவரெழி லுருவுடை யவர்களே. 10

227. திகழ்சிவ புரநகர் மருவிய சிவனடி யிணைபணி சிரபுர
நகரிறை தமிழ்விர கனதுரை நலமலி யொருபதும் நவில்பவர்
நிகழ்குல நிலநிறை திருவுரு நிகரில கொடைமிகு சயமகள்
புகழ்புவி வளர்வழி யடிமையின் மிகைபுணர் தரநல மிகுவரே.
11

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. திருமறைக்காடு : திருவிராகம். பண் – நட்டபாடை

228. சிலைதனை நடுவிடை நிறுவியொர்சினமலி யரவதுகொடுதிவி
தலமலி சுரரசு ரர்களொலி சலசல கடல்கடை வுழிமிகு
கொலைமலி விடமெழஅவருடல் குலைதரவதுநுகர் பவனெழில்
மலைமலி மதில்புடை தழுவியமறைவன மமர்தரு பரமனே. 1

229. கரமுத லியஅவ யவமவை கடுவிட வரவது கொடுவரு
வரன்முறை யணிதரு மவனடல் வலிமிகு புலியத ளுடையினன்
இரவலர் துயர்கெடு வகைநினை யிமையவர் புரமெழில் பெறவளர்
மரநிகர் கொடைமனி தர்கள்பயில் மறைவன மமர்தரு பரமனே. 2

230. இழைவளர் தருமுலை மலைமக ளினிதுறை தருமெழி லுருவினன்
முழையினின் மிகுதுயி லுறுமரி முசிவொடு மெழமுள ரியொடெழு
கழைநுகர் தருகரி யிரிதரு கயிலையின் மலிபவ னிருளுறும்
மழைதவழ் தருபொழில் நிலவிய மறைவன மமர்தரு பரமனே. 3

231. நலமிகு திருவித ழியின்மலர் நகுதலை யொடுகன கியின்முகை
பலசுர நதிபட அரவொடு மதிபொதி சடைமுடி யினன்மிகு
தலநில வியமனி தர்களொடு தவமுயல் தருமுனி வர்கள்தம
மலமறு வகைமன நினைதரு மறைவன மமர்தரு பரமனே. 4

232. கதிமலி களிறது பிளிறிட வுரிசெய்த அதிகுண னுயர்பசு
பதியதன் மிசைவரு பசுபதி பலகலை யவைமுறை முறையுணர்
விதியறி தருநெறி யமர்முனி கணனொடு மிகுதவ முயல்தரு
மதிநிபு ணர்கள்வழி படவளர் மறைவன மமர்தரு பரமனே. 5

233. கறைமலி திரிசிகை படையடல் கனல்மழு வெழுதரவெறிமறி
முறைமுறை யொலிதமருகமுடை தலைமுகிழ் மலிகணி வடமுகம்
உறைதரு கரனுல கினிலுய ரொளிபெறு வகைநினை வொடுமலர்
மறையவன் மறைவழி வழிபடு மறைவன மமர்தரு பரமனே. 6

234. இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு
பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட
இருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவ னினமலர்
மருவிய அறுபத மிசைமுரல் மறைவன மமர்தரு பரமனே. 7

235. சனம்வெரு வுறவரு தசமுக னொருபது முடியொடு மிருபது
கனமரு வியபுய நெரிவகை கழலடி யிலொர்விர னிறுவினன்
இனமலி கணநிசி சரன்மகிழ்வுறவருள் செய்தகருணையனென்
மனமகிழ் வொடுமறை முறையுணர் மறைவன மமர்தரு பரமனே. 8

236. அணிமலர் மகள்தலை மகனய னறிவரி யதொர்பரி சினிலெரி
திணிதரு திரளுரு வளர்தர அவர்வெரு வுறலொடு துதிசெய்து
பணியுற வெளியுரு வியபர னவனுரை மலிகடல் திரளெழும்
மணிவள ரொளிவெயில் மிகுதரு மறைவன மமர்தரு பரமனே.9

237. இயல்வழி தரவிது செலவுற இனமயி லிறகுறு தழையொடு
செயல்மரு வியசிறு கடமுடி யடைகையர் தலைபறி செய்துதவம்
முயல்பவர் துவர்பட முடல்பொதி பவரறி வருபர னவனணி
வயலினில் வளைவள மருவிய மறைவன மமர்தரு பரமனே. 10

238. வசையறு மலர்மகள் நிலவிய மறைவன மமர்பர மனைநினை
பசையொடு மிகுகலை பலபயில் புலவர்கள் புகழ்வழி வளர்தரு
இசையமர் கழுமல நகரிறை தமிழ்விர கனதுரை யியல்வல
இசைமலி தமிழொரு பதும்வல வவருல கினிலெழில் பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 23. திருக்கோலக்கா : பண் – தக்கராகம்

239. மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ. 1

240. பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை யுலக முய்யவே. 2

241. பூணற் பொறிகொ ளரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே. 3

242. தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ண மேத்தி வாழ்மினே. 4

243. மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய எரித்த எந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே. 5

244. வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாத மடைந்து வாழ்மினே. 6

245. நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் பக்கல் துயர மில்லையே. 7

246. எறியார் கடல்சூ ழிலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே. 8

247. நாற்ற மலர்மே லயனு நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றான் பாத மேத்தி வாழ்மினே. 9

248. பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே. 10

249. நலங்கொள் காழி ஞான சம்பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. சீகாழி : பண் – தக்கராகம்

250. பூவார் கொன்றைப் புரிபுன் சடையீசா
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்
பாவா ரின்சொற் பயிலும் பரமரே. 1

251. எந்தை யென்றங் கிமையோர் புகுந்தீண்டிக்
கந்த மாலை கொடுசேர் காழியார்
வெந்த நீற்றர் விமல ரவர்போலாம்
அந்தி நட்ட மாடும் மடிகளே. 2

252. தேனை வென்ற மொழியா ளொருபாகங்
கான மான்கைக் கொண்ட காழியார்
வான மோங்கு கோயி லவர்போலாம்
ஆன வின்ப மாடும் மடிகளே. 3

253. மாணா வென்றிக் காலன் மடியவே
காணா மாணிக் களித்த காழியார்
நாணார் வாளி தொட்டா ரவர்போலாம்
பேணார் புரங்க ளட்ட பெருமானே. 4

254. மாடே ஓத மெறிய வயற்செந்நெற்
காடே றிச்சங் கீனுங் காழியார்
வாடா மலராள் பங்க ரவர்போலாம்
ஏடார் புரமூன் றெரித்த இறைவரே. 5

255. கொங்கு செருந்தி கொன்றை மலர்கூடக்
கங்கை புனைந்த சடையார் காழியார்
அங்க ணரவ மாட்டு மவர்போலாஞ்
செங்க ணரக்கர் புரத்தை யெரித்தாரே. 6

256. கொல்லை விடைமுன் பூதங் குனித்தாடுங்
கல்ல வடத்தை யுகப்பார் காழியார்
அல்ல விடத்து நடந்தா ரவர்போலாம்
பல்ல விடத்தும் பயிலும் பரமரே. 7

257. எடுத்த அரக்கன் நெரிய விரலூன்றிக்
கடுத்து முரிய அடர்த்தார் காழியார்
எடுத்த பாடற் கிரங்கு மவர்போலாம்
பொடிக்கொள் நீறு பூசும் புனிதரே. 8

258. ஆற்ற லுடைய அரியும் பிரமனுந்
தோற்றங் காணா வென்றிக் காழியார்
ஏற்ற மேறங் கேறு மவல்போலாங்
கூற்ற மறுகக் குமைத்த குழகரே. 9

259. பெருக்கப் பிதற்றுஞ் சமணர் சாக்கியர்
கரக்கு முரையை விட்டார் காழியார்
இருக்கின் மலிந்த இறைவ ரவர்போலாம்
அருப்பின் முலையாள் பங்கத் தையரே. 10

260. காரார் வயல்சூழ் காழிக் கோன்றனைச்
சீரார் ஞான சம்பந் தன்சொன்ன
பாரார் புகழப் பரவ வல்லவர்
ஏரார் வானத் தினிதா யிருப்பரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 25. திருச்செம்பொன்பள்ளி : பண் – தக்கராகம்

261. மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேல் மன்னும் பாவமே. 1

262. வாரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம் மீசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே. 2

263. வரையார் சந்தோ டகிலும் வருபொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி மேவிய
நரையார் விடையொன் றூரு நம்பனை
உரையா தவர்மே லொழியா வூனமே. 3

264. மழுவா ளேந்தி மாதோர் பாகமாய்ச்
செழுவார் செம்பொன் பள்ளி மேவிய
எழிலார் புரிபுன் சடையெம் மிறைவனைத்
தொழுவார் தம்மேற் றுயர மில்லையே. 4

265. மலையான் மகளோ டுடனாய் மதிளெய்த
சிலையார் செம்பொன் பள்ளி யானையே
இலையார் மலர்கொண் டெல்லி நண்பகல்
நிலையாய் வணங்க நில்லா வினைகளே. 5

266. அறையார் புனலோ டகிலும் வருபொன்னிச்
சிறையார் செம்பொன் பள்ளி மேவிய
கறையார் கண்டத் தீசன் கழல்களை
நிறையால் வணங்க நில்லா வினைகளே. 6

267. பையா ரரவே ரல்கு லாளொடும்
செய்யார் செம்பொன் பள்ளி மேவிய
கையார் சூல மேந்து கடவுளை
மெய்யால் வணங்க மேவா வினைகளே. 7

268. வானார் திங்கள் வளர்புன் சடைவைத்துத்
தேனார் செம்பொன் பள்ளி மேவிய
ஊனார் தலையிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலே யடைந்து வாழ்மினே. 8

269. காரார் வண்ணன் கனகம் அனையானும்
தேரார் செம்பொன் பள்ளி மேவிய
நீரார் நிமிர்புன் சடையெந் நிமலனை
ஓரா தவர்மே லொழியா வூனமே. 9

270. மாசா ருடம்பர் மண்டைத் தேரரும்
பேசா வண்ணம் பேசித் திரியவே
தேசார் செம்பொன் பள்ளி மேவிய
ஈசா என்ன நில்லா இடர்களே. 10

271. நறவார் புகலி ஞான சம்பந்தன்
செறுவார் செம்பொன் பள்ளி மேயானைப்
பெறுமா றிசையாற் பாட விவைபத்தும்
உறுமா சொல்ல வோங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 26. திருப்புத்தூர் : பண் – தக்கராகம்

272. வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையு மிறையாரே. 1

273. வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்
ஊன மின்றி யுறைவா ரவர்போலும்
ஏன முள்ளு மெயிறும் புனைவாரே. 2

274. பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்
தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்
ஓங்கு கோயி லுறைவா ரவர்போலும்
தாங்கு திங்கள் தவழ்புன் சடையாரே. 3

275. நாற விண்ட நறுமா மலர்கவ்வித்
தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்
ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. 4

276. இசைவி ளங்கு மெழில்சூழ்ந் தியல்பாகத்
திசைவி ளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்ப்
பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்
வசைவி ளங்கும் வடிசேர் நுதலாரே. 5

277. வெண்ணி றத்த விரையோ டலருந்தித்
தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்
ஒண்ணி றத்த ஒளியா ரவர்போலும்
வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே. 6

278. நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்கும்
செய்கண் மல்கு சிவனார் திருப்புத்தூர்த்
தையல் பாக மகிழ்ந்தா ரவர்போலும்
மையுள் நஞ்சு மருவு மிடற்றாரே. 7

279. கருக்க மெல்லாங் கமழும் பொழிற்சோலைத்
திருக்கொள் செம்மை விழவார் திருப்புத்தூர்
இருக்க வல்ல இறைவ ரவர்போலும்
அரக்க னொல்க விரலா லடர்த்தாரே. 8

280. மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை
தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்
பெருகி வாழும் பெருமா னவன்போலும்
பிரமன் மாலு மறியாப் பெரியோனே. 9

281. கூறை போர்க்குந் தொழிலா ரமண்கூறல்
தேறல் வேண்டா தெளிமின் திருப்புத்தூர்
ஆறு நான்கு மமர்ந்தா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. 10

282. நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்றும்
அல்லல் தீரு மவல மடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 27. திருப்புன்கூர் : பண் – தக்கராகம்

283. முந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனுர் திருப்புன்கூர்
அந்த மில்லா வடிக ளவர்போலும்
கந்த மல்கு கமழ்புன் சடையாரே. 1

284. மூவ ராய முதல்வர் முறையாலே
தேவ ரெல்லாம் வணங்குந் திருப்புன்கூர்
ஆவ ரென்னு மடிக ளவர்போலும்
ஏவி னல்லா ரெயில்மூன் றெரித்தாரே. 2

285. பங்க யங்கண் மலரும் பழனத்துச்
செங்க யல்கள் திளைக்குந் திருப்புன்கூர்க்
கங்கை தங்கு சடையா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையும் மிறையாரே. 3

286. கரையு லாவு கதிர்மா மணிமுத்தம்
திரையு லாவு வயல்சூழ் திருப்புன்கூர்
உரையி னல்ல பெருமா னவர்போலும்
விரையி னல்ல மலர்ச்சே வடியாரே. 4

287. பவள வண்ணப் பரிசார் திருமேனி
திகழும் வண்ண முறையுந் திருப்புன்கூர்
அழக ரென்னு மடிக ளவர்போலும்
புகழ நின்ற புரிபுன் சடையாரே. 5

288. தெரிந்தி லங்கு கழுநீர் வயற்செந்நெல்
திருந்த நின்ற வயல்சூழ் திருப்புன்கூர்ப்
பொருந்தி நின்ற அடிக ளவர்போலும்
விரிந்தி லங்கு சடைவெண் பிறையாரே. 6

289. பாரும் விண்ணும் பரவித் தொழுதேத்தும்
தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்
ஆர நின்ற அடிக ளவர்போலும்
கூர நின்ற எயில்மூன் றெரித்தாரே. 7

290. மலை யதனா ருடைய மதில்மூன்றும்
சிலை யதனா லெரித்தார் திருப்புன்கூர்த்
தலை வர்வல்ல அரக்கன் தருக்கினை
மலை யதனா லடர்த்து மகிழ்ந்தாரே. 8

291. நாட வல்ல மலரான் மாலுமாய்த்
தேட நின்ற ருறையுந் திருப்புன்கூர்
ஆட வல்ல அடிக ளவர்போலும்
பாட லாடல் பயிலும் பரமரே. 9

292. குண்டு முற்றிக் கூறை யின்றியே
பிண்ட முண்ணும் பிராந்தர் சொற்கொளேல்
வண்டு பாட மலரார் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபாலி வேடமே. 10

293. மாட மல்கு மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வ ருறையுந் திருப்புன்கூர்
நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருச்சோற்றுத்துறை : பண் – தக்கராகம்

294. செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னா தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

295. பாலு நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலு நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 2

296. செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயஎம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

297. பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

298. பிறையு மரவும் புனலுஞ் சடைவைத்து
மறையு மோதி மயான மிடமாக
உறையுஞ் செல்வ முடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

299. துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 6

300. சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

301. பெண்ணோர் பாக முடையார் பிறைச்சென்னிக்
கண்ணோர் பாகங் கலந்த நுதலினர்
எண்ணா தரக்க னெடுக்க வூன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

302. தொழுவா ரிருவர் துயரம் நீங்கவே
அழலா யோங்கி யருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியால் மிக்கஎம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

303. கோது சாற்றித் திரிவா ரமண்குண்டர்
ஓது மோத்தை யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

304. அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்
சிந்தை செய்ம்மி னடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 29. திருநறையூர்ச்சித்தீச்சரம் : பண் – தக்கராகம்

305. ஊரு லாவு பலிகொண் டுலகேத்த
நீரு லாவு நிமிர்புன் சடையண்ணல்
சீரு லாவு மறையோர் நறையூரில்
சேருஞ் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 1

306. காடு நாடுங் கலக்கப் பலிநண்ணி
ஓடு கங்கை யொளிர்புன் சடைதாழ
வீடு மாக மறையோர் நறையூரில்
நீடுஞ் சித்தீச் சரமே நினைநெஞ்சே. 2

307. கல்வி யாளர் கனகம் அழல்மேனி
புல்கு கங்கை புரிபுன் சடையானூர்
மல்கு திங்கட் பொழில்சூழ் நறையூரில்
செல்வர் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 3

308. நீட வல்ல நிமிர்புன் சடைதாழ
ஆட வல்ல அடிக ளிடமாகும்
பாடல் வண்டு பயிலு நறையூரில்
சேடர் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 4

309. உம்ப ராலு முலகின் னவராலும்
தம்பெ ருமை யளத்தற் கரியானூர்
நண்பு லாவு மறையோர் நறையூரில்
செம்பொன் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 5

310. கூரு லாவு படையான் விடையேறி
போரு லாவு மழுவா னனலாடி
பேரு லாவு பெருமான் நறையூரில்
சேருஞ் சித்தீச் சரமே யிடமாமே. 6

311. அன்றி நின்ற அவுணர் புரமெய்த
வென்றி வில்லி விமலன் விரும்புமூர்
மன்றில் வாச மணமார் நறையூரில்
சென்று சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 7

312. அரக்க னாண்மை யழிய வரைதன்னால்
நெருக்க வூன்றும் விரலான் விரும்புமூர்
பரக்குங் கீர்த்தி யுடையார் நறையூரில்
திருக்கொள் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 8

313. ஆழி யானு மலரி னுறைவானும்
ஊழி நாடி யுணரார் திரிந்துமேல்
சூழு நேட வெரியா மொருவன்சீர்
நீழல் சித்தீச் சரமே நினைநெஞ்சே. 9

314. மெய்யின் மாசர் விரிநுண் துகிலிலார்
கையி லுண்டு கழறு முரைகொள்ளேல்
உய்ய வேண்டி லிறைவன் நறையூரில்
செய்யுஞ் சித்தீச் சரமே தவமாமே. 10

315. மெய்த்து லாவு மறையோர் நறையூரில்
சித்தன் சித்தீச் சரத்தை யுயர்காழி
அத்தன் பாத மணிஞா னசம்பந்தன்
பத்தும் பாடப் பறையும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 30. திருப்புகலி : பண் – தக்கராகம்

316. விதியாய்விளை வாய்விளை வின்பய னுகிக்
கொதியாவரு கூற்றை யுதைத்தவர் சேரும்
பதியாவது பங்கய நின்றல ரத்தேன்
பொதியார்பொழில் சூழ்புக லிந்நகர் தானே. 1

317. ஒன்னார்புர மூன்று மெரித்த ஒருவன்
மின்னாரிடை யாளொடுங் கூடிய வேடந்
தன்னாலுறை வாவது தண்கடல் சூழ்ந்த
பொன்னார்வயற் பூம்புக லிந்நகர் தானே. 2

318. வலியன்மதி செஞ்சடை வைத்தம ணாளன்
புலியின் னதள் கொண்டரை யார்த்தபு னிதன்
மலியும்பதி மாமறை யோர்நிறைந் தீண்டிப்
பொலியும்புனற் பூம்புக லிந்நகர் தானே. 3

319. கயலார்தடங் கண்ணி யொடும்மெரு தேறி
அயலார்கடை யிற்பலி கொண்டவ ழகன்
இயலாலுறை யும்மிட மெண்டிசை யோர்க்கும்
புயலார்கடற் பூம்புக லிந்நகர் தானே. 4

320. காதார்கன பொற்குழை தோடதி லங்கத்
தாதார்மலர் தண்சடை யேறமு டித்து
நாதானுறை யும்மிட மாவது நாளும்
போதார்பொழிற் பூம்புக லிந்நகர் தானே. 5

321. வலமார்படை மான்மழு வேந்திய மைந்தன்
கலமார்கடல் நஞ்சமு துண்டக ருத்தன்
குலமார்பதி கொன்றைகள் பொன்சொரி யத்தேன்
புலமார்வயற் பூம்புக லிந்நகர் தானே. 6

322. கறுத்தான்கன லால்மதில் மூன்றையும் வேவச்
செறுத்தான்திக ழுங்கடல் நஞ்சமு தாக
அறுத்தானயன் தன்சிர மைந்திலு மொன்றைப்
பொறுத்தானிடம் பூம்புக லிந்நகர் தானே. 7

323. தொழிலால்மிகு தொண்டர்கள் தோத்திரஞ் சொல்ல
எழிலார்வரை யாலன்ற ரக்கனைச் செற்ற
கழலானுறை யும்மிடங் கண்டல்கள் மிண்டிப்
பொழிலால்மலி பூம்புக லிந்நகர் தானே. 8

324. மாண்டார்சுட லைப்பொடி பூசிம யானத்
தீண்டாநட மாடிய வேந்தன்றன் மேனி
நீண்டானிரு வர்க்கெரி யாயர வாரம்
பூண்டானகர் பூம்புக லிந்நகர் தானே. 9

325. உடையார்துகில் போர்த்துழல் வார்சமண் கையர்
அடையாதன சொல்லுவ ராதர்க ளோத்தைக்
கிடையாதவன் தன்நகர் நன்மலி பூகம்
புடையார்தரு பூம்புக லிந்நகர் தானே. 10

326. இரைக்கும்புனல் செஞ்சடை வைத்தஎம் மான்றன்
புரைக்கும்பொழிற் பூம்புக லிந்நகர் தன்மேல்
உரைக்குந்தமிழ் ஞானசம் பந்தனொண் மாலை
வரைக்குந்தொழில் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 31. திருக்குரங்கணில்முட்டம் : பண் – தக்கராகம்

327. விழுநீர்மழு வாட்படை யண்ணல் விளங்கும்
கழுநீர்குவ ளைம்மல ரக்கயல் பாயும்
கொழுநீர்வயல் சூழ்ந்தகு ரங்கணில் முட்டம்
தொழுநீர்மையர் தீதுறு துன்ப மிலரே. 1

328. விடைசேர்கொடி யண்ணல் விளங்குயர் மாடக்
கடைசேர்கரு மென்குளத் தோங்கிய காட்டில்
குடையார்புனல் மல்குகு ரங்கணில் முட்டம்
உடையானெனை யாளுடை யெந்தை பிரானே. 2

329. சூலப்படை யான்விடை யான்சுடு நீற்றான்
காலன்றனை ஆருயிர் வவ்விய காலன்
கோலப்பொழில் சூழ்ந்தகு ரங்கணில் முட்டத்
தேலங்கமழ் புன்சடை யெந்தை பிரானே. 3.

330. வாடாவிரி கொன்றைவ லத்தொரு காதில்
தோடார்குழை யானல பாலன நோக்கிக்
கூடாதன செய்தகு ரங்கணில் முட்டம்
ஆடாவரு வாரவ ரன்புடை யாரே. 4

331. இறையார்வளை யாளையொர் பாகத்த டக்கிக்
கறையார்மிடற் றான்கரி கீறிய கையான்
குறையார்மதி சூடிகு ரங்கணில் முட்டத்
துறைவானெமை யாளுடை யொண்சுட ரானே. 5

332. பலவும்பய னுள்ளன பற்றுமொ ழிந்தோம்
கலவம்மயில் காமுறு பேடையொ டாடிக்
குலவும்பொழில் சூழ்ந்தகு ரங்கணில் முட்டம்
நிலவும்பெரு மானடி நித்த நினைந்தே. 6

333. மாடார்மலர்க் கொன்றைவ ளர்சடை வைத்துத்
தோடார்குழை தானொரு காதி லிலங்கக்
கூடார்மதி லெய்துகு ரங்கணில் முட்டத்
தாடாரர வம்மரை யார்த்தமர் வானே. 7

334. மையார்நிற மேனிய ரக்கர்தங் கோனை
உய்யாவகை யாலடர்த் தின்னருள் செய்த
கொய்யார்மலர் சூடிகு ரங்கணில் முட்டம்
கையாற்றொழு வார்வினை காண்ட லரிதே. 8

335. வெறியார்மலர்த் தாமரை யானொடு மாலும்
அறியாதசைந் தேத்தவோ ராரழ லாகும்
குறியால்நிமிர்ந் தான்றன்கு ரங்கணில் முட்டம்
நெறியாற்றொழு வார்வினை நிற்ககி லாவே. 9

336. கழுவார்துவ ராடைக லந்துமெய் போர்க்கும்
வழுவாச்சமண் சாக்கியர் வாக்கவை கொள்ளேல்
குழுமின்சடை யண்ணல்கு ரங்கணில் முட்டத்
தெழில்வெண்பிறை யானடி சேர்வ தியல்பே. 10

337. கல்லார்மதிற் காழியுள் ஞானசம் பந்தன்
கொல்லார்மழு வேந்திகு ரங்கணில் முட்டம்
சொல்லார்தமிழ் மாலைசெ விக்கினி தாக
வல்லார்க்கெளி தாம்பிற வாவகை வீடே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 32. திருஇடைமருதூர் : பண் – தக்கராகம்

338. ஓடேகல னுண்பது மூரிடு பிச்சை
காடேயிட மாவது கல்லால் நிழற்கீழ்
வாடாமுலை மங்கையுந் தானு மகிழ்ந்
தீடாவுறை கின்ற இடைமரு தீதோ. 1

339. தடங்கொண்டதொர் தாமரைப் பொன்முடி தன்மேல்
குடங்கொண்டடி யார்குளிர் நீர்சுமந் தாட்டப்
படங்கொண்டதொர் பாம்பரை யார்த்த பரமன்
இடங்கொண்டிருந் தான்றன் இடைமரு தீதோ. 2

340. வெண்கோவணங் கொண்டொரு வெண்டலை யேந்தி
அங்கோல்வளை யாளையொர் பாக மமர்ந்து
பொங்காவரு காவிரிக் கோலக் கரைமேல்
எங்கோனுறை கின்ற இடைமரு தீதோ. 3

341. அந்தம்மறி யாதஅ ருங்கல முந்திக்
கந்தங்கமழ் காவிரிக் கோலக் கரைமேல்
வெந்தபொடி பூசிய் வேத முதல்வன்
எந்தையுறை கின்ற இடைமரு தீதோ. 4

342. வாசங்கமழ் மாமலர்ச் சோலையில் வண்டே
தேசம்புகுந் தீண்டியொர் செம்மை யுடைத்தாய்ப்
பூசம்புகுந் தாடிப் பொலிந்தழ காய
ஈசனுறை கின்ற இடைமரு தீதோ. 5

343. வன்புற்றிள நாக மசைத்தழ காக
என்பிற்பல மாலையும் பூண்டெரு தேறி
அன்பிற்பிரி யாதவ ளோடு முடனாய்
இன்புற்றிருந் தான்ற னிடைமரு தீதோ. 6

344. தேக்குந்திமி லும்பல வுஞ்சுமந் துந்திப்
போக்கிப்புறம் பூச லடிப்ப வருமால்
ஆர்க்குந்திரைக் காவிரிக் கோலக் கரைமேல்
ஏற்கவிருந் தான்ற னிடைமரு தீதோ. 7

345. பூவார்குழ லாரகில் கொண்டு புகைப்ப
ஓவாதடி யாரடி யுள்குளிர்ந் தேத்த
ஆவாவரக் கன்றனை யாற்ற லழித்த
ஏவார்சிலை யான்ற னிடைமரு தீதோ. 8

346. முற்றாததொர் பால்மதி சூடு முதல்வன்
நற்றாமரை யானொடு மால்நயந் தேத்தப்
பாற்றோளியுந் தானும் பொலிந்தழ காக
எற்றேயுறை கின்ற இடைமரு தீதோ. 9

347. சிறுதேரருஞ் சில்சம ணும்புறங் கூற
நெறியேபல பத்தர்கள் கைதொழு தேத்த
வெறியாவரு காவிரிக் கோலக் கரைமேல்
எறியார்மழு வாள னிடைமரு தீதோ. 10

348. கண்ணார்கமழ் காழியுள் ஞானசம் பந்தன்
எண்ணார்புக ழெந்தை யிடைமரு தின்மேல்
பண்ணோடிசை பாடிய பத்தும்வல் லார்கள்
விண்ணோருல கத்தினில் வீற்றிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 33. திருஅன்பிலாலந்துறை : பண் – தக்கராகம்

349. கணைநீடெரி மாலர வம்வரை வில்லா
இணையாவெயில் மூன்று மெரித்த இறைவர்
பிணைமாமயி லுங்குயில் சேர்மட வன்னம்
அணையும்பொழி லன்பிலா லந்துறை யாரே. 1

350. சடையார்சது ரன்முதி ராமதி சூடி
விடையார்கொடி யொன்றுடை யெந்தை விமலன்
கிடையாரொலி யோத்தர வத்திசை கிள்ளை
அடையார்பொழி லன்பிலா லந்துறை யாரே. 2

351. ஊரும்மர வஞ்சடை மேலுற வைத்துப்
பாரும்பலி கொண்டொலி பாடும் பரமர்
நீருண்கய லும்வயல் வாளை வராலோ
டாரும்புன லன்பிலா லந்துறை யாரே. 3

352. பிறையும்மர வும்முற வைத்த முடிமேல்
நறையுண்டெழு வன்னியு மன்னு சடையார்
மறையும்பல வேதிய ரோத ஒலிசென்
றறையும்புன லன்பிலா லந்துறை யாரே. 4

353. நீடும்புனற் கங்கையுந் தங்க முடிமேற்
கூடும்மலை யாளொரு பாக மமர்ந்தார்
மாடும்முழ வம்மதி ரம்மட மாதர்
ஆடும்பதி யன்பிலா லந்துறை யாரே. 5

354. நீறார்திரு மேனிய ரூனமி லார்பால்
ஊறார்சுவை யாகிய வும்பர் பெருமான்
வேறாரகி லும்மிகு சந்தன முந்தி
ஆறார்வய லன்பிலா லந்துறை யாரே. 6

355. செடியார்தலை யிற்பலி கொண்டினி துண்ட
படியார்பர மன்பர மேட்டிதன் சீரைக்
கடியார்மல ரும்புனல் தூவிநின் றேத்தும்
அடியார்தொழு மன்பிலா லந்துறை யாரே. 7

356. விடத்தார் திகழும்மிட றன்நட மாடி
படத்தாரர வம்விர வுஞ்சடை யாதி
கொடித்தேரிலங் கைக்குலக் கோன்வரை யார
அடர்த்தாரரு ளன்பிலா லந்துறை யாரே. 8

357. வணங்கிம்மலர் மேலய னுந்நெடு மாலும்
பிணங்கியறி கின்றிலர் மற்றும் பெருமை
சுணங்கும்முகத் தம்முலை யாளொரு பாகம்
அணங்குந்திக ழன்பிலா லந்துறை யாரே. 9

358. தறியார் துகில் போர்த்துழல் வார்சமண் கையர்
நெறியாவுண ராநிலை கேடினர் நித்தல்
வெறியார்மலர் கொண்டடி வீழு மவரை
அறிவாரவ ரன்பிலா லந்துறை யாரே. 10

359. அரவார்புன லன்பிலா லந்துறை தன்மேல்
கரவாதவர் காழியுள் ஞானசம் பந்தன்
பரவார்தமிழ் பத்திசை பாடவல் லார்போய்
விரவாகுவர் வானிடை வீடெளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 34. சீகாழி : பண் – தக்கராகம்

360. அடலே றமருங் கொடியண்ணல்
மடலார் குழலா ளொடுமன்னுங்
கடலார் புடைசூழ் தருகாழி
தொடர்வா ரவர்தூ நெறியாரே. 1

361. திரையார் புனல்சூ டியசெல்வன்
வரையார் மகளோ டுமகிழ்ந்தான்
கரையார் புனல்சூழ் தருகாழி
நிரையார் மலர்தூ வுமினினறே. 2

362. இடியார் குரலே றுடையெந்தை
துடியா ரிடையா ளொடுதுன்னுங்
கடியார் பொழில்சூழ் தருகாழி
அடியா ரறியா ரவலம்மே. 3

363. ஒளியார் விடமுண் டவொருவன்
அளியார் குழல்மங் கையொடன்பாய்க்
களியார் பொழில்சூழ் தருகாழி
எளிதா மதுகண் டவரின்பே. 4

364. பனியார் மலரார் தருபாதன்
முனிதா னுமையோ டுமுயங்கிக்
கனியார் பொழில்சூழ் தருகாழி
இனிதா மதுகண் டவரீடே. 5

365. கொலையார் தருகூற் றமுதைத்து
மலையான் மகளோ டுமகிழ்ந்தான்
கலையார் தொழுதேத் தியகாழி
தலையாற் றொழுவார் தலையாரே. 6

366. திருவார் சிலையா லெயிலெய்து
உருவா ருமையோ டுடனானான்
கருவார் பொழில்சூழ் தருகாழி
மருவா தவர்வான் மருவாரே. 7

367. அரக்கன் வலியொல் கவடர்த்து
வரைக்கும் மகளோ டுமகிழ்ந்தான்
சுரக்கும் புனல்சூழ் தருகாழி
நிரக்கும் மலர்தூ வுநினைந்தே. 8

368. இருவர்க் கெரியா கிநிமிர்ந்தான்
உருவிற் பெரியா ளொடுசேருங்
கருநற் பரவை கமழ்காழி
மருவப் பிரியும் வினைமாய்ந்தே. 9

369. சமண்சாக் கியர்தா மலர்தூற்ற
அமைந்தா னுமையோ டுடனன்பாய்க்
கமழ்ந்தார் பொழில்சூழ் தருகாழி
சுமந்தார் மலர்தூ வுதல்தொண்டே. 10

370. நலமா கியஞா னசம்பந்தன்
கலமார் கடல்சூழ் தருகாழி
நிலையா கநினைந் தவர்பாடல்
வலரா னவர்வா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 35. திருவீழிமிழலை : பண் – தக்கராகம்

371. அரையார் விரிகோ வண ஆடை
நரையார் விடையூர் திநயந்தான்
விரையார் பொழில்வீ ழிம்மிழலை
உரையா லுணர்வா ருயர்வாரே. 1

372. புனைதல் புரிபுன் சடைதன்மேல்
கனைதல் லொருகங் கைகரந்தான்
வினையில் லவர்வீ ழிம்மிழலை
நினைவில் லவர்நெஞ் சமுநெஞ்சே. 2

373. அழவல் லவரா டியும்பாடி
எழவல் லவரெந் தையடிமேல்
விழவல் லவர்வீ ழிம்மிழலை
தொழவல் லவர்நல் லவர்தொண்டே. 3

374. உரவம் புரிபுன் சடைதன்மேல்
அரவம் மரையார்த் தவழகன்
விரவும் பொழில்வீ ழிம்மிழலை
பரவும் மடியா ரடியாரே. 4

375. கரிதா கியநஞ் சணிகண்டன்
வரிதா கியவண் டறைகொன்றை
விரிதார் பொழில்வீ ழிம்மிழலை
உரிதா நினைவா ருயர்வாரே. 5

376. சடையார் பிறையான் சரிபூதப்
படையான் கொடிமே லதொர்பைங்கண்
விடையா னுறைவீ ழிம்மிழலை
அடைவா ரடியா ரவர்தாமே. 6

377. செறியார் கழலுஞ் சிலம்பார்க்க
நெறியார் குழலா ளொடுநின்றான்
வெறியார் பொழில்வீ ழிம்மிழலை
அறிவா ரவலம் மறியாரே. 7

378. உளையா வலியொல் கவரக்கன்
வளையா விரலூன் றியமைந்தன்
விளையார் வயல்வீ ழிம்மிழலை
அளையா வருவா ரடியாரே. 8

379. மருள்செய் திருவர் மயலாக
அருள்செய் தவனா ரழலாகி
வெருள்செய் தவன்வீ ழிம்மிழலை
தெருள்செய் தவர்தீ வினைதேய்வே. 9

380. துளங்குந் நெறியா ரவர்தொன்மை
வளங்கொள் ளன்மின்புல் லமண்தேரை
விளங்கும் பொழில்வீ ழிம்மிழலை
உளங்கொள் பவர்தம் வினையோய்வே. 10

381. நளிர்கா ழியுள்ஞா னசம்பந்தன்
குளிரார் சடையா னடிகூற
மிளிரார் பொழில்வீ ழிம்மிழலை
கிளர்பா டல்வல்லார்க் கிலைகேடே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 36. திருவையாறு : பண் – தக்கராகம்

382. கலையார் மதியோ டுரநீரும்
நிலையார் சடையா ரிடமாகும்
மலையா ரமுமா மணிசந்தோ
டலையார் புனல்சே ருமையாறே. 1

383. மதியொன் றியகொன் றைவடத்தன்
மதியொன் றவுதைத் தவர்வாழ்வும்
மதியின் னொடுசேர் கொடிமாடம்
மதியம் பயில்கின் றவையாறே. 2

384. கொக்கின் னிறகின் னொடுவன்னி
புக்க சடையார்க் கிடமாகும்
திக்கின் னிசைதே வர்வணங்கும்
அக்கின் னரையா ரதையாறே. 3

385. சிறைகொண் டபுரம் மவைசிந்தக்
கறைகொண் டவர்கா தல்செய்கோயில்
மறைகொண் டநல்வா னவர்தம்மில்
அறையும் மொலிசே ருமையாறே. 4

386. உமையா ளொருபா கமதாகச்
சமைவா ரவர்சார் விடமாகும்
அமையா ருடல்சோர் தரமுத்தம்
அமையா வருமந் தணையாறே. 5

387. தலையின் தொடைமா லையணிந்து
கலைகொண் டதொர்கை யினர்சேர்வாம்
நிலைகொண் டமனத் தவர்நித்தம்
மலர்கொண் டுவணங் குமையாறே. 6

388. வரமொன் றியமா மலரோன்றன்
சிரமொன் றையறுத் தவர்சேர்வாம்
வரைநின் றிழிவார் தருபொன்னி
அரவங் கொடுசே ருமையாறே. 7

389. வரையொன் றதெடுத் தவரக்கன்
சிரமங் கநெரித் தவர்சேர்வாம்
விரையின் மலர்மே தகுபொன்னித்
திரைதன் னொடுசே ருமையாறே. 8

390 சங்கக் கயனும் மறியாமைப்
பொங்குஞ் சுடரா னவர்கோயில்
கொங்கிற் பொலியும் புனல்கொண்டு
அங்கிக் கெதிர்காட் டுமையாறே. 9

391. துவரா டையர்தோ லுடையார்கள்
கவர்வாய் மொழிகா தல்செய்யாதே
தவரா சர்கள்தா மரையானோ
டவர்தா மணையந் தணையாறே. 10

392. கலையார் கலிக்கா ழியர்மன்னன்
நலமார் தருஞா னசம்பந்தன்
அலையார் புனல்சூ ழுமையாற்றைச்
சொலுமா லைவல்லார் துயர்வீடே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 37. திருப்பனையூர் : பண் – தக்கராகம்

393. அரவச் சடைமேல் மதிமத்தம்
விரவிப் பொலிகின் றவனூராம்
நிரவிப் பலதொண் டர்கள்நாளும்
பரவிப் பொலியும் பனையூரே. 1

394. எண்ணொன் றிநினைந் தவர்தம்பால்
உண்ணின் றுமகிழ்ந் தவனூராம்
கண்ணின் றெழுசோ லையில்வண்டு
பண்ணின் றொலிசெய் பனையூரே. 2

395. அலரும் மெறிசெஞ் சடைதன்மேல்
மலரும் பிறையொன் றுடையானூர்
சிலரென் றுமிருந் தடிபேணப்
பலரும் பரவும் பனையூரே. 3

396. இடியார் கடல்நஞ் சமுதுண்டு
பொடியா டியமே னியினானூர்
அடியார் தொழமன் னவரேத்தப்
படியார் பணியும் பனையூரே. 4

397. அறையார் கழல்மே லரவாட
இறையார் பலிதேர்ந் தவனூராம்
பொறையார் மிகுசீர் விழமல்கப்
பறையா ரொலிசெய் பனையூரே. 5

398. அணியார் தொழவல் லவரேத்த
மணியார் மிடறொன் றுடையானூர்
தணியார் மலர்கொண் டிருபோதும்
பணிவார் பயிலும் பனையூரே. 6

399. அடையா தவர்மூ வெயில்சீறும்
விடையான் விறலார் கரியின்தோல்

உடையா னவனென் பலபூதப்
படையா னவனூர் பனையூரே. 7

400. இலகும் முடிபத் துடையானை
அலல்கண் டருள்செய் தவெம்மண்ணல்
உலகில் லுயிர்நீர் நிலமற்றும்
பலகண் டவனூர் பனையூரே. 8

401. வரமுன் னிமகிழ்ந் தெழுவீர்காள்
சிரமுன் னடிதா ழுவணங்கும்
பிரமன் னொடுமா லறியாத
பரமன் னுறையும் பனையூரே. 9

402. அழிவல் லமண ரொடுதேரர்
மொழிவல் லனசொல் லியபோதும்
இழிவில் லதொர்செம் மையினானூர்
பழியில் லவர்சேர் பனையூரே. 10

403. பாரார் விடையான் பனையூர்மேல்
சீரார் தமிழ்ஞா னசம்பந்தன்
ஆரா தசொன்மா லைகள்பத்தும்
ஊரூர் நினைவா ருயர்வாரே.

திருச்சிற்றம்பலம்

•••••

## 38. திருமயிலாடுதுறை : பண் – தக்கராகம்

404. கரவின் றிநன்மா மலர்கொண்டே
இரவும் பகலுந் தொழுவார்கள்
சிரமொன் றியசெஞ் சடையான்வாழ்
வரமா மயிலா டுதுறையே. 1

405. உரவெங் கரியின் னுரிபோர்த்த
பரமன் னுறையும் பதியென்பர்
குரவஞ் சுரபுன் னையும்வன்னி
மருவும் மயிலா டுதுறையே. 2

406. ஊனத் திருள்நீங் கிடவேண்டில்
ஞானப் பொருள்கொண் டடிபேணும்
தேனொத் தினியா னமருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே. 3

407. அஞ்சொண் புலனும் மவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையை
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேல்
துஞ்சும் பிணியா யினதானே. 4

408. தணியார் மதிசெஞ் சடையான்றன்
அணியார்ந் தவருக் கருளென்றும்
பிணியா யினதீர்த் தருள்செய்யும்
மணியான் மயிலா டுதுறையே. 5

409. தொண்ட ரிசைபா டியுங்கூடிக்
கண்டு துதிசெய் பவனூராம்
பண்டும் பலவே தியரோத
வண்டார் மயிலா டுதுறையே. 6

410. அணங்கோ டொருபா கமமர்ந்து
இணங்கி யருள்செய் தவனூராம்
நுணங்கும் புரிநூ லர்கள்கூடி
வணங்கும் மயிலா டுதுறையே. 7

411. சிரங்கை யினிலேந் தியிரந்த
பரங்கொள் பரமேட் டிவரையால்
அரங்கவ் வரக்கன் வலிசெற்ற
வரங்கொள் மயிலா டுதுறையே. 8

412. ஞாலத் தைநுகர்ந் தவன்தானும்
கோலத் தயனும் மறியாத
சீலத் தவனூர் சிலர்கூடி
மாலைத் தீர்மயிலா டுதுறையே. 9

413. நின்றுண் சமணும் நெடுந்தேரர்
ஒன்றும் மறியா மையுயர்ந்த
வென்றி யருளா னவனூராம்
மன்றன் மயிலா டுதுறையே. 10

414. நயர்கா ழியுள்ஞா னசம்பந்தன்
மயல்தீர் மயிலா டுதுறைமேல்
செயலா லுரைசெய் தனபத்தும்
உயர்வா மிவையுற் றுணர்வார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

இதுவே மாயூரம். (மாயவரம்)

♦♦♦♦♦

## 39. திருவேட்களம் : பண் – தக்கராகம்

415. அந்தமு மாதியுமாகிய வண்ண லாரழலங்கை யமர்ந்திலங்க
மந்தமுழவ மியம்ப மலைமகள் காணநின் றாடிச்
சந்தமிலங்கு நகுதலை கங்கை தண்மதி யம்மயலேததும்ப
வெந்தவெண்ணீறு மெய்பூசும் வேட்களநன் னகராரே. 1

416. சடைதனைத் தாழ்தலு மேறமுடித்துச் சங்கவெண்தோடு சரிந்திலங்கப்
புடைதனிற் பாரிடஞ்சூழப் போதருமா றிவர் போல்வார்
உடைதனில் நால்விரற் கோவணவாடை யுண்பதுமூரிடு பிச்சைவெள்ளை
விடைதனை யூர்திநயந்தார் வேட்கள நன்னகராரே. 2

417. பூதமும் பல்கண மும்புடைசூழப் பூமியும்விண்ணு முடன்பொருந்தச்
சீதமும்வெம்மையு மாகிச் சீரொடுநின்ற வெஞ் செல்வர்
ஓதமுங்கானலுஞ் சூழ்தருவேலை உள்ளங் கலந்திசை யாலெழுந்த
வேதமும் வேள்வியு மோவாவேட்கள நன்னகராரே. 3

418. அரைபுல்குமைந்தலை யாடலரவம் அமையவெண் கோவணத் தோடசைத்து
வரைபுல் குமார்பி லொராமை வாங்கிய ணிந்தவர்தாந்
திரைபுல்கு தெண்கடல் தண்கழியோதந் தேனலங்கானலில் வண்டுபண்செய்ய
விரைபுல்கு பைம்பொழில்சூழ்ந்த வேட்கள நன்னகராரே. 4

419. பண்ணுறுவண்டறை கொன்றையலங்கல் பால்புரைநீறு வெண்நூல்கிடந்த
பெண்ணுறு மார்பினர்பேணார் மும்மதி லெய்த பெருமான்
கண்ணுறுநெற்றி கலந்தவெண்திங்கட் கண்ணியர்விண்ணவர் கைதொழு
தேத்தும்
வெண்ணிறமால் விடையண்ணல் வேட்கள நன்னகராரே. 5

420. கறிவளர்குன்ற மெடுத்தவன் காதற் கண்கவரைங்கணை யோனுடலம்
பொறிவள ராரழலுண்ணப் பொங்கிய பூத புராணர்
மறிவளரங்கையர் மங்கையொர்பங்கர் மைஞ்ஞிற மானுரி தோலுடையாடை
வெறிவளர்கொன்றையந் தாரார் வேட்கள நன்னகராரே. 6

421. மண்பொடிக் கொண்டெரித் தோர்சுடலை மாமலைவேந்தன் மகள்மகிழ
நுண்பொடிச் சேரநின்றாடி நொய்யன செய்ய லுகந்தார்
கண்பொடிவெண்டலை யோடுகையேந்திக் காலனைக் காலாற் கடிந்துகந்தார்
வெண்பொடிச் சேர்திருமார்பர் வேட்கள நன்னகராரே. 7

422. ஆழ்தரு மால்கடல் நஞ்சினையுண்டா ரமுதமம ரர்க்கருளிச்
சூழ்தருபாம் பரையார்த்துச் சூலமோ டொண் மழுவேந்தித்
தாழ்தருபுன் சடையொன்றினை வாங்கித் தண்மதியம்மய லேததும்ப
வீழ்தருகங்கை கரந்தார் வேட்கள நன்னகராரே. 8

423. திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகனுந் திசைமேலளந்த
கருவரை யேந்திய மாலுங் கைதொழ நின்றதுமல்லால்
அருவரை யொல்க வெடுத்தவ்வரக்க னாடெழிற்றோள்க ளாழத்தழுந்த
வெருவுறவூன்றிய பெம்மான் வேட்கள நன்னகராரே. 9

424. அத்தமண் தோய்துவ ராரமண்குண்டர் யாதுமல்லாவுரை யேயுரைத்துப்
பொய்த்தவம் பேசுவதல்லாற் புறனுரையா தொன்றுங் கொள்ளேன்
முத்தன வெண்முறு வல்லுமையஞ்ச மூரிவல்லானையி னீருரிபோர்த்த
வித்தகர்வேத முதல்வர் வேட்கள நன்னகராரே. 10

425. விண்ணியன்மாடம் விளங்கொளிவீதி வெண்கொடி யெங்கும் விரிந்திலங்க
நண்ணிய சீர்வளர்காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
பெண்ணினல் லாளொரு பாகமமர்ந்து பேணியவேட்கள மேல்மொழிந்த
பண்ணியல்பாடல் வல்லார்கள் பழியொடு பாவமிலாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 40. திருவாழ்கொளிபுத்தூர் : பண் – தக்கராகம்

426. பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடைசூழக்
கொடியுடையூர்திரிந் தையங் கொண்டுபலபல கூறி
வடிவுடைவாணெடுங் கண்ணுமைபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்க்
கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம். 1

427. அரைகெழுகோவண வாடையின்மேலோ ராடரவம் மசைத்தையம்
புரைகெழுவெண்டலை யேந்திப் போர்விடை யேறிப்புகழ
வரைகெழுமங்கைய தாகமொர்பாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்
விரைகமழ் மாமலர்தூவி விரிசடையானடி சேர்வோம். 2

428. பூணெடுநாக மசைத்தனலாடிப் புன்தலையங்கையி லேந்தி
ஊணிடுபிச்சையூ ரைய முண்டியென்று பலகூறி
வாணெடுங்கண்ணுமை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
தாணெடுமாமல ரிட்டுத் தலைவனதாள்நிழல் சார்வோம். 3

429. தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை தாழ்சடை மேலவைசூடி
ஊரிடுபிச்சைகொள் செல்வ முண்டியென்று பலகூறி
வாரிடுமென்முலை மாதொருபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
காரிடுமாமலர் தூவிக் கறைமிடற்றானடி காண்போம். 4

430. கனமலர்க்கொன்றை யலங்கலிலங்கக் காதிலோர் வெண்குழையோடு
புனமலர்மாலை புனைந்தூர் புகுதியென்றே பலகூறி
வனமுலைமாமலை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
இனமல ரேய்ந்தனதூவி யெம்பெருமானடி சேர்வோம். 5

431. அளைவளர்நாக மசைத்தனலாடி யலர்மிசையந்தண னுச்சிக்
களைதலையிற்பலி கொள்ளுங் கருத்தனே கள்வனேயென்னா
வளையொலிமுன்கை மடந்தையொர்பாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்த்
தளையவிழ் மாமலர்தூவித் தலைவனதாளிணை சார்வோம். 6

432. அடர்செவிவேழத்தி னீருரிபோர்த்து வழிதலையங்கையி லேந்தி
உடலிடுபிச்சையோ டைய முண்டியென்று பலகூறி
மடனெடுமாமலர்க் கண்ணியொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தடமலராயின தூவித் தலைவனதாள்நிழல் சார்வோம். 7

433. உயர்வரையொல்க வெடுத்தவரக்க னொளிர்கடகக்கை யடர்த்து
அயலிடுபிச்சையோ டைய மார்தலையென்றடி போற்றி
வயல்விரிநீல நெடுங்கணிபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்ச்
சயவிரிமாமலர் தூவித் தாழ்சடையானடி சார்வோம். 8

434. கரியவன்நான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலு மாகா
எரியுருவாகியூ ரைய மிடுபலியுண்ணியென் றேத்தி
வரியரவல்குல் மடந்தையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
விரிமலராயின தூவி விகிர்தன சேவடி சேர்வோம். 9

435. குண்டமணர்துவர்க் கூறைகண்மெய்யிற் கொள்கையினார் புறங்கூற
வெண்டலையிற்பலி கொண்டல் விரும்பினையென்று விளம்பி
வண்டமர்பூங்குழல் மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தொண்டர்கள் மாமலர்தூவத் தோன்றிநின்றானடி சேர்வோம். 10

436. கல்லுயர்மாக்கட னின்றுமுழங்குங் கரைபொரு காழியமூதூர்
நல்லுயர்நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன்
வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச்
சொல்லியபாடல்கள் வல்லார் துயர்கெடுதல்லெளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 41. திருப்பாம்புரம் : பண் – தக்கராகம்

437. சீரணிதிகழ்திரு மார்பில்வெண்ணூலர் திரிபுரமெரிசெய்த செல்வர்
வாரணிவனமுலை மங்கையோர்பங்கர் மான்மறியேந்திய மைந்தர்
காரணிமணிதிகழ் மிடறுடையண்ணல் கண்ணுதல் விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தரு நான்மறையாளர் பாம்புர நன்னகராரே. 1

438. கொக்கிறகோடு கூவிளமத்தங் கொன்றையொ டெருக்கணிசடையர்
அக்கினொடாமை பூண்டழகாக அனலதுஆடுமெம் மடிகள்
மிக்கநல்வேத வேள்வியுளெங்கும் விண்ணவர் விரைமலர்தூவப்
பக்கம்பல்பூதம் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 2

439. துன்னலினாடை யுடுத்ததன்மேலோர் சூறைநல்லரவது சுற்றிப்
பின்னுவார்சடைகள் தாழவிட்டாடிப் பித்தராய்த்திரியுமெம் பெருமான்
மன்னுமாமலர்கள் தூவிடநாளும் மாலையாட்டியுந் தாமும்,
பன்னுநான்மறைகள் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 3

440. துஞ்சுநாள்துறந்து தோற்றமுமில்லாச் சுடர்விடுசோதியெம் பெருமான்
நஞ்சுசேர்கண்ட முடையவென்நாதர் நள்ளிருள்நடஞ்செயுந் நம்பர்
மஞ்சுதோய்சோலை மாமயிலாட மாடமாளிகைதன்மே லேறிப்
பஞ்சுசேர்மெல்லடிப் பாவையர்பயிலும் பாம்புர நன்னகராரே. 4

441. நதியதனயலே நகுதலைமாலை நாண்மதிசடைமிசை யணிந்து
கதியதுவாகக் காளிமுன்காணக்கானிடைநடஞ்செய்த கருத்தர்
விதியதுவழுவா வேதியர்வேள்வி செய்தவரோத்தொலி யோவாப்
பதியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 5

442. ஓதிநன்குணர்வார்க் குணர்வுடையொருவ ரொளிதிகழுருவஞ்சே ரொருவர்
மாதினையிடமா வைத்தஎம்வள்ளல் மான்மறியேந்திய மைந்தர்
ஆதிநீயருளென் றமரர்கள்பணிய அலைகடல்கடையவன் றெழுந்த
பாதிவெண் பிறைசடைவைத்தஎம்பரமர் பாம்புர நன்னகராரே. 6

443. மாலினுக்கன்று சக்ரமீந்து மலரவற்கொருமுக மொழித்து
ஆலின்கீழறமோர் நால்வருக்கருளி யனலதுஆடுமெம் மடிகள்
காலனைக்காய்ந்து தங்கழலடியாற் காமனைப் பொடிபடநோக்கிப்
பாலனுக்கருள்கள் செய்தவெம்மடிகள் பாம்புர நன்னகராரே. 7

444. விடைத்தவல்லரக்கன் வெற்பினையெடுக்க மெல்லிய திருவிரலூன்றி
அடர்த்தவன்றனக்கன் றருள்செய்தவடிக ளனலதுஆடுமெம் மண்ணல்
மடக்கொடியவர்கள் வருபுனலாட வந்திழியரிசிலின் கரைமேல்
படப்பையிற்கொணர்ந்து பருமணிசிதறும் பாம்புர நன்னகராரே. 8

445. கடிபடுகமலத் தயனொடுமாலுங் காதலோடடிமுடி தேடச்
செடிபடுவினைகள் தீர்த்தருள்செய்யுந் தீவணரெம்முடைச் செல்வர்
முடியுடையமரர் முனிகணத்தவர்கள் முறைமுறையடிபணிந் தேத்தப்
படியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 9

446. குண்டர்சாக்கியருங் குணமிலாதாருங் குற்றுவிட்டுடுக்கையர் தாமுங்
கண்டவாறுரைத்துக் கால்நிமிர்த்துண்ணுங் கையர்தாமுள்ளவா றறியார்
வண்டுசேர்குழலி மலைமகள் நடுங்க வாரணமுரிசெய்து போர்த்தார்
பண்டுநாஞ்செய்த பாவங்கள்தீர்ப்பார் பாம்புர நன்னகராரே. 10

447. பார்மலிந்தோங்கிப் பருமதில்சூழ்ந்த பாம்புர நன்னகராரைக்
கார்மலிந்தழகார் கழனிசூழ்மாடக் கழுமலமுதுபதிக் கவுணி
நார்மலிந்தோங்கு நான்மறைஞான சம்பந்தன்செந்தமிழ் வல்லார்
சீர்மலிந்தழகார் செல்வமதோங்கிச் சிவனடிநண்ணுவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 42. திருப்பேணுபெருந்துறை : பண் – தக்கராகம்

448. பைம்மாநாகம் பன்மலர்கொன்றை பன்றிவெண்கொம்பொன்று பூண்டு
செம்மாந்தையம் பெய்கென்றுசொல்லிச் செய்தொழில்பேணியோர் செல்வர்
அம்மானோக்கிய யந்தளிர்மேனி யரிவையோர்பாக மமர்ந்த
பெம்மானல்கிய தொல்புகழாளர் பேணு பெருந்துறையாரே. 1

449. மூவருமாகி யிருவருமாகி முதல்வனுமாய்நின்ற மூர்த்தி
பாவங்கள்தீர்தர நல்வினைநல்கிப் பல்கணம்நின்று பணியச்
சாவமதாகிய மால்வரைகொண்டு தண்மதின்மூன்று மெரித்த
தேவர்கள்தேவ ரெம்பெருமானார் தீதில் பெருந்துறையாரே. 2

450. செய்பூங்கொன்றை கூவிளமாலை சென்னியுட்சேர்புனல் சேர்த்திக்
கொய்பூங்கோதை மாதுமைபாகங் கூடியோர்பீடுடை வேடர்
கைபோனான்ற கனிகுலைவாழை காய்குலையிற்கமு கீனப்
பெய்பூம்பாளை பாய்ந்திழிதேறல் பில்கு பெருந்துறையாரே. 3

451. நிலனொடுவானு நீரொடுதீயும் வாயுவுமாகியோ ரைந்து
புலனொடுவென்று பொய்ம்மைகள்தீர்ந்த புண்ணியர்வெண்பொடிப் பூசி
நலனொடுதீங்குந் தானலதின்றி நன்கெழுசிந்தைய ராகி
மலனொடுமாசு மில்லவர்வாழு மல்கு பெருந்துறையாரே. 4

452. பணிவாயுள்ள நன்கெழுநாவின் பத்தர்கள்பத்திமை செய்யத்
துணியார்தங்க ளுள்ளமிலாத சுமடர்கள்சோதிப் பரியார்
அணியார்நீல மாகியகண்ட ரரிசிலுரிஞ்சு கரைமேல்
மணிவாய்நீலம் வாய்கமழ்தேறல் மல்கு பெருந்துறையாரே. 5

453. எண்ணார்தங்கள் மும்மதில்வேவ ஏவலங்காட்டிய எந்தை
விண்ணோர்சாரத் தன்னருள்செய்த வித்தகர்வேத முதல்வர்
பண்ணார்பாட லாடலருத பசுபதியீசனோர் பாகம்
பெண்ணாணாய வார்சடையண்ணல் பேணு பெருந்துறையாரே. 6

454. விழையாருள்ளம் நன்கெழுநாவில் வினைகெடவேதமா றங்கம்
பிழையாவண்ணம் பண்ணியவாற்றுற் பெரியோரேத்தும் பெருமான்
தழையார்மாவின் தாழ்கனியுந்தித் தண்ணரிசில்புடை சூழ்ந்து
குழையார்சோலை மென்னடையன்னங் கூடு பெருந்துறையாரே. 7

455. பொன்னங்கானல் வெண்திரைசூழ்ந்த பொருகடல்வேலி யிலங்கை
மன்னனொல்க மால்வரையூன்றி மாமுரணாகமுந்தோளும்,
முன்னவைவாட்டிப் பின்னருள்செய்த மூவிலைவேலுடை மூர்த்தி
அன்னங்கன்னிப் பேடையொடாடி யணவு பெருந்துறையாரே. 8

456. புள்வாய்போழ்ந்து மாநிலங்கீண்ட பொருகடல்வண்ணனும் பூவின்
உள்வாயல்லி மேலுறைவானு முணர்வரியானுமை கேள்வன்
முள்வாய்தாளின் தாமரைமொட்டின் முகமலரக்கயல் பாயக்
கள்வாய்நீலங் கண்மலரேய்க்குங் காமர் பெருந்துறையாரே. 9

457. குண்டுந்தேருங் கூறைகளைந்துங் கூப்பிலர்செப்பில ராகி
மிண்டும்மிண்டர் மிண்டவைகண்டு மிண்டுசெயாது விரும்பும்
தண்டும்பாம்பும் வெண்டலைசூலந் தாங்கியதேவர் தலைவர்
வண்டுந்தேனும் வாழ்பொழிற்சோலை மல்கு பெருந்துறையாரே.10

458. கடையார்மாட நன்கெழுவீதிக் கழுமலவூரன் கலந்து
நடையாரின்சொல் ஞானசம்பந்தன் நல்லபெருந்துறை மேய
படையார்சூலம் வல்லவன்பாதம் பரவியபத்திவை வல்லார்
உடையாராகி யுள்ளமுமொன்றி யுலகினில்மன்னுவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 43. திருக்கற்குடி : பண் – தக்கராகம்

459. வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்
தடந்திரை சேர்புனல் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்
இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமொ டின்பம தெல்லாம்
கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 1

460. அங்கமொ ராறுடை வேள்வியான அருமறை நான்கும்
பங்கமில் பாடலோ டாடல் பாணி பயின்ற படிறர்
சங்கம தார்குற மாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே. 2

461. நீரக லந்தரு சென்னி நீடிய மத்தமும் வைத்துத்
தாரகை யின்னொளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர்
போரக லந்தரு வேடர் புனத்திடை யிட்ட விறகில்
காரகி லின்புகை விம்முங் கற்குடி மாமலை யாரே. 3

462. ஒருங்களி நீயிறை வாவென் றும்பர்க ளோல மிடக்கண்
டிருங்கள மார விடத்தை யின்னமு துண்ணிய ஈசர்
மருங்களி யார்பிடி வாயில் வாழ்வெதி ரின்முளை வாரிக்
கருங்களி யானை கொடுக்குங் கற்குடி மாமலை யாரே. 4

463. போர்மலி திண்சிலை கொண்டு பூதக ணம்புடை சூழப்
பார்மலி வேடுரு வாகிப் பண்டொரு வர்க்கருள் செய்தார்
ஏர்மலி கேழல் கிளைத்த இன்னொளி மாமணி யெங்கும்
கார்மலி வேடர் குவிக்குங் கற்குடி மாமலை யாரே. 5

464. உலந்தவ ரென்ப தணிந்தே வூரிடு பிச்சைய ராகி
விலங்கல்வில் வெங்கன லாலே மூவெயில் வேவ முனிந்தார்
நலந்தரு சிந்தைய ராகி நாமலி மாலையி னாலே
கலந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 6

465. மானிட மார்தரு கையர் மாமழு வாரும் வலத்தார்
ஊனிடை யார்தலை யோட்டி லுண்கலனாக வுகந்தார்
தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யால்தினை வித்திக்
கானிடை வேடர் விளைக்குங் கற்குடி மாமலை யாரே. 7

466. வாளமர் வீர நினைந்த இராவணன் மாமலை யின்கீழ்த்
தோளமர் வன்தலை குன்றத் தொல்விர லூன்று துணைவர்
தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க்
காளமு தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே. 8

467. தண்டமர் தாமரை யானுந் தாவியிம் மண்ணை யளந்து
கொண்டவ னும்மறி வொண்ணாக் கொள்கையர் வெள்விடை யூர்வர்
வண்டிசை யாயின பாட நீடிய வார்பொழில் நீழல்
கண்டமர் மாமயி லாடுங் கற்குடி மாமலை யாரே. 9

468. மூத்துவ ராடையி னாரும் மூசு கடுப்பொடி யாரும்
நாத்துவர் பொய்ம்மொழி யார்கள் நயமில ராமதி வைத்தார்
ஏத்துயர் பத்தர்கள் சித்த ரிறைஞ்ச அவரிட ரெல்லாங்
காத்தவர் காமரு சோலைக் கற்குடி மாமலை யாரே. 10

479. காமரு வார்பொழில் சூழுங் கற்குடி மாமலை யாரை
நாமரு வண்புகழ்க் காழி நலந்திகழ் ஞானசம் பந்தன்
பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் லார்கள்
பூமலி வானவ ரோடும் பொன்னுல கிற்பொலி வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 44. திருப்பாச்சிலாச்சிராமம் : பண் – தக்கராகம்

470. துணிவளர்திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலிதேர்வர்
அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர்கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்மாண்பே.1

471. கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட ராலிவர்கண்கள்
தலையணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் ளிவரென்ன
அலைபுனல் பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
இலைபுனைவேலரோ ஏழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 2

472. வெஞ்சுடராடுவர் துஞ்சிருள்மாலை வேண்டுவர்பூண்பது வெண்ணூல்
நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மைநயந்து
மஞ்சடைமாளிகை சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சிதைசெய்வதோ இவர்சீரே.3

473. கனமலர்க்கொன்றை அலங்கலிலங்கக் கனல்தரு தூமதிக்கண்ணி
புனமலர்மாலை யணிந்தழகாய புநிதர்கொ லாமிவரென்ன
வனமலிவண்பொழில் சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற,
மனமலிமைந்தரோ மங்கையைவாட மயல்செய்வதோ இவர்மாண்பே. 4

474. மாந்தர்தம்பால்நறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்புனல்வைத்து
மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர்வாய் மூரிபாடி
ஆந்தைவிழிச்சிறு பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய்வதோ இவர்சார்வே.5

475. நீறுநெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணாலுற்றுநோக்கி
ஆறதுசூடி ஆடரவாட்டி யைவிரற் கோவணவாடை
பார்தருமேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
ஏறதுவேறிய ரேழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 6

476. பொங்கிளநாகமொ ரேகவடத்தோ டாமைவெண் ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொலாமிவரென்ன
அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர்செய்வதோ இவர்சார்வே.7

477. ஏவலத்தால்விச யற்கருள்செய்து இராவண னையீடழித்து
மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை யன்றிமொழியாள்
யாவர்களும்பர வும்மெழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
தேவர்கள் தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ இவர்சார்வே. 8

478. மேலதுநான்முக னெய்தியதில்லை கீழது சேவடிதன்னை
நீலதுவண்ணனு மெய்தியதில்லை யெனவிவர் நின்றதுமல்லால்
ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ இவர்பண்பே. 9

479. நாணொடுகூடிய சாயினரேனும் நகுவ ரவரிருபோதும்
ஊணொடுகூடிய வுட்குநகையா லுரைகளவைகொள வேண்டா
ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பூணொடுமார்பரோ பூங்கொடிவாடப் புனைசெய்வதோ இவர்பொற்பே.
10

480. அகமலியன்பொடு தொண்டர்வணங்க ஆச்சிரா மத்துறைகின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்பந்தன்
தகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகி லாவினைதானே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 45. திருஆலங்காடு : பண் – தக்கராகம்

481. துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 1

482. கேடும்பிறவியு மாக்கினாருங் கேடிலா
வீடுமாநெறி விளம்பினாரெம் விகிர்தனார்
காடுஞ்சுடலையுங் கைக்கொண்டெல்லிற் கணப்பேயோ
டாடும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 2

483. கந்தங்கமழ்கொன்றைக் கண்ணிசூடி கனலாடி
வெந்தபொடி நீற்றை விளங்கப்பூசும் விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலை யரவிற்றோன்றிக் கோடல்பூத்
தந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 3

484. பாலமதிசென்னி படரச்சூடிப் பழியோராக்
காலனுயிர்செற்ற காலனாய கருத்தனார்
கோலம்பொழிற்சோலைப் பெடையோடாடி மடமஞ்ஞை
ஆலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 4

485. ஈர்க்கும்புனல்சூடி யிளவெண்டிங்கள் முதிரவே
பார்க்குமரவம்பூண் டாடிவேடம் பயின்றாரும்
கார்க்கொள் கொடிமுல்லை குருந்தமேறிக் கருந்தேன்மொய்த்
தார்க்கும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 5

486. பறையுஞ்சிறுகுழலும் யாழும்பூதம் பயிற்றவே
மறையும்பலபாடி மயானத்துறையும் மைந்தனார்
பிறையும்பெரும்புனல்சேர் சடையினாரும் பேடைவண்
டறையும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 6

487. நுணங்குமறைபாடி யாடிவேடம் பயின்றாரும்
இணங்குமலைமகளோ டிருகூறொன்றா யிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட்
டணங்கும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 7

488. கணையும்வரிசிலையு மெரியுங்கூடிக் கவர்ந்துண்ண
இணையிலெயின்மூன்று மெரித்திட்டாரெம் மிறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங் கலையுமெல்லாங் கங்குல்சேர்ந்
தணையும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 8

489. கவிழமலைதளரக் கடகக்கையா லெடுத்தான்தோள்
பவழநுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்
தவழுங்கொடிமுல்லை புறவஞ்சேர நறவம்பூத்
தவிழும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 9

490. பகலுமிரவுஞ்சேர் பண்பினாரும் நண்போரா
திகலுமிருவர்க்கு மெரியாய்த்தோன்றி நிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடு வல்லார்க்கென்றுந் தீயபோய்
அகலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 10

491. போழம்பலபேசிப் போதுசாற்றித் திரிவாரும்
வேழம்வருமளவும் வெயிலேதுற்றித் திரிவாருங்
கேழல்வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா
ஆழ்வர்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 11

492. சாந்தங்கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்தன்
ஆந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளை
வேந்தனருளாலே விரித்தபாட லிவைவல்லார்
சேர்ந்தஇடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 46. திருஅதிகைவீரட்டானம் : பண் – தக்கராகம்

493. குண்டைக் குறட்பூதங் குழும அனலேந்திக்
கெண்டைப் பிறழ்தெண்ணீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலா னாடும்வீரட் டானத்தே. 1

494. அரும்புங் குரும்பையு மலைத்த மென்கொங்கைக்
கரும்பின் மொழியாளோ டுடன்கை யனல்வீசிச்
சுரும்புண் விரிகொன்றைச் சுடர்பொற் சடைதாழ
விரும்பு மதிகையு ளாடும்வீரட் டானத்தே. 2

495. ஆட லழல்நாக மரைக்கிட் டசைத்தாடப்
பாடல் மறைவல்லான் படுதம் பலிபெயர்வான்
மாட முகட்டின்மேல் மதிதோய் அதிகையுள்
வேடம் பலவல்லா னாடும்வீரட் டானத்தே. 3

496. எண்ணா ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி
மண்ணார் முழவதிர முதிரா மதிசூடிப்
பண்ணார்மறைபாடப் பரம னதிகையுள்
விண்ணோர் பரவநின் றாடும்வீரட் டானத்தே. 4

497. கரிபுன் புறமாய கழிந்தா ரிடுகாட்டில்
திருநின் றொருகையால் திருவா மதிகையுள்
எரியேந் தியபெருமா னெரிபுன் சடைதாழ
விரியும் புனல்சூடி யாடும்வீரட் டானத்தே. 5

498. துளங்குஞ் சுடரங்கைத் துதைய விளையாடி
இளங்கொம் பனசாய லுமையோ டிசைபாடி
வளங்கொள் புனல்சூழ்ந்த வயலா ரதிகையுள்
விளங்கும் பிறைசூடி யாடும்வீரட் டானத்தே. 6

499. பாதம் பலரேத்தப் பரமன் பரமேட்டி
பூதம் புடைசூழப் புலித்தோ லுடையாகக்
கீத முமைபாடக் கெடில வடபக்கம்
வேத முதல்வனின் றாடும்வீரட் டானத்தே. 7

500. கல்லார் வரையரக்கன் தடந்தோள் கவின்வாட
ஒல்லை யடர்த்தவனுக் கருள்செய் ததிகையுள்
பல்லார் பகுவாய நகுவெண் தலைசூடி
வில்லா லெயிலெய்தா னாடும்வீரட் டானத்தே. 8

501. நெடியான் நான்முகனு நிமிர்ந்தானைக் காண்கிலார்
பொடியாடு மார்பானைப் புரிநூ லுடையானைக்
கடியார் கழுநீலம் மலரும் மதிகையுள்
வெடியார் தலையேந்தி யாடும்வீரட் டானத்தே. 9

502. அரையோ டலர்பிண்டி மருவிக் குண்டிகை
சுரையோ டுடனேந்தி யுடைவிட் டுழல்வார்கள்
உரையோ டுரையொவ்வா துமையோ டுடனாகி
விரைதோ யலர்தாரா னாடும்வீரட் டானத்தே. 10

503. ஞாழல் கமழ்காழி யுள்ஞான சம்பந்தன்
வேழம் பொருதெண்ணீ ரதிகைவீரட் டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 47. திருச்சிரபுரம் : பண் – பழந்தக்கராகம்

504. பல்லடைந்த வெண்டலையிற் பலிகொள்வ தன்றியும்போய்
வில்லடைந்த புருவநல்லாள் மேனியில் வைத்தலென்னே
சொல்லடைந்த தொல்மறையோ டங்கங்க லைகளெல்லாஞ்
செல்லடைந்த செல்வர்வாழுஞ் சிரபுர மேயவனே. 1

505. கொல்லைமுல்லை நகையினுளோர் கூறது வன்றியும்போய்
அல்லல்வாழ்க்கைப் பலிகொண்டுண்ணு மாதர வென்னைகொலாஞ்
சொல்லநீண்ட பெருமையாளர் தொல்கலை கற்றுவல்லார்
செல்லநீண்ட செல்வமல்கு சிரபுர மேயவனே. 2

506. நீரடைந்த சடையின்மேலோர் நிகழ்மதி யன்றியும்போய்
ஊரடைந்த ஏறதேறி யுண்பலி கொள்வதென்னே
காரடைந்த சோலைசூழ்ந்து காமரம் வண்டிசைப்பச்
சீரடைந்த செல்வமோங்கு சிரபுர மேயவனே. 3

507. கையடைந்த மானினோடு காரர வன்றியும்போய்
மெய்யடைந்த வேட்கையோடு மெல்லியல் வைத்தலென்னே
கையடைந்த களைகளாகச் செங்கழு நீர்மலர்கள்
செய்யடைந்த வயல்கள் சூழ்ந்த சிரபுர மேயவனே. 4

508. புரமெரித்த பெற்றியோடும் போர்மத யானைதன்னைக்
கரமெடுத்துத் தோலுரித்த காரண மாவதென்னே
மரமுரித்த தோலுடுத்த மாதவர் தேவரோடுஞ்
சிரமெடுத்த கைகள்கூப்புஞ் சிரபுர மேயவனே. 5

509. கண்ணுமூன்று முடையதன்றிக் கையினில் வெண்மழுவும்
பண்ணுமூன்று வீணையோடு பாம்புடன் வைத்தலென்னே
எண்ணுமூன்று கனலுமோம்பி யெழுமையும் விழுமியராய்த்
திண்ணமூன்று வேள்வியாளர் சிரபுர மேயவனே. 6

510. குறைபடாத வேட்கையோடு கோல்வளையா ளொருபாற்
பொறைபடாத இன்பமோடு புணர்தரு மெய்ம்மையென்னே
இறைபடாத மென்முலையார் மாளிகை மேலிருந்து
சிறைபடாத பாடலோங்கு சிரபுர மேயவனே. 7

511. மலையெடுத்த வாளரக்க னஞ்சவொ ருவிரலால்
நிலையெடுத்த கொள்கையானே நின்மல னேநினைவார்
துலையெடுத்த சொற்பயில்வார் மேதகு வீதிதோறுஞ்
சிலையெடுத்த தோளினானே சிரபுர மேயவனே. 8

512. மாலினோடு மலரினானும் வந்தவர் காணாது
சாலுமஞ்சப் பண்ணிநீண்ட தத்துவ மேயதென்னே
நாலுவேத மோதலார்கள் நந்துணை யென்றிறைஞ்சச்
சேலுமேயுங் கழனிசூழ்ந்த சிரபுர மேயவனே. 9

513. புத்தரோடு சமணர்சொற்கள் புறனுரை யென்றிருக்கும்
பத்தர்வந்து பணியவைத்த பான்மைய தென்னைகொலாம்
மத்தயானை யுரியும்போர்த்து மங்கையொ டும்முடனே
சித்தர்வந்து பணியுஞ்செல்வச் சிரபுர மேயவனே. 10

514. தெங்குநீண்ட சோலைசூழ்ந்த சிரபுர மேயவனை
அங்கநீண்ட மறைகள்வல்ல அணிகொள்சம் பந்தனுரை
பங்கநீங்கப் பாடவல்ல பத்தர்கள் பாரிதன்மேற்
சங்கமோடு நீடிவாழ்வர் தன்மையி னாலவரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 48. திருச்சேய்ஞலூர் : பண் – பழந்தக்கராகம்

515. நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. 1

516. நீறடைந்த மேனியின்கண் நேரிழை யாளொருபால்
கூறடைந்த கொள்கையன்றிக் கோல வளர்சடைமேல்
ஆறடைந்த திங்கள்சூடி யரவ மணிந்ததென்னே
சேறடைந்ததண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. 2

517. ஊனடைந்த வெண்தலையி னோடுப லிதிரிந்து
கானடைந்த பேய்களோடு பூதங்க லந்துடனே
மானடைந்த நோக்கிகாண மகிழ்ந்தெரி யாடலென்னே
தேனடைந்த சோலைமல்கு சேய்ஞலூர் மேயவனே. 3

518. வீணடைந்த மும்மதிலும் வில்மலை யாஅரவின்
நாணடைந்த வெஞ்சரத்தால் நல்லெரி யூட்டலென்னே
பாணடைந்த வண்டுபாடும் பைம்பொழில் சூழ்ந்தழகார்
சேணடைந்த மாடமல்கு சேய்ஞலூர் மேயவனே. 4

519. பேயடைந்த காடிடமாப் பேணுவ தன்றியும்போய்
வேயடைந்த தோளியஞ்ச வேழ முரித்ததென்னே
வாயடைந்த நான்மறையா றங்கமோ டைவேள்வித்
தீயடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே. 5

520. காடடைந்த ஏனமொன்றின் காரண மாகிவந்து
வேடடைந்த வேடனாகி விசயனொ டெய்ததென்னே
கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங்க ணாற்கருள்செய்
சேடடைந்த செல்வர்வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே. 6

521. பீரடைந்த பாலதாட்டப் பேணாத வன்தாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவ குத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே. 7

522. மாவடைந்த தேரரக்கன் வலிதொலை வித்தவன்றன்
நாவடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே
பூவடைந்த நான்முகன்போற்பூசுரர் போற்றிசெய்யும்
சேவடைந்த வூர்தியானே சேய்ஞலூர் மேயவனே. 8

523. காரடைந்த வண்ணனோடு கனகம னையானும்
பாரிடந்தும் விண்பறந்தும் பாதமு டிகாணார்
சீரடைந்து வந்துபோற்றச் சென்றருள் .செய்ததென்னே
தேரடைந்த மாமறுகிற் சேய்ஞலூர் மேயவனே. 9

524. மாசடைந்த மேனியாரும் மனந்திரி யாதகஞ்சி
நேசடைந்த வூணினாரும் நேசமி லாததென்னே
வீசடைந்த தோகையாட விரைகம ழும்பொழில்வாய்த்
தேசடைந்த வண்டுபாடுஞ் சேய்ஞலூர் மேயவனே. 10

525. சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பரவித்
தோயடைந்த வண்வயல்சூழ் தோணிபு ரத்தலைவன்
சாயடைந்த ஞானமல்கு சம்பந்த னின்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 49. திருநள்ளாறு : பண் – பழந்தக்கராகம்

526. போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும்பொன் னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள்ளேற் றண்ணல்பர மேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவணஆ டையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயதுநள் ளாறே. 1

527. தோடுடைய காதுடையன் தோலுடையன் தொலையாப்
பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர்பா லுடையன்
ஏடுடைய மேலுலகோ டேழ்கடலுஞ் சூழ்ந்த
நாடுடைய நம்பெருமான் மேயதுநள் ளாறே. 2

528. ஆன்முறையா லாற்றவெண்ணீ றாடியணி யிழையோர்
பான்முறையால் வைத்தபாதம் பத்தர்பணிந் தேத்த
மான்மறியும் வெண்மழுவுஞ் சூலமும்பற் றியகை
நான்மறையான் நம்பெருமான் மேயதுநள் ளாறே. 3

529. புல்கவல்ல வார்சடைமேற் பூம்புனல் பெய்தயலே
மல்கவல்ல கொன்றைமாலை மதியோடுடன் சூடிப்
பல்கவல்ல தொண்டர்தம்பொற் பாதநிழற் சேர
நல்கவல்ல நம்பெருமான் மேயதுநள் ளாறே. 4

530. ஏறுதாங்கி யூர்திபேணி யேர்கொளிள மதியம்
ஆறுதாங்குஞ் சென்னிமேலோ ராடரவஞ் சூடி
நீறுதாங்கி நூல்கிடந்த மார்பினிரை கொன்றை
நாறுதாங்கு நம்பெருமான் மேயதுநள் ளாறே. 5

531. திங்களுச்சி மேல்விளங்குந் தேவனிமை யோர்கள்
எங்களுச்சி யெம்மிறைவ னென்றடியே யிறைஞ்சத்
தங்களுச்சி யால்வணங்குந் தன்னடியார் கட்கெல்லாம்
நங்களுச்சி நம்பெருமான் மேயதுநள் ளாறே. 6

532. வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி விண்கொண்முழ வதிர
அஞ்சிடத்தோ ராடல்பாடல் பேணுவதன்றி யும்போய்ச்
செஞ்சடைக்கோர் திங்கள்சூடித் திகழ்தருகண் டத்துள்ளே
நஞ்சடைத்த நம்பெருமான் மேயதுநள் ளாறே. 7

533. சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சிலைவரைத்தீ யம்பினால்
சுட்டுமாட்டிச் சுண்ணவெண்ணீ றாடுவதன் றியும்போய்ப்
பட்டமார்ந்த சென்னிமேலோர் பால்மதியஞ் சூடி
நட்டமாடு நம்பெருமான் மேயதுநள் ளாறே. 8

534. உண்ணலாகா நஞ்சுகண்டத் துண்டுடனே யொடுக்கி
அண்ணலாகா வண்ணனீழ லாரழல்போ லுருவம்
எண்ணலாகா வுள்வினையென் றெள்கவலித் திருவர்
நண்ணலாகா நம்பெருமான் மேயதுநள் ளாறே. 9

535. மாசுமெய்யர் மண்டைத்தேரர் குண்டர்குண மிலிகள்
பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி யந்நெறிசெல் லன்மின்
மூசுவண்டார் கொன்றைசூடி மும்மதிலும் முடனே
நாசஞ்செய்த நம்பெருமான் மேயதுநள் ளாறே. 10

536. தண்புனலும் வெண்பிறையுந் தாங்கியதாழ் சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம்பந் தன்நல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்துமிவை வல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலுறை வாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 50. திருவலிவலம் : பண் – பழந்தக்கராகம்

537. ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந் துவெய்ய
சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றனாம நாவில்நவின் றேத்த
வல்லவாறே வந்துநல்காய் வலிவல மேயவனே. 1

538. இயங்குகின்ற இரவிதிங்கள் மற்றுநற்றே வரெல்லாம்
பயங்களாலே பற்றிநின்பாற் சித்தந்தெளி கின்றிலர்
தயங்குசோதீ சாமவேதா காமனைக்காய்ந் தவனே
மயங்குகின்றேன் வந்துநல்காய் வலிவல மேயவனே. 2

539. பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப்பெருங் கடலை
விண்டுபண்டே வாழமாட்டேன் வேதனைநோய் நலியக்
கண்டுகண்டே யுன்றனாமங் காதலிக்கின்ற துள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வலிவல மேயவ்னே. 3

540. மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே
நைவனாயே னுன்றன்நாமம் நாளுந்நவிற் றுகின்றேன்.
வையம்முன்னே வந்துநல்காய் வலிவல மேயவனே. 4

541. துஞ்சும்போதுந் துற்றும்போதுஞ் சொல்லுவனுன் திறமே
தஞ்சமில்லாத் தேவர்வந்துன் தாளிணைக் கீழ்ப் பணிய
நஞ்சையுண்டாய்க் கென்செய்கேனோ நாளுநினைந் தடியேன்
வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே. 5

542. புரிசடையாய் புண்ணியனே நண்ணலார்மூ வெயிலும்
எரியவெய்தா யெம்பெருமா னென்றிமையோர் பரவும்
கரியுரியாய் காலகாலா நீலமணி மிடற்று
வரியரவா வந்துநல்காய் வலிவல மேயவனே. 6

543. தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பா லன்புசெய்வா னாதரிக்கின் றதுள்ளம்
ஆயமாய காயந்தன்னு ளைவர்நின்றொன் றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றனேன் வலிவல மேயவனே. 7

544. நீரொடுங்குஞ் செஞ்சடையாய் நின்னுடைய பொன்மலையை
வேரொடும்பீழ்ந் தேந்தலுற்ற வேந்தனிரா வணனைத்
தேரொடும்போய் வீழ்ந்தலறத் திருவிரலா லடர்த்த
வாரொடுங்குங் கொங்கைபங்கா வலிவல மேயவனே. 8

545. ஆதியாய நான்முகனு மாலுமறி வரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லுவனின் திறமே
ஓதிநாளு முன்னையேத்து மென்னைவினை யவலம்
வாதியாமே வந்துநல்காய் வலிவல மேயவனே. 9

546. பொதியிலானே பூவணத்தாய் பொன்திகழுங் கயிலைப்
பதியிலானே பத்தர்சித்தம் பற்றுவிடா தவனே
விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கியரென் றிவர்கள்
மதியிலாதா ரென்செய்வாரோ வலிவல மேயவனே. 10

547. வன்னிகொன்றை மத்தஞ்சூடும் வலிவலமே யவனைப்
பொன்னிநாடன் புகலிவேந்தன் ஞானசம்பந் தன்சொன்ன
பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னுசோதி யீசனோடே மன்னியிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 51. திருச்சோபுரம் : பண் – பழந்தக்கராகம்

548. வெங்கணானை யீருரிவை போர்த்துவிளங் குமொழி
மங்கைபாகம் வைத்துகந்த மாண்பதுஎன் னைகொலாம்
கங்கையோடு திங்கள்சூடிக் கடிகமழுங் கொன்றைத்
தொங்கலானே தூயநீற்றாய் சோபுரமே யவனே. 1

549. விடையமர்ந்து வெண்மழுவொன் றேந்திவிரிந் திலங்கு
சடையொடுங்கத் தண்புனலைத் தாங்கியதென் னைகொலாம்
கடையுயர்ந்த மும்மதிலுங் காய்ந்தனலுள் ளழுந்தத்
தொடைநெகிழ்ந்த வெஞ்சிலையாய் சோபுரமே யவனே. 2

550. தீயராய வல்லரக்கர் செந்தழலுள் ளழுந்தச்
சாயவெய்து வானவரைத் தாங்கியதென் னைகொலாம்
பாயும்வெள்ளை ஏற்றையேறிப் பாய்புலித்தோ லுடுத்த
தூயவெள்ளை நீற்றினானே சோபுரமே யவனே. 3

551. பல்லிலோடு கையிலேந்திப் பல்கடையும் பலிதேர்ந்
தல்லல்வாழ்க்கை மேலதான ஆதரவென் னைகொலாம்
வில்லைவென்ற நுண்புருவ வெல்நெடுங்கண் ணியோடுந்
தொல்லையூழி யாகிநின்றாய் சோபுரமே யவனே. 4

552. நாற்றமிக்க கொன்றைதுன்று செஞ்சடைமேல் மதியம்
ஏற்றமாக வைத்துகந்த காரணமென் னைகொலாம்
ஊற்றமிக்க காலன்றன்னை யொல்கவுதைத் தருளித்
தோற்றமீறு மாகிநின்றாய் சோபுரமே யவனே. 5

553. கொன்னவின்ற மூவிலைவேற் கூர்மழுவாட் படையன்
பொன்னைவென்ற கொன்றைமாலை சூடும்பொற்பென் னைகொலாம்
அன்னமன்ன மென்னடையாள் பாகமமர்ந் தரைசேர்
துன்னவண்ண ஆடையினாய் சோபுரமே யவனே. 6

554. குற்றமின்மை யுன்மைநீயென் றுன்னடியார் பணிவார்
கற்றகேள்வி ஞானமான காரணமென் னைகொலாம்
வற்றலாமை வாளரவம் பூண்டயன்வெண் டலையில்
துற்றலான கொள்கையானே சோபுரமே யவனே. 7

555. விலங்கலொன்று வெஞ்சிலையாக் கொண்டுவிற லரக்கர்
குலங்கள்வாழ மூரெரித்த கொள்கையிதென் னைகொலாம்
இலங்கைமன்னு வாளவுணர் கோனையெழில் விரலால்
துலங்கவூன்றி வைத்துகந்தாய் சோபுரமே யவனே. 8

556. விடங்கொள்நாக மால்வரையைச் சுற்றிவிரி திரைநீர்
கடைந்தநஞ்சை யுண்டுகந்த காரணமென் னைகொலாம்
இடந்துமண்ணை யுண்டமாலு மின்மலர்மே லயனுந்
தொடர்ந்துமுன்னங் காணமாட்டாச் சோபுரமே யவனே. 9

557. புத்தரோடு புன்சமணர் பொய்யுரையே யுரைத்துப்
பித்தராகக் கண்டுகந்த பெற்றிமையென் னைகொலாம்
மத்தயானை யீருரிவை போர்த்துவளர் சடைமேல்
துத்திநாகஞ் சூடினானே சோபுரமே யவனே. 10

558. சோலைமிக்க தண்வயல்சூழ் சோபுரமே யவனைச்
சீலமிக்க தொல்புகழார் சிரபுரக்கோன் நலத்தால்
ஞாலமிக்க தண்டமிழால் ஞானசம்பந் தன்சொன்ன
கோலமிக்க மாலைவல்லார் கூடுவர்வா னுலகே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 52. திருநெடுங்களம் : பண் – பழந்தக்கராகம்

559. மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையினா லுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 1

560. கனைத்தெழுந்த வெண்திரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 2

561. நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத
என்னடியா னுயிரைவவ்வே லென்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 3

562. மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால் மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கு மவிர்சடையா ரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்றாள் நிழற்கீழ்
நிலைபுரிந்தா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 4

563. பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவநின்றாள் நிழற்கீழ்
நீங்கிநில்லா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 5

564. விருத்தனாகிப் பாலனாகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தனாய ஆதிதேவ னடியிணையே பரவும்
நிருத்தர்கீத ரிடர்களையாய் நெடுங்களமே யவனே, 6

565. கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்வெங் கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 7

566. குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூ ழிலங்கை
அன்றிநின்ற வரக்கர்கோனை யருவரைக்கீ ழடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநைவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 8

567. வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனும்
சூழவெங்கு நேடஆங்கோர் சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன் னடியின்
நீழல்வாழ்வா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 9

568. வெஞ்சொற்றஞ்சொல் லாக்கிநின்ற வேடமில்லாச் சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 10

569. நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழு மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந் தன்சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருமுதுகுன்றம் : பண் – பழந்தக்கராகம்

570. தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்
நாவராயு நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரும்
மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்னும்
மூவராய முதலொருவன் மேயதுமு துகுன்றே. 1

571. பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்
எற்றுநீர்தீக் காலுமேலை விண்ணியமா னனோடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்
முற்றுமாகி வேறுமானான் மேயதுமு துகுன்றே. 2

572. வாரிமாகம் வைகுதிங்கள் வாளரவஞ் சூடி
நாரிபாகம் நயந்துபூமேல் நான்முகன்றன் தலையில்
சீரிதாகப் பலிகொள்செல்வன் செற்றலுந்தோன் றியதோர்
மூரிநாகத் துரிவைபோர்த்தான் மேயதுமு துகுன்றே. 3

573. பாடுவாருக் கருளுமெந்தை பனிமுதுபௌ வமுந்நீர்
நீடுபாரு முழுதுமோடி யண்டர்நிலை கெடலும்
நாடுதானு மூடுமோடி ஞாலமுநான் முகனும்
ஊடுகாண மூடும்வெள்ளத் துயர்ந்ததுமு துகுன்றே. 4

574. வழங்குதிங்கள் வன்னிமத்த மாசுணமீ சணவிச்
செழுங்கல்வேந்தன் செல்விகாணத் தேவர்திசை வணங்கத்
தழங்கு மொந்தை தக்கைமிக்க பேய்க்கணம்பூ தஞ்சூழ
முழங்குசெந்தீ யேந்தியாடி மேயதும் துகுன்றே. 5

575. சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கட் டொல்லராநல் லிதழி
சழிந்தசென்னிச் சைவவேடந் தான்நினைத்தைம் புலனும்
அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு
மொழிந்தவாயான் முக்கணாதி மேயதுமு துகுன்றே. 6,7

576. மயங்குமாயம் வல்லராகி வானினொடு நீரும்
இயங்குவோருக் கிறைவனைய இராவணன்தோள் நெரித்த
புயங்கராக மாநடத்தன் புணர்முலைமா துமையாள்
முயங்குமார்பன் முனிவரேத்த மேயதுமு துகுன்றே. 8

577. ஞாலமுண்ட மாலுமற்றை நான்முகனு மறியாக்
கோலமண்டர் சிந்தைகொள்ளா ராயினுங்கொய் மலரால்
ஏலஇண்டை கட்டிநாம மிசையஎப்போ துமேத்தும்
மூலமுண்ட நீற்றர்வாயான் மேயதுமு துகுன்றே. 9

578. உறிகொள்கையர் சீவரத்த ருண்டுழல்மிண் டர்சொல்லை
நெறிகளென்ன நினைவுறாதே நித்தலுங்கை தொழுமின்
மறிகொள்கையன் வங்கமுந்நீர்ப் பொங்குவிடத் தையுண்ட
முறிகொள்மேனி மங்கைபங்கன் மேயதுமு துகுன்றே. 10

579. மொய்த்துவானோர் பல்கணங்கள் வணங்குமு துகுன்றைப்
பித்தர்வேடம் பெருமையென்னும் பிரமபுரத்தலைவன்.
* * * * * * * * * * * 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 54. திருவோத்தூர் : பண் – பழந்தக்கராகம்

580. பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஒத்தூர் மேய வொளிமழு வாளங்கைக்
கூத்தீ ரும்ம குணங்களே. 1

581. இடையீர் போகா இளமுலை யாளையோர்
புடையீ ரேபுள்ளி மானுரி
உடையீ ரேயும்மை யேத்துது மோத்தூர்ச்
சடையீ ரேயும தாளே. 2

582. உள்வேர் போல நொடிமையி னார்திறம்
கொள்வீ ரல்குலோர் கோவணம்
ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்
கள்வீ ரேயும காதலே. 3

583. தோட்டீ ரேதுத்தி யைந்தலை நாகத்தை
ஆட்டீ ரேயடி யார்வினை
ஓட்டீ ரேயும்மை யேத்துது மோத்தூர்
நாட்டீ ரேயருள் நல்குமே. 4

584. குழையார் காதீர் கொடுமழு வாட்படை
உழையாள் வீர்திரு வோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின் றாடுவார்
அழையா மேயருள் நல்குமே. 5

585. மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மக்க ளீரென்
றுட்கா தாருள ரோதிரு வோத்தூர்
நக்கீ ரேயருள் நல்குமே. 6

586. தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா என்று நலம்புகழ்ந்
தோதா தாருள ரோதிரு வோத்தூர்
ஆதீ ரேயருள் நல்குமே. 7

587. என்றா னிம்மலை யென்ற அரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே. 8

588. நன்றா நான்மறை யானொடு மாலுமாய்ச்
சென்றார் போலுந்தி சையெலாம்
ஒன்றா யொள்ளெரி யாய்மிக வோத்தூர்
நின்றீ ரேயுமை நேடியே. 9

589. கார மண்கலிங் கத்துவ ராடையர்
தேரர் சொல்லவை தேறன்மின்
ஓரம் பாலெயி லெய்தவ னோத்தூர்ச்
சீர வன்கழல் சேர்மினே. 10

590. குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுள் ஞானசம்பந் தன்சொல்
விரும் புவார்வினை வீடே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 55. திருமாற்பேறு : பண் – பழந்தக்கராகம்

591. ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை
நீறு சேர்திரு மேனியர்
சேறு சேர்வயல் தென்திரு மாற்பேற்றின்
மாறி லாமணி கண்டரே. 1

592. தொடையார் மாமலர் கொண்டிரு போதும்மை
அடைவா ராமடி கள்ளென
மடையார் நீர்மல்கு மன்னிய மாற்பே
றுடையீ ரேயுமை யுள்கியே. 2

593. பையா ரும்மர வங்கொடு வாட்டிய
கையா னென்று வணங்குவர்
மையார் நஞ்சுண்டு மாற்பேற்றி ருக்கின்ற
ஐயா நின்னடி யார்களே. 3

594. சால மாமலர் கொண்டு சரணென்று
மேலை யார்கள் விரும்புவர்
மாலி னார்வழி பாடுசெய் மாற்பேற்று
நீல மார்கண்ட நின்னையே. 4

595. மாறி லாமணி யேயென்று வானவர்
ஏற வேமிக ஏத்துவர்
கூற னேகுல வுந்திரு மாற்பேற்றின்
நீற னேயென்று நின்னையே. 5

596. உரையா தாரில்லை யொன்றுநின் தன்மையைப்
பரவா தாரில்லை நாள்களும்
திரையார் பாலியின் தென்கரை மாற்பேற்
றரையா னேயருள் நல்கிடே. 6,7

597. அரச ளிக்கும் மரக்க னவன்றனை
உரைகெ டுத்தவ னொல்கிட
வரமி குத்தவெம் மாற்பேற் றடிகளைப்
பரவி டக்கெடும் பாவமே. 8

598. இருவர் தேவருந் தேடித்தி ரிந்தினி
ஒருவ ராலறி வொண்ணிலன்
மருவு நீள்கழல் மாற்பேற் றடிகளைப்
பரவு வார்வினை பாறுமே. 9

599. தூசு போர்த்துழல் வார்கையில் துற்றுணும்
நீசர் தம்முரை கொள்ளெலும்
தேச மல்கிய தென்திரு மாற்பேற்றின்
ஈச னென்றெடுத் தேத்துமே. 10

600. மன்னி மாலொடு சோமன் பணிசெயும்
மன்னு மாற்பேற் றடிகளை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்சொல்
பன்ன வேவினை பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 56. திருப்பாற்றுறை : பண் – பழந்தக்கராகம்

601. காரார் கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச்செய்தார்
பாரார் நாளும் பரவிய பாற்றுறை
ஆரா ராதி முதல்வரே. 1

602. நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினார்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லா ருந்தொழு மீசரே. 2

603. விண்ணார் திங்கள் விளங்கு நுதலினர்
எண்ணார் வந்தெ னெழில்கொண்டார்
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உள்நாள் நாளும் முறைவரே. 3

604. பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவி னல்லா ரெயிலெய்தார்
பாவந் தீர்புனல் மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

605. மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென
தாகம் பொன்னிற மாக்கினார்
பாகம் பெண்ணு முடையவர் பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

606. போது பொன்திகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தென் நலங்கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேத மோதும் விகிர்தரே. 6

607. வாடல் வெண்டலை சூடினர் மால்விடை
கோடல் செய்த குறிப்பினார்
பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை
ஆடல் நாக மசைத்தாரே. 7

608. வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தெ னெழில்கொண்டார்
பவ்வ நஞ்சடை கண்டரெம் பாற்றுறை
மவ்வல் சூடிய மைந்தரே. 8

609. ஏன மன்னமு மானவ ருக்கெரி
ஆன வண்ணத்தெ மண்ணலார்
பான லம்மலர் விம்மிய பாற்றுறை
வான வெண்பிறை மைந்தரே. 9

610. வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தெ னன்னலம் வெளவினார்
பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

611. பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞானசம் பந்தன தின்தமிழ்
பத்தும் பாடிப் பரவுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 57. திருவேற்காடு : பண் – பழந்தக்கராகம்

612. ஒள்ளி துள்ளக் கதிக்கா மிவனொளி
வெள்ளி யானுறை வேற்காடு
உள்ளி யாருயர்ந் தாரிவ் வுலகினில்
தெள்ளி யாரவர் தேவரே. 1

613. ஆடல் நாக மசைத்தள வில்லதோர்
வேடங் கொண்டவன் வேற்காடு
பாடி யும்பணிந் தாரிவ் வுலகினில்
சேட ராகிய செல்வரே. 2

614. பூதம் பாடப் புறங்காட் டிடையாடி
வேத வித்தகன் வேற்காடு
போதுஞ் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்
கேத மெய்துத லில்லையே. 3

615. ஆழ்க டலெனக் கங்கை கரந்தவன்
வீழ்ச டையினன் வேற்காடு
தாழ்வு டைமனத் தாற்பணிந் தேத்திடப்
பாழ்ப டும்மவர் பாவமே. 4

616. காட்டி னாலு மயர்த்திடக் காலனை
வீட்டி னானுறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஒட்டி னார்வினை ஒல்லையே. 5

617. தோலி னாலுடை மேவவல் லான்சுடர்
வேலி னாலுறை வேற்காடு
நூலி னாற்பணிந் தேத்திட வல்லவர்
மாலி னார்வினை மாயுமே. 6

618. மல்லல் மும்மதில் மாய்தர எய்ததோர்
வில்லி னானுறை வேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர் தீர்க்கமே. 7

619. மூரல் வெண்மதி சூடு முடியுடை
வீரன் மேவிய வேற்காடு
வார மாய்வழி பாடுநி னைந்தவர்
சேர்வர் செய்கழல் திண்ணமே. 8

620. பரக்கி னார்படு வெண்டலை யிற்பலி
விரக்கி னானுறை வேற்காட்டூர்
அரக்க னாண்மை யடரப்பட் டானிறை
நெருக்கி னானை நினைமினே. 9

621. மாறி லாமல ரானொடு மாலவன்
வேற லானுறை வேற்காடு
ஈறி லாமொழி யேமொழி யாவெழில்
கூறி னார்க்கில்லை குற்றமே. 10

622. விண்ட மாம்பொழில் சூழ்திரு வேற்காடு
கண்டு நம்பன் கழல்பேணிச்
சண்பை ஞானசம் பந்தன செந்தமிழ்
கொண்டு பாடக் குணமாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 58. திருக்கரவீரம் : பண் – பழந்தக்கராகம்

623. அரியு நம்வினை யுள்ளன ஆசற
வரிகொள் மாமணி போற்கண்டங்
கரிய வன்திக முங்கர வீரத்தெம்
பெரிய வன்கழல் பேணவே. 1

624. தங்கு மோவினை தாழ்சடை மேலவன்
திங்க ளோடுடன் சூடிய
கங்கை யான்திக ழுங்கர வீரத்தெஞ்
சங்க ரன்கழல் சாரவே. 2

625. ஏதம் வந்தடை யாவினி நல்லன
பூதம் பல்படை யாக்கிய
காத லான்திக ழுங்கர வீரத்தெம்
நாதன் பாதம் நணுகவே. 3

626. பறையு நம்வினை யுள்ளன பாழ்பட
மறையு மாமணி போற்கண்டம்
கறைய வன்திக ழுங்கர வீரத்தெம்
இறைய வன்கழ லேத்தவே. 4

627. பண்ணி னார்மறை பாடல னாடலன்
விண்ணி னார்மதி லெய்தமுக்
கண்ணி னானுறை யுங்கர வீரத்தை
நண்ணு வார்வினை நாசமே. 5

628. நிழலி னார்மதி சூடிய நீள்சடை
அழலி னாரண லேந்திய
கழலி னாருறை யுங்கர வீரத்தைத்
தொழவல் லார்க்கில்லை துக்கமே. 6

629. வண்டர் மும்மதில் மாய்தர வெய்தவன்
அண்ட னாரழல் போலொளிர்
கண்ட னாருறை யுங்கர வீரத்துத்
தொண்டர் மேற்றுயர் தூரமே. 7

630. புனலி லங்கையர் கோன்முடி பத்திறச்
சினவ லாண்மை செகுத்தவன்
கனல வன்னுறை கின்றக ரவீரம்
எனவல் லார்க்கிட ரில்லையே. 8

631. வெள்ளத் தாமரை யானொடு மாலுமாய்த்
தெள்ளத் தீத்திர ளாகிய
கள்ளத் தானுறை யுங்கர வீரத்தை
உள்ளத் தான்வினை ஓயுமே. 9

632. செடிய மண்ணொடு சீவரத் தாரவர்
கொடிய வெவ்வுரை கொள்ளேன்மின்
கடிய வன்னுறை கின்ற கரவீரத்
தடிய வர்க்கில்லை யல்லலே. 10

633. வீடி லான்விளங் குங்கர வீரத்தெஞ்
சேடன் மேற்கசி வாற்றமிழ்
நாடு ஞானசம் பந்தன சொல்லிவை
பாடு வார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 59. திருத்தூங்கானைமாடம் : பண் – பழந்தக்கராகம்

634. ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய
வாழ்க்கை யொழியத்தவம்
அடங்கும் மிடங்கருதி நின்றீரெல்லா மடிக
ளடிநிழற்கீ ழாளாம்வண்ணம்
கிடங்கும் மதிலுஞ் சுலாவியெங்குங் கெழுமனைகள்
தோறு மறையின்னொலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 1

635. பிணிநீர சாதல் பிறத்தலிவை பிரியப்
பிரியாத பேரின்பத்தோ
டணிநீர மேலுல கமெய்தலுறி லறிமின்

குறைவில்லை ஆனேறுடை
மணிநீல கண்ட முடையபிரான் மலைமக
ளுந்தானு மகிழ்ந்துவாழும்,
துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 2

636. சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை சலிப்பாய
வாழ்க்கை யொழியத்தவம்
ஆமா றறியா தலமந்துநீ ரயர்ந்துங்
குறைவில்லை ஆனேறுடைப்
பூமாணலங்க விலங்கு கொன்றை புனல்பொதிந்த
புன்சடையி னானுறையும்
தூமாண் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 3

637. ஊன்றும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய
வாழ்க்கை யொழியத்தவம்
மான்று மனங்கருதி நின்றீரெல்லா மனந்திரிந்து
மண்ணில் மயங்காதுநீர்
மூன்று மதிலெய்த மூவாச்சிலை முதல்வர்க்
கிடம்போலு முகில்தோய்கொடி
தோன்றுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 4

638. மயல்தீர்மை யில்லாத தோற்றம்மிவை மரணத்தொ
டொத்தழியு மாறாதலால்
வியல்தீர மேலுக மெய்தலுறின் மிக்கொன்றும்
வேண்டா விமலனிடம்
உயர்தீர வோங்கிய நாமங்களா லோவாது
நாளு மடிபரவல்செய்
துயர்தீர் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 5

639. பன்னீர்மை குன்றிச் செவிகேட்பிலா படல்நோக்
கிற்கண் பவளந்நிற
நன்னீர்மை குன்றித் திரைதோலெர்டு நரைதோன்றுங்
காலம் நமக்காதல்முன்
பொன்னீர்மை துன்றப் புறந்தோன்றுநற் புனல்பொ
திந்தபுன் சடையினானுறையும்
தொன்னீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 6

640. இறையூண் துகளோ டிடுக்கணெய்தி யிழிப்பாய
வாழ்க்கை யொழியத்தவம்
நிறையூ ணெறிகருதி நின்றீரெல்லாம் நீள்கழ
லேநாளு நினைமின்சென்னிப்
பிறைசூ ழலங்க லிலங்குகொன்றை பிணையும்
பெருமான் பிரியாதநீர்த்
துறைசூழ் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 7

641. பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில்வாடிப் பழிப்பாய
வாழ்க்கை யொழியத்தவம்
இல்சூ ழிடங்கருதி நின்றீரெல்லா மிறையே
பிரியா தெழுந்துபோதும்
கல்சூழரக்கன் கதறச் செய்தான் காதலியுந்
தானுங் கருதிவாழும்
தொல்சீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 8

642. நோயும் பிணியு மருந்துயரமு நுகருடைய
வாழ்க்கை யொழியத்தவம்
வாயு மனங்கருதி நின்றீரெல்லா மலர்மிசைய
நான்முகனும் மண்ணும்விண்ணும்
தாய அடியளந்தான் காணமாட்டாத் தலைவர்க்
கிடம்போலுந் தண்சோலைவிண்
தோயுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 9

643. பகடூர் பசிநலிய நோய்வருதலாற் பழிப்பாய
வாழ்க்கை யொழியத்தவம்
முகடூர் மயிர்கடிந்த செய்கையாரு மூடுதுவ
ராடையரு நாடிச்சொன்ன
திகடூர்ந்த பொய்ம்மொழிகள் தேறவேண்டா திருந்திழையுந்
தானும் பொருந்திவாழுந்
துகடூர் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை
மாடந் தொழுமின்களே. 10

644. மண்ணார் முழவதிரும் மாடவீதி வயற்காழி
ஞானசம் பந்தன்நல்ல
பெண்ணா கடத்துப் பெருங்கோயில்சேர் பிறையுரிஞ்சுந்
தூங்கானை மாடமேயான்,

கண்ணார் கழல்பரவு பாடல்பத்துங் கருத்துணரக்
கற்றாருங் கேட்டாரும்போய்
விண்ணோ ருலகத்து மேவிவாழும் விதியதுவே
யாகும் வினைமாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 60. திருத்தோணிபுரம் : பண் – பழந்தக்கராகம்

645. வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடு மளியரசே ஒளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்நிலைமை பரிந்தொருகாற் பகராயே. 1

646. எறிசுறவங் கழிகான விளங்குருகே என்பயலை
அறிவுறா தொழிவதுவு மருவினையேன் பயனன்றே
செறிசிறார் பதமோதுந் திருத்தோணி புரத்துறையும்
வெறிநிறார் மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பாயே. 2

647. பண்பழனக் கோட்டகத்து வாட்டமிலாச் செஞ்சூட்டுக்
கண்பகத்தின் வாரணமே கடுவினையே னுறுபயலை
செண்பகஞ்சேர் பொழில்புடைசூழ் திருத்தோணிபுரத்துறையும்
பண்பனுக்கென் பரிசுரைத்தாற் பழியாமோ மொழியாயே. 3

648. காண்டகைய செங்காலொண் கழிநாராய் காதலாற்
பூண்டகைய முலைமெலிந்து பொன்பயந்தா ளென்றுவளர்
சேண்டகைய மணிமாடத் திருத்தோணி புரத்துறையும்
ஆண்டகையாற் கின்றேசென் றடியறிய வுணர்த்தாயே. 4

649. பாராரே யெனையொருகால் தொழுகின்றேன் பாங்கமைந்த
காராருஞ் செழுநிறத்துப் பவளக்காற் கபோதகங்காள்
தேராரு நெடுவீதித் திருத்தோணி புரத்துறையும்
நீராருஞ் சடையாருக் கென்நிலைமை நிகழ்த்தீரே. 5

650. சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள் விண்ணோடு மண்மறைகள்
தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே. 6

651. முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோ யறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறீரே. 7

652. பானாறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியுமெழி விளங்குயிலே
தேனாரும் பொழில்புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடத்தே வரவொருகாற் கூவாயே. 8

653. நற்பதங்கள் மிகஅறிவாய் நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்துறையும்
விற்பொலிதோள் விகிர்தனுக்கென் மெய்ப்பயலை விளம்பாயே. 9

654. சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே யுணத்தருவன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் திருநாம மெனக்கொருகாற் பேசாயே. 10

655. போர்மிகுத்த வயற்றோணி புரத்துறையும் புரிசடையெங்
கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்
தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்த னுரைசெய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 61. திருச்செங்காட்டங்குடி : பண் – பழந்தக்கராகம்

656. நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங் குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. 1

657. வாரேற்ற பறையொலியுஞ் சங்கொலியும் வந்தியம்ப
ஊரேற்ற செல்வத்தோ டோங்கியசீர் விழவோவாச்
சீரேற்ற முடைத்தாய செங்காட்டங் குடியதனுள்
காரேற்ற கொன்றையான் கணபதீச் சரத்தானே. 2

658. வரந்தையான் சோபுரத்தான் மந்திரத்தான் தந்திரத்தான்
கிரந்தையான் கோவணத்தான் கிண்கிணியான் கையதோர்
சிரந்தையான் செங்காட்டங் குடியான்செஞ் சடைசேருங்
கரந்தையான் வெண்ணீற்றன் கணபதீச் சரத்தானே. 3

659. தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையால் தொழுதேத்த அருச்சுனற்கன் றருள்செய்தான்
செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்
கங்கைசேர் வார்சடையான் கணபதீச் சரத்தானே. 4

660. பாலினால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. 5

661. நுண்ணியான் மிகப்பெரியான் ஓவுளார் வாயுளான்
தண்ணியான் வெய்யானந் தலைமேலான் மனத்துளான்
திண்ணியான் செங்காட்டங் குடியான்செஞ் சடைமதியக்
கண்ணியான் கண்ணுதலான் கணபதீச் சரத்தானே. 6

662. மையினார் மலர்நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்
மெய்யினான் பையரவ மரைக்கசைத்தான் மீன்பிறழச்
செய்யினார் தண்கழனிச் செங்காட்டங் குடியதனுள்
கையினார் கூரெரியான் கணபதீச் சரத்தானே. 7

663. தோடுடையான் குழையுடையா னரக்கன்றன் றோளடர்த்த
பீடுடையான் போர்விடையான் பெண்பாக மிகப்பெரியான்
சேடுடையான் செங்காட்டங் குடியுடையான் சேர்ந்தாடுங்
காடுடையா னாடுடையான் கணபதீச் சரத்தானே. 8

664. ஆனூரா வுழிதருவா னன்றிருவர் தேர்ந்துணரா
வானூரான் வையகத்தான் வாழ்த்துவார் மனத்துளான்
தேனூரான் செங்காட்டங் குடியான்சிற் றம்பலத்தான்
கானூரான் கழுமலத்தான் கணபதீச் சரத்தானே. 9

665. செடிநுகருஞ் சமணர்களுஞ் சீவரத்த சாக்கியரும்
படிநுகரா தயருழப்பார்க் கருளாத பண்பினான்
பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க்கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநரராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே. 10

666. கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக் கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 62. திருக்கோளிலி : பண் – பழந்தக்கராகம்

667. நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே யரன்நாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே. 1

668. ஆடரவத் தழகாமை அணிகேழற் கொம்பார்த்த
தோடரவத் தொருகாதன் துணைமலர்நற் சேவடிக்கே
பாடரவத் திசைபயின்று பணிந்தெழுவார் தம்மனத்தில்
கோடரவந் தீர்க்குமவன் கோளிலியெம் பெருமானே. 2

669. நன்றுநகு நாண்மலரால் நல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றிவழி பாடுசெய லுற்றவன்ற னோங்குயிர்மேல்
கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்
கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம் பெருமானே. 3

670. வந்தமண லாலிலிங்க மண்ணியின்கட் பாலாட்டும்
சிந்தைசெய்வோன் தன்கருமந் தேர்ந்துசிதைப் பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீச னென்றருளிக்
கொந்தணவு மலர்கொடுத்தான் கோளிலியெம் பெருமானே. 4

671. வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலும்நற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளு நம்பியென வேநினையும்
பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபத மீந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவுங் கோளிலியெம் பெருமானே. 5

[illegible] தாவியவ னுடனிருந்துங் காணாத தற்பரனை
ஆவிதனி லஞ்சொடுக்கி யங்கணனென் றாதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமர்னே. 6

673. கன்னவிலு மால்வரையான் கார்திகழு மாமிடற்றான்
சொன்னவிலு மாமறையான் தோத்திரஞ்செய் வாயினுளான்
மின்னவிலுஞ் செஞ்சடையான் வெண்பொடியா னங்கையினில்
கொன்னவிலுஞ் சூலத்தான் கோளிலியெம் பெருமானே. 7

674. அந்தரத்தில் தேருரு மரக்கன்மலை யன்றெடுப்பச்
சுந்தரத்தன் திருவிரலா லூன்றவவ னுடல்நெரிந்து
மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தானும்
கொந்தரத்த மதிச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 8

675. நாணமுடை வேதியனு நாரணனு நண்ணவொணாத்
தாணுவெனை யாளுடையான் றன்னடியார்க் கன்புடைமை
பாணனிசை பத்திமையாற் பாடுதம் பரிந்தளித்தான்
கோணலிளம் பிறைச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 9

676. தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத் திரத்தவர்சொல்
இடுக்கண்வரு மொழிகேளா தீசனையே யேத்துமின்கள்
நடுக்கமிலா அமருலகந் நண்ணலுமா மண்ணல்கழல்
கொடுக்ககிலா வரங்கொடுக்குங் கோளிலியெம் பெருமானே.10

677. நம்பனைநல் லடியார்க ணாமுடைமா டென்றிருக்கும்
கொம்பனையாள் பாகனெழிற் கோளிலியெம் பெருமானை
வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ்கொண்
டின்பமர வல்லார்க ளெய்துவர்க ளீசனையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருப்பிரமபுரம் : பல்பெயர்ப்பத்து . பண் – தக்கேசி

678. எரியார்மழுவொன் றேந்தியங்கை யிடுதலையேகலனா
வரியார்வளையா ரையம்வவ்வாய் மாநலம்வவ்வுதியே
சரியாநாவின் வேதகீதன் தாமரை நான்முகத்தன்
பெரியான்பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே. 1

679. பெயலார்சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்க ணஞ்சொனல்லார் கண்டுயில்வவ்வுதியே
இயலானடாவி யின்பமெய்தி யிந்திரனாள்மண்மேல்
வியலார்முரச மோங்குசெம்மை வேணுபுரத்தானே. 2

680. நகலார்தலையும் வெண்பிறையு நளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந் தையம்வவ்வாய் பாய்கலைவவ்வுதியே
அகலாதுறையு மாநிலத்தி லயலின் மையாலமரர்
புகலால்மலிந்த பூம்புகலி மேவியபுண்ணியனே. 3

681. சங்கோடிலங்கத் தோடுபெய்து காதிலொர் தாழ்குழையன்
அங்கோல்வளையா ரையம்வவ்வா யானலம்வவ்வுதியே
செங்கோனடாவிப் பல்லுயிர்க்குஞ் செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன் மேவியாண்ட வெங்குருமேயவனே. 4

682. தணிநீர்மதியஞ் சூடிநீடு தாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவா ரையம்வவ்வாய் பெய்கலைவவ்வுதியே
அணிநீருலக மாகியெங்கு மாழ்கடலாலழுங்கத்
துணிநீர்பணியத் தான்மிதந்த தோணிபுரத்தானே. 5

683. தவர்பூம்புனலுந் தண்மதியுங் கமழ்சடைமாட்டயலே
அவர்பூம்பலியோ டையம்வவ்வா யானலம்வவ்வுதியே
அவர்பூணரையர்க் காதியாய்அவள்தன் மன்னனாள்மண்மேல்
தவர்பூம்பதிக ளெங்குமெங்குந் தங்குதராயவனே. 6

684. முலையாழ்கெழும மொந்தைகொட்ட முன்கடைமாட்டயலே
நிலையாய்ப்பலிதேர்ந் தையம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்திவ் வையமெல்லாந் தன்னதோராணைநடாய்ச்
சிலையால்மலிந்த சீர்ச்சிலம்பன் சிரபுரமேயவனே. 7

685. எருதேகொணர்கென் றேறியங்கை யிடுதலையேகலனாக்
கருதேர்மடவா ரையம்வவ்வாய் கண்டுயில்வவ்வுதியே
ஒருதேர்கடாவி யாரமரு ளொருபதுதோள்தொலையப்
பொருதேர்வலவன் மேவியாண்ட புறவமர் புண்ணியனே. 8

686. துவர்சேர்கலிங்கப் போர்வையாருந் தூய்மையிலாச்சமணுங்
கவர்செய்துழலக் கண்டவண்ணங் காரிகைவார்குழலார்
அவர்பூம்பலியோ டையம்வவ்வா யானலம்வவ்வுதியே
தவர்செய்நெடுவேற் சண்டனாளச் சண்பையமர்ந்தவனே. 9

687. நிழலால்மலிந்த கொன்றைசூடி நீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவா ரையம்வவ்வாய் கோல்வளைவவ்வுதியே
அழலாயுலகங் கவ்வைதீர ஐந்தலைநீண்முடிய
கழனாகரையன் காவலாகக் காழியமர்ந்தவனே. 10

688. கட்டார்துழாயன் தாமரையா னென்றிவர் காண்பரிய
சிட்டார்பலிதேர்ந் தையம்வவ்வாய் செய்கலைவவ்வுதியே
நட்டார்நடுவே நந்தனாள நல்வினையாலுயர்ந்த
கொட்டாறுடுத்த தண்வயல்சூழ் கொச்சையமர்ந்தவனே. 11

689. கடையார்கொடிநன் மாடவீதிக் கழும்லவூர்க்கவுணி
நடையார்பனுவல் மாலையாக ஞானசம்பந்தன்நல்ல
படையார்மழுவன் மேல்மொழிந்த பல்பெயர்ப்பத்தும்வல்லார்க்
கடையாவினைக ளுலகில்நாளு மமருலகாள்பவரே. 12

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 64. திருப்பூவணம் : பண் – தக்கேசி

690. அறையார்புனலு மாமலரு மாடரவார்சடைமேல்
குறையார்மதியஞ் சூடிமாதோர் கூறுடையானிடமாம்
முறையார்முடிசேர் தென்னர்சேரர் சோழர்கள்தாம்வணங்கும்
திறையாரொளிசேர் செம்மையோங்குந் தென்திருப்பூவணமே.1

691. மருவார்மதில்மூன் றொன்றவெய்து மாமலையான்மடந்தை
ஒருபால்பாக மாகச்செய்த வும்பர்பிரானவனூர்
கருவார்சாலி யாலைமல்கிக் கழல்மன்னர்காத்தளித்த
திருவால்மலிந்த சேடர்வாழுந் தென்திருப்பூவணமே. 2

692. போரார்மதமா வுரிவைபோர்த்துப் பொடியணிமேனியனாய்க்
காரார்கடலின் நஞ்சமுண்ட கண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைப் புனல்வாய்பரப்பிப் பன்மணிபொன்கொழித்துச்
சீரார்வாரி சேரநின்ற தென்திருப்பூவணமே. 3

693. கடியாரலங்கற் கொன்றைசூடிக் காதிலொர்வார்குழையன்
கொடியார்வெள்ளை யேறுகந்த கோவணவன்னிடமாம்
படியார்கூடி நீடியோங்கும் பல்புகழாற்பரவச்
செடியார்வைகை சூழநின்ற தென்திருப்பூவணமே. 4

694. கூரார்வாளி சிலையிற்கோத்துக் கொடிமதில்கூட்டழித்த
போரார்வில்லி மெல்லியலாளோர் பால்மகிழ்ந்தானிடமாம்
ஆராஅன்பில் தென்னர்சேரர் சோழர்கள் போற்றிசைப்பத்
தேரார்வீதி மாடநீடுந் தென்திருப்பூவணமே. 5

695. நன்றுதீதென் றொன்றிலாத நான்மறையோன்கழலே
சென்றுபேணி யேத்தநின்ற தேவர்பிரானிடமாம்
குன்றிலொன்றி யோங்கமல்கு குளிர்பொழில்சூழ்மலர்மேல்
தென்றலொன்றி முன்றிலாருந் தென்திருப்பூவணமே. 6

696. பைவாயரவ மரையிற்சாத்திப் பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனி நீறுபூசி ஏறுகந்தானிடமாம்
கைவாழ்வளையார் மைந்தரோடுங் கலவியினால்நெருங்கிச்
செய்வார்தொழிலின் பாடலோவாத் தென்திருப்பூவணமே. 7

697. மாடவீதி மன்னிலங்கை மன்னனைமாண்பழித்துக்
கூடவென்றி வாள்கொடுத்தாள் கொள்கையினார்க்கிடமாம்
பாடலோடு மாடலோங்கிப் பன்மணிபொன்கொழித்து
ஓடநீரால் வைகைசூழு முயர்திருப்பூவணமே. 8

698. பொய்யாவேத நாவினானும் பூமகள்காதலனும்
கையாற்றொழுது கழல்கள் போற்றக் கனலெரியானவனூர்
மையார்பொழிலின் வண்டுபாட வைகைமணிகொழித்துச்
செய்யார்கமலந் தேனரும்புந் தென்திருப்பூவணமே. 9

699. அலையார்புனலை நீத்தவருந் தேரருமன்புசெய்யா
நிலையாவண்ண மாயம்வைத்த நின்மலன் தன்னிடமாம்
மலைபோற்றுன்னி வென்றியோங்கு மாளிகைசூழ்ந்தயலே
சிலையார்புரிசை பரிசுபண்ணுந் தென்திருப்பூவணமே. 10

700. திண்ணார்புரிசை மாடமோங்குந் தென்திருப்பூவணத்துப்
பெண்ணார்மேனி யெம்மிறையைப் பேரியலின்தமிழால்
நண்ணாருட்கக் காழிமல்கு ஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல் பத்தும்வல்லார் பயில்வதுவானிடையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம்
### பண் – தக்கேசி

701. அடையார்தம் புரங்கள்மூன்று மாரழலிலழுந்த
விடையார்மேனி யராய்ச்சீறும் வித்தகர்மேயவிடங்
கடையார்மாட நீடியெங்குங் கங்குல்புறந்தடவப்
படையார் புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே. 1

702. எண்ணாரெயில்கள் மூன்றுஞ்சீறு மெந்தைபிரானிமையோர்
கண்ணாயுலகங் காக்கநின்ற கண்ணுதனண்ணுமிடம்
மண்ணார்சோலைக் கோலவண்டு வைகலுந்தேனருந்திப்
பண்ணார்செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 2

703. மங்கையங்கோர் பாகமாக வாணிலவார்சடைமேற்
கங்கையங்கே வாழவைத்த கள்வனிருந்தவிடம்
பொங்கயஞ்சேர் புணரியோத மீதுயர்பொய்கையின்மேற்
பங்கயஞ்சேர் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 3

704. தாரார்கொன்றை பொன்றயங்கச் சாத்தியமார்பகலம்
நீரார்நீறு சாந்தம்வைத்த நின்மலன்மன்னுமிடம்
போரார்வேற்கண் மாதர்மைந்தர் புக்கிசைபாடலினாற்
பாரார்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 4

705. மைசேர்கண்ட ரண்டவாணர் வானவருந்துதிப்ப
மெய்சேர்பொடிய ரடியாரேத்த மேவியிருந்தவிடங்
கைசேர்வளையார் விழைவினோடு காதன்மையாற்கழலே
பைசேரரவா ரல்குலார்சேர் பல்லவனீச்சரமே. 5

706. குழலினோசை வீணைமொந்தை கொட்டமுழவதிரக்
கழலினோசை யார்க்கஆடுங் கடவுளிருந்தவிடஞ்
சுழியிலாருங் கடலிலோதந் தெண்டிரைமொண்டெறியப்
பழியிலார்கள் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 6

707. வெந்தலாய வேந்தன்வேள்வி வேரறச்சாடிவிண்ணோர்
வந்தெலாமுன் பேணநின்ற மைந்தன்மகிழ்ந்தஇடம்
மந்தலாய மல்லிகையும் புன்னைவளர்குரவின்
பந்தலாரும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 7

708. தேரரக்கன் மால்வரையைத் தெற்றியெடுக்கவவன்
தாரரக்குந் திண்முடிக ளூன்றியசங்கரனூர்
காரரக்குங் கடல்கிளர்ந்த காலமெலாமுணரப்
பாரரக்கம் பயில்புகரிற் பல்லவனீச்சரமே. 8

709. அங்கமாறும் வேதநான்கு மோதுமயன்நெடுமால்
தங்கணாலும் நேடநின்ற சங்கரன்றங்குமிடம்
வங்கமாரு முத்தமிப்பி வார்கடலூடலைப்பப்
பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 9

710. உண்டுடுக்கை யின்றியேநின் றூர்நகவேதிரிவார்
கண்டுடுக்கை மெய்யிற்போர்த்தார் கண்டறியாதவிடந்
தண்டுடுக்கை தாளந்தக்கை சாரநடம்பயில்வார்
பண்டிடுக்கண் தீரநல்கும் பல்லவனீச்சரமே. 10

711. பத்தரேத்தும் பட்டினத்துப் பல்லவனீச்சரத்தெம்
அத்தன்றன்னை யணிகொள்காழி ஞானசம்பந்தன்சொல்
சித்தஞ்சேரச் செப்புமாந்தர் தீவினைநோயிலராய்
ஒத்தமைந்த வும்பர்வானி லுயர்வினொடோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 66. திருச்சண்பைநகர் : பண் – தக்கேசி

712. பங்கமேறு மதிசேர்சடையார் விடையார்பலவேதம்
அங்கமாறு மறைநான்கவையு மானார்மீனாரும்
வங்கமேவு கடல்வாழ்பரதர் மனைக்கேநுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ் சண்பைநகராரே. 1

713. சூதகஞ்சேர் கொங்கையாளோர் பங்கர்சுடர்க்கமலப்
போதகஞ்சேர் புண்ணியனார் பூதகணநாதர்
மேதகஞ்சேர் மேகமந்தண் சோலையில்விண்ணார்ந்த
சாதகஞ்சேர் பாளைநீர்சேர் சண்பைநகராரே. 2

714. மகரத்தாடு கொடியோனுடலம் பொடிசெய்தவனுடைய
நிகரொப்பில்லாத் தேவிக்கருள்செய் நீலகண்டனார்
பகரத்தாரா வன்னம்பகன்றில் பாதம்பணிந்தேத்தத்
தகரப்புன்னை தாழைப்பொழில்சேர் சண்பைநகராரே. 3

715. மொய்வல்லசுரர் தேவர்கடைந்த முழுநஞ்சதுவுண்ட
தெய்வர்செய்ய வுருவர்கரிய கண்டர்திகழ்சுத்திக்
கையர்கட்டங் கத்தர்கரியி னுரியர்காதலாற்
சைவர்பாசு பதர்கள்வணங்குஞ் சண்பைநகராரே. 4

716. கலமார்கடலுள் விடமுண்டமரர்க் கமுதமருள்செய்த
குலமார்கயிலைக் குன்றதுடைய கொல்லையெருதேறி
நலமார்வெள்ளை நாளிகேரம் விரியாநறும்பாளை
சலமார்கரியின் மருப்புக்காட்டுஞ் சண்பைநகராரே. 5

717. மாகரஞ்சே ரத்தியின்தோல் போர்த்துமெய்ம்மாலான
சூகரஞ்சே ரெயிறுபூண்ட சோதியன்மேதக்க
ஆகரஞ்சே ரிப்பிமுத்தை யந்தண்வயலுக்கே
சாகரஞ்சேர் திரைகளுந்துஞ் சண்பைநகராரே. 6,7

718. இருளைப்புரையு நிறத்திலரக்கன் றனையீடழிவித்து
அருளைச்செய்யு மம்மானேரா ரந்தண்கந்தத்தின்
மருளைச்சுரும்பு பாடியளக்கர் வரையார்திரைக்கையால்
தரளத்தோடு பவளமீனுஞ் சண்பைநகராரே. 8

719. மண்டான்முழுது முண்டமாலு மலர்மிசைமேலயனும்
எண்டானறியா வண்ணநின்ற இறைவன்மறையோதி
தண்டார்குவளைக் கள்ளருந்தித் தாமரைத்தாதின்மேற்
பண்டான்கொண்டு வண்டுபாடுஞ் சண்பைநகராரே. 9

720. போதியாரும் பிண்டியாரும் புகழலசொன்னாலும்
நீதியாகக் கொண்டங்கருளு நிமலனிருநான்கின்
மாதிசித்தர் மாமறையின் மன்னியதொன்னூலர்
சாதிகீத வர்த்தமானர் சண்பைநகராரே. 10

721. வந்தியோடு பூசையல்லாப் போழ்தின்மறைபேசிச்
சந்திபோதிற் சமாதிசெய்யுஞ் சண்பைநகர்மேய
அந்திவண்ணன் தன்னையழகார் ஞானசம்பந்தன்சொற்
சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதிசேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 67. திருப்பழனம் : பண் – தக்கேசி

722. வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாதாஎனவும் நக்காஎனவும் நம்பாஎனநின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே. 1

723. கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையு முடையார்காலனைப்
புண்ணாறுதிர மெதிராறோடப் பொன்றப்புறந்தாளால்
எண்ணாதுதைத்த எந்தைபெருமா னிமவான்மகளோடும்
பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழனநகராரே. 2

724. பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல்விழிகட்பேய்
உறையுமயான மிடமாவுடையா ருலகர்தலைமகன்
அறையுமலர்கொண் டடியார்பரவி யாடல்பாடல்செய்
பறையுஞ்சங்கும் பலியுமோவாப் பழனநகராரே. 3

725. உரமன்னுயர்கோட் டுலறுகூகை யலறுமயானத்தில்
இரவிற்பூதம் பாடஆடி யெழிலாரலர்மேலைப்
பிரமன்றலையி னறவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன்பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

726. குலவெஞ்சிலையான் மதில்மூன்றெரித்த கொல்லேறுடையண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற்காவேரி
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரைமுன்சேர்க்கும் பழனநகராரே. 5

727. வீளைக்குரலும் விளிசங்கொலியும் விழவினொலியோவா
மூளைத்தலைகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெய்தார்
ஈளைப்படுகி லிலையார்தெங்கிற் குலையார்வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழனநகராரே. 6

728. பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார்திருமேனி
செய்யார்கரிய மிடற்றார்வெண்ணூல் சேர்ந்தஅகலத்தார்
கையாடலினார் புனலான்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவ முடனேவைத்தார் பழனநகராரே. 7

729. மஞ்சோங்குயர முடையான்மலையை மாறாயெடுத்தான்தோள்
அஞ்சோடஞ்சு மாறுநான்கு மடரவூன்றினார்
நஞ்சார்சுடலைப் பொடிநீறணிந்த நம்பான்வம்பாரும்
பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழனநகராரே. 8

730. கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காணாத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. 9

731. கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சியை
உண்டாங்கவர்க ளுரைக்குஞ்சிறுசொல் லோரார்பாராட்ட
வண்டாமரையின் மலர்மேல்நறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. 10

732. வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரந்தன்னுள்
நாவுய்த்தனைய திறலால்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார்நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருக்கயிலாயம் : பண் – தக்கேசி

733. பொடிகொளுருவர் புலியினதளர் புரிநூல்திகழ்மார்பில்
கடிகொள்கொன்றை கலந்தநீற்றர் கறைசேர்கண்டத்தர்
இடியகுரலா லிரியுமடங்கல் தொடங்குமுனைச்சாரல்
கடியவிடைமேற் கொடியொன்றுடையார் கயிலைமலையாரே.1

734. புரிகொள்சடையா ரடியர்க்கெளியார் கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில் வைத்துகந்த தேவர்பெருமானார்
பரியகளிற்றை யரவுவிழுங்கி மழுங்கஇருள்கூர்ந்த
கரியமிடற்றர் செய்யமேனிக் கயிலைமலையாரே. 2

735. மாவினுரிவை மங்கைவெருவ மூடிமுடிதன்மேல்
மேவுமதியு நதியும்வைத்த இறைவர்கழலுன்னும்
தேவர்தேவர் திரிசூலத்தர் திரங்கன்முகவன்சேர்
காவும்பொழிலுங் கடுங்கற்சுனைசூழ் கயிலைமலையாரே. 3

736. முந்நீர்சூழ்ந்த நஞ்சமுண்ட முதல்வர்மதனன்றன்
தென்னீருருவ மழியத்திருக்கண் சிவந்தநுதலினார்
மன்னீர்மடுவும் படுகல்லறையி னுழுவைசினங்கொண்டு
கன்னீர்வரைமே லிரைமுன்தேடுங் கயிலைமலையாரே. 4

737. ஒன்றும்பலவு மாயவேடத் தொருவர்கழல்சேர்வார்
நன்றுநினைந்து நாடற்குரியார் கூடித்திரண்டெங்கும்
தென்றியிருளில் திகைத்தகரித்தண் சாரல்நெறியோடிக்
கன்றும்பிடியு மடிவாரஞ்சேர் கயிலைமலையாரே. 5

738. தாதார்கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார்பாக மாகவைத்த புனிதர்பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனா யறநான்கருள்செய்த
காதார்குழைய வேதத்திரளர் கயிலைமலையாரே. 6,7

739. தொடுத்தார்புரமூன் றெரியச்சிலைமே லெரியொண்பகழியார்
எடுத்தான்திரள்தோள் முடிகள்பத்து மிடியவிரல்வைத்தார்
கொடுத்தார்படைகள் கொண்டாராளாக் குறுகிவருங்கூற்றைக்
கடுத்தாங்கவனைக் கழலாலுதைத்தார் கயிலைமலையாரே. 8

740. ஊணாப்பலிகொண் டுலகிலேற்றா ரிலகுமணிநாகம்
பூணாணார மாகப்பூண்டார் புகழுமிருவர்தாம்
பேணாவோடி நேடஎங்கும் பிறங்குமெரியாகிக்
காணாவண்ண முயர்ந்தார்போலுங் கயிலைமலையாரே. 9

741. விருதுபகரும் வெஞ்சொற்சமணர் வஞ்சச்சாக்கியர்
பொருதுபகரு மொழியைக்கொள்ளார் புகழ்வார்க்கணியராய்
எருதொன்றுகைத்திங் கிடுவார்தம்பா லிரந்துண்டிகழ்வார்கள்
கருதும்வண்ண முடையார்போலுங் கயிலைமலையாரே. 10

742. போரார்கடலிற் புனல்சூழ்காழிப் புகழார்சம்பந்தன்
காரார்மேகங் குடிகொள்சாரற் கயிலைமலையார்மேல்
தேராவுரைத்த செஞ்சொன்மாலை செப்புமடியார்மேல்
வாராபிணிகள் வானோருலகின் மருவுமனத்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 69. திருவண்ணாமலை : பண் – தக்கேசி

743. பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்க ளெரித்தவன்று மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 1

744. மஞ்சைப்போழ்ந்த மதியஞ்சூடும் வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத் தடக்குமதுவும் நன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும் வேடர்மடவா ரிதணமதுவேறி
அஞ்சொற்கிளிக ளாயோவென்னு மண்ணாமலையாரே. 2

745. ஞானத்திரளாய் நின்றபெருமான் நல்லஅடியார்மேல்
ஊனத்திரளை நீக்குமதுவு முண்மைப்பொருள்போலும்
ஏனத்திரளோ டினமான்கரடி யிழியுமிரவின்கண்
ஆனைத்திரள்வந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 3

746. இழைத்தஇடையா ளுமையாள்பங்க ரிமையோர்பெருமானார்
தழைத்தசடையா விடையொன்றேறித் தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக் காணாதோடிப் பெருங்கைமதவேழம்
அழைத்துத்திரிந்தங் குறங்குஞ்சார லண்ணாமலையாரே. 4

747. உருவிற்றிகழு முமையாள்பங்க ரிமையோர்பெருமானார்
செருவில்லொருகால் வளையவூன்றிச் செந்தீயெழுவித்தார்
பருவிற்குறவர் புனத்திற்குவித்த பருமாமணிமுத்தம்
அருவித்திரளோ டிழியுஞ்சார லண்ணாமலையாரே. 5

748. எனைத்தோரூழி யடியாரேத்த இமையோர்பெருமானார்
நினைத்துத்தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலருறைகோயில்
கனைத்தமேதி காணாதாயன் கைம்மேற்குழலூத
அனைத்துஞ்சென்று திரளுஞ்சார லண்ணாமலையாரே. 6

749. வந்தித்திருக்கு மடியார்தங்கள் வரமேல்வினையோடு
பந்தித்திருந்த பாவந்தீர்க்கும் பரமனுறைகோயில்
முந்தியெழுந்த முழவினோசை முதுகல்வரைகள்மேல்
அந்திப்பிறைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 7

750. மறந்தான்கருதி வலியைநினைந்து மாறாயெடுத்தான்றோள்
நிறந்தான்முரிய நெரியவூன்றி நிறையவருள்செய்தார்
திறந்தான்காட்டி யருளாயென்று தேவரவர்வேண்ட
அறந்தான்காட்டி யருளிச்செய்தா ரண்ணாமலையாரே. 8

751. தேடிக்காணார் திருமால்பிரமன் தேவர்பெருமானை
மூடியோங்கி முதுவேயுகுத்த முத்தம்பலகொண்டு
கூடிக்குறவர் மடவார்குவித்துக் கொள்ளவம்மினென்
றாடிப்பாடி யளக்குஞ்சார லண்ணாமலையாரே. 9

752. தட்டையிடுக்கித் தலையைப்பறித்துச் சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா பேணித்தொழுமின்கள்
வட்டமுலையா ளுமையாள்பங்கர் மன்னியுறைகோயில்
அட்டமாளித் திரள்வந்தணையு மண்ணாமலையாரே. 10

753. அல்லாடரவ மியங்குஞ்சார லண்ணாமலையாரை
நல்லார்பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்த பாடலான பத்துமிவைகற்று
வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னிவாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 70. திருஈங்கோய்மலை : பண் – தக்கேசி

754. வானத்துயர்தண் மதிதோய்சடைமேல் மத்தமலர்சூடித்
தேனொத்தனமென் மொழிமான்விழியாள் தேவிபாகமாக்
கானத்திரவி லெரிகொண்டாடுங் கடவுளுலகேத்த
ஏனத்திரள்வந் திழியுஞ்சார லீங்கோய்மலையாரே. 1

755. சூலப்படையொன் றேந்தியிரவிற் சுடுகாடிடமாகக்
கோலச்சடைகள் தாழக்குழல்யாழ் மொந்தைகொட்டவே
பாலொத்தனைய மொழியாள்காண ஆடும்பரமனூர்
ஏலத்தொடுநல் லிலவங்கமழு மீங்கோய்மலையாரே. 2

756. கண்கொள்நுதலார் கறைகொள்மிடற்றார் கரியினுரிதோலார்
விண்கொள்மதிசேர் சடையார்விடையார் கொடியார்வெண்ணீறு
பெண்கொள்திருமார் பதனிற்பூசும் பெம்மானெமையாள்வார்
எண்குமரியுந் திரியுஞ்சார லீங்கோய்மலையாரே. 3

757. மறையின்னிசையார் நெறிமென்கூந்தல் மலையான்மகளோடும்
குறைவெண்பிறையும் புனலுந்நிலவுங் குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங் கழலுமார்ப்பப் படுகாட்டெரியாடும்
இறைவர்சிறைவண் டறைபூஞ்சார லீங்கோய்மலையாரே. 4

758. நொந்தசுடலைப் பொடிநீறணிவார் நுதல்சேர்கண்ணினார்
கந்தமலர்கள் பலவுந்நிலவு கமழ்புன்சடைதாழப்
பந்தண்விரலாள் பாகமாகப் படுகாட்டெரியாடும்
எந்தம்மடிகள் கடிகொள்சார லீங்கோய்மலையாரே. 5

759. நீறாரகல முடையார்நிரையார் கொன்றையரவோடும்
ஆறார்சடையா ரயில்வெங்கணையா லவுணர்புரமூன்றும்
சீறாவெரிசெய் தேவர்பெருமான் செங்கணடல்வெள்ளை
ஏறார்கொடியா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. 6

760. வினையாயினதீர்த் தருளேபுரியும் விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேல் மதியஞ்சூடும் நம்பர்நலமல்கு
தனையார்கமல மலர்மேலுறைவான் தலைபோடனலேந்தும்
எனையாளுடையா னுமையாளோடு மீங்கோய்மலையாரே. 7

761. பரக்கும்பெருமை இலங்கையென்னும் பதியிற்பொலிவாய
அரக்கர்க்கிறைவன் முடியுந்தோளு மணியார்விரல்தன்னால்
நெருக்கியடர்த்து நிமலாபோற்றி யென்றுநின்றேத்த
இரக்கம்புரிந்தா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. 8

762. வரியார்புலியி னுரிதோலுடையான் மலையான்மகளோடும்
பிரியாதுடனா யாடல்பேணும் பெம்மான்றிருமேனி
அரியோடயனு மறியாவண்ண மளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்த எங்கள்பெருமா னீங்கோய்மலையாரே. 9

763. பிண்டியேன்று பெயராநிற்கும் பிணங்குசமணரும்
மண்டைகலனாக் கொண்டுதிரியும் மதியில்தேரரும்
உண்டிவயிறா ருரைகள்கொள்ளா துமையோடுடனாகி
இண்டைச்சடையா னிமையோர்பெருமா னீங்கோய்மலையாரே. 10

764. விழவாரொலியு முழவுமோவா வேணுபுரந்தன்னுள்
அழலார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள்சம்பந்தன்
எழிலார்சுனையும் பொழிலும்புடைசூ ழீங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலைகளைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 71. திருநறையூர்ச்சித்தீச்சரம் : பண் – தக்கேசி

765. பிறைகொள்சடையர் புலியினுரியர் பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர் கபாலமேந்துங் கையர்கங்காளர்
மறைகொள்கீதம் பாடச்சேடர் மனையின்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டு தேனார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 1

766. பொங்கார்சடையர் புனலரனலர் பூதம்பாடவே
தங்காதலியுந் தாமுமுடனாய்த் தனியோர்விடையேறிக்
கொங்கார்கொன்றை வன்னிமத்தஞ் சூடிக்குளிர்பொய்கைச்
செங்காலனமும் பெடையுஞ்சேருஞ் சித்தீச்சரத்தாரே. 2

767. முடிகொள்சடையர் முளைவெண்மதியர் மூவாமேனிமேல்
பொடிகொள்நூலர் புலியினதளர் புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலை வயல்சூழ்மடுவிற் கயலாரினம்பாயக்
கொடிகொள்மாடக் குழாமார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 3

768. பின்றாழ்சடைமேல் நகுவெண்டலையர் பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற் சங்கார்குழைதான் மிளிருமொருகாதர்
பொன்றாழ்கொன்றை செருந்திபுன்னை பொருந்துசெண்பகம்
சென்றார்செல்வத் திருவார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 4

769. நீரார்முடியர் கறைகொள்கண்டர் மறைகள்நிறைநாவர்
பாரார்புகழால் பத்தர்சித்தர் பாடியாடவே
தேரார்வீதி முழவார்விழவி னொலியுந்திசைசெல்லச்
சீரார்கோலம் பொலியுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 5

770. நீண்டசடையர் நிரைகொள்கொன்றை விரைகொள்மலர்மாலை
தூண்டுசுடர் பொன்னொளிகொள் மேனிப்பவளத்தெழிலார்வந்
தீண்டுமாட மெழிலார்சோலை யிலங்குகோபுரந்
தீண்டுமதியந் திகழுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 6

771. குழலார்சடையர் கொக்கினிறகர் கோலநிறமத்தம்
தழலார்மேனித் தவளநீற்றர் சரிகோவணக்கீளர்
எழிலார்நாகம் புலியினுடைமே லிசைத்துவிடையேறிக்
கழலார்சிலம்பு புலம்பவருவார் சித்தீச்சரத்தாரே. 7

772. கரையார்கடல்சூ ழிலங்கைமன்னன் கயிலைமலைதன்னை
வரையார்தோளா லெடுக்கமுடிகள் நெரித்துமனமொன்றி
உரையார்கீதம் பாடநல்ல வுலப்பிலருள்செய்தார்
திரையார்புனல்சூழ் செல்வநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 8

773. நெடியான்பிரமன் தேடிக்காணா நினைப்பார்மனத்தராய்
அடியாரவரு மருமாமறையு மண்டத்தமரரும்
முடியால்வணங்கிக் குணங்களேத்தி முதல்வாஅருளென்னச்
செடியார்செந்நெல் திகழுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 9

774. நின்றுண்சமண ரிருந்துண்தேரர் நீண்டபோர்வையார்
ஒன்றுமுணரா ஊமர்வாயி லுரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பா லுண்ணமுலையிற் கபாலமயல்பொழியச்
சென்றுண்டார்ந்து சேருநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 10

775. குயிலார்கோல மாதவிகள் குளிர்பூச்சுரபுன்னை
செயிலார்பொய்கை சேருநறையூர்ச் சித்தீச்சரத்தாரை
மயிலார்சோலை சூழ்ந்தகாழி மல்குசம்பந்தன்
பயில்வார்க்கினிய பாடல்வல்லார் பாவநாசமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருக்குடந்தைக்காரோணம் : பண் – தக்கேசி

776. வாரார்கொங்கை மாதோர்பாக மாகவார்சடை
நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன்குடமூக்கில்
காரார்கண்டத் தெண்டோளெந்தை காரோணத்தாரே. 1

777. முடியார்மன்னர் மடமான்விழியார் மூவுலகும்மேத்தும்
படியார்பவள வாயார்பலரும் பரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார் மாடவீதிக் குடந்தைக்குழகாருங்
கடியார்சோலைக் கலவமயிலார் காரோணத்தாரே. 2

778. மலையார்மங்கை பங்கரங்கை யனலர்மடலாரும்
குலையார்தெங்கு குளிர்கொள்வாழை யழகார்குடமூக்கில்
முலையாரணிபொன் முளைவெண்ணகையார் மூவாமதியினார்
கலையார்மொழியார் காதல்செய்யுங் காரோணத்தாரே. 3

779. போதார்புனல்சேர் கந்தமுந்திப் பொலியவ்வழகாரும்
தாதார்பொழில்சூழ்ந் தெழிலார்புறவி லந்தண்குடமூக்கில்
மாதார்மங்கை பாகமாக மனைகள்கலிதேர்வார்
காதார்குழையர் காளகண்டர் காரோணத்தாரே. 4

780. பூவார்பொய்கை யலர்தாமரைசெங் கழுநீர்புறவெல்லாம்
தேவார்சிந்தை யந்தணாளர் சீராலடிபோற்றக்
கூவார்குயில்க ளாலும்மயில்க ளின்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந் தழகார்குடந்தைக் காரோணத்தாரே. 5

781. மூப்பூர்நலிய நெதியார்விதியாய் முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தன் நிலைகண்டருளுங் குழகர்குடமூக்கில்
தீர்ப்பாருடலி லடுநோயவலம் வினைகள்நலியாமைக்
காப்பார்கால னடையாவண்ணங் காரோணத்தாரே. 6

782. ஊனார்தலைகை யேந்தியுலகம் பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார் புலியினுடையார் கரியின்னுரிபோர்வை
தேனார்மொழியார் திளைத்தங்காடி திகழுங்குடமூக்கில்
கானார்நட்ட முடையார்செல்வக் காரோணத்தாரே. 7

783. வரையார்திரள்தோள் மதவாளரக்க னெடுப்பமலைசேரும்
விரையார்பாத நுதியாலூன்ற நெரிந்துசிரம்பத்தும்
உரையார்கீதம் பாடக்கேட்டங் கொளிவாள்கொடுத்தாரும்
கரையார்பொன்னி சூழ்தண்குடந்தைக் காரோணத்தாரே. 8

784. கரியமாலுஞ் செய்யபூமே லயனுங்கழறிப்போய்
அரியவண்டந் தேடிப்புக்கு மளக்கவொண்கிலார்
தெரியஅரிய தேவர்செல்வந் திகழுங்குடமூக்கில்
கரியகண்டர் காலகாலர் காரோணத்தாரே. 9

785. நாணாரமணர் நல்லதறியார் நாளுங்குரத்திகள்
பேணார்தூய்மை மாசுகழியார் பேசேலவரோடுஞ்
சேணார்மதிதோய் மாடமல்கு செல்வநெடுவீதிக்
கோணாகரமொன் றுடையார்குடந்தைக் காரோணத்தாரே. 10

786. கருவார்பொழில்சூழ்ந் தழகார்செல்வக் காரோணத்தாரைத்
திருவார்செல்வ மல்குசண்பைத் திகழுஞ்சம்பந்தன்
உருவார்செஞ்சொல் மாலையிவைபத் துரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப் பிறப்பதறுத்துக் கவலைகழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 73. திருக்கானூர் : பண் – தக்கேசி

787. வானார்சோதி மன்னுசென்னி வன்னிபுனங்கொன்றைத்
தேனார்போது தானார்கங்கை திங்களொடுசூடி
மானேர்நோக்கி கண்டங்குவப்ப மாலையாடுவார்
கானூர்மேய கண்ணார்நெற்றி யானூர்செல்வரே. 1

788. நீந்தலாகா வெள்ளமூழ்கு நீள்சடைதன்மேலோர்
ஏய்ந்தகோணற் பிறையோடரவு கொன்றையெழிலாரப்
போந்தமென்சொ லின்பம்பயந்த மைந்தரவர்போலாங்
காந்தள்விம்மு கானூர்மேய சாந்தநீற்றுரே. 2

789. சிறையார்வண்டுந் தேனும்விம்மு செய்யமலர்க்கொன்றை
மறையார்பாட லாடலோடு மால்விடைமேல்வருவார்
இறையார்வந்தெ னில்புகுந்தென் னெழில்நலமுங்கொண்டார்
கறையார்சோலைக் கானூர்மேய பிறையார் சடையாரே. 3

790. விண்ணார்திங்கட் கண்ணிவெள்ளை மாலையதுசூடித்
தண்ணாரக்கோ டாமைபூண்டு தழைபுன்சடைதாழ
எண்ணாவந்தெ னில்புகுந்தங் கெவ்வநோய்செய்தான்
கண்ணார்சோலைக் கானூர்மேய விண்ணோர்பெருமானே. 4

791. தார்கொள்கொன்றைக் கண்ணியோடுந தண்மதியஞ்சூடி
சீர்கொள்பாட லாடலோடு சேடராய்வந்து
ஊர்கள்தோறு மையமேற்றென் னுள்வெந்நோய்செய்தார்
கார்கொள்சோலைக் கானூர்மேய கறைக்கண்டத்தாரே. 5

792. முளிவெள்ளெலும்பு நீறுநூலு மூழ்குமார்பராய்
எளிவந்தார்போ லையமென்றே னில்லேபுகுந்துள்ளத்
தெளிவுநாணுங் கொண்டகள்வர் தேறலார்பூவில்
களிவண்டியாழ்செய் கானூர்மேய ஒளிவெண்பிறையாரே. 6

793. மூவாவண்ணர் முளைவெண்பிறையர் முறுவல்செய்திங்கே
பூவார்கொன்றை புனைந்துவந்தார் பொக்கம்பலபேசிப்
போவார்போல மால்செய்துள்ளம் புக்கபுரி நூலர்
தேவார்சோலைக் கானூர்மேய தேவதேவரே. 7

794. தமிழின்நீர்மை பேசித்தாளம் வீணைபண்ணிநல்ல
முழவமொந்தை மல்குபாடல் செய்கையிடமோவார்
குமிழின்மேனி தந்துகோல நீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக் கானூர்மேய பவளவண்ணரே. 8

795. அந்தமாதி யயனுமாலு மார்க்குமறிவரியான்
சிந்தையுள்ளு நாவின்மேலுஞ் சென்னியுமன்னினான்
வந்தென்னுள்ளம் புகுந்துமாலை காலையாடுவான்
கந்தமல்கு கானூர்மேய எந்தைபெம்மானே. 9

796. ஆமையரவோ டேனவெண்கொம் பக்குமாலைபூண்
டாமோர்கள்வர் வெள்ளல்போல உள்வெந்நோய்செய்தார்
ஓமவேத நான்முகனுங் கோணாகணையானுஞ்
சேமமாய செல்வர்கானூர் மேயசேடரே. 10

797. கழுதுதுஞ்சுங் கங்குலாடுங் கானூர்மேயானைப்
பழுதில்ஞான சம்பந்தன்சொற் பத்தும்பாடியே
தொழுதுபொழுது தோத்திரங்கள் சொல்லித்துதித்துநின்
றழுதுநக்கு மன்புசெய்வா ரல்ல லறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. திருப்புறவம் : பண் – தக்கேசி

798. நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்துநயனத்தாற்
சுறவஞ்செறிவண் கொடியோனுடலம்பொடியாவிழிசெய்தான்
புறவமுறைவண் பதியாமதியார் புரமூன்றெரிசெய்த
இறைவனறவ னிமையோரேத்த உமையோடிருந்தானே. 1

799. உரவன்புலியி னுரிதோலாடை யுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங் கச்சாஅசைத்த விகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும்பகலு மிமையோரேத்த உமையோடிருந்தானே. 2

800. பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்கு குழலிகாணக் கரிகாட்டெரியாடி
அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியாவமர்வெய்தி
எந்தம்பெருமா னிமையோரேத்த உமையோடிருந்தானே. 3

801. நினைவார்நினைய இனியான்பனியார் மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையொன் றுடையான்கங்கை திங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின் முடியான்கடல்சூழ் புறவம்பதியாக
எனையாளுடையா னிமையோரேத்த உமையோடிருந்தானே. 4

802. செங்கணரவும் நகுவெண்டலையும் முகிழ்வெண்டிங்களுந்
தங்குசடையன் விடையனுடையன் சரிகோவணஆடை
பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
எங்கும்பரவி யிமையோரேத்த உமையோடிருந்தானே. 5

803. பின்னுசடைகள் தாழக்கேழ லெயிறுபிறழப்போய்
அன்னநடையார் மனைகள்தோறு மழகாற்பலிதேர்ந்து
புன்னைமடலின் பொழில்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
என்னையுடையா னிமையோரேத்த உமையோடிருந்தானே. 6

804. உண்ணற்கரிய நஞ்சையுண் டொருதோழந்தேவர்
விண்ணிற்பொலிய அமுதமளித்த விடைசேர்கொடியண்ணல்
பண்ணிற்சிறைவண் டறைபூஞ்சோலைப் புறவம்பதியாக
எண்ணிற்சிறந்த இமையோரேத்த உமையோடிருந்தானே. 7

805. விண்டானதிர வியனார்கயிலை வேரோடெடுத்தான்றான்
திண்டோளுடலு முடியுநெரியச் சிறிதேயூன்றிய
புண்டானொழிய அருள்செய்பெருமான் புறவம்பதியாக
எண்டோளுடையா னிமையோரேத்த உமையோடிருந்தானே. 8

806. நெடியான்நீள்தா மரைமேலயனு நேடிக்காண்கில்லாப்
படியாமேனி யுடையான்பவள வரைபோல்திருமார்பிற்
பொடியார்போல முடையான்கடல்சூழ் புறவம்பதியாக
இடியார்முழவா ரிமையோரேத்த உமையோடிருந்தானே. 9

807. ஆலும்மயிலின் பீலியமணர் அறிவில்சிறுதேரர்
கோலும்மொழிக ளொழியக்குழுவுந் தழலுமெழில்வானும்
போலும்வடிவு முடையான்கடல்சூழ் புறவம்பதியாக
ஏலும்வகையா லிமையோரேத்த உமையோடிருந்தானே. 10

808. பொன்னார்மாட நீடுஞ்செல்வப் புறவம்பதியாக
மின்னாரிடையா ளுமையாளோடு மிருந்தவிமலனைத்
தன்னார்வஞ்செய் தமிழின்விரக னுரைத்ததமிழ்மாலை
பன்னாள்பாடி யாடப்பிரியார் பரலோகந்தானே. 11

திருச்சிற்றம்பலம்

••••••

## 75. திருவெங்குரு : பண் – குறிஞ்சி

809. காலைநன்மாமலர் கொண்டடிபரவிக்
கைதொழுமாணியைக் கறுத்தவெங்காலன்
ஓலமதிடமுன் னுயிரொடுமாள
வுதைத்தவனுமையவள் விருப்பனெம்பெருமான்
மாலைவந்தணுக ஓதம்வந்துலவி
மறிதிரைசங்கொடு பவளமுனுந்தி,
வேலைவந்தணையுஞ் சோலைகள்சூழ்ந்த
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 1

810. பெண்ணினைப்பாக மமர்ந்துசெஞ்சடைமேற்
பிறையொடுமரவினை யணிந்தழகாகப்
பண்ணினைப்பாடி யாடிமுன்பலிகொள்
பரமரெம்மடிகளார் பரிசுகள்பேணி
மண்ணினைமூடி வான்முகடேறி
மறிதிரைகடல்முகந் தெடுப்பமற்றுயர்ந்து
விண்ணளவோங்கி வந்திழிகோயில்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 2

811. ஓரியல்பில்லா வுருவமதாகி
யொண்டிறல்வேடன துருவதுகொண்டு
காரிகைகாணத் தனஞ்சயன்றன்னைக்
கறுத்தவற்களித்துடன் காதல்செய்பெருமான்
நேரிசையாக அறுபதமுரன்று
நிரைமலர்த்தாதுக்கள் மூசவிண்டுதிர்ந்து
வேரிகளெங்கும் விம்மியசோலை
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 3

812. வண்டணைகொன்றை வன்னியுமத்த
மருவியகூவிள மெருக்கொடுமிக்க
கொண்டணிசடையர் விடையினர்பூதங்
கொடுகாட்டிகுட முழாக்கூடியுமுழவப்
பண்டிகழ்வாகப் பாடியொர்வேதம்
பயில்வர்முன்பாய்புனற் கங்கையைச்சடைமேல்,
வெண்பிறைசூடி யுமையவளோடும்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 4

813. சடையினர்மேனி நீறதுபூசித்
தக்கைகொள்பொக்கண மிட்டுடனாகக்
கடைதொறும்வந்து பலியதுகொண்டு
கண்டவர்மனமவை கவர்ந்தழகாகப்
படையதுவேந்திப் பங்கயக்கண்ணி
யுமையவள்பாகமு மமர்ந்தருள்செய்து
விடையொடுபூதஞ் சூழ்தரச்சென்று
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 5

814. கரைபொருகடலில் திரையதுமோதக்
கங்குல்வந்தேறிய சங்கமுமிப்பி
உரையுடைமுத்த மணலிடைவைகி
ஓங்குவானிருளறத் துரப்பவெண்டிசையும்
புரைமலிவேதம் போற்றுபூசுரர்கள்
புரிந்தவர்நலங்கொளா குதியினில்நிறைந்த
விரைமலிதூபம் விசும்பினைமறைக்கும்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 6

815. வல்லிநுண்ணிடையா ளுமையவள்தன்னை
மறுகிடவருமத களிற்றினைமயங்க
ஒல்லையிற்பிடித்தங் குரித்தவள்வெருவல்
கெடுத்தவர்விரிபொழில் மிகுதிருவாலில்
நல்லறமுரைத்து ஞானமோடிருப்ப

நலிந்திடலுற்று வந்தவக்கருப்பு
வில்லியைப்பொடிபட விழித்தவர்விரும்பி
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 7

816. பாங்கிலாவரக்கன் கயிலையன்றெடுப்பப்
பலதலைமுடியொடு தோளவைநெரிய,
ஓங்கியவிரலா லூன்றியன்றவற்கே
ஒளிதிகழ்வாளது கொடுத்தழகாய,
கோங்கொடுசெருந்தி கூவிளமத்தங்
கொன்றையுங்குலாவிய செஞ்சடைச்செல்வர்,
வேங்கைபொன்மலரார் விரைதருகோயில்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 8

817. ஆறுடைச்சடையெம் மடிகளைக்காண
அரியொடுபிரமனு மளப்பதற்காகிச்
சேறிடைத்திகழ்வா னத்திடைபுக்குஞ்
செலவறத்தவிர்ந்தன ரெழிலுடைத்திகழ்வெண்
நீறுடைக்கோல மேனியர்நெற்றிக்
கண்ணினர்விண்ணவர் கைதொழுதேத்த
வேறெமையாள விரம்பியவிகிர்தர்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 9

818. பாடுடைக்குண்டர் சாக்கியர்சமணர்
பயில்தருமறவுரை விட்டழகாக
ஏடுடைமலராள் பொருட்டுவன்தக்கன்
எல்லையில் வேள்வியைத் தகர்த்தருள்செய்து
காடிடைக்கடிநாய் கலந்துடன்சூழக்
கண்டவர்வெருவுற விளித்துவெய்தாய
வேடுடைக்கோலம் விரும்பியவிகிர்தர்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 10

819. விண்ணியல்விமானம் விரும்பியபெருமான்
வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரை
நண்ணியநூலன் ஞானசம்பந்தன்
நவின்றஇவ்வாய்மொழி நலமிகுபத்தும்
பண்ணியல்பாகப் பத்திமையாலே
பாடியுமாடியும் பயிலவல்லார்கள்
விண்ணவர் விமானங் கொடுவரஏறி
வியனுலகாண்டுவீற் றிருப்பவர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 76. திருஇலம்பையங்கோட்டூர் : பண் – குறிஞ்சி

820. மலையினார்பருப்பதந் துருத்திமாற்பேறு
மாசிலாச்சீர்மறைக் காடுநெய்த்தானம்
நிலையினானெனதுரை தனதுரையாக
நீறணிந்தேறுகந் தேறியநிமலன்
கலையினார்மடப்பிணை துணையொடுந்துயிலக்
கானலம்பெடைபுல்கிக் கணமயிலாலும்
இலையினார்பைம்பொழி லிலம்பையங்கோட்டூ
ரிருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 1

821. திருமலர்க்கொன்றையான் நின்றியூர்மேயான்
தேவர்கள்தலைமகன் திருக்கழிப்பாலை
நிருமலனெனதுரை தனதுரையாக
நீறணிந்தேறுகந் தேறியநிமலன்
கருமலர்க்கமழ்சுனை நீள்மலர்க்குவளை
கதிர்முலையிளையவர் மதிமுகத்துலவும்
இருமலர்த்தண்பொய்கை இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 2

822. பாலனாம்விருத்தனாம் பசுபதிதானாம்
பண்டுவெங்கூற்றுதைத் தடியவர்க்கருளும்
காலனாமெனதுரை தனதுரையாகக்
கனலெரியங்கையி லேந்தியகடவுள்
நீலமாமலர்ச்சுனை வண்டுபண்செய்ய
நீர்மலர்க்குவளைகள் தாதுவிண்டோங்கும்
ஏலநாறும்பொழி லிலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 3

823. உளங்கொள்வாருச்சியார் கச்சியேகம்பன்
ஒற்றியூருறையுமண் ணாமலையண்ணல்
விளம்புவானெனதுரை தனதுரையாக
வெள்ளநீர்விரிசடைத் தாங்கியவிமலன்
குளம்புறக்கலைதுள மலைகளுஞ்சிலம்பக்
கொழுங்கொடியெழுந் தெங்குங்கூவிளங்கொள்ள
இளம்பிறைதவழ்பொழி லிலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 4

824. தேனுமாயமதுமாய்த் தெய்வமுந்தானாய்த்
தீயொடுநீருடன் வாயுவாந்தெரியில்,
வானுமாமெனதுரை தனதுரையாக

வரியராஅரைக்கசைத் துழிதருமைந்தன்
கானமான்வெருவுறக் கருவிரலூகங்
கடுவனோடுகளுமூர் கற்கடுஞ்சாரல்
ஏனமானுழிதரு மிலம்பையுங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 5

825. மனமுலாமடியவர்க் கருள்புரிகின்ற
வகையலாற்பலிதிரிந்துண் பிலான்மற்றோர்
தனமிலானெனதுரை தனதுரையாகத்
தாழ்சடையிளமதி தாங்கியதலைவன்
புனமெலாமருவிக ளிருவிசேர்முத்தம்
பொன்னொடுமணிகொழித் தீண்டிவந்தெங்கும்
இனமெலாமடைகரை இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 6

826. நீருளான்தீயுளா னந்தரத்துள்ளான்
நினைப்பவர்மனத்துளான் நித்தமாஏத்தும்
ஊருளானெனதுரை தனதுரையாக
ஒற்றைவெள்ளேறுகந் தேறியவொருவன்
பாருளார்பாடலோ டாடலறாத
பண்முரன்றஞ்சிறை வண்டினம்பாடும்
ஏருளார்பைம்பொழி லிலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 7

827. வேருலாமாழ்கடல் வருதிரையிலங்கை
வேந்தனதடக்கைக ளடர்த்தவனுலகில்
ஆருலாமெனதுரை தனதுரையாக
ஆகமோரரவணிந் துழிதருமண்ணல்
வாருலாநல்லன மாக்களுஞ்சார
வாரணமுழிதரு மல்லங்கானல்
ஏருலாம்பொழிலணி இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 8

828. கிளர்மழைதாங்கினான் நான்முகமுடையோன்
கீழடிமேல்முடி தேர்ந்தளக்கில்லா
உளமழையெனதுரை தனதுரையாக
வெள்ளமுலங்கையி லேந்தியவொருவன்
வளமழையெனக்கழை வளர்துளிசோர
மாசுணமுழிதரு மணியணிமாலை
இளமழைதவழ்பொழி லிலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 9

829. உரிஞ்சனகூறைகள் உடம்பினராகி
உழிதருசமணருஞ் சாக்கியப்பேய்கள்
பெருஞ்செல்வனெனதுரை தனதுரையாகப்
பெய்பலிக்கென்றுழல் பெரியவர்பெருமான்
கருஞ்சுனைமுல்லைநன் பொன்னடைவேங்கை
களிமுகவண்டொடு தேனினமுரலும்
இருஞ்சுனைமல்கிய இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் னெழில்கொள்வதியல்பே. 10

830. கந்தனைமலிகனை கடலொலியோதங்
கானலங்கழிவளர் கழுமலமென்னும்
நந்தியாருறைபதி நான்மறைநாவன்
நற்றமிழ்கின்றுணை ஞானசம்பந்தன்
எந்தையார்வளநக ரிலம்பையங்கோட்டூர்
இசையொடுகூடிய பத்தும்வல்லார்போய்
வெந்துயர்கெடுகிட விண்ணவரோடும்
வீடுபெற்றிம்மையின் வீடெளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 77. திருஅச்சிறுபாக்கம் : பண் – குறிஞ்சி

831. பொன்றிரண்டன்ன புரிசடைபுரளப்
பொருகடற்பவளமொ டழல்நிறம்புரையக்
குன்றிரண்டன்ன தோளுடையகலங்
குலாயவெண்ணூலொடு கொழும்பொடியணிவர்
மின்றிரண்டன்ன நுண்ணிடையரிவை
மெல்லியலாளையோர் பாகமாப்பேணி
அன்றிரண்டுருவ மாயவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 1

832. தேனினுமினியர் பாலனநீற்றர்
தீங்கரும்பனையர்தந் திருவடிதொழுவார்,
ஊன்நயந்துருக உவகைகள்தருவா
ருச்சிமேலுறைபவ ரொன்றலாதூரார்,
வானகமிறந்து வையகம்வணங்க
வயங்கொளநிற்பதோர் வடிவினையுடையார்,
ஆனையினுரிவை போர்த்தவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 2

833. காரிருளுருவ மால்வரையுரையக்
களிற்றினதுரிவைகொண் டரிவைமேலோடி
நீருருமகளை நிமிர்சடைத்தாங்கி
நீறணிந்தேறுகந் தேறியநிமலர்
பேரருளாளர் பிறவியிற்சேரார்
பிணியிலர்கேடிலர் பேய்க்கணஞ்சூழ
ஆரிருண்மாலை யாடுமெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 3

834. மைம்மலர்க்கோதை மார்பினரெனவு
மலைமகளவளொடு மருவினரெனவுஞ்
செம்மலர்ப்பிறையுஞ் சிறையணிபுனலுஞ்
சென்னிமேலுடையரெஞ் சென்னிமேலுறைவார்
தம்மலரடியொன் றடியவர்பரவத்
தமிழ்ச்சொலும்வடசொலுந் தாள்நிழற்சேர
அம்மலர்க்கொன்றை யணிந்தவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 4

835. விண்ணுலாமதியஞ் சூடினரெனவும்
விரிசடையுள்ளது வெள்ளநீரெனவும்
பண்ணுலாமறைகள் பாடினரெனவும்
பலபுகழல்லதுபழியிலரெனவும்
எண்ணலாகாத இமையவர்நாளு
மேத்தரவங்களோ டெழில்பெறநின்ற
அண்ணலானூர்தி யேறுமெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 5

836. நீடிருஞ்சடைமே விளம்பிறைதுளங்க
நிழல்திகழ்மழுவொடு நீறுமெய்பூசித்
தோடொருகாதினிற் பெய்துவெய்தாய
சுடலையிலாடுவர் தோலுடையாகக்
காடரங்காக் கங்குலும்பகலுங்
கழுதொடுபாரிடங் கைதொழுதேத்த
ஆடரவாட ஆடுமெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 6

837. ஏறுமொன்றேறி நீறுமெய்பூசி
இளங்கிளையரிவையொ டொருங்குடனாகிக்
கூறுமொன்றருளிக் கொன்றையந்தாருங்
குளிரிளமதியமுங் கூவிளமலரும்
நாறுமல்லிகையு மெருக்கொடுமுருக்கு
மகிழிளவன்னியு மிவைநலம்பகர
ஆறுமோர்சடைமே லணிந்தவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 7

838. கச்சுமொள்வாளுங் கட்டியவுடையர்
கதிர்முடிசுடர்விடக் கவரியுங்குடையும்
பிச்சமும்பிறவும் பெண்ணணங்காய
பிறைநுதலவர்தமைப் பெரியவர்பேணப்
பச்சமும்வலியுங் கருதியஅரக்கன்
பருவரையெடுத்ததிண் டோள்களையடர்வித்
தச்சுமருளுங் கொடுத்தவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 8

839. நோற்றலாரேனும் வேட்டலாரேனும்
நுகர்புகர்சாந்தமொ டேந்தியமாலைக்
கூற்றலாரேனு மின்னவாறென்று
மெய்தலாகாதாதொ ரியல்பினையுடையார்
தோற்றலார்மாலு நான்முகமுடைய
தோன்றலுமடியொடு முடியுறத்தங்கள்
ஆற்றலாற்காணா ராயவெம்மடிகள்
அச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. 9

840. வாதுசெய்சமணுஞ் சாக்கியப்பேய்கள்
நல்வினைநீக்கிய வல்வினையாளர்
ஓதியுங்கேட்டு முணர்வினையிலாதா
ருள்கலாகாததோ ரியல்பினையுடையார்
வேதமும்வேத நெறிகளுமாகி
விமலவேடத்தொடு கமலமாமதிபோல்
ஆதியுறுமீது மாயவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 10

841. மைச்செறிகுவளை தவளைவாய்நிறைய
மதுமலர்ப்பொய்கையிற் புதுமலர்கிழியப்
பச்சிறவெறிவயல் வெறிகமழ்காழிப்

பதியவரதிபதி கவுணியர்பெருமான்
கைச்சிறுமறியவன் கழலலாற்பேணாக்
கருத்துடைஞானசம் பந்தனதமிழ்கொண்
டச்சிறுபாக்கத் தடிகளையேத்து
மன்புடையடியவ ரருவினையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 78. திருஇடைச்சுரம் : பண் – குறிஞ்சி

842. வரிவளரவிரொளி யரவரைதாழ
வார்சடைமுடிமிசை வளர்மதிசூடிக்
கரிவளர்தருகழல் கால்வலனேந்திக்
கனலெரியாடுவர் காடரங்காக
விரிவளர்தருபொழி லிளமயிலால
வெண்ணிறத்தருவிகள் திண்ணெனவீழும்
எரிவளரினமணி புனமணிசார ர்ர
விடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 1

843. ஆற்றையுமேற்றதோ ரவிர்சடையுடைய
ரழகினையருளுவர் குழகலதறியார்
கூற்றுயிர்செகுப்பதோர் கொடுமையையுடையர்
நடுவிருளாடுவர் கொன்றையந்தாரார்
சேற்றயல்மிளிர்வன கயலிளவாளை
செருச்செயவோர்ப்பன செம்முகமந்தி
ஏற்றையொடுழிதரு மெழில்திகழ்சார
விடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 2

844. கானமுஞ்சுடலையுங் கற்படுநிலனுங்
காதலர்தீதிலர் கனல்மழுவாளர்
வானமுநிலமையு மிருமையுமானார்
வணங்கவுமிணங்கவும் வாழ்த்தவும்படுவார்
நானமும்புகையொளி விரையொடுகமழ
நளிர்பொழிலிளமஞ்ஞை மன்னியபாங்கர்
ஏனமும்பிணையலு மெழில்திகழ்சார
விடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 3

845. கடமணிமார்பினர் கடல்தனிலுறைவார்
காதலர்தீதிலர் கனல்மழுவாளர்
விடமணிமிடறினர் மிளிர்வதோரரவர்
வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர்
வடமுலையயலன கருங்குருந்தேறி
வாழையின்தீங்கனி வார்ந்துதேனட்டும்
இடமுலையரிவைய ரெழில்திகழ்சார
லிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 4

846. கார்கொண்டகடிகமழ் விரிமலர்க்கொன்றைக்
கண்ணியர்வளர்மதி கதிர்விடக்கங்கை
நீர்கொண்டசடையினர் விடையுயர்கொடியர்
நிழல்திகழ்மழுவின ரழல்திகழ்நிறத்தர்
சீர்கொண்டமென்சிறை வண்டுபண்செய்யும்
செழும்புனலனையன செங்குலைவாழை
ஏர்கொண்டபலவினொ டெழில்திகழ்சார
லிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 5

847. தோடணிகுழையினர் சுண்ணவெண்ணீற்றர்
சுடலையினாடுவர் தோலுடையாகப்
பீடுயர்செய்ததோர் பெருமையையுடையர்
பேயுடனாடுவர் பெரியவர்பெருமான்
கோடல்களொழுகுவ முழுகுவதும்பி
குரவமுமரவமு மன்னியபாங்கர்
ஏடவிழ்புதுமலர் கடிகமழ்சார
லிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 6

848. கழல்மல்குகாலினர் வேலினர்நூலர்
கவர்தலையரவொடு கண்டியும்பூண்பர்
அழல்மல்குமெரியொடு மணிமழுவேந்தி
யாடுவர்பாடுவ ராரணங்குடையர்
பொழில்மல்குநீடிய அரவமுமரவ
மன்னியகவட்டிடைப் புணர்குயிலாலும்
எழில்மல்கு சோலையில் வண்டிசைபாடு
மிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 7

849. தேங்கமழ்கொன்றையந் திருமலர்புனைவார்
திகழ்தருசடைமிசைத் திங்களுஞ்சூடி

வீந்தவர்சுடலைவெண் ணீறுமெய்பூசி
வேறுமோர்சரிதையர் வேடமுமுடையர்
சாந்தமுமகிலொடு முகில்பொதிந்தலம்பித்
தவழ்கனமணியொடு மிகுபளிங்கிடறி
ஏந்துவெள்ளருவிக ளெழில்திகழ்சார
லிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 8

850. பலஇலமிடுபலி கையிலொன்றேற்பர்
பலபுகழல்லது பழியிலர்தாமும்
தலையிலங்கவிரொளி நெடுமுடியரக்கன்
தடக்கைகளடர்த்ததோர் தன்மையையுடையர்
மலையிலங்கருவிகள் மணமுழவதிர
மழைதவழிளமஞ்ஞை மல்கியசாரல்
இலைஇலவங்கமு மேலமுங்கமழு
மிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 9

851. பெருமைகள்தருக்கியோர் பேதுறுகின்ற
பெருங்கடல்வண்ணனும் பிரமனுமோரா
அருமையரடிநிழல் பரவிநின்றேத்து
மன்புடையடியவர்க் கணியருமாவர்
கருமைகொள்வடிவொடு சுனைவளர்குவளைக்
கயலினம்வயலிள வாளைகளிரிய,
எருமைகள்படிதர இளஅனமாலு
மிடைச்சுரமேவிய இவர்வணமென்னே. 10

852. மடைச்சுரமறிவன வாளையுங்கயலும்
மருவியவயல்தனில் வருபுனற்காழிச்
சடைச்சுரத்துறைவதோர் பிறையுடையண்ணல்
சரிதைகள்பரவிநின் றுருகுசம்பந்தன்
புடைச்சுரத்தருவரைப் பூக்கமழ்சாரற்
புணர்மடநடையவர் புடையிடையார்ந்த
இடைச்சுரமேத்திய இசையொடுபாடலிவை
சொலவல்லவர் பிணியிலர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 79. திருக்கழுமலம் : பண் – குறிஞ்சி

853. அயிலுறுபடையினர் விடையினர்முடிமே
லரவமும்மதியமும் விரவியஅழகர்
மயிலுறுசாயல வனமுலையொருபால்
மகிழ்பவர்வானிடை முகில்புல்குமிடறர்
பயில்வுறுசரிதைய ரெருதுகந்தேறிப்
பாடியுமாடியும் பலிகொள்வர்வலிசேர்
கயிலையும்பொதியிலு மிடமெனவுடையார்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 1

854. கொண்டலுநீலமும் புரைதிருமிடறர்
கொடுமுடியுறைபவர் படுதலைக்கையர்
பண்டலரயன்சிர மரிந்தவர்பொருந்தும்
படர்சடையடிகளார் பதியதனயலே
வண்டலும்வங்கமுஞ் சங்கமுஞ்சுறவும்
மறிகடல்திரைகொணர்ந் தெற்றியகரைமேற்
கண்டலுங்கைதையும் நெய்தலுங்குலவும்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 2

855. எண்ணிடையொன்றினர் இரண்டினருருவ
மெரியிடைமூன்றினர் நான்மறையாளர்
மண்ணிடைஐந்தின ராறினரங்கம்
வகுத்தனரேழிசை யெட்டிருங்கலைசேர்
பண்ணிடையொன்பது முணர்ந்தவர்பத்தர்
பாடிநின்றடிதொழ மதனனைவெகுண்ட
கண்ணிடைக்கனலினர் கருதியகோயில்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 3

856. எரியொருகரத்தின ரிமையவர்க்கிறைவ
ரேறுகந்தேறுவர் நீறுமெய்பூசித்
திரிதருமியல்பின ரயலவர்புரங்கள்
தீயெழவிழித்தனர் வேய்புரைதோளி
வரி தருகண்ணிணை மடவரலஞ்ச
மஞ்சுறநிமிர்ந்ததோர் வடிவொடும்வந்த
கரியுரிமருவிய அடிகளுக்கிடமாங்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 4

857. ஊரெதிர்ந்திடுபலி தலைகலனாக
வுண்பவர்விண்பொலிந் திலங்கியவுருவர்
பாரெதிர்ந்தடிதொழ விரைதருமார்பிற்

படஅரவாமையக் கணிந்தவர்க்கிடமாம்
நீரெதிர்ந்திழிமணி நித்திலமுத்தம்
நிரைசுரிசங்கமொ டொண்மணிவரன்றிக்
காரெதிர்ந்தோதம்வன் றிரைகரைக்கெற்றுங்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 5

858. முன்னுயிர்த் தோற்றமு மிறுதியுமாகி
முடியுடையமரர்க ளடிபணிந்தேத்தப்
பின்னியசடைமிசைப் பிறைநிறைவித்த
பேரருளாளனார் பேணியகோயில்
பொன்னியல்நறுமலர் புனலொடுதூபஞ்
சாந்தமுமேந்திய கையினராகிக்
கன்னியர் நாள்தோறும் வேடமேபரவுங்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 6

859. கொலைக்கணித்தாவரு கூற்றுதைசெய்தார்
குரைகழல்பணிந்தவர்க் கருளியபொருளின்
நிலைக்கணித்தாவர நினையவல்லார்தந்
நெடுந்துயர்தவிர்த்தஎந் நிமலருக்கிடமாம்
மலைக்கணித்தாவர வன்றிரைமுரல
மதுவிரிபுன்னைகள் முத்தெனஅரும்பக்
கலைக்கணங்கானலின் நீழலில்வாழுங்
கழுமலநினையநம் வினைகரிசறுமே.

860. புயம்பலவுடையதென் னிலங்கையர்வேந்தன்
பொருவரையெடுத்தவன் பொன்முடிதிண்டோள்
பயம்பலபடஅடர்த் தருளியபெருமான்
பரிவொடுமினிதுறை கோயிலதாகும்
வியன்பலவிண்ணினும் மண்ணினுமெங்கும்
வேறுவேறுகங்களிற் பெயருளதென்னக்
கயம்பலபடக்கடற் றிரைகரைக்கெற்றுங்
கழுமலநினையநம் வினைகரிசறுமே. 8

861. விலங்கலொன்றேந்திவன் மழைதடுத்தோனும்
வெறிகமழ்தாமரை யோனுமென்றிவர்தம்
பலங்களால்நேடியு மறிவரிதாய
பரிசினன்மருவிநின் றினிதுறைகோயில்
மலங்கிவன்றிரைவரை யெனப்பரந்தெங்கும்
மறிகடலோங்கிவெள் ளிப்பியுஞ்சுமந்து
கலங்கடன்சரக்கொடு நிரக்கவந்தேறுங்
கழுமலநினையநம்வினைகரிசறுமே. 9

862. ஆம்பலதவமுயன் றறவுரைசொல்லு
மறிவிலாச்சமணருந் தேரருங்கணிசேர்
நோம்பலதவமறி யாதவர்நொடிந்த
மூதுரைகொள்கிலா முதல்வர்தம்மேனிச்
சாம்பலும்பூசி வெண்டலைகலனாகத்
தையலாரிடுபலி வையகத்தேற்றுக்
காம்பனதோளியொ டினிதுறைகோயில்
கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 10

863. கலிகெழுபாரிடை யூரெனவுளதாங்
கழுமலம்விரும்பிய கோயில்கொண்டவர்மேல்
வலிகெழுமனமிக வைத்தவன்மறைசேர்
வருங்கலைஞானசம் பந்தனதமிழின்
ஒலிகெழுமாலையென் றுரைசெய்தபத்து
முண்மையினால்நினைந் தேத்தவல்லார்மேல்
மெலிகெழுதுயரடை யாவினைசிந்தும்
விண்ணவராற்றலின் மிகப்பெறுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 80. கோயில் : பண் – குறிஞ்சி

864. கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. 1

865. பறப்பைப் படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
பிறப்பில் பெருமானைப் பின்றாழ் சடையானை
மறப்பி லார்கண்டீர் மையல் தீர்வாரே. 2

866. மையா ரொண்கண்ணார் மாட நெடுவீதிக்
கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லையுள்
பொய்யா மறைபாடல் புரிந்தா னுலகேத்தச்
செய்யா னுறைகோயில் சிற்றம் பலந்தானே. 3

367. நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்

சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்து மின்ப மின்பமே. 4

868. செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 5

869. வருமாந் தளிர்மேனி மாதோர் பாகமாந்
திருமாந் தில்லையுட் சிற்றம் பலமேய
கருமா னுரியாடைக் கறைசேர் கண்டத்தெம்
பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே. 6

870. அலையார் புனல்சூடி யாகத் தொருபாக
மலையான் மகளோடு மகிழ்ந்தா னுலகேத்தச்
சிலையா லெயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே. 7

871. கூர்வா ளரக்கன்றன் வலியைக் குறைவித்துச்
சீரா லேமல்கு சிற்றம் பலமேய
நீரார் சடையானை நித்த லேத்துவார்
தீரா நோயெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

872. கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்
காணார் கழலேத்தக் கனலாய் ஓங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே. 9

873. பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடும்
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே. 10

874. ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. சீகாழி : பண் – குறிஞ்சி

875. நல்லார் தீமேவுந் தொழிலார் நால்வேதஞ்
சொல்லார் கேண்மையார் சுடர்பொற் கழலேத்த
வில்லாற் புரஞ்செற்றான் மேவும் பதிபோலுங்
கல்லார் மதில்சூழ்ந்த காழிந் நகர்தானே. 1

876. துளிவண் டேன்பாயு மிதழி தூமத்தந்
தெளிவெண் திங்கள்மா சுணநீர் திகழ்சென்னி
ஒளிவெண் டலைமாலை யுகந்தா னூர்போலுங்
களிவண் டியாழ்செய்யுங் காழிந் நகர்தானே. 2

877. ஆலக் கோலத்தின் நஞ்சுண் டமுதத்தைச்
சாலத் தேவர்க்கீந் தளித்தான் தன்மையால்
பாலற் காய்நன்றும் பரிந்து பாதத்தால்
காலற் காய்ந்தானூர் காழிந் நகர்தானே. 3,4,5,6,7

878. இரவில் திரிவோர்கட் கிறைதோ ளிணைபத்தும்
நிரவிக் கரவாளை நேர்ந்தா னிடம்போலும்
பரவித் திரிவோர்க்கும் பால்நீ றணிவோர்க்குங்
கரவில் தடக்கையார் காழிந் நகர்தானே. 8

879. மாலும் பிரமனு மறியா மாட்சியான்
தோலும் புரிநூலுந் துதைந்த வரைமார்பன்
ஏலும் பதிபோலு மிரந்தோர்க் கெந்நாளுங்
காலம் பகராதார் காழிந் நகர்தானே. 9

880. தங்கை யிடவுண்பார் தாழ்சீ வரத்தார்கள்
பெங்கை யுணராதே பேணித் தொழுமின்கள்
மங்கை யொருபாக மகிழ்ந்தான் மலர்ச்சென்னிக்
கங்கை தரித்தானூர் காழிந் நகர்தானே. 10

881. வாசங் கமழ்காழி மதிசெஞ் சடைவைத்த
ஈசன் நகர்தன்னை யிணையில் சம்பந்தன்
பேசுந் தமிழ்வல்லோர் பெருநீ ருலகத்துப்
பாசந் தனையற்றுப் பழியில் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 82. திருவீழிமிழலை : பண் – குறிஞ்சி

882. இரும்பொன் மலைவில்லா எரியம் பாநாணில்
திரிந்தபுரமூன்றுஞ் செற்றா னுறைகோயில்
தெரிந்த அடியார்கள் சென்ற திசைதோறும்
விரும்பி யெதிர்கொள்வார் வீழி மிழலையே. 1

883. வாதைப் படுகின்ற வானோர் துயர்தீர
ஓதக் கடல்நஞ்சை யுண்டா னுறைகோயில்
கீதத் திசையோடுங் கேள்விக் கிடையோடும்
வேதத் தொலியோவா வீழி மிழலையே. 2

884. பயிலும் மறையாளன் தலையிற் பலிகொண்டு
துயிலும் பொழுதாடுஞ் சோதி யுறைகோயில்
மயிலும் மடமானும் மதியும் மிளவேயும்
வெயிலும் போல்மாதர் வீழி மிழலையே. 3

885. இரவன் பகலோனு மெச்சத் திமையோரை
நிரவிட் டருள்செய்த நிமலன் னுறைகோயில்
குரவஞ் சுரபுன்னை குளிர்கோங் கிளவேங்கை
விரவும் பொழிலந்தண் வீழி மிழலையே. 4

886. கண்ணிற் கனலாலே காமன் பொடியாகப்
பெண்ணுக் கருள்செய்த பெருமா னுறைகோயில்
மண்ணிற் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும்
விண்ணிற் புயல்காட்டும் வீழி மிழலையே. 5

887. மாலா யிரங்கொண்டு மலர்க்கண் ணிடஆழி
ஏலா வலயத்தோ டீந்தா னுறைகோயில்
சேலா கியபொய்கைச் செழுநீர்க் கமலங்கள்
மேலா லெரிகாட்டும் வீழி மிழலையே. 6

888. மதியால் வழிபட்டான் வாணாள் கொடுபோவான்
கொதியா வருகூற்றைக் குமைத்தா னுறைகோயில்
நெதியான் மிகுசெல்வர் நித்த நியமங்கள்
விதியால் நிற்கின்றார் வீழி மிழலையே. 7

889. எடுத்தான் தருக்கினை யிழித்தான் விரனூன்றிக்
கொடுத்தான் வாளாளாக் கொண்டா னுறைகோயில்
படித்தார் மறைவேள்வி பயின்றார் பாவத்தை
விடுத்தார் மிகவாழும் வீழி மிழலையே. 8

890. கிடந்தா னிருந்தானுங் கீழ்மேற் காணாது
தொடர்ந்தாங் கவரேத்தச் சுடரா யவன்கோயில்
படந்தாங் கரவல்குற் பவளத் துவர்வாய்மேல்
விடந்தாங் கியகண்ணார் வீழி மிழலையே. 9

891. சிக்கார் துவராடைச் சிறுதட் டுடையாரும்
நக்காங் கலர்தூற்றுந் நம்பா னுறைகோயில்
தக்கார் மறைவேள்வித் தலையா யுலகுக்கு
மிக்கா ரவர்வாழும் வீழி மிழலையே. 10

892. மேனின் றிழிகோயில் வீழி மிழலையுள்
ஏனத் தெயிற்றானை யெழிலார் பொழிற்காழி
ஞானத் துயர்கின்ற நலங்கொள் சம்பந்தன்
வாய்மைத் திவைசொல்ல வல்லோர் நல்லோரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 83. திருஅம்பர்மாகாளம் : பண் – குறிஞ்சி

893. அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து
மடையார் புனலம்பர் மாகா ளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
சடையான் கழலேத்தச் சாரா வினைதானே. 1

894. தேனார் மதமத்தந் திங்கள் புனல்சூடி
வானார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஊனார் தலைதன்னிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலேத்த அல்ல லடையாவே. 2

895. திரையார் புனலோடு செல்வ மதிசூடி
விரையார் பொழிலம்பர் மாகா ளம்மேய
நரையார் விடையூரு நம்பான் கழல்நாளும்
உரையா தவர்கண்மே லொழியா வூனம்மே. 3

896. கொந்தண் பொழிற்சோலைக் கோல வரிவண்டு
மந்தம் மலியம்பர் மாகா ளம்மேய
கந்தங் கமழ்கொன்றை கமழ்புன் சடைவைத்த
எந்தை கழலேத்த இடர்வந் தடையாவே. 4

897. அணியார் மலைமங்கை யாகம் பாகமாய்
மணியார் புனலம்பர் மாகா ளம்மேய

துணியா ருடையினான் துதைபொற் கழல்நாளும்
பணியா தவர்தம்மேற் பறையா பாவம்மே. 5

898. பண்டாழ் கடல்நஞ்சை யுண்டு களிமாந்தி
வண்டார் பொழிலம்பர் மாகா ளம்மேய
விண்டார் புரம்வேவ மேருச் சிலையாகக்
கொண்டான் கழலேத்தக் குறுகா குற்றம்மே. 6

899. மிளிரும் மரவோடு வெள்ளைப் பிறைசூடி
வளரும் பொழிலம்பர் மாகா ளம்மேய
கிளருஞ் சடையண்ணல் கேடில் கழலேத்தத்
தளரும் முறுநோய்கள் சாருந் தவந்தானே. 7

900. கொலையார் மழுவோடு கோலச் சிலையேந்தி
மலையார் புனலம்பர் மாகா ளம்மேய
இலையார் திரிசூலப் படையான் கழல்நாளும்
நிலையா நினைவார்மேல் நில்லா வினைதானே. 8

901. சிறையார் வரிவண்டு தேனுண் டிசைபாட
மறையார் நிறையம்பர் மாகா ளம்மேய
நறையார் மலரானும் மாலுங் காண்பொண்ணா
இறையான் கழலேத்த எய்தும் மின்பம்மே. 9

902. மாசூர் வடின்னார் மண்டை யுணல்கொள்வார்
கூசா துரைக்குஞ்சொற் கொள்கை குணமல்ல
வாசார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஈசா என்பார்கட் கில்லை யிடர்தானே. 10

903. வெருநீர் கொளவோங்கும் வேணு புரந்தன்னுள்
திருமா மறைஞான சம்பந்தன சேணார்
பெருமான் மலியம்பர் மாகா ளம்பேணி
உருகா வுரைசெய்வா ருயர்வா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 84. திருநாகைக்காரோணம் : பண் – குறிஞ்சி

904. புனையும் விரிகொன்றைக் கடவுள் புனல்பாய
நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலைசூடி
வினையில் லடியார்கள் விதியால் வழிபட்டுக்
கனையுங் கடல்நாகைக் காரோ ணத்தானே. 1

905. பெண்ணா ணெனநின்ற பெம்மான் பிறைச்சென்னி
அண்ணா மலைநாட னாரூ ருறையம்மான்
மண்ணார் முழவோவா மாடந் நெடுவீதிக்
கண்ணார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 2

906. பாரோர் தொழவிண்ணோர் பணியம் மதில்மூன்றும்
ஆரா ரழலூட்டி யடியார்க் கருள்செய்தான்
தேரார் விழவோவாச் செல்வன் திரைசூழ்ந்த
காரார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 3

907. மொழிசூழ் மறைபாடி முதிருஞ் சடைதன்மேல்
அழிசூழ் புனலேற்ற அண்ணல் லணியாய
பழிசூழ் விலராய பத்தர் பணிந்தேத்தக்
கழிசூழ் கடல்நாகைக் காரோ ணத்தானே. 4

908. ஆணும் பெண்ணுமாய் அடியார்க் கருள்நல்கிச்
சேணின் றவர்க்கின்னஞ் சிந்தை செயவல்லான்
பேணி வழிபாடு பிரியா தெழுந்தொண்டர்
காணுங் கடல்நாகைக் காரோ ணத்தானே. 5

909. ஏனத் தெயிறோடும் மரவ மெய்பூண்டு
வானத் திளந்திங்கள் வளருஞ் சடையண்ணல்
ஞானத் துறைவல்லார் நாளும் பணிந்தேத்தக்
கானற் கடல்நாகைக் காரோ ணத்தானே. 6

910. அரையா ரழல்நாக மக்கோ டசைத்திட்டு
விரையார் வரைமார்பின் வெண்ணீ றணியண்ணல்
வரையார் வனபோல வளரும் வங்கங்கள்
கரையார் கடலநாகைக் காரோ ணத்தானே. 7

911. வலங்கொள் புகழ்பேணி வரையா லுயர்திண்டோள்
இலங்கைக் கிறைவாட அடர்த்தங் கருள்செய்தான்
பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர் பணிந்தேத்தக்
கலங்கொள் கடல்நாகைக் காரோ ணத்தானே. 8

912. திருமா லடிவீழத் திசைநான் முகனேத்தப்
பெருமா னெனநின்ற பெம்மான் பிறைச்சென்னிச்
செருமால் விடையூருஞ் செல்வன் திரைசூழ்ந்த
கருமால் கடல்நாகைக் காரோ ணத்தானே. 9

913. நல்லா ரறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற
அல்லா ரலர்தூற்ற அடியார்க் கருள்செய்வான்
பல்லார் தலைமாலை யணிவான் பணிந்தேத்தக்
கல்லார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 10

914. கரையார் கடல்நாகைக் காரோ ணம்மேய
நரையார் விடையானை நவிலுஞ் சம்பந்தன்
உரையார் தமிழ்மாலை பாடும் மவரெல்லாம்
கரையா வுருவாகிக் கலிவா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 85. திருநல்லம் : பண் – குறிஞ்சி

915. கல்லால் நிழல்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லா லரண்மூன்றும் வெந்து விழவெய்த
நல்லான் நமையாள்வான் நல்ல நகரானே. 1

916. தக்கன் பெருவேள்வி தன்னி லமரரைத்
துக்கம் பலசெய்து சுடற்பொற் சடைதாழக்
கொக்கின் னிறகோடு குளிர்வெண் பிறைசூடும்
நக்கன் நமையாள்வான் நல்ல நகரானே. 2

917. அந்தி மதியோடு மரவச் சடைதாழ
முந்தி யனலேந்தி முதுகாட் டெரியாடி
சிந்தித் தெழவல்லார் தீரா வினைதீர்க்கும்
நந்தி நமையாள்வான்நல்ல நகரானே. 3

918. குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ
மிளிரும் மரவோடு வெண்ணூர் திகழ்மார்பில்
தளிருந் திகழ்மேனித் தையல் பாகமாய்
நளிரும் வயல்சூழ்ந்த நல்ல நகரானே. 4

919. மணியார் திகழ்கண்டம் முடையான் மலர்மல்கு
பிணிவார் சடையெந்தை பெருமான் கழல்பேணித்
துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த
நணியான் நமையாள்வான் நல்ல நகரானே. 5

920. வாசம் மலர்மல்கு மலையான் மகளோடும்
பூசுஞ் சுடுநீறு புனைந்தான் விரிகொன்றை
ஈசன் னெனவுள்கி யெழுவார் வினைகட்கு
நாசன் நமையாள்வான் நல்ல நகரானே. 6

921. அங்கோல் வளைமங்கை காண அனலேந்திக்
கொங்கார் நறுங்கொன்றை சூடிக் குழகாக
வெங்கா டிடமாக வெந்தீ விளையாடும்
நங்கோன் நமையாள்வான் நல்ல நகரானே. 7

922. பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு
கண்ணார் நுதலினான் கயிலை கருத்தினால்
எண்ணா தெடுத்தானை யிறையே விரலூன்றி
நண்ணார் புரமெய்தான் நல்ல நகரானே. 8

923. நாகத் தணையானும் நளிர்மா மலரானும்
போகத் தியல்பினாற் பொலிய அழகாகும்
ஆகத் தவளோடு மமர்ந்தங் கழகாரும்
நாகம் மரையார்த்தான் நல்ல நகரானே. 9

924. குறியில் சமணோடு குண்டர் வண்தேரர்
அறிவில் லுரைகேட்டங் கவமே கழியாதே
பொறிகொள் ளரவார்த்தான் பொல்லா வினைதீர்க்கும்
நறைகொள் பொழில்சூழ்ந்த நல்ல நகரானே. 10

925. நலமார் மறையோர்வாழ் நல்ல நகர்மேய
கொலைசேர் மழுவானைக் கொச்சை யமர்ந்தோங்கு
தலமார் தமிழ்ஞான சம்பந் தன்சொன்ன
கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 86. திருநல்லூர் : பண் – குறிஞ்சி

926. கொட்டும் பறைசீராற் குழும அனலேந்தி
நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோது முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்க ளறியார் பாவமே. 1

927. ஏறி லெருதேறு மெழிலா யிழையோடும்
வேறும் முடனுமாம் விகிர்த ரவரென்ன
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும் மடியார்கட் கடையா குற்றமே. 2

928. சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை
நாடுந் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் மடியார்கட் கடையா பாவமே. 3

929. நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்
காத்த நெறியானைக் கைகூப் பித்தொழு
தேத்து மடியார்கட் கில்லை யிடர்தானே. 4

930. ஆகத் துமைகேள்வ னரவச் சடைதாழ
நாகம் மசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்கள் தொழுந்தொண்டர்
போகம் மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

931. கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்
செல்லு நெறியானைச் சேர்ந்தா ரிடர்தீரச்
சொல்லு மடியார்க ளறியார் துக்கமே. 6

932. எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்
தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்
தங்கு மனத்தார்கள் தடுமாற் றறுப்பாரே. 7

933. காம னெழில்வாட்டிக் கடல்சூ ழிலங்கைக்கோன்
நாம மிறுத்தானை நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாரா யிகழா தெழுந்தொண்டர்
தீப மனத்தார்க ளறியார் தீயவே. 8

934. வண்ண மலரானும் வைய மளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்கள் தொழுதேத்த
எண்ணு மடியார்கட் கில்லை யிடுக்கணே. 9

935. பிச்சக் குடைநீழற் சமணர் சாக்கியர்
நிச்ச மலர்தூற்ற நின்ற பெருமானை
நச்சு மிடற்றானை நல்லூர்ப் பெருமானை
எச்சு மடியார்கட் கில்லை யிடர்தானே. 10

936. தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைக லேத்துவார்
விண்ணுந் நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 87. திருவடுகூர் : பண் – குறிஞ்சி

937. சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. 1

938. பாலுந் நறுநெய்யுந் தயிரும் பயின்றாடி
ஏலுஞ் சுடுநீறு மென்பு மொளிமல்கக்
கோலம் பொழிற்சோலைக் கூடி மடஅன்னம்
ஆலும் வடுகூரி லாடும் மடிகளே. 2

939. சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதன்மேல்
ஓடுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு
பாடும் வடுகூரி லாடும் மடிகளே 3

940. துவரும் புரிசையுந் துதைந்த மணிமாடம்
கவர வெரியோட்டிக் கடிய மதிலெய்தார்
கவரு மணிகொல்லைக் கடிய முலைநல்லார்
பவரும் வடுகூரிலாடும் மடிகளே. 4

941. துணியா ருடையாடை துன்னி யரைதன்மேல்
தணியா அழல்நாகந் தரியா வகைவைத்தார்
பணியா ரடியார்கள் பலரும் பயின்றேத்த
அணியார் வடுகூரி லாடும் மடிகளே. 5

942. தளருங் கொடியன்னாள் தன்னோ டுடனாகிக்
கிளரு மரவார்த்துக் கிளரு முடிமேலோர்
வளரும் பிறைசூடி வரிவண் டிசைபாட
ஒளிரும் வடுகூரி லாடும் மடிகளே. 6

943. நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்
முடியர் விடையூர்வர் கொடியர் மொழிகொள்ளார்
கடிய தொழிற்காலன் மடிய வுதைகொண்ட
அடியர் வடுகூரி லாடும் மடிகளே. 7

944. பிறையு நெடுநீரும் பிரியா முடியினார்
மறையும் பலபாடி மயானத் துறைவாரும்
பறையு மதிர்குழலும் போலப் பலவண்டாங்
கறையும் வடுகூரி லாடும் மடிகளே. 8

945. சந்தம் மலர்வேய்ந்த சடையின் னிடைவிம்மு
கந்தம் மிகுதிங்கட் சிந்து கதிர்மாலை
வந்து நயந்தெம்மை நன்று மருள்செய்வார்
அந்தண் வடுகூரி லாடும் மடிகளே. 9

946. திருமா லடிவீழத் திசைநான் முகனாய
பெருமா னுணர்கில்லாப் பெருமான் நெடுமுடிசேர்
செருமால் விடையூருஞ் செம்மான் திசைவில்லா
அருமா வடுகூரி லாடும் மடிகளே. 10

947 படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடிநா ணிகழ்சோலை கமழும் வடுகூரைப்
படியா னசிந்தை மொழியார் சம்பந்தன்
அடிஞா னம்வல்லா ரடிசேர் வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 88. திருஆப்பனூர் : பண் – குறிஞ்சி

948. முற்றுஞ் சடைமுடிமேல் முதிரா இளம்பிறையன்
ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்
செற்றமில் சீரானைத் திருவாப்ப னூரானைப்
பற்று மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 1

949. குரவங் கமழ்குழலாள் குடிகொண்டு நின்றுவிண்ணோர்
விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்
அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்
பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 2

950. முருகு விரிகுழலார் மனங்கொ ளநங்கனைமுன்
பெரிது முனிந்துகந்தான் பெருமான் பெருங்காட்டின்
அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்
பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 3

951. பிணியும் பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்
துணியி னுடைதாழச் சுடரேந்தி யாடுவான்
அணியும் புனலானை யணியாப்ப னூரானைப்
பணியு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 4

952. தகர மணியருவித் தடமால் வரைசிலையா
நகர மொருமூன்றும் நலங்குன்ற வென்றுகந்தான்
அகர முதலானை யணியாப்ப னூரானைப்
பகரு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 5

953. ஓடுந் திரிபுரங்க ளுடனே யுலந்தவியக்
காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்
ஆடுந் தொழிலானை யணியாப்ப னூரானைப்
பாடு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 6

954. இயலும் விடையேறி யெரிகொள் மழுவீசிக்
கயலி னிணைக்கண்ணா ளொருபாற் கலந்தாட
இயலு மிசையானை யெழிலாப்ப னூரானைப்
பயிலு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 7

955. கருக்கு மணிமிடறன் கதநாகக் கச்சையினான்
உருக்கு மடியவரை யொளிவெண் பிறைசூடி
அரக்கன் றிறலழித்தா னணியாப்ப னூரானைப்
பருக்கு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 8

956. கண்ணன் கடிக்கமல மலர்மே லினிதுறையும்
அண்ணற் களப்பரிதாய் நின்றங் கடியார்மேல்
எண்ணில் வினைகளைவா னெழிலாப்ப னூரானைப்
பண்ணின் னிசைபகர்வார் வினைபற் றறுப்பாரே. 9

957. செய்ய கலிங்கத்தார் சிறுதட் டுடையார்கள்
பொய்யர் புறங்கூறப் புரிந்த வடியாரை
ஐய மகற்றுவா னணியாப்ப னூரானைப்
பைய நினைந்தெழுவார் வினைபற் றறுப்பாரே. 10

958. அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய
சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை
நந்தி யடிபரவும் நலஞான சம்பந்தன்
சந்த மிவைவல்லார் தடுமாற் றறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 89. திருஎருக்கத்தம்புலியூர் : பண் – குறிஞ்சி

959. படையார் தருபூதப் பகடா ருரிபோர்வை
உடையா னுமையோடு முடனா யிடுகங்கைச்
சடையா னெருக்கத்தம் புலியூர்த் தகுகோயில்
விடையா னடியேத்த மேவா வினைதானே. 1

960. இலையார் தருசூலப் படையெம் பெருமானாய்
நிலையார் மதில்மூன்று நீறாய் விழவெய்த
சிலையா னெருக்கத்தம் புலியூர்த் திகழ்கோயில்
கலையா னடியேத்தக் கருதா வினைதானே. 2

961. விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தீ
பெண்ணா ணலியாகும் பித்தா பிறைசூடீ
எண்ணா ரெருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா வெனவல்லார்க் கடையா வினைதானே. 3

962. அரையார் தருநாக மணிவா னலர்மாலை
விரையார் தருகொன்றை யுடையான் விடையேறி
வரையா னெருக்கத்தம் புலியூர் மகிழ்கின்ற
திரையார் சடையானைச் சேரத் திருவாமே. 4

963. வீறார் முலையாளைப் பாக மிகவைத்துச்
சீறா வருகாலன் சினத்தை யழிவித்தான்
ஏறா னெருக்கத்தம் புலியூ ரிறையானை
வேறா நினைவாரை விரும்பா வினைதானே. 5

964. நகுவெண் டலையேந்தி நானாவிதம் பாடிப்
புகுவா னயம்பெய்யப் புலித்தோல் பியற்கிட்டுத்
தகுவா னெருக்கத்தம் புலியூர்த் தகைந்தங்கே
தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே. 6,7

965. ஆவா வெனவரக்க னலற வடர்த்திட்டுத்
தேவா வெனவருளார் செல்வங் கொடுத்திட்ட
கோவே யெருக்கத்தம் புலியூர் மிகுகோயில்
தேவே யெனஅல்லல் தீர்தல் திடமாமே. 8

966. மறையான் நெடுமால்காண் பரியான் மழுவேந்தி
நிறையா மதிசூடி நிகழ்முத் தின்றொத்தே
இறையா னெருக்கத்தம் புலியூ ரிடங்கொண்ட
கறையார் மிடற்றானைக் கருதக் கெடும்வினையே. 9

967. புத்த ரருகர்தம் பொய்கள் புறம்போக்கிச்
சுத்தி தரித்துறையுஞ் சோதி யுமையோடும்
நித்த னெருக்கத்தம் புலியூர் நிகழ்வாய
அத்த னறவன்றன் னடியே யடைவோமே. 10

968. ஏரா ரெருக்கத்தம் புலியூ ருறைவானைச்
சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்
ஆரா வருந்தமிழ் மாலை யிவைவல்லார்
பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 90. திருப்பிரமபுரம் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

969. அரனை யுள்குவீர், பிரம னூருளெம்
பரனையே மனம், பரவி யுய்ம்மினே. 1

970. காண வுள்குவீர், வேணு நற்புரத்
தாணு வின்கழல், பேணி யுய்ம்மினே. 2

971. நாத னென்பிர்காள், காத லொண்புகல்
ஆதி பாதமே ஓதி யுய்ம்மினே. 3

972. அங்க மாதுசேர், பங்க மாயவன்
வெங்குரு மன்னும், எங்க ளீசனே. 4

973. வாணி லாச்சடைத், தோணி வண்புரத்
தாணி நற்பொனைக், காணு மின்களே. 5

974. பாந்த ளார்சடைப், பூந்த ராய்மன்னும்
ஏந்து கொங்கையாள், வேந்த னென்பரே. 6

975. கரிய கண்டனைச், சிரபு ரத்துளெம்
அரசை நாள்தொறும், பரவி யுய்ம்மினே. 7

976. நறவ மார்பொழிற், புறவ நற்பதி
இறைவன் நாமமே, மறவல் நெஞ்சமே. 8

977. தென்றி லரக்கனைக், குன்றிற் சண்பைமன்
அன்று நெரித்தவா, நின்று நினைமினே. 9

978. அயனு மாலுமாய், முயலுங் காழியான்
பெயல்வை யெய்திநின், றியலு முள்ளமே. 10

979. தேர ரமணரைச், சேர்வில் கொச்சைமன்
நேரில் கழல்நினைந், தோரு முள்ளமே. 11

980. தொழும னத்தவர், கழும லத்துறை
பழுதில் சம்பந்தன், மொழிகள் பத்துமே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திருஆரூர் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

981. சித்தந் தெளிவீர்காள், அத்த னாரூரைப்
பத்தி மலர்தூவமுத்தி யாகுமே. 1

982. பிறவி யறுப்பீர்காள், அறவ னாரூரை
மறவா தேத்துமின், துறவி யாகுமே. 2

983. துன்பந் துடைப்பீர்காள், அன்ப னணியாரூர்
நன்பொன் மலர்தூவ, இன்ப மாகுமே. 3

984. உய்ய லுறுவீர்காள் ஐய னாரூரைக்
கையி னாற்றொழ, நையும் வினைதானே. 4

985. பிண்ட மறுப்பீர்காள், அண்ட னாரூரைக்
கண்டு மலர்தூவ, விண்டு வினைபோமே. 5

986. பாச மறுப்பீர்கள், ஈச னணியாரூர்
வாச மலர்தூவ, நேச மாகுமே. 6

987. வெய்ய வினைதீர, ஐய னணியாரூர்
செய்ய மலர்தூவ, வைய முமதாமே. 7

988. அரக்க னாண்மையை, நெருக்கி னானாரூர்
கரத்தி னாற்றொழத், திருத்த மாகுமே. 8

989. துள்ளு மிருவர்க்கும், வள்ள லாரூரை
உள்ளு மவர்தம்மேல், விள்ளும் வினைதானே 9

990. கடுக்கொள் சீவரை, அடக்கி னானாரூர்
எடுத்து வாழ்த்துவார், விடுப்பர் வேட்கையே. 10

991. சீரூர் சம்பந்தன், ஆரூ ரைச்சொன்ன
பாரூர் பாடலார், பேரா ரின்பமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 92. திருவீழிமிழலை : திருவிருக்குக்குறள். பண்– குறிஞ்சி

992. வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏச லில்லையே. 1

993. இறைவ ராயினீர், மறைகொள் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே. 2

994. செய்ய மேனியீர், மெய்கொள் மிழலையீர்
பைகொ ளரவினீர், உய்ய நல்குமே. 3

995. நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர், பேறு மருளுமே. 4

996. காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேம நல்குமே. 5

997. பிணிகொள் சடையினீர், மணிகொள் மிடறினீர்
அணிகொள் மிழலையீர், பணிகொண் டருளுமே. 6

998. மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே. 7

999. அரக்கன் நெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே. 8

1000. அயனு மாலுமாய், முயலு முடியினீர்
இயலு மிழலையீர், பயனு மருளுமே. 9

1001. பறிகொள் தலையினார், அறிவ தறிகிலார்
வெறிகொள் மிழலையீர், பிறிவ தரியதே. 10

1002. காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழு மொழிகளே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 93. திருமுதுகுன்றம் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

1003. நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை
நன்று மேத்துவீர்க், கென்று மின்பமே. 1

1004. அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்
நித்த மேத்துவீர்க், குய்த்தல் செல்வமே 2

1005. ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர், வைய முமதாமே. 3

1006. ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்
வாச மலர்தூவப், பாச வினைபோமே. 4

1007. மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்
பிணியா யினகெட்டுத், தணிவா ருலகிலே. 5

1008. மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்
பொய்யா ரிரவோர்க்குச், செய்யா ளணியாளே. 6

1009. விடையான் முதுகுன்றை, இடையா தேத்துவார்
படையா யினசூழ, உடையா ருலகமே. 7

1010. பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்
அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. 8

1011. இருவ ரறியாத, ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. 9

1012. தேர ரமணரும், சேரும் வகையில்லான்
நேரின் முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. 10

1013. நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்
ஒன்று முரைவல்லார், என்று முயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 94. திருஆலவாய் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

1014. நீல மாமிடற், றால வாயிலான்
பால தாயினார், ஞால மாள்வரே. 1

1015. ஞால மேழுமாம், ஆல வாயிலார்
சீல மேசொலீர், காலன் வீடவே. 2

1016. ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனார், பால தாமினே. 3

1017. அந்த மில்புகழ், எந்தை யாலவாய்
பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. 4

1018. ஆட லேற்றினான், கூட லாலவாய்
பாடி யேமனம், நாடி வாழ்மினே. 5

1019. அண்ண லாலவாய், நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத், திண்ண மின்பமே. 6

1020. அம்பொ னாலவாய், நம்ப னார்கழல்
நம்பி வாழ்பவர், துன்பம் வீடுமே. 7

1021. அரக்க னார்வலி, நெருக்க னாலவாய்
உரைக்கு முள்ளத்தார்க், கிரக்க முண்மையே. 8

1022. அருவ னாலவாய், மருவி னான்றனை
இருவ ரேத்தநின், றுருவ மோங்குமே. 9

1023. ஆர நாகமாம், சீர னாலவாய்த்
தேர மண்செற்ற, வீர னென்பரே. 10

1024. அடிக ளாலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்தமிழ் செடிகள் நீக்குமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. திருஇடைமருதூர் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

1025. தோடொர் காதினன், பாடு மறையினன்
காடு பேணிநின், றாடு மருதனே. 1

1026. கருதார் புரமெய்வர், எருதே யினிதூர்வர்
மருதே யிடமாகும், விருதாம் வினைதீர்ப்பே. 2

1027. எண்ணு மடியார்கள், அண்ணல் மருதரைப்
பண்ணின் மொழிசொல்ல, விண்ணுந் தமதாமே. 3

1028. விரியார் சடைமேனி, எரியார் மருதரைத்
தரியா தேத்துவார், பெரியா ருலகிலே. 4

1029. பந்த விடையேறும், எந்தை மருதரைச்
சிந்தை செய்பவர், புந்தி நல்லரே. 5

1030. கழலுஞ் சிலம்பார்க்கும், எழிலார் மருதரைத்
தொழலே பேணுவார்க், குழலும் வினைபோமே. 6

1031. பிறையார் சடையண்ணல், மறையார் மருதரைத்
நிறையால் நினைபவர், குறையா ரின்பமே. 7

1032. எடுத்தான் புயந்தன்னை, அடுத்தார் மருதரைத்
தொடுத்தார் மலர்சூட்ட, விடுத்தார் வேட்கையே. 8

1033. இருவர்க் கெரியாய, உருவ மருதரைப்
பரவி யேத்துவார், மருவி வாழ்வரே. 9

1034. நின்றுண் சமண்தேரர், என்று மருதரை
அன்றி யுரைசொல்ல, நன்று மொழியாரே. 10

1035. கருது சம்பந்தன், மருத ரடிபாடிப்
பெரிதுந் தமிழ்சொல்லப், பொருத வினைபோமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 96. திருஅன்னியூர் : திருவிருக்குக்குறள். பண் – குறிஞ்சி

1036. மன்னி யூரிறை, சென்னி யார்பிறை
அன்னி யூரமர், மன்னு சோதியே. 1

1037. பழகுந் தொண்டர்வம், அழக னன்னியூர்க்
குழகன் சேவடி, தொழுது வாழ்மினே. 2

1038. நீதி பேணுவீர், ஆதி யன்னியூர்ச்
சோதி நாமமே, ஓதி யுய்ம்மினே. 3

1039. பத்த ராயினீர், அத்த ரன்னியூர்ச்
சித்தர் தாள்தொழ, முத்த ராவரே. 4

1040. நிறைவு வேண்டுவீர், அறவ னன்னியூர்
மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே 5

1041. இன்பம் வேண்டுவீர், அன்ப னன்னியூர்
நன்பொ னென்னுமின், உம்ப ராகவே. 6

1042. அந்த ணாளர்தம், தந்தை யன்னியூர்
எந்தை யேயெனப், பந்த நீங்குமே. 7

1043. தூர்த்த னைச்செற்ற, தீர்த்த னன்னியூர்
ஆத்த மாஅடைந், தேத்தி வாழ்மினே. 8

1044. இருவர் நாடிய, அரவ னன்னியூர்
பரவு வார்விண்ணுக், கொருவ ராவரே. 9

1045. குண்டர் தேரருக், கண்ட னன்னியூர்த்
தொண்டு ளார்வினை, விண்டு போகுமே. 10

1046. பூந்த ராய்ப்பந்தன் ஆய்ந்த பாடலால்
வேந்த னன்னியூர், சேர்ந்து வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 97. திருப்புறவம் : பண் – தக்கேசி

1047. எய்யாவென்றித் தானவரூர்மூன் றெரிசெய்த
மையார்கண்டன் மாதுமைவைகுந் திருமேனிச்
செய்யான்வெண்ணீ றணிவான்றிகழ்பொற் பதிபோலும்
பொய்யாநாவி னந்தணர்வாழும் புறவம்மே. 1

1048. மாதொருபாலும் மாலொருபாலும் மகிழ்கின்ற
நாதனென்றேத்து நம்பரன்வைகுந் நகர்போலும்
மாதவிமேய வண்டிசைபாட மயிலாடப்
போதலர்செம்பொன் புன்னைகொடுக்கும் புறவம்மே. 2

1049. வற்றாநதியும் மதியும்பொதியுஞ் சடைமேலே
புற்றாடரவின் படமாடவுமிப் புவனிக்கோர்
பற்றாயிடுமின் பலியென்றடைவார் பதிபோலும்
பொற்றாமரையின் பொய்கைநிலாவும் புறவம்மே. 3

1050. துன்னார்புரமும் பிரமன்சிரமுந் துணிசெய்து
மின்னார்சடைமே லரவும்மதியும் விளையாடப்
பன்னாளிடுமின் பலியென்றடைவார் பதிபோலும்
பொன்னார்புரிநூ லந்தணர்வாழும் புறவம்மே. 4

1051. தேவாஅரனே சரணென்றிமையோர் திசைதோறுங்
காவாயென்று வந்தடையக்கார் விடமுண்டு
பாவார்மறையும் பயில்வோருறையும் பதிபோலும்
பூவார்கோலச் சோலைசுலாவும் புறவம்மே. 5

1052. கற்றறிவெய்திக் காமன்முன்னாகும் முகவெல்லாம்
அற்றரனேநின் னடிசரணென்னு மடியோர்க்குப்
பற்றதுவாய பாசுபதன்சேர் பதியென்பர்
பொற்றிகழ்மாடத் தொளிகள்நிலாவும் புறவம்மே. 6

1053. எண்டிசையோரஞ் சிடுவகைகார்சேர் வரையென்னக்
கொண்டெழுகோல முகில்போற்பெரிய கரிதன்னைப்
பண்டுரிசெய்தோன் பாவனைசெய்யும் பதியென்பர்
புண்டரிகத்தோன் போன்மறையோர்சேர் புறவம்மே. 7

1054. பரக்குந்தொல்சீர்த் தேவர்கள்சேனைப் பௌவத்தைத்
துரக்குஞ்செந்தீப் போலமர்செய்யுந் தொழில்மேவும்
அரக்கன்திண்டோ ளழிவித்தானக் காலத்திற்
புரக்கும்வேந்தன் சேர்தருமூதூர் புறவம்மே. 8

1055. மீத்திகழண்டந் தந்தயனோடு மிகுமாலும்
மூர்த்தியைநாடிக் காணவொணாது முயல்விட்டாங்
கேத்தவெளிப்பா டெய்தியவன்ற னிடமென்பர்
பூத்திகழ்சோலைத் தென்றலுலாவும் புறவம்மே. 9

1056. வையகநீர்தீ வாயுவும்விண்ணும் முதலானான்
மெய்யலதேர ருண்டிலையென்றே நின்றேதங்
கையினிலுண்போர் காணவொணாதான் நகரென்பர்
பொய்யகமில்லாப் பூசுரர்வாழும் புறவம்மே. 10

1057. பொன்னியல்மாடப் புரிசைநிலாவும் புறவத்து
மன்னியஈசன் சேவடிநாளும் பணிகின்ற
தன்னியல்பில்லாச் சண்பையர்கோன்சீர்ச் சம்பந்தன்
இன்னிசையீரைந் தேத்தவல்லோர்கட் கிடர்போமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 98. திருச்சிராப்பள்ளி : பண் – குறிஞ்சி

1058. நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை யுமையொருபாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே. 1

1059. கைம்மகவேந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. 2

1060. மந்தம்முழவம் மழலைததும்ப வரைநீழல்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம்மடிக ளடியார்க்கல்ல லில்லையே. 3

1061. துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுள்எம்
பிறைமல்குசென்னி யுடையவனெங்கள் பெருமானே. 4

1062. கொலைவரையாத கொள்கையர்தங்கள் மதில்மூன்றும்
சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்
தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்
நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. 5

1063. வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனார்
தையலொர்பாக மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங்கொள்வ ராரிவர்செய்கை யறிவாரே. 6

1064. வேயுயர்சாரற் கருவிரலூகம் விளையாடும்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனார்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானார்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் றாகாதே. 7

1065. மலைமல்குதோளன் வலிகெடவூன்றி மலரோன்றன்
தலைகலனாகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்
சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்
சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே. 8

1066. அரப்பளியானு மலருறைவானு மறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளீரும்மை யேதிலர்கண்டார் லிகழாரே. 9

1067. நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை
ஊணாப்பகலுண் டோதுவோர்க ளுரைக்குஞ்சொல்
பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. 10

1068. தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்தன் நலமிகுபாட லிவைவல்லார்
வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 99. திருக்குற்றாலம் : பண் — குறிஞ்சி

1069. வம்பார்குன்றந் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்
அம்பால்நெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலும் நமரங்காள். 1

1070. பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்லப் புகழ்விம்மக்
கொடிகளோடுந் நாள்விழமல்கு குற்றாலம்
கடிகொள்கொன்றை கூவிளமாலை காதல்செய்
அடிகள்மேய நன்னகர்போலும் மடியீர்காள். 2

1071. செல்வமல்கு செண்பகம்வேங்கை சென்றேறிக்
கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங் குற்றாலம்
வில்லினொல்க மும்மதிலெய்து வினைபோக
நல்குநம்பான் நன்னகர்போலுந் நமரங்காள். 3

1072. பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின்றேன்
கொக்கின்கோட்டுப் பைங்கனிதூங்குங் குற்றாலம்
அக்கும்பாம்பு மாமையும்பூண்டோ ரனலேந்தும்
நக்கன்மேய நன்னகர்போலுந் நமரங்காள். 4

1073. மலையார்சாரல் மகவுடன்வந்த மடமந்தி
குலையார்வாழைத் தீங்கனிமாந்துங் குற்றாலம்
இலையார்சூல மேந்தியகையா னெயிலெய்த
சிலையான்மேய நன்னகர்போலுஞ் சிறுதொண்டீர். 5

1074. மைம்மாநீலக் கண்ணியர்சாரல் மணிவாரிக்
கொய்ம்மாவேன லுண்கிளியோப்புங் குற்றாலம்
கைம்மாவேழத் தீருரிபோர்த்த கடவுள்ளெம்
பெம்மான்மேய நன்னகர்போலும் பெரியீர்காள். 6

1075. நீலநெய்தல் தண்சுனைசூழ்ந்த நீள்சோலைக்
கோலமஞ்ஞை பேடையொடாடுங் குற்றாலம்
காலன்றன்னைக் காலாற்காய்ந்த கடவுள்ளெம்
சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள். 7

1076. போதும்பொன்னு முந்தியருவி புடைசூழக்
கூதன்மாரி நுண்டுளிதூங்குங் குற்றாலம்
மூதூரிலங்கை முட்டியகோனை மிறைசெய்த
நாதன்மேய நன்னகர்போலுந் நமரங்காள். 8

1077. அரவின்வாயின் முள்ளெயிறேய்ப்ப அரும்பீன்று
குரவம்பாவை முருகமர்சோலைக் குற்றாலம்
பிரமன்னோடு மாலறியாத பெருமையெம்
பரமன்மேய நன்னகர்போலும் பணிவீர்காள். 9

1078. பெருந்தண்சாரல் வாழ்சிறைவண்டு பெடைபுல்கிக்
குருந்தம்மேறிச் செவ்வழிபாடுங் குற்றாலம்
இருந்துண்தேரும் நின்றுண்சமணு மெடுத்தார்ப்ப
அருந்தண்மேய நன்னகர்போலு மடியீர்காள். 10

1079. மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்
கோடலீன்று கொழுமுனைகூம்புங் குற்றாலம்
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 100. திருப்பரங்குன்றம் : பண் – குறிஞ்சி

1080. நீடலர்சோதி வெண்பிறையோடு நிரைகொன்றை
சூடலனந்திச் சுடரெரியேந்திச் சுடுகானில்
ஆடலனஞ்சொ லணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 1

1081. அங்கமொராறும் மருமறைநான்கும் மருள்செய்து
பொங்குவெண்ணூலும் பொடியணிமார்பிற் பொலிவித்துத்
திங்களும்பாம்புந் திகழ்சடைவைத்தோர் தேன்மொழி
பங்கினன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 2

1082. நீரிடங்கொண்ட நிமிர்சடைதன்மேல் நிரைகொன்றை
சீரிடங்கொண்ட எம்மிறைபோலுஞ் சேய்தாய
ஓருடம்புள்ளே யுமையொருபாக முடனாகிப்
பாரிடம்பாட இனிதுறைகோயில் பரங்குன்றே. 3

1083. வளர்பூங்கோங்க மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ்சாரல் வண்டறைசோலைப் பரங்குன்றம்
தளிர்போல்மேனித் தையல்நல்லாளோ டொருபாகம்
நளிர்பூங்கொன்றை சூடினன்மேய நகர்தானே. 4

1084. பொன்னியல்கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்
துன்னியசோதி யாகியஈசன் தொன்மறை
பன்னியபாட லாடலன்மேய பரங்குன்றை
உன்னியசிந்தை யுடையவர்க்கில்லை யுறுநோயே. 5

1085. கடைநெடுமாடக் கடியரண்மூன்றுங் கனல்மூழ்கத்
தொடைநவில்கின்ற வில்லினனந்திச் சுடுகானில்
புடைநவில்பூதம் பாடநின்றாடும் பொருசூலப்
படைநவில்வான்றன் நன்னகர்போலும் பரங்குன்றே. 6

1086. அயிலுடைவேலோ ரனல்புல்குகையி னம்பொன்றால்
எயில்படவெய்த எம்மிறைமேய இடம்போலும்
மயில்பெடைபுல்கி மாநடமாடும் வளர்சோலைப்
பயில்பெடைவண்டு பாடலறாத பரங்குன்றே. 7

1087. மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள்
பத்தினதிண்டோ ளிருபதுஞ்செற்றான் பரங்குன்றைச்
சித்தமதொன்றிச் செய்கழலுன்னிச் சிவனென்று
நித்தலுமேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே. 8

1088. முந்தியிவ்வையந் தாவியமாலு மொய்யொளி
உந்தியில்வந்திங் கருமறையீந்த வுரவோனும்
சிந்தையினாலுந் தெரிவரிதாகித் திகழ்சோதி
பந்தியலங்கை மங்கையொர்பங்கன் பரங்குன்றே. 9

1089. குண்டாய்முற்றுந் திரிவார்கூறை மெய்போர்த்து
மிண்டாய்மிண்டர் பேசியபேச்சு மெய்யல்ல
பண்டால்நீழல் மேவியஈசன் பரங்குன்றைத்
தொண்டாயேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே. 10

1090. தடமலிபொய்கைச் சண்பைமன்ஞான சம்பந்தன்
படமலிநாக மரைக்கசைத்தான்றன் பரங்குன்றைத்
தொடைமலிபாடல் பத்தும்வல்லார்தந் துயர்போகி
விடமலிகண்ட னருள்பெறுந்தன்மை மிக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 101. திருக்கண்ணார்கோயில் : பண் – குறிஞ்சி

1091. தண்ணார்திங்கட் பொங்கரவந்தாழ் புனல்சூடிப்
பெண்ணாணாய பேரருளாளன் பிரியாத
கண்ணார்கோயில் கைதொழுவோர்கட் கிடர்பாவம்
நண்ணாவாகுந் நல்வினையாய நணுகும்மே. 1

1092. கந்தமர்சந்துங் காரகிலுந்தண் கதிர்முத்தும்
வந்தமர்தெண்ணீர் மண்ணிவளஞ்சேர் வயல்மண்டிக்
கொந்தலர்சோலைக் கோகிலமாடக் குளிர்வண்டு
செந்திசைபாடுஞ் சீர்திகழ்கண்ணார் கோயிலே. 2

1093. பல்லியல்பாணிப் பாரிடமேத்தப் படுகானின்
எல்லிநடஞ்செய் யீசனெம்மான்றன் னிடமென்பர்
கொல்லையின்முல்லை மல்லிகைமௌவற் கொடிபின்னிக்
கல்லியலிஞ்சி மஞ்சமர்கண்ணார் கோயிலே. 3

1094. தருவளர்கானந் தங்கியதுங்கப் பெருவேழம்
மருவளர்கோதை யஞ்சவுரித்து மறைநால்வர்க்
குருவளரால நீழலமர்ந்தீங் குரைசெய்தார்
கருவளர்கண்ணார் கோயிலடைந்தோர் கற்றோரே. 4

1095. மறுமாணுருவாய் மற்றிணையின்றி வானோரைச்
செறுமாவலிபாற் சென்றுலகெல்லா மளவிட்ட
குறுமாணுருவன் தற்குறியாகக் கொண்டாடுங்
கறுமாகண்டன் மேயதுகண்ணார் கோயிலே. 5

1096. விண்ணவருக்காய் வேலையுள்நஞ்சம் விருப்பாக
உண்ணவனைத்தே வர்க்கமுதீந்தெவ் வுலகிற்குங்
கண்ணவனைக்கண் ணார்திகழ்கோயிற் கனிதன்னை
நண்ணவல்லோர்கட் கில்லைநமன்பால் நடலையே. 6

1097. முன்னொருகாலத் திந்திரனுற்ற முனிசாபம்
பின்னொருநாளவ் விண்ணவரேத்தப் பெயர்வெய்தித்
தன்னருளாற்கண் ணாயிரமீந்தோன் சார்பென்பர்
கன்னியர்நாளுந் துன்னமர்கண்ணார் கோயிலே. 7

1098. பெருக்கெண்ணாத பேதையரக்கன் வரைக்கீழால்
நெருக்குண்ணாத்தன் நீள்கழல்நெஞ்சில் நினைந்தேத்த
முருக்குண்ணாதோர் மொய்கதிர்வாள்தேர் முன்னீந்த
திருக்கண்ணாரென் பார்சிவலோகஞ் சேர்வாரே. 8

1099. செங்கமலப்போ திற்றிகழ்செல்வன் திருமாலும்
அங்கமலக்கண் ணோக்கரும்வண்ணத் தழலானான்
தங்கமலக்கண் ணார்திகழ்கோயில் தமதுள்ளம்
அங்கமலத்தோ டேத்திடஅண்டத் தமர்வாரே. 9

1100. தாறிடுபெண்ணைத் தட்டுடையாருந் தாமுண்ணுஞ்
சோறுடையார்சொல் தேறன்மின்வெண்ணூல்சேர்மார்பன்
ஏறுடையன்பர னென்பணிவானீள் சடைமேலோர்
ஆறுடையண்ணல் சேர்வதுகண்ணார் கோயிலே. 10

1101. காமருகண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமருசோலைப் பொன்னியல்மாடப் புகலிக்கோன்
நாமருதொன்மைத் தன்மையுள்ஞான சம்பந்தன்
பாமருபாடல் பத்தும்வல்லார்மேற் பழிபோமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 102. சீகாழி : பண் – குறிஞ்சி

1102. உரவார்கலையின் கவிதைப்புலவர்க் கொருநாளுங்
கரவாவண்கைக் கற்றவர்சேருங் கலிக்காழி
அரவாரரையா வவுணர்புரமூன் றெரிசெய்த
சரவாஎன்பார் தத்துவஞானத் தலையாரே. 1

1103. மொய்சேர்வண்டுண் மும்மதநால்வாய் முரண்வேழக்
கைபோல்வாழை காய்குலையீனுங் கலிக்காழி
மைசேர்கண்டத் தெண்டோள்முக்கண் மறையோனே
ஐயாவென்பார்க் கல்லல்களான அடையாவே. 2

1104. இளகக்கமலத் தீன்களியங்குங் கழிசூழக்
களகப்புரிசைக் கவினார்சாருங் கலிக்காழி
அளகத்திருநன் னுதலிபங்கா அரனேயென்
றுளகப்பாடு மடியார்க்குறுநோ யடையாவே. 3

1105. எண்ணார்முத்த மீன்றுமரகதம் போறகாய்த்துக்
கண்ணார்கமுக பவளம்பழுக்குங் கலிக்காழிப்
பெண்ணோர்பாகா பித்தாபிரானே யென்பார்க்கு
நண்ணாவினைகள் நாடொறுமின்பந் நணுகும்மே. 4

1106. மழையார்சாரற் செம்புனல்வந்தங் கடிவருடத்
தழையார்கரும்பு கண்வளர்சோலைக் கலிக்காழி
உழையார்கரவா வுமையாள்கணவா வொளிர்சங்கக்
குழையாஎன்று. கூறவல்லார்கள் குணவோரே. 5

1107. குறியார்திரைகள் வரைகள்நின்றுங் கோட்டாறு
கறியார்கழிசம் பிரசங்கொடுக்குங் கலிக்காழி
வெறியார்கொன்றைச் சடையாவிடையா என்பாரை
அறியாவினைக எருநோய்பாவம் மடையாவே. 6,7

1108. உலங்கொள்சங்கத் தார்கலியோதத் துதையுண்டு
கலங்கள்வந்து கார்வயலேறுங் கலிக்காழி
இலங்கைமன்னன் றன்னையிடர்கண் டருள்செய்த
சலங்கொள்சென்னி மன்னாஎன்னத் தவமாமே. 8

1109. ஆவிக்கமலத் தன்னமியங்குங் கழிசூழக்
காவிக்கண்ணார் மங்கலமோவாக் கலிக்காழிப்
பூவிற்றோன்றும் புத்தேளொடுமா லவன்றானும்
மேவிப்பரவு மரசேயென்ன வினைபோமே. 9

1110. மலையார்மாட நீடுயரிஞ்சி மஞ்சாருங்
கலையார்மதியஞ் சேர்தருமந்தன் கலிக்காழித்
தலைவாசமணர் சாக்கியர்க்கென்று மறிவொண்ணா
நிலையாயென்னத் தொல்வினையாய நில்லாவே. 10

1111. வடிகொள்வாவிச் செங்கழுநீரிற் கொங்காடிக்
கடிகொடேன்றன் முன்றினில்வைகுங் கலிக்காழி
அடிகள்தம்மை யந்தமில்ஞான சம்பந்தன்
படிகொள்பாடல் வல்லவர்தம்மேற் பழிபோமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 103. திருக்கழுக்குன்றம் : பண் – குறிஞ்சி

1112. தோடுடையானொரு காதிற்றூய குழைதாழ
ஏடுடையான் றலைகலனாக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிருளேம நடமாடுங்
காடுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 1

1113. கேணவல்லான் கேழல்வெண்கொம்பு குறளாமை
பூணவல்லான் புரிசடைமேலொர் புனல்கொன்றை
பேணவல்லான் பெண்மகள்தன்னை யொருபாகம்
காணவல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 2

1114. தேனகத்தார் வண்டதுவுண்ட திகழ்கொன்றை
தானகத்தார் தண்மதிசூடித் தலைமேலோர்
வானகத்தார் வையகத்தார்கள் தொழுதேத்தும்
கானகத்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 3

1115. துணையல்செய்தான் தூயவண்டியாழ்செய் சுடர்க்கொன்றை
பிணையல்செய்தான் பெண்ணினல்லாளை யொருபாகம்
இணையல்செய்யா விலங்கெயில்மூன்று மெரியுண்ணக்
கணையல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 4

1116. பையுடைய பாம்பொடுநீறு பயில்கின்ற
மெய்யுடையான் வெண்பிறைசூடி விரிகொன்றை
மையுடைய மாமிடற்றண்ணல் மறிசேர்ந்த
கையுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 5

1117. வெள்ளமெல்லாம் விரிசடைமேலோர் விரிகொன்றை
கொள்ளவல்லான் குரைகழலேத்துஞ் சிறுத்தொண்டர்
உள்ளமெல்லா முள்கிநின்றாங்கே யுடனாடுங்
கள்ளம்வல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 6,7

1118. ஆதல்செய்தா னரக்கர்தங்கோனை யருவரையின்
நோதல்செய்தான் நொடிவரையின்கண் விரலூன்றிப்
பேர்தல்செய்தான் பெண்மகள்தன்னோ டொருபாகம்
காதல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 8

1119. இடந்தபெம்மா னேனமதாயு மனமாயும்
தொடர்ந்தபெம்மான் தூமதிசூடி வரையார்தம்
மடந்தைபெம்மான் வார்கழலோச்சிக் காலனைக்
கடந்தபெம்மான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 9

1120. தேயநின்றான் திரிபுரங்கங்கை சடைமேலே
பாயநின்றான் பலர்புகழ்ந்தேத்த வுலகெல்லாம்
சாயநின்றான் வன்சமண்குண்டர் சாக்கியர்
காயநின்றான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 10

1121. கண்ணுதலான் காதல்செய்கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம்பந்தன் தமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடியபத்து மிவைவல்லார்
புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 104. திருப்புகலி : பண் – வியாழக்குறிஞ்சி

1122. ஆடலரவசைத்தானருமாமறை தான்விரித்தான்கொன்றை
சூடிய செஞ்சடையான் சுடுகா டமர்ந்தபிரான்
ஏடவிழ் மாமலையா ளொருபாக மமர்ந்தடியா ரேத்த
ஆடிய எம்மிறையூர் புகலிப் பதியாமே. 1

1123. ஏல மலிகுழலா ரிசைபாடி யெழுந்தருளாற் சென்று
சோலை மலிசுனையிற் குடைந்தாடித் துதிசெய்ய
ஆலை மலிபுகைபோ யண்டர்வானத்தை மூடிநின்று நல்ல
மாலை யதுசெய்யும் புகலிப் பதியாமே. 2

1124. ஆறணி செஞ்சடையா னழகார்புர மூன்றுமன்று வேவ
நீறணி யாகவைத்த நிமிர்புன்சடை யெம்மிறைவன்
பாறணி வெண்டலையிற் பகலேபலி யென்றுவந்து நின்ற
வேறணி கோலத்தினான் விரும்பும் புகலியதே. 3

1125. வெள்ள மதுசடைமேற் கரந்தான் விரவார்புரங்கள் மூன்றுங்
கொள்ள எரிமடுத்தான் குறைவின்றி யுறைகோயில்
அள்ளல் விளைகழனி யழகார்விரைத் தாமரைமேலன்னம்
புள்ளினம் வைகியெழும் புகலிப் பதிதானே. 4

1126. சூடு மதிச்சடைமேற் சுரும்பார்மலர்க் கொன்றைதுன்றநட்டம்
ஆடு மமரர்பிரா னழகாருமை யோடுமுடன்
வேடு படநடந்த விகிர்தன் குணம்பரவித் தொண்டர்
பாட இனிதுறையும் புகலிப் பதியாமே. 5

1127. மைந்தணி சோலையின்வாய் மதுப்பாய்வரி வண்டினங்கள்வந்து
நந்திசை பாடநடம் பயில்கின்ற நம்பனிடம்
அந்திசெய் மந்திரத்தா லடியார்கள் பரவியெழ விரும்பும்
புந்திசெய் நான்மறையோர் புகலிப் பதிதானே. 6

1128. மங்கையோர் கூறுகந்த மழுவாளன் வார்சடைமேற் றிங்கள்
கங்கை தனைக்கரந்த கறைக்கண்டன் கருதுமிடஞ்
செங்கயல் வார்கழனி திகழும் புகலிதனைச் சென்றுதம்
அங்கையி னாற்றொழுவா ரவல மறியாரே. 7

1129. வல்லிய நுண்ணிடையா ளுமையாள் விருப்பனவனண்ணும்
நல்லிட மென்றறியா னலியும் விறலரக்கன்
பல்லொடு தோள்நெரிய விரலூன்றிப் பாடலுமே கைவாள்
ஒல்லை யருள்புரிந்தா னுறையும் புகலியதே. 8

1130. தாதலர் தாமரைமே லயனுந் திருமாலுந் தேடி
ஓதியுங் காண்பரிய வுமைகோ னுறையுமிடம்
மாதவி வான்வகுள மலர்ந்தெங்கும் விரைதோய வாய்ந்த
போதலர் சோலைகள்சூழ் புகலிப் பதிதானே. 9

1131. வெந்துவர் மேனியினார் விரிகோவண நீத்தார் சொல்லும்
அந்தர ஞானமெல்லா மவையோர் பொருளென்னேல்
வந்தெதி ரும்புரமூன் றெரித்தா னுறைகோயில் வாய்ந்த
புந்தியி னார்பயிலும் புகலிப் பதிதானே. 10

1132. வேதமோர் கீதமுணர் வாணர்தொழுதேத்த மிகுவாசப்
போதனைப் போல்மறையோர் பயிலும் புகலிதன்னுள்
நாதனை ஞானமிகு சம்பந்தன் தமிழ்மாலை நாவில்
ஓதவல் லாருலகி லுறுநோய் களைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 105. திருஆரூர் : பண் – வியாழக்குறிஞ்சி

1133. பாடலன் நான்மறையன் படிபட்ட கோலத்தன் திங்கள்
சூடலன் மூவிலைய சூலம் வலனேந்திக்
கூடலர் மூவெயிலும் மெரியுண்ணக் கூரெரிகொண் டெல்லி
ஆடல னாதிரைய னாரூ ரமர்ந்தானே. 1

1134. சோலையில் வண்டினங்கள் சுரும்போ டிசைமுரலச் சூழ்ந்த
ஆலையின் வெம்புகைபோய் முகில்தோயு மாரூரில்
பாலொடு நெய்தயிரும் பயின்றாடும் பரமேட்டி பாதம்
காலையு மாலையும்போய்ப் பணிதல் கருமமே. 2

1135. உள்ளமோ ரிச்சையினா லுகந்தேத்தித் தொழுமின் தொண்டர்மெய்யே
கள்ள மொழிந்திடுமின் கரவா திருபொழுதும்
வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்ட வெள்ளேற்றான் மேய
அள்ள லகன்கழனி யாரூ ரடைவோமே. 3

1136. வெந்துறு வெண்மழுவாட் படையான் மணிமிடற்றானரையின்
ஐந்தலை யாடரவ மசைத்தா னணியாரூர்ப்
பைந்தளிர்க் கொன்றையந்தார்ப் பரமன் னடிபரவப் பாவம்
நைந்தறும் வந்தணையு நாடொறும் நல்லனவே. 4

1137. வீடு பிறப்பெளிதா மதனை வினவுதிரேல் வெய்ய
காடிட மாகநின்று கனலேந்திக் கைவீசி
ஆடு மவிர்சடையா னவன்மேய ஆரூரைச் சென்று
பாடுதல் கைதொழுதல் பணிதல் கருமமே. 5

1138. கங்கையோர் வார்சடைமேற் கரந்தான் கிளிமழலைக் கேடில்
மங்கையோர் கூறுடையான் மறையான் மழுவேந்தும்
அங்கையி னானடியே பரவி யவன்மேய ஆரூரர்
தங்கையினாற் றொழுவார் தடுமாற் றறுப்பாரே. 6

1139. நீறணி மேனியனாய் நிரம்பா மதிசூடி நீண்ட
ஆறணி வார்சடையா னாரூ ரினிதமர்ந்தான்
சேறணி மாமலர்மேற் பிரமன் சிரமரிந்த செங்கண்
ஏறணி வெல்கொடியா னவனெம் பெருமானே. 7,8

1140. வல்லியந் தோலுடையான் வளர்திங்கட் கண்ணியினான் வாய்த்த
நல்லிய னான்முகத்தோன் தலையின் னறவேற்றான்
அல்லியங் கோதைதன்னை யாகத் தமர்ந்தருளி ஆரூர்ப்
புல்லிய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே. 9

1141. செந்துவ ராடையினா ருடைவிட்டு நின்றுழல்வார் சொன்ன
இந்திர ஞாலமொழிந் தின்புற வேண்டுதிரேல்
அந்தர மூவெயிலும் அரணம் மெரியூட்டி ஆரூர்த்
தந்திர மாவுடையா னவனெந் தலைமையனே. 10

1142. நல்ல புனற்புகலித் தமிழ்ஞான சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி ஆரூ ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 106. திருஊறல் : பண் – வியாழக்குறிஞ்சி

1143. மாறில வுணரரணம் மவைமாயவோர் வெங்கணையா லன்று
நீறெழ வெய்தவெங்கள் நிமல னிடம்வினவில்
தேறலி ரும்பொழிலுந் திகழ்செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த
ஊறல மர்ந்தபிரா னொலியார்கழ லுள்குதுமே. 1

1144. மத்த மதக்கரியை மலையான்மக ளஞ்சவன்று கையால்
மெத்த வுரித்தவெங்கள் விமலன் விரும்புமிடம்
தொத்தல ரும்பொழில்சூழ் வயல்சேர்ந்தொளிர் நீலநாளுந் நயனம்
ஒத்தல ருங்கழனித் திருவூறலை யுள்குதுமே. 2

1145. ஏன மருப்பினொடு மெழிலாமையும் பூண்டழகார் நன்றும்
கானமர் மான்மறிக்கைக் கடவுள் கருதுமிடம்
வான மதிதடவும் வளர்சோலைகள் சூழ்ந்தழகார் நம்மை
ஊன மறுத்தபிரான்புரிந்தான் திருவூறலை யுள்குதுமே. 3

1146. நெய்யணி மூவிலைவேல் நிறைவெண்மழு வும்மனலு மன்று
கையணி கொள்கையினான் கடவுள் ளிடம்வினவில்
மையணி கண்மடவார் பலர்வந் திறைஞ்சமன்னி நம்மை
உய்யும் வகைபுரிந்தான் திருவூறலை யுள்குதுமே. 4

1147. எண்டிசை யோர்மகிழ எழில்மாலையும் போனகமும் பண்டு
சண்டி தொழஅளித்தா னவன்தாழு மிடம்வினவில்
கொண்டல்கள் தங்குபொழிற் குளிர்பொய்கை கள்சூழ்ந்து நஞ்சை
உண்டபி ரானமருந் திருவூறலை யுள்குதுமே. 5,6,7

1148. கறுத்த மனத்தினொடுங் கடுங்காலன்வந் தெய்துதலுங்கலங்கி
மறுக்குறு மாணிக்கருள மகிழ்ந்தா னிடம்வினவில்
செறுத்தெழு வாளரக்கன் சிரந்தோளு மெய்யுந்நெரிய அன்று
ஒறுத்தருள் செய்தபிரான் திருவூறலை யுள்குதுமே. 8

1149. நீரின் மிசைத்துயின்றோன் நிறைநான் முகனும் மறியாதன்று
தேரும் வகைநிமிர்ந்தா னவன்சேரு மிடம்வினவில்
பாரின் மிசையடியார் பலர்வந் திறைஞ்சமகிழ்ந் தாகம்
ஊரு மரவசைத்தான் திருவூறலை யுள்குதுமே. 9

1150. பொன்னியல் சீவரத்தார் புளித்தட்டையர் மோட்டமணர் குண்டர்
என்னு மிவர்க்கருளா வீசனிடம் வினவில்
தென்னென வண்டினங்கள் செறியார்பொழில் சூழ்ந்தழகார் தன்னை
உன்ன வினைகெடுப்பான்திருவூறலை யுள்குதுமே. 10

1151. கோட லிரும்புறவிற் கொடிமாடக் கொச்சையர்மன் மெச்ச
ஓடு புனற்சடைமேற் கரந்தான் திருவூறல்
நாட லரும்புகழான் மிகுஞானசம் பந்தன்சொன்ன நல்ல
பாடல்கள் பத்தும்வல்லார் பரலோகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 107. திருக்கொடிமாடச்செங்குன்றூர் : பண் – வியாழக்குறிஞ்சி

1152. வெந்தவெண் ணீறணிந்து விரிநூல் திகழ்மார்பி னல்ல
பந்தண வும்விரலா ளொருபாகம மர்ந்தருளிக்
கொந்தண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
அந்தண னைத்தொழுவா ரவல மறுப்பாரே. 1

1153. அலைமலி தண்புனலோ டரவஞ் சடைக்கணிந் தாகம்
மலைமகள் கூறுடையான் மலையா ரிளவாழைக்
குலைமலி தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
தலைமக னைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. 2

1154. பாலன நீறுபுனை திகழ்மார்பிற் பல்வளைக்கை நல்ல
ஏல மலர்க்குழலா ளொருபாக மமர்ந்தருளிக்
கோல மலர்ப்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர்மல்கும்
நீலநன் மாமிடற்றான் கழலேத்தல் நீதியே. 3

1155. வாருறு கொங்கைநல்ல மடவாள் திகழ்மார்பில் நண்ணும்
காருறு கொன்றையொடுங் கதநாகம் பூண்டருளிச்
சீருறு மந்தணர்வாழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
நீருறு செஞ்சடையான் கழலேத்தல் நீதியே. 4

1156. பொன்றிக ழாமையொடு புரிநூல் திகழ்மார்பில் நல்ல
பன்றியின் கொம்பணிந்து பணைத்தோளியோர் பாகமாகக்
குன்றன மாளிகைசூழ் கொடிமாடச் செங்குன்றூர் வானில்
மின்றிகழ் செஞ்சடையான் கழலேத்தல் மெய்ப்பொருளே. 5

1157. ஓங்கிய மூவிலைநற் சூல மொருகையன் சென்னி
தாங்கிய கங்கையொடு மதியஞ் சடைக்கணிந்து
கோங்கண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் வாய்ந்த
பாங்கன தாள்தொழுவார் வினையாய பற்றறுமே. 6

1158. நீடலர் கொன்றையொடு நிமிர்புன் சடைதாழ வெள்ளை
வாட லுடைதலையிற் பலிகொள்ளும் வாழ்க்கையனாய்க்
கோடல் வளம்புறவிற் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
சேடன தாழ்தொழுவார் வினையாய தேயுமே. 7

1159. மத்தநன் மாமலரும் மதியும்வளர் கொன்றையுடன் துன்று
தொத்தலர் செஞ்சடைமேல் துதைய வுடன்சூடிக்
கொத்தலர் தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய
தத்துவ னைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. 8

1160. செம்பொனின் மேனியனாம் பிரமன்றிரு மாலுந்தேட நின்ற
அம்பவ ளத்திரள்போ லொளியாய ஆதிபிரான்
கொம்பண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய
நம்பன தாள்தொழுவார் வினையாய நாசமே. 9

1161. போதியர் பிண்டியரென் றிவர்கள் புறங்கூறும் பொய்ந்நூல்
ஓதிய கட்டுரைகேட் டுழல்வீர் வரிக்குயில்கள்
கோதிய தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
வேதிய னைத்தொழநும் வினையான வீடுமே. 10

1162. அலைமலி தண்புனல்சூழ்ந் தழகார்புகலிந்நகர் பேணும்
தலைமக னாகிநின்ற தமிழ்ஞான சம்பந்தன்
கொலைமலி மூவிலையான் கொடிமாடச் செங்குன்றூ ரேத்தும்
நலமலி பாடல்வல்லார் வினையான நாசமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 108. திருப்பாதாளீச்சரம் : பண் – வியாழக்குறிஞ்சி

1163. மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல
பொன்னியல் கொன்றையினான் புனல்சூடிப் பொற்பமரும்
அன்ன மனநடையா ளொருபாகத் தமர்ந்தருளி நாளும்
பன்னிய பாடலினா னுறைகோயில் பாதாளே. 1

1164. நீடலர் கொன்றையொடு நிரம்பா மதிசூடி வெள்ளைத்
தோடமர் காதில்நல்ல குழையான் சுடுநீற்றான்
ஆடர வம்பெருக அனலேந்திக் கைவீசி வேதம்
பாடலி னாலினியா னுறைகோயில் பாதாளே. 2

1165. நாகமும் வான்மதியுந் நலமல்கு செஞ்சடையான் சாமம்
போகநல் வில்வரையாற் புரமூன் றெரித்துகந்தான்
தோகைநன் மாமயில்போல் வளர்சாயல் தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்துகந்தா னுறைகோயில் பாதாளே. 3

1166. அங்கமு நான்மறையு மருள்செய் தழகார்ந்த அஞ்சொல்
மங்கையோர் கூறுடையான் மறையோ னுறைகோயில்
செங்கயல் நின்றுகளுஞ் செறுவில் திகழ்கின்ற சோதிப்
பங்கய நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. 4

1167. பேய்பல வுந்நிலவப் பெருங்காடரங் காகவுன்னி நின்று
தீயொடு மான்மறியும் மழுவுந் திகழ்வித்துத்
தேய்பிறை யும்மரவும் பொலிகொன்றைச் சடைதன்மேற் சேரப்
பாய்புன லும்முடையா னுறைகோயில் பாதாளே. 5

1168. கண்ணமர் நெற்றியினான் கமழ்கொன்றைச் சடைதன்மேல் நின்றும்
விண்ணியல் மாமதியும் முடன்வைத் தவன்விரும்பும்
பெண்ணமர் மேனியினான் பெருங்கா டரங்காக ஆடும்
பண்ணியல் பாடலினா னுறைகோயில் பாதாளே. 6

1169. விண்டலர் மத்தமொடு மிளிரும்மிள நாகம்வன் னிதிகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்கு வார்சடையான்
விண்டவர் தம்புரமூன் றெரிசெய்துரை வேதநான் கும்மவை
பண்டிசை பாடலினா னுறைகோயில் பாதாளே. 7

1170. மல்கிய நுண்ணிடையா ளுமைநங்கை மறுகஅன் றுகையால்
தொல்லை மலையெடுத்த அரக்கன்றலை தோள்நெரித்தான்
கொல்லை விடையுகந்தான் குளிர்திங்கள் சடைக்க ணிந்தோன்
பல்லிசை பாடலினா னுறைகோயில் பாதாளே. 8

1171. தாமரை மேலயனும் மரியுந்தம தாள்வினையால் தேடிக்
காமனை வீடுவித்தான் கழல்காண்பில ராயகன்றார்
பூமரு வுங்குழலா ளுமைநங்கை பொருந்தியிட்ட நல்ல
பாமரு வுங்குணத்தா னுறைகோயில் பாதாளே. 9

1172. காலையி லுண்பவருஞ் சமண்கையருங் கட்டுரை விட்டன்
றால விட நுகர்ந்தா னவன்றன்னடி யேபரவி
மாலையில் வண்டினங்கள் மதுவுண் டிசைமுரல வாய்த்த
பாலையாழ்ப் பாட்டுகந்தா னுறைகோயில் பாதாளே. 10

1173. பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச் சேரப்
பொன்னியன் மாடமல்கு புகலிந்நகர் மன்னன்
தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
இன்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 109. திருச்சிரபுரம் : பண் – வியாழக்குறிஞ்சி

1174. வாருறு வனமுலை மங்கைபங்கன்
நீருறு சடைமுடி நிமலனிடங்
காருறு கடிபொழில் சூழ்ந்தழகார்
சீருறு வளவயற் சிரபுரமே. 1

1175. அங்கமொ டருமறை யருள்புரிந்தான்
திங்களொ டரவணி திகழ்முடியன்
மங்கையொ டினிதுறை வளநகரஞ்
செங்கயல் மிளிர்வயற் சிரபுரமே 2

1176. பரிந்தவன் பன்முடி யமரர்க்காகித்
திரிந்தவர் புரமவை தீயின்வேவ
வரிந்தவெஞ் சிலைபிடித் தடுசரத்தைத்
தெரிந்தவன் வளநகர் சிரபுரமே. 3

1177. நீறணி மேனியன் நீள்மதியோ
டாறணி சடையின னணியிழையோர்
கூறணிந் தினிதுறை குளிர்நகரஞ்
சேறணி வளவயற் சிரபுரமே. 4

1178. அருந்திற லவுணர்க ளரணழியச்
சரந்துரந் தெரிசெய்த சங்கரனூர்
குருந்தொடு கொடிவிடு மாதவிகள்
திருந்திய புறவணி சிரபுரமே. 5

1179. கலையவன் மறையவன் காற்றொடுதீ
மலையவன் விண்ணொடு மண்ணுமவன்
கொலையவன் கொடிமதில் கூட்டழித்த
சிலையவன் வளநகர் சிரபுரமே. 6

1180. வானமர் மதியொடு மத்தஞ்சூடித்
தானவர் புரமெய்த சைவனிடங்
கானமர் மடமயில் பெடைபயிலுந்
தேனமர் பொழிலணி சிரபுரமே. 7

1181. மறுத்தவர் திரிபுர மாய்ந்தழியக்
கறுத்தவன் காரரக் கன்முடிதோள்
இறுத்தவ னிருஞ்சினக் காலனைமுன்
செறுத்தவன் வளநகர் சிரபுரமே. 8

1182. வண்ணநன் மலருறை மறைபவனுங்
கண்ணனுங் கழல்தொழக் கனலுருவாய்
விண்ணுற வோங்கிய விமலனிடந்
திண்ணநன் மதிலணி சிரபுரமே. 9

1183. வெற்றரை யுழல்பவர் விரிதுகிலார்
கற்றில ரறவுரை புறனுரைக்கப்
பற்றலர் திரிபுர மூன்றும்வேவச்
செற்றவன் வளநகர் சிரபுரமே. 10

1184. அருமறை ஞானசம் பந்தனந்தண்
சிரபுர நகருறை சிவனடியைப்
பரவிய செந்தமிழ் பத்தும்வல்லார்
திருவொடு புகழ்மல்கு தேசினரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 110. திருஇடைமருதூர் : பண் – வியாழக்குறிஞ்சி

1185. மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினொ டிறவுமானான்
அருந்தவ முனிவரொ டால்நீழற்கீழ்
இருந்தவன் வளநக ரிடைமருதே. 1

1186. தோற்றவன் கேடவன் துணைமுலையாள்
கூற்றவன் கொல்புலித் தோலசைத்த
நீற்றவன் நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றவன் வளநக ரிடைமருதே. 2

1187. படையுடை மழுவினன் பால்வெண்ணீற்றன்
நடைநவி லேற்றினன் ஞாலமெல்லாம்
உடைதலை யிடுபலி கொண்டுழல்வான்
இடைமரு தினிதுறை யெம்மிறையே. 3

1188. பணைமுலை யுமையொரு பங்கனென்னார்
துணைமதிள் மூன்றையுஞ் சுடரின்மூழ்கக்
கணைதுரந் தடுதிறற் காலற்செற்ற
இணையிலி வளநக ரிடைமருதே. 4

1189. பொழிலவன் புயலவன் புயலியக்குந்
தொழிலவன் துயரவன் துயரகற்றுங்
கழலவன் கரியுரி போர்த்துகந்த
எழிலவன் வளநக ரிடைமருதே. 5

1190. நிறையவன் புனலொடு மதியும்வைத்த
பொறையவன் புகழவன் புகழநின்ற
மறையவன் மறிகடல் நஞ்சையுண்ட
இறையவன் வளநக ரிடைமருதே. 6

1191. நனிவளர் மதியொடு நாகம்வைத்த
பனிமலர்க் கொன்றையம் படர்சடையன்
முனிவரொ டமரர்கள் முறைவணங்க
இனிதுறை வளநக ரிடைமருதே. 7

1192. தருக்கின அரக்கன தாளுந்தோளும்
நெரித்தவன் நெடுங்கைமா மதகரியன்
றுரித்தவ னொன்னலர் புரங்கள்மூன்றும்
எரித்தவன் வளநக ரிடைமருதே. 8

1193. பெரியவன் பெண்ணினொ டாணுமானான்
வரியர வணைமறி கடல்துயின்ற
கரியவ னலரவன் காண்பரிய
எரியவன் வளநக ரிடைமருதே. 9

1194. சிந்தையில் சமணொடு தேரர்சொன்ன
புந்தியி லுரையவை பொருள்கொளாதே
அந்தண ரோத்தினோ டரவமோவா
எந்தைதன் வளநக ரிடைமருதே. 10

1195. இலைமலி பொழிலிடை மருதிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
பலமிகு தமிழிவை பத்தும்வல்லார்
உலகுறு புகழினோ டோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 111. திருக்கடைமுடி : பண் – வியாழக்குறிஞ்சி

1196. அருத்தனை யறவனை யமுதனைநீர்
விருத்தனைப் பாலனை வினவுதிரேல்
ஒருத்தனை யல்லதிங் குலகமேத்தும்
கருத்தவன் வளநகர் கடைமுடியே. 1

1197. திரைபொரு திருமுடி திங்கள்விம்மும்
அரைபொரு புலியத ளடிகளிடம்
திரையொடு நுரைபொரு தெண்சுனைநீர்
கரைபொரு வளநகர் கடைமுடியே. 2

1198. ஆலிள மதியினொ டரவுகங்கை
கோலவெண் ணீற்றனைத் தொழுதிறைஞ்சி
ஏலநன் மலரொடு விரைகமழும்
காலன வளநகர் கடைமுடியே. 3

1199. கொய்யணி நறுமலர்க் கொன்றையந்தார்
மையணி மிடறுடை மறையவனூர்
பையணி யரவொடு மான்மழுவாள்
கையணி பவனிடங் கடைமுடியே. 4

1200. மறையவ னுலகவன் மாயமவன்
பிறையவன் புனலவ னனலுமவன்
இறையவ னெனவுல கேத்துங்கண்டம்
கறையவன் வளநகர் கடைமுடியே. 5

1201. படவர வேரல்குற் பல்வளைக்கை
மடவர லாளையொர் பாகம்வைத்துக்
குடதிசை மதியது சூடுசென்னிக்
கடவுள்தன் வளநகர் கடைமுடியே. 6

1202. பொடிபுல்கு மார்பினிற் புரிபுல்குநூல்
அடிபுல்கு பைங்கழ லடிகளிடம்
கொடிபுல்கு மலரொடு குளிர்சுனைநீர்
கடிபுல்கு வளநகர் கடைமுடியே. 7

1203. நோதல்செய் தரக்கனை நோக்கழியச்
சாதல்செய் தவனடி சரணெனலும்
ஆதர வருள்செய்த அடிகளவர்
காதல்செய் வளநகர் கடைமுடியே. 8

1204. அடிமுடி காண்கில ரோரிருவர்
புடைபுல்கி யருளென்று போற்றிசைப்பச்
சடையிடைப் புனல்வைத்த சதுரனிடம்
கடைமுடி யதனயல் காவிரியே. 9

1205. மண்ணுதல் பறித்தலு மாயமிவை
எண்ணிய காலவை யின்பமல்ல
ஒண்ணுத லுமையையொர் பாகம்வைத்த
கண்ணுதல் வளநகர் கடைமுடியே. 10

1206. பொன்திகழ் காவிரிப் பொருபுனல்சீர்
சென்றடை கடைமுடிச் சிவனடியை
நன்றுணர் ஞானசம் பந்தன்சொன்ன
இன்தமி ழிவைசொல இன்பமாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 112. திருச்சிவபுரம் : பண் – வியாழக்குறிஞ்சி

1207. இன்குர லிசைகெழும் யாழ்முரலத்
தன்கர மருவிய சதுரன்நகர்
பொன்கரை பொருபழங் காவிரியின்
தென்கரை மருவிய சிவபுரமே. 1

1208. அன்றடற் காலனைப் பாலனுக்காய்ப்
பொன்றிட வுதைசெய்த புனிதன்நகர்
வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றிமுன்னாள்
சென்றடி வீழ்தரு சிவபுரமே. 2

1209. மலைமகள் மறுகிட மதகரியைக்
கொலைமல்க வுரிசெய்த குழகன்நகர்
அலைமல்கு மரிசிலி னதனயலே
சிலைமல்கு மதிளணி சிவபுரமே. 3

1210. மண்புன லனலொடு மாருதமும்
விண்புனை மருவிய விகிர்தன்நகர்
பண்புனை குரல்வழி வண்டுகிண்டிச்
செண்பக மலர்பொழிற் சிவபுரமே. 4

1211. வீறுநன் குடையவள் மேனிபாகம்
கூறுநன் குடையவன் குளிர்நகர்தான்

நாறுநன் குரவிரி வண்டுகிண்டித்
தேறலுண் டெழுதரு சிவபுரமே. 5

1212. மாறெதிர் வருதிரி புரமெரித்து
நீறது வாக்கிய நிமலன்நகர்
நாறுடை நடுபவ ருழவரொடும்
சேறுடை வயலணி சிவபுரமே. 6

1213. ஆவிலைந் தமர்ந்தவ னரிவையொடு
மேவிநன் கிருந்ததொர் வியன்நகர்தான்
பூவில்வண் டமர்தரு பொய்கையன்னச்
சேவல்தன் பெடைபுல்கு சிவபுரமே. 7

1214. எழில்மலை யெடுத்தவல் லிராவணன்றன்
முழுவலி யடக்கிய முதல்வன்நகர்
விழவினி லெடுத்தவெண் கொடிமிடைந்து
செழுமுகி லடுக்கும்வண் சிவபுரமே. 8

1215. சங்கள வியகையன் சதுர்முகனும்
அங்கள வறிவரி யவன்நகர்தான்
கங்குலும் பறவைகள் கமுகுதொறும்
செங்கனி நுகர்தரு சிவபுரமே. 9

1216. மண்டையிற் குண்டிகை மாசுதரும்
மிண்டரை விலக்கிய விமலன்நகர்
பண்டமர் தருபழங்காவிரியின்
தெண்டிரை பொருதெழு சிவபுரமே. 10

1217. சிவனுறை தருசிவ புரநகரைக்
கவுணியர் குலபதி காழியர்கோன்
தவமல்கு தமிழிவை சொல்லவல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 113. திருவல்லம் : பண் – வியாழக்குறிஞ்சி

1218. எரித்தவன் முப்புர மெரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறுவேறு
தெரித்தவ னுறைவிடந் திருவல்லமே. 1

1219. தாயவ னுலகுக்குத் தன்னொப்பிலாத்
தூயவன் தூமதி சூடியெல்லாம்
ஆயவ னமரர்க்கும் முனிவர்கட்கும்
சேயவ னுறைவிடந் திருவல்லமே. 2

1220. பார்த்தவன் காமனைப் பண்பழியப்
போர்த்தவன் போதகத் தின்னுரிவை
ஆர்த்தவன் நான்முகன் தலையையன்று
சேர்த்தவ னுறைவிடந் திருவல்லமே. 3

1221. கொய்தவம் மலரடி கூடுவார்தம்
மைதவழ் திருமகள் வணங்கவைத்துப்
பெய்தவன் பெருமழை யுலகமுய்யச்
செய்தவ னுறைவிடந் திருவல்லமே. 4

1222. சார்ந்தவர்க் கின்பங்கள் தழைக்கும்வண்ணம்
நேர்ந்தவன் நேரிழை யோடுங்கூடித்
தேர்ந்தவர் தேடுவார் தேடச்செய்தே
சேர்ந்தவ னுறைவிடந் திருவல்லமே. 5

1223. பதைத்தெழு காலனைப் பாதமொன்றால்
உதைத்தெழு மாமுனிக் குண்மைநின்று
விதிர்த்தெழு தக்கன்றன் வேள்வியன்று
சிதைத்தவ னுறைவிடந் திருவல்லமே. 6,7

1224. இகழ்ந்தரு வரையினை யெடுக்கலுற்றாங்
ககழ்ந்தவல் லரக்கனை யடர்த்தபாதம்
நிகழ்ந்தவர் நேடுவார் நேடச்செய்தே
திகழ்ந்தவ னுறைவிடந் திருவல்லமே. 8

1225. பெரியவன் சிறியவர் சிந்தைசெய்ய
அரியவ னருமறை யங்கமானான்
கரியவன் நான்முகன் காணவொண்ணாத்
தெரியவன் வளநகர் திருவல்லமே. 9

1226. அன்றிய அமணர்கள் சாக்கியர்கள்
குன்றிய அறவுரை கூறாவண்ணம்
வென்றவன் புலனைந்தும் விளங்களங்கும்
சென்றவ னுறைவிடந் திருவல்லமே. 10

1227. கற்றவர் திருவல்லங் கண்டுசென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூறவல்லார்
பற்றுவ ரீசன்பொற் பாதங்களே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 114. திருமாற்பேறு : பண் – வியாழக்குறிஞ்சி

1228. குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருந்தகை பெண்ணவ னாணுமவன்
கருந்தட மலர்க்கண்ணி காதல்செய்யும்
மருந்தவன் வளநகர் மாற்பேறே. 1

1229. பாறணி வெண்டலை கையிலேந்தி
வேறணி பலிகொளும் வேட்கையனாய்
நீறணிந் துமையொரு பாகம்வைத்த
மாறிலி வளநகர் மாற்பேறே. 2

1230. கருவுடை யாருல கங்கள் வேவச்
செருவிடை யேறியுஞ் சென்றுநின்
றுருவுடை யாளுமை யாளுந்தானும்
மருவிய வளநகர் மாற்பேறே. 3

1231. தலையவன் தலையணி மாலைபூண்டு
கொலைநவில் கூற்றினைக் கொன் றுகந்தான்
கலைநவின் றான்கயி லாய மென்னும்
மலையவன் வளநகர் மாற்பேறே. 4

1132. துறையவன் தொழிலவன் தொல்லுயிர்க்கும்
பிறையணி சடைமுடிப் பெண்ணொர்பாகன்
கறையணி மிடற்றண்ணல் காலற்செற்ற
மறையவன் வளநகர் மாற்பேறே. 5

1233. பெண்ணினல் லாளையொர் பாகம்வைத்துக்
கண்ணினாற் காமனைக் காய்ந்தவன்றன்
விண்ணவர் தானவர் முனிவரொடு
மண்ணவர் வணங்குநன் மாற்பேறே. 6,7

1234. தீதிலா மலையெடுத் தவ்வரக்கன்
நீதியால் வேதகீ தங்கள்பாட
ஆதியா னாகிய அண்ணலெங்கள்
மாதிதன் வளநகர் மாற்பேறே. 8

1235. செய்யதண் டாமரைக் கண்ணனொடும்
கொய்யணி நறுமலர் மேலயனும்
ஐயனன் சேவடி யதனையுள்க
மையல்செய் வளநகர் மாற்பேறே. 9

1236. குளித்துணா அமணர்குண் டாக்கரென்றும்
களித்துநன் கழலடி காணலுற்றார்
முளைத்தவெண் மதியினொ டரவஞ்சென்னி
வளைத்தவன் வளநகர் மாற்பேறே. 10

1237. அந்தமில் ஞானசம் பந்தன்நல்ல
செந்திசை பாடல்செய் மாற்பேற்றைச்
சந்தமின் றமிழ்கள்கொண் டேத்தவல்லார்
எந்தைதன் கழலடி யெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 115. திருஇராமனதீச்சரம் : பண் – வியாழக்குறிஞ்சி

1238. சங்கொளிர் முன்கையர் தம்மிடையே
அங்கிடு பலிகொளு மவன்கோபப்
பொங்கர வாடலோன் புவனியோங்க
எங்கும னிராமன தீச்சரமே. 1

1239. சந்தநன் மலரணி தாழ்சடையன்
தந்தம தத்தவன் றாதையோதான்
அந்தமில் பாடலோ னழகனல்ல
எந்தவ னிராமன தீச்சரமே. 2

1240. தழைமயி லேறவன் றாதையோதான்
மழைபொழி சடையவன் மன்னுகாதில்
குழையது இலங்கிய கோலமார்பின்
இழையவ னிராமன தீச்சரமே. 3

1241. சத்தியு ளாதியோர் தையல்பங்கன்
முத்திய தாகிய மூர்த்தியோதான்
அத்திய கையினி லழகுசூலம்
வைத்தவ னிராமன தீச்சரமே. 4

1242. தாழ்ந்தகு ழற்சடை முடியதன்மேல்
தோய்ந்த இளம்பிறை துளங்குசென்னிப்
பாய்ந்தகங் கையொடு படவரவம்
ஏய்ந்தவ னிராமன தீச்சரமே. 5

1243. சரிகுழ லிலங்கிய தையல்காணும்
பெரியவன் காளிதன் பெரியகூத்தை
அரியவ னாடலோ னங்கையேந்தும்
எரியவ னிராமன தீச்சரமே. 6

1244. மாறிலா மாதொரு பங்கன்மேனி
நீறது வாடலோ னீள்சடைமேல்
ஆறது சூடுவா னழகன்விடை
ஏறவ னிராமன தீச்சரமே. 7

1245. தடவரை யரக்கனைத் தலைநெரித்தோன்
படவர வாட்டிய படர்சடையன்
நடமது வாடலா னான்மறைக்கும்
இடமவ னிராமன தீச்சரமே. 8

1246. தனமணி தையல்தன் பாகன்றன்னை
அனமணி யயனணி முடியுங்காணான்
பனமணி அரவரி பாதங்காணான்
இனமணி யிராமன தீச்சரமே. 9

1247. தறிபோலாஞ் சமணர்சாக் கியர்சொற்கொளேல்
அறிவோரா னாமம றிந்துரைமின்
மறிகையோன் றன்முடி மணியார்கங்கை
எறிபவ னிராமன தீச்சரமே. 10

1248. தேன்மலர்க் கொன்றையோன் .......
* * *
* * *
** ........ ............ முந்தமக் கூனமன்றே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## திருநீலகண்டம்

## 116. பொது : பண் – வியாழக்குறிஞ்சி

1249. அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 1

1250. காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினை யாலெயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 2

1251. முலைத்தட மூழ்கிய போகங்களுமற் றெவையு மெல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்
இலைத்தலைச் சூலமுந் தண்டு மழுவு மிவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 3

1252. விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 4

1253. மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 5

1254. மறக்கு மனத்தினை மாற்றியெம் மாவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் றிருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 6,7

1255. கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துது நாமடியோம்
செருவி லரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 8

1256. நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியு முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுது வணங்குதும் நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 9

1257. சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 10

1258. பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகி லிமையவர் கோனடிக்கண்
திறம்பயில் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 117. திருப்பிரமபுரம் : மொழிமாற்று. பண் – வியாழக்குறிஞ்சி

1259. காட தணிகலங் காரர வம்பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினிற் றூற்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங்கொடுப்பர்
பீட தணிமணி மாடப் பிரம புரத்தாரே. 1

1260. கற்றைச் சடையது கங்கண முன்கையிற் றிங்கள்கங்கை
பற்றித்து முப்புரம் பார்படைத் தோன்றலை சுட்டதுபண்
டெற்றித்துப் பாம்பை யணிந்தது கூற்றை யெழில்விளங்கும்
வெற்றிச் சிலைமதில் வேணு புரத்தெங்கள் வேதியரே. 2

1261. கூவிளங் கையது பேரி சடைமுடிக் கூட்டத்தது
தூவிளங் கும்பொடிப் பூண்டது பூசிற்றுத் துத்திநாகம்
ஏவிளங் குந்நுத லாளையும் பாகமு ரித்தனரின்
பூவிளஞ் சோலைப் புகலியுள் மேவிய புண்ணியரே. 3

1262. உரித்தது பாம்பை யுடல்மிசை யிட்டதோ ரொண்களிற்றை
எரித்ததொ ராமையை யின்புறப் பூண்டது முப்புரத்தைச்
செருத்தது சூலத்தை யேந்திற்றுத் தக்கனை வேள்விபன்னூல்
விரித்தவர் வாழ்தரு வெங்குரு வில்வீற் றிருந்தவரே. 4

1263. கொட்டுவ ரக்கரை யார்ப்பது தக்கை குறுந்தாளன
விட்டுவர் பூதங் கலப்பில ரின்புக ழென்புலவின்
மட்டுவ ருந்தழல் சூடுவர் மத்தமு மேந்துவர்வான்
தொட்டுவ ருங்கொடித் தோணி புரத்துறை சுந்தரரே. 5

1264. சாத்துவர் பாசங் தடக்கையி லேந்துவர் கோவணந்தங்
கூத்தவர் கச்சுக் குலவிநின் றாடுவர் கொக்கிறகும்
பேர்த்தவர் பல்படை பேயவை சூடுவர் பேரெழிலார்
பூத்தவர் கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியரே. 6

1265. காலது கங்கை கற்றைச் சடையுள்ளாற் கழற்சிலம்பு
மாலது வேந்தல் மழுவது பாகம் வளர்கொழுங்கோட்
டாலது வூர்வ ரடலேற் றிருப்ப ரணிமணிநீர்ச்
சேலது கண்ணியொர் பங்கர் சிரபுர மேயவரே. 7

1266. நெருப்புரு வெள்விடை மேனிய ரேறுவர் நெற்றியின்கண்
மருப்புறு வன்கண்ணர் தாதையைக் காட்டுவர் மாமுருகன்
விருப்புறு பாம்புக்கு மெய்த்தந்தை யார்விறல் மாதவர்வாழ்
பொருப்புறு மாளிகைத் தென்புற வத்தணி புண்ணியரே. 8

1267. இலங்கைத் தலைவனை யேந்திற் றிறுத்த திரலையின்னாள்
கலங்கிய கூற்றுயிர் பெற்றது மாணி குமைபெற்றது
கலங்கிளர் மொந்தையி னாடுவர் கொட்டுவர் காட்டகத்துச்
சலங்கிளர் வாழ்வயற் சண்பையுள் மேவிய தத்துவரே. 9

1268. அடியிணை கண்டிலன் தாமரை யோன்மால் முடிகண்டிலன்
கொடியணி யும்புலி யேறுகந் தேறுவர் தோலுடுப்பர்
பிடியணி யுந்நடை யாள்வெற் பிருப்பதோர் கூறுடையர்
கடியணி யும்பொழிற் காழியுள் மேய கறைக்கண்டரே. 10

1269. கையது வெண்குழை காதது சூல மமணர்புத்தர்
எய்துவர் தம்மை யடியவ ரெய்தாரோ ரேனக்கொம்பு
மெய்திகழ் கோவணம் பூண்ப துடுப்பது மேதகைய
கொய்தலர் பூம்பொழிற் கொச்சையுள் மேவிய கொற்றவரே. 11

1270. கல்லுயர் கழுமல விஞ்சியுள் மேவிய கடவுள்தன்னை
நல்லுரை ஞானசம் பந்தன்ஞா னத்தமிழ் நன்குணரச்
சொல்லிடல் கேட்டல்வல் லோர்தொல்லை வானவர் தங்களொடுஞ்
செல்குவர் சீரரு ளாற்பெற லாஞ்சிவ லோகமதே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 118. திருப்பருப்பதம் : பண் – வியாழக்குறிஞ்சி

1271. சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தான்
இடுமணி யெழிலானை யேறல னெருதேறி
விடமணி மிடருடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே. 1

1272. நோய்புல்கு தோல்திரைய நரைவரு நுகருடம்பில்
நீபுல்கு தோற்றமெல்லா நினையுள்கு மடநெஞ்சே
வாய்புல்கு தோத்திரத்தால் வலஞ்செய்து தலைவணங்கிப்
பாய்புலித் தோலுடையான் பருப்பதம் பரவுதுமே. 2

1273. துனியுறு துயர்தீரத் தோன்றியோர் நல்வினையால்
இனியுறு பயனாத லிரண்டுற மனம்வையேல்
கனியுறு மரமேறிக் கருமுசுக் கழையுகளும்
பனியுறு கதிர்மதியான் பருப்பதம் பரவுதுமே. 3

1274. கொங்கணி நறுங்கொன்றைத் தொங்கலன் குளிர்சடையான்
எங்கள்நோ யகலநின்றா னெனவரு ளீசனிடம்
ஐங்கணை வரிசிலையா னநங்கனை யழகழித்த
பைங்கண்வெள் ளேறுடையான் பருப்பதம் பரவுதுமே. 4

1275. துறைபல சுனைமூழ்கித் தூமலர் சுமந்தோடி
மறையொலி வாய்மொழியால் வானவர் மகிழ்ந்தேத்தச்
சிறையொலி கிளிபயிலுந் தேனின மொலியோவாப்
பறைபடு விளங்கருவிப் பருப்பதம் பரவுதுமே. 5

1276. சீர்கெழு சிறப்போவாச் செய்தவ நெறிவேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே யிரண்டுற மனம்வையேல்
கார்கெழு நறுங்கொன்றைக் கடவுள திடம்வகையால்
பார்கெழு புகழோவாப் பருப்பதம் பரவுதுமே. 6

1277. புடைபுல்கு படர்கமலம் புகையொடு விரைகமழத்
தொடைபுல்கு நறுமாலை திருமுடி மிசையேற
விடைபுல்கு கொடியேந்தி வெந்தவெண் ணீறணிவான்
படைபுல்கு மழுவாளன் பருப்பதம் பரவுதுமே. 7

1278. நினைப்பெனு நெடுங்கிணற்றை நின்றுநின் றயராதே
மனத்தினை வலித்தொழிந்தே னவலம்வந் தடையாமைக்
கனைத்தெழு திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்றன்
பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே. 8

1279. மருவிய வல்வினைநோ யவலம்வந் தடையாமல்
திருவுரு வமர்ந்தானுந் திசைமுக முடையானும்
இருவரு மறியாமை யெழுந்ததோ ரெரிநடுவே
பருவரை யுறநிமிர்ந்தான் பருப்பதம் பரவுதுமே. 9

1280. சடங்கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண்குண்டர்
மடங்கொண்ட விரும்பியராய் மயங்கியோர்பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டு நீர்க்குச்செல்வார் போதுமின் குஞ்சரத்தின்
படங்கொண்ட போர்வையினான் பருப்பதம் பரவுதுமே. 10

1281. வெண்செநெல் விளைகழனி விழவொலி கழுமலத்தான்
பண்செலப் பலபாட லிசைமுரல் பருப்பதத்தை
நன்சொலி னாற்பரவு ஞானசம் பந்தன்நல்ல
ஒண்சொலி னிவைமாலை யுருவெணத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 119. திருக்கள்ளில் : பண் – வியாழக்குறிஞ்சி

1282. முள்ளின்மேல் முதுகூகை முரலுஞ் சோலை
வெள்ளின்மேல் விடுகூறைக் கொடி விளைந்த
கள்ளில்மேய அண்ணல் கழல்கள் நாளும்
உள்ளுமே லுயர்வெய்த லொரு தலையே. 1

1283. ஆடலான் பாடலா னரவங்கள் பூண்டான்
ஓடலாற் கலனில்லா னுறை பதியால்
காடலாற் கருதாத கள்ளில் மேயான்
பாடெலாம் பெரியார்கள் பரசு வாரே. 2

1284. எண்ணார்மும் மதிலெய்த விமையாமுக்கண்
பண்ணார்நான் மறைபாடும் பரம யோகி
கண்ணார்நீ றணிமார்பன் கள்ளில் மேயான்
பெண்ணாணாம் பெருமானெம் பிஞ்ஞ கனே. 3

1285. பிறைபெற்ற சடையண்ணல் பெடைவண் டாலும்
நறைபெற்ற விரிகொன்றைத் தார் நயந்த
கறைபெற்ற மிடற்றண்ணல் கள்ளில் மேயான்
நிறைபெற்ற அடியார்கள் நெஞ்சு ளானே. 4

1286. விரையாலு மலராலும் விழுமை குன்றா
உரையாலு மெதிர்கொள்ள வூரா ரம்மாக்
கரையார்பொன் புனல்வேலிக் கள்ளில் மேயான்
அரையார்வெண் கோவணத்த வண்ணல் தானே. 5

1287. நலனாய பலிகொள்கை நம்பான் நல்ல
வலனாய மழுவாளும் வேலும் வல்லான்
கலனாய தலையோட்டான் கள்ளில் மேயான்
மலனாய தீர்த்தெய்து மாதவத் தோர்க்கே. 6

1288. பொடியார்மெய் பூசினும் புறவின் நறவம்
குடியாவூர் திரியுனுங் கூப்பி டினும்
கடியார்பூம் பொழிற்சோலைக் கள்ளில் மேயான்
அடியார்பண் பிகழ்வார்க ளாதர் களே. 7

1289. திருநீல மலரொண்கண் தேவி பாகம்
புரிநூலுந் திருநீறும் புல்கு மார்பில்
கருநீல மலர்விம்மு கள்ளி லென்றும்
பெருநீல மிடற்றண்ணல் பேணு வதே. 8

1290. வரியாய மலரானும் வையந் தன்னை
உரிதாய அளந்தானு முள்ளு தற்கங்
கரியானு மறியாத கள்ளில் மேயான்
பெரியானென் றறிவார்கள் பேசு வாரே. 9

1291. ஆச்சியப் பேய்களோ டமணர் குண்டர்
பேச்சிவை நெறியல்ல பேணு மின்கள்
மாச்செய்த வளவயல் மல்கு கள்ளில்
தீச்செய்த சடையண்ணல் திருந் தடியே. 10

1292. திகைநான்கும் புகழ்காழிச் செல்வ மல்கு
பகல்போலும் பேரொளியான் பந்தன் நல்ல
முகைமேவு முதிர்சடையான் கள்ளி லேத்தப்
புகழோடும் பேரின்பம் புகுது மன்றே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 120. திருவையாறு :திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1293. பணிந்தவ ரருவினை பற்றறுத் தருள்செயத்
துணிந்தவன் றோலொடு நூல்துதை மார்பினில்
பிணிந்தவ னரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநக ரந்த ணையாறே. 1

1294. கீர்த்திமிக் கவனகர் கிளரொளி யுடனடப்
பார்த்தவன் பனிமதி படர்சடை வைத்துப்
போர்த்தவன் கரியுரி புலியத ளரவரை
ஆர்த்தவன் வளநக ரந்த ணையாறே. 2

1295. வரிந்தவெஞ் சிலைபிடித் தவுணர்தம் வளநகர்
எரிந்தற வெய்தவ னெழில்திகழ் மலர்மேல்
இருந்தவன் சிரமது இமையவர் குறைகொள
அரிந்தவன் வளநக ரந்த ணையாறே. 3

1296. வாய்ந்தவல் லவுணர்தம் வளநக ரெரியிடை
மாய்ந்தற வெய்தவன் வளர்பிறை விரிபுனல்
தோய்ந்தெழு சடையினன் றொன்மறை யாறங்கம்
ஆய்ந்தவன் வளநக ரந்த ணையாறே. 4

1297. வானமர் மதிபுல்கு சடையிடை யரவொடு
தேனமர் கொன்றையன் திகழ்தரு மார்பினன்
மானன மென்விழி மங்கையொர் பாகமும்
ஆனவன் வளநக ரந்த ணையாறே. 5

1298. முன்பனை முனிவரோ டமரர்கள் தொழுதெழும்
இன்பனை யிணையில விறைவனை யெழில்திகழ்
என்பொனை யேதமில் வேதியர் தாந்தொழும்
அன்பன வளநக ரந்த ணையாறே. 6

1299. வன்றிற லவுணர்தம் வளநக ரெரியிடை
வெந்தற வெய்தவன் விளங்கிய மார்பினில்
பந்தமர் மெல்விரல் பாகம தாகிதன்
அந்தமில் வளநக ரந்த ணையாறே. 7

1300. விடைத்தவல் லரக்கனல் வெற்பினை யெடுத்தலும்
அடித்தலத் தாலிறை யூன்றிமற் றவனது
முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை
அடர்த்தவன் வளநக ரந்த ணையாறே. 8

1301. விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோனல்
எண்ணிலி தேவர்க ளிந்திரன் வழிபடக்
கண்ணனும் பிரமனுங் காண்பரி தாகிய
அண்ணல்தன் வளநக ரந்த ணையாறே. 9

1302. மருளுடை மனத்துவன் சமணர்கள் மாசறா
இருளுடை யிணைத்துவர்ப் போர்வையி னார்களும்
தெருளுடை மனத்தவர் தேறுமின் திண்ணமா
அருளுடை யடிகள்த மந்த ணையாறே. 10

1303. நலமலி ஞானசம் பந்தன தின்றமிழ்
அலைமலி புனல்மல்கு மந்தணை யாற்றினைக்
கலைமலி தமிழிவை கற்றுவல் லார்மிக
நலமலி புகழ்மிகு நன்மையர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 121. திருஇடைமருதூர் : திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1304. நடைமரு திரிபுர மெரியுண நகைசெய்த
படைமரு தழலெழ மழுவல பகவன்
புடைமரு திளமுகில் வளமமர் பொதுளிய
இடைமரு தடையநம் மிடர்கெட லெளிதே. 1

1305. மழைநுழை மதியமொ டழிதலை மடமஞ்ஞை
கழைநுழை புனல்பெய்த கமழ்சடை முடியன்
குழைநுழை திகழ்செவி யழகொடு மிளிர்வதொர்
இழைநுழை புரியண லிடமிடை மருதே. 2

1306. அருமைய னெளிமைய னழல்விட மிடறினன்
கருமையி னொளிபெறு கமழ்சடை முடியன்
பெருமையன் சிறுமையன் பிணைபெணொ டொருமையின்
இருமையு முடையண லிடமிடை மருதே. 3

1307. பொரிபடு முதுகுற முளிகளி புடைபுல்கு
நரிவளர் சுடலையுள் நடமென நவில்வோன்
வரிவளர் குளிர்மதி யொளிபெற மிளிர்வதொர்
எரிவளர் சடையண லிடமிடை மருதே. 4

1308. வருநல மயிலன மடநடை மலைமகள்
பெருநல முலையிணை பிணைசெய்த பெருமான்
செருநல மதிலெய்த சிவனுறை செழுநகர்
இருநல புகழ்மல்கு மிடமிடை மருதே. 5

1309. கலையுடை விரிதுகில் கமழ்குழ லகில்புகை
மலையுடை மடமகள் தனையிட முடையோன்
விலையுடை யணிகல னிலனென மழுவினோ
டிலையுடை படையவ னிடமிடை மருதே. 6

1310. வளமென வளர்வன வரிமுரல் பறவைகள்
இளமண லணைகரை யிசைசெயு மிடைமரு
துளமென நினைபவ ரொலிகழ லிணையடி
குளமண லுறமூழ்கி வழிபடல் குணமே. 7

1311. மறையவ னுலகவன் மதியவன் மதிபுல்கு
துறையவ னெனவல வடியவர் துயரிலர்
கறையவன் மிடறது கனல்செய்த கமழ்சடை
இறையவ னுறைதரு மிடமிடை மருதே. 8

1312. மருதிடை நடவிய மணிவணர் பிரமரும்
இருதுடை யகலமொ டிகலின ரினதெனக்
கருதிட லரியதொ ருருவொடு பெரியதொர்
எருதுடை யடிகள்த மிடமிடை மருதே. 9

1313. துவருறு விரிதுகி லுடையரு மமணரும்
அவருறு சிறுசொலை நயவன்மி னிடுமணல்
கவருறு புனலிடை மருதுகை தொழுதெழும்
அவருறு வினைகெட லணுகுதல் குணமே. 10

1314. தடமலி புகலியர் தமிழ்கெழு விரகினன்
இடமலி பொழிலிடை மருதினை யிசைசெய்த
படமலி தமிழிவை பரவவல் லவர்வினை
கெடமலி புகழொடு கிளரொளி யினரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 122. திருஇடைமருதூர் : திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1315. விரிதரு புலியுரி விரவிய அரையினர்
திரிதரு மெயிலவை புனைகணை யினிலெய்த
எரிதரு சடையின ரிடைமரு தடைவுனல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. 1

1316. மறிதிரை படுகடல் விடமடை மிடறினர்
எறிதிரை கரைபொரு மிடைமரு தெனுமவர்
செறிதிரை நரையொடு செலவில ருலகினில்
பிறிதிரை பெறுமுடல் பெறுகுவ தரிதே. 2

1317. சலசல சொரிபுனல் சடையினர் மலைமகள்
நிலவிய வுடலினர் நிறைமறை மொழியினர்
இலரென விடுபலி யவரிடை மருதினை
வலமிட வுடல்நலி விலதுள வினையே. 3

1318. விடையினர் வெளியதொர் தலைகல னெனநனி
கடைகடை தொறுபலி யிடுகென முடுகுவர்
இடைவிட லரியவ ரிடைமரு தெனுநகர்
உடையவ ரடியிணை தொழுவதெம் முயர்வே. 4

1319. உரையரு முருவின ருணர்வரு வகையினர்
அரைபொரு புலியத ளுடையின ரதன்மிசை
இரைமரு மரவின ரிடைமரு தெனவுளம்
உரைகள துடையவர் புகழ்மிக வுளதே. 5

1320. ஒழுகிய புனல்மதி யரவமொ டுறைதரும்
அழகிய முடியுடை யடிகள தறைகழல்
எழிலின ருறையிடை மருதினை மலர்கொடு
தொழுதல்செய் தெழுமவர் துயருற லிலரே. 6

1321. கலைமலி விரலினர் கடியதொர் மழுவொடும்
நிலையினர் சலமக ளுலவிய சடையினர்
மலைமகள் முலையிணை மருவிய வடிவினர்
இலைமலி படையவ ரிடமிடை மருதே. 7

1322. செருவடை யிலவல செயல்செயத் திறலொடும்
அருவரை யினிலொரு பதுமுடி நெரிதர
இருவகை விரனிறி யவரிடை மருதது
பரவுவ ரருவினை யொருவுதல் பெரிதே. 8

1323. அரியொடு மலரவ னெனவிவ ரடிமுடி
தெரிவகை யரியவர் திருவடி தொழுதெழ
எரிதரு முருவர்த மிடைமரு தடைவுறல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. 9

1324. குடைமயி லினதழை மருவிய வுருவினர்
உடைமரு துவரினர் பலசொல வுறவிலை
அடைமரு திருவினர் தொழுதெழு கழலவர்
இடைமரு தெனமனம் நினைவது மெழிலே. 10

1325. பொருகட லடைதரு புகலியர் தமிழொடு
விரகினன் விரிதரு பொழிலிடை மருதினைப்
பரவிய வொருபது பயிலவல் லவரிடர்
விரவிலர் வினையொடு வியனுல குறவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 123. திருவலிவலம் : திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1326. பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவள்
மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலமுறை யிறையே. 1

1327. இட்டம தமர்பொடி யிசைதலி னசைபெறு
பட்டவிர் பவளநன் மணியென அணிபெறு
விட்டொளிர் திருவுரு வுடையவன் விரைமலர்
மட்டமர் பொழில்வலி வலமுறை யிறையே. 2

1328. உருமலி கடல்கடை வுழியுல கமருயிர்
வெருவுறு வகையெழு விடம்வெளி மலையணி
கருமணி நிகர்கள முடையவன் மிடைதரு
மருமலி பொழில்வலி வலமுறை யிறையே. 3

1329. அனல்நிகர் சடையழ லவியுற வெனவரு
புனல்நிகழ் வதுமதி நனைபொறி யரவமும்
எனநினை வொடுவரு மிதுமெல முடிமிசை
மனமுடை யவர்வலி வலமுறை யிறையே. 4

1330. பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. 5

1331. தரைமுத லுலகினி லுயிர்புணர் தகைமிக
விரைமலி குழலுமை யொடுவிர வதுசெய்து
நரைதிரை கெடுதகை யதுஅரு ளினனெழில்
வரைதிகழ் மதில்வலி வலமுறை யிறையே. 6

1332. நலிதரு தரைவர நடைவரு மிடையவர்
பொலிதரு மடவர லியர்மனை யதுபுகு
பலிகொள வருபவ னெழில்மிகு தொழில்வளர்
வலிவரு மதில்வலி வலமுறை யிறையே. 7

1333. இரவண நிருபது கரமெழில் மலைதனின்
இரவண நினைதர வவன்முடி பொடிசெய்து
இரவண மமர்பெய ரருளின னகநெதி
இரவண நிகர்வலி வலமுறை யிறையே. 8

1334. தேனமர் தருமல ரணைபவன் வலிமிகும்
ஏனம தாய்நில மகழரி யடிமுடி
தானனை யாவுரு வுடையவன் மிடைகொடி
வானனை மதில்வலி வலமுறை யிறையே. 9

1335. இலைமலி தரமிகு துவருடை யவர்களும்
நிலைமையி லுணலுடை யவர்களு நினைவது
தொலைவலி நெடுமறை தொடர்வகை யுருவினன்
மலைமலி மதில்வலி வலமுறை யிறையே. 10

1336. மன்னிய வலிவல நகருறை யிறைவனை
இன்னியல் கழுமல நகரிறை யெழில்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுறை
உன்னிய வொருபது முயர்பொருள் தருமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 124. திருவீழிமிழலை : திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1337. அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்பவர்
மலர்மலி குழலுமை தனையிட மகிழ்பவர்
நலமலி யுருவுடை யவர்நகர் மிகுபுகழ்
நிலமலி மிழலையை நினையவ லவரே. 1

1338. இருநில மிதன்மிசை யெழில்பெறு முருவினர்
கருமலி தருமிகு புவிமுத லுலகினில்
இருளறு மதியின ரிமையவர் தொழுதெழு
நிருபமன் மிழலையை நினையவ லவரே. 2

1339. கலைமகள் தலைமக னிவனென வருபவர்
அலைமலி தருபுன லரவொடு நகுதலை
இலைமலி யிதழியு மிசைதரு சடையினர்
நிலைமலி மிழலையை நினையவ லவரே. 3

1340. மாடமர் சனமகிழ் தருமன முடையவர்
காடமர் கழுதுக ளவைமுழ வொடுமிசை
பாடலின் நவில்பவர் மிகுதரு முலகினில்
நீடமர் மிழலையை நினையவ லவரே. 4

1341. புகழ்மகள் துணையினர் புரிகுழ லுமைதனை
இகழ்வுசெய் தவனுடை யெழின்மறை வழிவளர்
முகமது சிதைதர முனிவுசெய் தவன்மிகு
நிகழ்தரு மிழலையை நினையவ லவரே. 5

1342. அன்றின ரரியென வருபவ ரரிதினில்
ஒன்றிய திரிபுர மொருநொடி யினிலெரி
சென்றுகொள் வகைசிறு முறுவல்கொ டொளிபெற
நின்றவன் மிழலையை நினையவ லவரே. 6

1343. கரம்பயில் கொடையினர் கடிமல ரயனதொர்
சிரம்பயில் வறவெறி சிவனுறை செழுநகர்
வரம்பயில் கலைபல மறைமுறை யறநெறி
நிரம்பினர் மிழலையை நினையவ லவரே. 7

1344. ஒருக்கிய வுணர்வினொ டொளிநெறி செலுமவர்
அரக்கனன் மணிமுடி யொருபது மிருபது
கரக்கன நெரிதர மலரடி விரல்கொடு
நெருக்கினன் மிழலையை நினையவ லவரே. 8

1345. அடியவர் குழுமிட அவனியில் நிகழ்பவர்
கடிமல ரயனரி கருதரு வகைதழல்
வடிவுரு வியல்பினொ டுலகுகள் நிறைதரு
நெடியவன் மிழலையை நினையவ லவரே. 9

1346. மன்மத னெனவொளி பெறுமவர் மருதமர்
வன்மலர் துவருடை யவர்களு மதியிலர்
துன்மதி யமணர்கள் தொடர்வரு மிகுபுகழ்
நின்மலன் மிழலையை நினையவ லவரே. 10

1347. நித்திலன் மிழலையை நிகரிலி புகலியுள்
வித்தக மறைமலி தமிழ்விர கனமொழி
பத்தியில் வருவன பத்திவை பயில்வொடு
கற்றுவல் லவருல கினிலடி யவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 125. திருச்சிவபுரம் : திருவிராகம். பண் – வியாழக்குறிஞ்சி

1348. கலைமலி யகலல்கு லரிவைத னுருவினன்
முலைமலி தருதிரு வுருவம துடையவன்
சிலைமலி மதில்பொதி சிவபுர நகர்தொழ
இலைநலி வினையிரு மையுமிடர் கெடுமே. 1

1349. படரொளி சடையினன் விடையினன் மதிலவை
சுடரெரி கொளுவிய சிவனவ னுறைபதி
திடலிடு புனல்வயல் சிவபுர மடையநம்
இடர்கெடு முயர்கதி பெறுவது திடனே. 2

1350. வரைதிரி தரவர வகடழ லெழவரு
நுரைதரு கடல்விட நுகர்பவ னெழில்திகழ்
திரைபொரு புனலரி சிலதடை சிவபுரம்
உரைதரு மடியவ ருயர்கதி யினரே. 3

1351. துணிபுடை யவர்சுடு பொடியின ருடலடு
பிணியடை விலர்பிற வியுமற விசிறுவர்
தணிவுடை யவர்பயில் சிவபுர மருவிய
மணிமிட றனதடி யிணைதொழு மவரே. 4

1352. மறையவன் மதியவன் மலையவன் நிலையவன்
நிறையவ னுமையவள் மகிழ்நட நவில்பவன்
இறையவ னிமையவர் பணிகொடு சிவபுரம்
உறைவென வுடையவ னெமையுடை யவனே. 5

1353. முதிர்சடை யிளமதி நதிபுனல் பதிவுசெய்
ததிர்கழ லொலிசெய வருநட நவில்பவன்
எதிர்பவர் புரமெய்த இணையிலி யணைபதி
சதிர்பெறு முளமுடையவர்சிவ புரமே. 6

1354. வடிவுடை மலைமகள் சலமக ளுடனமர்
பொடிபடு முழையதள் பொலிதிரு வுருவினன்
செடிபடு பலிதிரி சிவனுறை சிவபுரம்
அடைதரு மடியவ ரருவினை யிலரே. 7

1355. கரமிரு பதுமுடி யொருபது முடையவன்
உரநெரி தரவரை யடர்வுசெய் தவனுறை
பரனென அடியவர் பணிதரு சிவபுர
நகரது புகுதல்நம் முயர்கதி யதுவே. 8

1356. அன்றிய லுருவுகொ ளரியய னெனுமவர்
சென்றள விடலரி யவனுறை சிவபுரம்
என்றிரு பொழுதுமுன் வழிபடு மவர்துயர்
ஒன்றிலர் புகழொடு முடையரிவ் வுலகே. 9

1357. புத்தரொ டமணர்க ளறவுரை புறவுரை
வித்தக மொழிகில விடையுடை யடிகள்தம்
இத்தவ முயல்வுறி லிறைவன சிவபுரம்
மெய்த்தக வழிபடல் விழுமிய குணமே. 10

1358. புந்தியர் மறைநவில் புகலிமன் ஞானசம்
பந்தன தமிழ்கொடு சிவபுர நகருறை
எந்தையை புறைசெய்த விசைமொழி பவர்வினை
சிந்திமு னுறவுயர் கதிபெறு வர்களே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 126. திருக்கழுமலம் : திருத்தாளச்சதி. பண் – வியாழக்குறிஞ்சி

1359. பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
பாலேசேர்வா யேனோர்கான் பயில்கண முனிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடுஞ்
சேர்வார்நாள்நாள் நீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்கள்நின்று தங்கணாற்
றாமேகாணா வாழ்வாரத் தகவுசெய் தவனதிடங்
கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந்திலங்கு சந்தனக்
காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. 1

1360. பிச்சைக்கே யிச்சித்துப் பிசைந்தணிந்த வெண்பொடிப்
பீடார்நீடார் மாடாரும் பிறைநுத லரிவையொடும்
உச்சத்தா னச்சிப்போல் தொடர்ந்தடர்ந்த வெங்கணே
றூராவூரா நீள்வீதிப் பயில்வொடு மொலிசெயிசை
வச்சத்தா னச்சுச்சேர் வடங்கொள்கொங்கை மங்கைமார்
வாராநேரே மாலாகும் வசிவல வவனதிடங்
கச்சத்தான் மெச்சிப்பூக் கலந்திலங்கு வண்டினங்
காரார்காரார் நீள்சோலைக் கழுமல வளநகரே. 2

1361. திங்கட்கே தும்பைக்கே திகழ்ந்திலங்கு மத்தையின்
சேரேசேரே நீராகச் செறிதரு சுரநதியோ
டங்கைச்சேர் வின்றிக்கே யடைந்துடைந்த வெண்டலைப்
பாலேமேலே மாலேயப் படர்வுறு மவனிறகும்
பொங்கப்பேர் நஞ்சைச்சேர் புயங்கமங்கள் கொன்றையின்
போதார்தாரே தாமேவிப் புரிதரு சடையனிடங்
கங்கைக்கே யும்பொற்பார்ப லந்துவந்த பொன்னியின்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 3

1362. அண்டத்தா லெண்டிக்கு மமைந்தடங்கு மண்டலத்
தாறேவேறே வானாள்வா ரவரவ ரிடமதெலாம்
மண்டிப்போய் வென்றிப்போர் மலைந்தலைந்த வும்பரு
மாறேலாதார் தாமேவும் வலிமிகு புரமெரிய
முண்டத்தே வெந்திட்டே முடிந்திடிந்த இஞ்சிசூழ்
மூவாமூதூர் மூதூரா முனிவுசெய் தவனதிடங்
கண்டிட்டே செஞ்சொற்சேர் கவின்சிறந்த மந்திரக்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 4

1363. திக்கிற்றே வற்றற்றே திகழ்ந்திலங்கு மண்டலச்
சீறார்வீறார் போரார்தா ரகனுட லவனெதிரே
புக்கிட்டே வெட்டிட்டே புகைந்தெழுந்த சண்டத்தீப்
போலேபூநீர் தீகான்மீப் புணர்தரு முயிர்கள்திறஞ்
சொக்கத்தே நிர்த்தத்தே தொடர்ந்தமங்கை செங்கதத்
தோடேயாமே மாலோகத் துயர்களை பவனதிடங்
கைக்கப்பேர் யுக்கத்தே கனன்றுமிண்டு தண்டலைக்
காடேயோடா வூரேசேர் கழுமல வளநகரே. 5

1364. செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்
சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை பிடியதுவாய்
ஒற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை முக்கண்மிக்
கோவாதேபாய் மாதானத் துறுபுகர் முகவிறையைப்
பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்
பேராநோய்தா மேயாமைப் பிரிவுசெய் தவனதிடங்
கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்துறைக் கரைச்செலக்
காணாதாரே சேராமெய்க் கழுமல வளநகரே. 6

1365. பத்திப்பேர் வித்திட்டே பரந்தஐம் புலன்கள்வாய்ப்
பாலேபோகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக்கு ணங்கள்வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானாகச் செயுமவ னுறையுமிடங்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 7

1366. செம்பைச்சே ரிஞ்சிச்சூழ் செறிந்திலங்கு பைம்பொழிற்
சேரேவாரா வாரீசத் திரையெறி நகரிறைவன்
இம்பர்க்கே தஞ்செய்திட் டிருந்தரன் பயின்றவெற்
பேரார்பூநே ரோர்பாதத் தெழில்விர லவணிறுவிட்
டம்பொற்பூண் வென்றித்தோ ளழிந்துவந்த னஞ்செய்தாற்
காரார்கூர்வாள் வானாளன் றருள்புரி பவனதிடங்
கம்பத்தார் தும்பித்திண் கவுட்சொரிந்த மும்மதக்
காரார்சேறார் மாவீதிக் கழுமல வளநகரே. 8

1367. பன்றிக்கோ லங்கொண்டிப் படித்தடம் பயின்றிடப்
பானாமால் தானாமேயப் பறவையி னுருவுகொள
ஒன்றிட்டே யம்புச்சே ருயர்ந்தபங் கயத்தவ
னோதானோதா னஃதுணரா துருவின தடிமுடியுஞ்

சென்றிட்டே வந்திப்பத் திருக்களங்கொள் பைங்கணின்
றேசால்வேறோ ராகாரந் தெரிவுசெய் தவனதிடங்
கன்றுக்கே முன்றிற்கே கலந்திலந் நிறைக்கவுங்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 9

1368. தட்டிட்டே முட்டிக்கைத் தடுக்கிடுக்கி நின்றுணாத்
தாமேபேணா தேநாளுஞ் சமணொடு முழல்பவரும்
இட்டத்தா லத்தந்தா னிதன்றதென்று நின்றவர்க்
கேயாமேவா யேதுச்சொ லிலைமலி மருதம்பூப்
புட்டத்தே யட்டிட்டுப் புதைக்குமெய்க்கொள் புத்தரும்
போல்வார்தாமோ ராமேபோய்ப் புணர்வுசெய் தவனதிடங்
கட்டிக்கால் வெட்டித்தீங்க ரும்புதந்த பைம்புனற்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 10

1369. கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்
கானேதேனே போராருங் கழுமல நகரிறையைத்
தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்தநற் கலைத்துறை
தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர கனமொழிகள்
எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத்த மைத்தகொண்
டேழேயேழே நாலேமுன் றியலிசை யிசையில்பா
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்
மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதல் மடவரலே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 127. திருப்பிரமபுரம் : ஏகபாதம். பண் – வியாழக்குறிஞ்சி

1370. பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான். 1

1371. விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன். 2

1372. புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே. 3

1373. விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன். 4

1374. சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன். 5

1375. பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி. 6

1376. செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில் 7

1377. பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன். 8

1378. தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான். 9

1379. காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே. 10

1380. கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே. 11

1381. கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 128. திருப்பிரமபுரம் : பண் – வியாழக்குறிஞ்சி

### திருவெழுகூற்றிருக்கை

1382. ஓருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவரோ டொருவ னாகி நின்றனை

ஓரால் நீழ லுன்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி அரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்

நாற்கால் மான்மறி ஐந்தலை யரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்

கொன்று தலத்துறை அவுணரை யறுத்தனை
ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து

நான்மறை யோதி ஐவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்

பிரமபுரம் பேணினை
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை

இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேல் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலைய்யா விருநிதி
வாய்ந்த பூந்தரா யேய்ந்தனை

வரபுர மென்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோன் நான்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை

ஐயுறு மமணரு மறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
ஆறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுதல் நான்கும்

மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்

அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 129. திருக்கழுமலம் : பண் –மேகராகக்குறிஞ்சி

1383. சேவுயருந் திண்கொடியான் திருவடியே
சரணென்று சிறந்தஅன்பால்
நாவியலு மங்கையொடு நான்முகன்றான்
வழிபட்ட நலங்கொள் கோயில்
வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்

செங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண்காட்டுங் கழுமலமே. 1

1384. பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியாமேனி
அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தான்
அமரர்தொழ அமருங்கோயில்
தருந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும்
இறைவனது தன்மைபாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப்
பாட்டயருங் கழுமலமே. 2

1385. அலங்கல்மலி வானவருந் தானவரும்
அலைகடலைக் கடையப்பூதங்
கலங்கஎழு கடுவிடமுண் டிருண்டமணி
கண்டத்தோன் கருதுங்கோயில்
விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக்கு
ஊன்சலிக்குங் காலந்தானுங்
கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே. 3

1386. பாரிதனை நலிந்தமரர் பயமெய்தச்
சயமெய்தும் பரிசுவெம்மைப்
போரிசையும் புரமூன்றும் பொன்றவொரு
சிலைவளைத்தோன் பொருந்துங்கோயில்
வாரிசைமென் முலைமடவார் மாளிகையின்
சூளிகைமேல் மகப்பாராட்டக்
காரிசையும் விசும்பியங்குங் கணங்கேட்டு
மகிழ்வெய்துங் கழுமலமே. 4

1387. ஊர்கின்ற அரவமொளி விடுதிங்களொடு
வன்னி மத்தமன்னும்
நீர்நின்ற கங்கைநகு வெண்டலைசேர்
செஞ்சடையான் நிகழுங்கோயில்
ஏர்தங்கி மலர்நிலவி யிசைவெள்ளி
மலையென்ன நிலவிநின்ற
கார்வண்டின் கணங்களாற் கவின்பெருகு
சுதைமாடக் கழுமலமே. 5

1388. தருஞ்சரதந் தந்தருளென் றடிநினைந்து
தழலணைந்து தவங்கள்செய்த
பெருஞ்சதுரர் பெயலர்க்கும் பீடார்தோழமை
அளித்த பெருமான்கோயில்
அரிந்தவய லரவிந்தம் மதுவுகுப்ப
அதுகுடித்துக் களித்துவாளை
கருஞ்சகடம் இளகவளர் கரும்பிரிய
அகம்பாயுங் கழுமலமே. 6

1389. புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய்
நிலனைந்தாய்க் கரணநான்காய்
அவையவைசேர் பயனுருவா யல்லவுருவாய்
நின்றா னமருங்கோயில்
தவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு
கொம்புதைப்பக் கொக்கின்காய்கள்
கவணெறிகற் போற்சுனையிற் கரைசேரப்
புள்ளிரியுங் கழுமலமே. 7

1390. அடல்வந்த வானவரை யழித்துலகு
தெழித்துழலும் அரக்கர்கோமான்
மிடல்வந்த இருபதுதோள் நெரியவிரற்
பணிகொண்டோன் மேவுங்கோயில்
நடவந்த வுழவரிது நடவொணா
வகைபரலாய்த் தென்றுதுன்று
கடல்வந்த சங்கீன்ற முத்துவயற்
கரைகுவிக்குங் கழுமலமே. 8

1391. பூமகள்தன் கோனயனும் புள்ளினொடு
கேழலுரு வாகிப்புக்கிட்
டாமளவுஞ் சென்றுமுடி யடிகாணா
வகைநின்றா னமருங்கோயில்
பாமருவுங் கலைப்புலவோர் பன்மலர்கள்
கொண்டணிந்து பரிசினாலே
காமனைகள் பூரித்துக் களிகூர்ந்து
நின்றேத்துங் கழுமலமே. 9

1392. குணமின்றிப் புத்தர்களும் பொய்த்தவத்தை
மெய்த்தவமாய் நின்றுகையில்
உணல்மருவுஞ் சமணர்களு முணராத
வகைநின்றா னுறையுங்கோயில்

மணமருவும் வதுவையொலி விழவினொலி
இவையிசைய மண்மேற்றேவர்
கணமருவு மறையினொலி கீழ்ப்படுக்க
மேற்படுக்குங் கழுமலமே. 10

1393. கற்றவர்கள் பணிந்தேத்துங் கழுமலத்து
ஈசன்றன் கழல்மேல்நல்லோர்
நற்றுணையாம் பெருந்தன்மை ஞானசம்
பந்தன்றான் நயந்துசொன்ன
சொற்றுணையோ ரைந்தினொடைந் திவைவல்லார்
தூமலராள் துணைவராகி
முற்றுலக மதுஆண்டு முக்கணான்
அடிசேர முயல்கின்றாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 130. திருவையாறு : பண் –மேகராகக்குறிஞ்சி

1394. புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள் செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே. 1

1395. விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையோடும்
அடலேறொன் றதுவேறி யஞ்சொலீர்
பலியென்னு மடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியின்
உடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தம்
ஈன்றலைக்குந் திருவையாறே. 2

1396. கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால்
இறகுலர்த்திக் கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கானல்
இரைதேருந் திருவையாறே. 3

1397. ஊன்பாயு முடைதலைகொண் டூரூரின்
பலிக்குழல்வா ருமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங்கோயில்
மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே. 4

1398. நீரோடு கூவிளமும் நிலாமதியும்
வெள்ளெருக்கும் நிறைந்த கொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடு மரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலுந் திருவையாறே. 5

1399. வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங் கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 6

1400. நின்றுலா நெடுவிசும்பி னெருக்கிவரு
புரமூன்றும் நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்,

குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. 7

1401. அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
அரக்கர்கோன் தலைகள்பத்தும்
மஞ்சாடு தோள்நெறிய அடர்த்தவனுக்கு
அருள்புரிந்த மைந்தர்கோயில்
இஞ்சாய லிளந்தெங்கின் பழம்வீழ
இளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவையாறே. 8

1402. மேலோடி விசும்பணவி வியன்நிலத்தை
மிகஅகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 9

1403. குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
ஆளாமின் மேவித்தொண்டீர்
எண்டோளர் முக்கண்ண ரெம்மீசர்
இறைவரினி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறே. 10

1404. அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம்
பெருமானை யந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையா லிவைபத்து மிசையுங்கால்
ஈசனடி யேத்துவார்கள்
தன்னிசையோ டமருலகில் தவநெறிசென்று
எய்துவார் தாழாதன்றே. 11

திருச்சிற்றம்பலம்

## 131. திருமுதுகுன்றம் : பண் – மேகராகக்குறிஞ்சி

*1405.* மெய்த்தாறு சுவையுமே ழிசையுமெண்
குணங்களும் விரும்புநால்வே
தத்தாலு மறிவொண்ணா நடைதெளியப்
பளிங்கேபோ லரிவைபாகம்
ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்
கருதுமூ ருலவுதெண்ணீர்
முத்தாறு வெதிருதிர நித்திலம்
வாரிக்கொழிக்கும் முதுகுன்றமே. *1*

*1406.* வேரிமிகு குழலியொடு வேடுவனாய்
வெங்கானில் விசயன்மேவு
போரின்மிகு பொறையளந்து பாசுபதம்
புரிந்தளித்த புராணர்கோயில்
காரின்மலி கடிபொழில்கள் கனிகள்பல
மலருதிர்த்துக் கயமுயங்கி
மூரிவளங் கிளர்தென்றல் திருமுன்றிற்
புகுந்துலவும் முதுகுன்றமே. *2*

*1407.* தக்கனது பெருவேள்விச் சந்திரன்
இந்திரனெச்ச னருக்கனங்கி
மிக்கவிதா தாவினொடும் விதிவழியே
தண்டித்த விமலர்கோயில்
கொக்கினிய கொழும்வருக்கை கதலிகமுகு
உயர்தெங்கின் குவைகொள்சோலை
முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே. *3*

*1408.* வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய
விறலழிந்து விண்ணுளோர்கள்
செம்மலரோ னிந்திரன்மால் சென்றிரப்பத்
தேவர்களே தேரதாக
மைம்மருவு மேருவிலு மாசுணநாணரி
எரிகால் வாளியாக
மும்மதிலும் நொடியளவிற் பொடிசெய்த
முதல்வனிடம் முதுகுன்றமே. *4*

*1409.* இழைமேவு கலையல்கு லேந்திழையாள்
ஒருபாலா யொருபாலெள்கா
துழைமேவு முரியுடுத்த வொருவனிருப்

பிடமென்ப ரும்பரோங்கு
கழைமேவு மடமந்தி மழைகண்டு
மகவினொடும் புகவொண்கல்லின்
முழைமேவும் மால்யானை யிரைதேரும்
வளர்சாரல் முதுகுன்றமே. 5

1410. நகையார்வெண் டலைமாலை முடிக்கணிந்த
நாதனிட நன்முத்தாறு
வகையாரும் வரைப்பண்டங் கொண்டிரண்டு
கரையருகு மறியமோதித்
தகையாரும் வரம்பிடறிச் சாலிகழு
நீர்குவளை சாயப்பாய்ந்து
முகையார்செந் தாமரைகள் முகமலர
வயல்தழுவு முதுகுன்றமே. 6

1411. அறங்கிளரும் நால்வேத மாலின்கீழ்
இருந்தருளி யமரர்வேண்ட
நிறங்கிளர்செந் தாமரையோன் சிரமைந்தி
னொன்றறுத்த நிமலர்கோயில்
திறங்கொள்மணித் தரளங்கள் வரத்திரண்டங்கு
எழிற்குறவர் சிறுமிமார்கள்
முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே. 7

1412. கதிரொளிய நெடுமுடிபத் துடையகடல்
இலங்கையர்கோன் கண்ணும்வாயும்
பிதிரொளிய கனல்பிறங்கப் பெருங்கயிலை
மலையைநிலை பெயர்த்தஞான்று
மதிலளகைக் கிறைமுரல மலரடியொன்
றூன்றிமறை பாடஆங்கே
முதிரொளிய சுடர்நெடுவாள் முன்னீந்தான்
வாய்ந்தபதி முதுகுன்றமே. 8

1413. பூவார்பொற் றவிசின்மிசை யிருந்தவனும்
பூந்துழாய் புனைந்தமாலும்
ஓவாது கழுகேன மாயுயர்ந்தாழ்ந்து
உறநாடி யுண்மைகாணாத்
தேவாருந் திருவுருவன் சேருமலை
செழுநிலத்தை மூடவந்த
மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ
மேலுயர்ந்த முதுகுன்றமே. 9

1414. மேனியிற்சீ வரத்தாரும் விரிதரு
தட்டுடையாரும் விரவலாகா
ஊனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது
முள்ளுணர்ந்தங் குய்மின்தொண்டீர்
ஞானிகளா யுள்ளார்கள் நான்மறையை
முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
தவம்புரியும் முதுகுன்றமே. 10

1415. முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யு
முதுகுன்றத்திறையை மூவாப்
பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய
கழுமலமே பதியாக்கொண்டு
தழங்கெரிமூன் றோம்புதொழில் தமிழ்ஞான
சம்பந்தன் சமைத்தபாடல்
வழங்குமிசை கூடும்வகை பாடுமவர்
நீடுலக மாள்வர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 132. திருவீழிமிழலை : பண் – மேகராகக்குறிஞ்சி

1416. ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்
கீரிருவர்க் கிரங்கிநின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோன் நின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோது மோசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லும் மிழலையாமே. 1

1417. பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமது.
ஆகப்புத் தேளிர்கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட
கண்டத்தோன் மன்னுங்கோயில்
செறியிதழ்த்தா மரைத்தவிசில் திகழ்ந்தோங்கு
மிலைக்குடைக்கீழ்ச் செய்யார்செந்நெல்
வெறிகதிர்ச்சா மரையிரட்ட இளவன்னம்
வீற்றிருக்கும் மிழலையாமே. 2

1418. எழுந்துலகை நலிந்துழலு மவுணர்கள்தம்
புரமூன்று மெழிற்கணாடி
உழுந்துருளு மளவையினொள் ளெரிகொளவெஞ்
சிலைவளைத்தோ னுறையுங்கோயில்
கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநதம்
முகங்காட்டக் குதித்துநீர்மேல்
விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம்
வாய்காட்டும் மிழலையாமே. 3

1419. உரைசேரு மெண்பத்து நான்குநூறு
ஆயிரமாம் யோனிபேதம்
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிராய்
அங்கங்கே நின்றான்கோயில்
வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
சிரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்
கையேற்கும் மிழலையாமே. 4

1420. காணுமா றரியபெரு மானாகிக்
காலமாய்க் குணங்கள்மூன்றாய்ப்
பேணுமூன் றுருவாகிப் பேருலகம்
படைத்தளிக்கும் பெருமான்கோயில்
தாணுவாய் நின்றபர தத்துவனை
உத்தமனை யிறைஞ்சீரென்று
வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்ப
போலோங்கு மிழலையாமே. 5

1421. அகனமர்ந்த அன்பினரா யறுபகைசெற்று
ஐம்புலனு மடக்கிஞானம்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்து
உள்ளிருக்கும் புராணர்கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்கு
அந்திகழச் சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணஞ்செய்யும் மிழலையாமே. 6

1422. ஆறாடு சடைமுடிய னனலாடு
மலர்க்கையன் இமயப்பாவை
கூறாடு திருவுருவன் கூத்தாடுங்
குணமுடையோன் குளிருங்கோயில்
சேறாடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்தவண்டு
வேறாய வுருவாகிச் செவ்வழிநற்
பண்பாடும் மிழலையாமே. 7

1423. கருப்பமிகு முடலடர்த்துக் காலூன்றிக்
கைமறித்துக் கயிலையென்னும்
பொருப்பெடுக்க லுறுமரக்கன் பொன்முடிதோள்
நெரித்தவிரற் புனிதர்கோயில்
தருப்பமிகு சலந்தரன்ற னுடல்தடிந்த
சக்கரத்தை வேண்டியீண்டு
விருப்பொடுமால் வழிபாடு செய்யவிழி
விமானஞ்சேர் மிழலையாமே. 8

1424. செந்தளிர்மா மலரோனுந் திருமாலும்
ஏனமோ டன்னமாகி
அந்தமடி காணாதே யவரேத்த
வெளிப்பட்டோ னமருங்கோயில்
புந்தியினால் மறைவழியே புற்பரப்பி
நெய்சமிதை கையிற்கொண்டு
வெந்தழலின் வேட்டுலகின் மிகஅளிப்போர்
சேருமூர் மிழலையாமே. 9

1425. எண்ணிறந்த அமணர்களு மிழிதொழில்சேர்
சாக்கியரும் என்றுந்தன்னை
நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க்கு
அருள்புரியும் நாதன்கோயில்
பண்ணமரும் மென்மொழியார் பாலகரைப்
பாராட்டு மோசைகேட்டு
விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோடும்
இழியு மிழலையாமே. 10

1426. மின்னியலும் மணிமாட மிடைவீழி
மிழலையான் விரையார்பாதம்
சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிரபுரக்கோன்

செழுமறைகள் பயிலுநாவன்
பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்
பரிந்துரைத்த பத்துமேத்தி
இன்னிசையாற் பாடவல்லா ரிருநிலத்தில்
ஈசனெனு மியல்பினோரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 133. திருக்கச்சியேகம்பம் : பண் – மேகராகக்குறிஞ்சி

1427. வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற அணங்கினொ டாடல்புரி
எந்தை மேவிய ஏகம்பந் தொழுதேத்த இடர்கெடுமே. 1

1428. வரந்திகழு மவுணர் மாநகர்மூன் றுடன்மாய்ந் தவியச்
சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேயஇடம்
குருந்த மல்லிகை கோங்குமா தவிநல்ல குராமரவம்
திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ்சேர இடர்கெடுமே. 2

1429. வண்ணவெண் பொடிப்பூசு மார்பின் வரியர வம்புனைந்து
பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய பிஞ்ஞகன் மேயவிடம்
விண்ணமர் நெடுமாட மோங்கி விளங்கிய கச்சிதன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த ஏகம்பஞ் சேர இடர்கெடுமே. 3

1430. தோலுநூ லுந்துதைந்த வரைமார்பிற் சுடலைவெண் ணீறணிந்து
காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த கடவுள் கருதுமிடம்
மாலைவெண் மதிதோயு மாமதிற் கச்சி மாநகருள்
ஏலநாறிய சோலைசூ ழேகம்ப மேத்த இடர்கெடுமே. 4

1431. தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத் தூமதியம்புனைந்து
பாடல்நான் மறையாகப் பல்கணப் பேய்க ளவைசூழ
வாடல்வெண் டலையோ டனலேந்தி மகிழ்ந்துட னாடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி யேகம்பஞ் சேர இடர்கெடுமே. 5

1432. சாகம்பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாக அரவொடு நூலணிந்து
மாகந்தோய் மணிமாட மாமதிற் கச்சி மாநகருள்
ஏகம்பத் துறையீசன் சேவடி யேத்த இடர்கெடுமே. 6,7

1433. வாணிலா மதிபுல்கு செஞ்சடை வாளரவ் வம்மணிந்து
நாணிடத் தினில்வாழ்க்கை பேணி நகுதலையிற் பலிதேர்ந்
தேணிலா அரக்கன்றன் நீள்முடி பத்து மிறுத்தவனூர்
சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர இடர்கெடுமே. 8

1434. பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழ லாயபெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தண னணங்கினொ டமருமிடம்
கரவில்வண் கையினார்கள் வாழ்கலிக் கச்சி மாநகருள்
மரவஞ்சூழ் பொழிலேகம் பந்தொழ வல்வினை மாய்ந்தறுமே. 9

1435. குண்டுபட் டமணா யவரொடுங் கூறைதம் மெய்போர்க்கும்
மிண்டர் கட்டிய கட்டுரை யவைகொண்டு விரும்பேன்மின்
விண்டவர் புரமூன்றும் வெங்கணை யொன்றினா லவியக்
கண்டவன் கலிக்கச்சி யேகம்பங் காண இடர்கெடுமே. 10

1436. ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சி யேகம்ப மேயவனைக்
காரினார் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 134. திருப்பறியலூர்வீரட்டம் : பண் – மேகராகக்குறிஞ்சி

1437. கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமேல் நிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூரில்
விருத்த னெனத்தகும் வீரட்டத் தானே. 1

1438. மருந்த னமுதன் மயானத்துள் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே. 2

1439. குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தா னடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 3

1440. பிறப்பாதி யில்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பாதி யந்தஞ் செலச்செய்யுந் தேசன்
சிறப்பா டுடையார் திருப்பறி யலூரில்
விறற்பா ரிடஞ்சூழ வீரட்டத் தானே. 4

1441. கரிந்தா ரிடுகாட்டி லாடுங்க பாலி
புரிந்தார் படுதம் புறங்காட் டிலாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 5

1442. அரவுற்ற நாணா அனலம்ப தாகச்
செருவுற் றவர்புரந் தீயெழச் செற்றான்
தெருவிற் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே. 6

1443. நரையார் விடையான் நலங்கொள் பெருமான்
அரையா ரரவ மழகா அசைத்தான்
திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்
விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 7

1444. வளைக்கும் மெயிற்றின் னரக்கன் வரைக்கீழ்
இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே. 8

1445. வளங்கொள் மலர்மே லயன்ஓத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்
இளங்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. 9

1446. சடையன் பிறையன் சமண்சாக் கியரோ
டடையன் பிலாதா னடியார் பெருமான்
உடையன் புலியி னுரிதோ லரைமேல்
விடையன் திருப்பறியல் வீரட்டத் தானே. 10

1447. நறுநீ ருகுங்காழி ஞானசம் பந்தன்
வெறிநீர்த் திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்
கறுநீ டவல மறும்பிறப் புத்தானே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 135. திருப்பராய்த்துறை : பண் – மேகராகக்குறிஞ்சி

*1448.* நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை அண்ணலே. *1*

*1449.* கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்ல அடிகளே. *2*

*1450.* வேதர்வேதமெல் லாமுறையால்விரித்
தோதநின்ற வொருவனார்
பாதிபெண்ணுரு வாவர்பராய்த்துறை
ஆதியாய அடிகளே. *3*

*1451.* தோலுந்தம்மரை யாடைசுடர்விடு
நூலுந்தாமணி மார்பினர்
பாலுநெய்பயின் றாடுபராய்த்துறை
ஆலநீழ லடிகளே. *4*

*1452.* விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்
இரவில்நின்றெரி யாடுவர்
பரவினாரவர் வேதம்பராய்த்துறை
அரவமார்த்த அடிகளே. *5*

*1453.* மறையுமோதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்ட முடையவர்
பறையுஞ்சங்கு மொலிசெய்பாராய்த்துறை
அறையநின்ற அடிகளே. *6*

*1454.* விடையுமேறுவர் வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடையநின்ற அடிகளே. *7*

*1455.* தருக்கின்மிக்க தசக்கிரிவன்றனை
நெருக்கினார்விர லொன்றினால்
பருக்கினாரவர் போலும்பராய்த்துறை
அரக்கன்றன்னை அடிகளே. *8*

1456. நாற்றமாமல ரானொடுமாலுமாய்த்
தோற்றமும்மறி யாதவர்
பாற்றினார்வினை யானபராய்த்துறை
ஆற்றல்மிக்க அடிகளே. 9

1457. திருவிலிச்சில தேரமணாதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலாலெயி லெய்துபராய்த்துறை.
மருவினான்றனை வாழ்த்துமே. 10

1458. செல்வமல்கிய செல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவை செப்பவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 136. திருத்தருமபுரம் : பண் – யாழ்முரி

1459. மாதர்ம டப்பிடியும் மட அன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மகள் துணையென மகிழ்வர்
பூதஇ னப்படைநின் றிசை பாடவு மாடுவர்
அவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் கும லர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயில் தருமபு ரம்பதியே. 1

1460. பொங்குந டைப்புகலில் விடை யாமவர் ஊர்திவெண்
பொடி யணி தடங் கொள்மார் புபூணநூல் புரள
மங்குலி டைத்தவழும் மதி சூடுவ ராடுவர்
வளங் கிளர் புன லர வம்வைகிய சடையர்
சங்குக டற்றிரையா லுதை யுண்டுச ரிந்திரிந்
தொசிந் தசைந் துசே ரும்வெண்மணற் குவைமேல்
தங்குக திர்ம்மணிநித் தில மெல்லிரு ளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழில் தருமபு ரம்பதியே. 2

1461. விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
டுவர் விரி சுரி யொளி கொள்தோடு நின்றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மதிக் கண்ணியர்
கழிந் தவ ரிழிந் திடும் முடைதலை கலனாப்
பெண்ணுற நின்றவர்தம் முரு வம்மயன் மால்தொழவ்
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும் பிரியார்
தண்ணிதழ் முல்லையொடெண் ணிதழ் மௌவல்ம ருங்கலர்
கருங் கழிந் நெருங் குநல் தருமபு ரம்பதியே. 3

1462. வாருறு மென்முலைநன் னுத லேழையொ டாடுவர்
வளங் கிளர் விளங் குதிங் கள்வைகிய சடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்
கடுவ் விடை கொடி வெடி கொள்காடுறை பதியர்
பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்
படு தலைப் பலி கொளல் பரிபவந் நினையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
தழை பொழில் மழைந் நுழை தருமபு ரம்பதியே. 4

1463. நேருமவர்க்குணரப் புகி லில்லைநெ டுஞ்சடைக்
கடும் புனல் படர்ந் திடம் படுவ்வதொர் நிலையர்
பேருமவர்க்கெனையா யிர முன்னைப்பி றப்பிறப்
பிலா தவ ருடல் தடர்த் தபெற்றியா ரறிவார்
ஆரமவர்க்கழல்வா யதொர் நாகம ழஃகுறவ்
வெழுஃகொழும் மலர்கொள்பொன் னிதழிநல் லலங்கல்
தாரமவர்க்கிமவான் மக ளூர்வது போர்விடை
கடி படு செடி பொழில் தருமபு ரம்பதியே. 5

1464. கூழையங் கோதைகுலா யவள் தம்பினை புல்கமல்
குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைத் துவர்வாய்
மாழையொண் கணமடவா ளையொர் பாகம கிழ்ந்தவர்
வலம் மலி படை விடை கொடிகொடும் மழுவ்வாள்
யாழையும் மெள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமென் சிறஃ கறை யுறந்நறவ்வி ரியுந்நல்
தாழையு ஞாழலுந்நீ டிய கானலி னள்ளலி
சைபுள் ளினந் துயில் பயில் தருமபு ரம்பதியே. 6

1465. தேமரு வார்குழலன் னந டைப்பெடை மான்விழித்
திருந் திழை பொருந் துமே னிசெங்கதிர் விரியத்
தூமரு செஞ்சடையில் துதை வெண்மதி துன்றுகொன்
றைதொல் புனல் சிரங் கரந் துரித்ததோ லுடையர்
காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல் லடை கழி யிழி யமுண்டகத் தயலே
தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்
வெறி கமழ் செறிவ் வயல் தருமபு ரம்பதியே. 7

1466. தூவண நீறகலம் பொலி யவ்விரை புல்கமல்
குமென் மலர் வரை புரை திரள்புயம் மணிவர்
கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையர்
கொலைம் மலி படை யொர்சூ லமேந்திய குழகர்
பாவண மாவலறத் தலை பத்துடை யவ்வரக்
கனவ் வலி யொர்கவ் வைசெய் தருள்புரி தலைவர்
தாவண ஏறுடையெம் மடி கட்கிடம் வன்தடங்
கடல் விடுந் தசிங் கரைத் தருமபு ரம்பதியே. 8

1467. வார்மலி மென்முலைமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யர வம்வைகிய சடையர்
கூர்மலி சூலமும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலை தனிம் மலை யதேந்திய குழகர்
ஆர்மலி யாழிகொள்செல் வனு மல்லிகொள் தாமரைம்
மிசை யவன் னடிம் முடி யளவுதா மறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்
தடங் கடல் விடுந் திரைத் தருமபு ரம்பதியே. 9

1468. புத்தர்கள் தத்துவர்மொய்த் துறி புல்கிய கையர்பொய்ம்
மொழிந் தழி வில்பெற் றியுற் றநற்றவர் புலவோர்
பத்தர்க ளத்தவமெய்ப் பய னாகவு கந்தவர்
நிகழ்ந் தவர் சிவந் தவர் சுடலைப்பொடி யணிவர்
முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னணி
புணர்ம் முலை யிணை துணை யணைவதும் பிரியார்
தத்தரு வித்திருளுந் திய மால்கட லோதம்வந்
தடர்ந் திடுந் தடம் பொழில் தருமபு ரம்பதியே. 10

1469. பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலீ
பொரூஉ புனல் திரூஉ வமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஃ
துசெந் தமிழ்த் தசிங் கடல் தரும புரம்பதியைப்
பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்
இன்னெடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்
உறு வர்கள் ளிடர் பிணி துயரணைவ் விலரே. 11

திருச்சிற்றம்பலம்

ஃஃஃஃஃ

முதல் திருமுறை முற்றிற்று.

# இரண்டாம் திருமுறை

## 1. திருப்பூந்தராய் : பண் –இந்தளம்

### வினாவுரை

1470. செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
பின்னு செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே. 1

1471. எற்று தெண்டிரை யேறிய சங்கினொ டிப்பிகள்
பொற்றி கழ்கம லப்பழ னம்புகு பூந்தராய்ச்
சுற்றி நல்லிமை யோர்தொழு பொற்கழ லீர்சொலீர்
பெற்ற மேறுதல் பெற்றிமை யோபெரு மானிரே. 2

1472. சங்கு செம்பவ ளத்திரள் முத்தவை தாங்கொடு
பொங்கு தெண்டிரை வந்தலைக் கும்புனற் பூந்தராய்த்
துங்க மால்களிற் றின்னுரி போர்த்துகந் தீர்சொலீர்
மங்கை பங்கமு மங்கத்தொ டொன்றிய மாண்பதே. 3

1473. சேம வன்மதில் பொன்னணி மாளிகை சேணுயர்
பூம ணங்கம ழும்பொழில் சூழ்தரு பூந்தராய்ச்
சோம னும்மர வுந்தொடர் செஞ்சடை யீர்சொலீர்
காமன் வெண்பொடி யாகக்க டைக்கண்சி வந்ததே. 4

1474. பள்ள மீனிரை தேர்ந்துழ லும்பகு வாயன
புள்ளு நாடொறுஞ் சேர்பொழில் சூழ்தரு பூந்தராய்த்
துள்ளு மான்மறி யேந்திய செங்கையி னீர்சொலீர்
வெள்ள நீரொரு செஞ்சடை வைத்தவி யப்பதே. 5

1475. மாதி லங்கிய மங்கைய ராடம ருங்கெலாம்
போதி லங்கம லம்மது வார்புனற் பூந்தராய்ச்
சோதி யஞ்சுடர் மேனிவெண் ணீறணி வீர்சொலீர்
காதி லங்குழை சங்கவெண் தோடுடன் வைத்ததே. 6,7

1476. வருக்க மார்தரு வான்கடு வன்னொடு மந்திகள்
தருக்கொள் சோலைத ருங்கனி மாந்திய பூந்தராய்த்
துரக்கு மால்விடை மேல்வரு வீரடி கேள்சொலீர்
அரக்க னாற்றல ழித்தரு ளாக்கிய ஆக்கமே. 8

1477. வரிகொள் செங்கயல் பாய்புனல் சூழ்ந்தம ருங்கெலாம்
புரிசை நீடுயர் மாடநி லாவிய பூந்தராய்ச்
சுருதி பாடிய பாணியல் தூமொழி யீர்சொலீர்
கரிய மாலயன் நேடியு மைக்கண்டி லாமையே. 9

1478. வண்ட லங்கழ னிம்மடை வாளைகள் பாய்புனற்
புண்ட ரீகம லர்ந்தும துத்தரு பூந்தராய்த்
தொண்டர் வந்தடி போற்றிசெய் தொல்கழ லீர்சொலீர்
குண்டர் சாக்கியர் கூறிய தாங்குறி யின்மையே. 10

1479. மகர வார்கடல் வந்தண வும்மணற் கானல்வாய்ப்
புகலி ஞானசம் பந்தனெ ழில்மிகு பூந்தராய்ப்
பகவ னாரைப்ப ரவுசொன் மாலைபத் தும்வல்லார்
அகல்வர் தீவினை நல்வினை யோடுட னாவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 2. திருவலஞ்சுழி : பண் – இந்தளம்

### வினாவுரை

1480. விண்டெ லாமல ரவ்விரை நாறுதண் தேன்விம்மி
வண்டெ லாநசை யாலிசை பாடும்வ லஞ்சுழித்
தொண்டே லாம்பர வுஞ்சுடர் போலொளி யீர்சொலீர்
பண்டெ லாம்பலி தேர்ந்தொலி பாடல்ப யின்றதே. 1

1481. பாரல் வெண்குரு கும்பகு வாயன நாரையும்
வாரல் வெண்டிரை வாயிரை தேரும்வ லஞ்சுழி
மூரல் வெண்முறு வல்நகு மொய்யொளி யீர்சொலீர்
ஊரல் வெண்டலை கொண்டுல கொக்கவு மூன்றதே. 2

1482. கிண்ண வண்ணம லருங்கிளர் தாமரைத் தாதளாய்
வண்ண நுண்மணல் மேலனம் வைகும்வ லஞ்சுழிச்
சுண்ண வெண்பொடிக் கொண்டுமெய் பூசவ லீர்சொலீர்
விண்ண வர்தொழ வெண்டலை யிற்பலி கொண்டதே. 3

1483. கோடெ லாநிறை யக்குவ ளைம்மல ருங்குழி
மாடெ லாமலி நீர்மண நாறும்வ லஞ்சுழிச்
சேடெ லாமுடை யீர்சிறு மான்மறி யீர்சொலீர்
நாடெ லாமறி யத்தலை யின்னற வேற்றதே. 4

1484. கொல்லை வென்றபு னத்திற்குரு மாமணி கொண்டுபோய்
வல்லை நுண்மணல் மேலனம் வைகும்வ லஞ்சுழி
முல்லை வெண்முறு வல்நகை யாளொளி யீர்சொலீர்
சில்லை வெண்டலை யிற்பலி கொண்டுழல் செல்வமே. 5

1485. பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழித்
தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீர்
ஏச வெண்டலை யிற்பலி கொள்வதி லாமையே. 6

1486. கந்த மாமலர்ச் சந்தொடு காரகி லுந்தழீஇ
வந்த நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழி
அந்த நீர்முதல் நீர்நடு வாமடி கேள்சொலீர்
பந்த நீர்கரு தாதுல கிற்பலி கொள்வதே. 7

1487. தேனுற் றநறு மாமலர்ச் சோலையில் வண்டினம்
வானுற் றநசை யாலிசை பாடும்வ லஞ்சுழிக்
கானுற் றகளிற் றின்னுரி போர்க்கவல் லீர்சொலீர்
ஊனுற் றதலை கொண்டுல கொக்கவு ழன்றதே. 8

1488. தீர்த்த நீர்வந் திழிபுனற் பொன்னியிற் பன்மலர்
வார்த்த நீர்குடை வாரிடர் தீர்க்கும்வ லஞ்சுழி
ஆர்த்து வந்தஅ ரக்கனை யன்றடர்த் தீர்சொலீர்
சீர்த்த வெண்டலை யிற்பலி கொள்வதுஞ் சீர்மையே. 9

1489. உரம னுஞ்சடை யீர்விடை யீரும தின்னருள்
வரம னும்பெற லாவது மெந்தைவ லஞ்சுழிப்
பிரம னுந்திரு மாலும ளப்பரி யீர்சொலீர்
சிரமெ னுங்கல னிற்பலி வேண்டிய செல்வமே. 10

1490. வீடு ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னாவது மெந்தைவ லஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 3. திருத்தெளிச்சேரி : பண் – இந்தளம்

1491. பூவ லர்ந்தன கொண்டுமுப் போதும்பொ பொற்கழல்
தேவர் வந்துவ ணங்குமி குதெளிச் சேரியீர்
மேவ ருந்தொழி லாளொடு கேழற்பின் வேடனாம்
பாவ கங்கொடு நின்றது போலுநும் பான்மையே. 1

1492. விளைக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவ ரேத்தவே
திளைக்குந் தீர்த்தம றாததி கழ்தெளிச் சேரியீர்
வளைக்குந் திண்சிலை மேலைந்து பாணமுந் தானெய்து
களிக்குங் காமனை யெங்ஙன நீர்கண்ணிற் காய்ந்ததே. 2

1493. வம்ப டுத்தம லர்ப்பொழில் சூழம திதவழ்
செம்ப டுத்தசெ ழும்புரி சைத்தெளிச் சேரியீர்
கொம்ப டுத்ததொர் கோலவி டைமிசைக் கூர்மையோ
டம்ப டுத்தகண் ணாளொடு மேவல ழகிதே. 3

1494. காரு லாங்கட விப்பிகள் முத்தங்க ரைப்பெயும்
தேரு லாநெடு வீதிய தார்தெளிச் சேரியீர்
ஏரு லாம்பலிக் கேகிட வைப்பிட மின்றியே
வாரு லாமுலை யாளையொர் பாகத்து வைத்ததே. 4

1495. பக்க நுந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்கும்
செக்கர் மாமதி சேர்மதில் சூழ்தெளிச் சேரியீர்
மைக்கொள் கண்ணியர் கைவளை மால்செய்து வெளவவே
நக்க ராயுல கெங்கும்ப லிக்குந டப்பதே. 5

1496. தவள வெண்பிறை தோய்தரு தாழ்பொழில் சூழநல்
திவள மாமணி மாடந்தி கழ்தெளிச் சேரியீர்
குவளை போற்கண்ணி துண்ணென வந்துகு றுகிய
கவள மால்கரி யெங்ஙன நீர்கையிற் காய்ந்ததே. 6

1497. கோட டுத்தபொ ழிலின்மி சைக்குயில் கூவிடும்
சேட டுத்ததொ ழிலின்மி குதெளிச் சேரியீர்
மாட டுத்தம லர்க்கண்ணி னாள்கங்கை நங்கையைத்
தோட டுத்தம லர்ச்சடை யென்கொல்நீர் சூடிற்றே. 7

1498. கொத்தி ரைத்தம லர்க்குழ லாள்குயில் கோலஞ்சேர்
சித்தி ரக்கொடி மாளிகை சூழ்தெளிச் சேரியீர்
வித்த கப்படை வல்லஅ ரக்கன் விறற்றலை
பத்தி ரட்டிக்க ரநெரித் திட்டதும் பாதமே. 8

1499. காலெ டுத்ததி ரைக்கை கரைக்கெறி கானல்சூழ்
சேல டுத்தவ யற்பழ னத்தெளிச் சேரியீர்
மால டித்தலம் மாமல ரான்முடி தேடியே
ஓல மிட்டிட எங்ஙன மோருருக் கொண்டதே. 9

1500. மந்தி ரந்தரு மாமறை யோர்கள்த வத்தவர்
செந்தி லங்குமொ ழியவர் சேர்தெளிச் சேரியீர்
வெந்த லாகிய சாக்கிய ரோடுச மணர்கள்
தந்தி றத்தன நீக்குவித் தீரோர்ச திரரே. 10

1501. திக்கு லாம்பொழில் சூழ்தெளிச் சேரியெஞ் செல்வனை
மிக்க காழியுள் ஞானசம் பந்தன்வி ளம்பிய
தக்க பாடல்கள் பத்தும்வல் லார்கள்த டமுடித்
தொக்க வானவர் சூழஇ ருப்பவர் சொல்லிலே. 11

திருச்சிற்றம்பலம்

****

## 4. திருவான்மியூர் : பண் – இந்தளம்

### வினாவுரை

1502. கரையு லாங்கட லிற்பொலி சங்கம்வெள் ளிப்பிவன்
திரையு லாங்கழி மீனுக ளுந்திரு வான்மியூர்
உரையு லாம்பொரு ளாயுல காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. 1

1503. சந்து யர்ந்தெழு காரகில் தண்புனல் கொண்டுதம்
சிந்தை செய்தடி யார்பர வுந்திரு வான்மியூர்ச்
சுந்த ரக்கழல் மேற்சிலம் பார்க்கவல் லீர்சொலீர்
அந்தி யின்னொளி யின்னிற மாக்கிய வண்ணமே. 2

1504. கான யங்கிய தண்கழி சூழ்கட லின்புறம்
தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு வான்மியூர்த்
தோன யங்கம ராடையி னீரடி கேள்சொலீர்
ஆனையங் கவ்வுரி போர்த்தன லாடவு கந்ததே. 3

1505. மஞ்சு லாவிய மாடம திற்பொலி மாளிகைச்
செஞ்சொ லாளர்கள் தாம்பயி லுந்திரு வான்மியூர்த்
துஞ்சு வஞ்சிரு ளாடலு கக்கவல் லீர்சொலீர்
வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள் வைத்ததே. 4

1506. மண்ணி னிற்புகழ் பெற்றவர் மங்கையர் தாம்பயில்
திண்ணெ னப்புரி சைத்தொழி லார்திரு வான்மியூர்த்
துண்ணெ னத்திரி யுஞ்சரி தைத்தொழி லீர்சொலீர்
விண்ணி னிற்பிறை செஞ்சடை வைத்தவி யப்பதே. 5

1507. போது லாவிய தண்பொழில் சூழ்புரி சைப்புறம்
தீதி லந்தண ரோத்தொழி யாத்திரு வான்மியூர்ச்
சூது லாவிய கொங்கையொர் பங்குடை யீர்சொலீர்
மூதெ யில்லொரு மூன்றெரி யூட்டிய மொய்ம்பதே. 6

1508. வண்டி ரைத்தத டம்பொழி லின்நிழற் கானல்வாய்த்
தெண்டி ரைக்கட லோதமல் குந்திரு வான்மியூர்த்
தொண்டி ரைத்தெழுந் தேத்திய தொல்கழ லீர்சொலீர்
பண்டி ருக்கொரு நால்வர்க்கு நீருரை செய்ததே. 7

1509. தக்கில் வந்தத சக்கிரி வன்றலை பத்திறத்
திக்கில் வந்தல றவ்வடர்த் தீர்திரு வான்மியூர்த்
தொக்க மாதொடும் வீற்றிருந் தீரரு ளென்சொலீர்
பக்க மேபல பாரிடம் பேய்கள்ப யின்றதே. 8

1510. பொருது வார்கட லெண்டிசை யுந்தரு வாரியால்
திரித ரும்புகழ் செல்வமல் குந்திரு வான்மியூர்ச்
சுருதி யாரிரு வர்க்கும றிவரி யீர்சொலீர்
எருது மேல்கொடு மூன்றுகந் தில்பலி யேற்றதே. 9

1511. மைத ழைத்தெழு சோலையின் மாலைசேர் வண்டினம்
செய்த வத்தொழி லாரிசை சேர்திரு வான்மியூர்
மெய்த வப்பொடி பூசிய மேனியி னீர்சொலீர்
கைத வச்சமண் சாக்கியர் கட்டுரைக் கின்றதே. 10

1512. மாதொர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்
ஆதி யெம்பெரு மானருள் செய்யவி னாவுரை
ஓதி யன்றெழு காழியுள் ஞானசம் பந்தன்சொல்
நீதி யால்நினை வார்நெடு வானுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 5. திருஅனேகதங்காவதம் : பண் – இந்தளம்

1513. நீடல்மே வுநிமிர் புன்சடை மேலோர்நி லாமுளை
சூடல்மே வுமறை யின்முறை யாலொர்சு லாவழல்
ஆடல்மே வுமவர் மேயஅ னேகதங் காவதம்
பாடல்மே வுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 1

1514. சூலமுண் டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆலமுண் டபெரு மான்றன னேகதங் காவதம்
நீலமுண் டதடங் கண்ணுமை பாகம்நி லாயதோர்
கோல முண்டள வில்லைகு லாவிய கொள்கையே. 2

1515. செம்பினா ருமதில் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பினா லெய்தருள் வில்லிய னேகதங் காவதம்
கொம்பின் நேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்பன்நா மநவி லாதன நாவென லாகுமே. 3

1516. தந்தத்திந் தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்தவெந் தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்தமில் லவள வில்லஅ னேகதங் காவதம்
எந்தைவெந் தபொடி நீறணி வார்க்கிட மாவதே. 4

1517. பிறையுமா சில்கதி ரோனறி யாமைப்பெ யர்ந்துபோய்
உறையுங்கோ யில்பசும் பொன்னணி யாரசும் பார்புனல்
அறையுமோ சைபறை போலும னேகதங் காவதம்
இறையெம் மீசனெம் மானிட மாகவு கந்ததே. 5

1518. தேனையே றுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனையே றுமணி சாரல னேகதங் காவதம்
வானையே றுநெறி சென்றுண ருந்தனை வல்லிரேல்
ஆனையே றுமுடி யானருள் செய்வதும் வானையே. 6

1519. வெருவிவே ழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவிவீ ழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்
அருவிபா யுமணி சாரல னேகதங் காவதம்
மருவிவா ழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. 7

1520. ஈரமே துமில னாகியெ ழுந்தஇ ராவணன்
வீரமே துமில னாகவி ளைத்தவி லங்கலான்
ஆரம்பாம் பதணி வான்றன னேகதங் காவதம்
வாரமா கிநினை வார்வினை யாயின மாயுமே. 8

1521. கண்ணன்வண் ணமல ரானொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும்வண் ணமறி யாமையெ ழுந்ததோ ராரழல்
அண்ணல்நண் ணுமணி சாரல னேகதங் காவதம்
நண்ணும்வண் ணமுடை யார்வினை யாயின நாசமே. 9

1522. மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கள்தாம்
ஆப தம்மறி வீருளி ராகில னேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல்க ருமமே. 10

1523. தொல்லையூ ழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை
நல்லகேள் வித்தமிழ் ஞானசம் பந்தன்நல் லார்கள்முன்
அல்லல்தீ ரவுரை செய்தஅ னேகதங் காவதம்
சொல்லநல் லஅடை யும்மடை யாசுடு துன்பமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 6. திருவையாறு : பண் – இந்தளம்

1524. கோடல்கோங் கங்குளிர் கூவிள மாலைகு லாயசீர்
ஓடுகங் கையொளி வெண்பிறைசூடுமொ ருவனார்
பாடல்வீ ணைமுழ வங்குழல் மொந்தைபண் ணாகவே
ஆடுமா றுவல் லானுமை யாறுடை யையனே. 1

1525. தன்மையா ருமறி வாரில்லை தாம்பிற ரெள்கவே
பின்னுமுன் னுஞ்சில பேய்க்கணஞ் சூழத்தி ரிதர்வர்
துன்னவா டையுடுப் பர்சுட லைப்பொடிப் பூசுவர்
அன்னமா லுந்துறை யானுமை யாறுடை யையனே. 2

1526. கூறு பெண்ணுடை கோவண முண்பதும் வெண்டலை
மாறி லாருங்கொள் வாரில்லை மார்பில ணிகலம்
ஏறு மேறித்திரி வரிமை யோர்தொழு தேத்தவே
ஆறு நான்குஞ்சொன் னானுமை யாறுடை யையனே. 3

1527. பண்ணினல் லமொழி யார்பவ ளத்துவர் வாயினார்
எண்ணினல் லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினார்
வண்ணம்பா டிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானுமை யாறுடை யையனே. 4

1528. வேன லானைவெ ருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனார்
தேனெய் பால்தயிர் தெங்கிள நீர்கரும் பின்றெளி
ஆனஞ் சாடுமுடி யானுமை யாறுடை யையனே. 5

1529. எங்கு மாகிநின் றானுமி யல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானும திசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக்கு ணர்வுமாய்
அங்க மாறுஞ்சொன் னானுமை யாறுடை யையனே. 6

1530. ஓதியா ருமறி வாரில்லை யோதியு லகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்
வேதி யாகிவிண் ணாகிமண் ணோடெறி காற்றுமாய்
ஆதி யாகிநின் றானுமை யாறுடை யையனே, 7

1531. குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவி நீறணி வார்சில தொண்டர்வி யப்பவே
பரவி நாள்தொறும் பாடநம் பாவம்ப றைதலால்
அரவ மார்த்துகந் தானுமை யாறுடை யையனே. 8

1532. உரைசெய் தொல்வழி செய்தறி யாவிலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் தும்மதி சூடிய மைந்தனார்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானுமை யாறுடை யையனே. 9

1533. மாலுஞ் சோதிம லரானும றிகிலா வாய்மையான்
காலங் காம்புவ யிரங்கடி கையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்றுப வளந்தி ரண்டதோர்
ஆல நீழலு ளானு மையாறுடை யையனே. 10

1534. கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையால்
மெய்யைப் போர்த்துழல் வாருமு ரைப்பன மெய்யல
மைகொள் கண்டத்தெண் டோள்முக்க ணான்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானுமை யாறுடை யையனே. 11

1535. பலிதி ரிந்துழல் பண்டங்கன் மேயஐ யாற்றினைக்
கலிக டந்தகை யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்த னொண்தமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 7. திருவாஞ்சியம் : பண் – இந்தளம்

1536. வன்னி கொன்றை மதமத்த மெருக்கொடு கூவிளம்
பொன்னி யன்றச டையிற்பொலி வித்தபு ராணனார்
தென்ன வென்றுவ ரிவண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாகவு கந்ததே. 1

1537. காலகா லர்கரி கானிடை மாநட மாடுவர்
மேலர்வே லைவிட முண்டிருள் கின்றமி டற்றினர்
மாலைகோ லமதி மாடமன் னுந்திரு வாஞ்சியம்
ஞாலம்வந் துபணி யப்பொலி கோயில்ந யந்ததே. 2

1538. மேவிலொன் றர்விரி வுற்றஇ ரண்டினர் மூன்றுமாய்
நாவின்நா லருட லஞ்சின ராற ரேழோசையர்
தேவிலெட் டர்திரு வாஞ்சியம் மேவிய செல்வனார்
பாவந்தீர்ப் பர்பழி போக்குவர் தம்மடி யார்கட்கே. 3

1539. சூலமேந் திவளர் கையினர் மெய்சுவண் டாகவே
சாலநல் லபொடிப் பூசுவர் பேசுவர் மாமறை
சீலமே வுபுக ழாற்பெரு குந்திரு வாஞ்சியம்
ஆலமுண் டஅடி கள்ளிட மாகஅ மர்ந்ததே. 4

1540. கையிலங் குமறி யேந்துவர் காந்தளம் மெல்விரல்
தையல்பா கமுடை யாரடை யார்புரஞ் செற்றவர்
செய்யமே னிக்கரி யம்மிடற் றார்திரு வாஞ்சியத்
தையர்பா தமடை வார்க்கடை யாஅரு நோய்களே. 5

1541. அரவம்பூண் பரணி யுஞ்சிலம் பார்க்கஅ கந்தொறும்
இரவில்நல் லபலி பேணுவர் நாணிலர் நாமமே
பரவு வார்வினை தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்
மருவியேத் தமட மாதொடு நின்றவெம் மைந்தரே. 6

1542. விண்ணிலா னபிறை சூடுவர் தாழ்ந்துவி ளங்கவே
கண்ணி னாலநங் கன்னுட லம்பொடி யாக்கினார்
பண்ணிலா னஇசை பாடல்மல் குந்திரு வாஞ்சியத்
தண்ண லார்தம்மடி போற்றவல் லார்க்கில்லை யல்லலே. 7

1543. மாடநீ டுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்
வாடியூ டவரை யாலடர்த் தன்றருள் செய்தவர்
வேடவே டர்திரு வாஞ்சிய மேவிய வேந்தரைப்
பாடநீ டுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 8

1544. செடிகொள்நோ யின்னடை யார்திறம் பார்செறு தீவினை
கடிய கூற்றமுங் கண்டக லும்புகல் தான்வரும்
நெடியமா லொடய நேத்தநின் றார்திரு வாஞ்சியத்
தடிகள்பா தமடைந் தாரடி யாரடி யார்கட்கே. 9

1545. பிண்டமுண் டுதிரி வார்பிரி யுந்துவ ராடையார்
மிண்டர்மிண் டும்மொழி மெய்யல பொய்யிலை யெம்மிறை
வண்டுகெண் டிமரு வும்பொழில் சூழ்திரு வாஞ்சியத்
தண்டவா ணனடி கைதொழு வார்க்கில்லை யல்லலே. 10

1546. தென்றல்துன் றும்பொழில் சென்றணை யுந்திரு வாஞ்சியத்
தென்றுநின் றஇறை யானையு ணர்ந்தடி யேத்தலால்
நன்றுகா ழிமறை ஞானசம் பந்தன செந்தமிழ்
ஒன்றுமுள் ளமுடை யாரடை வாருயர் வானமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருச்சிக்கல் : பண் – இந்தளம்

1547. வானுலா வும்மதி வந்துலா வும்மதில் மாளிகை
தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞானமா கந்நினை வார்வினை யாயின நையுமே. 1

1548. மடங்கொள்வா ளைகுதி கொள்ளும் மணமலர்ப் பொய்கைசூழ்
திடங்கொள் மாமறை யோரவர் மல்கிய சிக்கலுள்
விடங்கொள்கண் டத்துவெண் ணெய்ப்பெரு மானடி மேவியே
அடைந்துவா ழும்மடி யாரவ ரல்லல றுப்பரே. 2

1549. நீலநெய் தல்நில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வள மல்கிய சிக்கலுள்
வேலொண் கண்ணியி னாளையொர் பாகன்வெண் ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம்ப றையுமே. 3

1550. கந்தமுந் தக்கைதை பூத்துக்க மழ்ந்துசே ரும்பொழிற்
செந்துவண் டின்னிசை பாடல்மல் குந்திகழ் சிக்கலுள்
வெந்தவெண் ணீற்றண்ணல் வெண்ணெய்ப்பி ரான்விரை யார்கழல்
சிந்தைசெய் வார்வினை யாயின தேய்வது திண்ணமே. 4

1551. மங்குல்தங் கும்மறை யோர்கள்மா டத்தய லேமிகு
தெங்குதுங் கப்பொழிற் செல்வமல் குந்திகழ் சிக்கலுள்
வெங்கண்வெள் ளேறுடை வெண்ணெய்ப்பி ரானடி மேவவே
தங்கு மேற்சர தந்திரு நாளுந்த கையுமே. 5

1552. வண்டிரைத் தும்மது விம்மிய மாமலர்ப் பொய்கைசூழ்
தெண்டிரைக் கொள்புனல் வந்தொழு கும்வயற் சிக்கலுள்
விண்டிரைத் தம்மல ராற்றிகழ் வெண்ணெய்ப்பி ரானடி
கண்டிரைத் தும்மன மேமதி யாய்கதி யாகவே. 6

1553. முன்னுமா டம்மதில் மூன்றுட னேயெரி யாய்விழத்
துன்னுவார் வெங்கணை யொன்றுசெ லுத்திய சோதியான்
செந்நெலா ரும்வயற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உன்னிநீ டம்மன மேநினை யாய்வினை ஓயவே. 7

1554. தெற்ற லாகிய தென்னிலங் கைக்கிறை வன்மலை
பற்றி னான்முடி பத்தொடு தோள்கள்நெ ரியவே
செற்ற தேவன்நங் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி
உற்று நீநினை யாய்வினை யாயின ஓயவே. 8

1555. மாலி னோடரு மாமறை வல்லமு னிவனும்
கோலி னார்குறு கச்சிவன் சேவடி கோலியும்
சீலந் தாமறி யார்திகழ் சிக்கல்வெண் ணெய்ப்பிரான்
பாலும் பன்மலர் தூவப்ப றையுநம் பாவமே. 9

1556. பட்டை நற்றுவ ராடையி னாரொடும் பாங்கிலாக்
கட்ட மண்கழுக் கள்சொல்லி னைக்கரு தாதுநீர்
சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழு மாமறைப்
பட்டன் சேவடி யேபணி மின்பிணி போகவே. 10

1557. கந்த மார்பொழிற் காழியுள் ஞானசம் பந்தனல்
செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடிச்
சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை
வெந்த நீறணி யும்பெரு மானடி மேவரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 9. திருமழபாடி : பண் – இந்தளம்

1558. களையும் வல்வினை யஞ்சல்நெஞ் சேகரு தார்புரம்
உளையும் பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா
வளைய வெஞ்சரம் வாங்கியெய் தான்மதுத் தும்பிவண்
டளையுங் கொன்றையந் தார்மழ பாடியு ளண்ணலே. 1

1559. காச்சி லாதபொன் னோக்குங்க னவயி ரத்திரள்
ஆச்சி லாதப ளிங்கின னஞ்சுமுன் னாடினான்
பேச்சி னாலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்
வாச்ச மாளிகை சூழ்மழ பாடியை வாழ்த்துமே. 2

1560. உரங்கெ டுப்பவ னும்பர்க ளாயவர் தங்களைப்
பரங்கெ டுப்பவன் நஞ்சையுண் டுபக லோன்றனை
முரண்கெ டுப்பவன் முப்புரந் தீயெழச் செற்றுமுன்
வரங்கொ டுப்பவன் மாமழ பாடியுள் வள்ளலே. 3

1561. பள்ள மார்சடை யிற்புடை யேயடை யப்புனல்
வெள்ள மாதரித் தான்விடை யேறிய வேதியன்
வள்ளல் மாமழ பாடியுள் மேயம ருந்தினை
உள்ள மாதரி மின்வினை யாயின ஓயவே. 4

1562. தேனு லாமலர் கொண்டுமெய்த் தேவர்கள் சித்தர்கள்
பால்நெ யஞ்சுட னாட்டமுன் னாடிய பால்வணன்
வான நாடர்கள் கைதொழு மாமழ பாடியெங்
கோனை நாள்தொறுங் கும்பிட வேகுறி கூடுமே. 5

1563. தெரிந்த வன்புர மூன்றுடன் மாட்டிய சேவகன்
பரிந்து கைதொழு வாரவர் தம்மனம் பாவினான்
வரிந்த வெஞ்சிலை யொன்றுடை யான்மழ பாடியைப்
புரிந்து கைதொழு மின்வினை யாயின போகுமே. 6

1564. சந்த வார்குழ லாளுமை தன்னொரு கூறுடை
எந்தை யானிமை யாதமுக் கண்ணின னெம்பிரான்
மைந்தன் வார்பொழில் சூழ்மழ பாடிம ருந்தினைச்
சிந்தி யாவெழு வார்வினை யாயின தேயுமே. 7

1565. இரக்க மொன்றுமி லானிறை யான்திரு மாமலை
உரக்கை யாலெடுத் தான்றன தொண்முடி பத்திற
விரற்ற லைந்நிறு வியுமை யாளொடு மேயவன்
வரத்தை யேகொடுக் கும்மழ பாடியுள் வள்ளலே. 8

1566. ஆல முண்டமு தம்மம ரர்க்கரு ளண்ணலார்
காலனாருயிர் வீட்டிய மாமணி கண்டனார்
சால நல்லடி யார்தவத் தார்களுஞ் சார்விடம்
மால யன்வணங் கும்மழ பாடியெம் மைந்தனே. 9

1567. கலியின் வல்லம ணுங்கருஞ் சாக்கியப் பேய்களும்
நலியு நாள்கெடுத் தாண்டஎன் நாதனார் வாழ்பதி
பலியும் பாட்டொடு பண்முழ வும்பல வோசையும்
மலியு மாமழ பாடியை வாழ்த்திவ ணங்குமே. 10

1568. மலியு மாளிகை சூழ்மழ பாடியுள் வள்ளலைக்
கலிசெய் மாமதில் சூழ்கடற் காழிக்க வுணியன்
* * * * * * 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 10. திருமங்கலக்குடி : பண் – இந்தளம்

1569. சீரி னார்மணி யும்மகில் சந்துஞ்செ றிவரை
வாரி நீர்வரு பொன்னிவ டமங்க லக்குடி
நீரின் மாமுனி வன்நெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டியர்ச் சிக்கவி ருந்தபு ராணனே. 1

1570. பணங்கொ ளாடர வல்குல்நல் லார்பயின் றேத்தவே
மணங்கொள் மாமயி லாலும்பொ ழில்மங்க லக்குடி
இணங்கி லாமறை யோரிமை யோர்தொழு தேத்திட
அணங்கி னோடிருந் தானடி யேசர ணாகுமே. 2

1571. கருங்கை யானையி னீருரி போர்த்திடு கள்வனார்
மருங்கெ லாமண மார்பொழில் சூழ்மங்க லக்குடி
அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு
விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. 3

1572. பறையி னோடொலி பாடலு மாடலும் பாரிடம்
மறையி னோடியல் மல்கிடு வார்மங்க லக்குடிக்
குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று
முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. 4

1573. ஆனி லங்கிள ரைந்து மவிர்முடி யாடியோர்
மானி லங்கையி னான்மண மார்மங்க லக்குடி

ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே. 5

1574. தேனு மாயமு தாகிநின் றான்தெளி சிந்தையுள்
வானு மாய்மதி சூடவல் லான்மங்க லக்குடி
கோனை நாள்தொறு மேத்திக்கு ணங்கொடு கூறுவார்
ஊன மானவை போயறு முய்யும்வ கையதே. 6

1575. வேள்ப டுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே
வாள ரக்கர்பு ரமெரித் தான்மங்க லக்குடி
ஆளு மாதிப்பி ரானடி கள்ளடைந் தேத்தவே
கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. 7

1576. பொலியு மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நாள்கொடுத் தான்மங்க லக்குடிப்
புலியி னாடையி னானடி யேத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. 8

1577. ஞால முன்படைத் தான்நளிர் மாமலர் மேலயன்
மாலுங் காணவொ ணாவெரி யான்மங்க லக்குடி
ஏல வார்குழ லாளொரு பாகமி டங்கொடு
கோல மாகிநின் றான்குணங் கூறுங் குணமதே. 9

1578. மெய்யின் மாசினர் மேனிவி ரிதுவ ராடையர்
பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங்க லக்குடிச்
செய்ய மேனிச்செ ழும்புனற் கங்கைசெ றிசடை
ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. 10

1579. மந்த மாம்பொழில் சூழ்மங்க லக்குடி மன்னிய
எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்
சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்
முந்தி யேத்தவல்லாரிமை யோர்முத லாவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 11. சீகாழி : பண் – இந்தளம்

1580. நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்
வல்லானை வல்லவர் பால்மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை யேத்தநின் றார்க்குள தின்பமே. 1

1581. நம்மான மாற்றி நமக்கரு ளாய்நின்ற
பெம்மானைப் பேயுட னாடல்பு ரிந்தானை
அம்மானை யந்தணர் சேரும ணிகாழி
எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே. 2

1582. அருந்தானை யன்புசெய் தேத்தகில் லார்பாற்
பொருந்தானைப் பொய்யடி மைத்தொழில் செய்வாருள்
விருந்தானை வேதிய ரோதிமி டைகாழி
இருந்தானை யேத்துமின் நும்வினை யேகவே. 3

1583. புற்றானைப் புற்றர வம்மரை யின்மிசைச்
சுற்றானைத் தொண்டுசெய் வாரவர் தம்மொடும்
அற்றானை யந்தணர் காழி யமர்கோயில்
பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 4

1584. நெதியானை நெஞ்சிடங் கொள்ளநி னைவார்தம்
விதியானை விண்ணவர் தாம்வியந் தேத்திய
கதியானைக் காருல வும்பொழிற் காழியாம்
பதியானைப் பாடுமின் நும்வினை பாறவே. 5

1585. செப்பான மென்முலை யாளைத் திகழ்மேனி
வைப்பானை வார்கழ லேத்தி நினைவார்தம்
ஒப்பானை யோத முலாவு கடற்காழி
மெய்ப்பானை மேவிய மாந்தர் வியந்தாரே. 6

1586. துன்பானைத் துன்ப மழித்தரு ளாக்கிய
இன்பானை யேழிசை யின்னிலை பேணுவார்
அன்பானை யணிபொழிற் காழிந கர்மேய
நம்பானை நண்ணவல் லார்வினை நாசமே. 7

1587. குன்றானைக் குன்றெடுத் தான்புய நாலைந்தும்
வென்றானை மென்மல ரானொடு மால்தேட
நின்றானை நேரிழை யாளொடுங் காழியுள்
நன்றானை நம்பெரு மானை நணுகுமே. 8

1588. சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்
மேவாத சொல்லவை கேட்டுவெ குளேன்மின்
பூவாய கொன்றையி னானைப் புனற்காழிக்
கோவாய கொள்கையி னானடி கூறுமே. 9,10

1589. கழியார்சீ ரோதமல் குங்கடற் காழியுள்
ஒழியாது கோயில்கொண் டானை யுகந்துள்கித்
தழியார்சொல் ஞானசம் பந்தன் தமிழார
மொழிவார்கள் மூவுல கும்பெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 12. திருக்கச்சியேகம்பம் : பண் – இந்தளம்

1590. மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள்கச் சித்திரு ஏகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே. 1

1591. நொச்சியே வன்னிகொன் றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்
கச்சியே கம்பமே யகறைக் கண்டனை
நச்சியே தொழுமின்நும் மேல்வினை நையுமே. 2

1592. பாராரு முழவமொந் தைகுழல் யாழொலி
சீராலே பாடலா டல்சிதை வில்லதோர்
ஏரார்பூங் கச்சியே கம்பனை யெம்மானைச்
சேராதா ரின்பமா யந்நெறி சேராரே. 3

1593. குன்றேய்க்கு நெடுவெண்மா டக்கொடி கூடிப்போய்
மின்றேய்க்கு முகில்கள்தோ யும்வியன் கச்சியுள்
மன்றேய்க்கு மல்குசீ ரான்மலி யேகம்பம்
சென்றேய்க்குஞ் சிந்தையார் மேல்வினை சேராவே. 4

1594. சடையானைத் தலைகையேந் திப்பலி தருவார்தம்
கடையேபோய் மூன்றுங்கொண் டான்கலிக் கச்சியுள்
புடையேபொன் மலருங்கம் பைக்கரை யேகம்பம்
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. 5

1595. மழுவாளோ டெழில்கொள்சூ லப்படை வல்லார்தம்
கெழுவாளோ ரிமையாருச் சியுமை யாள்கங்கை
வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பம்
தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னாவே. 6

1596. விண்ணுளார் மறைகள்வே தம்விரித் தோதுவார்
கண்ணுளார் கழலின்வெல் வார்கரி காலனை
நண்ணுவா ரெழில்கொள்கச் சிநக ரேகம்பத்
தண்ணலா ராடுகின் றஅலங் காரம்மே. 7

1597. தூயானைத் தூயவா யம்மறை யோதிய
வாயானை வாளரக் கன்வலி வாட்டிய
தீயானைத் தீதில்கச் சித்திரு வேகம்பம்
மேயானை மேவுவா ரென்தலை மேலாரே. 8

1598. நாகம்பூ ணேறதே றல்நறுங் கொன்றைதார்
பாகம்பெண் பலியுமேற் பர்மறை பாடுவர்
ஏகம்ப மேவியா டுமிறை யிருவர்க்கும்
மாகம்ப மறியும்வண் ணத்தவ னல்லனே. 9

1599. போதியார் பிண்டியா ரென்றிவர் பொய்ந்நூலை
வாதியா வம்மினம் மாவெனுங் கச்சியுள்
ஆதியார் மேவியா டுந்திரு வேகம்பம்
நீதியாற்றொழுமின்நும் மேல்வினை நில்லாவே. 10

1600. அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கலிக் கோவையால்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 13. திருக்கோழம்பம் : பண் – இந்தளம்

1601. நீற்றானை நீள்சடை மேல்நிறை வுள்ளதோர்
ஆற்றானை யழகமர் மென்முலை யாளையோர்
கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய
ஏற்றானை யேத்துமி னும்மிட ரேகவே. 1

1602. மையான கண்டனை மான்மறி யேந்திய
கையானைக் கடிகொழிற் கோழம்ப மேவிய
செய்யானை த் தேனெய்பா லுந்திகழ்ந் தாடிய
மெய்யானை மேவுவார் மேல்வினை மேவாவே. 2

1603. ஏதனை யேதமி லாவிமை யோர்தொழும்
வேதனை வெண்குழை தோடுவி ளங்கிய
காதனைக் கடிபொழிற் கோழம்ப மேவிய
நாதனை யேத்துமி னும்வினை நையவே. 3

1604. சடையானைத் தண்மல ரான்சிர மேந்திய
விடையானை வேதமும் வேள்வியு மாயநன்
குடையானைக் குளிர்பொழில் சூழ்திருக் கோழம்பம்
உடையானை யுள்குமி னுள்ளங்கு ளிரவே. 4

1605. காரானைக் கடிகமழ் கொன்றையம் போதணி
தாரானைத் தையலோர் பால்மகிழ்ந் தோங்கிய
சீரானைச் செறிபொழிற் கோழம்ப மேவிய
ஊரானை யேத்துமி னும்மிட ரொல்கவே. 5

1606. பண்டாலின் நீழலா னைப்பரஞ் சோதியை
விண்டார்கள் தம்புரம் மூன்றுட னேவேவக்
கண்டானைக் கடிகமழ் கோழம்பங் கோயிலாக்
கொண்டானைக் கூறுமி னுள்ளங் குளிரவே. 6

1607. சொல்லானைச் சுடுகணை யாற்புர மூன்றெய்த
வில்லானை வேதமும் வேள்வியு மானானைக்
கொல்லானை யுரியானைக் கோழம்ப மேவிய
நல்லானை யேத்துமி னும்மிடர் நையவே. 7

1608. விற்றானை வல்லரக் கர்விறல் வேந்தனைக்
குற்றானைத் திருவிர லாற்கொடுங் காலனைச்
செற்றானைச் சீர்திக ழுந்திருக் கோழம்பம்
பற்றானைப் பற்றுவார் மேல்வினை பற்றாவே. 8

1609. நெடியானோ டயனறி யாவகை நின்றதோர்
படியானைப் பண்டங்க வேடம்ப யின்றானைக்
கடியாருங் கோழம்ப மேவிய வெள்ளேற்றின்
கொடியானைக் கூறுமி னுள்ளங் குளிரவே. 9

1610. புத்தருந் தோகையம் பீலிகொள் பொய்ம்மொழிப்
பித்தரும் பேசுவ பேச்சல்ல பீடுடைக்
கொத்தலர் தண்பொழிற் கோழம்ப மேவிய
அத்தனை யேத்துமி னல்ல லறுக்கவே. 10

1611. தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம் பந்தன்நம் பானுறை
விண்பொழிற் கோழம்ப மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. திருவெண்ணியூர் : பண் – இந்தளம்

1612. சடையானைச் சந்திர னோடுசெங் கண்ணரா
உடையானை யுடைதலை யிற்பலி கொண்டூரும்
விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. 1

1613. சோதியைச் சுண்வெண் ணீறணிந் திட்டவெம்
ஆதியை யாதியு மந்தமு மில்லாத
வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியில்
நீதியை நினையவல் லார்வினை நில்லாவே. 2

1614. கனிதனைக் கனிந்தவ ரைக்கலந் தாட்கொள்ளும்
முனிதனை மூவுல குக்கொரு மூர்த்தியை
நனிதனை நல்லவர் தாந்தொழும் வெண்ணியில்
இனிதனை யேத்துவ ரேதமி லாதாரே. 3

1615. மூத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மானறன்னை
ஏத்தாதா ரென்செய்வா ரேழையப் பேய்களே. 4

1616. நீரானை நிறைபுனல் சூழ்தரு நீள்கொன்றைத்
தாரானைத் தையலொர் பாகமு டையானைச்
சீரானைத் திகழ்தரு வெண்ணிய மர்ந்துறை
ஊரானை யுள்கவல் லார்வினை யோயுமே. 5

1617. முத்தினை முழுவயி ரத்திரள் மாணிக்கத்
தொத்தினைத் துளக்கமி லாதவி ளக்காய
வித்தினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அத்தனை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 6

1618. காய்ந்தானைக் காமனை யுஞ்செறு காலனைப்
பாய்ந்தானைப் பரியகை மாவுரித் தோல்மெய்யில்

மேய்ந்தானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
நீந்தானை நினையவல் லார்வினை நில்லாவே. 7

1619. மறுத்தானை மாமலை யைமதி யாதோடிச்
செறுத்தானைத் தேசழி யத்திகழ் தோள்முடி
இறுத்தானை யெழிலமர் வெண்ணியெம் மானெனப்
பொறுத்தானைப் போற்றுவா ராற்றலு டையாரே. 8

1620. மண்ணினை வானவ ரோடு மனிதர்க்குங்
கண்ணினைக் கண்ணனு நான்முக னுங்காணா
விண்ணினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அண்ணலை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 9

1621. குண்டருங் குணமிலா தசமண் சாக்கிய
மிண்டர்கள் மிண்டவை கேட்டுவெ குளேன்மின்
விண்டவர் தம்புர மெய்தவன் வெண்ணியில்
தொண்டரா யேத்தவல் லார்துயர் தோன்றாவே. 10

1622. மருவாரு மல்குகா ழித்திகழ் சம்பந்தன்
திருவாருந் திகழ்தரு வெண்ணி யமர்ந்தானை
உருவாரு மொண்தமிழ் மாலையி வைவல்லார்
பொருவாகப் புக்கிருப் பார்புவ லோகத்தே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 15. திருக்காறாயில் : பண் – இந்தளம்

1623. நீரானே நீள்சடை மேலொரு நிரைகொன்றைத்
தாரானே தாமரை மேலயன் தான்தொழுஞ்
சீரானே சீர்திக ழுந்திருக் காறாயில்
ஊரானே யென்பவ ரூனமி லாதாரே. 1

1624. மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்
விதியானே விதியுடை வேதியர் தாந்தொழும்
நெதியானே நீர்வயல் சூழ்திருக் காறாயிற்
பதியானே யென்பவர் பாவமி லாதாரே. 2

1625. விண்ணானே விண்ணவ ரேத்திவி ரும்புஞ்சீர்
மண்ணானே மண்ணிடை வாழுமு யிர்க்கெல்லாம்
கண்ணானே கடிபொழில் சூழ்திருக் காறாயில்
எண்ணானே யென்பவ ரேதமி லாதாரே. 3

1626. தாயானே தந்தையு மாகிய தன்மைகள்
ஆயானே யாயநல் லன்பர்க்க ணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காறாயில்
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. 4

1627. கலையானே கலைமலி செம்பொற் கயிலாய
மலையானே மலைபவர் மும்மதில் மாய்வித்த
சிலையானே சீர்திக ழுந்திருக் காறாயில்
நிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 5

1628. ஆற்றானே யாறணி செஞ்சடை யாடர
வேற்றானே யேழுல கும்இமை யோர்களும்
போற்றானே பொழில்திக ழுந்திருக் காறாயில்
நீற்றானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 6

1629. சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்கள்
ஏத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
காத்தானே கார்வயல் சூழ்திருக் காறாயில்
ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யடராவே. 7

1630. கடுத்தானே காலனைக் காலாற் கயிலாயம்
எடுத்தானே யேதமா கம்முனி வர்க்கிடர்
கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காறாயில்
அடுத்தானே யென்பவர் மேல்வினை யடராவே. 8

1631. பிறையானே பேணிய பாடலொ டின்னிசை
மறையானே மாலொடு நான்முகன் காணாத
இறையானே யெழில்திக ழுந்திருக் காறாயில்
உறைவானே யென்பவர் மேல்வினை யோடுமே. 9

1632. செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்
படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை
கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காறாயில்
குடியாருங் கொள்கையி னார்க்கில்லை குற்றமே. 10

1633. ஏய்ந்தசீ ரெழில்திக ழுந்திருக் காறாயில்
ஆய்ந்தசீ ரானடி யேத்தி யருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 16. திருமணஞ்சேரி : பண் – இந்தளம்

1634. அயிலாரு மம்பத னாற்புர மூன்றெய்து
குயிலாரு மென்மொழி யாளொரு கூறாகி
மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 1

1635. விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய
நெதியானை நீள்சடை மேல்நிகழ் வித்தவான்
மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்
பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. 2

1636. எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையு மாள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. 3

1637. விடையானை மேலுல கேழுமிப் பாரெல்லாம்
உடையானை யூழிதோ றூழி யுளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை யடையவல் லார்க்கில்லை யல்லலே. 4

1638. எறியார்பூங் கொன்றையி னோடு மிளமத்தம்
வெறியாருஞ் செஞ்சடை யாரமி லைத்தானை
மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்
செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. 5

1639. மொழியானை முன்னொரு நான்மறை யாறங்கம்
பழியாமைப் பண்ணிசை யான பகர்வானை
வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி
இழியாமை யேத்தவல் லார்க்கெய்து மின்பமே. 6

1640. எண்ணானை யெண்ணமர் சீரிமை யோர்கட்குக்
கண்ணானைக் கண்ணொரு மூன்று முடையானை
மண்ணானை மாவயல் சூழ்ந்த மணஞ்சேரிப்
பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. 7

1641. எடுத்தானை யெழில்முடி யெட்டு மிரண்டுந்தோள்
கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை
மடுத்தார வண்டிசை பாடு மணஞ்சேரி
பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. 8

1642. சொல்லானைத் தோற்றங்கண் டானு நெடுமாலும்
கல்லானைக் கற்றன சொல்லித் தொழுதோங்க
வல்லார்நன் மாதவ ரேத்து மணஞ்சேரி
எல்லாமா மெம்பெரு மான்கழ லேத்துமே. 9

1643. சற்றேயுந் தாமறி வில்சமண் சாக்கியர்
சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை
வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே. 10

1644. கண்ணாருங் காழியர் கோன்கருத் தார்வித்த
தண்ணார்சீர் ஞானசம் பந்தன் தமிழ்மாலை
மண்ணாரு மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி
பண்ணாரப் பாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 17. திருவேணுபுரம் : பண் – இந்தளம்

1645. நிலவும் புனலுந் நிறைவா ளரவும்
இலகுஞ் சடையார்க் கிடமா மெழிலார்
உலவும் வயலுக் கொளியார் முத்தம்
விலகுங் கடலார் வேணு புரமே. 1

1646. அரவார் கரவன் னமையார் திரள்தோள்
குரவார் குழலா ளொருகூ றனிடங்
கரவா தகொடைக் கலந்தா ரவர்க்கு
விரவா கவல்லார் வேணு புரமே. 2

1647. ஆகம் மழகா யவள் தான் வெருவ
நாக முரிபோர்த் தவனண் ணுமிடம்
போகந் தருசீர் வயல்சூழ் பொழில்கள்
மேகந் தவழும் வேணு புரமே. 3

1648. காசக் கடலில் விடமுண் டகண்டத்
தீசர்க் கிடமா வதுஇன் நறவ
வாசக் கமலத் தனம்வன் நிரைகள்
வீசத் துயிலும் வேணு புரமே. 4

1649. அரையார் கலைசே ரனமென் னடையை
உரையா வுகந்தா னுறையு மிடமாம்

நிரையார் கமுகின் னிகழ்வா ளையுடை
விரையார் பொழில்சூழ் வேணு புரமே. 5

1650. ஒளிரும் பிறையும் முறுகூ விளவின்
தளிருஞ் சடைமே லுடையா னிடமாம்
நளிரும் புனலின் நலசெங் கயல்கள்
மிளிரும் வயல்சூழ் வேணு புரமே. 6,7

1651. ஏவும் படைவேந் தனிரா வணனை
ஆவென் றலற அடர்த்தா னிடமாந்
தாவும் மறிமா னொடுதண் மதியம்
மேவும் பொழில்சூழ் வேணு புரமே. 8

1652. கண்ணன் கடிமா மலரிற் றிகழும்
அண்ணல் லிருவ ரறியா விறையூர்
வண்ணச் சுதைமா ளிகைமேற் கொடிகள்
விண்ணிற் றிகழும் வேணு புரமே. 9

1653. போகம் மறியார் துவர்போர்த் துழல்வார்
ஆகம் மறியா வடியா ரிறையூர்
மூகம் மறிவார் கலைமுத் தமிழ்நூல்
மீகம் மறிவார் வேணு புரமே. 10

1654. கலமார் கடல்போல் வளமார் தருநற்
புலமார் தருவே ணுபுரத் திறையை
நலமார் தருஞா னசம்பந் தன்சொன்ன
குலமார் தமிழ்கூ றுவர்கூர் மையரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. திருமருகல் : பண் – இந்தளம்
## விடந்தீர்த்த பதிகம்

1655. சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே. 1

1656. சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா எனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவளே சறவே. 2

1657. அறையார் கழலும் மழல்வா யரவும்
பிறையார் சடையும் முடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வா யிவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே. 3

1658. ஒலிநீர் சடையிற் கரந்தா யுலகம்
பலிநீ திரிவாய் பழியில் புகழாய்
மலிநீர் மருகல் மகிழ்வா யிவளை
மெலிநீர் மையளாக் கவும்வேண் டினையே. 4

1659. துணிநீ லவண்ணம் முகில்தோன் றியன்ன
மணிநீ லகண்ட முடையாய் மருகல்
கணிநீ லவண்டார் குழலா ளிவள்தன்
அணிநீ லவொண்கண் ணயர்வாக் கினையே. 5

1660. பலரும் பரவப் படுவாய் சடைமேல்
மலரும் பிறையொன் றுடையாய் மருகல்
புலருந் தனையுந் துயிலாள் புடைபோந்
தலரும் படுமோ அடியா ளிவளே. 6

1661. வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா
எழுவாள் நினைவா ளிரவும் பகலும்
மழுவா ளுடையாய் மருகற் பெருமான்
தொழுவா ளிவளைத் துயராக் கினையே. 7

1662. இலங்கைக் கிறைவன் விலங்கல் லெடுப்பத்
துலங்கவ் விரலூன் றனுந்தோன் றலனாய்
வலங்கொள் மதில்சூழ் மருகற் பெருமான்
அலங்கல் லிவளை யலராக் கினையே. 8

1663. எரியார் சடையும் மடியும் மிருவர்
தெரியா ததொர்தீத் திரளா யவனே
மரியார் பிரியா மருகற் பெருமான்
அரியா ளிவளை யயர்வாக் கினையே. 9

1664. அறிவில் சமணும் மலர்சாக் கியரும்
நெறியல் லனசெய் தனர்நின் றுழல்வார்
மறியேந் துகையாய் மருகற் பெருமான்
நெறியார் குழலி நிறைநீக் கினையே. 10

1665. வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 19. திருநெல்லிக்கா : பண் – இந்தளம்

1666. அறத்தா லுயிர்கா வலமர்ந் தருளி
மறத்தான் மதில்மூன் றுடன்மாண் பழித்த
திறத்தாற் றெரிவெய் தியதீவெண் டிங்கள்
நிறத்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 1

1667. பதிதா னிடுகா டுபைங்கொன் றைதொங்கல்
மதிதா னதுசூ டியமைந் தனுந்தான்
விதிதான் வினைதான் விழுப்பம் பயக்கும்
நெதிதான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 2

1668. நலந்தா னவன்நான் முகன்றன் தலையைக்
கலந்தா னதுகொண் டகபா லியுந்தான்
புலந்தான் புகழா லெரிவிண் புகழும்
நிலந்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 3

1669. தலைதா னதுஏந் தியதம் மடிகள்
கலைதான் திரிகா டிடம்நா டிடமா
மலைதா னெடுத்தான் மதில்மூன் றுடைய
நிலைதான் நெல்லிக்கா வுள் நில யவனே. 4

1670. தவந்தான் கதிதான் மதிவார் சடைமேல்
உவந்தான் சுறவேந் தனுரு வழியச்
சிவந்தான் செயச்செய் துசெறுத் துலகில்
நிவந்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 5

1671. வெறியார் மலர்கொன் றையந்தார் விரும்பி
மறியார் மலைமங் கைமகிழ்ந் தவன்றான்
குறியாற் குறிகொண் டவர்போய்க் குறுகும்
நெறியான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 6

1672. பிறைதான் சடைசேர்த் தியஎந் தைபெம்மான்
இறைதா னிறவாக் கயிலை மலையான்
மறைதான் புனலொண் மதிமல் குசென்னி
நிறைதான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 7

1673. மறைத்தான் பிணிமா தொருபா கந்தன்னை
மிறைத்தான் வரையா லரக்கன் மிகையைக்
குறைத்தான் சடைமேற் குளிர்கோல் வளையை
நிறைத்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 8

1674. தழல்தா மரையான் வையந்தா யவனும்
கழல்தான் முடிகா ணியநா ணொளிரும்
அழல்தா னடியார்க் கருளாய்ப் பயக்கும்
நிழல்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 9

1675. கனத்தார் திரைமாண் டழற்கான் றநஞ்சை
எனத்தா வெனவாங் கியதுண் டகண்டன்
மனத்தாற் சமண்சாக் கியர்மாண் பழிய
நினைத்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 10

1676. புகரே துமிலா தபுத்தே ளுலகில்
நிகரா நெல்லிக்கா வுள்நிலா யவனை
நகரா நலஞா னசம்பந் தன்சொன்ன
பகர்வா ரவர்பா வமிலா தவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 20. திருஅழுந்தூர் : பண் – இந்தளம்

1677. தொழுமா றுவல்லார் துயர்தீ ரநினைந்
தெழுமா றுவல்லா ரிசைபா டவிம்மி
அழுமா றுவல்லா ரழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடமன் னினையே. 1

1678. கடலே றியநஞ் சமுதுண் டவனே
உடலே யுயிரே யுணர்வே யெழிலே
அடலே றுடையா யழுந்தை மறையோர்
விடலே தொழமா மடமே வினையே. 2

1679. கழிகா டலனே கனலா டலினாய்
பழிபா டிலனே யவையே பயிலும்
அழிபா டிலரா யழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடமன் னினையே. 3

1680. வானே மலையே யெனமன் னுயிரே
தானே தொழுவார் தொழுதாள் மணியே
ஆனே சிவனே யழுந்தை யவரெம்
மானே யெனமா மடமன் னினையே. 4

1681. அலையார் புனல்சூ ழழுந்தைப் பெருமான்
நிலையார் மறியுந் நிறைவெண் மழுவும்
இலையார் படையும் மிவையேந் துசெல்வ
நிலையா வதுகொள் கெனநீ நினையே. 5

1682. நறவார் தலையின் நயவா வுலகில்
பிறவா தவனே பிணியில் லவனே
அறையார் கழலா யழுந்தை மறையோர்
மறவா தெழமா மடமன் னினையே. 6

1683. தடுமாறு வல்லாய் தலைவா மதியம்
சுடுமா றுவல்லாய் சுடரார் சடையில்
அடுமா றுவல்லா யழுந்தை மறையோர்
நெடுமா நகர்கை தொழநின் றனையே. 7

1684. பெரியாய் சிறியாய் பிறையாய் மிடறும்
கரியாய் கரிகா டுயர்வீ டுடையாய்
அரியா யெளியா யழுந்தை மறையோர்
வெரியார் தொழமா மடமே வினையே. 8

1685. மணிநீள் முடியான் மலையை யரக்கன்
தணியா தெடுத்தா னுடலந் நெரித்த
அணியார் விரலா யழுந்தை மறையோர்
பணிமா மடமன் னியிருந் தனையே. 9

1686. முடியார் சடையாய் முனநா ளிருவர்
நெடியான் மலரான் நிகழ்வா லிவர்கள்
அடிமே லறியா ரழுந்தை மறையோர்
படியார் றொழமா மடம்பற் றினையே. 10

1687. அருஞா னம்வல்லா ரமுந்தை மறையோர்
பெருஞா னமுடைப் பெருமா னவனைத்
திருஞா னசம்பந் தனசெந் தமிழ்கள்
உருஞா னமுண்டா முணர்ந்தார் தமக்கே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 21. திருக்கழிப்பாலை : பண் – இந்தளம்

1688. புனலா டியபுன் சடையா யரணம்
அனலா கவிழித் தவனே யழகார்
கனலா டலினாய் கழிப்பா லையுளாய்
உனவார் கழல்கை தொழுதுள் குதுமே. 1

1689. துணையா கவொர்தூ வளமா தினையும்
இணையா கவுகந் தவனே யிறைவா
கணையா லெயிலெய் கழிப்பா லையுளாய்
இணையார் கழலேத் தஇடர் கெடுமே. 2

1690. நெடியாய் குறியாய் நிமிர்புன் சடையின்
முடியாய் சுடுவெண் பொடிமுற் றணிவாய்
கடியார் பொழில்சூழ் கழிப்பா லையுளாய்
அடியார் கடையா அவலம் மவையே. 3

1691. எளியா யரியாய் நிலநீ ரொடுதீ
வளிகா யமென வெளிமன் னியதூ
ஒளியா யுனையே தொழுதுன் னுமவர்க்
களியாய் கழிப்பா லையமர்ந் தவனே. 4

1692. நடம்நண் ணியொர்நா கமசைத் தவனே
விடநண் ணியதூ மிடறா விகிர்தா
கடல்நண் ணுகழிப் பதிகா வலனே
உடன்நண் ணிவணங் குவனுன் னடியே. 5

1693. பிறையார் சடையாய் பெரியாய் பெரியம்
மறையார் தருவாய் மையினா யுலகிற்
கறையார் பொழிசூழ் கழிப்பா லையுளாய்
இறையார் கழலேத் தஇடர் கெடுமே. 6

1694. முதிருஞ் சடையின் முடிமேல் விளங்குங்
கதிர்வெண் பிறையாய் கழிப்பா லையுளாய்
எதிர்கொள் மொழியா லிரந்தேத் துமவர்க்
கதிரும் வினையா யினஆ சறுமே. 7

1695. எரியார் கணையா லெயிலெய் தவனே.
விரியார் தருவீழ் சடையா யிரவிற்
கரிகா டலினாய் கழிப்பா லையுளாய்
உரிதா கிவணங் குவனுன் னடியே. 8

1696. நலநா ரணன்நான் முகன்நண் ணலுறக்
கனலா னவனே கழிப்பா லையுளாய்
உனவார் கழலே தொழுதுன் னுமவர்க்
கிலதாம் வினைதா னெயிலெய் தவனே. 9

1697. தவர்கொண் டதொழிற் சமணவே டரொடுந்
துவர்கொண் டனநுண் துகிலா டையாரும்
அவர்கொண் டனவிட் டடிக ளுறையும்
உவர்கொண் டகழிப் பதியுள் குதுமே. 10

1698. கழியார் பதிகா வலனைப் புகலிப்
பழியா மறைஞா னசம்பந் தனசொல்
வழிபா டிவைகொண் டடிவாழ்த் தவல்லார்
கெழியா ரிமையோ ரொடுகே டிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. திருக்குடவாயில் : பண் – இந்தளம்

1699. திகழுந் திருமா லொடுநான் முகனும்
புகழும் பெருமா னடியார் புகல
மகிழும் பெருமான் குடவா யில்மன்னி
நிகழும் பெருங்கோ யில்நிலா யவனே. 1

1700. ஓடுந் நதியும் மதியோ டுரகம்
சூடுஞ் சடையன் விடைதொல் கொடிமேல்
கூடுங் குழகன் குடவா யில்தனில்
நீடும் பெருங்கோ யில்நிலா யவனே. 2

1701. கலையான் மறையான் கனலேந் துகையான்
மலையா ளவள்பா கமகிழ்ந் தபிரான்
கொலையார் சிலையான் குடவா யில்தனில்
நிலையார் பெருங்கோ யில்நிலா யவனே. 3

1702. சுலவுஞ் சடையான் சுடுகா டிடமா
நலமென் முலையாள் நகைசெய் யநடம்
குலவுங் குழகன் குடவா யில்தனில்
நிலவும் பெருங்கோ யில்நிலா யவனே. 4

1703. என்றன் னுளமே வியிருந் தபிரான்
கன்றன் மணிபோல் மிடறன் கயிலைக்
குன்றன் குழகன் குடவா யில்தனில்
நின்ற பெருங்கோ யில்நிலா யவனே. 5

1704. அலைசேர் புனலன் னனலன் னமலன்
தலைசேர் பலியன் சதுரன் விதிரும்
கொலைசேர் படையன் குடவா யில்தனில்
நிலைசேர் பெருங்கோ யில்நிலா யவனே. 6

1705. அறையார் கழலன் னழலன் னியலின்
பறையாழ் முழவும் மறைபா டநடம்
குறையா வழகன் குடவா யில்தனில்
நிறையார் பெருங்கோ யில்நிலா யவனே. 7

1706. வரையார் திரள்தோ ளரக்கன் மடியவ்
வரையா ரவொர்கால் விரல்வைத் தபிரான்
வரையார் மதில்சூழ் குடவா யில்மன்னும்
வரையார் பெருங்கோ யில்மகிழ்ந் தவனே. 8

1707. பொன்னொப் பவனும் புயலொப் பவனும்
தன்னொப் பறியாத் தழலாய் நிமிர்ந்தான்
கொன்னற் படையான் குடவா யில்தனில்
மன்னும் பெருங்கோ யில்மகிழ்ந் தவனே. 9

1708. வெயிலின் நிலையார் விரிபோர் வையினார்
பயிலும் முரையே பகர்பா விகள்பால்
குயிலன் குழகன் குடவா யில்தனில்
உயரும் பெருங்கோ யிலுயர்ந் தவனே. 10

1709. கடுவாய் மலிநீர் குடவா யில்தனில்
நெடுமா பெருங்கோ யில்நிலா யவனைத்
தடமார் புகலித் தமிழார் விரகன்
வடமார் தமிழ்வல் லவர்நல் லவரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 23. திருவானைக்கா : பண் – இந்தளம்

1710. மழையார் மிடறா மழுவா ளுடையாய்
உழையார் கரவா உமையாள் கணவா
விழவா ரும்வெண்நா வலின்மே வியஎம்
அழகா எனுமா யிழையா ளவளே. 1

1711. கொலையார் கரியின் னுரிமூ டியனே
மலையார் சிலையா வளைவித் தவனே
விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்
நிலையா அருளா யெனுநே ரிழையே. 2

1712. காலா லுயிர்கா லனைவீ டுசெய்தாய்
பாலோ டுநெய்யா டியபா வணனே
வேலா டுகையா யெம்வெண்நா வலுளாய்
ஆலார் நிழலா யெனுமா யிழையே. 3

1713. சுறவக் கொடிகொண் டவனீ றதுவாய்
உறநெற் றிவிழித் தவெமுத் தமனே
விறல்மிக் ககரிக் கருள்செய் தவனே
அறமிக் கதுவென் னுமெனா யிழையே. 4

1714. செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெண்நா வலுளாய்
அங்கத் தயர்வா யினளா யிழையே. 5

1715. குன்றே யமர்வாய் கொலையார் புலியின்
தன்தோ லுடையாய் சடையாய் பிறையாய்
வென்றாய் புரமூன் றைவெண்நா வலுளே
நின்றா யருளா யெனுநே ரிழையே. 6,7

1716. மலையன் றெடுத்த அரக்கன் முடிதோள்
தொலையவ் விரலூன் றியதூ மழுவா
விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்
அலசா மனல்கா யெனுமா யிழையே. 8

1717. திருவார் தருநா ரணன்நான் முகனும்
மருவா வெருவா அழலாய் நிமிர்ந்தாய்
விரையா ரும்வெண்நா வலுள்மே வியஎம்
அரவா எனுமா யிழையா ளவளே. 9

1718. புத்தர் பலரோ டமண்பொய்த் தவர்கள்
ஒத்தவ் வுரைசொல் லிவையோ ரகிலார்
மெய்த்தே வர்வணங் கும்வெண்நா வலுளாய்
அத்தா அருளா யெனுமா யிழையே. 10

1719. வெண்நா வலமர்ந் துறைவே தியனைக்
கண்ணார் கமழ்கா ழியர்தந் தலைவன்
பண்ணோ டிவைபா டியபத் தும்வல்லார்
விண்ணோ ரவரேத் தவிரும் புவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. திருநாகேச்சரம் : பண் – இந்தளம்

1720. பொன்நேர் தருமே னியனே புரியும்
மின்நேர் சடையாய் விரைகா விரியின்
நன்னீர் வயல்நா கேச்சர நகரின்
மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே. 1

1721. சிறவார் புரமூன் றெரியச் சிலையில்
உறவார் கணையுய்த் தவனே யுயரும்
நறவார் பொழில்நா கேச்சர நகருள்
அறவா எனவல் வினையா சறுமே. 2

1722. கல்லால் நிழல்மே யவனே கரும்பின்
வில்லா னெழில்வே வவிழித் தவனே
நல்லார் தொழுநா கேச்சர நகரில்
செல்வா வென்வல் வினைதேய்ந் தறுமே. 3

1723. நகுவான் மதியோ டரவும் புனலும்
தகுவார் சடையின் முடியாய் தளவம்
நகுவார் பொழில்நா கேச்சர நகருள்
பகவா எனவல் வினைபற் றறுமே. 4

1724. கலைமான் மறியுங் கனலும் மழுவும்
நிலையா கியகை யினனே நிகழும்
நலமா கியநா கேச்சர நகருள்
தலைவா எனவல் வினைதா னறுமே. 5

1725. குரையார் கழலா டநடங் குலவி
வரையான் மகள்கா ணமகிழ்ந் தவனே
நரையார் விடையே றுநாகேச் சரத்தெம்
அரைசே யெனநீங் குமருந் துயரே. 6

1726. முடையார் தருவெண் டலைகொண் டுலகில்
கடையார் பலிகொண் டுழல்கா ரணனே
நடையார் தருநா கேச்சர நகருள்
சடையா எனவல் வினைதா னறுமே. 7

1727. ஓயா தஅரக் கனொடிந் தலற
நீயா ரருள்செய் துநிகழ்ந் தவனே
வாயா ரவழுத் துவர்நா கேச்சரத்
தாயே யெனவல் வினைதா னறுமே. 8

1728. நெடியா னொடுநான் முகன்நே டலுருச்
சுடுமா லெரியாய் நிமிர்சோ தியனே
நடுமா வயல்நா கேச்சர நகரே
இடமா வுறைவா யெனஇன் புறுமே. 9

1729. மலம்பா வியகை யொடுமண் டையதுண்
கலம்பா வியர்கட் டுரைவிட் டுலகில்
நலம்பா வியநா கேச்சர நகருள்
சிலம்பா எனத்தீ வினைதேய்ந் தறுமே. 10

1730. கலமார் கடல்சூழ் தருகா ழியர்கோன்
தலமார் தருசெந் தமிழின் விரகன்
நலமார் தருநா கேச்சரத் தரனைச்
சொலமா லைகள்சொல் லநிலா வினையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 25. திருப்புகலி : பண் – இந்தளம்

1731. உகலி யாழ்கட லோங்கு பாருளீர்
அகலி யாவினை யல்லல் போயறும்
இகலி யார்புர மெய்த வன்னுறை
புகலி யாநகர் போற்றி வாழ்மினே. 1

1732. பண்ணி யாள்வதோ ரேற்றர் பால்மதிக்
கண்ணி யார்கமழ் கொன்றை சேர்முடிப்
புண்ணி யன்னுறை யும்பு கலியை
நண்ணு மின்நல மான வேண்டிலே. 2

1733. வீசு மின்புரை காதன் மேதகு
பாச வல்வினை தீர்த்த பண்பினன்
பூசு நீற்றினன் பூம்பு கலியைப்
பேசு மின்பெரி தின்ப மாகவே. 3

1734. கடிகொள் கூவிள மத்தம் வைத்தவன்
படிகொள் பாரிடம் பேசும் பான்மையன்
பொடிகொள் மேனியன் பூம்பு கலியுள்
அடிக ளையடைந் தன்பு செய்யுமே. 4

1735. பாதத் தாரொலி பல்சி லம்பினன்
ஓதத் தார்விட முண்ட வன்படைப்
பூதத் தான்புக லிந்ந கர்தொழ
ஏதத் தார்க்கிட மில்லை யென்பரே. 5

1736. மறையி னானொலி மல்கு வீணையன்
நிறையி னார்நிமிர் புன்ச டையனெம்
பொறையி னானுறை யும்பு கலியை
நிறை யினாற்றொழ நேச மாகுமே. 6

1737. கரவி டைமனத் தாரைக் காண்கிலான்
இரவி டைப்பலி கொள்ளு மெம்மிறை
பொருவி டையுயர்த் தான்பு கலியைப்
பரவி டப்பயில் பாவம் பாறுமே. 7

1738. அருப்பி னார்முலை மங்கை பங்கினன்
விருப்பி னானரக் கன்னு ரஞ்செகும்
பொருப்பி னான்பொழி லார்பு கலியூர்
இருப்பி னானடி யேத்தி வாழ்த்துமே. 8

1739. மாலு நான்முகன் றானும் வார்கழற்
சீல மும்முடி தேட நீண்டெரி
போலு மேனியன் பூம்பு கலியுள்
பால தாடிய பண்ப னல்லனே. 9

1740. நின்று துய்ப்பவர் நீசர் தேரர்சொல்
ஒன்ற தாகவை யாவு ணர்வினுள்
நின்ற வன்நிக ழும்பு கலியைச்
சென்று கைதொழச் செல்வ மாகுமே. 10

1741. புல்ல மேறிதன் பூம்பு கலியை
நல்ல ஞானசம் பந்தன் நாவினாற்
சொல்லு மாலையீ ரைந்தும் வல்லவர்க்
கில்லை யாம்வினை யிருநி லத்துளே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 26. திருநெல்வாயில் : பண் – இந்தளம்

1742. புடையி னார்புள்ளி கால்பொ ருந்திய
மடையி னார்மணி நீர்நெல் வாயிலார்
நடையி னால்விரற் கோவ ணந்நயந்
துடையி னாரெம துச்சி யாரே. 1

1743. வாங்கி னார்மதில் மேற்க ணைவெள்ளந்
தாங்கி னார்தலை யாய தன்மையர்
நீங்கு நீரநெல் வாயி லார்தொழ
ஓங்கி னாரெம துச்சி யாரே. 2

1744. நிச்ச லேத்துநெல் வாயி லார்தொழ
இச்சை யாலுறை வாரெம் மீசனார்
கச்சை யாவதோர் பாம்பி னார்கவின்
இச்சை யாரெம துச்சி யாரே. 3

1745. மறையி னார்மழு வாளி னார்மல்கு
பிறையி னார்பிறை யோடி லங்கிய
நிறையி னாரநெல் வாயி லார்தொழும்
இறைவ னாரெம துச்சி யாரே. 4

1746. விருத்த னாகிவெண் ணீறு பூசிய
கருத்த னார்கன லாட்டு கந்தவர்
நிருத்த னாரநெல் வாயில் மேவிய
ஒருத்த னாரெம துச்சி யாரே. 5

1747. காரி னார்கொன்றைக் கண்ணி யார்மல்கு
பேரி னார்பிறை யோடி லங்கிய
நீரி னாரநெல் வாயி லார்தொழும்
ஏரி னாரெம துச்சி யாரே. 6

1748. ஆதி யாரந்த மாயி னார்வினை
கோதி யார்மதில் கூட்ட ழித்தவர்
நீதி யாரநெல் வாயி லார்மறை
ஓதி யாரெம துச்சி யாரே. 7

1749. பற்றி னானரக் கன்க யிலையை
ஒற்றி னாரொரு கால்வி ரலுற
நெற்றி யாரநெல் வாயி லார்தொழும்
பெற்றி யாரெம துச்சி யாரே. 8

1750. நாடி னார்மணி வண்ணன் நான்முகன்
கூடி னார்குறு காத கொள்கையர்
நீடி னாரநெல் வாயி லார்தலை
ஓடி னாரெம துச்சி யாரே. 9

1751. குண்ட மண்துவர்க் கூறை மூடர்சொல்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயி லார்நஞ்சை
உண்ட கண்டரெம் முச்சி யாரே. 10

1752. நெண்ப யங்குநெல் வாயி லீசனைச்
சண்பை ஞானசம் பந்தன் சொல்லிவை
பண்ப யன்கொளப் பாட வல்லவர்
விண்ப யன்கொளும் வேட்கை யாளரே. 11

திருச்சிற்றம்பலம்

♦♦♦♦♦

## 27. திருஇந்திரநீலப்பருப்பதம் : பண் – இந்தளம்

1753. குலவு பாரிடம் போற்ற வீற்றிருந்
திலகு மான்மழு வேந்து மங்கையன்
நிலவு மிந்திர நீலப் பர்ப்பதத்
துலவி னானடி யுள்க நல்குமே. 1

1754. குறைவி லார்மதி சூடி யாடல்வண்
டறையு மாமலர்க் கொன்றை சென்னிசேர்
இறைவ னிந்திர நீலப் பர்ப்பதத்
துறைவி னான்றனை யோதி யுய்ம்மினே. 2

1755. என்பொ னென்மணி யென்ன ஏத்துவார்
நம்ப னான்மறை பாடு நாவினான்
இன்ப னிந்திர நீலப் பர்ப்பதத்
தன்பன் பாதமே யடைந்து வாழ்மினே. 3

1756. நாச மாம்வினை நன்மை தான்வரும்
தேச மார்புக ழாய செம்மையெம்
ஈச னிந்திர நீலப் பர்ப்பதம்
கூசி வாழ்த்துதுங் குணம தாகவே. 4

1757. மருவு மான்மட மாதொர் பாகமாய்ப்
பரவு வார்வினை தீர்த்த பண்பினான்
இரவ னிந்திர நீலப் பர்ப்பதத்
தருவி சூடிடு மடிகள் வண்ணமே. 5

1758. வெண்ணி லாமதி சூடும் வேணியன்
எண்ணி லார்மதி லெய்த வில்லினன்
அண்ண லிந்திர நீலப் பர்ப்பதத்
துண்ணி லாவுறு மொருவன் நல்லனே. 6

1759. கொடிகொ ளேற்றினர் கூற்று தைத்தவர்
பொடிகொள் மேனியிற் பூண்ட பாம்பினர்
அடிக ளிந்திர நீலப் பர்ப்பதம்
உடைய வாண ருகந்த கொள்கையே. 7

1760. எடுத்த வல்லரக் கன்க ரம்புயம்
அடர்த்த தோர்விர லான வனையாட்
படுத்த னிந்திர நீலப் பர்ப்பதம்
முடித்த லம்முறை முயலு மின்பமே. 8

1761. பூவி னானொடு மாலும் போற்றுறும்
தேவ னிந்திர நீலப் பர்ப்பதம்
பாவி யாதெழு வாரைத் தம்வினை
கோவி யாவருங் கொல்லுங் கூற்றமே. 9

1762. கட்டர் குண்டமண் தேரர் சீரிலர்
விட்ட ரிந்திர நீலப் பர்ப்பதம்
எட்ட னைநினை யாத தென்கொலோ
சிட்ட தாயுறை யாதி சீர்களே. 10

1763. கந்த மார்பொழில் சூழ்ந்த காழியான்
இந்தி ரன்தொழு நீலப் பர்ப்பதத்
தந்த மில்லியை யேத்து ஞானசம்
பந்தன் பாடல்கொண் டோதி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருக்கருவூரானிலை : பண் – இந்தளம்

1764. தொண்டெ லாமலர் தூவி யேத்தநஞ்
சுண்ட லாருயி ராய தன்மையர்
கண்ட னார்கரு வூரு ளானிலை
அண்ட னாரரு ளீயு மன்பரே. 1

1765. நீதி யார்நினைந் தாய நான்மறை
ஓதி யாரொடுங் கூடி லார்குழைக்
காதி னார்கரு வூரு ளானிலை
ஆதி யாரடி யார்த மன்பரே. 2

1766. விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை
அண்ண லாரடி யார்க்கு நல்லரே. 3

1767. முடியர் மும்மத யானை யீருரி
பொடியர் பூங்கணை வேளைச் செற்றவர்
கடியு ளார்கரு வூரு ளானிலை
அடிகள் யாவையு மாய ஈசரே. 4

1768. பங்க யம்மலர்ப் பாதர் பாதியோார்
மங்கை யர்மணி நீல கண்டர்வான்
கங்கை யர்கரு வூரு ளானிலை
அங்கை யாடர வத்தெம் மண்ணலே. 5

1769. தேவர் திங்களும் பாம்புஞ் சென்னியில்
மேவர் மும்மதி லெய்த வில்லியர்
காவ லர்கரு வூரு ளானிலை
மூவ ராகிய மொய்ம்ப ரல்லரே. 6

1770. பண்ணி னார்படி யேற்றர் நீற்றர்மெய்ப்
பெண்ணி னார்பிறை தாங்கு நெற்றியர்
கண்ணி னார்கரு வூரு ளானிலை
நண்ணி னார்நமை யாளு நாதரே. 7

1771. கடுத்த வாளரக் கன்க யிலையை
எடுத்த வன்தலை தோளுந் தாளினால்
அடர்த்த வன்கரு வூரு ளானிலை
கொடுத்த வன்னருள் கூத்த னல்லனே. 8

1772. உழுது மாநிலத் தேன மாகிமால்
தொழுது மாமல ரோனுங் காண்கிலார்
கழுதி னான்கரு வூரு ளானிலை
முழுது மாகிய மூர்த்தி பாதமே. 9

1773. புத்தர் புன்சம ணாதர் பொய்யுரைப்
பித்தர் பேசிய பேச்சை விட்டுமெய்ப்
பத்தர் சேர்கரு வூரு ளானிலை
அத்தர் பாதம டைந்து வாழ்மினே. 10

1774. கந்த மார்பொழில் காழி ஞானசம்
பந்தன் சேர்கரு வூரு ளானிலை
எந்தை யைச்சொன்ன பத்தும் வல்லவர்
சிந்தை யிற்றுய ராய தீர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 29. திருப்புகலி : திருவிராகம். பண் – இந்தளம்

1775. முன்னிய கலைப்பொருளும் மூவுலகில் வாழ்வும்
பன்னிய வொருத்தர்பழ வூர்வினவின் ஞாலந்
துன்னியிமை யோர்கள்துதி செய்துமுன் வணங்குஞ்
சென்னியர் விருப்புறு திருப்புகலி யாமே. 1

1776. வண்டிரை மதிச்சடை மிலைத்தபுனல் சூடிப்
பண்டெரிகை யாடுபர மன்பதிய தென்பர்
புண்டரிக வாசமது வீசமலர் சோலைத்
தெண்டிரை கடற்பொலி திருப்புகலி யாமே. 2

1777. பாவணவு சிந்தையவர் பத்தரொடு கூடி
நாவணவு மந்தணன் விருப்பிடம தென்பர்
பூவணவு சோலையிருள் மாலையெதிர் கூரத்
தேவண விழாவளர் திருப்புகலி யாமே. 3

1778. மைதவழு மாமிடறன் மாநடம தாடி
கைவளையி னாளொடு கலந்தபதி யென்பர்
செய்பணி பெருத்தெழு முருத்திரர்கள் கூடித்
தெய்வம திணக்குறு திருப்புகலி யாமே. 4

1779. முன்னமிரு மூன்றுசம யங்களவை யாகிப்
பின்னையருள் செய்தபிறை யாளனுறை கோயில்
புன்னைய மலர்ப்பொழில் களக்கினொளி காட்டச்
செந்நெல்வய லார்தரு திருப்புகலி யாமே. 5

1780. வங்கமலி யுங்கடல் விடத்தினை நுகர்ந்த
அங்கண னருத்திசெய் திருக்குமிட மென்பர்
கொங்கண வியன்பொழிலின் மாசுபனி மூசத்
தெங்கணவு தேன்மலி திருப்புகலி யாமே. 6

1781. நல்குரவு மின்பமு நலங்களவை யாகி
வல்வினைகள் தீர்த்தருளு மைந்தனிட மென்பர்
மல்குமடி யார்கள்படி யாரஇசை பாடிச்
செல்வமறை யோருறை திருப்புகலி யாமே. 7

1782. பரப்புறு புகழ்ப்பெருமை யாளன்வரை தன்னால்
அரக்கனை யடர்த்தருளு மண்ணலிட மென்பர்
நெருக்குறு கடற்றிரைகள் முத்தமணி சிந்தச்
செருக்குறு பொழிற்பொலி திருப்புகலி யாமே. 8

1783. கோடலொடு கூன்மதி குலாயசடை தன்மேல்
ஆடரவம் வைத்தருளு மப்பனிரு வர்க்கும்
நேடஎரி யாகியிரு பாலுமடி பேணித்
தேடவுறை யுந்நகர் திருப்புகலி யாமே. 9

1784. கற்றமண ருற்றுலவு தேரருரை செய்த
குற்றமொழி கொள்கையதி லாதபெரு மானூர்
பொற்றொடி மடந்தையரு மைந்தர்புல னைந்துஞ்
செற்றவர் விருப்புறு திருப்புகலி யாமே. 10

1785. செந்தமிழ் பரப்புறு திருப்புகலி தன்மேல்
அந்தமுத லாகிநடு வாயபெரு மானைப்
பந்தனுரை செந்தமிழ்கள் பத்துமிசை கூர
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 30. திருப்புறம்பயம் : திருவிராகம். பண் – இந்தளம்

1786. மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்பய னுறும்பொருள் தெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பய மமர்ந்தோய். 1

1787. விரித்தனை திருச்சடை யரித்தொழுகு வெள்ளம்
தரித்தனை யதன்றியும் மிகப்பெரிய காலன்
எருத்திற வுதைத்தனை யிலங்கிழையொர் பாகம்
பொருத்துதல் கருத்தினை புறம்பய மமர்ந்தோய். 2

1788. விரிந்தனை குவிந்தனை விழுங்குயி ருமிழ்ந்தனை
திரிந்தனை குருந்தொசி பெருந்தகையு நீயும்
பிரிந்தனை புணர்ந்தனை பிணம்புகு மயானம்
புரிந்தனை மகிழ்ந்தனை புறம்பய மமர்ந்தோய். 3

1789. வளங்கெழு கடும்புன லொடுஞ்சடை யொடுங்கத்
துளங்கம ரிளம்பிறை சுமந்தது விளங்க
உளங்கொள வளைந்தவர் சுடுஞ்சுடலை நீறு
புளங்கொள விளங்கினை புறம்பய மமர்ந்தோய். 4

1790. பெரும்பிணி பிறப்பினொ டிறப்பிலையொர் பாகம்
கரும்பொடு படுஞ்சொலின் மடந்தையை மகிழ்ந்தோய்
சுரும்புண அரும்பவிழ் திருந்தியெழு கொன்றை
விரும்பினை புறம்பய மமர்ந்தஇறை யோனே. 5

1791. அன்றபடு தடைக்கையவ ரெத்தொழில ரேனும்
நினைப்புடை மனத்தவர் வினைப்பகையு நீயே
தனற்படு சுடர்ச்சடை தனிப்பிறையொ டொன்றப்
புனற்படு கிடைக்கையை புறம்பய மமர்ந்தோய். 6

1792. மறத்துறை மறுத்தவர் தவத்தடிய ருள்ளம்
அறத்துறை யொறுத்துன தருட்கிழமை பெற்றோர்
திறத்துள திறத்தினை மதித்தகல நின்றும்
புறத்துள திறத்தினை புறம்பய மமர்ந்தோய். 7

1793. இலங்கைய ரிறைஞ்சிறை விலங்கலின் முழங்க
உலங்கெழு தடக்கைக ளடர்த்திடலு மஞ்சி
வலங்கொள எழுந்தவன் நலங்கவின அஞ்சு
புலங்களை விலங்கினை புறம்பய மமர்ந்தோய். 8

1974. வடங்கெட நுஉங்குண இடந்தவிடை யல்விக்
கிடந்தவ னிருந்தவ னளந்துணர லாகார்
தொடர்ந்தவ ருடம்பொடு நிமிர்ந்துடன் வணங்கப்
புடங்கருள்செய் தொன்றினை புறம்பய மமர்ந்தோய். 9

1795. விடக்கொருவர் நன்றென விடக்கொருவர் தீதென
உடற்குடை களைந்தவ ருடம்பினை மறைக்கும்
படக்கர்கள் பிடக்குரை படுத்துமையொர் பாகம்
அடக்கினை புறம்பய மமர்ந்தவுர வோனே. 10

1796. கருங்கழி பொருந்திரை கரைக்குலவு முத்தம்
தருங்கழு மலத்திறை தமிழ்க்கிழமை ஞானன்
சுரும்பவிழ் புறம்பய மமர்ந்ததமிழ் வல்லார்
பெரும்பிணி மருங்கற ஒருங்குவர் பிறப்பே. 11.

திருச்சிற்றம்பலம்

••••

## 31. திருக்கருப்பறியலூர் : திருவிராகம். பண் – இந்தளம்

1797. சுற்றமொடு பற்றவை துயக்கற அறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடுமடி யார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலக மேற்றக்
கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே. 1

1798. வண்டணைசெய் கொன்றையது வார்சடைகள் மேலே
கொண்டணைசெய் கோலமது கோளரவி னோடும்
விண்டணைசெய் மும்மதிலும் வீழ்தரவொ ரம்பால்
கண்டவ னிருப்பது கருப்பறிய லூரே. 2

1799. வேதமொடு வேதியர்கள் வேள்விமுத லாகப்
போதினொடு போதுமலர் கொண்டுபுனை கின்ற
நாதனென நள்ளிருண்மு னாடுகுழை தாழும்
காதவ னிருப்பது கருப்பறிய லூரே. 3

1800. மடம்படு மலைக்கிறைவன் மங்கையொரு பங்கன்
உடம்பினை விடக்கருதி நின்றமறை யோனைத்
தொடர்ந்தணவு காலனுயிர் காலவொரு காலால்
கடந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 4

1801. ஒருத்தியுமை யோடுமொரு பாகமது வாய
நிருத்தனவன் நீதியவன் நித்தன்நெறி யாய
விருத்தனவன் வேதமென அங்கமவை யோதும்
கருத்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 5

1802. விண்ணவர்கள் வெற்பரசு பெற்றமகள் மெய்த்தேன்
பண்ணமரு மென்மொழியினாளையணை விப்பான்
எண்ணிவரு காமனுடல் வேவஎரி காலும்
கண்ணவ னிருப்பது கருப்பறிய லூரே. 6

1803. ஆதியடி யைப்பணிய அப்பொடு மலர்ச்சேர்
சோதியொளி நற்புகை வளர்க்குவடு புக்குத்
தீதுசெய வந்தணையு மந்தக னரங்கக்
காதின னிருப்பது கருப்பறிய லூரே. 7

1804. வாய்ந்தபுகழ் விண்ணவரும் மண்ணவரு மஞ்சப்
பாய்ந்தமர்செ யுந்தொழிலி லங்கைநகர் வேந்தற்
கேய்ந்தபுய மத்தனையு மிற்றுவிழ மேனாள்
காய்ந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 8

1805. பரந்தது நிரந்துவரு பாய்திரைய கங்கை
கரந்தொர்சடை மேன்மிசை யுகந்தவளை வைத்து
நிரந்தர நிரந்திருவர் நேடியறி யாமல்
கரந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 9

1806. அற்றமறை யாவமண ராஜுயிலி புத்தர்
சொற்றமறி யாதவர்கள் சொன்னசொலை விட்டுக்
குற்றமறி யாதபெரு மான்கொகுடிக் கோயில்
கற்றென விருப்பது கருப்பறிய லூரே. 10

1807. நலந்தரு புனற்புகலி ஞானசம் பந்தன்
கலந்தவர் கரப்பறியல் மேயகட வுள்ளைப்
பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று
வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 32. திருவையாறு : திருவிராகம். பண் – இந்தளம்

1808. திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்
உருத்திக ழெழிற்கயிலை வெற்பிலுறை தற்கே
விருப்புடைய அற்புத ரிருக்குமிட மேரார்
மருத்திகழ் பொழிற்குலவு வண்திருவை யாறே. 1

1809. கந்தமர வுந்துபுகை யுந்தலில் விளக்கேர்
இந்திர னுணர்ந்துபணி யெந்தையிட மெங்கும்
சந்தமலி யுந்தரு மிடைந்தபொழில் சார
வந்தவளி நந்தணவு வண்திருவை யாறே. 2

1810. கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தில்
கொட்டுகர மிட்டவொலி தட்டும்வகை நந்திக்
கிட்டமிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்
வட்டமதி லுள்திகழும் வண்திருவை யாறே. 3

1811. நண்ணியொர் வடத்தின்நிழல் நால்வர்முனி வர்க்கன்
றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவ ரிடஞ்சீர்த்
தண்ணின்மலி சந்தகிலொ டுந்திவரு பொன்னி
மண்ணின் மிசை வந்தணவு வண்திருவை யாறே. 4

1812. வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபமிகு காளிகத மோவ
நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்
மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திருவை யாறே. 5

1813. பூதமொடு பேய்கள்பல பாடநட மாடிப்
பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்திக்
கோதைய ரிடும்பலி கொளும்பர னிடம்பூ
மாதவி மணங்கமழும் வண்திருவை யாறே. 6

1814. துன்னுகுழல் மங்கையுமை நங்கைசுளி வெய்தப்
பின்னொருத வஞ்செய்துழல் பிஞ்ஞகனு மங்கே
என்னசதி யென்றுரைசெ யங்கண னிடஞ்சீர்
மன்னுகொடை யாளர்பயில் வண்திருவை யாறே. 7

1815. இரக்கமில்கு ணத்தொடுல கெங்குநலி வெம்போர்
அரக்கன்முடி யத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்கவிர லிற்சிறிது வைத்தவ ரிடஞ்சீர்
வரக்கருணை யாளர்பயில் வண்திருவை யாறே. 8

1816. பருத்துருவ தாகிவிண் ணடைந்தவனொர் பன்றிப்
பெருத்துருவ தாயுல கிடந்தவனு மென்றும்
கருத்துரு வொணாவகை நிமிர்ந்தவ னிடங்கார்
வருத்துவகை தீர்கொள்பொழில் வண்திருவை யாறே. 9

1817. பாக்கியம தொன்றுமில் சமண்பதகர் புத்தர்
சாக்கியர்க ளென்றுடல் பொதிந்துதிரி வார்தாம்
நோக்கரிய தத்துவ னிடம்படியின் மேலால்
மாக்கமுற நீடுபொழில் வண்திருவை யாறே. 10

1818. வாசமலி யும்பொழில்கொள் வண்திருவை யாற்றுள்
ஈசனை யெழிற்புகலி மன்னவன்மெய்ஞ் ஞானப்
பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 33. திருநள்ளாறு : திருவிராகம் பண் – இந்தளம்

1819. ஏடுமலி கொன்றையர விந்துவிள வன்னி
மாடவல செஞ்சடையெம் மைந்தனிட மென்பர்
கோடுமலி ஞாழல்குர வேறுசுர புன்னை
நாடுமலி வாசமது வீசியநள் ளாறே. 1

1820. விண்ணியல் பிறைப்பிள வறைப்புனல் முடித்த
புண்ணிய னிருக்குமிட மென்பர்புவி தன்மேல்
பண்ணிய நடத்தொடிசை பாடுமடி யார்கள்
நண்ணிய மனத்தின்வழி பாடுசெய்நள் ளாறே. 2

1821. விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்
துளங்கொள இருத்திய வொருத்தனிட மென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய்நள் ளாறே. 3

1822. கொக்கரவர் கூன்மதியர் கோபர்திரு மேனிச்
செக்கரவர் சேருமிட மென்பர்தட மூழ்கிப்
புக்கரவர் விஞ்சையரும் விண்ணவரு நண்ணி
நக்கரவர் நாமநினை வெய்தியநள் ளாறே. 4

1823. நெஞ்சமிது கண்டுகொ ளுனக்கென நினைந்தார்
வஞ்சம தறுத்தருளு மற்றவனை வானோர்
அஞ்சமுது காகியவர் கைதொழ எழுந்த
நஞ்சமுது செய்தவ னிருப்பிடநள் ளாறே. 5

1824. பாலனடி பேணவவ னாருயிர் குறைக்குங்
காலனுடன் மாளமு னுதைத்தஅர னூராம்
கோலமலர் நீர்க்குட மெடுத்துமறை யாளர்
நாலின்வழி நின்றுதொழில் பேணியநள் ளாறே. 6

1825. நீதியர் நெடுந்தகையர் நீள்மலையர் பாவை
பாதியர் பராபரர் பரம்பர ரிருக்கை
வேதியர்கள் வேள்வியொழி யாதுமறை நாளும்
ஓதியரன் நாமமு முணர்த்திடுநள் ளாறே. 7

1826. கடுத்துவல் லரக்கன்முன் நெருக்கிவரை தன்னை
எடுத்தவன் முடித்தலைகள் பத்துமிகு தோளும்
அடர்த்தவர் தமக்கிடம தென்பரளி பாட
நடத்தகல வைத்திரள்கள் வைகியநள் ளாறே. 8

1827. உயர்ந்தவ னுருக்கொடு திரிந்துலக மெல்லாம்
பயந்தவன் நினைப்பரிய பண்பனிட மென்பர்
பியந்தமரர் மெச்சமலர் மல்குபொழி லெங்கும்
நயந்தரும வேதவொலி யார்திருநள் ளாறே. 9

1828. சிந்தைதிரு கற்சமணர் தேரர்தவ மென்னும்
பந்தனை யறுத்தருளு கின்றபர மன்னூர்
மந்தமுழ வந்தரு விழாவொலியும் வேதச்
சந்தம்விர விப்பொழில் முழங்கியநள் ளாறே. 10

1829. ஆடலர வார்சடைய னாயிழைதன் னோடும்
நாடுமலி வெய்திட இருந்தவன்நள் ளாற்றை
மாடமலி காழிவளர் பந்தனது செஞ்சொல்
பாடலுடை யாரையடை யாபழிகள் நோயே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 34. திருப்பழுவூர் : திருவிராகம். பண் – இந்தளம்

1830. முத்தன்மிகு மூவிலைநல் வேலன்விரி நூலன்
அத்தனெமை யாளுடைய அண்ணலிட மென்பர்
மைத்தழை பெரும்பொழிலின் வாசமது வீசப்
பத்தரொடு சித்தர்பயில் கின்றபழு வூரே. 1

1831. கோடலொடு கோங்கவை குலாவுமுடி தன்மேல்
ஆடரவம் வைத்தபெரு மானதிட மென்பர்
மாடமலி சூளிகையி லேறிமட வார்கள்
பாடலொலி செய்யமலி கின்றபழு வூரே. 2

1832. வாலிய புரத்திலவர் வேவவிழி செய்த
போலிய வொருத்தர்புரி நூலரிட மென்பர்
வேலியின் விரைக்கமல மன்னமுக மாதர்
பாலென மிழற்றிநட மாடுபழு வூரே. 3

1833. எண்ணுமொ ரெழுத்துமிசை யின்கிளவி தேர்வார்
கண்ணுமுத லாயகட வுட்கிடம தென்பர்
மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்
பண்ணினொலி கொண்டுபயில் கின்றபழு வூரே. 4

1834. சாதல்புரி வார்சுடலை தன்னில்நட மாடும்
நாதன்நமை யாளுடையை நம்பனிட மென்பர்
வேதமொழி சொல்லிமறை யாளரிறை வன்றன்
பாதமவை யேத்தநிகழ் கின்றபழு வூரே. 5

1835. மேவயரு மும்மதிலும் வெந்தழல் விளைத்து
மாவயர வன்றுரிசெய் மைந்தனிட மென்பர்
பூவையை மடந்தையர்கள் கொண்டுபுகழ் சொல்லிப்
பாவையர்கள் கற்பொடு பொலிந்தபழு வூரே. 6

1836. மந்தண மிருந்துபுரி மாமடிதன் வேள்வி
சிந்தவிளை யாடுசிவ லோகனிட மென்பர்
அந்தணர்க ளாகுதியி லிட்டஅகில் மட்டார்
பைந்தொடிநன் மாதர்சுவ டொற்றுபழு வூரே. 7

1837. உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்தன்
றரக்கனை யடர்த்தருளு மப்பனிட மென்பர்
குரக்கினம் விரைப்பொழிலின் மீதுகனி யுண்டு
பரக்குறு புனற்செய்விளை யாடுபழு வூரே. 8

1838. நின்றநெடு மாலுமொரு நான்முகனு நேட
அன்றுதழ லாய்நிமிரு மாதியிட மென்பர்
ஒன்றுமிரு மூன்றுமொரு நாலுமுணர் வார்கள்
மன்றினி லிருந்துடன் மகிழ்ந்தபழு வூரே. 9

1839. மொட்டையம ணாதர்துகில் மூடுவிரி தேரர்
முட்டைகண் மொழிந்தமுனி வான்றனிட மென்பர்
மட்டைமலி தாழையிள நீரதிசை பூகம்
பட்டையொடு தாறுவிரி கின்றபழு வூரே. 10

1840. அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும்
பந்தமலி கின்றபழு வூரரனை யாரச்
சந்தமிகு ஞானமுணர் பந்தனுரை பேணி
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருத்தென்குரங்காடுதுறை : பண் – இந்தளம்

1841. பரவக் கெடும்பல் வினைபா ரிடஞ்சூழ
இரவிற் புறங்காட் டிடைநின் றெரியாடி
அரவச் சடையந் தணன்மேய அழகார்
குரவப் பொழில்சூழ் குரங்கா டுதுறையே. 1

1842. விண்டார் புரமூன்று மெரித்த விமலன்
இண்டார் புறங்காட் டிடைநின் றெரியாடி
வண்டார் கருமென் குழல்மங் கையொர்பாகம்
கொண்டான் நகர்போல் குரங்கா டுதுறையே. 2

1843. நிறைவில் புறங்காட் டிடைநே ரிழையோடும்
இறைவில் லெரியான் மழுவேந் திநின்றாடி
மறையின் னொலிவா னவர்தா னவரேத்தும்
குறைவில் லவனூர் குரங்கா டுதுறையே. 3

1844. விழிக்குந் நுதன்மே லொருவெண் பிறைசூடித்
தெழிக்கும் புறங்காட் டிடைச்சேர்ந் தெரியாடிப்
பழிக்கும் பரிசே பலிதேர்ந் தவனூர்பொன்
கொழிக்கும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. 4

1845. நீறார் தருமே னியன்நெற் றியொர்கண்ணன்
ஏறார் கொடியெம் மிறைபீண் டெரியாடி
ஆறார் சடையந் தண னாயிழையாளோர்
கூறான் நகர்போல் குரங்கா டுதுறையே. 5

1846. நளிரும் மலர்க்கொன் றையுநா றுகரந்தைத்
துளிருஞ் சுலவிச் சுடுகாட் டெரியாடி
மிளிரும் மரவார்த் தவன்மே வியகோயில்
குளிரும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. 6

1847. பழகும் வினைதீர்ப் பவன்பார்ப் பதியோடும்
முழவங்க குழல்மொந் தைமுழங் கெரியாடும்
அழகன் னயில்மூ விலைவேல் வலனேந்தும்
குழகன் நகர்போல் குரங்கா டுதுறையே. 7

1848. வரையார்த் தெடுத்தவ் வரக்கன் வலியொல்க
நிரையார் விரலா னெரித்திட் டவனூராம்
கரையார்ந் திழிகா விரிக்கோ லக்கரைமேல்
குரையார் பொழில்சூழ் குரங்கா டுதுறையே. 8

1849. நெடியா னொடுநான் முகனுந் நினைவொண்ணாப்
படியா கியபண் டங்கனின் றெரியாடி
செடியார் தலையேந் தியசெங்கண் வெள்ளேற்றின்
கொடியான் நகர்போல் குரங்கா டுதுறையே. 9

1850. துவரா டையர்வே டமலாச் சமண்கையர்
கவர்வாய் மொழிகா தல்செய்யா தவனூராம்
நவையார் மணிபொன் னகில்சந் தனமுந்திக்
குவையார் கரைசேர் குரங்கா டுதுறையே. 10

1851. நல்லார் பயில்கா ழியுள்ஞா னசம்பந்தன்
கொல்லே றுடையான் குரங்கா டுதுறைமேல்
சொல்லார் தமிழ்மா லைபத்துந் தொழுதேத்த
வல்லா ரவர்வா னவரோ டுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 36. திருவிரும்பூளை : பண் – இந்தளம்

### வினாவுரை

1852. சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார் முலைமங் கையொடும் முடனாகி
ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே. 1

1853. தொழலார் கழலே தொழுதொண் டர்கள்சொல்லீர்
குழலார் மொழிக்கோல் வளையோ டுடனாகி
எழிலா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
கழல்தான் கரிகா னிடையா டுகருத்தே. 2

1854. அன்பா லடிகை தொழுவீ ரறியீரே
மின்போல் மருங்குல் மடவா ளொடுமேவி
இன்பா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
பொன்போற் சடையிற் புனல்வைத் தபொருளே. 3

1855. நச்சித் தொழுவீர் கள்நமக் கிதுசொல்லீர்
கச்சிப் பொலிகா மக்கொடி யுடன்கூடி
இச்சித் திரும்பூ ளையிடங் கொண்டஈசன்
உச்சித் தலையிற் பலிகொண் டுழலூணே. 4

1856. சுற்றார்ந் தடியே தொழுவீ ரிதுசொல்லீர்
நற்றாழ் குழல்நங் கையொடு முடனாகி
எற்றே யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
புற்றா டரவோ டென்புபூண் டபொருளே. 5

1857. தோடார் மலர்தூய்த் தொழுதொண் டர்கள்சொல்லீர்
சேடார் குழற்சே யிழையோ டுடனாகி
ஈடா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காடார் கடுவே டுவனா னகருத்தே. 6

1858. ஒருக்கும் மனத்தன் பருள்ளீ ரிதுசொல்லீர்
பருக்கைம் மதவே ழமுரித் துமையோடும்
இருக்கை யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
அரக்கன் னுரந்தீர்த் தருளாக் கியவாறே. 7

1859. துயரா யினநீங் கித்தொழுந் தொண்டர்சொல்லீர்
கயலார் கருங்கண் ணியொடும் முடனாகி
இயல்பா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
முயல்வா ரிருவர்க் கெரியா கியமொய்ம்பே. 8

1860. துணைநன் மலர்தூய்த் தொழுந்தொண் டர்கள்சொல்லீர்
பணைமென் முலைப்பார்ப் பதியோ டுடனாகி
இணையில் லிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
அணைவில் சமண்சாக் கியமாக் கியவாறே. 9

1861. எந்தை யிரம்பூ ளையிடங் கொண்டஈசன்
சந்தம் பயில்சண் பையுண்ஞா னசம்பந்தன்
செந்தண் தமிழ்செப் பியபத் திவைவல்லார்
பந்தம் மறுத்தோங் குவர்பான் மையினாலே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 37. திருமறைக்காடு : பண் –இந்தளம்

## கதவு அடைக்கப் பாடிய பதிகம்

1862. சதுரம் மறைதான் துதிசெய் துவணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
இதுநன் கிறைவைத் தருள்செய்க வெனக்குன்
கதவந் திருக்காப் புக்கொள்ளுங் கருத்தாலே. 1

1863. சங்கந் தரள மவைதான் கரைக்கெற்றும்
வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
மங்கை யுமைபா கமுமா கவிதென்கொல்
கங்கை சடைமே லடைவித் தகருத்தே. 2

1864. குரவங் குருக்கத் திகள்புன் னைகள்ஞாழல்
மருவும் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
சிரமும் மலருந் திகழ்செஞ் சடைதன்மேல்
அரவம் மதியோ டடைவித் தவழகே. 3

1865. படர்செம் பவளத் தொடுபன் மலர்முத்தம்
மடலம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
உடலம் முமைபங் கமதா கியுமென்கொல்
கடல்நஞ் சமுதா வதுவுண் டகருத்தே. 4

1866. வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட
தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா
ஏனோர் தொழுதேத்த இருந்தநீ யென்கொல்
கானார் கடுவே டுவனா னகருத்தே. 5

1867. பலகா லங்கள்வே தங்கள்பா தங்கள்போற்றி
மலரால் வழிபா டுசெய்மா மறைக்காடா
உலகே முடையாய் கடைதோ றும்முன்னென்கொல்
தலைசேர் பலிகொண் டதிலுண் டதுதானே. 6

1868. வேலா வலயத் தயலே மிளிர்வெய்தும்
சேலார் திருமா மறைக்காட் டுறைசெல்வா
மாலோ டயனிந் திரனஞ் சமுனென்கொல்
காலார் சிலைக்கா மனைக்காய்ந் தகருத்தே. 7

1869. கலங்கொள் கடலோ தமுலா வுங்கரைமேல்
வலங்கொள் பவர்வாழ்த் திசைக்கும் மறைக்காடா
இலங்கை யுடையா னடர்ப்பட் டிடரெய்த
அலங்கல் விரலூன்றியருள் செய்தவாறே. 8

1870. கோனென் றுபல்கோ டியுருத் திரர்போற்றும்
தேனம் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா
ஏனங் கழுகா னவருன் னைமுனென்கொல்
வானந் தலமண் டியுங்கண் டிலாவாறே. 9

1871. வேதம் பலவோ மம்வியந் தடிபோற்ற
ஓதம் முலவும் மறைக்காட் டிலுறைவாய்
ஏதில் சமண்சாக் கியர்வாக் கிவையென்கொல்
ஆத ரொடுதா மலர்தூற் றியவாறே. 10

1872. காழிந் நகரான் கலைஞா னசம்பந்தன்
வாழும் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த
ஏழின் னிசைமா லையீரைந் திவைவல்லார்
வாழியுலகோர் தொழவா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 38. திருச்சாய்க்காடு : பண் – இந்தளம்

1873. நித்தலுந் நியமஞ் செய்துநீர் மலர்தூவிச்
சித்தமொன் றவல்லார்க் கருளுஞ் சிவன்கோயில்
மத்தயா னையின்கோ டும்வண்பீ லியும்வாரித்
தத்துநீர்ப் பொன்னி சாகரமேவு சாய்க்காடே. 1

1874. பண்டலைக் கொண்டுபூ தங்கள்பா டநின்றாடும்
வெண்டலைக் கருங்கா டுறைவே தியன்கோயில்
கொண்டலைத் திகழ்பே ரிமுழங் கக்குலாவித்
தண்டலைத் தடமா மயிலாடு சாய்க்காடே. 2

1875. நாறுகூ விளநா கிளவெண் மதியத்தோ
டாறுசூ டும்மம ரர்பிரா னுறைகோயில்
ஊறுதேங் கனிமாங் கனியோங் கியசோலைத்
தாறுதண் கதலிப் புதல்மேவு சாய்க்காடே. 3

1876. வரங்கள்வண் புகழ்மன் னியஎந் தைமருவார்
புரங்கள்மூன் றும்பொடி படஎய் தவன்கோயில்
இரங்கலோ சையுமீட் டியசரத் தொடுமீண்டித்
தரங்கநீள் கழித்தண் கரைவைகு சாய்க்காடே. 4

1877. ஏழைமார் கடைதோ றுமிடு பலிக்கென்று
கூழைவா ளரவாட் டும்பிரா னுறைகோயில்
மாழையொண் கண்வளைக் கைநுளைச் சியர்வண்பூந்
தாழைவெண் மடற்கொய்து கொண்டாடு சாய்க்காடே. 5

1878. துங்கவா னவர்சூழ் கடல்தாம் கடைபோதில்
அங்கொர்நீ ழலளித் தஎம்மா னுறைகோயில்
வங்கமங் கொளிரிப் பியுமுத் துமணியுஞ்
சங்கும்வா ரித்தடங் கடலுந்து சாய்க்காடே. 6

1879. வேதநா வினர்வெண் பளிங்கின் குழைக்காதர்
ஓதநஞ் சணிகண் டருகந் துறைகோயில்
மாதர்வண் டுதன்கா தல்வண்டா டியபுன்னைத்
தாதுகண் டுபொழில் மறைந்தூடு சாய்க்காடே. 7

1880. இருக்குநீள் வரைபற் றயிடர்த் தன்றெடுத்த
அரக்க னாகநெரித் தருள்செய் தவன்கோயில்
மருக்குலா வியமல் லிகைசண் பகம்வண்பூந்
தருக்குலா வியதண் பொழில்நீடு சாய்க்காடே. 8

1881. மாலினோ டயன்காண் டற்கரி யவர்வாய்ந்த
வேலையார் விடமுண் டவர்மே வியகோயில்
சேலின்நேர் விழியார்மயிலா லச்செருந்தி
காலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடே. 9

1882. ஊத்தைவாய்ச் சமண்கை யர்கள்சாக் கியர்க்கென்றும்
ஆத்தமா கஅறி வரிதா யவன்கோயில்
வாய்த்தமா ளிகைசூழ் தருவண் புகார்மாடே
பூத்தவா விகள்சூழ்ந் துபொலிந்த சாய்க்காடே. 10

1883. ஏனையோர் புகழ்ந்தேத் தியஎந்தை சாய்க்காட்டை
ஞானசம் பந்தன்கா ழியர்கோன் நவில்பத்தும்
ஊனமின் றியுரை செயவல் லவர்தாம்போய்
வானநா டினிதாள் வரிம்மா நிலத்தோரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 39. திருக்ஷேத்திரக்கோவை : பண் – இந்தளம்

1884. ஆரூர் தில்லையம் பலம்வல் லம்நல்லம்
வடகச் சியுமச் சிறுபாக்கம் நல்ல
கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி
கடல்சூழ் கழிப்பாலை தென்கோடி பீடார்
நீரூர் வயல்நின்றி யூர் குன்றியூருங் குருகாவையூர்
நாரையூர் நீடுகானப்
பேரூர் நன்னீள் வயல்நெய்த் தானமும்
பிதற்றாய் பிறை சூடிதன் பேரிடமே. 1

1885. அண்ணாமலை யீங்கோயும் அத்தி முத்தா
நகலா முதுகுன் றங்கொடுங் குன்றமுங்
கண்ணார் கழுக்குன்றங் கயிலைகோணம் பயில்கற்குடி
காளத்தி வாட்போக்கியும்
பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையான் பரங்குன்றம்
பருப்பதம் பேணி நின்றே
எண்ணாய் இரவும் பகலும் இடும்பைக்
கடல் நீந்தலாங் காரணமே. 2

1886. அட்டா னமென் றோதிய நாலிரண்டும்
மழகன் னுறை காவனைத்துந் துறைகள்
எட்டாந் திருமூர்த் தியின்காடொன்பதுங் குளமூன்றுங்
களமஞ்சும் பாடி நான்கும்
மட்டார் குழலாள் மலைமங்கை பங்கன்
மதிக்கும் இடமாகியபாழி மூன்றும்
சிட்டா னவன்பா சூரென்றே விரும்பாய்
அரும்பா வங்களா யினதேய்ந் தறவே. 3

1887. அறப்பள்ளி அகத்தியான் பள்ளி வெள்ளைப்
பொடிப்பூசி யாறணி வானமர் காட்டுப்பள்ளி
சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன் பள்ளி
திருநனி பள்ளி சீர்மகேந் திரத்துப்
பிறப்பில் லவன்பள்ளி வெள்ளச் சடையான்
விரும்பும் மிடைப் பள்ளி வண்சக் கரமால்
உறைப்பா லடிபோற்றக் கொடுத்த பள்ளி
உணராய் மட நெஞ்சமே உன்னிநின்றே. 4

1888. ஆறை வடமாகறல் அம்பர் ஐயாறணியார்
பெருவேளூர் விளமர்தெங்கூர்
சேறை துலைபுக லூரக லாதிவை
காதலித் தானவன் சேர்பதியே. . . 5

1889. மனவஞ்சர் மற்றோட முன்மாத ராரு
மதிகூர் திருக்கூடலில் ஆலவாயும்,
இனவஞ் சொலிலா இடைமா மருதும்
இரும்பைப் பதிமா காளம் வெற்றியூரும்
கனமஞ் சினமால் விடையான் விரும்புங்
கருகாவூர் நல்லூர்பெரும் புலியூர்
தனமென் சொலிற்றஞ்ச மென்றே நினைமின்
தவமா மலமா யினதா னறுமே. 6

1890. மாட்டூர் மடப் பாச்சி லாச்சிராமம்
முண்டீச் சரம்வாத வூர்வாரணாசி
காட்டூர் கடம்பூர் படம்பக்கங் கொட்டுங்
கடலொற்றி யூர்மற் றுறையூ ரவையும்
கோட்டூர் திருவாமாத்தூர்கோ ழம்பமுங்
கொடுங்கோவலூர் திருக்குண வாயில். . . . . . 7

1891. . . . .குலாவுதிங்கட் சடையான்
குளிரும் பரிதி நியமம்
போற்றூ ரடியார் வழிபா டொழியாத்தென்
புறம்பயம் பூவணம் பூழி யூரும்
காற்றூர் வரையன் றெடுத்தான் முடிதோள்
நெரித்தானுறை கோயிலென்றென்று நீகருதே. 8

1892. நெற்குன்றம் ஒத்தூர் நிறைநீர் மருகல்
நெடுவாயில் குறும்பலா நீடுதிரு
நற்குன்றம் வலம்புரம் நாகேச்சுரம் நளிர்சோலை
யுஞ்சேனை மாகாளம் வாய்மூர்
கற்குன்ற மொன்றேந்தி மழை தடுத்த
கடல்வண்ணனும் மாமலரோனுங் காணாச்
சொற்கென்றுந் தொலைவிலாதா னுறையுங்
குடமூக் கென்றுசொல்லிக் குலாவுமினே. 9

1893. குத்தங்குடி வேதிகுடி புனல்சூழ் குருந்தங்
குடிதேவன்குடி மருவும்
அத்தங்குடி தண்டிரு வண்குடியும் அலம்புஞ்
சலந்தன்சடை வைத்துகந்த
நித்தன் நிமலன் உமையோ டுங்கூட
நெடுங்காலம் உறைவிடமென்று சொல்லாப்
புத்தர் புறங்கூ றியபுன் சமணர்
நெடும்பொய்களை விட்டுநினைந் துய்ம்மினே. 10

1894. அம்மானை யருந்தவ மாகி நின்ற
அமரர் பெருமான்பதி யானவுன்னிக்
கொய்ம்மா மலர்ச்சோலை குலாவு கொச்சைக்
கிறைவன் சிவஞான சம்பந்தன் சொன்ன
இம்மாலை யீரைந்தும் இருநிலத்தில் இரவும்
பகலுந் நினைந்தேத்தி நின்று
விம்மா வெருவா விரும்பும் அடியார்
விதியார் பிரியார் சிவன்சேவடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

## 40. திருப்பிரமபுரம் : பண் – சீகாமரம்

1895. எம்பிரான் எனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரான் ஆவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. 1

1896. தாமென்று மனந்தளராத் தகுதியரா யுலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினான்
ஓமென்று மறைபயில்வார் பிரமபுரத் துறைகின்ற
காமன்ற னுடலெரியக் கனல்சேர்ந்த கண்ணானே. 2

1897. நன்னெஞ்சே யுனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்செய் திருகண்டா யுய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுறை யெப்போதும்
பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே. 3

1898. சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்குங்
கோனாளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையுந்
தேனாளும் பொழிற்பிரம புரத்துறையுந் தீவணனை
நாநாளும் நல்நியமஞ் செய்தவன்சீர் நவின்றேத்தே. 4

1899. கண்ணுதலான் வெண்ணீற்றான் கமழ்சடையான் விடையேறி
பெண்ணிதமா முருவத்தான் பிஞ்ஞகன்பேர் பலவுடையான்
விண்ணுதலாத் தோன்றியசீர்ப் பிரமபுரந் தொழவிரும்பி
எண்ணு தலாஞ் செல்வத்தை யியல்பாக அறிந்தோமே. 5

1900. எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்
கிங்கேயென் றருள்புரியு மெம்பெருமா னெருதேறிக்
கொங்கேயு மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் றன்மைகளே. 6

1901. சிலையதுவெஞ் சிலையாகத் திரிபுரமூன் றெரிசெய்த
இலைநுனைவேல் தடக்கைய னேந்திழையா ளொருகூறன்
அலைபுனல்சூழ் பிரமபுரத் தருமணியை யடிபணிந்தால்
நிலையுடைய பெருஞ்செல்வம் நீடுலகிற் பெறலாமே. 7

1902. எரித்தமயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடுதாள்
நெரித்தருளுஞ் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினான்
உரித்தவரித் தோலுடையா னுறைபிரம புரந்தன்னைத்
தரித்தமன மெப்போதும் பெறுவார்தாந் தக்காரே. 8

1903. கரியானும் நான்முகனுங் காணாமைக் கனலுருவாய்
அரியானாம் பரமேட்டி அரவஞ்சே ரகலத்தான்
தெரியாதா னிருந்துறையுந் திகழ்பிரம புரஞ்சேர
உரியார்தா மேழுலகு முடனாள வுரியாரே. 9

1904. உடையிலார் சீவரத்தார் தன்பெருமை யுணர்வரியான்
முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாந் திருவுருவன்
பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்துறையுஞ்
சடையிலார் வெண்பிறையான் தாள்பணிவார் தக்காரே. 10

1905. தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 41. திருச்சாய்க்காடு : பண் – சீகாமரம்

1906. மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்தாள் சார்ந்தாரே. 1

1907. போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும் பூம்புகார்ச்
சாய்க்காடே பதியாக வுடையானும் விடையானும்
வாய்க்காடு முதுமரமே யிடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும் பெரியோர்கள் பெருமானே. 2

1908. நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. 3

1909. கட்டலர்த்த மலர்தூவிக் கைதொழுமின் பொன்னியன்ற
தட்டலர்த்த பூஞ்செருந்தி கோங்கமருந் தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்குங் காவிரிப்பூம்
பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே. 4

1910. கோங்கன்ன குவிமுலையாள் கொழும்பணைத்தோட் கொடியிடையைப்
பாங்கென்ன வைத்துகந்தான் படர்சடைமேற் பால்மதியந்
தாங்கினான் பூம்புகார்ச் சாய்க்காட் டான் தாழ்நிழற்கீழ்
ஓங்கினா ரோங்கினா ரெனவுரைக்கு முலகமே. 5

1911. சாந்தாக நீறணிந்தான் சாய்க்காட்டான் காமனைமுன்
தீந்தாக மெரிகொளுவச் செற்றுகந்தான் திருமுடிமேல்
ஓய்ந்தார மதிசூடி யொளிதிகழும் மலைமகள்தோள்
தோய்ந்தாகம் பாகமா வுடையானும் விடையானே. 6

1912. மாங்குல்தோய் மணிமாடம் மதிதவழும் நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டின் இசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே. 7

1913. தொடலரிய தொருகணையாற் புரமூன்று மெரியுண்ணப்
படஅரவத் தெழிலாரம் பூண்டான்பண் டரக்கனையுந்
தடவரையாற் றடவரைத்தோ ளூன்றினான் சாய்க்காட்டை
இடவகையா லடைவோமென் றெண்ணுவார்க் கிடரிலையே. 8

1914. வையநீ ரேற்றானும் மலருறையு நான்முகனும்
ஐயன்மா ரிருவர்க்கு மளப்பரிதா லவன்பெருமை
தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேறோமே. 9

1915. குறங்காட்டு நால்விரலிற் கோவணத்துக் கோலோவிப்போய்
அறங்காட்டுஞ் சமணருஞ் சாக்கியரு மலர்தூற்றுந்
திறங்காட்டல் கேளாதே தெளிவுடையீர் சென்றடைமின்
புறங்காட்டி லாடலான் பூம்புகார்ச் சாய்க்காடே. 10

1916. நொம்பைந்து புடைத்தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்
அம்பந்தும் வரிக்கழலு மரவஞ்செய் பூங்காழிச்
சம்பந்தன் தமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும்
எம்பந்த மெனக்கருதி யேத்துவார்க் கிடர்கெடுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 42. திருஆக்கூர்த்தான்றோன்றிமாடம் : பண் – சீகாமரம்

1917. அக்கிருந்த ஆரமு மாடரவு மாமையும்
தொக்கிருந்த மார்பினான் தோலுடையான் வெண்ணீற்றான்
புக்கிருந்த தொல்கோயில் பொய்யிலா மெய்ந்நெறிக்கே
தக்கிருந்தா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 1

1918. நீரார வார்சடையான் நீறுடையா னேறுடையான்
காரார்பூங் கொன்றையினான் காதலித்த தொல்கோயில்
கூரார்ல் வாய்நிறையக் கொண்டயலே கோட்டகத்தில்
தாராமல் காக்கூரில் தான்தோன்றி மாடமே. 2

1919. வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் தொல்கோயில் வேளாள
ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாள ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 3

1920. கொங்குசேர் தண்கொன்றை மாலையினான் கூற்றடரப்
பொங்கினான் பொங்கொளிசேர் வெண்ணீற்றான் பூங்கோயில்
அங்கம்ஆ றோடு மருமறைக ளைவேள்வி
தங்கினா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 4

1921. வீக்கினா னாடரவம் வீந்தழிந்தார் வெண்டலையென்
பாக்கினான் பலகலன்க ளாதரித்துப் பாகம்பெண்
ஆக்கினான் தொல்கோயி லாம்பலம்பூம் பொய்கைபுடை
தாக்கினா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 5

1922. பண்ணொளிசேர் நான்மறையான் பாடலினோ டாடலினான்
கண்ணொளிசேர் நெற்றியினான் காதலித்த தொல்கோயில்
விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால் வெண்மாடம்
தண்ணொளிசே ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 6

1923. வீங்கினார் மும்மதிலும் வில்வரையால் வெந்தவிய
வாங்கினார் வானவர்கள் வந்திறைஞ்சுந் தொல்கோயில்
பாங்கினால் நான்மறையோ டாறங்கம் பலகலைகள்
தாங்கினா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 7

1924. கன்னெடிய குன்றெடுத்தான் தோளடரக் காலூன்றி
இன்னருளா லாட்கொண்ட எம்பெருமான் தொல்கோயில்
பொன்னடிக்கே நாள்தோறும் பூவோடு நீர்சுமக்கும்
தன்னடியா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 8

1925. நன்மையராம் நாரணனும் நான்முகனுங் காண்பரிய
தொன்மையான் தோற்றங்கே டில்லாதான் தொல்கோயில்
இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னா தீந்துவக்கும்
தன்மையா ராக்கூரில் தான்தோன்றி மாடமே. 9

1926. நாமருவு புன்மை நவிற்றச் சமண்தேரர்
பூமருவு கொன்றையினான் புக்கமருந் தொல்கோயில்
சேல்மருவு பங்கயத்துச் செங்கழுநீர் பைங்குவளை
தாமருவு மாக்கூரில் தான்தோன்றி மாடமே. 10

1927. ஆட லமர்ந்தானை ஆக்கூரில் தான்தோன்றி
மாட மமர்ந்தானை மாடஞ்சேர் தண்காழி
நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொல்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 43. திருப்புள்ளிருக்குவேளூர் : பண் — சீகாமரம்

1928. கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. 1

1929. தையலா ளொருபாகஞ் சடைமேலா ளவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோ ரந்தணனா ருறையுமிடம்
மெய்சொல்லா இராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே. 2

1930. வாசநலஞ் செய்திமையோர் நாள்தோறும் மலர்தூவ
ஈசனெம் பெருமானா ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. 3

1931. மாகாயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை
ஏகாய மிட்டுகந்த எரியாடி யுறையுமிடம்
ஆகாயந் தேரோடும் இராவணனை யமரின்கண்
போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 4

1932. கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. 5

1933. திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரா னமருமிடம்
மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தானைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 6

1934. அத்தியினீ ருரிமூடி யழகாக அனலேந்திப்
பித்தரைப்போற் பலிதிரியும் பெருமானார் பேணுமிடம்
பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே. 7

1935. பண்ணொன்ற இசைபாடு மடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாழ்நாள துடையானைப்
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 8

1936. வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணாளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன அகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 9

1937. கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றாடாமே
தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவரு மிலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காய்ப்
புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 10

1938. செடியாய வுடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 44. திருஆமாத்தூர் : பண் – சீகாமரம்

1939. துன்னம்பெய் கோவணமுந் தோலு முடையாடை
பின்னஞ் சடைமேலோர் பிள்ளை மதிசூடி
அன்னஞ்சேர் தண்கான லாமாத்தூ ரம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே. 1

1940. கைம்மாவின் தோல்போர்த்த காபாலி வானுலகில்
மும்மா மதிலெய்தான் முக்கணான் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை யாமாத்தூ ரம்மானெம்
பெம்மானென் றேத்தாதார் பேயரிற் பேயரே. 2

1941. பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்
தேம்ப விளமதியஞ் சூடிய சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை யாமாத்தூ ரம்மான்றன்
சாம்ப லகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. 3

1942. கோணாகப் பேரல்குல் கோல்வளைக்கை மாதராள்
பூணாகம் பாகமாப் புல்கி யவளோடும்
ஆணாகங் காதல்செய் ஆமாத்தூ ரம்மானைக்
காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே. 4

1943. பாடல்நெறிநின்றான் பைங்கொன்றைத் தண்தாரே
சூடல் நெறிநின்றான் சூலஞ்சேர் கையினான்
ஆடல் நெறிநின்றா னாமாத்தூ ரம்மான்றன்
வேட நெறிநில்லா வேடமும் வேடமே. 5

1944. சாமவரை வில்லாகச் சந்தித்த வெங்கணையால்
காவல் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்
யாவருஞ் சென்றேத்தும் ஆமாத்தூ ரம்மானத்
தேவர் தலைவணங்குந் தேவர்க்குந் தேவனே. 6

1945. மாறாத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேறாக நில்லாத வேடமே காட்டினான்
ஆறாத தீயாடி யாமாத்தூ ரம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே. 7

1946. தாளா லரக்கன்றோள் சாய்த்த தலைமகன்றன்
நாளா திரையென்றே நம்பன்றன் நாமத்தால்
ஆளானார் சென்றேத்து மாமாத்தூ ரம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே. 8

1947. புள்ளுங் கமலமுங் கைக்கொண்டார் தாமிருவர்
உள்ளு மவன்பெருமை ஒப்பளக்குந் தன்மையதே
அள்ளல் விளைகழனி யாமாத்தூ ரம்மானெம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. 9

1948. பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்
கொச்சை புலால்நாற ஈருரிவை போர்த்துகந்தன்
அச்சந்தன் மாதேவிக் கீந்தான்ற னாமாத்தூர்
நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே. 10

1949. ஆட லரவசைத்த ஆமாத்தூ ரம்மானைக்
கோட விரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாட லரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 45. திருக்கைச்சினம் : பண் – சீகாமரம்

1950. தையலோர் கூறுடையான் தண்மதிசேர் செஞ்சடையான்
மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலான்
நெய்யுலா மூவிலைவே லேந்தி நிவந்தொளிசேர்
கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 1

1951. விடமல்கு கண்டத்தான் வெள்வளையோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்றாதார் புரமெரித்தான்
நடமல்கு மாடலினான் நான்மறையோர் பாடலினான்
கடமல்கு மாவுரியா னுறைகோயில் கைச்சினமே. 2

1952. பாடலார் நான்மறையான் பைங்கொன்றை பாம்பினொடும்
சூடலான் வெண்மதியந் துன்று கரந்தையொடும்
ஆடலா னங்கை யனலேந்தி யாடரவக்
காடலான் மேவியுறை கோயில் கைச்சினமே. 3

1953. பண்டமரர் கூடிக் கடைந்த படுகடல்நஞ்
சுண்டபிரா னென்றிறைஞ்சி யும்பர் தொழுதேத்த
விண்டவர்கள் தொல்நகரம் மூன்றுடனே வெந்தவியக்
கண்டபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 4

1954. தேய்ந்துமலி வெண்பிறையான் செய்யதிரு மேனியினான்
வாய்ந்திலங்கு வெண்ணீற்றான் மாதினையோர் கூறுடையான்
சாய்ந்தமரர் வேண்டத் தடங்கடல்நஞ் சுண்டனங்கைக்
காய்ந்தபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 5

1955. மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையா னாடரவம் பூண்டுகந்தான்
திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேல்
கங்கையினான் மேவியுறை கோயில் கைச்சினமே. 6

1956. வரியரவே நாணாக மால்வரையே வில்லாக
எரிகணையால் முப்புரங்க ளெய்துகந்த எம்பெருமான்
பொருசுடலை யீமப் புறங்காட்டான் போர்த்ததோர்
கரியுரியான் மேவியுறை கோயில் கைச்சினமே. 7

1957. போதுலவு கொன்றை புனைந்தான், திருமுடிமேல்
மாதுமையா ளஞ்ச மலையெடுத்த வாளரக்கன்
நீதியினா லேத்த நிகழ்வித்து நின்றாடும்
காதலினான் மேவியுறை கோயில் கைச்சினமே. 8

1958. மண்ணினைமுன் சென்றிரந்த மாலும் மறையவனும்
எண்ணறியா வண்ண மெரியுருவ மாயபிரான்
பண்ணிசையா லேத்தப் படுவான்றன் நெற்றியின்மேல்
கண்ணுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 9,10

1959. தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்
கண்ணுதலான் மேவியுறை கோயில் கைச்சினத்தைப்
பண்ணிசையா லேத்திப் பயின்ற இவைவல்லார்
விண்ணவரா யோங்கி வியனுலக மாள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

♦♦♦♦♦

## 46. திருநாலூர்மயானம் : பண் – சீகாமரம்

1960. பாலூரு மலைப்பாம்பும் பனிமதியும் மத்தமும்
மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினான்
நாலூர் மயானத்து நம்பான்ற னடிநினைந்து
மாலூருஞ் சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே. 1

1961. சூடும் பிறைச்சென்னிச் சூழ்கா டிடமாக
ஆடும் பறைசங் கொலியோ டழகாக
நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானத்தைப்
பாடுஞ் சிறப்போர்பாற் பற்றாவாம் பாவமே. 2

1962. கல்லால் நிழல்மேவிக் காமுறுசீர் நால்வர்கன்
றெல்லா அறனுரையு மின்னருளாற் சொல்லினான்
நல்லார் தொழுதேத்து நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாஞ் செல்லாதார் தொன்னெறிக்கே. 3

1963. கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையான்
நீலத்தார் கண்டத்தான் நெற்றியோர் கண்ணினான்
ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்தில்
சூலத்தா னென்பார்பாற் சூழாவாந் தொல்வினையே. 4

1964. கறையார் மணிமிடற்றான் காபாலி கட்டங்கன்
பிறையார் வளர்சடையான் பெண்பாகன் நண்பாய
நறையார் பொழில்புடைசூழ் நாலூர் மயானத்தெம்
இறையானென் றேத்துவார்க் கெய்துமா மின்பமே. 5

1965. கண்ணார் நுதலான் கனலா டிடமாகப்
பண்ணார் மறைபாடி யாடும் பரஞ்சோதி
நண்ணார் புரமெய்தான் நாலூர் மயானத்தை
நண்ணா தவரெல்லாம் நண்ணாதார் நன்னெறியே. 6

1966. கண்பாவு வேகத்தாற் காமனைமுன் காய்ந்துகந்தான்
பெண்பாவு பாகத்தான் நாகத்தோ லாகத்தான்
நண்பாவு குணத்தோர்கள் நாலூர் மயானத்தை
எண்பாவு சிந்தையார்க் கேலா இடர்தானே. 7

1967. பத்துத் தலையோனைப் பாதத் தொருவிரலால்
வைத்து மலையடர்த்து வாளோடு நாள்கொடுத்தான்
நத்தி னொலியோவா நாலூர் மயானத்தென்
அத்த னடிநினைவார்க் கல்ல லடையாவே. 8

1968. மாலோடு நான்முகனும் நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்
நாலோடு மாறங்க நாலூர் மயானத்தெம்
பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே. 9

1969. துன்பாய மாசார் துவராய போர்வையார்
புன்பேச்சுக் கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்
நண்பாற் சிவாயவெனா நாலூர் மயானத்தே
இன்பா யிருந்தானை யேத்துவார்க் கின்பமே. 10

1970. ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்றான்
நாலு மறையோது நாலூர் மயானத்தைச்
சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்
கேலும் புகழ்வானத் தின்பா யிருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 47. திருமயிலாப்பூர் : பண் – சீகாமரம்

### பூம்பாவையை எழுப்பிய திருப்பதிகம்

1971. மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய். 1

1972. மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவு மருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணாதே போதியோ பூம்பாவாய். 2

1973. வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய். 3

1974. ஊர்திரை வேலை யுலாவு முயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய். 4

1975. மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரமமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். 5

1976. மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
அடலா னேறூரும் மடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய் 6

1977. மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய். 7

1978. தண்ணா வரக்கன்றோள் சாய்த்துகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரமமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கள்தம் மட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய். 8

1979. நற்றா மறைமலர்மேல் நான்முகனும் நாரணனும்
உற்றாங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரமமர்ந்தான்
பொற்றாப்பு காணாதே போதியோ பூம்பாவாய். 9

1980. உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரமமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய். 10

1981. கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்தன் நலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 48. திருவெண்காடு : பண் – சீகாமரம்

1982. கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

1983. பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

1984. மண்ணொடுநீ ரனல்காலோ டாகாயம் மதியிரவி
எண்ணில்வரு மியமான னிகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. 3

1985. விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

1986. வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர அஞ்சுவரே. 5

1987. தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தா னுறைகோயில்
பண்மொழியா லவன்நாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே. 6

1988. சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளநன் குடையானு முக்கணுடை யிறைவனே. 7

1989. பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்த னுரம்நெரித்தன் றருள்செய்தா னுறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. 8

1990. கள்ளார்செங் கமலத்தான் கடல்கிடந்தா னெனவிவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்து முணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும் மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே. 9

1991. போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்பிறிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

1992. தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டை
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 49. சீகாழி : பண் — சீகாமரம்

1993. பண்ணி னேர்மொழி மங்கை மார்பலர்
பாடி யாடிய வோசை நாள்தொறுங்
கண்ணி னேரயலே பொலியுங் கடற்காழிப்
பெண்ணி னேரொரு பங்கு டைப்பெரு
மானை யெம்பெரு மானென் றென்றுன்னும்
அண்ண லாரடியா ரருளாலுங் குறைவிலரே. 1

1994. மொண்ட லம்பிய வார்தி ரைக்கடல்
மோதி மீதெறி சங்கம் வங்கமுங்
கண்டலம் புடைசூழ் வயல்சேர் கலிக்காழி
வண்ட லம்பிய கொன்றை யானடி
வாழ்த்தி யேத்திய மாந்தர் தம்வினை
விண்ட லங்கெளிதா மதுநல் விதியாமே. 2

1995. நாடெ லாமொளி யெய்த நல்லவர்
நன்று மேத்தி வணங்கு வார்பொழிற்
காடெ லாமலர் தேன்துளிக்குங் கடற்காழித்
தோடு லாவிய காது ளாய்சுரி
சங்க வெண்குழை யாயென் றென்றுன்னும்
வேடங் கொண்டவர்கள் வினை நீங்கலுற்றாரே. 3

1996. மையி னார்பொழில் சூழ நீழலில்
வாச மார்மது மல்க நாள்தொறுங்
கையி னார்மலர் கொண்டெழுவார் கலிக்காழி
ஐய னேயர னேயென் றாதரித்

தோதி நீதியு ளேறி னைப்பவர்
உய்யு மாறுலகில் லுயர்ந்தாரி னுள்ளாரே. 4

1997. மலிக டுந்திரை மேல்நி மிர்ந்தெதிர்
வந்து வந்தொளிர் நித்தி லம்விழக்
கலிக டிந்தகையார் மருவுங் கலிக்காழி
வலிய காலனை வீட்டி மாணிதன்
இன்னு யிரளித் தானை வாழ்த்திட
மெலியுந் தீவினைநோ யவைமேவுவர் வீடே 5

1998. மற்று மிவ்வுல கத்து ளோர்களும்
வானு ளோர்களும் வந்து வைகலுங்
கற்ற சிந்தையராய்க் கருதுங் கலிக்காழி
நெற்றி மேலமர் கண்ணி னானை
நினைந்தி ருந்திசை பாடு வார்வினை
செற்றமாந் தரெனத் தெளிமின்கள் சிந்தையுளே. 6

1999. தான லம்புரை வேதிய ரொடு
தக்க மாதவர் தாந்தொ ழுப்பயில்
கானலின் விரைசேர விம்முங் கலிக்காழி
ஊனு ளாருயிர் வாழ்க்கை யாயுற
வாகி நின்றவொ ருவனே யென்றென்
றானலங் கொடுப்பா ரருள்வேந்த ராவாரே. 7

2000. மைத்த வண்டெழு சோலை யாலைகள்
சாலி சேர்வய லார வைகலுங்
கத்து வார்கடல் சென்றுலவுங் கலிக்காழி
அத்த னேயர னேய ரக்கனை
யன்ற டர்த்துகந் தாயு னகழல்
பத்தராய்ப் பரவும் பயனீங்கு நல்காயே. 8

2001. பரும ராமொடு தெங்கு பைங்கத
லிப்ப ருங்கனி யுண்ண மந்திகள்
கருவரா லுகளும் வயல்சூழ் கலிக்காழித்
திருவின் நாயக னாய மாலொடு
செய்ய மாமலர் செல்வ னாகிய
இருவர் காண்பரியா னெனஏத்துத லின்பமே. 9

2002.பிண்ட முண்டுழல் வார்க ளும்பிரி
யாது வண்துகி லாடை போர்த்தவர்
கண்டு சேரகிலா ரழகார் கலிக்காழித்
தொண்டை வாயுமை யோடு கூடிய
வேட னேசுட லைப்பொ டியணி
அண்டவா ணனென்பார்க் கடையா அல்லல்தானே. 10

2003.பெயரெ னும்மிவை பன்னி ரண்டினும்
உண்டெ னப்பெயர் பெற்ற வூர்திகழ்
கயலுலாம் வயல்சூழ்ந் தழகார் கலிக்காழி
நயன டன்கழ லேத்தி வாழ்த்திய
ஞான சம்பந்தன் செந்த மிழுரை
உயருமா மொழிவா ருலகத் துயர்ந்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

❖❖❖❖❖

## 50. திருஆமாத்தூர் : பண் – சீகாமரம்

2004.குன்ற வார்சிலை நாண ராவரி
வாளி கூரெரி காற்றின் மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்ற லார்மணி மாட மாளிகை
சூளி கைக்கெதிர் நீண்ட பெண்ணைமேல்
அன்றில் வந்தணையு மாமாத்து ரம்மானே. 1

2005.பரவி வானவர் தான வர்பல
ருங்க லங்கிட வந்த கார்விடம்
வெருவ வுண்டுகந்த அருளென்கொல் விண்ணவனே
கரவின் மாமணி பொன்கொ ழித்திழி
சந்து காரகில் தந்து பம்பைநீர்
அருவி வந்தலைக்கு மாமத்து ரம்மானே. 2

2006.நீண்ட வார்சடை தாழ நேரிழை
பாட நீறுமெய் பூசி மாலயன்
மாண்ட வார்சுடலை நடமாடு மாண்பதுஎன்
பூண்ட கேழல் மருப்ப ராவிரி
கொன்றை வாள்வரி யாமை பூணென
ஆண்ட நாயகனே யாமாத்து ரம்மானே. 3

2007. சேலின் நேரன கண்ணி வெண்ணகை
மான்வி ழித்திரு மாதைப் பாகம்வைத்
தேல மாதவநீ முயல்கின்ற வேடமிதென்
பாலின் நேர்மொழி மங்கை மார்நட
மாடி யின்னிசை பாட நீள்பதி
ஆலை சூழ்கழனி யாமாத்தூ ரம்மானே. 4

2008. தொண்டர் வந்து வணங்கி மாமலர்
தூவி நின்கழ லேத்து வாரவர்
உண்டியால் வருந்த இரங்காத தென்னைகொலாம்
வண்ட லார்கழ னிக்க லந்தும
லர்ந்த தாமரை மாதர் வாண்முகம்
அண்ட வாணர்தொழு மாமாத்தூ ரம்மானே. 5

2009. ஓதி யாரண மாய நுண்பொருள்
அன்று நால்வர்முன் கேட்க நன்னெறி
நீதி யாலநீழ லுரைக்கின்ற நீர்மையதென்
சோதி யேசுட ரேசு ரும்பமர்
கொன்றை யாய்திரு நின்றி யூருறை
ஆதியே அரனே யாமாத்து ரம்மானே. 6

2010. மங்கை வாணுதன் மான்ம னத்திடை
வாடி யூடம ணங்க ம்ழ்சடைக்
கங்கையா ளிருந்த கருத்தாவ தென்னைகொலாம்
பங்க யமது வுண்டு வண்டிசை
பாட மாமயி லாட விண்முழ
வங்கையா லதிர்க்கு மாமாத்தூ ரம்மானே. 7

2011. நின்ற டர்த்திடு மைம்பு லன்நிலை
யாதவண்ணம் நினைந்து ளத்திடை
வென்றடர்த் தொருபால் மடமாதை விருப்புதலென்
குன்றெ டுத்தநி சாச ரன்திரள்
தோளி ருபது தான்நெ ரிதர
அன்றடர்த் துகந்தா யாமாத்தூ ரம்மானே. 8

2012. செய்ய தாமரை மேலி ருந்தவ
னோடு மாலடி தேட நீள்முடி
வெய்ய வாரழலாய் நிமிர்கின்ற வெற்றிமையென்
தைய லாளொடு பிச்சைக் கிச்சை
தயங்கு தோலரை யார்த்த வேடங்கொண்
டைய மேற்றுகந்தா யாமாத்தூ ரம்மானே. 9

2013. புத்தர் புன்சம ணாதர் பொய்ம்மொழி
நூல்பி டித்தலர் தூற்ற நின்னடி
பத்தர் பேணநின்ற பரமாய பான்மையதென்
முத்தை வென்ற முறுவ லாளுமை
பங்க னென்றிமை யோர்ப ரவிடும்
அத்தனே யரியா யாமாத்தூ ரம்மானே. 10

2014. வாடல் வெண்டலை மாலை யார்த்தும
யங்கி ருள்ளெரி யேந்தி மாநடம்
ஆடல் மேயதென்னென் றாமத்தூ ரம்மானைக்
கோடல் நாகம ரும்பு பைம்பொழிற்
கொச்சை யாரிறை ஞான சம்பந்தன்
பாடல் பத்தும்வல்லார் பரலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 51. திருக்களர் : பண் – சீகாமரம்

2015. நீரு ளார்கயல் வாவி சூழ்பொழில்
நீண்ட மாவய வீண்டு மாமதில்
தேரினார் மறுகில் விழாமல்கு திருக்களருள்
ஊரு ளாரிடு பிச்சை பேணும்
ஒருவ னேயொளிர் செஞ்ச டைம்மதி
ஆரநின் றவனே யடைந்தார்க் கருளாயே. 1

2016. தோளின் மேலொளி நீறு தாங்கிய
தொண்டர் வந்தடி போற்ற மிண்டிய
தாளி னார்வளருந் தவமல்கு திருக்களருள்
வேளின் நேர்விச யற்க ருள்புரி
வித்த காவிரும் பும்ம டியாரை
ஆளுகந் தவனே யடைந்தார்க் கருளாயே. 2

2017. பாட வல்லநன் மைந்த ரோடு
பனிம லர்பல கொண்டு போற்றிசெய்
சேடர் வாழ்பொழில்சூழ் செழுமாடத் திருக்களருள்
நீட வல்ல நிமல னேயடி
நிரைக மூல்சிலம் பார்க்க மாநடம்
ஆட வல்லவனே யடைந்தார்க் கருளாயே. 3

2018. அம்பின் நேர்தடங் கண்ணினா ருடன்
ஆட வர்பயில் மாட மாளிகை
செம்பொ னார்பொழிசூழ்ந் தழகாய திருக்களருள்
என்பு பூண்டதோர் மேனி யெம்மிறை
வாஇ ணையடி போற்றி நின்றவர்க்
கன்பு செய்தவனே யடைந்தார்க் கருளாயே. 4

2019. கொங்கு லாமலர்ச் சோலை வண்டினங்
கிண்டி மாமது வுண்டி சைசெயத்
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களருள்
மங்கை தன்னொடுங் கூடிய மண
வாள னேபிணை கொண்டொர் கைத்தலத்
தங்கை யிற்படையா யடைந்தார்க் கருளாயே. 5

2020. கோல மாமயி லாலக் கொண்டல்கள்
சேர்பொ ழிற்குல வும்வ யலிடைச்
சேலிளங் கயலார் புனல்சூழ்ந்த திருக்களருள்
நீல மேவிய கண்ட னேநிமிர்
புன்ச டைப்பெரு மானெ னப்பொலி
ஆல நீழலுளா யடைந்தார்க் கருளாயே. 6

2021. தம்ப லம்மறி யாத வர்மதில்
தாங்கு மால்வரை யாலழ லெழத்
திண்பலங் கெடுத்தாய் திகழ்கின்ற திருக்களருள்
வம்ப லர்மலர் தூவி நின்னடி
வானவர் தொழக் கூத்து கந்துபேர்
அம்பலத் துறைவா யடைந்தார்க் கருளாயே. 7

2022 குன்ற டுத்தநன் மாளி கைக்கொடி
மாட நீடுயர் கோபு ரங்கள்மேல்
சென்ற டுத்துயர்வான் மதிதோயுந் திருக்களருள்
நின்ற டுத்துயர் மால்வ ரைத்திரள்
தோளி னாலெடுத் தான்றன் நீள்முடி
அன்றடர்த் துகந்தா யடைந்தார்க் கருளாயே. 8

2023. பண்ணி யாழ்பயில் கின்ற மங்கையர்
பாட லாடலொ டார வாழ்பதி
தெண்ணி லாமதியம் பொழில்சேருந் திருக்களருள்
உண்ணி லாவிய வொருவ னேயிரு
வர்க்கு நின்கழல் காட்சி யாரழல்
அண்ண லாயஎம்மா னடைந்தார்க் கருளாயே. 9

2024.பாக்கி யம்பல செய்த பத்தர்கள்
பாட்டொ டும்பல பணிகள் பேணிய
தீக்கியல் குணத்தார் சிறந்தாருந் திருக்களருள்
வாக்கின் நான்மறை யோதி னாயமண்
தேரர் சொல்லிய சொற்க ளானபொய்
ஆக்கி நின்றவனே யடைந்தார்க் கருளாயே. 10

2025.இந்து வந்தெழு மாட வீதியெ
ழில்கொள் காழிந் நகர்க் கவுணியன்
செந்து நேர்மொழியா ரவர்சேருந் திருக்களருள்
அந்தி யன்னதொர் மேனி யானை
அமரர் தம்பெரு மானை ஞானசம்
பந்தன் சொல்லிவை பத்தும்பாடத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 52. திருக்கோட்டாறு : பண் – சீகாமரம்

2026.கருந்த டங்கணின் மாத ராரிசை
செய்யக் காரதிர் கின்ற பூம்பொழிற்
குருந்த மாதவியின் விரைமல்கு கோட்டாற்றில்
இருந்த எம்பெரு மானை யுள்கி
இணைய டிதொழு தேத்து மாந்தர்கள்
வருந்து மாறறியார் நெறிசேர்வர் வானூடே. 1

2027.நின்று மேய்ந்து நினைந்து மாகரி
நீரொ டும்மலர் வேண்டி வான்மழை
குன்றின் நேர்ந்துகுத்திப் பணிசெய்யுங்கோட்டாற்றுள்
என்று மன்னிய எம்பி ரான்கழல்
ஏத்தி வானர சாள வல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே. 2

2028.விரவி நாளும் விழா விடைப்பொலி
தொண்டர் வந்து வியந்து பண்செயக்
குரவ மாருநீழற் பொழில்மல்கு கோட்டாற்றில்
அரவ நீள்சடை யானை யுள்கிநின்
றாத ரித்துமு னன்பு செய்தடி
பரவு மாறுவல் லார்பழிபற் றறுப்பாரே. 3

2029.அம்பின் நேர்விழி மங்கை மார்பலர்
 ஆட கம்பெறு மாட மாளிகைக்
கொம்பி னேர்துகிலின் கொடியாடு கோட்டாற்றில்
நம்ப னேநட னேந லந்திகழ்
 நாதனே யென்று காதல் செய்தவர்
தம்பின் நேர்ந்தறியார் தடுமாற்ற வல்வினையே. 4

2030.பழைய தம்மடி யார்து திசெயப்
 பாரு ளோர்களும் விண்ணு ளோர்தொழக்
குழலு மொந்தைவிழா வொலிசெய்யுங் கோட்டாற்றில்
கழலும் வண்சிலம் பும்மொ லிசெயக்
 கானி டைக்கண மேத்த ஆடிய
அழக னென்றெழுவா ரணியாவர் வானவர்க்கே. 5

2031.பஞ்சின் மெல்லடி மாத ராடவர்
 பத்தர் சித்தர்கள் பண்பு வைகலும்
கொஞ்சி யின்மொழியால் தொழில்மல்கு கோட்டாற்றில்
மஞ்ச னேமணி யேம ணிமிடற்
 றண்ண லேயென வுள்நெ கிழ்ந்தவர்
துஞ்சு மாறறியார் பிறவாரித் தொல்நிலத்தே. 6

2032.கலவ மாமயி லாளொர் பங்கனைக்
 கண்டு கண்மிசை நீர்நெ கிழ்த்திசை
குலவு மாறுவல்லார் குடிகொண்ட கோட்டாற்றில்
நிலவ மாமதி சேர்ச டையுடை
 நின்ம லாவென வுன்னு வாரவர்
உலவு வானவரி னுயர்வாகுவ துண்மையதே. 7

2033.வண்ட லார்வயற் சாலி யாலைவ
 ளம்பொ லிந்திட வார்பு னற்றிரை
கொண்ட லார்கொணர்ந் தங்குலவுந்திகழ் கோட்டாற்றில்
தொண்டெ லாந்துதி செய்ய நின்ற
 தொழில னேகழ லால ரக்கனை
மிண்டெ லாந்தவிர்த்தென் னுகந்திட்ட வெற்றிமையே. 8

2034.கருதி வந்தடி யார்தொ ழுதெழக்
 கண்ண னோடயன் தேடஆனையின்
குருதி மெய்கலப்ப வுரிகொண்டு கோட்டாற்றில்
விருதி னான்மட மாதும் நீயும்வி
 யப்பொ டும்முயர் கோயில் மேவிவெள்
எருதுகந் தவனே யிரங்காயுன தின்னருளே. 9

2035. உடையி லாதுழல் கின்ற குண்டரும்
ஊன ருந்தவத் தாய சாக்கியர்
கொடையி லாமனத்தார் குறையாருங் கோட்டாற்றில்
படையி லார்மழு வேந்தி யாடிய
பண்ப னேயிவ ரென்கொ லோநுனை
அடைகி லாதவண்ண மருளாயு னடியவர்க்கே. 10

2036. கால னைக்கழ லாலு தைத்தொரு
காம னைக்கன லாகச் சீறிமெய்
கோல வார்குழலாள் குடிகொண்ட கோட்டாற்றில்
மூல னைம்முடி வொன்றி லாதஎம்
முத்த னைப்பயில் பந்தன் சொல்லிய
மாலை பத்தும்வல்லார்க் கெளிதாகும் வானகமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருப்புறவார்பனங்காட்டூர் : பண் – சீகாமரம்

2037. விண்ண மர்ந்தன மும்ம தில்களை
வீழ வெங்கணை யாலெய் தாய்விரி
பண்ண மர்ந்தொலிசேர் புறவார் பனங்காட்டூர்ப்
பெண்ண மர்ந்தொரு பாக மாகிய
பிஞ்ஞ காபிறை சேர்நு தலிடைக்
கண்ண மர்ந்தவனே கலந்தார்க் கருளாயே. 1

2038. நீடல் கோட லலரவெண் முல்லை
நீர்ம லர்நிரைத் தாத ளஞ்செயப்
பாடல் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்த்
தோடி லங்கிய காத யல்மின்
துளங்க வெண்குழை துள்ள நள்ளிருள்
ஆடுஞ் சங்கரனே யடைந்தார்க் கருளாயே. 2

2039. வாளை யுங்கய லும்மிளிர் பொய்கை
வார்பு னற்கரை யருகெ லாம்வயற்
பாளை யொண்கமுகம் புறவார் பனங்காட்டூர்ப்
பூளை யுந்நறுங் கொன்றை யும்மத
மத்த மும்புனை வாய்க ழலிணைத்
தாளையே பரவுந் தவத்தார்க் கருளாயே. 3

2040.மேய்ந்தி ளஞ்செந்நெல் மென்க திர்கவ்வி
மேற்ப டுதலின் மேதி வைகறை
பாய்ந்த தண்பழனப் புறவார் பனங்காட்டூர்
ஆய்ந்த நான்மறை பாடி யாடும்
அடிக ளென்றென் றரற்றி நன்மலர்
சாய்ந்தடி பரவுந் தவத்தார்க் கருளாயே. 4

2041.செங்க யல்லொடு சேல்செ ருச்செயச்
சீறி யாழ்முரல் தேனி னத்தொடு
பங்கயம் மலரும் புறவார் பனங்காட்டூர்க்
கங்கை யும்மதி யுங்க மழ்சடைக்
கேண்மை யாளொடுங் கூடி மான்மறி
அங்கை யாடலனே அடியார்க் கருளாயே. 5

2042.நீரி னார்வரை கோலி மால்கடல்
நீடி யபொழில் சூழ்ந்து வைகலும்
பாரினார் பிரியாப் புறவார் பனங்காட்டூர்க்
காரி னார்மலர்க் கொன்றை தாங்கு
கடவு ளென்றுகை கூப்பி நாள்தொறும்
சீரினால் வணங்குந் திறத்தார்க் கருளாயே. 6

2043.கைய ரிவையர் மெல்வி ரல்லவை
காட்டி யம்மலர்க் காந்த ளங்குளி
பையரா விரியும் புறவார் பனங்காட்டூர்
மெய்ய ரிவையொர் பாக மாகவும்
மேவி னாய்கழ லேத்தி நாள்தொறும்
பொய்யி லாஅடிமை புரிந்தார்க் கருளாயே. 7

2044.தூவி யஞ்சிறை மெல்ந டையன
மல்கி யொல்கிய தூமலர்ப் பொய்கைப்
பாவில் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்
மேவி யந்நிலை யாய ரக்கன
தோள டர்த்தவன் பாடல் கேட்டருள்
ஏவி யெம்பெருமா னென்பவர்க் கருளாயே. 8

2045.அந்தண் மாதவி புன்னை நல்ல
அசோக மும்மர விந்த மல்லிகை
பைந்தண் ஞாழல்கள் சூழ்புறவார் பனங்காட்டூர்
எந்தி ளம்முகில் வண்ணன் நான்முகன்
என்றி வர்க்கரி தாய்நி மிர்ந்ததொர்
சந்த மாயவனே தவத்தார்க் கருளாயே. 9

2046. நீண மார்முரு குண்டு வண்டினம்
நீல மாமலர் கவ்வி நேரிசை
பாணில் யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர்
நாண ழிந்துழல் வார்ச மணரும்
நண்பில் சாக்கிய ரும்ந கத்தலை
ஊணுரி யவனே யுகப்பார்க் கருளாயே. 10

2047. மையி னார்மணி போல்மி டற்றனை
மாசில் வெண்பொடிப் பூசு மார்பனைப்
பைய தேன்பொழில்சூழ் புறவார் பனங்காட்டூர்
ஐய னைப்புக ழான காழியுள்
ஆய்ந்த நான்மறை ஞான சம்பந்தன்
செய்யுள் பாடவல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 54. திருப்புகலி : பண் – காந்தாரம்

2048. உருவார்ந்த மெல்லியலோர் பாகமுடையீ ரடைவோர்க்குக்
கருவார்ந்த வானுலகங் காட்டிக்கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தெண்கடலொண் சங்கந்திளைக்கும் பூம்புகலித்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 1

2049. நீரார்ந்த செஞ்சடையீர் நிரையார்கழல்சேர் பாதத்தீர்
ஊரார்ந்த சில்பலியீ ருழைமானுரிதோ லாடையீர்
போரார்ந்த தெண்டிரைசென் றணையுங்கானற் பூம்புகலிச்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

2050. அழிமல்கு பூம்புனலு மரவுஞ்சடைமே லடைவெய்த
மொழிமல்கு மாமறையீர் கறையார்கண்டத் தெண்டோளீர்
பொழில்மல்கு வண்டினங்க ளறையுங்கானற் பூம்புகலி
எழில்மல்கு கோயிலே கோயிலாக இருந்தீரே. 3

2051. கையிலார்ந்த வெண்மழுவொன் றுடையீர்கடிய கரியின்தோல்
மயிலார்ந்த சாயல்மட மங்கைவெருவ மெய்போர்த்தீர்
பயிலார்ந்த வேதியர்கள் பதியாய்விளங்கும் பைம்புகலி
எயிலார்ந்த கோயிலே கோயிலாக இசைந்தீரே. 4

2052.நாவார்ந்த பாடலீ ராடலரவ மரைக்கார்த்தீர்
பாவார்ந்த பல்பொருளின் பயன்களானீ ரயன்பேணும்
பூவார்ந்த பொய்கைகளும் வயலுஞ்சூழ்ந்த பொழிற்புகலித்
தேவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 5

2053.மண்ணார்ந்த மண்முழவந் ததும்பமலையான் மகளென்னும்
பெண்ணார்ந்த மெய்மகிழப் பேணியெரிகொண் டாடினீர்
விண்ணார்ந்த மதியமிடை மாடத்தாரும் வியன்புகலிக்
கண்ணார்ந்த கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 6

2054.களிபுல்கு வல்லவுண ரூர்மூன்றெரியக் கணைதொட்டீர்
அளிபுல்கு பூமுடியீ ரமரரேத்த அருள்செய்தீர்
தெளிபுல்கு தேனினமு மலருள்விரைசேர் திண்புகலி
ஒளிபுல்கு கோயிலே கோயிலாக வுகந்தீரே. 7

2055.பரந்தோங்கு பல்புகழ்சே ரரக்கர்கோனை வரைக்கீழிட்
டுரந்தோன்றும் பாடல்கேட் டுகவையளித்தீ ருகவாதார்
புரந்தோன்று மும்மதிலு மெரியச்செற்றீர் பூம்புகலி
வரந்தோன்று கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

2056.சலந்தாங்கு தாமரைமே லயனுந்தரணி யளந்தானுங்
கலந்தோங்கி வந்திழிந்துங் காணாவண்ணங் கனலானீர்
புலந்தாங்கி ஐம்புலனுஞ் செற்றார்வாழும் பூம்புகலி
நலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. 9

2057.நெடிதாய வன்சமணும் நிறைவொன்றில்லாச் சாக்கியருங்
கடிதாய கட்டுரையாற் கழறமேலோர் பொருளானீர்
பொடியாரு மேனியினீர் புகலிமறையோர் புரிந்தேத்த
வடிவாருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

2058.ஒப்பரிய பூம்புகலி ஓங்குகோயில் மேயானை
அப்பரிசிற் பதியான அணிகொள்ஞான சம்பந்தன்
செப்பரிய தண்டமிழால் தெரிந்தபாட லிவைவல்லார்
எப்பரிசி லிடர்நீங்கி யிமையோருலகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 55. திருத்தலைச்சங்காடு : பண் – காந்தாரம்

2059. நலச்சங்க வெண்குழையுந் தோடும்பெய்தோர் நால்வேதம்
சொலச்சங்கை யில்லாதீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
குலைச்செங்காய்ப் பைங்கமுகின் குளிர்கொள்சோலைக் குயிலாலும்
தலைச்சங்கைக் கோயிலே கோயிலாகத் தாழ்ந்தீரே. 1

2060. துணிமல்கு கோவணமுந் தோலுங்காட்டித் தொண்டாண்டீர்
மணிமல்கு கண்டத்தீ ரண்டர்க்கெல்லா மாண்பானீர்
பிணிமல்கு நூல்மார்பர் பெரியோர்வாழுந் தலைச்சங்கை
அணிமல்கு கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 2

2061. சீர்கொண்ட பாடலீர் செங்கண்வெள்ளே றூர்தியீர்
நீர்கொண்டும் பூக்கொண்டு நீங்காத்தொண்டர் நின்றேத்தத்
தார்கொண்ட நூல்மார்பர் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
ஏர்கொண்ட கோயிலே கோயிலாக இருந்தீரே. 3

2062. வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டிநீண்ட வெண்டிங்கள்
ஓட ஞ்சூழ் கங்கையு முச்சிவைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாயவாசற் கொடித்தோன்றும்
மாடஞ்சூழ் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

2063. சூலஞ்சேர் கையினீர் சுண்ணவெண்ணீ றாடலீர்
நீலஞ்சேர் கண்டத்தீர் நீண்டசடைமேல் நீரேற்றீர்
ஆலஞ்சேர் தண்கான லன்னமன்னுந் தலைச்சங்கைக்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாகக் கொண்டீரே. 5

2064. நிலநீரொ டாகாச மனல்காலாகி நின்றைந்து
புலநீர்மை புறங்கண்டார் பொக்கஞ்செய்யார் போற்றோவார்
சலநீத ரல்லாதார் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
நலநீர கோயிலே கோயிலாக நயந்தீரே. 6

2065. அடிபுல்கு பைங்கழல்க ளார்ப்பப்போந்தோ ரனலேந்திக்
கொடிபுல்கு மென்சாய லுமையோர் பாகங்கூடினீர்
பொடிபுல்கு நூல்மார்பர் புரிநூலாளர் தலைச்சங்கைக்
கடிபுல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

2066. திரையார்ந்த மாகடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை
வரையார்ந்த தோளடர விரலாலூன்று மாண்பினீர்
அரையார்ந்த மேகலையீ ரந்தணாளர் தலைச்சங்கை
நிரையார்ந்த கோயிலே கோயிலாக நினைந்தீரே. 8

2067. பாயோங்கு பாம்பணைமே லானும்பைந்தா மரையானும்
போயோங்கிக் காண்கிலார் புறம்நின்றோரார் போற்றோவார்
தீயோங்கு மறையாளர் திகழுஞ்செல்வத் தலைச்சங்கை
சேயோங்கு கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 9

2068. அலையாரும் புனல்துறந்த அமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர்துற்றத் தோற்றங்காட்டி யாட்கொண்டீர்
தலையான நால்வேதந் தரித்தார்வாழுந் தலைச்சங்கை
நிலையார்ந்த கோயிலே கோயிலாக நின்றீரே. 10

2069. நளிரும் புனற்காழி நல்லஞான சம்பந்தன்
குளிருந் தலைச்சங்கை யோங்குகோயில் மேயானை
ஒளிரும் பிறையானை யுரைத்தபாடலிவைவல்லார்
மிளிருந் திரைசூழ்ந்த வையத் தார்க்கு மேலாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 56. இடைமருதூர் : பண் – காந்தாரம்

2070. பொங்குநூல் மார்பினீர் பூதப்படையீர் பூங்கங்கை
தங்குசெஞ் சடையினீர் சாமவேதம் ஓதினீர்
எங்குமெழிலார் மறையோர்கள் முறையாலேத்த இடைமருதில்
மங்குல்தோய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

2071. நீரார்ந்த செஞ்சடையீர் நெற்றித்திருக்கண் ணிகழ்வித்தீர்
போரார்ந்த வெண்மழுவொன் றுடையீர் பூதம்பாடலீர்
ஏரார்ந்த மேகலையாள் பாகங்கொண்டீ ரிடைமருதில்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

2072. அழல்மல்கு மங்கையி லேந்திப்பூத மவைபாடச்
சுழல்மல்கு மாடலீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
எழில்மல்கு நான்மறையோர் முறையாலேத்த இடைமருதில்
பொழில்மல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 3

2073. பொல்லாப் படுதலையொன் றேந்திப்புறங்காட் டாடலீர்
வில்லாற் புரமூன்று மெரித்தீர்விடையார் கொடியினீர்
எல்லாக் கணங்களும் முறையாலேத்த இடைமருதில்
செல்வாய கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 4

2074. வருந்திய மாதவத்தோர் வானோரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடியுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீராலேத்த இடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே. 5

2075. சலமல்கு செஞ்சடையீர் சாந்தநீறு பூசினீர்
வலமல்கு வெண்மழுவொன் றேந்திமயானத் தாடலீர்
இலமல்கு நான்மறையோ ரினிதாயேத்த இடைமருதில்
புலமல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 6

2076. புனமல்கு கொன்றையீர் புலியினதளீர் பொலிவார்ந்த
சினமல்கு மால்விடையீர் செய்யீர்கரிய கண்டத்தீர்
இனமல்கு நான்மறையோ ரேத்துஞ்சீர்கொ ளிடைமருதில்
கனமல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

2077. சிலையுய்த்த வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திறலரக்கன்
தலைபத்துந் திண்டோளும் நெரித்தீர்தையல் பாகத்தீர்
இலைமொய்த்த தண்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த இடைமருதில்
நலமொய்த்த கோயிலே கோயிலாக நயந்தீரே. 8

2078. மறைமல்கு நான்முகனும் மாலுமறியா வண்ணத்தீர்
கறைமல்கு கண்டத்தீர் கபாலமேந்து கையினீர்
அறைமல்கு வண்டினங்க ளாலுஞ்சோலை யிடைமருதில்
நிறைமல்கு கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 9

2079. சின்போர்வைச் சாக்கியரும் மாசுசேருஞ் சமணரும்
துன்பாய கட்டுரைகள் சொல்லியல்லல் தூற்றவே
இன்பாய அந்தணர்க ளேத்துமேர்கொ ளிடைமருதில்
அன்பாய கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 10

2080. கல்லின் மணிமாடக் கழுமலத்தார் காவலவன்
நல்ல அருமறையான் நற்றமிழ்ஞான சம்பந்தன்
எல்லி யிடைமருதி லேத்துபாட லிவைபத்தும்
சொல்லு வார்க்குங்கேட் பார்க்குந்துயர மில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 57. திருநல்லூர் : பண் – காந்தாரம்

2081. பெண்ணமருந் திருமேனி யுடையீர்பிறங்கு சடைதாழப்
பண்ணமரும் நான்மறையே பாடியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

2082. அலைமல்கு தண்புனலும் பிறையுஞ்சூடி அங்கையில்
கொலைமல்கு வெண்மழுவு மனலுமேந்துங் கொள்கையீர்
சிலைமல்கு வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திருநல்லூர்
மலைமல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 2

2083. குறைநிரம்பா வெண்மதியஞ் சூடிக்குளிர்புன் சடைதாழப்
பறைநவின்ற பாடலோ டாடல்பேணிப் பயில்கின்றீர்
சிறைநவின்ற தண்புனலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மறைநவின்ற கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 3

2084. கூனமரும் வெண்பிறையும் புனலுஞ்சூடுங் கொள்கையீர்
மானமரும் மென்விழியாள் பாகமாகு மாண்பினீர்
தேனமரும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வானமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

2085. நிணங்கவரும் மூவிலையு மனலுமேந்தி நெறிகுழலாள்
அணங்கமரும் பாடலோ டாடல்மேவு மழகினீர்
திணங்கவரு மாடரவும் பிறையுஞ்சூடித் திருநல்லூர்
மணங்கமழுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்திரே. 5

2086. கார்மருவு பூங்கொன்றை சூடிக்கமழ்புன் சடைதாழ
வார்மருவு மென்முலையாள் பாகமாகு மாண்பினீர்
தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடுந் திருநல்லூர்
ஏர்மருவு கோயிலே கோயிலாக இருந்தீரே. 6

2087. ஊன்தோயும் வெண்மழுவு மனலுமேந்தி யுமைகாண
மீன்தோயுந் திசைநிறைய வோங்கியாடும் வேடத்தீர்
தேன்தோயும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வான்தோயுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 7

2088. காதமரும் வெண்குழையீர் கறுத்தஅரக்கன் மலையெடுப்ப
மாதமரும் மென்மொழியாள் மறுகும்வண்ணங் கண்டுகந்தீர்
தீதமரா அந்தணர்கள் பரவியேத்துந் திருநல்லூர்
மாதமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

2089.போதின்மே லயன்திருமால் போற்றியும்மைக் காணாது
நாதனே யிவனென்று நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்
தீதிலா அந்தணர்கள் தீமூன்றோம்புந் திருநல்லூர்
மாதரா ளவளோடு மன்னுகோயில் மகிழ்ந்தீரே. 9

2090.பொல்லாத சமணரொடு புறங்கூறுஞ் சாக்கிரோன்
றல்லாதா ரறவுரைவிட் டடியார்கள் போற்றோவா
நல்லார்க ளந்தணர்கள் நாளுமேத்துந் திருநல்லூர்
மல்லார்ந்த கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

2091.கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தன்
செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்ப்
பந்தணவு மெல்விரலாள் பங்கன்றன்னைப் பயில்பாடல்
சிந்தனையா லுரைசெய்வார் சிவலோகஞ்சேர்ந் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 58. திருக்குடவாயில் : பண் – காந்தாரம்

2092.கலைவாழும் அங்கையீர் கொங்கையாருங் கருங்கூந்தல்
அலைவாழுஞ் செஞ்சடையி லரவும்பிறையு மமர்வித்தீர்
குலைவாழை கமுகம்பொன் பவளம்பழுக்குங் குடவாயில்
நிலைவாழுங் கோயிலே கோயிலாக நின்றீரே. 1

2093.அடியார்ந்த பைங்கழலுஞ் சிலம்புமார்ப்ப அங்கையில்
செடியார்ந்த வெண்டலையொன் றேந்தியுலகம் பலிதேர்வீர்
குடியார்ந்த மாமறையோர் குலாவியேத்துங் குடவாயில்
படியார்ந்த கோயிலே கோயிலாகப் பயின்றீரே. 2

2094.கழலார்பூம் பாதத்தீ ரோதக்கடலில் விடமுண்டன்
றழலாருங் கண்டத்தீ ரண்டர்போற்று மளவினீர்
குழலார வண்டினங்கள் கீதத்தொலிசெய் குடவாயில்
நிழலார்ந்த கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 3

2095.மறியாருங் கைத்தலத்தீர் மங்கைபாக மாகச்சேர்ந்
தெறியாரு மாமழுவு மெரியுமேந்துங் கொள்கையீர்
குறியார வண்டினங்கள் தேன்மிழற்றுங் குடவாயில்
நெறியாருங் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 4

2096. இழையார்ந்த கோவணமுங் கீளுமெழிலாருடையாகப்
பிழையாத சூலம்பெய் தாடல்பாடல் பேணினீர்
குழையாரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த குடவாயில்
விழவார்ந்த கோயிலே கோயிலாக மிக்கீரே. 5

2097. அரவார்ந்த திருமேனி யானவெண்ணீ றாடினீர்
இரவார்ந்த பெய்பலிகொண் டிமையோரேத்த நஞ்சுண்டீர்
குரவார்ந்த பூஞ்சோலை வாசம்வீசுங் குடவாயில்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 6

2098. பாடலார் வாய்மொழியீர் பைங்கண்வெள்ளே றூர்தியீர்
ஆடலார் மாநடத்தீ ரரிவைபோற்று மாற்றலீர்
கோடலார் தும்பிமுரன் றிசைமிழற்றுங் குடவாயில்
நீடலார் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 7

2099. கொங்கார்ந்த பைங்கமலத் தயனுங்குறளாய் நிமிர்ந்தானும்
அங்காந்து தள்ளாட அழலாய்நிமிர்ந்தீ ரிலங்கைக்கோன்
தங்காதல் மாமுடியுந் தாளுமடர்த்தீர் குடவாயில்
பங்கார்ந்த கோயிலே கோயிலாகப் பரிந்தீரே. 8,9

2100. தூசார்ந்த சாக்கியருந் தூய்மையில்லாச் சமணரும்
ஏசார்ந்த புன்மொழிநீத் தெழில்கொள்மாடக் குடவாயில்
ஆசாரஞ் செய்மறையோர் அளவிற்குன்றா தடிபோற்றத்
தேசார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 10

2101. நளிர்பூந் திரைமல்கு காழிஞான சம்பந்தன்
குளிர்பூங் குடவாயிற் கோயில்மேய கோமானை
ஒளிர்பூந் தமிழ்மாலை யுரைத்தபாட லிவைவல்லார்
தளர்வான தானொழியத் தகுசீர்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 59. சீகாழி : பண் – காந்தாரம்

2102. நலங்கொள் முத்து மணியு மணியுந் திரளோதங்
கலங்கள் தன்னிற் கொண்டு கரைசேர் கலிக்காழி
வலங்கொள் மழுவொன் றுடையாய் விடையா யெனஏத்தி
அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா வருநோயே. 1

2103. ஊரா ருவரிச் சங்கம் வங்கங் கொடுவந்து
காரா ரோதங் கரைமே லுயர்த்துங் கலிக்காழி
நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா என்றென்று
பேரா யிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே. 2

2104. வடிகொள் பொழிலின் மழலை வரிவண் டிசைசெய்யக்
கடிகொள் போதில் தென்ற லணையுங் கலிக்காழி
முடிகொள் சடையாய் முதல்வா என்று முயன்றேத்தி
அடிகை தொழுவார் கில்லை யல்ல லவலமே. 3

2105. மனைக்கே யேற வளஞ்செய் பவளம் வளர்முத்தங்
கனைக்குங் கடலு ளோத மேறுங் கலிக்காழிப்
பனைக்கைப் பகட்டீ ருரியாய் பெரியா யெனப்பேணி
நினைக்க வல்ல அடியார் நெஞ்சி னல்லாரே. 4

2106. பரிதி யியங்கும் பாரிற் சீரார் பணியாலே
கருதி விண்ணோர் மண்ணோர் விரும்புங் கலிக்காழிச்
சுருதி மறைநான் கான செம்மை தருவானைக்
கருதி யெழுமின் வழுவா வண்ணந் துயர்போமே. 5

2107. மந்த மருவும் பொழிலி லெழிலார் மதுவுண்டு
கந்த மருவ வரிவண் டிசைசெய் கலிக்காழிப்
பந்த நீங்க அருளும் பரனே யெனஏத்திச்
சிந்தை செய்வார் செம்மை நீங்கா திருப்பாரே. 6

2108. புயலார் பூமி நாம மோதிப் புகழ்மல்கக்
கயலார் கண்ணார் பண்ணா ரொலிசெய் கலிக்காழிப்
பயில்வான் றன்னைப் பத்தி யாரத் தொழுதேத்த
முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்றம் முடுகாதே. 7

2109. அரக்கன் முடிதோள் நெரிய அடர்த்தா னடியார்க்குக்
கரக்க கில்லா தருள்செய் பெருமான் கலிக்காழிப்
பரக்கும் புகழான் றன்னை யேத்திப் பணிவார்மேற்
பெருக்கு மின்பந் துன்ப மான பிணிபோமே. 8

2110. மாணா யுலகங் கொண்ட மாலும் மலரோனுங்
காணா வண்ண மெரியாய் நிமிர்ந்தான் கலிக்காழிப்
பூணார் முலையாள் பங்கத் தானைப் புகழ்ந்தேத்திக்
கோணா நெஞ்ச முடையார்க் கில்லைக் குற்றமே. 9

2111. அஞ்சி யல்லல் மொழிந்து திரிவா ரமண் ஆதர்
கஞ்சி காலை யுண்பார்க் கரியான் கலிக்காழித்
தஞ்ச மாய தலைவன் றன்னை நினைவார்கள்
துஞ்ச லில்லா நல்ல வுலகம் பெறுவாரே. 10

2112. ஊழி யாய பாரி லோங்கு முயர்செல்வக்
காழி யீசன் கழலே பேணுஞ் சம்பந்தன்
தாழு மனத்தா லுரைத்த தமிழ்க ளிவைவல்லார்
வாழி நீங்கா வானோ ருலகில் மகிழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 60. திருப்பாசூர் : பண் – காந்தாரம்

2113. சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. 1

2114. பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென்
றாருந் தனையு மடியா ரேத்த அருள்செய்வார்
ஊரு மரவ முடையார் வாழு மூர்போலும்
பாரின் மிசையார் பாட லோவாப் பாசூரே. 2

2115. கையால் தொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விமலனார்
நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவு மூர்போலும்
பைவாய் நாகங் கோட லீனும் பாசூரே. 3

2116. பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கார் கொன்றை சூடியென் னுள்ளங் குளிர்வித்தார்
தங்கா தலியுந் தாமும் வாழு மூர்போலும்
பைங்கான் முல்லை பல்லரும் பீனும் பாசூரே. 4

2117. ஆடற் புரியும் ஐவா யரவொன் றரைச்சாத்தும்
சேடச் செல்வர் சிந்தையு ளென்றும் பிரியாதார்
வாடற் றலையிற் பலிதேர் கையா ரூர்போலும்
பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 5

2118. கானின் றதிரக் கனல்வாய் நாகங் கச்சாகத்
தோலொன் றுடையார் விடையார் தம்மைத் தொழுவார்கள்
மால்கொண் டோட மையல் தீர்ப்பா ரூர்போலும்
பால்வெண் மதிதோய் மாடஞ் சூழ்ந்த பாசூரே. 6

2119. கண்ணி னயலே கண்ணொன் றுடையார் கழலுன்னி
எண்ணுந் தனையு மடியா ரேத்த அருள்செய்வார்
உண்ணின் றுருக உவகை தருவா ரூர்போலும்
பண்ணின் மொழியார் பாட லோவாப் பாசூரே. 7

2120. தேசு குன்றாத் தெண்ணீ ரிலங்கைக் கோமானைக்
கூச அடர்த்துக் கூர்வாள் கொடுப்பார் தம்மையே
பேசிப் பிதற்றப் பெருமை தருவா ரூர்போலும்
பாசித் தடமும் வயலுஞ் சூழ்ந்த பாசூரே. 8

2121. நகுவாய் மலர்மே லயனும் நாகத் தணையானும்
புகுவா யறியார் புறநின் றோரார் போற்றோவார்
செகுவா யுகுபல் தலைசேர் கையா ரூர்போலும்
பகுவாய் நாரை யாரல் வாரும் பாசூரே. 9

2122. தூய வெயில்நின் றுழல்வார் துவர்தோ யாடையார்
நாவில் வெய்ய சொல்லித் திரிவார் நயமில்லார்
காவல் வேவக் கணையொன் றெய்தா ரூர்போலும்
பாவைக் குரவம் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 10

2123. ஞான முணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டு மின்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாட லிவைவல்லார்
ஊன மிலரா யும்பர் வானத் துறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 61. திருவெண்காடு : பண் – காந்தாரம்

2124. உண்டாய் நஞ்சை யுமையோர் பங்கா என்றுள்கித்
தொண்டாய்த் திரியு மடியார் தங்கள் துயரங்கள்
அண்டா வண்ண மறுப்பா னெந்தை யூர்போலும்
வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்காடே.

2125. நாதன் நம்மை யாள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியு மடியார் தங்கள்மேல்
ஏதந் தீர இருந்தான் வாழு மூர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே. 2

2126. தண்முத் தரும்பத் தடமூன் றுடையான் றனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப வுவகை தருவா னூர்போலும்
வெண்முத் தருவிப் புனல்வந் தலைக்கும் வெண்காடே. 3

2127. நரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறா வுள்கு வார்க ளுள்ளத்தே
கரையா வண்ணங் கண்டான் மேவு மூர்போலும்
விரையார் கமலத் தன்ன மருவும் வெண்காடே. 4

2128. பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்
றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்க ளுறுநோய்கள்
தள்ளிப் போக அருளுந் தலைவ னூர்போலும்
வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும் வெண்காடே. 5

2129. ஒளிகொள் மேனி யுடையா யும்ப ராளீயென்
றளிய ராகி யழுதுற் றூறு மடியார்கட்
கெளியா னமரர்க் கரியான் வாழு மூர்போலும்
வெளிய வுருவத் தானை வணங்கும் வெண்காடே. 6

2130. கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்
ஆள்வித் தமர ருலக மளிப்பா னூர்போலும்
வேள்விப் புகையால் வான மிருள்கூர் வெண்காடே. 7

2131. வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த இருந்தா னெந்தை யூர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. 8

2132. கரியா னோடு கமல மலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமா னென்பார்கட்
குரியா னமரர்க் கரியான் வாழு மூர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. 9

2133. பாடு மடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடு மரவ மசைத்த பெருமா னறிவின்றி
மூட முடைய சமண்சாக் கியர்க ளுணராத
வேட முடைய பெருமான் பதியாம் வெண்காடே. 10

2134. விடையார் கொடியான் மேவி யுறையும் வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங் காழியான்
நடையா ரின்சொல் ஞானசம் பந்தன் தமிழ்வல்லார்க்
கடையா வினைக ளமர லோக மாள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 62. திருமீயச்சூர் : பண் – காந்தாரம்

2135. காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் தாதைதன்
மீயச் சூரே தொழுது வினையை வீட்டுமே. 1

2136. பூவார் சடையின் முடிமேற் புனல ரனல்கொள்வர்
நாவார் மறையர் பிறையர் நறவெண் டலையேந்தி
ஏவார் மலையே சிலையாக் கழியம் பெரிவாங்கி
மேவார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. 2

2137. பொன்னேர் கொன்றை மாலை புரளு மகலத்தான்
மின்னேர் சடைக ளுடையான் மீயச் சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால் வணங்குவார்
அந்நே ரிமையோ ருலக மெய்த லரிதன்றே. 3

2138. வேக மதநல் லியானை வெருவ வுரிபோர்த்துப்
பாக முமையோ டாகப் படிதம் பலபாட
நாக மரைமே லசைத்து நடமா டியநம்பன்
மேக முரிஞ்சும் பொழில்சூழ் மீயச் சூரானே. 4

2139. விடையார் கொடியார் சடைமேல் விளங்கும் பிறைவேடம்
படையார் பூதஞ் சூழப் பாட லாடலார்
பெடையார் வரிவண் டணையும் பிணைசேர் கொன்றையார்
விடையார் நடையொன் றுடையார் மீயச் சூராரே. 5

2140. குளிருஞ் சடைகொள் முடிமேற் கோல மார்கொன்றை
ஒளிரும் பிறையொன் றுடையா னொருவன் கைகோடி
நளிரும் மணிசூழ் மாலை நட்ட நவில்நம்பன்
மிளிரு மரவ முடையான் மீயச் சூரானே. 6

2141. நீல வடிவர் மிடறு நெடியர் நிகரில்லார்
கோல வடிவு தமதாங் கொள்கை யறிவொண்ணார்
காலர் கழலர் கரியி னுரியர் மழுவாளர்
மேலர் மதியர் விதியர் மீயச் சூராரே. 7

2142. புலியி னுரிதோ லாடை பூசும் பொடிநீற்றர்
ஒலிகொள் புனலோர் சடைமேற் கரந்தா ருமையஞ்ச
வலிய திரள்தோள் வன்க ணரக்கர் கோன்றன்னை
மெலிய வரைக்கீ ழடர்த்தார் மீயச் சூராரே. 8

2143. காதின் மிளிருங் குழையர் கரிய கண்டத்தார்
போதி லவனும் மாலுந் தொழப்பொங் கெரியானார்
கோதி வரிவண் டறைபூம் பொய்கைப் புனல்மூழ்கி
மேதி படியும் வயல்சூழ் மீயச் சூராரே. 9

2144. கண்டார் நாணும் படியார் கலிங்க முடைபட்டைக்
கொண்டார் சொல்லைக் குறுகா ருயர்ந்த கொள்கையார்
பெண்டான் பாக முடையார் பெரிய வரைவில்லால்
விண்டார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. 10

2145. வேட முடைய பெருமா னுறையு மீயச்சூர்
நாடும் புகழார் புகலி ஞான சம்பந்தன்
பாட லாய தமிழீ ரைந்து மொழிந்துள்கி
ஆடு மடியா ரகல்வா னுலக மடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருஅரிசிற்கரைப்புத்தூர் : பண் – காந்தாரம்

2146. மின்னுஞ் சடைமே லிளவெண் டிங்கள் விளங்கவே
துன்னுங் கடல்நஞ் சிருள்தோய் கண்டர் தொன்மூதூர்
அன்னம் படியும் புனலா ரரிசி லலைகொண்டு
பொன்னும் மணியும் பொருதென் கரைமேற் புத்தூரே. 1

2147. மேவா அசுரர் மேவெயில் வேவ மலைவில்லால்
ஏவா ரெரிவெங் கணையா லெய்தா னெய்துமூர்
நாவால் நாதன் நாம மோதி நாள்தோறும்
பூவால் நீராற் பூசுரர் போற்றும் புத்தூரே. 2

2148. பல்லார் தலைசேர் மாலை சூடிப் பாம்பும்பூண்
டெல்லா விடமும் வெண்ணீ றணிந்தோ ரேறேறிக்
கல்லார் மங்கை பங்க ரேனுங் காணுங்கால்
பொல்லா ரல்ல ரழகியர் புத்தூர்ப் புனிதரே. 3

2149. வரியேர் வளையா ளரிவை யஞ்ச வருகின்ற
கரியே ருரிவை போர்த்த கடவுள் கருதுமூர்
அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய
பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே. 4

2150. என்போ டரவ மேனத் தெயிறோ டெழிலாமை
மின்போற் புரிநூல் விரவிப் பூண்ட மணிமார்பர்
அன்போ டுருகு மடியார்க் கன்ப ரமருமூர்
பொன்போ தலர்கோங் கோங்கு சோலைப் புத்தூரே. 5

2151. வள்ளி முலைதோய் குமரன் தாதை வான்தோயும்
வெள்ளி மலைபோல் விடையொன் றுடையான் மேவுமூர்
தெள்ளி வருநீ ரரிசில் தென்பாற் சிறைவண்டும்
புள்ளும் மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே. 6

2152. நிலந்தண் ணீரோ டனல்கால் விசும்பின் நீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தானூர்
அலந்த அடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே. 7

2153. இத்தே ரேக இம்மலை பேர்ப்ப னென்றேந்தும்
பத்தோர் வாயான் வரைக்கீ ழலறப் பாதந்தான்
வைத்தா ரருள்செய் வரதன் மருவு மூரான
புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே. 8

2154. முள்ளார் கமலத் தயன்மால் முடியோ டடிதேட
ஒள்ளா ரெரியா யுணர்தற் கரியா னூர்போலும்
கள்ளார் நெய்தல் கழுநீ ராம்பல் கமலங்கள்
புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும் புத்தூரே. 9

2155. கையார் சோறு கவர்குண் டர்களுந் துவருண்ட
மெய்யார் போர்வை மண்டையர் சொல்லு மெய்யல்ல
பொய்யா மொழியா லந்தணர் போற்றும் புத்தூரில்
ஐயா என்பார்க் கையுற வின்றி யழகாமே. 10

2156. நறவங் கமழ்பூங் காழி ஞான சம்பந்தன்
பொறிகொ ளரவம் பூண்டா னாண்ட புத்தூர்மேல்
செறிவண் டமிழ்செய் மாலை செப்ப வல்லார்கள்
அறவன் கழல்சேர்ந் தன்போ டின்ப மடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 64. திருமுதுகுன்றம் : பண் காந்தாரம்

2157. தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய் பெரியோனே
ஆவா வென்றங் கடியார் தங்கட் கருள்செய்வாய்
ஓவா வுவரி கொள்ள வுயர்ந்தா யென்றேத்தி
மூவா முனிவர் வணங்குங் கோயில் முதுகுன்றே. 1

2158. எந்தை யிவனென் றிரவி முதலா இறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயி லாகத் திகழ்வானை
மந்தி யேறி யினமா மலர்கள் பலகொண்டு
முந்தித் தொழுது வணங்குங் கோயில் முதுகுன்றே. 2

2159. நீடு மலரும் புனலுங் கொண்டு நிரந்தரம்
தேடு மடியார் சிந்தை யுள்ளே திகழ்வானைப்
பாடுங் குயிலி னயலே கிள்ளை பயின்றேத்த
மூடுஞ் சோலை முகில்தோய் கோயில் முதுகுன்றே. 3

2160. தெரிந்த அடியார் சிவனே யென்று திசைதோறுங்
குருந்த மலருங் குரவி னலருங் கொண்டேந்தி
இருந்து நின்று மிரவும் பகலு மேத்துஞ்சீர்
முரிந்து மேகந் தவழுஞ் சோலை முதுகுன்றே. 4

2161. வைத்த நிதியே மணியே யென்று வருந்தித்தம்
சித்த நைந்து சிவனே யென்பார் சிந்தையார்
கொத்தார் சந்துங் குரவும் வாரிக் கொணர்ந்துந்தும்
முத்தா றுடைய முதல்வர் கோயில் முதுகுன்றே. 5

2162. வம்பார் கொன்றை வன்னி மத்தம் மலர்தூவி
நம்பா வென்ன நல்கும் பெருமா னுறைகோயில்
கொம்பார் குரவு கொகுடி முல்லை குவிந்தெங்கும்
மொய்ம்பார் சோலை வண்டு பாடு முதுகுன்றே. 6,7

2163. வாசங் கமழும் பொழில்சூ ழிலங்கை வாழ்வேந்தை
நாசஞ் செய்த நங்கள் பெருமா னமர்கோயில்
பூசை செய்த அடியார் நின்று புகழ்ந்தேத்த
மூசி வண்டு பாடுஞ் சோலை முதுகுன்றே. 8

2164. அல்லி மலர்மே லயனு மரவி னணையானும்
சொல்லிப் பரவித் தொடர வொண்ணாச் சோதியூர்
கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை யயலே முறுவல் செய்யு முதுகுன்றே. 9

2165. கருகு முடலார் கஞ்சி யுண்டு கடுவேதின்
றுருகு சிந்தை யில்லார்க் கயலா னுறைகோயில்
திருகல் வேய்கள் சிறிதே வளையச் சிறுமந்தி
முருகின் பணைமே லிருந்து நடஞ்செய் முதுகுன்றே. 10

2166. அறையார் கடல்சூ ழந்தண் காழிச் சம்பந்தன்
முறையால் முனிவர் வணங்குங் கோயில் முதுகுன்றைக்
குறையாப் பனுவல் கூடிப் பாட வல்லார்கள்
பிறையார் சடையெம் பெருமான் கழல்கள் பிரியாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. திருப்பிரமபுரம் : பண் – காந்தாரம்

2167. கறையணி வேலிலர் போலுங் கபாலந் தரித்திலர் போலும்
மறையு நவின்றிலர் போலும் மாசுண மார்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 1

2168. கூரம் பதுவிலர் போலுங் கொக்கி னிறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலு மாமை யணிந்திலர் போலுந்
தாருஞ் சடைக்கிலர் போலுஞ் சண்டிக் கருளிலர் போலும்
பேரும் பலவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 2

2169. சித்த வடிவிலர் போலுந் தேசந் திரிந்திலர் போலுங்
கத்தி வருங்கடுங் காளி கதங்கள் தவிர்த்திலர் போலும்
மெய்த்த நயனமி டந்தார்க் காழி யளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 3

2170. நச்சர வாட்டிலர் போலும் நஞ்சு மிடற்றிலர் போலுங்
கச்சுத் தரித்திலர் போலுங் கங்கை தரித்திலர் போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலும் முப்புர மெய்திலர் போலும்
பிச்சை யிரந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 4

2171. தோடு செவிக்கிலர் போலுஞ் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய ஆனை யுரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலு மொள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுத்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 5

2172. விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி யழித்திலர் போலும்
அண்ண லயன்தலை வீழ அன்று மறுத்திலர் போலும்
வண்ண எலும்பினொ டக்கு வடங்கள் தரித்திலர் போலும்
பெண்ணின மொய்த்தெழு செல்வப் பிரம புரமமர்ந் தாரே. 6

2173. பன்றியின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலுங்
கன்றிய காலனை வீழக் கால்கொடு பாய்ந்திலர் போலுந்
துன்று பிணஞ்சுடு காட்டி லாடித் துதைந்திலர் போலும்
பின்றியும் பீடும் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 7

2174. பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்
அரச னிலங்கையர் கோனை யன்று மடர்த்திலர் போலும்
புரைசெய் புனத்திள மானும் புலியி னதளிலர் போலும்
பிரச மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரமமர்ந் தாரே. 8

2175. அடிமுடி மாலயன் றேட அன்று மளப்பிலர் போலுங்
கடிமல ரைங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்
படிமலர்ப் பாலனுக் காகப் பாற்கட லீந்திலர் போலும்
பிடிநடை மாதர் பெருகும் பிரம புரமமர்ந் தாரே. 9

2176. வெற்றரைச் சீவரத் தார்க்கு வெளிப்பட நின்றிலர் போலும்
அற்றவ ரால்நிழல் நால்வர்க் கறங்க ளுரைத்திலர் போலும்
உற்றவ ரென்றிலர் போலு மோடு முடிக்கிலர் போலும்
பெற்றமு மூர்ந்திலர் போலும் பிரம புரமமர்ந் தாரே. 10

2177. பெண்ணுரு ஆணுரு வல்லாப் பிரம புரநகர் மேய
அண்ணல்செய் யாதன வெல்லா மறிந்து வகைவகை யாலே
நண்ணிய ஞானசம் பந்தன் நவின்றன பத்தும்வல் லார்கள்
விண்ணவ ரோடினி தாக வீற்றிருப் பாரவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருஆலவாய் : திருநீற்றுப்பதிகம் : பண் – காந்தாரம்

2178. மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

2179. வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

2180. முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

2181. காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

2182. பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

2183. அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

2184. எயிலது அட்டது நீறு இருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

2185. இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

2186. மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

2187. குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மால வாயான் திருநீறே. 10

2188. ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 67. திருப்பெரும்புலியூர் : பண் – காந்தாரம்

2189. மண்ணுமோர் பாக முடையார் மாலுமோர் பாக முடையார்
விண்ணுமோர் பாக முடையார் வேத முடைய விமலர்
கண்ணுமோர் பாக முடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாக முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 1

2190. துன்னு கடற்பவ ளஞ்சேர் தூயன நீண்டதிண் டோள்கள்
மின்னு சுடர்க்கொடி போலும் மேனியி னாளொரு கங்கைக்
கன்னி களின்புனை யோடு கலைமதி மாலை கலந்த
பின்னு சடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 2

2191. கள்ள மதித்த கபாலங் கைதனி லேமிக ஏந்தித்
துள்ள மிதித்துநின் றாடுந் தொழில ரெழில்மிகு செல்வர்
வெள்ள நகுதலை மாலை விரிசடை மேல்மிளிர் கின்ற
பிள்ளை மதிப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 3

2192. ஆடலிலைய முடையா ரருமறை தாங்கி யாறங்கம்
பாடலிலைய முடையார் பன்மை யொருமைசெய் தஞ்சும்
ஊடலிலைய முடையார் யோகெனும் பேரொளி தாங்கிப்
பீடலிலைய முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 4

2193. தோடுடை யார்குழைக் காதிற் சுடுபொடி யாரன லாடக்
காடுடை யாரெரி வீசுங் கையுடை யார்கடல் சூழ்ந்த
நாடுடை யார்பொரு ளின்ப நல்லவை நாளு நயந்த
பீடுடை யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 5

2194. கற்ற துறப்பணி செய்து காண்டுமென் பாரவர் தங்கள்
முற்றி தறிதுமென் பார்கள் முதலியர் வேதபு ராணர்
மற்றி தறிதுமென் பார்கள் மனத்திடை யார்பணி செய்யப்
பெற்றி பெரிது முகப்பார் பெரும்புலி யூர்பிரி யாரே. 6

2195. மறையுடை யாரொலி பாடல் மாமலர்ச் சேவடி சேர்வார்
குறையுடை யார்குறை தீர்ப்பார் குழக ரழகர்நம் செல்வர்
கறையுடை யார்திகழ் கண்டங் கங்கை சடையிற் கரந்தார்
பிறையுடை யார்சென்னி தன்மேற் பெரும்புலி யூர்பிரியாரே. 7

2196. உறவியு மின்புறு சீறு மோங்குதல் வீடெளி தாகித்
துறவியுங் கூட்டமுங் காட்டித் துன்பமு மின்பமுந் தோற்றி
மறவியென் சிந்தனை மாற்றி வாழவல் லார்தமக் கென்றும்
பிறவி யறுக்கும் பிரானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 8

2197. சீருடை யாரடி யார்கள் சேடரொப் பார்சடை சேரும்
நீருடை யார்பொடிப் பூசும் நினைப்புடை யார்விரி கொன்றைத்
தாருடை யார்விடை யூர்வார் தலைவரைந் நூற்றுப்பத் தாய
பேருடை யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 9

2198. உரிமை யுடையடி யார்க ளுள்ளுற வுள்கவல் லார்கட்
கருமை யுடையன காட்டி யருள்செயு மாதி முதல்வர்
கருமை யுடைநெடு மாலுங் கடிமல ரண்ணலுங் காணாப்
பெருமை யுடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே.10

2199. பிறைவள ரும்முடிச் சென்னிப் பெரும்புலி யூர்ப்பெருமானை
நறைவள ரும்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள ருந்தமிழ் மாலை வல்லவர் தந்துயர் நீங்கி
நிறைவளர் நெஞ்சின ராகி நீடுல கத்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருக்கடம்பூர் : பண் – காந்தாரம்

2200. வானமர் திங்களும் நீரும் மருவிய வார்சடை யானைத்
தேனமர் கொன்றையி னானைத் தேவர் தொழப்படு வானைக்
கானம ரும்பிணை புல்கிக் கலைபயி லுங்கடம் பூரில்
தானமர் கொள்கையி னானைத் தாள்தொழ வீடெளி தாமே. 1

2201. அரவினொ டாமையும் பூண்டு அந்துகில் வேங்கை யதளும்
விரவுந் திருமுடி தன்மேல் வெண்டிங்கள் சூடி விரும்பிப்
பரவுந் தனிக்கடம் பூரிற் பைங்கண்வெள் ளேற்றண்ணல் பாதம்
இரவும் பகலும் பணிய இன்ப நமக்கது வாமே. 2

2202. இளிபடு மின்சொலி னார்க ளிருங்குழல் மேலிசைந் தேறத்
தெளிபடு கொள்கை கலந்த தீத்தொழி லார்கடம் பூரில்
ஒளிதரு வெண்பிறை சூடி யொண்ணுத லோடுட னாகிப்
புலியத ளாடை புனைந்தான் பொற்கழல் போற்றுது நாமே. 3

2203. பறையொடு சங்க மியம்பப் பல்கொடி சேர்நெடு மாடம்
கறையுடை வேல்வரிக் கண்ணார் கலையொலி சேர்கடம்பூரில்
மறையொலி கூடிய பாடல் மருவிநின் றாடல் மகிழும்
பிறையுடை வார்சடை யானைப் பேணவல் லார்பெரி யோரே. 4

2204. தீவிரி யக்கழ லார்ப்பச் சேயெரி கொண்டிடு காட்டில்
நாவிரி கூந்தனற் பேய்கள் நகைசெய நட்டம் நவின்றோன்
காவிரி கொன்றை கலந்த கண்ணுத லான்கடம் பூரில்
பாவிரி பாடல் பயில்வார் பழியொடு பாவ மிலாரே. 5

2205. தண்புனல் நீள்வயல் தோறுந் தாமரை மேலனம் வைகக்
கண்புணர் காவில்வண் டேறக் கள்ளவி ழுங்கடம் பூரில்
பெண்புனை கூறுடை யானைப் பின்னு சடைப்பெரு மானைப்
பண்புனை பாடல் பயில்வார் பாவமி லாதவர் தாமே. 6

2206.பலிகெழு செம்மலர் சாரப் பாடலொ டாட லறாத
கவிகெழு வீதி கலந்த கார்வயல் சூழ்கடம் பூரில்
ஒலிதிகழ் கங்கை கரந்தா னொண்ணுத லாளுமை கேள்வன்
புலியத ளாடையி னான்றன் புனைகழல் போற்றல் பொருளே. 7

2207.பூம்படு கிற்கயல் பாயப் புள்ளிரி யப்புறங் காட்டில்
காம்படு தோளியர் நாளுங் கண்கவ ருங்கடம் பூரில்
மேம்படு தேவியொர் பாக மேவியெம் மானென வாழ்த்தித்
தேம்படு மாமலர் தூவித் திசைதொழத் தீய கெடுமே. 8

2208.திருமரு மார்பி லவனுந் திகழ்தரு மாமல ரோனும்
இருவரு மாயறி வொண்ணா எரியுரு வாகிய ஈசன்
கருவரை காலி லடர்த்த கண்ணுத லான்கடம் பூரில்
மருவிய பாடல் பயில்வார் வானுல கம்பெறு வாரே. 9

2209.ஆடை தவிர்த்தறங் காட்டு மவர்களு மந்துவ ராடைச்
சோடைகள் நன்னெறி சொல்லார் சொல்லினுஞ் சொல்லலகண்டீர்
வேடம் பலபல காட்டும் விகிர்தன்நம் வேதமு தல்வன்
காடத னில்நட மாடுங் கண்ணுத லான்கடம் பூரே. 10

2210.விடைநவி லுங்கொடி யானை வெண்கொடி சேர்நெடு மாடம்
கடைநவி லுங்கடம் பூரிற் காதல னைக்கடற் காழி
நடைநவில் ஞானசம்பந்தன் நன்மையா லேத்திய பத்தும்
படைநவில் பாடல்ப யில்வார் பழியொடு பாவமி லாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 69. திருப்பாண்டிக்கொடுமுடி : பண் – காந்தாரம்

2211. பெண்ணமர் மேனியி னாரும் பிறைபுல்கு செஞ்சடையாரும்
கண்ணமர் நெற்றியி னாருங் காதம ருங்குழை யாரும்
எண்ணம ருங்குணத் தாரு மிமையவ ரேத்தநின் றாரும்
பண்ணமர் பாடலி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 1

2212.தனைக்கணி மாமலர் கொண்டு தாள்தொழு வாரவர் தங்கள்
வினைப்பகை யாயின தீர்க்கும் விண்ணவர் விஞ்சையர் நெஞ்சில்
நினைத்தெழு வார்துயர் தீர்ப்பார் நிரைவளை மங்கை நடுங்கப்
பனைக்கைப் பகட்டுரி போர்த்தார் பாண்டிக் கொடுமுடி யாரே. 2

2213. சடையமர் கொன்றையி னாருஞ் சாந்தவெண் ணீறணிந்தாரும்
புடையமர் பூதத்தி னாரும் பொறிகிளர் பாம்பசைத் தாரும்
விடையம ருங்கொடி யாரும் வெண்மழு மூவிலைச் சூலப்
படையமர் கொள்கையி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 3

2214. நறைவளர் கொன்றையி னாரும் ஞாலமெல் லாந்தொழு தேத்தக்
கறைவளர் மாமிடற் றாருங் காடரங் காக்கன லேந்தி
மறைவளர் பாடலி னோடு மண்முழ வங்குழல் மொந்தை
பறைவளர் பாடலி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 4

2215. போகமு மின்பமு மாகிப் போற்றியென் பாரவர் தங்கள்
ஆகமு றைவிட மாக அமர்ந்தவர் கொன்றையி னோடும்
நாகமுந் திங்களுஞ் சூடி நன்னுதல் மங்கைதன் மேனிப்
பாகமு கந்தவர் தாமும் பாண்டிக் கொடுமுடி யாரே. 5

2216. கடிபடு கூவிள மத்தங் கமழ்சடை மேலுடை யாரும்
பொடிபட முப்புரஞ் செற்ற பொருசிலை யொன்றுடை யாரும்
வடிவுடை மங்கைதன் னோடு மணம்படு கொள்கையி னாரும்
படிபடு கோலத்தி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 6

2217. ஊனமர் வெண்டலை யேந்தி யுண்பலிக் கென்றுழல் வாரும்
தேனம ரும்மொழி மாது சேர்திரு மேனியி னாரும்
கானமர் மஞ்ஞைக ளாலுங் காவிரிக் கோலக் கரைமேல்
பானல நீறணி வாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 7

2218. புரந்தரன் தன்னொடு வானோர்போற்றியென் றேத்தநின் றாரும்
பெருந்திறல் வாளரக் கன்னைப் பேரிடர் செய்துகந் தாரும்
கருந்திரை மாமிடற் றாருங் காரகில் பன்மணி யுந்திப்
பரந்திழி காவிரிப் பாங்கர்ப் பாண்டிக் கொடுமுடி யாரே. 8

2219. திருமகள் காதலி னானுந் திகழ்தரு மாமலர் மேலைப்
பெருமக னும்மவர் காணாப் பேரழ லாகிய பெம்மான்
மருமலி மென்மலர்ச் சந்து வந்திழி காவிரி மாடே
பருமணி நீர்த்துறை யாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 9

2220. புத்தரும் புந்தியி லாத சமணரும் பொய்ம்மொழி யல்லால்
மெய்த்தவம் பேசிட மாட்டார் வேடம் பலபல வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்கள் தாம்பணிந் தேத்தும் பாண்டிக் கொடுமுடி யாரே. 10

2221. கலமல்கு தண்கடல் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
பலமல்கு வெண்டலை யேந்திப் பாண்டிக் கொடுமுடி தன்னைச்
சொலமல்கு பாடல்கள் பத்துஞ் சொல்லவல் லார்துயர் தீர்ந்து
நலமல்கு சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 70. திருப்பிரமபுரம் : பண் – காந்தாரம் – திருச்சக்கரமாற்று

2222. பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி
புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை
அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலநாம் பரவு மூரே. 1

2223. வேணுபுரம் பிரமனூர் புகலிபெரு வெங்குரு வெள்ளத் தோங்குந்
தோணிபுரம் பூந்தராய் தூநீர்ச் சிரபுரம் புறவங் காழி
கோணிய கோட்டாற்றுக் கொச்சை வயஞ்சண்பை கூருஞ் செல்வங்
காணிய வையகத்தா ரேத்துங் கழுமலநாங் கருது மூரே. 2

2224. புகலி சிரபுரம் வேணுபுரஞ் சண்பை புறவங் காழி
நிகரில் பிரமபுரங் கொச்சை வயநீர்மேல் நின்ற மூதூர்
அகலிய வெங்குருவோ டந்தண் டராயமரர் பெருமாற் கின்பம்
பகரு நகர்நல்ல கழுமலநாங் கைதொழுது பாடுமூரே. 3

2225. வெங்குருத் தண்புகலி வேணுபுரஞ் சண்பை வெள்ளங் கொள்ளத்
தொங்கிய தோணிபுரம் பூந்தராய் தொகுபிரம புரந்தொல் காழி
தங்கு பொழிற்புறவங் கொச்சை வயந்தலைபண் டாண்ட மூதூர்
கங்கை சடைமுடிமே லேற்றான் கழுமலநாங் கருது மூரே. 4

2226. தொன்னீரிற் றோணிபுரம் புகலி வெங்குருத் துயர்தீர் காழி
இன்னீர வேணுபுரம் பூந்தராய் பிரமனூ ரெழிலார் சண்பை
நன்னீர பூம்புறவங் கொச்சை வயஞ்சிலம்ப னகரா நல்ல
பொன்னீர புன்சடையான் பூந்தண் கழுமலநாம் புகழு மூரே. 5

2227. தண்ணந் தராய்புகலி தாமரையா னூர்சண்பை தலைமுனாண்ட
அண்ணல்நகர் கொச்சை வயந்தண் புறவஞ்சீ ரணியார் காழி
விண்ணியல்சீர் வெங்குருநல் வேணுபுரந் தோணிபுர மேலாரேத்து
கண்ணுதலான் மேவியநற் கழுமலநாங் கைதொழுது கருது மூரே. 6

2228.சீரார் சிரபுரமுங் கொச்சைவயஞ் சண்பையொடு புறவநல்ல
ஆராத் தராய்பிரம னூர்புகலி வெங்குருவோ டந்தண் காழி
ஏரார் கழுமலமும் வேணுபுரந் தோணிபுர மென்றென் றுள்கிப்
பேரால் நெடியவனுநான்முகனுங் காண்பரிய பெருமா னூரே. 7

2229.புறவஞ் சிரபுரமுந் தோணிபுரஞ் சண்பைமிகு புகலி காழி
நறவ மிகுசோலைக் கொச்சை வயந்தராய் நான்முகன்றனூர்
விறலாய வெங்குருவும் வேணுபுரம் விசயன் மேலம் பெய்து
திறலா லரக்கனைச் செற்றான்றன் கழுமலநாஞ் சேரு மூரே. 8

2230.சண்பை பிரமபுரந் தண்புகலி வெங்குரு நற்காழி சாயாப்
பண்பார் சிரபுரமுங் கொச்சை வயந்தராய் புறவம் பார்மேல்
நண்பார் கழுமலஞ்சீர் வேணுபுரந் தோணிபுர நாணிலாத
வெண்பற் சமணரொடு சாக்கியரை வியப்பழித்த விமல னூரே. 9

2231.செழுமலிய பூங்காழி புறவஞ் சிரபுரஞ்சீர்ப் புகலி செய்ய
கொழுமலரான் நன்னகரந் தோணிபுரங் கொச்சைவயஞ் சண்பையாய
விழுமியசீர் வெங்குருவோ டோங்குதராய் வேணுபுர மிகுநன்மாடக்
கழுமலமென் றின்னபெயர் பன்னிரண்டுகண்ணுதலான் கருதுமூரே. 10

2232.கொச்சை வயம்பிரம னூர்புகலி வெங்குருப் புறவங் காழி
நிச்சல் விழவோவா நீடார் சிரபுரநீள் சண்பை மூதூர்
நச்சினிய பூந்தராய் வேணுபுரந் தோணிபுர மாகி நம்மேல்
அச்சங்கள் தீர்த்தருளு மம்மான் கழுமலநா மமரு மூரே. 11

2233.காவி மலர்புரைங் கண்ணார் கழுமலத்தின் பெயரை நாளும்
பாவியசீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவல் மாலை
நாவின் நலம்புகழ்சீர் நான்மறையான் ஞான சம்பந்தன் சொன்ன
மேவியிசை மொழிவார் விண்ணவரி லெண்ணுதலை விருப்புளாரே. 12

திருச்சிற்றம்பலம்

*****

## 71. திருக்குறும்பலா : பண் – காந்தாரம்

2234.திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல் புரிந்தசெல்வர்
இருந்த இடம்வினவில் ஏலங்கமழ் சோலையின வண்டுயாழ்செய்
குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 1

2235.நாட்பலவுஞ் சேர்மதியஞ் சூடிப் பொடியணிந்த நம்பான்நம்மை
ஆட்பலவுந் தானுடைய அம்மா னிடம்போலு மந்தண்சாரல்
கீட்பலவுங் கீண்டுகிளை கிளையன் மந்திபாய்ந் துண்டுவிண்ட
கோட்பலவின் தீங்கனியை மாக்கடுவ னுண்டுகளுங் குறும்பலாவே. 2

2236.வாடற் றலைமாலை சூடிப் புலித்தோல் வலித்து வீக்கி
ஆட லரவசைத்த அம்மா னிடம்போலு மந்தண்சாரல்
பாடற் பெடைவண்டு போதலர்த்தத் தாதவிழ்ந்து பசும் பொன்னுந்திக்
கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 3

2237.பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடியாடிக்
கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்
நீல மலர்க்குவளை கண்திறக்க வண்டரற்று நெடுந்தண் சாரல்
கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங் குறும்பலாவே. 4

2238.தலைவாண் மதியங் கதிரிவிரியத் தண்புனலைத் தாங்கித்தேவி
முலைபாகங் காதலித்த மூர்த்தி யிடம்போலும் முதுவேய்சூழ்ந்த
மலைவா யசும்பு பசும்பொன் கொழித்திழியும் மல்குசாரல்
குலைவாழைத் தீங்கனியும் மாங்கனியுந் தேன்பிலிற்றுங் குறும்பலாவே. 5

2239.நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக் கண்ணர்
கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங் குளிர்சூழ் வெற்பில்
ஏற்றேன மேன மிவையோ டவைவிரவி யிழிபூஞ்சாரல்
கோற்றே னிசைமுரலக் கேளாக் குயில்பயிலுங் குறும் பலாவே. 6

2240.பொன்றொத்த கொன்றையும் பிள்ளை மதியும் புனலுஞ் சூடிப்
பின்றொத்தா வார்சடையெம் பெம்மா னிடம்போலும் பிலயந்தாங்கி
மன்றத்து மண்முழவ மோங்கி மணிகொழித்து வயிரமுந்திக்
குன்றத் தருவி யயலே புனல்ததும்புங் குறும்பலாவே. 7

2241.ஏந்து திணிதிண்டோ ளிராவணனை மால்வரைக்கீ ழடரவூன்றிச்
சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ் சாரற்சாரல்
பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலிய ஏந்திக்
கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங் குறும்பலாவே. 8

2242.அரவி னணையானும் நான்முகனுங் காண்பரிய அண்ணல்சென்னி
விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் விரிபூஞ்சாரல்
மரவ மிருகரையு மல்லிகையுஞ் சண்பகமு மலர்ந்துமாந்தக்
குரவ முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 9

2243.மூடிய சீவரத்தர் முன்கூறுண் டேறுதலும் பின்கூறுண்டு
காடி தொடுசமணைக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ் வெற்பில்
நீடுயர் வேய்குனியப் பாய்கடுவன் நீள்கழைமேல் நிருத்தஞ்செய்யக்
கூடிய வேடுவர்கள் கூய்விளியாக் கைமறிக்குங் குறும்பலாவே. 10

2244.கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற்றண்ணல்
நம்பா னடிபரவும் நான்மறையான் ஞான சம்பந்தன்சொன்ன
இன்பாய பாடலிவைப்பத்தும் வல்லார் விரும் பிக்கேட்பார்
தம்பால தீவினைகள் போயகலும் நல்வினைகள் தளராவன்றே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருநணா : பண் – காந்தாரம்

2245.பந்தார் விரன்மடவாள் பாகமா நாகம்பூண் டேறதேறி
அந்தா ரரவணிந்த அம்மா னிடம்போலும் மந்தண்சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன் தெளியொளிரத் தேமாக்கனியுதிர்க்குந் திருநணாவே. 1

2246.நாட்டம் பொலிந்திலங்கு நெற்றியினான் மற்றொருகை வீணையேந்தி
ஈட்டுந் துயரறுக்கு மெம்மா னிடம்போலு மிலைசூழ்கானில்
ஓட்டந் தருமருவி வீழும் விசைக்காட்ட முந்தூழோசைச்
சேட்டார் மணிக ளணியுந் திரைசேர்க்குந் திருநணாவே. 2

2247.நன்றாங் கிசைமொழிந்து நன்னுதலாள் பாகமாய் ஞாலமேத்த
மின்தாங்கு செஞ்சடையெம் விகிர்தர்க் கிடம்போலும் விரைசூழ்வெற்பில்
குன்றோங்கி வன்றிரைகள் மோத மயிலாலுஞ் சாரற்செவ்வி
சென்றோங்கி வானவர்க ளேத்தி யடிபணியுந் திருநணாவே. 3

2248.கையில் மழுவேந்திக் காலிற் சிலம்பணிந்து கரித்தோல்கொண்டு
மெய்யில் முழுதணிந்த விகிர்தர்க் கிடம்போலு மிடைந்து வானோர்
ஐய அரனே பெருமா னருளென்றென் றாதரிக்கச்
செய்ய கமலம் பொழில்தே னளித்தியலுந் திரு நணாவே. 4

2249.முத்தேர் நகையா ளிடமாகத் தம்மார்பில் வெண்ணூல்பூண்டு
தொத்தேர் மலர்சடையில் வைத்தா ரிடம்போலுஞ் சோலைசூழ்ந்த
அத்தே னளியுண் களியா லிசைமுரல வாலத்தும்பி
தெத்தே யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந் திருநணாவே. 5

2250.வில்லார் வரையாக மாநாக நாணாக வேடங்கொண்டு
புல்லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும் புலியுமானும்
அல்லாத சாதிகளு மங்கழல்மேற் கைகூப்ப அடியார்கூடிச்
செல்லா வருநெறிக்கே செல்ல அருள்புரியுந் திருநணாவே. 6

2251.கானார் களிற்றுரிவை மேல்மூடி யாடரவொன் றரைமேற்சாத்தி
ஊனார் தலையோட்டி லூணுகந்தான் தானுகந்த கோயிலெங்கும்
நானா விதத்தால் விரதிகள் நன்னாமமே யேத்திவாழ்த்தத்
தேனார் மலர்கொண் டடியா ரடிவணங்குந் திருநணாவே. 7

2252.மன்னீ ரிலங்கையர்தங் கோமான் வலிதொலைய விரலாலூன்றி
முந்நீர்க் கடல்நஞ்சை யுண்டார்க் கிடம்போலும் முனைசேர்சீயம்
அன்னீர் மைகுன்றி யழலால் விழிகுறைய வழியுமுன்றிற்
செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்குந் திருநணாவே. 8

2253.மையார் மணிமிடறன் மங்கையோர் பங்குடையான் மனை கள்தோறும்
கையார் பலியேற்ற கள்வ னிடம்போலுங் கழல்கள்நேடிப்
பொய்யா மறையானும் பூமி யளந்தானும் போற்றமன்னிச்
செய்யா ரெரியா முருவ முறவணங்குந் திருநணாவே. 9

2254.ஆடை யொழித்தங் கமணே திரிந்துண்ப ரல்லல்பேசி
மூடுருவ முகந்தா ருரை யகற்றும் மூர்த்திகோயில்
ஓடு நதிசேரு நித்திலமும் மொய்த்தகிலுங் கரையிற்சாரச்
சேடர் சிறந்தேத்தத் தோன்றி யொளிபெருகுந் திருநணாவே. 10

2255.கல்வித் தகத்தால் திரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார்
நல்வித் தகத்தா லினிதுணரும் ஞானசம் பந்தனெண்ணும்
சொல்வித் தகத்தா லிறைவன் திருநணா ஏத்துபாடல்
வல்வித் தகத்தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 73. திருப்பிரமபுரம் : பண் – காந்தாரம்

2256.விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங் குருமேற் சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்வண் புறவமண்மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங் கொச்சைகழு மலமென் றின்ன
இளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர்தம் பகையெறிவித் திறைவனூரே. 1

2257.திருவளருங் கழுமலமே கொச்சை தேவேந்திரனூ ரயனூர் தெய்வத்
தருவளரும் பொழிபுறவஞ் சிலம்பனூர் காழிதகு சண்பை யொண்பா
உருவளர்வெங் குருப்புகலி யோங்குதராய் தோணிபுர முயர்ந்ததேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள் கண்டத்தோன் விரும்புமூரே. 2

2258.வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம் பூந்தராய் சிலம்பன்வாழூர்
ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழிற் காழியிறை கொச்சையம்பொன்
வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய மிக்கயனூ ரமரர்கோனூர்
ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ தரன்நாளு மமருமூரே. 3

2259.மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப் புகலிதராய்தோணி புரம்வான்
சேமமதில் புடைதிகழுங் கழுமலமே கொச்சைதேவேந் திரனூர்சீர்ப்
பூமகனூர் பொலிவுடைய புறவம்விறற் சிலம்பனூர் காழிசண்பை
பாமருவு கலையெட்டெட் டுணர்ந்தவற்றின் பயன்நுகர்வோர் பரவுமூரே. 4

2260.தரைத்தேவர் பணிசண்பை தமிழ்க்காழி வயங்கொச்சைதயங்கு பூமேல்
விரைச்சேருங் கழுமலமெய் புணர்ந்தயனூர் விண்ணவர்தங் கோனூர்வென்றித்
திரைச்சேரும் புனற்புகலி வெங்குருச் செல்வம் பெருகு தோணிபுரஞ்சீர்
உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவ முலகத்தி லுயர்ந்த வூரே. 5

2261. புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு சிரபுரம்பூங் காழிசண்பை
எண்டிசையோ ரிறைஞ்சியவெங் குருப்புகலி பூந்தராய் தோணிபுரஞ்சீர்
வண்டமரும் பொழில்மல்கு கழுமலநற் கொச்சைவா னவர்தங் கோனூர்
அண்டயனூ ரிவையென்ப ரருங்கூற்றை யுதைத்துகந்த அப்பனூரே. 6

2262.வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங் கோனூர்வண் புகலியிஞ்சி
வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு சண்பைவியன் காழிகொச்சை
கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந் தோணிபுரம் பூந்தராய்சீர்ப்
பண்மலியுஞ் சிரபுரம்பார் புகழ்புறவம் பால்வண்ணன் பயிலுமூரே. 7

2263.மோடிபுறங் காக்குமூர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர் காழிமூதூர்
நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை வேணுபுரங்கமலநீடு
கூடியய னூர்வளர்வெங் குருப்புகலி தராய்தோணி புரங்கூடப்போர்
தேடியுழ லவுணர்பயில் திரிபுரங்கள் செற்றமலைச் சிலையனூரே. 8

2264.இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம் பூந்தராய் சிலம்பன்றன்னூர்
நிரக்கவரு புனற்புறவ நின்றதவத் தயனூர்சீர்த் தேவர்கோனூர்
வரக்கரவாப் புகலிவெங் குருமாசி லாச்சண்பை காழிகொச்சை
அரக்கன்விற லழித்தருளி கழுமலந் தணர்வேத மறாதவூரே. 9

2265.மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங் கொச்சையிந் திரனூர் மெய்ம்மை
நூலோது மயன்றனூர் நுண்ணறிவார் குருப்புகலி தராய்தூநீர்மேல்
சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ் சிலம்பனூர் செருச் செய்தன்று
மாலோடு மயனறியான் வண்காழி சண்பை மண்ணோர் வாழ்த்துமூரே. 10

2266.ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர் கொச்சைகழு மலமன்பானூர்
ஒக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமொண் புறவநண்பார்
பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர் புகலிவெங் குருவுமென்பர்
சாக்கியரோ டமண்கையர் தாமறியா வகைநின்றான் தங்குமூரே. 11

2267.அக்கரஞ்சேர் தருமனூர் புகலிதராய் தோணிபுர மணிநீர்ப் பொய்கை
புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர் புகழ்க்காழி சண்பை தொல்லூர்
மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம் வேணுபுர மயனூர்மேலிச்
சக்கரஞ்சீர்த் தமிழ்விரகன் றான்சொன்ன தமிழ்தரிப்போர் தவஞ்செய்தோரே.12

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 74. திருப்பிரமபுரம் : பண் – காந்தாரம்

### திருக்கோமுத்திரி

2268.பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர் குறைவிலாப் புகலிபூமேல்
மாமகளூர் வெங்குருநற் றோணிபுரம் பூந்தராய் வாய்ந்தஇஞ்சிச்
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை புகழ்ச்சண்பை காழிகொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர் கழுமலநாங் கருதூமூரே. 1

2269.கருத்துடைய மறையவர்சேர் கழுமலமெய்த் தோணிபுரங் கனகமாட
உருத்திகழ்வெங் குருப்புகலி யோங்குதரா யுலகாருங் கொச்சைகாழி
திருத்திகழுஞ் சிரபுரந்தே வேந்திரனூர் செங்கமலத் தயனூர்தெய்வத்
தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பைசடை முடியண்ணல் தங்குமூரே. 2

2270.ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை யொளிமருவு காழிகொச்சை
கார்மலியும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த் தோணிபுரங் கற்றோரேத்துஞ்
சீர்மருவு பூந்தராய் சிரபுரமெய்ப் புறவமய னூர்பூங்கற்பத்
தார்மருவு மிந்திரனூர் புகலிவெங் குருக்கங்கை தரித்தோனூரே. 3

2271.தரித்தமறை யாளர்மிகு வெங்குருசீர்த் தோணிபுரந் தரியாரிஞ்சி
எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந் தராய்புகலி யிமையோர்கோனூர்
தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சீர் திகழ்காழி சண்பைசெழு மறைகளெல்லாம்
விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோ னூருலகில் விளங்குமூரே. 4

2272.விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை வேணுபுர மேகமேய்க்கும்
இளங்கமுகம் பொழிற்றோணி புரங்காழி யெழிற்புகழி புறவமேரார்
வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச் சிரபுரம்வன் னஞ்சமுண்டு
களங்கமலி களத்தவன்சேர்க் கழுமலங்கா மன்னுடலங் காய்ந்தோனூரே. 5

2273.காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர் கழுமலமாத் தோணிபுரஞ்சீர்
ஏய்ந்தவெங் குருப்புகலி யிந்திரனூ ரிருங்கமலத் தயனூரின்பம்
வாய்ந்தபுற வந்திகழுஞ் சிரபுரம்பூந் தராய்கொச்சை காழிசண்பை
சேந்தனைமுன் பயந்துலகில் தேவர்கள்தம் பகைகெடுத்தோன் திகழுமூரே. 6

2274.திகழ்மாட மலிசண்பை பூந்தராய் பிரமனூர் காழிதேசார்
மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம் வயங்கொச்சை புறவம்விண்ணோர்
புகழ்புகலி கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங் குருவெம்போர் மகிடற்செற்று
நிகழ்நீலி நின்மலன்றன் னடியிணைகள் பணிந்துலகில் நின்றவூரே. 7

2275.நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி புரநிகழும் வேணுமன்றில்
ஒன்றுகழு மலங்கொச்சை யுயர்காழி சண்பைவளர் புறவமோடி
சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந் தராய்புகலி தேவர்கோனூர்
வென்றிமலி பிரமபுரம் பூதங்கள் தாங்காக்க மிக்கவூரே. 8

2276.மிக்ககம லத்தயனூர் விளங்குபுற வஞ்சண்பை காழிகொச்சை
தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம் பூந்தராய் சிலம்பன்சேரூர்
மைக்கொள்பொழில் வேணுபுர மதிற்புகலி வெங்குருவல் லரக்கன் திண்டோள்
ஒக்கஇருபதுமுடிக ளொருபதுமீ டழித்துகந்த எம்மானூரே. 9

2277.எம்மான்சேர் வெங்குருச்சீர்ச் சிலம்பனூர் கழுமலநற் புகலியென்றும்
பொய்ம்மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந் தரனூர்நற் றோணிபுரம்போர்க்
கைம்மாவை யுரிசெய்தோன் காழியய னூர்தராய் சண்பைகாரின்
மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழலாய் விளங்கிய எம்இறைவனூரே. 10

2278.இறைவனமர் சண்பையெழிற் புறவம்ய னூரிமையோர்க் கதிபன்சேரூர்
குறைவில்புகழ்ப் புகலிவெங் குருத்தோணி புரங்குணமார் பூந்தராய்நீர்ச்
சிறைமலிநற் சிரபுரஞ்சீர்க் காழிவளர் கொச்சைகழு மலந்தேசின்றிப்
பறிதலையோ டமண்கையர் சாக்கியர்கள் பரிசறியா அம்மானூரே. 11

2279.அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங் குருக்கொச்சை புறவமஞ்சீர்
மெய்ம்மானத் தொண்புகலி மிகுகாழி தோணிபுரந் தேவர்கோனூர்
அம்மான்மன் னுயர்சண்பை தராயயனூர் வழிமுடக்கு மாவின்பாச்சல்
தம்மானொன் றியஞான சம்பந்தன் தமிழ்கற்போர் தக்கோர்தாமே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 75. சீகாழி : பண் – காந்தாரம்

2280.விண்ணி யங்குமதிக் கண்ணி யான்விரி யுஞ்சடைப்
பெண்ண யங்கொள்திரு மேனியான்பெரு மானனற்
கண்ண யங்கொள்திரு நெற்றியான் கலிக்காழியுள்
மண்ண யங்கொள்மறை யாளரேத்துமலர்ப் பாதனே. 1

2281.வலிய காலனுயிர் வீட்டினான்மட வாளொடும்
பலிவி ரும்பியதொர் கையினான்பர மேட்டியான்
கலியை வென்றமறை யாளர்தங்கலிக் காழியுள்
நலிய வந்தவினை தீர்த்துகந்தஎந் நம்பனே. 2

2282.சுற்ற லாநற்புலித் தோலசைத்தயன் வெண்டலைத்
துற்ற லாயதொரு கொள்கையான்சுடு நீற்றினான்
கற்றல் கேட்டலுடை யார்கள்வாழ்கலிக் காழியுள்
மற்ற யங்குதிரள் தோளெம்மைந்தனவ னல்லனே. 3

2283.பல்ல யங்குதலை யேந்தினான்படு கானிடை
மல்ல யங்குதிரள் தோள்களார்நட மாடியுங்
கல்ல யங்குதிரை சூழநீள்கலிக் காழியுள்
தொல்ல யங்குபுகழ் பேணநின்றசுடர் வண்ணனே. 4

2284.தூந யங்கொள்திரு மேனியிற்பொடிப் பூசிப்போய்
நாந யங்கொள்மறை யோதிமாதொரு பாகமாக்
கான யங்கொள்புனல் வாசமார்கலிக் காழியுள்
தேன யங்கொள்முடி ஆனைந்தாடிய செல்வனே. 5

2285.சுழியி லங்கும்புனற் கங்கையாள்சடை யாகவே
மொழியி லங்கும்மட மங்கைபாகமு கந்தவன்
கழியி லங்குங்கடல் சூழுந்தண்கலிக் காழியுள்
பழியி லங்குந்துய ரொன்றிலாப்பர மேட்டியே. 6

2286.முடியி லங்குமுயர் சிந்தையான்முனி வர்தொழ
அடியி லங்குங்கழ லார்க்கவேயன லேந்தியுங்
கடியி லங்கும்பொழில் சூழுந்தண்கலிக் காழியுள்
கொடியி லங்கும்மிடை யாளொடுங்குடி கொண்டதே. 7

2287.வல்ல ரக்கன்வரை பேர்க்கவந்தவன் தோள்முடி
கல்ல ரக்கிவ்விறல் வாட்டினான்கலிக் காழியுள்
நல்லொ ருக்கியதொர் சிந்தையார்மலர் தூவவே
தொல்லி ருக்கும்மறை யேத்துகந்துடன் வாழுமே. 8

2288 மருவு நான்மறை யோனுமாமணி வண்ணனும்
இருவர் கூடியிசைந் தேத்தவேயெரி யான்றனூர்
வெருவ நின்றதிரை யோதம்வார்வியன் முத்தவை
கருவை யார்வயற் சங்குசேர்கலிக் காழியே. 9

2289 நன்றி யொன்றுமுண ராதவன்சமண் சாக்கியர்
அன்றி யங்கவர் சொன்னசொல்லவை கொள்கிலான்
கன்று மேதியிளங் கானல்வாழ்கலிக் காழியுள்
வென்றி சேர்வியன் கோயில்கொண்டவிடை யாளனே. 10

2290. கண்ணு மூன்றுமுடை யாதிவாழ்கலிக் காழியுள்
அண்ண லந்தண்ணருள் பேணிஞானசம் பந்தன்சொல்
வண்ண மூன்றுந்தமி ழில்தெரிந்திசை பாடுவார்
விண்ணு மண்ணும்விரி கின்றதொல்புக ழாளரே. 11

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 76. திருஅகத்தியான்பள்ளி : பண் – காந்தாரம்

2291. வாடிய வெண்டலை மாலைசூடி மயங்கிருள்
நீடுயர் கொள்ளி விளக்குமாக நிவந்தெரி
ஆடிய எம்பெரு மானகத்தியான் பள்ளியைப்
பாடிய சிந்தையி னார்கட்கில்லையாம் பாவமே. 1

2292. துன்னங்கொண்ட வுடையான் துதைந்தவெண் ணீற்றினான்
மன்னுங்கொன்றை மதமத்தஞ் சூடினான் மாநகர்
அன்னந்தங்கும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியை
உன்னஞ்செய்த மனத்தார்கள் தம்வினை யோடுமே. 2

2293. உடுத்ததுவும் புலித்தோல் பலிதிரிந் துண்பதுங்
கடுத்துவந்த கழற்காலன் றன்னையுங் காலினால்
அடர்த்ததுவும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியான்
தொடுத்தது வுஞ்சர முப்புரந் துகளாகவே. 3

2294. காய்ந்ததுவு மன்றுகாமனை நெற்றிக் கண்ணினால்
பாய்ந்ததுவுங் கழற்காலனைப் பண்ணி னான்மறை
ஆய்ந்ததுவும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியான்
ஏய்ந்ததுவும் மிமவான் மகளொரு பாகமே. 4

2295.போர்த்ததுவுங் கரியின் னுரிபுலித் தோலுடை
கூர்த்ததோர் வெண்மழு வேந்திக்கோளர வம்மரைக்
கார்த்ததுவும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியான்
பார்த்ததுவும் அரணம் படரெரி மூழ்கவே. 5

2296.தெரிந்ததுவுங் கணையொன்று முப்புரஞ் சென்றுடன்
எரிந்ததுவு முன்னெழிலார் மலருறை வான்றலை
அரிந்ததுவும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியான்
புரிந்ததுவு முமையாளொர் பாகம் புனைதலே. 6

2297.ஓதியெல்லா முலகுக்கோ ரொண்பொரு ளாகிமெய்ச்
சோதியென்று தொழுவா ரவர்துயர் தீர்த்திடும்
ஆதியெங்கள் பெருமா னகத்தியான் பள்ளியை
நீதியால் தொழுவா ரவர்வினை நீங்குமே. 7

2298.செறுத்ததுவுந் தக்கன் வேள்வியைத்திருந் தார்புரம்
ஒறுத்ததுவும் ஒளிமா மலருறை வான்சிரம்
அறுத்ததுவும் பொழில்சூ ழகத்தியான் பள்ளியான்
இறுத்ததுவு மரக்கன்றன் தோள்க ளிருபதே. 8

2299.சிரமுநல்ல மதிமத்த முந்திகழ் கொன்றையும்
அரவமல்குஞ் சடையா னகத்தியான் பள்ளியைப்
பிரமனோடு திருமாலுந் தேடிய பெற்றிமை
பரவவல்லா ரவர்தங்கள் மேல்வினை பாறுமே. 9

2300.செந்துவ ராடையினாரும் வெற்றரை யேதிரி
புந்தியி லார்களும் பேசும்பேச்சவை பொய்ம்மொழி
அந்தண னெங்கள்பிரா னகத்தியான் பள்ளியைச்
சிந்திமின் நும்வினை யானவைசிதைந் தோடுமே. 10

2301.ஞால மல்குந்தமிழ் ஞானசம்பந்தன் மாமயில்
ஆலுஞ்சோலை புடைசூ ழகத்தியான் பள்ளியுள்
சூலநல்ல படையா னடிதொழு தேத்திய
மாலைவல்லா ரவர்தங்கள் மேல்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 77. திருஅறையணிநல்லூர் : பண் – காந்தாரம்

2302.பீடினாற்பெரி யோர்களும் பேதைமைகெடத் தீதிலா
வீடினாலுயர்ந் தார்களும் வீடிலாரிள வெண்மதி
சூடினார்மறை பாடினார் சுடலைநீறணிந் தாரழல்
ஆடினாரறை யணிநல்லூ ரங்கையாற்றொழு வார்களே. 1

2303.இலையினால்சூல மேறுகந் தேறியேயிமை யோர்தொழ
நிலையினாலொரு காலுறச் சிலையினால்மதி லெய்தவன்
அலையினார்புனல் சூடிய அண்ணலாரறை யணிநல்லூர்
தலையினாற்றொழு தோங்குவார் நீங்குவார்தடு மாற்றமே. 2

2304.என்பினார்கனல் சூலத்தா ரிலங்குமாமதி யுச்சியான்
பின்பினாற்பிறங் குஞ்சடைப் பிஞ்ஞகன்பிறப் பிலியென்று
முன்பினார்மூவர் தாந்தொழு முக்கண்மூர்த்திதன் தாள்களுக்
கன்பினாரறை யணிநல்லூ ரங்கையாற்றொழு வார்களே. 3

2305.விரவுநீறுபொன் மார்பினில் விளங்கப்பூசிய வேதியன்
உரவுநஞ்சமு தாகவுண் டுறுதிபேணுவ தன்றியும்
அரவுநீள்சடைக் கண்ணியா ரண்ணலாரறை யணிநல்லூர்
பரவுவார்பழி நீங்கிடப் பறையுந்தாஞ்செய்த பாவமே. 4

2306.தீயினார்திகழ் மேனியாய் தேவர்தாந்தொழு தேவன்நீ
ஆயினாய்கொன்றை யாயன லங்கையாயறை யணிநல்லூர்
மேயினார்தம தொல்வினை வீட்டினாய்வெய்ய காலனைப்
பாயினாயதிர் கழலினாய் பரமனேயடி பணிவனே. 5

2307.விரையினார்கொன்றை சூடியும் வேகநாகமும் வீக்கிய
அரையினாரறை யணிநல்லூ ரண்ணலாரழ காயதோர்
நரையினார்விடை யூர்தியார் நக்கனார்நறும் போதுசேர்
உரையினாலுயர்ந் தார்களு முரையினாலுயர்ந் தார்களே. 6

2308.வீரமாகிய வேதியர் வேகமாகளி யானையின்
ஈரமாகிய வுரிவைபோர்த் தரிவைமேற்சென்ற எம்மிறை
ஆரமாகிய பாம்பினா ரண்ணலாரறை யணிநல்லூர்
வாரமாய்நினைப் பார்கள்தம் வல்வினையவை மாயுமே. 7

2309.தக்கனார்பெரு வேள்வியைத் தகர்த்துகந்தவன் தாழ்சடை
முக்கணான்மறை பாடிய முறைமையான்முனி வர்தொழ
அக்கினோடெழி லாமைபூ ணண்ணலாரறை யணிநல்லூர்
நக்கனாரவர் சார்வலா னல்கு சார்விலோம் நாங்களே. 8

2310. வெய்யநோயிலர் தீதிலர் வெறியராய்ப்பிறர் பின்செலார்
செய்வதேயலங் காரமா மிவையிவைதேறி யின்புறில்
ஐயமேற்றுணு தொழிலரா மண்ணலாரறை யணிநல்லூர்ச்
சைவனாரவர் சார்வலால் யாதுஞ்சார்விலோம் நாங்களே. 9

2311. வாக்கியஞ்சொல்லி யாரொடும் வகையலாவகை செய்யமின்
சாக்கியஞ்சம ணென்றிவை சாரேலும்மர ணம்பொடி
ஆக்கியம்மழு வாட்படை யண்ணலாரறை யணிநல்லூர்ப்
பாக்கியங்குறை யுடையீரேற் பறையுமாஞ்செய்த பாவமே. 10

2312. கழியுலாங்கடற் கானல்சூழ் கழுமலமமர் தொல்பதிப்
பழியிலாமறை ஞானசம் பந்தன்நல்லதோர் பண்பினார்
மொழியினாலறை யணிநல்லூர் முக்கண்மூர்த்திதன் தாள்தொழக்
கெழுவினாரவர் தம்மொடுங் கேடில்வாழ்பதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 78. திருவிளநகர் : பண் – காந்தாரம்

2313. ஒளிரிளம்பிறை சென்னிமே லுடையர்கோவண ஆடையர்
குளிரிளம்மழை தவழ்பொழிற் கோலநீர்மல்கு காவிரி
நளிரிளம்புனல் வார்துறை நங்கைகங்கையை நண்ணினார்
மிளிரிளம்பொறி யரவினார் மேயதுவிள நகரதே. 1

2314. அக்கரவ்வணி கலனென அதனொடார்த்ததோ ராமைபூண்
டுக்கவர்சுடு நீறணிந் தொளிமல்குபுனற் காவிரிப்
புக்கவர்துயர் கெடுகெனப் பூசுவெண்பொடி மேவிய
மிக்கவர்வழி பாடுசெய் விளநகரவர் மேயதே. 2

2315. வாளிசேரடங் கார்மதில் தொலையநூறிய வம்பின்வேய்த்
தோளிபாக மமர்ந்தவ ருயர்ந்ததொல்கடல் நஞ்சுடன்
காலமல்கிய கண்டத்தர் கதிர்விரிசுடர் முடியினர்
மீளியேறுகந் தேறினார் மேயதுவிள நகரதே. 3

2316. கால்விளங்கெரி கழலினார் கையிலங்கிய வேலினார்
நூல்விளங்கிய மார்பினார் நோயிலார்பிறப் பும்மிலார்
மால்விளங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினார்
மேல்விளங்குவெண் பிறையினார் மேயதுவிள நகரதே. 4

2317. பன்னினார்மறை பாடினார் பாயசீர்ப்பழங் காவிரித்
துன்னுதண்டுறை முன்னினார் தூநெறிபெறு வாரெனச்
சென்னிதிங்களைப் பொங்கராக் கங்கையோடுடன் சேர்த்தினார்
மின்னுபொன்புரி நூலினார் மேயதுவிள நகரதே. 5

2318. தேவரும்மம ரர்களுந் திசைகள்மேலுள தெய்வமும்
யாவரும்மறி யாததோ ரமைதியாற்றழ லுருவினார்
மூவரும்மிவ ரென்னவும் முதல்வரும்மிவ ரென்னவும்
மேவரும்பொரு ளாயினார் மேயதுவிள நகரதே. 6

2319. சொற்றரும்மறை பாடினார் சுடர்விடுஞ்சடை முடியினார்
கற்றருவ்வடங் கையினார் காவிரித்துறை காட்டினார்
மற்றருந்திரள் தோளினார் மாசில்வெண்பொடிப் பூசினார்
விற்றரும்மணி மிடறினார் மேயதுவிள நகரதே. 7

2320. படர்தருஞ்சடை முடியினார் பைங்கழலடி பரவுவார்
அடர்தரும்பிணி கெடுகென அருளுவாரர வரையினார்
விடர்தரும்மணி மிடறினார் மின்னுபொன்புரி நூலினார்
மிடறரும்படை மழுவினார் மேயதுவிள நகரதே. 8

2321. கையிலங்கிய வேலினார் தோலினார்கரி காலினார்
பையிலங்கர வல்குலாள் பாகமாகிய பரமனார்
மையிலங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினார்
மெய்யிலங்குவெண் ணீற்றினார் மேயதுவிள நகரதே. 9

2322 உள்ளதன்றனைக் காண்பன்கீ ழென்றமாமணி வண்ணனும்
உள்ளதன்றனைக் காண்பன்மே லென்றமாமல ரண்ணலும்
உள்ளதன்றனைக் கண்டிலா ரொளியார்தருஞ்சடைமுடியின்மேல்
உள்ளதன்றனைக் கண்டிலா வொளியார்விளநகர் மேயதே. 10

2323. மென்சிறைவண் டியாழ்முரல் விளநகர்த்துறை மேவிய
நன்பிறைநுத லண்ணலைச் சண்பைஞானசம் பந்தன்சீர்
இன்புறுந்தமி ழாற்சொன்ன ஏத்துவார்வினை நீங்கிப்போய்த்
துன்புறுந்துய ரம்மிலாத் தூநெறிபெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

♦♦♦♦♦

## 79. திருவாரூர் : பண்– காந்தாரம்

2324.பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்ட் வுண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கி னாயே,
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய காள கண்டன்,
அவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 1

2325.தந்தையார் போயினார் தாயரும் போயினார் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டு போவார்
எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே,
அந்தணா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 2

2326.நிணங்குடர் தோல்நரம் பென்புசே ராக்கைதான் நிலாய தன்றால்
குணங்களார்க் கல்லது குற்றநீங் காதெனக் குலுங்கி னாயே,
வணங்குவார் வானவர் தானவர் வைகலும் மனங்கொ டேத்தும்
அணங்கனா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 3

2327.நீதியால் வாழ்கிலை நாள்செலா நின்றன நித்த நோய்கள்
வாதியா ஆதலால் நாளுநா ளின்பமே மருவி னாயே
சாதியார் கின்னரர் தருமனும் வருணனு மேத்து முக்கண்
ஆதியாரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல்நெஞ்சே. 4

2328.பிறவியால் வருவன கேடுள ஆதலாற் பெரிய இன்பத்
துறவியார்க் கல்லது துன்பநீங் காதெனத் தூங்கி னாயே
மறவல்நீ மார்க்கமே நண்ணினாய் தீர்த்தநீர் மல்கு சென்னி
அறவனாரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல்நெஞ்சே. 5

2329.செடிகொள்நோ யாக்கையம் பாம்பின்வாய்த் தேரைவாய்ச் சிறுபறவை
கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புறலாமென்று கருதி னாயே
முடிகளால் வானவர் முன்பணிந்தன்பரா யேத்து முக்கண்
அடிகளா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 6

2330.ஏறுமால் யானையே சிவிகையந் தளகமீச் சோப்பி வட்டில்
மாறிவா முடம்பினார் படுவதோர் நடலைக்கு மயங்கி னாயே
மாறிலா வனமுலை மங்கையோர் பங்கினர் மதியம் வைத்த
ஆறனாரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 7

2331.என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந் திதுநம்மில்லம்,
புன்புலால் நாறுதோல் போர்த்துப்பொல் லாமையான் முகடு கொண்டு
முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே
அன்பனா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 8

2332.தந்தைதாய் தன்னுடன் தோன்றினார் புத்திரர் தாரமென்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப்பற்றி னாயே
வெந்தநீ றாடியா ராதியார் சோதியார் வேத கீதர்
எந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல்நெஞ்சே. 9

2333.நெடியமால் பிரமனும் நீண்டுமண் ணிடந்தின்னம் நேடிக் காணாப்
படியனார் பவளம்போ லுருவனார் பனிவளர் மலையாள் பாக
வடிவனார் மதிபொதி சடையனார் மணியணி கண்டத் தெண்டோள்
அடிகளா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே.10

2334.பல்லிதழ் மாதவி யல்லிவண் டியாழ்செயுங் காழி யூரன்
நல்லவே நல்லவே சொல்லிய ஞானசம் பந்த னாரூர்
எல்லியம் போதெரி யாடுமெம் மீசனை யேத்து பாடல்
சொல்லவே வல்லவர் தீதிலா ரோதநீர் வைய கத்தே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 80. திருக்கடவூர்மயானம் : பண் – காந்தாரம்

2335.வரியமறையார் பிறையார் மலையோர்சிலையா வணக்கி
எரியமதில்க ளெய்தா ரெறியுமுசல முடையார்
கரியமிடறு முடையார் கடவூர்மயான மமர்ந்தார்
பெரியவிடைமேல் வருவா ரவரெம்பெருமா னடிகளே. 1

2336.மங்கைமணந்த மார்பர் மழுவாள்வலனொன் றேந்திக்
கங்கைசடையிற் கரந்தார் கடவூர்மயான மமர்ந்தார்
செங்கண்வெள்ளே றேறிச் செல்வஞ்செய்யா வருவார்
அங்கையேறிய மறியா ரவரெம்பெருமா னடிகளே. 2

2337.ஈடலிடப மிசைய ஏறிமழுவொன் றேந்திக்
காடதிடமா வுடையார் கடவூர்மயான மமர்ந்தார்
பாடலிசைகொள் கருவி படுதம்பலவும் பயில்வார்
ஆடலரவ முடையா ரவரெம்பெருமா னடிகளே. 3

2338.இறைநின்றிலங்கு வளையா ளிளையாளொருபா லுடையார்
மறைநின்றிலங்கு மொழியார் மலையார்மனத்தின் மிசையார்
கறைநின்றிலங்கு பொழில்சூழ் கடவூர்மயான மமர்ந்தார்
பிறைநின்றிலங்கு சடையா ரவரெம்பெருமா னடிகளே. 4

2339.வெள்ளையெருத்தின் மிசையார் விரிதோடொருகா திலங்கத்
துள்ளுமிளமான் மறியார் சுடர்பொற்சடைகள் துலங்கக்
கள்ளநகுவெண் டலையார் கடவூர்மயான மமர்ந்தார்
பிள்ளைமதிய முடையா ரவரெம்பெருமா னடிகளே. 5

2340.பொன்றாதுதிரு மணங்கொள் புனைபூங்கொன்றை புனைந்தார்
ஒன்றாவெள்ளே றுயர்த்த துடையாரதுவே யூர்வார்
கன்றாவினஞ்சூழ் புறவிற் கடவூர்மயான மமர்ந்தார்
பின்றாழ்சடையா ரொருவ ரவரெம்பெருமா னடிகளே. 6

2341. பாசமான களைவார் பரிவார்க்கமுத மனையார்
ஆசைதீரக் கொடுப்பா ரலங்கல்விடைமேல் வருவார்
காசைமலர்போல் மிடற்றார் கடவூர்மயான மமர்ந்தார்
பேசவருவா ரொருவ ரவரெம்பெருமா னடிகளே. 7

2342.செற்றஅரக்க னலறத் திகழ்சேவடிமெல் விரலாற்
கற்குன்றடர்த்த பெருமான் கடவூர்மயான மமர்ந்தார்
மற்றொன்றிணையில் வலிய மாசில்வெள்ளி மலைபோல்
பெற்றொன்றேறி வருவா ரவரெம்பெருமா னடிகளே. 8

2343.வருமாகரியி னுரியார் வளர்புன்சடையார் விடையசர்
கருமானுரிதோ லுடையார் கடவூர்மயான மமர்ந்தார்
திருமாலொடுநான் முகனுந் தேர்ந்துங்காண முன்னொண்ணா
பெருமானெனவும் வருவா ரவரெம்பெருமா னடிகளே. 9

2344.தூயவிடைமேல் வருவார் துன்னாருடைய மதில்கள்
காயவேவச் செற்றார் கடவூர்மயான மமர்ந்தார்
தீயகருமஞ் சொல்லுஞ் சிறுபுன்தேர தமணர்
பேய்பேயென்ன வருவா ரவரெம்பெருமா னடிகளே. 10

2345.மரவம் பொழில்சூழ் கடவூர் மன்னுமயான மமர்ந்த
அரவ மசைத்த பெருமா னகலமறிய லாகப்
பரவுமுறையே பயிலும் பந்தன்செஞ்சொல் மாலை
இரவும்பகலும் பரவி நினைவார்வினைக ளிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. திருவேணுபுரம் : பண் – காந்தாரம்

2346. பூதத்தின் படையினீர் பூங்கொன்றைத் தாரினீர்
ஓதத்தி னொலியோடு மும்பர்வா னவர்புகுந்து
வேதத்தி னிசைபாடி விரைமலர்கள் சொரிந்தேத்தும்
பாதத்தீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே 1

2347. சுடுகாடு மேவினீர் துன்னம்பெய் கோவணந்தோல்
உடையாடை யதுகொண்டீ ருமையாளை யொருபாகம்
அடையாள மதுகொண்டீ ரங்கையினிற் பரசுஎனும்
படையாள்வீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 2

2348. கங்கைசேர் சடைமுடியீர் காலனைமுன் செற்றுகந்தீர்
திங்களோ டிளஅரவந் திகழ்சென்னி வைத்துகந்தீர்
மங்கையோர் கூறுடையீர் மறையோர்கள் நிறைந்தேத்தப்
பங்கயஞ்சேர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 3

2349. நீர்கொண்ட சடைமுடிமேல் நீள்மதியம் பாம்பினொடும்
ஏர்கொண்ட கொன்றையினோ டெழில்மத்த மிலங்கவே
சீர்கொண்ட மாளிகைமேற் சேயிழையார் வாழ்த்துரைப்பக்
கார்கொண்ட வேணுபுரம் பதியாகக் கலந்தீரே. 4

2350. ஆலைசேர் தண்கழனி யழகாக நறவுண்டு
சோலைசேர் வண்டினங்க ளிசைபாடத் தூமொழியார்
காலையே புகுந்திறைஞ்சிக் கைதொழமெய் மாதினொடும்
பாலையாழ் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 5

2351. மணிமல்கு மால்வரைமேல் மாதினொடு மகிழ்ந்திருந்தீர்
துணிமல்கு கோவணத்தீர் சுடுகாட்டி லாட்டுகந்தீர்
பணிமல்கு மறையோர்கள் பரிந்திறைஞ்ச வேணுபுரத்
தணிமல்கு கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 6

2352. நீலஞ்சேர் மிடற்றினீர் நீண்டசெஞ் சடையினீர்
கோலஞ்சேர் விடையினீர் கொடுங்காலன் றனைச்செற்றீர்
ஆலஞ்சேர் கழனியழ கார்வேணு புரமமருங்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாக் கொண்டீரே. 7

2353. இரைமண்டிச் சங்கேறுங் கடல்சூழ்தென் னிலங்கையர்கோன்
விரைமண்டு முடிநெரிய விரல்வைத்தீர் வரைதன்னிற்
கரைமண்டிப பேரோதங் கலந்தெற்றுங் கடற்கவினார்
விரைமண்டு வேணுபுர மேயமர்ந்து மிக்கீரே. 8

2354.தீயோம்பு மறைவாணர்க் காதியாந் திசைமுகன்மால்
போயோங்கி யிழிந்தாரும் போற்றரிய திருவடியீர்
பாயோங்கு மரக்கலங்கள் படுதிரையால் மொத்துண்டு
சேயோங்கு வேணுபுரஞ் செழும்பதியாத் திகழ்ந்தீரே. 9

2355.நிலையார்ந்த வுண்டியினர் நெடுங்குண்டர் சாக்கியர்கள்
புலையானா ரறவுரையைப் போற்றாதுன் பொன்னடியே
நிலையாகப் பேணிநீ சரணென்றார் தமையென்றும்
விலையாக ஆட்கொண்டு வேணுபுரம் விரும்பினையே. 10,11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 82. திருத்தேவூர் : பண் – காந்தாரம்

2356.பண்ணி லாவிய மொழியுமை பங்கனெம் பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம லன்விடை யூர்தி
தெண்ணி லாமதி தவழ்தரு மாளிகைத் தேவூர்
அண்ணல் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 1

2357.ஓதி மண்டலத் தோர்முழு துய்யவெற் பேறு
சோதி வானவன் துதிசெய மகிழ்ந்தவன் தூநீர்த்
தீதில் பங்கயந் தெரிவையர் முகமலர் தேவூர்
ஆதி சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 2

2358.மறைக ளான்மிக வழிபடு மாணியைக் கொல்வான்
கறுவு கொண்டவக் காலனைக் காய்ந்தவெங் கடவுள்
செறுவில் வாளைகள் சேலவை பொருவயல் தேவூர்
அறவன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 3

2359.முத்தன் சில்பலிக் கூர்தொறும் முறைமுறை திரியும்
பித்தன் செஞ்சடைப் பிஞ்ஞகன் றன்னடி யார்கள்
சித்தன் மாளிகை செழுமதி தவழ்பொழில் தேவூர்
அத்தன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 4

2360.பாடு வாரிசை பல்பொருட் பயனுகந் தன்பால்
கூடு வார்துணைக் கொண்டதம் பற்றறப் பற்றித்
தேடு வார்பொரு ளானவன் செறிபொழில் தேவூர்
ஆடு வானடி யடைந்தன மல்லலொன் றிலமே. 5

2361.பொங்கு பூண்முலைப் புரிகுழல் வரிவளைப் பொருப்பின்
மங்கை பங்கினன் கங்கையை வளர்சடை வைத்தான்

திங்கள் சூடிய தீநிறக் கடவுள்தென் தேவூர்
அங்க ணன்றனை யடைந்தன மல்லலொன் றிலமே. 6

2362. வன்பு யத்தவத் தானவர் புரங்களை யெரியத்
தன்பு யத்துறத் தடவரை வளைத்தவன் தக்க
தென்த மிழ்க்கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்
அன்பன் சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே. 7

2363. தருவு யர்ந்தவெற் பெடுத்தஅத் தசமுகன் நெரிந்து
வெருவ வூன்றிய திருவிரல் நெகிழ்த்துவாள் பணித்தான்
தெருவு தோறுநற் றென்றல்வந் துலவிய தேவூர்
அரவு சூடியை யடைந்தன மல்லலொன் றிலமே. 8

2364. முந்திக் கண்ணனு நான்முக னும்மவர் காணா
எந்தை திண்டிற லிருங்களி றுரித்தஎம் பெருமான்
செந்தி னத்திசை யறுபத முரல்திருத் தேவூர்
அந்தி வண்ணனை யடைந்தன மல்லலொன் றிலமே. 9

2365. பாறு புத்தருந் தவமணி சமணரும் பலநாள்
கூறி வைத்ததோர் குறியினைப் பிழையெனக் கொண்டு
தேறி மிக்கநஞ் செஞ்சடைக் கடவுள்தென் தேவூர்
ஆறு சூடியை யடைந்தன மல்லலொன் றிலமே.

2366. அல்ல லின்றிவிண் ணாள்வர்கள் காழியர்க் கதிபன்
நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம் பந்தன்
எல்லை யில்புகழ் மல்கிய எழில்வளர் தேவூர்த்
தொல்லை நம்பனைச் சொல்லிய பத்தும்வல் லாரே. 1.

திருச்சிற்றம்பலம்

•••••

## 83. திருக்கொச்சைவயம் : பண் – பியந்தைக்காந்தாரம்

2367. நீலநன் மாமிடற்ற னிறைவன் சினத்த
நெடுமா வுரித்த நிகரில்
சேலன கண்ணிவண்ண மொருகூ றுருக்கொள்
திகழ்தேவன் மேவு பதிதான்
வேலன கண்ணிமார்கள் விளையாடு மோசை
விழவோசை வேத வொலியின்
சாலநல் வேலையோசை தருமாட வீதி
கொடியாடு கொச்சை வயமே. 1

2368.விடையுடை யப்பனொப்பில் நடமாட வல்ல
விகிர்தத் துருக்கொள் விமலன்
சடையிடை வெள்ளெருக்க மலர்கங்கை திங்கள்
தகவைத்த சோதி பதிதான்
மடையிடை யன்னமெங்கு நிறையப் பரந்து
கமலத்து வைகும் வயல்சூழ்
கொடையுடை வண்கையாளர் மறையோர்க ளென்றும்
வளர்கின்ற கொச்சை வயமே. 2

2369.படஅர வாடுமுன்கை யுடையா னிடும்பை
களைவிக்கு மெங்கள் பரமன்
இடமுடை வெண்டலைக்கை பலிகொள்ளு மின்ப
னிடமாய வேர்கொள் பதிதான்
நடமிட மஞ்ஞை வண்டு மதுவுண்டு பாடு
நளிர்சோலை கோலு கனகக்
குடமிடு கூடமேறி வளர்பூவை நல்ல
மறையோது கொச்சை வயமே. 3

2370.எண்டிசை பாலரெங்கு மிகலிப் புகுந்து
முயல்வித்த சிந்தை முடுகிப்
பண்டொளி தீபமாலை யிடுதூப மோடு
பணிவுற்ற பாதர் பதிதான்
மண்டிய வண்டன்மிண்டி வருநீர பொன்னி
வயல்பாய வாளை குழுமிக்
குண்டகழ் பாயுமோசை படைநீட தென்ன
வளர்கின்ற கொச்சை வயமே. 4

2371. பனிவளர் மாமலைக்கு மருகன் குபேர
னொடுதோழ மைக்கொள் பகவன்
இனியன அல்லவற்றை யினிதாக நல்கு
மிறைவன் னிடங்கொள் பதிதான்
முனிவர்க டொக்குமிக்க மறையோர்க ளோமம்
வளர்தூம மோடி யணவிக்
குனிமதி மூடிநீடு முயர்வான் மறைத்து
நிறைகின்ற கொச்சை வயமே. 5

2372.புலியதள் கோவணங்க ளுடையாடை யாக
வுடையான் நினைக்கு மளவில்
நலிதரு முப்புரங்க ளெரிசெய்த நாதன்
நலமா விருந்த நகர்தான்
கலிகெட அந்தணாளர் கலைமேவு சிந்தை

யுடையார் நிறைந்து வளரப்
பொலிதரு மண்டபங்க ளுயர்மாட நீடு
வரைமேவு கொச்சை வயமே. 6,7

2373. மழைமுகில் போலுமேனி யடல்வா ளரக்கன்
முடியோடு தோள்கள் நெரியப்
பிழைகெட மாமலர்ப்பொன் னடிவைத்த பேயொ
டுடனாடி மேய பதிதான்
இழைவள ரல்குல்மாத ரிசைபாடி யாட
விடுமுச லன்ன கமுகின்
குழைதரு கண்ணிவிண்ணில் வருவார்கள் தங்க
ளடிதேடு கொச்சை வயமே. 8

2374. வண்டமர் பங்கயத்து வளர்வானும் வையம்
முழுதுண்ட மாலு மிகலிக்
கண்டிட வொண்ணுமொன்று கிளறிப் பறந்து
மறியாத சோதி பதிதான்
நண்டுண நாரைசெந்நெல் நடுவே யிருந்து
விரைதேர மோது மதுவிற்
புண்டரி கங்களோடு குமுதம் மலர்ந்து
வயல்மேவு கொச்சை வயமே. 9

2375. கையினி லுண்டுமேனி யுதிர்மாசர் குண்ட
ரிடுசீவ ரத்தி னுடையார்
மெய்யுரை யாதவண்ணம் விளையாட வல்ல
விகிர்தத் துருக்கொள் விமலன்
பையுடை நாகவாயி லெயிறார மிக்க
குரவம் பயின்று மலரச்
செய்யினில் நீலமொட்டு விரியக் கமழ்ந்து
மணநாறு கொச்சை வயமே. 10

2376. இறைவனை யொப்பிலாத ஒளிமேனி யானை
யுலகங்க ளேழு முடனே
மறைதரு வெள்ளமேறி வளர்கோயில் மன்னி
யினிதா இருந்த மணியைக்
குறைவில ஞானமேவு குளிர்பந்தன் வைத்த
தமிழ்மாலை பாடு மவர்போய்
அறைகழ லீசனாளும் நகர்மேவி யென்று
மழகா இருப்ப தறிவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. திருநனிபள்ளி : பண் – பியந்தைக்காந்தாரம்

2377. காரைகள் கூகைமுல்லை களவாகை யீகை
படர்தொடரி கள்ளி கவினிச்
சூரைகள் பம்மிவிம்மு சுடுகா டமர்ந்த
சிவன்மேய சோலை நகர்தான்
தேரைக ளாரைசாய மிதிகொள்ள வாளை
குதிகொள்ள வள்ளை துவள
நாரைக ளாரல்வாரி வயன்மேதி வைகு
நனிபள்ளி போலு நமர்காள். 1

2378. சடையிடை புக்கொடுங்கி யுளதங்கு வெள்ளம்
வளர்திங்கள் கண்ணி யயலே
இடையிடை வைத்ததொக்கு மலர்தொத்து மாலை
யிறைவன் னிடங்கொள் பதிதான்
மடையிடை வாளைபாய முகிழ்வாய் நெரிந்து
மணநாறு நீல மலரும்
நடையுடை யன்னம்வைகு புனலம் படப்பை
நனிபள்ளி போலு நமர்காள். 2

2379. பெறுமலர் கொண்டுதொண்டர் வழிபாடு செய்ய
லொழிபா டிலாத பெருமான்
கறுமலர் கண்டமாக விடமுண்ட காளை
யிடமாய காதல் நகர்தான்
வெறுமலர் தொட்டுவிட்ட விசைபோன கொம்பின்
விடுபோ தலர்ந்த விரைசூழ்
நறுமல ரல்லிபுல்லி யொலிவண் டுறங்கு
நனிபள்ளி போலு நமர்காள். 3

2380. குளிர்தரு கங்கைதங்கு சடைமா டிலங்கு
தலைமாலை யோடு குலவி
ஒளிர்தரு திங்கள்சூடி யுமைபாக மாக
வுடையா னுகந்த நகர்தான்
குளிர்தரு கொம்மலோடு குயில்பாடல் கேட்ட
பெடைவண்டு தானு முரல
நளிர்தரு சோலைமாலை நரைகுருகு வைகு
நனிபள்ளி போலு நமர்காள். 4

2381. தோடொரு காதனாகி யொருகா திலங்கு
சுரிசங்கு நின்று புரளக்
காடிட மாகநின்று கனலாடு மெந்தை

யிடமாய காதல் நகர்தான்
வீடுட னெய்துவார்கள் விதியென்று சென்று
வெறிநீர் தெளிப்ப விரலால்
நாடுட னாடுசெம்மை யொலிவெள்ள மாரு
நனிபள்ளி போலு நமர்காள். 5

2382.மேகமொ டோடுதிங்கள் மலரா வணிந்து
மலையான் மடந்தை மணிபொன்
ஆகமொர் பாகமாக அனலாடு மெந்தை
பெருமா னமர்ந்த நகர்தான்
ஊகமொ டாடுமந்தி யுகளுஞ் சிலம்ப
வகிலுந்தி யொண்பொ னிடறி
நாகமொ டாரம்வாரு புனல்வந் தலைக்கு
நனிபள்ளி போலு நமர்காள். 6

2383.தகைமலி தண்டுசூல மனலுமிழு நாகங்
கொடுகொட்டி வீணை முரல
வகைமலி வன்னிகொன்றை மதமத்தம் வைத்த
பெருமா னுகந்த நகர்தான்
புகைமலி கந்தமாலை புனைவார்கள் பூசல்
பணிவார்கள் பாடல் பெருகி
நகைமலி முத்திலங்கு மணல்சூழ் கிடக்கை
நனிபள்ளி போலு நமர்காள். 7

2384.வலமிகு வாளன்வேலன் வளைவா ளெயிற்று
மதியா அரக்கன் வலியோ
டுலமிகு தோள்களொல்க விரலா லடர்த்த
பெருமா னுகந்த நகர்தான்
நிலமிகு கீழுமேலும் நிகராது மில்லை
யெனநின்ற நீதி யதனை
நலமிகு தொண்டர்நாளு மடிபரவல் செய்யு
நனிபள்ளி போலு நமர்காள். 8

2385.நிறவுரு வொன்றுதோன்றி யெரியொன்றி நின்ற
தொருநீர்மை சீர்மை நினையார்
அறவுரு வேதநாவ னயனோடு மாலு
மறியாத அண்ணல் நகர்தான்
புறவிரி முல்லைமௌவல் குளிர்பிண்டி புன்னை
புனைகொன்றை துன்று பொதுளி
நறவிரி போதுதாது புதுவாச நாறு
நனிபள்ளி போலு நமர்காள். 9

2386.அனமிகு செல்குசோறு கொணர்கென்று கையி
விடவுண்டு பட்ட அமணும்
மனமிகு கஞ்சிமண்டை யதிலுண்டு தொண்டர்
குணமின்றி நின்ற வடிவும்
வினைமிகு வேதநான்கும் விரிவித்த நாவின்
விடையா னுகந்த நகர்தான்
நனமிகு தொண்டர்நாளு மடிபரவல் செய்யு
நனிபள்ளி போலு நமர்காள். 10

2387.கடல்வரை யோதமல்கு கழிகானல் பானல்
கமழ்காழி யென்று கருதப்
படுபொரு ளாறுநாலு முளதாக வைத்த
பதியான ஞான முனிவன்
இடுபறை யொன்றஅத்தர் பியன்மே லிருந்தி
னிசையா லுரைத்த பனுவல்
நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளி யுள்க
வினைகெடுத லாணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 85. பொது : பண் – பியந்தைக்காந்தாரம்

## கோளறு திருப்பதிகம்

2388.வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 1

2389.என்பொடு கொம்பொடாமை யிவைமார் பிலங்க
எருதேறி யேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தெ
னுளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றோடேழு பதினெட் டொடாறு
முடனாய நாள்க ளவைதாம்

அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 2

2390. உருவளர் பவளமேனி ஒளிநீ றணிந்து
வுமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றைதிங்கள் முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசைதெய்வ மான பலவும்
அருநெதி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 3

2391. மதிநுதல் மங்கையோடு வடபா லிருந்து
மறையோது மெங்கள் பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்
கொடுநோய்க ளான பலவும்
அதிகுண நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 4

2392. நஞ்சணி கண்டனெந்தை மடவாள்த னோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடு முருமிடியு மின்னு
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 5

2393. வாள்வரி யதளதாடை வரிகோ வணத்தர்
மடவாள்த னோடு முடனாய்
நாண்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தெ
னுளமே புகுந்த அதனால்
கோளரி யுழுவையோடு கொலையானை கேழல்
கொடுநாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 6

2394.செப்பிள முலைநன் மங்கையொரு பாகமாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியுமப்பு முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படி நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 7

2395.வேள்பட விழிசெய்தன்று விடைமே லிருந்து
மடவாள்த னோடு முடனாய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தெ
னுளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழிலங்கை அரையன்ற னோடு
மிடரான வந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 8

2396.பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமக ளோடெருக்கு முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்
வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 9

2397.கொத்தலர் குழலியோடு விசையற்கு நல்கு
குணமாய வேட விகிர்தன்
மத்தமு மதியுநாக முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
புத்தரோ டமணைவாதி லழிவிக்கு மண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 10

2398.தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெல் துன்னி
வளர்செம்பொ னெங்கும் நிகழ
நான்முக னாதியாய பிரமா புரத்து

மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளுநாளு மடியாரை வந்து
நலியாத வண்ண முரைசெய்
ஆனசொல் மாலையோது மடியார்கள் வானில்
அரசாள்வ ராணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருநாரையூர் : பண் – பியந்தைக்காந்தாரம்

2399. உரையினில் வந்தபாவ முணர்நோய்க ளும்ம
செயல்தீங்கு குற்ற முலகில்
வரையினி லாமைசெய்த அவைதீரும் வண்ண
மிகவேத்தி நித்த நினைமின்
வரைசிலை யாகஅன்று மதில்முன் றெரித்து
வளர்கங்குல் நங்கை வெருவத்
திரையொலி நஞ்சமுண்ட சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 1

2400. ஊனடை கின்றகுற்ற முதலாகி யுற்ற
பிணிநோ யொருங்கு முயரும்
வானடை கின்றவெள்ளை மதிசூடு சென்னி
விதியான வேத விகிர்தன்
கானிடை யாடிபூதப் படையா னியங்கு
விடையா னிலங்கு முடிமேல்
தேனடை வண்டுபாடு சடையண்ணல் நண்ணு
திருநாரை யூர்கை தொழவே. 2

2401. ஊரிடை நின்றுவாழு முயிர்செற்ற காலன்
துயருற்ற தீங்கு விரவிப்
பாரிடை மெள்ளவந்து பழியுற்ற வார்த்தை
யொழிவுற்ற வண்ண மகலும்
போரிடை யன்றுமூன்று மதிலெய்த ஞான்று
புகழ்வானு ளோர்கள் புணரும்
தேரிடை நின்றஎந்தை பெருமா னிருந்த
திருநாரை யூர்கை தொழவே. 3

2402.தீயுற வாயஆக்கை யதுபற்றி வாழும்
வினைசெற்ற வுற்ற வுலகின்
தாயுறு தன்மையாய தலைவன்றன் நாமம்
நிலையாக நின்று மருவும்
பேயுற வாயகானில் நடமாடி கோல
விடமுண்ட கண்டன் முடிமேல்
தேய்பிறை வைத்துகந்த சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 4

2403.வசையப ராதமாய வுவரோத நீங்குந்
தவமாய தன்மை வரும்வான்
மிசையவ ராதியாய திருமார் பிலங்கு
விரிநூலர் விண்ணு நிலனும்
இசையவ ராசிசொல்ல இமையோர்க ளேத்தி
யமையாத காத லொடுசேர்
திசையவர் போற்றநின்ற சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 5

2404.உறைவள ரூனிநிலாய வுயிர்நிற்கும் வண்ண
முணர்வாக்கு முண்மை யுலகில்
குறைவுள வாகிநின்ற குறைதீர்க்கு நெஞ்சி
னிறைவாற்று நேசம் வளரும்
மறைவளர் நாவன்மாவி னுரிபோர்த்த மெய்ய
னரவார்த்த அண்ணல் கழலே
திறைவளர் தேவர்தொண்டி னருள்பேண நின்ற
திருநாரை யூர்கை தொழவே. 6

2405.தனம்வரு நன்மையாகுந் தகுதிக் குழந்து
வருதிக் குழன்ற வுடலின்
இனம்வள ரைவர்செய்யும் வினயங்கள் செற்று
நினைவொன்று சிந்தை பெருகும்
முனமொரு காலமூன்று புரம்வெந்து மங்கச்
சரமுன் றெரிந்த அவுணர்
சினமொரு காலழித்த சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 7

2406.உருவரை கின்றநாளி லுயிர்கொள்ளுங் கூற்ற
நனியஞ்சு மாத லுறநீர்
மருமலர் தூவியென்றும் வழிபாடு செய்ம்மி

னழிபா டிலாத கடலின்
அருவரை சூழிலங்கை யரையன்றன் வீர
மழியத் தடக்கை முடிகள்
திருவிரல் வைத்துகந்த சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 8

2407.வேறுயர் வாழ்வுதன்மை வினைதுக்க மிக்க
பகைதீர்க்கு மேய வுடலில்
தேறிய [illegible]தைவாய்மை தெளிவிக்க நின்ற
கரவைக் கரந்து திகழும்
சேறுயர் பூவின்மேய பெருமானு மற்றைத்
திருமாலு நேட எரியாய்ச்
சீறிய செம்மையாகுஞ் சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 9

2408.மிடைபடு துன்பமின்ப முளதாக்கு முள்ளம்
வெளியாக்கு முன்னி யுணரும்
படையொரு கையிலேந்திப் பலிகொள்ளும் வண்ண
மொலிபாடி யாடி பெருமை
உடையினை விட்டுளோரு முடல்போர்த்து ளோரு
முரைமாயும் வண்ண மழியச்
செடிபட வைத்துகந்த சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழவே. 10

2409.எரியொரு வண்ணமாய வுருவானை யெந்தை
பெருமானை யுள்கி நினையார்
திரிபுர மன்றுசெற்ற சிவன்மேய செல்வத்
திருநாரை யூர்கை தொழுவான்
பொருபுனல் சூழ்ந்தகாழி மறைஞான பந்த
னுரைமாலை பத்து மொழிவார்
திருவளர் செம்மையாகி யருள்பேறு மிக்க
துளதென்பர் செம்மை யினரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 87. திருநறையூர்ச்சித்தீச்சரம் : பண் – பியந்தைக்காந்தாரம்

2410. நேரிய னாகுமல்ல னொருபாலு மேனி
யரியான்மு னாய வொளியான்
நீரியல் காலுமாகி நிறைவானு மாகி
யுறுதீயு மாய நிமலன்
ஊரியல் பிச்சைபேணி யுலகங்க ளேத்த
நல்குண்டு பண்டு சுடலை
நாரியொர் பாகமாக நடமாட வல்ல
நறையூ ரின்நம்ப னவனே. 1

2411. இடமயி லன்னசாயல் மடமங்கை தன்கை
யெதிர்நாணி பூண வரையில்
கடுமயி லம்புகோத்து எயில்செற் றுகந்து
அமரர்க் களித்த தலைவன்
மடமயி லூர்திதாதை யெனநின்று தொண்டர்
மனநின்ற மைந்தன் மருவும்
நடமயி லாலநீடு குயில்கூவு சோலை
நறையூரின் நம்ப னவனே. 2

2412. சூடக முன்கைமங்கை யொருபாக மாக
அருள்கார ணங்கள் வருவான்
ஈடக மானநோக்கி யிடுபிச்சை கொண்டு
படுபிச்ச னென்று பரவத்
தோடக மாயொர்காது மொருகா திலங்கு
குழைதாழ வேழ வுரியன்
நாடக மாகவாடி மடவார்கள் பாடும்
நறையூரின் நம்ப னவனே. 3

2413. சாயனன் மாதொர்பாகன் விதியாய சோதி
கதியாக நின்ற கடவுள்
ஆயக மென்னுள்வந்த அருளாய செல்வ
னிருளாய கண்ட னவனித்
தாயென நின்றுகந்த தலைவன் விரும்பு
மலையின்கண் வந்து தொழுவார்
நாயக னென்றிறைஞ்சி மறையோர்கள் பேணும்
நறையூரின் நம்ப னவனே. 4

2414. நெதிபடு மெய்யெமைய நிறைசோலை சுற்றி
நிகழும் பலத்தின் நடுவே
அதிர்பட ஆடவல்ல அமரர்க் கொருத்த

னெமர்சுற்ற மாய இறைவன்
மதிபடு சென்னிமன்னு சடைதாழ வந்து
விடையேறி யில்பலி கொள்வான்
நதிபட வுந்திவந்து வயல்வாளை பாயும்
நறையூரின் நம்ப னவனே. 5

2415. கணிகையொர் சென்னிமன்னு மதுவன்னி கொன்றை
மலர்துன்று செஞ்ச டையினான்
பணிகையின் முன்னிலங்க வருவேட மன்னு
பலவாகி நின்ற பரமன்
அணுகிய வேதவோசை யகலங்க மாறின்
பொருளான ஆதி யருளான்
நணுகிய தொண்டர்கூடி மலர்தூவி யேத்து
நறையூரின் நம்ப னவனே. 6

2416. ஒளிர்தரு கின்றமேனி யுருவெங்கு மங்க
மவையார ஆட லரவம்
மிளிர்தரு கையிலங்க அனலேந்தி யாடும்
விகிர்தன் விடங்கொள் மிடறன்
துளிதரு சோலையாலை தொழில்மேவ வேத
மெழிலார வென்றி யருளும்
நளிர்மதி சேருமாட மடவார்க ளாரு
நறையூரின் நம்ப னவனே. 7

2417. அடலெரு தேறுகந்த அதிருங் கழற்க
ளெதிருஞ் சிலம்பொ டிசையக்
கடலிடை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன்
முனிவுற் றிலங்கை யரையன்
உடலொடு தோளனைத்து முடிபத் திறுத்து
மிசைகேட் டிரங்கி யொருவாள்
நடலைகள் தீர்த்துநல்கி நமையாள வல்ல
நறையூரின் நம்ப னவனே. 8

2418. குலமலர் மேவினானு மிகுமாய னாலு
மெதிர்கூடி நேடி நினைவுற்
றிலபல எய்தொணாமை யெரியா யுயர்ந்த
பெரியா னிலங்கு சடையன்
சிலபல தொண்டர் நின்று பெருமைக்கள் பேச
வருமைத் திகழ்ந்த பொழிலின்
நலமலர் சிந்தவாச மணநாறு வீதி
நறையூரின் நம்ப னவனே. 9

2419. துவருறு கின்றஆடை யுடல்போர்த் துழன்ற
வவர்தாமு மல்ல சமணும்
கவருறு சிந்தையாள ருரைநீத் துகந்த
பெருமான் பிறங்கு சடையன்
தவமலி பத்தர்சித்தர் மறையாளர் பேண
முறைமாதர் பாடி மருவும்
நவமணி துன்றுகோயி லொளிபொன்செய் மாட
நறையூரின் நம்ப னவனே. 10

2420. கான லுலாவியோத மெதிர்மல்கு காழி
மிகுபந்தன் முந்தி யுணர
ஞானமு லாவுசிந்தை யடிவைத் துகந்த
நறையூரின் நம்ப னவனை
ஈனமி லாதவண்ண மிசையா லுரைத்த
தமிழ்மாலை பத்து நினைவார்
வான நிலாவவல்லர் நிலமெங்கு நின்று
வழிபாடு செய்யு மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

◊◊◊◊◊

## 88. தென்திருமுல்லைவாயில் : பண் – பியந்தைக்காந்தாரம்

2421. துளிமண்டி யுண்டு நிறவந்த கண்டன்
நடமன்னு துன்னு சுடரோன்
ஒளிமண்டி யும்ப ருலகங் கடந்த
வுமைபங்க னெங்க ளரனூர்
களிமண்டு சோலை கழனிக் கலந்த
கமலங்கள் தங்கு மதுவில்
தெளிமண்டி யுண்டு சிறைவண்டு பாடு
திருமுல்லை வாயி லிதுவே. 1

2422. பருவத்தில் வந்து பயனுற்ற பண்ப
னயனைப் படைத்த பரமன்
அரவத் தொடங்க மவைகட்டி யெங்கு
மரவிக்க நின்ற அரனூர்
உருவத்தின் மிக்க வொளிர்சங்கொ டிப்பி
யவையோத மோத வெருவித்

தெருவத்தில் வந்து செழுமுத் தலைக்கொள்
திருமுல்லை வாயி லிதுவே. 2

2423.வாராத நாடன் வருவார் தம் வில்லி
னுருமெல்கி நாளு முருகில்
ஆராத இன்ப னகலாத அன்ப
னருள்மேவி நின்ற அரனூர்
பேராத சோதி பிரியாத மார்பி
னலர்மேவு பேதை பிரியாள்
தீராத காத னெதிநேர நீடு
திருமுல்லை வாயி லிதுவே. 3

2424.ஒன்றொன்றொ டொன்று மொருநான்கொ டைந்து
மிருமூன்றொ டேழு முடனாய்
அன்றின்றொ டென்றும் அறிவானவர்க்கு
மறியாமை நின்ற அரனூர்
குன்றொன்றொ டொன்று குலையொன்றொ டொன்று
கொடியொன்றோ டொன்று குழுமிச்
சென்றொன்றொ டொன்று செறிவால் நிறைந்த
திருமுல்லை வாயி லிதுவே. 4

2425.கொம்பன்ன மின்னி னிடையார்ளொர் கூறன்
விடைநாளு மேறு குழகன்
நம்பன்னெ மன்பன் மறைநாவன் வானின்
மதியேறு சென்னி யரனூர்
அம்பன்ன வொண்க ணவரா டரங்கி
னணிகோ புரங்க ளழகார்
செம்பொன்ன செவ்வி தருமாட நீடு
திருமுல்லை வாயி லிதுவே. 5

2426.ஊனேறு வேலி னுருவேறு கண்ணி
யொளியேறு கொண்ட வொருவன்
ஆனேற தேறி யழகேறு நீற
னரவேறு பூணு மரனூர்
மானேறு கொல்லை மயிலேறி வந்து
குயிலேறு சோலை மருவித்
தேனேறு மாவின் வளமேறி யாடு
திருமல்லை வாயி லிதுவே. 6

2427.நெஞ்சார நீடு நினைவாரை மூடு
வினைதேய நின்ற நிமலன்
அஞ்சாடு சென்னி யரவாடு கைய
னனலாடு மேனி யரனூர்
மஞ்சாரு மாட மனைதோறு மைய
முளதென்று வைகி வரினுஞ்
செஞ்சாலி நெல்லின் வளர்சோ றளிக்கொள்
திருமுல்லை வாயி லிதுவே. 7

2428.வரைவந் தெடுத்த வலிவா ளரக்கன்
முடிபத்து மிற்று நெரிய
உரைவந்த பொன்னி னுருவந்த மேனி
யுமைபங்க னெங்க ளரனூர்
வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து
மிளிர்கின்ற பொன்னி வடபால்
திரைவந்து வந்து செறிதேற லாடு
திருமுல்லை வாயி லிதுவே. 8

2429.மேலோடி நீடு விளையாடல் மேவு
விரிநூலன் வேத முதல்வன்
பாலாடு மேனி கரியான முன்னி
யவர்தேட நின்ற பரனூர்
காலாடு நீல மலர்துன்றி நின்ற
கதிரேறு செந்நெல் வயிலிற்
சேலோடு வாளை குதிகொள்ள மல்கு
திருமுல்லை வாயி லிதுவே. 9

2430.பனைமல்கு திண்கை மதமா வுரித்த
பரமன்ன நம்ப னடியே
நினைவன்ன சிந்தை யடையாத தேர
ரமண்மாய நின்ற அரனூர்
வனைமல்கு கைதை வகுளங்க ளெங்கு
முகுளங்க ளெங்கு நெரியச்
சினைமல்கு புன்னை திகழ்வாச நாறு
திருமுல்லை வாயி லிதுவே. 10

2431. அணிகொண்ட கோதை யவணன்று மேத்த
அருள்செய்த வெந்தை மருவார்
திணிகொண்ட மூன்று புரமெய்த வில்லி
திருமுல்லை வாயி லிதன்மேல்

தணிகொண்ட சிந்தை யவர்காழி ஞான
மிகுபந்த னொண்ட மிழ்களின்
அணிகொண்ட பத்து மிசைபாடு பத்த
ரகல்வான மாள்வர் மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 89. திருக்கொச்சைவயம் : பண் – பியந்தைக்காந்தாரம்

2432. அறையும் பூம்புன லோடு மாடர வச்சடை தன்மேற்
பிறையுஞ் சூடுவர் மார்பிற் பெண்ணொரு பாக மமர்ந்தார்
மறையி னொல்லொலி யோவா மந்திர வேள்வி யறாத
குறைவி லந்தணர் வாழுங் கொச்சை வயமமர்ந் தாரே. 1

2433. சுண்ணத்தர் தோலொடு நூல்சேர் மார்பினர் துன்னிய பூதக்
கண்ணத்தர் வெங்கன லேந்திக் கங்குல்நின் றாடுவர் கேடில்
எண்ணத்தர் கேள்விநல் வேள்வி யறாதவர் மாலெரி யோம்பும்
வண்ணத்த அந்தணர் வாழுங் கொச்சை வயமமர்ந் தாரே. 2

2434. பாலை யன்னவெண் ணீறு பூசுவர் பல்சடை தாழ
மாலை யாடுவர் கீத மாமறை பாடுதல் மகிழ்வர்
வேலை மால்கட லோதம் வெண்டிரை கரைமிசை விளங்கும்
கோல மாமணி சிந்துங் கொச்சை வயமமர்ந் தாரே. 3

2435. கடிகொள் கூவிள மத்தங் கமழ்சடை நெடுமுடிக் கணிவர்
பொடிகள் பூசிய மார்பிற் புனைவர்நன் மங்கையோர் பங்கர்
கடிகொள் நீடொலி சங்கி னொலியொடு கலையொலி துதைந்து
கொடிக ளோங்கிய மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 4

2436. ஆடன் மாமதி யுடையா ராயின பாரிடஞ் சூழ
வாடல் வெண்டலை யேந்தி வையக மிடுபலிக் குழல்வார்
ஆடல் மாமட மஞ்ஞை யணிதிகழ் பேடையோ டாடிக்
கூடு தண்பொழில் சூழ்ந்த கொச்சை வயமமர்ந் தாரே. 5

2437. மண்டு கங்கையு மரவு மல்கிய வளர்சடை தன்மேல்
துண்ட வெண்பிறை யணிவர் தொல்வரை வில்லது வாக
விண்ட தானவ ரரணம் வெவ்வழ லெரிகொள விடைமேல்
கொண்ட கோலம துடையார் கொச்சை வயமமர்ந் தாரே. 6,7

2438.அன்றவ் வால்நிழ லமர்ந்து அறவுரை நால்வர்க் கருளிப்
பொன்றி னார்தலை யோட்டி லுண்பது பொருகட லிலங்கை
வென்றி வேந்தனை யொல்க வூன்றிய விரலினர் வான்தோய்
குன்ற மன்னபொன் மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 8

2439.சீர்கொள் மாமல ரானுஞ் செங்கண்மா லென்றிவ ரேத்த
ஏர்கொள் வெவ்வழ லாகி யெங்கு முறநிமிர்ந் தாரும்
பார்கொள் விண்ணழல் கால்நீர்ப் பண்பினர் பால்மொழி யோடுங்
கூர்கொள் வேல்வல னேந்திக் கொச்சை வயமமர்ந் தாரே. 9

2440.குண்டர் வண்துவ ராடை போர்த்ததொர் கொள்கையி னார்கள்
மிண்டர் பேசிய பேச்சு மெய்யல மையணி கண்டன்
பண்டை நம்வினை தீர்க்கும் பண்பின ரொண்கொடி யோடுங்
கொண்டல் சேர்மணி மாடக் கொச்சை வயமமர்ந் தாரே. 10

2441.கொந்த ணிபொழில் சூழ்ந்த கொச்சை வயநகர் மேய
அந்த ணனடி யேத்து மருமறை ஞானசம் பந்தன்
சந்த மார்ந்தழ காய தண்டமிழ் மாலைவல் லோர்போய்
முந்தி வானவ ரோடும் புகவலர் முனைகெட வினையே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 90. திருநெல்வாயிலரத்துறை : பண் – பியந்தைக்காந்தாரம்

2442.எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 1

2443.ஈர வார்சடை தன்மே லிளம்பிறை யணிந்தவெம் பெருமான்
சீருஞ்செல்வமு மேத்தாச் சிதடர்கள் தொழச்செல்வ தன்றால்
வாரி மாமல ருந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆருஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 2

2444.பிணி கலந்தபுன் சடைமேற் பிறையணி சிவனெனப் பேணிப்
பணி கலந்துசெய் யாத பாவிகள் தொழச்செல்வ தன்றால்
மணி கலந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணி கலந்தநெல் வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 3

2445.துன்ன ஆடையொன் றுடுத்துத் தூயவெண் ணீற்றின ராகி
உன்னி நைபவர்க் கல்லா லொன்றுங்கை கூடுவ தன்றால்

பொன்னு மாமணி யுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமேல்
அன்ன மாருநெல் வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 4

2446. வெருகு ரிஞ்சுவெங் காட்டி லாடிய விமலனென் றுள்கி
உருகி நைபவர்க் கல்லா லொன்றுங்கை கூடுவ தன்றால்
முருகு ரிஞ்சுபூஞ் சோலை மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்
தருகு ரிஞ்சுநெல் வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 5

2447. உரவு நீர்ச்சடைக் கரந்த வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்
பரவி நைபவர்க் கல்லாற் பரிந்துகை கூடுவ தன்றால்
குரவ நீடுயர் சோலைக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அரவ மாரு நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 6

2448. நீல மாமணி மிடற்று நீறணி சிவனெனப் பேணும்
சீல மாந்தர்கட் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கோல மாமல ருந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
ஆலுஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 7

2449. செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி யிராவண னலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றியென் பார்க்கல்ல தருளான்
கொழுங்க னிசுமந் துந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அழுந்துஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 8

2450. நுணங்கு நூலயன் மாலு மிருவரு நோக்கரி யானை
வணங்கி நைபவர்க் கல்லால் வந்துகை கூடுவ தன்றால்
மணங்க மழ்ந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணங்குஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே.9

2451. சாக்கி யப்படு வாருஞ் சமண்படு வார்களு மற்றும்
பாக்கி யப்பட கில்லாப் பாவிகள் தொழச்செல்வ தன்றால்
பூக்க மழ்ந்துபொன் னுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆர்க்குஞ் சோலை நெல்வாயி லரத்துறை யடிகள்தம் மருளே. 10

2452. கறையி னார்பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த அரத்துறை யடிகள்தம் மருளை
முறைமை யாற்சொன்ன பாடல் மொழியும் மாந்தர்தம் வினையோய்ப்
பறையு மையுற வில்லைப் பாட்டிவை பத்தும்வல் லார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திருமறைக்காடு : பண் – பியந்தைக்காந்தாரம்

2453.பொங்கு வெண்மணற் கானற் பொருகடற் றிரைதவழ் முத்தம்
கங்கு லாரிருள் போழுங் கலிமறைக் காடமர்ந் தார்தம்
திங்கள் சூடின ரேனுந் திரிபுர மெரித்தன ரேனும்
எங்கு மெங்கள் பிரானார் புகழல திகழ்பழி யிலரே. 1

2454.கூனி ளம்பிறை சூடிக் கொடுவரித் தோலுடை யாடை
ஆனி லங்கிள ரைந்து மாடுவர் பூண்பது மரவம்
கான லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்பத்
தேன லங்கமழ் சோலைத் திருமறைக் காடமர்ந் தாரே. 2

2455.நுண்ணி தாய்வெளி தாகி நூல்கிடந் திலங்குபொன் மார்பில்
பண்ணி யாழென முரலும் பணிமொழி யுமையொரு பாகன்
தண்ணி தாயவெள் ளருவி சலசல நுரைமணி ததும்பக்
கண்ணி தானுமோர் பிறையார் கலிமறைக் காடமர்ந் தாரே. 3

2456.ஏழை வெண்குரு கயலே யிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடமர்ந் தார்தாம்
மாழை யங்கய லொண்கண் மலைமகள் கணவன தடியின்
நீழ லேசர ணாக நினைபவர் வினைநலி விலரே. 4

2457.அரவம் வீக்கிய அரையு மதிர்கழல் தழுவிய அடியும்
பரவ நாஞ்செய்த பாவம் பறைதர அருள்பவர் பதிதான்
மரவ நீடுயர் சோலை மழலைவண் டியாழ்செயு மறைக்காட்
டிரவு மெல்லியும் பகலு மேத்துதல் குணமென லாமே. 5

2458.பல்லி லோடுகை யேந்திப் பாடியு மாடியும் பலிதேர்
அல்லல் வாழ்க்கைய ரேனு மழகிய தறிவரெம் மடிகள்
புல்ல மேறுவர் பூதம் புடைசெல வுழிதர்வர்க் கிடமாம்
மல்கு வெண்டிசை யோத மாமறைக் காடது தானே. 6

2459.நாகந் தான்கயி றாக நளிர்வரை யதற்குமத் தாகப்
பாகந் தேவரொ டசுரர் படுகட லளறெழக் கடைய
வேக நஞ்செழ ஆங்கே வெருவொடு மிரிந்தெங்கு மோட
ஆகந் தன்னில்வைத் தமிர்த மாக்குவித் தான்மறைக் காடே. 7

2460.தக்கன் வேள்வியைத் தகர்த்தோன் றனதொரு பெருமையை ஓரான்
மிக்கு மேற்சென்று மலையை யெடுத்தலு மலைமகள் நடுங்க
நக்குத் தன்திரு விரால லூன்றலு நடுநடுத் தரக்கன்
பக்க வாயும்விட் டலறப் பரிந்தவன் பதிமறைக் காடே. 8

2461. விண்ட மாமல ரோனும் விளங்கொளி யரவணை யானும்
பண்டுங் காண்பரி தாய பரிசின னவனுறை பதிதான்
கண்ட லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்ப
வண்ட லங்கமழ் சோலை மாமறைக் காடது தானே. 9

2462. பெரிய வாகிய குடையும் பீலியு மவைவெயிற் கரவாக்
கரிய மண்டைகை யேந்திக் கல்லென வுழிதருங் கழுக்கள்
அரிய வாகவுண் டோது மவர்திற மொழிந்துநம் மடிகள்
பெரிய சீர்மறைக் காடே பேணுமின் மனமுடை யீரே. 10

2463. மையு லாம்பொழில் சூழ்ந்த மாமறைக் காடமர்ந் தாரைக்
கையி னாற்றொழு தெழுவான் காழியுள் ஞானசம் பந்தன்
செய்த செந்தமிழ் பத்துஞ் சிந்தையுட் சேர்க்கவல் லார்போய்ப்
பொய்யில் வானவ ரோடும் புகவலர் கொளவலர் புகழே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 92. திருப்புகலூர்வர்த்தமானீச்சரம் : பண் – பியந்தைக்காந்தாரம்

2464. பட்டம் பால்நிற மதியம் படர்சடைச் சுடர்விடு பாணி
நட்ட நள்ளிரு ளாடு நாதனார் நவின்றுறை கோயில்
புட்டன் பேடையொ டாடும் பூம்புக லூர்த்தொண்டர்போற்றி
வட்டஞ் சூழ்ந்தடி பரவும் வர்த்தமா னீச்சரத் தாரே. 1

2465. முயல்வ ளாவிய திங்கள் வாண்முகத் தரிவையிற் றெரிவை
இயல்வ ளாவிய துடைய இன்னமு தெந்தையெம் பெருமான்
கயல்வ ளாவிய கழனிக் கருநிறக் குவளைகண் மலரும்
வயல்வ ளாவிய புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 2

2466. தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 3

2467. பண்ண வண்ணத்த ராகிப் பாடலொ டாடல றாத
விண்ண வண்ணத்த ராய விரிபுக லூரரொர் பாகம்
பெண்ண வண்ணத்த ராகும் பெற்றியொ டாணிணை பிணைந்த
வண்ண வண்ணத்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத்தாரே. 4

2468. ஈச னேறமர் கடவு ளின்னமு தெந்தையெம் பெருமான்
பூசு மாசில்வெண் ணீற்றர் பொலிவுடைப் பூம்பு கலூரில்
மூசு வண்டறை கொன்றை முருகன்முப் போதுஞ்செய் முடிமேல்
வாச மாமல ருடையார் வர்த்தமா னீச்சரத் தாரே. 5

2469. தளிரி ளங்கொடி வளரத் தண்கய மிரியவண் டேறிக்
கிளரி ளம்முழை நுழையக் கிழிதரு பொழிற்புக லூரில்
உளரி ளஞ்சுனை மலரு மொளிதரு சடைமுடி யதன்மேல்
வளரி ளம்பிறை யுடையார் வர்த்தமா னீச்சரத் தாரே. 6

2470. தென்சொல் விஞ்சமர் வடசொல் திசைமொழி யெழில்நரம் பெடுத்துத்
துஞ்சு நெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு தொல்புக லூரில்
அஞ்ச னம்பிதிர்ந் தனைய அலைகடல் கடையவன் றெழுந்த
வஞ்ச நஞ்சணி கண்டர் வர்த்தமா னீச்சரத் தாரே. 7

2471. சாம வேதமோர் கீத மோதியத் தசமுகன் பரவும்
நாம தேயம துடையார் நன்குணர்ந் தடிகளென் றேத்தக்
காம தேவனை வேவக் கனலெரி கொளுவிய கண்ணார்
வாம தேவர்தண் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 8

2472. சீர ணங்குற நின்ற செருவுறு திசைமுக னோடு
நார ணன்கருத் தழிய நகைசெய்த சடைமுடி நம்பர்
ஆர ணங்குறு முமையை யஞ்சுவித் தருளுதல் பொருட்டால்
வார ணத்துரி போர்த்தார் வர்த்தமா னீச்சரத் தாரே. 9

2473. கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையி னால்தம்
மெய்யைப் போர்துழல் வாரு முரைப்பன மெய்யென விரும்பேல்
செய்யில் வாளைக ளோடு செங்கயல் குதிகொளும் புகலூர்
மைகொள் கண்டத்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத் தாரே. 10

2474. பொங்கு தண்புனல் சூழ்ந்து போதணி பொழிற்புக லூரில்
மங்குல் மாமதி தவழும் வர்த்தமா னீச்சரத் தாரைத்
தங்கு சீர்திகழ் ஞான சம்பந்தன் தண்டமிழ் பத்தும்
எங்கு மேத்தவல் லார்க ளெய்துவ ரிமையவ ருலகே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. திருத்தெங்கூர் : பண் – பியந்தைக்காந்தாரம்

2475. புரைசெய் வல்வினை தீர்க்கும் புண்ணியர் விண்ணவர் போற்றக்
கரைசெய் மால்கடல் நஞ்சை யுண்டவர் கருதலர் புரங்கள்
இரைசெய் தாரழ லூட்டி யுழல்பவ ரிடுபலிக் கெழில்சேர்
விரைசெய் பூம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 1

2476. சித்தந் தன்னடி நினைவார் செடிபடு கொடுவினை தீர்க்கும்
கொத்தின் தாழ்சடை முடிமேற் கோளெயிற் றரவொடு பிறையன்
பத்தர் தாம்பணிந் தேத்தும் பரம்பரன் பைம்புனல் பதித்த
வித்தன் தாழ்பொழில் தெங்கூர் வெள்ளியாங்குன்றமர்ந்தாரே. 2

2477. அடையும் வல்வினை யகல அருள்பவ ரனலுடை மழுவாட்
படையர் பாய்புலித் தோலர் பைம்புனற் கொன்றையர் படர்புன்
சடையில் வெண்பிறை சூடித் தார்மணி யணிதரு தறுகன்
விடையர் வீங்கெழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 3

2478. பண்டு நான்செய்த வினைகள் பறையவோர் நெறியருள் பயப்பார்
கொண்டல் வான்மதி சூடிக் குரைகடல் விடமணி கண்டர்
வண்டு மாமல ரூதி மதுவுண இதழ்மறி வெய்தி
விண்ட வார்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 4

2479. சுழித்த வார்புனற் கங்கை சூடியோர் காலனைக் காலால்
தெழித்து வானவர் நடுங்கச் செற்றவர் சிறையணி பறவை
கழித்த வெண்டலை யேந்திக் காமன துடல்பொடி யாக
விழித்த வர்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 5

2480. தொல்லை வல்வினை தீர்ப்பார் சுடலைவெண் பொடியணி சுவண்டர்
எல்லி சூடிநின் றாடு மிறையவ ரிமையவ ரேத்தச்
சில்லை மால்விடை யேறித் திரிபுரந் தீயெழச் செற்ற
வில்லி னார்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 6

2481. நெறிகொள் சிந்தைய ராகி நினைபவர் வினைகெட நின்றார்
முறிகொள் மேனிமுக் கண்ணர் முளைமதி நடுநடுத் திலங்கப்
பொறிகொள் வாளர வணிந்த புண்ணியர் வெண்பொடிப் பூசி
வெறிகொள் பூம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந்த தாரே. 7

2482. எண்ணி லாவிற லரக்க னெழில்திகழ் மால்வரை யெடுக்க
கண்ணெ லாம்பொடிந் தலறக் கால்விர லூன்றிய கருத்தர்
தண்ணு லாம்புனற் கண்ணி தயங்கிய சடைமுடிச் சதுரர்
விண்ணு லாம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 8

2483.தேடித் தானயன் மாலுந் திருமுடி யடியிணை காணார்
பாடத் தான்பல பூதப் படையினர் சுடலையிற் பலகால்
ஆடத் தான்மிக வல்ல ரருச்சுனற் கருள்செயக் கருதும்
வேடத் தார்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 9

2484.சடங்கொள் சீவரப் போர்வைச் சாக்கியர் சமணர்சொல் தவிர
இடங்கொள் வல்வினை தீர்க்கு மேத்துமி னிருமருப் பொருகைக்
கடங்கொள் மால்களிற் றுரியர் கடல்கடைந் திடக்கனன் றெழுந்த
விடங்கொள் கண்டத்தர் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 10

2485.வெந்த நீற்றினர் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரைக்
கந்த மார்பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
சந்த மாயின பாடல் தண்டமிழ் பத்தும்வல் லார்மேல்
பந்த மாயின பாவம் பாறுதல் தேறுதல் பயனே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 94. திருவாழ்கொளிபுத்தூர் : பண் – பியந்தைக்காந்தாரம்

2486.சாகை யாயிர முடையார் சாமமு மோதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி யிரப்பதும் பலபல வுடையார்
தோகை மாமயி லனைய துடியிடை பாகமு முடையார்
வாகை நுண்டுளி வீசும் வாழ்கொளி புத்தூ ருளாரே. 1

2487.எண்ணி லீரமு முடையா ரெத்தனை யோரிவ ரறங்கள்
கண்ணு மாயிர முடையார் கையுமொ ராயிர முடையார்
பெண்ணு மாயிர முடையார் பெருமையோ ராயிர முடையார்
வண்ண மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 2

2488.நொடியோ ராயிர முடையார் நுண்ணிய ராமவர் நோக்கும்
வடிவு மாயிர முடையார் வண்ணமு மாயிர முடையார்
முடியு மாயிர முடையார் மொய்குழ லாளையு முடையார்
வடிவு மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 3

2489.பஞ்சி நுண்துகி லன்ன பைங்கழற் சேவடி யுடையார்
குஞ்சி மேகலை யுடையார் கொந்தணி வேல்வல னுடையார்
அஞ்சும் வென்றவர்க் கணியா ரானையி னீருரி யுடையார்
வஞ்சி நுண்ணிடை யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 4

2490.பரவு வாரையு முடையார் பழித்திகழ் வாரையு முடையார்
விரவு வாரையு முடையார் வெண்டலைப் பலிகொள்வ துடையார்.
அரவம் பூண்பது முடையா ராயிரம் பேர்மிக வுடையார்
வரமு மாயிர முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 5

2491.தண்டுந் தாளமுங் குழலுந் தண்ணுமைக் கருவியும் புறவில்
கொண்ட பூதமு முடையார் கோலமும் பலபல வுடையார்
கண்டு கோடலு மரியார் காட்சியு மரியதோர் கரந்தை
வண்டு வாழ்பதி யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 6

2492.மான வாழ்க்கைய துடையார் மலைந்தவர் மதிற்பரி சறுத்தார்
தான வாழ்க்கைய துடையார் தவத்தொடு நாம்புகழ்ந் தேத்த
ஞான வாழ்க்கைய துடையார் நள்ளிருள் மகளிர்நின் றேத்த
வான வாழ்க்கைய துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 7

2493.ஏழு மூன்றுமோர் தலைக ளுடையவ னிடர்பட அடர்த்து
வேழ்வி செற்றதும் விரும்பி விருப்பவர் பலபல வுடையார்
கேழல் வெண்பிறை யன்ன கெழுமணி மிடறுநின் றிலங்க
வாழி சாந்தமு முடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 8

2494.வென்றி மாமல ரோனும் விரிகடல் துயின்றவன் தானும்
என்று மேத்துகை யுடையா ரிமையவர் துதிசெய விரும்பி
முன்றின் மாமலர் வாச முதுமதி தவழ்பொழிற் றில்லை
மன்றி லாடல துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 9

2495.மண்டை கொண்டுழல் தேரர் மாசுடை மேனிவன் சமணர்
குண்டர் பேசிய பேச்சுக் கொள்ளன்மின் திகழொளி நல்ல
துண்ட வெண்பிறை சூடிச் சுண்ணவெண் பொடியணிந் தெங்கும்
வண்டு வாழ்பொழில் சூழ்ந்த வாழ்கொளி புத்தூ ருளாரே. 10

2496.நலங்கொள் பூம்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
வலங்கொள் வெண்மழு வாளன் வாழ்கொளி புத்தூ ருளானை
இலங்கு வெண்பிறை யானை யேத்திய தமிழிவை வல்லார்
நலங்கொள் சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 95. திருஅரசிலி : பண் – பியந்தைக்காந்தாரம்

2497.பாடல் வண்டறை கொன்றை பால்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியந் தோள்மேல்
ஆடல் மாசுண மசைத்த அடிகளுக் கிடமர சிலியே. 1

2498.ஏறு பேணிய தேறி யிளமதக் களிற்றினை யெற்றி
வேறு செய்தத னுரிவை வெண்புலால் கலக்கமெய் போர்த்த
ஊறு தேனவ னும்பர்க் கொருவனல் லொளிகொளொண் சுடராம்
ஆறு சேர்தரு சென்னி யடிகளுக் கிடமர சிலியே. 2

2499.கங்கை நீர்சடை மேலே கதமிகக் கதிரிள வனமென்
கொங்கை யாளொரு பாக மருவிய கொல்லைவெள் ளேற்றன்
சங்கை யாய்த்திரி யாமே தன்னடி யார்க்கருள் செய்து
அங்கை யாலன லேந்து மடிகளுக் கிடமர சிலியே. 3

2500.மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்திகழ் கொன்றை
தக்க நூல்திகழ் மார்பிற் றவளவெண் ணீறணிந் தாமை
அக்கி னாரமும் பூண்ட அடிகளுக் கிடமர சிலியே. 4

2501. மானஞ் சும்மட நோக்கி மலைமகள் பாகமு மருவித்
தானஞ் சாவரண் மூன்றுந் தழலெழச் சரமது துரந்து
வானஞ் சும்பெரு விடத்தை யுண்டவன் மாமறை யோதி
ஆனஞ் சாடிய சென்னி யடிகளுக் கிடமர சிலியே. 5

2502.பரிய மாசுணங் கயிறாப் பருப்பத மதற்குமத் தாகப்
பெரிய வேலையைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய அவர்தமைக் கண்டு
அரிய ஆரமு தாக்கு மடிகளுக் கிடமர சிலியே. 6,7

2503.வண்ண மால்வரை தன்னை மறித்திட லுற்றவல் லரக்கன்
கண்ணுந் தோளுநல் வாயு நெரிதரக் கால்விர லூன்றிப்
பண்ணின் பாடல்கைந் நரம்பாற் பாடிய பாடலைக் கேட்டு
அண்ண லாயருள் செய்த அடிகளுக் கிடமர சிலியே. 8

2504.குறிய மாணுரு வாகிக் குவலய மளந்தவன் றானும்
வெறிகொள் தாமரை மேலே விரும்பிய மெய்த்தவத் தோனும்
சொறிவொ ணாவகை யெங்குந் தேடியுந் திருவடி காண
அறிவொ ணாவுரு வத்தெம் மடிகளுக் கிடமர சிலியே. 9

2505.குருளை யெய்திய மடவார் நிற்பவே குஞ்சியைப் பறித்துத்
திரளை கையிலுண் பவருந் தேரருஞ் சொல்லிய தேறேல்
பொருளைப் பொய்யிலி மெய்யெம் நாதனைப் பொன்னடி வணங்கும்
அருளை யார்தர நல்கு மடிகளுக் கிடமர சிலியே. 10

2506.அல்லி நீள்வயல் சூழ்ந்த அரிசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்தன் நற்றமிழ் பத்திவை நாளும்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்தம ரர்தொழு தேத்த
வல்ல வானுல கெய்தி வைகலு மகிழ்ந்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 96. சீர்காழி : பண் – பியந்தைக்காந்தாரம்

2507.பொங்கு வெண்புரி வளரும் பொற்புடை மார்பனெம் பெருமான்
செங்க ணாடர வாட்டுஞ் செல்வனெஞ் சிவனுறை கோயில்
பங்க மில்பல மறைகள் வல்லவர் பத்தர்கள் பரவுந்
தங்கு வெண்டிரைக் கானற் றண்வயற் காழிநன் னகரே. 1

2508.தேவர் தானவர் பரந்து திண்வரை மால்கடல் நிறுவி
நாவ தாலமிர் துண்ண நயந்தவ ரிரிந்திடக் கண்டு
ஆவ வென்றரு நஞ்ச முண்டவ னமர்தரு மூதூர்
காவ லார்மதில் சூழ்ந்த கடிபொழிற் காழிநன் னகரே. 2

2509.கரியின் மாமுக முடைய கணபதி தாதைபல் பூதந்
திரியஇல்பலிக் கேகுஞ் செழுஞ்சுடர் சேர்தரு மூதூர்
சரியின் முன்கைநன் மாதர் சதிபட மாநட மாடி
உரிய நாமங்க ளேத்து மொலிபுனற் காழிநன் னகரே. 3

2510. சங்க வெண்குழைச் செவியன் தண்மதி சூடிய சென்னி
அங்கம் பூணென வுடைய அப்பனுக் கழகிய வூராந்
துங்க மாளிகை யுயர்ந்த தொகுகொடி வானிடை மிடைந்து
வங்க வாண்மதி தடவு மணிபொழிற் காழிநன் னகரே. 4

2511. மங்கை கூறமர் மெய்யான் மான்மறி யேந்திய கையான்
எங்க ளீசனென் றெழுவா ரிடர்வினை கெடுப்பவற் கூராஞ்
சங்கை யின்றிநன் னியமந் தாஞ்செய்து தகுதியின் மிக்க
கங்கை நாடுயர் கீர்த்தி மறையவர் காழிநன் னகரே. 5

2512. நாறு கூவிள மத்த நாகமுஞ் சூடிய நம்பன்
ஏறு மேறிய ஈச னிருந்தினி தமர்தரு மூதூர்
நீறு பூசிய வுருவர் நெஞ்சினுள் வஞ்சமொன் றின்றித்
தேறு வார்கள்சென் றேத்துஞ் சீர்திகழ் காழிநன் னகரே. 6

2513. நடம தாடிய நாதன் நந்திதன் முழவிடைக் காட்டில்
விடம மர்ந்தொரு காலம் விரித்தற முரைத்தவற் கூராம்
இடம தாமறை பயில்வா ரிருந்தவர் திருந்தியம் போதிற்
குடம தார்மணி மாடங் குலாவிய காழிநன் னகரே. 7

2514. கார்கொள் மேனியவ் வரக்கன் றன்கடுந் திறலினைக் கருதி
ஏர்கொள் மங்கையு மஞ்ச எழில்மலை யெடுத்தவன் நெரியச்
சீர்கொள் பாதத்தோர் விரலாற் செறுத்தவெஞ் சிவனுறை கோயில்
தார்கொள் வண்டினஞ் சூழ்ந்த தண்வயற் காழிநன் னகரே. 8

2515. மாலு மாமல ரானு மருவிநின் றிகலிய மனத்தாற்
பாலுங் காண்பரி தாய பரஞ்சுடர் தன்பதி யாகுஞ்
சேலும் வாளையுங் கயலுஞ் செறிந்துதன் கிளையொடு மேய
ஆலுஞ் சாலிநற் கதிர்க ளணிவயற் காழிநன் னகரே. 9

2516. புத்தர் பொய்மிகு சமணர் பொலிகழ லடியிணை காணுஞ்
சித்த மற்றவர்க் கிலாமைத் திகழ்ந்தநற் செழுஞ்சுடர்க் கூராஞ்
சித்த ரோடுநல் லமரர் செறிந்தநன் மாமலர் கொண்டு
முத்த னேயரு ளென்று முறைமைசெய் காழிநன் னகரே. 10

2517. ஊழி யானவை பலவு மொழித்திடுங் காலத்தி லோங்கு.
* * * * * * * * * * * * * 11

திருச்சிற்றம்பலம்

*****

## 97. சீகாழி : திருவிராகம். பண் – நட்டராகம்

2518. நம்பொருள் நம்மக்களென்று நச்சியிச்சை செய்துநீர்
அம்பர மடைந்துசால அல்லலுய்ப்ப தன்முனம்
உம்பர்நாத னுத்தம னொளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே. 1

2519. பாவமேவு முள்ளமோடு பத்தியின்றி நித்தலும்
ஏவமான செய்துசாவ தன்முனம்மி சைந்துநீர்
தீபமாலை தூபமுஞ் செறிந்தகைய ராகிநந்
தேவதேவன் மன்னுமூர் திருந்துகாழி சேர்மினே. 2

2520. சோறுகூறை யின்றியே துவண்டுதூர மாய்நுமக்
கேறுசுற்ற மெள்கவே யிடுக்கணுய்ப்ப தன்முனம்
ஆறுமோர் சடையினா னாதியானை செற்றவன்
நாறுதேன் மலர்ப்பொழில் நலங்கொள்காழி சேர்மினே. 3

2521. நச்சிநீர் பிறன்கடை நடந்துசெல்ல நாளையும்
உச்சிவம் மெனும்முரை யுணர்ந்துகேட்ப தன்முனம்
பிச்சர்நச் சரவரைப் பெரியசோதி பேணுவர்
இச்சைசெய்யு மெம்பிரா னெழில்கொள்காழி சேர்மினே. 4

2522 கண்கள்காண் பொழிந்துமேனி கன்றியொன்ற லாதநோய்
உண்கிலாமை செய்துநும்மை யுய்த்தழிப்ப தன்முனம்
விண்குலாவு தேவருய்ய வேலைநஞ் சமுதுசெய்
கண்கள்மூன் றுடையவெங் கருத்தர்காழி சேர்மினே. 5

2523. அல்லல்வாழ்க்கை யுய்ப்பதற் கவத்தமே பிறந்துநீர்
எல்லையில் பிணக்கினிற் கிடந்திடா தெழும்மினோ
பல்லில்வெண் டலையினிற் பலிக்கியங்கு பான்மையான்
கொல்லையேற தேறுவான் கோலக்காழி சேர்மினே. 6,7

2524. பொய்மிகுத்த வாயராய்ப் பொறாமையோடு செல்லுநீர்
ஐமிகுத்த கண்டரா யடுத்திரைப்ப தன்முனம்
மைமிகுத்த மேனிவா ளரக்கனைநெ ரித்தவன்
பைமிகுத்த பாம்பரைப் பரமர்காழி சேர்மினே. 8

2525. காலினோடு கைகளுந் தளர்ந்துகாம நோய்தனால்
ஏலவார் குழலினா ரிகழ்ந்துரைப்ப தன்முனம்
மாலினோடு நான்முகன் மதித்தவர்கள் காண்கிலா
நீலமேவு கண்டனார் நிகழ்ந்தகாழி சேர்மினே. 9

2526. நிலைவெறுத்த நெஞ்சமோடு நேசமில் புதல்வர்கள்
முலைவெறுத்த பேர்தொடங்கி யேமுனிவ தன்முனந்
தலைபறித்த கையர்தேரர் தாந்தரிப் பரியவன்
சிலைபிடித்தெ யிலெய்தான் திருந்துகாழி சேர்மினே. 10

2527.தக்கனார் தலையரிந்த சங்கரன் றனதரை
அக்கினோ டரவசைத்த அந்திவண்ணர் காழியை
ஒக்கஞா னசம்பந்த னுரைத்த பாடல் வல்லவர்
மிக்கஇன்ப மெய்திவீற் றிருந்துவாழ்தல் மெய்ம்மையே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 98. திருத்துருத்தி : திருவிராகம். பண் – நட்டராகம்

2528.வரைத்தலைப் பசும்பொனோ டருங்கலன்க ளுந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரி
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே. 1

2529.அடுத்தடுத்த கத்தியோடு வன்னிகொன்றை கூவிளம்
தொடுத்துடன் சடைப்பெய்தாய் துருத்தியாயோர் காலனை
கடுத்தடிப் புறத்தினா னிறத்துதைத்த காரணம்
எடுத்தெடுத் துரைக்குமாறு வல்லமாகி னல்லமே. 2

2530.கங்குல்கொண்ட திங்களோடு கங்கைதங்கு செஞ்சடைச்
சங்கிலங்கு வெண்குழை சரிந்திலங்கு காதினாய்
பொங்கிலங்கு பூணநூ லுருத்திரா துருத்திபுக்
கெங்குநின் னிடங்களா வடங்கிவாழ்வ தென்கொலோ. 3

2531. கருத்தினாலோர் காணியில் விருத்தியில்லை தொண்டர்தம்
அருத்தியாற்றம் மல்லல்சொல்லி யையமேற்ப தன்றியும்
ஒருத்திபால் பொருத்திவைத் துடம்புவிட்டு யோகியாய்
இருத்திநீ துருத்திபுக் கிதென்னமாய மென்பதே. 4

2532.துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாதஎன்னை மையல்செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படு முடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே. 5

2533.வெயிற்கெதிர்ந் திடங்கொடா தகங்குளிர்ந்த பைம்பொழில்
துயிற்கெதிர்ந்த புள்ளினங்கள் மல்குதண் துருத்தியாய்
மயிற்கெதிர்ந் தணங்குசாயல் மாதொர்பாக மாகமூ
வெயிற்கெதிர்ந் தொரம்பினா லெரித்தவில்லி யல்லையே. 6

2534.கணிச்சியம்ப டைச்செல்வா கழிந்தவர்க் கொழிந்தசீர்
துணிச்சிரக் கிரந்தையாய் கரந்தையாய் துருத்தியாய்
அணிப்படுந் தனிப்பிறைப் பனிக்கதிர்க் கவாவுநல்
மணிப்படும்பை நாகநீ மகிழ்ந்தஅண்ண லல்லையே. 7

2535.சுடப்பொடிந் துடம்பிழந் தநங்கனாய மன்மதன்
இடர்ப்படக் கடந்திடந் துருத்தியாக எண்ணினாய்
கடற்படை யுடையவக் கடலிலங்கை மன்னனை
அடற்பட அடுக்கலில் லடர்த்தஅண்ண லல்லையே. 8

2536.களங்குளிர்ந் திலங்குபோது காதலானு மாலுமாய்
வளங்கிளம்பொ னங்கழல் வணங்கிவந்து காண்கிலார்
துளங்கிளம்பி றைச்செனித் துருத்தியாய் திருந்தடி
உளங்குளிர்ந்த போதெலா முகந்துகந் துரைப்பனே. 9

2537.புத்தர்தத் துவமிலாச் சமணுரைத்த பொய்தனை
உத்தம மெனக்கொளா துகந்தெழுந்து வண்டினம்
துத்தநின்று பண்செயுஞ் சூழ்பொழில் துருத்தியெம்
பித்தர்பித்த னைத்தொழுப் பிறப்பறுத்தல் பெற்றியே. 10

2538.கற்றிமுற்றி னார்தொழுங் கழுமலத் தருந்தமிழ்
சுற்றுமுற்று மாயினா னவன்பகர்ந்த சொற்களால்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே
குற்றமுற்ற மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 99. திருக்கோடிகா : பண் – நட்டராகம்

2539.இன்றுநன்று நாளைநன் றென்றுநின்று இச்சையால்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்
மின்தயங்கு சோதியான் வெண்மதி விரிபுனல்
கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே. 1

2540.அல்லல்மிக்க வாழ்க்கையை ஆதரித் திராதுநீர்
நல்லதோர் நெறியினை நாடுதுந் நடம்மினோ
வில்லையன்ன வாணுதல் வெள்வளையொர் பாகமாம்
கொல்லைவெள்ளை யேற்றினான் கோடிகாவு சேர்மினே. 2

2541. துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல்செய்யப் போதுமின்
அக்கணிந் தரைமிசை யாறணிந்த சென்னிமேல்
கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே. 3

2542. பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக் குரைப்பன்நா னொல்லைநீ ரெழுமினோ
மண்டுகங்கை செஞ்சடை வைத்துமாதொர் பாகமாக்
கொண்டுகந்த மார்பினான் கோடிகாவு சேர்மினே. 4

2543. முன்னைநீர்செய் பாவத்தால் மூர்த்திபாதஞ் சிந்தியா
தின்னநீரி டும்பையில் மூழ்கிறீ ரெழும்மினோ
பொன்னைவென்ற கொன்றையான் பூதம்பாட ஆடலான்
கொன்னவிலும் வேலினான் கோடிகாவு சேர்மினே. 5

2544. ஏவமிக்க சிந்தையோ டின்பமெய்த லாமெனப்
பாவமெத் தனையுநீர் செய்தொரு பயனிலைக்
காவல்மிக்க மாநகர் காய்ந்துவெங் கனல்படக்
கோவமிக்க நெற்றியான் கோடிகாவு சேர்மினே. 6

2545. ஏணழிந்த வாழ்க்கையை யின்பமென் றிருந்துநீர்
மாணழிந்த மூப்பினால் வருந்தன்முன்னம் வம்மினோ
பூணல்வெள் ளெலும்பினான் பொன்றிகழ் சடைமுடிக்
கோணல்வெண் பிறையினான் கோடிகாவு சேர்மினே. 7

2546. மற்றிவாழ்க்கை மெய்யெனும் மனத்தினைத் தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மின் சேவடி பணிந்துவந் தெழுமினோ
வெற்றிகொள் தசமுகன் விறல்கெட இருந்ததோர்
குற்றமில் வரையினான் கோடிகாவு சேர்மினே. 8

2547. மங்குநோ யுறும்பிணி மாயும்வண்ணஞ் சொல்லுவன்
செங்கண்மால் திசைமுகன் சென்றளந்துங் காண்கிலா
வெங்கண்மால் விடையுடை வேதியன் விரும்புமூர்
கொங்குலாம் வளம்பொழிற் கோடிகாவு சேர்மினே. 9

2548. தட்டொடு தழைமயிற் பீலிகொள் சமணரும்
பட்டுடை விரிதுகிலி னார்கள்சொற் பயனிலை
விட்டபுன் சடையினான் மேதகும் முழவொடும்
கொட்டமைந்த ஆடலான் கோடிகாவு சேர்மினே. 10

2549.கொந்தணி குளிர்பொழிற் கோடிகாவு மேவிய
செந்தழ லுருவனைச் சீர்மிகு திறலுடை
அந்தணர் புகலியு ளாயகேள்வி ஞானசம்
பந்தன தமிழ்வல்லார் பாவமான பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 100. திருக்கோவலூர் வீரட்டம் : திருவிராகம். பண் – நட்டராகம்

2550.படைகொள்கூற்றம் வந்துமெய்ப் பாசம்விட்ட போதின்கண்
இடைகொள்வா ரெமக்கிலை யெழுகபோது நெஞ்சமே
குடைகொள்வேந்தன் மூதாதை குழகன்கோவ லூர்தனுள்
விடையதேறுங் கொடியினான் வீரட்டானஞ் சேர்துமே. 1

2551. கரவலாளர் தம்மனைக் கடைகள்தோறுங் கால்நிமிர்த்
திரவலாழி நெஞ்சமே யினியதெய்த வேண்டில்நீ
குரவமேறி வண்டினங் குழலொடியாழ்செய் கோவலூர்
விரவிநாறு கொன்றையான் வீரட்டானஞ் சேர்துமே. 2

2552.உள்ளத்தீரே போதுமின் னுறுதியாவ தறிதிரேல்
அள்ளற்சேற்றிற் காலிட்டிங் கவலத்துளழுந்தாதே
கொள்ளப்பாடு கீதத்தான் குழகன்கோவ லூர்தனுள்
வெள்ளந்தாங்கு சடையினான் வீரட்டானஞ் சேர்துமே. 3

2553.கனைகொளிருமல் சூலைநோய் கம்பதாளி குன்மமும்
இனையபலவு மூப்பினோ டெய்திவந்து நலியாமுன்
பனைகளுலவு பைம்பொழிற் பழனஞ்சூழ்ந்த கோவலூர்
வினையைவென்ற வேடத்தான் வீரட்டானஞ் சேர்துமே. 4

2554.உளங்கொள்போக முய்த்திடா ருடம்பிழந்த போதின்கண்
துளங்கிநின்று நாடொறுந் துயரலாழி நெஞ்சமே
வளங்கொள்பெண்ணை வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விளங்குகோவ ணத்தினான் வீரட்டானஞ் சேர்துமே. 5

2555.கேடுமூப்புச் சாக்காடு கெழுமிவந்து நாள்தொறும்
ஆடுபோல நரைகளா யாக்கைபோக்க தன்றியும்
கூடிநின்று பைம்பொழிற் குழகன்கோவ லூர்தனுள்
வீடுகாட்டு நெறியினான் வீரட்டானஞ் சேர்துமே. 6

2556. உரையும்பாட்டுந் தளர்வெய்தி யுடம்புமுத்த போதின்கண்
நரையுந்திரையுங் கண்டெள்கி நகுவர்நமர்க ளாதலால்
வரைகொள்பெண்ணை வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விரைகொள்சீர்வெண் ணீற்றினான் வீரட்டானஞ் சேர்துமே. 7

2557. ஏதமிக்க மூப்பினோ டிருமலீளை யென்றிவை
ஊதலாக்கை யோம்புவீ ருறுதியாவா தறிதிரேல்
போதில்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனுள்
வேதமோது நெறியினான் வீரட்டானஞ் சேர்துமே. 8

2558. ஆறுபட்ட புன்சடை யழகனாயி ழைக்கொரு
கூறுபட்ட மேனியான் குழகன்கோவ லூர்தனுள்
நீறுபட்ட கோலத்தான் நீலகண்ட னிருவர்க்கும்
வேறுபட்ட சிந்தையான் வீரட்டானஞ் சேர்துமே. 9

2559. குறிகொளாழி நெஞ்சமே கூறைதுவரிட் டார்களும்
அறிவிலாத அமணர்சொல் லவத்தமாவ தறிதியேல்
பொறிகொள்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனுள்
வெறிகொள்கங்கை தாங்கினான் வீரட்டானஞ் சேர்துமே. 10

2560. கழியொடுலவு கானல்சூழ் காழிஞான சம்பந்தன்
விழிகள் தீரச் சொன்னசொற் பாவநாச மாதலால்
அழிவிலீர்கொண் டேத்துமி னந்தண்கோவ லூர்தனுள்
விழிகொள்பூதப் படையினான் வீரட்டானஞ் சேர்துமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 101. திருஆரூர் : திருவிராகம். பண் – நட்டராகம்

2561. பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புக
நெருக்கிவாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
அருக்கன்மண்ட லத்தணாவு மந்தணாரூ ரென்பதே. 1

2562. விண்டவெள் ளெருக்கலர்ந்த வன்னிகொன்றை மத்தமும்
இண்டைகொண்ட செஞ்சடை முடிச்சிவ னிருந்தவூர்
கெண்டைகொண் டலர்ந்தகண்ணி னார்கள்கீத வோசைபோய்
அண்டரண்ட மூடறுக்கு மந்தணாரூ ரென்பதே. 2

2563. கறுத்தநஞ்ச முண்டிருண்ட கண்டர்கால னின்னுயிர்
மறுத்துமாணி தன்றனாகம் வண்மைசெய்த மைந்தனூர்
வெறித்துமேதி யோடிமூசு வள்ளைவெள்ளை நீள்கொடி
அறுத்துமண்டி யாவிபாயு மந்தணாரூ ரென்பதே. 3

2564. அஞ்சுமொன்றி யாறுவீசி நீறுபூசி மேனியில்
குஞ்சியார வந்திசெய்ய அஞ்சலென்னி மன்னுமூர்
பஞ்சியாரு மெல்லடிப் பணைத்தகொங்கை நுண்ணிடை
அஞ்சொலா ரரங்கெடுக்கு மந்தணாரூ ரென்பதே. 4

2565. சங்குலாவு திங்கள் சூடி தன்னையுன்னு வார்மனத்
தங்குலாவி நின்றஎங்க ளாதிதேவன் மன்னுமூர்
தெங்குலாவு சோலைநீடு தேனுலாவு செண்பகம்
அங்குலாவி யண்டநாறு மந்தணாரூ ரென்பதே. 5

2566. கள்ளநெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியோ
டுள்ளமொன்றி யுள்குவா ருளத்துளா னுகந்தவூர்
துள்ளிவாளை பாய்வயற் சுரும்புலாவு நெய்தல்வாய்
அள்ளல்நாரை யாரல்வாரு மந்தணாரூ ரென்பதே. 6

2567. கங்கைபொங்கு செஞ்சடைக் கரந்தகண்டர் காமனை
மங்கவெங்க ணால்விழித்த மங்கைபங்கன் மன்னுமூர்
தெங்கினூடு போகிவாழை கொத்திறுத்து மாவின்மேல்
அங்கண்மந்தி முந்தியேறு மந்தணாரூ ரென்பதே. 7

2568. வரைத்தலம் மெடுத்தவன் முடித்தலம் முரத்தொடும்
நெரித்தவன் புரத்தைமுன் னெரித்தவ னிருந்தவூர்
நிரைத்தமாளி கைத்திருவின் நேரனார்கள் வெண்ணகை
அரத்தவாய் மடந்தைமார்க ளாடுமாரூ ரென்பதே. 8

2569. இருந்தவன் கிடந்தவன் னிடந்துவிண் பறந்துமெய்
வருந்தியு மளப்பொணாத வானவன் மகிழ்ந்தவூர்
செருந்திஞாழல் புன்னைவன்னி செண்பகஞ் செழுங்குரா
அரும்புசோலை வாசநாறு மந்தணாரூ ரென்பதே. 9

2570. பறித்தவெண் டலைக்கடுப் படுத்தமேனி யார்தவம்
வெறித்தவேடன் வேலைநஞ்ச முண்டகண்டன் மேவுமூர்
மறித்துமண்டு வண்டல்வாரி மிண்டுநீர் வயற்செநெல்
அறுத்தவா யசும்புபாயு மந்தணாரூ ரென்பதே. 10

2571. வல்லிசோலை சூதநீடு மன்னுவீதி பொன்னுலா
வல்லிமா தமர்ந்திருந்த அந்தணாரூ ராதியை
நல்லசொல்லு ஞானசம் பந்தன்நாவி னின்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மை யாகவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 102. திருச்சிரபுரம் : பண் – நட்டராகம்

2572. அன்ன மென்னடை யரிவையோ டினிதுறை யமரர்தம் பெருமானார்
மின்னு செஞ்சடை வெள்ளெருக் கம்மலர் வைத்தவர் வேதந்தாம்
பன்னு நன்பொருள் பயந்தவர் பருமதிற் சிரபுரத் தார்சீரார்,
பொன்னின் மாமல ரடிதொழு மடியவர் வினையொடும் பொருந்தாரே. 1

2573. கோல மாகரி யுரித்தவ ரரவொடு மேனக்கொம் பிளஆமை
சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கர னார்தம்மைப்
போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட
நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை நில்லாவே. 2

2574. மானத் திண்புய வரிசிலைப் பார்த்தனைத் தவங்கெட மதித்தன்று
கானத் தேதிரி வேடனா யமர்செயக் கண்டருள் புரிந்தார்பூந்
தேனைத் தேர்ந்துசேர் வண்டுகள் திரிதருஞ் சிபுரத் துறையெங்கள்
கோனைக் கும்பிடு மடியரைக் கொடுவினை குற்றங்கள் குறுகாவே.3

2575. மாணி தன்னுயிர் மதித்துண வந்தஅக் காலனை யுதைசெய்தார்
பேணி யுள்குமெய் யடியவர் பெருந்துயர்ப் பிணக்கறுத் தருள்செய்வார்
வேணி வெண்பிறை யுடையவர் வியன் புகழ்ச் சிரபுரத் தமர்கின்ற
ஆணிப் பொன்னினை யடிதொழு மடியவர்க் கருவினை யடையாவே. 4

2576. பாரு நீரொடு பல்கதி ரிரவியும் பனிமதி யாகாசம்
ஓரும் வாயுவு மொண்கனல் வேள்வியிற் றலைவனு மாய்நின்றார்
சேருஞ் சந்தன மகிலொடு வந்திழி செழும்புனற் கோட்டாறு
வாருந் தண்புனல் சூழ்சிர புரந்தொழு மடியவர் வருந்தாரே. 5

2577. ஊழி யந்தத்தி லொலிகட லோட்டந்திவ் வுலகங்க ளவைமூட
ஆழி யெந்தையென் றமரர்கள் சரண்புக அந்தரத் துயர்ந்தார்தாம்
யாழின் நேர்மொழி யேழையோ டினிதுறை யின்பனெம் பெருமனார்
வாழி மாநகர்ச் சிரபுரந் தொழுதெழ வல்வினை அடையாவே. 6

2578. பேய்கள் பாடப்பல் பூதங்கள் துதிசெயப் பிணமிடு சுடுகாட்டில்
வேய்கொள் தோளிதான் வெள்கிட மாநட மாடும்வித் தகனாரொண்
சாய்கள் தான்மிக வுடையதண் மறையவர் தகுசிர புரத்தார்தாந்
தாய்க ளாயினார் பல்லுயிர்க் குந்தமைத் தொழுமவர் தளராரே. 7

2579. இலங்கு பூண்வரை மார்புடை யிராவண னெழில்கொள்வெற் பெடுத்தன்று
கலங்கச் செய்தலுங் கண்டுதங் கழலடி நெரியவைத் தருள்செய்தார்
புலங்கள் செங்கழு நீர்மலர்த் தென்றல்மன் றதனிடைப் புகுந்தாருங்
குலங்கொள் மாமறையவர்சிர புரந்தொழு தெழவினை குறுகாவே. 8

2580.வண்டு சென்றணை மலர்மிசை நான்முகன் மாயனென் றிவரன்று
கண்டு கொள்ளவோ ரேனமோ டன்னமாய்க் கிளறியும் பறந்துந்தாம்
பண்டு கண்டது காணவே நீண்டவெம் பசுபதி பரமேட்டி
கொண்ட செல்வத்துச் சிரபுரந் தொழுதெழ வினையவை கூடாவே. 9

2581.பறித்த புன்தலைக் குண்டிகைச் சமணரும் பார்மிசைத் துவர்தோய்ந்த
செறித்த சீவரத் தேரருந் தேர்கிலாத் தேவர்கள் பெருமானார்
முறித்து மேதிகள் கரும்புதின் றாவியின் மூழ்கிட இளவாளை
வெறித்துப் பாய்வயற் சிரபுரந் தொழவினை விட்டிடு மிகத்தானே. 10

2582.பரசு பாணியைப் பத்தர்க ளத்தனைப் பையர வோடக்கு
நிரைசெய் பூண்திரு மார்புடை நிமலனை நித்திலப் பெருந்தொத்தை
விரைசெய் பூம்பொழிற் சிரபுரத் தண்ணலை விண்ணவர் பெருமானைப்
பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லவர் பரமனைப் பணிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 103. திருஅம்பர்மாகாளம் : பண் – நட்டராகம்

2583.புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூடிப்
பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும் பிணையல்செய் தவர்மேய
மல்கு தண்டுறை யரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
அல்லு நன்பக லுந்தொழு மடியவர்க் கருவினை யடையாவே. 1

2584.அரவ மாட்டுவ ரந்துகில் புலியத ளங்கையி லனலேந்தி
இரவு மாடுவ ரிவையிவர் சரிதைக ளிசைவன பலபூதம்
மரவந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
பரவி யும்பணிந் தேத்தவல் லாரவர் பயன்றலைப் படுவாரே. 2

2585.குணங்கள் கூறியுங் குற்றங்கள் பரவியுங் குரைகழ லடிசேரக்
கணங்கள் பாடவுங் கண்டவர் பரவவுங் கருத்தறிந் தவர்மேய
மணங்கொள் பூம்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
வணங்கு முள்ளமோ டணையவல் லார்களை வல்வினை யடையாவே. 3

2586.எங்கு மேதுமோர் பிணியிலர் கேடில ரிழைவளர் நறுங்கொன்றை
தங்கு தொங்கலுந் தாமமுங் கண்ணியுந் தாமகிழ்ந் தவர்மேய
மங்குல் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
கங்கு லும்பக லுந்தொழு மடியவர் காதன்மை யுடையாரே. 4

2587.நெதிய மென்னுள போகமற் றென்னுள நிலமிசை நலமாய
கதிய மென்னுள வானவ ரென்னுளர் கருதிய பொருள்கூடில்
மதியந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
புதிய பூவொடு சாந்தமும் புகையுங்கொண் டேத்துதல் புரிந்தோர்க்கே. 5

2588.கண்ணு லாவிய கதிரொளி முடிமிசைக் கனல்விடு சுடர்நாகம்
தெண்ணி லாவொடு திலகமு நகுதலை திகழவைத் தவர்மேய
மண்ணு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
உண்ணி லாநினைப் புடையவர் யாவரிவ் வுலகினி லுயர்வாரே. 6

2589.தூசு தானரைத் தோலுடைக் கண்ணியஞ் சுடர்விடு நறுங்கொன்றை
பூசு வெண்பொடிப் பூசுவ தன்றியும் புகழ்புரிந் தவர்மேய
மாசு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
பேசு நீர்மையர் யாவரிவ் வுலகினிற் பெருமையைப் பெறுவாரே. 7

2590.பவ்வ மார்கட லிலங்கையர் கோன்றனைப் பருவரைக் கீழூன்றி
எவ்வந் தீரஅன் றிமையவர்க் கருள்செய்த இறையவ னுறைகோயில்
மவ்வந் தோய்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
கவ்வை யாற்றொழு மடியவர் மேல்வினை கனலிடைச் செதிளன்றே. 8

2591. உய்யுங் காரண முண்டென்று கருதுமி னொளிகிளர் மலரோனும்
பைகொள் பாம்பணைப் பள்ளிகொ ளண்ணலும் பரவநின் றவர்மேய
மையு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
கையி னாற்றொழு தவலமும் பிணியுந்தங் கவலையுங் களைவாரே. 9

2592.பிண்டி பாலரு மண்டைகொள் தேரரும் பீலிகொண் டுழல்வாரும்
கண்ட நூலருங் கடுந்தொழி லாளருங் கழறநின் றவர்மேய
வண்டு லாம்பொழி லரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்
பண்டு நாஞ்செய்த பாவங்கள் பற்றறப் பரவுதல் செய்வோமே. 10

2593.மாறு தன்னொடு மண்மிசை யில்லது வருபுனல் மாகாளத்
தீறு மாதியு மாகிய சோதியை யேறமர் பெருமானை
நாறு பூம்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன தமிழ்மாலை
கூறு வாரையுங் கேட்கவல் லாரையுங் குற்றங்கள் குறுகாவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 104. திருக்கடிக்குளம் : பண் – நட்டராகம்

2594.பொடிகொள் மேனிவெண் ணூலினர் தோலினர் புலியுரி யதளாடை
கொடிகொ ளேற்றினர் மணிகிணி னெனவரு குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடி வீழ்தரு மடியரை முன்வினை மூடாவே 1

2595.விண்க ளார்தொழும் விளக்கினைத் துளக்கிலா விகிர்தனை விழவாரும்
மண்க ளார்துதித் தன்பரா யின்புறும் வள்ளலை மருவித்தம்
கண்க ளார்தரக் கண்டுநங் கடிக்குளத் துறைதரு கற்பகத்தைப்
பண்க ளார்தரப் பாடுவார் கேடிலர் பழியிலர் புகழாமே. 2

2596.பொங்கு நற்கரி யுரியது போர்ப்பது புலியத ளழல்நாகம்
தங்க மங்கையைப் பாகம துடையவர் தழல்புரை திருமேனிக்
கங்கை சேர்தரு சடையினர் கடிக்குளத் துறைதரு கற்பகத்தை
எங்கு மேத்திநின் றின்புறு மடியரை யிடும்பைவந் தடையாவே. 3

2597.நீர்கொள் நீள்சடை முடியனை நித்திலத் தொத்தினை நிகரில்லாப்
பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவளத்தைப் பசும்பொனை விசும்பாரும்
கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகந்தன்னைச்
சீர்கொள் செல்வங்க ளேத்தவல் லார்வினை தேய்வது திண்ணமே. 4

2598.சுரும்பு சேர்சடை முடியினன் மதியொடு துன்னிய தழல்நாகம்
அரும்பு தாதவிழ்ந் தலர்ந்தன மலர்பல கொண்டடி யவர்போற்றக்
கரும்பு கார்மலி கொடிமிடை கடிக்குளத் துறைதரு கற்பகத்தை
விரும்பு வேட்கையோ டுளமகிழ்ந் துரைப்பவர் விதியுடை யவர்தாமே. 5

2599.மாதி லங்கிய பாகத்தன் மதியமொ டலைபுன லழல்நாகம்
போதி லங்கிய கொன்றையு மத்தமும் புரிசடைக் கழகாகக்
காதி லங்கிய குழையினன் கடிக்குளத் துறைதரு கற்பகத்தின்
பாதங் கைதொழு தேத்தவல் லார்வினை பற்றறக் கெடுமன்றே. 6

2600.குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள் குழாம்பல குளிர்பொய்கை
உலவு புள்ளின மன்னங்க ளாலிடும் பூவைசே ருங்கூந்தல்
கலவை சேர்தரு கண்ணியன் கடிக்குளத் துறையுங்கற் பகத்தைச்சீர்
நிலவி நின்றுநின் றேத்துவார் மேல்வினை நிற்ககில் லாதானே. 7

2601. மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேல் மதியிலா மையிலோடி
எடுத்த லும்முடி தோள்கர நெரிந்திற இறையவன் விரலூன்றக்
கடுத்து வாயொடு கையெடுத் தலறிடக் கடிக்குளந் தனில்மேவிக்
கொடுத்த பேரருட் கூத்தனை யேத்துவார் குணமுடை யவர்தாமே. 8

2602. நீரி னார்கடற் றுயின்றவ னயனொடு நிகழடி முடிகாணார்
பாரி னார்விசும் புறப்பரந் தெழுந்ததோர் பவளத்தின் படியாகி
காரி னார்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகத்தின்றன்
சீரி னார்கழ லேத்தவல் லார்களைத் தீவினை யடையாவே. 9

2603. குண்டர் தம்மொடு சாக்கியர் சமணருங் குறியினில் நெறிநில்லா
மிண்டர் மிண்டுரை கேட்டவை மெய்யெனக் கொள்ளன்மின் விடமுண்ட
கண்டர் முண்டநன் மேனியர் கடிக்குளத் துறைதரு மெம்மீசர்
தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி யெளிதாமே. 10

2604. தனமலி புகழ்தயங் குபூந்த ராயவர் மன்னன்நற் சம்பந்தன்
மனமலி புகழ்வண் டமிழ்மா லைகள் மாலதாய் மகிழ்வோடும்
கனம விகட லோதம்வந் துலவிய கடிக்குளத் தமர்வானை
இனம விந்திசை பாடவல் லார்கள்போ யிறைவனோ டுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 105. திருக்கீழ்வேளூர் : பண் – நட்டராகம்

2605. மின்னு லாவிய சடையினர் விடையினர் மிளிர்தரு மரவோடும்
பன்னு லாவிய மறையொலி நாவினர் கறையணி கண்டத்தர்
பொன்னு லாவிய கொன்றையந் தாரினர் புகழ்மிகு கீழ்வேளூர்
உன்னு லாவிய சிந்தையர் மேல்வினை யோடிட வீடாமே. 1

2606. நீருலாவிய சடையிடை யரவொடு மதிசிர நிரைமாலை
வாருலாவிய வனமுலை யவளொடு மணிசிலம் பவையார்க்க
ஏருலாவிய இறைவன துறைவிட மெழில்திகழ் கீழ்வேளூர்
சீருலாவிய சிந்தைசெய் தணைபவர் பிணியொடு வினைபோமே. 2

2607. வெண்ணிலாமிகு விரிசடை யரவொடு வெள்ளெருக் கலர்மத்தம்
பண்ணிலாவிய பாடலோ டாடலர் பயில்வுறு கீழ்வேளூர்ப்
பெண்ணி லாவிய பாகனைப் பெருந்திருக் கோயிலெம் பெருமானை
உண்ணி லாவிநின் றுள்கிய சிந்தையா ருலகினி லுள்ளாரே 3

2608. சேடு லாவிய கங்கையைச் சடையிடைத் தொங்கவைத் தழகாக
நாடு லாவிய பலிகொளு நாதனார் நலமிகு கீழ்வேளூர்ப்
பீடு லாவிய பெருமையர் பெருந்திருக் கோயிலுட் பிரியாது
நீடு லாவிய நிமலனைப் பணிபவர் நிலைமிகப் பெறுவாரே. 4

2609. துன்று வார்சடைச் சுடர்மதி நகுதலை வடமணி சிரமாலை
மன்று லாவிய மாதவ ரினிதியல் மணமிகு கீழ்வேளூர்
நின்று நீடிய பெருந்திருக் கோயிலின் நிமலனை நினைவோடும்
சென்று லாவிநின் றேத்தவல் லார்வினை தேய்வது திணமாமே. 5

2610. கொத்து லாவிய குழல்திகழ் சடையனைக் கூத்தனை மகிழ்ந்துள்கித்
தொத்து லாவிய நூலணி மார்பினர் தொழுதெழு கீழ்வேளூர்ப்
பித்து லாவிய பத்தர்கள் பேணிய பெருந்திருக் கோயில்மன்னும்
முத்து லாவிய வித்தினை யேத்துமின் முடுகிய இடர்போமே. 6

2611. பிறைநி லாவிய சடையிடைப் பின்னலும் வன்னியுந் துன்னாரும்
கறைநி லாவிய கண்டரெண் டோளினர் காதல்செய் கீழ்வேளூர்
மறைநி லாவிய அந்தணர் மலிதரு பெருந்திருக் கோயில்மன்னும்
நிறைநி லாவிய ஈசனை நேசத்தால் நினைபவர் வினைபோமே. 7

2612. மலைநி லாவிய மைந்தனம் மலையினை யெடுத்தலு மரக்கன்றன்
தலையெ லாநெரிந் தலறிட வூன்றினா னுறைதரு கீழ்வேளூர்க்
கலைநி லாவிய நாவினர் காதல்செய் பெருந்திருக் கோயிலுள்
நிலைநி லாவிய ஈசனை நேசத்தால் நினையவல் வினைபோமே. 8

2613. மஞ்சு லாவிய கடற்கிடந் தவனொடு மலரவன் காண்பொண்ணாப்
பஞ்சு லாவிய மெல்லடிப் பார்ப்பதி பாகனைப் பரிவோடும்
செஞ்சொ லார்பலர் பரவிய தொல்புகழ் மல்கிய கீழ்வேளூர்
நஞ்சு லாவிய கண்டனை நணுகுமின் நடலைகள் நணுகாவே. 9

2614. சீறு லாவிய தலையினர் நிலையிலா அமணர்கள் சீவரத்தார்
வீறி லாதவெஞ் சொற்பல விரும்பன்மின் சுரும்பமர் கீழ்வேளூர்
ஏறு லாவிய கொடியனை யேதமில் பெருந்திருக் கோயில்மன்னு
பேறு லாவிய பெருமையன் திருவடி பேணுமின் தவமாமே. 10

2615. குருண்ட வார்குழற் சடையுடைக் குழகனை அழகமர் கீழ்வேளூர்த்
திரண்ட மாமறை யவர்தொழும் பெருந்திருக் கோயிலெம் பெருமானை
இருண்ட மேதியி னினமிகு வயல்மல்கு புகலிமன் சம்பந்தன்
தெருண்ட பாடல்வல் லாரவர் சிவகதி பெறுவது திடமாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 106. திருவலஞ்சுழி : நட்டராகம்

2616. என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே. 1

2617. விண்டொ ழிந்தன நம்முடை வல்வினை விரிகடல் வருநஞ்சம்
உண்டி றைஞ்சுவா னவர்தமைத் தாங்கிய இறைவனை யுலகத்தில்
வண்டு வாழ்குழல் மங்கையொர் பங்கனை வலஞ்சுழி யிடமாகக்
கொண்ட நாதன்மெய்த் தொழில்புரி தொண்டரோ டினிதிருந் தமையாலே. 2

2618. திருந்த லார்புரந் தீயெழச் செறுவன விறலின்க ணடியாரைப்
பரிந்து காப்பன பத்தியில் வருவன மத்தமாம் பிணிநோய்க்கு
மருந்து மாவன மந்திர மாவன வலஞ்சுழி யிடமாக
இருந்த நாயக னிமையவ ரேத்திய இணையடித் தலந்தானே. 3

2619. கறைகொள் கண்டத்தர் காய்கதிர் நிறத்தின ரறத்திற முனிவர்க்கன்(று)
இறைவ ராலிடை நீழலி லிருந்துகந் தினிதருள் பெருமானார்
மறைக ளோதுவர் வருபுனல் வலஞ்சுழி யிடமகிழ்ந் தருகங்கானத்
தறைக மூல்சிலம் பார்க்கநின் றாடிய அற்புத மறியோமே. 4

2620. மண்ணர் நீரர்வண் காற்றின ராற்றலா மெரியுரு வொருபாகம்
பெண்ண ராணெனத் தெரிவரு வடிவினர் பெருங்கடற் பவளம்போல்
வண்ண ராகிலும் வலஞ்சுழி பிரிகிலார் பரிபவர் மனம்புக்க
எண்ண ராகிலு மெனைப்பல இயம்புவ ரிணையடி தொழுவாரே. 5

2621. ஒருவ ராலுவ மிப்பதை யரியதோர் மேனியர் மடமாதர்
இருவ ராதரிப் பார்பல பூதமும் பேய்களு மடையாளம்
அருவ ராததோர் வெண்டலை கைப்பிடித் தகந்தொறும் பலிக்கென்று
வருவ ரேலவர் வலஞ்சுழி யடிகளே வரிவளை கவர்ந்தாரே. 6

2622. குன்றி யூர்குட மூக்கிடம் வலம்புரங் குலவிய நெய்த்தானம்
என்றிவ் வூர்களி லோமென்று மியம்புவ ரிமையவர் பணிகேட்பார்
அன்றி யூர்தமக் குள்ளன அறிகிலோம் வலஞ்சுழி யரனார்பால்
சென்ற வூர்தனில் தலைப்பட லாமென்று சேயிழை தளர்வாமே. 7

2623. குயிலி னேர்மொழிக் கொடியிடை வெருவுறக் குலவரைப் பரப்பாய
கயிலை யைப்பிடித் தெடுத்தவன் கதிர்முடி தோளிரு பதுமூன்றி
மயிலி னேரன சாயலோ டமர்ந்தவன் வலஞ்சுழி யெம்மானைப்
பயில வல்லவர் பரகதி காண்பவ ரல்லவர் காணாரே. 8

2624. அழல தோம்பிய அலர்மிசை யண்ணலு மரவணைத் துயின்றானும்
கழலுஞ் சென்னியுங் காண்பரி தாயவர் மாண்பமர் தடக்கையில்
மழலை வீணையர் மகிழ்திரு வலஞ்சுழி வலங்கொடு பாதத்தால்
சுழலு மாந்தர்கள் தொல்வினை யதனொடு துன்பங்கள் களைவாரே. 9

2625. அறிவி லாதவன் சமணர்கள் சாக்கியர் தவம்புரிந் தவஞ்செய்வார்
நெறிய லாதன கூறுவர் மற்றவை தேறன்மின் மாறாநீர்
மறியு லாந்திரைக் காவிரி வலஞ்சுழி மருவிய பெருமானைப்
பிறிவி லாதவர் பெறுகதி பேசிடி லளவறுப் பொண்ணாதே. 10

2626. மாதொர் கூறனை வலஞ்சுழி மருவிய மருந்தினை வயற்காழி
நாதன் வேதியன் ஞானசம் பந்தன்வாய் நவிற்றிய தமிழ்மாலை
ஆத ரித்திசை கற்றுவல் லார்சொலக் கேட்டுகந் தவர்தம்மை
வாதி யாவினை மறுமைக்கு மிம்மைக்கும் வருத்தம்வந் தடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 107. திருக்கேதீச்சரம் : பண் – நட்டராகம்

2627. விருது குன்றமா மேருவில் நாணர வாஅன லெரியம்பாப்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளும்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்
கருத நின்றகே தீச்சரங் கைதொழக் கடுவினை யடையாவே. 1

2628. பாடல் வீணையர் பலபல சரிதைய ரெருதுகைத் தருநட்டம்
ஆடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்தர்
ஈட மாவது இருங்கடற் கரையினி லெழில்திகழ் மாதோட்டம்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக் கெடுமிடர் வினைதானே. 2

2629. பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையின ரறைகழல் சிலம்பார்க்கச்
சுண்ண மாதரித் தாடுவர் பாடுவ ரகந்தொறு மிடுபிச்சைக்
குண்ண லாவதோ ரிச்சையி னுழல்பவ ருயர்தரு மாதோட்டத்
தண்ணல் நண்ணுகே தீச்சர மடைபவர்க் கருவினை யடையாவே. 3

2630. பொடிகொள் மேனியர் புலியத ளரையினர் விரிதரு கரத்தேந்தும்
வடிகொள் மூவிலை வேலினர் நூலினர் மறிகடல் மாதோட்டத்
தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம் பரிந்தசிந் தையராகி
முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேல் மொய்த்தெழும் வினைபோமே. 4

2631. நல்ல ராற்றவும் ஞானநன் குடையர்தம் மடைந்தவர்க் கருளீய
வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடன் மாதோட்டத்
தெல்லை யில்புக ழெந்தைகே தீச்சர மிராப்பகல் நினைந்தேத்தி
அல்ல லாசறுத் தரனடி யிணைதொழு மன்பரா ம்டியாரே. 5

2632. பேழை வார்சடைப் பெருந்திரு மகள்தனைப் பொருந்தவைத் தொருபாகம்
மாழை யங்கயற் கண்ணிபா லருளிய பொருளினர் குடிவாழ்க்கை
வாழை யம்பொழில் மந்திகள் களிப்புற மருவிய மாதோட்டக்
கேழல் வெண்மருப் பணிந்தநீள் மார்பர்கே தீச்சரம் பிரியாரே. 6

2633. பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல் லுலகினி லுயிர்வாழ்க்கை
கண்ட நாதனார் கடலிடங் கைதொழக் காதலித் துறைகோயில்
வண்டு பண்செயு மாமலர்ப் பொழில்மஞ்ஞை நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாள்தொறுந் துதிசெய அருள்செய்கே தீச்சர மதுதானே. 7

2634. தென்னி லங்கையர் குலபதி மலைநலிந் தெடுத்தவன் முடிதிண்டோள்
தன்ன லங்கெட அடர்த்தவற் கருள்செய்த தலைவனார் கடல்வாயப்
பொன்னி லங்கிய முத்துமா மணிகளும் பொருந்திய மாதோட்டத்
துன்னி யன்பொடு மடியவ ரிறைஞ்சுகே தீச்சரத் துள்ளாரே. 8

2635. பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும் புவியிடந் தெழுந்தோடி
மேவி நாடிநின் னடியிணை காண்கிலா வித்தக மென்னாகும்
மாவும் பூகமுங் கதலியும் நெருங்குமா தோட்டநன் னகர்மன்னித்
தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத் திருந்தஎம் பெருமானே. 9

2636. புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர் புறனுரைச் சமணாதர்
எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய ஏழைமை கேளேன்மின்
மத்த யானையை மறுகிட வுரிசெய்து போர்த்தவர் மாதோட்டத்
தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே தீச்சர மடைமின்னே. 10

2637. மாடெ லாமண முரசெனக் கடலின தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே தீச்சரத் தடிகளை யணிகாழி
நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொல் நவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 108. திருவிற்குடிவீரட்டம் : பண் – நட்டராகம்

2638. வடிகொள் மேனியர் வானமா மதியினர் நதியினர் மதுவார்ந்த
கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடியினருடைபுலி யதளார்ப்பர்
விடைய தேறுமெம் மானமர்ந் தினிதுறை விற்குடி வீரட்டம்
அடிய ராகிநின் றேத்தவல் லார்தமை அருவினை யடையாவே. 1

2639. களங்கொள் கொன்றையுங் கதிர்விரி மதியமுங் கடிகமழ் சடைக்கேற்றி
உளங்கொள் பத்தர்பா லருளிய பெருமையர் பொருகரி யுரிபோர்த்து
விளங்கு மேனிய ரெம்பெரு மானுறை விற்குடி வீரட்டம்
வளங்கொள் மாமல ரால்நினைந் தேத்துவார் வருத்தம தறியாரே. 2

2640. கரிய கண்டத்தர் வெளியவெண் பொடியணி மார்பினர் வலங்கையில்
எரியர் புன்சடை யிடம்பெறக் காட்டகத் தாடிய வேடத்தர்
விரியு மாமலர்ப் பொய்கைசூழ் மதுமலி விற்குடி வீரட்டம்
பிரிவி லாதவர் பெருந்தவத் தோரெனப் பேணுவ ருலகத்தே. 3

2641. பூதஞ் சேர்ந்திசை பாடல ராடலர் பொலிதர நலமார்ந்த
பாதஞ் சேரிணைச் சிலம்பினர் கலம்பெறு கடலெழு விடமுண்டார்
வேத மோதிய நாவுடை யானிடம் விற்குடி வீரட்டம்
சேரு நெஞ்சினர்க் கல்லதுண் டோபிணி தீவினை கெடுமாறே.4

2642. கடிய ஏற்றினர் கனலன மேனிய ரனலெழ வூர்மூன்றும்
இடிய மால்வரை கால்வளைத் தான்றன தடியவர் மேலுள்ள
வெடிய வல்வினை வீட்டுவிப் பானுறை விற்குடி வீரட்டம்
படிய தாகவே பரவுமின் பரவினாற் பற்றறு மருநோயே. 5

2643. பெண்ணொர் கூறினர் பெருமையர் சிறுமறிக் கையினர்மெய்யார்ந்த
அண்ண லன்புசெய் வாரவர்க் கெளியவ ரரியவ ரல்லார்க்கு
விண்ணி லார்பொழில் மல்கிய மலர்விரி விற்குடி வீரட்டம்
எண்ணி லாவிய சிந்தையி னார்தமக் கிடர்கள்வந் தடையாவே. 6,7

2644. இடங்கொள் மாகட லிலங்கையர் கோன்தனை யிகலழி தரவூன்று
திடங்கொள் மால்வரை யானுரை யார்தரு பொருளின ளிருளார்ந்த
விடங்கொள் மாமிட றுடையவ னுறைபதி விற்குடி வீரட்டம்
தொடங்கு மாறிசை பாடிநின் றார்தமைத் துன்பநோ யடையாவே. 8

2645. செங்கண் மாலொடு நான்முகன் தேடியுந் திருவடி யறியாமை
எங்கு மாரெரி யாகிய இறைவனை யறைபுனல் முடியார்ந்த
வெங்கண் மால்வரைக் கரியுரித் துகந்தவன் விற்குடி வீரட்டம்
தங்கை யால்தொழு தேத்தவல் லாரவர் தவமல்கு குணத்தாரே. 9

2646. பிண்ட முண்டுழல் வார்களும் பிரிதுவ ராடைய ரவர்வார்த்தை
பண்டு மின்றுமோர் பொருளெனக் கருதன்மின் பரிவுறு வீர்கேண்மின்
விண்ட மாமலர்ச் சடையவ னிடமெனில் விற்குடி வீரட்டம்
கண்டு கொண்டடி காதல்செய் வாரவர் கருத்துறுங் குணத்தாரே. 10

2647. விலங்க லேசிலை யிடமென வுடையவன் விற்குடி வீரட்டத்
திலங்கு சோதியை யெம்பெரு மான்றனை யெழில்திகழ் கழல்பேணி
நலங்கொள் வாழ்பொழிற் காழியுள் ஞானசம் பந்தனற் றமிழ்மாலை
வலங்கொ டேயிசை மொழியுமின் மொழிந்தக்கால் மற்றது வரமாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 109. திருக்கோட்டூர் : பண் – நட்டராகம்

2648. நீல மார்தரு கண்டனே நெற்றியோர் கண்ணனே யொற்றைவிடைச்
சூல மார்தரு கையனே துன்றுபைம் பொழில்கள் சூழ்ந்தழகாய
கோல மாமலர் மணங்கமழ் கோட்டூர்நற் கொழுந்தே யென்றெழுவார்கள்
சால நீள்தல மதனிடைப் புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே. 1

2649. பங்க யம்மலர்ச் சீறடிப் பஞ்சுறு மெல்விர லரவல்குல்
மங்கை மார்பலர் மயில்குயில் கிளியென மிழற்றிய மொழி யார்மென்
கொங்கை யார்குழாங் குணலைசெய் கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள்
சங்கை யொன்றில ராகிச்சங் கரன்திரு வருள்பெற லெளிதாமே. 2

2650. நம்ப னார்நல மலர்கொடு தொழுதெழு மடியவர் தமக்கெல்லாம்
செம்பொ னார்தரு மெழில்திகழ் முலையவர் செல்வமல் கியநல்ல
கொம்ப னார்தொழு தாடிய கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள்
அம்பொ னார்தரு முலகினி லமரரோ டமர்ந்தினி திருப்பாரே. 3

2651. பலவு நீள்பொழில் தீங்கனி தேன்பலா மாங்கனி பயில்வாய
கலவ மஞ்ஞைகள் நிலவுசொற் கிள்ளைக ளன்னஞ்சேர்ந் தழகாய்
குலவு நீள்வயற் கயலுகள் கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள்
நிலவு செல்வத்த ராகிநீள் நிலத்திடை நீடிய புகழாரே. 4

2652. உருகு வாருள்ளத் தொண்சுடர் தனக்கென்று மன்பரா மடியார்கள்
பருகு மாரமு தெனநின்று பரிவொடு பத்திசெய் தெத்திசையும்
குருகு வாழ்வயல் சூழ்தரு கோட்டூர் நற்கொழுந்தேயென் றெழுவார்கள்
அருகு சேர்தரு வினைகளு மகலும்போ யவனருள் பெறலாமே. 5

2653. துன்று வார்சடைத் தூமதி மத்தமுந் துன்னெருக் கார்வன்னி
பொன்றி னார்தலைக் கலனொடு பரிகலம் புலியுரி யுடையாடை
கொன்றை பொன்னென மலர்தரு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவாரை
என்று மேத்துவார்க் கிடரிலை கேடிலை ஏதம்வந் தடையாவே. 6

2654. மாட மாளிகை கோபுரங் கூடங்கள் மணியரங் கணிசாலை
பாடு சூழ்மதிற் பைம்பொன்செய் மண்டபம் பரிசொடு பயில்வாய
கூடு பூம்பொழில் சூழ்தரு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள்
கேட தொன்றில ராகிநல் லுலகினிற் கெழுவுவர் புகழாலே. 7

2655. ஒளிகொள் வாளெயிற் றரக்கனவ் வுயர்வரை யெடுத்தலு முமையஞ்சிச்
சுளிய வூன்றலுஞ் சோர்ந்திட வாளொடு நாளவற் கருள்செய்த
குளிர்கொள் பூம்பொழில் சூழ்தரு கோட்டூர்நற் கொழுந்தினைத் தொழுவார்கள்
தளிர்கொள் தாமரைப் பாதங்க ளருள்பெறுந் தவமுடை யவர்தாமே. 8

2656. பாடி யாடுமெய்ப் பத்தர்கட் கருள்செய்யு முத்தினைப் பவளத்தைத்
தேடி மாலயன் காணவொண் ணாதஅத் திருவினைத் தெரிவைமார்
கூடி யாடவர் கைதொழு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள்
நீடு செல்வத்த ராகியிவ் வுலகினில் நிகழ்தரு புகழாரே. 9

2657. கோணல் வெண்பிறைச் சடையனைக் கோட்டூர்நற் கொழுந்தினைச் செழுந்திரளைப்
பூணல் செய்தடி போற்றுமின் பொய்யிலா மெய்யன்நல்லருளென்றும்
காண லொன்றிலாக் காரமண் தேரர்குண் டாக்கர்சொற் கருதாதே
பேணல் செய்தர னைத்தொழு மடியவர் பெருமையைப் பெறுவாரே. 10

2658. பந்து லாவிரற் பவளவாய்த் தேன்மொழிப் பாவையோ டுருவாரும்
கொந்து லாமலர் விரிபொழிற் கோட்டூர்நற் கொழுந்தினைச் செழும்பவளம்
வந்து லாவிய காழியுள் ஞானசம் பந்தன்வாய்ந் துரைசெய்த
சந்து லாந்தமிழ் மாலைகள் வல்லவர் தாங்குவர் புகழாலே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 110. திருமாந்துறை : பண் – நட்டராகம்

2659. செம்பொ னார்தரு வேங்கையும் ஞாழலுஞ் செருந்திசெண் பகமானைக்
கொம்பு மாரமும் மாதவி சுரபுனை குருந்தலர் பரந்துந்தி
அம்பொ னேர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைகின்ற
எம்பி ரானிமை யோர்தொழு பைங்கழ லேத்துதல் செய்வோமே. 1

2660. விளவு தேனொடு சாதியின் பலங்களும் வேய்மணி நிரந்துந்தி
அளவி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானத்
துளவ மான்மக னைங்கணைக் காமனைச் சுடவிழித் தவனெற்றி
அளக வாணுத லரிவைதன் பங்கனை யன்றிமற் றறியோமே. 2

2661. கோடு தேன்சொரி குன்றிடைப் பூகமுங் கூந்தலின் குலைவாரி
ஓடு நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைநம்பன்
வாடி னார்தலை யிற்பலி கொள்பவன் வானவர் மகிழ்ந்தேத்தும்
கேடி லாமணி யைத்தொழ லல்லது கெழுமுத லறியோமே. 3

2662. இலவ ஞாழலு மீஞ்சொடு சுரபுன்னை யிளமரு திலவங்கம்
கலவி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைகண்டன்
அலைகொள் வார்புன லம்புலி மத்தமு மாடர வுடன்வைத்த
மலையை வானவர் கொழுந்தினை யல்லது வணங்குத லறியோமே. 4

2663. கோங்கு சண்பகங் குருந்தொடு பாதிரி குரவிடை மலருந்தி
ஓங்கி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானைப்
பாங்கி னாலிடுந் தூபமுந் தீபமும் பாட்டவி மலர்சேர்த்தித்
தாங்கு வாரவர் நாமங்கள் நாவினில் தலைப்படுந் தவத்தோரே. 5

2664. பெருகு சந்தனங் காரகில் பீலியும் பெருமரம் நிமிர்ந்துந்திப்
பொருது காவிரி வடகரை மாந்துறைப் புனிதனெம் பெருமானைப்
பரிவி னாலிருந் திரவியும் மதியமும் பார்மன்னர் பணிந்தேத்த
மருத வானவர் வழிபடு மலரடி வணங்குதல் செய்வோமே. 6

2665. நறவ மல்லிகை முல்லையும் மௌவலும் நாண்மல ரவைவாரி
இறவில் வந்தெறி காவிரி வடகரை மாந்துறை யிறையன்றங்
கறவ னாகிய கூற்றினைச் சாடிய அந்தணன் வரைவில்லால்
நிறைய வாங்கி வலித்தெயி லெய்தவன் நிரைகழல் பணிவோமே. 7

2666. மந்த மார்பொழில் மாங்கனி மாந்திட மந்திகள் மாணிக்கம்
உந்தி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானை
நிந்தி யாவெடுத் தார்த்தவல் லரக்கனை நெரித்திடு விரலானைச்
சிந்தி யாமனத் தாரவர் சேர்வது தீநெறி யதுதானே. 8

2667. நீல மாமணி நித்திலத் தொத்தொடு நிரைமலர் நிரந்துந்தி
ஆலி யாவரு காவிரி வடகரை மாந்துறை யமர்வானை
மாலு நான்முகன் தேடியுங் காண்கிலா மலரடி யிணைநாளும்
கோல மேத்திநின் றாடுமின் பாடுமின் கூற்றுவன் நலியானே. 9

2668. நின்று ணுஞ்சமண் தேரரு நிலையிலர் நெடுங்கழை நறவேலம்
நன்று மாங்கனி கதலியின் பலங்களும் நாணலின் நுரைவாரி
ஒன்றி நேர்வரு காவிரி வடகரை மாந்துறை யொருகாலம்
அன்றி யுள்ளழிந் தெழும்பரி சழகிது அதுவவர்க் கிடமாமே. 10

2669. வரைவ ளங்கவர் காவிரி வடகரை மாந்துறை யுறைவானைச்
சிரபு ரம்பதி யுடையவன் கவுணியன் செழுமறை நிறைநாவன்
அரவெ னும்பணி வல்லவன் ஞானசம் பந்தனன் புறுமாலை
பரவி டுந்தொழில் வல்லவ ரல்லலும் பாவமு மிலர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 111. திருவாய்மூர் : பண் – நட்டராகம்

2670. தளரிள வளரென வுமைபாடத் தாளம் மிடவோர் கழல்வீசிக்
கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக் கிறிமையார்
விளரிள முலையவர்க் கருள்நல்கி வெண்ணீ றணிந்தோர் சென்னியின்மேல்
வளரிள மதியமொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 1

2671. வெந்தழல் வடிவினர் பொடிப்பூசி விரிதரு கோவண வுடைமேலோர்
பந்தஞ்செய் தரவசைத் தொலிபாடிப் பலபல கடைதொறும் பலிதேர்வார்
சிந்தனை புகுந்தெனக் கருள்நல்கிச் செஞ்சுடர் வண்ணர்தம் மடிபரவ
வந்தனை பலசெய இவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 2

2672. பண்ணிற் பொலிந்த வீணையர் பதினெண் கணமு முணராநஞ்
சுண்ணப் பொலிந்த மிடற்றினா ருள்ள முருகி லுடனாவார்
சுண்ணப் பொடிநீ றணிமார்பர் சுடர்பொற் சடைமேல் திகழ்கின்ற
வண்ணப் பிறையோ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 3

2673. எரிகிளர் மதியமொ டெழில்நுதன்மே லெறிபொறி யரவினொடாறு மூழ்க
விரிகிளர் சடையினர் விடையேறி வெருவவந் திடர்செய்த விகிர்தனார்
புரிகிளர் பொடியணி திருவகலம் பொன்செய்த வாய்மையர் பொன்மிளிரும்
வரியர வரைக்கசைத் திவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 4

2674. அஞ்சன மணிவண மெழில்நிறமா வகமிட றணிகொள வுடல்திமில
நஞ்சினை யமரர்க ளமுதமென நண்ணிய நறுநுத லுமைநடுங்க
வெஞ்சின மால்களி யானையின்தோல் வெருவுறப் போர்த்ததன் நிறமுமஃதே
வஞ்சனை வடிவினொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே.5

2675. அல்லிய மலர்புல்கு விரிகுழலார் கழலிணை யடிநிழ லவைபரவ
எல்லியம் போதுகொண் டெரியேந்தி யெழிலொடு தொழிலவை
யிசையவல்லார்
சொல்லிய அருமறை யிசைபாடிச் சூடிள மதியினர் தோடுபெய்து
வல்லியந் தோலுடுத் திவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 6

2676. கடிபடு கொன்றைநன் மலர்திகழுங் கண்ணியர் விண்ணவர் கனமணிசேர்
முடியில்கு மிறையவர் மறுகினல்லார் முறைமுறை பலிபெய
முறுவல்செய்வார்
பொடியணி வடிவொடு திருவகலம் பொன்னென மிளிர்வதொ ரரவினொடும்
வடிநுனை மழுவினொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 7

2677. கட்டிணை புதுமலர்க் கமழ்கொன்றைக் கண்ணியர் வீணையர் தாமுமஃதே
எட்டுணை சாந்தமொ டுமைதுணையா இறைவனா ருறைவதோ ரிடம்வினவில்
பட்டிணை யகலல்குல் விரிகுழலார் பாவையர் பலியெதிர் கொணர்ந்துபெய்ய
வட்டணை யாடலொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 8

2678. ஏன மருப்பினொ டெழிலாமை யிசையப் பூண்டோ ரேறேறிக்
கான மதிடமா வுறைகின்ற கள்வர் கனவில் துயர்செய்து
தேனு ணமலர்க ளுந்திவிம்மித் திகழ்பொற் சடைமேல் திகழ்கின்ற
வானநன் மதியினொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 9

2679. சூடல்வெண் பிறையினர் சுடர்முடியர் சுண்ணவெண் ணீற்றினர் சுடர்மழுவர்
பாடல்வண் டிசைமுரல் கொன்றையந்தார் பாம்பொடு நூலவை
பசைந்திலங்கக்
கோடனன் முகிழ்விரல் கூப்பிநல்லார் குறையுறு பலியெதிர்
கொணர்ந்துபெய்ய
வாடல்வெண் டலைபிடித் திவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 10

2680. திங்களொ டருவரைப் பொழிற்சோலைத் தேனலங் கானலந் திருவாய்மூர்
அங்கமொ டருமறை யொலிபாட லழல்நிற வண்ணர்தம் மடிபரவி
நங்கள்தம் வினைகெட மொழியவல்ல ஞானசம் பந்தன் தமிழ்மாலை
தங்கிய மனத்தினால் தொழுதெழுவார் தமர்நெறி யுலகுக்கோர் தவநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 112. திருஆடானை : பண் – நட்டராகம்

2681. மாதோர்கூறுகந் தேறதேறிய
ஆதியானுறை யாடானை
போதினாற்புனைந் தேத்துவார்தமை
வாதியாவினை மாயுமே. 1

2682.வாடல்வெண்டலை அங்கையேந்திநின்
றாடலானுறை யாடானை
தோடுலாமலர் தூவிக்கைதொழ
வீடுநுங்கள் வினைகளே. 2

2683.மங்கைகூறினன் மான்மறியுடை
அங்கையானுறை யாடானை
தங்கையால் தொழுதேத்தவல்லவர்
மங்குநோய்பிணி மாயுமே. 3

2684.சுண்ணநீறணி மார்பில்தோல்புனை
அண்ணலானுறை யாடானை
வண்ணமாமலர் தூவிக்கைதொழ
எண்ணுவாரிட ரேகுமே. 4

2685.கொய்யணிம்மலர்க் கொன்றைசூடிய
ஐயன்மேவிய ஆடானை
கையணிம்மல ரால்வணங்கிட
வெய்யவல்வினை வீடுமே. 5

2686.வானிளம்மதி மல்குவார்சடை
ஆனஞ்சாடலன் ஆடானை
தேனணிம்மலர் சேர்த்தமுன்செய்த
ஊனமுள்ள வொழியுமே 6

2687.துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை
அலங்கலானுறை யாடானை
நலங்கொள்மாமலர் தூவிநாள்தொறும்
வலங்கொள்வார்வினை மாயுமே. 7

2688.வெந்தநீறணி மார்பில்தோல்புனை
அந்தமில்லவன் ஆடானை
கந்தமாமலர் தூவிக்கைதொழும்
சிந்தையார்வினை தேயுமே. 8

2689.மறைவலாரொடு வானவர்தொழு
தறையுந்தண்புனல் ஆடானை
உறையுமீசனை யேத்தத்தீவினை
பறையும்நல்வினை பற்றுமே. 9

2690. மாயனும்மல ரானுங்கைதொழ
ஆயஅந்தணன் ஆடானை
தூயமாமலர் தூவிக்கைதொழத்
தீயவல்வினை தீருமே. 10

2691. வீடினார்மலி வெங்கடத்துநின்
றாடலானுறை யாடானை
நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்
பாடநோய்பிணி பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 113. சீகாழி : பண் – செவ்வழி

2692. பொடியிலங்குந் திருமேனி யாளர் புலியதளினர்
அடியிலங்குங் கழலார்க்க ஆடும் மடிகள்ளிடம்
இடியிலங்குங் குரலோதம் மல்கவ் வெறிவார்திரைக்
கடியிலங்கும் புனல்முத் தலைக்குங்கடற் காழியே. 1

2693. மயலிலங்குந் துயர்மா சறுப்பானருந் தொண்டர்கள்
அயலிலங்கப் பணிசெய்ய நின்றவ் வடிகள்ளிடம்
புயலிலங்குங் கொடையாளர் வேதத்தொலி பொலியவே
கயலிலங்கும் வயற்கழனி சூழுங்கடற் காழியே. 2

2694. கூர்விலங்குந் திரிசூல வேலர்குழைக் காதினர்
மார்விலங்கும் புரிநூலு கந்தம்மண வாளனூர்
நேர்விலங்கல் லனதிரை கள்மோதந் நெடுந்தாரைவாய்க்
கார்விலங்கல் லெனக்கலந் தொழுகுங்கடற் காழியே. 3

2695. குற்றமில்லார் குறைபாடு செய்வார் பழிதீர்ப்பவர்
பெற்றநல்ல கொடிமுன் னுயர்த்த பெருமானிடம்
மற்றுநல்லார் மனத்தா லினியார் மறைகலையெலாங்
கற்றுநல்லார் பிழைதெரிந் தளிக்குங்கடற் காழியே. 4

2696. விருதிலங்குஞ் சரிதைத் தொழிலார் விரிசடையினார்
எருதிலங்கப் பொலிந்தேறு மெந்தைக் கிடமாவது
பெரிதிலங்கும் மறைகிளைஞ ரோதப் பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக் குலந்தெரிந்து தீர்க்குங்கடற் காழியே. 5

2697. தோடிலங்குங் குழைக்காதர் வேதர்சுரும் பார்மலர்ப்
பீடிலங்குஞ் சடைப்பெருமை யாளர்க் கிடமாவது
கோடிலங்கும் பெரும்பொழில் கள்மல்கப் பெருஞ்செந்நெலின்
காடிலங்கும் வயல்பயிலு மந்தண்கடற் காழியே. 6

2698. மலையிலங்குஞ் சிலையாக வேகம்மதில் மூன்றெறித்
தலையிலங்கும் புனற்கங்கை வைத்தவ்வடி கட்கிடம்
இலையிலங்கும் மலர்க்கைதை கண்டல்வெறி விரவலால்
கலையிலங்குங் கணத்தினம் பொலியுங்கடற் காழியே. 7

2699. முழுதிலங்கும் பெரும்பாருள் வாழும்முரண் இலங்கைக்கோன்
அழுதிரங்கச் சிரமுர மொடுங்கவ் வடர்த்தாங்கவன்
தொழுதிரங்கத் துயர்தீர்த் துகந்தார்க் கிடமாவது
கழுதும்புள்ளும் மதிற்புறம தாருங்கடற் காழியே. 8

2700. பூவினாலும் விரிபோதின் மல்குந்திரு மகள்தனை
மேவினானும் வியந்தேத்த நீண்டா ரழலாய்நிறைந்
தோவியங்கே யவர்க்கருள் புரிந்தவ் வொருவர்க்கிடங்
காவியங்கண் மடமங்கையர் சேர்கடற் காழியே. 9

2701. உடைநவின் றாருடைவிட் டுழல்வா ரிருந்தவத்தார்
முடைநவின் றம்மொழி யொழித்துகந்தம் முதல்வன்னிடம்
மடைநவின்ற புனற்கெண்டை பாயும்வயல் மலிதரக்
கடைநவின்றந் நெடுமாட மோங்குங்கடற் காழியே. 10

2702. கருகமுந்நீர் திரையோத மாருங்கடற் காழியுள்
உரகமாருஞ் சடையடி கள்தம்பா லுணர்ந்துறுதலாற்
பெருகமல்கும் புகழ்பேணுந் தொண்டர்க்கிசை யார்தமிழ்
விரகன்சொன்ன இவைபாடி யாடக்கெடும் வினைகளே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 114. திருக்கேதாரம் : பண் – செவ்வழி

2703. தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யு மிடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. 1

2704. பாதம்விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொ டாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்ட மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளுங் கேதாரமே. 2

2705. முந்திவந்து புரோதாய மூழ்கி முனிகள்பலர்
எந்தைபெம்மா னெனநின்றி றைஞ்சும் மிடமென்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தநாறக் கிளருஞ் சடையெந்தை கேதாரமே. 3

2706. உள்ளமிக்கார் குதிரைம் முகத்தா ரொருகாலர்கள்
எள்கலில்லா இமையோர்கள் சேரும் மிடமென்பரால்
பிள்ளைதுள்ளி கிளைபயில்வ கேட்டுப் பிரியாதுபோய்க்
கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து வாய்ப்பெய்யுங் கேதாரமே. 4

2707. ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தினொண் பொருள்களால்
வாழியெந்தை யெனவந்தி றைஞ்சும் மிடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ்விரை தேரிய
கேழல்பூழ்தி கிளைக்க மணிசிந்துங் கேதாரமே. 5

2708. நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரைதன்மேல்
தேறுசிந்தை யுடையார்கள் சேரும் மிடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பல வின்னிருஞ் சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொ டுண்டுகளுங் கேதாரமே. 6

2709. மடந்தைபாகத் தடக்கிம் மறையோதி வானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல் வினைதீர்க்க நின்றார்க் கிடமென்பரால்
உடைந்தகாற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக்கல் லறைகண்மேல்
கிடந்தவேங்கை சினமாமுகஞ் செய்யுங் கேதாரமே. 7

2710. அரவமுந்நீ ரணியிலங்கைக் கோனையரு வரைதனால்
வெருவவூன்றி விரலா லடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கங் குளிர்பிண்டி ஞாழல்சுர புன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யுங் கேதாரமே. 8

2711. ஆழ்ந்துகாணா ருயர்ந்தெய்த கில்லா ரலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க் கிடமென்பரால்
வீழ்ந்துசெற்று நிழற்கிறங்கும் வேழத்தின்வெண் மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. 9

2712. கடுக்கள்தின்று கழிமீன் கவர்வார்கள் மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பா ரவரெய்த வொண்ணா இடமென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரைகள் கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கநின்ற பெருமா னுறைகின்ற கேதாரமே. 10

2713. வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க்கோட் டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள் பத்தும்மிசை வல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 115. திருப்புகலூர் : பண் – செவ்வழி

2714. வெங்கள்விம்மு குழலிளைய ராடவ்வெறி விரவுநீர்ப்
பொங்குசெங்கட் கருங்கயல்கள் பாயும்புக லூர்தனுள்
திங்கள்சூடித் திரிபுரமோ ரம்பாலெரி யூட்டிய
எங்கள்பெம்மா னடிபரவ நாளும்மிடர் கழியுமே. 1

2715. வாழ்ந்தநாளும் மினிவாழு நாளும்மிவை யறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானை யேத்தாவிதி யில்லிர்காள்
போழ்ந்ததிங்கட் புரிசடையி னான்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ள முடையீர்க ளுங்கள்துயர் தீருமே. 2

2716. மடையினெய்தல் கருங்குவளை செய்யம்மலர்த் தாமரை
புடைகொள்செந்நெல் விளைகழனி மல்கும்புக லூர்தனுள்
தொடைகொள்கொன்றை புனைந்தானொர் பாகம்மதி சூடியை
அடையவல்லா ரமருலக மாளப்பெறு வார்களே. 3

2717. பூவுந்நீரும் பலியுஞ் சுமந்து புகலூரையே
நாவினாலே நவின்றேத்த லோவார்செவித் துளைகளால்
யாவுங்கேளா ரவன்பெருமை யல்லாலடி யார்கள்தாம்
ஓவுநாளும் முணர்வொழிந்த நாளென் றுளங்கொள்ளவே. 4

2718. அன்னங்கன்னிப் பெடைபுல்கி யொல்கியணி நடையவாய்ப்
பொன்னங்காஞ்சி மலர்ச்சின்ன மாலும்புக லூர்தனுள்
முன்னம்மூன்று மதிலெரித்த மூர்த்திதிறங் கருதுங்கால்
இன்னரென்னப் பெரிதரிய ரேத்தச்சிறி தெளியரே. 5

2719. குலவராகக் குலமிலரு மாகக்குணம் புகழுங்கால்
உலகினல்ல கதிபெறுவ ரேனும்மல ரூறுதேன்
புலவமெல்லாம் வெறிகமழு மந்தண் புகலூர்தனுள்
நிலவமல்கு சடையடிகள் பாதந் நினைவார்களே. 6

2720. ஆணும்பெண்ணும் மெனநிற்ப ரேனும்மர வாரமாப்
பூணுமேனும் புகலூர்தனக் கோர்பொரு ளாயினான்
ஊணுமூரா ரிடுபிச்சை யேற்றுண்டுடை கோவணம்
பேணுமேனும் பிரானென்ப ராலெம்பெரு மானையே. 7

2721. உய்யவேண்டில் லெழுபோத நெஞ்சேயுய ரிலங்கைக்கோன்
கைகளொல்கக் கருவரை யெடுத்தானை யோர்விரலினால்
செய்கைதோன்றச் சிதைத்தருள வல்லசிவன் மேயபூம்
பொய்கைசூழ்ந்த புகலூர் புகழப் பொருளாகுமே. 8

2722. நேமியானும் முகநான் குடையந்நெறி யண்ணலும்
ஆமிதென்று தகைந்தேத்தப் போயாரழ லாயினான்
சாமிதாதை சரணாகு மென்றுதலை சாய்மினோ
பூமியெல்லாம் புகழ்செல்வ மல்கும் புகலூரையே. 9

2723. வேர்த்தமெய்ய ருருவத் துடைவிட் டுழல்வார்களும்
போர்த்தகூறைப் போதிநீழ லாரும் புகலூர்தனுள்
தீர்த்தமெல்லாஞ் சடைக்கரந்த தேவன்திறங் கருதுங்கால்
ஓர்த்துமெய்யென் றுணராது பாதந்தொழு துய்ம்மினே. 10

2724. புந்தியார்ந்த பெரியோர்க ளேத்தும் புகலூர்தனுள்
வெந்தசாம்பற் பொடிப்பூச வல்லவிடை யூர்தியை
அந்தமில்லா அனலாட லானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடி யாடக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 116. திருநாகைக்காரோணம் : பண் – செவ்வழி

2725. கூனற்றிங்கட் குறுங்கண்ணி கான்றந்நெடு வெண்ணிலா
ஏனற்பூத்தம் மராங்கோதை யோடும்விரா வுஞ்சடை
வானநாடன் அமரர்பெரு மாற்கிட மாவது
கானல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 1

2726. விலங்கலொன்று சிலையாமதில் மூன்றுடன் வீட்டினான்
இலங்குகண்டத் தெழிலாமை பூண்டாற் கிடமாவது
மலங்கியோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கலங்கலோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 2

2727. வெறிகொளாருங் கடற்கைதை நெய்தல்விரி பூம்பொழில்
முறிகொள்ஞாழல் முடப்புன்னை முல்லைம்முகை வெண்மலர்
நறைகொள்கொன்றைந் நயந்தோங்கு நாதற் கிடமாவது
கறைகொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 3

2728. வண்டுபாட வளர்கொன்றை மாலைம்மதி யோடுடன்
கொண்டகோலங் குளிர்கங்கை தங்குங்குருள் குஞ்சியுள்
உண்டுபோலும் மெனவைத்து கந்தவ்வொரு வற்கிடம்
கண்டல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 4

2729. வார்கொள்கோலம் முலைமங்கை நல்லார்மகிழ்ந் தேத்தவே
நீர்கொள்கோலச் சடைநெடு வெண்டிங்கள் நிகழ்வெய்தவே
போர்கொள்சூலப் படைபுல்கு கையார்க் கிடமாவது
கார்கொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 5

2730. விடையதேறிவ் விடவர வசைத்தவ் விகிர்தரவர்
படைகொள்பூதம் பலபாட ஆடும்பர மாயவர்
உடைகொள்வேங்கை யுரிதோ லுடையார்க் கிடமாவது
கடைகொள்செல்வங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 6

2731. பொய்துவாழ்வார் மனம்பாழ் படுக்கும் மலர்ப்பூசனை
செய்துவாழ்வார் சிவன்சேவடிக்கே செலுஞ் சிந்தையார்
எய்தவாழ்வா ரெழில்நக்க ரெம்மாற் கிடமாவது
கைதல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 7

2732. பத்திரட்டி திரள்தோ ளுடையான் முடிபத்திற
அத்திரட்டி விரலா லடர்த்தார்க் கிடமாவது
மைத்திரட்டிவ் வருவெண்டிரை மல்கிய மாகடல்
கைத்திரட்டுங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 8

2733. நல்லபோதி லுறைவானு மாலுந்நடுக் கத்தினால்
அல்லராவ ரெனநின்ற பெம்மாற் கிடமாவது
மல்லலோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மாகடல்
கல்லலோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 9

2734. உயர்ந்தபோதின் னுருவத் துடைவிட் டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டை யிடுபிண்ட மாவுண் டுழர்வார்களும்
நயந்துகாணா வகைநின்ற நாதர்க் கிடமாவது
கயங்கொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 10

2735. மல்குதண்பூம் புனல்வாய்ந் தொழுகும்வயற் காழியான்
நல்லகேள்வித் தமிழ்ஞான சம்பந்தன்நல் லார்கள்முன்
வல்லவாறே புனைந்தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லுவார்க்கும் மிவைகேட்ப வர்க்குந்துய ரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 117. திருஇரும்பைமாகாளம் : பண் – செவ்வழி

2736. மண்டுகங்கை சடையிற் கரந்தும் மதிசூடிமான்
கொண்டகையாற் புரமூன் றெரித்த குழகன்னிடம்
எண்டிசையும் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
வண்டுகீதம் முரல்பொழில் சுலாய் நின்ற மாகாளமே. 1

2737. வேதவித்தாய் வெள்ளைநீறு பூசி வினையாயின
கோதுவித்தா நீறெழக் கொடிமா மதிலாயின
ஏதவித்தா யினதீர்க் குமிடம் மிரும்பை தனுள்
மாதவத்தோர் மறையோர் தொழநின்ற மாகாளமே. 2

2738. வெந்தநீறும் மெலும்பும் மணிந்த விடையூர்தியான்
எந்தைபெம்மா னிடமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
கந்தமாய பலவின் கனிகள் கமழும்பொழில்
மந்தியேறிக் கொணர்ந்துண் டுகள்கின்ற மாகாளமே. 3

2739. நஞ்சுகண்டத் தடக்கி நடுங்கும் மலையான்மகள்
அஞ்சவேழ முரித்த பெருமா னமருமிடம்
எஞ்சவில்லாப் புகழ்போய் விளங்கும் மிரும்பைதனுள்
மஞ்சிலோங்கும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 4

2740. பூசுமாசில் பொடியான் விடையான் பொருப்பான்மகள்
கூசஆனை யுரித்தபெரு மான்குறை வெண்மதி
ஈசனெங்கள் ளிறைவ னிடம்போ லிரும்பைதனுள்
மாசிலோர்கள் மலர்கொண் டணிகின்ற மாகாளமே. 5

2741. குறைவதாய குளிர்திங்கள் சூடிக் குனித்தான்வினை
பறைவதாக்கும் பரமன் பகவன் பரந்தசடை
இறைவனெங்கள் பெருமா னிடம்போ லிரும்பைதனுள்
மறைகள்வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே. 6

2742. பொங்குசெங்கண் ணரவும் மதியும் புரிபுன்சடைத்
தங்கவைத்த பெருமானென நின்றவர் தாழ்விடம்
எங்குமிச்சை யமர்ந்தார் னிடம்போ லிரும்பைதனுள்
மங்குல்தோயும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 7

2743. நட்டத்தோடு நரியாடு கானத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன் னழகாகவே
இட்டமாக விருக்கும் மிடம்போ லிரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்து பணிவார் பிணிதீர்க்கு மாகாளமே. 8

2744. அட்டகாலன் றனைவவ் வினானவ் வரக்கன்முடி
எட்டுமற்றும் மிருபத்திரண் டும்மிற வூன்றினான்
இட்டமாக விருப்பா னவன்போ லிரும்பைதனுள்
மட்டுவார்ந்த பொழிசூழ்ந் தெழிலாரு மாகாளமே. 9

2745. அரவமார்த்தன் றனலங்கை யேந்தி யடியும்முடி
பிரமன்மாலும் மறியாமை நின்ற பெரியோனிடம்
குரவமாரும் பொழிற்குயில்கள் சேரும் மிரும்பைதனுள்
மருவிவானோர் மறையோர் தொழுகின்ற மாகாளமே. 10

2746. எந்தைபெம்மா னிடமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
மந்தமாய பொழில்சூழ்ந் தழகாரு மாகாளத்தில்
அந்தமில்லா அனலாடு வானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாட வல்லார்பழி போகுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 118. திருத்திலதைப்பதி : பண் – செவ்வழி

2747. பொடிகள்பூசிப் பலதொண்டர் கூடிப் புலர்காலையே
அடிகளாரத் தொழுதேத்த நின்றவ் வழகன்னிடம்
கொடிகளோங்கிக் குலவும் விழவார் திலதைப்பதி
றடிகொள்சோலைம் மலர்மணங் கமழும் மதிமுத்தமே. 1

2748. தொண்டர்மிண்டிப் புகைவிம்மு சாந்துங்கமழ் துணையலும்
கொண்டுகண்டார் குறிப்புணர நின்றகுழ கன்னிடம்
தெண்டிரைப்பூம் புனலரிசில் சூழ்ந்ததில தைப்பதி
வண்டுகெண்டுற் றிசைபயிலுஞ் சோலைம்மதி முத்தமே. 2

2749. அடலுளேறுய்த் துகந்தா னடியா ரமரர்தொழக்
கடலுள்நஞ்ச மமுதாக வுண்ட கடவுள்ளிடம்
திடலடங்கச் செழுங்கழனி சூழ்ந்த திலதைப்பதி
மடலுள்வாழைக் கனிதேன் பிலிற்றும் மதிமுத்தமே. 3

2750. கங்கைதிங்கள் வன்னிதுன் னெருக்கினொடு கூவிளம்
வெங்கண்நாகம் விரிசடையில் வைத்த விகிர்தன்னிடம்
செங்கயல்பாய் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
மங்குல்தோயும் பொழில்சூழ்ந் தழகார் மதிமுத்தமே. 4

2751. புரவியேழும் மணிபூண் டியங்குங்கொடித் தேரினான்
பரவிநின்று வழிபாடு செய்யும்பர மேட்டியூர்
விரவிஞாழல் விரிகோங்கு வேங்கைசுர புன்னைகள்
மரவமவ்வல் மலருந் திலதைம் மதிமுத்தமே. 5

2752. விண்ணர்வேதம் விரித்தோத வல்லா ரொருபாகமும்
பெண்ணரெண் ணாரெயில் செற்றுகந்த பெருமானிடம்
தெண்ணிலாவின் னொளிதீண்டு சோலைத் திலதைப்பதி
மண்ணுளார்வந் தருள்பேண நின்றம் மதிமுத்தமே. 6

2753. ஆறுசூடி யடையார்புரஞ் செற்றவர் பொற்றொடி
கூறுசேரும் முருவர்க் கிடமாவது கூறுங்கால்
தேறலாரும் பொழில் சூழ்ந்தழகார் திலதைப்பதி
மாறிலாவண் புனலரிசில் சூழ்ந்தம் மதிமுத்தமே. 7

2754. கடுத்துவந்த கனல்மேனி யினான்கரு வரைதனை
எடுத்தவன்றன் முடிதோ ளடர்த்தார்க் கிடமாவது
புடைக்கொள்பூகத் திளம்பாளை புல்கும் மதுப்பாயவாய்
மடுத்துமந்தி யுகளுந் திலதைம் மதிமுத்தமே. 8

2755. படங்கொள்நாகத் தணையானும் பைந்தா மரையின்மிசை
இடங்கொள்நால்வே தனுமேத்த நின்ற இறைவன்னிடம்
திடங்கொள்நாவி னிசைதொண்டர் பாடுந் திலதைப்பதி
மடங்கல்வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 9

2756. புத்தர்தேரர் பொறியில் சமணர்கரு வீறிலாப்
பித்தர்சொன்னம் மொழிகேட்கி லாத பெருமானிடம்
பத்தர்சித்தர் பணிவுற் றிறைஞ்சுந் திலதைப்பதி
மத்தயானை வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 10

2757. மந்தமாரும் பொழில் சூழ்திலதைம் மதிமுத்தர்மேல்
கந்தமாருங் கடற்காழி யுள்ளான் தமிழ்ஞானசம்
பந்தன்மாலை பழிதீர நின்றேத்த வல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார் சிவன்சேவடி சேர்வது திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 119. திருநாகேச்சரம் : பண் – செவ்வழி

2758. தழைகொள்சந் தும்மகிலும் மயிற்பீலி யுஞ்சாதியின்
பழமுமுந்திப் புனல்பாய் பழங்காவிரித் தென்கரை
நழுவில்வானோர் தொழநல்கு சீர்மல்கு நாகேச்சரத்-
தழகர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கழகாகுமே. 1

2759. பெண்ணொர்பாகம் மடையச் சடையிற் புனல்பேணிய
வண்ணமான பெருமான் மருவும் மிடமண்ணுளார்
நண்ணிநாளுந் தொழுதேத்தி நன்கெய்து நாகேச்சரம்
கண்ணினாற் காணவல்லா ரவர்கண் ணுடையார்களே. 2

2760. குறவர்கொல்லைப் புனங்கொள்ளை கொண்டும் மணிகுலவுநீர்
பறவையாலப் பரக்கும் பழங்காவிரித் தென்கரை
நறவநாறும் பொழில்சூழ்ந் தழகாய நாகேச்சரத்
திறைவர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கிடரில்லையே. 3

2761. கூசநோக்காதுமுன் சொன்ன பொய்கொடு வினைகுற்றமும்
நாசமாக்கும் மனத்தார்கள் வந்தாடு நாகேச்சரம்
தேசமாக்குந் திருக்கோயி லாக்கொண்ட செல்வன்கழல்
நேசமாக்குந் திறத்தா ரறத்தார் நெறிப்பாலரே. 4

2762. வம்புநாறும் மலரும்மலைப் பண்டமுங் கொண்டுநீர்
பைம்பொன்வாரிக் கொழிக்கும் பழங்காவிரித் தென்கரை
நம்பன்நாளும் மமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்
உம்பர்வானோர் தொழச்சென் றுடனாவது முண்மையே. 5

2763. காளமேகந் நிறக்கால னோடந்தகன் கருடனும்
நீளமாய்நின் றெய்தகாமனும் பட்டன நினைவுறின்
நாளுநாதன் னமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்
கோளுநாளுந் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினே. 6

2764. வேயுதிர்முத் தொடுமத்த யானை மருப்பும்விராய்ப்
பாய்புனல்வந் தலைக்கும் பழங்காவிரித் தென்கரை
நாயிறுந்திங் களுங்கூடி வந்தாடு நாகேச்சரம்
மேயவன்றன் னடிபோற்றி யென்பார் வினைவீடுமே. 7

2765. இலங்கைவேந்தன் சிரம்பத்தி ரட்டியெழில் தோள்களும்
மலங்கிவீழும் மலையா லடர்த்தா னிடமல்கிய
நலங்கொள்சிந்தை யவர்நாள்தொறும் நண்ணு நாகேச்சரம்
வலங்கொள்சிந்தை யுடையா ரிடராயின மாயுமே. 8

2766. கரியமாலும் மயனும் மடியும்முடி காண்பொணா
எரியதாகிந் நிமிர்ந்தா னமரும்மிட மீண்டுகா
விரியினீர்வந் தலைக்குங் கரைமேவு நாகேச்சரம்
பிரிவிலாதவ் வடியார்கள் வானிற் பிரியார்களே. 9

2767. தட்டிடுக்கி யுறிதூக்கிய கையினர் சாக்கியர்
கட்டுரைக்கும் மொழிகொள்ள லும்வெள்ளி லங்காட்டிடை
நட்டிருட்கண் நடமாடிய நாதன் நாகேச்சரம்
மட்டிருக்கும் மலரிட் டடிவீழ்வது வாய்மையே. 10

2768. கந்தநாறும் புனற்காவிரித் தென்கரைக் கண்ணுதல்
நந்திசேருந் திருநாகேச் சரத்தின்மேல் ஞானசம்
பந்தன்நாவிற் பனுவல் லிவைபத்தும் வல்லார்கள்போய்
எந்தையீசன் னிருக்கு முலகெய்த வல்லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 120. திருமூக்கீச்சரம் : பண் – செவ்வழி

2769. சாந்தம்வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை யோடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்றதோர் மெய்ம்மையே. 1

2770. வெண்டலையோர் கலனாப் புலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும் புனல்சேர்த் துமையாளொடுங் கூட்டமா
விண்டவர்தம் மதிலெய்த பின்வேனில் வேள்வெந்தெழக்
கண்டவர்மூக் கீச்சரத்தெம் மடிகள் செய்கன்மமே. 2

2771. மருவலார்தம் மதிலெய்த துவும்மான் மதலையை
உருவிலாரவ் வெரியூட்டி யதும்முல குண்டதால்
செவிலாரும் புலிசெங் கயலானை யினான்செய்த
பொருவின்மூக் கீச்சரத்தெம் மடிகள் செயும்பூசலே. 3

2772. அன்னமன்னந் நடைச்சாய லாளோ டழகெய்தவே
மின்னையன்ன சடைக்கங்கை யாள்மேவிய காரணம்
தென்னன்கோழி யெழில்வஞ்சியு மோங்கு செங்கோலினான்
மன்னன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்மாயமே. 4

2773. விடமுனாரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே
நடமுனாரவ் வழலாடுவர் பேயொடு நள்ளிருள்
வடமனீடு புகழ்ப்பூழி யன்தென்ன வன்கோழிமன்
அடன்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 5

2774. வெந்தநீறு மெய்யிற் பூசுவராடுவர் வீங்கிருள்
வந்தெனாரவ் வளைகொள்வது மிங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன்னேரியன் செம்பிய னாக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரேதமே. 6

2775. அரையிலாருங் கலையில்ல வனாணொடு பெண்ணுமாய்
உரையிலாரவ் வழலாடு வரொன்றலர் காண்மினோ
விரவலார்தம் மதில்மூன் றுடன்வெவ்வழ லாக்கினான்
அரையன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 7

2776. ஈர்க்குநீர்செஞ் சடைக்கேற் றதுங்கூற்றை யுதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வல னேந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயா னரக்கன் னுரத்தைந் நெரித்தவ்வடல்
மூர்க்கன்மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே. 8

2777. நீருளாரும் மலர்மே லுறைவான் நெடுமாலுமாய்ச்
சீருளாருங் கழல்தேட மெய்த்தீத் திரளாயினான்
சீரினாலங் கொளிர்தென்ன வன்செம்பி யன்வில்லவன்
சேருமூக்கிச் சரத்தடிகள் செய்கின்ற தோர்செம்மையே. 9

2778. வெண்புலான்மார் பிடுதுகிலினர் வெற்றரை யுழல்பவர்
உண்பினாலே யுரைப்பார் மொழி யூனமதாக்கினான்
ஒண்புலால்வேல் மிகவல்லவ னோங்கெழிற் கிள்ளிசேர்
பண்பின்மூக்கிச் சரத்தடிகள் செய்கின்ற தோர்பச்சையே. 10

2779. மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழி யுள்ஞான சம்பந்தன்
சொல்லவல்லா ரவர்வானுல காளவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 121. திருப்பாதிரிப்புலியூர் : பண் – செவ்வழி

2780. முன்னநின்ற முடக்கான் முயற்கருள் செய்துநீள்
புன்னைநின்று கமழ்பா திரிப்புலி யூருளான்
தன்னைநின்று வணங்குந் தனைத்தவ மில்லிகள்
பின்னைநின்ற பிணியாக் கையைப்பெறு வார்களே. 1

2781. கொள்ளிநக்க பகுவாய பேய்கள் குழைந்தாடவே
முள்ளிலவம் முதுகாட் டுறையும் முதல்வன்னிடம்
புள்ளினங்கள் பயிலும் பாதிரிப் புலியூர்தனை
உள்ள நம்மேல் வினையாயின ஒழியுங்களே. 2

2782. மருளினல்லார் வழிபாடு செய்யும் மழுவாளர்மேல்
பொருளினல்லார் பயில் பாதிரிப் புலியூருளான்
வெருளின்மானின் பிணை நோக்கல்செய்து வெறிசெய்தபின்
அருளியாகத் திடைவைத் ததுவும் மழகாகவே. 3

2783. போதினாலும் புகையாலு முய்த்தே யடியார்கள்தாம்
போதினாலே வழிபாடு செய்யப் புலியூர்தனுள்
ஆதிநாலும் மவலம் மிலாதஅடி கள்மறை
ஓதிநாளும் மிடும்பிச்சை யேற்றுண் டுணப்பாலதே. 4

2784. ஆகநல்லா ரமுதாக்க வுண்டா னழலைந்தலை
நாகநல்லார் பரவந்நயந் தங்கரை யார்த்தவன்
போகநல்லார் பயிலும் பாதிரிப் புலியூர்தனுள்
பாகநல்லா ளொடுந்நின்ற எம்பர மேட்டியே. 5

2785. மதியமொய்த்த கதிர்போ லொளிம்மணற் கானல்வாய்ப்
புதியமுத்தந் திகழ் பாதிரிப் புலியூரெனும்
பதியில்வைக்கப் படுமெந்தை தன்பழந் தொண்டர்கள்
குதியுங்கொள்வர் விதியுஞ் செய்வர் குழகாகவே. 6

2786. கொங்கரவப் படுவண் டறைகுளிர் கானல்வாய்ச்
சங்கரவப் பறையின் னொலியவை சார்ந்தெழப்
பொங்கரவம் முயர் பாதிரிப் புலியூர்தனுள்
அங்கரவம் மரையில் லசைத்தானை யடைமினே. 7

2787. வீக்கமெழும் மிலங்கை கிறை விலங்கல்லிடை
ஊக்கமொழிந் தலறவ் விரலாலிறை யூன்றினான்
பூக்கமழும் புனற் பாதிரிப் புலியூர்தனை
நோக்கமெலிந் தணுகா வினைந் நுணுகுங்களே. 8

2788. அன்னந்தாவும் மணியார் பொழில் மணியார்புன்னை
பொன்னந்தாது சொரி பாதிரிப் புலியூர்தனுள்
முன்னந்தாவி யடிமூன் றளந்தவன் நான்முகன்
தன்னந்தாளுற் றுணராத தோர் தவநீதியே. 9

2789. உரிந்தகூறை யுருவத் தொடுதெருவத் திடைத்
திரிந்துதின்னுஞ் சிறுநோன் பரும்பெருந் தேரரும்
எரிந்துசொன்னவ் வுரைகொள் ளாதேயெடுத் தேத்துமின்
புரிந்தவெண்ணீற் றண்ணல் பாதிரிப் புலியூரையே. 10

2790. அந்தணல்லா ரகன் காழியுள் ஞானசம்
பந்தனல்லார் பயில் பாதிரிப் புலியூர்தனுள்
சந்தமாலைத் தமிழ்பத்தி வைதரித் தார்கள்மேல்
வந்துதீயவ் வடையாமை யால்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 122. திருப்புகலி : பண் – செவ்வழி

2791. விடையதேறி வெறியக் கரவாத்த விமலனார்
படையதாகப் பரசு தரித்தார்க் கிடமாவது
கொடையிலோவார் குலமும் முயர்ந்தம் மறையோர்கள்தாம்
புடைகொள் வேள்விப் புகையும்ப ருலாவும் புகலியே. 1

2792. வேலைதன்னில் மிகுநஞ்சினை யுண்டிருள் கண்டனார்
ஞாலமெங்கும் பலிகொண் டுழல்வார் நகராவது
சாலநல்லார் பயிலும் மறைகேட்டுப் பதங்களைச்
சோலைமேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே. 2

2793. வண்டுவாழுங் குழல்மங்கை யோர்கூ றுகந்தார்மதித்
துண்டமேவுஞ் சுடர்தொல் சடையார்க் கிடமாவது
கெண்டைபாய மடுவில் லுயர்கேதகை மாதவி
புண்டரீகம் மலர்ப்பொய்கை நிலாவும் புகலியே. 3

2794. திரியுமூன்று புரமும் மெரித்துத் திகழ்வானவர்க்
கரியபெம்மா னரவக் குழையார்க் கிடமாவது
பெரியமாடத் துயருங் கொடியின் மிடைவால்வெயிற்
புரிவிலாத தடம்பூம் பொழில்சூழ் தண்புகலியே. 4

2795. ஏவிலாருங் சிலைப்பார்த் தனுக்கின் னருள்செய்தவர்
நாவினாண்முக் கரிவித்த நம்பர்க் கிடமாவது
மாவிலாருங் கனிவார் கிடங்கில் விழவாளைபோய்ப்
பூவிலாரும் புனற்பொய்கை யில்வைகும் புகலியே. 5

2796. தக்கன்வேள்வி தகர்த்த தலைவன் தையலாளொடும்
ஒக்கவேயெம் முரவோ னுறையும் மிடமாவது
கொக்குவாழை பலவின் கொழுந்தண் கனிகொன்றைகள்
புக்கவாசப் புன்னை பொன்திரள் காட்டும் புகலியே. 6,7

2797. தொலைவிலாத அரக்கன் னுரத்தைத் தொலைவித்தவன்
தலையுந்தோளுந் நெரித்த சதுரர்க் கிடமாவது
கலையின்மேவும் மனத்தோ ரிரப்போர்க் குக்கரப்பிலார்
பொலியுமந்தன் பொழில்சூழ்ந்தழ காரும் புகலியே. 8

2798. கீண்டுபுக்கார் பறந்தா ரயர்ந்தார் கேழலன்னமாய்க்
காண்டுமென்றார் கழல்பணிய நின்றார்க் கிடமாவது
நீண்டநாரை யிரையாரல் வாரநிறை செறுவினிற்
பூண்டுமிக்கவ் வயல்காட்டு மந்தண் புகலியே. 9

2799. தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பா ரொடுசாக்கியர்
இடுக்கணுய்ப்பா ரிறைஞ்சாத எம்மாற் கிடமாவது
மடுப்படுக்குஞ் சுருதிப் பொருள்வல் லவர்வானுளோர்
அடுத்தடுத்துப் புகுந்தீண்டு மந்தண் புகலியே. 10

2800. எய்தவொண்ணா இறைவன் னுறைகின்ற புகலியைக்
கைதவமில்லார்க் கவுணியன் ஞான சம்பந்தன்சீர்
செய்தபத்தும் மிவைசெப்ப வல்லார் சிவலோகத்தில்
எய்திநல்ல இமையோர்க ளேத்த இருப்பார்களே. 11

**திருச்சிற்றம்பலம்**

ௐௐௐௐௐ

**இரண்டாம் திருமுறை முற்றிற்று.**

# மூன்றாம் திருமுறை

## 1. கோயில் : பண் – காந்தாரபஞ்சமம்

2801. ஆடினாய்நறு நெய்யொடுபால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடினாயருளாய் சுருங்கஎம் தொல்வினையே. 1

2802. கொட்டமேகம ழுங்குழலாளொடு
கூடினாயெரு தேறினாய்நுதற்
பட்டமேபுனைவா யிசைபாடுவ பாரிடமா
நட்டமேநவில்வாய் மறையோர்தில்லை
நல்லவர்பிரி யாதசிற்றம்பலம்
இட்டமாவுறைவா யிவைமேவிய தென்னைகொலோ. 2

2803. நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடிநீறணி வார்சடையார்
சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழக்
கோலத்தாயரு ளாயுன காரணங்கூறுதுமே. 3

2804. கொம்பலைத்தழ கெய்தியநுண்ணிடைக்
கோலவாண்மதி போலமுகத்திரண்
டம்பலைத்தகண்ணாள் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறுகாளையர்
காதலாற்கழற் சேவடிகைதொழ
அம்பலத்துறை வானடியார்க் கடையாவினையே. 4

2805. தொல்லையாரமு துண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிட றாபகுவாயதோர்
பல்லையார்தலை யிற்பலியேற்றுழல் பண்டரங்கா
தில்லையார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழ
இல்லையாம்வினை தானெரியம்மதி லெய்தவனே. 5

2806. ஆகந்தோயணி கொன்றையாயனல்
அங்கையாயம ரர்க்கமராவுமை
பாகந்தோய்பகவா பலியேற்றுழல் பண்டரங்கா
மாகந்தோய்பொழில் மல்குசிற்றம்பலம்
மன்னினாய்மழு வாளினாயழல்
நாகந்தோயரையாய் அடியாரைநண் ணாவினையே. 6

2807. சாதியார்பளிங் கின்னொடுவெள்ளிய
சங்கவார்குழை யாய்திகழப்படும்
வேதியாவிகிர்தா விழவாரணி தில்லைதன்னுள்
ஆதியாய்க்கிட மாயசிற்றம்பலம்
அங்கையால்தொழ வல்லடியார்களை
வாதியாதகலுந் நலியாமலி தீவினையே. 7

2808. வேயினார்பணைத் தோளியோடாடலை
வேண்டினாய்விகிர் தாவுயிர்கட்கமு
தாயினாயிடு காட்டெரி யாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற் புரமூன்றெய்த
செம்மையாய்திகழ் கின்றசிற்றம்பலம்
மேயினாய்கழ லேதொழு தெய்துதும்மேலுலகே. 8

2809. தாரினார்விரி கொன்றையாய்மதி
தாங்குநீள்சடை யாய்தலைவாநல்ல
தேரினார்மறுகிற் றிருவாரணி தில்லைதன்னுட்
சீரினால்வழிபா டொழியாததோர்
செம்மையாலழ காயசிற்றம்பலம்
ஏரினாலமர்ந்தா யுனசீரடி யேத்துதுமே. 9

2810. வெற்றரையுழல்வார் துவராடைய
வேடத்தாரவர்கள் ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின் னவலம்மவை மாற்றகில்லார்
கற்றவர்தொழு தேத்துசிற்றம்பலங்
காதலாற்கழற் சேவடிகைதொழ
உற்றவருலகின் னுறுதிகொள வல்லவரே. 10

2811. நாறுபூம்பொழில் நண்ணியகாழியுள்
நான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறுமின்தமிழா லுயர்ந்தாருறை தில்லைதன்னுள்

ஏறுதொல்புக ழேந்துசிற்றம்பலத்
தீசனையிசையாற் சொன்னபத்திவை
கூறுமாறுவல்லா ருயர்ந்தாரொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 2. திருப்பூந்தராய் : பண் – காந்தாரபஞ்சமம்

2812. பந்துசேர்விரலாள் பவளத்துவர்
வாயினாள்பனி மாமதிபோல்முகத்
தந்தமில்புக ழாள்மலைமாதொடு மாதிப்பிரான்
வந்துசேர்விடம் வானவரெத்திசையுந்
நிறைந்துவலஞ் செய்துமாமலர்
புந்திசெய்திறைஞ்சிப் பொழிபூந்தராய் போற்றுதுமே. 1

2813. காவியங்கருங் கண்ணினாள்கனித்
தொண்டைவாய்க்கதிர் முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடை யன்னநடைச்சுரி மென்குழலாள்
தேவியுந்திரு மேனியோர்பாகமாய்
ஒன்றிரண்டொரு மூன்றொடுசேர்பதி
பூவிலந்தண னொப்பவர்பூந்தராய் போற்றுதுமே. 2

2814. பையராவரு மல்குல்மெல்லியல்
பஞ்சின்நேரடி வஞ்சிகொள்நுண்ணிடைத்
தையலாளொரு பாலுடையெம்மிறை சாருமிடஞ்
செய்யெலாங்கழு நீர்கமலம்மலர்த்
தேறலூறலிற் சேறுலராதநற்
பொய்யிலாமறை யோர்பயில்பூந்தராய் போற்றுதுமே. 3

2815. முள்ளிநாண்முகை மொட்டியல்கோங்கின்
அரும்புதேன்கொள் குரும்பைமூவாமருந்
துள்ளியன்றைபைம்பொற் கலசத்திய லொத்தமுலை
வெள்ளிமால்வரை யன்னதோர்மேனியின்
மேவினார்பதி வீமருதண்பொழிற்
புள்ளினந்துயில் மல்கியபூந்தராய் போற்றுதுமே. 4

2816. பண்ணியன்றெழு மென்மொழியாள்பகர்
கோதையேர்திகழ் பைந்தளிர்மேனியோர்
பெண்ணியன்றமொய்ம்பிற் பெருமாற்கிடம் பெய்வளையார்
கண்ணியன்றெழு காவிச்செழுங்கரு
நீலமல்கிய காமருவாவிநற்
புண்ணியருறையும் பதிபூந்தராய் போற்றுதுமே. 5

2817. வாணிலாமதி போல்நுதலாள்மட
மாழையொண்கணாள் வண்தரளந்நகை
பாணிலாவிய இன்னிசையார்மொழிப் பாவையொடுஞ்
சேணிலாத்திகழ் செஞ்சடையெம்மண்ணல்
சேர்வதுசிகரப் பெருங்கோயில்சூழ்
போணிலாநுழையும் பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 6

2818. காருலாவிய வார்குழலாள்கயற்
கண்ணினாள்புயற் காலொளிமின்னிடை
வாருலாவிய மென்முலையாள்மலை மாதுடனாய்
நீருலாவிய சென்னியன்மன்னி
நிகருநாமம் முந்நான்குநிகழ்பதி
போருலாவெயில் சூழ்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 7

2819. காசைசேர்குழலாள் கயலேர்தடங்
கண்ணிகாம்பன தோட்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலை மாதமருந்திரு மார்பகலத்
தீசன்மேவு மிருங்கயிலையெடுத்தானை
அன்றடர்த்தா னிணைச்சேவடி
பூசைசெய்பவர் சேர்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 8

2820. கொங்குசேர்குழ லாள்நிழல்வெண்ணகைக்
கொவ்வைவாய்க்கொடி யேரிடையாளுமை
பங்குசேர்திரு மார்புடையார்படர் தீயுருவாய்
மங்குல்வண்ணனும் மாமலரோனும்
மயங்கநீண்டவர் வான்மிசைவந்தெழு
பொங்குநீரின் மிதந்தநற்பூந்தராய் போற்றுதுமே. 9

2821. கலவமாமயி லாரியலாள்கரும்
பன்னமென்மொழி யாள்கதிர்வாள்நுதற்
குலவுபூங்குழ லாளுமைகூறனை வேறுரையால்
அலவைசொல்லுவார் தேரமணாதர்கள்
ஆக்கினான்றனை நண்ணலுநல்குநற்
புலவர்தாம்புகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமே. 10

2822.தேம்பல்நுண்ணிடை யாள்செழுஞ்சேலன
கண்ணியோடண்ணல் சேர்விடந்தேனமர்
பூம்பொழில்திகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமென்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்தன் ஒண்தமிழ்மாலைகொண்
டாம்படியிவை யேத்தவல்லார்க்கடை யாவினையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 3. திருப்புகலி : நாலடிமேல்வைப்பு. பண் – காந்தாரபஞ்சமம்

2823.இயலிசை யெனும்பொரு ளின்திறமாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன அரிநெடுங் கண்ணியொடும்
அயலுல கடிதொழ அமர்ந்தவனே
கலனாவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலனாள்தொறு மின்புற நிறைமதி யருளினனே. 1

2824.நிலையுறு மிடர்நிலை யாதவண்ணம்
இலையுறு மலர்கள்கொண் டேத்துதும்யாம்
மலையினி லரிவையை வெருவவன்தோல்
அலைவரு மதகரி யுரித்தவனே
இமையோர்கள்நின் தாள்தொழ எழில்திகழ் பொழிற்புகலி
உமையாளொடு மன்னினை யுயர்திரு வடியிணையே. 2

2825.பாடினை யருமறை வரன்முறையால்
ஆடினை கரணமுன் னருவனத்திற்
சாடினை காலனைத் தயங்கொளிசேர்
நீடுவெண் பிறைமுடி நின்மலனே
நினையேயடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையேயிட மேவினை தவநெறி அருளெமக்கே. 3

2826.நிழல்திகழ் மழுவினை யானையின்தோல்
அழல்திகழ் மேனியி லணிந்தவனே
கழல்திகழ் சிலம்பொலி யலம்பநல்ல
முழவொடு மருநட முயற்றினனே
முடிமேல்மதி சூடினை முருகமர் பொழிற்புகலி
அடியாரவ ரேத்துற அழகொடு மிருந்தவனே. 4

2827.கருமையி னொளிர்கடல் நஞ்சமுண்ட
உரிமையி னுலகுயி ரளித்தநின்றன்
பெருமையை நிலத்தவர் பேசினல்லால்
அருமையி லளப்பரி தாயவனே
அரவேரிடை யாளொடு மலைகடல் மலிபுகலிப்
பொருள்சேர்தர நாள்தொறும் புவிமிசைப் பொலிந்தவனே.5

2828.அடையரி மாவொடு வேங்கையின்தோல்
புடைபட அரைமிசைப் புனைந்தவனே
படையுடை நெடுமதிற் பரிசழித்த
விடையுடைக் கொடிமல்கு வேதியனே
விகிர்தாபரமா நின்னை விண்ணவர் தொழப்புகலித்
தகுவாய்மட மாதொடுந் தாள்பணிந் தவர்தமக்கே. 6

2829.அடியவர் தொழுதெழ அமரரேத்தச்
செடியவல் வினைபல தீர்ப்பவனே
துடியிடை யகலல்குல் தூமொழியைப்
பொடியணி மார்புறப் புல்கினனே
புண்ணியா புனிதா புகரேற்றினை புகலிந்நகர்
நண்ணினாய் கழலேத்திட நண்ணகிலா வினையே. 7

2830.இரவொடு பகலதா மெம்மானுன்னைப்
பரவுத லொழிகிலேன் வழியடியேன்
குரவிரி நறுங்கொன்றை கொண்டணிந்த
அரவிரி சடைமுடி யாண்டகையே
அனமென்னடை யாளொடு மதிர்கட லிலங்கைமன்னை
இனமார்தரு தோளடர்த் திருந்தனை புகலியுளே. 8

2831. உருகிட வுவகைதந் துடலினுள்ளால்
பருகிடு மமுதன பண்பினனே
பொருகடல் வண்ணனும் பூவுளானும்
பெருகிடு மருளெனப் பிறங்கெரியாய்
உயர்ந்தாயினி நீயெனை யொண்மலரடி யிணைக்கீழ்
வயந்தாங் குறநல்கிடு வளர்மதிற் புகலிமனே. 9

2832.கையினி லுண்பவர் கணிகைநோன்பர்
செய்வன தவமலாச் செதுமதியார்
பொய்யவ ருரைகளைப் பொருளெனாத
மெய்யவ ரடிதொழ விரும்பினனே
வியந்தாய்வெள் ளேற்றினை விண்ணவர் தொழுபுகலி
உயர்ந்தார்பெருங் கோயிலு ளொருங்குட னிருந்தவனே.10

2833.புண்ணியர் தொழுதெழு புகலிந்நகர்
விண்ணவ ரடிதொழ விளங்கினானை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய அருந்தமிழ்ப் பத்தும்வல்லார்
நடலையவை யின்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம்
இடராயின இன்றித்தா மெய்துவர் தவநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 4. திருவாவடுதுறை : நாலடிமேல்வைப்பு. பண் – காந்தாரபஞ்சமம்

2834.இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழல் தொழுதெழுவேன்
கடல்தனி லமுதொடு கலந்த நஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே.
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 1

2835.வாழினுஞ் சாவினும் வருந்தினும்போய்
வீழினு முனகழல் விடுவேனல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 2

2836.நனவினுங் கனவினும் நம்பாவுன்னை
மனவினும் வழிபடல் மறவேனம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி யனல்புல்கு கையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 3

2837.தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மல ரடியலா லரற்றாதென்நாக்
கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதி லெரியெழ முனிந்தவனே.
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 4

2838.கையது வீழினுங் கழிவுறினும்
செய்கழ லடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 5

2839.வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாயுன் னடியலா லேத்தாதென்நா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 6

2840.வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் னடியலா லரற்றாதென்நா
ஒப்புடை யொருவனை யுருவழிய
அப்படி யழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 7

2841. பேரிடர் பெருகியோர் பிணிவரினுஞ்
சீருடைக் கழலலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை யடர்த்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 8

2842.உண்ணினும் பசிப்பினு முறங்கினும்நின்
ஒண்மல ரடியலா லுரையாதென்நாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலு மளப்பரி தாயவனே.
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 9

2843.பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் னடியலா லரற்றாதென்நாப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடுதுறை யரனே. 10

2844.அலைபுன லாவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்மிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 5. திருப்பூந்தராய் : ஈரடிமேல்வைப்பு. பண் – காந்தாரபஞ்சமம்

2845. தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழல்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்ற தாகிய நம்பன் தானே. 1

2846.புள்ளி னம்புகழ் போற்றிய பூந்தராய்
வெள்ளந் தாங்கு விகிர்த னடிதொழ
ஞாலத் தில்லுயர் வாருள்கு நன்னெறி
மூல மாய முதலவன் தானே. 2

2847.வேந்த ராயுல காள விருப்புறிற்
பூந்த ராய்நகர் மேயவன் பொற்கழல்
நீதி யால்நினைந் தேத்தி யுள்கிடச்
சாதி யாவினை யான தானே. 3

2848.பூசு ரர்தொழு தேத்திய பூந்தராய்
ஈசன் சேவடி யேத்தி யிறைஞ்சிடச்
சிந்தை நோயவை தீர நல்கிடும்
இந்து வார்சடை யெம் மிறையே. 4

2849.பொலிந்த என்பணி மேனியன் பூந்தராய்
மலிந்த புந்திய ராகி வணங்கிட
நுந்த மேல்வினை யோட வீடுசெய்
எந்தை யாயஎம் மீசன் றானே. 5

2850.பூதஞ் சூழப் பொலிந்தவன் பூந்தராய்
நாதன் சேவடி நாளும் நவின்றிட
நல்கு நாள்தொறு மின்ப நளிர்புனல்
பில்கு வார்சடைப் பிஞ்ஞ கனே. 6

2851. புற்றில் நாக மணிந்தவன் பூந்தராய்
பற்றி வாழும் பரமனைப் பாடிடப்
பாவ மாயின தீரப் பணித்திடுஞ்
சேவ தேறிய செல்வன் தானே. 7

2852. போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்
காத லித்தான் கழல்விர லொன்றினால்
அரக்க னாற்ற லழித்தவ னுக்கருள்
பெருக்கி நின்றஎம் பிஞ்ஞ கனே. 8

2853. மத்த மான இருவர் மருவொணா
அத்த னானவன் மேவிய பூந்தராய்
ஆள தாக அடைந்துய்ம்மின் நும்வினை
மாளு மாறருள் செய்யுந் தானே. 9

2854. பொருத்த மில்சமண் சாக்கியப் பொய்கடிந்
திருத்தல் செய்தபி ரானிமை யோர்தொழப்
பூந்த ராய்நகர் கோயில் கொண்டுகை
ஏந்து மான்மறி யெம்மி றையே. 10

2855. புந்தி யால்மிக நல்லவர் பூந்தராய்
அந்த மில்லெம் மடிகளை ஞானசம்
பந்தன் மாலைகொண் டேத்தி வாழுநும்
பந்த மார்வினை பாறி டுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 6. திருக்கொள்ளம்பூதூர்
### ஈரடிமேல்வைப்பு : பண் – காந்தாரபஞ்சமம்

2856. கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 1

2857. கோட்ட கக்கழனிக் கொள்ளம் பூதூர்
நாட்ட கத்துறை நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 2

2858.குலையினார் தெங்குசூழ் கொள்ளம் பூதூர்
விலையி லாட்கொண்ட விகிர்தனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 3

2859.குவளை கண்மலருங் கொள்ளம் பூதூர்த்
தவள நீறணி தலைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 4

2860.கொன்றைபொன் சொரியுங் கொள்ளம் பூதூர்
நின்ற புன்சடை நிமலனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 5

2861. ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய அடிகளை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 6

2862.ஆறுவந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 7

2863.குரக்கினம் பயிலுங் கொள்ளம் பூதூர்
அரக்கனைச் செற்ற ஆதியை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 8

2864.பருவரா லுகளுங் கொள்ளம் பூதூர்த்
இருவர் காண்பரி யான்கழ லுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 9

2865.நீரகக் கழனிக் கொள்ளம் பூதூர்த்
தேரமண் செற்ற செல்வனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 10

2866.கொன்றைசேர் சடையான் கொள்ளம் பூதூர்
நன்று காழியுள் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 7. திருப்புகலி : பண் – காந்தாரபஞ்சமம்

2867.கண்ணுத லானும்வெண் ணீற்றினா னுங்கழ லார்க்கவே
பண்ணிசை பாடநின் றாடினா னும்பரஞ் சோதியும்
புண்ணிய நான்மறை யோர்களேத் தும்புக லிந்நகர்ப்
பெண்ணின்நல் லாளொடும் வீற்றிருந் தபெரு மானன்றே. 1

2868.சாம்பலோ டுந்தழ லாடினா னுஞ்சடை யின்மிசைப்
பாம்பினோ டும்மதி சூடினா னும்பசு வேறியும்
பூம்படு கல்லிள வாளைபா யும்புக லிந்நகர்க்
காம்பன தோளியொ டும்மிருந் தகட வுளன்றே. 2

2869.கருப்புநல் வார்சிலைக் காமன்வே வக்கடைக் கண்டானும்
மருப்புநல் லானையின் ஈருரி போர்த்தம ணாளனும்
பொருப்பன மாமணி மாடமோங் கும்புக லிந்நகர்
விருப்பின்நல் லாளொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 3

2870.அங்கையி லங்கழ லேந்தினா னும்மழ காகவே
கங்கையைச் செஞ்சடை சூடினா னுங்கட லின்னிடைப்
பொங்கிய நஞ்சமு துண்டவ னும்புக லிந்நகர்
மங்கைநல் லாளொடும் வீற்றிருந் தமண வாளனே. 4

2871.சாமநல் வேதனுந் தக்கன்றன் வேள்வித கர்த்தானும்
நாமநூ றாயிரஞ் சொல்லிவா னோர்தொழு நாதனும்
பூமல்கு தண்பொழில் மன்னுமந் தண்புக லிந்நகர்
கோமள மாதொடும் வீற்றிருந் தகுழ கனன்றே. 5

2872.இரவிடை யொள்ளெரி யாடினா னும்மிமை யோர்தொழச்
செருவிடை முப்புரந் தீயெரித் தசிவ லோகனும்
பொருவிடை யொன்றுகந் தேறினா னும்புக லிந்நகர்
அரவிடை மாதொடும் வீற்றிருந் தஅழ கனன்றே. 6

2873.சேர்ப்பது திண்சிலை மேவினா னுந்திகழ் பாலன்மேல்
வேர்ப்பது செய்தவெங் கூற்றுதைத் தானும் வேள் விப்புகை

போர்ப்பது செய்தணி மாடமோங் கும்புக லிந்நகர்ப்
பார்ப்பதி யோடுடன் வீற்றிருந் தபர மனன்றே. 7

2874. கன்னெடு மால்வரைக் கீழரக் கன்னிடர் கண்டானும்
வின்னெடும் போர்விறல் வேடனா கிவிச யற்கொரு
பொன்னெடுங் கோல்கொடுத் தானுமந் தண்புக லிந்நகர்
அன்னமன் னந்நடை மங்கையொ டும்மமர்ந் தானன்றே. 8

2875. பொன்னிற நான்முகன் பச்சையா னென்றிவர் புக்குழித்
தன்னையின் னானெனக் காண்பரி யதழற் சோதியும்
புன்னைபொன் தாதுதிர் மல்குமந் தண்புக லிந்நகர்
மின்னிடை மாதொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 9

2876. பிண்டியும் போதியும் பேணுவார் பேச்சினைப் பேணாததோர்
தொண்டருங் காதல்செய் சோதியா யசுடர்ச் சோதியான்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுக லிந்நகர்
வண்டமர் கோதையோ டும்மிருந் தமண வாளனே. 10

2877. பூங்கமழ் கோதையோ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்
பாங்கனை ஞானசம் பந்தன்சொன் னதமிழ் பத்திவை
ஆங்கமர் வெய்திய ஆதியா கவிசை வல்லவர்
ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வது முண்மையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருக்கடவூர்வீரட்டம் : பண் – காந்தாரபஞ்சமம்

2878. சடையுடை யானுநெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானுமை யார்ந்தவொண் கண்ணுமை கேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே. 1

2879. எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. 2

2880. நாதனுந் நள்ளிரு ளாடினா னுந்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு வேறியும்
காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. 3

2881. மழுவமர் செல்வனு மாசிலா தபல பூதமுன்
முழவொலி யாழ்குழல் மொந்தைகொட் டமுது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தாடினா னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. 4

2882. சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினா னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாக மரைக்கசைத் தபர மேட்டியும்
கடமணி மாவுரித் தோலினா னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. 5

2883. பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே. 6

2884. செவ்வழ லாய்நில னாகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழல் நான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழ லேந்துகை வீரட்டா னத்தர னல்லனே. 7

2885. அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச
முடியுடை வேந்தனை மூர்க்கழித் தமுதல் மூர்த்தியும்
கடிகம ழும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்
வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. 8

2886. வரைகுடை யாமழை தாங்கினா னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையங் காக்கின்றா னுங்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. 9

2887. தேரரு மாசுகொள் மேனியா ருந்தெளி யாததோர்
ஆரருஞ் சொற்பொரு ளாகிநின் றஎம தாதியான்
காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. 10

2888. வெந்தவெண் ணீறணி வீரட்டா னத்துறை வேந்தனை
அந்தணர் தங்கட வூருளா னையணி காழியான்
சந்தமெல் லாமடிச் சாத்தவல் லமறை ஞானசம்
பந்தன செந்தமிழ் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 9. திருவீழிமிழலை : பண் – காந்தாரபஞ்சமம்

2889.கேள்வயிர் நாள்தொறு மோதுநல் வேதத்தர் கேடிலா
வேள்விசெ யந்தணர் வேதியர் வீழிமி ழலையார்
வாழியர் தோற்றமுங் கெடும்வைப் பாருயிர் கட்கெலாம்
ஆழியர் தம்மடி போற்றியென் பார்கட்க ணியரே. 1

2890.கல்லினற் பாவையோர் பாகத்தர் காதலித் தேத்திய
மெல்லனத் தார்பக்கல் மேவினர் வீழிமி ழலையார்
நல்லினத் தார்செய்த வேள்விசெ குத்தெழு ஞாயிற்றின்
பல்லனைத் துந்தகர்த் தாரடி யார்பாவ நாசரே. 2

2891. நஞ்சினை யுண்டிருள் கண்டர்பண் டந்தக னைச்செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழிமி ழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங் காடிய
மஞ்சனச் செஞ்சடை யாரென வல்வினை மாயுமே. 3

2892.கலையிலங் கும்மழு கட்டங்கங் கண்டிகை குண்டலம்
விலையிலங் கும்மணி மாடத்தர் வீழிமி ழலையார்
தலையிலங் கும்பிறை தாழ்வடஞ் சூலந்த மருகம்
அலையிலங் கும்புன லேற்றவர்க் கும்மடி யார்க்குமே. 4

2893.பிறையுறு செஞ்சடை யார்விடை யார்பிச்சை நச்சியே
வெறியுறு நாட்பலி தேர்ந்துழல் வீழிமி ழலையார்
முறைமுறை யாலிசை பாடுவா ராடிமுன் தொண்டர்கள்
இறையுறை வாஞ்சிய மல்லதெப் போதுமென் னுள்ளமே. 5

2894.வசையறு மாதவங் கண்டுவ ரிசிலை வேடனாய்
விசையனுக் கன்றருள் செய்தவர் வீழிமி ழலையார்
இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்லவ டமிட்டுத்
திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே. 6

2895.சேடர்விண் ணோர்கட்குத் தேவர்நன் மூவிரு தொன்னூலர்
வீடர்முத் தியர்நால் வேதத்தர் வீழிமி ழலையார்
காடரங் காவுமை காணஅண் டத்திமை யோர்தொழ
நாடக மாடியை யேத்தவல் லார்வினை நாசமே. 7

2896.எடுத்தவன் மாமலைக் கீழ்இ ராவணன் வீழ்தர
விடுத்தருள் செய்திசை கேட்டவர் வீழிமி ழலையார்
படுத்துவெங் காலனைப் பால்வழி பாடுசெய் பாலற்குக்
கொடுத்தன ரின்பங்கொ டுப்பர் தொழக்குறை வில்லையே. 8

2897.திக்கமர் நான்முகன் மாலண்ட மண்டலந் தேடிட
மிக்கமர் தீத்திர ளாயவர் வீழிமி ழலையார்
சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்
நக்கர்தந் நாமந மச்சிவா யவ்வென்பார் நல்லரே. 9

2898.துற்றரை யார்துவ ராடையர் துப்புர வொன்றிலா
வெற்றரை யாரறி யாநெறி வீழிமி ழலையார்
சொற்றெரி யாப்பொருள் சோதிக்கப் பால்நின்ற சோதிதான்
மற்றறி யாவடி யார்கள்தஞ் சிந்தையுள் மன்னுமே. 10

2899.வேதியர் கைதொழு வீழிமி ழலைவி ரும்பிய
ஆதியை வாழ்பொழிற் காழியுள் ஞானசம் பந்தனாய்ந்
தோதிய வொண்டமிழ் பத்திவை யுற்றுரை செய்பவர்
மாதியல் பங்கன்மலரடி சேரவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 10. திருஇராமேச்சுரம் : பண் – காந்தாரபஞ்சமம்

2900.அலைவளர் தண்மதி யோடய லேயடக் கியுமை
முலைவளர் பாகமு யங்கவல் லமுதல் வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகா னலிரா மேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் தானிருந் தாட்சியே. 1

2901. தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே. 2

2902.மானன நோக்கியை தேவிதன் னையொரு மாயையால்
கானதில் வவ்விய காரரக் கன்னுயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஞானமு நன்பொரு ளாகிநின் றதொரு நன்மையே. 3

2903.உரையுண ராதவன் காமமென் னும்முறு வேட்கையால்
வரைபொரு தோளிறச் செற்றவில் லிமகிழ்ந் தேத்திய
விரைமரு வுங்கட லோதமல் கும்மிரா மேச்சுரத்
தரையர வாடநின் றாடல்பே ணுமம்மா னல்லனே. 4

2904.ஊறுடை வெண்டலை கையிலேந் திப்பல வூர்தொறும்
வீறுடை மங்கைய ரையம்பெய் யவிற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமே யவிரா மேச்சுரம்
பேறுடை யான்பெய ரேத்துமாந் தர்பிணி பேருமே. 5

2905.அணையலை சூழ்கட லன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யிலிரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே. 6

2906.சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது செய்துகந் தானைவென் றவ்வினை மூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய் தவிரா மேச்சுரம்
பனிமதி சூடிநின் றாடவல் லபர மேட்டியே. 7

2907.பெருவரை யன்றெடுத் தேந்தினான் றன்பெயர் சாய்கெட
அருவரை யாலடர்த் தன்றுநல் கியயன் மாலெனும்
இருவரு நாடிநின் றேத்துகோ யிலிரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின் றதொரு வண்ணமே. 8,9

2908.சாக்கியர் வன்சமண் கையர்மெய் யிற்றடு மாற்றத்தார்
வாக்கிய லும்முரை பற்றுவிட் டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னரு ளாகவே. 10

2909.பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை
இகலழி வித்தவ னேத்துகோ யிலிரா மேச்சுரம்
புகலியுள் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கிலை யல்லலே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 11. திருப்புனவாயில் : பண் – காந்தாரபஞ்சமம்

2910. மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொ டும்மம ரும்மிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க் கும்புன வாயிலே. 1

2911. விண்டவர் தம்புர மூன்றெரித் துவிடை யேறிப்போய்
வண்ட மருங்குழல் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்
கண்டலு ஞாழலு நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுன வாயிலே. 2

2912. விடையுடை வெல்கொடி யேந்தினா னும்விறற் பாரிடம்
புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்
தொடைநவில் கொன்றையந் தாரினா னுஞ்சுடர் வெண்மழுப்
படைவல னேந்திய பால்நெய்யா டும்பர மனன்றே. 3

2913. சங்கவெண் தோடணி காதினா னுஞ்சடை தாழவே
அங்கையி லங்கழ லேந்தினா னும்மழ காகவே
பொங்கர வம்மணி மார்பினா னும்புன வாயிலில்
பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின் றபர மேட்டியே. 4

2914. கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக் கண்டனும்
புலியதள் பாம்பரைச் சுற்றினா னும்புன வாயிலில்
ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்
மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே. 5

2915. வாருறு மென்முலை மங்கைபா டநட மாடிப்போய்க்
காருறு கொன்றைவெண் டிங்களா னுங்கனல் வாயதோர்
போருறு வெண்மழு வேந்தினா னும்புன வாயிலில்
சீருறு செல்வமல் கவ்விரந் தசிவ லோகனே. 6

2916. பெருங்கடல் நஞ்சமு துண்டுகந் துபெருங் காட்டிடைத்
திருந்திள மென்முலைத் தேவிபா டந்நட மாடிப்போய்ப்
பொருந்தலர் தம்புர மூன்றுமெய் துபுன வாயிலில்
இருந்தவன் தன்கழ லேத்துவார் கட்கிட ரில்லையே. 7

2917. மனமிகு வேலனவ் வாளரக் கன்வலி யொல்கிட
வனமிகு மால்வரை யாலடர்த் தானிட மன்னிய
இனமிகு தொல்புகழ் பாடலா டல்லெழின் மல்கிய
புனமிகு கொன்றையந் தென்றலார்ந் தபுன வாயிலே. 8

2918. திருவளர் தாமரை மேவினா னுந்திகழ் பாற்கடற்
கருநிற வண்ணனுங் காண்பரி யகட வுள்ளிடம்
நரல்சுரி சங்கொடு மிப்பியுந் திந்நல மல்கிய
பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன வாயிலே. 9

2919. போதியெ னப்பெய ராயினா ரும்பொறி யில்சமண்
சாதியு ரைப்பன கொண்டயர்ந் துதளர் வெய்தமின்
போதவிழ் தண்பொழில் மல்குமந் தண்புன வாயிலில்
வேதனை நாள்தொறு மேத்துவார் மேல்வினை வீடுமே. 10

2920. பொற்றொடி யாளுமை பங்கன்மே வும்புன வாயிலைக்
கற்றவர் தாந்தொழு தேத்தநின் றகடற் காழியான்
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் நன்மையால்
அற்றமில் பாடல்பத் தேத்தவல் லாரருள் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 12. திருக்கோட்டாறு : பண் – காந்தாரபஞ்சமம்

2921. வேதியன் விண்ணவ ரேத்தநின் றான்விளங் கும்மறை
ஓதிய வொண்பொரு ளாகிநின் றானொளி யார்கிளி
கோதிய தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
ஆதியை யேநினைந் தேத்தவல் லார்க்கல்ல லில்லையே. 1

2922. ஏலம லர்க்குழல் மங்கைநல் லாளிம வான்மகள்
பாலம ருந்திரு மேனியெங் கள்பர மேட்டியும்
கோலம லர்ப்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆலநீ ழற்கீ ழிருந்தறஞ் சொன்ன அழகனே. 2

2923. இலைமல்கு சூலமொன் றேந்தினா னுமிமை யோர்தொழ
மலைமல்கு மங்கையோர் பங்கனா யம்மணி கண்டனும்
குலைமல்கு தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அலைமல்கு வார்சடை யேற்றுகந் தஅழ கனன்றே. 3

2924. ஊனம ரும்முட லுள்ளிருந் தவ்வுமை பங்கனும்
வானம ரும்மதி லென்னிவைத் தமறை யோதியும்
தேனம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
தானம ரும்விடை யானுமெங் கள்தலை வனன்றே. 4

2925. வம்பல ரும்மலர்க் கோதைபா கம்மகிழ் மைந்தனும்
செம்பவ ளத்திரு மேனிவெண் ணீறணி செல்வனும்
கொம்பம ரும்மலர் வண்டுகெண் டுந்திருக் கோட்டாற்றுள்
நம்பனெ னப்பணி வார்க்கருள் செய்யெங்கள் நாதனே. 5

2926.பந்தம ரும்விரல் மங்கைநல் லாளொரு பாகமா
வெந்தம ரும்பொடிப் பூசவல் லவிகிர் தன்மிகும்
கொந்தம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அந்தண னைநினைந் தேத்தவல் லார்க்கில்லை யல்லலே. 6

2927.துண்டம ரும்பிறை சூடிநீ டுசுடர் வண்ணனும்
வண்டம ருங்குழல் மங்கைநல் லாளொரு பங்கனும்
தெண்டிரை நீர்வயல் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அண்டமு மெண்டிசை யாகிநின் றஅழ கனன்றே. 7

2928.இரவம ருந்நிறம் பெற்றுடை யவிலங் கைக்கிறை
கரவம ரக்கயி லையெடுத் தான்வலி செற்றவன்
குரவம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அரவம ருஞ்சடை யானடி யார்க்கருள் செய்யுமே. 8

2929.ஓங்கிய நாரணன் நான்முக னும்முண ராவகை
நீங்கிய தீயுரு வாகிநின் றநிம லன்நிழற்
கோங்கம ரும்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆங்கம ரும்பெரு மானம ரர்க்கம ரனன்றே. 9

2930.கடுக்கொடுத் ததுவ ராடையர் காட்சியில் லாததோர்
தடுக்கிடுக் கிச்சம ணேதிரி வார்கட்குத் தன்னருள்
கொடுக்ககில் லாக்குழ கன்னம ருந்திருக் கோட்டாற்றுள்
இடுக்கணின் றித்தொழு வாரம ரர்க்கிறை யாவரே. 10

2931.கொடியுயர் மால்விடை யூர்தியி னான்திருக் கோட்டாற்றுள்
அடிகழ லார்க்கநின் றாடவல் லஅரு ளாளனைக்
கடிகம ழும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
படியிவை பாடிநின் றாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 13. திருப்பூந்தராய் : பண் – காந்தாரபஞ்சமம்

2932.மின்னன எயிறுடை விரவ லோர்கள்தந்
துன்னிய புரமுகச் சுளிந்த தொன்மையர்
புன்னையம் பொழிலணி பூந்த ராய்நகர்
அன்னமன் னந்நடை யரிவை பங்கரே. 1

2933.மூதணி முப்புரத் தெண்ணி லோர்களை
வேதணி சரத்தினால் வீட்டி னாரவர்
போதணி பொழிலமர் பூந்த ராய்நகர்த்
தாதணி குழலுமை தலைவர் காண்மினே. 2

2934.தருக்கிய திரிபுரத் தவர்கள் தாமுகப்
பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்
பொருக்கடல் புடைதரு பூந்த ராய்நகர்க்
கருக்கிய குழலுமை கணவர் காண்மினே. 3

2935.நாகமும் வரையுமே நாணும் வில்லுமா
மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்
பூகமார் பொழிலணி பூந்த ராய்நகர்ப்
பாகமர் மொழியுமை பங்கர் காண்மினே. 4

2936.வெள்ளெயி றுடையவவ் விரவ லார்களூர்
ஒள்ளெரி யூட்டிய வொருவ னாரொளிர்
புள்ளணி புறவினிற் பூந்த ராய்நகர்க்
கள்ளணி குழலுமை கணவர் காண்மினே. 5

2937.துங்கியல் தானவர் தோற்ற மாநகர்
அங்கியில் வீழ்தர வாய்ந்த வம்பினர்
பொங்கிய கடலணி பூந்த ராய்நகர்
அங்கய லனகணி யரிவை பங்கரே. 6

2938.அண்டர்க ளுய்ந்திட அவுணர் மாய்தரக்
கண்டவர் கடல்விட முண்ட கண்டனார்
புண்டரீ கவ்வயற் பூந்த ராய்நகர்
வண்டமர் குழலிதன் மணாளர் காண்மினே. 7

2939.மாசின அரக்கனை வரையின் வாட்டிய
காய்சின வெயில்களைக் கறுத்த கண்டனார்
பூசுரர் பொலிதரு பூந்த ராய்நகர்க்
காசைசெய் குழலுமை கணவர் காண்மினே. 8

2940.தாமுக மாக்கிய அசுரர் தம்பதி
வேமுக மாக்கிய விகிர்தர் கண்ணனும்
பூமக னறிகிலாப் பூந்த ராய்நகர்க்
கோமக னெழில்பெறு மரிவை கூறரே. 9

2941. முத்தர வசுரர்கள் மொய்த்த முப்புரம்
அத்தகு மழலிடை வீட்டி னாரமண்
புத்தரு மறிவொணாப் பூந்த ராய்நகர்க்
கொத்தணி குழலுமை கூறர் காண்மினே. 10

2942. புரமெரி செய்தவர் பூந்த ராய்நகர்ப்
பரமலி குழலுமை நங்கை பங்கரைப்
பரவிய பந்தன்மெய்ப் பாடல் வல்லவர்
சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. திருப்பைஞ்ஞீலி : பண் – காந்தாரபஞ்சமம்

2943. ஆரிடம் பாடில ரடிகள் காடலால்
ஓரிடங் குறைவில ருடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. 1

2944. மருவிலார் திரிபுர மெரிய மால்வரை
பருவிலாக் குனித்தபைஞ் ஞீலி மேவலான்
உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்
திருவிலா ரவர்களைத் தெருட்ட லாகுமே. 2

2945. அஞ்சுரும் பணிமல ரமுத மாந்தித்தேன்
பஞ்சுரம் பயிற்றுபைஞ் ஞீலி மேவலான்
வெஞ்சுரந் தனிலுமை வெருவ வந்ததோர்
குஞ்சரம் படவுரி போர்த்த கொள்கையே. 3

2946. கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்
பாடல்வண் டிசைமுரல் பயில்பைஞ் ஞீலியார்
பேடல ராணலர் பெண்ணு மல்லதோர்
ஆடலை யுகந்தவெம் மடிக ளல்லரே. 4

2947. விழியிலா நகுதலை விளங்கி ளம்பிறை
சுழியிலார் வருபுனற் சூழல் தாங்கினான்
பழியிலார் பரவுபைஞ் ஞீலி பாடலான்
கிழியிலார் கேண்மையைக் கெடுக்க லாகுமே. 5

2948.விடையுடைக் கொடிவல னேந்தி வெண்மழுப்
படையுடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவலான்
துடியிடைக் கலையல்கு லாளோர் பாகமாச்
சடையிடைப் புனல்வைத்த சதுர னல்லனே. 6

2949.தூயவன் தூயவெண் ணீறு மேனிமேல்
பாயவன் பாயபைஞ் ஞீலி கோயிலா
மேயவன் வேய்புரை தோளி பாகமா
ஏயவ னெனைச்செயுந் தன்மை யென்கொலோ. 7

2950.தொத்தின தோள்முடி யுடைய வன்றலை
பத்தினை நெரித்தபைஞ் ஞீலி மேவலான்
முத்தினை முறுவல்செய் தாளோர் பாகமாப்
பொத்தினன் திருந்தடி பொருந்தி வாழ்மினே. 8

2951.நீருடைப் போதுறை வானு மாலுமாய்ச்
சீருடைக் கழலடி சென்னி காண்கிலர்
பாருடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவிய
தாருடைக் கொன்றையந் தலைவர் தன்மையே. 9

2952.பீலியார் பெருமையும் பிடகர் நூன்மையும்
சாலியா தவர்களைச் சாதி யாததோர்
கோலியா வருவரை கூட்டி யெய்தபைஞ்
ஞீலியான் கழலடி நினைந்து வாழ்மினே. 10

2953.கண்புனல் விளைவயற் காழிக் கற்பகம்
நண்புண ரருமறை ஞான சம்பந்தன்
பண்பினர் பரவுபைஞ் ஞீலி பாடுவார்
உண்பின வுலகினி லோங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 15. திருவெண்காடு : பண் – காந்தாரபஞ்சமம்

2954.மந்திர மறையவை வான வரொடும்
இந்திரன் வழிபட நின்ற எம்மிறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமு முதலுடை யடிக ளல்லரே. 1

2955.படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவண முகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. 2

2956.பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தவெம் மடிக ளல்லரே. 3

2957.ஞாழலுஞ் செருந்தியு நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை யிறைவ ரல்லரே. 4

2958.பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலஇடர் தீர்க்கு மெம்மிறை
வேதங்கள் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்கள் தொழநின்ற பரம ரல்லரே. 5

2959.மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்க ளிறைஞ்சு மெம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை யடிதொழ அல்ல லில்லையே. 6

2960.நயந்தவர்க் கருள்பல நல்கி யிந்திரன்
கயந்திரம் வழிபட நின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடு மேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7

2961. மலையுட னெடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுடன் நெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த அடிக ளல்லரே. 8

2962.ஏடவிழ் நறுமல ரயனும் மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடம துடையவெண் காடு மேவிய
ஆடலை யமர்ந்தவெம் மடிக ளல்லரே. 9

2963. போதியர் பிண்டியர் பொருத்த மில்லிகள்
நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை யடிதொழ அல்ல லில்லையே. 10

2964. நல்லவர் புகலியுள் ஞான சம்பந்தன்
செல்வனெஞ் சிவனுறை திருவெண் காட்டின்மேற்
சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை யறுத லாணையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 16. திருக்கொள்ளிக்காடு : பண் – காந்தாரபஞ்சமம்

2965. நிணம்படு சுடலையின் நீறு பூசிநின்
றிணங்குவர் பேய்களோ டிடுவர் மாநடம்
உணங்கல்வெண் டலைதனி லுண்ப ராயினும்
குணம்பெரி துடையர்நங் கொள்ளிக் காடரே. 1

2966. ஆற்றநல் லடியிணை யலர்கொண் டேத்துவான்
சாற்றிய அந்தணன் தகுதி கண்டநாள்
மாற்றல னாகிமுன் னடர்த்து வந்தணை
கூற்றினை யுதைத்தனர் கொள்ளிக் காடரே. 2

2967. அத்தகு வானவர்க் காக மால்விடம்
வைத்தவர் மணிபுரை கண்டத் தின்னுளே
மத்தமும் வன்னியு மலிந்த சென்னிமேல்
கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே. 3

2968. பாவண மேவுசொல் மாலை யிற்பல
நாவணங் கொள்கையில் நவின்ற செய்கையர்
ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும்
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. 4

2969. வாரணி வனமுலை மங்கை யாளொடுஞ்
சீரணி திருவுருத் திகழ்ந்த சென்னியர்
நாரணி சிலைதனால் நணுக லாரெயில்
கூரெரி கொளுவினர் கொள்ளிக் காடரே. 5

2970. பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடும்
மஞ்சுதோய் கயிலையுள் மகிழ்வர் நாள்தொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சர முரித்தனர் கொள்ளிக் காடரே. 6

2971. இறையுறு வரிவளை யிசைகள் பாடிட
அறையுறு கழலடி யார்க்க ஆடுவர்
சிறையுறு விரிபுனல் சென்னி யின்மிசைக்
குறையுறு மதியினர் கொள்ளிக் காடரே. 7

2972. எடுத்தனன் கயிலையை யியல் வலியினால்
அடர்த்தனர் திருவிர லால லறிடப்
படுத்தன ரென்றவன் பாடல் பாடலும்
கொடுத்தனர் கொற்றவாள் கொள்ளிக் காடரே. 8

2973. தேடினா ரயன்முடி மாலுஞ் சேவடி
நாடினா ரவரென்று நணுக கிற்றிலர்
பாடினார் பரிவொடு பத்தர் சித்தமும்
கூடினார்க் கருள்செய்வர் கொள்ளிக் காடரே. 9

2974. நாடிநின் றறிவில்நா ணிலிகள் சாக்கியர்
ஓடிமுன் னோதிய வுரைகள் மெய்யல
பாடுவர் நான்மறை பயின்ற மாதொடும்
கூடுவர் திருவுருக் கொள்ளிக் காடரே. 10

2975. நற்றவர் காழியுள் ஞானசம் பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக் காடரைச்
சொற்றமி ழின்னிசை மாலை சோர்வின்றிக்
கற்றவர் கழலடி காண வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 17. திருவிசயமங்கை : பண் – காந்தாரபஞ்சமம்

2976. மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் மடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்
விரவிய பொழிலணி விசய மங்கையே. 1

2977. கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் னியல்புடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே. 2

2978. அக்கர வரையின ரரிவை பாகமாத்
தொக்கநல் விடையுடைச் சோதி தொன்னகர்
தக்கநல் வானவர் தலைவர் நாள்தொறும்
மிக்கவர் தொழுதெழு விசய மங்கையே. 3

2979. தொடைமலி யிதழியுந் துன்னெ ருக்கொடு
புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்
படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்
விடைமலி கொடியண்ணல் விசய மங்கையே. 4

2980. தோடமர் காதினன் துதைந்த நீற்றினன்
ஏடமர் கோதையோ டினித மர்விடம்
காடமர் மாகரி கதறப் போர்த்ததோர்
வேடம துடையண்ணல் விசய மங்கையே. 5

2981. மைப்புரை கண்ணுமை பங்கன் வண்டமுல்
ஒப்புரை மேனியெம் முடைய வன்னகர்
அப்பொடு மலர்கொடங் கிறைஞ்சி வானவர்
மெய்ப்பட அருள்புரி விசய மங்கையே. 6

2982. இரும்பொனின் மலைவில்லி னெரிச ரத்தினால்
வரும்புரங் களைப்பொடி செய்த மைந்தனூர்
சுரும்பமர் கொன்றையுந் தூய மத்தமும்
விரும்பிய சடையண்ணல் விசய மங்கையே. 7

2983. உளங்கைய இருபதோ டொருபதுங் கொடாங்
களந்தரும் வரையெடுத் திடும ரக்கனைத்
தளர்ந்துடல் நெரிதர அடர்த்த தன்மையன்
விளங்கிழை யொடும்புகும் விசய மங்கையே. 8

2984. மண்ணினை யுண்டவன் மலரின் மேலுறை
அண்ணல்கள் தமக்களப் பரிய அத்தனூர்
தண்ணறுஞ் சாந்தமும் பூவு நீர்கொடு
விண்ணவர் தொழுதெழு விசய மங்கையே. 9

2985.கஞ்சியுங் கவளமுண் கவணர் கட்டுரை
நஞ்சினுங் கொடியன நமர்கள் தேர்கிலார்
செஞ்சடை முடியுடைத் தேவ னன்னகர்
விஞ்சையர் தொழுதெழு விசய மங்கையே. 10

2986.விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுள் ஞானசம் பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. திருவைகல்மாடக்கோயில் : பண் – காந்தாரபஞ்சமம்

2987.துளமதி யுடைமறி தோன்று கையினர்
இளமதி யணிசடை யெந்தை யாரிடம்
உளமதி யுடையவர் வைக லோங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே. 1

2988.மெய்யக மிளிரம்வெண் ணூலர் வேதியர்
மையகண் மலைமக ளோடும் வைகிடம்
வையக மகிழ்தர வைகல் மேற்றிசைச்
செய்யகண் வளவன்முன் செய்த கோயிலே. 2

2989.கணியணி மலர்கொடு காலை மாலையும்
பணியணி பவர்க்கருள் செய்த பான்மையர்
தணியணி யுமையொடு தாமுந் தங்கிடம்
மணியணி கிளர்வைகல் மாடக் கோயிலே. 3

2990.கொம்பியல் கோதைமுன் னஞ்சக் குஞ்சரத்
தும்பிய துரிசெய்த துங்கர் தங்கிடம்
வம்பியல் சோலைசூழ் வைகல் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணான்செய் கோயிலே. 4

2991.விடமடை மிடற்றினர் வேத நாவினர்
மடமொழி மலைமக ளோடும் வைகிடம்
மடவனம் நடைபயில் வைகல் மாநகர்க்
குடதிசை நிலவிய மாடக் கோயிலே. 5

2992.நிறைபுனல் பிறையொடு நிலவு நீர்சடை
இறையவ ருறைவிட மிலங்கு மூவெரி
மறையொடு வளர்வுசெய் வாணர் வைகலில்
திறையுடை நிறைசெல்வன் செய்த கோயிலே. 6

2993.எரிசரம் வரிசிலை வளைய ஏவிமுன்
திரிபுர மெரிசெய்த செல்வர் சேர்விடம்
வரிவளை யவர்பயில் வைகல் மேற்றிசை
வருமுகி லணவிய மாடக் கோயிலே. 7

2994.மலையன இருபது தோளி னான்வலி
தொலைவுசெய் தருள்செய்த சோதி யாரிடம்
மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்
வலம்வரு மலையன மாடக் கோயிலே. 8

2995.மாலவன் மலரவன் நேடி மால்கொள
மாலெரி யாகிய வரதர் வைகிடம்
மாலைகொ டணிமறை வாணர் வைகலில்
மாலன மணியணி மாடக் கோயிலே. 9

2996.கடுவுடை வாயினர் கஞ்சி வாயினர்
பிடகுரை பேணிலார் பேணு கோயிலாம்
மடமுடை யவர்பயில் வைகல் மாநகர்
வடமலை யனையநன் மாடக் கோயிலே. 10

2997.மைந்தன திடம்வைகல் மாடக் கோயிலைச்
சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்
பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை
சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 19. திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில் : பண் – காந்தாரபஞ்சமம்

2998.எரிதர அனல்கையி லேந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்ட மாடுவர்
அரிசிலம் பொருபுன லம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே. 1

2999. மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவர்
ஐயநன் பொருபுன லம்பர்ச் செம்பியர்
செய்யகீண் ணிறைசெய்த கோயில் சேர்வரே. 2

3000. மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர ஆடுவர்
அறைபுனல் நிறைவய லம்பர் மாநகர்
இறைபுனை யெழில்வள ரிடம தென்பரே. 3

3001. இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்ம லம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழில்நகர் மருவி வாழ்வரே. 4

3002. சங்கணி குழையினர் சாமம் பாடுவர்
வெங்கனல் கனல்தர வீசி யாடுவர்
அங்கணி விழவம ரம்பல் மாநகர்ச்
செங்கண விறைசெய்த கோயில் சேர்வரே. 5

3003. கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்
அழல்வளர் மறையவ ரம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநக ரிடம தென்பரே. 6

3004. இகலுறு சுடரெரி யிலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்
அகலிட மலிபுக ழம்பர் வம்பவிழ்
புகலிட நெடுநகர் புகுவர் போலுமே. 7

3005. எரியன மணிமுடி யிலங்கைக் கோன்றன
கரியன தடக்கைக ளடர்த்த காலினர்
அரியவர் வளநக ரம்ப ரின்பொடு
புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே. 8

3006. வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழிற்
பொறிகிள ரரவணைப் புல்கு செல்வனும்
அறிகில வரியவ ரம்பர்ச் செம்பியர்
செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே. 9

3007. வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுன லம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துள ருமையுந் தாமுமே. 10

3008. அழகரை யடிகளை யம்பர் மேவிய
நிழல்திகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினி லோதுவீர் கொள்மின்
தமிழ்கெழு விரகினன் தமிழ்செய் மாலையே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 20. திருப்பூவணம் : பண் – காந்தாரபஞ்சமம்

3009. மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவல ரரண மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே. 1

3010. வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை யங்க மோதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே. 2

3011. வெந்துய ருறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறுசூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே 3

3012. வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை
ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை யடிதொழ நன்மை யாகுமே. 4

3013. குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை
அருந்திற லவுணர்த மரண மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே. 5

3014. வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்
நறுமல ரடிதொழ நன்மை யாகுமே. 6

3015. பறைமல்கு முழவொடு பாட லாடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதொர் கூறினன்
அறைமல்கு கழல்தொழ அல்ல லில்லையே. 7

3016. வரைதனை யெடுத்தவல் லரக்கன் நீண்முடி
விரல்தனி லடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்
பரவிய அடியவர்க் கில்லை பாவமே. 8

3017. நீர்மல்கு மலருறை வானும் மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவணம்
ஏர்மல்கு மலர்புனைந் தேத்த லின்பமே. 9

3018. மண்டைகொண் டுழிதரு மதியில் தேரருங்
குண்டருங் குணமல பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழில் மல்கு பூவணம்
கண்டவ ரடிதொழு தேத்தல் கன்மமே. 10

3019. புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய அருமறை ஞான சம்பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 21. திருக்கருக்குடி : பண் – காந்தாரபஞ்சமம்

3020. நனவிலுங் கனவிலு நாளுந் தன்னொளி
நினைவிலு மெனக்குவந் தெய்து நின்மலன்
கனைகடல் வையகந் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் மடிகள் காண்மினே. 1

3021. வேதியன் விடையுடை விமல னொன்னலர்
மூதெயி லெரியெழ முனிந்த முக்கணன்
காதியல் குழையினன் கருக்கு டியமர்
ஆதியை யடிதொழ அல்ல லில்லையே. 2

3022.மஞ்சுறு பொழில்வள மலிக ருக்குடி
நஞ்சுறு திருமிட றுடைய நாதனார்
அஞ்சுரும் பார்குழ லரிவை யஞ்சவே
வெஞ்சுரந் தனில்விளை யாட லென்கொலோ. 3

3023.ஊனுடைப் பிறவியை யறுக்க வுன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்
வானவர் தொழுகழல் வாழ்த்தி வாழ்மினே. 4

3024.சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையைக்
கூடுவ ருலகிடை யையங் கொண்டொலி
பாடுவ ரிசைபறை கொட்ட நட்டிருள்
ஆடுவர் கருக்குடி யண்ணல் வண்ணமே. 5

3025.இன்புடை யாரிசை வீணை பூணரா
என்புடை யாரெழில் மேனி மேலெரி
முன்புடை யார்முத லேத்து மன்பருக்
கன்புடை யார்கருக் குடியெம் மண்ணலே. 6

3026.காலமு ஞாயிறுந் தீயு மாயவர்
கோலமு முடியர வணிந்த கொள்கையர்
சீலமு முடையவர் திருக்க ருக்குடிச்
சாலவு மினிதவ ருடைய தன்மையே. 7

3027.எறிகடல் புடைதழு விலங்கை மன்னனை
முறிபட வரையிடை யடர்த்த மூர்த்தியார்
கறைபடு பொழில்மதி தவழ்க ருக்குடி
அறிவொடு தொழுமவ ராள்வர் நன்மையே. 8

3028.பூமனுந் திசைமுகன் றானும் பொற்பமர்
வாமன னறிகிலா வண்ண மோங்கெரி
ஆமென வுயர்ந்தவ னணிக ருக்குடி
நாமன னினில்வர நினைதல் நன்மையே. 9

3029.சாக்கியர் சமண்படு கையர் பொய்ம்மொழி
ஆக்கிய வுரைகொளே லருந்தி ருந்நமக்
காக்கிய அரனுறை யணிக ருக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே. 10

3030. கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் தன்னொளி
ஆனமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க் குயரு மின்பமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. பொது : பண் – காந்தாரபஞ்சமம்

### பஞ்சாக்கரத் திருப்பதிகம்

3031. துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே. 1

3032. மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே. 2

3033. ஊனிலு யிர்ப்பை ஒடுக்கி யொண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நன்புலத்
தேனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 3

3034. நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல்கெ டச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்றமர் கொண்டு போமிடத்
தல்லல்கெ டுப்பன அஞ்செ ழுத்துமே. 4

3035. கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச வைம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே. 5

3036. தும்ம லிருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே. 6

3037. வீடுபி றப்பை யறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாள்தொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன அஞ்செ ழுத்துமே. 7

3038. வண்டமர் ஓதி மடந்தை பேணின
பண்டையி ராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்ட மளிப்பன அஞ்செ ழுத்துமே. 8

3039. கார்வணன் நான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன அஞ்செ ழுத்துமே. 9

3040. புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன அஞ்செ ழுத்துமே. 10

3041. நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமில் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 23. திருவிற்கோலம் : பண் – காந்தாரபஞ்சமம்

3042. உருவினா ருமையொடு மொன்றி நின்றதோர்
திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்
வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினா னுறைவிடந் திருவிற் கோலமே. 1

3043. சிற்றிடை யுமையொரு பங்க னங்கையில்
உற்றதோ ரெரியின னொருச ரத்தினால்
வெற்றிகொ ளவுணர்கள் புரங்கள் வெந்தறச்
செற்றவ னுறைவிடந் திருவிற் கோலமே. 2

3044. ஐயனல் லதிசய னயன்விண் ணோர்தொழும்
மையணி கண்டனார் வண்ணம் வண்ணவான்
பையர வல்குலாள் பாக மாகவும்
செய்யவ னுறைவிடந் திருவிற் கோலமே. 3

3045. விதைத்தவன் முனிவருக் கறமுன் காலனை
உதைத்தவன் னுயிரிழந் துருண்டு வீழ்தரப்
புதைத்தவன் நெடுநகர்ப் புரங்கள் மூன்றையும்
சிதைத்தவ னுறைவிடந் திருவிற் கோலமே. 4

3046. முந்தினான் மூவருள் முதல்வ னாயினான்
கொந்துலா மலர்ப்பொழிற் கூக மேவினான்
அந்திவான் பிறையினா னடியர் மேல்வினை
சிந்துவா னுறைவிடந் திருவிற் கோலமே. 5

3047. தொகுத்தவ னருமறை யங்க மாகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூக மேவினான்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவ னுறைவிடந் திருவிற் கோலமே. 6

3048. விரித்தவ னருமறை விரிச டைவெள்ளம்
தரித்தவன் தரியலர் புரங்க ளாசற
எரித்தவ னிலங்கையர் கோனி டர்படச்
சிரித்தவ னுறைவிடந் திருவிற் கோலமே. 7,8

3049. திரிதரு புரமெரி செய்த சேவகன்
வரியர வொடுமதி சடையில் வைத்தவன்
அரியொடு பிரமன தாற்ற லாலுருத்
தெரியல னுறைவிடந் திருவிற் கோலமே. 9

3050. சீர்மையில் சமணொடு சீவ ரக்கையர்
நீர்மையி லுரைகள்கொள் ளாத நேசர்க்குப்
பார்மலி பெருஞ்செல்வம் பரிந்து நல்கிடும்
சீர்மையி னானிடந் திருவிற் கோலமே 10

3051. கோடல்வெண் பிறையனைக் கூக மேவிய
சேடன செழுமதில் திருவிற் கோலத்தை
நாடவல் லதமிழ் ஞான சம்பந்தன்
பாடல்வல் லார்களுக் கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. திருக்கழுமலம் : பண் – கொல்லி

3052. மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. 1

*3053. போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. 2

3054. தொண்டணை செய்தொழிற் றுயரறுத் துய்யலாம்
வண்டணை கொன்றையான் மதுமலர்ச் சடைமுடிக்
கண்துணை நெற்றியான் கழுமல வளநகர்ப்
பெண்துணை யாகவோர் பெருந்தகை யிருந்ததே. 3

3055. அயர்வுளோ மென்றுநீ யசைவொழி நெஞ்சமே
நியர்வளை முன்கையாள் நேரிழை யவளொடுங்
கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்
பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. 4

3056. அடைவிலோ மென்றுநீ யயர்வொழி நெஞ்சமே
விடையமர் கொடியினான் விண்ணவர் தொழுதெழுங்
கடையுயர் மாடமார் கழுமல வளநகர்ப்
பெடைநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 5

3057. மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குற் றிருந்திழை யவளொடும்
பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே. 6

3058. குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே
நிறைவளை முன்கையாள் நேரிழை யவளொடுங்
கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை யிருந்ததே. 7

3059. அரக்கனா ரருவரை யெடுத்தவ னலறிட
நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவா ளருள் செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே. 8

3060. நெடியவன் பிரமனு நினைப்பரி தாயவர்
அடியொடு முடியறி யாஅழ லுருவினன்
கடிகமழ் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிடிநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 9

3061. தாருறு தட்டுடைச் சமணர்சாக் கியர்கள்தம்
ஆருறு சொற்களைந் தடியிணை யடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை யிருந்ததே. 10

3062. கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 25. திருந்துதேவன்குடி : பண் – கொல்லி

3063. மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழு மடிகள்வே டங்களே. 1

3064. வீதிபோக் காவன வினையைவீட் டுவ்வன
ஓதியோர்க் கப்படாப் பொருளையோர் விப்பன
தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதியந் தம்மிலா அடிகள்வே டங்களே. 2

3065. மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி
ஆனஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே. 3

3066. செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அவிகளுய்க் கப்படு மடிகள்வே டங்களே. 4

3067. விண்ணுலா வுந்நெறி வீடுகாட் டுந்நெறி
மண்ணுலா வுந்நெறி மயக்கந்தீர்க் குந்நெறி
தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி
அண்ணலா னேறுடை யடிகள்வே டங்களே. 5

3068. பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா
புங்கமென் னப்படர் புகழ்களென் னப்படும்
திங்கள்தோ யும்பொழில் தீண்டுதே வன்குடி
அங்கமா றுஞ்சொன்ன அடிகள்வே டங்களே. 6

3069. கரைதலொன் றும்மிலை கருதவல் லார்தமக்
குரையிலூ னம்மிலை யுலகினின் மன்னுவர்
திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. 7

3070. உலகமுட் குந்திறல் லுடையரக் கன்வலி
விலகுபூ தக்கணம் வெருட்டும்வே டத்தின
திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி
அலர்தயங் கும்முடி யடிகள்வே டங்களே. 8

3071. துளக்கமில் லாதன தூயதோற் றத்தன
விளக்கமாக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்
திளைக்குந்தே வன்குடித் திசைமுக னோடுமால்
அளக்கவொண் ணாவண்ணத் தடிகள்வே டங்களே. 9

3072. செருமரு தண்துவர்த் தேரம ணாதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் முரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

3073. சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடமோங் கும்பொழில் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 26. திருக்கானப்பேர் : பண் – கொல்லி

3074. பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பே ரண்ணல்நின்
அடியலா லடைசர ணுடையரோ அடியரே. 1

3075. நுண்ணிடைப் பேரல்குல் நூபுர மெல்லடிப்
பெண்ணினல் லாளையோர் பாகமாப் பேணினான்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. 2

3076. வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பே ரண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளும் ஞானநீர்
தூவிவாய்ப் பெய்துநின் றாட்டுவார் தொண்டரே. 3

3077. நிறையுடை நெஞ்சுளும் நீருளும் பூவுளும்
பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்
கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்
குறையுடை யவர்க்கலாற் களைகிலார் குற்றமே. 4

3078. ஏனப்பூண் மார்பின்மே லென்புபூண் டீறிலா
ஞானப்பே ராயிரம் பேரினான் நண்ணிய
கானப்பே ரூர்தொழுங் காதலார் தீதிலர்
வானப்பே ரூர்புகும் வண்ணமும் வல்லரே. 5

3079. பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்
வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்
கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்
உள்ளமே கோயிலா வுள்குமென் னுள்ளமே. 6

3080. மானமா மடப்பிடி வன்கையா லலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்
ஊனமா முடம்பினி லுறுபிணி கெடஎண்ணில்
ஞானமா மலர்கொடு நணுகுதல் நன்மையே. 7

3081. வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்
தோளினான் நெடுமுடி தொலையவே யூன்றிய
தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்
நாளுநா ளுயர்வதோர் நன்மையைப் பெறுவரே. 8

3082.சிலையினான் முப்புரந் தீயெழச் செற்றவன்
நிலையிலா இருவரை நிலைமைகண் டோங்கினான்
சிலையினார் புறவிற்றேன் கமழ்தரு கானப்பேர்
தலையினால் வணங்குவார் தவமுடை யார்களே. 9

3083. உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி
பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்
மறித்தலை மடப்பிடி வளரிளங் கொழுங்கொடி
கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. 10

3084.காட்டகத் தாடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளுங் காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 27. திருச்சக்கரப்பள்ளி : பண் – கொல்லி

3085.படையினார் வெண்மழுப் பாய்புலித் தோலரை
உடையினா ருமையொரு கூறனா ரூர்வதோர்
விடையினார் வெண்பொடிப் பூசியார் விரிபுனல்
சடையினா ருறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 1

3086.பாடினா ரருமறை பனிமதி சடைமிசைச்
சூடினார் படுதலை துன்னெருக் கதனொடும்
நாடினா ரிடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 2

3087.மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்
பொன்னினார் கொன்றையும் பொறிகிள ரரவமும்
துன்னினா ருலகெலாந் தொழுதெழ நான்மறை
தன்னினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 3

3088.நலமலி கொள்கையார் நான்மறை பாடலார்
வலமலி மழுவினார் மகிழுமூர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே. 4

3089.வெந்தவெண் பொடியணி வேதியர் விரிபுனல்
அந்தமி லணிமலை மங்கையோ டமருமூர்
கந்தமார் மலரொடு காரகில் பன்மணி
சந்தினோ டணைபுனற் சக்கரப் பள்ளியே. 5

3090.பாங்கினால் முப்புரம் பாழ்பட வெஞ்சிலை
வாங்கினார் வானவர் தானவர் வணங்கிட
ஓங்கினா ருமையொரு கூறொடு மொலிபுனல்
தாங்கினா ருறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 6

3091.பாரினார் தொழுதெழு பரவுபல் லாயிரம்
பேரினார் பெண்ணொரு கூறனார் பேரொலி
நீரினார் சடைமுடி நிரைமலர்க் கொன்றையந்
தாரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 7

3092.முதிரிலா வெண்பிறை சூடினார் முன்னநாள்
எதிரிலா முப்புர மெரிசெய்தார் வரைதனால்
அதிரிலா வல்லரக் கன்வலி வாட்டிய
சதிரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 8

3093.துணிபடு கோவணஞ் சுண்ணவெண் பொடியினர்
பணிபடு மார்பினர் பனிமதிச் சடையினர்
மணிவண னவனொடு மலர்மிசை யானையும்
தணிவினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 9

3094.உடம்புபோர் சீவர ரூண்தொழிற் சமணர்கள்
விடம்படு முரையவை மெய்யல விரிபுனல்
வடம்படு மலர்கொடு வணங்குமின் வைகலும்
தடம்புனல் சூழ்தரு சக்கரப் பள்ளியே. 10

3095.தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெங்
கண்ணுத லவனடிக் கழுமல வளநகர்
நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
பண்ணிய இவைசொலப் பறையுமெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருமழபாடி : பண் – கொல்லி

3096. காலையார் வண்டினங் கிண்டிய காருறும்
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே.
வேலையார் விடமணி வேதியன் விரும்பிடம்
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. 1

3097. கறையணி மிடறுடைக் கண்ணுதல் நண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுமூர்
துறையணி குருகினந் தூமலர் துதையவே
மறையணி நாவினான் மாமழ பாடியே. 2

3098. அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியுஞ்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விர லாளொடும் பயில்விடம்
மந்தம்வந் துலவுசீர் மாமழ பாடியே. 3

3099. அத்தியி னுரிதனை யழகுறப் போர்த்தவன்
முத்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்
பத்தியாற் பாடிடப் பரிந்தவர்க் கருள்செயும்
அத்தனா ருறைவிடம் மணிமழ பாடியே. 4

3100. கங்கையார் சடையிடைக் கதிர்மதி யணிந்தவன்
வெங்கண்வா எரவுடை வேதியன் தீதிலாச்
செங்கயற் கண்ணுமை யாளொடுஞ் சேர்விடம்
மங்கைமார் நடம்பயில் மாமழ பாடியே. 5

3101. பாலனா ராருயிர் பாங்கினா லுணவரும்
காலனா ருயிர்செகக் காலினாற் சாடினான்
சேலினார் கண்ணினாள் தன்னொடுஞ் சேர்விடம்
மாலினார் வழிபடு மாமழ பாடியே. 6

3102. விண்ணிலா ரிமையவர் மெய்ம்மகிழ்ந் தேத்தவே
ஏண்ணிலார் முப்புர மெரியுண நகைசெய்தார்
கண்ணினாற் காமனைக் கனலெழக் காய்ந்தஎம்
அண்ணலா ருறைவிட மணிமழ பாடியே. 7

3103. கரத்தினாற் கயிலையை யெடுத்தகா ரரக்கன
சிரத்தினை யூன்றலுஞ் சிவனடி சரணெனா
இரத்தினாற் கைந்நரம் பெடுத்திசை பாடலும்
வரத்தினான் மருவிட மாமழ பாடியே. 8

3104. ஏடுலா மலர்மிசை அயனெழில் மாலுமாய்
நாடினார்க் கரியசீர் நாதனா ருறைவிடம்
பாடெலாம் பெண்ணையின் பழம்விழப் பைம்பொழில்
மாடெலா மல்குசீர் மாமழ பாடியே. 9

3105. உறிபிடித் தூத்தைவாய்ச சமணொடு சாக்கியர்
நெறிபிடித் தறிவிலா நீசர்சொற் கொள்ளன்மின்
பொறிபிடித் தரவினம் பூணெனக் கொண்டுமான்
மறிபிடித் தானிட மாமழ பாடியே. 10

3106. ஞாலத்தா ராதிரை நாளினான் நாள்தொறும்
சீலத்தான் மேவிய திருமழ பாடியை
ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொல்
கோலத்தாற் பாடுவார் குற்றமற் றார்களே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 29. மேலைத்திருக்காட்டுப்பள்ளி : பண் – கொல்லி

3107. வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி யுண்பதும் வெண்தலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தந் நீர்மையே. 1

3108. நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனா ரழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே. 2

3109. பண்ணினா ரருமறை பாடினார் நெற்றியோர்
கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணினார் விரிபுனல் மேவினார் சடைமுடி
அண்ணலா ரெம்மையா ளுடையஎம் மடிகளே. 3

3110. பணங்கொள்நா கம்மரைக் கார்ப்பது பல்பலி
உணங்கலோ டுண்கல னுறைவது காட்டிடைக்
கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே. 4

3111. வரையுலாஞ் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலா மிடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாங் கங்கையுந் திங்களுஞ் சூடியங்
கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. 5

3112. வேதனார் வெண்மழு ஏந்தினா ரங்கமுன்
ஓதினா ருமையொரு கூறனா ரொண்குழைக்
காதினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனார் திருவடி நாளுநின் றேத்துமே. 6

3113. மையினார் மிடறனார் மான்மழு வேந்திய
கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
தையலோர் பாகமாத் தண்மதி சூடிய
ஐயனா ரடிதொழ அல்லலொன் றில்லையே. 7

3114. சிலைதனால் முப்புரஞ் செற்றவன் சீரினார்
மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனால் வணங்கிடத் தவமது ஆகுமே. 8

3115. செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையாற் றொழுதெழத் தழலுரு வாயினான்
கங்கையார் சடையினான் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையாற் றொழுமவர்க் கல்லலொன் றில்லையே. 9

3116. போதியார் பிண்டியா ரென்றஅப் பொய்யர்கள்
வாதினா லுரையவை மெய்யல வைகலும்
காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினார் றொழுதெழ இன்பம்வந் தெய்துமே. 10

3117. பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல அணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொல்லப் பறையுமெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 30. திருஅரதைப்பெரும்பாழி : பண் – கொல்லி

3118. பைத்தபாம் போடரைக் கோவணம் பாய்புலி
மொய்த்தபேய் கண்முழக் கம்முது காட்டிடை
நித்தமா கந்நட மாடிவெண் ணீறணி
பித்தர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 1

3119. கயலசே லகருங் கண்ணியர் நாள்தொறும்
பயலைகொள் ளப்பலி தேர்ந்துழல் பான்மையார்
இயலைவா னோர்நினைந் தோர்களுக் கெண்ணரும்
பெயரர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 2

3120. கோடல்சா லவ்வுடை யார்கொலை யானையின்
மூடல்சா லவ்வுடை யார்முளி கானிடை
ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய
பீடர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 3

3121. மண்ணர்நீ ராரழ லார்மலி காலினார்
விண்ணர்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணர்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 4

3122. மறையர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்
கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்
நறைகொள்கொன் றைநயந் தார்தருஞ் சென்னிமேல்
பிறையர்கோ யில்லர தைப்பொரும் பாழியே. 5

3123. புற்றரவ வம்புலித் தோலரைக் கோவணம்
தற்றிர வின்னட மாடுவர் தாழ்தரு
சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்
பெற்றர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 6

3124. துணையிறுத் தஞ்சுரி சங்கமர் வெண்பொடி
இணையிலேற் றையுகந் தேறுவ ரும்மெரி
கணையினால் முப்புரஞ் செற்றவர் கையினில்
பிறையர்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 7

3125. சரிவிலா வல்லரக் கன்தடந் தோள்தலை
நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்
அரிவைபா கம்மமர்ந் தாரடி யாரொடும்
பிரிவில்கோ யில்லர தைப்பெரும் பாழியே. 8

3126. வரியரா என்பணி மார்பினர் நீர்மல்கும்
எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்
கரியமா லோடயன் காண்பரி தாகிய
பெரியர்கோ யில்லரை தைப்பெரும் பாழியே. 9

3127. நாணிலா தசமண் சாக்கியர் நாள்தொறும்
ஏணிலா தம்மொழி யவ்வெழி லாயவர்
சேணுலா மும்மதில் தீயெழச் செற்றவர்
பேணுகோ யில்லரை தைப்பெரும் பாழியே. 10

3128. நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்
பாரினார் பரவரை தைப்பெரும் பாழியைச்
சீரினார் காழியுள் ஞானசம் பந்தன்செய்
ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 31. திருமயேந்திரப்பள்ளி : பண் – கொல்லி

3129. திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமுங்
கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா லெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவரை யழகனை யடியிணை பணிமினே. 1

3130. கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை
கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்
செண்டுசேர் விடையினான் திருந்தடி பணிமினே. 2

3131. கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப் புன்னையுந்
தாங்குதேன் கொன்றையுந் தகுமலர்க் குரவமு
மாங்கரும் பும்வயன் மயேந்திரப் பள்ளியுள்
ஆங்கிருந் தவன்கழ லடியிணை பணிமினே. 3

3132. வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு
சங்கமா ரொலியகில் தருபுகை கமழ்தரு
மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்
எங்கள்நா யகன்றன திணையடி பணிமினே. 4

3133. நிலத்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டனன் மயேந்திரப் பள்ளியுட்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. 5

3134. சந்திரன் கதிரவன் தகுபுக ழயனொடும்
இந்திரன் வழிபட இருந்தஎம் மிறையவன்
மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமி லழகனை யடிபணிந் துய்ம்மினே. 6

3135. சடைமுடி முனிவர்கள் சமைவொடும் வழிபட
நடநவில் புரிவினன் நறவணி மலரொடு
படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்
அடல்விடை யுடையவ னடிபணிந் துய்ம்மினே. 7

3136. சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்
கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்
மரவமர் பூம்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
அரவமர் சடையனை யடிபணிந் துய்ம்மினே. 8

3137. நாகணைத் துயில்பவன் நலமிகு மலரவன்
ஆகணைந் தவர்கழ லணையவும் பெறுகிலர்
மாகணைந் தவர்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
யோகணைந் தவன்கழ லுணர்ந்திருந் துய்ம்மினே. 9

3138. உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்
இடமுடை யீசனை யிணையடி பணிமினே. 10

3139. வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்
நம்பனார் கழலடி ஞானசம் பந்தன்சொல்
நம்பர மிதுவென நாவினால் நவில்பவர்
உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 32. திருஏடகம் : பண் – கொல்லி

3140. வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலா ரேடகத் தொருவனே. 1

3141. கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி
வடிவுற அமைதர மருவிய ஏடகத்
தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்
இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே. 2

3142. குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி
செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே. 3

3143. ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்
கோலமார் கருவிடைக் குழகனா ருறைவிடம்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே. 4

3144. வரியணி நயனிநன் மலைமகள் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய
எரியவ னுறைவிட மேடகக் கோயிலே. 5

3145. பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய ஏடகத்
தையனை யடிபணிந் தரற்றுமி னடர்தரும்
வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே. 6,7

3146. தடவரை யெடுத்தவன் தருக்கிறத் தோளடர்
படவிர லூன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும்
இடமுடைச் சடையின னேடகத் திறைவனே. 8

3147 பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணா னேடகத் தொருவனே. 9

3148. குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்
வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை ஏடகத் தெந்தையே. 10

3149. கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 33. திருவுசாத்தனாம் : பண் – கொல்லி

3150. நீரிடத் துயின்றவன் தம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்னநு மான்தொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தஎம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. 1

3151. கொல்லையே றுடையவன் கோவண ஆடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுமதி நறைகமழ்
தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே. 2

3152. தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினா னொருநொடிக்
காமனா ருடல்கெடக் காய்ந்தஎங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. 3

3153. மறிதரு கரத்தினான் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினா ரடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. 4,5,6

3154. பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினி னல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே. 7

3155. மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட எடுத்தவன் தலைபத்தும் நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. 8

3156. ஆணலார் பெண்ணலா ரயனொடு மாலுக்கும்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. 9

3157. கானமார் வாழ்க்கையான் காரமண் தேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. 10

3158. வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் தமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 34. திருமுதுகுன்றம் : பண் – கொல்லி

3159. வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலா ராயிழை யாளொடு மமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள் ளருவிசேர்
திண்ணிலார் புறவணி திருமுது குன்றமே. 1

3160. வெறியுலாங் கொன்றையந் தாரினான் மேதகு
பொறியுலா மரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினான் மங்கையோ டமர்விடஞ்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. 2

3161. ஏறினார் விடைமிசை யிமையவர் தொழவுமை
கூறனார் கொல்புலித் தோலினார் மேனிமேல்
நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே. 3

3162. உரையினா ருறுபொரு ளாயினா னுமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்
உரையினா ரொலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினா ரெறிபுனற் றிருமுது குன்றமே. 4

3163. கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளிசென் றிடுநெறி
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. 5

3164. கானமார் கரியினீ ருரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தா மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது குன்றமே. 6

3165. மஞ்சர்தா மலர்கொடு வானவர் வணங்கிட
வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
அஞ்சொலா ளுமையொடும் மமர்விட மணிகலைச்
செஞ்சொலார் பயில்தருந் திருமுது குன்றமே. 7

3166. காரினா ரமர்தருங் கயிலைநன் மலையினை
ஏரினார் முடியிரா வணனெடுத் தானிற
வாரினார் முலையொடும் மன்னினார் மருவிடம்
சீரினார் திகழ்தருந் திருமுது குன்றமே. 8

3167. ஆடினார் கானகத் தருமறை யின்பொருள்
பாடினார் பலபுகழ்ப் பரமனா ரிணையடி
ஏடினார் மலர்மிசை யயனுமா லிருவரும்
தேடினா ரறிவொணார் திருமுது குன்றமே. 9

3168. மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்
பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்
வாசமார் தருபொழில் வண்டினம் மிசைசெயத்
தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே. 10

3169. திண்ணினார் புறவணி திருமுது குன்றரை
நண்ணினான் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
எண்ணினா னீரைந்து மாலையு மியலுமாப்
பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருத்தென்குடித்திட்டை : பண் – கொல்லி

3170. முன்னைநான் மறையவை முறைமுறை குறையொடும்
தன்னதாள் தொழுதெழ நின்றவன் தன்னிடம்
மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செந்நெலார் வளவயல் தென்குடித் திட்டையே. 1

3171. மகரமா டுங்கொடி மன்மத வேள்தனை
நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்
பகரபா ணித்திலம் பன்மக ரத்தொடும்
சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. 2

3172. கருவினா லன்றியே கருவெலா மாயவன்
உருவினா லன்றியே யுருவுசெய் தானிடம்
பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினால் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே. 3

3173. உண்ணிலா வாவியா யோங்குதன் தன்மையை
விண்ணிலா ரறிகிலா வேதவே தாந்தனூர்
எண்ணிலா ரெழில்மணிக் கனகமா ளிகையிளந்
தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. 4

3174. வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்
அருந்தியா ரமுதவர்க் கருள்செய்தா னமருமூர்
செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்
திருந்துநீள் வளர்பொழில் தென்குடித் திட்டையே. 5

3175. ஊறினா ரோசையுள் ளொன்றினா ரொன்றிமால்
கூறினா ரமர்தருங் குமரவேள் தாதையூர்
ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. 6

3176. கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே. 7

3177. மாலொடும் பொருதிறல் வாளரக் கன்னெரிந்
தோலிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்
காலொடுங் கனகமூக் குடன்வரக் கயல்வரால்
சேலொடும் பாய்வயல் தென்குடித் திட்டையே. 8

3178. நாரணன் தன்னொடு நான்முகன் தானுமாய்க்
காரணன் னடிமுடி காணவொண் ணானிடம்
ஆரணங் கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்
சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. 9

3179. குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்
பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்
வண்டிரைக் கும்பொழில் தண்டலைக் கொண்டலார்
தெண்டிரைத் தண்புனல் தென்குடித் திட்டையே. 10

3180. தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையே
கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்
ஞானமார் ஞானசம் பந்தன செந்தமிழ்
பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 36. திருக்காளத்தி : பண் – கொல்லி

3181. சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. 1

3182. ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. 2

3183. கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. 3

3184. கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கள்தாம் விண்ணுல காள்வரே. 4

3185. வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே
திரைதரு முகலியின் கரையினில் தேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்
நிரைதரு கழலிணை நித்தலு நினைமினே. 5,6,7

3186. முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களும்
எத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்
கத்திட அரக்கனைக் கால்விர லூன்றிய
அத்தன்றன் காளத்தி யணைவது கருமமே. 8

3187. மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினில் நன்மைசேர்
வண்ணமா மலரவன் மாலவன் காண்கிலா
அண்ணலார் காளத்தி யாங்கணைந் துய்ம்மினே. 9

3188. வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. 10

3189. அட்டமா சித்திக ளணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 37. திருப்பிரமபுரம் : பண் – கொல்லி

3190. கரமுனம்மல ராற்புனல்மலர் தூவியேகலந் தேத்துமின்
பரமனூர்பல பேரினாற்பொலி பத்தர்சித்தர்கள் தாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லஎம்மை யன்நாள்தொறும் மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகனருள் பேணியே. 1

3191. விண்ணிலார்மதி சூடினான்விரும் பும்மறையவன் தன்தலை
உண்ணநன்பலி பேணினானுல கத்துளூனுயி ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான்பிர மாபுரத்துறை கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர் கின்றஎம்முடை யாதியே. 2

3192. எல்லையில்புக ழாளனும்மிமை யோர்கணத்துடன் கூடியும்
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த படிறனுந்
தொல்லைவையகத் தேறுதொண்டர்கள் தூமலர்சொரிந் தேத்தவே
மல்லையம்பொழில் தேன்பில்கும்பிர மாபுரத்துறை மைந்தனே. 3

3193. அடையலார்புரஞ் சீறியந்தண ரேத்தமாமட மாதொடும்
பெடையெலாங்கடற் கானல்புல்கும்பிர மாபுரத்துறை கோயிலான்
தொடையலார்நறுங் கொன்றையான்தொழி லேபரவிநின் றேத்தினால்
இடையிலார்சிவ லோகமெய்துதற் கீதுகாரணங் காண்மினே. 4

3194. வாயிடைம்மறை யோதிமங்கையர் வந்திடப்பலி கொண்டுபோய்ப்
போயிடம்மெரி கானிடைப்புரி நாடகம்மினி தாடினான்
பேயொடுங்குடி வாழ்வினான்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்
தாயிடைப்பொருள் தந்தையாகுமென் றோதுவார்க்கருள் தன்மையே. 5

3195. ஊடினாலினி யாவதென்னுயர் நெஞ்சமேயுறு வல்வினைக்
கோடிநீயுழல் கின்றதென்னழ லன்றுதன்கையி லேந்தினான்
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை வேதியன்
ஏடுநேர்மதி யோடராவணி யெந்தையென்றுநின் றேத்திடே. 6

3196. செய்யன்வெள்ளிய னொள்ளியார்சில ரென்றுமேத்தி நினைந்திட
ஐயனாண்டகை யந்தணனரு மாமறைப்பொரு ளாயினான்
பெய்யுமாமழை யானவன்பிர மாபுரமிடம் பேணிய
வெய்யவெண்மழு வேந்தியைந்நினைந் தேத்துமின்வினை வீடவே. 7

3197. கன்றொருக்கையி லேந்திநல்விள வின்கனிபட நூறியுஞ்
சென்றொருக்கிய மாமறைப்பொருள் தேர்ந்தசெம்மல ரோனுமாய்
அன்றரக்கனைச் செற்றவனடி யும்முடியவை காண்கிலார்
பின்தருக்கிய தண்பொழிற்பிர மாபுரத்தரன் பெற்றியே. 8

3198. உண்டுடுக்கைவிட் டார்களும்முயர் கஞ்சிமண்டைகொள் தேரரும்
பண்டடக்குசொற் பேசுமப்பரி வொன்றிலார்கள்சொற் கொள்ளன்மின்
தண்டொடக்குவன் சூலமுந்தழல் மாமழுப்படை தன்கையிற்
கொண்டொடுக்கிய மைந்தனெம்பிர மாபுரத்துறை கூத்தனே. 9

3199. பித்தனைப்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்கழல் பேணியே
மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருள் மேவிட
வைத்தசிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள்
பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை போற்றிசெய்யும்மெய்ம் மாந்தரே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 38. திருக்கண்டியூர்வீரட்டம் : பண் – கொல்லி

3200. வினவினேனறி யாமையில்லுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன்
தனமுனேதனக் கின்மையோதம ராயினாரண்ட மாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ் வையமாப்பலி தேர்ந்ததே. 1

3201. உள்ளவாறெனக் குரைசெய்ம்மினுயர் வாயமாதவம் பேணுவீர்
கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை காதலான்
பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை வைத்ததும்பெரு நீரொலி
வெள்ளந்தாங்கிய தென்கொலோமிகு மங்கையாளுட னாகவே. 2

3202. அடியராயினீர் சொல்லுமின்னறி கின்றிலேனரன் செய்கையைப்
படியெலாந்தொழு தேத்துகண்டியூர் வீரட்டத்துறை பான்மையான்
முடிவுமாய்முத லாயிவ்வைய முழுதுமாயழ காயதோர்
பொடியதார்திரு மார்பினிற்புரி நூலும்பூண்டெழு பொற்பதே. 3

3203. பழையதொண்டர்கள் பகருமின்பல வாயவேதியன் பான்மையைக்
கழையுலாம்புனல் மல்குகாவிரி மன்னுகண்டியூர் வீரட்டன்
குழையொர்காதினிற் பெய்துகந்தொரு குன்றின்மங்கை வெருவுறப்
புழைநெடுங்கைநன் மாவுரித்தது போர்த்துகந்த பொலிவதே. 4

3204. விரவிலாதுமைக் கேட்கின்றேனடி விரும்பியாட்செய்வீர் விளம்புமின்
கரையெலாந்திரை மண்டுகாவிரிக் கண்டியூருறை வீரட்டன்
முரவமொந்தை முழாவொலிக்க முழங்குபேயொடுங் கூடிப்போய்ப்
பரவுவானவர்க் காகவார்கடல் நஞ்சமுண்ட பரிசதே. 5

3205. இயலுமாறெனக் கியம்புமின்னிறை வன்னுமாய்நிறை செய்கையைக்
கயல்நெடுங்கண்ணி னார்கள்தாம்பொலி கண்டியூருறை வீரட்டன்
புயல்பொழிந்திழி வானுளோர்களுக் காகவன்றயன் பொய்ச்சிரம்
அயனக்க்வ தரிந்துமற்றதி லூணுகந்த வருத்தியே. 6

3206. திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச் செல்வன்றன்னது திறமெலாம்
கருந்தடங்கண்ணி னார்கள்தாந்தொழு கண்டியூருறை வீரட்டன்
இருந்துநால்வரொ டால்நிழலற முரைத்ததும்மிகு வெம்மையார்
வருந்தவன்சிலை யாலம்மாமதில் மூன்றுமாட்டிய வண்ணமே. 7

3207. நாவிரித்தரன் தொல்புகழ்பல பேணுவீரிறை நல்குமின்
காவிரித்தடம் புனல்செய்கண்டியூர் வீரட்டத்துறை கண்ணுதல்
கோவிரிப்பயன் ஆனஞ்சாடிய தொன்மையுங்கொடி வரைபெற
மாவரைத்தலத் தாலரக்கனை வலியைவாட்டிய மாண்பதே. 8

3208. பெருமையேசர ணாகவாழ்வுறு மாந்தர்காளிறை பேசுமின்
கருமையார்பொழில் சூழுந்தண்வயற் கண்டியூருறை வீரட்டன்
ஒருமையாலுயர் மாலுமற்றை மலரவன்னுணர்ந் தேத்தவே
அருமையாலவ ருக்குயர்ந்தெரி யாகிநின்றஅத் தன்மையே. 9

3209. நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள் நவிலுமின்னுமைக் கேட்கின்றேன்
கமரழிவயல் சூழுந்தண்புனற் கண்டியூருறை வீரட்டன்
தமரழிந்தெழு சாக்கியச்சம ணாதரோது மதுகொளா
தமரரானவ ரேத்தஅந்தகன் தன்னைச்சூலத்தி லாய்ந்ததே. 10

3210. கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத்திற மடியர்பால்மிகக் கேட்டுகந்த வினாவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம் பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகிலும் பலர்களாகிலு முரைசெய்வாருயர்ந் தார்களே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 39. திருஆலவாய் : பண் – கொல்லி

3211. மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ னென்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 1

3212. ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா
மாகதக்கரி போற்றிரிந்து புரிந்துநின்றுணு மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 2

3213. அத்தகுபொரு ளுண்டுமில்லையு மென்றுநின்றவர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து சனங்கள்வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 3

3214. சந்துசேனனு மிந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனு முதலதாகிய பெயர்கொளா
மந்திபோற்றிரிந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பய னறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 4

3215. கூட்டினார்கிளி யின்விருத்த முரைத்ததோரொலி யின்தொழிற்
பாட்டுமெய்சொலிப் பக்கமேசெலு மெக்கர்தங்களைப் பல்லறம்
காட்டியேவரு மாடெலாங்கவர் கையரைக்கசி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 5

3216. கனகநந்தியும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந் திவணநந்தியு மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகருக்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 6

3217. பந்தணம்மவை யொன்றிலம்பரி வொன்றிலம்மென வாசக
மந்தணம்பல பேசிமாசறு சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது புத்தணம்மது சித்தணச்
சிந்தணர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 7

3218. மேலெனக்கெதி ரில்லையென்ற அரக்கனார்மிகை செற்றதீப்
போலியைப்பணி யாக்கிலாதொரு பொய்த்தவங்கொடு குண்டிகை
பீலிகைக்கொடு பாயிடுக்கி நடுக்கியேபிறர் பின்செலும்
சீலிகட்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 8

3219. பூமகற்கும ரிக்குமோர்வரு புண்ணியன்னடி போற்றிலார்
சாமவத்தையி னார்கள்போல்தலை யைப்பறித்தொரு பொய்த்தவம்
வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி யட்டிவாய்சக திக்குநேர்
ஆமவர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 9

3220. தங்களுக்குமச் சாக்கியர்க்குந் தரிப்பொணாதநற் சேவடி
எங்கள்நாயக னேத்தொழிந்திடுக் கேமடுத்தொரு பொய்த்தவம்
பொங்குநூல்வழி யன்றியேபுல வோர்களைப்பழிக் கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 10

3221. எக்கராமமண் கையருக்கெளி யேனலேன்திரு ஆலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங் கும்முடித்தென்னன் முன்னிவை
தக்கசீர்ப்புக லிக்குமன்தமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்து முரைப்பவர்க்கிட ரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 40. பொது : பண் – கொல்லி
### தனித்திருவிருக்குக்குறள்

3222.கல்லால்நீழல், அல்லாத்தேவை
நல்லார்பேணார், அல்லோநாமே. 1

3223.கொன்றைசூடி, நின்றதேவை
அன்றியொன்று, நன்றிலோமே. 2

3224.கல்லாநெஞ்சின், நில்லானீசன்
சொல்லாதாரோ, டல்லோநாமே. 3

3225.கூற்றுதைத்த, நீற்றினானைப்
போற்றுவார்கள், தோற்றினாரே. 4

3226.காட்டுளாடும், பாட்டுளானை
நாட்டுளாரும், தேட்டுளாரே. 5

3227.தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த
மிக்கதேவர், பக்கத்தோமே. 6

3228.பெண்ணாணாய, விண்ணோர்கோவை
நண்ணாதாரை, எண்ணோநாமே. 7

3229.தூர்த்தன்வீரம், தீர்த்தகோவை
ஆத்தமாக, ஏத்தினோமே. 8

3230.பூவினானும், தாவினானும்
நாவினாலும், நோவினாரே. 9

3231.மொட்டமணர், கட்டர்தேரர்
பிட்டர்சொல்லை, விட்டுளோமே. 10

3232.அந்தண்காழிப், பந்தன்சொல்லைச்
சிந்தைசெய்வோர், உய்ந்துளோரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 41. திருக்கச்சியேகம்பம் : பண் – கொல்லி
### திருவிருக்குக்குறள்

3233.கருவார்கச்சித், திருவேகம்பத்
தொருவாவென்ன, மருவாவினையே. 1

3234. மதியார்கச்சி, நதியேகம்பம்
விதியாலேத்தப், பதியாவாரே. 2

3235. கலியார்கச்சி, மலியேகம்பம்
பலியாற்போற்ற, நலியாவினையே. 3

3236. வரமார்கச்சிப், புரமேகம்பம்
பரவாஏத்த, விரவாவினையே. 4

3237. படமார்கச்சி, இடமேகம்பத்
துடையாயென்ன, அடையாவினையே. 5

3238. நலமார்கச்சி, நிலவேகம்பம்
குலவாவேத்தக், கலவாவினையே. 6

3239. கரியின்னுரியன், திருவேகம்பன்
பெரியபுரமுன், றெரிசெய்தானே. 7

3240. இலங்கையரசைத், துலங்கவூன்றும்
நலங்கொள்கம்பன், இலங்குசரணே. 8

3241. மறையோனரியும், அறியாஅனலன்
நெறியேகம்பம், குறியாற்றொழுமே. 9

3242. பறியாத்தேரர், நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம், குறுகுவோமே. 10

3243. கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 42. திருச்சிற்றேமம் : பண் – கொல்லிக்கௌவாணம்

3244. நிறைவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
குறைவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
சிறைவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
இறைவனென்றே யுலகெலா மேத்தநின்ற பெருமானே. 1

3245. மாகத்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைப்
பாகத்திங்கள் சூடியோ ராடல்மேய பண்டங்கன்
மேகத்தாடு சோலைசூழ் மிடைசிற்றேம மேவினான்
ஆகத்தேர்கொ ளாமையைப் பூண்டஅண்ண லல்லனே. 2

3246. நெடுவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
கொடுவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
படுவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
கடுவெங்கூற்றைக் காலினாற் காய்ந்தகடவு ளல்லனே. 3

3247. கதிரார்திங்கள் வாண்முக மாதர்பாடக் கண்ணுதல்
முதிரார்திங்கள் சூடியோ ராடல்மேய முக்கணன்
எதிரார்புனலம் புன்சடை யெழிலாருஞ்சிற் றேமத்தான்
அதிரார்பைங்க ணேறுடை யாதிமூர்த்தி யல்லனே. 4

3248. வானார்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைக்
கூனார்திங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தேனார்வண்டு பண்செயுந் திருவாருஞ்சிற் றேமத்தான்
மானார்விழிநன் மாதொடும் மகிழ்ந்தமைந்த னல்லனே. 5

3249. பனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடப் பல்சடைக்
குனிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தனிவெள்விடையன் புள்ளினத் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
முனிவுமூப்பு நீக்கிய முக்கண்மூர்த்தி யல்லனே. 6

3250. கிளருந்திங்கள் வாண்முக மாதர்பாடக் கேடிலா
வளருந்திங்கள் சூடியோ ராடல்மேய மாதவன்
தளிருங்கொம்பு மதுவுமார் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
ஒளிரும்வெண்ணூல் மார்பனென் னுள்ளத்துள்ளா னல்லனே. 7

3251. சூழ்ந்ததிங்கள் வாண்முக மாதர்பாடச் சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள் சூடியோ ராடல்மேய புண்ணியன்
தாழ்ந்தவயற்சிற் றேமத்தான் தடவரையைத்தன் தாளினால்
ஆழ்ந்தஅரக்க னொல்கஅன் றடர்த்தஅண்ண லல்லனே. 8

3252. தனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடத் தாழ்சடைத்
துணிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய தொன்மையான்
அணிவண்ணச்சிற் றேமத்தா னலர்மேலந்த ணாளனும்
மணிவண்ணனுமுன் காண்கிலா மழுவாட்செல்வ னல்லனே. 9

3253. வெள்ளைத்திங்கள் வாண்முக மாதர்பாட வீழ்சடைப்
பிள்ளைத்திங்கள் சூடியோ ராடல்மேய பிஞ்ஞகன்
உள்ளத்தார்சிற் றேமத்தா னுருவார்புத்த ரொப்பிலாக்
கள்ளத்தாரைத் தானாக்கியுட் கரந்துவைத்தா னல்லனே. 10

3254.கல்லிலோத மல்குதண் கானல்சூழ்ந்த காழியான்
நல்லவாய வின்தமிழ் நவிலுஞான சம்பந்தன்
செல்வனூர்சிற் றேமத்தைப் பாடல்சீரார் நாவினால்
வல்லராகி வாழ்த்துவா ரல்லலின்றி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 43. சீகாழி : பண் – கௌசிகம்

3255.சந்த மார்முலை யாள்தன கூறனார்
வெந்த வெண்பொடி யாடிய மெய்யனார்
கந்த மார்பொழில் சூழ்தரு காழியுள்
எந்தை யாரடி யென்மனத் துள்ளவே. 1

3256.மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்
தேனி டங்கொளுங் கொன்றையந் தாரினார்
கானி டங்கொளுந் தண்வயற் காழியார்
ஊனி டங்கொண்டென் னுச்சியி னிற்பரே. 2

3257.மைகொள் கண்டத்தர் வான்மதிச் சென்னியர்
பைகொள் வாளர வாட்டும் படிறனார்
கைகொள் மான்மறி யார்கடற் காழியுள்
ஐய னந்தணர் போற்ற இருக்குமே. 3

3258.புற்றில் நாகமும் பூளையும் வன்னியுங்
கற்றை வார்சடை வைத்தவர் காழியுட்
பொற்றொ டியொ டிருந்தவர் பொற்கழல்
உற்ற போதுட னேத்தி யுணருமே. 4

3259.நலியுங் குற்றமு நம்முட னோய்வினை
மெலியு மாறது வேண்டுதி ரேல்வெய்ய
கலிக டிந்தகை யார்கடற் காழியுள்
அலைகொள் செஞ்சடை யாரடி போற்றுமே. 5

3260.பெண்ணொர் கூறினர் பேயுட னாடுவர்
பண்ணு மேத்திசை பாடிய வேடத்தர்
கண்ணு மூன்றுடை யார்கடற் காழியுள்
அண்ண லாய அடிகள் சரிதையே. 6

3261. பற்று மானு மழுவு மழகுற
முற்று மூர்திரிந் துபலி முன்னுவர்
கற்ற மாநன் மறையவர் காழியுட்
பெற்ற மேற துகந்தார் பெருமையே. 7

3262. எடுத்த வல்லரக் கன்முடி தோளிற
அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுட்
கொடித்த யங்குநற் கோயிலு ளின்புற
இடத்து மாதொடு தாமு மிருப்பரே. 8

3263. காலன் தன்னுயிர் வீட்டு கழலடி
மாலு நான்முகன் தானும் வனப்புற
ஓல மிட்டுமுன் தேடி யுணர்கிலாச்
சீலங் கொண்டவ னூர்திகழ் காழியே. 9

3264. உருவ நீத்தவர் தாமு முறுதுவர்
தருவ லாடையி னாருந் தகவிலர்
கருமம் வேண்டுதி ரேற்கடற் காழியுள்
ஒருவன் சேவடி யேயடைந் துய்ம்மினே. 10

3265. கானல் வந்துல வுங்கடற் காழியுள்
ஈன மில்லி இணையடி யேத்திடும்
ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ்
மான மாக்கு மகிழ்ந்துரை செய்யவே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 44. திருக்கழிப்பாலை : பண் – கௌசிகம்

3266. வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்கழிப் பாலையார்
அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சாந்தமே. 1

3267. வானி லங்க விளங்கு மிளம்பிறை
தான லங்க லுகந்த தலைவனார்
கானி லங்க வருங்கழிப் பாலையார்
மான லம்மட நோக்குடை யாளொடே. 2

3268. கொடிகொ ளேற்றினர் கூற்றை யுதைத்தனர்
பொடிகொள் மார்பினிற் பூண்டதொ ராமையர்
கடிகொள் பூம்பொழில் சூழ்கழிப் பாலையுள்
அடிகள் செய்வன வார்க்கறி வொண்ணுமே. 3

3269. பண்ண லம்பட வண்டறை கொன்றையின்
தண்ண லங்கலு கந்த தலைவனார்
கண்ண லங்க வருங்கழிப் பாலையுள்
அண்ண லெங்கட வுள்ளவ னல்லனே. 4

3270. ஏரி னாருல கத்திமை யோரொடும்
பாரி னாருட னேபர வப்படுங்
காரி னார்பொழில் சூழ்கழிப் பாலையெம்
சீரி னார்கழ லேசிந்தை செய்ம்மினே. 5

3271. துள்ளு மான்மறி யங்கையி லேந்தியூர்
கொள்வ னாரிடு வெண்தலை யிற்பலி
கள்வ னாருறை யுங்கழிப் பாலையை
உள்ளு வார்வினை யாயின வோயுமே. 6

3272. மண்ணி னார்மலி செல்வமும் வானமும்
எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்
பெண்ணி னார்பிறை நெற்றியொ டுற்றமுக்
கண்ணி னாருறை யுங்கழிப் பாலையே. 7

3273. இலங்கை மன்னனை யீரைந் திரட்டிதோள்
துலங்க வூன்றிய தூமழு வாளினார்
கலங்கள் வந்ததுல வுங்கழிப் பாலையை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 8

3274. ஆட்சி யாலல ரானொடு மாலுமாய்த்
தாட்சி யாலறி யாது தளர்ந்தனர்
காட்சி யாலறி யான்கழிப் பாலையை
மாட்சி யாற்றொழு வார்வினை மாயுமே. 9

3275. செய்ய நூண்துவ ராடையி னாரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்
கையர் கேண்மையெ னோகழிப் பாலையெம்
ஐயன் சேவடி யேயடைந் துய்ம்மினே. 10

3276. அந்தண் காழி யருமறை ஞானசம்
பந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்
சிந்தை யாற்சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்தி வானுல காடன் முறைமையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 45. திருஆரூர் : பண் – கௌசிகம்

3277. அந்த மாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்திரு ஆரூரெம்
எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 1

3278. கருத்த னேகரு தார்புர மூன்றெய்த
ஒருத்த னேயுமை யாளொரு கூறனே
திருத்த னேதிரு ஆரூரெந் தீவண்ண
அருத்த வென்னெனை யஞ்சலென் னாததே. 2

3279. மறையன் மாமுனி வன்மரு வார்புரம்
இறையின் மாத்திரை யில்லெரி யூட்டினான்
சிறைவன் டார்பொழில் சூழ்திரு ஆரூரெம்
இறைவன் றானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 3

3280. பல்லி லோடுகை யேந்திப் பலிதிரிந்
தெல்லி வந்திடு காட்டெரி யாடுவான்
செல்வ மல்கிய தென்திரு ஆரூரான்
அல்லல் தீர்த்தெனை யஞ்சலே னுங்கொலோ. 4

3281. குருத்த மேறிக் கொடிவிடு மாதவி
விரிந்த லர்ந்த விரைகமழ் தேன்கொன்றை
திருந்து மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
வருந்தும் போதெனை வாடலெ னுங்கொலோ. 5

3282. வார்கொள் மென்முலை யாளொரு பாகமா
ஊர்க ளாரிடு பிச்சைகொ ளுத்தமன்
சீர்கொள் மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
ஆர்க ணாவெனை யஞ்சலெ னாததே. 6

3283.வளைக்கை மங்கைநல் லாளையோர் பாசமாத்
துளைக்கை யானை துயர்படப் போர்த்தவன்
திளைக்குந் தண்புனல் சூழ்திரு ஆரூரான்
இளைக்கும் போதெனை யேன்றுகொ ளுங்கொலோ. 7

3284.இலங்கை மன்ன னிருபது தோளிறக்
கலங்கக் கால்விர லாற்கடைக் கண்டவன்
வலங்கொள் மாமதில் சூழ்திரு ஆரூரான்
அலங்கல் தந்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 8

3285.நெடிய மாலும் பிரமனு நேர்கிலாப்
படிய வன்பனி மாமதிச் சென்னியான்
செடிகள் நீக்கிய தென்திரு ஆரூரெம்
அடிகள் தானெனை யஞ்சலெ னுங்கொலோ. 9

3286.மாசு மெய்யினர் வண்துவ ராடைகொள்
காசை போர்க்குங் கலதிகள் சொற்கொளேல்
தேச மல்கிய தென்திரு ஆரூரெம்
ஈசன் தானெனை யேன்றுகோ ளுங்கொலோ. 10

3287.வன்னி கொன்றை மதியொடு கூவிளம்
சென்னி வைத்த பிரான்திரு ஆரூரை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 46. திருக்கருகாவூர் : பண் – கௌசிகம்

3288.முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்
அத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 1

3289.விமுத வல்லசடை யான்வினை யுள்குவார்க்
கமுத நீழலக லாததோர் செல்வமாம்
கமுத முல்லை கமழ்கின்ற கருகாவூர்
அமுதர் வண்ணமழ லுமழல் வண்ணமே. 2

3290.பழக வல்லசிறுத் தொண்டர்பா வின்னிசைக்
குழக ரென்றுகுழை யாவழை யாவரும்
கழல்கொள் பாடலுடை யார்கரு காவூரெம்
அழகர் வண்ணமழ லுமழல் வண்ணமே. 3

3291.பொடிமெய் பூசிமலர் கொய்துபு ணர்ந்துடன்
செடிய ரல்லாவுள்ள நல்கிய செல்வத்தர்
கடிகொள் முல்லைகம ழுங்கரு காவூரெம்
அடிகள் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 4

3292.மைய லின்றிமலர் கொய்துவ ணங்கிடச்
செய்ய வுள்ளம்மிக நல்கிய செல்வத்தர்
கைதன் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஐயர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 5

3293.மாசில் தொண்டர்மலர் கொண்டு வணங்கிட
ஆசை யாரஅருள் நல்கிய செல்வத்தர்
காய்சி னத்தவிடை யார்கரு காவூரெம்
ஈசர் வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 6

3294.வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்
கந்த மௌவல்கம ழுங்கரு காவூரெம்
எந்தை வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 7,8

3295.பண்ணி னேர்மொழி யாளையோர் பாகனார்
மண்ணு கோலம்முடை யம்மல ரானொடும்
கண்ண னேடஅரி யார்கரு காவூரெம்
அண்ணல் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 9

3296.போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்
கார்த்தண் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஆத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 10

3297.கலவ மஞ்ஞையுல வுங்கரு காவூர்
நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 47. திருஆலவாய் : பண் – கௌசிகம்

3298. காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனான்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே. 1

3299. மத்த யானையி னீருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரையழிக் கத்திரு வுள்ளமே. 2

3300. மண்ண கத்திலும் வானிலு மெங்குமாம்
திண்ண கத்திரு ஆலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே. 3

3301. ஓதி யோத்தறி யாஅம ணாதரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
ஆதி யேதிரு ஆலவா யண்ணலே
நீதி யாக நினைந்தருள் செய்திடே. 4

3302. வைய மார்புக ழாயடி யார்தொழும்
செய்கை யார்திரு ஆலவா யாய்செப்பாய்
கையி லுண்டுழ லுமமண் கையரைப்
பைய வாதுசெ யத்திரு வுள்ளமே. 5

3303. நாறு சேர்வயல் தண்டலை மிண்டிய
தேற லார்திரு ஆலவா யாய்செப்பாய்
வீறி லாத்தவ மோட்டமண் வேடரைச்
சீறி வாதுசெ யத்திரு வுள்ளமே. 6

3304. பண்ட டித்தவத் தார்பயில் வாற்றொழும்
தொண்ட ருக்கெளி யாய்திரு ஆலவாய்
அண்ட னேயமண் கையரை வாதினில்
செண்ட டித்துள றத்திரு வுள்ளமே. 7

3305. அரக்கன் றான்கிரி யேற்றவன் றன்முடிச்
செருக்கி னைத்தவிர்த் தாய்திரு ஆலவாய்ப்
பரக்கு மாண்புடை யாயமண் பாவரைக்
கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. 8

3306. மாலும் நான்முக னும்மறி யாநெறி
ஆல வாயுறை யும்மண்ண லேபணி
மேலை வீடுண ராவெற்ற ரையரைச்
சால வாதுசெ யத்திரு வுள்ளமே. 9

3307. கழிக்க ரைப்படு மீன்கவர் வாரமண்
அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே
தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு ஆலவாய்
மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே. 10

3308. செந்தெ னாமுர லுந்திரு ஆலவாய்
மைந்த னேயென்று வல்லம ணாசறச்
சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 48. திருமழபாடி : பண் – கௌசிகம்

3309. அங்கை யாரழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்மழ பாடியைத்
தங்கை யாற்றொழு வார்தக வாளரே. 1

3310. விதியு மாம்வினை வாமொளி யார்ந்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியந் தோய்சடை நாதன்நற் பாதமே. 2

3311. முழவி னான்முது காடுறை பேய்க்கணக்
குழுவி னான்குல வுங்கையி லேந்திய
மழுவி னானுறை யும்மழ பாடியைத்
தொழுமி னுந்துய ரானவை தீரவே. 3

3312. கலையி னான்மறை யான்கதி யாகிய
மலையி னான்மரு வார்புர மூன்றெய்த
சிலையி னான்சேர் திருமழ பாடியைத்
தலையி னால்வணங் கத்தவ மாகுமே. 4

3313. நல்வி னைப்பயன் நான்மறை யின்பொருள்
கல்வி யாயக ருத்தனு ருத்திரன்
செல்வன் மேய திருமழ பாடியைப்
புல்கி யேத்து மதுபுக ழாகுமே. 5

3314. நீடி னாருல குக்குயி ராய்நின்றான்
ஆடி னானெரி கானிடை மாநடம்
பாடி னாரிசை மாமழ பாடியை
நாடி னார்க்கில்லை நல்குர வானவே. 6

3315. மின்னி னாரிடை யாளொரு பாகமாய்
மன்னி னானுறை மாமழ பாடியைப்
பன்னி னாரிசை யால்வழி பாடுசெய்
துன்னி னார்வினை யாயின வோயுமே. 7

3316. தென்னி லங்கையர் மன்னன் செழுவரை
தன்னி லங்கஅ டர்த்தருள் செய்தவன்
மன்னி லங்கிய மாமழ பாடியை
உன்னி லங்க வுறுபிணி யில்லையே. 8

3317. திருவின் நாயக னுஞ்செழுந் தாமரை
மருவி னானுந் தொழத்தழல் மாண்பமர்
உருவி னானுறை யும்மழ பாடியைப்
பரவி னார்வினைப் பற்றறுப் பார்களே. 9

3318. நலியு நன்றறி யாச்சமண் சாக்கியர்
வலிய சொல்லினு மாமழ பாடியுள்
ஒலிசெய் வார்கழ லான்திற முள்கவே
மெலியு நம்முடன் மேல்வினை யானவே. 10

3319. மந்த முந்து பொழில்மழ பாடியுள்
எந்தை சந்த மினிதுகந் தேத்துவான்
கந்த மார்கடற் காழியுள் ஞானசம்
பந்தன் மாலைவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 49. பொது : பண் – கௌசிகம்
## நமச்சிவாயத் திருப்பதிகம்

*3320.* *காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி*
*ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேத நான்கினு மெய்பொரு ளாவது*
*நாதன் நாம நமச்சி வாயவே.* 1

*3321.* *நம்பு வாரவர் நாவி னவிற்றினால்*
*வம்பு நாண்மலர் வார்மது வொப்பது*
*செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்*
*நம்பன் நாம நமச்சி வாயவே.* 2

*3322.* *நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்*
*தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்*
*தக்க வானவ ராத்தகு விப்பது*
*நக்கன் நாம நமச்சி வாயவே.* 3

*3323.* *இயமன் தூதரு மஞ்சுவ ரின்சொலால்*
*நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்*
*நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி*
*நயனன் நாம நமச்சி வாயவே.* 4

*3324.* *கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்*
*இல்லா ரேனு மியம்புவ ராயிடின்*
*எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்*
*நல்லார் நாம நமச்சி வாயவே.* 5

*3325.* *மந்த ரம்மன பாவங்கள் மேவிய*
*பந்த னையவர் தாமும் பகர்வரேல்*
*சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்*
*நந்தி நாம நமச்சி வாயவே.* 6

*3326.* *நரக மேழ்புக நாடின ராயினும்*
*உரைசெய் வாயின ராயி னுருத்திரர்*
*விரவி யேபுகு வித்திடு மென்பரால்*
*வரதன் நாம நமச்சி வாயவே.* 7

*3327.* *இலங்கை மன்ன னெடுத்த அடுக்கல்மேல்*
*தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்*
*மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை*
*நலங்கொள் நாம நமச்சி வாயவே.* 8

3328.போதன் போதன கண்ணனு மண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே. 9

3329.கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
செஞ்சொல் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே. 10

3330.நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 50. திருத்தண்டலைநீணெறி : பண் – கௌசிகம்

3331.விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்புந் தும்பியுஞ் சூழ்சடை யார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே. 1

3332.இகழுங் கால னிதயத்து மென்னுளுந்
திகழுஞ் சேவடி யான்திருந் தும்மிடம்
புகழும் பூமக ளும்புணர் பூசுரர்
நிகழுந் தண்டலை நீணெறி காண்மினே. 2

3333.பரந்த நீலப் படரெரி வல்விடம்
கரந்த கண்டத்தி னான்கரு தும்மிடம்
சுரந்த மேதி துறைபடிந் தோடையில்
நிரந்த தண்டலை நீணெறி காண்மினே. 3

3334.தவந்த என்புந் தவளப் பொடியுமே
உவந்த மேனியி னானுறை யும்மிடம்
சிவந்த பொன்னுஞ் செழுந்தர ளங்களும்
நிவந்த தண்டலை நீணெறி காண்மினே. 4,5,6,7

3335. இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்க லில்லடர்த் தான்விரும் பும்மிடம்
சலங்கொ ளிப்பி தரளமுஞ் சங்கமும்
நிலங்கொள் தண்டலை நீணெறி காண்மினே. 8

3336. கருவ ருந்தியின் நான்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடம்
செருவ ருந்திய செம்பியன் கோச்செங்கண்
நிருபர் தண்டலை நீணெறி காண்மினே. 9

3337. கலவு சீவரத் தார்கையி லுண்பவர்
குலவ மாட்டாக் குழக னுறைவிடம்
சுலவு மாமதி லுஞ்சுதை மாடமும்
நிலவு தண்டலை நீணெறி காண்மினே. 10

3338. நீற்றர் தண்டலை நீணெறி நாதனைத்
தோற்று மேன்மையர் தோணி புரத்திறை
சாற்று ஞானசம் பந்தன் தமிழ்வலார்
மாற்றில் செல்வர் மறப்பர் பிறப்பையே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 51. திருஆலவாய் : பண் – கௌசிகம்

3339. செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே. 1

3340. சித்த னேதிரு ஆலவாய் மேவிய
அத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன் தென்னன் பாண்டியற் காகவே. 2

3341. தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மேசென்று பாண்டியற் காகவே. 3

3342. சிட்ட னேதிரு ஆலவாய் மேவிய
அட்ட மூர்த்திய னேயஞ்ச லென்றருள்

துட்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பட்டி மன்தென்னன் பாண்டியற் காகவே. 4

3343. நண்ண லார்புர மூன்றெரி யாலவாய்
அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை
எண்ணி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பண்ணி யற்றமிழ்ப் பாண்டியற் காகவே. 5

3344. தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்
அஞ்ச லென்றரு ளாலவா யண்ணலே
வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்
பஞ்ச வன்தென்னன் பாண்டியற் காகவே. 6

3345. செங்கண் வெள்விடை யாய்திரு ஆலவாய்
அங்க ணாஅஞ்ச லென்றருள் செய்யெனைக்
கங்கு லாரமண் கைய ரிடுங்கனல்
பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. 7

3346. தூர்த்தன் வீரந் தொலைத்தரு ளாலவாய்
ஆத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
ஏத்தி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பார்த்தி வன்தென்னன் பாண்டியற் காகவே. 8

3347. தாவி னானயன் தானறி யாவகை
மேவி னாய்திரு ஆலவா யாயருள்
தூவி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பாவி னான்தென்னன் பாண்டியற் காகவே. 9

3348. எண்டி சைக்கெழி லாலவாய் மேவிய
அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்
குண்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பண்டிமன் தென்னன் பாண்டியற் காகவே. 10

3349. அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 52. திருஆலவாய் : திருவிராகம். பண் – கௌசிகம்

3350. வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. 1

3351. பட்டிசைந்த அல்குலாள் பாவையாளோர் பாகமா
ஒட்டிசைந்த தன்றியும் முச்சியாளொ ருத்தியாக்
கொட்டிசைந்த ஆடலாய் கூடலால வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. 2

3352. குற்றநீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே. 3

3353. முதிருநீர்ச் சடைமுடி முதல்வன்நீ முழங்கழல்
அதிரவீசி யாடுவா யழகன் நீ புயங்கன்நீ
மதுரன்நீ மணாளன்நீ மதுரையால வாயிலாய்
சதுரன்நீ சதுர்முகன் கபாலமேந்து சம்புவே. 4

3354. கோலமாய நீள்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய் சிந்தையிற் றேர்வதில்லை தேவரே. 5

3355. பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. 6

3356. ஆதியந்த மாயினா யாலவாயி லண்ணலே
சோதியந்த மாயினாய் சோதியுள்ளொர் சோதியாய்
கீதம்வந்த வாய்மையாற் கிளர்தருக்கி னார்க்கலால்
ஓதிவந்த வாய்மையா லுணர்ந்துரைக்க லாகுமே. 7

3357. கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடற்
றுறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினாய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினால் நினைப்பதே நியமமே. 8

3358. தாவணவ் விடையினாய் தலைமையாக நாள்தொறும்
கோவணவ் வுடையினாய் கூடலால வாயிலாய்
தீவணம் மலர்மிசைத் திசைமுகனு மாலுநின்
தூவணம் மளக்கிலார் துளக்கமெய்து வார்களே. 9

3359. தேற்றமில் வினைத்தொழிற் றேரருஞ் சமணரும்
போற்றிசைத்து நின்கழற் புகழ்ந்துபுண் ணியங்கொளார்
கூற்றுதைத்த தாளினாய் கூடலால வாயிலாய்
நாற்றிசைக்கு மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. 10

3360. போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயி லண்ணலைத்
தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருஆனைக்கா : திருவிராகம் பண் – கௌசிகம்

3361. வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவி யின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவி லண்ணலை யபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார்க் கேதுமேத மில்லையே 1

3362. சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறுபட்ட நுண்டுறை யானைக்காவி லண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாத மேத்துவார்
வேறுபட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே. 2

3363. தாரமாய மாதராள் தானோர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை யேற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவி லண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. 3

3364. விண்ணினன்னு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல்கண்ணொர் மூன்றினா னானைக்காவு கைதொழ
எண்ணும்வண்ணம் வல்லவர்க் கேதமொன்று மில்லையே. 4

3365. வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்க ளாண்டசீர்
மைகொள் கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 5

3366. நாணுமோர்வு சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுறாத செல்வமும் பேசநின்ற பெற்றியான்
ஆணும்பெண்ணு மாகிய ஆனைக்காவி லண்ணலார்
காணுங்கண்ணு மூன்றுடைக் கறைகொள்மிட றல்லனே. 6

3367. கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரோ டேந்தினா னானைக்காவு சேர்மினே. 7

3368. பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை ஆனைக்காவி லண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழல் துன்னவல்லர் விண்ணையே. 8

3369. ஊனொடுண்டல் நன்றென வூனொடுண்டல் தீதென
ஆனதொண்ட ரன்பினாற் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்
றானொடஞ்சு மாடினா னானைக்காவு சேர்மினே. 9

3370. கையிலுண்ணுங் கையருங் கடுக்கடின் கழுக்களும்
மெய்யைப்போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்
தையல்பாக மாயினான் தழலதுருவத் தானெங்கள்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 10

3371. ஊழியூழி வையகத் துயிர்கள்தோற்றும் வானொடும்
ஆழியானுங் காண்கிலா ஆனைக்காவி லண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 54. பொது : பண் – கௌசிகம்

### திருப்பாசுரம்

3372. வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. 1

3373. அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. 2

3374. வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ. 3

3375. ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார். 4

3376. ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே. 5

3377. ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடு மெனவும் புகழல்லது பாவ நீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. 6

3378. கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொலக் கேட்டுமன்றே. 7

3379. வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 8

3380. பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட ஆடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல் பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்ட வர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 9

3381. மாலா யவனும் மறைவல்ல நான்மு கனும்
பாலாய தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலால முண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. 10

3382. அற்றன்றி யந்தண் மதுரைத்தொகை யாக்கினானும்
தெற்றென்று தெய்வந்தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. 11

3383. நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தன் நல்ல
எல்லார் களும்பரவு மீசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 55. திருவான்மியூர் : பண் – கௌசிகம்

3384. விரையார் கொன்றையினாய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 1

3385. இடியா ரேறுடையா யிமையோர்தம் மணிமுடியாய்
கொடியார் மாமதியோ டரவம்மலர்க் கொன்றையினாய்
செடியார் மாதவிசூழ் திருவான்மி யூருறையும்
அடிகே ளுன்னையல்லா லடையாதென தாதரவே. 2

3386. கையார் வெண்மழுவா கனல்போற்றிரு மேனியனே
மையா ரொண்கணல்லா ளுமையாள்வளர் மார்பினனே
செய்யார் செங்கயல்பாய் திருவான்மி யூருறையும்
ஐயா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 3

3387. பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லா லடையாதென தாதரவே 4

3388. கண்ணா ருந்நுதலாய் கதிர்சூழொளி மேனியின்மேல்
எண்ணார் வெண்பொடிநீ றணிவாயெழில் வார்பொழில்சூழ்
திண்ணார் வண்புரிசைத் திருவான்மி யூருறையும்
அண்ணா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 5

3389. நீதீ நின்னையல்லால் நெறியாது நினைந்தறியேன்
ஓதீ நான்மறைகள் மறையோன்தலை யொன்றினையும்
சேதீ சேதமில்லாத் திருவான்மி யூருறையும்
ஆதீ யுன்னையல்லா லடையாதென தாதரவே. 6

3390. வானார் மாமதிசேர் சடையாய்வரை போலவரும்
கானா ரானையின்தோ லுரித்தாய்கறை மாமிடற்றாய்
தேனார் சோலைகள்சூழ் திருவான்மி யூருறையும்
ஆனா யுன்னையல்லா லடையாதென தாதரவே. 7,8

3391. பொறிவாய் நாகணையா னொடுபூமிசை மேயவனும்
நெறியார் நீள்கழல்மேல் முடிகாண்பரி தாயவனே
செறிவார் மாமதில்சூழ் திருவான்மி யூருறையும்
அறிவே யுன்னையல்லா லடையாதென தாதரவே. 9

3392. குண்டா டுஞ்சமணர் கொடுஞ்சாக்கி யரென்றிவர்கள்
கண்டார் காரணங்கள் கருதாதவர் பேசநின்றாய்
திண்டேர் வீதியதார் திருவான்மி யூருறையும்
அண்டா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 10

3393. கன்றா ருங்கமுகின் வயல்சூழ்தரு காழிதனில்
நன்றா னபுகழால் மிகுஞானசம் பந்தனுரை
சென்றார் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்
குன்றா தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 56. திருப்பிரமபுரம் : பண் – பஞ்சமம்

3394. இறையவன் ஈசனெந்தை யிமை யோர்தொழு தேத்தநின்ற
கறையணி கண்டன்வெண்தோ டணி காதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினான் மலை யாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிர மாபுரம் பேணுமினே. 1

3395. சடையினன் சாமவேதன் சரி கோவண வன்மழுவாட்
படையினன் பாய்புலித்தோ லுடை யான்மறை பல்கலைநூல்
உடையவ னூனமில்லி யுட னாயுமை நங்கையென்னும்
பெடையொடும் பேணுமிடம் பிர மாபுரம் பேணுமினே. 2

3396. மாணியை நாடுகாலன் னுயிர் மாய்தரச் செற்றுக்காளி
காணிய ஆடல்கொண்டான் கலந் தூர்வழி சென்றுபிச்சை
ஊணியல் பாகக்கொண்டங் குட னேயுமை நங்கையொடும்
பேணிய கோயில்மன்னும் பிர மாபுரம் பேணுமினே. 3

3397. பாரிடம் விண்ணுமெங்கும் பயில் நஞ்சுப ரந்துமிண்டப்
பேரிடர்த் தேவர்கணம் பெரு மானிது காஎனலும்
ஓரிடத் தேகரந்தங் குமை நங்கையொ டும்முடனே
பேரிட மாகக்கொண்ட பிர மாபுரம் பேணுமினே. 4

3398. நச்சர வச்சடைமேல் நளிர் திங்களு மொன்றவைத்தங்
கச்சமெ ழுவிடைமே லழ கார்மழு வேந்திநல்ல
இச்சைப கர்ந்துமிக இடு மின்பலி யென்றுநாளும்
பிச்சைகொ ளண்ணல்நண்ணும் பிர மாபுரம் பேணுமினே. 5

3399. பெற்றவன் முப்புரங்கள் பிழை யாவண்ணம் வாளியினாற்
செற்றவன் செஞ்சடையிற் றிகழ் கங்கை தனைத்தரித்திட்
டொற்றை விடையினனா யுமை நங்கையொ டும்முடனே
பெற்றிமை யாலிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 6

3400. வேதம விந்தவொலி விழ வின்னொலி வீணையொலி
கீதம விந்துடனே கிள ரத்திகழ் பௌவமறை
ஓதம விந்தயர்வான் முக டேறவொண் மால்வரையான்
பேதையொ டும்மிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 7

3401. இமையவ ரஞ்சியோட எதிர் வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் னடர்த் தும்பலை யன்றெடுப்பக்
குமையது செய்துபாடக் கொற்ற வாளொடு நாள்கொடுத்திட்
டுமையொ டிருந்தபிரான் பிர மாபுர முன்னுமினே. 8

3402. ஞால மளித்தவனும் மரி யும்மடி யோடுமுடி
காலம் பலசெலவுங் கண்டி லாமையி னாற்கதறி
ஓல மிடஅருளி யுமைநங்கையொ டும்முடனாய்
ஏல இருந்தபிரான் பிர மாபுர மேத்துமினே. 9

3403. துவருறு மாடையினார் தொக்க பீலியர் நக்கரையர்
அவரவர் தன்மைகள்கண் டணு கேன்மின்ன ருள்பெறுவீர்
கவருறு சிந்தையொன்றிக் கழி காலமெல் லாம்படைத்த
இவரவ ரென்றிறைஞ்சிப் பிர மாபுர மேத்துமினே. 10

3404. உரைதரு நான்மறையோர் புகழ்ந் தேத்தவொண் மாதினொடும்
வரையென வீற்றிருந்தான் மலி கின்ற பிரமபுரத்
தரசினை யேத்தவல்ல அணி சம்பந்தன் பத்தும்வல்லார்
விரைதரு விண்ணுலகம் மெதிர் கொள்ள விரும்புவரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 57. திருவொற்றியூர் : பண் – பஞ்சமம்

3405. விடையவன் விண்ணுமண்ணுந் தொழ நின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பல்கரந்தை
சடையவன் சாமவேதன் சசி தங்கிய சங்கவெண்தோ
டுடையவன் னூனமில்லி யுறை யும்மிட மொற்றியூரே. 1

3406. பாரிடம் பாணிசெய்யப் பறைக் கட்செறு பல்கணப்பேய்
சீரொடும் பாடலாட லில யஞ்சிதை யாதகொள்கைத்
தாரிடும் போர்விடையன் தலை வன்தலை யேகலனா
ஊரிடும் பிச்சைகொள்வா னுறை யும்மிட மொற்றியூரே. 2

3407. விளிதரு நீருமண்ணும் விசும் போடனல் காலுமாகி
அளிதரு பேரருளா னர னாகிய ஆதிமூர்த்தி
களிதரு வண்டுபண்செய் கமழ் கொன்றையி னோடணிந்த
ஒளிதரு வெண்பிறையா னுறை யும்மிட மொற்றியூரே. 3

3408. அரவமே கச்சதாக அசைத் தானலர் கொன்றையந்தார்
விரவிவெண் ணூல்கிடந்த விரை யார்வரை மார்பனெந்தை
பரவுவார் பாவமெல்லாம் பறைத் துப்படர் புன்சடைமேல்
உரவுநீ ரேற்றபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 4

3409. விலகினார் வெய்யபாவம் விதி யாலருள் செய்துநல்ல
பலகினார் மொந்தைதாளந் தகு ணிச்சமும் பாணியாலே
அலகினால் வீசிநீர்கொண் டடி மேலல ரிட்டுமுட்டா
துலகினா ரேத்தநின்றா னுறை யும்மிட மொற்றியூரே. 5

3410. கமையொடு நின்றசீரான் கழ லுஞ்சிலம் புமொலிப்பச்
சுமையொடு மேலும்வைத்தான் விரி கொன்றையுஞ் சோமனையும்
அமையொடு நீண்டதிண்டோ ளழ காயபொற் றோடிலங்க
உமையொடுங் கூடிநின்றா னுறை யும்மிட மொற்றியூரே. 6

3411. நன்றியால் வாழ்வதுள்ளம் முல குக்கொரு நன்மையாலே
கன்றினார் மும்மதிலுங் கரு மால்வரை யேசிலையாப்
பொன்றினார் வார்சுடலைப் பொடி நீறணிந் தாரழலம்
பொன்றினா லெய்தபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 7

3412. பெற்றியாற் பித்தனொப்பான் பெரு மான்கரு மானுரிதோல்
சுற்றியான் சுத்திசூலஞ் சுடர்க் கண்ணுதல் மேல்விளங்கத்
தெற்றியாற் செற்றரக்கன் னுடலைச்செழு மால்வரைக்கீழ்
ஒற்றியான் முற்றுமாள்வா னுறை யும்மிட மொற்றியூரே. 8

3413. திருவினார் போதினானுந் திரு மாலுமோர் தெய்வமுன்னித்
தெரிவினாற் காணமாட்டார் திகழ் சேவடி சிந்தைசெய்து
பரவினார் பாவமெல்லாம் பறை யப்படர் பேரொளியோ
டொருவனாய் நின்றபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 9

3414. தோகையம் பீலிகொள்வார் துவர்க் கூறைகள் போர்த்துழல்வார்
ஆகம செல்வனாரை யலர் தூற்றுதல் காரணமாக்
கூகையம் மாக்கள்சொல்லைக் குறிக் கொள்ளன்மி னேழுலகும்
ஓகைதந் தாளவல்லா னுறை யும்மிட மொற்றியூரே. 10

3415. ஒண்பிறை மல்குசென்னி யிறை வன்னுறை யொற்றியூரைச்
சண்பையர் தந்தலைவன் தமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்பத்தும் பர விப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விருப் பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 58. திருச்சாத்தமங்கை : பண் – பஞ்சமம்

3416. திருமலர்க் கொன்றைமாலை திளைக் கும்மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணிதன்னோ டுட னாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ் சும்பெருஞ் சாத்தமங்கை
அருமல ராதிமூர்த்தீ அய வந்திய மர்ந்தவனே. 1

3417. பொடிதனைப் பூசுமார்பிற் புரி நூலொரு பாற்பொருந்தக்
கொடியன சாயலாளோ டுட னாவதுங் கூடுவதே
கடிமண மல்கிநாளுங் கம ழும்பொழிற் சாத்தமங்கை
அடிகள்நக் கன்பரவ அயவந்திய மர்ந்தவனே. 2

3418. நூனலந் தங்குமார்பின் நுகர் நீறணிந் தேறதேறி
மானன நோக்கிதன்னோ டுட னாவது மாண்பதுவே
தானலங் கொண்டுமேகந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
ஆனலந் தோய்ந்தஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. 3

3419. மற்றவின் மால்வரையா மதி லெய்துவெண் ணீறுபூசிப்
புற்றரவ வல்குலாளோ டுட னாவதும் பொற்பதுவே
கற்றவர் சாத்தமங்கை நகர் கைதொழச் செய்தபாவம்
அற்றவர் நாளுமேத்த அய வந்திய மர்ந்தவனே. 4

3420. வெந்தவெண் ணீறுபூசி விடை யேறிய வேதகீதன்
பந்தண வும்விரலா ளுட னாவதும் பாங்கதுவே
சந்தமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அந்தமா யாதியாகி அய வந்திய மர்ந்தவனே. 5

3421. வேதமாய் வேள்வியாகி விளங் கும்பொருள் வீடதாகிச்
சோதியாய் மங்கைபாகந் நிலை தான்சொல்ல லாவதொன்றே
சாதியால் மிக்கசீராற் றகு வார்தொழுங் சாத்தமங்கை
ஆதியாய் நின்றபெம்மான் அய வந்திய மர்ந்தவனே. 6

3422. இமயமெல் லாமிரிய மதி லெய்துவெண் ணீறுபூசி
உமையையொர் பாகம்வைத்த நிலை தானுன்ன லாவதொன்றே
சமயமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அமையவே றோங்குசீரான் அய வந்திய மர்ந்தவனே. 7

3423. பண்ணுலாம் பாடல்வீணை பயில் வானோர்ப ரமயோகி
விண்ணுலா மால்வரையான் மகள் பாகமும் வேண்டினையே
தண்ணிலா வெண்மதியந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
அண்ணலாய் நின்றஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. 8

3424.பேரெழிற் றோளரக்கன் வலி செற்றதும் பெண்ணொர்பாகம்
ஈரெழிற் கோலமாகி யுட னாவது மேற்பதொன்றே
காரெழில் வண்ணனோடு கன கம்மனை யானுங்காணா
ஆரழல் வண்ணமங்கை அய வந்திய மர்ந்தவனே. 9

3425.கங்கையோர் வார்சடைமே லடை யப்புடை யேகமழும்
மங்கையோ டொன்றிநின்றம் மதி தான்சொல்ல லாவதொன்றே
சங்கையில் லாமறையோ ரவர் தாந்தொழு சாத்தமங்கை
அங்கையிற் சென்னிவைத்தாய் அய வந்திய மர்ந்தவனே. 10

3426.மறையினார் மல்குகாழித் தமிழ் ஞானசம் பந்தன்மன்னும்
நிறையினார் நீலநக்கன் நெடு மாநக ரென்றுதொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை அய வந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லா ரிமை யோரிலும் முந்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 59. திருக்குடமூக்கு : பண் – பஞ்சமம்

3427.அரவிரி கோடனீட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவல் மண மல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி யிருந் தானவ னெம்மிறையே. 1

3428.ஓத்தர வங்களோடு மொலி காவிரி யாற்றயலே
பூத்தர வங்களோடும் புகை கொண்டடி போற்றிநல்ல
கூத்தர வங்களோவாக் குழ கன்குட மூக்கிடமா
ஏத்தர வங்கள்செய்ய இருந் தானவ னெம்மிறையே. 2

3429.மயில்பெடை புல்கியால மணல் மேல்மட அன்னமல்கும்
பயில்பெடை வண்டுபண்செய் பழங் காவிரிப்பைம் பொழில்வாய்க்
குயில்பெடை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
இயலொடு வானமேத்த இருந் தானவ னெம்மிறையே. 3

3430.மிக்கரை தாழவேங்கை யுரி யார்த்துமை யாள்வெருவ
அக்கர வாமையேன மருப் போடவை பூண்டழகார்
கொக்கரை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
எக்கரை யாருமேத்த இருந் தானவ னெம்மிறையே. 4

3431. வடிவுடை வாட்டடங்கண் ணுமை யஞ்சவோர் வாரணத்தைப்
பொடியணி மேனிமூட வுரி கொண்டவன் புன்சடையான்
கொடிநெடு மாடமோங்குங் குழ கன்குட மூக்கிடமா
இடிபடு வானமேத்த இருந் தானவ னெம்மிறையே. 5

3432. கழைவளர் கவ்வைமுத்தங் கமழ் காவிரி யாற்றயலே
தழைவளர் மாவின்நல்ல பல வின்கனி கள்தங்கும்
குழைவளர் சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இழைவளர் மங்கையோடு மிருந் தானவ னெம்மிறையே. 6

3433. மலைமலி மங்கைபாகம் மகிழ்ந் தானெழில் வையமுய்யச்
சிலைமலி வெங்கணையாற் சிதைத் தான்புர மூன்றினையும்
குலைமலி தண்பலவின் பழம் வீழ்குட மூக்கிடமா
இலைமலி சூலமேந்தி யிருந் தானவ னெம்மிறையே. 7

3434. நெடுமுடி பத்துடைய நிகழ் வாளரக் கன்னுடலைப்
படுமிடர் கண்டயரப் பரு மால்வரைக் கீழடர்த்தான்
கொடுமடல் தங்குதெங்கு பழம் வீழ்குட மூக்கிடமா
இடுமண லெக்கர்சூழ இருந் தானவ னெம்மிறையே. 8

3435. ஆரெரி யாழியானு மல ரானு மளப்பரிய
நீரிரி புன்சடைமேல் நிரம் பாமதி சூடிநல்ல
கூரெரி யாகிநீண்ட குழ கன்குட மூக்கிடமா
ஈரிரு கோவணத்தோ டிருந் தானவ னெம்மிறையே. 9

3436. மூடிய சீவரத்தார் முது மட்டையர் மோட்டமணர்
நாடிய தேவரெல்லா நயந் தேத்திய நன்னலத்தான்
கூடிய குன்றமெல்லா முடை யான்குட மூக்கிடமா
ஏடலர் கொன்றைசூடி யிருந் தானவ னெம்மிறையே. 10

3437. வெண்கொடி மாடமோங்கு விறல் வெங்குரு நன்னகரான்
நண்பொடு நின்றசீரான் தமிழ் ஞானசம் பந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தா னடி சேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப் பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 60. திருவக்கரை : பண் – பஞ்சமம்

3438. கறையணி மாமிடற்றான் கரி காடரங் காவுடையான்
பிறையணி கொன்றையினா னொரு பாகமும் பெண்ணமர்ந்தான்
மறையவன் றன்தலையிற் பலி கொள்பவன் வக்கரையில்
உறைபவ னெங்கள்பிரா னொலி யார்கழ லுள்குதுமே. 1

3439. பாய்ந்தவன் காலனைமுன் பணைத் தோளியோர் பாகமதா
ஏய்ந்தவ னெண்ணிறந்தவ் விமை யோர்கள்தொ ழுதிறைஞ்ச
வாய்ந்தவன் முப்புரங்க ளெரி செய்தவன் வக்கரையில்
தேய்ந்திள வெண்பிறைசேர் சடை யானடி செப்புதுமே. 2

3440. சந்திர சேகரனே யரு ளாயென்று தண்விசும்பில்
இந்திர னும்முதலா இமை யோர்கள் தொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலு மன லாய்விழ வோரம்பினால்
மந்தர மேருவில்லா வளைத் தானிடம் வக்கரையே. 3

3441. நெய்யணி சூலமொடு நிறை வெண்மழு வும்மரவும்
கையணி கொள்கையினான் கனல் மேவிய ஆடலினான்
மெய்யணி வெண்பொடியான் விரி கோவண ஆடையின்மேல்
மையணி மாமிடற்றா னுறை யும்மிடம் வக்கரையே. 4

3442. ஏனவெண் கொம்பினொடு மிள ஆமையும் பூண்டுகந்து
கூனிள வெண்பிறையுங் குளிர் மத்தமுஞ் சூடிநல்ல
மானன மென்விழியா ளொடும் வக்கரை மேவியவன்
தானவர் முப்புரங்க ளெரி செய்த தலைமகனே. 5

3443. கார்மலி கொன்றையொடுங் கதிர் மத்தமும் வாளரவும்
நீர்மலி யுஞ்சடைமேல் நிரம் பாமதி சூடிநல்ல
வார்மலி மென்முலையா ளொடும் வக்கரை மேவியவன்
பார்மலி வெண்டலையிற் பலி கொண்டுழல் பான்மையனே. 6

3444. கானண வும்மறிமா னொரு கையதோர் கைமழுவாள்
தேனண வுங்குழலா ளுமை சேர்திரு மேனியினான்
வானண வும்பொழில்சூழ் திரு வக்கரை மேவியவன்
ஊனண வுந்தலையிற் பலி கொண்டுழ லுத்தமனே. 7

3445. இலங்கையர் மன்னனாகி யெழில் பெற்றஇ ராவணனைக்
கலங்கவோர் கால்விரலாற் கதிர் பொன்முடி பத்தலற
நலங்கெழு சிந்தையனா யருள் பெற்றலு நன்களித்த
வலங்கெழு மூவிலைவே லுடை யானிடம் வக்கரையே. 8

3446. காமனை யீடழித்திட் டவன் காதலி சென்றிரப்பச்
சேமமே யுன்றனக்கென் றருள் செய்தவன் தேவர்பிரான்
சாமவெண் டாமரைமே லய னுந்தர ணியளந்த
வாமன னும்மறியா வகை யானிடம் வக்கரையே. 9

3447. மூடிய சீவரத்தர் முதிர் பிண்டிய ரென்றிவர்கள்
தேடிய தேவர்தம்மா லிறைஞ் சப்படுந் தேவர்பிரான்
பாடிய நான்மறையன் பலிக் கென்றுபல் வீதிதொறும்
வாடிய வெண்டலைகொண் டுழல் வானிடம் வக்கரையே. 10

3448. தண்புன லும்மரவுஞ் சடை மேலுடை யான்பிறைதோய்
வண்பொழில் சூழ்ந்தழகா ரிறை வன்னுறை வக்கரையைச்
சண்பையர் தந்தலைவன் தமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 61. திருவெண்டுறை : பண் – பஞ்சமம்

3449. ஆதிய னாதிரையன் னன லாடிய ஆரழகன்
பாதியோர் மாதினொடும் பயி லும்பர மாபரமன்
போதிய லும்முடிமேற் புன லோடர வம்புனைந்த
வேதியன் மாதிமையால் விரும் பும்மிடம் வெண்டுறையே. 1

3450. காலனை யோருதையில் லுயிர் வீடுசெய் வார்கழலான்
பாலொடு நெய்தயிரும் பயின் றாடிய பண்டரங்கன்
மாலைம தியொடுநீ ரர வம்புனை வார்சடையான்
வேலன கண்ணியொடும் விரும் பும்மிடம் வெண்டுறையே. 2

3451. படைநவில் வெண்மழுவான் பல பூதப்ப டையுடையான்
கடைநவில் மும்மதிலும் மெரி யூட்டிய கண்ணுதலான்
உடைநவி லும்புலித்தோ லுடை யாடையி னான்கடிய
விடைநவி லுங்கொடியான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 3

3452. பண்ணமர் வீணையினான் பர விப்பணி தொண்டர்கள்தம்
எண்ணமர் சிந்தையினா னிமை யோர்க்கு மறிவரியான்
பெண்ணமர் கூறுடையான் பிர மன்தலை யிற்பலியான்
விண்ணவர் தம்பெருமான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 4

3453. பாரிய லும்பலியான் படி யார்க்கு மறிவரியான்
சீரிய லும்மலையா ளொரு பாகமுஞ் சேரவைத்தான்
போரிய லும்புரமூன் றுடன் பொன்மலை யேசிலையா
வீரிய நின்றுசெய்தான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 5

3454. ஊழிக ளாயுலகா யொரு வர்க்கு முணர்வரியான்
போழிள வெண்மதியும் புன லும்மணி புன்சடையான்
யாழின் மொழியுமையாள் வெரு வவ்வெழில் வெண்மருப்பின்
வேழ முரித்தபிரான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 6

3455. கன்றிய காலனையும் முரு ளக்கனல் வாயலறிப்
பொன்றமுன் நின்றபிரான் பொடி யாடிய மேனியினான்
சென்றிமை யோர்பரவுந் திகழ் சேவடி யான்புலன்கள்
வென்றவ னெம்மிறைவன் விரும் பும்மிடம் வெண்டுறையே. 7

3456. கரமிரு பத்தினாலுங் கடு வன்சின மாயெடுத்த
சிரமொரு பத்துமுடை யரக் கன்வலி செற்றுகந்தான்
பரவவல் லார்வினைக ளறுப் பானொரு பாகமும்பெண்
விரவிய வேடத்தினான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 8

3457. கோல மலரயனுங் குளிர் கொண்டல் நிறத்தவனும்
சீல மறிவரிதாய்த் திகழ்ந் தோங்கிய செந்தழலான்
மூல மதாகிநின்றான் முதிர் புன்சடை வெண்பிறையான்
வேலை விடமிடற்றான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 9

3458. நக்குரு வாயவருந் துவ ராடைந யந்துடையாம்
பொக்கர்கள் தம்முரைகள் ளவை பொய்யென எம்மிறைவன்
திக்கு நிறைபுகழார் தரு தேவர்பி ரான்கனகம்
மிக்குயர் சோதியவன் விரும் பும்மிடம் வெண்டுறையே. 10

3459. திண்ணம ரும்புரிசைத் திரு வெண்டுறை மேயவனைத்
தண்ணம ரும்பொழில்சூழ் தரு சண்பையர் தந்தலைவன்
எண்ணமர் பல்கலையா னிசை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணமர் பாடல்வல்லார் வினை யாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 62. திருப்பனந்தாள் : பண் . பஞ்சமம்

3460. கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலோர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூர்
தண்பொழில் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 1

3461. விரித்தவன் நான்மறையை மிக்க விண்ணவர் வந்திறைஞ்ச
எரித்தவன் முப்புரங்கள் எரிய லேழுல கில்லுயிரும்
பிரித்தவன் செஞ்சடைமேல் நிறை பேரொலி வெள்ளந்தன்னைத்
தரித்தவ னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 2

3462. உடுத்தவன் மானுரிதோல் கழ லுள்கவல் லார்வினைகள்
கெடுத்தருள் செய்யவல்லான் கிளர் கீதமோர் நான்மறையான்
மடுத்தவன் நஞ்சமுதா மிக்க மாதவர் வேள்வியைமுன்
தடுத்தவ னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 3

3463. சூழ்தரு வல்வினையும் முடல் தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் மனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 4

3464. விடம்படு கண்டத்தினா னிருள் வெள்வளை மங்கையொடும்
நடம்புரி கொள்கையினா னவ னெம்மிறை சேருமிடம்
படம்புரி நாகமொடு திரை பன்மணி யுங்கொணரும்
தடம்புனல் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 5

3465. விடையுயர் வெல்கொடியா னடி விண்ணொடு மண்ணுமெல்லாம்
புடைபட ஆடவல்லான் மிகு பூதமார் பல்படையான்
தொடைநவில் கொன்றையொடு வன்னி துன்னெருக் கும்மணிந்த
சடையவ னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 6

3466. மலையவன் முன்பயந்த மட மாதையோர் கூறுடையான்
சிலைமலி வெங்கணையாற் புர மூன்றவை செற்றுகந்தான்
அலைமலி தண்புனலும் மதி யாடர வும்மணிந்த
தலையவ னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 7

3467. செற்றரக் கன்வலியைத் திரு மெல்விர லாலடர்த்து
முற்றும்வெண் ணீறணிந்த திரு மேனியன் மும்மையினான்
புற்றர வம்புலியின் னுரி தோலொடு கோவணமும்
தற்ற வ னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 8

3468. வின்மலை நாணரவம் மிகு வெங்கன லம்பதனால்
புன்மைசெய் தானவர்தம் புரம் பொன்றுவித் தான்புனிதன்
நன்மலர் மேலயனுந் நண்ணு நாரண னும்மறியாத்
தன்மைய னூர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 9

3469. ஆதர் சமணரொடும் மடை யைந்துகில் போர்த்துழலும்
நீத ருரைக்குமொழி யவை கொள்ளன்மின் நின்மலனூர்
போதவிழ் பொய்கைதனுள் திகழ் புள்ளிரி யப்பொழில்வாய்த்
தாதவி ழும்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 10

3470. தண்வயல் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரத்துக்
கண்ணைய லேபிறையா னவன் றன்னைமுன் காழியர்கோன்
நண்ணிய செந்தமிழால் மிகு ஞானசம் பந்தன்நல்ல
பண்ணியல் பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருச்செங்காட்டங்குடி : பண் – பஞ்சமம்

3471. பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே. 1

3472. பொன்னம்பூங் கழிக்கானற் புணர்துணையோ டுடன்வாழும்
அன்னங்கா ளன்றில்கா ளகன்றும்போய் வருவீர்கள்
கன்னவில்தோள் சிறுத்தொண்டன் கணபதீச் சரமேய
இன்னமுத னிணையடிக்கீ ழெனதல்ல லுரையீரே. 2

3473. குட்டத்துங் குழிக்கரையுங் குளிர்பொய்கைத் தடத்தகத்தும்
இட்டத்தா லிரைதேரு மிருஞ்சிறகின் மடநாராய்
சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வட்டவார் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 3

3474. கானருகும் வயலருகுங் கழியருகுங் கடலருகும்
மீனிரிய வருபுனலி லிரைதேர்வெண் மடநாராய்
தேனமர்தார்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வானமருஞ் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 4

3475. ஆரலாஞ் சுறவமேய்ந் தகன்கழனிச் சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச் சிறுகுருகே பயில்தூவி மடநாராய்
சீருலாஞ் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
நீருலாஞ் சடையார்க்கென் நிலைமைசென் றுரையீரே. 5

3476. குறைக்கொண்டா ரிடர்தீர்த்தல் கடனன்றே குளிர்பொய்கைத்
துறைக்கெண்டை கவர்குருகே துணைபிரியா மடநாராய்
கறைக்கண்டன் பிறைச்சென்னிக் கணபதீச் சரமேய
சிறுத்தொண்டன் பெருமான்சீ ரருளொருநாட் பெறலாமே. 6

3477. கருவடிய பசுங்கால்வெண் குருகேயொண் கழிநாராய்
ஒருஅடியா ளிரந்தாளென் றொருநாட்சென் றுரையீரே
செருவடிதோட் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
திருவடிதன் திருவருளே பெறலாமோ திறத்தவர்க்கே. 7

3478. கூரார வின்தேர்ந்து குளமுலவி வயல்வாழும்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்ற னருளொருநாட் பெறலாமே. 8

3479. நறப்பொலிபூங் கழிக்கானல் நவில்குருகே யுலகெல்லாம்
அறப்பலிதேர்ந் துழல்வார்க்கென் னலர்கோட லழகியதே
சிறப்புலவன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பிறப்பிலிபேர் பிதற்றிநின் றிழக்கோவெம் பெருநலமே. 9

3480. செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்கோரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 64. திருப்பெருவேளூர் : பண் – பஞ்சமம்

3481. அண்ணாவுங் கழுக்குன்று மாயமலை யவைவாழ்வார்
விண்ணோரு மண்ணோரும் வியந்தேத்த அருள்செய்வார்
கண்ணாவா ருலகுக்குக் கருத்தானார் புரமெரித்த
பெண்ணாணாம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 1

3482.கருமானி னுரியுடையர் கரிகாட ரிமவானார்
மருமானா ரிவரென்று மடவாளோ டுடனாவர்
பொருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்
பெருமானார் பிஞ்ஞகனார் பெருவேளூர் பிரியாரே. 2

3483.குணக்குந்தென் திசைக்கண்ணுங் குடபாலும் வடபாலும்
கணக்கென்ன அருள்செய்வார் கழிந்தோர்க்கு மொழிந்தோர்க்கும்
வணக்கஞ்செய் மனத்தராய் வணங்காதார் தமக்கென்றும்
பிணக்கஞ்செய் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 3

3484.இறைக்கொண்ட வளையாளோ டிருகூறா யொருகூறு
மறைக்கண்டத் திறைநாவர் மதிலெய்த சிலைவலவர்
கறைக்கொண்ட மிடறுடையர் கனல்கிளருஞ் சடைமுடிமேல்
பிறைக்கொண்ட பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 4

3485.விழையாதார் விழைவார்போல் விகிர்தங்கள் பலபேசிக்
குழையாதர்ர் குழைவார்போற் குணநல்ல பலகூறி
அழையாவு மரற்றாவு மடிவீழ்வார் தமக்கென்றும்
பிழையாத பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 5

3486.விரித்தர்ர்நான் மறைப்பொருளை யுமையஞ்ச விறல்வேழம்
உரித்தாரா முரிபோர்த்து மதில்மூன்று மொருகணையால்
எரித்தாரா மிமைப்பளவி லிமையோர்கள் தொழுதிறைஞ்சப்
பெருத்தாரெம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 6

3487.மறப்பிலா அடிமைக்கண் மனம்வைப்பார் தமக்கெல்லாம்
சிறப்பிலார் மதிலெய்த சிலைவல்லா ரொருகணையால்
இறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றுங் கேடிலார்
பிறப்பிலாப் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 7

3488.எரியார்வேற் கடற்றானை யிலங்கைக்கோன் தனைவீழ
முரியார்ந்த தடந்தோள்க ளடர்த்துகந்த முதலாளர்
வரியார்வெஞ் சிலைபிடித்து மடவாளை யொருபாகம்
பிரியாத பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 8

3489.சேணியலு நெடுமாலுந் திசைமுகனுஞ் செருவெய்திக்
காணியல்பை யறிவிலராய்க் கனல்வண்ண ரடியிணைக்கீழ்
நாணியவர் தொழுதேத்த நாணாமே யருள்செய்து
பேணியஎம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 9

3490. புற்றேறி யுணங்குவார் புகையார்ந்த துகிர்போர்ப்பார்
செற்றேற வேண்டாநீர் தொழுமின்கள் சுடர்வண்ணம்
மற்றோரும் பரிமாவு மதகளிறும் மிவையொழியப்
பெற்றேறும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 10

3491. பைம்பொன்சீர் மணிவாரிப் பலவுஞ்சேர் கனியுந்தி
அம்பொன்செய் மடவரலா ரணிமல்கு பெருவேளூர்
நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான
சம்பந்தன் தமிழ்வல்லார்க் கருவினைநோய் சாராவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. திருக்கச்சிநெறிக்காரைக்காடு : பண் – பஞ்சமம்

3492. வாரணவு முலைமங்கை பங்கினரா யங்கையினில்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 1

3493. காருருமணிமிடற்றார் கரிகாட ருடைதலைகொண்
டூருரன் பலிக்குழல்வா ருழைமானி னுரியதளர்
தேருரு நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
நீருரு மலர்ப்பொய்கைநெறிக்காரைக் காட்டாரே. 2

3494. கூறணிந்தார் கொடியிடையைக் குளிர்சடைமே லிளமதியோ
டாறணிந்தா ராடரவம் பூண்டுகந்தா ரான்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மே லென்பணிந்தார் வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 3

3495. பிறைநவின்ற செஞ்சடைகள் பின்தாழப் பூதங்கள்
மறைநவின்ற பாடலோ டாடலராய் மழுவேந்திச்
சிறைநவின்ற வண்டினங்கள் தீங்கனிவாய்த் தேன்கதுவும்
நிறைநவின்ற கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 4

3496. அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த அருளாளர்
குன்றாத வெஞ்சிலையிற் கோளரவ நாண்கொளுவி
ஒன்றாதார் புரமூன்று மோங்கெரியில் வெந்தவிய
நின்றாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 5

3497. பன்மலர்கள் கொண்டடிக்கீழ் வானோர்கள் பணிந்திறைஞ்ச
நன்மையிலா வல்லவுணர் நகர்மூன்று மொருநொடியில்
வின்மலையின் நாண்கொளுவி வெங்கணையா லெய்தழித்த
நின்மலனார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 6

3498. புற்றிடைவா ளரவினொடு புனைகொன்றை மதமத்தம்
எற்றொழியா அலைபுனலோ டிளமதிய மேந்துசடைப்
பெற்றுடையா ரொருபாகம் பெண்ணுடையார் கண்ணமரும்
நெற்றியினார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 7

3499. ஏழ்கடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை யெழில்வரைவாய்த்
தாழ்விரலா லூன்றியதோர் தன்மையினார் நன்மையினார்
ஆழ்கிடங்குஞ் சூழ்வயலு மதில்புல்கி யழகமரும்
நீள்மறுகிற் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 8

3500. ஊண்டானு மொலிகடல்நஞ் சுடைதலையிற் பலிகொள்வர்
மாண்டார்தம் மெலும்பணிவர் வரியரவோ டெழிலாமை
பூண்டாரு மோரிருவ ரறியாமைப் பொங்கெரியாய்
நீண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 9

3501. குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை மெய்போர்த்து
மிண்டாடித் திரிதருவா ருரைப்பனகள் மெய்யல்ல
வண்டாருங் குழலாளை வரையாகத் தொருபாகங்
கண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 10

3502. கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருவேட்டக்குடி : பண் – பஞ்சமம்

3503. வண்டிரைக்கும் மலர்க்கொன்றை விரிசடைமேல் வரியரவம்
கண்டிரைக்கும் பிறைச்சென்னிக் காபாலி கனைகழல்கள்
தொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத் துளங்கொளிநீர்ச் சுடர்ப்பவளம்
தெண்டிரைக்கள் கொணர்ந்தெறியுந் திருவேட்டக் குடியாரே. 1

3504. பாய்திமிலர் வலையோடு மீன்வாரிப் பயின்றெங்கும்
காசினியிற் கொணர்ந்தட்டுங் கைதல்சூழ் கழிக்கானல்
போயிரவிற் பேயோடும் புறங்காட்டிற் புரிந்தழகார்
தீயெரிகை மகிழ்ந்தாருந் திருவேட்டக் குடியாரே. 2

3505. தோத்திரமா மணலிலிங்கந் தொடங்கியஆன் நிரையிற்பால்
பாத்திரமா ஆட்டுதலும் பரஞ்சோதி பரிந்தருளி
ஆத்தமென மறைநால்வர்க் கறம்புரிநூ லன்றுரைத்த
தீர்த்தமல்கு சடையாருந் திருவேட்டக் குடியாரே. 3

3506. கலவஞ்சேர் கழிக்கானல் கதிர்முத்தங் கலந்தெங்கும்
அலவஞ்சே ரணைவாரிக் கொணர்ந்தெறியு மகன்றுறைவாய்
நிலவஞ்சேர் நுண்ணிடைய நேரிழையா ளவளோடும்
திலகஞ்சேர் நெற்றியினார் திருவேட்டக் குடியாரே. 4

3507. பங்கமார் கடலலறப் பரவரையோ டரவுழலச்
செங்கண்மால் கடையஎழு நஞ்சருந்துஞ் சிவமூர்த்தி
அங்கநான் மறைநால்வர்க் கறம்பொருளின் பயனளித்த
திங்கள்சேர் சடையாருந் திருவேட்டக் குடியாரே. 5

3508. நா்வாய பிறைச்சென்னி நலந்திகழு மிலங்கிப்பி
கோவாத நித்திலங்கள் கொணர்ந்தெறியுங் குளிர்கானல்
ஏவாரும் வெஞ்சிலையா லெயில்மூன்று மெரிசெய்த
தேவாதி தேவனார் திருவேட்டக் குடியாரே. 6

3509. பானிலவும் பங்கயத்துப் பைங்கானல் வெண்குருகு
கானிலவு மலர்ப்பொய்கைக் கைதல்சூழ் கழிக்கானல்
மானின்விழி மலைமகளோ டொருபாகம் பிரிவரியார்
தேனிலவு மலர்ச்சோலைத் திருவேட்டக் குடியாரே. 7

3510. துறையுலவு கடலோதஞ் சுரிசங்க மிடறிப்போய்
நறையுலவும் பொழிற்புன்னை நன்னீழற் கீழமரும்
இறைபயிலு மிராவணன்றன் தலைபத்து மிருபதுதோள்
திறலழிய அடர்த்தாருந் திருவேட்டக் குடியாரே. 8

3511. அருமறைநான் முகத்தானு மகலிடநீ ரேற்றானும்
இருவருமா யளப்பரிய எரியுருவாய் நீண்டபிரான்
வருபுனலின் மணியுந்தி மறிதிறையார் சுடர்ப்பவளத்
திருவுருவில் வெண்ணீற்றார் திருவேட்டக் குடியாரே. 9

3512. இகழ்ந்துரைக்குஞ் சமணர்களு மிடும்போர்வைச் சாக்கியரும்
புகழ்ந்துரையாப் பாவிகள்சொற் கொள்ளேன்மின் பொருளென்ன
நிகழ்ந்திலங்கு வெண்மணலி னிறைத் துண்டப் பிறைக்கற்றை
திகழ்ந்திலங்கு செஞ்சடையார் திருவேட்டக் குடியாரே. 10

3513. தெண்டிரைசேர் வயலுடுத்த திருவேட்டக் குடியாரைத்
தண்டலைசூழ் கலிக்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்டமிழ்நா லிவைபத்து முணர்ந்தேத்த வல்லார்போய்
உண்டுடுப்பில் வானவரோ டுயர்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 67. திருப்பிரமபுரம் : வழிமொழித்திருவிராகம். பண்– சாதாரி

3514. சுரருலகு நரர்கள்பயில் தரணிதல முரணழிய அரணமதில்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள் கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள் வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணை பரவவளர் பிரமபுரமே.1

3515. தாணுமிகு வாணிசைகொள் தாணுவியர் பேணுமது காணுமளவிற்
கோணுநுதல் நீள்நயனி கோணில்பிடி மாணிமது நாணும்வகையே
ஏணுகரி பூணழிய வாணியல்கொள் மாணிபதி சேணமரர்கோன்
வேணுவினை யேணிநகர் காணிறிவி காணநடு வேணுபுரமே. 2

3516. பகலொளிசெய் நகமணியை முகைமலரை நிகழ்சரண வகவுமுனிவர்க்
ககலமலி சகலகலை மிகவுரைசெய் முகமுடைய பகவனிடமாம்
பகைகளையும் வகையிலறு முகஇறையை மிகஅருள நிகரிலிமையோர்
புகவுலகு புகழஎழில் திகழநிகழலர்பெருகு புகலிநகரே. 3

3517. அங்கண்மதி கங்கைநதி வெங்கணர வங்களெழில் தங்குமிதழித்
துங்கமலர் தங்குசடை யங்கிநிக ரெங்களிறை தங்குமிடமாம்
வெங்கதிர்வி ளங்குலக மெங்குமெதிர் பொங்கெரிபு லன்கள்களைவோர்
வெங்குருவி ளங்கியுமை பங்கர்சரணங்கள்பணி வெங்குருவதே.4

3518. ஆணியல்பு காணவன வாணவியல் பேணியெதிர் பாணமழைசேர்
தூணியற நாணியற வேணுசிலை பேணியற நாணிவிசயன்
பாணியமர் பூணவருள் மாணுபிர மாணியிட மேணிமுறையிற்
பாணியுல காளமிக வாணின்மலி தோணிநிகர் தோணிபுரமே. 5

3519. நிராமய பராபர புராதன பராவுசிவ ராகவருளென்
றிராவுமெ திராயது பராநினை புராணனம ராதிபதியாம்
அராமிசை யிராதெழில் தராயர பராயண வராகவுருவா
தராயனை விராயெரி பராய்மிகு தராய்மொழி விராயபதியே. 6

3520. அரணையுறு முரணர்பலர் மரணம்வர விரணமதி லரமலிபடைக்
கரம்விசிறு விரகனமர் கரணனுயர் பரனெறிகொள் கரனதிடமாம்
பரவமுது விரவவிடல் புரளமுறு மரவையரி சிரமரியவச்
சிரமரன சரணமவை பரவவிரு சிரகமமர் சிரபுரமதே. 7

3521. அறமழிவு பெறவுலகு தெறுபுயவன் விறலழிய நிறுவிவிரன்மா
மறையினொலி முறைமுரல்செய் பிறையெயிற னுறஅருளு மிறைவனிடமாங்
குறைவின்மிக நிறைதையுழி மறையமரர் நிறையருள முறையொடுவரும்
புறவனெதிர் நிறைவுநிலவு பொறையனுடல் பெறவருளு புறவமதுவே.8

3522. விண்பயில மண்பகிரி வண்பிரம னெண்பெரிய பண்படை கொண்மால்
கண்பரியு மொண்பொழிய நுண்பொருள்கள் தண்புகழ்கொள் கண்டனிடமாம்
மண்பரியு மொண்பொழிய நுண்புசகர் புண்பயில விண்படரவச்
சண்பைமொழி பண்பமுனி கண்பழிசெய் பண்புகளை சண்பைநகரே. 9

3523. பாழியுறை வேழநிகர் பாழமணர் சூழுமுட லாளருணரா
ஏழினிசை யாழின்மொழி யேழையவள் வாழுமிறை தாழுமிடமாங்
கீழிசைகொள் மேலுலகில் வாழரசு சூழரசு வாழவரனுக்
காழியசில் காழிசெய வேழுலகி லூழிவளர் காழிநகரே. 10

3624. நச்சரவு கச்செனவ சைச்சுமதி யுச்சியின்மி லைச்சொருகையான்
மெய்ச்சிர மணைச்சுலகி னிச்சமிடு பிச்சையமர் பிச்சனிடமாம்
மச்சமத நச்சிமத மச்சிறுமி யைச்செய்தவ வச்சவிரதக்
கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்கள் நச்சிமிடை கொச்சைநகரே. 11

3525. ஒழுகலரி தழிகலியி லூழியுலகு பழிபெருகு வழியை நினையா
முழுதுடலி லெழுமயிர்கள் தழுவுமுனி குழுவினொடு கெழுவுசிவனைத்
தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள் மொழிதகையவே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருக்கயிலாயம் : திருவிராகம். பண் – சாதாரி

3526. வாளவரி கோளபுலி கீளதரி தாளின்மிசை நாளுமகிழ்வர்
ஆளுமவர் வேளநகர் போளயில கோளகளி றாளிவரவில்
தோளமரர் தாளமதர் கூளியெழ மீளிமிளிர் தூளிவளர்பொன்
காளமுகில் மூளுமிருள் கீளவிரி தாளகயி லாயமலையே. 1

3527. புற்றரவு பற்றியகை நெற்றியது மற்றொருக ணொற்றைவிடையன்
செற்றதெயி லுற்றதுமை யற்றவர்கள் நற்றுணைவ னுற்றநகர்தான்
சுற்றுமணி பெற்றதொளி செற்றமொடு குற்றமில தெற்றெனவினாய்க்
கற்றவர்கள் சொற்றொகையின் முற்றுமொளி பெற்றகயி லாயமலையே. 2

3528. சிங்கவரை மங்கையர்கள் தங்களன செங்கைநிறை கொங்குமலர்தூய்,
எங்கள்வினை சங்கையவை இங்ககல வங்கமொழி யெங்குமுளவாய்த்
திங்களிருள் நொங்கவொளி விங்கிமிளிர் தொங்கலொடு தங்கவயலே
கங்கையாடு பொங்குசடை யெங்களிறை தங்குகயி லாயமலையே. 3

3529. முடியசடை பிடியதொரு வடியமழு வுடையர்செடி யுடையதலையில்
வெடியவினை கொடியர்கெட விடுசில்பலி நொடியமகி ழடிகளிடமாம்
கொடியகுர லுடையவிடை கடியதுடி யடியினொடு மிடியினதிரக்
கடியகுரல் நெடியமுகில் மடியவத ரடிகொள்கயி லாயமலையே. 4

3530. குடங்கையி னுடங்கெரி தொடர்ந்தெழ விடங்கிளர் படங்கொளரவம்
மடங்கொளி படர்ந்திட நடந்தரு விடங்கன திடந்தண் முகில்போய்த்
தடங்கடல் தொடர்ந்துட னுடங்குவ விடங்கொளமி டைந்தகுரலால்
கடுங்கலின் முடங்களை நுடங்கர வொடுங்கயி லாயமலையே. 5

3531. ஏதமில பூதமொடு கோதைதுணை யாதிமுதல் வேதவிகிர்தன்
கீதமொடு நீதிபல வோதிமற வாதுபயில் நாதன்நகர்தான்
தாதுபொதி போதுவிட வூதுசிறை மீதுதுளி கூதனலியக்
காதல்மிகு சோதிகிளர் மாதுமயில் கோதுகயி லாயமலையே. 6

3532. சென்றுபல வென்றுலவு புன்றலையர் துன்றலொடு மொன்றியுடனே
நின்றமர ரென்றுமிறை வன்றனடி சென்றுபணி கின்றநகர்தான்
துன்றுமலர் பொன்றிகழ்செய் கொன்றைவிரை தென்றலொடு சென்றுகமழக்
கன்றுபிடி துன்றுகளி றென்றிவை முன் னின்றகயி லாயமலையே.7

3533. மருப்பிடை நெருப்பெழு தருக்கொடு செருச்செய்த பருத்தகளிறின்
பொருப்பிடை விருப்புற விருக்கையை யொருக்குட னரக்கனுணரா
தொருத்தியை வெருக்குற வெருட்டலு நெருக்கென நிருத்தவிரலால்
கருத்தில வொருத்தனை யெருத்திற நெரித்தகயி லாயமலையே.8

3534. பரியதிரை பொயபுனல் வரியபுலி யுரியதுடை பரிசையுடையான்
வரியவளை யரியகணி யுருவினொடு புரிவினவர் பிரிவில்நகர்தான்
பெரியஎரி யுருவமது தெரியவுரு பரிவுதரு மருமையதனால்
கரியவனு மரியமறை புரியவனு மருவுகயி லாயமலையே. 9

3535. அண்டர்தொழு சண்டிபணி கண்டடிமை கொண்டவிறை துண்டமதியோ
டிண்டைபுனை வுண்டசடை முண்டதர சண்டஇருள் கண்டரிடமாம்
குண்டமண வண்டரவர் மண்டைகையி லுண்டுளறி மிண்டுசமயம்
கண்டவர்கள் கொண்டவர்கள் பண்டுமறி யாதகயி லாயமலையே. 10

3536. அந்தண்வரை வந்தபுனல் தந்ததிரை சந்தனமொ டுந்தியகிலும்
கந்தமலர் கொந்தினொடு மந்திபல சிந்துகயி லாயமலைமேல்
எந்தையடி வந்தணுகு சந்தமொடு செந்தமி ழிசைந்தபுகலிப்
பந்தனுரை சிந்தைசெய வந்தவினை நைந்துபர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 69. திருக்காளத்தி : திருவிராகம். பண் – சாதாரி

3537. வானவர்கள் தானவர்கள் வாதைபட வந்ததொரு மாகடல்விடம்
தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவில்
ஏனமின மானினொடு கிள்ளிதினை கொள்ளஎழி லார்கவணினால்
கானவர்த மாமகளிர் கனகமணி விலகுகா ளத்திமலையே. 1

3538. முதுசினவி லவுணர்புரம் மூன்றுமொரு நொடிவரையின் மூளஎரிசெய்
சதுரர்மதி பொதிசடையர் சங்கரர்வி ரும்புமலை தன்னைவினவில்
எதிரெதிர வெதிர்பிணைய எழுபொறிகள் சிதறஎழி லேனமுழுத
கதிர்மணியின் வளரொளிக ளிருளகல நிலவுகா ளத்திமலையே. 2

3539. வல்லைவரு காளியைவ குத்துவலி யாகிமிகு தாரகனைநீ
கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை கூறிவினவில்
பல்பல இருங்கனி பருங்கிமிக வுண்டவை நெருங்கியினமாய்க்
கல்லதிர நின்றுகரு மந்திவிளை யாடுகா ளத்திமலையே. 3

3540. வேயனைய தோளுமையொர் பாகமது வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடில்நட மாடிமலை தன்னைவினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே. 4

3541. மலையின்மிசை தனில்முகில்போல் வருவதொரு மதகரியை மழைபோலலறக்
கொலைசெய்துமை யஞ்சவுரி போர்த்தசிவன் மேவுமலை கூறிவினவில்
அலைகொள்புன லருவிபல சுனைகள்வழி யிழியவயல் நிலவுமுதுவேய்
கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை சிந்துகா ளத்திமலையே.5

3542.பாரகம் விளங்கிய பகீரத னருந்தவ முயன்றபணிகண்
டாரருள் புரிந்தலைகொள் கங்கைசடை யேற்றஅரன் மலையைவினவில்
வாரத ரிருங்குறவர் சேவலின் மடுத்தவ ரெரித்தவிறகில்
காரகி லிரும்புகை விசும்புகமழ் கின்றகா ளத்திமலையே. 6

3543. ஆருமெதி ராதவலி யாகியச லந்தரனை யாழியதனால்
ஈரும்வகை செய்தருள் புரிந்தவ னிருந்தமலை தன்னைவினவில்
ஊருமர வம்மொழிகொள் மாமணியு மிழந்தவையு லாவிவரலால்
காரிருள் கடிந்துகன கம்மெனவி ளங்குகா ளத்திமலையே. 7

3544. எரியனைய சுரிமயி ரிராவணனை யீடழிய எழில்கொள்விரலால்
பெரியவரை யூன்றியருள் செய்தசிவன் மேவுமலை பெற்றிவினவில்
வரியசிலை வேடுவர்க ளாடவர்கள் நீடுவரை யூடுவரலால்
கரியினொடு வரியுழுவை யரியினமும் வெருவுகா ளத்திமலையே.8

3545. இனதளவி லினதடி யிணையுமுடி யறிதுமென இகலுமிருவர்
தனதுருவ மறிவரிய சகலசிவன் மேவுமலை தன்னைவினவில்
புனவர்புன மயிலனைய மாதரொடு மைந்தரும ணம்புணருநாள்
கனகமென மலர்களணி வேங்கைகள் நிலாவுகா ளத்திமலையே. 9

3546. நின்றுகவ ளம்பலகொள் கையரொடு மெய்யிலிடு போர்வையரும்
நன்றியறி யாதவகை நின்றசிவன் மேவுமலை நாடிவினவில்
குன்றில்மலி துன்றுபொழில் நின்றகுளிர் சந்தின்முறி தின்றுகுலவிக்
கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை யாடுகா ளத்திமலையே. 10

3547. காடதிட மாகநட மாடுசிவன் மேவுகா ளத்திமலையை
மாடமொடு மாளிகைகள் நீடுவளர் கொச்சைவய மன்னுதலைவன்
நாடுபல நீடுபுகழ் ஞானசம் பந்தனுரை நல்லதமிழின்
பாடலொடு பாடமிசை வல்லவர்கள் நல்லர்பர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 70. திருமயிலாடுதுறை : திருவிராகம். பண் – சாதாரி

3548. ஏனவெயி றாடரவொ டென்புவரி யாமையிவை பூண்டிளைஞராய்க்
கானவரி நீடுழுவை யதளுடைய பட்டர்சடையர் காணியெனலாம்
ஆனபுகழ் வேதியர்க ளாகுதியின் மீதுபுகை போகியழகார்
வானமுறு சோலைமிசை மாசுபட மூசுமயி லாடுதுறையே. 1

3549. அந்தண்மதி செஞ்சடைய ரங்கணெழில் கொன்றையொ டணிந்தழகராம்
எந்தமடி கட்கினிய தானமது வேண்டிலெழி லார்பதியதாம்
கந்தமலி சந்தினொடு காரகிலும் வாரிவரு காவிரியுளால்
வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர் சிந்துமயி லாடுதுறையே. 2

3550. தோளின்மிசை வரியரவ நஞ்சழல வீக்கிமிகு நோக்கரியராய்
மூளைபடு வெண்டலையி லுண்டுமுது காடுறையு முதல்வரிடமாம்
பாளைபடு பைங்கமுகு செங்கனி யுதிர்த்திட நிரந்துகமழ்பூ
வாளைகுதி கொள்ளமடல் விரியமண நாறுமயி லாடுதுறையே.3

3551. ஏதமில ரரியமறை மலையர்மக ளாகியஇ லங்குநுதலொண்
பேதைதட மார்பதிட மாகவுறை கின்றபெரு மானதிடமாம்
காதல்மிகு கவ்வையொடு மவ்வலவை கூடிவரு காவிரியுளால்
மாதர்மறி திரைகள்புக வெறியவெறி கமழுமயி லாடுதுறையே.4

3552. பூவிரி கதுப்பின்மட மங்கையர கந்தொறு நடந்துபலிதேர்
பாவிரி யிசைக்குரிய பாடல்பயி லும்பரமர் பழமையெனலாம்
காவிரி நுரைத்திரு கரைக்குமணி சிந்தவரி வண்டுகவர
மாவிரி மதுக்கிழிய மந்திகுதி கொள்ளுமயி லாடுதுறையே. 5

3553. கடந்திகழ் கருங்களி றுரித்துமையு மஞ்சமிக நோக்கரியராய்
விடந்திகழு மூவிலைநல் வேலுடைய வேதியர் விரும்புமிடமாம்
தொடர்ந்தொளிர் கிடந்ததொரு சோதிமிகு தொண்டையெழில் கொண்டதுவர்வாய்
மடந்தையர் குடைந்தபுனல் வாசமிக நாறுமயி லாடுதுறையே.6

3554. அவ்வதிசை யாருமடி யாருமுள ராகஅருள் செய்தவர்கள்மேல்
எவ்வமற வைகலு மிரங்கியெரி யாடுமெம தீசனிடமாம்
கவ்வையொடு காவிரிக லந்துவரு தென்கரை நிரந்துகமழ்பூ
மவ்வலொடு மாதவிம யங்கிமண நாறுமயி லாடுதுறையே. 7

3555. இலங்கைநகர் மன்னன்முடி யொருபதினொ டிருபதுதோள் நெரியவிரலால்
விலங்கலி லடர்த்தருள் புரிந்தவ ரிருந்தவிடம் வினவுதிர்களேல்
கலங்கல்நுரை யுந்தியெதிர் வந்தகய மூழ்கிமலர் கொண்டுமகிழா
மலங்கிவரு காவிரிநி ரந்துபொழி கின்றமயி லாடுதுறையே. 8

3556. ஒண்டிறலின் நான்முகனு மாலுமிக நேடியுண ராதவகையால்
அண்டமுற அங்கியுரு வாகிமிக நீண்டஅர னாரதிடமாம்
கெண்டையிரை கொண்டுகெளி றாருடனி ருந்துகிளர் வாயறுதல்சேர்
வண்டல்மண கெண்டிமட நாரைவிளை யாடுமயி லாடுதுறையே. 9

3557. மிண்டுதிற லமணரொடு சாக்கியரு மலர்தூற்ற மிக்க திறலோன்
இண்டைகுடி கொண்டசடை யெங்கள்பெரு மானதிட
மென்பரெழிலார்
தெண்டிரைப ரந்தொழுகு காவிரிய தென்கரை நிரந்துகமழ்பூ
வண்டவை திளைக்கமது வந்தொழுகு சோலைமயி லாடுதுறையே. 10

3558. நிணந்தமரு யானநில வானமதி யாததொரு சூலமொடுபேய்க்
கணந்தொழுக பாலிகழ லேத்திமிக வாய்த்ததொரு காதன்மையினால்
மணந்தண்மலி காழிமறை ஞானசம் பந்தன்மயி லாடுதுறையைப்
புணர்ந்ததமிழ் பத்துமிசை யாலுரைசெய் வார்பெறுவர்
பொன்னுலகமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 71. திருவைகாவூர் : திருவிராகம். பண் – சாதாரி

3559. கோழைமிட றாககவி கோளுமில வாகஇசை கூடும்வகையால்
ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொல்மகிழு மீசனிடமாம்
தாழையிள நீர்முதிய காய்கமுகின் வீழநிறை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிக ளூறிவயல் சேறுசெயும் வைகாவிலே. 1

3560. அண்டமுறு மேருவரை யங்கிகணை நாணரவ தாகவெழிலார்
விண்டவர்த முப்புரமெ ரித்தவிகிர் தன்னவன் விரும்புமிடமாம்
புண்டரிக மாமலர்கள் புக்குவிளை யாடுவயல் சூழ்தடமெலாம்
வண்டினிசை பாடஅழ கார்குயில்மி ழற்றுபொழில் வைகாவிலே.
2

3561. ஊனமில ராகியுயர் நற்றவமெய் கற்றவையு ணர்ந்த அடியார்
ஞானமிக நின்றுதொழ நாளுமருள் செய்யவல நாதனிடமாம்
ஆனவயல் சூழ்தருமல் சூழியரு கேபொழில்கள் தோறுமழகார்
வானமதி யோடுமழை நீள்முகில்கள் வந்தணவும் வைகாவிலே. 3

3562. இன்னவுரு இன்னநிற மென்றறிவ தேலரிது நீதிபலவும்
தன்னவுரு வாமெனமி குத்ததவன் நீதியொடு தானமர்விடம்
முன்னைவினை போய்வகையி னால்முழு துணர்ந்துமுயல் கின்றமுனிவர்
மன்னஇரு போதுமரு வித்தொழுது சேரும்வயல் வைகாவிலே. 4

3563. வேதமொடு வேள்விபல வாயினமி குத்துவிதி யாறுசமயம்
ஓதியுமு ணர்ந்துமுள தேவர்தொழ நின்றருள்செ யொருவனிடமாம்
மேதகைய கேதகைகள் புன்னையொடு ஞாழலவை மிக்கஅழகால்
மாதவிம ணங்கமழ வண்டுபல பாடுபொழில் வைகாவிலே. 5

3564. நஞ்சமுது செய்தமணி கண்டன்நமை யாளுடைய ஞானமுதல்வன்
செஞ்சடையி டைப்புனல்க ரந்தசிவ லோகனமர் கின்றஇடமாம்
அஞ்சுடரொ டாறுபத மேழினிசை யெண்ணரிய வண்ணமுளவாய்
மைஞ்சரொடு மாதர்பல ருந்தொழுது சேரும்வயல் வைகாவிலே. 6

3565. நாளுமிகு பாடலொடு ஞானமிகு நல்லமலர் வல்லவகையால்
தோளினொடு கைகுளிர வேதொழுமவர்க்கருள்செய் சோதியிடமாம்
நீளவளர் சோலைதொறு நாளிபல துன்றுகனி நின்றதுதிர
வாளைகுதி கொள்ளமது நாறமலர் விரியும்வயல் வைகாவிலே. 7

3566. கையிருப தோடுமெய்க லங்கிடவி லங்கலையெ டுத்தகடியோன்
ஐயிருசி ரங்களையொ ருங்குடநெ ரித்தஅழ கன்றனிடமாம்
கையின்மலர் கொண்டுநல காலையொடு மாலைகரு திப்பலவிதம்
வையகமெ லாமருவி நின்றுதொழு தேத்துமெழில் வைகாவிலே. 8

3567. அந்தமுத லாதிபெரு மானமரர் கோனையயன் மாலுமிவர்கள்
எந்தைபெரு மானிறைவ னென்றுதொழ நின்றருள்செ யீசனிடமாம்
சிந்தைசெய்து பாடுமடி யார்பொடிமெய் பூசியெழு தொண்டரவர்கள்
வந்துபல சந்தமலர் முந்தியணை யும்பதிநல் வைகாவிலே. 9

3568. ஈசனெமை யாளுடைய எந்தைபெரு மானிறைவ னென்றுதனையே
பேசுதல்செ யாஅமணர் புத்தரவர் சித்தமணை யாஅவனிடம்
தேசமதெ லாமருவி நின்றுபர வித்திகழ நின்றபுகழோன்
வாசமல ரானபல தூவியணை யும்பதிநல் வைகாவிலே. 10

3569.முற்றுநமை யாளுடைய முக்கணமுதல் வன்திருவை காவிலதனைச்
செற்றமலி னார்சிரபு ரத்தலைவன் ஞானசம்பந்த னுரைசெய்
உற்றதமிழ் மாலையீ ரைந்துமிவை வல்லவ ருருத்திரரெனப்
பெற்றமர லோகமிக வாழ்வர்பிரி யாரவர்பெ ரும்புகழொடே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருமாகறல் : திருவிராகம். பண் – சாதாரி

3570.விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகள் மாடமலி
நீடுபொழில் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர்
திங்களணி செஞ்சடையினான்
செங்கணவிடை யண்ணலடி சேர்பவர்கள்
தீவினைகள் தீருமுடனே. 1

3571.கலையினொலி மங்கையர்கள் பாடலொலி
யாடல்கவி னெய்தியழகார்
மலையின்நிகர் மாடமுயர் நீள்கொடிகள்
வீசுமலி மாகறலுளான்
இலையின்மலி வேல்நுனைய சூலம்வல
னேந்தியெரி புன்சடையினுள்
அலைகொள்புன லேந்துபெரு மானடியை
யேத்தவினை யகலுமிகவே. 2

3572.காலையொடு துந்துபிகள் சங்குகுழல்
யாழ்முழவு காமருவுசீர்
மாலைவழி பாடுசெய்து மாதவர்க
ளேத்திமகிழ் மாகறலுளான்
தோலையுடை பேணியதன் மேலொர்சுடர்
நாகமசை யாஅகழிதாப்
பாலையன நீறுபுனை வானடியை
யேத்தவினை பறையுமுடனே. 3

3573.இங்குகதிர் முத்தினொடு பொன்மணிக
ளுந்தியெழில் மெய்யுளுடனே
மங்கையரு மைந்தர்களு மன்னுபுன
லாடிமகிழ் மாகறலுளான்

கொங்குவளர் கொன்றைகுளிர் திங்களணி
செஞ்சடையி னானடியையே
நுங்கள்வினை தீரமிக ஏத்திவழி
பாடுநுக ராஎழுமினே. 4

3574.துஞ்சுநறு நீலமிருள் நீங்கவொளி
தோன்றுமது வார்கழனிவாய்
மஞ்சுமலி பூம்பொழிலின் மயில்கள்நட
மாடல்மலி மாகறலுளான்
வஞ்சமத யானையுரி போர்த்துமகிழ்
வானொர்மழு வாளன்வளரும்
நஞ்சமிருள் கண்டமுடை நாதனடி
யாரைநலி யாவினைகளே. 5

3575.மன்னுமறை யோர்களொடு பல்படிம
மாதவர்கள் கூடியுடனாய்
இன்னவகை யாலினிதி றைஞ்சியிமை
யோரிலெழு மாகறலுளான்
மின்னைவிரி புன்சடையின் மேல்மலர்கள்
கங்கையொடு திங்களெனவே
உன்னுமவர் தொல்வினைக ளொல்கவுயர்
வானுலக மேறலெளிதே. 6

3576.வெய்யவினை நெறிகள்செல வந்தணையு
மேல்வினைகள் வீட்டலுறுவீர்
மைகொள்விரி கானல்மது வார்கழனி
மாகறலு ளானெழிலதார்
கையகரி கால்வரையின் மேலதுரி
தோலுடைய மேனியழகார்
ஐயனடி சேர்பவரை அஞ்சியடை
யாவினைக ளகலுமிகவே. 7

3577.தூசுதுகில் நீள்கொடிகள் மேகமொடு
தோய்வனபொன் மாடமிசையே
மாசுபடு செய்கைமிக மாதவர்க
ளோதிமலி மாகறலுளான்
பாசுபத விச்சைவரி நச்சரவு
கச்சையுடை பேணியழகார்
பூசுபொடி யீசனென ஏத்தவினை
நிற்றலில போகுமுடனே. 8

3578. தூயவிரி தாமரைகள் நெய்தல்கழு
நீர்குவளை தோன்றமதுவுண்
பாயவரி வண்டுபல பண்முரலு
மோசைபயில் மாகறலுளான்
சாயவிர லூன்றியஇ ராவணன
தன்மைகெட நின்றபெருமான்
ஆயபுக ழேத்துமடி யார்கள்வினை
யாயினவு மகல்வதெளிதே. 9

3579. காலினல பைங்கழல்கள் நீள்முடியின்
மேலுணர்வு காமுறவினார்
மாலுமல ரானுமறி யாமையெரி
யாகியுயர் மாகறலுளான்
நாலுமெரி தோலுமுரி மாமணிய
நாகமொடு கூடியுடனாய்
ஆலும்விடை யூர்தியுடை யடிகளடி
யாரையடை யாவினைகளே. 10

3580. கடைகொள்நெடு மாடமிக வோங்குகமழ்
வீதிமலி காழியவர்கோன்
அடையும்வகை யாற்பரவி யரனையடி
கூடுசம் பந்தனுரையால்
மடைகொள்புன லோடுவயல் கூடுபொழில்
மாகறலு ளானடியையே
உடையதமிழ் பத்துமுணர் வாரவர்கள்
தொல்வினைக ளொல்குமுடனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 73. திருப்பட்டீச்சரம் : திருவிராகம். பண்–சாதாரி

3581. பாடல்மறை சூடல்மதி பல்வளையொர் பாகமதில் மூன்றொர் கணையால்
கூடஎரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில் சூழ்பழைசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசரம் மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை வீடுமவரே. 1

3582. நீரின்மலி புன்சடையர் நீளரவு கச்சையது நச்சிலையதோர்
கூரின்மலி சூலமது ஏந்தியுடை கோவணமு மானினுரிதோல்

காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள் காதல்செய்து மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழையை பட்டிசர மேத்தவினை பற்றழியுமே. 2

3583.காலைமட வார்கள்புன லாடுவது கௌவைகடி யார்மறுகெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ பாடியழ காயமலிசீர்ப்
பாலையன நீறுபுனை மார்பனுறை பட்டிசர மேபரவுவார்
மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி விண்ணுலக மாளுமவரே. 3

3584.கண்ணின்மிசை நண்ணியிழி விப்பமுக மேத்துகமழ் செஞ்சடையினான்
பண்ணின்மிசை நின்றுபல பாணிபட ஆடவல பான்மதியினான்
மண்ணின்மிசை நேரின்மழ பாடிமலி பட்டிசர மேமருவுவார்
விண்ணின்மிசை வாழுமிமை யோரொடுட னாதலது மேவலெளிதே. 4

3585.மருவமுழ வதிரமழ பாடிமலி மத்தவிழ வார்க்கஅரையார்
பருவமழை பண்கவர்செய் பட்டிசர மேயபடர் புன்சடையினான்
வெருவமத யானையுரி போர்த்துமையை அஞ்சவரு வெள்விடையினான்
உருவமெரி கழல்கள்தொழ வுள்ளமுடை யாரையடை யாவினைகளே. 5

3586.மறையினொலி கீதமொடு பாடுவன பூதமடி மருவிவிரவார்
பறையினொலி பெருகநிகழ் நட்டமமர் பட்டிசர மேயபனிகூர்
பிறையினொடு மருவியதொர் சடையினிடை யேற்றபுனல் தோற்றநிலையாம்
இறைவனடி முறைமுறையி னேத்துமவர் தீத்தொழில்க ளில்லர்மிகவே. 6

3587.பிறவிபிணி மூப்பினொடு நீங்கியிமை யோருலகு பேணலுறுவார்
துறவியெனு முள்ளமுடை யார்கள்கொடி வீதியழ காயதொகுசீர்
இறைவனுறை பட்டிசர மேத்தியெழு வார்கள்வினை யேதுமிலவாய்
நறவவிரை யாலுமொழி யாலும்வழி பாடுமற வாதவவரே. 7

3588.நேசமிகு தோள்வலவ னாதியிறை வன்மலையை நீக்கியிடலும்
நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுண ராதநிரம் பாமதியினான்
ஈசனுறை பட்டிசர மேத்தியெழு வார்கள்வினை யேதுமிலவாய்
நாசமற வேண்டுதலின் நண்ணலெளி தாமமரர் விண்ணுலகமே. 8

3589.தூயமல ரானுநெடி யானுமறி யாரவன தோற்றநிலையின்
ஏயவகை யானதனை யாரதறி வாரணிகொள் மார்பினகலம்
பாயநல நீறதணி வானுமைத னோடுமுறை பட்டிசரமே
மேயவன தீரடியு மேத்தஎளி தாகுநல மேலுலகமே. 9

3590.தடுக்கினையி டுக்கிமட வார்களிடு பிண்டமது வுண்டுழல்தரும்
கடுப்பொடியு டற்கவசர் கத்துமொழி காதல்செய்தி டாதுகமழ்சேர்
மடைக்கயல்வ யற்கொள்மழ பாடிநகர் நீடுபழை யாறையதனுள்
படைக்கொருக ரத்தன்மிகு பட்டிசர மேத்தவினை பற்றறுதலே. 10

3591.மந்தமலி சோலைமழ பாடிநகர் நீடுபழை யாறையதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசர மேயபடர் புன்சடையனை
அந்தண்மறை யோரினிது வாழ்புகலி ஞானசம் பந்தனணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல தொண்டர்வினை நிற்பதிலவே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. திருத்தேவூர் : திருவிராகம். பண்—சாதாரி

3592.காடுபயில் வீடுமுடை யோடுகலன் மூடுமுடை யாடைபுலிதோல்
தேடுபலி யூணதுடை வேடமிகு வேதியர் திருந்துபதிதான்
நாடகம தாடமஞ்ஞை பாடவரி கோடல்கைம றிப்பநலமார்
சேடுமிகு பேடையன மூடிமகிழ் மாடமிடை தேவூரதுவே. 1

3593.கோளரவு கொன்றைநகு வெண்டலையெ ருக்குவன்னி கொக்கிறகொடும்
வாளரவு தண்சலம கட்குலவு செஞ்சடைவ ரத்திறைவனூர்
வேளரவு கொங்கையிள மங்கையர்கள் குங்குமம்வி ரைக்குமணமார்
தேளரவு தென்றல்தெரு வெங்குநிறை வொன்றிவரு தேவூரதுவே. 2

3594.பண்தடவு சொல்லின்மலை வல்லியுமை பங்கனெமை யாளுமிறைவன்
எண்தடவு வானவரி றைஞ்சுகழ லோனினிதி ருந்தஇடமாம்
விண்தடவு வார்பொழிலு குத்தநற வாடிமலர் சூடிவிரையார்
செண்தடவு மாளிகைசெ றிந்துதிரு வொன்றிவளர் தேவூரதுவே. 3

3595.மாசில்மன நேசர்தம தாசைவளர் சூலதரன் மேலையிமையோர்
ஈசன்மறை யோதியெரி யாடிமிகு பாசுபதன் மேவுபதிதான்
வாசமலர் கோதுகுயில் வாசகமு மாதரவர் பூவைமொழியும்
தேசவொலி வீணையொடு கீதமது வீதிநிறை தேவூரதுவே. 4

3596.கானமுறு மான்மறிய னானையுரி போர்வைகன லாடல்புரிவோன்
ஏனஎயி றாமையிள நாகம்வளர் மார்பினிமை யோர்தலைவனூர்
வானணவு சூதமிள வாழைமகிழ் மாதவிப லாநிலவிவார்
தேனமுது வுண்டுவரி வண்டுமருள் பாடிவரு தேவூரதுவே. 5

3597.ஆறினொடு கீறுமதி யேறுசடை யேறனடை யார்நகர்கள்தான்
சீறுமவை வேறுபட நீறுசெய்த நீறன்நமை யாளுமரனூர்
வீறுமல ரூறுமது வேறிவளர் வாயவிளை கின்றகழனிச்
சேறுபடு செங்கயல்வி ளிப்பஇள வாளைவரு தேவூரதுவே. 6

3598.கன்றியெழ வென்றிநிகழ் துன்றுபுர மன்றவிய நின்றுநகைசெய்
என்றனது சென்றுநிலை யெந்தைதன தந்தையம ரின்பநகர்தான்
முன்றின்மிசை நின்றபல வின்கனிகள் தின்றுகற வைக்குருளைகள்
சென்றிசைய நின்றுதுளி யொன்றவிளை யாடிவளர் தேவூரதுவே. 7

3599.ஓதமலி கின்றுதென் னிலங்கையரை யன்மலிபு யங்கள்நெரியப்
பாதமலி கின்றவிர லொன்றினில டர்த்தபர மன்றனதிடம்
போதமலி கின்றமட வார்கள்நட மாடலொடு பொங்குமுரவம்
சேதமலி கின்றகரம் வென்றிதொழி லாளர்புரி தேவூரதுவே. 8

3600.வண்ணமுகி லன்னஎழி லண்ணலொடு சுண்ணமலி வண்ணமலர்மேல்
நண்ணவனு மெண்ணரிய விண்ணவர்கள் கண்ணவன் நலங்கொள்பதிதான்
வண்ணவன நுண்ணிடையி னெண்ணரிய அன்னநடை யின்மொழியினார்
திண்ணவண மாளிகைசெ றிந்தஇசை யாழ்மருவு தேவூரதுவே. 9

3601.பொச்சமமர் பிச்சைபயி லச்சமணு மெச்சமறு போதியருமா
மொச்சைபயி லிச்சைகடி பிச்சன்மிகு நச்சரவன் மொச்சநகர்தான்
மைச்சின்முகில் வைச்சபொழில் * * *
* * * * * 10

3602.துங்கமிகு பொங்கரவு தங்குசடை நங்களிறை துன்றுகுழலார்
செங்கயல்கள் மங்கையுமை நங்கையொரு பங்கனமர் தேவூரதன்மேல்
பைங்கமல மங்கணிகொள் திண்புகலி ஞானசம் பந்தனுரைசெய்
சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை வல்லவர்கள் சங்கையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 75. திருச்சண்பைநகர் : திருவிராகம். பண்–சாதாரி

3603. எந்தமது சிந்தைபிரி யாதபெரு மானெனஇ றைஞ்சியிமையோர்
வந்துதுதி செய்யவளர் தூபமொடு தீபமலி வாய்மையதனால்
அந்தியமர் சந்திபல அர்ச்சனைகள் செய்யஅமர் கின்றஅழகன்
சந்தமலி குந்தளநன் மாதினொடு மேவுபதி சண்பைநகரே. 1

3604. அங்கம்விரி துத்தியர வாமைவிர வாரமமர் மார்பிலழகன்
பங்கையமு கத்தரிவை யோடுபிரி யாதுபயில் கின்றபதிதான்
பொங்குபர வைத்திரைகொ ணர்ந்துபவ ளத்திரள்பொ லிந்தவயலே
சங்குபுரி யிப்பிதர ளத்திரள்பி றங்கொளிகொள் சண்பைநகரே. 2

3605. போழுமதி தாழுநதி பொங்கரவு தங்குபுரி புன்சடையினன்
யாழின்மொழி மாதுமைவிழி யேழையிள மாதினொடி ருந்தபதிதான்
வாழைவளர் ஞாழல்மகிழ் மன்னுபுனை துன்னுபொழில் மாடுமடலார்
தாழைமுகிழ் வேழமிகு தந்தமென வுந்துதகு சண்பைநகரே. 3

3606. கொட்டமுழ விட்டவடி வட்டணைகள் கட்டநட மாடிகுலவும்
பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி பாவையொடு மேவுபதிதான்
வட்டமதி தட்டுபொழி லுட்டமது வாய்மைவழு வாதமொழியார்
சட்டகலை யெட்டுமரு வெட்டும்வளர் தத்தைபயில் சண்பைநகரே. 4

3607. பணங்கெழுவு பாடலினொ டாடல்பிரி யாதபர மேட்டிபகவன்
அணங்கெழுவு பாகமுடை யாகமுடை யன்பர்பெரு மானதிடமாம்
இணங்கெழுவி யாடுகொடி மாடமதில் நீடுவிரை யார்புறவெலாந்
தணங்கெழுவி யேடலர்கொள் தாமரையி லன்னம்வளர் சண்பைநகரே. 5

3608. பாலனுயிர் மேலணவு காலனுயிர் பாறவுதை செய்தபரமன்
ஆலுமயில் போலியலி ஆயிழைத னோடுமமர் வெய்துமிடமாம்
ஏலமலி சோலையின வண்டுமலர் கிண்டிநற வுண்டிசைசெயச்
சாலிவயல் கோலமலி சேலுகள நீலம்வளர் சண்பைநகரே. 6

3609. விண்பொயத னால்மழைவி ழாதொழியி னும்விளைவு தான்மிகவுடை
மண்பொயத னால்வளமி லாதொழியி னுந்தமது வண்மைவழுவார்
உண்பகர வாருலகி னூழிபல தோறும்நிலை யானபதிதான்
சண்பைநக ரீசனடி தாழுமடி யார்தமது தன்மையதுவே. 7

3610. வரைக்குலம கட்கொரும றுக்கம்வரு வித்தமதி யில்வலியுடை
அரக்கனது ரக்கரசி ரத்துறவ டர்த்தருள்பு ரிந்தஅழகன்
இருக்கையத ருக்கன்முத லானஇமை யோர்குழுமி யேழ்விழவினில்
தருக்குலநெ ருக்குமலி தண்பொழில்கள் கொண்டலன சண்பைநகரே. 8

3611.நீலவரை போலநிகழ் கேழலுரு நீள்பறவை நேருருவமாம்
மாலுமல ரானுமறி யாமைவளர் தீயுருவ மானவரதன்
சேலுமின வேலுமன கண்ணியொடு நண்ணுபதி சூழ்புறவெலாஞ்
சாலிமலி சோலைகுயில் புள்ளினொடு கிள்ளைபயில் சண்பைநகரே. 9

3612.போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு வாதவகை யுண்டுபலபொய்
ஓதியவர் கொண்டுசெய்வ தொன்றுமிலை நன்றதுணர் வீருரைமினோ
ஆதியெமை யாளுடைய அரிவையொடு பிரிவிலி யமர்ந்தபதிதான்
சாதிமணி தெண்டிரைகொ ணர்ந்துவயல் புகஎறிகொள் சண்பைநகரே. 10

3613.வாரின்மலி கொங்கையுமை நங்கையொடு சங்கரன்ம கிழ்ந்தமருமூர்
சாரின்முரல் தெண்கடல்வி சும்புறமு ழங்கொலிகொள் சண்பைநகர்மேற்
பாரின்மலி கின்றபுகழ் நின்றதமிழ் ஞானசம் பந்தனுரைசெய்
சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர் சேர்வர்சிவ லோகநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 76. திருவேதவனம் : திருவிராகம். பண்–சாதாரி

3614. கற்பொலிசு ரத்தினெரி கானினிடை மாநடம தாடிமடவார்
இற்பலிகொ ளப்புகுது மெந்தைபெரு மானதிட மென்பர்புவிமேல்
மற்பொலிக லிக்கடன்ம லைக்குவடெ னத்திரைகொ ழித்தமணியை
விற்பொலிநு தற்கொடியி டைக்கணிகை மார்கவரும் வேதவனமே. 1

3615. பண்டிரைப வப்புணரி யிற்கனக மால்வரையை நட்டரவினைக்
கொண்டுகயி றிற்கடைய வந்தவிட முண்டகுழ கன்றனிடமாம்
வண்டிரைநி ழற்பொழிலின் மாதவியின் மீதணவு தென்றல்வெறியார்
வெண்திரைகள் செம்பவள முந்துகடல் வந்தமொழி வேதவனமே. 2

3616. காரியன்மெல் லோதிநதி மாதைமுடி வார்சடையில் வைத்துமலையார்
நாரியொரு பால்மகிழு நம்பருறை வென்பர்நெடு மாடமறுகில்,
தேரியல்வி ழாவினொலி திண்பணில மொண்படக நாளுமிசையால்
வேரிமலி வார்குழல்நன் மாதரிசை பாடலொலி வேதவனமே. 3

3617. நீறுதிரு மேனியின்மி சைத்தொளிபெ றத்தடவி வந்திடபமே
ஏறியுல கங்கள்தொறும் பிச்சைநுக ரிச்சைய ரிருந்தபதியாம்
ஊறுபொரு ளின்தமிழி யற்கிளவி தேரும்மட மாதருடனார்
வேறுதிசை யாடவர்கள் கூறஇசை தேருமெழில் வேதவனமே. 4

3618. கத்திரிகை துத்திரிக றங்குதுடி தக்கையொடி டக்கைபடகம்
எத்தனையு லப்பில்கரு வித்திரள லம்பஇமை யோர்கள்பரச
ஒத்தறமி தித்துநட மிட்டவொரு வர்க்கிடம் தென்பருலகில்
மெய்த்தகைய பத்தரொடு சித்தர்கள்மி டைந்துகளும் வேதவனமே. 5

3619. மாலைமதி வாளரவு கொன்றைமலர் துன்றுசடை நின்றுசுழலக்
காலையிலெ ழுந்தகதிர் தாரகைம டங்கஅன லாடுமரனூர்
சோலையின்ம ரங்கள்தொறும் மிண்டியின வண்டுமது வுண்டிசைசெய
வேலையொலி சங்குதிரை வங்கசுற வங்கொணரும் வேதவனமே. 6

3620. வஞ்சகம னத்தவுணர் வல்லரண மன்றவிய வார்சிலைவளைத்
தஞ்சகம வித்தஅம ரர்க்கமர னாதிபெரு மானதிடமாம்
கிஞ்சுகஇ தழ்க்கனிக ளூறியசெவ் வாயவர்கள் பாடல்பயில
விஞ்சகஇ யக்கர்முனி வக்கணநி றைந்துமிடை வேதவனமே. 7

3621. முடித்தலைகள் பத்துடைமு ருட்டுருஅ ரக்கனைநெ ருக்கிவிரலால்
அடித்தலமுன் வைத்தலம ரக்கருணை வைத்தவனி டம்பலதுயர்
கெடுத்தலைநி னைத்தறவி யற்றுதல்கி ளர்ந்துபுல வாணர்வறுமை
விடுத்தலைம தித்துநிதி நல்கு மவர் மல்குபதி வேதவனமே. 8

3622. வாசமலர் மேவியுறை வானுநெடு மாலுமறி யாதநெறியைக்
கூசுதல்செ யாதஅம ணாதரொடு தேரர்குறு காதஅரனூர்
காசுமணி வார்கனக நீடுகட லொடுதிரை வார்துவலைமேல்,
வீசுவலை வாணரவை வாரிவிலை பேசுமெழில் வேதவனமே. 9, 10

3623. மந்தமுர வங்கடல்வ ளங்கெழுவு காழிபதி மன்னுகவுணி
வெந்தபொடி நீறணியும் வேதவன மேவுசிவ னின்னருளினால்
சந்தமிவை தண்டமிழி னின்னிசையெ னப்பரவு பாடலுலகில்
பந்தனுரை கொண்டுமொழி வார்கள்பயில் வார்களுயர் வானுலகமே.
11

திருச்சிற்றம்பலம்

•••••

## 77. திருமாணிகுழி : திருவிராகம். பண்–சாதாரி

3624. பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு பங்கர்புனல் தங்குசடைமேல்
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல் வித்தகர்ம கிழ்ந்துறைவிடம்
கன்னியிள வாளைகுதி கொள்ளவிள வள்ளைபட ர்ள்ளல்வயல்வாய்
மன்னியிள மேதிகள்ப டிந்துமனை சேருதவி மாணிகுழியே. 1

3625. சோதிமிகு நீறதமெய் பூசியொரு தோலுடைபு னைந்துதெருவே
மாதர்மனை தோறுமிசை பாடிவசி பேசுமர னார்மகிழ்விடம்
தாதுமலி தாமரைம ணங்கமழ வண்டுமுரல் தண்பழனமிக்
கோதமலி வேலைபுடை சூழுலகில் நீடுதவி மாணிகுழியே. 2

3626. அம்பனைய கண்ணுமைம டந்தையவ ளஞ்சிவெரு வச்சினமுடைக்
கம்பமத யானையுரி செய்தஅர னார்கருதி மேயவிடமாம்
வம்புமலி சோலைபுடை சூழமணி மாடமது நீடியழகார்
உம்பரவர் கோனகர மென்னமிக மன்னுதவி மாணிகுழியே. 3

3627. நித்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறள னாகிமிகவும்
சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாம்
கொத்தலர்ம லர்பொழிலின் நீடுகுல மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுகளு லாவியிசை பாடுதவி மாணிகுழியே. 4

3628. மாசில்மதி சூடுசடை மாமுடியர் வல்லசுரர் தொல்நகரமுன்
நாசமது செய்துநல வானவர்க ளுக்கருள்செய் நம்பனிடமாம்
வாசமலி மென்குழல்ம டந்தையர்கள் மாளிகையின் மன்னியழகார்
ஊசல்மிசை யேறியினி தாகஇசை பாடுதவி மாணிகுழியே. 5

3629. மந்தமலர் கொண்டுவழி பாடுசெயு மாணியுயிர் வவ்வமனமாய்
வந்தவொரு காலனுயிர் மாளவுதை செய்தமணி கண்டனிடமாம்
சந்தினொடு காரகில்சு மந்துதட மாமலர்கள் கொண்டுகெடிலம்
உந்துபுனல் வந்துவயல் பாயுமண மாருதவி மாணிகுழியே. 6

3630. எண்பெரிய வானவர்கள் நின்றுதுதி செய்யஇறை யேகருணையாய்
உண்பரிய நஞ்சதனை யுண்டுலக முய்யஅரு ளுத்தமனிடம்
பண்பயிலும் வண்டுபல கெண்டிமது வுண்டுநிறை பைம்பொழிலின்வாய்
ஒண்பலவி னின்கனிசொ ரிந்துமண நாறுதவி மாணிகுழியே. 7

3631. எண்ணமது வின்றியெழி லார்கைலை மாமலையெ டுத்ததிறலார்
திண்ணியஅ ரக்கனைநெ ரித்தருள்பு ரிந்தசிவ லோகனிடமாம்
பண்ணமரு மென்மொழியி னார்பணைமு லைப்பவள வாயழகதார்
ஒண்ணுதல்ம டந்தையர்கு டைந்துபுன லாடுதவி மாணிகுழியே. 8

3632. நேடுமய னோடுதிரு மாலுமுண ராவகைநி மிர்ந்துமுடிமேல்
ஏடுலவு திங்கள்மத மத்தமித ழிச்சடையெம் மீசனிடமாம்
மாடுலவு மல்லிகைகு ருந்துகொடி மாதவிசெ ருந்திகுரவின்
ஊடுலவு புன்னைவிரை தாதுமலி சேருதவி மாணிகுழியே. 9

3633. மொட்டையம ணாதர்முது தேரர்மதி யில்லிகள்மு யன்றனபடும்
மொட்டைகள்மொ ழிந்தமொழி கொண்டருள்செய் யாதமுதல் வன்றனிடமாம்
மட்டைமலி தாழையிள நீர்முதிய வாழையில்வி ழுந்தஅதரில்
ஒட்டமலி பூகநிரை தாறுதிர வேறுதவி மாணிகுழியே. 10

3634. உந்திவரு தண்கெடில மோடுபுனல் சூழுதவி மாணிகுழிமேல்
அந்திமதி சூடியஎம் மானையடி சேருமணி காழிநகரான்
சந்தநிரை தண்தமிழ்தெ ரிந்துணரு ஞானசம் பந்தனதுசொல்
முந்தியிசை செய்துமொழி வார்களுடை யார்கள்நெடு வானநிலனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 78. திருவேதிகுடி : திருவிராகம். பண்—சாதாரி

3635. நீறுவரி யாடரவொ டாமைமன என்புநிறை பூண்பரிடபம்
ஏறுவரி யாவரு மிறைஞ்சுகழ லாதிய ரிருந்தவிடமாம்
தாறுவிரி பூகமலி வாழைவிரை நாறவிணை வாளைமடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள மாரும்வயல் வேதிகுடியே. 1

3636. சொற்பிரிவி லாதமறை பாடிநட மாடுவர்தொ லானையுரிவை
மற்புரிபு யத்தினிது மேவுவரெந் நாளும்வளர் வானவர்தொழத்
துற்பரிய நஞ்சமுத மாகமு னயின்றவரி யன்றதொகுசீர்
வெற்பரையன் மங்கையொரு பங்கர்நக ரென்பர்திரு வேதிகுடியே. 2

3637. போழுமதி பூணரவு கொன்றைமலர் துன்றுசடை வென்றிபுகமேல்
வாழுநதி தாழுமரு ளாளரிரு ளார்மிடறர் மாதரிமையோர்
சூழுமிர வாளர்திரு மார்பில்விரி நூலர்வரி தோலருடைமேல்
வேழவுரி போர்வையினர் மேவுபதி யென்பர்திரு வேதிகுடியே. 3

3638. காடர்கரி காலர்கனல் கையரனல் மெய்யருடல் செய்யர்செவியில்
தோடர்தெரி கீளர்சரி கோவணவ ராவணவர் தொல்லைநகர்தான்
பாடலுடை யார்களடி யார்கள்மல ரோடுபுனல் கொண்டுபணிவார்
வேடமொளி யானபொடி பூசியிசை மேவுதிரு வேதிகுடியே. 4

3639. சொக்கர்துணை மிக்கவெயி லுக்கற முனிந்துதொழு மூவர்மகிழத்
தக்கவருள் பக்கமுற வைத்தஅர னாரினிது தங்குநகர்தான்
கொக்கரவ முற்றபொழில் வெற்றிநிழல் பற்றிவரி வண்டிசைகுலாம்
மிக்கமரர் மெச்சியினி தச்சமிடர் போகநல்கு வேதிகுடியே. 5

3640. செய்யதிரு மேனிசை வெண்பொடிய ணிந்துகரு மானுரிவைபோர்த்
தையமிடு மென்றுமட மங்கையொட கந்திரியு மண்ணலிடமாம்
வையம்விலை மாறிடினு மேறுபுகழ் மிக்கிழிவி லாதவகையார்
வெய்யமொழி தண்புலவ ருக்குரைசெ யாதஅவர் வேதிகுடியே.6

3641. உன்னியிரு போதுமடி பேணுமடி யார்தமிட ரொல்க அருளித்
துன்னியொரு நால்வருட னால்நிழலி ருந்ததுணை வன்றனிடமாம்
கன்னியரொ டாடவர்கள் மாமணம்வி ரும்பியரு மங்கலமிக
மின்னியலு நுண்ணிடைநன் மங்கையரி யற்றுபதி வேதிகுடியே. 7

3642. உரக்கரநெ ருப்பெழநெ ருக்கிவரை பற்றியவொ ருத்தன்முடிதோள்
அரக்கனைய டர்த்தவ னிசைக்கினிது நல்கியரு ளங்கணனிடம்
முருக்கிதழ்ம டக்கொடிம டந்தையரு மாடவரு மொய்த்தகலவை
விரைக்குழல்மி கக்கமழ விண்ணிசையு லாவுதிரு வேதிகுடியே. 8

3643. பூவின்மிசை யந்தணனொ டாழிபொலி யங்கையனு நேடஎரியாய்த்
தேவுமிவ ரல்லரினி யாவரென நின்றுதிகழ் கின்றவரிடம்
பாவலர்க ளோசையியல் கேள்வியத றாதகொடை யாளர்பயில்வாம்
மேவரிய செல்வநெடு மாடம்வளர் வீதிநிகழ் வேதிகுடியே. 9

3644. வஞ்சமணர் தேரர்மதி கேடர்தம னத்தறிவி லாதவர்மொழி
தஞ்சமென என்றுமுண ராதஅடி யார்கருது சைவனிடமாம்
அஞ்சுபுலன் வென்றறுவ கைப்பொருள் தெரிந்தெழு இசைக்கிளவியால்
வெஞ்சின மொழித்தவர்கள் மேவிநிகழ் கின்றதிரு வேதிகுடியே.10

3645. கந்தமலி தண்பொழில்நன் மாடமிடை காழிவளர் ஞானமுணர்சம்
பந்தன்மலி செந்தமிழின் மாலைகொடு வேதிகுடி யாதிகழலே
சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்க ளென்னநிகழ் வெய்தியிமையோர்
அந்தவுல கெய்தியர சாளுமது வேசரத மாணைநமதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 79. திருக்கோகரணம் : திருவிராகம். பண்–சாதாரி

3646. என்றுமரி யானயல வர்க்கியலி சைப்பொருள்க ளாகி யெனதுள்
நன்றுமொளி யானெளிசி றந்தபொன்மு டிக்கடவுள் நண்ணுமிடமாம்
ஒன்றியம னத்தடியர் கூடியிமை யோர்பரவு நீடரவமார்
குன்றுகள் நெருங்கிவிரி தண்டலைமி டைந்துவளர் கோகரணமே. 1

2647. பேதைமட மங்கையொரு பாங்கிடமி குத்திடப மேறியமரர்
வாதைபட வண்கடலெ ழுந்தவிட முண்டசிவன் வாழுமிடமாம்
மாதரொடு மாடவர்கள் வந்தடியி றைஞ்சிநிறை மாமலர்கள்தூய்க்
கோதைவரி வண்டிசைகொள் கீதமுரல் கின்றவளர் கோகரணமே. 2

3648. முறைத்திற முறப்பொருள் தெரிந்துமுனி வர்க்கருளி யாலநிழல்வாய்
மறைத்திறம றத்தொகுதி கண்டுசம யங்களைவ குத்தவனிடம்
துறைத்துறைமி குத்தருவி தூமலர்சு மந்துவரை யுந்திமதகைக்
குறைத்தறையி டக்கரிபு ரிந்திடறு சாரல்மலி கோகரணமே. 3

3649. இலைத்தலைமி குத்தபடை யெண்கரம்வி ளங்களரி வீசிமுடிமேல்
அலைத்தலைதொ குத்தபுனல் செஞ்சடையில் வைத்தஅழ கன்றனிடமாம்
மலைத்தலைவ குத்தமுழை தோறுமுழை வாளரிகள் கேழல்களிறு
கொலைத்தலைம டப்பிடிகள் கூடிவிளை யாடிநிகழ் கோகரணமே. 4

3650. தொடைத்தலைம லைத்திதழி துன்னியஎ ருக்கலரி வன்னிமுடியின்
சடைத்தலைமி லைச்சியத போதனெம் மாதிபயில் கின்றபதியாம்
படைத்தலைபி டித்துமற வாளரொடு வேடர்கள் பயின்றுகுழுமிக்
குடைத்தலை நதிப்படிய நின்றுபழி தீரநல்கு கோகரணமே. 5

3651. நீறுதிரு மேனிமிசை யாடிநிறை வார்கழல்சி லம்பொலிசெய
ஏறுவிளை யாடவிசை கொண்டிடுப லிக்குவரு மீசனிடமாம்
ஆறுசம யங்களும்வி ரும்பியடி பேணியர னாகமமிகக்
கூறுமனம் வேறிரதி வந்தடியர் கம்பம்வரு கோகரணமே. 6

3652. கல்லவட மொந்தைகுழல் தாளமலி கொக்கரைய ரக்கரைமிசை
பல்லபட நாகம்விரி கோவணவ ராளுநக ரென்பரயலே
நல்லமட மாதரர னாமமுந விற்றியதி ருத்தமுழுகக்
கொல்லவிட நோயகல்த ரப்புகல்கொ டுத்தருளு கோகரணமே. 7

3653. வரைத்தலநெ ருக்கியமு ருட்டிருள்நி றத்தவன வாய்களலற
விரற்றலையு கிர்ச்சிறிது வைத்தபெரு மானினிது மேவுமிடமாம்
புரைத்தலைகெ டுத்தமுனி வாணர்பொலி வாகிவினை தீரஅதன்மேல்
குரைத்தலைக ழற்பணிய ஓமம்வில கும்புகைசெய் கோகரணமே. 8

3654. வில்லிமையி னால்விறல ரக்கனுயிர் செற்றவனும் வேதமுதலோன்
இல்லையுள தென்றிகலி நேடஎரி யாகியுயர் கின்றபரனூர்
எல்லையில் வரைத்தகடல் வட்டமு மிறைஞ்சிநிறை வாசமுருக்
கொல்லையி லிளங்குறவர் தம்மயிர் புலர்த்திவளர் கோகரணமே. 9

3655. நேசமில் மனச்சமணர் தேரர்கள் நிரந்தமொழி பொய்களகல்வித்
தாசைகொள் மனத்தையடி யாரவர்த மக்கருளு மங்கணனிடம்
பாசம தறுத்தவனி யிற்பெயர்கள் பத்துடைய மன்னனவனைக்
கூசவகை கண்டுபி னவற்கருள்கள் நல்கவல கோகரணமே. 10

3656. கோடலர வீனும்விரி சாரல்முன் நெருங்கிவளர் கோகரணமே
ஈடமினி தாகவுறை வானடிகள் பேணியணி காழிநகரான்
நாடிய தமிழ்க்கிளவி யின்னிசைசெய் ஞானசம் பந்தன்மொழிகள்
பாடவல பத்தரவ ரெத்திசையு மாள்வர்பர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 80. திருவீழிமிழலை : திருவிராகம். பண்–சாதாரி

3657. சீர்மருவு தேசினொடு தேசமலி செல்வமறை யோர்கள் பணியத்
தார்மருவு கொன்றையணி தாழ்சடையி னானமர்ச யங்கொள்பதிதான்.
பார்மருவு பங்கயமு யர்ந்தவயல் சூழ்பழன நீடஅருகே
கார்மருவு வெண்கனக மாளிகை கவின்பெருகு வீழிநகரே. 1

3658. பட்டமுழ விட்டபணி லத்தினொடு பன்மறைக ளோது பணிநல்
சிட்டர்கள்ச யத்துதிகள் செய்யவருள் செய்தழல்கொள் மேனியவனூர்
மட்டுலவு செங்கமல வேலிவயல் செந்நெல்வளர் மன்னுபொழில்வாய்
விட்டுலவு தென்றல்விரை நாறுபதி வேதியர்கள் வீழிநகரே. 2

3659. மண்ணிழிசு ரர்க்குவள மிக்கபதி மற்றுமுள மன்னு யிர்களுக்
கெண்ணிழிவி லின்பநிகழ் வெய்தஎழி லார்பொழி லிலங்கறுபதம்
பண்ணிழிவி லாதவகை பாடமட மஞ்ஞைநட மாடஅழகார்
விண்ணிழிவி மானமுடை விண்ணவர்பி ரான்மருவு வீழிநகரே. 3

3660. செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு நற்கலைதெ ரிந்தவவரோ
டந்தமில்கு ணத்தவர்க ளர்ச்சனைகள் செய்யஅமர் கின்றஅரனூர்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர் தண்புனல்வ ளம்பெருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி ரும்புபதி வீழிநகரே. 4

3661. பூதபதி யாகியபு ராணமுனி புண்ணியநன் மாதைமருவிப்
பேதமதி லாதவகை பாகமிக வைத்தபெரு மானதிடமாம்
மாதவர்க ளன்னமறை யாளர்கள்வ ளர்த்தமலி வேள்வியதனால்
ஏதமதி லாதவகை யின்பமமர் கின்றஎழில் வீழிநகரே. 5

3662. மண்ணின்மறை யோர்மருவு வைதிகமு மாதவமு மற்றுமுலகத்
தெண்ணில்பொரு ளாயவைப டைத்தஇமை யோர்கள்பெரு மானதிடமாம்
நண்ணிவரு நாவலர்கள் நாள்தொறும்வ ளர்க்கநிகழ் கின்றபுகழ்சேர்
விண்ணுலவு மாளிகைநெ ருங்கிவளர் நீள்புரிசை வீழிநகரே. 6

3663. மந்திரநன் மாமறையி னோடுவளர் வேள்விமிசை மிக்கபுகைபோய்
அந்தரவி சும்பணவி யற்புதமெ னப்படரு மாழியிருள்வாய்
மந்தரநன் மாளிகைநி லாவுமணி நீடுகதிர் விட்டஒளிபோய்
வெந்தழல்வி ளக்கெனவி ரும்பினர்தி ருந்துபதி வீழிநகரே. 7

3664. ஆனவலி யிற்றசமு கன்றலைய ரங்கவணி யாழிவிரலால்
ஊனமரு யர்ந்தகுரு திப்புனலில் வீழ்தரவு ணர்ந்தபரனூர்
தேனமர்தி ருந்துபொழில் செங்கனக மாளிகைதி கழ்ந்தமதிளோ
டானதிரு வுற்றுவள ரந்தணர்நி றைந்தஅணி வீழிநகரே. 8

3665. ஏனவுரு வாகிமண் ணிடந்தஇமை யோனுமெழி லன்னவுருவம்
ஆனவனு மாதியினொ டந்தமறி யாதஅழல் மேனியவனூர்
வானணவு மாமதிள்ம ருங்கலர்நெ ருங்கியவ ளங்கொள்பொழில்வாய்
வேனலமர் வெய்திடவி ளங்கொளியின் மிக்கபுகழ் வீழிநகரே.9

3666. குண்டமண ராகியொரு கோலமிகு பீலியொடு குண்டிகைபிடித்
தெண்டிசையு மில்லதொரு தெய்வமுள தென்பரது வென்னபொருளாம்
பண்டையய னன்னவர்கள் பாவனைவி ரும்புபரன் மேவுபதிசீர்
வெண்டரள வாள்நகைநன் மாதர்கள்வி ளங்குமெழில் வீழிநகரே.10

3667. மத்தமலி கொன்றைவளர் வார்சடையில் வைத்தபரன் வீழிநகர்சேர்
வித்தகனை வெங்குருவில் வேதியன்வி ரும்புதமிழ் மாலைகள்வலார்
சித்திரவி மானமமர் செல்வமலி கின்றசிவ லோகமருவி
அத்தகுகு ணத்தவர்க ளாகியனு போகமொடி யோகம்மவரதே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 81. திருத்தோணிபுரம் : திருவிராகம். பண் – சாதாரி

3668. சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி
அங்கமுடன் மேலுறவ ணிந்துபிணி தீரஅருள் செய்யும்
எங்கள்பெரு மானிடமெ னத்தகுமு னைக்கடலின் முத்தந்
துங்கமணி யிப்பிகள்க ரைக்குவரு தோணிபுர மாமே. 1

3669. சல்லரியி யாழ்முழவ மொந்தைகுழல் தாளமதி யம்பக்
கல்லரிய மாமலையர் பாவையொரு பாகநிலை செய்து
அல்லெரிகை யேந்திநட மாடுசடை யண்ணலிட மென்பர்
சொல்லரிய தொண்டர்துதி செய்யவளர் தோணிபுர மாமே. 2

3670. வண்டரவு கொன்றைவளர் புன்சடையின் மேல்மதியம் வைத்துப்
பண்டரவு தன்னரையி லார்த்தபர மேட்டிபழி தீரக்
கண்டரவ வொண்கடலில் நஞ்சமமு துண்டகட வுள்ளூர்
தொண்டரவர் மிண்டிவழி பாடுமல்கு தோணிபுர மாமே. 3

3671. கொல்லைவிடை யேறுடைய கோவணவ னாவணவு மாலை
ஒல்லையுடை யானடைய லாரரண மொள்ளழல்வி ளைத்த
வில்லையுடை யான்மிக விரும்புபதி மேவிவளர் தொண்டர்
சொல்லையடை வாகஇடர் தீர்த்தருள்செய் தோணிபுர மாமே. 4

3672. தேயுமதி யஞ்சடையி லங்கிடவி லங்கன்மலி கானிற்
காயுமடு திண்கரியி னீருரிவை போர்த்தவ னினைப்பார்
தாயெனநி றைந்ததொரு தன்மையினர் நன்மையொடு வாழ்வு
தூயமறை யாளர்முறை யோதிநிறை தோணிபுர மாமே. 5

3673. பற்றலர்த முப்புர மெரித்தடிப ணிந்தவர்கள் மேலைக்
குற்றமதொ ழித்தருளு கொள்கையினன் வெள்ளின்முது கானிற்
பற்றவனி சைக்கிளவி பாரிடம தேத்தநட மாடுந்
துற்றசடை யத்தனுறை கின்றபதி தோணிபுர மாமே. 6

3674. பண்ணமரு நான்மறையர் நூன்முறைப யின்றதிரு மார்பிற்
பெண்ணமரு மேனியினர் தம்பெருமை பேசுமடி யார்மெய்த்
திண்ணமரும் வல்வினைகள் தீரஅருள் செய்தலுடை யானூர்
துண்ணெனவி ரும்புசரி யைத்தொழிலர் தோணிபுர மாமே. 7

3675. தென்றிசையி லங்கையரை யன்றிசைகள் வீரம்விளை வித்து
வென்றிசைபு யங்களைய டர்த்தருளும் வித்தகனி டஞ்சீர்
ஒன்றிசையி யற்கிளவி பாடமயி லாடவளர் சோலை
துன்றுசெய வண்டுமலி தும்பிமுரல் தோணிபுர மாமே. 8

3677. நாற்றமிகு மாமலரின் மேலயனு நாரணனு நாடி
ஆற்றலத னால்மிகஅ ளப்பரிய வண்ணமெரி யாகி
ஊற்றமிகு கீழுலகு மேலுலகு மோங்கியெழு தன்மைத்
தோற்றமிக நாளுமரி யானுறைவு தோணிபுர மாமே. 9

3678. மூடுதுவ ராடையினர் வேடநிலை காட்டுமம ணாதர்
கேடுபல செல்லிடுவ ரம்மொழிகெ டுத்தடைவி னானக்
காடுபதி யாகநட மாடிமட மாதொடிரு காதில்
தோடுகுழை பெய்தவர்த மக்குறைவு தோணிபுர மாமே. 10

3678. துஞ்சிருளி னின்றுநட மாடிமிகு தோணிபுர மேய
மஞ்சனைவ ணங்குதிரு ஞானசம் பந்தனசொன் மாலை
தஞ்சமென நின்றிசைமொ ழிந்தஅடி யார்கள்தடு மாற்றம்
வஞ்சமிலர் நெஞ்சிருளு நீங்கியருள் பெற்றுவளர் வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 82. திருஅவளிவணல்லூர் : திருவிராகம். பண் – சாதாரி

3679. கொம்பிரிய வண்டுலவு கொன்றைபுரி நூலொடுகு லாவித்
தம்பரிசி னோடுசுடு நீறுதட வந்திடப மேறிக்
கம்பரிய செம்பொனெடு மாடமதில் கல்வரைவி லாக
அம்பெரிய வெய்தபெரு மானுறைவ தவளிவணல் லூரே. 1

3680. ஓமையன கள்ளியன வாகையன கூகைமுர லோசை
ஈமமெரி சூழ்சுடலை வாசமுது காடுநட மாடித்
தூய்மையுடை யக்கொடர வம்விரவி மிக்கொளிது ளங்க
ஆமையொடு பூணுமடி கள்ளுறைவ தவளிவணல் லூரே. 2

3681. நீறுடைய மார்பிலிம வான்மகளொர் பாகநிலை செய்து
கூறுடைய வேடமொடு கூடியழ காயதொரு கோலம்
ஏறுடைய ரேனுமிடு காடிரவில் நின்றுநட மாடும்
ஆறுடைய வார்சடையி னானுறைவ தவளிவணல் லூரே. 3

3682. பிணியுமிலர் கேடுமிலர் தோற்றமில ரென்றுலகு பேணிப்
பணியுமடி யார்களன பாவமற இன்னருள்ப யந்து
துணியுடைய தோலுமுடை கோவணமு நாகமுடல் தொங்க
அணியுமழ காகவுடை யானுறைவ தவளிவணல் லூரே. 4

3683. குழலின்வரி வண்டுமுரல் மெல்லியன பொன்மலர்கள் கொண்டு
கழலின்மிசை யிண்டைபுனை வார்கடவு ளென்றமரர் கூடித்
தொழலும்வழி பாடுமுடை யார்துயரு நோயுமில ராவர்
அழலுமழு ஏந்துகையி னானுறைவ தவளிவணல் லூரே. 5

3684. துஞ்சலில ராயமரர் நின்றுதொழு தேத்தஅருள் செய்து
நஞ்சுமிட றுண்டுகரி தாயளி தாகியொரு நம்பன்
மஞ்சுறநி மிர்ந்துமைந டுங்கஅக லத்தொடுவ ளாவி
அஞ்சமத வேழவுரி யானுறைவ தவளிவணல் லூரே. 6

3685. கூடரவ மொந்தைகுழல் யாழ்முழவி னோடுமிசை செய்யப்
பீடரவ மாகுபட ரம்புசெய்து பேரிடப மோடும்
காடரவ மாகுகனல் கொண்டிரவில் நின்றுநட மாடி
ஆடரவ மார்த்தபெரு மானுறைவ தவளிவணல் லூரே. 7

3686. ஒருவரையு மேல்வலிகொ டேனெனஎ ழுந்தவிற லோனிப்
பெருவரையின் மேலொர்பெரு மானுமுள னோவெனவெ குண்ட
கருவரையு மாழ்கடலு மன்னதிறல் கைகளுடை யோனை
அருவரையி லூன்றியடர்த் தானுறைவ தவளிவணல் லூரே. 8

3687. பொறிவரிய நாகமுயர் பொங்கணைய ணைந்துபுக ழோனும்
வெறிவரிய வண்டறைய விண்டமலர் மேல்விழுமி யோனும்
செறிவரிய தோற்றமொடு ஆற்றல்மிக நின்றுசிறி தேயும்
அறிவரிய னாயபெரு மானுறைவ தவளிவணல் லூரே. 9

3688. கழியருகு பள்ளியிட மாகவடு மீன்கள்கவர் வாரும்
வழியருகு சாரவெயி னின்றடிசி லுள்கிவரு வாரும்
பழியருகி னாரொழிக பான்மையொடு நின்றுதொழு தேத்தும்
அழியருவி தோய்ந்தபெரு மானுறைவ தவளிவணல் லூரே. 10

3689. ஆனமொழி யானதிற லோர்பரவு மவளிவண லூர்மேல்
போனமொழி நன்மொழிக ளாயபுகழ் தோணிபுரவூரன்
ஞானமொழி மாலைபல நாடுபுகழ் ஞானசம் பந்தன்
தேனமொழி மாலைபுகழ் வார்துயர்கள் தீயதிலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 83. திருநல்லூர் : திருவிராகம். பண் – சாதாரி

3690. வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தம்
தெண்டிரைகள் மோதவிரி போதுகம ழுந்திருநல் லூரே. 1

3691. பல்வளரு நாகமரை யார்த்துவரை மங்கையொரு பாகம்
மல்வளர்பு யத்திலணை வித்துமகி ழும்பரம னிடமாம்
சொல்வளரி சைக்கிளவி பாடிமட வார்நடம தாடச்
செல்வமறை யோர்கள்முறை யேத்தவள ருந்திருநல் லூரே. 2

3692. நீடுவரை மேருவில தாகநிகழ் நாகமழ லம்பால்
கூடலர்கள் மூவெயிலெ ரித்தகுழ கன்குலவு சடைமேல்
ஏடுலவு கொன்றைபுனல் நின்றுதிக மூந்நிமல னிடமாம்
சேடுலவு தாமரைகள் நீடுவய லார்திருநல் லூரே. 3

3693. கருகுபுரி மிடறர்கரி காடரெரி கையதனி லேந்தி
அருகுவரு கரியினுரி யதளர்பட அரவரிடம் வினவில்
முருகுவிரி பொழிலின்மண நாறமயி லாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்தமது வார்திருநல் லூரே. 4

3694. பொடிகொள்திரு மார்பர்புரி நூலர்புனல் பொங்கரவு தங்கும்
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத லாளரவ ரிடமாம்
இடிகொள்முழ வோசையெழி லார்செய்தொழி லாளர்விழ மல்கச்
செடிகொள்வினை யகலமன மினியவர்கள் சேர்திருநல் லூரே. 5

3695. புற்றரவர் நெற்றியொர்க ணொற்றைவிடை யூர்வரடை யாளம்
சுற்றமிருள் பற்றியபல் பூதமிசை பாடநசை யாலே
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கள் முற்றுமெயில் மாளச்
செற்றவ ரிருப்பிடநெ ருக்குபுன லார்திருநல் லூரே. 6

3696. பொங்கரவ ரங்கமுடன் மேலணிவர் ஞாலமிடு பிச்சை
தங்கரவ மாகவுழி தந்துமெய்து லங்கியவெண் ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை யடிகளிடம் வினவில்
செங்கயல்வ திக்குதிகொ ளும்புனல தார்திருநல் லூரே. 7

3697. ஏறுபுகழ் பெற்றதெ னிலங்கையவர் கோனையரு வரையில்
சீறியவ னுக்கருளு மெங்கள்சிவ லோகனிட மாகும்
கூறுமடி யார்களிசை பாடிவலம் வந்தயரு மருவிச்
சேறுகம ரானவழி யத்திகழ்த ருந்திருநல் லூரே. 8

3698. மாலுமலர் மேலயனு நேடியறி யாமையெரி யாய
கோலமுடை யானுணர்வு கோதில்புக ழானிடம தாகும்
நாலுமறை யங்கமுத லாறுமெரி மூன்றுதழ லோம்பும்
சீலமுடை யார்கள்நெடு மாடம்வள ருந்திருநல் லூரே. 9

3699. கீறுமுடை கோவணமி லாமையிலொ லோவியத வத்தர்
பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள் வேடமவை பாரேல்
ஏறுமட வாளொடினி தேறிமுனி ருந்தவிட மென்பர்
தேறுமன வாரமுடை யார்குடிசெ யுந்திருநல் லூரே. 10

3700. திரைகளிரு கரையும்வரு பொன்னிநில வுந்திருநல் லூர்மேல்
பரசுதரு பாணியைந லந்திகழ்செய் தோணிபுர நாதன்
உரைசெய்தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்
விரைசெய்மலர் தூவவிதி பேணுகதி பேறுபெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. திருப்புறவம் : திருவிராகம். பண் – சாதாரி

3701. பெண்ணிய லுருவினர் பெருகிய புனல்விர வியபிறைக்
கண்ணியர் கடுநடை விடையினர் கழல்தொழு மடியவர்
நண்ணிய பிணிகெட அருள்புரி பவர்நணு குயர்பதி
புண்ணிய மறையவர் நிறைபுக ழொலிமலி புறவமே. 1

3702. கொக்குடை யிறகொடு பிறையொடு குளிர்சடை முடியினர்
அக்குடை வடமுமொ ரரவமு மலரரை மிசையினில்
திக்குடை மருவிய வுருவினர் திகழ்மலை மகளொடும்
புக்குட னுறைவது புதுமலர் விரைகமழ் புறவமே. 2

3703. கொங்கியல் சுரிகுழல் வரிவளை யிளமுலை யுமையொரு
பங்கியல் திருவுரு வுடையவர் பரசுவொ டிரலைமெய்
தங்கிய கரதல முடையவர் விடையவ ருறைபதி
பொங்கிய பொருகடல் கொளவதன் மிசையுயர் புறவமே. 3

3704. மாதவ முடைமறை யவனுயிர் கொளவரு மறலியை
மேதகு திருவடி யிறையுற வுயிரது விலகினார்
சாதக வுருவியல் கானிடை யுமைவெரு வுறவரு
போதக வுரியதள் மருவின ருறைபதி புறவமே. 4

3705. காமனை யழல்கொள விழிசெய்து கருதலர் கடிமதில்
தூமம துறவிறல் சுடர்கொளு வியஇறை தொகுபதி
ஓமமொ டுயர்மறை பிறவிய வகைதனொ டொளிகெழு
பூமக னலரொடு புனல்கொடு வழிபடு புறவமே. 5

3706. சொன்னய முடையவர் சுருதிகள் கருதிய தொழிலினர்
பின்னையர் நடுவுணர் பெருமையர் திருவடி பேணிட
முன்னைய முதல்வினை யறஅரு ளினருறை முதுபதி
புன்னையின் முகைநிதி பொதியவிழ் பொழிலணி புறவமே. 6

3707. வரிதரு புலியத ளுடையினர் மழுவெறி படையினர்
பிரிதரு நகுதலை வடமுடி மிசையணி பெருமையர்
எரிதரு முருவின ரிமையவர் தொழுவதொ ரியல்பினர்
புரிதரு குழலுமை யொடுமினி துறைபதி புறவமே. 7

3708. வசிதரு முருவொடு மலர்தலை யுலகினை வலிசெயும்
நிசிசர னுடலொடு நெடுமுடி யொருபது நெரிவுற
ஒசிதர வொருவிரல் நிறுவின ரொளிவளர் வெளிபொடி
பொசிதரு திருவுரு வுடையவ ருறைபதி புறவமே. 8

3709. தேனக மருவிய செறிதரு முளரிசெய் தவிசினில்
ஊனக மருவிய புலனுகர் வுணர்வுடை யொருவனும்
வானக வரையக மறிகடல் நிலனெனு மெழுவகைப்
போனக மருவின னறிவரி யவர்பதி புறவமே. 9

3710. கோசர நுகர்பவர் கொழுகிய துவரன துகிலினர்
பாசுர வினைதரு பளகர்கள் பழிதரு மொழியினர்
நீசரை விடுமினி நினைவுறு நிமலர்த முறைபதி
பூசுரர் மறைபயில் நிறைபுக ழொலிமலி புறவமே. 10

3711. போதியல் பொழிலணி புறவநன் னகருறை புனிதனை
வேதிய ரதிபதி மிகுதலை தமிழ்கெழு விரகினன்
ஓதிய வொருபது முரியதொ ரிசைகொள வுரைசெயும்
நீதிய ரவரிரு நிலனிடை நிகழ்தரு பிறவியே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 85. திருவீழிமிழலை : திருவிராகம் பண் – சாதாரி

3712. மட்டொளி விரிதரு மலர்நிறை சுரிகுழல் மடவரல்
பட்டொளி மணியல்கு லுமையமை யுருவொரு பாகமாக்
கட்டொளிர் புனலொடு கடியர வுடனுறை முடிமிசை
விட்டொளி யுதிர்பிதிர் மதியவர் பதிவிழி மிழலையே. 1

3713. எண்ணிற வரிவளை நெறிகுழ லெழில்மொழி யிளமுலைப்
பெண்ணுறு முடலினர் பெருகிய கடல்விட மிடறினர்
கண்ணுறு நுதலினர் கடியதோர் விடையினர் கனலினர்
விண்ணுறு பிறையணி சடையினர் பதிவிழி மிழலையே. 2

3714. மைத்தகு மதர்விழி மலைமக ளுருவொரு பாகமா
வைத்தவர் மதகரி யுரிவைசெய் தவர்தமை மருவினார்
தெத்தென இசைமுரல் சரிதையர் திகழ்தரு மரவினர்
வித்தக நகுதலை யுடையவ ரிடம்விழி மிழலையே. 3

3715. செவ்வழ லெனநனி பெருகிய வுருவினர் செறிதரு
கவ்வழ லரவினர் கதிர்முதிர் மழுவினர் தொழுவிலா
முவ்வழல் நிசிசரர் விறலவை யழிதர முதுமதிள்
வெவ்வழல் கொளநனி முனிபவர் பதிவிழி மிழலையே. 4

3716. பைங்கண தொருபெரு மழலைவெ ளேற்றினர் பலியெனா
எங்கணு முழிதர்வ ரிமையவர் தொழுதெழு மியல்பினர்
அங்கண ரமரர்க ளடியிணை தொழுதெழ ஆரமா
வெங்கண அரவின ருறைதரு பதிவிழி மிழலையே. 5

3717. பொன்னன புரிதரு சடையினர் பொடியணி வடிவினர்
உன்னினர் வினையவை களைதலை மருவிய வொருவனார்
தென்னென விசைமுரல் சரிதையர் திகழ்தரு மார்பினில்
மின்னென மிளிர்வதொ ரரவினர் பதிவிழி மிழலையே. 6

3718. அக்கினொ டரவரை யணிதிக ழொளியதொ ராமைபூண்
டிக்குக மலிதலை கலனென விடுபலி யேகுவர்
கொக்கரை குழல்முழ விழவொடு மிசைவதொர் சரிதையர்
மிக்கவ ருறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 7

3719. பாதமொர் விரலுற மலையடர் பலதலை நெரிதரப்
பூதமொ டடியவர் புனைகழல் தொழுதெழு புகழினர்
ஓதமொ டொலிதிரை படுகடல் விடமுடை மிடறினர்
வேதமொ டுறுதொழின் மதியவர் பதிவிழி மிழலையே. 8

3720. நீரணி மலர்மிசை யுறைபவ னிறைகட லுறுதுயில்
நாரண னெனஇவ ரிருவரு நறுமல ரடிமுடி
ஒருணர் வினர்செல லுறலரு முருவினொ டொளிதிகழ்
வீரண ருறைவது வெறிகமழ் பொழில்விழி மிழலையே. 9

3721. இச்சைய ரினிதென விடுபலி படுதலை மகிழ்வதோர்
பிச்சையர் பெருமையை யிறைபொழு தறிவென வுணர்விலர்
மொச்சைய அமணரு முடைபடு துகிலரு மழிவதோர்
விச்சைய ருறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 10

3722. உன்னிய அருமறை யொலியினை முறைமிகு பாடல்செய்
இன்னிசை யவருறை யெழில்திகழ் பொழில்விழி மிழலையை
மன்னிய புகலியுள் ஞானசம் பந்தன வண்தமிழ்
சொன்னவர் துயரிலர் வியனுல குறுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருச்சேறை : திருவிராகம். பண் – சாதாரி

3723. முறியுறு நிறமல்கு முகிழ்முலை மலைமகள் வெருவமுன்
வெறியுறு மதகரி யதள்பட வுரிசெய்த விறலினர்
நறியுறு மிதழியின் மலரொடு நதிமதி நகுதலை
செறியுறு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 1

3724. புனமுடை நறுமலர் பலகொடு தொழுவதொர் புரிவினர்
மனமுடை யடியவர் படுதுயர் களைவதொர் வாய்மையர்
இனமுடை மணியினொ டரசிலை யொளிபெற மிளிர்வதோர்
சினமுதிர் விடையுடை யடிகள்தம் வளநகர் சேறையே. 2

3725. புரிதரு சடையினர் புலியத ளரையினர் பொடிபுல்கும்
எரிதரு முருவின ரிடபம தேறுவ ரீடுலா
வரிதரு வளையின ரவரவர் மகிழ்தர மனைதொறும்
திரிதரு சரிதைய ருறைதரு வளநகர் சேறையே. 3

3726. துடிபடு மிடையுடை மடவர லுடனொரு பாகமா
இடிபடு குரலுடை விடையினர் படமுடை யரவினர்
பொடிபடு முருவினர் புலியுரி பொலிதரு மரையினர்
செடிபடு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 4

3727. அந்தர முழிதரு திரிபுர மொருநொடி யளவினில்
மந்தர வரிசிலை யதனிடை யரவரி வாளியால்
வெந்தழி தரவெய்த விடலையர் விடமணி மிடறினர்
செந்தழல் நிறமுடை யடிகள்தம் வளநகர் சேறையே. 5

3728. மத்தர முறுதிறன் மறவர்தம் வடிவுகொ டுருவுடைப்
பத்தொரு பெயருடை விசயனை யசைவுசெய் பரிசினால்
அத்திர மருளுந மடிகள தணிகிளர் மணியணி
சித்திர வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 6

3729. பாடின ரருமறை முறைமுறை பொருளென வருநடம்
ஆடின ருலகிடை யலர்கொடு மடியவர் துதிசெய
வாடினர் படுதலை யிடுபலி யதுகொடு மகிழ்தரும்
சேடர்தம் வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 7

3730. கட்டுர மதுகொடு கயிலைநன் மலைமலி கரமுடை
நிட்டுர னுடலொடு நெடுமுடி யொருபது நெரிசெய்தார்
மட்டுர மலரடி யடியவர் தொழுதெழ அருள்செயும்
சிட்டர்தம் வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 8

3731. பன்றியர் பறவையர் பரிசுடை வடிவொடு படர்தர
அன்றிய அவரவ ரடியொடு முடியவை யறிகிலார்
நின்றிரு புடைபட நெடுவெரி நடுவெயொர் நிகழ்தரச்
சென்றுயர் வெளிபட அருளிய அவர்நகர் சேறையே. 9

3732. துகடுறு விரிதுகி லுடையவ ரமணெனும் வடிவினர்
விகடம துறுசிறு மொழியவை நலமில வினவிடல்
முகிடரு மிளமதி யரவொடு மழகுற முதுநதி
திகடரு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 10

3733. கற்றநன் மறைபயி லடியவ ரடிதொழு கவினுறு
சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதொர் சேறைமேல்
குற்றமில் புகலியு ளிகலறு ஞானசம் பந்தன
சொற்றகு வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 87. திருநள்ளாறு : திருவிராகம் . பண் – சாதாரி

3734. தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 1

3735. போதமர் தருபுரி குழலெழின் மலைமகள் பூணணி
சீதம தணிதரு முகிழிள வனமுலை செறிதலின்
நாதம தெழிலுரு வனையநள் ளாறர்தந் நாமமே
மீதம தெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 2

3736. இட்டுறு மணியணி யிணர்புணர் வளரொளி யெழில்வடம்
கட்டுறு கதிரிள வனமுலை யிணையொடு கலவலின்
நட்டுறு செறிவயல் மருவுநள் ளாறர்தந் நாமமே
இட்டுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 3

3737. மைச்சணி வரியரி நயனிதொன் மலைமகள் பயனுறு
கச்சணி கதிரிள வனமுலை யவையொடு கலவலின்
நச்சணி மிடறுடை யடிகள்நள் ளாறர்தந் நாமமே.
மெச்சணி யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 4

3738. பண்ணியல் மலைமகள் கதிர்விடு பருமணி யணிநிறக்
கண்ணியல் கலசம தனமுலை யிணையொடு கலவலின்
நண்ணிய குளிர்புனல் புகுதுநள் ளாறர்தந் நாமமே
விண்ணிய லெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 5

3739. போதுறு புரிகுழல் மலைமக ளிளவளர் பொன்னணி
சூதுறு தளிர்நிற வனமுலை யவையொடு துதைதலின்
தாதுறு நிறமுடை யடிகள்நள் ளாறர்தந் நாமமே
மீதுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 6

3740. கார்மலி நெறிபுரி சுரிகுழல் மலைமகள் கவினுறு
சீர்மலி தருமணி யணிமுலை திகழ்வொடு செறிதலின்
தார்மலி நகுதலை யுடையநள் ளாறர்தந் நாமமே
ஏர்மலி யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 7

3741. மன்னிய வளரொளி மலைமகள் தளிர்நிற மதமிகு
பொன்னியல் மணியணி கலசம தனமுலை புணர்தலின்
தன்னியல் தசமுகன் நெரியநள் ளாறர்தந் நாமமே
மின்னிய லெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 8

3742. கான்முக மயிலியல் மலைமகள் கதிர்விடு கனமிகு
பான்முக மியல்பணை யிணைமுலை துணையொடு பயிறலின்
நான்முக னரியறி வரியநள் ளாறர்தந் நாமமே
மேன்முக எரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 9

3743. அத்திர நயனிதொன் மலைமகள் பயனுறு மதிசயச்
சித்திர மணியணி திகழ்முலை யிணையொடு செறிதலின்
புத்தரொ டமணர்பொய் பெயருநள் ளாறர்தந் நாமமே
மெய்த்திர ளெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 10

3744. சிற்றிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரும்
நற்றிற முறுகமு மலநகர் ஞானசம் பந்தன
கொற்றவ னெதிரிடை யெரியினி லிடஇவை கூறிய
சொற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 88. திருவிளமர் : திருவிராகம் . பண் – சாதாரி

3745. மத்தக மணிபெற மலர்வதொர் மதிபுரை நுதல்கரம்
ஒத்தக நகமணி மிளிர்வதொ ரரவின ரொளிகிளர்
அத்தக வடிதொழ அருள்பெறு கண்ணொடு முமையவள்
வித்தக ருறைவது விரிபொழில் வளநகர் விளமரே. 1

3746. பட்டில கியமுலை யரிவைய ருலகினி லிடுபலி
ஒட்டில கிணைமர வடியின ருமையுறு வடிவினர்
சிட்டில கழகிய பொடியினர் விடைமிசை சேர்வதோர்
விட்டில கழகொளி பெயரவ ருறைவது விளமரே. 2

3747. அங்கதி ரொளியின ரரையிடை மிளிர்வதொ ரரவொடு
செங்கதி ரெனநிற மனையதொர் செழுமணி மார்பினர்
சங்கதிர் பறைகுழல் முழவினொ டிசைதரு சரிதையர்
வெங்கதி ருறுமழு வுடையவ ரிடமெனில் விளமரே. 3

3748. மாடம தெனவளர் மதிலவை யெரிசெய்வர் விரவுசீர்ப்
பீடென வருமறை யுரைசெய்வர் பெரியபல் சரிதைகள்
பாடல ராடிய சுடலையி லிடமுற நடநவில்
வேடம துடையவர் வியனக ரதுசொலில் விளமரே. 4

3749. பண்டலை மழலைசெ யாழென மொழியுமை பாகமாக்
கொண்டலை குரைகழ லடிதொழு மவர்வினை குறுகிலர்
விண்டலை யமரர்கள் துதிசெய அருள்புரி விறலினர்
வெண்டலை பலிகொளும் விமலர்தம் வளநகர் விளமரே. 5

3750. மனைகள்தொ றிடுபலி யதுகொள்வர் மதிபொதி சடையினர்
கனைகட லடுவிட மமுதுசெய் கறையணி மிடறினர்
முனைகெட வருமதி ளெரிசெய்த வவர்கழல் பரவுவார்
வினைகெட அருள்புரி தொழிலினர் செழுநகர் விளமரே. 6

3751. நெறிகமழ் தருமுரை யுணர்வினர் புணர்வுறு மடவரல்
செறிகமழ் தருமுரு வுடையவர் படைபல பயில்பவர்
பொறிகமழ் தருபட அரவினர் விரவிய சடைமிசை
வெறிகமழ் தருமல ரடைபவ ரிடமெனில் விளமரே. 7

3752. தெண்கடல் புடையணி நெடுமதி லிலங்கையர் தலைவனைப்
பண்பட வரைதனி லடர்செய்த பைங்கழல் வடிவினர்
திண்கட லடைபுனல் திகழ்சடை புகுவதொர் சேர்வினார்
விண்கடல் விடமலி யடிகள்தம் வளநகர் விளமரே. 8

3753. தொண்டசை யுறவரு துயருறு காலனை மாள்வுற
அண்டலல்செய் திருவரை வெருவுற வாரழ லாயினார்
கொண்டல்செய் தருதிரு மிடறின ரிடமெனி லளியினம்
விண்டிசை யுறுமலர் நறுமது விரிபொழில் விளமரே. 9

3754. ஒள்ளியர் தொழுதெழ வுலகினி லுரைசெயு மொழிபல
கொள்ளிய களவினர் குண்டிகை யவர்தவ மறிகிலார்
பள்ளியை மெய்யெனக் கருதன்மின் பரிவொடு பேணுவீர்
வெள்ளிய பிறையணி சடையினர் வளநகர் விளமரே. 10

3755. வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தரைச்
சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை செழுவிய
அந்தணர் புகலியு ளழகம ரருமறை ஞானசம்
பந்தன மொழியிவை யுரைசெயு மவர்வினை பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 89. திருக்கொச்சைவயம் : பண் – சாதாரி

3756. திருந்துமா களிற்றிள மருப்பொடு திரண்மணிச் சந்தமுந்திக்
குருந்துமா குரவமுங் குடசமும் பீலியுஞ் சுமந்துகொண்டு
நிரந்துமா வயல்புகு நிடுகோட் டாறுசூழ் கொச்சைமேவிப்
பொருந்தினார் திருந்தடி போற்றிவாழ் நெஞ்சமே புகலதாமே. 1

3757. ஏலமா ரிலவமோ டினமலர்த் தொகுதியா யெங்குநுந்திக்
கோலமா மிளகொடு கொழுங்கனி கொன்றையுங் கொண்டுகோட்டா
றாலியா வயல்புகு மணிதரு கொச்சையே நச்சிமேவும்
நீலமார் கண்டனை நினைமட நெஞ்சமே யஞ்சல்நீயே. 2

3758. பொன்னுமா மணிகொழித் தெறிபுனற் கரைகள்வாய் நுரைகளுந்திக்
கன்னிமார் முலைநலங் கவரவந் தேறுகோட் டாறுசூழ
மன்னினார் மாதொடும் மருவிடங் கொச்சையே மருவினாளும்
முன்னைநோய் தொடருமா றில்லைகாண் நெஞ்சமே யஞ்சல்நீயே.3

3759. கந்தமார் கேதகைச் சந்தனக் காடுசூழ் கதலிமாடே
வந்துமா வள்ளையின் பவரளிக் குவளையைச் சாடியோடக்
கொந்துவார் குழலினார் குதிகொள்கோட் டாறுசூழ் கொச்சைமேய
எந்தையா ரடிநினைந் துய்யலா நெஞ்சமே யஞ்சல்நீயே. 4

3760. மறைகொளுந் திறலினா ராகுதிப் புகைகள்வா னண்டமிண்டிச்
சிறைகொளும் புனலணி செழும்பதி திகழ்மதிற் கொச்சைதன்பால்
உறைவிட மெனமன மதுகொளும் பிரமனார் சிரமறுத்த
இறைவன தடியிணை யிறைஞ்சிவாழ் நெஞ்சமே யஞ்சல்நீயே.5

3761. சுற்றமு மக்களுந் தொக்கஅத் தக்கனைச் சாடியன்றே
உற்றமால் வரையுமை நங்கையைப் பங்கமா வுள்கினானோர்
குற்றமில் லடியவர் குழுமிய வீதிசூழ் கொச்சை மேவி
நற்றவ மருள்புரி நம்பனை நம்பிடாய் நாளுநெஞ்சே. 6

3762. கொண்டலார் வந்திடக் கோலவார் பொழில்களிற் கூடிமந்தி
கண்டவார் கழைபிடித் தேறிமா முகில்தனைக் கதுவுகொச்சை
அண்டவா னவர்களு மமரரு முனிவரும் பணியஆலம்
உண்டமா கண்டனார் தம்மையே யுள்குநீ யஞ்சல்நெஞ்சே. 7

3763. அடலெயிற் றரக்கனார் நெருக்கிமா மலையெடுத் தார்த்த வாய்கள்
உடல்கெடத் திருவிர லூன்றினா ருறைவிட மொளிகொள் வெள்ளி
மடலிடைப் பவளமும் முத்தமுந் தொத்துவண் புன்னைமாடே
பெடையொடுங் குருகினம் பெருகுதண் கொச்சையே பேணுநெஞ்சே. 8

3764. அரவினிற் றுயில்தரு மரியுநற் பிரமனு மன்றயர்ந்து
குரைகழல் திருமுடி யளவிட அரியவர் கொங்கு செம்பொன்
விரிபொழி லிடைமிகு மலைமகள் மகிழ்தர வீற்றிருந்த
கரியநன் மிடறுடைக் கடவுளார் கொச்சையே கருதுநெஞ்சே. 9

3765. கடுமலி யுடலுடை யமணருங் கஞ்சியுண் சாக்கியரும்
இடுமற வுரைதனை யிகழ்பவர் கருதுநம் மீசர்வானோர்
நடுவுறை நம்பனை நான்மறை யவர்பணிந் தேத்தஞாலம்
உடையவன் கொச்சையே யுள்கிவாழ் நெஞ்சமே யஞ்சல் நீயே. 10

3766. காய்ந்துதங் காலினாற் காலனைச் செற்றவர் கடிகொள்கொச்சை
ஆய்ந்துகொண் டிடமென இருந்தநல் லடிகளை யாதரித்தே
ஏய்ந்ததொல் புகழ்மிகு மெழில்மறை ஞானசம் பந்தன்சொன்ன
வாய்ந்தஇம் மாலைகள் வல்லவர் நல்லர்வா னுலகின் மேலே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 90. திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் : பண் – சாதாரி

3767. ஓங்கிமே லுழிதரு மொலிபுனற் கங்கையை யொருசடைமேல்
தாங்கினா ரிடுபலி தலைகல னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினா லுமையொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 1

3768. தூறுசேர் சுடலையிற் சுடரெரி யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண் பிறைபுல்கு சடைமுடியார்
நாறுசாந் திளமுலை யரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 2

3769. மழைவள ரிளமதி மலரொடு தலைபுல்கு வார்சடைமேல்
கழைவளர் புனல்புகக் கண்டவெங் கண்ணுதற் கபாலியார்தாம்
இழைவளர் துகிலல்கு லரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விழைவளர் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 3

3770. கரும்பன வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க் கொன்றையஞ் சுடர்ச்சடையார்
அரும்பன வனமுலை யரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடந் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 4

3771. வளங்கிளர் மதியமும் பொன்மலர்க் கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தளங் கண்ணுதற் கபாலியார்தம்
துளங்குநூன் மார்பின ரரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 5

3772. பொறியுலா மடுபுலி யுரிவையர் வரியராப் பூண்டிலங்கும்
நெறியுலாம் பலிகொளு நீர்மையர் சீர்மையை நினைப்பரியார்
மறியுலாங் கையினர் மங்கையோ டொருபக லமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 6

3773. புரிதரு சடையினர் புலியுரி யரையினர் பொடியணிந்து
திரிதரு மியல்பினர் திரிபுர மூன்றையுந் தீவளைத்தார்
வரிதரு வனமுலை மங்கையோ டொருபக லமர்ந்தபிரான்
விரிதரு துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 7

3774. நீண்டிலங் கவிரொளி நெடுமுடி யரக்கனிந் நீள்வரையைக்
கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ னாள்வினை கீழ்படுத்தார்
பூண்டநூல் மார்பின ரரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
வேண்டிடந் துருத்தியா ரிரவிடத் துறைவர் வேள்விக்குடியே. 8

3775. கரைகட லரவணைக் கடவுளுந் தாமரை நான்முகனும்
குரைகழ லடிதொழக் கூரெரி யெனநிறங் கொண்டபிரான்
வரைகெழு மகளொடும் பகலிடம் புகலிடம் வண்பொழில்சூழ்
விரைகமழ் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 9

3776. அயமுக வெயினிலை யமணருங் குண்டருஞ் சாக்கியரும்
நயமுக வுரையினர் நகுவன சரிதைகள் செய்துழல்வார்
கயலன வரிநெடுங் கண்ணியோ டொருபக லமர்ந்தபிரான்
வியனகர்த் துருத்தியா ரிரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 10

3777. விண்ணுலாம் விரிபொழில் விரைமணற் றுருத்திவேள் விக்குடியும்
ஒண்ணுலா மொலிகழ லாடுவா ரரிவையோ டுறைபதியை
நண்ணுலாம் புகலியு ளருமறை ஞானசம் பந்தன் சொன்ன
பண்ணுலா மருந்தமிழ் பாடுவா ராடுவார் பழியிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திருவடகுரங்காடுதுறை : பண் – சாதாரி

3778. கோங்கமே குரவமே கொழுமலர்ப் புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி யடிகளா ரிடமென விரும்பினாரே. 1

3779. மந்தமா யிழிமதக் களிற்றிள மருப்பொடு பொருப்பின்நல்ல
சந்தமா ரகிலொடு சாதியின் பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
எந்தையா ரிணையடி யிமையவர் தொழுதெழு மியல்பினாரே.2

3780. முத்துமா மணியொடு முழைவள ராரமும் முகந்துநுந்தி
எத்துமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
மத்தமா மலரொடு மதிபொதி சடைமுடி யடிகள்தம்மேல்
சித்தமா மடியவர் சிவகதி பெறுவது திண்ணமன்றே. 3

3781. கறியுமா மிளகொடு கதலியின் பலங்களுங் கலந்துநுந்தி
எறியுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
மறியுலாங் கையினர் மலரடி தொழுதெழ மருவுமுள்ளக்
குறியினா ரவர்மிகக் கூடுவார் நீடுவா னுலகினூடே. 4

3782. கோடிடைச் சொரிந்ததே னதனொடுங் கொண்டல்வாய் விண்டமுன்னீர்
காடுடைப் பீலியுங் கடறுடைப் பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
பீடுடைச் சடைமுடி யடிகளா ரிடமெனப் பேணினாரே. 5

3783 கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார் திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை நினையவல் வினைகள்வீடே. 6.7

3784. நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே. 8

3785. பொருந்திறற் பெருங்கைமா வுரித்துமை யஞ்சவே யொருங்குநோக்கிப்
பெருந்திறத் தநங்கனை யநங்கமா விழித்ததும் பெருமைபோலும்

வருந்திறற் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை யல்லல்கண் டோங்கிய அடிகளாரே. 9

3786. கட்டமண் தேரருங் கடுக்கடின் கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும் பெருவரைப் பண்டமுந்தி
எட்டுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறைச்
சிட்டனா ரடிதொழச் சிவகதி பெறுவது திண்ணமாமே. 10

3787. தாழிளங் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு சடைமுடிப் புண்ணியனைக்
காழியா னருமறை ஞானசம் பந்தன கருதுபாடல்
கோழையா அழைப்பினுங் கூடுவார் நீடுவா னுலகினூடே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 92. திருநெல்வேலி : பண் – சாதாரி

3788. மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத்துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 1

3789. என்றுமோ ரியல்பின ரெனநினை வரியவ ரேறதேறிச்
சென்றுதாஞ் செடிச்சியர் மனைதொறும் பலிகொளு மியல்பதுவே
துன்றுதண் பொழிநுழைந் தெழுவிய கேதகைப் போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 2

3790. பொறிகிள ரரவமும் போழிள மதியமுங் கங்கையென்னும்
நெறிபடு குழலியைச் சடைமிசைச் சுலவிவெண் ணீறுபூசிக்
கிறிபட நடந்துநற் கிளிமொழி யவர்மனங் கவர்வர்போலுஞ்
செறிபொழில் தழுவிய திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 3

3791. காண்டகு மலைமகள் கதிநிலா முறுவல்செய் தருளவேயும்
பூண்டநா கம்புறங் காடரங் காநட மாடல்பேணி
ஈண்டுமா மாடங்கள் மாளிகை மீதெழு கொடிமதியம்
தீண்டிவந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 4

3792. ஏனவெண் கொம்பொடு மெழில்திகழ் மத்தமு மிளஅரவும்
கூனல்வெண் பிறைதவழ் சடையினர் கொல்புலித் தோலுடையார்
ஆனினல் லைந்துகந் தாடுவர் பாடுவ ரருமறைகள்
தேனில்வண் டமர்பொழிற் றிருநெல்வே லியுறை செல்வர்தாமே. 5

3793. வெடிதரு தலையினர் வேனல்வெள் ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியத ளாடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர் மாதரை மையல்செய்வார்
செடிபடு பொழிலணி திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 6

3794. அக்குலா மரையினர் திரையுலா முடியின ரடிகளன்று
தக்கனார் வேள்வியைச் சாடிய சதுரனார் கதிர்கொள்செம்மை
புக்கதோர் புரிவினர் வரிதரு வண்டுபண் முரலுஞ்சோலைத்
திக்கெலாம் புகழுறுந் திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 7

3795. முந்திமா விலங்கலன் றெடுத்தவன் முடிகள்தோள் நெரிதரவே
உந்திமா மலரடி யொருவிர லுகிர்நுதி யாலடர்த்தார்
கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை
சிந்துபூந் துறைகமழ் திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 8

3796. பைங்கண்வா ளரவணை யவனொடு பனிமல ரோனுங்காணா
அங்கணா அருளென அவரவர் முறைமுறை யிறைஞ்சநின்றார்
சங்கநான் மறையவர் நிறைதர அரிவைய ராடல்பேணத்
திங்கணாள் விழமல்கு திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 9

3797. துவருறு விரிதுகி லாடையர் வேடமில் சமணரென்னும்
அவருறு சிறுசொலை யவமென நினையுமெம் மண்ணலார்தாம்
கவருறு கொடிமல்கு மாளிகைச் சூளிகை மயில்களாலத்
திவருறு மதிதவழ் திருநெல்வே லியுறை செல்வர்தாமே. 10

3798. பெருந்தண்மா மலர்மிசை யயனவ னனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வே லியுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடமல்கு புகலியுள் ஞானசம் பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா டக்கெடு மருவினையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. திருஅம்பர்மாகாளம் : பண் – சாதாரி

3799. படியுளார் விடையினர் பாய்புலித் தோலினர் பாவநாசர்
பொடிகொள்மா மேனியர் பூதமார் படையினர் பூணநூலர்
கடிகொள்மா மலரிடு மடியினர் பிடிநடை மங்கையோடும்
அடிகளா ரருள்புரிந் திருப்பிட மம்பர்மா காளந்தானே. 1

3800. கையின்மா மழுவினர் கடுவிட முண்டஎங் காளகண்டர்
செய்யமா மேனிய ரூனம ருடைதலைப் பலிதிரிவார்
வையமார் பொதுவினின் மறையவர் தொழுதொழு நடமதாடும்
ஐயன்மா தேவியோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே.. 2

3801. பரவின அடியவர் படுதுயர் கெடுப்பவர் பரிவிலார்பால்
கரவினர் கனலன வுருவினர் படுதலைப் பலிகொடேகும்
இரவினர் பகலெரி கானிடை யாடிய வேடர்பூணும்
அரவின ரரிவையோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே. 3

3802. நீற்றினர் நீண்டவார் சடையினர் படையினர் நிமலர்வெள்ளை
ஏற்றின ரெரிபுரி கரத்தினர் புரத்துளா ருயிரைவவ்வும்
கூற்றினர் கொடியிடை முனிவுற நனிவருங் குலவுகங்கை
ஆற்றின ரரிவையோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே. 4

3803. புறத்தின ரகத்துளர் போற்றிநின் றழுதெழு மன்பர்சிந்தைத்
திறத்தின ரறிவிலாச் செதுமதித் தக்கன்றன் வேள்விசெற்ற
மறத்தினர் மாதவர் நால்வருக் காலின்கீ ழருள்புரிந்த
அறத்தின ரரிவையோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே. 5

3804. பழகமா மலர்பறித் திண்டைகொண் டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனார் குணம்புகழ்ந் தேத்துவா ரவர்பலர் கூடநின்ற
கழகனார் கரியுரித் தாடுகங் காளர்நங் காளியேத்தும்
அழகனா ரரிவையோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே. 6

3805. சங்கவார் குழையினர் தழலன வுருவினர் தமதருளே
எங்குமா யிருந்தவ ரருந்தவ முனிவருக் களித்துகந்தார்
பொங்குமா புனல்பரந் தரிசிலின் வடகரை திருத்தம்பேணி
அங்கமா றோதுவா ரிருப்பிட மம்பர்மா காளந்தானே. 7

3806. பொருசிலை மதனனைப் பொடிபட விழித்தவர் பொழிலிலங்கைக்
குரிசிலைக் குலவரைக் கீழுற அடர்த்தவர் கோயில்கூறில்
பெருசிலை நலமணி பீலியொ டேலமும் பெருகநுந்தும்
அரசிலின் வடகரை யழகம ரம்பர்மா காளந்தானே. 8

3807. வரியரா அதன்மிசைத் துயின்றவன் றானுமா மலருளானும்
எரியரா மணிகழ லேத்தவொண் ணாவகை யுயர்ந்துபின்னும்
பிரியரா மடியவர்க் கணியராய்ப் பணிவிலா தவருக்கென்றும்
அரியரா யரிவையோ டிருப்பிட மம்பர்மா காளந்தானே. 9

3808. சாக்கியக் கயவர்வன் தலைபறிக் கையரும் பொய்யினால்நூல்
ஆக்கிய மொழியவை பிழையவை யாதலில் வழிபடுவீர்
வீக்கிய அரவுடைக் கச்சையா னிச்சையா னவர்கட்கெல்லாம்
ஆக்கிய அரனுறை யம்பர்மா காளமே யடைமினீரே. 10

3809. செம்பொன்மா மணிகொழித் தெழுதிரை வருபுன லரிசில்சூழ்ந்த
அம்பர்மா காளமே கோயிலா அணங்கினோ டிருந்தகோனைக்
கம்பினார் நெடுமதிற் காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன
நம்பிநாள் மொழிபவர்க் கில்லையாம் வினைநலம் பெறுவர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 94. திருவெங்குரு : திருமுக்கால். பண் – சாதாரி

3810. விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய
சுண்ணவெண் பொடியணி வீரே
சுண்ணவெண் பொடியணி வீரும தொழுகழல்
எண்ணவல் லாரிட ரிலரே. 1

3811. வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆதிய அருமறை யீரே
ஆதிய அருமறை யீருமை யலர்கொடு
ஓதிய ருணர்வுடை யோரே. 2

3812. விளங்குதண் பொழிலணி வெங்குரு மேவிய
இளம்பிறை யணிசடை யீரே
இளம்பிறை யணிசடை யீரும திணையடி
உளங்கொள வுறுபிணி யிலரே. 3

3813. விண்டலர் பொழிலணி வெங்குரு மேவிய
வண்டமர் வளர்சடை யீரே

வண்டமர் வளர்சடை யீருமை வாழ்த்துமத்
தொண்டர்கள் துயர்பிணி யிலரே. 4

3814. மிக்கவர் தொழுதெழு வெங்குரு மேவிய
அக்கினொ டரவசைத் தீரே
அக்கினொ டரவசைத் தீரும தடியிணை
தக்கவ ருறுவது தவமே. 5

3815. வெந்தவெண் பொடியணி வெங்குரு மேவிய
அந்தமில் பெருமையி னீரே
அந்தமில் பெருமையி னீருமை யலர்கொடு
சிந்தைசெய் வோர்வினை சிதைவே. 6

3816. விழமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அழல்மல்கு மங்கையி னீரே
அழல்மல்கு மங்கையி னீருமை யலர்கொடு
தொழஅல்லல் கெடுவது துணிவே. 7

3817. வித்தக மறையவர் வெங்குரு மேவிய
மத்தநன் மலர்புனை வீரே
மத்தநன் மலர்புனை வீரும தடிதொழுஞ்
சித்தம துடையவர் திருவே. 8

3818. மேலவர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆலநன் மணிமிடற் றீரே
ஆலநன் மணிமிடற் றீரும தடிதொழுஞ்
சீலம துடையவர் திருவே. 9

3819. விரைமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அரைமல்கு புலியத ளீரே
அரைமல்கு புலியத ளீரும தடியிணை
உரைமல்கு புகழவ ருயர்வே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. திருஇன்னம்பர் : திருமுக்கால். பண் – சாதாரி

3820. எண்டிசைக் கும்புக ழின்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் குந்தொழி லோரே. 1

3821. யாழ்நரம் பின்னிசை யின்னம்பர் மேவிய
தாழ்தரு சடைமுடி யீரே
தாழ்தரு சடைமுடி யீருமைச் சார்பவர்
ஆழ்துய ரருவினை யிலரே. 2

3822. இளமதி நுதலியோ டின்னம்பர் மேவிய
வளமதி வளர்சடை யீரே
வளமதி வளர்சடை யீருமை வாழ்த்துவார்
உளமதி மிகவுடை யோரே. 3

3823. இடிகுர லிசைமுர லின்னம்பர் மேவிய
கடிகமழ் சடைமுடி யீரே
கடிகமழ் சடைமுடி யீரும கழல்தொழும்
அடியவ ரருவினை யிலரே. 4

3824. இமையவர் தொழுதெழு மின்னம்பர் மேவிய
உமையொரு கூறுடை யீரே
உமையொரு கூறுடை யீருமை யுள்குவார்
அமைகில ராகில ரன்பே. 5

3825. எண்ணரும் புகழுடை யின்னம்பர் மேவிய
தண்ணருஞ் சடைமுடி யீரே
தண்ணருஞ் சடைமுடி யீருமைச் சார்பவர்
விண்ணவ ரடைவுடை யோரே. 6

3826. எழில்திக ழும்பொழி லின்னம்பர் மேவிய
நிழல்திகழ் மேனியி னீரே
நிழல்திகழ் மேனியி னீருமை நினைபவர்
குழறிய கொடுவினை யிலரே. 7

3827. ஏத்தரும் புகழணி யின்னம்பர் மேவிய
தூர்த்தனைத் தொலைவுசெய் தீரே
தூர்த்தனைத் தொலைவுசெய் தீருமைத் தொழுபவர்
கூர்த்தநற் குணமுடை யோரே. 8

3828. இயலுளோர் தொழுதெழு மின்னம்பர் மேவிய
அயனுமா லறிவரி யீரே
அயனுமா லறிவரி யீரும தடிதொழும்
இயலுளார் மறுபிறப் பிலரே. 9

3829. ஏரமர் பொழிலணி யின்னம்பர் மேவிய
தேரமண் சிதைவுசெய் தீரே

தேரமண் சிதைவுசெய் தீருமைச் சேர்பவர்
ஆர்துய ரருவினை யிலரே. 10

3830. ஏடமர் பொழிலணி யின்னம்ப ரீசனை
நாடமர் ஞானசம் பந்தன்
நாடமர் ஞானசம் பந்தன நற்றமிழ்
பாடவல் லார்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 96. திருநெல்வெண்ணெய் : திருமுக்கால். பண் – சாதாரி

3831. நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர் நாள்தொறும்
நெல்வெணெய் மேவிய நீரே
நெல்வெணெய் மேவிய நீருமை நாள்தொறும்
சொல்வண மிடுவது சொல்லே. 1

3832. நிச்சலு மடியவர் தொழுதெழு நெல்வெணெய்க்
கச்சிள அரவசைத் தீரே
கச்சிள அரவசைத் தீருமைக் காண்பவர்
அச்சமொ டருவினை யிலரே. 2

3833. நிரைவிரி தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
அரைவிரி கோவணத் தீரே
அரைவிரி கோவணத் தீருமை யலர்கொடு
உரைவிரிப் போருயர்ந் தோரே. 3

3834. நீர்மல்கு தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
ஊர்மல்கி யுறையவல் லீரே
ஊர்மல்கி யுறையவல் லீருமை யுள்குதல்
பார்மல்கு புகழவர் பண்பே. 4

3835. நீடிளம் பொழிலணி நெல்வெணெய் மேவிய
ஆடிளம் பாப்பசைத் தீரே
ஆடிளம் பாப்பசைத் தீருமை யன்பொடு
பாடுள முடையவர் பண்பே. 5

3836. நெற்றியோர் கண்ணுடை நெல்வெணெய் மேவிய
பெற்றிகொள் பிறைநுத லீரே
பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்
கற்றறி வோர்கள்தங் கடனே. 6

3837. நிறையவர் தொழுதெழு நெல்வெணெய் மேவிய
கறையணி மிடறுடை யீரே
கறையணி மிடறுடை யீருமைக் காண்பவர்
உறைவது மும்மடிக் கீழே. 7

3838. நெருக்கிய பொழிலணி நெல்வெணெய் மேவியன்
றரக்கனை யசைவுசெய் தீரே
அரக்கனை யசைவுசெய் தீருமை யன்புசெய்
திருக்கவல் லாரிட ரிலரே. 8

3839. நிரைவிரி சடைமுடி நெல்வெணெய் மேவியன்
றிருவரை யிடர்கள்செய் தீரே
இருவரை யிடர்கள்செய் தீருமை யிசைவொடு
பரவவல் லார்பழி யிலரே. 9

3840. நீக்கிய புனலணி நெல்வெணெய் மேவிய
சாக்கியச் சமண்கெடுத் தீரே
சாக்கியச் சமண்கெடுத் தீருமைச் சார்வது
பாக்கிய முடையவர் பண்பே. 10

3841. நிலமல்கு தொல்புகழ் நெல்வெணெ யீசனை
நலமல்கு ஞானசம் பந்தன்
நலமல்கு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலமல்கு வார்துய ரிலரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 97. திருச்சிறுகுடி : திருமுக்கால். பண் – சாதாரி

3842. திடமலி மதிலணி சிறுகுடி மேவிய
படமலி யரவுடை யீரே
படமலி யரவுடை யீருமைப் பணிபவர்
அடைவது மமருல கதுவே. 1

3843. சிற்றிடை யுடன்மகிழ் சிறுகுடி மேவிய
சுற்றிய சடைமுடி யீரே
சுற்றிய சடைமுடி யீரும தொழுகழல்
உற்றவ ருறுபிணி யிலரே. 2

3844. தெள்ளிய புனலணி சிறுகுடி மேவிய
துள்ளிய மானுடை யீரே
துள்ளிய மானுடை யீரும தொழுகழல்
உள்ளுதல் செயநல முறுமே. 3

3845. செந்நெல வயலணி சிறுகுடி மேவிய
ஒன்னலர் புரமெரித் தீரே
ஒன்னலர் புரமெரித் தீருமை யுள்குவார்
சொன்னல முடையவர் தொண்டே. 4

3846. செற்றினின் மலிபுனற் சிறுகுடி மேவிய
பெற்றிகொள் பிறைமுடி யீரே
பெற்றிகொள் பிறைமுடி யீருமைப் பேணிநஞ்
சற்றவ ரருவினை யிலரே. 5

3847. செங்கயல் புனலணி சிறுகுடி மேவிய
மங்கையை யிடமுடை யீரே
மங்கையை யிடமுடை யீருமை வாழ்த்துவார்
சங்கைய திலர்நலர் தவமே. 6

3848. செறிபொழில் தழுவிய சிறுகுடி மேவிய
வெறிகமழ் சடைமுடி யீரே
வெறிகமழ் சடைமுடி யீருமை விரும்பிமெய்ந்
நெறியுணர் வோருயர்ந் தோரே. 7

3849. திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய
தசமுக னுரநெரித் தீரே
தசமுக னுரநெரித் தீருமைச் சார்பவர்
வசையறு மதுவழி பாடே. 8

3850. செருவரை வயலமர் சிறுகுடி மேவிய
இருவரை யசைவுசெய் தீரே
இருவரை யசைவுசெய் தீருமை யேத்துவார்
அருவினை யொடுதுய ரிலரே. 9

3851. செய்த்தலை புனலணி சிறுகுடி மேவிய
புத்தரொ டமண்புறத் தீரே
புத்தரொ டமண்புறத் தீருமைப் போற்றுதல்
பத்தர்கள் தம்முடைப் பரிசே. 10

3852. தேனமர் பொழிலணி சிறுகுடி மேவிய
மானமர் கரமுடை யீரே
மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய
ஞானசம் பந்தன தமிழே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 98. திருவீழிமிழலை : திருமுக்கால். பண் – சாதாரி

3853.வெண்மதி தவழ்மதில் மிழலையு ளீர்சடை
ஒண்மதி யணியுடை யீரே
ஒண்மதி யணியுடை யீருமை யுணர்பவர்
கண்மதி மிகுவது கடனே. 1

3854.விதிவழி மறையவர் மிழலையு ளீர்நடம்
சதிவழி வருவதோர் சதிரே
சதிவழி வருவதோர் சதிருடை யீருமை
அதிகுணர் புகழ்வது மழகே. 2

3855.விரைமலி பொழிலணி மிழலையு ளீரொரு
வரைமிசை யுறைவதும் வலதே
வரைமிசை யுறைவதோர் வலதுடை யீருமை
உரைசெயு மவைமறை யொலியே. 3

3856.விட்டெழில் பெறுபுகழ் மிழலையு ளீர்கையில்
இட்டெழில் பெறுகிற தெரியே
இட்டெழில் பெறுகிற தெரியுடை யீர்புரம்
அட்டது வரைசிலை யாலே. 4

3857.வேல்நிகர் கண்ணியர் மிழலையு ளீர்நல
பால்நிக ருருவுடை யீரே
பால்நிக ருருவுடை யீரும துடனுமை
தான்மிக வுறைவது தவமே. 5

3858.விரைமலி பொழிலணி மிழலையு ளீர்செனி
நிரையுற அணிவது நெறியே
நிரையுற அணிவதோர் நெறியுடை யீரும
தரையுற அணிவன அரவே. 6

3859.விசையுறு புனல்வயல் மிழலையு ளீரர
வசையுற அணிவுடை யீரே
அசையுற அணிவுடை யீருமை யறிபவர்
நசையுறு நாவினர் தாமே. 7

3860.விலங்கலொண் மதிலணி மிழலையு ளீரன்றவ்
இலங்கைமன் னிடர்கெடுத் தீரே
இலங்கைமன் னிடர்கெடுத் தீருமை யேத்துவார்
புலன்களை முனிவது பொருளே. 8

3861. வெற்பமர் பொழிலணி மிழலையு ளீருமை
அற்புத னயனறி யானே
அற்புத னயனறி யாவகை நின்றவன்
நற்பத மறிவது நபமே. 9

3862. வித்தக மறையவர் மிழலையு ளீரன்று
புத்தரொ டமணழித் தீரே
புத்தரொ டமணழித் தீருமைப் போற்றுவார்
பத்திசெய் மனமுடை யவரே. 10

3863. விண்பயில் பொழிலணி மிழலையு ளீசனைச்
சண்பையுள் ஞானசம் பந்தன்
சண்பையுள் ஞானசம் பந்தன தமிழிவை
ஒண்பொரு ளுணர்வது முணர்வே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 99. திருமுதுகுன்றம் : திருமுக்கால். பண் – சாதாரி

3864. முரசதிர்ந் தெழுதரு முதுகுன்ற மேவிய
பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்
அரசர்க ளுலகிலா வாரே. 1

3865. மொய்குழ லாளொடு முதுகுன்ற மேவிய
பையர வம்மசைத் தீரே
பையர வம்மசைத் தீருமைப் பாடுவார்
நைவிலர் நாள்தொறும் நலமே. 2

3866. முழவமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
மழவிடை யதுவுடை யீரே
மழவிடை யதுவுடை யீருமை வாழ்த்துவார்
பழியொடு பகையிலர் தாமே. 3

3867. முருகமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
உருவமர் சடைமுடி யீரே
உருவமர் சடைமுடி யீருமை யோதுவார்
திருவொடு தேசினர் தாமே. 4,5,6,7

3868. முத்தி தருமுயர் முதுகுன்ற மேவிய
பத்து முடியடர்த் தீரே
பத்து முடியடர்த் திருமைப் பாடுவார்
சித்தநல் லவ்வடி யாரே. 8

3869. முயன்றவ ரருள்பெறு முதுகுன்ற மேவியன்
றியன்றவ ரறிவரி யீரே
இயன்றவ ரறிவரி யீருமை யேத்துவார்
பயன்தலை நிற்பவர் தாமே. 9

3870. மொட்டலர் பொழிலணி முதுகுன்ற மேவிய
கட்டமண் தேரைக்காய்ந் தீரே
கட்டமண் தேரைக்காய்ந் திருமைக் கருதுவார்
சிட்டர்கள் சீர்பெறு வாரே. 10

3871. மூடிய சோலைசூழ் முதுகுன்றத் தீசனை
நாடிய ஞானசம் பந்தன்
நாடிய ஞானசம் பந்தன செந்தமிழ்
பாடிய அவர்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 100. திருத்தோணிபுரம் : பண் – பழம்பஞ்சுரம்

3872. கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற் காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்பால் மகிழ்ந்த அற்புதஞ் செப்பரிதால்
பெரும்பக லேவந்தென் பெண்மை கொண்டு போத்தவர் சேர்ந்தஇடஞ்
சுரும்பமர் சோலைகள் சூழ்ந்த செம்மைத் தோணி புரந்தானே. 1

3873. கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க் கோமளமா துமையாள்
பங்கிய லுந்திரு மேனி யெங்கும் பால்வெள்ளை நீறணிந்து
சங்கியல் வெள்வளை சோர வந்தென் சாயல்கொண் டார்தமதூர்
துங்கியன் மாளிகை சூழ்ந்த செம்மைத் தோணி புரந்தானே. 2

3874. மத்தக் களிற்றுரி போர்க்கக் கண்டு மாதுமை பேதுறலுஞ்
சித்தந் தெளியநின் றாடி யேறூர் தீவண்ணர் சில்பலிக்கென்
றொத்தபடி வந்தென் னுள்ளங் கொண்ட ஒருவர்க் கிடம்போலுந்
துத்தநல் லின்னிசை வண்டு பாடுந் தோணி புரந்தானே. 3,4,5,6,7

3875. வள்ள லிருந்த மலையத னைவலஞ் செய்தல் வாய்மையென
உள்ளங் கொள்ளாது கொதித்தெ ழுந்தன் றெடுத்தோ னுரநெரிய
மெள்ள விரல்வைத்தெ னுள்ளங் கொண்டார் மேவு மிடம்போலுந்
துள்ளொலி வெள்ளத் தின்மேல் மிதந்த தோணி புரந்தானே. 8

3876. வெல்பற வைக்கொடி மாலு மற்றை விரைமலர் மேலயனும்
பல்பற வைப்படி யாயுயர்ந்தும் பன்றிய தாய்ப்ப ணிந்துஞ்
செல்வற நீண்டெஞ் சிந்தை கொண்ட செல்வ ரிடம்போலுந்
தொல்பற வைசுமந் தோங்கு செம்மைத் தோணி புரந்தானே. 9

3877. குண்டிகை பீலிதட் டோடு நின்று கோசரங் கொள்ளியரும்
மண்டைகை யேந்தி மனங்கொள் கஞ்சி யூணரும் வாய்மடிய
இண்டைபு னைந்தெருதே றிவந்தெ னெழில் கவர்ந்தா ரிடமாந்
தொண்டிசை பாட லறாத தொன்மைத் தோணி புரந்தானே. 10

3878. தூமரு மாளிகை மாட நீடு தோணி புரத்திறையை
மாமறை நான்கினொ டங்க மாறும் வல்லவன் வாய்மையினால்
நாமரு கேள்வி நலந்திகழு ஞான சம்பந் தன்சொன்ன
பாமரு பாடல்கள் பத்தும் வல்லார் பார்முழு தாழ்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 101. திருஇராமேச்சுரம் : பண் – பழம்பஞ்சுரம்

3879. திரிதரு மாமணி நாகமாடத் திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக் களரி யேந்தி யாடு நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்த மிலங்குகான லிராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி விமலர் செயுஞ்செயலே. 1

3880. பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரு மிராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம் மணாளர் செயுஞ்செயலே. 2

3881. அலைவளர் தண்புனல் வார்சடைமே லடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடஆடி மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியு மிராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந் தலைவர் செயுஞ்செயலே. 3

3882.மாதன நேரிழை யேர்தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரி யங்கையி லேந்தியாடுந் திறமே தெரிந்துணர்வார்
ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்து மிராமேச் சுரமேயார்
போதுவெண் திங்கள்பைங் கொன்றைசூடும் புனிதர் செயுஞ்செயலே. 4

3883.சூலமோ டொண்மழு நின்றிலங்கச் சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடஆடுங் குணமே குறித்துணர்வார்
ஏல நறும்பொழில் வண்டுபாடு மிராமேச் சுரமேய
நீலமார் கண்ட முடையவெங்கள் நிமலர் செயுஞ்செயலே. 5

3884.கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக் காமனைக் காய்ந்தவர்தாம்
இணைபிணை நோக்கிநல் லாளொடாடு மியல்பின ராகிநல்ல
இணைமலர் மேலன்னம் வைகுகான விராமேச் சுரமேயார்
அணைபிணை புல்கு கரந்தைசூடு மடிகள் செயுஞ்செயலே. 6

3885.நீரினார் புன்சடை பின்புதாழ நெடுவெண் மதிசூடி
ஊரினார் துஞ்சிருள் பாடியாடு முவகை தெரிந்துணர்வார்
ஏரினார் பைம்பொழில் வண்டுபாடு மிராமேச் சுரமேய
காரினார் கொன்றைவெண் திங்கள்சூடுங் கடவுள் செயுஞ்செயலே. 7

3886. பொன்திகழ் சுண்ணவெண் ணீறுபூசிப் புலித்தோ லுடையாக
மின்திகழ் சோதியர் பாடலாடல் மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்து மிராமேச் சுரமேயார்
குன்றினா லன்றரக் கன்தடந்தோ ளடர்த்தார்கொளுங் கொள்கையே. 8

3887.கோவலன் நான்முகன் நோக்கொணாத் குழக னழகாய
மேவல னொள்ளெரி யேந்தியாடு மிமையோ ரிறைமெய்ம்மை
ஏவல னார்புகழ்ந் தேத்திவாழ்த்து மிராமேச் சுரமேய
சேவல வெல்கொடி யேந்துகொள்கையெம் மிறைவர் செயுஞ்செயலே. 9

3888.பின்னொடு முன்னிடு தட்டைச்சாத்திப் பிரட்டே திரிவாரும்
பொன்னெடுஞ் சீவரப்பே ர்வையார்கள் புறங்கூறல் கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலு மிராமேச் சுரமேய
பன்னெடு வெண்டலை கொண்டுழலும் பரமர் செயுஞ்செயலே. 10

3889.தேவியை வவ்விய தென்னிலங்கை யரையன் திறல்வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணு மிராமேச் சுரத்தாரை

நாவியன் ஞானசம் பந்தன்நல்ல மொழியால் நவின்றேத்தும்
பாவியன் மாலை வல்லாரவர்தம் வினையாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 102. திருநாரையூர் : பண்— பழம்பஞ்சுரம்

3890. காம்பினை வென்றமென் றோளி பாகங் கலந்தா னலந்தாங்கு
தேம்புனல் சூழ்திகழ் மாமடு வில்திரு நாரை யூர்மேய
பூம்புனல் சேர்புரி புன்ச டையான் புலியின் னுரிதோல்மேல்
பாம்பினை வீக்கிய பண்ட ரங்கன் பாதம் பணிவோமே. 1

3891. தீவினை யாயின தீர்க்க நின்றான் திருநாரை யூர்மேயான்
பூவினை மேவு சடைமுடி யான்புடை சூழப் பலபூதம்
ஆவினி லைந்துங் கொண்டாட் டுகந்தா னடங்கார் மதில்மூன்றும்
ஏவினை யெய்த ழித்தான் கழலே பரவா எழுவோமே. 2

3892. மாயவன் சேயவன் வெள்ளி யவன்விடஞ் சேரும் மைமிடற்றன்
ஆயவ னாகியொ ரந்தர மும்மவ னென்று வரையாகம்
தீயவன் நீரவன் பூமி யவன்திரு நாரை யூர்தன்னில்
மேயவ னைத்தொழு வாரவர் மேல்வினை யாயின வீடுமே. 3

3893. துஞ்சிரு ளாடுவர் தூமு றுவல்து ளங்கு முடம்பினராய்
அஞ்சுட ராரெரி யாடுவாரழ லார்வி ழிக்கண்
நஞ்சுமிழ் நாக மரைக்கசைப்பர் நலனோங்கு நாரையூர்
எஞ்சிவ னார்க்கடி மைப்படு வார்க்கினி யில்லை யேதமே. 4

3894. பொங்கி ளங்கொன் றையினார் கடலில் விடமுண் டிமையோர்கள்
தங்களை யாரிடர் தீர நின்ற தலைவர் சடைமேலோர்
திங்களை வைத்தன லாடலி னார்திரு நாரை யூர்மேய
வெங்கனல் வெண்ணீ றணிய வல்லா ரவரே விழுமியரே. 5

3895. பாரு றுவாய் மையினார் பரவும் பரமேட்டி பைங்கொன்றைத்
தாரு றுமார் புடையான் மலையின் தலைவன் மலைமகளைச்
சீரு றுமா மறுகிற் சிறைவண் டறையுந் திருநாரை
ஊரு றையெம் மிறைவர்க் கிவையொன் றோடொன் றொவ்வாவே. 6

3896. கள்ளி யிடுதலை யேந்துகை யர்கரி காடர் கண்ணுதலர்
வெள்ளிய கோவண ஆடை தன்மேல் மிளிரா டரவார்த்து
நள்ளிருள் நட்டம தாடுவர் நன்னல னோங்கு நாரையூர்
உள்ளிய போழ்தி லெம்மேல் வருவல் வினையாயின வோடுமே. 7

3897. நாமமெ னப்பல வும்முடை யான்நல னோங்கு நாரையூர்
தாமொம் மெனப்ப றையாழ் குழறா ளார்க ழல்பயில
ஈம விளக்கெரி சூழ்சு டலையி யம்பும் மிடுகாட்டில்
சாமமு ரைக்கநின் றாடு வானுந் தழலாய சங்கரனே. 8

3898. ஊனு டைவெண் டலைகொண் டுழல்வா னொளிர்புன் சடைமேலோர்
வானி டைவெண் மதிவைத் துகந்தான் வரிவண் டியாழ்முரலத்
தேனு டைமா மலரன்னம் வைகுந் திருநாரை யூர்மேய
ஆனி டைஐந் துகந்தா னடியே பரவா அடைவோமே. 9

3899. தூசு புனைதுவ ராடை மேவுந் தொழிலா ருடம்பினிலுள்
மாசு புனைந்துடை நீத்தவர் கள்மயல் நீர்மை கேளாதே
தேசுடை யீர்கள் தெளிந்த டைமின் திருநாரை யூர்தன்னில்
பூசு பொடித்த லைவ ரடியா ரடியே பொருத்தமே. 10

3900. தண்ம திதாழ் பொழில்சூழ் புகலித் தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்ம திசேர் சடையா னுறையுந் திருநாரை யூர்தன்மேல்
பண்ம தியாற் சொன்ன பாடல் பத்தும் பயின்றார் வினைபோகி
மண்ம தியா துபோய்வான் புகுவர் வானோ ரெதிர்கொளவே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 103. திருவலம்புரம் : பண் – பழம்பஞ்சுரம்

3901. கொடியுடை மும்மதி லூடுருவக் குனிவெஞ்சி லைதாங்கி
இடிபட எய்த அமரர்பிரா னடியா ரிசைந்தேத்தத்
துடியிடை யாளையோர் பாகமாகத் துதைந்தா ரிடம்போலும்
வடிவுடை மேதி வயல்படியும் வலம்புர நன்னகரே. 1

3902. கோத்தகல் லாடையுங் கோவணமுங் கொடுகொட்டி கொண்டொருகைத்
தேய்த்தன் றநங்கனைத் தேசழித்துத் திசையார் தொழுதேத்தக்
காய்த்தகல் லாலதன் கீழிருந்த கடவுள் ளிடம்போலும்
வாய்த்தமுத் தீத்தொழில் நான்மறையோர் வலம்புர நன்னகரே. 2

3903. நொய்யதோர் மான்மறி கைவிரலின் நுனைமேல் நிலையாக்கி
மெய்யெரி மேனிவெண் ணீறுபூசி விரிபுன் சடைதாழ
மையிருஞ் சோலை மணங்கமழ இருந்தா ரிடம்போலும்
வைகலு மாமுழ வம்மதிரும் வலம்புர நன்னகரே. 3

3904. ஊனம ராக்கை யுடம்புதன்னை யுணரிற் பொருளன்று
தேனமர் கொன்றையி னானடிக்கே சிறுகாலை யேத்துமினோ
ஆனம ரைந்துங்கொண் டாட்டுகந்த அடிக ளிடம்போலும்
வானவர் நாள்தொறும் வந்திறைஞ்சும் வலம்புர நன்னகரே. 4

3905. செற்றெறியுந் திரையார் கலுழிச் செழுநீர்கிளர் செஞ்சடைமேல்
அற்றறியா தனலாடு நட்ட மணியார் தடங்கண்ணி
பெற்றறிவா ரெருதேற வல்ல பெருமா னிடம்போலும்
வற்றறியாப் புனல்வாய்ப் புடைய வலம்புர நன்னகரே. 5

3906. உண்ணவண் ணத்தொளி நஞ்சமுண்டு வுமையோ டுடனாகிச்
சுண்ணவண் ணப்பொடி மேனிபூசிச் சுடர்ச்சோதி நின்றிலங்கப்
பண்ணவண் ணத்தன பாணிசெய்யப் பயின்றா ரிடம்போலும்
வண்ணவண் ணப்பறை பாணியறா வலம்புர நன்னகரே. 6

3907. புரிதரு புன்சடை பொன்தயங்கப் புரிநூல் புரண்டிலங்க
விரைதரு வேழத்தி னீருரிதோல் மேல்மூடி வேய்புரைதோள்
அரைதரு பூந்துகி லாரணங்கை யமர்ந்தா ரிடம்போலும்
வரைதரு தொல்புகழ் வாழ்க்கையறா வலம்புர நன்னகரே. 7

3908. தண்டணை தோளிரு பத்தினொடுந் தலைபத் துடையானை
ஒண்டணை மாதுமை தான்நடுங்க வொருகால் விரலூன்றி
மிண்டது தீர்த்தருள் செய்யவல்ல விகிர்தர்க் கிடம்போலும்
வண்டணை தன்னொடு வைகுபொழில் வலம்புர நன்னகரே. 8

3909. தாருறு தாமரை மேலயனுந் தரணி யளந்தானும்
தேர்வறி யாவகை யாலிகலித் திகைத்துத் திரிந்தேத்தப்
பேர்வறி யாவகை யானிமிர்ந்த பெருமா னிடம்போலும்
வாருறு சோலை மணங்கமழும் வலம்புர நன்னகரே. 9

3910. காவிய நற்றுவ ராடையினார் கடுநோன்பு மேல்கொள்ளும்
பாவிகள் சொல்லைப் பயின்றறியாப் பழந்தொண்ட ருள்ளுருக
ஆவியுள் நின்றருள் செய்யவல்ல அழக ரிடம்போலும்
வாவியின் நீர்வயல் வாய்ப்புடைய வலம்புர நன்னகரே. 10

3911. நல்லிய னான்மறை யோர்புகலித் தமிழ்ஞான சம்பந்தன்
வல்லியந் தோலுடை யாடையினான் வலம்புர நன்னகரைச்
சொல்லிய பாடல்கள் பத்துஞ்சொல்ல வல்லவர் தொல்வினைபோய்ச்
செல்வன சேவடி சென்றணுகிச் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 104. திருப்பரிதிநியமம் : பண் – பழம்பஞ்சுரம்

3912. விண்கொண்ட தூமதி சூடிநீடு விரிபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்பில்வெண் ணீறுபூசிப் பேணார் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலோ டேர்கவர்ந்த கள்வர்க் கிடம்போலும்
பண்கொண்ட வண்டினம் பாடியாடும் பரிதிந் நியமமே. 1

3913. அரவொலி வில்லொலி யம்பினொலி யடங்கார் புரமூன்றும்
நிரவ்வல்லார் நிமிர்புன் சடைமேல் நிரம்பா மதிசூடி
இரவில் புகுந்தென் னெழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பரவவல் லார்வினை பாழ்படுக்கும் பரிதிந் நியமமே. 2

3914. வாண்முக வார்குழல் வாள்நெடுங்கண் வளைத்தோள் மாதஞ்ச
நீண்முக மாகிய பைங்களிற்றின் னுரிமேல் நிகழ்வித்து
நாண்முகங் காட்டி நலங்கவர்ந்த நாதர்க் கிடம்போலும்
பாண்முக வண்டினம் பாடியாடும் பரிதிந் நியமமே. 3

3915. வெஞ்சுரஞ் சேர்விளை யாடல்பேணி விரிபுன் சடைதாழத்
துஞ்சிருள் மாலையும் நண்பகலுந் துணையார் பலிதேர்ந்து
அஞ்சுரும் பார்குழல் சோரவுள்ளங் கவர்ந்தார்க் கிடம்போலும்
பஞ்சுரம் பாடிவண் டியாழ்முரலும் பரிதிந் நியமமே. 4

3916. நீர்புல்கு புன்சடை நின்றிலங்க நெடுவெண் மதிசூடித்
தார்புல்கு மார்பில்வெண் ணீறணிந்து தலையார் பலிதேர்வார்
ஏர்புல்கு சாய லெழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பார்புல்கு தொல்புக ழால்விளங்கும் பரிதிந் நியமமே. 5

3917. வெங்கடுங் காட்டகத் தாடல்பேணி விரிபுன் சடைதாழத்
திங்கள் திருமுடிமேல் விளங்கத் திசையார் பலிதேர்வார்
சங்கொடு சாய லெழில்கவர்ந்த சைவர்க் கிடம்போலும்
பைங்கொடி முல்லை படர்புறவிற் பரிதிந் நியமமே. 6

3918. பிறைவளர் செஞ்சடை பின்தயங்கப் பெரிய மழுவேந்தி
மறையொலி பாடிவெண் ணீறுபூசி மனைகள் பலிதேர்வார்
இறைவளை சோர எழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பறையொலி சங்கொலி யால்விளங்கும் பரிதிந் நியமமே. 7

3919. ஆசடை வானவர் தானவரோ டடியா ரமர்ந்தேத்த
மாசடை யாதவெண் ணீறுபூசி மனைகள் பலிதேர்வார்
காசடை மேகலை சோரவுள்ளங் கவர்ந்தார்க் கிடம்போலும்
பாசடைத் தாமரை வைகுபொய்கைப் பரிதிந் நியமமே. 8

3920.நாடினர் காண்கிலர் நான்முகனுந் திருமால் நயந்தேத்தக்
கூடல ராடல ராகிநாளுங் குழகர் பலிதேர்வார்
ஏடலர் சோர எழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பாடல ராடல ராய்வணங்கும் பரிதிந் நியமமே. 9

3921. கல்வள ராடையர் கையிலுண்ணுங் கழுக்க ளிழுக்கான
சொல்வள் மாக நினைக்க வேண்டா சுடுநீ றதுவாடி
நல்வளை சோர நலங்கவர்ந்த நாதர்க் கிடம்போலும்
பல்வளர் முல்லையங் கொல்லைவேலிப் பரிதிந் நியமமே. 10

3922.பையர வம்விரி காந்தள்விம்மு பரிதிந் நியமத்துத்
தையலொர் பாக மமர்ந்தவனைத் தமிழ்ஞான சம்பந்தன்
பொய்யிலி மாலை புனைந்தபத்தும் பரவிப் புகழ்ந்தேத்த
ஐயுற வில்லை பிறப்பறுத்தல் அவலம் மடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 105. திருக்கலிக்காமூர் : பண் – பழம்பஞ்சுரம்

3923.மடல்வரை யின்மது விம்முசோலை வயல்சூழ்ந் தழகாருங்
கடல்வரை யோதங் கலந்துமுத்தஞ் சொரியுஞ் கலிக்காமூர்
உடல்வரை யின்னுயிர் வாழ்க்கையாய வொருவன் கழலேத்த
இடர்தொட ராவினை யானசிந்தும் மிறைவன் னருளாமே. 1

3924.மைவரை போற்றிரை யோடுகூடிப் புடையே மலிந்தோதம்
கைவரை யாலவ்வளர் சங்கமெங்கு மிகுக்குங் கலிக்காமூர்
மெய்வரை யான்மகள் பாகன்றன்னை விரும்ப வுடல்வாழும்
ஐவரை யாசறுத் தாளுமென்ப ரதுவுஞ் சரதமே. 2

3925.தூவிய நீர்மல ரேந்திவையத் தவர்கள் தொழுதேத்தக்
காவியி னேர்விழி மாதரென்றுங் கவினார் கலிக்காமூர்
மேவிய ஈசனை யெம்பிரானை விரும்பி வழிபட்டால்
ஆவியுள் நீங்கல னாதிமூர்த்தி யமரர் பெருமானே. 3

3926.குன்றுகள் போற்றிரை யுந்தியந்தண் மணியார் தரமேதி
கன்றுடன் புல்கியா யம்மனைசூழ் கவினார் கலிக்காமூர்
என்றுண ரூழியும் வாழுமெந்தை பெருமா னடியேத்தி
நின்றுணர் வாரை நினையகில்லார் நீசர் நமன்தமரே. 4

3927.வானிடை வாண்மதி மாடந்தீண்ட மருங்கே கடலோதங்
கானிடை நீழலிற் கண்டல்வாழுங் கழிசூழ் கலிக்காமூர்
ஆனிடை யைந்துகந் தாடினானை யமரர் தொழுதேத்த
நானடை வாம்வண மன்புதந்த நலமே நினைவோமே. 5

3928.துறைவளர் கேதகை மீதுவாசஞ் சூழ்வான் மலிதென்றல்
கறைவள ருங்கட லோதமென்றுங் கலிக்குங் கலிக்காமூர்
மறைவள ரும்பொரு ளாயினானை மனத்தால் நினைந்தேத்த
நிறைவள ரும்புக ழெய்தும்வாதை நினையா வினைபோமே. 6

3929.கோலநன் மேனியின் மாதர்மைந்தர் கொணர்மங் கலியத்திற்
காலமும் பொய்க்கினுந் தாம்வழுவா தியற்றுங் கலிக்காமூர்
ஞாலமுந் தீவளி ஞாயிறாய நம்பன் கழலேத்தி
ஓலமி டாதவ ரூழியென்று முணர்வைத் துறந்தாரே. 7

3930.ஊரர வந்தலை நீள்முடியா னொலிநீ ருலகாண்டு
காரர வக்கடல் சூழவாழும் பதியாங் கலிக்காமூர்
தேரர வல்குலம் பேதையஞ்சத் திருந்து வரைபேர்த்தான்
ஆரர வம்பட வைத்தபாத முடையா னிடமாமே. 8

3931. அருவரை யேந்திய மாலுமற்றை யலர்மே லுறைவானும்
இருவரு மஞ்ச எரியுருவா யெழுந்தான் கலிக்காமூர்
ஒருவரை யான்மகள் பாகன்றன்னை யுணர்வால் தொழுதேத்த
திருமரு வுஞ்சிதை வில்லைச்செம்மைத் தேசுண் டவர்பாலே.
9

3932.மாசு பிறக்கிய மேனியாரு மருவுந் துவராடை
மீசு பிறக்கிய மெய்யினாரு மறியா ரவர்தோற்றங்
காசினி நீர்த்திரள் மண்டியெங்கும் வளமார் கலிக்காமூர்
ஈசனை யெந்தைபி ரானையேத்தி நினைவார் வினைபோமே. 10

3933.ஆழியுள் நஞ்சமு தாரவுண்டன் றமரர்க் கமுதுண்ண
ஊழிதோ றும்முள ரா அளித்தா னுலகத் துயர்கின்ற
காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன தமிழாற் கலிக்காமூர்
வாழி யெம்மானை வணங்கியேத்த மருவா பிணிதானே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 106. திருவலஞ்சுழி : பண் – பழம்பஞ்சுரம்

3934. பள்ளம தாய படர்சடைமேற் பயிலுந் திரைக்கங்கை
வெள்ளம தார விரும்பிநின்ற விகிர்தன் விடையேறும்
வள்ளல் வலஞ்சுழி வாணனென்று மருவி நினைந்தேத்தி
உள்ள முருக வுணருமின்க ளுறுநோ யடையாவே. 1

3935. காரணி வெள்ளை மதியஞ்சூடிக் கமழ்புன் சடைதன்மேல்
தாரணி கொன்றையுந் தண்ணெருக்குந் தழைய நுழைவித்து
வாரணி கொங்கைநல் லாள்தன்னொடும் வலஞ்சுழி மேவியவர்
ஊரணி பெய்பலி கொண்டுகந்த வுவகை யறியோமே. 2

3936. பொன்னிய லுந்திரு மேனிதன்மேற் புரிநூல் பொலிவித்து
மின்னிய லுஞ்சடை தாழவேழ வுரிபோர்த் தரவாட
மன்னிய மாமறை யோர்கள்போற்றும் வலஞ்சுழி வாணர்தம்மேல்
உன்னிய சிந்தையி னீங்ககில்லார்க் குயர்வாம் பிணிபோமே. 3

3937. விடையொரு பாலொரு பால்விரும்பு மெல்லியல் புல்கியதோர்
சடையொரு பாலொரு பாலிடங்கொள் தாழ்குழல் போற்றிசைப்ப
நடையொரு பாலொரு பால்சிலம்பு நாளும் வலஞ்சுழிசேர்
அடையொரு பாலடை யாதசெய்யுஞ் செய்கை யறியோமே. 4

3938. கையம ரும்மழு நாகம்வீணை கலைமான் மறியேந்தி
மெய்யம ரும்பொடிப் பூசிவீசுங் குழையார் தருதோடும்
பையம ரும்மர வாடஆடும் படர்சடை யார்க்கிடமாம்
மையம ரும்பொழில் சூழும்வேலி வலஞ்சுழி மாநகரே. 5

3939. தண்டொடு சூலந் தழையஏந்தித் தைய லொருபாகம்
கண்டிடு பெய்பலி பேணிநாணார் கரியி னுரிதோலர்
வண்டிடு மொய்பொழில் சூழ்ந்தமாட வலஞ்சுழி மன்னியவர்
தொண்டொடு கூடித் துதைந்துநின்ற தொடர்பைத் தொடர்வோமே.6

3940. கல்விய லும்மலை யங்கைநீங்க வளைத்து வளையாதார்
சொல்லிய லும்மதில் மூன்றுஞ்செற்ற சுடரா னிடர்நீங்க
மல்லிய லுந்திரள் தோளெம்மாதி வலஞ்சுழி மாநகரே
புல்கிய வேந்தனைப் புல்கியேத்தி யிருப்பவர் புண்ணியரே. 7

3941. வெஞ்சின வாளரக்கன் வரையை விறலா லெடுத்தான்தோள்
அஞ்சுமொ ராறிரு நான்குமொன் றுமடர்த்தா ரழகாய
நஞ்சிருள் கண்டத்து நாதரென்று நணுகு மிடம்போலும்
மஞ்சுல வும்பொழில் வண்டுகெண்டும் வலஞ்சுழி மாநகரே. 8

3942.ஏடிய னான்முகன் சீர்நெடுமா லெனநின் றவர்காணார்
கூடிய கூரெரி யாய்நிமிர்ந்த குழக ருலகேத்த
வாடிய வெண்டலை கையிலேந்தி வலஞ்சுழி மேயஎம்மான்
பாடிய நான்மறை யாளர்செய்யுஞ் சரிதை பலபலவே. 9

3943.குண்டரும் புத்தருங் கூறையின்றிக் குழுவா ருரைநீத்துத்
தொண்டருந் தன்தொழில் பேணநின்ற கழலா னழலாடி
வண்டம ரும்பொழில் மல்குபொன்னி வலஞ்சுழி வாணனெம்மான்
பண்டொரு வேள்வி முனிந்துசெற்ற பரிசே பகர்வோமே. 10

3944.வாழியெம் மானெனக் கெந்தைமேய வலஞ்சுழி மா்நகர்மேல்
காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன கருத்தின் தமிழ்மாலை
ஆழியிவ் வையகத் தேத்தவல்லா ரவர்க்குந் தமருக்கும்
ஊழி யொருபெரு மின்பமோக்கு முருவும் முயர்வாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 107. திருநாரையூர் : பண் – பழம்பஞ்சுரம்

3945.கடலிடை வெங்கடு நஞ்சமுண்ட கடவுள் விடையேறி
உடலிடை யிற்பொடிப் பூசவல்லா னுமையோ டொருபாகன்
அடலிடை யிற்சிலை தாங்கியெய்த அம்மா னடியார்மேல்
நடலைவி னைத்தொகை தீர்த்துகந்தா னிட்நாரை யூர்தானே.1

3946.விண்ணின்மின் னேர்மதி துத்திநாகம் விரிபூ மலர்க்கொன்றை
பெண்ணின்முன் னேமிக வைத்துகந்த பெருமா னெரியாடி
நண்ணிய தன்னடி யார்களோடுந் திருநாரை யூரானென்
றெண்ணுமின் நும்வினை போகும்வண்ண மிறைஞ்சுந் நிறைவாமே.2

3947.தோடொரு காதொரு காதுசேர்ந்த குழையா னிழைதோன்றும்
பீடொரு கால்பிரி யாதுநின்ற பிறையான் மறையோதி
நாடொரு காலமுஞ் சேரநின்ற திருநாரை யூரானைப்
பாடுமி னீர்பழி போகும்வண்ணம் பயிலு முயர்வாமே. 3

3948.வெண்ணில வஞ்சடை சேரவைத்து விளங்குந் தலையேந்திப்
பெண்ணி லமர்ந்தொரு கூறதாய பெருமா னருளார்ந்த
அண்ணல் மன்னியுறை கோயிலாகு மணிநாரை யூர்தன்னை
நண்ணல மர்ந்துறை வாக்குமின்கள் நடலை கரிசறு 4

3949.வானமர் திவளி நீர்நிலனாய் வழங்கும் பழியாகும்
ஊனம ரின்னுயிர் தீங்குகுற்ற முறைவாற் பிறிதின்றி
நானம ரும்பொரு ளாகிநின்றான் திருநாரை யூரெந்தை
கோனவ னைக்குறு கக்குறுகா கொடுவல் வினைதானே. 5

3950.கொக்கிற குங்குளிர் சென்னிமத்தங் குலாய மலர்சூடி
அக்கர வோடரை யார்த்துகந்த அழகன் குழகாக
நக்கம ருந்திரு மேனியாளன் திருநாரை யூர்மேவிப்
புக்கம ரும்மனத் தோர்கள்தம்மைப் புணரும் புகல்தானே. 6

3951.ஊழியு மின்பமுங் காலமாகி யுயருந் தவமாகி
ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி
நாழிகை யும்பல ஞாயிறாகி நளிர்நாரை யூர்தன்னில்
வாழியர் மேதகு மைந்தர்செய்யும் வகையின் விளைவாமே. 7

3952.கூசமிலா தரக்கன் வரையைக் குலுங்க எடுத்தான்தோள்
நாசம தாகி இறஅடர்த்த விரலான் கரவாதார்
பேசவி யப்பொடு பேணநின்ற பெரியோ னிடம்போலும்
தேசமு றப்புகழ் செம்மைபெற்ற திருநாரை யூர்தானே. 8

3953.பூமக னும்மவ னைப்பயந்த புயலார் நிறத்தானும்
ஆமள வுந்திரிந் தேத்திக்காண்ட லறிதற் கரியானூர்
பாமரு வுங்குணத் தோர்க ளீண்டிப் பலவும் பணிசெய்யும்
தேமரு வுந்திகழ் சோலைசூழ்ந்த திருநாரை யூர்தானே. 9

3954.வெற்றரை யாகிய வேடங்காட்டித் திரிவார் துவராடை
உற்றரை யோர்க ளுரைக்குஞ்சொல்லை யுணரா தெழுமின்கள்
குற்றமி லாததோர் கொள்கையெம் மான்குழகன் தொழிலாரப்
பெற்றர வாட்டிவரும் பெருமான் திருநாரை யூர்சேர்வே. 10

3955.பாடிய லுந்திரை சூழ்புகலித் திருஞான சம்பந்தன்
சேடிய லும்புக லோங்குசெம்மைத் திருநாரை யூரான்மேல்
பாடிய தண்தமிழ் மாலைபத்தும் பரவித் திரிந்தாக
வாடிய சிந்தையி னார்க்குநீங்கு மவலக் கடல்தானே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 108. திருஆலவாய் : பண் – பழம்பஞ்சுரம்
## நாலடிமேல்வைப்பு

3956. வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி யமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 1

3957. வைதி கத்தின் வழியொழு காதஅக்
கைத வம்முடைக் காரமண் தேரரை
எய்தி வாதுசெ யத்திரு வுள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 2

3958. மறைவ ழக்கமி லாதமா பாவிகள்
பறித லைக்கையர் பாயுடுப் பார்களை
முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே
மறியு லாங்கையில் மாமழு வாளனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 3

3959. அறுத்த வங்கமா றாயின நீர்மையைக்
கறுத்த வாழமண் கையர்கள் தம்மொடும்
செறுத்து வாதுசெ யத்திரு வுள்ளமே
முறித்த வாண்மதிக் கண்ணி முதல்வனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 4

3960. அந்த ணாளர் புரியு மருமறை
சிந்தை செய்யா அருகர் திறங்களைச்
சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே
வெந்த நீற தணியும் விகிர்தனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 5

3961. வேட்டு வேள்விசெ யும்பொரு ளைவிளி
மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை
ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே

காட்டி லானை யுரித்தகங் கள்வனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 6

3962. அழல தோம்பு மருமறை யோர்திறம்
விழல தென்னு மருகர் திறத்திறம்
கழல வாதுசெ யத்திரு வுள்ளமே
தழலி லங்கு திருவுருச் சைவனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 7

3963. நீற்று மேனிய ராயினர் மேலுற்ற
காற்றுக் கொள்ளவும் நில்லா அமணரைத்
தேற்றி வாதுசெ யத்திரு வுள்ளமே
ஆற்ற வாள ரக்கற்கு மருளினாய்
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 8

3964. நீல மேனி யமணர் திறத்துநின்
சீலம் வாதுசெ யத்திரு வுள்ளமே
மாலு நான்முக னுங்காண் பரியதோர்
கோல மேனிய தாகிய குன்றமே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 9

3965. அன்று முப்புரஞ் செற்ற அழகநின்
துன்று பொற்கழல் பேணா அருகரைத்
தென்ற வாதுசெ யத்திரு வுள்ளமே
கன்று சாக்கியர் காணாத் தலைவனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 10

3966. கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடல் மேனி யமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தஇப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 109. திருக்கயிலாயமும் திருவானைக்காவும் திருமயேந்திரமும் திருவாரூரும் : பண் – பழம்பஞ்சுரம்

### கூடற்சதுக்கம்

3967. மண்ணது வுண்டரி மலரோன்காணா
வெண்ணாவல் விரும்புமயேந்திரரும்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணலா ரூராதி யானைக்காவே. 1

3968. வந்துமா லயனவர் காண்பரியார்
வெந்தவெண் ணீறணி மயேந்திரரும்
கந்தவார் சடையுடைக் கயிலையாரும்
அந்தணா ரூராதி யானைக்காவே. 2

3969. மாலயன் தேடிய மயேந்திரரும்
காலனை யுயிர்கொண்ட கயிலையாரும்
வேலைய தோங்கும்வெண் ணாவலாரும்
ஆலையா ரூராதி யானைக்காவே. 3

3970. கருடனை யேறரி அயனோர் காணார்
வெருள்விடை யேறிய மயேந்திரரும்
கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளனா ரூராதி யானைக்காவே. 4

3971. மதுசூதனன் நான்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியனா ரூராதி யானைக்காவே. 5

3972. சக்கரம் வேண்டுமால் பிரமன்காணா
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூ ரானைக்காவே. 6

3973. கண்ணனும் நான்மகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயநேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலா ரூராதி யானைக்காவே. 7

3974. கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்
தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்
விடமது வுண்டவெம் மயேந்திரரும்
அடல்விடையா ரூராதி யானைக்காவே.

3975. ஆதிமா லயனவர் காண்பரியார்
வேதங்கள் துதிசெயு மயேந்திரரும்
காதிலோர் குழையுடைக் கயிலையாரும்
ஆதியா ரூரெந்தை யானைக்காவே. 9

3976. அறிவி லமண்புத்த ரறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோனயன் தேடத்தானும்
அறிவரு கயிலையோ னானைக்காவே. 10

3977. ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனஆ ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் தமிழ்சொல்லுமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 110. திருப்பிரமபுரம் – ஈரடி. பண் – பழம்பஞ்சுரம்

3978. வரமதேகொளா வுரமதேசெயும் புரமெரித்தவன் பிரமநற்புரத்
தரனனாமமே பரவுவார்கள்சீர் விரவுநீள் புவியே. 1

3979. சேணுலாமதில் வேணுமண்ணுளோர் காணமன்றலார் வேணுநற்புரத்
தாணுவின்கழல் பேணுகின்றவ ராணியொத் தவரே. 2

3980. அகலமார்தரைப் புகலுநான்மறைக்கி கலியோர்கள்வாழ் புகலிமாநகர்ப்
பகல்செய்வோனெதிர்ச் சகலசேகர னகிலநா யகனே. 3

3981. துங்கமாகரி பங்கமாவடுஞ் செங்கையானிகழ் வெங்குருத்திகழ்
அங்கணானடி தங்கையாற்றொழத் தங்குமோ வினையே. 4

3982. காணியொண்பொருட் கற்றவர்க்கீகை யுடைமையோரவர் காதல்செய்யுநற்
றோணிவண்புரத் தாணியென்பவர் தூமதி யினரே. 5

3983. எந்தராவெதிர் வாய்ந்துநுண்ணிடைப் பூந்தணோதியாள் சேர்ந்தபங்கினன்
பூந்தராய்தொழு மாந்தர்மேனிமேற் சேர்ந்திரா வினையே. 6

3984. சுரபுரத்தினைத் துயர்செய்தாரகன் துஞ்சவெஞ்சினக் காளியைத்தருஞ்
சிரபுரத்துளா னென்னவல்லவர் சித்திபெற் றவரே. 7

3985. உறவுமாகியற் றவர்களுக்குமா நிதிகொடுத்துநீள் புவியிலங்குசீர்ப்
புறவமாநகர்க் கிறைவனேயெனத் தெறகிலா வினையே. 8

3986.பண்புசேரிலங் கைக்குநாதனன் முடிகள்பத்தையுங் கெடநெரித்தவன்
சண்பையாதியைத் தொழுமவர்களைச் சாதியா வினையே. 9

3987.ஆழியங்கையிற் கொண்டமாலய னறிவொணாததோர் வடிவுகொண்டவன்
காழிமாநகர்க் கடவுள்நாமமே கற்றல்நற் றவமே. 10

3988.விச்சையொன்றிலாச் சமணர்சாக்கியப் பிச்சர்தங்களைக் கரிசறுத்தவன்
கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர் குணங்கள்கூ றுமினே. 11

3989.கழுமலத்தினுட் கடவுள்பாதமே கருதுஞானசம் பந்தனின்தமிழ்
முழுதும்வல்லவர்க் கின்பமேதரு முக்கணெம் மிறையே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 111. திருவீழிமிழலை – ஈரடி. பண் – பழம்பஞ்சுரம்

3990.வேலினேர்தரு கண்ணினாளுமை பங்கனங்கணன் மிழலைமாநகர்
ஆலநீழலின் மேவினானடிக் கன்பர்துன் பிலரே. 1

3991.விளங்குநான்மறை வல்லவேதியர் மல்குசீர்வளர் மிழலையானடி
உளங்கொள்வார்தமை யுளங்கொள்வார்வினை ஒல்லையா சறுமே.2

3992.விசையினோடெழு பசையுநஞ்சினை யசைவுசெய்தவன் மிழலைமாநகர்
இசையுமீசனை நசையின்மேவினான் மிசைசெயா வினையே.3

3993.வென்றிசேர்கொடி மூடுமாமதில் மிழலைமாநகர் மேவிநாள்தொறும்
நின்றஆதிதன் னடிநினைப்பவர் துன்பமொன் றிலரே. 4

3994.போதகந்தனை யுரிசெய்தோன்புய னேர்வரும்பொழில் மிழலைமாநகர்
ஆதரஞ்செய்த அடிகள்பாதம லாலோர்பற் றிலமே. 5

3995.தக்கன்வேள்வியைச் சாடினார்மணி தொக்கமாளிகை மிழலைமேவிய
நக்கனாரடி தொழுவர்மேல்வினை நாள்தொறுங் கெடுமே. 6

3996.போரணாவுமுப் புரமெரித்தவன் பொழில்கள்சூழ்தரு மிழலைமாநகர்ச்
சேருமீசனைச் சிந்தைசெய்பவர் தீவினை கெடுமே. 7

3997.இரக்கமில்லொழி லரக்கனாருடல் நெருக்கினான்மிகு மிழலையானடி
சிரக்கொள்பூவென ஒருக்கினார்புகழ் பரக்குநீள் புவியே. 8

3998.துன்றுபூமகன் பன்றியானவ னொன்றுமோர்கிலா மிழலையானடி
சென்றுபூம்புனல் நின்றுதூவினார் நன்றுசேர் பவரே. 9

3999.புத்தர்கைச்சமண் பித்தர்பொய்க்குவை வைத்தவித்தகன் மிழலைமாநகர்
சித்தம்வைத்தவ ரித்தலத்தினுள் மெய்த்தவத் தவரே. 10

4000. சந்தமார்பொழில் மிழலையீசனைச் சண்பைஞானசம் பந்தன்வாய்நவில்
பந்தமார்தமிழ் பத்தும்வல்லவர் பத்தரா குவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 112. திருப்பல்லவனீச்சரம் : ஈரடி பண் – பழம்பஞ்சுரம்

4001. பரசுபாணியர் பாடல்வீணையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தரசுபேணிநின் றாரிவர்தன்மை யறிவாரார். 1

4002. பட்டநெற்றியர் நட்டமாடுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திட்டமாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 2

4003. பவளமேனியர் திகழுநீற்றினர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தழகராயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 3

4004. பண்ணில்யாழினர் பயிலுமொந்தையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தண்ணலாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார் 4

4005. பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெல்லியாட்டுகந் தாரிவர்தன்மை யறிவாரார் 5

4006. பச்சைமேனியர் பிச்சைகொள்பவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திச்சையாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார் 6

4007. பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தெங்குமாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 7

4008. பாதங்கைதொழ வேதமோதுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தாதியாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 8

4009. படிகொள்மேனியர் கடிகொள்கொன்றையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தடிகளாயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 9

4010. பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திறைவராயிருப் பாரிவர்தன்மை யறிவாரார். 10

4011. வானமாள்வதற் கூனமொன்றிலை மாதர்பல்லவ னீச்சரத்தானை
ஞானசம்பந்தன் நற்றமிழ்சொல்ல வல்லவர் நல்லவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 113. திருக்கழுமலம் திருவியமகம். பண் – பழம்பஞ்சுரம்

4012. உற்றுமை சேர்வது மெய்யினையே யுணர்வது
நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே கனல்விழி
காய்வது காமனையே
அற்ற மறைப்பது முன்பணியே அமரர்கள்
செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே பிரம
புரத்தை யுகந்தனையே. 1

4013. சதிமிக வந்த சலந்தரனே தடிசிர
நேர்கொள் சலந்தரனே
அதிரொளி சேர்திகி ரிப்படையா லமர்ந்தன
ரும்பர் துதிப்படையால்
மதிதவழ் வெற்பது கைச்சிலையே மருவிட
மேற்பது கைச்சிலையே
விதியினி விட்டவி ரும்பரனே வேணு
புரத்தைவி ரும்பரனே. 2

4014. காதம ரத்திகழ் தோடினனே கானவ
னாய்க்கடி தோ்டினனே
பாதம தாற்கூற் றுதைத்தனனே பார்த்த
னுடலம் புதைத்தனனே
தாதவிழ் கொன்றை தரித்தனனே சார்ந்த
வினைய தரித்தனனே
போத மமரு முரைப் பொருளே புகலி
யமர்ந்த பரம்பொருளே. 3

4015. மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே மகிழ்ந்தரை
சேர்வது மாசுணமே
மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே வேதம
தோதுவர் மேன்மதியே
பொய்த்தலை யோடுறு மத்தமதே புரிசடை
வைத்தது மத்தமதே
வித்தக ராகிய வெங்குருவே விரும்பி
யமர்ந்தனர் வெங்குருவே. 4

4016. உடன்பயில் கின்றனன் மாதவனே யுறுபொறி
காய்ந்திசை மாதவனே
திடம்பட மாமறை கண்டனனே

திரிகுணமேவிய கண்டனனே
படங்கொ ளரவரை செய்தனனே பகடுரி
கொண்டரை செய்தனனே
தொடர்ந்த துயர்க்கொரு நஞ்சிவனே தோணிபு
ரத்துறை நஞ்சிவனே. 5

4017. திகழ்கைய தும்புகை தங்கழலே தேவர்
தொழுவதுந் தங்கழலே
இகழ்பவர் தாமொரு மானிடமே யிருந்தனு
வோடெழில் மானிடமே
மிகவரு நீர்கொளு மஞ்சடையே மின்னிகர்
கின்றது மஞ்சடையே
தக்கிர தங்கொள்வர் சுந்தரரே தக்கத
ராயுறை சுந்தரரே. 6

4018. ஓர்வரு கண்க ளிணைக்கயலே யுமையவள்
கண்க ளிணைக்கயலே
ஏர்மரு வுங்கழ னாகமதே
யெழில்கொளு தாசனனாகமதே
நீர்வருகொந்தள கங்கையதே நெடுங்சடை
மேவிய கங்கையதே
சேர்வரு யோகதி யம்பகனே சிரபுர
மேயதி யம்பகனே. 7

4019. ஈண்டு துயிலம ரப்பினனே யிருங்கணி
டந்தடி யப்பினனே
தீண்டல ரும்பரி சக்கரமே திகழ்ந்தொளி
சேர்வது சக்கரமே
வேண்டிவ ருந்தந கைத்தலையே மிகைத்தவ
ரோடுந கைத்தலையே
பூண்டனர் சேரலு மாபதியே புறவ
மமர்ந்தவு மாபதியே 8

4020. நின்மணி வாயது நீழலையே
நேசம தானவர் நீழலையே
உன்னிம னத்தெழு சங்கமதே
யொளியத னோடுறு சங்கமதே
கன்னிய ரைக்கவ ருங்களனே
கடல்விட முண்டக ருங்களனே
மன்னிவ ரைப்பதி சண்பையதே
வாரிவ யன்மலி சண்பையதே. 9

4021. இலங்கை யரக்கர் தமக்கிறையே
யிடந்துகயிலை யெடுக்கிறையே
புலன்கள் கெடவுடன் பாடினனே
பொறிகள் கெடவுடன்பாடினனே
இலங்கிய மேனி யிராவணனே
யெய்துபெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே
காழி யரனடி மாவசியே 10

4022. கண்ணிகழ் புண்டரி கத்தினனே
கலந்திரி புண்டரி கத்தினனே
மண்ணிக ழூம்பரி சேனமதே
வானக மேய்வகை சேனமதே
நண்ணி யடிமுடி யெய்தலரே
நளிர்மலி சோலையி லெய்தலரே
பண்ணியல் கொச்சை பசுபதியே
பசுமிக வூர்வர் பசுபதியே. 11

4023. பருமதில் மதுரைமன் னவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருந்தி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி லிசைமுரல் தருமருளே
கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே
வல்லவர் தம்மிடர் திடமொழியே. 12

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 114. திருக்கச்சியேகம்பம் : திருவியமகம். பண் – பழம்பஞ்சுரம்

4024. பாயுமால்விடை மேலொரு பாகனே பாவைதன்னுரு மேலொருபாகனே
தூயவானவர் வேதத் துவனியே சோதிமாலெரி வேதத்துவனியே
ஆயுநன்பொருள் நுண்பொரு ளாதியே ஆலநீழ லரும்பொரு ளாதியே
காயவின்மதன் பட்டது கம்பமே கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே. 1

4025. சடையணிந்ததும் வெண்டலை மாலையே தம்முடம்பிலும் வெண்டலை மாலையே
படையிலங்கையிற் சூலம தென்பதே பரந்திலங்கையிற் சூலம தென்பதே
புடைபரப்பன பூதகணங்களே போற்றிசைப்பன பூதக ணங்களே
கடைகள்தோறு மிரப்பது மிச்சையே கம்பமேவியி ருப்பது மிச்சையே. 2

4026. வெள்ளெருக்கொடு தும்பைமி லைச்சியே வேறுமுன்செலத்
தும்பைமி லைச்சியே
அள்ளிநீறது பூசுவ தாகமே யானமாசுண மூசுவ தாகமே
புள்ளியாடை யுடுப்ப துகத்துமே போனவூழி யுடுப்ப துகத்துமே
கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 3

4027. முற்றலாமை யணிந்த முதல்வரே மூரியாமை யணிந்த முதல்வரே
பற்றிவாளர வாட்டும் பரிசரே பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே
வற்றலோடு கலம்பலி தேர்வதே வானினோடு கலம்பலி தேர்வதே
கற்றிலாமனங் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 4

4028. வேடனாகி விசையற் கருளியே வேலநஞ்ச மிசையற் கருளியே
ஆடுபாம்பரை யார்த்த துடையதே யஞ்சுபூதமு மார்த்த துடையதே
கோடுவான்மதிக் கண்ணி யழகிதே குற்றமின்மதிக் கண்ணி யழகிதே
காடுவாழ்பதி யாவது மும்மதே கம்பமாபதி யாவது மும்மதே. 5

4029. இரும்புகைக்கொ டிதங்கழல் கையதே யிமயமாமகள் தங்கழல் கையதே
அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்கியே ஆழியான்றன்
மலர்பொறை தாங்கியே
பெரும்பகல்நட மாடுதல் செய்துமே பேதைமார்மனம் வாடுதல் செய்துமே
கரும்புமொய்த்தெழு கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்பமிருப்பதே. 6

4030. முதிரமங்கை தவஞ்செய்த காலமே முன்புமங்கை தவஞ்செய்த காலமே
வெதிர்களோடகில் சந்தமு ருட்டியே வேழமோடகில் சந்த முருட்டியே
அதிரவாறு வரத்தமு வத்தொடே யானையாடு வரத்தமு வத்தொடே
கதிர்கொள்பூண்முலைக் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே.
7

4031. பண்டரக்க னெடுத்த பலத்தையே பாய்ந்தரக்க னெடுத்த பலத்தையே
கொண்டரக்கிய துங்கால் விரலையே கோளரக்கிய துங்கால் விரலையே
உண்டுழன்றது முண்டத் தலையிலே யுடுபதிக்கிட முண்டத் தலையிலே
கண்டநஞ்ச மடக்கினை கம்பமே கடவுள்நீயிடங் கொண்டது கம்பமே. 8

4032. தூணியான சுடர்விடு சோதியே சுத்தமான சுடர்விடு சோதியே
பேணியோடு பிரமப் பறவையே பித்தனான பிரமப் பறவையே
சேணினோடு கீழூழி திரிந்துமே சித்தமோடு கீழூழி திரிந்துமே
காணநின்றன ருற்றது கம்பமே கடவுள்நீயிட முற்றது கம்பமே. 9

4033. ஒருடம்பினை யீருரு வாகவே யுன்பொருள்திற மீருரு வாகவே
ஆருமெய்தற் கரிது பெரிதுமே ஆற்றவெய்தற் கரிது பெரிதுமே
தேரும்மறி யாதுதி கைப்பரே சித்தமும்மறி யாதுதி கைப்பரே
கார்நிறத்தம ணர்க்கொரு கம்பமே கடவுள்நீயிடங் கொண்டது கம்பமே 10

4034. கந்தமார்பொழில் சூழ்தரு கம்பமே காதல்செய்பவர் தீர்த்திடு கம்பமே
புந்திசெய்து விரும்பிப்பு கலியே பூசுரன்றன் விரும்பிப்பு கலியே
அந்தமில்பொரு ளாயின கொண்டுமே யண்ணலின்பொரு ளாயின கொண்டுமே
பந்தனின்னியல் பாடிய பத்துமே பாடவல்லவ ராயின பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 115. திருஆலவாய் : திருவியமகம். பண் – பழம்பஞ்சுரம்

4035. ஆலநீழ லுகந்ததி ருக்கையே யானபாட லுகந்ததி ருக்கையே
பாலினேர்மொழி யாளொரு பங்கனே பாதமோதலர் சேர்புர பங்கனே
கோலநீறணி மேதகு பூதனே கோதிலார்மன மேவிய பூதனே
ஆலநஞ்சமு துண்டக ளத்தனே ஆலவாயுறை யண்டர்க ளத்தனே. 1

4036. பாதியாவுடன் கொண்டது மாலையே பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே
கோதில்நீறது பூசிடு மாகனே கொண்டநற்கையின் மானிட மாகனே
நாதன்நாள்தொறு மாடுவ தானையே நாடியன்றுரி செய்தது மானையே
வேதநூல்பயில் கின்றது வாயிலே விகிர்தனூர்திரு ஆலநல் வாயிலே. 2

4037. காடுநீட துறப்பல கத்தனே காதலால்நினை வார்தம கத்தனே
பாடுபேயொடு பூதம சிக்கவே பல்பிணத்தசை நாடிய சிக்கவே
நீடுமாநட மாடவி ருப்பனே நின்னடித்தொழ நாளு மிருப்பனே
ஆடல்நீள்சடை மேவிய அப்பனே ஆலவாயினின் மேவிய அப்பனே. 3

4038. பண்டயன்தலை யொன்று மறுத்தியே பாதமோதினர் பாவ மறுத்தியே
துண்டவெண்பிறை சென்னியி ருத்தியே தூயவெள்ளெரு தேறியி ருத்தியே
கண்டுகாமனை வேவவி ழித்தியே காதலில்லவர் தம்மையி ழித்தியே
அண்ட நாயக னேமிகு கண்டனே ஆலவாயினின் மேவிய கண்டனே. 4

4039. சென்றுதாதை யுகுத்தனன் பாலையே சிறியன்பு செகுத்தனன் பாலையே
வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே வீடவெட்டிடக் கண்டுமுன் காலையே
நின்றமாணியை யோடின கங்கையால் நிலவமல்கி யுதித்தன கங்கையால்
அன்றுநின்னுரு வாகத்த டவியே ஆலவாயர னாகத்த டவியே. 5

4040. நக்கமேகுவர் நாடுமோ ரூருமே நாதன்மேனியின் மாசுண மூருமே
தக்கபூமனைச் சுற்றக்க ருளொடே தாரமுய்த்தது பாணற்க ருளொடே
மிக்கதென்னவன் தேவிக்க ணியையே மெல்லநல்கிய தொண்டர்க்க ணியையே
அக்கினாரமு துண்கல னோடுமே ஆலவாயர னாருமை யோடுமே. 6

4041. வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே வெங்கண்மாசுனங் கையது குட்டியே
ஐயனேயன லாடிய மெய்யனே யன்பினால்நினை வார்க்கருள் மெய்யனே
வையமுய்யஅன்று ண்டது காளமே வள்ளல்கையது மேவுகங் காளமே
ஐயமேற்பது ரைப்பது வீணையே ஆலவாயரன் கையது வீணையே. 7

4042. தோள்கள்பத்தொடு பத்தும யக்கியே தொக்கதேவர்செ ருக்கைம யக்கியே
வாளரக்கன் நிலத்துக்க ளித்துமே வந்தமால்வரை கண்டு களித்துமே
நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே நின்விரற்றலை யான்மத மத்தனே
ஆளுமாதிமு றித்தது மெய்கொலோ ஆலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8

4043. பங்கயத்துள நான்முகன் மாலொடே பாதநீண்முடி நேடிட மாலொடே
துங்கநற்றழ லின்னுரு வாயுமே தூயபாடல்ப யின்றது வாயுமே
செங்கயற்கணி னாரிடு பிச்சையே சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே
அங்கியைத்திகழ் விப்பதி டக்கையே ஆலவாயர னாரதி டக்கையே. 9

4044. தேரரோடம ணர்க்குநல் கானையே தேவர்நாள் தொறுஞ் சேர்வது கானையே
கோரமட்டது புண்ட ரிகத்தையே கொண்டநீள்கழல் புண்டரி கத்தையே
நேரிலூர்கள ழித்தது நாகமே நீள்சடைத்திகழ் கின்றது நாகமே
ஆரமாக வுகந்தது மென்பதே ஆலவாயர னாரிட மென்பதே. 10

4045. ஈனஞானிகள் தம்மொடு விரகனே யேறுபல்பொருள் முத்தமிழ் விரகனே
ஆனகாழியுள் ஞானசம் பந்தனே ஆலவாயினின் மேயசம் பந்தனே
ஆனவானவர் வாயினு ளத்தனே யன்பரானவர் வாயினு ளத்தனே
நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 116. திருவீழிமிழலை : திருவியமகம். பண் – பழம்பஞ்சுரம்

4046. துன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்டநஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே கல்லின் மானிடக் கையதே
என்று மேறுவ திடவமே யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே நீரெனச் சிறிது முள்ளுமே. 1

4047. ஓதி வாயதும் மறைகளே யுரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே பணிகின் றேன்மிகு மாதையே
காது சேர்கனங் குழையரே காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா. 2

4048. பாடு கின்றபண் டாரமே பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே தொழுத என்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே நாக நஞ்சழலை யூருமே. 3

4049. கட்டு கின்றகழல் நாகமே காய்ந்ததும் மதன னாகமே
இட்ட மாவதிசை பாடலே யிசைந்த நூலினமர் பாடலே
கொட்டு வான்முழவம் வாணனே குலாயசீர் மிழலை வாணனே
நட்ட மாடுவது சந்தியே நானுய்தற் கிரவு சந்தியே. 4

4050. ஓவி லாதிடுங் கரணமே யுன்னு மென்னுடைக் கரணமே
ஏவு சேர்வுநின் னாணையே யருளி னின்னபொற் றாணையே
பாவி யாதுரை மெய்யிலே பயின்ற நின்னடி மெய்யிலே
மேவி னான்விறற் கண்ணனே மிழலை மேயமுக் கண்ணனே. 5

4051. வாய்ந்த மேனியெரி வண்ணமே மகிழ்ந்து பாடுவது வண்ணமே
காய்ந்து வீழ்ந்தவன் காலனே கடுந டுஞ்செயுங் காலனே
போந்த தெம்மிடை யிரவிலே புகுமிடைக் கள்வ மிரவிலே
வேய்ந்த தும்மிழலை யென்பதே விரும்பியே யணிவதென்பதே. 6

4052. அப்பி யன்றகண் ணயனுமே யமரர் கோமகனு மயனுமே
ஒப்பி லின்றமரர் தருவதே யொண்கையா லமரர் தருவதே
மெய்ப்ப யின்றவ ரிருக்கையே மிழலை யூரும திருக்கையே
செப்புமின் னெருது மேயுமே சேர்வுமக் கெருது மேயுமே. 7

4053. தான வக்குலம்வி ளக்கியே தாரகைச் செலவி ளக்கியே
வான டர்த்தகயி லாயமே வந்து மேவுகயி லாயமே
தானெ டுத்தவல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேன டைச்செலவி ருப்பனே மிழலை நற்பதிவி ருப்பனே. 8

4054. காய மிக்கதொரு பன்றியே கலந்த நின்னவுரு பன்றியே
ஏய விப்புவிம யங்கவே யிருவர் தாமனம யங்கவே
தூய மெய்த்திரள கண்டனே தோன்றி நின்றமணி கண்டனே
மேய வித்துயில்வி லக்கணா மிழலை மேவியவி லக்கணா. 9

4055. கஞ்சியைக் குலுவு கையரே கலக்கமா ரமணர் கையரே
அஞ்ச வாதிலருள் செய்யநீ யணைந்திடும் பரிசு செய்யநீ
வஞ்சனே வரவும் வல்லையே மதித்தெ னைச்சிறிதும் வல்லையே
வெஞ்ச லின்றிவரு வித்தகா மிழலைசே ரும்விறல் வித்தகா. 10

4056. மேய செஞ்சடையி னப்பனே மிழலைமே வியஎன் னப்பனே
ஏயு மாசெயவி ருப்பனே யிசைந்த வாசெயவி ருப்பனே
காய வர்க்கசம் பந்தனே காழி ஞானசம் பந்தனே
வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவர்க்கு மிவை பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 117. சீகாழி : திருமாலைமாற்று. பண் – கௌசிகம்

4057. யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா. 1

4058. யாகாயாழீ காயாகா தாயாராரா தாயாயாய
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. 2

4059. தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. 3

4060. நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. 4

4061. யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா. 5

4062. மேலேபோகா மேதேழீ காலாலேகா லானாயே
யேனாலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. 6

4063. நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. 7

4064. நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே. 8

4065. காலேமேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேமேலேகா. 9

4066. வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநிணையே யேயொழிகாவண மேயுரிவே. 10

4067. நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாதமி ழாகரனே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 118. திருக்கழுமலம் : பண் – புறநீர்மை

4068. மடல்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்
வன்னியும் மத்தமுஞ் சடைமேற்
படலொலி திரைகள் மோதிய கங்கைத்
தலைவனார் தம்மிடம் பகரில்
விடலொலி பரந்த வெண்டிரை முத்த
மிப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி யோத மோதவந் தலைக்குங்
கழுமல நகரென லாமே. 1

4069. மின்னிய அரவும் வெறிமலர் பலவும்
விரும்பிய திங்களுந் தங்கு
சென்னிய துடையான் தேவர்தம் பெருமான்
சேயிழை யோடு முறைவிடமாம்
பொன்னியல் மணியு முரிகரி மருப்புஞ்
சந்தமு முந்துவன் றிரைகள்
கன்னிய ராடக் கடலொலி மலியுங்
கழுமல நகரென லாமே. 2

4070. சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபந்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனார் தங்கிட மெங்கும்
ஊருறு பதிக ளுலகுடன் பொங்கி
யொலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையால் மிக்க
கழுமல நகரென லாமே. 3

4071. மண்ணினா ரேத்த வானுளார் பரச
அந்தரத் தமரர்கள் போற்றப்
பண்ணினா ரெல்லாம் பலபல வேட
முடையவர் பயில்விட மெங்கும்

எண்ணினால் மிக்கா ரியல்பினால் நிறைந்தா
ரேந்திழை யவரொடு மைந்தர்
கண்ணினா லின்பங் கண்டொளி பரக்குங்
கழுமல நகரென லாமே. 4

4072. சுருதியான் தலையும் நாமகள் மூக்குஞ்
சுடரவன் கரமுமுன் னியங்கு
பரிதியான் பல்லு மிறுத்தவர்க் கருளும்
பாமனார் பயின்றினி திருக்கை
விருதினான் மறையு மங்கமோ ராறும்
வேள்வியும் வேட்டவர் ஞானங்
கருதினா ருலகிற் கருத்துடை யார்சேர்
கழுமல நகரென லாமே. 5

4073. புற்றில்வா ளரவு மாமையும் பூண்ட
புனிதனார் பனிமலர்க் கொன்றை
பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த
படிறனார் பயின்றினி திருக்கை
செற்றுவன் திரைக ளொன்றொடொன் றோடிச்
செயிர்த்துவண் சங்கொடு வங்கங்
கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங்
கழுமல நகரென லாமே. 6

4074. அலைபுனற் கங்கை தங்கிய சடையா
ரடல்நெடு மதிலொரு மூன்றுங்
கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட
குழகனார் கோயில தென்பர்
மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு
மற்றுமற் றிடையிடை யெங்குங்
கலைகளித் தேறிக் கானலில் வாழுங்
கழுமல நகரென லாமே. 7

4075. ஒருக்கமுன் நினையாத் தக்கன்றன் வேள்வி
யுடைதர வுழறிய படையார்
அரக்கனை வரையா லாற்றலன் றழித்த
அழகனா ரமர்ந்துறை கோயில்
பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப்
பலபல அறங்களே பயிற்றிக்
கரக்குமா றறியா வண்மையால் வாழுங்
கழுமல நகரென லாமே. 8

4076. அருவரை பொறுத்த ஆற்றலி னானு
மணிகிளர் தாமரை யானும்
இருவரு மேத்த எரியுரு வான
இறைவனா ருறைவிடம் வினவில்
ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண
மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்
கழுமல நகரென லாமே. 9

4077. உரிந்துய ருருவி லுடைதவிர்ந் தாரு
மத்துகில் போர்த்துழல் வாருந்
தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச்
செம்மையார் நன்மையா லுறைவாங்
குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை
மல்லிகை சண்பகம் வேங்கை
கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங்
கழுமல நகரென லாமே. 10

4078. கானலங் கழனி யோதம்வந் துலவுங்
கழுமல நகருறை வார்மேல்
ஞானசம் பந்தன் நற்றமிழ் மாலை
நன்மையா லுரைசெய்து நவில்வார்
ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி
யுள்ளமு மொருவழிக் கொண்டு
வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்
மற்றிதற் காணையு நமதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 119. திருவீழிமிழலை : பண் – புறநீர்மை

4079. புள்ளித்தோ லாடை பூண்பது நாகம்
பூசுசாந் தம்பொடி நீறு
கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங்
காளியைக் குணஞ்செய்கூத் துடையோன்
அள்ளற்கா ராமை யகடுவான் மதிய
மேய்க்கமுட் டாழைக ளானை

வெள்ளைக்கொம் பீனும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 1

4080. இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோ
ரிழுகுசந் தனத்திளங் கமலப்
பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப்பாய்
பத்திசெய் யாதவர் பக்கல்
அசும்புபாய் கழனி யலர்கயன் முதலோ
டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை
விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி
மிழலையா னென்வினை கெடுமே. 2

4081. நிருத்த னாறங்கன் நீற்றன்நான் மறையன்
நீலமார் மிடற்றன்நெற் றிக்கண்
ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா
யுளனிலன் கேடிலி யுமைகோன்
திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை
சிறியவ ரறிவினின் மிக்க
விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 3

4082. தாங்கருங் காலந் தவிரவந் திருவர்
தம்மொடுங் கூடினா ரங்கம்
பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம்
பண்ணிய கண்ணுதற் பரமர்
தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச்
செண்பகம் வண்பலா இலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 4

4083. கூசுமா மயர்னங் கோயில்வா யிற்கட்
குடவயிற் றனசில பூதம்
பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி
பாதிநற் பொங்கர வரையோன்
வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர்
மலரணைந் தெழுந்தவான் தென்றல்
வீசுமாம் பொழிற்றேன் துவலைசேர் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 5

4084. பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்
பங்கயத் தயனுமோர் பாலர்
ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற
அடிகளா ரமரர்கட் கமரர்
போதுசேர் சென்னிப் புருரவாப் பணிசெய்
பூசுரர் பூமக னனைய
வேதியர் வேதத் தொலியறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 6

4085. தன்றவம் பெரிய சலந்தர னுடலந்
தடிந்தசக் கரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்
திறையவன் பிறையணி சடையன்
நின்றநாள் காலை யிருந்தநாள் மாலை
கிடந்தமண் மேல்வரு கலியை
வென்றவே தியர்கள் விழாவறா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 7

4086. கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த
கரமுரஞ் சிரநெரிந் தலற
அடர்த்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க
அருளினன் தடமிகு நெடுவாள்
படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்
பதங்களை யோதப்பா டிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 8

4087. அளவிட லுற்ற அயனொடு மாலு
மண்டமண் கெண்டியுங் காணா
முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த
முக்கணெம் முதல்வனை முத்தைத்
தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந்
தன்னிளம் பெடையொடும் புல்கி
விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு
மிழலையா னெனவினை கெடுமே. 9

4088. கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக்
கலதிகள் கட்டுரை விட்டு
அஞ்சித்தே விரிய எழுந்தநஞ் சதனை

யுண்டமா ரர்க்கமு தருளி
இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின்
குலையொடும் பழம்விழத் தெங்கின்
மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 10

4089. வேந்தவர்வந் திறைஞ்ச வேதியர் வீழி
மிழலையுள் விண்ணிழி விமானத்
தேய்ந்ததன் தேவி யோடுறை கின்ற
ஈசனை யெம்பெரு மானைத்
தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன்
தூமொழி ஞானசம் பந்தன்
வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை
வானவர் வழிபடு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 120. திருஆலவாய் : பண் – புறநீர்மை

4090. மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே. 1

4091. வெற்றவே யடியா ரடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ
னுலகினி லியற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற
ஆலவா யாவது மிதுவே. 2

4092. செந்துவர் வாயாள் சேலன கண்ணாள்
சிவன்திரு நீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிடை நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்
தண்ணெருக் கம்மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல்
ஆலவா யாவது மிதுவே. 3

4093. கணங்களாய் வரினுந் தமியராய் வரினு
மடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக் கோயில்
மணங்கமழ் கொன்றை வாளரா மதியம்
வன்னிவண் கூவிள மாலை
அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ணல்
ஆலவா யாவது மிதுவே. 4

4094. செய்யதா மரைமே லன்னமே யனைய
சேயிழை திருநுதற் செல்வி
பையர வல்குற் பாண்டிமா தேவி
நாள்தொறும் பணிந்தினி தேத்த
வெய்யவேற் சூலம் பாசமங் குசமான்
விரிகதிர் மழுவுடன் தரித்த
ஐயனா ருமையோ டின்புறு கின்ற
ஆலவா யாவது மிதுவே. 5

4095. நலமில ராக நலமதுண் டாக
நாடவர் நாடறி கின்ற
குலமில ராகக் குலமதுண் டாகத்
தவம்பணி குலச்சிறை பரவும்
கலைமலி கரத்தன் மூவிலை வேலன்
கரியுரி மூடிய கண்டன்
அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணல்
ஆலவா யாவது மிதுவே. 6

4096. முத்தின்தாழ் வடமுஞ் சந்தனக் குழம்பும்
நீறுந்தன் மார்பினின் முயங்கப்
பத்தியார் கின்ற பாண்டிமா தேவி
பாங்கொடு பணிசெய நின்ற
சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே
சுடர்மர கதமடுத் தாற்போல்

அத்தனா ருமையோ டின்புறு கின்ற
ஆலவா யாவது மிதுவே. 7

4097. நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி
நல்லராய் நல்லியல் பாகும்
கோவணம் பூதி சாதனங் கண்டாற்
றொழுதெழு குலச்சிறை போற்ற
ஏவணங் கியல்பா மிராவணன் திண்டோ
ளிருபதும் நெரிதர வூன்றி
ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல்
ஆலவா யாவது மிதுவே. 8

4098. மண்ணெலா நிகழ மன்னனாய் மன்னு
மணிமுடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ
விண்ணுளா ரிருவர் கீழொடு மேலு
மளப்பரி தாம்வகை நின்ற
அண்ணலா ருமையோ டின்புறு கின்ற
ஆலவா யாவது மிதுவே. 9

4099. தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந்
தொழுதுதன் குணத்தினைக் குலாவக்
கண்டுநாள் தோறு மின்புறு கின்ற
குலச்சிறை கருதிநின் றேத்தக்
குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்
குறியின்கண் நெறியிடை வாரா
அண்டநா யகன்றா னமர்ந்துவீற் றிருந்த
ஆலவா யாவது மிதுவே. 10

4100. பன்னலம் புணரும் பாண்டிமா தேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன்
திருவடி யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுள் ஞான
சம்பந்தன் செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவ ரிமையோ
ரேத்தவீற் றிருப்பவ ரினிதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 121. திருப்பந்தணை நல்லூர் : பண் – புறநீர்மை

4101. இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை
இவைசொல்லி யுலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர்
காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டுகூத் தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 1

4102. கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங்
காட்டுளார் நாட்டுளா ரெனவும்
வழியுளா ரெனவும் மலையுளா ரெனவும்
மண்ணுளார் விண்ணுளா ரெனவுஞ்
சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மதியார்
தொண்டர்வாய் வந்தன சொல்லும்
பழியுளார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 2

4103. காட்டினா ரெனவும் நாட்டினா ரெனவுங்
கடுந்தொழிற் காலனைக் காலால்
வீட்டினா ரெனவுஞ் சாந்த வெண்ணீறு
பூசியோர் வெண்மதி சடைமேல்
சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார்
சொல்லுள சொல்லுநால் வேதப்
பாட்டினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 3

4104. முருகினார் பொழில்சூ ழுலகினா ரேத்த
மொய்த்தபல் கணங்களின் துயர்கண்
டுருகினா ராகி யுறுதிபோந் துள்ள
மொண்மையா லொளிதிகழ் மேனி
கருகினா ரெல்லாங் கைதொழு தேத்தக்
கடலுள்நஞ் சமுதமா வாங்கிப்
பருகினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 4

4105. பொன்னினார் கொன்றை யிருவடங் கிடந்து
பொறிகிளர் பூணநூல் புரள

மின்னினா ருருவின் மிளிர்வதோ ரரவ
மேவுவெண் ணீறுமெய்ப் பூசித்
துன்னினார் நால்வர்க் கறமமர்ந் தருளித்
தொன்மையார் தோற்றமுங் கேடும்
பன்னினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 5

4106. ஒண்பொனா ரனைய அண்ணல்வாழ் கெனவு
மமையவள் கணவன்வாழ் கெனவும்
அண்பினார் பிரியா ரல்லுநன் பகலு
மடியவ ரடியிணை தொழவே
நண்பினா ரெல்லாம் நல்லரென் றேத்த
வல்லவர் தீயரென் றேத்தும்
பண்பினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 6

4107. எற்றினா ரேது மிடைகொள்வா ரில்லை
யிருநிலம் வானுல கெல்லை
தெற்றினார் தங்கள் காரண மாகச்
செருமலைந் தடியிணை சேர்வான்
முற்றினார் வாழு மும்மதில் வேவ
மூவிலைச் சூலமும் மழுவும்
பற்றினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 7

4108. ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப
வோசையா லாடல றாத
கலிசெய்த பூதங் கையினா லிடவே
காலினாற் பாய்தலு மரக்கன்
வலிகொள்வர் புலியி னுரிகொள்வ ரேனை
வாழ்வுநன் றானுமோர் தலையில்
பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 8

4109. சேற்றினார் பொய் கைத் தாமரை
யானுஞ் செங்கண்மா லிவரிரு கூறாத்
தோற்றினார் தோற்றத் தொன்மையை
யறியார் துணைமையும் பெருமையுந் தம்மில்
சாற்றினார் சாற்றி யாற்றலோ மென்னச்
சரண்கொடுத் தவர்செய்த பாவம்
பாற்றினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 9,10

4110. கல்லிசை பூணக் கலையொலி யோவாக்
கழுமல முதுபதி தன்னில்
நல்லிசை யாளன் புல்லிசை கேளா
நற்றமிழ் ஞானசம் பந்தன்
பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி
மேவிய பந்தணை நல்லூர்
சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல்
தொல்வினை சூழகி லாவே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 122. திருவோமாம்புலியூர் : பண் – புறநீர்மை

4111. பூங்கொடி மடவா ளுமையொரு பாகம்
புரிதரு சடைமுடி யடிகள்
வீங்கிருள் நட்ட மாடுமெம் விகிர்தர்
விருப்பொடு முறைவிடம் வினவில்
தேங்கமழ் பொழிலிற் செழுமலர் கோதிச்
செறிதரு வண்டிசை பாடும்
ஓங்கிய புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 1

4112. சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத்
தழலுமிழ் சக்கரம் படைத்த
எம்பெரு மானா ரிமையவ ரேத்த
இனிதினங் குறைவிடம் வினவில்
அம்பர மாகி யழலுமிழ் புகையி
னாகுதி யால்மழை பொழியும்
உம்பர்க ளேத்து மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 2

4113. பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்
படர்சடைக் கரந்தநீர்க் கங்கை
தாங்குதல் தவிர்த்துத் தராதலத் திழித்த
தத்துவ னுறைவிடம் வினவில்
ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த
அங்கையா லாகுதி வேட்கும்
ஓங்கிய மறையோ ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 3

4114. புற்றர வணிந்து நீறுமெய் பூசிப்
பூதங்கள் சூழ்தர வூரூர்

பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும்
பிரானவ னுறைவிடம் வினவில்
கற்றநால் வேத மங்கமோ ராறுங்
கருத்தினா ரருத்தியாற் றெரியும்
உற்றபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 4

4115. நிலத்தவர் வான மாள்பவர் கீழோர்
துயர்கெட நெடியமாற் கருளால்
அலைத்தவல் லசுர ராசற ஆழி
யளித்தவ னுறைவிடம் வினவில்
சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்
தன்மையார் நன்மையான் மிக்க
உலப்பில்பல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 5

4116. மணந்திகழ் திசைக ளெட்டுமே ழிசையு
மலியுமா றங்கம்ஐ வேள்வி
இணைந்தநால் வேத மூன்றெரி யிரண்டு
பிறப்பென வொருமையா லுணரும்
குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற
மற்றவை யுற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 6,7

4117. தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி
தானுடை யரக்னொண் கயிலை
அலைவது செய்த வவன்திறல் கெடுத்த
ஆதியா ருறைவிடம் வினவில்
மலையென வோங்கும் மாளிகை நிலவு
மாமதில் மாற்றல ரென்றும்
உலவுபல் புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 8

4118. கள்ளவிழ் மலர்மே விருந்தவர் கரியோ
னென்றிவர் காண்பரி தாய
ஒள்ளெரி யுருவ ருமையவ ளோடு
முகந்தினி துறைவிடம் வினவில்
பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப்
பனிமலர்ச் சோலைசூ ழாலை
ஒள்ளிய புகழா ரோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 9

4119. தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர்
தடுக்கொடு சீவர முடுக்கும்
கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக்
கடவுளா ருறைவிடம் வினவில்
நள்ளிருள் யாமம் நான்மறை தெரிந்து
நலந்திகழ் மூன்றெரி யோம்பும்
ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யதுவே. 10

4120. விளைதரு வயலுள் வெயில்செறி பவள
மேதிகண் மேய்புலத் திடறி
ஒளிதர மல்கு மோமமாம் புலியூ
ருடையவர் வடதளி யரனைக்
களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக்
காழியுள் ஞானசம் பந்தன்
அளிதரு பாடல் பத்தும்வல் லார்க
ளமரலோ கத்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 123. திருக்கோணமலை : பண் – புறநீர்மை

4121. நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே. 1

4122. கடிதென வந்த கரிதனை யுரித்து
அவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமு னித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமா மலையமர்ந் தாரே. 2

4123. பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம்
படர்சடை முடியிடை வைத்தார்

கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக
மாகமுன் கலந்தவர் மதில்மேல்
தனித்தபே ருருவ விழித்தழல் நாகந்
தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. 3

4124. பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்
பாங்குடை மதனனைப் பொடியா
விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த
விமலனார் கமலமார் பாதர்
தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்
செம்பொனு மிப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமா மலையமர்ந் தாரே. 4

4125. தாயினு நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினு மனத்து மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பால்
நீக்கி நுழைதரு நூலினர் ஞாலம்
கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. 5

4126. பரிந்துநன் மனத்தால் வழிபடு மாணி
தன்னுயிர் மேல்வருங் கூற்றைத்
திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ்
செம்மையார் நம்மையா ளுடையார்
விரிந்தயர் மௌவல் மாதவி புன்னை
வேங்கைவண் செருந்திசெண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ்
கோணமா மலையமர்ந் தாரே. 6,7

4127. எடுத்தவன் தருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி
தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வும்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புக ழாளர்
கோணமா மலையமர்ந் தாரே. 8

4128. அருவரா தொருகை வெண்டலை யேந்தி
யகந்தொறும் பலியுடன் புக்க
பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப்
பெருங்கடல் வண்ணனும் பிரமன்
இருவரு மறியா வண்ணமொள் ளெரியா
யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும்
குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமா மலையமர்ந் தாரே. 9

4129. நின்றுணுஞ் சமணு மிருந்துணுந் தேரு
நெறியலா தனபுறங் கூற
வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபால்
மெல்லிய லொடுமுட னாகித்
துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து
தாழ்ந்துறு திரைபல மோதிக்
குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங்
கோணமா மலையமர்ந் தாரே. 10

4130. குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்தன்
உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 124. திருக்குருகாவூர்வெள்ளடை : பண் – அந்தாளிக் குறிஞ்சி

4131. சுண்ணவெண் ணீறணி மார்பிற் றோல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றாடுவர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக னாரே. 1

4132. திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து
வரைமக ளோடுட னாடுதிர் மல்கு
விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய
அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே. 2

4133. அடையலர் தொன்னகர் மூன்றெரித் தன்ன
நடைமட மங்கையோர் பாக நயந்து
விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய
சடையமர் வெண்பிறைச் சங்கரன் நீரே. 3

4134. வளங்கிளர் கங்கை மடவர லோடு
களம்பட ஆடுதிர் காடரங் காக
விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய
இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே. 4

4135. சுரிகுழல் நல்ல துடியிடை யோடு
பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க
விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய
எரிமழு வாட்படை யெந்தை பிரானே. 5

4136. காவியங் கண்மட வாளொடுங் காட்டிடைத்
தீயக லேந்திநின் றாடுதிர் தேன்மலர்
மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய
ஆவினி லைந்துகொண் டாட்டுகந் தீரே. 6,11

திருச்சிற்றம்பலம்

•••••

## 125. திருநல்லூர்ப்பெருமணம் : பண் – அந்தாளிகுறிஞ்சி

4137. கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே. 1

4138. தருமண லோதஞ்சேர் தண்கடல் நித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங்கொண் டானே. 2

4139. அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. 3

4140. வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. 4

4141. ஏறுகந் தீரிடு காட்டெரி யாடிவெண்
நீறுகந் தீர்நிறை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறுகந் தீரே. 5

4142. சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டறா நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. 6

4143. மேகத்த கண்டனெண் டோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. 7

4144. தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே. 8

4145. ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. 9

4146. ஆத ரமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்
நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
வேதன தாள்தொழ வீடெளி தாமே. 10

4147. நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே. 11

திருச்சிற்றம்பலம்

**மூன்றாம் திருமுறை முற்றிற்று**

இப்பதிகம் கல்வெட்டினின்றும் எடுக்கப்பட்டது

## திருவிடைவாய்

4148. மறியார் கரத்தெந் தையம்மா துமையோடும்
பிறியா தபெம்மா னுறையு மிடமென்பர்
பொறிவாய் வரிவண் டுதன்பூம் பெடைபுல்கி
வெறியார் மலரில் துயிலும் விடைவாயே. 1

4149. ஒவ்வாத என்பே யிழையா வொளிமௌலிச்
செவ்வான் மதிவைத் தவர்சேர் விடமென்பர்
எவ்வா யிலுமே டலர்கோ டலம்போது
வெவ்வா யரவம் மலரும் விடைவாயே. 2

4150. கரையார் கடல்நஞ் சமுதுண் டவர்கங்கைத்
திரையார் சடைத்தீ வண்ணர்சேர் விடமென்பர்
குரையார் மணியுங் குளிர்சந் தமுங்கொண்டு
விரையார் புனல்வந் திழியும் விடைவாயே. 3

4151. கூசத் தழல்போல் விழியா வருகூற்றைப்
பாசத் தொடும்வீ ழவுதைத் தவர்பற்றாம்
வாசக் கதிர்ச்சா லிவெண்சா மரையே போல்
வீசக் களியன் னமல்கும் விடைவாயே. 4

4152. திரியும் புரமூன் றையுஞ்செந் தழலுண்ண
வெரியம் பெய்தகுன் றவில்லி யிடமென்பர்
கிரியுந் தருமாளி கைச்சூ ளிகைதன்மேல்
விரியுங் கொடிவான் விளிசெய் விடைவாயே. 5

4153. கிள்ளை மொழியா ளையிகழ்ந் தவன்முத்தீத்
தள்ளித் தலைதக் கனைக்கொண் டவர்சார்வாம்
வள்ளி மருங்குல் நெருங்கும் முலைச்செவ்வாய்
வெள்ளைந் நகையார் நடஞ்செய் விடைவாயே. 6

4154. பாதத் தொலிபா ரிடம்பா டநடஞ்செய்
நாதத் தொலியர் நவிலு மிடமென்பர்
கீதத்தொலியுங் கெழுமும் முழவோடு
வேதத் தொலியும் பயிலும் விடைவாயே. 7

4155. எண்ணா தஅரக் கனுரத் தைநெரித்துப்
பண்ணார் தருபா டலுகந் தவர்பற்றாங்
கண்ணார் விழவிற் கடுவீ திகள்தோறும்
விண்ணோர் களும்வந் திறைஞ்சும் விடைவாயே. 8

4156. புள்வாய் பிளந்தா னயன்பூ முடிபாதம்
ஒள்வான் நிலந்தே டுமொரு வர்க்கிடமாந்
தெள்வார் புனற்செங் கழுநீர் முகைதன்னில்
விள்வாய் நறவுண் டுவண்டார் விடைவாயே. 9

4157. உடையே துமிலார் துவராடை யுடுப்போர்
கிடையா நெறியான் கெழுமு மிடமென்பர்
அடையார் புரம்வே வமூவர்க் கருள்செய்த
விடையார் கொடியா னழகார் விடைவாயே. 10

4158. ஆறும் மதியும் பொதிவே ணியனூரா
மாறில் பெருஞ்செல் வம்மலி விடைவாயை
நாறும் பொழிற்கா ழியர்ஞான சம்பந்தன்
கூறுந் தமிழ்வல் லவர்குற் றமற்றோரே. 11

**திருச்சிற்றம்பலம்**

ௐௐௐௐௐ

**மூன்றாம் திருமுறை முற்றிற்று**

# திருநாவுக்கரசு சுவாமிகள்
# அருளிச்செய்த
# தேவாரப் பாடல்கள்

நான்காம் திருமுறை

113 பதிகங்கள் 1070 பாடல்கள்

ஐந்தாம் திருமுறை

100 பதிகங்கள் 1015 பாடல்கள்

ஆறாம் திருமுறை

99 பதிகங்கள் 981 பாடல்கள்

# நான்காம் திருமுறை

## 1. திருஅதிகை வீரட்டானம் : பண் – கொல்லி

4159. கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 1

4160. நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன்
நினையா தொருபோதும் இருந்தறியேன்
வஞ்சம்இது வொப்பது கண்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகி வந்தென்னை நலிவதனை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலு மென்னீ ரதிகைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 2

4161. பணிந்தாரண பாவங்கள் பாற்றவல்லீர்
படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர்
துணிந்தேயுமக் காட்செய்து வாழலுற்றாற்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர்
பெற்றமேற்றுகந் தீர்சுற்றும் வெண்டலைகொண்
டணிந்தீரடி கேளதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 3

4162. முன்னம்அடி யேனறி யாமையினான்
முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னையடி யேனுமக் காளும்பட்டேன்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
தன்னையடைந் தார்வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர் தங்கட னாவதுதான்
அன்னநடை யாரதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 4

4163. காத்தாள்பவர் காவ லிகழ்ந்தமையாற்
கரைநின்றவர் கண்டுகொ ளென்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்
வார்த்தையிது வொப்பது கேட்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தாபுன லாரதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 5

4164. சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலு முன்னை மறந்தறியேன்
உன்னாமம் என்னாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய்
உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய்
அலந்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 6

4165. உயர்ந்தேன்மனை வாழ்க்கையு மொண்பொருளும்
ஒருவர்தலை காவ லிலாமையினால்
வயந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால்
வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்
பயந்தேயென் வயிற்றி னகம்படியே
பறித்துப்புரட் டியறுத் தீர்த்திடநான்
அயர்ந்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 7

4166. வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம்மன மொன்று மிலாமையினால்
சலித்தாலொரு வர்துணை யாருமில்லைச்
சங்கவெண்குழைக் காதுடை யெம்பெருமான்
கலித்தேயென் வயிற்றி னகம்படியே
கலக்கிமலக் கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 8

4167. பொன்போல மிளிர்வதொர் மேனியினீர்
புரிபுன்சடை யீர்மெலி யும்பிறையீர்
துன்பேகவ லைபிணி யென்றிவற்றை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
என்போலிக ளும்மை யினித்தெளியார்

அடியார் படுவ திதுவேயாகில்
அன்பேயமை யும்மதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 9

4168. போர்த்தாயங்கோ ரானையின் ஈருரிதோல்
புறங்கா டரங்காநட மாடவல்லாய்
ஆர்த்தானரக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட் டருள்செய்த வதுகருதாய்
வேர்த்தும்புரண்டும் விழுந்தும் எழுந்தால்
என்வேதனை யான விலக்கியிடாய்
ஆர்த்தார்புனல் சூழதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

இப்பதிகம் சூலைநோய் தீர ஓதி யருளப்பட்டது.

•••••

## 2. திருஅதிகை வீரட்டானம் : பண் . காந்தாரம்

4169. சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 1

4170. பூண்டதொர் கேழ லெயிறும் பொன்றிக ழாமை புரள
நீண்டதிண் டோள்சலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண் ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்த கட்டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 2

4171. ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையு முளைத்தெழு மூவிலை வேலும்
சித்த வடமு மதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலு முடையார் ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 3

4172. மடமான் மறிபொற் கலையு மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதிண் டோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்
இடமால் தழுவிய பாக மிருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 4

4173 பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 5

4174. கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறி வாள ரறியப் படாததொர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 6

4175. கொலைவரி வேங்கை யதளுங் குலவோ டிலங்குபொற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மிடறும்
உலவு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 7

4176. ஆடல் புரிந்த நிலையும் அரையி லசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 8

4177. சூழு மரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவ ளஞ்ச அஞ்சா தருவரை போன்ற
வேழ முரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 9

4178. நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தா னொன்பது மொன்று மலற
வரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை. 10

திருச்சிற்றம்பலம்

இப்பதிகம் சமணர்களேவிய யானை அஞ்சும்படி ஓதியருளப் பட்டது.

•••••

## 3. திருவையாறு : பண் – காந்தாரம்

4179. மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.1

4180. போழிளங் கண்ணியி னானைப் பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றியென் றேத்தி வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவனின் றேத்தும் ஐயா றடைகின்ற போது
கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.2

4181. எரிப்பிறைக் கண்ணியி னானை யேந்திழை யாளொடும் பாடி
முரித்த விலயங்க ளிட்டு முகமலர்ந் தாடா வருவேன்
அரித்தொ ழுகும்வெள் ளருவி ஐயா றடைகின்றபோது
வரிக்குயில் பேடையொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.3

4182. பிறையிளங் கண்ணியி னானைப் பெய்வளை யாளொடும் பாடித்
துறையிளம் பன்மலர் தூவித் தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயி லாலும் ஐயா றடைகின்ற போது
சிறையிளம் பேடையொ டாடிச் சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.4

4183. ஏடு மதிக்கண்ணி யானை யேந்திழை யாளொடும் பாடிக்
காடொடு நாடு மலையுங் கைதொழு தாடா வருவேன்
ஆட லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
பேடை மயிலொடுங் கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.5

4184. தண்மதிக் கண்ணியி னானைத் தையனல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி யுணரா வுருகா வருவேன்
அண்ண லமர்ந்துறை கின்ற ஐயா றடைகின்ற போது
வண்ணப் பகன்றிலொ டாடி வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.6

4185. கடிமதிக் கண்ணியி னானைக் காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ண மிரண்டும் வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்
அடியிணை ஆர்க்குங் கழலான் ஐயா றடைகின்ற போது
இடிகுர லன்னதொ ரேன மிசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.7

4186. விரும்பு மதிக்கண்ணி யானை மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை யெழுந்து பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி யுந்தும் ஐயா றடைகின்ற போது
கருங்கலை பேடையொ டாடிக் கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.8

4187. முற்பிறைக் கண்ணியி னானை மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன் பாடியும் ஆடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ டையா றடைகின்ற போது
நற்றுணைப் பேடையொ டாடி நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.9

4188. திங்கள் மதிக்கண்ணி யானைத் தேமொழி யாளொடும் பாடி
எங்கருள் நல்குங்கொ லெந்தை யெனக்கினி யென்னா வருவனே
அங்கிள மங்கைய ராடும் ஐயா றடைகின்ற போது
பைங்கிளி பேடையொ டாடிப் பறந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.10

4189. வளர்மதிக் கண்ணியி னானை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலங் காண்பான் கடைக்கணிக் கின்றேன்
அளவு படாதரொ ரன்போ டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி யேறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்.11

திருச்சிற்றம்பலம்

*****

## 4. திருவாரூர் : பண் – காந்தாரம்

4190. பாடிளம் பூதத்தி னானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானும் ஒளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 1

4191. நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
அரவரைச் சாத்திநின் றானு மாரூ ரமர்ந்தவம் மானே. 2

4192. நீறுமெய் பூசவல் லானு நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானும் எரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானு நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 3

4193. கொம்புநல் வேனி லவனைக் குழைய முறுவல்செய் தானும்
செம்புனல் கொண்டெயின் மூன்றுந் தீயெழக் கண்சிவந் தானும்
வம்புநற் கொன்றையி னானும் வாட்கண்ணி வாட்டம தெய்த
அம்பர வீருரி யானு மாரூ ரமர்ந்தவம் மானே. 4

4194. ஊழி யளக்கவல் லானு முகப்பவ ருச்சியுள் ளானும்
தாழிளஞ் செஞ்சடை யானுந் தண்ணமர் திண்கொடி யானும்
தோழியர் தூதிடை யாடத் தொழுதடி யார்கள் வணங்க
ஆழி வளைக்கையி னானு மாரூ ரமர்ந்தவம் மானே. 5

4195. ஊர்திரை வேலையுள் ளானு முலகிறந் தொண்பொரு ளானும்
சீர்தரு பாடலுள் ளானுஞ் செங்கண் விடைக்கொடி யானும்
வார்தரு பூங்குழ லாளை மருவி யுடன்வைத் தவனும்
ஆதிரை நாளுகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 6

4196. தொழற்கங்கை துன்னிநின் றார்க்குத் தோன்றி யருளவல் லானும்
கழற்கங்கை பன்மலர் கொண்டு காதல் கனற்றநின் றானும்
குழற்கங்கை யாளையுள் வைத்துக் கோலச் சடைக்கரந் தானும்
அழற்கங்கை யேந்தவல் லானு மாரூ ரமர்ந்தவம் மானே. 7

4197. ஆயிரந் தாமரை போலும் ஆயிரஞ் சேவடி யானும்
ஆயிரம் பொன்வரை போலும் ஆயிரந் தோளுடை யானும்
ஆயிர ஞாயிறு போலும் ஆயிர நீண்முடி யானும்
ஆயிரம் பேருகந் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 8

4198. வீடரங் காநிறுப் பானும் விசும்பினை வேதி தொடர
ஓடரங் காகவைத் தானும் ஓங்கியொ ரூழியுள் ளானும்
காடரங் காமகிழ்ந் தானுங் காரிகை யார்கண் மனத்துள்
ஆடரங் கத்திடை யானு மாரூ ரமர்ந்தவம் மானே. 9

4199. பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 5. திருவாரூர் : பழமொழி – பண் – காந்தாரம்

4200. மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொ ழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தென் னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூரரைக்
கையினாற் றொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனே. 1

4201. என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ ருருவ மாக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட் டென்னுள்ளங் கோயி லாக்கி
அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த வாரூ ரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாறே. 2

4202. பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங் குண்டர்கள்தஞ் சொல்லே கேட்டு
உருகுவித்தென் னுள்ளத்தி னுள்ளிருந்த கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு பிணிதீர்த்த வாரூ ரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம்விலைக்குக் கொண்ட வாறே. 3

4203. குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகைநாணா துழிதர் வேனைப்
பண்டமாப் படுத்தென்னைப் பால்தலையிற் றெளித்துத்தன் பாதங் காட்டித்
தொண்டெலா மிசைபாடத் தூமுறுவ லருள்செய்யு மாரூரரைப்
பண்டெலா மறியாதே பனிநீராற் பரவைசெய்யப் பாவித் தேனே. 4

4204. துன்னாகத் தேனாகித் துர்ச்சனவர் சொற்கேட்டுத் துவர்வாய்க் கொண்டு
என்னாகத் திரிதந்தீங் கிருகையேற் றிடவுண்ட ஏழை யேனான்
பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து பொருட்படுத்த வாரூரரை
என்னாகத் திருத்தாதே யேதன்போர்க் காதனா யகப்பட் டேனே. 5

4205. பப்போதிப் பவணனாய்ப் பறித்ததொரு தலையோடே திரிதர் வேனை
ஒப்போட வோதுவித்தென் னுள்ளத்தி னுள்ளிருந்தங் குறுதி காட்டி
அப்போதைக் கப்போது மடியவர்கட் காரமுதா மாரூரரை
எப்போது நினையாதே யிருட்டறையின் மலடுகறந் தெய்த்த வாறே. 6

4206. கதியொன்று மறியாதே கண்ணழலத் தலைபறித்துக் கையி லுண்டு
பதியொன்று நெடுவீதிப் பலர்காண நகைநாணா துழிதர் வேற்கு
மதிதந்த வாரூரில் வார்தேனை வாய்மடுத்துப் பருகி யுய்யும்
விதியின்றி மதியிலியேன் விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே. 7

4207. பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற சமண்நீசர் சொல்லே கேட்டுக்
காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக் கதவடைக்குங் கள்வ னேன்றன்
ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை யாட்கொண்ட வாரூரரைப்
பாவியே னறியாதே பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்த வாறே. 8

4208. ஒட்டாத வாளவுணர் புரமூன்று மோரம்பின் வாயின் வீழக்
கட்டானைக் காமனையுங் காலனையுங் கண்ணினொடு காலின் வீழ
அட்டானை யாரூரி லம்மானை யார்வச்செற் றக்கு ரோதம்
தட்டானைச் சாராதே தவமிருக்க அவஞ்செய்து தருக்கி னேனே. 9

4209. மறுத்தானொர் வல்லரக்க னீரைந்து முடியினொடு தோளுந் தாளும்
இறுத்தானை யெழின் முளரித் தவிசின்மிசை யிருந்தான்றன் தலையிலொன்றை
அறுத்தானை யாரூரி லம்மானை யாலால முண்டு கண்டம்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்புகடித் தெய்த்த வாறே.10

திருச்சிற்றம்பலம்

*****

## 6. திருக்கழிப்பாலை : பண் . காந்தாரம்

4210. வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே யென்கின் றாளால்
சினபவளத் திண்டோண்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்ற னென்கின்றாளால்
அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலா னென்கின் றாளால்
கனபவளஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ.1

4211. வண்டுலவு கொன்றை வளர்புன் சடையானே யென்கின் றாளால்
விண்டலர்ந்து நாறுவதொர் வெள்ளெருக்க நாண்மலருண் டென்கின் றாளால்
உண்டயலே தோன்றுவதோ ருத்தரியப் பட்டுடைய னென்கின் றாளால்
கண்டயலே தோன்றுங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 2

4212. பிறந்திளைய திங்களெம் பெம்மான் முடிமேல தென்கின் றாளால்
நிறங்கிளருங் குங்குமத்தின் மேனி யவன்நிறமே யென்கின் றாளால்
மறங்கிளர்வேற் கண்ணாள் மணிசேர் மிடற்றவனே யென்கின் றாளால்
கறங்கோத மல்குங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ.3

4213. இரும்பார்ந்த சூலத்த னேந்தியோர் வெண்மழுவ னென்கின் றாளால்
சுரும்பார் மலர்க்கொன்றைச் சுண்ணவெண் ணீற்றவனே யென்கின் றாளால்
பெரும்பால னாகியோர் பிஞ்ஞகவே டத்த னென்கின் றாளால்
கரும்பானல் பூக்குங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ.4

4214. பழியிலான் புகழுடையன் பால்நீற்றன் ஆனேற்ற னென்கின் றாளால்
விழியுலாம் பெருந்தடங்கண் ணிரண்டல்ல மூன்றுளவே யென்கின் றாளால்
சுழியுலாம் வருகங்கை தோய்ந்த சடையவனே யென்கின் றாளால்
கழியுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ.5

4215. பண்ணார்ந்த வீணை பயின்ற விரலவனே யென்கின் றாளால்
எண்ணார் புரமெரித்த எந்தை பெருமானே யென்கின் றாளால்
பண்ணார் முழவதிரப் பாடலொ டாடலனே யென்கின் றாளால்
கண்ணார் பூஞ்சோலைக் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 6

4216. முதிருஞ் சடைமுடிமேல் மூழ்கு மிளநாக மென்கின் றாளால்
அதுகண் டதனருகே தோன்று மிளமதிய மென்கின் றாளால்
சதுர்வெண் பளிக்குக் குழைகாதின் மின்னிடுமே யென்கின் றாளால்
கதிர்முத்தஞ் சிந்துங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 7

4217. ஓரோத மோதி யுலகம் பலிதிரிவா னென்கின் றாளால்
நீரோத மேற நிமிர்புன் சடையானே யென்கின் றாளால்
பாரோத மேனிப் பவளம் அவனிறமே யென்கின் றாளால்
காரோத மல்குங் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 8

4218. வானுலாந் திங்கள் வளர்புன் சடையானே யென்கின் றாளால்
ஊனுலாம் வெண்டலைகொண் டூரூர் பலிதிரிவா னென்கின் றாளால்
தேனுலாங் கோதை திளைக்குந் திருமார்ப னென்கின் றாளால்
கானுலாஞ் சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 9

4219. அடர்ப்பரிய இராவணனை அருவரைக்கீ ழடர்த்தவனே யென்கின் றாளால்
சுடர்ப்பெரிய திருமேனிச் சுண்ணவெண் நீற்றவனே யென்கின் றாளால்
மடற்பெரிய ஆலின்கீ ழறநால்வர்க் கன்றுரைத்தா னென்கின் றாளால்
கடற்கருவி சூழ்ந்த கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 7. திருக்கச்சி யேகம்பம் : பண் – காந்தாரம்

4220. கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 1

4221. தேனோக்குங் கிளிமழலை உமைகேள்வன் செழும்பவளம்
தானோக்குந் திருமேனி தழலுருவாஞ் சங்கரனை
வானோக்கும் வளர்மதிசேர் சடையானை வானோர்க்கும்
ஏனோர்க்கும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 2

4222.கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே. 3

4223.அண்டமா யாதியா யருமறையொ டைம்பூதப்
பிண்டமா யுலகுக்கொர் பெய்பொருளாம் பிஞ்ஞகனைத்
தொண்டர்தாம் மலர்தூவிச் சொன்மாலை புனைகின்ற
இண்டைசேர் சடையானை யென்மனத்தே வைத்தேனே. 4

4224.ஆறேறு சடையானை ஆயிரம்பே ரம்மானைப்
பாறேறு படுதலையிற் பலிகொள்ளும் பரம்பரனை
நீறேறு திருமேனி நின்மலனை நெடுந்தூவி
ஏறேறும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே. 5

4225.தேசனைத் தேசங்கள் தொழநின்ற திருமாலால்
பூசனைப் பூசனைக ளுகப்பானைப் பூவின்கண்
வாசனை மலைநிலநீர் தீவளியா காசமாம்
ஈசனை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. 6

4226.நல்லானை நல்லான நான்மறையொ டாறங்கம்
வல்லானை வல்லார்கள் மனத்துறையும் மைந்தனைச்
சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகளேதும்
இல்லானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே.. 7

4227.விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்
புரித்தானைப் பதஞ்சந்திப் பொருளுருவாம் புண்ணியனைத்
தரித்தானைக் கங்கைநீர் தாழ்சடைமேல் மதின்மூன்றும்
எதித்தானை யெம்மானை யென்மனத்தே வைத்தேனே. 8

4228.ஆகம்பத் தரவணையா னயனறிதற் கரியானைப்
பாகம்பெண் ணாண்பாக மாய்நின்ற பசுபதியை
மாகம்ப மறையோதும் இறையானை மதிற்கச்சி
ஏகம்ப மேயானை யென்மனத்தே வைத்தேனே. 9

4229.அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சுனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. பொது – சிவனெனுமோசை
## பண்–பியந்தைக்காந்தாரம்

4230. சிவனெனு மோசை யல்ல தறையோ வுலகிற்
திருநின்ற செம்மை யுளதே
அவனுமோ ரைய முண்ணி யதளாடை யாவ
ததன்மேலோ ராட லரவம்
கவணள வுள்ள வுள்கு கரிகாடு கோயில்
கலனாவ தோடு கருதில்
அவனது பெற்றி கண்டு மவனீர்மை கண்டு
மகனேர்வர் தேவ ரவரே. 1

4231. விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனும்
திரிதரு வாயு வல்லர் செறுதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணி யாளை யொருபாக மாக
அருள்கா ரணத்தில் வருவார்
எரியர வார மார்ப ரிமையாரு மல்ல
ரிமைப்பாரு மல்ல ரிவரே. 2

4232. தேய்பொடி வெள்ளை பூசி யதன்மேலோர் திங்கள்
திலகம் பதித்த நுதலர்
காய்கதிர் வேலை நீல வொள்மா மிடற்றர்
கரிகாடல் காலொர் கழலர்
வேயுட னாடு தோளி யவள்விம்ம வெய்ய
மழுவீசி வேழ வுரிபோர்த்
தேயிவ ராடு மாறு மிவள்காணு மாறு
மிதுதா னிவர்க்கொ ரியல்பே. 3

4233. வளர்பொறி யாமை புல்கி வளர்கோதை வைகி
வடிதோலு நூலும் வளரக்
கிளர்பொறி நாக மொன்று மிளிர்கின்ற மார்பர்
கிளர்காடு நாடு மகிழ்வர்
நளிர்பொறி மஞ்ஞை யன்ன தளிர்போன்ற சாயலவள்
தோன்று வாய்மை பெருகிக்
குளிர்பொறி வண்டு பாடு குழலா ளொருத்தி
யுளள்போல் குலாவி யுடனே. 4

4234. உறைவது காடு போலு முரிதோ லுடுப்பர்
விடையூர்வ தோடு கலனா
இறையிவர் வாழும் வண்ண மிதுவேலு மீச

றொருபா லிசைந்த தொருபால்
பிறைநுதல் பேதை மாத ருமையென்னு நங்கை
பிறழ்பாட நின்று பிணைவான்
அறைகழல் வண்டு பாடு மடிநீழ லாணை
கடவா தமர ருலகே. 5

4235.கணிவளர் வேங்கை யோடு கடிதிங்கள் கண்ணி
கழல்கால் சிலம்ப அழகார்
அணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ண
மியலா றொருவ ரிருவர்
மணிகிளர் மஞ்ஞை யால மழையாடு சோலை
மலையான் மகட்கு மிறைவர்
அணிகிள ரன்ன வண்ண மவள்வண்ண வண்ண
மவர்வண்ண வண்ண மழலே. 6

4236.நகைவளர் கொன்றை துன்று நகுவெண் தலையர்
நளிர்கங்கை தங்கு முடியர்
மிகைவளர் வேத கீத முறையோடும் வல்ல
கறைகொள் மணிசெய் மிடறர்
முகைவளர் கோதை மாதர் முனிபாடு மாறு
மெரியாடு மாறு மிவர்கைப்
பகைவளர் நாகம் வீசி மதியங்கு மாறு
மிதுபோலு மீச ரியல்பே. 7

4237.ஒளிவளர் கங்கை தங்கு மொளிமா லயன்ற
னுடல்வெந்து வீய சுடர்நீ
றணிகிள ரார வெள்ளை தவழ்சுண்ண வண்ணர்
தமியா ரொருவ ரிருவர்
களிகிளர் வேட முண்டொர் கடமா வுரித்த
உடைதோல் தொடுத்த கலனார்
அணிகிள ரன்ன தொல்லை யவள்பாக மாக
எழில்வேத மோது மவரே. 8

4238.மலைமட மங்கை யோடும் வடகங்கை நங்கை
மணவாள ராகி மகிழ்வர்
தலைகல னாக வுண்டு தனியே திரிந்து
தவவாண ராகி முயல்வர்
விலையிலி சாந்த மென்று வெறிநீறு பூசி
விளையாடும் வேட விகிர்தர்
அலைகடல் வெள்ள முற்று மலறக் கடைந்த
அழல்நஞ்ச முண்ட வவரே. 9

4239.புதுவிரி பொன்செ யோலை யொருகாதொர் காது
சுரிசங்க நின்று புரள
விதிவிதி வேத கீத மொருபாடு மோத
மொருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாக மாதர்
குழல்பாக மாக வருவர்
இதுவிவர் வண்ண வண்ண மிவள்வண்ண வண்ண
மெழில்வண்ண வண்ண மியல்பே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 9. திருஅங்கமாலை : பண் – சாதாரி

4240.தலையே நீவணங்காய்—தலை மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத் தலையே நீவணங்காய்.1

4241.கண்காள் காண்மின்களோ—கடல் நஞ்சுண்ட கண்டன் றன்னை
எண்டோள் வீசிநின் றாடும் பிரான்றன்னைக் கண்காள் காண்மின்களோ.2

4242.செவிகாள் கேண்மின்களோ—சிவன் எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்றிற மெப்போதுஞ் செவிகாள் கேண்மின்களோ.3

4243.மூக்கே நீமுரலாய்—முது காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கை மணாளனை மூக்கே நீ முரலாய். 4

4244.வாயே வாழ்த்துகண்டாய்—மத யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை வாயே வாழ்த்து கண்டாய். 5

4245.நெஞ்சே நீநினையாய்—நிமிர் புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை நெஞ்சே நீநினையாய்.6

4246.கைகாள் கூப்பித்தொழீர்—கடி மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக் கைகாள் கூப்பித்தொழீர்.7

4247.ஆக்கை யாற்பயனென்—அரன் கோயில் வலம்வந்து
பூக்கை யாலட்டிப் போற்றி யென்னாதவிவ் ஆக்கை யாற்பயனென்.8

4248.கால்க ளாற்பயனென்—கறைக் கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக் கால்க ளாற்பயனென்.9

4249. உற்றா ராருளரோ—உயிர் கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக் குற்றா ராருளரோ. 10

4250. இறுமாந் திருப்பன்கொலோ—ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங் கிறுமாந் திருப்பன்கொலோ. 11

4251. தேடிக் கண்டுகொண்டேன்—திரு மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே தேடிக் கண்டுகொண்டேன். 12

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 10. திருவதிகை வீரட்டானம் – திருக்கெடிலவாணர்
## பண் – காந்தார பஞ்சமம்

4252. முளைக்கதி ரிளம்பிறை மூழ்க வெள்ளநீர்
வளைத்தெழு சடையினர் மழலை வீணையர்
திளைத்ததோர் மான்மழுக் கையர் செய்யபொன்
கிளைத்துழித் தோன்றிடுங் கெடில வாணரே. 1

4253. ஏறின ரேறினை யேழை தன்னொரு
கூறினர் கூறினர் வேதம் அங்கமும்
ஆறின ராறிடு சடையர் பக்கமும்
கீறின வுடையினர் கெடில வாணரே. 2

4254. விடந்திகழ் கெழுதரு மிடற்றர் வெள்ளைநீ
றுடம்பழ கெழுதுவர் முழுதும் வெண்ணிலாப்
படர்ந்தழ கெழுதரு சடையிற் பாய்புனல்
கிடந்தழ கெழுதிய கெடில வாணரே. 3

4255. விழுமணி யயிலெயிற் றம்பு வெய்யதோர்
கொழுமணி நெடுவரை கொளுவிக் கோட்டினார்
செழுமணி மிடற்றினர் செய்யர் வெய்யதோர்
கெழுமணி யரவினர் கெடில வாணரே. 4

4256. குழுவினர் தொழுதெழு மடியர் மேல்வினை
தழுவின கழுவுவர் பவள மேனியர்
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின யோகினர் கெடில வாணரே. 5

4257. அங்கையி லனலெரி யேந்தி யாறெனும்
மங்கையைச் சடையிடை மணப்பர் மால்வரை
நங்கையைப் பாகமு நயப்பர் தென்றிசைக்
கெங்கைய தெனப்படுங் கெடில வாணரே. 6

4258. கழிந்தவர் தலைகல னேந்திக் காடுறைந்
திழிந்தவ ரொருவரென் றெள்க வாழ்பவர்
வழிந்திழி மதுகர மிழற்ற மந்திகள்
கிழிந்ததேன் நுகர்தருங் கெடில வாணரே. 7

4259. கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்
கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையு மேங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில வாணரே. 8

4260. வெறியுறு விரிசடை புரள வீசியோர்
பொறியுறு புலியுரி யரைய தாகவும்
நெறியுறு குழலுமை பாக மாகவும்
கிறிபட உழிதர்வர் கெடில வாணரே. 9

4261. பூண்டதே ரரக்கனைப் பொருவின் மால்வரைத்
தூண்டுதோ ளவைபட அடர்த்த தாளினார்
ஈண்டுநீர்க் கமலவாய் மேதி பாய்தரக்
கீண்டுதேன் சொரிதருங் கெடில வாணரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 11. பொது – நமச்சிவாயத் திருப்பதிகம்
## பண் – காந்தார பஞ்சமம்

4262. சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

4263. பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே. 2

4264. விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்

பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3

4265. இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளின் நாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4

4266. வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே. 5

4267. சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறு நல்கு வான்நலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6

4268. வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே. 7

4269. இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

4270. முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

4271. மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

இது சமணர்கள் கற்றூணிற் கட்டிக் கடலிலே வீழ்த்தின போது ஓதி அருளப்பட்டது.

•••••

## 12. திருப்பழனம் : பண் – பழந்தக்கராகம்

4272. சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கள் முகில்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ. 1

4273. கண்டகங்காள் முண்டகங்காள் கைதைகாள் நெய்தல்காள்
பண்டரங்க வேடத்தான் பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடம்மூழ்கி மற்றவனென் தளிர்வண்ணம்
கொண்டநாள் தானறிவான் குறிக்கொள்ளா தொழிவானோ. 2

4274. மனைக்காஞ்சி யிளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லா முரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய்ச் சோர்வானோ. 3

4275. புதியையா யினியையாம் பூந்தென்றால் புறங்காடு
பதியாவ திதுவென்று பலர்பாடும் பழனத்தான்
மதியாதார் வேள்விதனை மதித்திட்ட மதிகங்கை
விதியாள னென்னுயிர்மேல் விளையாடல் விடுத்தானோ. 4

4276. மண்பொருந்தி வாழ்பவர்க்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானைப்
பண்பொருந்த இசைபாடும் பழனஞ்சே ரப்பனையென்
கண்பொருந்தம் போதத்துங் கைவிடநான் கடவேனோ. 5

4277. பொங்கோத மால்கடலிற் புறம்புறம்போ யிரைதேரும்
செங்கால்வெண் மடநாராய் செயற்படுவ தறியேனான்
அங்கோல வளைகவர்ந்தான் அணிபொழில்சூழ் பழனத்தான்
தங்கோல நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானோ. 6

4278. துணையார முயங்கிப்போய்த் துறைசேரு மடநாராய்
பணையார வாரத்தான் பாட்டோவாப் பழனத்தான்
கணையார இருவிசும்பிற் கடியரணம் பொடிசெய்த
இணையார மார்பனென் னெழில்நலமுண் டிகழ்வானோ. 7

4279. கூவைவாய் மணிவரன்றிக் கொழித்தோடுங் காவிரிப்பூம்
பாவைவாய் முத்திலங்கப் பாய்ந்தாடும் பழனத்தான்
கோவைவாய் மலைமகள்கோன் கொல்லேற்றின் கொடியாடைப்
பூவைகாள் மழலைகாள் போகாத பொழுதுளதே 8

4280.புள்ளிமான் பொறியரவம் புள்ளுயர்த்தான் மணிநாகப்
பள்ளியான் தொழுதேத்த இருக்கின்ற பழனத்தான்
உள்ளுவார் வினைதீர்க்கு மென்றுரைப்ப ருலகெல்லாம்
கள்ளியே னானிவற்கென் கனவளையுங் கடவேனோ. 9

4281.வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 13. திருவையாறு : பண்— பழந்தக்கராகம்

4282.விடகிலேன் அடிநாயேன் வேண்டியக்கா லியாதொன்றும்
இடைகிலேன் அமணர்கள்தம் மறவுரைகேட் டலமந்தேன்
தொடர்கின்றே னுன்னுடைய தூமலர்ச்சே வடிகாண்பான்
அடைகின்றே னையாறர்க் காளர்ய்நா னுய்ந்தேனே. 1

4283.செம்பவளத் திருவுருவர் திகழ்சோதி குழைக்காதர்
கொம்பமருங் கொடிமருங்குற் கோல்வளையா ளொருபாகர்
வம்பவிழு மலர்க்கொன்றை வளர்சடைமேல் வைத்துகந்த
அம்பவள வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 2

4284.நணியானே சேயானே நம்பானே செம்பொன்னின்
துணியானே தோலானே சுண்ணவெண் ணீற்றானே
மணியானே வானவர்க்கு மருந்தாகிப் பிணிதீர்க்கும்
அணியானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 3

4285.ஊழித்தீ யாய்நின்றா யுள்குவா ருள்ளத்தாய்
வாழித்தீ யாய்நின்றாய் வாழ்த்துவார் வாயானே
பாழித்தீ யாய்நின்றாய் படர்சடைமேற் பனிமதியம்
ஆழித்தீ யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 4

4286.சடையானே சடையிடையே தவழுந்தண் மதியானே
விடையானே விடையேறிப் புரமெரித்த வித்தகனே
உடையானே யுடைதலைகொண் டூருருண் பலிக்குழலும்
அடையானே வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 5

4287.நீரானே தீயானே நெதியானே கதியானே
ஊரானே உலகானே உடலானே உயிரானே
பேரானே பிறைசூடீ பிணிதீர்க்கும் பெருமானென்
றாராத வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 6

4288.கண்ணானாய் மணியானாய் கருத்தானாய் அருத்தானாய்
எண்ணானா யெழுத்தானா யெழுத்தினுக்கோ ரியல்பானாய்
விண்ணானாய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே
அண்ணான வையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 7

4289.மின்னானா யுருவானாய் வேதத்தின் பொருளானாய்
பொன்னானாய் மணியானாய் பொருகடல்வாய் முத்தானாய்
நின்னானா ரிருவர்க்குங் காண்பரிய நிமிர்சோதி
அன்னானே யையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 8

4290.முத்திசையும் புனற்பொன்னி மொய்ப்பவளங் கொழித்துந்தப்
பத்தர்பலர் நீர்மூழ்கிப் பலகாலும் பணிந்தேத்த
எத்திசையும் வானவர்க ளெம்பெருமா னெனவிறைஞ்சும்
அத்திசையா மையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 9

4291. கருவரைசூழ் கடலிலங்கைக் கோமானைக் கருத்தழியத்
திருவிரலா லுதகரணஞ் செய்துகந்த சிவமூர்த்தி
பெருவரைசூழ் வையகத்தார் பேர்நந்தி யென்றேத்தும்
அருவரைசூ ழையாறர்க் காளாய்நா னுய்ந்தேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. பொது – தசபுராணம் : பண் – பழம்பஞ்சுரம்

4292.பருவரை யொன்று சுற்றி யரவங்கை விட்ட
விமையோ ரிரிந்து பயமாய்த்
திருநெடு மால்நி றத்தை யடுவான் விசும்பு
சுடுவா னெழுந்து விசைபோய்ப்
பெருகிட மற்றி தற்கொர் பிதிகார மொன்றை
யருளாய் பிரானே யெனலும்
அருள்கொடு மாவி டத்தை யெரியாம லுண்ட
அவனண்ட ரண்ட ரரசே. 1

4293.நிரவொலி வெள்ள மண்டி நெடுஅண்ட மூட
நிலநின்று தம்ப மதுவப்
பரமொரு தெய்வ மெய்த விதுவொப்ப தில்லை

யிருபாலு நின்று பணியப்
பிரமனு மாலும் மேலை முடியோடு பாதம்
அறியாமை நின்ற பெரியோன்
பரமுத லாய தேவர் சிவனாய மூர்த்தி
யவனா நமக்கொர் சரணே. 2

4294.காலமு நாள்க ளூழி படையாமு னேக
வுருவாகி மூவ ருருவில்
சாலவு மாகி மிக்க சமயங்க ளாறி
னுருவாகி நின்ற தழலோன்
ஞாலமும் மேலை விண்ணோ டுலகேழு முண்டு
குறளாயொ ராலின் இலைமேல்
பாலனு மாய வற்கொர்பரமாய மூர்த்தி
யவனா நமக்கொர் சரணே. 3

4295.நீடுயர் விண்ணு மண்ணும் நெடுவேலை குன்றொ
டுலகேழு மெங்கு நலியச்
சூடிய கையராகி யிமையோர் கணங்கள்
துதியோதி நின்று தொழலும்
ஓடிய தார கன்ற னுடலம் பிளந்தும்
ஒழியாத கோபம் ஒழிய
ஆடிய மாநடத்தெ மனலாடி பாத
மவையா நமக்கொர் சரணே. 4

4296.நிலைவலி யின்றி யெங்கும் நிலனோடு விண்ணு
நிதனஞ்செய் தோடு புரமூன்
றலைநலி வஞ்சி யோடி யரியோடு தேவ
ரரணம் புகத்த னருளால்
கொலைநல வாளி மூள அரவங்கை நாணும்
அனல் பாய நீறு புரமாம்
மலைசிலை கையி லொல்க வளைவித்த வள்ள
லவனா நமக்கொர் சரணே. 5

4297.நீலநன் மேனி செங்கண் வளைவெள் ளெயிற்ற
னெரிகேச னேடி வருநாள்
காலைநன் மாலை கொண்டு வழிபாடு செய்யு
மளவின்கண் வந்து குறுகிப்
பாலனை யோட வோடப் பயமெய்து வித்த
உயிர்வவ்வு பாசம் விடுமக்
காலனை வீடு செய்த கழல்போலும் அண்டர்
தொழுதோது சூடு கழலே. 6

4298. உயர்தவ மிக்க தக்க னுயர்வேள்வி தன்னி
லவியுண்ண வந்த விமையோர்
பயமுறு மெச்ச னங்கி மதியோனு முற்ற
படிகண்டு நின்று பயமாய்
அயனொடு மாலு மெங்க ளறியாமை யாதி
கமியென் றிறைஞ்சி யகலச்
சயமுறு தன்மை கண்ட தழல்வண்ண னெந்தை
கழல்கண்டு கொள்கை கடனே. 7

4299. நலமலி மங்கை நங்கை விளையாடி யோடி
நயனத் தலங்கள் கரமா
உலகினை யேழு முற்றும் இருள்மூட மூட
இருளோட நெற்றி யொருகண்
அலர்தர வஞ்சி மற்றை நயனங்கை விட்டு
மடவா ளிறைஞ்ச மதிபோல்
அலர்தரு சோதி போல அலர்வித்த முக்க
ணவனா நமக்கொர் சரணே. 8

4300. கழைபடு காடு தென்றல் குயில் கூவ
வஞ்சுகணையோ னணைந்து புகலும்
மழைவடி வண்ண னெண்ணி மகவோனை விட்ட
மலரான தொட்ட மதனன்
எழில்பொடி வெந்து வீழ இமையோர் கணங்கள்
எரியென் றிறைஞ்சி யகலத்
தழல்படு நெற்றி யொற்றை நயனஞ் சிவந்த
தழல்வண்ண னெந்தை சரணே. 9

4301. தடமல ரார்யி ரங்கள் குறைவொன்ற தாக
நிறைவென்று தன்க ணதனால்
உடன்வழி பாடு செய்த திருமாலை யெந்தை
பெருமா னுகந்து மிகவும்
சுடரடி யான்மு யன்று சுழல்வித் தரக்கன்
இதயம் பிளந்த கொடுமை
அடல்வலி ஆழி ஆழி யவனுக் களித்த
வவனா நமக்கொர் சரணே. 10

4302. கடுகிய தேர்செ லாது கயிலாய மீது
கருதேலுன் வீர மொழிநீ
முடுகுவ தன்று தன்ம மெனநின்று பாகன்
மொழிவானை நன்று முனியா

விடுவிடு வென்று சென்று விரைவுற் றரக்கன்
வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு இற்று வீழ விரலுற்ற பாத
நினைவுற்ற தென்றன் மனனே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 15. பொது – பாவநாசத் திருப்பதிகம் : பண் – பழம்பஞ்சுரம்

4303. பற்றற் றார்சேர் பழம்பதியைப் பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெந் திகழ்கனியைத் தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் உத்தமனை உள்ளத் துள்ளே வைத்தேனே. 1

4304. ஆனைக் காவி லணங்கினை ஆரூர் நிலாய் அம்மானைக்
கானப் பேரூர்க் கட்டியைக் கானூர் முளைத்த கரும்பினை
வானம் பேரார் வந்தேத்தும் வாய்மூர் வாழும் வலம்புரியை
மானக் கயிலை மழகளிற்றை மதியைச் சுடரை மறவேனே. 2

4305. மதியங் கண்ணி ஞாயிற்றை மயக்கந் தீர்க்கும் மருந்தினை
அதிகை மூதூ ரரசினை ஐயா றமர்ந்த வையனை
விதியை புகழை வானோர்கள் வேண்டித் தேடும் விளக்கினை
நெதியை ஞானக் கொழுந்தினை நினைந்தேற் குள்ளம் நிறைந்ததே.3

4306. புறம்ப யத்தெம் முத்தினைப் புகலூ ரிலங்கு பொன்னினை
உறந்தை யோங்கு சிராப்பள்ளி யுலகம் விளக்கு ஞாயிற்றைக்
கறங்கு மருவிக் கழுக்குன்றிற் காண்பார் காணுங் கண்ணானை
அறஞ்சூ ழதிகை வீரட்டத் தரிமா னேற்றை யடைந்தேனே. 4

4307. கோலக் காவிற் குருமணியைக் குடமூக் குறையும் விடமுணியை
ஆலங் காட்டி லந்தேனை யமரர் சென்னி யாய்மலரைப்
பாலிற் றிகழும் பைங்கனியைப் பராய்த் துறையெம் பசும்பொன்னைச்
சூலத் தானைத் துணையிலியைத் தோளைக் குளிரத் தொழுதேனே.5

4308. மருக லுறைமா ணிக்கத்தை வலஞ் சுழியின் மாலையைக்
கருகா வூரிற் கற்பகத்தைக் காண்டற் கரிய கதிரொளியைப்
பெருவே ளூரெம் பிறப்பிலியைப் பேணு வார்கள் பிரிவரிய
திருவாஞ் சியத்தெஞ் செல்வனைச் சிந்தை யுள்ளே வைத்தேனே. 6

4309. எழிலா ரிராச சிங்கத்தை யிராமேச் சுரத்தெ மெழிலேற்றைக்
குழலார் கோதை வரைமார்பிற் குற்றா லத்தெங் கூத்தனை
நிழலார் சோலை நெடுங்களத்து நிலாய நித்த மணாளனை
அழலார் வண்ணத் தம்மானை அன்பி லணைத்து வைத்தேனே. 7

4310. மாலை தோன்றும் வளர்மதியை மறைக்காட் டுறையும் மணாளனை
ஆலைக் கரும்பி னின்சாற்றை அண்ணா மலையெம் அண்ணலைச்
சோலைத் துருத்தி நகர்மேய சுடரிற் றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி யிட்டேனே. 8

4311. சோற்றுத் துறையெஞ் சோதியைத் துருத்தி மேய தூமணியை
ஆற்றிற் பழனத் தம்மானை ஆல வாயெம் அருமணியை
நீற்றிற் பொலிந்த நிமிர்திண்டோள் நெய்த்தா னத்தெந் நிலாச் சுடரைத்
தோற்றக் கடலை யடலேற்றைத் தோளைக் குளிரத் தொழுதேனே. 9

4312. புத்தூ ருறையும் புனிதனைப் பூவ ணத்தெம் போரேற்றை
வித்தாய் மிழலை முளைத்தானை வேள்விக் குடியெம் வேதியனைப்
பொய்த்தார் புரமூன் றெரித்தானைப் பொதியின் மேய புராணனை
வைத்தே னென்றன் மனத்துள்ளே மாத்தூர் மேய மருந்தையே. 10

4313. முந்தித் தானே முளைத்தானை மூரி வெள்ளே றூர்ந்தானை
அந்திச் செவ்வான் படியானை அரக்க னாற்ற லழித்தானைச்
சிந்தை வெள்ளப் புனலாட்டிச் செஞ்சொன் மாலை யடிச்சேர்த்தி
எந்தை பெம்மா னென்னெம்மா னென்பார் பாவ நாசமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 16. திருப்புகலூர் : பண் – இந்தளம்

4314. செய்யர் வெண்ணூலர் கருமான் மறிதுள்ளும்
கையர் கனைகழல் கட்டிய காலினர்
மெய்யர் மெய்ந்நின் றவர்க்கல்லா தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடை யாரே. 1

4315. மேகந லூர்தியர் மின்போன் மிளிர்சடைப்
பாக மதிநுத லாளையொர் பாகத்தர்
நாக வளையினர் நாக வுடையினர்
போகர் புகலூர்ப் புரிசடை யாரே. 2

4316. பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக்
கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து
திருந்தா மனமுடை யார்திறத் தென்றும்
பொருந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 3

4317. அக்கா ரணிவடம் ஆகத்தர் நாகத்தர்
நக்கா ரிளமதிக் கண்ணியர் நாடொறும்
உக்கார் தலைபிடித் துண்பலிக் கூர்தொறும்
புக்கார் புகலூர்ப் புரிசடை யாரே. 4

4318. ஆர்த்தா ருயிரடு மந்தகன் றன்னுடல்
பேர்த்தார் பிறைநுதற் பெண்ணினல் லாளுட்கக்
கூர்த்தார் மருப்பிற் கொலைக்களிற் றீருரி
போர்த்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 5

4319. உதைத்தார் மறலி உருளவோர் காலால்
சிதைத்தார் திகழ்தக்கன் செய்தநல் வேள்வி
பதைத்தார் சிரங்கரங் கொண்டுவெய் யோன்கண்
புதைத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 6

4320. தூமன் சுறவந் துதைந்த கொடியுடைக்
காமன் கணைவலங் காய்ந்தமுக் கண்ணினர்
சேம நெறியினர் சீரை யுடையவர்
பூமன் புகலூர்ப் புரிசடை யாரே. 7

4321. கரிந்தார் தலையர் கடிமதின் மூன்றுந்
தெரிந்தார் கணைகள் செழுந்தழ லுண்ண
விரிந்தார் சடைமேல் விரிபுனற் கங்கை
புரிந்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 8

4322. ஈண்டா ரழலி லிருவருங் கைதொழ
நீண்டார் நெடுந்தடு மாற்ற நிலையஞ்ச
மாண்டார்த மென்பு மலர்க்கொன்றை மாலையும்
பூண்டார் புகலூர்ப் புரிசடை யாரே. 9

4323. கறுத்தார் மணிகண்டங் கால்விர லூன்றி
இறுத்தா ரிலங்கையர் கோன்முடி பத்தும்
அறுத்தார் புலனைந்து மாயிழை பாகம்
பொறுத்தார் புகலூர்ப் புரிசடை யாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 17. திருவாரூர் அரநெறி : பண் – இந்தளம்

4324.எத்திசை புகினு மெமக்கொரு தீதிலை
தெத்தே யெனமுரன் றெம்முள் உழிதர்வர்
முத்தீ யனையதொர் மூவிலை வேல்பிடித்
தத்தீ நிறத்தா ரரநெறி யாரே. 1

4325.வீரமும் பூண்பர் விசயனொ டாயதொர்
தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர்நற் பைங்கண் மிளிர்அர
வாரமும் பூண்ப ரரநெறி யாரே. 2

4326.தஞ்ச வண்ணத்தர் சடையினர் தாமுமொர்
வஞ்ச வண்ணத்தர்வண் டார்குழ லாளொடும்
துஞ்ச வண்ணத்தர் துஞ்சாதகண் ணார்தொழும்
அஞ்ச வண்ணத்த ரரநெறி யாரே. 3

4327.விழித்தனர் காமனை வீழ்தர விண்ணின்
றிழித்தனர் கங்கையை யேத்தினர் பாவம்
கழித்தனர் கல்சூழ் கடியரண் மூன்றும்
அழித்தன ராரூ ரரநெறி யாரே. 4

4328.துற்றவர் வெண்டலை யிற்சுருள் கோவணம்
தற்றவர் தம்வினை யானவெல் லாமற
அற்றவ ராரூ ரரநெறி கைதொழ
உற்றவர் தாமொளி பெற்றனர்தாமே. 5

4329.கூடர வத்தர் குரற்கிண் கிணியடி
நீடர வத்தர்முன் மாலை யிடையிருள்
பாடர வத்தர் பணமஞ்சு பைவிரித்
தாடர வத்த ரரநெறி யாரே. 6

4330.கூடவல் லார்குறிப் பில்லுமை யாளொடும்
பாடவல் லார்பயின் றந்தியுஞ் சந்தியும்
ஆடவல் லார்திரு வாரூ ரரநெறி
நாடவல் லார்வினை வீடவல் லாரே. 7

4331. பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மனம்
ஆலய மாரூ ரரநெறி யார்க்கே. 8

4332. முடிவண்ணம் வானமின் வண்ணந்தம் மார்பின்
பொடிவண்ணந் தம்புக ழூர்தியின் வண்ணம்
படிவண்ணம் பாற்கடல் வண்ணஞ்செஞ் ஞாயி
றடிவண்ண மாரூ ரரநெறி யார்க்கே. 9

4333. பொன்னவில் புன்சடை யானடி யின்னிழல்
இன்னருள் சூடியெள் காதுமி ராப்பகல்
மன்னவர் கின்னரர் வானவர் தாந்தொழும்
அன்னவ ராரூ ரரநெறி யாரே. 10

4334. பொருள்மன் னனைப்பற்றிப் புட்பகங் கொண்ட
மருள்மன் னனையெற்றி வாளுட னீந்து
கருள்மன் னுகண்டங் கறுக்கநஞ் சுண்ட
அருள்மன்ன ராரூ ரரநெறி யாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. பொது – விடந்தீர்த்த திருப்பதிகம் : பண் . இந்தளம்

4335. ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே. 1

4336. இரண்டுகொ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகொ லாமிலங் குங்குழை பெண்ணாண்
இரண்டுகொ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகொ லாமவ ரெய்தின தாமே. 2

4337. மூன்றுகொ லாமவர் கண்ணுத லாவன
மூன்றுகொ லாமவர் சூலத்தின் மொய்யிலை
மூன்றுகொ லாங்கணை கையது வின்னாண்
மூன்றுகொ லாம்புர மெய்தன தாமே. 3

4338. நாலுகொ லாமவர் தம்முக மாவன
நாலுகொ லாஞ்சன னம்முதற் றோற்றமும்
நாலுகொ லாமவ ரூர்தியின் பாதங்கள்
நாலுகொ லாமறை பாடின தாமே. 4

4339. அஞ்சுகொ லாமவ ராடர வின்படம்
அஞ்சுகொ லாமவர் வெல்புல னாவன
அஞ்சுகொ லாமவர் காயப்பட் டான்கணை
அஞ்சுகொ லாமவ ராடின தாமே. 5

4340. ஆறுகொ லாமவ ரங்கம் படைத்தன
ஆறுகொ லாமவர் தம்மக னார்முகம்
ஆறுகொ லாமவர் தார்மிசை வண்டின்கால்
ஆறுகொ லாஞ்சுவை யாக்கின தாமே. 6

4341. ஏழுகொ லாமவ ரூழி படைத்தன
ஏழுகொ லாமவர் கண்ட விருங்கடல்
ஏழுகொ லாமவ ராளு முலகங்கள்
ஏழுகொ லாம்இசை யாக்கின தாமே. 7

4342. எட்டுக்கொ லாமவ ரீறில் பெருங்குணம்
எட்டுக்கொ லாமவர் சூடு மினமலர்
எட்டுக்கொ லாமவர் தோளிணை யாவன
எட்டுக்கொ லாந்திசை யாக்கின தாமே. 8

4343. ஒன்பது போலவர் வாசல் வகுத்தன
ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை
ஒன்பது போலவர் கோலக் குழற்சடை
ஒன்பது போலவர் பாரிடந் தானே. 9

4344. பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே. 10

திருச்சிற்றம்பலம்

இது அப்பூதிநாயனார் புத்திரரைத் தீண்டிய அரவின் விஷம் நீங்கும்படி அருளிச் செய்யப் பட்டது.

## 19. திருவாரூர் : பண் – சீகாமரம்

4345. சூலப் படையானைச் சூழாக வீழருவிக்
கோலத்தோட் குங்குமஞ்சேர் குன்றெட் டுடையானைப்
பாலொத்த மென்மொழியாள் பங்கனைப் பாங்காய
ஆலத்தின் கீழானை நான்கண்ட தாரூரே. 1

4346. பக்கமே பாரிடங்கள் சூழப் படுதலையில்
புக்கவூர்ப் பிச்சையேற் றுண்டு பொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின் றூவல் கொடியெடுத்த கோவணத்தோ
டக்கணிந்த அம்மானை நான்கண்ட தாரூரே. 2

4347. சேய உலகமுஞ் செல்சார்வு மானானை
மாயப்போர் வல்லானை மாலைதாழ் மார்பனை
வேயொத்த தோளியர்தம் மென்முலைமேற் றண்சாந்தின்
ஆயத் திடையானை நான்கண்ட தாரூரே. 3

4348. ஏறேற்ற மாவேறி யெண்கணமும் பின்படர
மாறேற்றார் வல்லரணஞ் சீறி மயானத்தில்
நீறேற்ற மேனியனாய் நீள்சடைமேல் நீர்ததும்ப
ஆறேற்ற அந்தணனை நான்கண்ட தாரூரே. 4

4349. தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் ஏறேறிப்
பாங்கான வூர்க்கெல்லாஞ் செல்லும் பரமனார்
தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்
பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா 'திருந்தாரே. 5

4350. எம்பட்டம் பட்ட முடையானை யேர்மதியின்
நும்பட்டஞ் சேர்ந்த நுதலானை அந்திவாய்ச்
செம்பட் டுடுத்துச் சிறுமா னுரியாடை
அம்பட் டசைத்தானை நான்கண்ட தாரூரே. 6

4351. போழொத்த வெண்மதியஞ் சூடிப் பொலிந்திலங்கு
வேழத் துரிபோர்த்தான் வெள்வளையாள் தான்வெருவ
ஊழித்தீ யன்னானை ஓங்கொலிமாப் பூண்டதோர்
ஆழித்தேர் வித்தகனை நான்கண்ட தாரூரே. 7

4352. வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்
துஞ்சிருளி லாட லுகந்தானைத் தன்றொண்டர்
நெஞ்சிருள் கூரும் பொழுது நிலாப்பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான்கண்ட தாரூரே. 8

4353. காரமுது கொன்றை கடிநாறு தண்ணென்ன
நீரமுதுகோதையோ டாடிய நீண்மார்பன்
பேரமுத முண்டார்க ளுய்யப் பெருங்கடனஞ்
சாரமுதா வுண்டானை நான்கண்ட தாரூரே. 9

4354. தாடவுடுக் கையன் தாமரைப்பூஞ் சேவடியன்
கோடலா வேடத்தன் கொண்டதோர் வீணையினான்
ஆடரவக் கிண்கிணிக்கா லன்னானோர் சேடனை
ஆடுந்தீக் கூத்தனை நான்கண்ட தாரூரே. 10

4355. மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலால்
துஞ்சாப்போர் வாளரக்கன் தோள்நெரியக் கண்குருதிச்
செஞ்சாந் தணிவித்துத் தன்மார்பிற் பால்வெண்ணீற்
றஞ்சாந் தணிந்தானை நான்கண்ட தாரூரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 20. திருவாரூர் : பண் – சீகாமரம்

4356. காண்டலே கருத்தாய் நினைந்திருந்தேன் மனம்புகுந்தாய் கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயி னாலறையோ
ஈண்டுமாடங்கள் நீண்டமா ளிகைமேலெழுகொடி வானி ளம்மதி
தீண்டிவந் துலவுந் திருவாரூ ரம்மானே. 1

4357. கடம்படந்நட மாடினாய்களை கண்ணினக்கொரு காதல் செய்தடி
ஒடுங்கி வந்தடைந்தே னொழிப்பாய் பிழைப்பவெல்லாம்
முடங்கிறான்முது நீர்மலங்கிள வாளைசெங்கயல் சேல்வ ரால்களி
றடைந்த தண்கழனி யணியாரூ ரம்மானே. 2

4358. அருமணித்தடம் பூண்முலை யரம்பையரொ டருளிப் பாடியர்
உரிமையிற் றொழுவா ருருத்திர பல்கணத்தார்
விரிசடைவிரதிக ளந்தணர் சைவர்பாசுப தர்க பாலிகள்
தெருவினிற் பொலியுந் திருவாரூ ரம்மானே. 3

4359. பூங்கழல்தொழுதும் பரவியும் புண்ணியாபுனி தாவுன் பொற்கழல்
ஈங்கிருக்கப் பெற்றே னென்னகுறை யுடையேன்
ஓங்குதெங்கிலை யார்கமுகிள வாழைமாவொடு மாது ளம்பல
தீங்கனி சிதறுந் திருவாரூ ரம்மானே. 4

4360. நீறுசேர்செழு மார்பினாய்நிறம் பாமதியொடு நீள்ச டையிடை
ஆறுபாய வைத்தா யடியே யடைந்தொழிந்தேன்
ஏறிவண்டொடு தும்பியஞ்சிற கூன்றவிண்ட மலரி தழ்வழி
தேறல்பாய்ந் தொழுகுந் திருவாரூ ரம்மானே. 5

4361. அளித்துவந்தடி கைதொழுமவர் மேல்வினைகெடு மென்றி வையகம்
களித்துவந் துடனே கலந்தாடக் காதலராய்க்
குளித்துமூழ்கியுந் தூவியுங்குடைந் தாடுகோதையர் குஞ்சி யுள்புகத்
தெளிக்குந் தீர்த்தமறாத் திருவாரூ ரம்மானே. 6

4362. திரியுமூவெயில் தீயெழச்சிலை வாங்கிநின்ற வனேயென் சிந்தையுள்
பிரியுமா றெங்ஙனே பிழைத்தேயும் போகலொட்டேன்
பெரியசெந்நெற் பிரம்புரிகெந்த சாலிதிப்பிய மென்றி வையகத்
தரியுந் தண்கழனி யணியாரூ ரம்மானே. 7

4363. பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்தசைந்துட லம்பு குந்துநின்
றிறக்குமா றுளதே யிழித்தேன் பிறப்பினைநான்
அறத்தையேபுரிந் தமனத்தனா யார்வச்செற்றக்கு ரோத நீக்கியுன்
திறத்தனா யொழிந்தேன் திருவாரூ ரம்மானே. 8

4364. முளைத்தவெண்பிறை மொய்சடையுடை யாயெப்போதுமென்
னெஞ்சிடங் கொள்ள
வளைத்துக் கொண்டிருந்தேன் வலிசெய்து போகலொட்டேன்
அளைப்பிரிந்த அலவன் போய்ப்புகு தந்தகாலமுங் கண்டு தன்பெடை
திளைக்குந் தண்கழனித் திருவாரூ ரம்மானே. 9

4365. நாடினார்கம லம்மலரய னோடிரணியன் ஆகங் கீண்டவன்
நாடிக் காணமாட்டாத் தழலாய நம்பானைப்
பாடுவார்பணி வார்பல்லாண்டிசைக் கூறுபத்தர்கள் சித்தத் துள்புக்குத்
தேடிக் கண்டுகொண்டேன் திருவாரூ ரம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 21. திருவாரூர் – திருவாதிரைத் திருப்பதிகம் : பண் – குறிஞ்சி

4366. முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்த னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 1

4367. நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் தீரு மென்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட்
கணியா னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 2

4368. வீதிகள் தோறும் வெண்கொடி யோடு விதானங்கள்
சோதிகள் விட்டுச் சுடர்மா மணிக ளொளிதோன்றச்
சாதிக ளாய பவளமு முத்துத் தாமங்கள்
ஆதி யாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 3

4369. குணங்கள் பேசிக் கூடிப் பாடித் தொண்டர்கள்
பிணங்கித் தம்மிற் பித்தரைப் போலப் பிதற்றுவார்
வணங்கி நின்று வானவர் வந்து வைகலும்
அணங்க னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 4

4370. நிலவெண் சங்கும் பறையும் ஆர்ப்ப நிற்கில்லாப்
பலரு மிட்ட கல்ல வடங்கள் பரந்தெங்கும்
கலவ மஞ்ஞை காரென் றெண்ணிக் களித்துவந்
தலம ராரூ ராதிரை நாளா லதுவண்ணம். 5

4371. விம்மா வெருவா விழியாத் தெழியா வெருட்டுவார்
தம்மாண் பிலராய்த் தரியார் தலையான் முட்டுவார்
எம்மா னீச னெந்தை யெனப்ப னென்பார்கட்
கம்மா னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 6

4372. செந்துவர் வாயார் செல்வன சேவடி சிந்திப்பார்
மைந்தர்க ளோடு மங்கையர் கூடி மயங்குவார்
இந்திர னாதி வானவர் சித்த ரெடுத்தேத்தும்
அந்திர னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 7

4373. முடிகள் வணங்கி மூவா தார்கண் முன்செல்ல
வடிகொள் வேய்த்தோள் வான்அர மங்கையர் பின்செல்லப்
பொடிகள் பூசிப் பாடுந் தொண்டர் புடைசூழ
அடிக ளாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 8

4374. துன்பம் நும்மைத் தொழாத நாள்க ளென்பாரும்
இன்பம் நும்மை யேத்து நாள்க ளென்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே யென்பாரும்
அன்ப னாரூ ராதிரை நாளா லதுவண்ணம். 9

4375. பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாட லாட லறாத செம்மாப்பார்ந்
தோரூ ரொழியா துலக மெங்கு மெடுத்தேத்தும்
ஆரூ ரன்ற னாதிரை நாளா லதுவண்ணம். 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. கோயில் திருநேரிசை : பண்–கொல்லி

4376. செங்சடைக் கற்றை முற்றத் திளநிலா எறிக்குஞ் சென்னி
நஞ்சடை கண்ட னாரைக் காணலா நறவ நாறும்
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
துஞ்சடை யிருள்கிழியத் துளங்கெரி யாடு மாறே. 1

4377. ஏறனா ரேறு தம்பா லிளநிலா எறிக்குஞ் சென்னி
ஆறனா ராறு சூடி ஆயிழை யாளோர் பாக
நாறுபூஞ் சோலைத் தில்லை நவின்றசிற் றம்ப லத்தே
நீறுமெய் பூசி நின்று நீண்டெரி யாடு மாறே. 2

4378. சடையனார் சாந்த நீற்றர் தனிநிலா எறிக்குஞ் சென்னி
உடையனா ருடைதலையி லுண்பதும் பிச்சை யேற்றுக்
கடிகொள்பூந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அடிகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 3

4379. பையர வசைத்த அல்குற் பனிநிலா எறிக்குஞ் சென்னி
மையரிக் கண்ணி யாளு மாலுமோர் பாக மாகிச்
செய்யெரி தில்லை தன்னுட் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
கையெரி வீசி நின்று கனலெரி யாடு மாறே. 4

4380. ஓதினார் வேதம் வாயால் ஒளிநிலா எறிக்குஞ் சென்னி
பூதனார் பூதஞ் சூழப் புலியுரி யதள னார்தாம்
நாதனார் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
காதில்வெண் குழைகள் தாழக் கனலெரி யாடு மாறே. 5

4381. ஒருடம் பிருவ ராகி ஒளிநிலா எறிக்குங் சென்னிப்
பாரிடம் பாணி செய்யப் பயின்றவெம் பரம மூர்த்தி
காரிடந் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
பேரிடம் பெருக நின்று பிறங்கெரி யாடு மாறே. 6

4382. முதற்றனிச் சடையை மூழ்க முகிழ்நிலா எறிக்குஞ் சென்னி
மதக்களிற் றுரிவை போர்த்த மைந்தரைக் காண லாகும்
மதத்துவண் டறையுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
கதத்ததோ ரரவ மாடக் கனலெரி யாடு மாறே. 7

4383. மறையனார் மழுவொன் றேந்தி மணிநிலா எறிக்குஞ் சென்னி
இறைவனா ரெம்பி ரானா ரேத்துவா ரிடர்கள் தீர்ப்பார்
சிறைகொணீர்த் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
அறைகழ லார்க்க நின்று அனலெரி யாடு மாறே. 8

4384.விருத்தனாய்ப் பால னாகி விரிநிலா எறிக்குஞ் சென்னி
நிருத்தனார் நிருத்தஞ் செய்ய நீண்டபுன் சடைகள் தாழக்;
கருத்தனார் தில்லை தன்னுட் கருதுசிற் றம்ப லத்தே
அருத்தமா மேனி தன்னோ டனலெரி யாடு மாறே. 9

4385.பாலனாய் விருத்த னாகிப் பனிநிலா எறிக்குஞ் சென்னி
காலனைக் காலாற் காய்ந்த கடவுளார் விடையொன் றேறி
ஞாலமாந் தில்லை தன்னுள் நவின்றசிற் றம்ப லத்தே
நீலஞ்சேர் கண்ட னார்தாம் நீண்டெரி யாடு மாறே. 10

4386.பதியிலா அரக்க னோடி மாமலை யெடுக்க நோக்கி
நெதியன்தோள் நெரிய வூன்றி நீடிரும் பொழில்கள் சூழ்ந்த
மதியந்தோய் தில்லை தன்னுள் மல்குசிற் றம்ப லத்தே
அதிசயம் போல நின்று அனலெரி யாடு மாறே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 23. கோயில் : திருநேரிசை – பண் – கொல்லி

4387.பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கே னென்னைநீ யிகழ வேண்டாம்
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் னாடல் காண்பா னடியனேன் வந்த வாறே. 1

4388.கருத்தனாய்ப் பாட மாட்டேன் காம்பன தோளி பங்கா
ஒருத்தரா லறிய வொண்ணாத் திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லை தன்னுட் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
நிருத்தம்நான் காண வேண்டி நேர்பட வந்த வாறே. 2

4389.கேட்டிலேன் கிளைபிரியேன் கேட்குமா கேட்டி யாகில்
நாட்டினேன் நின்றன் பாதம் நடுப்பட நெஞ்சி னுள்ளே
மாட்டினீர் வாளை பாயும் மல்குசிற் றம்ப லத்தே
கூட்டமாங் குவிமு லையாள் கூடநீ யாடு மாறே. 3

4390.சிந்தையைத் திகைப்பி யாதே செறிவுடை யடிமை செய்ய
எந்தைநீ யருளிச் செய்யாய் யாதுநான் செய்வ தென்னே
செந்தியார் வேள்வி யோவாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அந்தியும் பகலு மாட அடியிணை யலசுங் கொல்லோ. 4

4391. கண்டவா திரிந்து நாளுங் கருத்தினால் நின்றன் பாதங்
கொண்டிருந் தாடிப் பாடிக் கூடுவன் குறிப்பி னாலே
வண்டுபண் பாடுஞ் சோலை மல்குசிற் றம்ப லத்தே
எண்டிசை யோரு மேத்த இறைவநீ யாடு மாறே. 5

4392. பாத்திருந் தடிய னேனான் பரவுவன் பாடி யாடி
மூர்த்தியே யென்ப னுன்னை மூவரில் முதல்வ னென்பன்
ஏத்துவா ரிடர்கள் தீர்ப்பாய் தில்லைச்சிற் றம்ப லத்துக்
கூத்தாவுன் கூத்துக் காண்பான் கூடநான் வந்த வாறே. 6

4393. பொய்யினைத் தவிர விட்டுப் புறமலா அடிமை செய்ய
ஐயநீ யருளிச் செய்யாய் ஆதியே யாதி மூர்த்தி
வையகந் தன்னில் மிக்க மல்குசிற் றம்ப லத்தே
பையநின் னாட்டல் காண்பான் பரமநான் வந்த வாறே. 7

4394. மனத்தினார் திகைத்து நாளு மாண்பலா நெறிகண் மேலே
கனைப்பரா லென்செய் கேனோ கறையணி கண்டத் தானே
தினைத்தனை வேதங் குன்றாத் தில்லைச்சிற் றம்ப லத்தே
அனைத்துநின் நிலயங் காண்பா னடியனேன் வந்த வாறே. 8

4395. நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பி யாதே
வஞ்சமே செய்தி யாலோ வானவர் தலைவ னேநீ
மஞ்சடை சோலைத் தில்லை மல்குசிற் றம்ப லத்தே
அஞ்சொலாள் காண நின்று அழகநீ யாடு மாறே. 9

4396. மண்ணுண்ட மாலவனும் மலர்மிசை மன்னி னானும்
விண்ணுண்ட் திருவுருவம் விரும்பினார் காண மாட்டார்
திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்ப லத்தே
பண்ணுண்ட பாட லோடும் பரமநீ யாடு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. திருவதிகை வீரட்டானம் – கொப்பளித்த திருநேரிசை

4397. இரும்புகொப் பளித்த யானை யீருரி போர்த்த வீசன்
கரும்புகொப் பளித்த இன்சொற் காரிகை பாக மாகச்
சுரும்புகொப் பளித்த கங்கைத் துவலைநீர் சடையி லேற்ற
அரும்புகொப் பளித்த சென்னி யதிகைவீ ரட்ட னாரே. 1

4398. கொம்புகொப் பளித்த திங்கட் கோணல்வெண் பிறையுஞ் சூடி
வம்புகொப் பளித்த கொன்றை வளர்சடை மேலும் வைத்துச்
செம்புகொப் பளித்த மூன்று மதிலுடன் சுருங்க வாங்கி
அம்புகொப் பளித்த வெய்தா ரதிகைவீ ரட்ட னாரே. 2

4399. விடையுங்கொப் பளித்த பாதம் விண்ணவர் பரவி யேத்தச்
சடையுங்கொப் பளித்த திங்கட் சாந்தம்வெண் ணீறு பூசி
உடையுங்கொப் பளித்த நாக முள்குவா ருள்ளத் தென்றும்
அடையுங்கொப் பளித்த சீரா ரதிகைவீ ரட்ட னாரே. 3

4400. கறையுங்கொப் பளித்த கண்டர் காமவே ளுருவம் மங்க
இறையுங்கொப் பளித்த கண்ணா ரேத்துவா ரிடர்கள் தீர்ப்பார்
மறையுங்கொப் பளித்த நாவர் வண்டுண்டு பாடுங் கொன்றை
அறையுங்கொப் பளித்த சென்னி யதிகைவீ ரட்ட னாரே. 4

4401. நீறுகொப் பளித்த மார்பர் நிழல்திகழ் மழுவொன் றேந்திக்
கூறுகொப் பளித்த கோதைக் கோல்வளை மாதோர் பாகம்
ஏறுகொப் பளித்த பாத மிமையவர் பரவி யேத்த
ஆறுகொப் பளித்த சென்னி யதிகைவீ ரட்ட னாரே. 5

4402. வணங்குகொப் பளித்த பாதம் வானவர் பரவி யேத்தப்
பிணங்குகொப் பளித்த சென்னிச் சடையுடைப் பெருமை யண்ணல்
சுணங்குகொப் பளித்த கொங்கைச் சுரிகுழல் பாக மாக
அணங்குகொப் பளித்த மேனி யதிகைவீ ரட்ட னாரே. 6

4403. சூலங்கொப் பளித்த கையர் சுடர்விடு மழுவாள் வீசி
நூலுங்கொப் பளித்த மார்பில் நுண்பொறி யரவஞ் சேர்த்தி
மாலுங்கொப் பளித்த பாகர் வண்டுபண் பாடுங் கொன்றை
ஆலங்கொப் பளித்த கண்டத் ததிகைவீ ரட்ட னாரே 7

4404. நாகங்கொப் பளித்த கையர் நான்மறை யாய பாடி
மேகங்கொப் பளித்த திங்கள் விரிசடை மேலும் வைத்துப்
பாகங்கொப் பளித்த மாதர் பண்ணுடன் பாடி யாட
ஆகங்கொப் பளித்த தோளா ரதிகைவீ ரட்ட னாரே. 8

4405. பரவுகொப் பளித்த பாடல் பண்ணுடன் பத்த ரேத்த
விரவுகொப் பளித்த கங்கை விரிசடை மேவ வைத்து
இரவுகொப் பளித்த கண்ட ரேத்துவா ரிடர்கள் தீர்ப்பார்
அரவுகொப் பளித்த கைய ரதிகைவீ ரட்ட னாரே. 9

4406. தொண்டைகொப் பளித்த செவ்வாய்த் துடியிடைப் பரவை யல்குற்
கொண்டைகொப் பளித்த கோதைக் கோல்வளை பாக மாக
வண்டுகொப் பளித்த தீந்தேன் வரிக்கயல் பருகி மாந்தக்
கெண்டைகொப் பளித்த தெண்ணீர்க் கெடிலவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 25. திருவதிகை வீரட்டானம் : திருநேரிசை

4407. வெண்ணிலா மதியந் தன்னை விரிசடை மேவ வைத்து
உண்ணிலாப் புகுந்து நின்றங் குணர்வினுக் குணரக் கூறி
விண்ணிலார் மீயச் சூரார் வேண்டுவார் வேண்டு வார்க்கே
அண்ணியார் பெரிதுஞ் சேயா ரதிகைவீ ரட்ட னாரே. 1

4408. பாடினார் மறைகள் நான்கும் பாயிருள் புகுந்தென் னுள்ளம்
கூடினார் கூட லால வாயிலார் நல்ல கொன்றை
சூடினார் சூடல் மேவிச் சூழ்சுடர் சுடலை வெண்ணீ
றாடினா ராடல் மேவி யதிகைவீ ரட்ட னாரே. 2

4409. ஊனையே கழிக்க வேண்டி லுணர்மின்க ளுள்ளத் துள்ளே
தேனைய மலர்கள் கொண்டு சிந்தையுட் சிந்திக் கின்ற
ஏனைய பலவு மாகி யிமையவ ரேத்த நின்று
ஆனையி னுரிவை போர்த்தா ரதிகைவீ ரட்ட னாரே. 3

4410. துருத்தியாங் குரம்பை தன்னிற் றொண்ணூற்றங் கறுவர் நின்று
விருத்திதான் தருக வென்று வேதனை பலவுஞ் செய்ய
வருத்தியால் வல்ல வாறு வந்துவந் தடைய நின்ற
அருத்தியார்க் கன்பர் போலு மதிகைவீ ரட்ட னாரே. 4

4411. பத்தியா லேத்தி நின்று பணிபவர் நெஞ்சத் துள்ளார்
துத்தியைந் தலைய நாகஞ் சூழ்சடை முடிமேல் வைத்து
உத்தர மலையர் பாவை யுமையவள் நடுங்க அன்று
அத்தியி னுரிவை போர்த்தா ரதிகைவீ ரட்ட னாரே. 5

4412. வரிமுடி பாடி யென்றும் வல்லவா றடைந்து நெஞ்சே
கரியுரி மூட வல்ல கடவுளைக் காலத் தாலே
சுரிபுரி விரிகு மூலாள் துடியிடைப் பரவை யல்குல்
அரிவையோர் பாகர் போலு மதிகைவீ ரட்ட னாரே. 6

4413. நீதியால் நினைசெய் நெஞ்சே நிமலனை நித்த மாகப்
பாதியாம் உமைதன் னோடும் பாகமாய் நின்ற எந்தை
சோதியாய்ச் சுடர்வி ளக்காய்ச் சுண்ணவெண் ணீற தாடி
ஆதியு மீறு மானா ரதிகைவீ ரட்ட னாரே. 7

4414. எல்லியும் பகலு மெல்லாந் துஞ்சுவோர்க் கொருவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில் புக்கனர் காம னென்னும்
வில்லியைங் கணையி னானை வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி யதிகைவீ ரட்ட னாரே. 8

4415. ஒன்றவே யுணர்தி ராகில் ஓங்காரத் தொருவ னாகும்
வென்றவைம் புலன்கள் தம்மை விலக்குதற் குரியீ ரெல்லாம்
நன்றவ நாரணனு நான்முகன் நாடிக் காண்குற்
றன்றவர்க் கரியர் போலு மதிகைவீ ரட்ட னாரே. 9

4416. தடக்கையா லெடுத்து வைத்துத் தடவரை குலுங்க ஆர்த்துக்
கிடக்கையா லிடர்க ளோங்கக் கிளர்மணி முடிகள் சாய
முடக்கினார் திருவி ரலான் முருகமர் கோதை பாகத்
தடக்கினா ரென்னை யாளு மதிகைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 26. திருவதிகை வீரட்டானம் : திருநேரிசை

4417. நம்பனே யெங்கள் கோவே நாதனே யாதி மூர்த்தி
பங்கனே பரம யோகி யென்றென்றே பரவி நாளும்
செம்பொனே பவளக் குன்றே திகழ்மலர்ப் பாதங் காண்பான்
அன்பனே யலந்து போனே னதிகைவீ ரட்ட னீரே. 1

4418. பொய்யினால் மிடைந்த போர்வை புரைபுரை யழுகி வீழ
மெய்யனாய் வாழ மாட்டேன் வேண்டிற்றொன் றைவர் வேண்டார்
செய்யதா மரைக ளன்ன சேவடி யிரண்டுங் காண்பான்
ஐயநா னலந்து போனே னதிகைவீ ரட்ட னீரே. 2

4419. நீதியால் வாழ மாட்டேன் நித்தலுந் தூயே னல்லேன்
ஓதியு முணர மாட்டேன் உன்னையுள் வைக்க மாட்டேன்
சோதியே சுடரே யுன்றன் தூமலர்ப் பாதங் காண்பான்
ஆதியே யலந்து போனே னதிகைவீ ரட்ட னீரே. 3

4420.தெருளுமா தெருள மாட்டேன் தீவினைச் சுற்ற மென்னும்
பொருளுளே யழுந்தி நாளும் போவதோர் நெறியுங் காணேன்
இருளுமா மணிகண் டாநின் னிணையடி யிரண்டுங் காண்பான்
அருளுமா றருள வேண்டு மதிகைவீ ரட்ட னீரே. 4

4421. அஞ்சினா லியற்றப் பட்ட ஆக்கைபெற் றதனுள் வாழும்
அஞ்சினா லடர்க்கப் பட்டிங் குழிதரு மாத னேனை
அஞ்சினா லுய்க்கும் வண்ணங் காட்டினாய்க் கச்சந் தீர்ந்தேன்
அஞ்சினாற் பொலிந்த சென்னி யதிகைவீ ரட்ட னீரே. 5

4422.உறுகயி றூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானே னதிகைவீ ரட்ட னீரே. 6

4423.கழித்திலேன் காம வெந்நோய் காதன்மை யென்னும் பாசம்
ஒழித்திலே னூன்கண் நோக்கி யுணர்வெனு மிமைதி றந்து
விழித்திலேன் வெளிறு தோன்ற வினையெனுஞ் சரக்குக் கொண்டேன்
அழித்திலே னயர்த்துப் போனே னதிகைவீ ரட்ட னீரே. 7

4424.மன்றத்துப் புன்னை போல மரம்படு துயர மெய்தி
ஒன்றினா லுணர மாட்டே னுன்னையுள் வைக்க மாட்டேன்
கன்றிய காலன் வந்து கருக்குழி விழுப்ப தற்கே
அன்றினா னலமந் திட்டே னதிகைவீ ரட்ட னீரே. 8

4425.பிணிவிடா ஆக்கை பெற்றேன் பெற்றமொன் றேறு வானே
பணிவிடா இடும்பை யென்னும் பாசனத் தழுந்து கின்றேன்
துணிவிலேன் தூய னல்லேன் தூமலர்ப் பாதங் காண்பான்
அணியனா யறிய மாட்டே னதிகைவீ ரட்ட னீரே. 9

4426.திருவினாள் கொழுந னாருந் திசைமுக முடைய கோவும்
இருவரு மெழுந்தும் வீழ்ந்து மிணையடி காண மாட்டா
ஒருவனே யெம்பி ரானே யுன்திருப் பாதங் காண்பான்
அருவனே யருள வேண்டு மதிகைவீ ரட்ட னீரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 27. திருவதிகை வீரட்டானம் : திருநேரிசை

4427. மடக்கினார் புலியின் தோலை மாமணி நாகங் கச்சா
முடக்கினார் முகிழ்வெண் திங்கள் மொய்சடைக் கற்றை தன்மேல்
தொடக்கினார் தொண்டைச் செவ்வாய்த் துடியிடைப் பரவை யல்குல்
அடக்கினார் கெடில வேலி யதிகைவீ ரட்ட னாரே. 1

4428. சூடினார் கங்கை யாளைச் சூடிய துழனி கேட்டங்
கூடினாள் நங்கை யாளு மூடலை யொழிக்க வேண்டிப்
பாடினார் சாம வேதம் பாடிய பாணி யாலே
ஆடினார் கெடில வேலி யதிகைவீ ரட்ட னாரே. 2

4429. கொம்பினார் குழைத்த வேனற் கோமகன் கோல நீர்மை
நம்பினார் காண லாகா வகையதோர் நடலை செய்தார்
வெம்பினார் மதில்கள் மூன்றும் வில்லிடை யெரித்து வீழ்த்த
அம்பினார் கெடில வேலி யதிகைவீ ரட்ட னாரே. 3

4430. மறிபடக் கிடந்த கையர் வளரிள மங்கை பாகம்
செறிபடக் கிடந்த செக்கர்ச் செழுமதிக் கொழுந்து சூடிப்
பொறிபடக் கிடந்த நாகம் புகையுமிழ்ந் தழல வீக்கிக்
கிறிபட நடப்பர் போலுங் கெடிலவீ ரட்ட னாரே. 4

4431. நரிவரால் கவ்வச் சென்று நற்றசை யிழந்த தொத்த
தெரிவரால் மால்கொள் சிந்தை தீர்ப்பதோர் சிந்தை செய்வார்
வரிவரா லுகளுந் தெண்ணீர்க் கழனிசூழ் பழன வேலி
அரிவரால் வயல்கள் சூழ்ந்த வதிகைவீ ரட்ட னாரே. 5

4432. புள்ளலைத் துண்ட வோட்டி லுண்டுபோய்ப் பலாசங் கொம்பின்
சுள்ளலைச் சுடலை வெண்ணீ றணிந்தவர் மணிவெள் ளேற்றுத்
துள்ளலைப் பாகன் றன்னைத் தொடர்ந்திங்கே கிடக்கின் றேனை
அள்ளலைக் கடப்பித் தாளு மதிகைவீ ரட்ட னாரே. 6

4433. நீறிட்ட நுதலர் வேலை நீலஞ்சேர் கண்டர் மாதர்
கூறிட்ட மெய்ய ராகிக் கூறினா ராறும் நான்குங்
கீறிட்ட திங்கள் சூடிக் கிளர்தரு சடையி னுள்ளால்
ஆறிட்டு முடிப்பர் போலு மதிகைவீ ரட்ட னாரே. 7

4434. காணிலார் கருத்தில் வாரார் திருத்தலார் பொருத்த லாகார்
ஏணிலா ரிறப்பு மில்லார் பிறப்பிலார் துறக்க லாகார்
நாணிலா ரைவ ரோடு மிட்டெனை விரவி வைத்தார்
ஆணலார் பெண்ணு மல்லா ரதிகைவீ ரட்ட னாரே. 8,9

4435. தீர்த்தமா மலையை நோக்கிச் செருவலி யரக்கன் சென்று
பேர்த்தலும் பேதை யஞ்சப் பெருவிர லதனை யூன்றிச்
சீர்த்தமா முடிகள் பத்துஞ் சிதறுவித் தவனை யன்று
ஆர்த்தவா யலற வைத்தா ரதிகைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருவதிகை வீரட்டானம் : திருநேரிசை

4436. முன்பெலா மிளைய காலம் மூர்த்தியை நினையா தோடிக்
கண்கண விருமி னாளுங் கருத்தழிந் தருத்த மின்றிப்
பின்புக லுணங்க லட்டும் பேதைமார் போன்றே னுள்ளம்
அன்பனாய் வாழ மாட்டே னதிகைவீ ரட்ட னீரே. 1

4437. கறைப்பெருங் கண்டத் தானே காய்கதிர் நமனை யஞ்சி
நிறைப்பெருங் கடலைக் கண்டேன் நீள்வரை யுச்சி கண்டேன்
பிறைப்பெருஞ் சென்னி யானே பிஞ்ஞகா இவைய னைத்தும்
அறுப்பதோ ருபாயங் காணே னதிகைவீ ரட்ட னீரே. 2

4438. நாதனா ரென்ன நாளு நடுங்கின ராகித் தங்கள்
ஏதங்க ளறிய மாட்டா ரிணையடி தொழுதோ மென்பார்
ஆதனா னவனென் றெள்கி யதிகைவீ ரட்ட னேநின்
பாதநான் பரவா துய்க்கும் பழவினைப் பரிசி லேனே. 3

4439. சுடலைசேர் சுண்ண மெய்யர் சுரும்புண விரிந்த கொன்றைப்
படலைசே ரலங்கன் மார்பர் பழனஞ்சேர் கழனித் தெங்கின்
மடலைநீர் கிழிய வோடி யதனிடை மணிகள் சிந்தும்
கெடிலவீ ரட்ட மேய கிளர்சடை முடிய னாரே. 4

4440. மந்திர முள்ள தாக மறிகட லெழுநெய் யாக
இந்திரன் வேள்வித் தீயி லெழுந்ததோர் கொழுந்தின் வண்ணம்
சிந்திர மாக நோக்கித் தெருட்டுவார் தெருட்ட வந்து
கந்திரம் முரலுஞ் சோலைக் கானலங் கெடிலத் தாரே. 5,6,7,8,9

4441. மைஞ்ஞல மனைய கண்ணாள் பங்கன்மா மலையை யோடி
மெய்ஞ்ஞரம் புதிரம் பில்க விசைதணிந் தரக்கன் வீழ்ந்து
கைஞ்ஞரம் பெழுவிக் கொண்டு காதலா லினிது சொன்ன
கின்னரங் கேட்டு கந்தார் கெடிலவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 29. திருச்செம்பொன்பள்ளி : திருநேரிசை

4442. ஊனினுள் ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளிய ராகி
வானினுள் வான வர்க்கும் அறியலா காத வஞ்சர்
நானெனிற் றானே யென்னு ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 1

4443. நொய்யவர் விழுமி யாரு நூலினுள் நெறியைக் காட்டும்
மெய்யவர் பொய்யு மில்லா ருடலெனு மிடிஞ்சில் தன்னில்
நெய்யமர் திரியு மாகி நெஞ்சத்துள் விளக்கு மாகிச்
செய்யவர் கரிய கண்டர் திருச்செம்பொன் பள்ளி யாரே. 2

4444. வெள்ளியர் கரியர் செய்யர் விண்ணவ ரவர்கள் நெஞ்சுள்
ஒள்ளிய ரூழி யூழி யுலகம தேத்த நின்ற
பள்ளியர் நெஞ்சத் துள்ளார் பஞ்சமம் பாடி யாடும்
தெள்ளியார் கள்ளந் தீர்ப்பார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 3

4445. தந்தையுந் தாயு மாகித் தானவன் ஞான மூர்த்தி
முந்திய தேவர் கூடி முறைமுறை யிருக்குச் சொல்லி
எந்தைநீ சரண மென்றங் கிமையவர் பரவி யேத்தச்
சிந்தையுட் சிவம தானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 4

4446. ஆறுடைச் சடையர் போலும் அன்பருக் கன்பர் போலும்
கூறுடை மெய்யர் போலுங் கோளர வரையர் போலும்
நீறுடை யழகர் போலு நெய்தலே கமழு நீர்மைச்
சேறுடைக் கமல வேலித் திருச்செம்பொன் பள்ளி யாரே. 5

4447. ஞாலமு மறிய வேண்டில் நன்றென வாழ லுற்றீர்
காலமுங் கழிய லான கள்ளத்தை ஒழிய கில்லீர்
கோலமும் வேண்டா ஆர்வச் செற்றங்கள் குரோத நீக்கில்
சீலமும் நோன்பு மாவார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 6

4448. புரிகாலே நேசஞ் செய்ய இருந்தபுண் டரீகத் தாரும்
எரிகாலே மூன்று மாகி யிமையவர் தொழநின் றாரும்
தெரிகாலே மூன்று சந்தி தியானித்து வணங்க நின்று
திரிகாலங் கண்ட வெந்தை திருச்செம்பொன் பள்ளி யாரே. 7

4449. காருடைக் கொன்றை மாலை கதிர்மதி யரவி னோடும்
நீருடைச் சடையுள் வைத்த நீதியார் நீதி யுள்ளார்
பாரொடு விண்ணு மண்ணும் பதினெட்டுக் கணங்க ளேத்தச்
சீரொடு பாட லானார் திருச்செம்பொன் பள்ளி யாரே. 8

4450. ஓவாத மறைவல் லானு மோதநீர் வண்ணன் காணா
மூவாத பிறப்பி லாரு முனிகளா னார்க ளேத்தும்
பூவான மூன்றும் முந்நூற் றறுபது மாகு மெந்தை
தேவாதி தேவ ரென்றுந் திருச்செம்பொன் பள்ளி யாரே. 9

4451. அங்கங்க ளாறு நான்கு மந்தணர்க் கருளிச் செய்து
சங்கங்கள் பாட ஆடுஞ் சங்கரன் மலையெ டுத்தான்
அங்கங்க ளுதிர்ந்து சோர அலறிட அடர்த்து நின்றும்
செங்கணவெள் ளேற தேறுந் திருச்செம்பொன் பள்ளி யாரே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 30. திருக்கழிப்பாலை : திருநேரிசை

4452. நங்கையைப் பாகம் வைத்தார் ஞானத்தை நவில வைத்தார்
அங்கையி லனலும் வைத்தார் ஆனையி னுரிவை வைத்தார்
தங்கையின் யாழும் வைத்தார் தாமரை மலரும் வைத்தார்
கங்கையைச் சடையுள் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 1

4453. விண்ணினை விரும்ப வைத்தார் வேள்வியை வேட்க வைத்தார்
பண்ணினைப் பாட வைத்தார் பத்தர்கள் பயில வைத்தார்
மண்ணினைத் தாவ நீண்ட மாலினுக் கருளும் வைத்தார்
கண்ணினை நெற்றி வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 2

4454. வாமனை வணங்க வைத்தார் வாயினை வாழ்த்த வைத்தார்
சோமனைச் சடைமேல் வைத்தார் சோதியுட் சோதி வைத்தார்
ஆமனெய் யாட வைத்தா ரன்பெனும் பாசம் வைத்தார்
காமனைக் காய்ந்த கண்ணார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே.3

4455. அரியன அங்கம் வேத மந்தணர்க் கருளும் வைத்தார்
பெரியன புரங்கள் மூன்றும் பேரழ லுண்ண வைத்தார்
பரியதீ வண்ண ராகிப் பவளம்போல் நிறத்தை வைத்தார்
கரியதோர் கண்டம் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 4

4456. கூரிருள் கிழிய நின்ற கொடுமழுக் கையில் வைத்தார்
பேரிருள் கழிய மல்கு பிறைபுனற் சடையுள் வைத்தார்
ஆரிரு ளண்டம் வைத்தார் அறுவகைச் சமயம் வைத்தார்
காரிருள் கண்டம் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 5

4457. உட்டங்கு சிந்தை வைத்தார் உள்குவார்க் குள்ளம் வைத்தார்
விட்டங்கு வேள்வி வைத்தார் வெந்துயர் தீர வைத்தார்
நட்டங்கு நடமும் வைத்தார் ஞாலமு நவில வைத்தார்
கட்டங்கங் தோண்மேல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 6

4458. ஊனப்பே றொழிய வைத்தா ரோதியே யுணர வைத்தார்
ஞானப்பேர் நவில வைத்தார் ஞானமு நடுவும் வைத்தார்
வானப்பே றாறும் வைத்தார் வைகுந்தற் காழி வைத்தார்
கானப்பேர் காதல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 7

4459. கொங்கினு மரும்பு வைத்தார் கூற்றங்கள் கெடுக்க வைத்தார்
சங்கினுள் முத்தம் வைத்தார் சாம்பலும் பூச வைத்தார்
அங்கமும் வேதம் வைத்தா ராலமு முண்டு வைத்தார்
கங்குலும் பகலும் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 8

4460. சதுர்முகன் றானு மாலந் தம்மிலே யிகலக் கண்டு
எதிர்முக மின்றி நின்ற எரியுரு வதனை வைத்தார்
பிதிர்முகன் காலன் றன்னைக் கால்தனிற் பிதிர வைத்தார்
கதிர்முகஞ் சடையில் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே. 9

4461. மாலினாள் நங்கை யஞ்ச மதிலிலங் கைக்கு மன்னன்
வேலினான் வெகுண்டெ டுக்கக் காண்டலும் வேத நாவன்
நூலினான் நோக்கி நக்கு நொடிப்பதோ ரளவில் வீழக்
காலினா லூன்றி யிட்டார் கழிப்பாலைச் சேரப்ப னாரே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 31. திருக்கடவூர் : திருநேரிசை

4462. பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போக மாதர்
வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத் தூபம்
உள்ளத்த திரியொன் றேற்றி யுணருமா றுணர வல்லார்
கள்ளத்தைக் கழிப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 1

4463. மண்ணிடைக் குரம்பை தன்னை மதித்துநீர் மைய லெய்தில்
விண்ணிடைத் தரும ராசன் வேண்டினால் விலக்கு வாரார்
பண்ணிடைச் சுவைகள் பாடி யாடிடும் பத்தர்க் கென்றுங்
கண்ணிடை மணியர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 2

4464. பொருந்திய குரம்பை தன்னுட் பொய்ந்நடை செலுத்து கின்றீர்
ஒருத்தனை யுணர மாட்ட ருள்ளத்திற் கொடுமை நீக்கீர்
வருத்தின களிறு தன்னை வருத்துமா வருத்த வல்லார்
கருத்தினி லிருப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 3

4465. பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தற்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினா லிடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே. 4

4466. தலக்கமே செய்து வாழ்ந்து தக்கவா றொன்று மின்றி
விலக்குவா ரிலாமை யாலே விளக்கதிற் கோழி போன்றேன்
மலக்குவார் மனத்தி னுள்ளே காலனார் தமர்கள் வந்து
கலக்கநான் கலங்கு கின்றேன் கடவூர்வீ ரட்ட னீரே. 5

4467. பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை யைவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர்வீ ரட்ட னீரே. 6

4468. மாயத்தை யறிய மாட்டேன் மையல்கொண் மனத்த னாகிப்
பேயொத்துக் கூகை யானேன் பிஞ்ஞகா பிறப்பொன் றில்லீ
நேயத்தால் நினைய மாட்டேன் நீதனே நீச னேன்நான்
காயத்தைக் கழிக்க மாட்டேன் கடவூர்வீ ரட்ட னீரே. 7

4469. பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக்கே நீரி றைத்தேன்
உற்றலால் கயவர் தேறா ரென்னுங்கட் டுரையோ டொத்தேன்
எற்றுளே னென்செய் கேனா னிடும்பையால் ஞான மேதுங்
கற்றிலேன் களைகண் காணேன் கடவூர்வீ ரட்ட னீரே. 8

4470. சேலின்நே ரனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி யென்றும்
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டற் காக அன்று
காலனை யுதைப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே. 9

4471. முந்துரு விருவ ரோடு மூவரு மாயி னாரும்
இந்திர னோடு தேவ ரிருடிக ளின்பஞ் செய்ய
வந்திரு பதுகள் தோளா லெடுத்தவன் வலியை வாட்டிக்
கந்திரு வங்கள் கேட்டார் கடவூர்வீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 32. திருப்பயற்றூர் : திருநேரிசை

4472. உரித்திட்டா ரானை யின்தோல் உதிரவா றொழுகி யோட
விரித்திட்டா ருமையா எஞ்சி விரல்விதிர்த் தலக்கண் நோக்கித்
தரித்திட்டார் சிறிது போது தரிக்கில ராகித் தாமுஞ்
சிரித்திட்டா ரெயிறு தோன்றத் திருப்பயற் றூர னாரே. 1

4473. உவந்திட்டங் குமையோர் பாகம் வைத்தவ ரூழி யூழி
பவந்திட்ட பரம னார்தாம் மலைச்சிலை நாக மேற்றிக்
கவர்ந்திட்ட புரங்கள் மூன்றுங் கனலெரி யாகச் சீறிச்
சிவந்திட்ட கண்ணர் போலுந் திருப்பயற் றூர னாரே. 2

4474. நங்களுக் கருள தென்று நான்மறை யோது வார்கள்
தங்களுக் கருளு மெங்கள் தத்துவன் தழலன் தன்னை
எங்களுக் கருள்செ யென்ன நின்றவன் நாகம் அஞ்சுந்
திங்களுக் கருளிச் செய்தார் திருப்பயற் றூர னாரே. 3

4475. பார்த்தனுக் கருளும் வைத்தார் பாம்பரை யாட வைத்தார்
சாத்தனை மகனா வைத்தார் சாமுண்டி சாம வேதங்
கூத்தொடும் பாட வைத்தார் கோளரா மதியம் நல்ல
தீர்த்தமுஞ் சடைமேல் வைத்தார் திருப்பயற் றூர னாரே. 4

4476. மூவகை மூவர் போலும் முற்றுமா நெற்றிக் கண்ணர்
நாவகை நாவர் போலும் நான்மறை ஞான மெல்லாம்
ஆவகை யாவர் போலும் ஆதிரை நாளர் போலுந்
தேவர்கள் தேவர் போலுந் திருப்பயற் றூர னாரே. 5

4477. ஞாயிறாய் நமனு மாகி வருணனாய்ச் சோம னாகித்
தீயறா நிருதி வாயுத் திப்பிய சாந்த னாகிப்
பேயறாக் காட்டி லாடும் பிஞ்ஞக னெந்தை பெம்மான்
தீயறாக் கையர் போலுந் திருப்பயற் றூர னாரே. 6

4478. ஆவியா யவியு மாகி யருக்கமாய்ப் பெருக்க மாகிப்
பாவியர் பாவந் தீர்க்கும் பரமனாய்ப் பிரம னாகித்
காவியங் கண்ண ளாகிக் கடல்வண்ண மாகி நின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூர னாரே. 7

4479. தந்தையாய்த் தாயு மாகித் தரணியாய்த் தரணி யுள்ளார்க்
கெந்தையு மென்ன நின்ற வேழுல குடனு மாகி
எந்தையெம் பிரானே யென்றென் றுள்குவா ருள்ள தென்றுஞ்
சிந்தையுஞ் சிவமு மாவார் திருப்பயற் றூர னாரே. 8

4480. புலன்களைப் போக நீக்கிப் புந்தியை யொருங்க வைத்து
இலங்களைப் போக நின்று இரண்டையு நீக்கி யொன்றாய்
மலங்களை மாற்ற வல்லார் மனத்தினுட் போக மாகிச்
சினங்களைக் களைவர் போலுந் திருப்பயற் றூர னாரே. 9

4481. மூர்த்திதன் மலையின் மீது போகாதால் முனிந்து நோக்கிப்
பார்த்துத்தான் பூமி மேலாற் பாய்ந்துடன் மலையைப் பற்றி
ஆர்த்திட்டான் முடிகள் பத்தும் அடர்த்துநல் லரிவை யஞ்சத்
தேத்தெத்தா என்னக் கேட்டார் திருப்பயற் றூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 33. திருமறைக்காடு : திருநேரிசை

4482. இந்திர னோடு தேவ ரிருடிக ளேத்து கின்ற
சுந்தர மானார் போலுந் துதிக்கலாஞ் சோதி போலுஞ்
சந்திர னோடுங் கங்கை அரவையுஞ் சடையுள் வைத்து
மந்திர மானார் போலும் மாமறைக் காட னாரே. 1

4483. தேயன நாட ராகித் தேவர்கள் தேவர் போலும்
பாயன நாட றுக்கும் பத்தர்கள் பணிய வம்மின்
காயன நாடு கண்டங் கதனுளார் காள கண்டர்
மாயன நாடர் போலும் மாமறைக் காட னாரே. 2

4484. அறுமையிவ் வுலகு தன்னை யாமெனக் கருதி நின்று
வெறுமையின் மனைகள் வாழ்ந்து வினைகளால் நலிவு ணாதே
சிறுமதி யரவங் கொன்றை திகழ்தரு சடையுள் வைத்து
மறுமையு மிம்மை யாவார் மாமறைக் காட னாரே. 3

4485. கால்கொடுத் திருகை யேற்றிக் கழிநிறைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங் கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காட னாரே. 4

4486. விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் விரும்பி யோதப்
பண்ணினார் கின்ன ரங்கள் பத்தர்கள் பாடி யாடக்
கண்ணினார் கண்ணி னுள்ளே சோதியாய் நின்ற எந்தை
மண்ணினார் வலங்கொண் டேத்தும் மாமறைக் காட னாரே. 5

4487. அங்கையு ளனலும் வைத்தா ரறுவகைச் சமயம் வைத்தார்
தங்கையில் வீணை வைத்தார் தம்மடி பரவ வைத்தார்
திங்களைக் கங்கை யோடு திகழ்தரு சடையுள் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார் மாமறைக் காட னாரே. 6

4488. கீதராய்க் கீதங் கேட்டுக் கின்னரந் தன்னை வைத்தார்
வேதராய் வேத மோதி விளங்கிய சோதி வைத்தார்
ஏதராய் நட்ட மாடி யிட்டமாய்க் கங்கை யோடு
மாதையோர் பாகம் வைத்தார் மாமறைக் காட னாரே. 7

4489. கனத்தினார் வலியு டைய கடிமதி லரண மூன்றுஞ்
சினத்தினுட் சினமாய் நின்று தீயெழச் செற்றார் போலும்
தனத்தினைத் தவிர்ந்து நின்று தம்மடி பரவு வார்க்கு
மனத்தினுள் மாசு தீர்ப்பார் மாமறைக் காட னாரே. 8

4490. தேசனைத் தேசன் தன்னைத் தேவர்கள் போற்றி சைப்பார்
வாசனை செய்து நின்று வைகலும் வணங்கு மின்கள்
காசினைக் கனலை யென்றுங் கருத்தினில் வைத்த வர்க்கு
மாசினைத் தீர்ப்பர் போலும் மாமறைக் காட னாரே. 9

4491. பிணியுடை யாக்கை தன்னைப் பிறப்பறுத் துய்ய வேண்டில்
பணியுடைத் தொழில்கள் பூண்டு பத்தர்கள் பற்றி னாலே
துணிவுடை யரக்க நோடி யெடுத்தலுந் தோகை அஞ்ச
மணிமுடிப் பத்தி றுத்தார் மாமறைக் காட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 34. திருமறைக்காடு : திருநேரிசை

4492. தேரையு மேல்க டாவித் திண்ணமாத் தெழித்து நோக்கி
யாரையு மேலுணரா வாண்மையான் மிக்கான் றன்னைப்
பாரையும் விண்ணும் அஞ்சப் பரந்ததோள் முடிய டர்த்துக்
காரிகை யஞ்ச லென்பார் கலிமறைக் காட னாரே. 1

4493. முக்கிமுன் வெகுண்டெ டுத்த முடியுடை யரக்கர் கோனை
நக்கிருந் தூன்றிச் சென்னி நாண்மதி வைத்த எந்தை
அக்கர வாமை பூண்ட அழகானர் கருத்தி னாலே
தெக்குநீர்த் திரைகள் மோதுந் திருமறைக் காட னாரே. 2

4494. மிகப்பெருத் துலாவ மிக்கா னக்கொரு தேர்க டாவி
அகப்படுத் தென்று தானு மாண்மையால் மிக்க ரக்கன்
உகைத்தெடுத் தான்ம லையை ஊன்றலு மவனை யாங்கே
நகைப்படுத் தருளி னானூர் நான்மறைக் காடு தானே. 3

4495. அந்தரந் தேர்க டாவி யாரிவ னென்று சொல்லி
உந்தினான் மாம லையை யூன்றலு மொள்ள ரக்கன்
பந்தமாந் தலைகள் பத்தும் வாய்கள் விட் டலறி வீழச்
சிந்தனை செய்து விட்டார் திருமறைக் காட னாரே. 4

4496. தடுக்கவுந் தாங்க வொண்ணாத் தன்வலி யுடைய னாகிக்
கடுக்கவோர் தேர்க டாவிக் கையிரு பதுக ளாலும்
எடுப்பன் நானென்ன பண்ட மென்றெடுத் தானை யேங்க
அடுக்கவே வல்ல னூராம் அணிமறைக் காடு தானே. 5

4497. நாள்முடிக் கின்ற சீரான் நடுங்கியே மீது போகான்
கோள்பிடித் தார்த்த கையான் கொடியன்மா வலிய னென்று
நீள்முடிச் சடையர் சேரு நீள்வரை யெடுக்க லுற்றான்
தோள்முடி நெரிய வைத்தார் தொன்மறைக் காட னாரே. 6

4498. பத்துவா யிரட்டிக் கைக ளுடையன்மா வலிய னென்று
பொத்திவாய் தீமை செய்த பொருவலி அரக்கர் கோனைக்
கத்திவாய் கதற அன்று கால்விர லூன்றி யிட்டார்
முத்துவாய்த் திரைகள் மோதும் முதுமைறைக் காட னாரே. 7

4499. பக்கமே விட்ட கையான் பாங்கிலா மதிய னாகிப்
புக்கனன் மாம லைக்கீழ்ப் போதுமா றறிய மாட்டான்
மிக்கமா மதிகள் கெட்டு வீரமு மிழந்த வாறே
நக்கன பூத மெல்லாம் நான்மறைக் காட னாரே. 8

4500. நாணஞ்சு கைய னாகி நன்முடி பத்தி னோடு
பாணஞ்சு முன்னி ழந்து பாங்கிலா மதிய னாகி
நீணஞ்சு தானுணரா நின்றெடுத் தானை யன்று
ஏணஞ்சு கைகள் செய்தா ரெழின்மறைக் காட னாரே. 9

4501. கங்கைநீர் சடையுள் வைக்கக் காண்டலும் மங்கை யூடத்
தென்கையான் தேர்க டாவிச் சென்றெடுத் தான்ம லையை
முன்கைமா நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட
அங்கைவா ளருளி னானூ ரணிமறைக் காடு தானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருவிடைமருதூர் : திருநேரிசை

4502. காடுடைச் சுடலை நீற்றர் கையில்வெண் தலையர் தையல்
பாடுடைப் பூதஞ் சூழப் பரமனார் மருத வைப்பில்
தோடுடைக் கைதை யோடுஞ் சூழ்கிடங் கதனைச் சூழ்ந்த
ஏடுடைக் கமல வேலி யிடைமரு திடங்கொண் டாரே. 1

4503. முந்தையார் முந்தி யுள்ளார் மூவர்க்கு முதல்வ ரானார்
சந்தியார் சந்தி யுள்ளார் தவநெறி தரித்து நின்றார்
சிந்தையார் சிந்தை யுள்ளார் சிவநெறி யனைத்து மானார்
எந்தையா ரெம்பி ரானா ரிடைமரு திடங்கொண் டாரே. 2

4504. காருடைக் கொன்றை மாலைக் கதிர்மணி யரவி னோடு
நீருடைச் சடையுள் வைத்த நீதியார் நீதி யாய
போருடை விடையொன் றேற வல்லவர் பொன்னித் தென்பால்
ஏருடைக் கமல மோங்கு மிடைமரு திடங்கொண் டாரே. 3

4505. விண்ணினார் விண்ணின் மிக்கார் வேதங்கள் நான்கும் அங்கம்
பண்ணினார் பண்ணின் மிக்க பாடலார் பாவந் தீர்க்குங்
கண்ணினார் கண்ணின் மிக்க நுதலினார் காமற் காய்ந்த
எண்ணினா ரெண்ணின் மிக்கா ரிடைமரு திடங்கொண் டாரே. 4

4506. வேதங்கள் நான்குங் கொண்டு விண்ணவர் பரவி யேத்தப்
பூதங்கள் பாடி யாட லுடையவன் புனித னெந்தை
பாதங்கள் பரவி நின்ற பத்தர்கள் தங்கண் மேலை
ஏதங்கள் தீர நின்றா ரிடைமரு திடங்கொண் டாரே. 5

4507. பொறியரா வரையி லார்த்துப் பூதங்கள் பலவுஞ் சூழ
முறிதரு வன்னி கொன்றை முதிர்சடை மூழ்க வைத்து
மறிதரு கங்கை தங்க வைத்தவ ரெத்தி சையும்
எறிதரு புனல்கொள் வேலி யிடைமரு திடங்கொண் டாரே. 6

4508. படரொளி சடையி னுள்ளாற் பாய்புன லரவி னோடு
சுடரொளி மதியம் வைத்துத் தூவொளி தோன்று மெந்தை
அடரொளி விடையொன் றேற வல்லவ ரன்பர் தங்கள்
இடரவை கெடவு நின்றா ரிடைமரு திடங்கொண் டாரே. 7

4509. கமழ்தரு சடையி னுள்ளாற் கடும்புன லரவி னோடுந்
தவழ்தரு மதியம் வைத்துத் தன்னடி பலரு மேத்த
மழுவது வலங்கை யேந்தி மாதொரு பாக மாகி
எழில்தரு பொழில்கள் சூழ்ந்த விடைமரு திடங்கொண் டாரே. 8

4510. பொன்றிகழ் கொன்றை மாலை புதுப்புனல் வன்னி மத்தம்
மின்றிகழ் சடையில் வைத்து மேதகத் தோன்று கின்ற
அன்றவ ரளக்க லாகா அனலெரி யாகி நீண்டார்
இன்றுட னுலக மேத்த விடைமரு திடங்கொண் டாரே. 9

4511. மலையுடன் விரவி நின்று மதியிலா அரக்கன் நூக்கத்
தலையுட னடர்த்து மீண்டே தலைவனா யருள்கள் நல்கிச்
சிலையுடை மலையை வாங்கித் திரிபுர மூன்று மெய்தார்
இலையுடைக் கமல வேலி யிடைமரு திடங்கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 36. திருப்பழனம் : திருநேரிசை

4512. ஆடினா ரொருவர் போலு மலர்கமழ் குழலி னாளைக்
கூடினா ரொருவர் போலுங் குளிர்புனல் வளைந்த திங்கள்
சூடினா ரொருவர் போலுந் தூயநன் மறைகள் நான்கும்
பாடினா ரொருவர் போலும் பழனத்தெம் பரம னாரே. 1

4513. போவதோர் நெறியு மானார் புரிசடைப் புனித னார்நான்
வேவதோர் வினையிற் பட்டு வெம்மைதான் விடவுங் கில்லேன்
கூவல்தான் அவர்கள் கேளார் குணமிலா ஐவர் செய்யும்
பாவமே தீர நின்றார் பழனத்தெம் பரம னாரே. 2

4514. கண்டராய் முண்ட ராகிக் கையிலோர் கபால மேந்தித்
தொண்டர்கள் பாடி யாடித் தொழுகழற் பரம னார்தாம்
விண்டவர் புரங்க ளெய்த வேதியர் வேத நாவர்
பண்டையென் வினைகள் தீர்ப்பார் பழனத்தெம் பரம னாரே. 3

4515. நீரவன் தீயி னோடு நிழலவ னெழில தாய
பாரவன் விண்ணின் மிக்க பரமவன் பரம யோகி
யாரவ னண்ட மிக்க திசையினோ டொளிக ளாகிப்
பாரகத் தமுத மானார் பழனத்தெம் பரம னாரே. 4

4516. ஊழியா ரூழி தோறு முலகினுக் கொருவ ராகிப்
பாழியார் பாவந் தீர்க்கும் பராபரர் பரம தாய
ஆழியா னன்னத் தானு மன்றவ ரளப்பரிய
பாழியார் பரவி யேத்தும் பழனத்தெம் பரம னாரே. 5

4517. ஆலின்கீ ழறங்க ளெல்லா மன்றவர்க் கருளிச் செய்து
நூலின்கீ ழவர்கட் கெல்லா நுண்பொரு ளாகி நின்று
காலின்கீழ்க் காலன் றன்னைக் கடுகத்தான் பாய்ந்து பின்னும்
பாலின்கீழ் நெய்யு மானார் பழனத்தெம் பரம னாரே. 6

4518. ஆதித்த னங்கி சோம னயனொடு மால்பு தனும்
போதித்து நின்றுலகிற் போற்றிசைத் தாரி வர்கள்
சோதித்தா ரேழுலகுஞ் சோதியுட் சோதி யாகிப்
பாதிப்பெண் ணுருவ மானார் பழனத்தெம் பரம னாரே. 7

4519. காற்றனாற் காலற் காய்ந்து காருரி போர்த்த வீசர்
தோற்றனார் கடலுள் நஞ்சைத் தோடுடைக் காதர் சோதி
ஏற்றினா ரிளவெண் திங்க ளிரும்பொழில் சூழ்ந்த காயம்
பாற்றினார் வினைக ளெல்லாம் பழனத்தெம் பரம னாரே. 8

4520. கண்ணனும் பிரம னோடு காண்கில ராகி வந்தே
எண்ணியுந் துதித்தும் ஏத்த எரியுரு வாகி நின்று
வண்ணநன் மலர்கள் தூவி வாழ்த்துவார் வாழ்த்தி யேத்தப்
பண்ணுலாம் பாடல் கேட்டார் பழனத்தெம் பரம னாரே. 9

4521. குடையுடை யரக்கன் சென்று குளிர்கயி லாய வெற்பின்
இடைமட வரலை யஞ்ச எடுத்தலு மிறைவன் நோக்கி
விடையுடை விகிர்தன் றானும் விரலினா லூன்றி மீண்டும்
படைகொடை யடிகள் போலும் பழனத்தெம் பரம னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 37. திருநெய்த்தானம் : திருநேரிசை

4522. காலனை வீழச் செற்ற கழலடி யிரண்டும் வந்தென்
மேலவா யிருக்கப் பெற்றேன் மேதகத் தோன்று கின்ற
கோலநெய்த் தான மென்னுங் குளிர்பொழிற் கோயின் மேய
நீலம்வைத் தனைய கண்ட நினைக்குமா நினைக்கின் றேனே. 1

4523. காமனை யன்று கண்ணாற் கனலெரி யாக நோக்கித்
தூபமுந் தீபங் காட்டித் தொழுமவர்க் கருள்கள் செய்து
சேமநெய்த் தான மென்னுஞ் செறிபொழிற் கோயின் மேய
வாமனை நினைந்த நெஞ்சம் வாழ்வுற நினைந்த வாறே. 2

4524. பிறைதரு சடையின் மேலே பெய்புனற் கங்கை தன்னை
உறைதர வைத்த வெங்க ளுத்தம னூழி யாய
நிறைதரு பொழில்கள் சூழ நின்றநெய்த் தான மென்று
குறைதரு மடிய வர்க்குக் குழகனைக் கூட லாமே. 3

4525. வடிதரு மழுவொன் றேந்தி வார்சடை மதியம் வைத்துப்
பொடிதரு மேனி மேலே புரிதரு நூலர் போலு
நெடிதரு பொழில்கள் சூழ நின்றநெய்த் தானம் மேவி
அடிதரு கழல்க ளார்ப்ப ஆடுமெம் மண்ண லாரே. 4

4526. காடிட மாக நின்று கனலெரி கையி லேந்திப்
பாடிய பூதஞ் சூழப் பண்ணுடன் பலவுஞ் சொல்லி
ஆடிய கழலர் சீரா ரந்தண்நெய்த் தான மென்றுங்
கூடிய குழக னாரைக் கூடுமா றறிகி லேனே. 5

4527. வானவர் வணங்கி யேத்தி வைகலும் மலர்கள் தூவத்
தானவர்க் கருள்கள் செய்யுஞ் சங்கரன் செங்கண் ஏற்றன்
தேனமர் பொழில்கள் சூழத் திகழுநெய்த் தானம் மேய
கூனிள மதியி னானைக் கூடுமா றறிகி லேனே. 6

4528. காலதிற் கழல்க ளார்ப்பக் கனலெரி கையில் வீசி
ஞாலமுங் குழிய நின்று நட்டம தாடு கின்ற
மேலவர் முகடு தோய விரிசடை திசைகள் பாய
மாலொரு பாக மாக மகிழ்ந்தநெய்த் தான னாரே. 7

4529. பந்தித்த சடையின் மேலே பாய்புன லதனை வைத்து
அந்திப்போ தனலு மாடி யடிகள்ஐ யாறு புக்கார்
வந்திப்பார் வணங்கி நின்று வாழ்த்துவார் வாயி னுள்ளார்
சிந்திப்பார் சிந்தை யுள்ளார் திருந்துநெய்த் தான னாரே. 8

4530. சோதியாய்ச் சுடரு மானார் சுண்ணவெண் சாந்து பூசி
ஓதிவா யுலக மேத்த வுகந்துதாம் அருள்கள் செய்வார்
ஆதியா யந்த மானார் யாவரு மிறைஞ்சி யேத்த
நீதியாய் நியம மாகி நின்றநெய்த் தான னாரே. 9

4531. இலையுடைப் படைகை யேந்து மிலங்கையர் மன்னன் றன்னைத்
தலையுட னடர்த்து மீண்டே தானவற் கருள்கள் செய்து
சிலையுடன் கணையைச் சேர்த்துத் திரிபுர மெரியச் செற்ற
நிலையுடை யடிகள் போலு நின்றநெய்த் தான னாரே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 38. திருஐயாறு : திருநேரிசை

4532. கங்கையைச் சடையுள் வைத்தார் கதிர்ப்பொறி யரவும் வைத்தார்
திங்களைத் திகழ வைத்தார் திசைதிசை தொழவும் வைத்தார்
மங்கையைப் பாகம் வைத்தார் மான்மறி மழுவும் வைத்தார்
அங்கையு ளனலும் வைத்தா ரையனை யாற னாரே. 1

4533. பொடிதனைப் பூச வைத்தார் பொங்குவெண் ணூலும் வைத்தார்
கடியதோர் நாகம் வைத்தார் காலனைக் கால வைத்தார்
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகம் வைத்தார்
அடியிணை தொழவும் வைத்தா ரையனை யாற னாரே. 2

4534. உடைதரு கீளும் வைத்தா ருலகங்க ளனைத்தும் வைத்தார்
படைதரு மழுவும் வைத்தார் பாய்புலித் தோலும் வைத்தார்
விடைதரு கொடியும் வைத்தார் வெண்புரி நூலும் வைத்தார்
அடைதர அருளும் வைத்தா ரையனை யாற னாரே. 3

4535. தொண்டர்கள் தொழவும் வைத்தார் தூமதி சடையில் வைத்தார்
இண்டையைத் திகழ வைத்தார் எமக்கென்று மின்பம் வைத்தார்
வண்டுசேர் குழலி னாளை மருவியோர் பாகம் வைத்தார்
அண்டவா னவர்க ளேத்து மையனை யாற னாரே. 4

4536. வானவர் வணங்க வைத்தார் வல்வினை மாய வைத்தார்
கானிடை நடமும் வைத்தார் காமனைக் கனலா வைத்தார்
ஆனிடை யைந்தும் வைத்தா ராட்டுவார்க் கருளும் வைத்தார்
ஆனையி னுரிவை வைத்தா ரையனை யாற னாரே. 5

4537. சங்கணி குழையும் வைத்தார் சாம்பல்மெய்ப் பூச வைத்தார்
வெங்கதி ரெரிய வைத்தார் விரிபொழி லனைத்தும் வைத்தார்
கங்குலும் பகலும் வைத்தார் கடுவினை களைய வைத்தார்
அங்கம தோத வைத்தா ரையனை யாற னாரே. 6

4538. பத்தர்கட் கருளும் வைத்தார் பாய்விடை யேற வைத்தார்
சித்தத்தை யொன்ற வைத்தார் சிவமதே நினைய வைத்தார்
முத்தியை முற்ற வைத்தார் முறைமுறை நெறிகள் வைத்தார்
அத்தியி னுரிவை வைத்தா ரையனை யாற னாரே. 7

4539. ஏறுகந் தேற வைத்தா ரிடைமரு திடமும் வைத்தார்
நாறுபூங் கொன்றை வைத்தார் நாகமும் அரையில் வைத்தார்
கூறுமை யாக வைத்தார் கொல்புலித் தோலும் வைத்தார்
ஆறுமோர் சடையில் வைத்தா ரையனை யாற னாரே. 8

4540. பூதங்கள் பலவும் வைத்தார் பொங்குவெண் ணீறும் வைத்தார்
கீதங்கள் பாட வைத்தார் கின்னரந் தன்னை வைத்தார்
பாதங்கள் பரவ வைத்தார் பத்தர்கள் பணிய வைத்தார்
ஆதியும் அந்தம் வைத்தா ரையனை யாற னாரே. 9

4541. இரப்பவர்க் கீய வைத்தா ரீபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட் கெல்லாங் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தா ரையனை யாற னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 39. திருஐயாறு : திருநேரிசை

4542. குண்டனாய்ச் சமண ரோடே கூடிநான் கொண்ட மாலைத்
துண்டனே சுடர்கொள் சோதீ தூநெறி யாகி நின்ற
அண்டனே யமர ரேறே திருவையா றமர்ந்த தேனே
தொண்டனேன் றொழுதுன் பாதஞ் சொல்லிநான் திரிகின் றேனே. 1

4543. பீலிகை யிடுக்கி நாளும் பெரியதோர் தவமென் றெண்ணி
வாலிய தறிகள் போல மதியிலார் பட்ட தென்னே
வாலியார் வணங்கி யேத்துந் திருவையா றமர்ந்த தேனோ
டாலியா வெழுந்த நெஞ்ச மழகிதா வெழுந்த வாறே. 2

4544. தட்டிடுஞ் சமண ரோடே கருக்கிநான் தவமென் றெண்ணி
ஒட்டிடு மனத்தி னீரே யும்மையான் செய்வ தென்னே
மொட்டிடு கமலப் பொய்கைத் திருவையா றமர்ந்த தேனோ
டொட்டிடு முள்ளத் தீரே யும்மைநா னுகந்திட் டேனே. 3

4545. பாசிப்பல் மாசு மெய்யர் பலமிலாச் சமண ரோடு
நேசத்தா லிருந்த நெஞ்சை நீக்குமா றறிய மாட்டேன்
தேசத்தார் பரவி யேத்துந் திருவையா றமர்ந்த தேனை
வாசத்தால் வணங்க வல்லார் வல்வினை மாயு மன்றே. 4

4546. கடுப்பொடி யட்டி மெய்யிற் கருதியோர் தவமென் றெண்ணி
வடுக்களோ டிசைந்த நெஞ்சே மதியிலி பட்ட தென்னே
மடுக்களில் வாளை பாயுந் திருவையா றமர்ந்த தேனை
அடுத்துநின் றுன்னு நெஞ்சே யருந்தவஞ் செய்த வாறே. 5

4547. துறவியென் றவம தோரேன் சொல்லிய செலவு செய்து
உறவினா லமண ரோடு முணர்விலே னுணர்வொன் றின்றி
நறவமார் பொழில்கள் சூழ்ந்த திருவையா றமர்ந்த தேனை
மறவிலா நெஞ்ச மேநன் மதியுனக் கடைந்த வாறே. 6

4548. பல்லுரைச் சமண ரோடே பலபல கால மெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன் சோர்வனான் நினைந்தபோது
மல்லிகை மலருஞ் சோலைத் திருவையா றமர்ந்த தேனை
எல்லியும் பகலு மெல்லாம் நினைந்தபோ தினிய வாறே. 7

4549. மண்ணுளார் விண்ணு ளாரும் வணங்குவார் பாவம் போக
எண்ணிலாச் சமண ரோடே யிசைந்தன்னை யேழை நெஞ்சே
தெண்ணிலா எறிக்குஞ் சென்னித் திருவையா றமர்ந்த தேனைக்
கண்ணினாற் காணப் பெற்றுக் கருதிற்றே முடிந்த வாறே. 8

4550. குருந்தம தொசித்த மாலும் குலமலர் மேவி னானும்
திருந்துநற் றிருவடியுந் திருமுடி காண மாட்டார்
அருந்தவ முனிவ ரேத்துந் திருவையா றமர்ந்த தேனைப்
பொருந்திநின் றுன்னு நெஞ்சே பொய்வினை மாயு மன்றே. 9

4551. அறிவிலா அரக்க னோடி யருவரை யெடுக்க லுற்று
முறுகினான் முறுகக் கண்டு மூதறி வாளன் நோக்கி
நிறுவினான் சிறுவி ரலால் நெரிந்துபோய் நிலத்தில் வீழ
அறிவினா லருள்கள் செய்தான் திருவையா றமர்ந்த தேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 40. திருஐயாறு : திருநேரிசை

4552. தானலா துலக மில்லை சகமலா தடிமை யில்லை
கானலா தாட லில்லை கருதுவார் தங்க ளுக்கு
வானலா தருளு மில்லை வார்குழல் மங்கை யோடும்
ஆனலா தூர்வ தில்லை யையனை யாற னார்க்கே. 1

4553. ஆலலா லிருக்கை யில்லை யருந்தவ முனிவர்க் கன்று
நூலலால் நொடிவ தில்லை நுண்பொரு ளாய்ந்து கொண்டு
மாலுநான் முகனும் கூடி மலரடி வணங்க வேலை
ஆலலா லமுத மில்லை யையனை யாற னார்க்கே. 2

4554. நரிபுரி சுடலை தன்னில் நடமலால நவிற்ற லில்லை
சுரிபுரி குழலி யோடுந் துணையலா திருக்கை யில்லை
தெரிபுரி சிந்தை யார்க்குத் தெளிவலா லருளு மில்லை
அரிபுரி மலர்கொண் டேத்து மையனை யாற னார்க்கே. 3

4555. தொண்டலாற் றுணையு மில்லை தோலலா துடையு மில்லை
கண்டலா தருளு மில்லை கலந்தபின் பிரிவ தில்லை
பண்டைநான் மறைகள் காணாப் பரிசின னென்றெண்ணி
அண்டவா னவர்க ளேத்து மையன்ன யாற னார்க்கே. 4

4556. எரியலா லுருவ மில்லை யேறலா லேற லில்லை
கரியலாற் போர்வை யில்லை காண்டகு சோதி யார்க்குப்
பிரிவிலா அமரர் கூடிப் பெருந்தகைப் பிரானென் றேத்தும்
அரியலாற் றேவி யில்லை யையனை யாற னார்க்கே. 5

4557. என்பலாற் கலனு மில்லை யெருதால லூர்வ தில்லை
புன்புலால் நாறு காட்டிற் பொடியலாற் சாந்து மில்லை
துன்பிலாத் தொண்டர் கூடித் தொழுதழு தாடிப் பாடும்
அன்பலாற் பொருளு மில்லை யையனை யாற னார்க்கே. 6

4558. கீளலா லுடையு மில்லை கிளர்பொறி யரவம் பைம்பூண்
தோளலாற் றுணையு மில்லை தொத்தலர் கின்ற வேனில்
வேளலாற் காயப் பட்ட வீரரு மில்லை மீளா
ஆளலாற் கைம்மா றில்லை யையனை யாற னார்க்கே. 7

4559. சகமலா தடிமை யில்லை தானலாற் றுணையு மில்லை
நகமெலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை யையனை யாற னார்க்கே. 8

4560. உமையலா துருவ மில்லை யுலகலா துடைய தில்லை
நமயெலா முடைய ராவர் நன்மையே தீமை யில்லை
கமையெலா முடைய ராகிக் கழலடி பரவுந் தொண்டர்க்
கமைவிலா அருள்கொ டுப்பா ரையனை யாற னார்க்கே. 9

4561. மலையலா லிருக்கை யில்லை மதித்திடா அரக்கன் றன்னைத்
தலையலால் நெரித்த தில்லை தடவரைக் கீழ டர்த்து
நிலையிலார் புரங்கள் வேவ நெருப்பலால் விரித்த தில்லை
அலையினார் பொன்னி மன்னு மையனை யாற னார்க்கே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 41. திருசோற்றுத்துறை : திருநேரிசை

4562. பொய்விரா மேனி தன்னைப் பொருளெனக் காலம் போக்கி
மெய்விரா மனத்த னல்லேன் வேதியா வேத நாவா
ஐவரா லலைக்கப் பட்ட ஆக்கைகொண் டயர்த்துப் போனேன்
செய்வரா லுகளுஞ் செம்மைத் திருச்சோற்றுத் துறைய னாரே. 1

4563. கட்டராய் நின்று நீங்கள் காலத்தை கழிக்க வேண்டா
எட்டவாங் கைகள் வீசி யெல்லிநின் றாடு வானை
அட்டமா மலர்கள் கொண்டே ஆனஞ்சு மாட்ட ஆடிச்
சிட்டரா யருள்கள் செய்வார் திருச்சோற்றுத் துறைய னாரே. 2

4564. கல்லினாற் புரமூன் றெய்த கடவுளைக் காத லாலே
எல்லியும் பகலு முள்ளே யேகாந்த மாக ஏத்தும்
பல்லில்வெண் தலைகை யேந்திப் பல்லி(ல்)லந் திரியுஞ் செல்வர்
சொல்லுநன் பொருளு மாவார் திருச்சோற்றுத் துறைய னாரே. 3

4565. கறையராய்க் கண்ட நெற்றிக் கண்ணராய்ப் பெண்ணோர் பாகம்
இறையரா யினிய ராகித் தனியராய்ப் பனிவெண் திங்கட்
பிறையராய்ச் செய்த வெல்லாம் பீடராய்க் கேடில் சோற்றுத்
துறையராய்ப் புகுந்தெ னுள்ளச் சோர்வுகண் டருளி னாரே. 4

4566. பொந்தையைப் பொருளா வெண்ணிப் பொருக்கெனக் காலம் போனேன்
எந்தையே யேக மூர்த்தி யென்றுநின் றேத்த மாட்டேன்
பந்தமாய் வீடு மாகிப் பரம்பர மாகி நின்று
சிந்தையுட் தேறல் போலுந் திருச்சோற்றுத் துறைய னாரே. 5

4567. பேர்த்தினிப் பிறவா வண்ணம் பிதற்றுமின் பேதை பங்கன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பாசுபதன் திறமே
ஆர்த்துவந் திழிவ தொத்த அலைபுனற் கங்கை யேற்றுத்
தீர்த்தமாய்ப் போத விட்டார் திருச்சோற்றுத் துறைய னாரே. 6

4568. கொந்தார்பூங் குழலி னாரைக் கூறியே காலம் போன
எந்தையெம் பிரானாய் நின்ற இறைவனை யேத்தா தந்தோ
முந்தரா அல்கு லாளை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செந்தாது புடைகள் சூழ்ந்த திருச்சோற்றுத் துறைய னாரே. 7

4569. அங்கதி ரோனவனை யண்ணலாக் கருத வேண்டா
வெங்கதி ரோன்வழியே போவதற் கமைந்து கொண்மின்
அங்கதி ரோனவனை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செங்கதி ரோன்வ ணங்குந் திருச்சோற்றுத் துறைய னாரே. 8

4570. ஓதியே கழிக்கின் றீர்க ளுலகத்தீ ரொருவன் றன்னை
நீதியால் நினைய மாட்டீர் நின்மல னென்று சொல்லீர்
சாதியா நான்மு கனுஞ் சக்கரத் தானுங் காணாச்
சோதியாய்ச் சுடர தானார் திருச்சோற்றுத் துறைய னாரே. 9

4571. மற்றுநீர் மனம்வை யாதே மறுமையைக் கழிக்க வேண்டில்
பெற்றதோ ருபாயந் தன்னாற் பிரானையே பிதற்று மின்கள்
கற்றுவந் தரக்க னோடிக் கயிலாய மலையெ டுக்கச்
செற்றுகந் தருளிச் செய்தார் திருச்சோற்றுத் துறைய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 42. திருத்துருத்தி : திருநேரிசை

4572. பொருத்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருத வேண்டா
இருத்தியெப் போது நெஞ்சு ளிறைவனை ஏத்து மின்கள்
ஒருத்தியைப் பாகம் வைத்தங் கொருத்தியைச் சடையுள் வைத்த
துருத்தியஞ் சுடரி னானைத் தொண்டனேன் கண்ட வாறே. 1

4573. சவைதனைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்து கின்ற
இவையொரு பொருளு மல்ல இறைவனை யேத்து மின்னோ
அவைபுர மூன்று மெய்தும் அடியவர்க் கருளிச் செய்த
சுவையினைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 2

4574. உன்னியெப் போது நெஞ்சு ளொருவனை யேத்து மின்னோ
கன்னியை யொருபால் வைத்துக் கங்கைச் சடையுள் வைத்துப்
பொன்னியின் நடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுங்
துன்னிய துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 3

4575. ஊன்றலை வலிய னாகி யுலகத்து ளுயிர்கட் கெல்லாந்
தான்றலைப் பட்டு நின்று சார்கன லகத்து வீழ
வான்றலை தேவர் கூடி வானவர்க் கிறைவா வென்னுந்
தோன்றலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே.4

4576. உடல்தனைக் கழிக்க லுற்ற உலகத்து ளுயிர்கட் கெல்லாம்
இடர்தனைக் கழிக்க வேண்டி லிறைவனை யேத்து மின்னோ
கடல்தனில் நஞ்ச முண்டு காண்பரி தாகி நின்ற
சுடர்தனைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 5

4577. அள்ளலைக் கடக்க வேண்டில் அரனையே நினைமி னீர்கள்
பொள்ளலிக் காயந் தன்னுட் புண்டரீ கத்தி ருந்த
வள்ளலை வான வர்க்குங் காண்பரி தாகி நின்ற
துள்ளலைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே.6

4578. பாதியி லுமையாள் தன்னைப் பாகமா வைத்த பண்பன்
வேதிய னென்று சொல்லி விண்ணவர் விரும்பி யேத்தச்
சாதியாஞ் சதுர்மு கனுஞ் சக்கரத் தானுங் காணாச்
சோதியைத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே.7

4579. சாமனை வாழ்க்கை யான சலத்துளே யழுந்த வேண்டா
தூமநல் லகிலுங் காட்டித் தொழுதடி வணங்கு மின்னோ
சோமனைச் சடையுள் வைத்துத் தொன்னெறி பலவுங் காட்டுந்
தூமனத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 8

4580. குண்டரே சமணர் புத்தர் குறியறி யாது நின்று
கண்டதே கருது வார்கள் கருத்தெண்ணா தொழிமி னீர்கள்
விண்டவர் புரங்க ளெய்து விண்ணவர்க் கருள்கள் செய்த
தொண்டர்கள் துணையி னானைத் துருத்திநான் கண்ட வாறே. 9

4581. பிண்டத்தைக் கழிக்க வேண்டிற் பிரானையே பிதற்று மின்கள்
அண்டத்தைக் கழிய நீண்ட அடலரக் கன்ற னாண்மை
கண்டொத்துக் கால்விரலா லூன்றிமீண் டருளிச் செய்த
துண்டத்துத் துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 43. திருக்காஞ்சித் திருமேற்றளி : திருநேரிசை

4582. மறையது பாடிப் பிச்சைக் கென்றகந் திரிந்து வாழ்வார்
பிறையது சடைமு டிமேற் பெய்வளை யாள்தன் னோடுங்
கறையது கண்டங் கொண்டார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
இறையவர் பாட லாடல் இலங்குமேற் றளிய னாரே. 1

4583. மாலன மாயன் தன்னை மகிழ்ந்தனர் விருத்த ராகும்
பாலனார் பசுபதியார் பால்வெள்ளை நீறு பூசிக்
காலனைக் காலாற் செற்றார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏலநற் கடம்பன் தாதை இலங்குமேற் றளிய னாரே. 2

4584. விண்ணிடை விண்ண வர்கள் விரும்பிவந் திறைஞ்சி வாழ்த்தப்
பண்ணிடைச் சுவையின் மிக்க கின்னரம் பாடல் கேட்பார்
கண்ணிடை மணியி னொப்பார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எண்ணிடை யெழுத்து மானா ரிலங்குமேற் றளிய னாரே. 3

4585. சோமனை யரவி னோடு சூழ்தரக் கங்கை சூடும்
வாமனை வான வர்கள் வலங்கொடு வந்து போற்றக்
காமனைக் காய்ந்த கண்ணார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏமநின் றாடு மெந்தை இலங்குமேற் றளிய னாரே. 4

4586. ஊனவ னுயிரி னோடு முலகங்க ளூழி யாகித்
தானவர் தனமு மாகித் தனஞ்சய னோடெ திர்ந்த
கானவர் காள கண்டர் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏனமக் கோடு பூண்டா ரிலங்குமேற் றளிய னாரே. 5

4587. மாயனாய் மால னாகி மலரவ னாகி மண்ணாய்த்
தேயமாய்த் திசையெட் டாகித் தீர்த்தமாய்த் திரிதர் கின்ற
காயமாய்க் காயத் துள்ளார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏயமென் றோளி பாக ரிலங்குமேற் றளிய னாரே. 6

4588. மண்ணினை யுண்ட மாயன் தன்னையோர் பாகங் கொண்டார்
பண்ணினைப் பாடி யாடும் பத்தர்கள் சித்தங் கொண்டார்
கண்ணினை மூன்றுங் கொண்டார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எண்ணினை யெண்ண வைத்தா ரிலங்குமேற் றளிய னாரே. 7

4589. செல்வியைப் பாகங் கொண்டார் சேந்தனை மகனாகக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்க நின்றா ரிலங்குமேற் றளிய னாரே. 8

4590. வேறிணை யின்றி யென்றும் விளங்கொளி மருங்கி னாளைக்
கூறியல் பாகம் வைத்தார் கோளரா மதியும் வைத்தார்
ஆறினைச் சடையுள் வைத்தா ரணிபொழிற் கச்சி தன்னுள்
ஏறினை யேறு மெந்தை யிலங்குமேற் றளிய னாரே. 9

4591. தென்னவன் மலையெ டுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு
மன்னவன் விரலா லூன்ற மணிமுடி நெரிய வாயால்
கன்னலின் கீதம் பாடக் கேட்டவர் காஞ்சி தன்னுள்
இன்னவற் கருளிச் செய்தா ரிலங்குமேற் றளிய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 44. திருஏகம்பம் : திருநேரிசை

4592. நம்பனை நகர மூன்றும் எரியுண வெருவ நோக்கும்
அம்பனை யமுதை யாற்றை யணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக் கதிர்வெண் திங்கட் செஞ்சடைக் கடவுள் தன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச் சிந்தியா எழுகின் றேனே. 1

4593. ஒருமுழ முள்ள குட்ட மொன்பது துறையு டைத்தாய்
அரை முழம் அதனகலம் அதனில்வாழ் முதலை யைந்து
பெருமுழை வாய்தல் பற்றிக் கிடந்துநான் பிதற்று கின்றேன்
கருமுகில் தவழு மாடக் கச்சியே கம்ப னீரே. 2

4594. மலையினார் மகளோர் பாக மைந்தனார் மழுவொன் றேந்திச்
சிலையினால் மதில்கள் மூன்றுந் தீயெழச் செற்ற செல்வர்
இலையினார் சூல மேந்தி ஏகம்பம் மேவி னாரைத்
தலையினால் வணங்க வல்லார் தலைவர்க்குந் தலைவர் தாமே. 3

4595. பூத்தபொற் கொன்றை மாலை பிரிசடைக் கணிந்த செல்வர்
தீர்த்தமாங் கங்கை யாளைத் திருமுடி திகழ வைத்து
ஏத்துவா ரேத்த நின்ற ஏகம்பம் மேவி னாரை
வாழ்த்துமா றறிய மாட்டேன் மால்கொடு மயங்கி னேனே. 4

4596. மையினார் மலர்நெ டுங்கண் மங்கையோர் பங்க ராகிக்
கையிலோர் கபால மேந்திக் கடைதொறும் பலிகொள் வார்தாம்
எய்வதோ ரேன மோட்டி யேகம்பம் மேவி னாரைக்
கையினாற் றொழவல் லார்க்குக் கடுவினை களைய லாமே. 5

4597. தருவினை மருவுங் கங்கை தங்கிய சடைய னெங்கள்
அருவினை யகல நல்கும் அண்ணலை யமரர் போற்றுந்
திருவினைத் திருவே கம்பஞ் செப்பிட உறைய வல்ல
உருவினை யுருகி யாங்கே யுள்ளத்தா லுகக்கின் றேனே. 6

4598. கொண்டதோர் கோல மாகிக் கோலக்கா வுடைய கூத்தன்
உண்டதோர் நஞ்ச மாகி யுலகெலாம் உய்ய வுண்டான்
எண்டிசை யோரு மேத்த நின்றவே கம்பன் தன்னைக்
கண்டுநா னடிமை செய்வான் கருதியே திரிகின் றேனே. 7

4599. படமுடை யரவி னோடு பனிமதி யதனைச் சூடிக்
கடமுடை யுரிவை மூடிக் கண்டவ ரஞ்ச அம்ம
இடமுடைக் கச்சி தன்னு ளேகம்பம் மேவி னான்றன்
நடமுடை யாடல் காண ஞாலந்தா னுய்ந்த வாறே. 8

*****

4600. பொன்றிகழ் கொன்றை மாலை பொருந்திய நெடுந்தண் மார்பர்
நன்றியிற் புகுந்தெ னுள்ளம் மெள்ளவே நவில நின்று
குன்றியி லடுத்த மேனிக் குவளையங் கண்ட ரெம்மை
இன்றுயில் போது கண்டா ரினியரே கம்ப னாரே. 9

4601. துருத்தியார் பழனத் துள்ளார் தொண்டர்கள் பலரு மேத்த
அருத்தியா லன்பு செய்வா ரவரவர்க் கருள்கள் செய்தே
எருத்தினை யிசைய வேறி யேகம்பம் மேவி னார்க்கு
வருத்திநின் றடிமை செய்வார் வல்வினை மாயு மன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 45. திருஒற்றியூர் : திருநேரிசை

4602. வெள்ளைத்தைச் சடையில் வைத்த வேதகீ தன்றன் பாதம்
மெள்ளத்தா னடைய வேண்டின் மெய்தரு ஞானத் தீயால்
கள்ளத்தைக் கழிய நின்றார் காயத்துக் கலந்து நின்று
உள்ளத்து ளொளியு மாகு மொற்றியூ ருடைய கோவே. 1

4603. வசிப்பெனும் வாழ்க்கை வேண்டா வானவ ரிறைவன் நின்று
புசிப்பதோர் பொள்ள லாக்கை யதனொடும் புணர்வு வேண்டில்
அசிர்ப்பெனு மருந்த வத்தா லான்மாவி னிடம தாகி
உசிர்ப்பெனு முணர்வு முள்ளா ரொற்றியூ ருடைய கோவே. 2

4604. தானத்தைச் செய்து வாழ்வான் சலத்துளே யழுந்து கின்றீர்
வானத்தை வணங்க வேண்டில் வம்மின்கள் வல்லீ ராகில்
ஞானத்தை விளக்கை யேற்றி நாடியுள் விரவ வல்லார்
ஊனத்தை யொழிப்பர் போலு மொற்றியூ ருடைய கோவே. 3

4605. காமத்து ளழுந்தி நின்று கண்டரா லொறுப்புண் ணாதே
சாமத்து வேத மாகி நின்றதோர் சயம்பு தன்னை
ஏமத்து மிடையி ராவும் ஏகாந்த மியம்பு வார்க்கு
ஓமத்து ளொளிய தாகு மொற்றியூ ருடைய கோவே. 4

4606. சமையமே லாறு மாகித் தானொரு சயம்பு வாகி
இமையவர் பரவி யேத்த இனிதினங் கிருந்த வீசன்
கமையினை யுடைய ராகிக் கழலடி பரவு வார்க்கு
உமையொரு பாகர் போலு மொற்றியூ ருடைய கோவே. 5

4607. ஒருத்திதன் தலைச்சென் றாளைக் கரந்திட்டா னுலக மேத்த
ஒருத்திக்கு நல்ல னாகி மறுப்படுத் தொளித்து மீண்டே
ஒருத்தியைப் பாகம் வைத்தா னுணர்வினா லைய முண்ணி
ஒருத்திக்கு நல்ல னல்ல னொற்றியூ ருடைய கோவே. 6

4608. பிணமுடை யுடலுக் காகப் பித்தராய்த் திரிந்து நீங்கள்
புணர்வெனும் போகம் வேண்டா போக்கலாம் பொய்யை நீங்க
நிணமுடை நெஞ்சி னுள்ளால் நினைக்குமா நினைக்கின் றார்க்கு
உணர்வினோ டிருப்பர் போலு மொற்றியூ ருடைய கோவே. 7

4609. பின்னுவார் சடையான் தன்னைப் பிதற்றிலாப் பேதை மார்கள்
துன்னுவார் நரகந் தன்னுள் தொல்வினை தீர வேண்டின்
மன்னுவான் மறைக ளோதி மனத்தினுள் விளக்கொன் றேற்றி
உன்னுவா ருள்ளத் துள்ளா ரொற்றியூ ருடைய கோவே. 8

4610. முள்குவார் போகம் வேண்டின் முயற்றியா லிடர்கள் வந்தால்
எள்குவா ரெள்கி நின்றங் கிதுவொரு மாய மென்பார்
பள்குவார் பத்த ராகிப் பாடியு மாடி நின்றும்
உள்குவா ருள்ளத் துள்ளா ரொற்றியூ ருடைய கோவே. 9

4611. வெறுத்துகப் புலன்க ளைந்தும் வேண்டிற்று வேண்டு நெஞ்சே
மறுத்துக ஆர்வச் செற்றக் குரோதங்க ளான மாயப்
பொறுத்துகப் புட்ப கத்தே ருடையானை யடர வூன்றி
ஒறுத்துகந் தருள்கள் செய்தா ரொற்றியூ ருடைய கோவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 46. திருஒற்றியூர் : திருநேரிசை

4612 ஓம்பினேன் கூட்டை வாளா உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக் கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின் றேனை
ஓம்பிநீ உய்யக் கொள்ளா யொற்றியூ ருடைய கோவே. 1

4613. மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி மறியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்கா யொற்றியூ ருடைய கோவே. 2

திருச்சிற்றம்பலம்

•••••

## 47. திருக்கைலாயம் : திருநேரிசை

4614. கனகமா வயிர முந்து மாமணிக் கயிலை கண்டும்
உனகனா யரக்க னோடி யெடுத்தலு முமையா ளஞ்ச
அனகனாய் நின்ற வீச னூன்றலு மலறி வீழ்ந்தான்
மனகனா யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 1

4615. கதித்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையை யோடி
அதிர்த்தவன் எடுத்திடலும் அரிவைதா னஞ்ச வீசன்
நெதித்தவ னூன்றி யிட்ட நிலையழிந் தலறி வீழ்ந்தான்
மதித்திறை யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 2

4616. கறுத்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையைக் கையால்
மறித்தலும் மங்கை யஞ்ச வானவ ரிறைவன் நக்கு
நெறித்தொரு விரலா லூன்ற நெடுவரை போல வீழ்ந்தான்
மறித்திறை யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 3

4617. கடுத்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையை யோடி
எடுத்தலும் மங்கை யஞ்ச இறையவ னிறையே நக்கு
நொடிப்பள விரலா லூன்ற நோவது மலறி யிட்டான்
மடித்திறை யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 4

4618. கன்றித்தன் கண்சிவந்து கயிலைநன் மலையை யோடி
வென்றித்தன் கைத்த லத்தா லெடுத்தலும் வெருவ மங்கை
நன்றுத்தான் நக்கு நாத னூன்றலு நகழ வீழ்ந்தான்
மன்றித்தா னூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 5

4619. களித்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையை யோடி
நெளித்தவ னெடுத்திடலு நேரிழை யஞ்ச நோக்கி
வெளித்தவ னூன்றி யிட்ட வெற்பினா லலறி வீழ்ந்தான்
மளித்திறை யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 6

4620. கருத்தனாய்க் கண்சிவந்து கயிலைநன் மலையைக் கையால்
எருத்தனா யெடுத்த வாறே யேந்திழை யஞ்ச ஈசன்
திருத்தனாய் நின்ற தேவன் திருவிர லூன்ற வீழ்ந்தான்
வருத்துவா னூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 7

4621. கடியவன் கண்சிவந்து கயிலைநன் மலையை யோடி
வடிவுடை மங்கை யஞ்ச எடுத்தலும் மருவ நோக்கிச்
செடிபடத் திருவிரலா லூன்றலுஞ் சிதைந்து வீழ்ந்தான்
வடிவுற வூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 8

4622.கரியத்தான் கண்சி வந்து கயிலைநன் மலையைப் பற்றி
இரியத்தா னெடுத்திட லு மேதிழை யஞ்ச வீசன்
நெரியத்தா னூன்றா முன்ன நிற்கிலா தலறி வீழ்ந்தான்
மரியத்தா னூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 9

4623.கற்றனன் கயிலை தன்னைக் காண்டலு மரக்க னோடிச்
செற்றவ னெடுத்த வாறே சேயிழை யஞ்ச வீசன்
உற்றிறை யூன்றா முன்னம் உணர்வழி வகையால் வீழ்ந்தான்
மற்றிறை யூன்றி னானேன் மறித்துநோக் கில்லை யன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 48. திருஆப்பாடி : திருநேரிசை

4624.கடலக மேழி னோடும் புவனமுங் கலந்த விண்ணும்
உடலகத் துயிரும் பாரும் ஒள்ளழ லாகி நின்று
தடமலர்க் கந்த மாலை தண்மதி பகலு மாகி
மடலவிழ் கொன்றை சூடி மன்னுமாப் பாடி யாரே. 1

4625.ஆதியும் அறிவு மாகி யறிவினுட் செறிவு மாகிச்
சோதியுட் சுடரு மாகித் தூநெறிக் கொருவ னாகிப்
பாதியிற் பெண்ணு மாகிப் பரவுவார் பாங்க ராகி
வேதியர் வாழுஞ் சேய்ஞல் விரும்புமாப் பாடி யாரே. 2

4626.எண்ணுடை யிருக்கு மாகி யிருக்கினுட் பொருளு மாகிப்
பண்ணொடு பாடல் தன்னைப் பரவுவார் பாங்க ராகிக்
கண்ணொரு நெற்றி யாகிக் கருதுவார் கருத லாகாப்
பெண்ணொரு பாக மாகிப் பேணுமாப் பாடி யாரே. 3

4627.அண்டமா ரமரர் கோமா னாதியெம் அண்ணல் பாதங்
கொண்டவன் குறிப்பி னாலே கூப்பினான் தாப ரத்தைக்
கண்டவன் தாதை பாய்வான் காலற எறியக் கண்டு
தண்டியார்க் கருள்கள் செய்த தலைவராப் பாடி யாரே. 4

4628.சிந்தையுந் தெளிவு மாகித் தெளிவினுட் சிவமு மாகி
வந்தநன் பயனு மாகி வாள்நுதல் பாக மாகி
மந்தமாம் பொழில்கள் சூழ்ந்த மண்ணித்தென் கரைமேன் மன்னி
அந்தமோ டளவி லாத அடிகளாப் பாடி யாரே. 5

4629. வன்னிவா ளரவு மத்தம் மதியமும் ஆறுஞ் சூடி
மின்னிய உருவாஞ் சோதி மெய்ப்பொருட் பயனு மாகிக்
கன்னியோர் பாக மாகிக் கருதுவார் கருத்து மாகி
இன்னிசை தொண்டர் பாட இருந்தவாப் பாடி யாரே. 6

4630. உள்ளுமாய்ப் புறமு மாகி உருவுமா யருவு மாகி
வெள்ளமாய்க் கரையு மாகி விரிகதிர் ஞாயி றாகிக்
கள்ளமாய்க் கள்ளத் துள்ளார் கருத்துமா யருத்த மாகி
அள்ளுவார்க் கள்ளல் செய்திட் டிருந்தவாப் பாடி யாரே. 7

4631. மயக்கமாய்த் தெளிவு மாகி மால்வரை வளியு மாகித்
தியக்கமா யொருக்க மாகிச் சிந்தையு ளொன்றி நின்று
இயக்கமா யிறுதி யாகி எண்டிசைக் கிறைவ ராகி
அயக்கமா யடக்க மாய ஐவராப் பாடி யாரே. 8

4632. ஆரழ லுருவ மாகி அண்டமேழ் கடந்த எந்தை
பேரொளி உருவி னானைப் பிரமனும் மாலுங் காணாச்
சீரவை பரவி யேத்திச் சென்றடி வணங்கு வார்க்குப்
பேரரு ளருளிச் செய்வார் பேணுமாப் பாடி யாரே. 9

4633. திண்டிற லரக்க னோடிச் சீகயி லாயந் தன்னை
எண்டிற லிலனு மாகி யெடுத்தலும் ஏழை யஞ்ச
விண்டிற நெரிய வூன்றி மிகக்கடுத் தலறி வீழப்
பண்டிறல் கேட்டு கந்த பரமராப் பாடி யாரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 49. திருக்குறுக்கை வீரட்டம் : திருநேரிசை

4634. ஆதியிற் பிரம னார்தாம் அர்ச்சித்தா ரடியி ணைக்கீழ்
ஓதிய வேத நாவ ருணருமா றுணர லுற்றார்
சோதியுட் சுடராய்த் தோன்றிச் சொல்லினை யிறந்தார் பல்பூக்
கோதிவன் டறையுஞ் சோலைக் குறுக்கைவீ ரட்ட னாரே. 1

4635. நீற்றினை நிறையப் பூசி நித்தலும் நியமஞ் செய்து
ஆற்றுநீர் பூரித் தாட்டும் அந்தண னாரைக் கொல்வான்
சாற்றுநா ளற்ற தென்று தருமரா சற்காய் வந்த
கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

4636. தழைத்ததோ ராத்தி யின்கீழ்த் தாபர மணலாற் கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்துகொண் டாட்டக் கண்டு
பிழைத்ததன் தாதை தாளைப் பெருங்கொடு மழுவால் வீசக்
குழைத்ததோ ரமுத மீந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 3

4637. சிலந்தியும் ஆனைக் காவிற் திருநிழற் பந்தர் செய்து
உலந்தவண் இறந்த போதே கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. 4

4638. ஏறுட னேழ டர்த்தா னெண்ணியா யிரம்பூக் கொண்டு
ஆறுடைச் சடையி னானை அர்ச்சித்தா னடியிணைக்கீழ்
வேறுமோர் பூக்கு றைய மெய்ம்மலர்க் கண்ணை மிண்டக்
கூறுமோ ராழி யீந்தார் குறுக்கைவீ ரட்ட னரே. 5

4639. கல்லினா லெறிந்து கஞ்சி தாமுணுஞ் சாக்கியனார்
நெல்லினார் சோறு ணாமே நீள்விசும் பாள வைத்தார்
எல்லியாங் கெரிகை யேந்தி எழில்திகழ் நட்ட மாடிக்
கொல்லியாம் பண்ணு கந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 6

4640. காப்பதோர் வில்லும் அம்புங் கையதோர் இறைச்சிப் பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கைவீ ரட்ட னாரே. 7

4641. நிறைமறைக் காடு தன்னில் நீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலக மெல்லாம்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே. 8

4642. அணங்குமை பாக மாக அடக்கிய ஆதி மூர்த்தி
வணங்குவா ரிடர்கள் தீர்க்கும் மருந்துநல் லருந்த வத்த
கணம்புல்லர்க் கருள்கள் செய்து காதலா மடியார்க் கென்றுங்
குணங்களைக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே.9

4643. எடுத்தன னெழிற்கயிலை இலங்கையர் மன்னன் தன்னை
அடுத்தொரு விரலா லூன்ற அலறிப்போ யவனும் வீழ்ந்து
விடுத்தனன் கைந ரம்பால் வேதகீ தங்கள் பாடக்
கொடுத்தனர் கொற்ற வாணாள் குறுக்கைவீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 50. திருக்குறுக்கை வீரட்டம் : திருநேரிசை

4644. நெடியமால் பிரம னோடு நீரெனும் பிலயங் கொள்ள
அடியொடு முடியுங் காணா ரருச்சுனற் கம்பும் வில்லும்
துடியுடை வேட ராகித் தூயமந் திரங்கள் சொல்லிக்
கொடிநெடுந் தேர்கொ டுத்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 1

4645. ஆத்தமாம் அயனு மாலும் அன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள் சொல்லத்
தீர்த்தமாம் அட்ட மீமுன் சீருடை யேழு நாளுங்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே. 2

திருச்சிற்றம்பலம்

*****

## 51. திருக்கோடிகா : திருநேரிசை

4646. நெற்றிமேற் கண்ணி னானே நீறுமெய் பூசி னானே
கற்றைப்புன் சடையி னானே கடல்விடம் பருகி னானே
செற்றவர் புரங்கள் மூன்றுஞ் செவ்வழல் செலுத்தி னானே
குற்றமில் குணத்தி னானே கோடிகா வுடைய கோவே. 1

4647. கடிகமழ் கொன்றை யானே கபாலங்கை யேந்தி னானே
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகத் தானே
அடியிணை பரவ நாளும் அடியவர்க் கருள்செய் வானே
கொடியணி விழவ தோவாக் கோடிகா வுடைய கோவே. 2

4648. நீறுமெய் பூசி னானே நிழல்திகழ் மழுவி னானே
ஏறுகந் தேறி னானே யிருங்கட லமுதொப் பானே
ஆறுமோர் நான்கு வேதம் அறமுரைத் தருளி னானே
கூறுமோர் பெண்ணி னானே கோடிகா வுடைய கோவே. 3

4649. காலனைக் காலாற் செற்றன் றருள்புரி கருணை யானே
நீலமார் கண்டத் தானே நீண்முடி யமரர் கோவே
ஞாலமாம் பெருமை யானே நளிரிளந் திங்கள் சூடுங்
கோலமார் சடையி னானே கோடிகா வுடைய கோவே. 4

4650. பூணர வாரத் தானே புலியுரி அரையி னானே
காணில்வெண் கோவ ணமுங் கையிலோர் கபால மேந்தி
உணுமோர்ப் பிச்சை யானே உமையொரு பாகத் தானே
கோணல்வெண் பிறையி னானே கோடிகா வுடைய கோவே. 5

4651. கேழல்வெண் கொம்பு பூண்ட கிளரொளி மார்பி னானே
ஏழையே னேழை யேனா னென்செய்கே னெந்தை பெம்மான்
மாழையொண் கண்ணி னார்கள் வலைதனின் மயங்கு கின்றேன்
கூழையே றுடைய் செல்வா கோடிகா வுடைய கோவே. 6

4652. அழலுமி ழங்கை யானே அரிவையோர் பாகத் தானே
தழலுமி ழரவ மார்த்துத் தலைதனிற் பலிகொள் வானே
நிழலுமிழ் சோலை சூழ நீள்வரி வண்டி னங்கள்
குழலுமிழ் கீதம் பாடுங் கோடிகா வுடைய கோவே. 7

4653. ஏவடு சிலையி னாலே புரமவை யெரிசெய் தானே
மாவடு வகிர்கொள் கண்ணாள் மலைமகள் பாகத் தானே
ஆவடு துறையு ளானே ஐவரா லாட்டப் பட்டேன்
கோவடு குற்றந் தீராய் கோடிகா வுடைய கோவே. 8

4654. ஏற்றநீர்க் கங்கை யானே இருநிலந் தாவி னானும்
நாற்றமா மலர்மே லேறும் நான்முக னிவர்கள் கூடி
ஆற்றலா லளக்க லுற்றார்க் கழலுரு வாயி னானே
கூற்றுக்குங் கூற்ற தானாய் கோடிகா வுடைய கோவே. 9

4655. பழகநா னடிமை செய்வேன் பசுபதீ பாவ நாசா
மழகளி யானை யின்தோல் மலைமகள் வெருவப் போர்த்த
அழகனே யரக்கன் திண்டோ ளருவரை நெரிய வூன்றுங்
குழகனே கோல மார்பா கோடிகா வுடைய கோவே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 52. திருஆரூர் : திருநேரிசை

4656. படுகுழிப் பவ்வத் தன்ன பண்டியைப் பெய்த வாற்றால்
கெடுவதிம் மனிதர் வாழ்க்கை காண்டொறுங் கேது கின்றேன்
முடுகுவ ரிருந்துள் ஐவர் மூர்க்கரே யிவர்க ளோடும்
அடியனேன் வாழ மாட்டே னாரூர்மூ லட்ட னீரே. 1

4657. புழுப்பெய்த பண்டி தன்னைப் புறமொரு தோலான் மூடி
ஒழுக்கறா ஒன்பதுவா யொற்றுமை யொன்று மில்லை
சழக்குடை யிதனு ளைவர் சங்கடம் பலவுஞ் செய்ய
அழிப்பனாய் வாழ மாட்டே னாரூர்மூ லட்ட னீரே. 2

4658. பஞ்சின்மெல் லடியி னார்கள் பாங்கரா யவர்கள் நின்று
நெஞ்சில்நோய் பலவுஞ் செய்து நினையினும் நினைய வொட்டார்
நஞ்சணி மிடற்றி னானே நாதனே நம்ப னேநான்
அஞ்சினேற் கஞ்ச லென்னீ ராரூர்மூ லட்ட னீரே. 3

4659. கெண்டையந் தடங்கண் நல்லார் தம்மையே தெழும வேண்டிக்
குண்டராய்த் திரிதந் தைவர் குலைத்திடர்க் குழியில் நூக்கக்
கண்டுநான் தரிக்க கில்லேன் காத்துக்கொள் கறைசேர் கண்டா
அண்டவா னவர்கள் போற்று மாரூர்மூ லட்ட னீரே. 4

4660. தாழ்குழ லின்சொல் நல்லார் தங்களைத் தஞ்ச மென்று
ஏழையே னாகி நாளு மென்செய்கே னெந்தை பெம்மான்
வாழ்வதே லரிது போலும் வைகலு மைவர் வந்து
ஆழ்குழிப் படுத்த ஆற்றே னாரூர்மூ லட்ட னீரே. 5

4661. மாற்றமொன் றருள கில்லீர் மதியிலேன் விதியி லாமை
சீற்றமுந் தீர்த்தல் செய்யீர் சிக்கன வுடைய ராகிக்
கூற்றம்போ லைவர் வந்து குலைத்திட்டுக் கோகு செய்ய
ஆற்றவுங் கில்லேன் நாயே னாரூர்மூ லட்ட னீரே. 6

4662. உயிர்நிலை யுடம்பே காலா உள்ளமே தாழி யாகத்
துயரமே யேற்ற மாகத் துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழிய விட்டுப் பாழ்க்குநீ ரிறைத்து மிக்க
அயர்வினா லைவர்க் காற்றே னாரூர்மூ லட்ட னீரே. 7

4663. கற்றதே லொன்று மில்லைக் காரிகை யாரோ டாடிப்
பெற்றதேற் பெரிதுந் துன்பம் பேதையேன் பிழைப்பி னாலே
முற்றினா லைவர் வந்து முறைமுறை துயரஞ் செய்ய
அற்றுநா னலந்து போனே னாரூர்மூ லட்ட னீரே. 8

4664. பத்தனாய் வாழ மாட்டேன் பாவியேன் பரவி வந்து
சித்தத்து ளைவர் தீய செய்வினை பலவுஞ் செய்ய
மத்துறு தயிரே போல மறுகுமென் னுள்ளந் தானும்
அத்தனே யமரர் கோவே யாரூர்மூ லட்ட னீரே. 9

4665. தடக்கைநா லைந்து கொண்டு தடவரை தன்னைப் பற்றி
எடுத்தவன் பேர்க்க வோடி யிரிந்தன பூத மெல்லாம்
முடித்தலை யனைத்துந் தோளும் முறிதர இறையே யூன்றி
அடர்த்தருள் செய்த தென்னே யாரூர்மூ லட்ட னீரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருஆரூர் : திருநேரிசை

4666. குழல்வலங் கொண்ட சொல்லாள் கோலவேற் கண்ணி தன்னைச்
கழல்வலங் கொண்டு நீங்காக் கணங்களக் கணங்க ளார
அழல்வலங் கொண்ட கையா னருட்கதி ரெறிக்கு மாரூர்
தொழல்வலங் கொண்டல் செய்வான் தோன்றினார் தோன்றி னாரே.1

4667. நாகத்தை நங்கை யஞ்ச நங்கையை மஞ்ஞை யென்று
வேகத்தைத் தவிர நாகம் வேழத்தி னுரிவை போர்த்துப்
பாகத்தின் நிமிர்தல் செய்யாத் திங்களை மின்னென் றஞ்சி
ஆகத்திற் கிடந்த நாக மடங்குமா ரூர னார்க்கே. 2

4668. தொழுதகங் குழைய மேவித் தோட்டிமை யுடைய தொண்டர்
அழுதகம் புகுந்து நின்றா ரவரவர் போலு மாரூர்
எழிலக நடுவெண் முத்த மன்றியும் ஏர்கொள் வேலிப்
பொழிலகம் விளங்கு திங்கட் புதுமுகிழ் சூடி னாரே. 3

4669. நஞ்சிருள் மணிகொள் கண்டர் நகையிரு ளீமக் கங்குல்
வெஞ்சுடர் விளக்கத் தாடி விளங்கினார் போலு மூவா
வெஞ்சுடர் முகடு தீண்டி வெள்ளிநா ராச மன்ன
அஞ்சுட ரணிவெண் திங்க ளணியுமா ரூர னாரே. 4

4670. எந்தளிர் நீர்மை கோல மேனியென் றிமையோ ரேத்தப்
பைந்தளிர்க் கொம்ப ரன்ன படர்கொடி பயிலப் பட்டுத்
தஞ்சடைத் தொத்தி னாலுந் தம்மதோர் நீர்மை யாலும்
அந்தளி ராகம் போலும் வடிவரா ரூர னாரே. 5

4671. வானகம் விளங்க மல்கும் வளங்கெழு மதியஞ் சூடித்
தானக மழிய வந்து தாம்பலி தேர்வர் போலும்
ஊனகங் கழிந்த ஓட்டி லுண்பது மொளிகொள் நஞ்சம்
ஆனகம் அஞ்சு மாடு மடிகளா ரூர னாரே. 6

4672. அஞ்சனை கணையி னானை யழலுற அன்று நோக்கி
அஞ்சனை குழலி னாளை யமுதமா அணைந்து நக்கு
அஞ்சனை யஞ்சு மாடி யாடர வாட்டு வார்தாம்
அஞ்சனை வேலி யாரூ ராதரித் திடங்கொண் டாரே. 7

4673. வணங்கிமுன் அமர ரேத்த வல்வினை யான தீரப்
பிணங்குடைச் சடையில் வைத்த பிறையுடைப் பெருமை யண்ணல்
மணங்கம ழோதி பாகர் மதிநிலா வட்டத் தாடி
அணங்கொடி மாட வீதி யாரூரெம் மடிக ளாரே. 8

4674. நகலிடம் பிறர்கட் காக நான்மறை யோர்கள் தங்கள்
புகலிட மாகி வாழும் புகலிலி யிருவர் கூடி
இகலிட மாக நீண்டங் கீண்டெழி லழல தாகி
அகலிடம் பரவி யேத்த அடிகளா ரூர னாரே.

4675. ஆயிரந் திங்கள் மொய்த்த அலைகட லமுதம் வாங்கி
ஆயிர மசுரர் வாழும் அணிமதின் மூன்றும் வேவ
ஆயிரந் தோளும் மட்டித் தாடிய அசைவு தீர
ஆயிரம் அடியும் வைத்த அடிகளா ரூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 54. திருப்புகலூர் : திருநேரிசை

4676. பகைத்திட்டார் புரங்கள் மூன்றும் பாறிநீ றாகி வீழப்
புகைத்திட்ட தேவர் கோவே பொறியிலே னுடலந் தன்னுள்
அகைத்திட்டங் கதனை நாளும் ஐவர்கொண் டாட்ட வாடித்
திகைத்திட்டேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 1

4677. மையரி மதர்த்த வொண்கண் மாதரார் வலையிற் பட்டுக்
கையெரி சூல மேந்துங் கடவுளை நினைய மாட்டேன்
ஐநெரிந் தகமி டற்றே யடைக்கும்போ தாவி யார்தாம்
செய்வதொன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே. 2

4678. முப்பது முப்பத் தாறு முப்பது மிடுகு ரம்பை
அப்பர்போ லைவர் வந்து அதுதரு கிதுவி டென்று
ஒப்பவே நலிய லுற்றா லுய்யுமா றறிய மாட்டேன்
செப்பமே திகழு மேனித் திருப்புக லூர னீரே. 3

4679. பொறியிலா அழுக்கை யோம்பிப் பொய்யினை மெய்யென் றெண்ணி
நெறியலா நெறிகள் சென்றேன் நீதனே நீதி யேதும்
அறிவிலே னமரர் கோவே அமுதினை மனனில் வைக்குஞ்
செறிவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 4

4680. அளியினார் குழலி னார்க ளவர்களுக் கன்ப தாகிக்
களியினார் பாட லோவாக் கடவூர்வீ ரட்ட மென்னுந்
தளியினார் பாத நாளும் நினைவிலாத் தகவில் நெஞ்சந்
தெளிவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 5

4681. இலவினார் மாதர் பாலே இசைந்துநா னிருந்து பின்னும்
நிலவுநாள் பலவென் றெண்ணி நீதனேன் ஆதி யுன்னை
உலவிநா னுள்க மாட்டே னுன்னடி பரவு ஞானஞ்
செலவிலேன் செய்வ தென்னே திருப்புக லூர னீரே. 6

4682. காத்திலே னிரண்டும் மூன்றுங் கல்வியே யில்லை யென்பால்
வாய்த்திலே னடிமை தன்னுள் வாய்மையால் தூயே னல்லேன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பரமனே பரவு வார்கள்
தீர்த்தமே திகழும் பொய்கைத் திருப்புக லூர னீரே. 7

4683. நீருமாய்த் தீயு மாகி நிலனுமாய் விசும்பு மாகி
ஏருடைக் கதிர்க ளாகி யிமையவ ரிறைஞ்ச நின்று
ஆய்வதற் கரிய ராகி யங்கங்கே யாடு கின்ற
தேவர்க்குந் தேவ ராவார் திருப்புக லூர னாரே. 8

4684. மெய்யுளே விளக்கை யேற்றி வேண்டள வுயரத் தூண்டி
உய்வதோ ருபாயம் பற்றி உகக்கின்றே னுகவா வண்ணம்
ஐவரை யகத்தே வைத்தீ ரவர்களே வலியர் சாலச்
செய்வதோன் றறிய மாட்டேன் திருப்புக லூர னீரே. 9

4685. அருவரை தாங்கி னானும் அருமறை யாதி யானும்
இருவரு மறிய மாட்டா ஈசனா ரிலங்கை வேந்தன்
கருவரை யெடுத்த ஞான்று கண்வழி குருதி சோரத்
திருவிரல் சிறிது வைத்தார் திருப்புக லூர னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 55. திருவலம்புரம் : திருநேரிசை

4686. தெண்டிரை தேங்கி ஓதஞ் சென்றடி வீழுங் காலைத்
தொண்டிரைத் தண்டர் கோனைத் தொழுதடி வணங்கி யெங்கும்
வண்டுகள் மதுக்கள் மாந்தும் வலம்புரத் தடிகள் தம்மைக்
கொண்டுநற் கீதம் பாடக் குழகர்தா மிருந்த வாறே. 1

4687. மடுக்களில் வாளை பாய வண்டினை மிரிந்த பொய்கைப்
பிடிக்களி றென்னத் தம்மிற் பிணைபயின் றணைவ ரால்கள்
தொடுத்தநன் மாலை யேந்தித் தொண்டர்கள் பரவி யேத்த
வடித்தடங் கண்ணி பாகர் வலம்புரத் திருந்த வாறே. 2

4688. தேனுடை மலர்கள் கொண்டு திருந்தடி பொருந்தச் சாத்தி
ஆனிடை அஞ்சுங் கொண்டு அன்பினா லமர ஆட்டி
வானிடை மதியஞ் சூடும் வலம்புரத் தடிகள் தம்மை
நானடைந் தேத்தப் பெற்று நல்வினைப் பயனுற் றேனே. 3

4689. முளையெயிற் றிளநல் லேனம் பூண்டுமொய் சடைகள் தாழ
வளையெயிற் றிளைய நாகம் வலித்தரை யிசையை வீக்கிப்
புழைகைய போர்வை போர்த்துப் புனலொடு மதியஞ் சூடி
வளைபயி லிளைய ரேத்தும் வலம்புரத் தடிகள் தாமே. 4

4690. சுருளுறு வரையின் மேலாற் றுளங்கிளம் பளிங்கு சிந்த
இருளுறு கதிர்நு ழைந்த இளங்கதிர்ப் பசலைத் திங்கள்
அருளுறு மடிய ரெல்லாம் அங்கையின் மலர்க ளேந்த
மருளுறு கீதங் கேட்டார் வலம்புரத் தடிக ளாரே. 5

4691. நினைக்கின்றேன் நெஞ்சு தன்னால் நீண்டபுன் சடையி னானே
அனைத்துடன் கொண்டு வந்தங் கன்பினா லமைய ஆட்டிப்
புனைக்கின்றேன் பொய்ம்மை தன்னை மெய்ம்மையைப் புணர மாட்டேன்
எனக்குநான் செய்வ தென்னே யினிவலம் புரவ னீரே. 6

4692. செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்
தங்கயந் துறந்து போந்து தடம்பொய்கை அடைந்து நின்று
கொங்கையர் குடையுங் காலைக் கொழுங்கனி யழுங்கி னாராம்
மங்கல மனையின் மிக்கார் வலம்புரத் தடிக ளாரே. 7

4693. அருகெலாங் குவளை செந்நெ லகவிலை யாம்பல் நெய்தல்
தெருவெலாம் தெங்கு மாவும் பழம்விழும் படப்பை யெல்லாம்
குருகினங் கூடி யாங்கே கும்மலித் திறகு லர்த்தி
மருவலா மிடங்கள் காட்டும் வலம்புரத் தடிக ளாரே. 8

4694. கருவரை யனைய மேனிக் கடல்வண்ண னவனுங் காணான்
திருவரை யனைய பூமேற் றிசைமுக னவனுங் காணான்
ஒருவரை யுச்சி யேறி ஓங்கினா ரோங்கி வந்து
அருமையி லெளிமை யானா ரவர்வலம் புரவ னாரே. 9

4695. வாளெயி றிலங்க நக்கு வளர்கயி லாயந் தன்னை
ஆள்வலி கருதிச் சென்ற அரக்கனை வரைக்கீ ழூன்று
தோளொடு பத்து வாயுந் தொலைந்துட னழுந்த வூன்றி
ஆண்மையும் வலியுந் தீர்ப்பா ரவர்வலம் புரவ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 56. திருஆவடுதுறை : திருநேரிசை

4696. மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரங் கொடுப்பர் போலு மாவடு துறைய னாரே. 1

4697. மடந்தைபா கத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்
குடந்தையிற் குழகர் போலுங் கொல்புலித் தோலர் போலும்
கடைந்தநஞ் சுண்பர் போலுங் காலனைக் காய்வர் போலும்
அடைந்தவர்க் கன்பர் போலு மாவடு துறைய னாரே. 2

4698. உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை யாவர் போலும்
செற்றவர் புரங்கள் மூன்றுந் தீயெழச் செறுவர் போலும்
கற்றவர் பரவி யேத்தக் கலந்துலந் தலந்து பாடும்
அற்றவர்க் கன்பர் போலு மாவடு துறைய னாரே. 3

4699. மழுவமர் கையர் போலும் மாதவள் பாகர் போலும்
எழுநுனை வேலர் போலு மென்புகொண் டணிவர் போலும்
தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவுஞ் சொல்லி
அழுமவர்க் கன்பர் போலு மாவடு துறைய னாரே. 4

4700. பொடியணி மெய்யர் போலும் பொங்குவெண் ணூலர் போலும்
கடியதோர் விடையர் போலுங் காமனைக் காய்வர் போலும்
வெடிபடு தலையர் போலும் வேட்கையாற் பரவுந் தொண்டர்
அடிமையை அளப்பர் போலு மாவடு துறைய னாரே. 5

4701. வக்கர னுயிரை வவ்வக் கண்மலர் கொண்டு போற்றச்
சக்கரங் கொடுப்பர் போலுந் தானவர் தலைவர் போலும்
துக்கமா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை யார்ப்பர் போலு மாவடு துறைய னாரே. 6

4702. விடைதரு கொடியர் போலும் வெண்புரி நூலர் போலும்
படைதரு மழுவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
உடைதரு கீளர் போலு முலகமு மாவர் போலும்
அடைபவ ரிடர்கள் தீர்க்கு மாவடு துறைய னாரே. 7

4703. முந்திவா னோர்கள் வந்து முறைமையால் வணங்கி யேத்த
நந்திமா காள ரென்பார் நடுவுடை யார்கள் நிற்பச்
சிந்தியா தேயொ ழிந்தார் திரிபுர மெரிப்பர் போலும்
அந்திவான் மதியஞ் சூட மாவடு துறைய னாரே. 8

4704. பானமம் ரேன மாகிப் பாரிடந் திட்ட மாலும்
தேனமர்ந் தேறு மல்லித் திசைமுக முடைய கோவும்
தீனரைத் தியக்க றுத்த திருவுரு வுடையர் போலும்
ஆன்நரை யேற்றர் போலு மாவடு துறைய னாரே. 9

4705. பார்த்தனுக் கருள்வர் போலும் படர்சடை முடியர் போலும்
ஏத்துவா ரிடர்கள் தீர இன்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக் கொடுவலி யரக்கன் றன்னை
ஆர்த்தவா யலறு விப்பா ராவடு துறையனாரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 57. திருஆவடுதுறை : திருநேரிசை

4706. மஞ்சனே மணியு மானாய் மரகதத் திரளு மானாய்
நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னானே
துஞ்சும்போ தாக வந்து துணையெனக் காகி நின்று
அஞ்சலென் றருள வேண்டு மாவடு துறையு ளானே. 1

4707. நானுகந் துன்னை நாளும் நணுகுமா கருதி யேயும்
ஊனுகந் தோம்பு நாயே னுள்ளுற ஐவர் நின்றார்
தானுகந் தேயு கந்த தகவிலாத் தொண்ட னேனான்
ஆனுகந் தேறு வானே யாவடு துறையு ளானே. 2

4708. கட்டமே வினைக ளான காத்திவை நோக்கி யாளாய்
ஒட்டவே யொட்டி நாளு முன்னையுள் வைக்க மாட்டேன்
பட்டவான் தலைகை யேந்திப் பலிதிரிந் தூர்கள் தோறும்
அட்டமா வுருவி னானே யாவடு துறையு ளானே. 3

4709. பெருமைநன் றுடைய தில்லை யென்றுநான் பேச மாட்டேன்
ஒருமையா லுன்னை யுள்கி உகந்துவா னேற மாட்டேன்
கருமையிட் டாய வூனைக் கட்டமே கழிக்கின் றேனான்
அருமையாம் நஞ்ச முண்ட வாவடு துறையு ளானே. 4

4710. துட்டனாய் வினைய தென்னுஞ் சுழித்தலை யகப்பட் டேனைக்
கட்டனா வைவர் வந்து கலக்காமை காத்துக் கொள்வாய்
மட்டவிழ் கோதை தன்னை மகிழ்ந்தொரு பாகம் வைத்து
அட்டமா நாக மாட்டு மாவடு துறையு ளானே. 5

4711. காரழல் கண்டம் மேயாய் கடிமலர் புரங்கள் மூன்றும்
ஓரழ லம்பி னாலே உகைத்துத்தீ யெரிய மூட்டி
நீரழற் சடையு ளானே நினைப்பவர் வினைகள் தீர்ப்பாய்
ஆரழ லேந்தி யாடு மாவடு துறையு ளானே. 6

4712. செறிவிலேன் சிந்தை யுள்ளே சிவனடி தெரிய மாட்டேன்
குறியிலேன் குணமொன் றில்லேன் கூறுமா கூற மாட்டேன்
நெறிபடு மதியொன் றில்லேன் நினையுமா நினைய மாட்டேன்
அறிவிலே னயர்த்துப் போனே னாவடு துறையு ளானே. 7

4713. கோலமா மங்கை தன்னைக் கொண்டொரு கோல மாய
சீலமே யறிய மாட்டேன் செய்வினை மூடி நின்று
ஞாலமா மிதனு ளென்னை நைவியா வண்ண நல்காய்
ஆலமா நஞ்ச முண்ட வாவடு துறையு ளானே. 8

4714. நெடியவன் மலரி னானும் நேர்ந்திரு பாலும் நேடக்
கடியதோ ருருவ மாகிக் கனலெரி யாகி நின்ற
வடிவின வண்ண மென்றே யென்றுதாம் பேச லாகார்
அடியனேன் நெஞ்சி னுள்ளா ராவடு துறையு ளானே. 9

4715. மலைக்குநே ராய ரக்கன் சென்றுற மங்கை யஞ்சத்
தலைக்குமேற் கைக ளாலே தாங்கினான் வலியை மாள
உலப்பிலா விரலா லூன்றி யொறுத்தவற் கருள்கள் செய்து
அலைத்தவான் கங்கை சூடு மாவடு துறையு ளானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 58. திருப்பருப்பதம் : திருநேரிசை

4716. கன்றினார் புரங்கள் மூன்றுங் கனலெரி யாகச் சீறி
நின்றதோ ருருவந் தன்னால் நீர்மையும் நிறையுங் கொண்டு
ஒன்றியாங் குமையுந் தாமு மூர்பலி தேர்ந்து பின்னும்
பன்றிப்பின் வேட ராகிப் பருப்பத நோக்கி னாரே. 1

4717. கற்றமா மறைகள் பாடிக் கடைதொறும் பலியுந் தேர்வார்
வற்றலோர் தலைகை யேந்தி வானவர் வணங்கி வாழ்த்த
முற்றவோர் சடையில் நீரை யேற்றமுக் கண்ணர் தம்மைப்
பற்றினார்க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. 2

4718. கரவிலா மனத்த ராகிக் கைதொழு வார்கட் கென்றும்
இரவுநின் றெரிய தாடி யின்னருள் செய்யு மெந்தை
மருவலார் புரங்கள் மூன்றும் மாட்டிய வகைய ராகிப்
பரவுவார்க் கருள்கள் செய்து பருப்பத நோக்கி னாரே. 3

4719. கட்டிட்ட தலைகை யேந்திக் கனலெரி யாடிச் சீறிச்
சுட்டிட்ட நீறு பூசிச் சுடுபிணக் காட ராகி
விட்டிட்ட வேட்கை யார்க்கு வேறிருந் தருள்கள் செய்து
பட்டிட்ட வுடைய ராகிப் பருப்பத நோக்கி னாரே. 4

4720. கையராய்க் கபால மேந்திக் காமனைக் கண்ணாற் காய்ந்து
மெய்யராய் மேனி தன்மேல் விளங்குவெண் ணீறு பூசி
உய்வரா யுள்கு வார்கட் குவகைகள் பலவுஞ் செய்து
பையரா அரையி லார்த்துப் பருப்பத நோக்கி னாரே. 5

4721. வேடராய் வெய்ய ராகி வேழத்தி னுரிவை போர்த்து
ஓடரா யுலக மெல்லா முழிதர்வ ருமையுந் தாமுங்
காடராய்க் கனல்கை யேந்திக் கடியதோர் விடைமேல் கொண்டு
பாடராய்ப் பூதஞ் சூழப் பருப்பத நோக்கி னாரே. 6

4722. மேகம்போன் மிடற்ற ராகி வேழத்தி னுரிவை போர்த்து
ஏகம்பம் மேவி னார்தா மிமையவர் பரவி யேத்தக்
காகம்பர் கழற ராகிக் கடியதோர் விடையொன் றேறிப்
பாகம்பெண் ணுருவ மானார் பருப்பத நோக்கி னாரே. 7

4723. பேரிடர்ப் பிணிகள் தீர்க்கும் பிஞ்ஞக னெந்தை பெம்மான்
காருடைக் கண்ட ராகிக் கபாலமோர் கையி லேந்திச்
சீருடைச் செங்கண் வெள்ளே றேறிய செல்வர் நல்ல
பாரிடம் பாணி செய்யப் பருப்பத நோக்கி னாரே. 8

4724. அங்கண்மா லுடைய ராய ஐவரா லாட்டு ணாதே
உங்கண்மால் தீர வேண்டி லுள்ளத்தா லுள்கி யேத்துஞ்
செங்கண்மால் பரவி யேத்திச் சிவனென நின்ற செல்வர்
பைங்கண்வெள் ளேற தேறிப் பருப்பத நோக்கி னாரே. 9

4725. அடல்விடை யூர்தி யாகி யரக்கன்தோ ளடர வூன்றிக்
கடலிடை நஞ்ச முண்ட கறையணி கண்ட னார்தாஞ்
சுடர்விடு மேனி தன்மேற் சுண்ணவெண் ணீறு பூசிப்
படர்சடை மதியஞ் சேர்த்திப் பருப்பத நோக்கி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 59. திருஅவளிவணல்லூர் : திருநேரிசை

4726. தோற்றினா னெயிறு கவ்வித் தொழிலுடை யரக்கன் றன்னைத்
தேற்றுவான் சென்று சொல்லச் சிக்கெனத் தவிரு மென்று
வீற்றினை யுடைய னாகி வெடுவெடுத் தெழுந்த வன்றன்
ஆற்றலை யழிக்க வல்லா ரவளிவ ணல்லூ ராரே. 1

4727. வெம்பினா ரரக்க ரெல்லா மிகச்சழக் காயிற் றென்று
செம்பினா லெடுத்த கோயில் சிக்கெனச் சிதையு மென்ன
நம்பினா ரென்று சொல்லி நன்மையான் மிக்கு நோக்கி
அம்பினா லழிய வெய்தா ரவளிவ ணல்லூ ராரே. 2

4728. கீழ்ப்படக் கருத லாமோ கீர்த்திமை யுள்ள தாகில்
தோட்பெரு வலியி னாலே தொலைப்பன்யான் மலையை யென்று
வேட்பட வைத்த வாறே விதிர்விதிர்த் தரக்கன் வீழ்ந்து
ஆட்படக் கருதிப் புக்கா ரவளிவ ணல்லூ ராரே. 3

4729. நிலைவலம் வல்ல னல்லன் நேர்மையை நினைய மாட்டான்
சிலைவலங் கொண்ட செல்வன் சீரிய கயிலை தன்னைத்
தலைவலங் கருதிப் புக்குத் தாக்கினான் றன்னை யன்று
அலைகுலை யாக்கு வித்தா ரவளிவ ணல்லூ ராரே. 4

4730. தவ்வலி யொன்ற னாகித் தனதொரு பெருமை யாலே
மெய்வ்வலி யுடைய னென்று மிகப்பெருந் தேரை யூர்ந்து
செவ்வலி கூர்வி ழியாற் சிரமத்தா ரெடுக்குற் றானை
அவ்வலி தீர்க்க வல்லா ரவளிவ ணல்லூ ராரே. 5

4731. நன்மைதா னறிய மாட்டான் நடுவிலா அரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று வலிதனைச் செலுத்த லுற்றுக்
கன்மையான் மலையை யோடிக் கருதித்தா னெடுத்து வாயால்
அம்மையோ வென்ன வைத்தா ரவளிவ ணல்லூ ராரே. 6

4732. கதம்படப் போது வார்கள் போதுமக் கருத்தி னாலே
சிதம்பட நின்ற நீர்கள் சிக்கெனத் தவிரு மென்று
மதம்படு மனத்த னாகி வன்மையான் மிக்கு நோக்க
அதம்பழத் துருவு செய்தா ரவளிவ ணல்லூ ராரே. 7

4733. நாடுமிக் குழிதர் கின்ற நடுவிலா வரக்கர் கோனை
ஓடுமிக் கென்று சொல்லி யூன்றினா னுகிரி னாலே
பாடுமிக் குய்வ னென்று பணியநற் றிறங்கள் காட்டி
ஆடுமிக் கரவம் பூண்டா ரவளிவ ணல்லூ ராரே. 8

4734. ஏனமா யிடந்த மாலும் எழில்தரு முளரி யானும்
ஞானந்தா னுடைய ராகி நன்மையை யறிய மாட்டார்
சேனந்தா னிலாவ ரக்கன் செழுவரை யெடுக்க வூன்றி
ஆனந்த அருள்கள் செய்தா ரவளிவ ணல்லூ ராரே. 9

4735. ஊக்கினான் மலையை யோடி யுணர்விலா அரக்கன் றன்னைத்
தாக்கினான் விரலி னாலே தலைபத்தும் தகர வூன்றி
நோக்கினா னஞ்சத் தன்னை நோன்பிற வூன்று சொல்லி
ஆக்கினா ரமுத மாக வவளிவ ணல்லூ ராரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 60. திருப்பெருவேளூர் : திருநேரிசை

4736. மறையணி நாவி னானை மறப்பிலார் மனத்து ளானைக்
கறையணி கண்டன் றன்னைக் கனலெரி யாடி னானைப்
பிறையணி சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
நறையணி மலர்கள் தூவி நாடொறும் வணங்கு வேனே. 1

4737. நாதனா யுலக மெல்லாம் நம்பிரா னெனவு நின்ற
பாதனாம் பரம யோகி பலபல திறத்தி னாலும்
பேதனாய்த் தோன்றி னானைப் பெருவேளூர் பேணி னானை
ஓதநா வுடைய னாகி யுரைக்குமா றுரைக்கின் றேனே. 2

4738. குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை யென்று
நறவிள நறுமென் கூந்தல் நங்கையோர் பாகத் தானைப்
பிறவியை மாற்று வானைப் பெருவேளூர் பேணி னானை
உறவினால் வல்ல னாகி யுணருமா றுணர்த்து வேனே. 3

4739. மைஞ்ஞவில் கண்டன் றன்னை வலங்கையின் மழுவொன் றேந்திக்
கைஞ்ஞவில் மானி னோடுங் கனலெரி யாடி னானைப்
பிஞ்ஞகன் றன்னை யந்தண் பெருவேளூர் பேணி னானைப்
பொய்ஞ்ஞெக நினைய மாட்டாப் பொறியிலா அறிவி லேனே. 4

4740. ஓடைசேர் நெற்றி யானை யுரிவையை மூடி னானை
வீடதே காட்டு வானை வேதநான் காயி னானைப்
பேடைசேர் புறவ நீங்காப் பெருவேளூர் பேணி னானைக்
கூடநான் வல்ல மாற்றங் குறுகுமா றறிகி லேனே. 5

4741. கச்சைசேர் நாகத் தானைக் கடல்விடங் கண்டத் தானைக்
கச்சியே கம்பன் றன்னைக் கனலெரி யாடு வானைப்
பிச்சைசேர்ந் துழல்வி னானைப் பெருவேளூர் பேணி னானை
இச்சைசேர்ந் தமர நானு மிறைஞ்சுமா றிறைஞ்சு வேனே. 6

4742. சித்தராய் வந்து தன்னைத் திருவடி வணங்கு வார்கள்
முத்தனை மூர்த்தி யாய முதல்வனை முழுது மாய
பித்தனைப் பிறரு மேத்தப் பெருவேளூர் பேணி னானை
மெத்தநே யவனை நாளும் விரும்புமா றறிகி லேனே. 7

4743. முண்டமே தாங்கி னானை முற்றிய ஞானத் தானை
வண்டுலாங் கொன்றை மாலை வளர்மதிக் கண்ணி யானைப்
பிண்டமே யாயி னானைப் பெருவேளூர் பேணி னானை
அண்டமாம் ஆதி யானை யறியுமா றறிகி லேனே. 8

4744. விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினாற் சொன்னா ரேனு மெம்பிராற் கேற்ற தாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே. 9

4745. பொருகட லிலங்கை மன்ன னுடல்கெடப் பொருத்தி நல்ல
கருகிய கண்டத் தானைக் கதிரிளங் கொழுந்து சூடும்
பெருகிய சடையி னானைப் பெருவேளூர் பேணி னானை
உருகிய அடிய ரேத்து முள்ளத்தா லுள்கு வேனே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 61. திருவிராமேச்சுரம் : திருநேரிசை

4746. பாசமுங் கழிக்க கில்லா அரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினால் மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே நினைமின்நீர் நின்று நாளுந்
தேசமிக் கானி ருந்த திருவிரா மேச்சுரமே. 1

4747. முற்றின நாள்க ளென்று முடிப்பதே காரணமாய்
உற்றவன் போர்க ளாலே யுணர்விலா வரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே படர்சடை யீசன் பாலே. 2

4748. கடலிடை மலைகள் தம்மா லடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயிற் றிருவிரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற் சுழல்கின்றேன் தூய்மை யின்றி
உடலிடை நின்றும் பேரா ஐவராட் டுண்டு நானே. 3

4749. குன்றுபோற் றோளு டைய குணமிலா வரக்கர் தம்மைக்
கொன்றுபோ ராழி யம்மால் வேட்கையாற் செய்த கோயில்
நன்றுபோல் நெஞ்ச மேநீ நன்மையை யறிதி யாயில்
சென்றுநீ தொழுதுய் கண்டாய் திருவிரா மேச்சுரமே. 4

4750. வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்ட ரக்கன்
கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற்ப டுத்துத்
தீரமிக் கானி ருந்த திருவிரா மேச்சு ரத்தைக்
கோரமிக் கார்த வத்தாற் கூடுவார் குறிப்பு ளாரே. 5

4751. ஆர்வலம் நம்மின் மிக்கா ரென்றவவ் வரக்கர் கூடிப்
போர்வலஞ் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலஞ் செற்ற மால்செய் திருவிரா மேச்சு ரத்தைச்
சேர்மட நெஞ்ச மேநீ செஞ்சடை யெந்தை பாலே. 6

4752. வாக்கினா லின்பு ரைத்து வாழ்கிலார் தம்மை யெல்லாம்
போக்கினாற் புடைத்த வர்க ளுயிர்தனை யுண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு நோய்வினை நுணுகு மன்றே. 7

4753. பலவுநாள் தீமை செய்து பார்தன்மேற் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய வரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தைத்
தலையினால் வணங்கு வார்கள் தாழ்வராந் தவம தாமே. 8

4754. கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை யெல்லாம்
வீடவே சக்கரத்தா லெறிந்துபின் னன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ நன்னெறி யாகு மன்றே. 9

4755. வன்கண்ணர் வாள ரக்கர் வாழ்வினை யொன்ற றியார்
புன்கண்ண ராகி நின்று போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் திருவிரா மேச்சு ரத்தைத்
தங்கணா லெய்த வல்லார் தாழ்வராந் தலைவன் பாலே. 10

4756. வரைகளொத் தேயு யர்ந்த மணிமுடி யரக்கர் கோனை
விரையமுற் றறவொ டுக்கி மீண்டுமால் செய்த கோயில்
திரைகள்முத் தால்வ ணங்குந் திருவிரா மேச்சு ரத்தை
உரைகள்பத் தாலு ரைப்பா ருள்குவா ரன்பி னாலே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 62. திருவாலவாய் : திருநேரிசை

4757. வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணா வென்றென்
றோதியே மலர்கள் தூவி யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே ஆல வாயி லப்பனே யருள்செ யாயே. 1

4758. நம்பனே நான்மு கத்தாய் நாதனே ஞான மூர்த்தி
என்பொனே யீசா வென்றென் றேத்திநா னேசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 2

4759. ஒருமருந் தாகி யுள்ளா யும்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளா யாளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயி லப்பனே யருள்செ யாயே. 3

4760. செய்யநின் கமல பாதஞ் சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 4

4761. வெண்தலை கையி லேந்தி மிகவுமூர் பலிகொண் டென்றும்
உண்டது மில்லை சொல்லில் உண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனேன் உளம தார
அண்டனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 5

4762. எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநா னேசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்
கஞ்சலென் றால வாயி லப்பனே யருள்செ யாயே. 6

4763. வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேனுன்
செழுமலர்ப் பாதங் காணத் தெண்டிரை நஞ்ச முண்ட

குழகனே கோல வில்லீ கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 7

4764. நறுமலர் நீருங் கொண்டு நாடொறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 8

4765. நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை யரச தாள அருளினா யென்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்தாள் கருதிநான் காண்ப தாக
அலந்தன னால வாயி லப்பனே யருள்செ யாயே. 9

4766. பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் தாள்க ளென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்
எடுப்பனென் றிலங்கைக் கோன்வந் தெடுத்தலு மிருபது தோள்
அடர்த்தனே யால வாயி லப்பனே யருள்செ யாயே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருவண்ணாமலை : திருநேரிசை

4767. ஓதிமா மலர்கள் தூவி உமையவள் பங்கா மிக்க
சோதியே துளங்கு மெண்தோட் சுடர்மழுப் படையி னானே
ஆதியே அமரர் கோவே அணியணா மலையு ளானே
நீதியால் நின்னை யல்லால் நினையுமா நினைவி லேனே. 1

4768. பண்தனை வென்ற இன்சொற் பாவையோர் பங்க நீல
கண்டனே கார்கொள் கொன்றைக் கடவுளே கமல பாதா
அண்டனே யமரர் கோவே அணியணா மலையு ளானே
தொண்டனே னுன்னை யல்லாற் சொல்லுமா சொல்லி லேனே. 2

4769. உருவமு முயிரு மாகி ஓதிய வுலகுக் கெல்லாம்
பெருவினை பிறப்பு வீடாய் நின்றவெம் பெருமான் மிக்க
அருவிபொன் சொரியு மண்ணா மலையுளா யண்டர் கோவே
மருவிநின் பாத மல்லால் மற்றொரு மாடி லேனே. 3

4770. பைம்பொனே பவளக் குன்றே பரமனே பால்வெண் ணீற்றாய்
செம்பொனே மலர்செய் பாதா சீர்தரு மணியே மிக்க
அம்பொனே கொழித்து வீழும் அணியணா மலையு ளானே
என்பொனே யுன்னை யல்லா லேதுநான் நினைவி லேனே 4

4771. பிறையணி முடியி னானே பிஞ்ஞகா பெண்ணோர் பாகா
மறைவலா இறைவா வண்டார் கொன்றையாய் வாம தேவா
அறைகழ லமர ரேத்து மணியணா மலையு ளானே
இறைவனே யுன்னை யல்லா லியாதுநான் நினைவி லேனே. 5

4772. புரிசடை முடியின் மேலோர் பொருபுனற் கங்கை வைத்துக்
கரியுரி போர்வை யாகக் கருதிய கால காலா
அரிகுலம் மலிந்த வண்ணா மலையுளா யலரின் மிக்க
வரிமிகு வண்டு பண்செய் பாதநான் மறப்பி லேனே. 6

4773. இரவியு மதியும் விண்ணு மிருநிலம் புனலுங் காற்றும்
உரகமார் பவன மெட்டுந் திசையொளி யுருவ மானாய்
அரவுமிழ் மணிகொள் சோதி யணியணா மலையு ளானே
பரவுநின் பாத மல்லாற் பரமநான் பற்றி லேனே. 7

4774. பார்த்தனுக் கன்று நல்கிப் பாசுப தத்தை யீந்தாய்
நீர்த்ததும் புலாவு கங்கை நெடுமுடி நிலாவ வைத்தாய்
ஆர்த்துவந் தீண்டு கொண்ட லணியணா மலையு ளானே
தீர்த்தனே நின்றன் பாதத் திறமலால் திறமி லேனே. 8

4775. பாலுநெய் முதலா மிக்க பசுவிலைந் தாடு வானே
மாலுநான் முகனுங் கூடிக் காண்கிலா வகையுள் நின்றாய்
ஆலுநீர் கொண்டல் பூக மணியணா மலையு ளானே
வாலுடை விடையா யுன்றன் மலரடி மறப்பி லேனே. 9

4776. இரக்கமொன் றியாது மில்லாக் காலனைக் கடிந்த வெம்மான்
உரத்தினால் வரையை யூக்க வொருவிரல் நுதியி னாலே
அரக்கனை நெரித்த வண்ணா மலையுளா யமர ரேறே
சிரத்தினால் வணங்கி யேத்தித் திருவடி மறப்பி லேனே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 64. திருவீழிமிழலை : திருநேரிசை

4777. பூதத்தின் படையர் பாம்பின் பூணினர் பூண நூலர்
சீதத்திற் பொலிந்த திங்கட் கொழுந்தர்நஞ் சமுந்து கண்டர்
கீதத்திற் பொலிந்த வோசைக் கேள்வியர் வேள்வி யாளர்
வேதத்தின் பொருளர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 1

4778. காலையிற் கதிர்செய் மேனி கங்குலிற் கறுத்த கண்டர்
மாலையின் மதியஞ் சேர்ந்த மகுடத்தர் மதுவும் பாலும்
ஆலையிற் பாகும் போல அண்ணித்திட் டடியார்க் கென்றும்
வேலையி னமுதர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 2

4779. வருந்தின நெருந லின்றாய் வழங்கின நாள ரால்கீழ்
இருந்துநன் பொருள்கள் நால்வர்க் கியம்பின ரிருவ ரோடும்
பொருந்தினர் பிரிந்து தம்பாற் பொய்யரா மவர்கட் கென்றும்
விருந்தினர் திருந்து வீழி மிழலையுள் விகிர்த னாரே. 3

4780. நிலையிலா வூர்மூன் றொன்ற நெருப்பரி காற்றம் பாகச்
சிலையுநா ணதுவு நாகங் கொண்டவர் தேவர் தங்கள்
தலையினால் தரித்த என்புந் தலைமயிர் வடமும் பூண்ட
விலையிலா வேடர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 4

4781. மறையிடைப் பொருளர் மொட்டின் மலர்வழி வாசத் தேனர்
கறவிடைப் பாலின் நெய்யர் கரும்பினிற் கட்டி யாளர்
பிறையிடைப் பாம்பு கொன்றைப் பிணையல்சேர் சடையுள் நீரர்
விறகிடைத் தீயர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 5

4782. எண்ணகத் தில்லை யல்ல ருளரல்ல ரிமவான் பெற்ற
பெண்ணகத் தரையர் காற்றில் பெருவலி யிருவ ராகி
மண்ணகத் தைவர் நீரில் நால்வர்தீ யதனில் மூவர்
விண்ணகத் தொருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 6

4783. சந்தணி கொங்கை யாளோர் பங்கினர் சாம வேதர்
எந்தையு மெந்தை தந்தை தந்தையு மாய வீசர்
அந்தியோ டுதய மந்த ணாளரான் நெய்யால் வேட்கும்
வெந்தழ லுருவர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 7

4784. நீற்றினை நிறையப் பூசி நித்தலா யிரம்பூக் கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் நிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி யவன்கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 8

4785. சித்திசெய் பவர்கட் கெல்லாஞ் சேர்விடஞ் சென்று கூடப்
பத்திசெய் பவர்கள் பாவம் பறைப்பவ ரிறப்பி லாளர்
முத்திசை பவள மேனி முதிரொளி நீல கண்டர்
வித்தினில் முளையர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 9

4786. தருக்கின அரக்கன் தேரூர் சாரதி தடைநி லாது
பொருப்பினை யெடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங் கலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடுங் கொடுப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. திருச்சாய்க்காடு : திருநேரிசை

4787. தோடுலா மலர்கள் தூவித் தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநா ளணுகிற் றென்று மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செலலு மஞ்சிப் பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச் சாய்க்காடு மேவி னாரே. 1

4788. வடங்கெழு மலைமத் தாக வானவ ரசுர ரோடு
கடைந்திட எழுந்த நஞ்சங் கண்டுபல் தேவ ரஞ்சி
அடைந்துநும் சரண மென்ன அருள்பெரி துடைய ராகித்
தடங்கடல் நஞ்ச முண்டார் சாய்க்காடு மேவி னாரே. 2

4789. அரணிலா வெளிய நாவ லருநிழ லாக வீசன்
வரணிய லாகித் தன்வாய் நூலினாற் பந்தர் செய்ய
முரணிலாச் சிலந்தி தன்னை முடியுடை மன்ன னாக்கித்
தரணிதா னாள வைத்தார் சாய்க்காடு மேவி னாரே. 3

4790. அரும்பெருஞ் சிலைக்கை வேட னாய்விறற் பார்த்தற் கன்று
உரம்பெரி துடைமை காட்டி ஒள்ளமர் செய்து மீண்டே
வரம்பெரி துடைய னாக்கி வாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலி தூணி யீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 4

4791. இந்திரன் பிரம னங்கி யெண்வகை வசுக்க ளோடு
மந்திர மறைய தோதி வானவர் வணங்கி வாழ்த்தத்
தந்திர மறியாத் தக்கன் வேள்வியைத் தகர்த்த ஞான்று
சந்திரற் கருள்செய் தாருஞ் சாய்க்காடு மேவி னாரே. 5

4792. ஆமலி பாலு நெய்யும் ஆட்டியர்ச் சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப் பொறாததன் தாதை தாளைக்
கூர்மழு வொன்றா லோச்சக் குளிர்சடைக் கொன்றை மாலைத்
தாமநற் சண்டிக் கீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 6

4793. மையறு மனத்த னாய பகீரதன் வரங்கள் வேண்ட
ஐயமி லமர ரேத்த ஆயிர முகம தாகி
வையக நெளியப் பாய்வான் வந்திழி கங்கை யென்னுந்
தையலைச் சடையி லேற்றார் சாய்க்காடு மேவி னாரே. 7

4794. குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலச மாட்ட
உவப்பெருங் குருதி சோர ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார் ச ாய்க்காடு மேவி னாரே. 8

4795. நக்குலா மலர்பன் னூறு கொண்டுநன் ஞானத் தோடு
மிக்கபூ சனைகள் செய்வான் மென்மல ரொன்று காணா
தொக்குமென் மலர்க்க ணென்றங் கொருகணை யிடந்து மப்பச்
சக்கரங் கொடுப்பர் போலுஞ் சாயக்காடு மேவி னாரே. 9

4796. புயங்களைஞ் ஞான்கும் பத்து மாயகொண் டரக்க னோடிச்
சிவன்றிரு மலையைப் பேர்க்கத் திருமலர்க் குழலி யஞ்ச
வியன்பெற வெய்தி வீழ விரல்சிறி தூன்றி மீண்டே
சயம்பெற நாம மீந்தார் சாய்க்காடு மேவி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருநாகேச்சரம் : திருநேரிசை

4797. கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையால் மலர்கள் தூவி யிரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலும் நாகவீச் சரவ னாரே. 1

4798. வேடுறு வேட ராகி விசயனோ டெய்தார் போலும்
காடுறு பதியர் போலுங் கடிபுனற் கங்கை நங்கை
சேடெறி சடையர் போலுந் தீவினை தீர்க்க வல்ல
நாடறி புகழர் போலும் நாகவீச் சரவ னாரே. 2

4799. கற்றுணை வில்ல தாகக் கடியரண் செற்றார் போலும்
பொற்றுணைப் பாதர் போலும் புலியத ளுடையர் போலும்
சொற்றுணை மாலை கொண்டு தொழுதெழு வார்கட் கெல்லாம்
நற்றுணை யாவர் போலு நாகவீச் சரவ னாரே. 3

4800.கொம்பனாள் பாகர் போலுங் கொடியுடை விடையர் போலும்
செம்பொனா ருருவர் போலுந் திகழ்திரு நீற்றர் போலும்
எம்பிரா னெம்மை யாளு மிறைவனே யென்று தம்மை
நம்புவார்க் கன்பர் போலு நாகவீச் சரவ னாரே. 4

4801. கடகரி யுரியர் போலுங் கனன்மழு வாளர் போலும்
படவர வரையர் போலும் பாரிடம் பலவுங் கூடிக்
குடமுடை முழவ மார்ப்பக் கூளிகள் பாட நாளும்
நடநவி லடிகள் போலு நாகவீச் சரவ னாரே. 5

4802.பிறையுறு சடையர் போலும் பெண்ணொரு பாகர் போலும்
மறையுறு மொழியர் போலு மால்மறை யவன்றன் னோடு
முறைமுறை யமரர் கூடி முடிகளால் வணங்க நின்ற
நறவமர் கழலர் போலு நாகவீச் சரவ னாரே. 6

4803.வஞ்சகர்க் கரியர் போலும் மருவினோர்க் கெளியர் போலும்
குஞ்சரத் துரியர் போலுங் கூற்றினைக் குமைப்பர் போலும்
விஞ்சைய ரிரிய அன்று வேலைவாய் வந்தெ ழுந்த
நஞ்சணி மிடற்றர் போலு நாகவீச் சரவ னாரே. 7

4804.போகமார் மோடி கொங்கை புணர்தரு புனிதர் போலும்
வேகமார் விடையர் போலும் வெண்பொடி யாடு மேனிப்
பாகமா லுடையர் போலும் பருப்பத வில்லர் போலும்
நாகநா ணுடையர் போலு நாகவீச் சரவ னாரே. 8

4805.கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர் போலும்
அக்கரை யணிவர் போலும் ஐந்தலை யரவர் போலும்
வக்கரை யமர்வர் போலும் மாதரை மையல் செய்யும்
நக்கரை யுருவர் போலு நாகவீச் சரவ னாரே. 9

4806.வின்மையாற் புரங்கள் மூன்றும் வெந்தழல் விரித்தார் போலும்
தன்மையா லமரர் தங்கள் தலைவர்க்குந் தவைர் போலும்
வன்மையால் மலையெ டுத்தான் வலியினைத் தொலைவித் தாங்கே
நன்மையா லளிப்பர் போலு நாகவீச் சரவ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 67. திருக்கொண்டீச்சரம் : திருநேரிசை

4807. வரைகிலேன் புலன்க ளைந்தும் வரைகிலாப் பிறவி மாயப்
புரையிலே யடங்கி நின்று புறப்படும் வழியுங் காணேன்
அரையிலே மிளிரு நாகத் தண்ணலே யஞ்ச லென்னாய்
திரையுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 1

4808. தொண்டனேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து போர்வதோர் வழியுங் காணேன்
அண்டனே யண்ட வாணா அறிவனே யஞ்ச லென்னாய்
தெண்டிரைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே. 2

4809. கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோலுடுத் துதிர மட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை
ஓலெடுத் துழைஞர் கூடி யொளிப்பதற் கஞ்சு கின்றேன்
சேலுடைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே. 3

4810. கூட்டமா யைவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி
ஆட்டுவார்க் காற்ற கில்லே னாடர வசைத்த கோவே.
காட்டிடை யரங்க மாக ஆடிய கடவு ளேயோ
சேட்டிரும் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 4

4811. பொக்கமாய் நின்ற பொல்லாப் புழுமிடை முடைகொ ளாக்கை
தொக்குநின் றைவர் தொண்ணூற் றறுவருந் துயக்க மெய்த
மிக்குநின் றிவர்கள் செய்யும் வேதனைக் கலந்து போனேன்
செக்கரே திகழும் மேனித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 5

4812. ஊனுலா முடைகொ ளாக்கை யுடைகல மாவ தென்றும்
மானுலா மழைக்க ணார்தம் வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
நானெலா மினைய கால நண்ணிலே னெண்ண மில்லேன்
தேனுலாம் பொழில்கள் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே. 6

4813. சாணிரு மருங்கு நீண்ட சழக்குடைப் பதிக்கு நாதர்
வாணிக ரைவர் தொண்ணூற் றறுவரும் மயக்கஞ் செய்து
பேணிய பதியின் நின்று பெயரும்போ தறிய மாட்டேன்
சேணுயர் மாட நீடு திருக்கொண்டீச் சரத்து ளானே. 7

4814. பொய்ம்மறித் தியற்றி வைத்துப் புலால்கமழ் பண்டம் பெய்து
பைம்மறித் தியற்றி யன்ன பாங்கிலாக் குரம்பை நின்று
கைம்மறித் தனைய வாவி கழியும்போ தறிய மாட்டேன்
செந்நெறிச் செலவு காணேன் திருக்கொண்டீச் சரத்து ளானே. 8

4815. பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளுங் குறிக்கோளி லாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே. 9

4816. விரைதரு கருமென் கூந்தல் விளங்கிழை வேலொன் கண்ணாள்
வெருவர இலங்கைக் கோமான் விலங்கலை யெடுத்த ஞான்று
பருவரை யனைய தோளும் முடிகளும் பாறி வீழத்
திருவிர லூன்றி னானே திருக்கொண்டீச் சரத்து ளானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருவாலங்காடு : திருநேரிசை

4817. வெள்ளநீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் போலும்
உள்ளுளே யுருகி நின்றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே வினைக ளெல்லாங் கரிசறுத் திடுவர் போலும்
அள்ளலம் பழனை மேய ஆலங்காட் டடிக ளாரே. 1

4818. செந்தழ லுருவர் போலுஞ் சினவிடை யுடையர் போலும்
வெந்தவெண் ணீறு கொண்டு மெய்க்கணிந் திடுவர் போலும்
மந்தமாம் பொழிற் பழனை மல்கிய வள்ளல் போலும்
அந்தமி லடிகள் போலு மாலங்காட் டடிக ளாரே. 2

4819. கண்ணினாற் காம வேளைக் கனலெழ விழிப்பர் போலும்
எண்ணிலார் புரங்கண் மூன்று மெரியுணச் சிரிப்பர் போலும்
பண்ணினார் முழவ மோவாப் பைம்பொழிற் பழனை மேய
மண்ணலா ரெம்மை யாளு மாலங்காட் டடிக ளாரே. 3

4820. காறிடு விடத்தை யுண்ட கண்டரெண் டோளர் போலும்
தூறிடு சுடலை தன்னிற் சுண்ணவெண் ணீற்றர் போலும்
கூறிடு முருவர் போலுங் குளிர்பொழிற் பழனை மேய
ஆறிடு சடையர் போலு மாலங்காட் டடிக ளாரே. 4

4821. பார்த்தனோ டமர் பொருது பத்திமை காண்பர் போலும்
கூர்த்தவா யம்பு கோத்துக் குணங்களை யறிவர் போலும்
பேர்த்துமோ ராவ நாழி அம்பொடுங் கொடுப்பர் போலும்
தீர்த்தமாம் பழனை மேய திருவாலங் காட னாரே. 5

4822.வீட்டினார் சுடுவெண் ணீறு மெய்க்கணிந் திடுவர் போலும்
காட்டில்நின் றாடல் பேணுங் கருத்தினை யுடையர் போலும்
பாட்டினார் முழவ மோவாப் பைம்பொழிற் பழனை மேயார்
ஆட்டினா ரரவந் தன்னை யாலங்காட் டடிக ளாரே. 6

4823.தாளுடைச் செங்க மலத் தடங்கொள்சே வடியர் போலும்
நாளுடைக் காலன் வீழ வுதைசெய்த நம்பர் போலும்
கோளுடைப் பிறவி தீர்ப்பார் குளிர்பொழிற் பழனை மேய
ஆளுடை யண்ணல் போலு மாலங்காட் டடிக ளாரே. 7

4824.கூடினா ருமைதன் னோடே குறிப்புடை வேடங் கொண்டு
சூடினார் கங்கை யாளைச் சுவறிடு சடையர் போலும்
பாடினார் சாம வேதம் பைம்பொழிற் பழனை மேயார்
ஆடினார் காளி காண வாலங்காட் டடிக ளாரே. 8

4825.வெற்றரைச் சமண ரோடு விலையுடைக் கூறை போர்க்கும்
ஒற்றரைச் சொற்கள் கொள்ளார் குணங்களை யுகப்பர் போலும்
பெற்றமே உகந்தங் கேறும் பெருமையை யுடையர் போலும்
அற்றங்க ளறிவர் போலு மாலங்காட் டிடக ளாரே. 9

4826.மத்தனாய் மலையெ டுத்த அரக்கனைக் கரத்தோ டொல்க
ஒத்தினார் திருவிரலா லூன்றியிட் டருள்வர் போலும்
பத்தர்தம் பாவந் தீர்க்கும் பைம்பொழிற் பழனை மேய
அத்தனார் நம்மை யாள்வா ராலங்காட் டடிக ளாரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 69. திருக்கோவலூர் வீரட்டம் : திருநேரிசை

4827.செத்தையேன் சிதம்ப நாயேன் செடியனே னழுக்குப் பாயும்
பொத்தேயே போற்றி நாளும் புகலிட மறிய மாட்டேன்
எத்தைநான் பற்றி நிற்கே னிருளற நோக்க மாட்டாக்
கொத்தையேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. 1

4828.தலைசுமந் திருகை நாற்றித் தரணிக்கே பொறைய தாகி
நிலையிலா நெஞ்சந் தன்னுள் நித்தலு மைவர் வேண்டும்
விலைகொடுத் தறுக்க மாட்டேன் வேண்டிற்றே வேண்டி யெய்த்தேன்
குலைகொள்மாங் கனிகள் சிந்துங் கோவல்வீ ரட்ட னீரே. 2

4829. வழித்தலைப் படவு மாட்டேன் வைகலுந் தூய்மை செய்து
பழித்திலேன் பாச மற்றுப் பரமநான் பரவ மாட்டேன்
இழித்திலேன் பிறவி தன்னை யென்னினைந் திருக்க மாட்டேன்
கொழித்துவந் தலைக்குந் தெண்ணீர்க் கோவல்வீ ரட்ட னீரே. 3

4830. சாற்றுவ ரைவர் வந்து சந்தித்த குடிமை வேண்டிக்
காற்றுவர் கனலப் பேசிக் கண்செவி மூக்கு வாயுள்
ஆற்றுவ ரலந்து போனே னாதியை அறிவொன் றின்றிக்
கூற்றுவர் வாயிற் பட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. 4

4831. தடுத்திலே னைவர் தம்மைத் தத்துவத் துயர்வு நீர்மைப்
படுத்திலேன் பரப்பு நோக்கிப் பன்மலர்ப் பாத முற்ற
அடுத்திலேன் சிந்தை யார ஆர்வலித் தன்பு திண்ணங்
கொடுத்திலேன் கொடிய வாநான் கோவல்வீ ரட்ட னீரே. 5

4832. மாச்செய்த குரம்பை தன்னை மண்ணிடை மயக்க மெய்து
நாச்செய்து நாலு மைந்து நல்லன வாய்தல் வைத்துக்
காச்செய்த காயந் தன்னுள் நித்தலு மைவர் வந்து
கோச்செய்து குமைக்க வாற்றேன் கோவல்வீ ரட்ட னீரே. 6

4833. படைகள்போல் வினைகள் வந்து பற்றியென் பக்கல் நின்றும்
விடகிலா ஆத லாலே விகிர்தனை விரும்பி யேத்தும்
இடையிலே னென்செய் கேனா னிரப்பவர் தங்கட் கொன்றுங்
கொடையிலேன் கொள்வ தேநான் கோவல்வீ ரட்ட னீரே. 7

4834. பிச்சிலேன் பிறவி தன்னைப் பேதையேன் பிணக்க மென்னுந்
துச்சுளே யழுந்தி வீழ்ந்து துயரமே யிடும்பை தன்னுள்
அச்சனா யாதி மூர்த்திக் கன்பனாய் வாழ மாட்டாக்
கொச்சையேன் செய்வ தென்னே கோவல்வீ ரட்ட னீரே. 8

4835. நிணத்திடை யாக்கை பேணி நியமஞ்செய் திருக்க மாட்டேன்
மணத்திடை யாட்டம் பேசி மக்களே சுற்ற மென்னுங்
கணத்திடை யாட்டப் பட்டுக் காதலா லுன்னைப் பேணுங்
குணத்திடை வாழ மாட்டேன் கோவல்வீ ரட்ட னீரே. 9

4836. விரிகட லிலங்கைக் கோனை வியன்கயி லாயத் தின்கீழ்
இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய வூன்றிப்
பரவிய பாடல் கேட்டுப் படைகொடுத் தருளிச் செய்தார்
குரவொடு கோங்கு சூழ்ந்த கோவல்வீ ரட்ட னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 70. திருநனிபள்ளி : திருநேரிசை

4837. முற்றுணை யாயி னானை மூவர்க்கு முதல்வன் றன்னைச்
சொற்றுணை யாயி னானைச் சோதியை யாத ரித்து
உற்றுணர்ந் துருகி யூறி உள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர் போலு நனிபள்ளி யடிக ளாரே. 1

4838. புலர்ந்தகால் பூவு நீருங் கொண்டடி போற்ற மாட்டா
வலஞ்செய்து வாயில் நூலால் வட்டணைப் பந்தர் செய்த
சிலந்தியை யரைய னாக்கிச் சீர்மைகள் அருள வல்லார்
நலந்திகழ் சோலை சூழ்ந்த நனிபள்ளி யடிக ளாரே. 2

4839. எண்பதும் பத்தும் ஆறு மென்னுளே யிருந்து மன்னிக்
கண்பழக் கொன்று மின்றிக் கலக்கநா னலக்க ழிந்தேன்
செண்பகந் திகழும் புன்னை செழுந்திரட் குரவம் வேங்கை
நண்புசெய் சோலை சூழ்ந்த நனிபள்ளி யடிக ளாரே. 3

4840. பண்ணினார் பாட லாகிப் பழத்தினி லிரத மாகிக்
கண்ணினார் பார்வை யாகிக் கருத்தொடு கற்ப மாகி
எண்ணினா ரெண்ண மாகி யேழுல கனைத்து மாகி
நண்ணினார் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளி யடிக ளாரே. 4

4841. துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்தி ராதே
அஞ்செழுத் தோதில் நாளு மரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிக ளாரே. 5

4842. செம்மலர்க் கமலத் தோனுந் திருமுடி காண மாட்டான்
அம்மலர்ப் பாதங் காண்பா னாழியா னகழ்ந்துங் காணான்
நின்மல னென்றங் கேத்து நினைப்பினை யருளி நாளும்
நம்மல மறுப்பர் போலு நனிபள்ளி யடிக ளாரே. 6

4843. அரவத்தால் வரையைச் சுற்றி யமரரோ டசுரர் கூடி
அரவித்துக் கடையத் தோன்றும் ஆலநஞ் சமுதா வுண்டார்
விரவித்தம் மடிய ராகி வீடிலாத் தொண்டர் தம்மை
நரகத்தில் வீழ வொட்டார் நனிபள்ளி யடிக ளாரே. 7

4844. மண்ணுளே திரியும் போது வருவன பலவுங் குற்றம்
புண்ணுளே புரைபு ரையன் புழுப்பொதி பொள்ள லாக்கை.8,9

4845. பத்துமோ ரிரட்டி தோளான் பாரித்து மலையெ டுக்கப்
பத்துமோ ரிரட்டி தோள்கள் படருடம் படர வூன்றிப்
பத்துவாய் கீதம் பாடப் பரிந்தவற் கருள்கொ டுத்தார்
பத்தர்தாம் பரவி யேத்து நனிபள்ளிப் பரம னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 71. திருநாகைக்காரோணம் : திருநேரிசை

4846. மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகி லுய்யலாம் நெஞ்சி னீரே. 1

4847. வையனை வைய முண்ட மாலங்கந் தோண்மேற் கொண்ட
செய்யனைச் செய்ய போதிற் றிசைமுகன் சிரமொன் றேந்துங்
கையனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஐயனை நினைந்த நெஞ்சே யம்மநா முய்ந்த வாறே. 2

4848. நிருத்தனை நிமலன் தன்னை நீணிலம் விண்ணின் மிக்க
விருத்தனை வேத வித்தை விளைபொருண் மூல மான
கருத்தனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
ஒருத்தனை யுணர்த லால்நா முய்ந்தவா நெஞ்சி னீரே. 3

4849. மண்தனை யிரந்து கொண்ட மாயனோ டசுரர் வானோர்
தெண்டிரை கடைய வந்த தீவிடந் தன்னை யுண்ட
கண்டனைக் கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
அண்டனை நினைந்த நெஞ்சே யம்மநா முய்ந்த வாறே. 4

4850. நிறைபுன லணிந்த சென்னி நீணிலா அரவஞ் சூடி
மறையொலி பாடி யாடல் மயானத்து மகிழ்ந்த மைந்தன்
கறைமலி கடல்சூழ் நாகைக் காரோணங் கோயில் கொண்ட
இறைவனை நாளு மேத்த இடும்பைபோ யின்ப மாமே. 5

4851. வெம்பனைக் கருங்கை யானை வெருவவன் றுரிவை போர்த்த
கம்பனைக் காலற் காய்ந்த காலனை ஞால மேத்தும்
உம்பனை யும்பர் கோனை நாகைக்கா ரோணம் மேய
செம்பொனை நினைந்த நெஞ்சே திண்ணநா முய்ந்த வாறே. 6

4852.வெங்கடுங் கானத் தேழை தன்னொடும் வேட னாய்ச்சென்
றங்கமர் மலைந்து பார்த்தற் கடுசரம் அருளி னானை.
மங்கைமா ராட லோவா மன்னுகா ரோணத் தானைக்
கங்குலும் பகலுங் காணப் பெற்றுநாங் களித்த வாறே. 7

4853.தெற்றினர் புரங்கள் மூன்றுந் தீயினில் விழவோ ரம்பால்
செற்றவெஞ் சிலையர் வஞ்சர் சிந்தையுட் சேர்வி லாதார்
கற்றவர் பயிலும் நாகைக் காரோணங் கருதி யேத்தப்
பெற்றவர் பிறந்தார் மற்றுப் பிறந்தவர் பிறந்தி லாரே. 8,9

4854.கருமலி கடல்சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்
தொருவிரல் நுதிக்கு நில்லா தொண்டிற லரக்க னுக்கான்
இருதிற மங்கை மாரோ டெம்பிரான் செம்பொ னாகந்
திருவடி தரித்து நிற்கத் திண்ணநா முய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருவின்னம்பர் : திருநேரிசை

4855.விண்ணவர் மகுட கோடி மிடைந்தசே வடியர் போலும்
பெண்ணொரு பாகர் போலும் பேடலி யாணர் போலும்
வண்ணமா லயனுங் காணா மால்வரை யெரியர் போலும்
எண்ணுரு வநேகர் போலு மின்னம்பா ரீச னாரே. 1

4856.பன்னிய மறையர் போலும் பாம்பரை யுடையர் போலும்
துன்னிய சடையர் போலுந் தூமதி மத்தர் போலும்
மன்னிய மழுவர் போலும் மாதிடம் மகிழ்வர் போலும்
என்னையு முடையர் போலு மின்னம்ப ரீச னாரே. 2

4857.மறியொரு கையர் போலும் மாதுமை யுடையர் போலும்
பறிதலைப் பிறவி நீக்கிப் பணிகொள வல்லர் போலும்
செறிவுடை அங்க மாலை சேர்திரு வுருவர் போலும்
எறிபுனற் சடையர் போலு மின்னம்ப ரீச னாரே. 3

4858.விடம்மலி கண்டர் போலும் வேள்வியை யழிப்பர் போலும்
கடவுநல் விடையர் போலுங் காலனைக் காய்வர் போலும்
படம்மலி யரவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
இடர்களைந் தருள்வர் போலு மின்னம்ப ரீச னாரே. 4

4859. அளிமலர்க் கொன்றை துன்று மவிர்சடை யுடையர் போலு
களிமயிற் சாய லோடுங் காமனை விழிப்பர் போலும்
வெளிவள ருருவர் போலும் வெண்பொடி யணிவர் போலும்
எளியுவ ரடியர்க் கென்று மின்னம்ப ரீச னாரே. 5

4860. கணையமர் சிலையர் போலுங் கரியுரி உடையர் போலும்
துணையமர் பெண்ணர் போலுந் தூமணிக் குன்றர் போலும்
அணையுடை யடியர் கூடி அன்பொடு மலர்கள் தூவும்
இணையடி யுடையர் போலு மின்னம்ப ரீச னாரே. 6

4861. பொரும்பமர் புயத்தர் போலும் புனலணி சடையர் போலும்
மருப்பிள வாமை தாங்கு மார்பின்வெண் ணூலர் போலும்
உருத்திர மூர்த்தி போலு முணர்விலார் புரங்கள் மூன்றும்
எரித்திடு சிலையர் போலு மின்னம்ப ரீச னாரே. 7

4862. காடிட முடையர் போலுங் கடிகுரல் விளியர் போலும்
வேடுரு வுடையர் போலும் வெண்மதிக் கொழுந்தர் போலும்
கோடலர் வன்னி துப்பை கொக்கிற கலர்ந்த கொன்றை
ஏடமர் சடையர் போலு மின்னம்ப ரீச னாரே. 8

4863. காறிடு விடத்தை யுண்ட கண்டரெண் டோளர் போலும்
நீறுடை யுருவர் போலு நினைப்பினை யரியர் போலும்
பாறுடைத் தலைகை யேந்திப் பலிதிரிந் துண்பர் போலும்
ஏறுடைக் கொடியர் போலு மின்னம்ப ரீச னாரே. 9

4864. ஆர்த்தெழு மிலங்கைக் கோனை அருவரை யடர்ப்பர் போலும்
பார்த்தனோ டமர்பொருது படைகொடுத் தருள்வர் போலும்
தீர்த்தமாங் கங்கை தன்னைத் திருச்சடை வைப்பர் போலும்
ஏத்தவே மூலகும் வைத்தா ரின்னம்ப ரீச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

♦♦♦♦♦

## 73. திருச்சேறை : திருநேரிசை

4865. பெருந்திரு இமவான் பெற்ற பெண்கொடி பிரிந்த பின்னை
வருந்துவான் தவங்கள் செய்ய மாமணம் புணர்ந்து மன்னும்
அருந்திரு மேனி தன்பா லங்கொரு பாக மாகத்
திருந்திட வைத்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 1

4866. ஓர்த்துள வாறு நோக்கி யுண்மையை யுணராக் குண்டர்
வார்த்தையை மெய்யென் றெண்ணி மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்
பேர்த்தெனை யாளாக் கொண்டு பிறவிவான் பிணிக ளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 2

4867. ஒன்றிய தவத்து மன்னி யுடையனா யுலப்பில் காலம்
நின்றுதங் கழல்க ளேத்தும் நீள்சிலை விசைய னுக்கு
வென்றிகொள் வேட னாகி விரும்பிவெங் கான கத்துச்
சென்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 3

4868. அஞ்சையு மடக்கி ஆற்ற லுடையனா யநேக காலம்
வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பகீர தற்கு
வெஞ்சின முகங்க ளாகி விசையொடு பாயுங் கங்கை
செஞ்சடை யேற்றார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 4

4869. நிறைந்தமா மணலைக் கூப்பி நேசமோ டாவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு கறுத்ததன் தாதை தாளை
எறிந்தமா ணிக்கப் போதே யெழில்கொள்சண் டீச னென்னச்
சிறந்தபே ரளித்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 5

4870. விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமரு கங்கை
தரித்ததோர் கோல கால பயிரவ னாகி வேழம்
உரித்துமை யஞ்சக் கண்டு ஒண்திரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 6

4871. சுற்றுமுன் னிமையோர் நின்று தொழுதுதூ மலர்கள் தூவி
மற்றெமை யுயக்கொ ளென்ன மன்னுவான் புரங்கள் மூன்றும்
உற்றொரு நொடியின் முன்னம் ஒள்ளழல் வாயின் வீழச்
செற்றருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 7

4872. முந்தியிவ் வுலக மெல்லாம் படைத்தவன் மாலி னோடும்
எந்தனி நாத னேயென் றிறைஞ்சிநின் றேத்தல் செய்ய
அந்தமில் சோதி தன்னை அடிமுடி யறியா வண்ணஞ்
செந்தழ லானார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 8,9

4873. ஒருவரும் நிகரி லாத ஒண்திற லரக்க னோடிப்
பெருவரை யெடுத்த திண்டோள் பிறங்கிய முடிக ளிற்று
மருவியெம் பெருமா னென்ன மலரடி மெள்ள வாங்கித்
திருவருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வ னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. நினைந்த திருநேரிசை

4874. முத்தினை மணியைப் பொன்னை முழுமுதற் பவளம் ஏய்க்குங்
கொத்தினை வயிர மாலைக் கொழுந்தினை யமரர் சூடும்
வித்தினை வேத வேள்விக் கேள்வியை விளங்க நின்ற
அத்தனை நினைந்த நெஞ்ச மழகிதாம் நினைந்த வாறே. 1

4875. முன்பனை யுலகுக் கெல்லாம் மூர்த்தியை முனிக ளேத்தும்
இன்பனை யிலங்கு சோதி யிறைவனை யரிவை யஞ்ச
வன்பனைத் தடக்கை வேள்விக் களிற்றினை யுரித்த எங்கள்
அன்பனை நினைந்த நெஞ்ச மழகிதாம் நினைந்த வாறே. 2

4876. கரும்பினு மினியான் றன்னைக் காய்கதிர்ச் சோதி யானை
இருங்கட லமுதந் தன்னை யிறப்பொடு பிறப்பி லானைப்
பெரும்பொருட் கிளவி யானைப் பெருந்தவ முனிவ ரேத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்ச மழகிதாம் நினைந்த வாறே.3

4877. செருத்தனை யருத்தி செய்து செஞ்சரம் செலுத்தி யூர்மேல்
கருத்தனைக் கனக மேனிக் கடவுளைக் கருதும் வானோர்க்
கொருத்தனை யொருத்தி பாகம் பொருத்தியு மருத்தி தீரா
நிருத்தனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 4

4878. கூற்றினை யுதைத்த பாதக் குழகனை மழலை வெள்ளே
றேற்றனை யிமையோ ரேத்த இருஞ்சடைக் கற்றை தன்மேல்
ஆற்றனை யடிய ரேத்தும் அமுதனை யமுத யோக
நீற்றனை நினைந்த நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 5

4879. கருப்பனைத் தடக்கை வேழக் களிற்றினை யுரித்த கண்டன்
விருப்பனை விளங்கு சோதி வியன்கயி லாய மென்னும்
பொருப்பனைப் பொருப்பன் மங்கை பங்கனை அங்கை யேற்ற
நெருப்பனை நினைந்தி நெஞ்சம் நேர்பட நினைந்த வாறே. 6

4880. நீதியால் நினைப்பு ளானை நினைப்பவர் மனத்து ளானைச்
சாதியைச் சங்க வெண்ணீற் றண்ணலை விண்ணில் வானோர்
சோதியைத் துளக்க மில்லா விளக்கினை யளக்க லாகா
ஆதியை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 7

4881. பழகனை யுலகுக் கெல்லாம் பருப்பனைப் பொருப்போ டொக்கும்
மழகளி யானை யின்தோல் மலைமகள் நடுங்கப் போர்த்த
குழகனைக் குழவித் திங்கள் குளிர்சடை மருவ வைத்த
அழகனை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 8

4882.விண்ணிடை மின்னொப் பானை மெய்ப்பெரும் பொருளொப் பானைக்
கண்ணிடை மணியொப் பானைக் கடுவிருட் சுடரொப் பானை
எண்ணிடை யெண்ண லாகா இருவரை வெருவ நீண்ட
அண்ணலை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 9

4883.உரவனைத் திரண்ட திண்தோ ளரக்கனை யூன்றி மூன்றூர்
நிரவனை நிமிர்ந்த சோதி நீண்முடி யமரர் தங்கள்
குரவனைக் குளிர்வெண் திங்கட் சடையிடைப் பொதியு மைவாய்
அரவனை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 75. தனித் திருநேரிசை

4884.தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியின் நன்னீர்
கொண்டிருக் கோதி யாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி
இண்டைகொண் டேற நோக்கி யீசனை யெம்பி ரானைக்
கண்டனைக் கண்டி ராதே காலத்தைக் கழித்த வாறே. 1

4885.பின்னிலேன் முன்னி லேன்நான் பிறப்பறுத் தருள்செய் வானே
என்னிலேன் நாயி னேனா னிளங்கதிர்ப் பயலைத் திங்கள்
சின்னிலா எறிக்குஞ் சென்னிச் சிவபுரத் தமர ரேறே
நின்னலால் களைகண் ஆரே நீறுசே ரகலத் தானே. 2

4886.கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லா முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே.3

4887.உடம்பெனும் மனைய கத்து ளுள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. 4

4888.வஞ்சப்பெண் ணரங்கு கோயில் வாளெயிற் றரவந் துஞ்சா
வஞ்சப்பெண் ணிருந்த சூழல் வான்தவழ் மதியந் தோயும்
வஞ்சப்பெண் வாழ்க்கை யாளன் வாழ்வினை வாழ லுற்று
வஞ்சப்பெண் ணுறக்க மானேன் வஞ்சனே னென்செய் கேனே.5

4889. உள்குவா ருள்ளத் தானை உணர்வெனும் பெருமை யானை
உள்கினேன் நானுங் காண்பா னுருகினே னூறி யூறி
எள்கினே னெந்தை பெம்மா னிருதலை மின்னு கின்ற
கொள்ளிமே லெறும்பென் னுள்ள மெங்ஙனங் கூடு மாறே. 6

4890. மோத்தையைக் கண்ட காக்கை போலவல் வினைகள் மொய்த்துன்
வார்த்தையைப் பேச வொட்டா மயக்கநான் மயங்கு கின்றேன்
சீத்தையைச் சிதம்பு தன்னைச் செடிகொள்நோய் வடிவொன் றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ணம் உணர்வுதா உலக மூர்த்தி. 7

4891. அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை யுனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாளே னுன்னை
எங்குற்றா யென்ற போதா இங்குற்றே னென்கண் டாயே. 8

4892. வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்குநான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீ ரென்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோ மென்று நின்றார் விளங்கிளம் பிறைய னாரே. 9

4893. பெருவிர லிறைதா னூன்றப் பிறையெயி றிலங்க அங்காந்
தருவரை யனைய தோளா னரக்கனன் றலறி வீழ்ந்தான்
இருவரு மொருவ னாய உருவமங் குடைய வள்ளல்
திருவடி சுமந்து கொண்டு காண்கநான் திரியு மாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 76. தனித் திருநேரிசை

4894. மருளவா மனத்த னாகி மயங்கினேன் மதியி லாதேன்
இருளவா அறுக்கு மெந்தை இணையடி நீழ லென்னும்
அருளவாப் பெறுத லின்றி யஞ்சிநா னலமந் தேற்குப்
பொருளவாத் தந்த வாறே போதுபோய்ப் புலர்ந்த தன்றே. 1

4895. மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே. 2

4896. எம்பிரா னென்ற தேகொண் டென்னுளே புகுந்து நின்றிங்
கெம்பிரா னாட்ட ஆடி யென்னுளே யுழிதர் வேனை
எம்பிரா னென்னைப் பின்னைத் தன்னுளே கரக்கு மென்றால்
எம்பிரா னென்னி லல்லா லென்செய்கே னேழை யேனே. 3

4897. காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மை யாக மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய ஆட்டிப்
பூசனை யீச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே. 4

4898. வஞ்சகப் புலைய னேனை வழியறத் தொண்டிற் பூட்டி
அஞ்சலென் றாண்டு கொண்டா யதுவுநின் பெருமை யன்றே
நெஞ்சகங் கனிய மாட்டேன் நின்னையுள் வைக்க மாட்டேன்
நஞ்சிடங் கொண்ட கண்டா என்னென நன்மை தானே. 5

4899. நாயினுங் கடைப்பட் டேனை நன்னெறி காட்டி யாண்டாய்
ஆயிரம் அரவ மார்த்த அமுதனே யமுத மொத்து
நீயுமென் நெஞ்சி னுள்ளே நிலாவினாய் நிலாவி நிற்க
நோயவை சாரு மாகில் நோக்கிநீ யருள்செய் வாயே. 6

4900. விள்ளத்தா னொன்று மாட்டேன் விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போல நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனுங்
கள்ளத்தே நிற்றி யம்மா எங்ஙனங் காணு மாறே. 7

4901. ஆசைவன் பாச மெய்தி அங்குற்றே னிங்குற் றேனாய்
ஊசலாட் டுண்டு வாளா உழந்துநா னுழித ராமே
தேசனே தேச மூர்த்தி திருமறைக் காடு மேய
ஈசனே யுன்றன் பாதம் ஏத்துமா றருளெம் மானே. 8

4902. நிறைவிலேன் நேச மில்லேன் நினைவிலேன் வினையின் பாசம்
மறைவிலே புறப்பட் டேறும் வகையெனக் கருளெ னெம்மான்
சிறைவிலேன் செய்வ தென்னே திருவடி பரவி யேத்தக்
குறைவிலேன் குற்றந் தீராய் கொன்றைசேர் சடையி னானே. 9

4903. நடுவிலாக் காலன் வந்து நணுகும்போ தறியா வொண்ணா
அடுவன அஞ்சு பூதம் அவைதமக் காற்ற லாகேன்
படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ கிளரொளிச் சடையி னீரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 77. தனித் திருநேரிசை

4904. கடும்பகல் நட்ட மாடிக் கையிலோர் கபால மேந்தி
இடும்பலிக் கில்லந் தோறு முழிதரு மிறைவ னீரே
நெடும்பொறை மலையர் பாவை நேரிழை நெறிமென் கூந்தற்
கொடுங்குழை புகுந்த அன்றுங் கோவண மரைய தேயோ. 1

4905. கோவண முடுத்த வாறுங் கோளரா வசைத்த வாறுந்
தீவணச் சாம்பர் பூசித் திருவுரு இருந்த வாறும்
பூவணக் கிழவ னாரைப் புலியுரி யரைய னாரை
ஏவணச் சிலையி னாரை யாவரே யெழுது வாரே. 2

4906. விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினார் பதிற்றி யாகும்
துளக்கில்நன் மலர்தொ டுத்தால் தூயவிண் ணேற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள்தாம் அருளு மாறே. 3

4907. சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாம வேதி
அந்தரத் தமரர் பெம்மான் ஆன்நல்வெள் ளூர்தி யான்றன்
மந்திரம் நமச்சி வாய ஆகநீ றணியப் பெற்றால்
வெந்தறும் வினையும் நோயும் வெவ்வழல் விறகிட் டன்றே. 4

4908. புள்ளுவ ரைவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர் தூநெறி விளைய வொட்டார்
முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்வினா லெய்ய லாமே. 5

4909. தொண்டனேன் பிறந்து வாளாத் தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நாளும் பெரியதோ ரவாவிற் பட்டேன்
அண்டனே யமரர் கோவே அறிவனே யஞ்ச லென்னாய்
தெண்டிரை கங்கை சூடுந் திகழ்தரு சடையி னானே. 6

4910. பாறினாய் பாவி நெஞ்சே பன்றிபோ லளற்றிற் பட்டுத்
தேறிநீ நினைதி யாயிற் சிவகதி திண்ண மாகும்
ஊறலே யுவர்ப்பு நாறி உதிரமே யொழுகும் வாசல்
கூறையால் மூடக் கண்டு கோலமாக் கருதி னாயே. 7,8,9

4911. உய்த்தகா லுதயத் தும்ப ருமையவள் நடுக்கந் தீர
வைத்தகா லரக்க னோதன் வான்முடி தனக்கு நேர்ந்தான்
மொய்த்தகான் முகிழ்வெண் திங்கண் மூர்த்தியெ னுச்சி தன்மேல்
வைத்தகால் வருந்து மென்று வாடிநா னொடுங்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 78. குறைந்த திருநேரிசை

4912. வென்றிலேன் புலன்க ளைந்தும் வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலே னாத லாலே செந்நெறி யதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈச னேயோ
இன்றுளேன் நாளை யில்லே னென்செய்வான் தோன்றி னேனே.1

4913. கற்றிலேன் கலைகள் ஞானங் கற்றவர் தங்க ளோடும்
உற்றிலே னாத லாலே உணர்வுக்குஞ் சேய னானேன்
பெற்றிலேன் பெருந்த டங்கண் பேதைமார் தமக்கும் பொல்லேன்
எற்றுளே னிறைவ னேநா னென்செய்வான் தோன்றி னேனே. 2

4914. மாட்டினேன் மனத்தை முன்னே மறுமையை யுணர மாட்டேன்
மூட்டிநான் முன்னை நாளே முதல்வனை வணங்க மாட்டேன்
பாட்டினாய் போல நின்று பற்றதாம் பாவந் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டே னென்செய்வான் தோன்றி னேனே.3

4915. கரைக்கடந் தோத மேறுங் கடல்விட முண்ட கண்டன்
உரைக்கடந் தோது நீர்மை யுணர்ந்திலே னாத லாலே
அரைக்கிடந் தசையு நாக மசைப்பனே யின்ப வாழ்க்கைக்
கிரைக்கடைந் துருகு கின்றே னென்செய்வான் தோன்றி னேனே.4

4916. செம்மைவெண் ணீறு பூசுஞ் சிவனவன் தேவ தேவன்
வெம்மைநோய் வினைகள் தீர்க்கும் விகிர்தனுக் கார்வ மெய்தி
அம்மைநின் றடிமை செய்யா வடிவிலா முடிவில் வாழ்க்கைக்
கிம்மைநின் றுருகு கின்றே னென்செய்வான் தோன்றி னேனே. 5

4917. பேச்சொடு பேச்சுக் கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலே னாத லாலே கொடுமையை விடுமா றோரேன்
நாச்சொலி நாளும் மூர்த்தி நன்மையை யுணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே யென்செய்வான் தோன்றி னேனே. 6

4918. தேசனைத் தேச மாகுந் திருமாலோர் பங்கன் றன்னைப்
பூசனைப் புனிதன் றன்னைப் புணரும் புண்டரிகத் தானை
நேசனை நெருப்பன் றன்னை நிவஞ்சகத் தகன்ற செம்மை
ஈசனை யறிய மாட்டே னென்செய்வான் தோன்றி னேனே. 7

4919. விளைக்கின்ற வினையை நோக்கி வெண்மயிர் விரவி மேலும்
முளைக்கின்ற வினையைப் போக முயல்கிலே னியல வெள்ளம்
திளைக்கின்ற முடியி னான்றன் திருவடி பரவ மாட்டா
திளைக்கின்றே னிருமி யூன்றி யென்செய்வான் தோன்றி னேனே.8

4920.விளைவறி விலாமை யாலே வேதனைக் குழியி லாழ்ந்து
களைகணு மில்லே னெந்தாய் காமரங் கற்று மில்லேன்
தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்ப மெய்த
இளையனு மல்லே னெந்தா யென்செய்வான் தோன்றி னேனே. 9

4921.வெட்டன வுடைய னாகி வீரத்தால் மலையெ டுத்த
துட்டனைத் துட்டுத் தீர்த்துச் சுவைபடக் கீதங் கேட்ட
அட்டமா மூர்த்தி யாய ஆதியை யோதி நாளும்
எட்டனை யெட்ட மாட்டே னென்செய்வான் தோன்றி னேனே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 79. குறைந்த திருநேரிசை

4922.தம்மானங் காப்ப தாகித் தையலார்
வலையு ளாழ்ந்து
அம்மானை அமுதன் தன்னை ஆதியை
யந்த மாய
செம்மான ஒளிகொள் மேனிச் சிந்தையு
ளொன்றி நின்ற
எம்மானை நினைய மாட்டே னென்செய்வான்
தோன்றி னேனே. 1

4923.மக்களே மணந்த தார மவ்வயிற்
றவரை யோம்பும்
சிக்குளே யழுந்தி யீசன் திறம்படேன்
தவம தோரேன்
கொப்புளே போலத் தோன்றி யதனுளே
மறையக் கண்டும்
இக்களே பரத்தை யோம்ப என்செய்வான்
தோன்றி னேனே. 2

4924.கூழையே னாக மாட்டேன் கொடுவினைக்
குழியில் வீழ்ந்து
ஏழினின் னிசையி னாலும் இறைவனை
யேத்த மாட்டேன்
மாழையொண் கண்ணின் நல்ல மடந்தைமார்
தமக்கும் பொல்லேன்
ஏழையே னாகி நாளு மென்செய்வான்
தோன்றி னேனே. 3

4925.முன்னையென் வினையி னாலே மூர்த்தியை
நினைய மாட்டேன்
பின்னைநான் பித்த னாகிப் பிதற்றுவன்
பேதை யேன்நான்
என்னுளே மன்னி நின்ற சீர்மைய
தாயி னானை
என்னுளே நினைய மாட்டே னென்செய்வான்
தோன்றி னேனே. 4

4926.கறையணி கண்டன் தன்னைக் காமரங்
கற்று மில்லேன்
பிறைநுதற் பேதை மாதர் பெய்வளை
யார்க்கு மல்லேன்
மறைநவில் நாவி னானை மன்னிநின்
றிறைஞ்சி நாளும்
இறையேயு மேத்த மாட்டே னென்செய்வான்
தோன்றி னேனே. 5

4927.வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை
நடக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி
மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமைபோற்
தெளிவி லாதேன்
இளைத்துநின் றாடு கின்றே னென்செய்வான்
தோன்றி னேனே. 6,7,8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 80. கோயில் : திருவிருத்தம்

4928.பாளை யுடைக்கமு கோங்கிப் பன்மாட நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயல் தில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தர னாடல்கண்டால்
பீளை யுடைக்கண் களாற்பின்னைப் பேய்த்தொண்டர் காண்பதென்னே.1

4929.பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாள னுலகுக்கெல்லாம்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.2

4930. தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண் டணிந்து பொன்னா கியதில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. 3

4931. வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி யுந்தியின் மேலசைத்த
கச்சி னழகுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே. 4

4932. செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்ற ஆடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு
காண்பதென்னே.5

4933. ஊனத்தை நீக்கி யுலகறிய என்னை யாட்கொண்டவன்
தேனொத் தெனக்கினி யான்தில்லைச் சிற்றம் பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை யுண்டகண் டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.6

4934. தெரித்த கணையால் திரிபுர மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த இறைவ னிமையவர் கோமா னிணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப தென்னே.7

4935. சுற்று மமரர் சுரபதி நின்திருப் பாதமல்லால்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையுள் நஞ்சையுண்டான்
செற்றங் கநங்கனைத் தீவிழித் தான்தில்லை யம்பலவன்
நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப தென்னே.8

4936. சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமும் மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.9

4937. தருக்கு மிகுத்துத் தன்றோள் வலியுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்து மணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்ப தென்னே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. கோயில் : திருவிருத்தம்

4938. கருநட்ட கண்டனை யண்டத் தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதி லெய்யவல் லானைச்செந் தீமுழங்கத்
திருநட்ட மாடியைத் தில்லைக் கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்ட மாடியை வானவர் கோனென்று வாழ்த்துவனே. 1

4939. ஒன்றி யிருந்து நினைமின்க ளுந்தமக் கூன மில்லைக்
கன்றிய காலனைக் காலாற் கடிந்தா னடிய வற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னு மெம்பெரு மான்றன் திருக் குறிப்பே. 2

4940. கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக் காண்பதென்னே
நன்மன வர்நவில் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
பொன்மலை யில்வெள்ளிக் குன்றது போலப் பொலிந்திலங்கி
என்மன மேயொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே. 3

4941. குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே. 4

4942. வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத் தான்தில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட டிருப்பதன் றோநந்தங் கூழைமையே. 5

4943. பூத்தன பொற்சடை பொன்போன் மிளிரப் புரிகணங்கள்
ஆர்த்தன கொட்டி யரித்தன பல்குறட் பூதகணம்
தேத்தென என்றிசை வண்டுகள் பாடுசிற் றம்பலத்துக்
கூத்தனிற் கூத்துவல் லாருள ரோவென்றன் கோல்வளைக்கே.6

4944. முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின் நோக்கு முறுவலிப்பும்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீறுஞ் சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென் பாவிநெஞ்சில்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன் குரைகழலே. 7

4945. படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்சென் நாவிற் கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம் பலத்தரனே. 8

4946. பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து புரிசடைகள்
மின்னொத் திலங்கப் பலிதேர்ந் துழலும் விடங்கவேடச்
சின்னத்தி னால்மலி தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்னத்த னாடல்கண் டின்புற்ற தாலிவ் விருநிலமே. 9

4947. சாட வெடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
வீட வெடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட வெடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன் றோநம்மை யாட்கொண்டதே. 10

திருச்சிற்றம்பலம்

❖❖❖❖❖

## 82. திருக்கழுமலம் :திருவிருத்தம்

4948. பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளின மேந்தின வென்பர் நளிர்மதியம்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித் தாடுங் கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண் டோஅந்த ணாழி யகலிடமே. 1

4949. கடையார் கொடிநெடு மாடங்க ளெங்குங் கலந்திலங்க
உடையா னுடைதலை மாலையுஞ் சூடி யுகந்தருளி
விடைதா னுடையஅவ் வேதியன் வாழுங் கழுமலத்துள்
அடைவார் வினைக ளவையெள்க நாள்தொறு மாடுவரே. 2

4950. திரைவாய்ப் பெருங்கடல் முத்தங் குவிப்ப முகந்துகொண்டு
நுரைவாய் நுளைச்சிய ரோடிக் கழுமலத் துள்ளழுந்தும்
விரைவாய் நறுமலர் சூடிய விண்ணவன் தன்னடிக்கே
வரையாப் பரிசிவை நாடொறு நந்தமை யாள்வனவே. 3

4951. விரிக்கும் அரும்பதம் வேதங்க ளோதும் விழுமியநூல்
உரைக்கி லரும்பொரு ளுள்ளவர் கேட்கி லுலகமுற்றும்
இரிக்கும் பறையொடு பூதங்கள் பாடக் கழுமலவன்
நிருத்தம் பழம்படி யாடுங் கழல்நம்மை யாள்வனவே. 4

4952. சிந்தித் தெழுமன மேநினை யாமுன் கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானைப் பசுபதியைச்
சந்தித்த கால மறுத்துமென் றெண்ணி யிருந்தவர்க்கு
முந்தித் தொழுகழல் நாடொறும் நந்தம்மை யாள்வனவே. 5

4953. நிலையும் பெருமையு நீதியுஞ் சால அழகுடைத்தாய்
அலையும் பெருவெள்ளத் தன்று மிதந்தவித் தோணிபுரம்
சிலையில் திரிபுர மூன்றெரித் தார்தங் கழுமலவர்
அலருங் கழலடி நாள்தொறு நந்தமை யாள்வனவே. 6

4954. முற்றிக் கிடந்து முந்நீரின் மிதந்துடன் மொய்த்தமரர்
சுற்றிக் கிடந்து தொழப்படு கின்றது சூழரவம்
தெற்றிக் கிடந்துவெங் கொன்றளந் துன்றிவெண் திங்கள்சூடும்
கற்றைச் சடைமுடி யார்க்கிட மாய கழுமலமே. 7

4955. உடலு முயிரு மொருவழிச் செல்லு முலகத்துள்ளே
அடையு முனைவந் தடைந்தா ரமர ரடியிணைக்கீழ்
நடையும் விழவொடு நாடொறு மல்குங் கழுமலத்துள்
விடையன் தனிப்பத நாடொறு நந்தமை யாள்வனவே. 8

4956. பரவைக் கடல்நஞ்சை யுண்டது மில்லையிப் பார்முழுதும்
நிரவிக் கிடந்து தொழப்படு கின்றது நீண்டிருவர்
சிரமப் படவந்து சார்ந்தார் கழலடி காண்பதற்கே
அரவக் கழலடி நாடொறு நந்தமை யாள்வனவே. 9

4957. கரையார் கடல்சூ ழிலங்கையர் கோன்தன் முடிசிதறத்
தொலையா மலரடி யூன்றலு முள்ளம் விதிர்விதிர்த்துத்
தலையாய்க் கிடந்துயர்ந் தான்றன் கழுமலங் காண்பதற்கே
அலையாப் பரிசிவை நாடொறு நந்தமை யாள்வனவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 83. திருக்கழுமலம் : திருவிருத்தம்

4958. படையார் மழுவொன்று பற்றிய கையன் பதிவினவில்
கடையார் கொடிநெடு மாடங்க ளோங்குங் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும் பெரும்பதியே. 1

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. ஆருயிர்த் திருவிருத்தம்

4959. எட்டாந் திசைக்கு மிருதிசைக் கும்மிறை வாமுறையென்
றிட்டா ரமரர்வெம் பூச லெனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுர மூன்றையு மோரம்பினால்
அட்டா னடிநிழற் கீழதன் றோஎன்ற னாருயிரே. 1

4960. பேழ்வா யரவி னரைக்கமர்ந் தேறிப் பிறங்கிலங்கு
தேய்வா யிளம்பிறை செஞ்சடை மேல்வைத்த தேவர்பிரான்
மூவா னிளகான் முழுவுல கோடுமண் விண்ணுமற்றும்
ஆவா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 2

4961. தரியா வெகுளிய னாய்த்தக்கன் வேள்வி தகர்த்துகந்த
எரியா ரிலங்கிய சூலத்தி னானிமை யாதமுக்கட்
பெரியான் பெரியார் பிறப்பறுப் பானென்றுந் தன்பிறப்பை
அரியா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 3

4962. வடிவுடை வாள்நெடுங் கண்ணுமை யாளையொர் பால்மகிழ்ந்து
வெடிகொ ளரவொடு வேங்கை யதள்கொண்டு மேன்மருவிப்
பொடிகொ ளகலத்துப் பொன்பிதிர்ந் தன்னபைங் கொன்றையந்தார்
அடிக ளடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 4

4963. பொறுத்தா னமரர்க் கமுதருளி நஞ்ச முண்டுகண்டம்
கறுத்தான் கறுப்பழ காவுடை யான்கங்கை செஞ்சடைமேல்
செறுத்தான் தனஞ்சயன் சேணா ரகலங் கணையொன்றினால்
அறுத்தா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 5

4964. காய்ந்தான் செறற்கரி யானென்று காலனைக் காலொன்றினால
பாய்ந்தான் பணைமதில் மூன்றுங் கணையென்னு மொள்ளெழலால்
மேய்ந்தான் வியனுல கேழும் விளங்க விழுமியநூல்
ஆய்ந்தா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 6

4965. உளைந்தான் செறுதற் கரியான் றலையை யுகிரொன்றினால்
களைந்தா னதனை நிறைய நெடுமால் கணார்குருதி
வளைந்தா னொருவிர லின்னொடு வீழ்வித்துச் சாம்பர்வெண்ணீ
றளைந்தா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 7

4966. முந்திவட் டத்திடைப் பட்டதெல் லாம்முடி வேந்தர்தங்கள்
பந்திவட் டத்திடைப் பட்டலைப் புண்பதற் கஞ்சிக்கொல்லோ
நந்திவட் டந்நறு மாமலர்க் கொன்றையு நக்கசென்னி
அந்திவட் டத்தொளி யானடிச் சேர்ந்ததென் னாருயிரே. 8

4967. மிகத்தான் பெரியதொர் வேங்கை யதள்கொண்டு மெய்ம்மருவி
அகத்தான் வெருவநல் லாளை நடுக்குறுப் பான்வரும்பொன்
முகத்தாற் குளிர்ந்திருந் துள்ளத்தி னாலுகப் பானிசைந்த
அகத்தா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 9

4968. பைம்மா ணரவல்குற் பங்கயச் சீறடி யாள்வெருவக்
கைம்மா வரிசிலைக் காமனை யட்ட கடவுண் முக்கண்
எம்மா னிவனென் றிருவடி மேத்த எரிநிமிர்ந்த
அம்மா னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 10

4969. பழகவொ ரூர்தியரன் பைங்கட் பாரிடம் பாணிசெய்யக்
குழலு முழவொடு மாநட மாடி யுயரிலங்கைக்
கிழவ னிருவது தோளு மொருவிர லாலிறுத்த
அழக னடிநிழற் கீழதன் றோவென்ற னாருயிரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 85. திருச்சோற்றுத்துறை : திருவிருத்தம்

4970. காலை யெழுந்து கடிமலர் தூயன தாங்கொணர்ந்து
மேலை யமரர் விரும்பு மிடம்விரை யான்மலிந்த
சோலை மணங்கமழ் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
மாலை மதியமன் றோவெம்பி ரானுக் கழகியதே. 1

4971. வண்டணை கொன்றையும் வன்னியும் மத்தமும் வாளரவும்
கொண்டணைந் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே
தொண்டணைந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
வெண்டலை மாலையன் றோவெம்பி ரானுக் கழகியதே. 2

4972. அளக்கு நெறியின னன்பர்கள் தம்மனத் தாய்ந்துகொள்வான்
விளக்கு மடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளக்குங் குழையணி சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதியமன் றோவெம்பி ரானுக் கழகியதே. 3

4973. ஆய்ந்தகை வாளர வத்தொடு மால்விடை யேறியெங்கும்
பேர்ந்தகை மாநட மாடுவர் பின்னு சடையிடையே
சேர்ந்தகைம் மாமலர் துன்னிய சோற்றுத் துறையுறைவார்
ஏந்துகைச் சூல மழுவெம்பி ரானுக் கழகியதே. 4

4974. கூற்றைக் கடந்ததுங் கோளர வார்த்ததுங் கோளுழுவை
நீற்றில் துதைந்து திரியும் பரிசது நாமறியோம்
ஆற்றிற் கிடந்தங் கலைப்ப அலைப்புண் டசைந்ததொக்கும்
சோற்றுத் துறையுறை வார்சடை மேலதொர் தூமதியே. 5

4975. வல்லாடி நின்று வலிபேசு வார்கோளர் வல்லசுரர்
கொல்லாடி நின்று குமைக்கிலும் வானவர் வந்திறைஞ்சச்
சொல்லாடி நின்று பயில்கின்ற சோற்றுத் துறையுறைவார்
வில்லாடி நின்ற நிலையெம் பிரானுக் கழகியதே. 6

4976. ஆய முடையது நாமறி யோம்அர ணத்தவரைக்
காயக் கணைசிலை வாங்கியு மெய்துந் துயக்கறுத்தான்
தூயவெண் ணீற்றினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
பாயும் வெண்ணீர்த் திரட்கங்கை யெம்மானுக் கழகியதே. 7

4977. அண்ட ரமரர் கடைந்தெழுந் தோடிய நஞ்சதனை
உண்டும் அதனை யொடுக்கவல் லான்மிக்க வும்பர்கள்கோன்
தொண்டு பயில்கின்ற சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இண்டை மதியமன் றோவெம்பி ரானுக் கழகியதே. 8

4978. கடல்மணி வண்ணன் கருதிய நான்முகன் தானறியா
விடமணி கண்ட முடையவன் தானென்னை யாளுடையான்
சுடரணிந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
படமணி நாகமன் றோவெம்பி ரானுக் கழகியதே. 9

4979. இலங்கைக் கிறைவ னிருபது தோளும் முடிநெரியக்
கலங்க விரலினா லூன்றி யவனைக் கருத்தழித்த
துலங்கல் மழுவினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இலங்கு மதியமன் றோவெம்பி ரானுக் கழகியதே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருவொற்றியூர் : திருவிருத்தம்

4980. செற்றுக் களிற்றுரி கொள்கின்ற ஞான்று செருவெண்கொம்பொன்
றிற்றுக் கிடந்தது போலு மிளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச் சுடரிமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு மாலொற்றி யூரனுக்கே. 1

4981. சொல்லக் கருதிய தொன்றுண்டு கேட்கில்தொண் டாயடைந்தார்
அல்லற் படக்கண்டு பின்னென் கொடுத்தி யலைகொள்முந்நீர்
மல்லற் றிரைச்சங்க நித்திலங் கொண்டுவம் பக்கரைக்கே
ஒல்லைத் திரைகொணர்ந் தெற்றொற்றி யூருறை யுத்தமனே. 2

4982. பரவை வருதிரை நீர்க்கங்கை பாய்ந்துக்க பல்சடைமேல்
அரவ மணிதரு கொன்றை யிளந்திங்கள் சூடியதோர்
குரவ நறுமலர் கோங்க மணிந்துகு லாயசென்னி
உரவு திரைகொணர்ந் தெற்றொற்றி யூருறை யுத்தமனே. 3

4983. தானகங் காடரங் காக வுடையது தன்னடைந்தார்
ஊனக நாறும் முடைதலை யிற்பலி கொள்வதுந்தான்
தேனக நாறுந் திருவொற்றி யூருறை வாரவர்தாம்
தானக மேவந்து போனகம் வேண்டி யுழிதர்வரே. 4

4984.வேலைக் கடல்நஞ்ச முண்டுவெள் ளேற்றொடும் வீற்றிருந்த
மாலைச் சடையார்க் குறைவிடம் மாவது வாரிகுன்றா
ஆலைக் கரும்பொடு செந்நெற் கழனி யருகணைந்த
சோலைத் திருவொற்றி யூரையெப் போதுந் தொழுமின்களே. 5

4985.புற்றினில் வாழு மரவுக்குந் திங்கட்குங் கங்கையென்னுஞ்
சிற்றிடை யாட்குஞ் செறிதரு கண்ணிக்குஞ் சேர்விடமாம்
பெற்றுடை யான்பெரும் பேச்சுடை யான்பிரி யாதெனையாள்
விற்றுடை யானொற்றி யூருடை யான்றன் விரிசடையே. 6

4986.மூன்றரைக் கண்ணுடை யாரெங்கு மில்லை யிமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட் பாவைக்குக் கூறிட்டநாள்
அன்றரைக் கண்ணுங் கொடுத்துமை யாளையும் பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீ ரொற்றி யூருறை யுத்தமனே. 7

4987.சுற்றிவண் டியாழ்செயுஞ் சோலையுங் காவுந் துதைந்திலங்கு
பெற்றிகண் டால்மற்றி யாவருங் கொள்வர் பிறரிடைநீ
ஒற்றிகொண் டாயொற்றி யூரையுங் கைவிட் டுறுமென்றெண்ணி
விற்றிகண் டாய்மற் றிதுவொப்ப தில்லிடம் வேதியனே. 8

4988.சுற்றிக் கிடந்தொற்றி யூரனென் சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து நீயென்ன செய்தி யுலகமெல்லாம்
பற்றித் திரிதந்து பல்லொடு நாமென்று கணகுழித்துத்
தெற்றித் திருப்பதல் லாலென்ன செய்யுமித் தீவினையே. 9

4989.அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவம் முறுவல்செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி பருமணிசேர்
கங்கைக்கு வேலை யரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர் திருமுடியே. 10

4990. தருக்கின வாளரக் கன்முடி பத்திறப் பாதந்தன்னால்
ஒருக்கின வாறடி யேனைப் பிறப்பறுத் தாளவல்லான்
நெருக்கின வானவர் தானவர் கூடிக் கடைந்தநஞ்சைப்
பருக்கின வாறென்செய் கேனொற்றி யூருறை பண்டங்கனே. 11

திருச்சிற்றம்பலம்

••••.

## 87. திருப்பழனம் : திருவிருத்தம்

4991. மேவித்து நின்று விளைந்தன வெந்துயர் துக்கமெல்லாம்
ஆவித்து நின்று கழிந்தன அல்ல லவையறுப்பான்
பாவித்த பாவனை நீயறி வாய்பழ னத்தரசே
கூவித்துக் கொள்ளுந் தனையடி யேனைக் குறிக்கொள்வதே. 1

4992. சுற்றிநின் றார்புறங் காவ லமரர் கடைத்தலையில்
மற்றுநின் றார்திரு மாலொடு நான்முகன் வந்தடிக்கீழ்ப்
பற்றிநின் றார்பழ னத்தர சேயுன் பணியறிவான்
உற்றுநின் றாரடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 2

4993. ஆடிநின் றாயண்ட மேழுங் கடந்துபோய் மேலவையும்
கூடிநின் றாய்குவி மென்முலை யாளையுங் கொண்டுடனே
பாடிநின் றாய்பழ னத்தர சேயங்கொர் பான்மதியம்
சூடிநின் றாயடி யேனையஞ் சாமைக் குறிக்கொள்வதே. 3

4994. எரித்துவிட் டாயம்பி னாற்புர மூன்றுமுன் னேபடவும்
உரித்துவிட் டாயுமை யாள்நடுக் கெய்தவொர் குஞ்சரத்தைப்
பரித்துவிட் டாய்பழ னத்தர சேகங்கை .வார்சடைமேல்
தரித்துவிட் டாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 4

4995. முன்னியு முன்னை முளைத்தன மூஎயி லும்முடனே
மன்னியு மங்கு மிருந்தனை மாய மனத்தவர்கள்
பன்னிய நூலின் பரிசறி வாய்பழ னத்தரசே
உன்னியு முன்னடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 5

4996. ஏய்ந்தறுத் தாயின்ப னாயிருந் தேபடைத் தான்தலையைக்
காய்ந்தறுத் தாய்கண்ணி னாலன்று காமனைக் காலனையும்
பாய்ந்தறுத் தாய்பழ னத்தர சேயென் பழவினைநோய்
ஆய்ந்தறுத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 6

4997. மற்றுவைத் தாயங்கொர் மாலொரு பாகம் மகிழ்ந்துடனே
உற்றுவைத் தாயுமை யாளொடுங் கூடும் பரிசெனவே
பற்றிவைத் தாய்பழ னத்தர சேயங்கொர் பாம்பொருகை
சுற்றிவைத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 7

4998. ஊரினின் றாயொன்றி நின்றுவிண் டாரையு மொள்ளழலால்
போரினின் றாய்பொறை யாயுயி ராவி சுமந்துகொண்டு
பாரினின் றாய்பழ னத்தர சேபணி செய்பவர்கட்
காரநின் றாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 8

4999. போகம்வைத் தாய்புரி புன்சடை மேலொர் புனலதனை
ஆகம்வைத் தாய்மலை யான்மட மங்கை மகிழ்ந்துடனே
பாகம்வைத் தாய்பழ னத்தர சேயுன் பணியருளால்
ஆகம்வைத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 9

5000. அடுத்திருந் தாயரக் கண்முடி வாயொடு தோள்நெரியக்
கெடுத்திருந் தாய்கிளர்ந் தார்வலி யைக்கிளை யோடுடனே
படுத்திருந் தாய்பழ னத்தர சேபுலி யின்னுரிதோல்
உடுத்திருந் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 88. திருப்பூந்துருத்தி : திருவிருத்தம்

5001. மாலினை மாலுற நின்றான் மலைமகள் தன்னுடைய
பாலனைப் பான்மதி சூடியைப் பண்புண ரார்மதின்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத் திம்மகிழும்
ஆலனை யாதிபு ராணனை நானடி போற்றுவதே. 1

5002. மறியுடை யான்மழு வாளினன் மாமலை மங்கையொர்பால்
குறியுடை யான்குண மொன்றறிந் தாரில்லை கூறிலவன்
பொறியுடை வாளர வத்தவன் பூந்துருத் தியுறையும்
அறிவுடை யாதி புராணனை நானடி போற்றுவதே. 2

5003. மறுத்தவர் மும்மதில் மாயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
அறுத்தனை ஆலதன் கீழனை ஆல்விட முண்டதனைப்
பொறுத்தனைப் பூதப் படையனைப் பூந்துருத் தியுறையும்
நிறத்தனை நீல மிடற்றனை யானடி போற்றுவதே. 3

5004. உருவினை யூழி முதல்வனை யோதி நிறைந்துநின்ற
திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந் தேனுடைய
பொருவினை யெல்லாந் துரந்தனைப் பூந்துருத் தியுறையும்
கருவினைக் கண்மூன் றுடையனை யானடி போற்றுவதே. 4

5005. தக்கன்றன் வேள்வி தகர்த்தவன் சார மதுவன்றுகோள்
மிக்கன மும்மதில் வீயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
புக்கனன் பொன்திகழ்ந் தன்னதொர் பூந்துருத் தியுறையும்
நக்கனை நங்கள் பிரான்றனை நானடி போற்றுவதே. 5

5006. அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவிடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. 6

5007. மன்றியும் நின்ற மதிலரை மாய வகைகெடுக்கக்
கன்றியும் நின்று கடுஞ்சிலை வாங்கிக் கனலம்பினால்
பொன்றியும் போகப் புரட்டினன் பூந்துருத் தியுறையும்
அன்றியுஞ் செய்த பிரான்றனை யானடி போற்றுவதே. 7

5008. மின்னிறம் மிக்க இடையுமை நங்கையொர் பால்மகிழ்ந்தான்
என்னிற மென்றம ரர்பெரி யாரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் தியுறையும்
என்னிற வெந்தை பிரான்றனை யானடி போற்றுவதே. 8

5009. அந்தியை நல்ல மதியினை யார்க்கு மறிவரிய
செந்தியை வாட்டுஞ்செம் பொன்னினைச் சென்றடைந் தேனுடைய
புந்தியைப் புக்க அறிவினைப் பூந்துருத் தியுறையும்
நந்தியை நங்கள் பிரான்றனை நானடி போற்றுவதே. 9

5010. பைக்கையும் பாந்தி விழிக்கையும் பாம்பு சடையிடையே
வைக்கையும் வானிழி கங்கையும் மங்கை நடுக்குறவே
மொய்க்கை யரக்கனை யூன்றினன் பூந்துருத் தியுறையும்
மிக்கநல் வேத விகிர்தனை நானடி போற்றுவதே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 89. திருநெய்த்தானம் : திருவிருத்தம்

5011. பாரிடஞ் சாடிய பல்லுயிர் வான்அம ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ் நஞ்சமு தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி கொள்வது நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த் தானத் திருந்தவனே. 1

5012. தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் திருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முக மாகிப் பரந்தொலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி யேற்குரைநீ
ஏந்திள மங்கையு நீயுநெய்த் தானத் திருந்ததுவே. 2

5013. கொன்றடைந் தார்மிக் குமைத்திடுங் கூற்றமொன் னார்மதின்மேல்
சென்றடைந் தாடிப் பொருததுந் தேசமெல் லாமறியும்
குன்றடைந் தாடுங் குளிர்பொழிற் காவிரி யின்கரைமேல்
சென்றடைந் தார்வினை தீர்க்குநெய்த் தானத் திருந்தவனே. 3

5014. கொட்டு முழவர வத்தொடு கோலம் பலஅணிந்து
நட்டம் பலபயின் றாடுவர் நாக மரைக்கசைத்துச்
சிட்டர் திரிபுரந் தீயெழச் செற்ற சிலையுடையான்
இட்ட முமையொடு நின்றநெய்த் தானத் திருந்தவனே. 4

5015. கொய்ம்மலர்க் கொன்றை துழாய்வன்னி மத்தமுங் கூவிளமும்
மெய்ம்மலர் வேய்ந்த விரிசடைக் கற்றைவிண் ணோர்பெருமான்
மைம்மலர் நீல நிறங்கருங் கண்ணியோர் பான்மகிழ்ந்தான்
நின்மல னாடல் நிலயநெய்த் தானத் திருந்தவனே. 5

5016. பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து
கூர்ந்தார் விடையினை யேறிப்பல் பூதப் படைநடுவே
போந்தார் புறவிசை பாடவு மாடவுங் கேட்டருளிச்
சேர்ந்தா ருமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 6

5017. பற்றின பாம்பன் படுத்த புலியுரித் தோலுடையன்
முற்றின மூன்று மதில்களை மூட்டி யெரித்தறுத்தான்
சுற்றிய பூதப் படையினன் சூல மழுவொருமான்
செற்றுநந் தீவினை தீர்க்குநெய்த் தானத் திருந்தவனே. 7

5018. விரித்த சடையினன் விண்ணவர் கோன்விட முண்டகண்டன்
உரித்த கரியுரி மூடியொன் னார்மதில் மூன்றுடனே
எரித்த சிலையின னீடழி யாதென்னை யாண்டுகொண்ட
தரித்த வுமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 8

5019. தூங்கான் துளங்கான் துழாய்கொன்றை துன்னிய செஞ்சடைமேல்
வாங்கா மதியமும் வாளர வுங்கங்கை தான்புனைந்தான்
தேங்கார் திரிபுரந் தீயெழ எய்து தியக்கறுத்து
நீங்கா னுமையவ ளோடுநெய்த் தானத் திருந்தவனே. 9

5020. ஊட்டிநின் றான்பொரு வான்நில மும்மதில் தீயம்பினால்
மாட்டிநின் றானன்றி னார்வெந்து வீழவும் வானவர்க்குக்
காட்டிநின் றான்கத மாக்கங்கை பாயவொர் வார்சடையை
நீட்டிநின் றான்திரு நின்றநெய்த் தானத் திருந்தவனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 90. திருவேதிகுடி : திருவிருத்தம்

5021. கையது காலெரி நாகங் கனல்விடு சூலமது
வெய்யது வேலைநஞ் சுண்ட விரிசடை விண்ணவர்கோன்
செய்யினில் நீல மணங்கம ழுந்திரு வேதிகுடி
ஐயனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 1

5022. கைத்தலை மான்மறி யேந்திய கையன் கனன்மழுவன்
பொய்த்தலை யேந்திநற் பூதி யணிந்து பலிதிரிவான்
செய்த்தலை வாளைகள் பாய்ந்துக ளுந்திரு வேதிகுடி
அத்தனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 2

5023. முன்பின் முதல்வன் முனிவனெம் மேலை வினைகழித்தான்
அன்பின் நிலையி லவுணர் புரம்பொடி யானசெய்யும்
செம்பொனை நன்மலர் மேலவன் சேர்திரு வேதிகுடி
அன்பனை நம்மை யுடையனை நாமடைந் தாடுதுமே. 3

5024. பத்தர்கள் நாளு மறவார் பிறவியை யொன்றறுப்பான்
முத்தர்கள் முன்னம் பணிசெய்து பாரிட முன்னுயர்த்தான்
கொத்தன கொன்றை மணங்கம ழுந்திரு வேதிகுடி
அத்தனை ஆரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 4

5025. ஆனணைந் தேறுங் குறிகுண மாரறி வாரவர்கை
மானணைந் தாடு மதியும் புனலுஞ் சடைமுடியன்
தேனணைந் தாடிய வண்டு பயில்திரு வேதிகுடி
ஆனணைந் தாடும் மழுவனை நாமடைந் தாடுதுமே. 5

5026. எண்ணு மெழுத்துங் குறியு மறிபவர் தாமொழியப்
பண்ணி னிசைமொழி பாடிய வானவர் தாம்பணிவார்
திண்ணென் வினைகளைத் தீர்க்கும் பிரான்திரு வேதிகுடி
நண்ண அரிய அமுதினை நாமடைந் தாடுதுமே. 6

5027. ஊர்ந்த விடையுகந் தேறிய செல்வனை நாமறியோம்
ஆர்ந்த மடமொழி மங்கையொர் பாகம் மகிழ்ந்துடையான்
சேர்ந்த புனற்சடைச் செல்வப் பிரான்திரு வேதிகுடிச்
சார்ந்த வயலணி தண்ணமு தையடைந் தாடுதுமே. 7

5028. எரியும் மழுவின னெண்ணியு மற்றொரு வன்தலையுள்
திரியும் பலியினன் தேயமு நாடுமெல் லாமுடையான்

விரியும் பொழிலணி சேறு திகழ் திரு வேதிகுடி
அரிய அமுதினை யன்பர்க ளோடடைந் தாடுதுமே. 8

5029. மையணி கண்டன் மறைவிரி நாவன் மதித்துகந்த
மெய்யணி நீற்றன் விழுமிய வெண்மழு வாட்படையான்
செய்ய கமல மணங்கம ழுந்திரு வேதிகுடி
ஐயனை யாரா' அமுதினை நாமடைந் தாடுதுமே. 9

5030. வருத்தனை வாளரக் கன்முடி தோளொடு பத்திறுத்த
பொருத்தனைப் பொய்யா அருளனைப் பூதப் படையுடைய
திருத்தனைத் தேவர் பிரான்திரு வேதி குடியுடைய
அருத்தனை யாரா அமுதினை நாமடைந் தாடுதுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திருவையாறு : திருவிருத்தம்

5031. குறுவித்த வாகுற்ற நோய்வினை காட்டிக் குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அறிவித்த வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
செறிவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 1

5032. கூர்வித்த வாகுற்ற நோய்வினை காட்டியுங் கூர்வித்த நோய்
ஊர்வித்த வாவுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
ஆர்வித்த வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
சேர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 2

5033. தாக்கின வாசல மேவினை காட்டியுந் தண்டித்தநோய்
நீக்கின வாநெடு நீரின்நின் றேற நினைந்தருளி
ஆக்கின வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
நோக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 3

5034. தருக்கின நான்தக வின்றியு மோடச் சலமதனால்
நெருக்கின வாநெடு நீரின்நின் றேற நினைந்தருளி
உருக்கின வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
பெருக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே.4

5035. இழிவித்த வாறிட்ட நோய்வினை காட்டி இடர்ப்படுத்துக்
கழிவித்த வாகட்ட நோய்வினை தீர்ப்பான் கலந்தருளி
அழிவித்த வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
தொழுவித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 5

5036. இடைவித்த வாறிட்ட நோய்வினை காட்டி இடர்படுத்து
உடைவித்த வாறுற்ற நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
அடைவித்த வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
தொடர்வித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 6

5037. படக்கின வாபட நின்றுபன் னாளும் படக்கினநோய்
அடக்கின வாறது வன்றியுந் தீவினை பாவமெல்லாம்
அடக்கின வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
தொடக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 7

5038. மறப்பித்த வாவல்லை நோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
இறப்பித்த வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 8

5039. துயக்கின வாதுக்க நோய்வினை காட்டித் துயக்கினநோய்
இயக்கின வாறிட்ட நோய்வினை தீர்ப்பா னிசைந்தருளி
அயக்கின வாறடி யேனைஐ யாற னடிமைக்களே
மயக்கின வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 9

5040. கறுத்துமிட் டார்கண்டங் கங்கை சடைமேற் கரந்தருளி
இறுத்துமிட் டாரிலங் கைக்கிறை தன்னை யிருபதுதோள்
அறுத்துமிட் டாரடி யேனைஐ யாற னடிமைக்களே
பொறுத்துமிட் டார்தொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 92. திருவையாறு : திருவிருத்தம்

5041. சிந்திப் பரியன சிந்திப் பவர்க்குச் சிறந்து செந்தேன்
முந்திப் பொழிவன முத்தி கொடுப்பன மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடுமை யாற னடித்தலமே. 1

5042. இழித்தன ஏழேழ் பிறப்பும் அறுத்தன வென்மனத்தே
பொழித்தன போரெழிற் கூற்றை யுதைத்தன போற்றவர்க்காய்க்
கிழித்தன தக்கன் கிளரொளி வேள்வியைக் கீழமுன்சென்
றழித்தன ஆறங்க மானஐ யாற னடித்தலமே. 2

5043. மணிநிற மொப்பன பொன்னிறம் மன்னின மின்னியல்வாய்
கணிநிற மன்ன கயிலைப் பொருப்பன காதல்செய்யத்
துணிவன சீலத்த ராகித் தொடர்ந்துவி டாததொண்டர்க்
கணியன சேயன தேவர்க்கை யாற னடித்தலமே. 3

5044. இருள்தரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருள்தரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே. 4

5045. எழுவா யிறுவா யிலாதன எங்கள் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்அன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்கஐ யாற னடித்தலமே. 5

5046. துன்பக் கடலிடைத் தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம்மை
இன்பக் கரைமுகந் தேற்றுந் திறத்தன மாற்றயலே
பொன்பட் டொழுகப் பொருந்தொளி செய்யுமப் பொய்பொருந்தா
அன்பர்க் கணியன காண்கஐ யாற னடித்தலமே. 6

5047. களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் நின்றஇப் பத்தரைக் கோதில் செந்தேன்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்கும்ஐ யாற னடித்தலமே. 7

5048. திருத்திக் கருத்தினைச் செவ்வே நிறுத்திச் செறுத்துடலை
வருத்திக் கடிமலர் வாளெடுத் தோச்சி மருங்குசென்று
விருத்திக் குழக்கவல் லோர்கட்கு விண்பட் டிகையிடுமால்
அருத்தித் தருந்தவ ரேத்தும்ஐ யாற னடித்தலமே. 8

5049. பாடும் பறண்டையு மந்தையு மார்ப்பப் பரந்துபல்பேய்
கூடி முழவக் குவிகவிழ் கொட்டக் குறுநரிகள்
நீடுங் குழல்செய்ய வையம் நெளிய நிணப்பிணக்காட்
டாடுந் திருவடி காண்கஐ யாற னடித்தலமே. 9

5050. நின்போ லமரர்கள் நீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியா
என்போ லிகள்பறித் திட்ட இலையு முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளு மையனை யாற னடித்தலமே. 10

5051. மலையான் மடந்தை மனத்தன வானோர் மகுடம் மன்னி
நிலையா யிருப்பன நின்றோர் மதிப்பன நீள் நிலத்துப்
புலையாடு புன்மை தவிர்ப்பன பொன்னுல கம்மளிக்கும்
அலையார் புனற்பொன்னி சூழ்ந்தஐ யாற னடித்தலமே. 11

5052. பொலம்புண்ட ரீகப் புதுமலர் போல்வன போற்றியென்பார்
புலம்பும் பொழுதும் புணர்துணை யாவன பொன்னனையாள்
சிலம்புஞ் செறிபா டகமுஞ் செழுங்கிண் கிணித்திரளும்
அலம்புந் திருவடி காண்கஐ யாற னடித்தலமே. 12

5053. உற்றா ரிலாதார்க் குறுதுணை யாவன ஓதிநன்னூல்
கற்றால் பரவப் பெருமை யுடையன காதல் செய்ய
கிற்பார் தமக்குக் கிளரொளி வானகந் தான்கொடுக்கும்
அற்றார்க் கரும்பொருள் காண்கஐ யாற னடித்தலமே. 13

5054. வானைக் கடந்தண்டத் தப்பால் மதிப்பன மந்திரிப்பார்
ஊனைக் கழித்துய்யக் கொண்டருள் செய்வன வுத்தமர்க்கு
ஞானச் சுடராய் நடுவே யுதிப்பன நங்கையஞ்ச
ஆனை யுரித்தன காண்கஐ யாற னடித்தலமே. 14

5055. மாதிரம் மாநில மாவன வானவர் மாமுகட்டின்
மீதன மென்கழல் வெங்கச்சு வீக்கின வெந்நமனார்
தூதரை யோடத் துரப்பன துன்பறத் தொண்டுபட்டார்க்
காதர மாவன காண்கஐ யாற னடித்தலமே. 15

5056. பேணித் தொழுமவர் பொன்னுல காளப் பிறங்கருளால்
ஏணிப் படிநெறி யிட்டுக் கொடுத்திமை யோர்முடிமேல்
மாணிக்க மொத்து மரகதம் போன்று வயிரம் மன்னி
ஆணிக் கனகமு மொக்குமை யாற னடித்தலமே. 16

5057. ஓதிய ஞானமும் ஞானப் பொருளு மொலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியு மாவன விண்ணுமண்ணும்
சோதியுஞ் செஞ்சுடர் ஞாயிறு மொப்பன தூமதியோ
டாதியு மந்தமு மானஐ யாற னடித்தலமே. 17

5058. சுணங்கு முகத்துத் துணைமுலைப் பாவை சுரும்பொடுவண்
டணங்குங் குழலி யணியார் வளைக்கரங் கூப்பிநின்று
வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும்வண் காந்தளொண்போ
தணங்கும் அரவிந்த மொக்குமை யாற னடித்தலமே. 18

5059. சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னும்
நிழலா வனவென்று நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ காலவ னங்கடந்த
அழலா ரொளியன காண்கஐ யாற னடித்தலமே. 19

5060. வலியான் தலைபத்தும் வாய்விட் டலற வரையடர்த்து
மெலியா வலியுடைக் கூற்றை யுதைத்துவிண் ணோர்கண்முன்னே
பலிசேர் படுகடைப் பார்த்துப்பன் னாளும் பலரிகழ
அலியா நிலைநிற்கு மையனை யாற னடித்தலமே. 20

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. திருக்கண்டியூர் : திருவிருத்தம்

5061. வானவர் தானவர் வைகன் மலர்கொணர்ந் திட்டிறைஞ்சி
தானவர் மால்பிர மன்னறி யாத தகைமையினான்
ஆனவ னாதி புராணனன் றோடிய பன்றியெய்த
கானவ னைக்கண்டி யூரண்ட வாணர் தொழுகின்றதே. 1

5062. வான மதியமும் வாளர வும்புன லோடுசடைத்
தான மிதுவென வைத்துழல் வான்தழல் போலுருவன்
கான மறியொன்று கையுடை யான்கண்டி யூரிருந்த
ஊனமில் வேத முடையனை நாமடி யுள்குவதே. 2

5063. பண்டங் கறுத்ததொர் கையுடை யான்படைத் தான்தலையை
உண்டங் கறுத்ததும் ஊரொடு நாடவை தானறியும்
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டீரண்ட வாணர் தொழுகின்றதே.3

5064. முடியின்முற் றாதொன் றில்லையெல் லாமுடன் தானுடையான்
கொடியுமுற் றவ்விடை யேறியொர் கூற்றொரு பாலுடையான்
கடியமுற் றவ்வினை நோய்களை வான்கண்டி யூரிருந்தான்
அடியுமுற் றார்தொண்ட ரில்லைகண் டீரண்ட வானவரே. 4

5065. பற்றியொ ரானை யுரித்த பிரான்பவ ளத்திரள்போல்
முற்று மணிந்ததொர் நீறுடை யான்முன்ன மேகொடுத்த
கற்றங் குடையவன் தானறி யான்கண்டி யூரிருந்த
குற்றமில் வேத முடையானை யாமண்டர் கூறுவதே. 5

5066. போர்ப்பனை யானை யுரித்த பிரான்பொறி வாயரவம்
சேர்ப்பது வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்
காப்பது காரண மாகக்கொண் டான்கண்டி யூரிருந்த
கூர்ப்புடை யொள்வாள் மழுவனை யாமண்டர் கூறுவதே. 6

5067. அட்டது காலனை யாய்ந்தது வேதமா றங்கமன்று
சுட்டது காமனைக் கண்ணத னாலே தொடர்ந்தெரியக்
கட்டவை மூன்று மெரித்தபி ரான்கண்டி யூரிருந்த
குட்டமுன் வேதப் படையனை யாமண்டர் கூறுவதே. 7

5068. அட்டு மொலிநீ ரணிமதி யும்மல ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யானிண்டை மாலையங்கைக்
கட்டு மரவது தானுடை யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர் கூறுவதே. 8

5069. மாய்ந்தன தீவினை மங்கின நோய்கள் மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்ககில் லாநம்மைச் செற்றநங்கைக்
காய்ந்த பிரான்கண்டி யூரெம்பி ரானங்க மாறினையும்
ஆய்ந்த பிரானல்ல னோஅடி யேனையாட் கொண்டவனே. 9

5070. மண்டி மலையை யெடுத்துமத் தாக்கியவ் வாசுகியைத்
தண்டி யமரர் கடைந்த கடல்விடங் கண்டருளி
உண்ட பிரானஞ் சொளித்தபி ரானஞ்சி யோடிநண்ணக்
கண்ட பிரானல்ல னோகண்டி யூரண்ட வானவனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 94. திருப்பாதிரிப்புலியூர் : திருவிருத்தம்

5071. ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே. 1

5072. பற்றாய் நினைந்திடப் போதுநெஞ் சேயிந்தப் பாரைமுற்றும்
சுற்றா யலைகடல் மூடினுங் கண்டேன் புகல்நமக்கு
உற்றா னுமையவட் கன்பன் திருப்பா திரிப்புலியூர்
முற்றா முளைமதிக் கண்ணியி னான்றன் மொய்கழலே. 2

5073. விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தான் இனிநமக்கிங்
கடையா அவலம் அருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடியா ரடியடி யோங்கட் கரியதுண்டே. 3

5074. மாயமெல் லாமுற்ற விட்டிருள் நீங்க மலைமகட்கே
நேயம் நிலாவ இருந்தா னவன்றன் திருவடிக்கே
தேய மெல்லாநின் றிறைஞ்சுந் திருப்பா திரிப்புலியூர்
மேயநல் லான்மலர்ப் பாதமென் சிந்தையுள் நின்றனவே. 4

5075. வைத்த பொருள்நமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லால்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ அறிவிலாப் பேதைநெஞ்சே. 5

5076. கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றே னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே. 6

5077. எண்ணா தமர ரிரக்கப் பரவையுள் நஞ்சை யுண்டாய்
திண்ணா ரசுரர் திரிபுரந் தீயெழச் செற்றவனே
பண்ணார்ந் தமைந்த பொருள்கள் பயில்பா திரிப்புலியூர்
கண்ணார் நுதலாய் கழல்நங் கருத்தி லுடையனவே. 7

5078. புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 8

5079. மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினு மஞ்சல்நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோந் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே. 9

5080. திருந்தா அமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா அரக்க னுடல்நெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்றுகொள்ளே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. திருவீழிமிழலை : திருவிருத்தம்

5081. வான்சொட்டச் சொட்டநின் றட்டும் வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டுந் திருக்கொன்றை சென்னிவைத்தீர்
மான்பெட்டை நோக்கி மணாளீர் மணிநீர் மிழலையுள்ளீர்
நான்சட்ட வும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. 1

5082. அந்தமு மாதியு மாகிநின் றீரண்ட மெண்திசைக்கும்
பந்தமும் வீடும் பரப்புகின் றீர்பசு வேற்றுகந்தீர்
வெந்தழ லோம்பு மிழலையுள் ளீரென்னைத் தென்திசைக்கே
உந்திடும் போது மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. 2

5083. அலைக்கின்ற நீர்நிலங் காற்றன லம்பர மாகிநின்றீர்
கலைக்கன்று சேருங் கரத்தீர் கலைப்பொரு ளாகிநின்றீர்
விலக்கின்றி நல்கும் மிழலையுள் ளீர்மெய்யிற் கையொடுகால்
குலைக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.3

5084. தீத்தொழி லான்தலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி யஞ்செழுத்தும்
ஓத்தொழிந் தும்மைமறக்கினும் மென்னைக் குறிக்கொண்மினே .4

5085. தோட்பட்ட நாகமுஞ் சூலமுஞ் சுற்றியும் பத்திமையால்
மேற்பட்ட அந்தணர் வீழியு மென்னையும் வேறுடையீர்
நாட்பட்டு வந்து பிறந்தே னிறக்க நமன்தமர்தம்
கோட்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.5

5086. கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீர்பதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயி லுறக்கத்தி லும்மையைவர்
கொண்டியிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.6

5087. தோற்றங்கண் டான்சிர மொன்றுகொண் டீர்தூய வெள்ளெருதொன்
றேற்றங்கொண் டீரெழில் வீழி மிழலை யிருக்கைகொண்டீர்
சீற்றங்கொண் டென்மேற் சிவந்ததொர் பாசத்தால் வீசியவெங்
கூற்றங்கண் டும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.7

5088. சுழிப்பட்ட கங்கையுந் திங்களுஞ் சூடிச்சொக் கம்பயின்றீர்
பழிப்பட்ட பாம்பரைப் பற்றுடை யீர்படர் தீப்பருக
விழிப்பட்ட காமனை விட்டீர் மிழலையுள் ளீர்பிறவிச்
சுழிப்பட்டு நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே. 8

5089. பிள்ளையிற் பட்ட பிறைமுடி யீர்மறை யோதவல்லீர்
வெள்ளையிற் பட்டதொர் நீற்றீர் விரிநீர் மிழலையுள்ளீர்
நள்ளையிற் பட்டைவர் நக்கரைப் பிக்க நமன்தமர்தம்
கொள்ளையிற் பட்டு மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.9

5090. கறுக்கொண் டரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்
நெறுக்கென் றிறச்செற்ற சேவடி யாற்கூற்றை நீறுசெய்தீர்
வெறிக்கொன்றை மாலை முடியீர் விரிநீர் மிழலையுள்ளீர்
இறக்கின்று நும்மை மறக்கினு மென்னைக் குறிக்கொண்மினே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 96. திருச்சத்திமுற்றம் : திருவிருத்தம்

5091. கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 1

5092. காய்ந்தா யனங்க னுடலம் பொடிபடக் காலனைமுன்
பாய்ந்தா யுயிர்செகப் பாதம் பணிவார்தம் பல்பிறவி
ஆய்ந்தாய்ந் தறுப்பா யடியேற் கரளாயுன் னன்பர்சிந்தை
சேர்ந்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 2

5093. பொத்தார் குரம்பை புகுந்தைவர் நாளும் புகலழிப்ப
மத்தார் தயிர்போல் மறுகுமென் சிந்தை மறுக்கொழிவி
அத்தா அடியே னடைக்கலங் கண்டா யமரர்கள்தம்
சித்தா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 3

5094. நில்லாக் குரம்பை நிலையாக் கருதியிந் நீள்நிலத்தொன்
றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டுகொண்டாய்
வில்லேர் புரவத் துமையாள் கணவா விடிற்கெடுவேன்
செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக் கொழுந்தே. 4

5095. கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் கருப்புவியில்
தெருவிற் புகுந்தேன் திகைத்தடி யேன்றன் திகைப்பொழிவி
உருவிற் றிகழு முமையாள் கணவா விடிற்கெடுவேன்
திருவிற் பொலிசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 5

5096. வெம்மை நமன்தமர் மிக்கு விரவி விழுப்பதன்முன்
இம்மையுன் தாளென்றன் நெஞ்சத் தெழுதிவை யீங்கிகழில்
அம்மை யடியேற் கருளுதி யென்பதிங் காரறிவார்
செம்மை தருசத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 6

5097. விட்டார் புரங்க ளொருநொடி வேவவொர் வெங்கணையால்
சுட்டாயென் பாசத் தொடர்பறுத் தாண்டுகொள் தும்பியம்பும்
மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 7

5098. இகழ்ந்தவன் வேள்வி யழித்திட் டிமையோர் பொறையிரப்ப
நிகழ்ந்திட அன்றே விசயமுங் கொண்டது நீலகண்டா
புகழ்ந்த அடியேன்றன் புன்மைகள் தீரப் புரிந்துநல்காய்
திகழ்ந்த திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 8

5099. தக்கார்வ மெய்திச் சமணதவிர்ந் துன்றன் சரண்புகுந்தேன்
எக்காத லெப்பய னுன்றிற மல்லா லெனக்குளதே
மிக்கார் திலையுள் விருப்பா மிகவட மேருவென்னும்
திக்கா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 9

5100. பொறித்தே ரரக்கன் பொருப்பெடுப் புற்றவன் பொன்முடிதோள்
இறத்தா ளொருவிர லூன்றிட் டலற இரங்கியொள்வாள்
குறித்தே கொடுத்தாய் கொடியேன் செய்குற்றக் கொடுவினைநோய்
செறுத்தாய் திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 97. திருநல்லூர் : திருவிருத்தம்

5101. அட்டுமி னில்பலி யென்றென் றகங்கடை தோறும்வந்து
மட்டவி ழுங்குழ லார்வளை கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி யெடுத்திட்ட பாதமுங் கோளரவும்
நட்டநின் றாடிய நாதர்நல் லூரிடங் கொண்டவரே. 1

5102. பெண்ணிட்டம் பண்டைய தன்றிவை பெய்பலிக் கென்றுழல்வார்
நண்ணிட்டு வந்து மனைபுகுந் தாருநல் லூரகத்தே
பண்ணிட்ட பாடல ராடல ராய்ப்பற்றி நோக்கிநின்று
கண்ணிட்டுப் போயிற்றுக் காரண முண்டு கறைக்கண்டரே. 2

5103. படவே ரரவல்குற் பாவைநல் லீர்பக லேயொருவர்
இடுவா ரிடைப்பலி கொள்பவர் போலவந் தில்புகுந்து
நடவா ரடிகள் நடம்பயின் றாடிய கூத்தர்கொலோ
வடபாற் கயிலையுந் தென்பால்நல் லூருந்தம் வாழ்பதியே. 3

5104. செஞ்சுடர்ச் சோதிப் பவளத் திரள்திகழ் முத்தனைய
நஞ்சணி கண்டன்நல் லூருறை நம்பனை நானொருகால்
துஞ்சிடைக் கண்டு கனவின் தலைத்தொழு தேற்கவன்றான்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமும் நின்றனனே. 4

5105. வெண்மதி சூடி விளங்கநின் றானைவிண் ணோர்கள்தொழ
நண்ணில யத்தொடு பாடல றாதநல் லூரகத்தே
திண்ணில யங்கொண்டு நின்றான் திரிபுர மூன்றெரித்தான்
கண்ணுளு நெஞ்சத் தகத்து முளகழற் சேவடியே. 5

5106. தேற்றப் படத்திரு நல்லூ ரகத்தே சிவனிருந்தால்
தோற்றப் படச்சென்று கண்டுகொள் வார்தொண்டர் துன்மதியால்
ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய வாதரைப்போல்
காற்றிற் கடுத்துல கெல்லாந் திரிதர்வர் காண்பதற்கே. 6

5107. நாட்கொண்ட தாமரைப் பூத்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடு மங்கொர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோஇவ் வகலிடமே. 7

5108. அறைமல்கு பைங்கழ லார்ப்பநின் றானணி யார்சடைமேல்
நறைமல்கு கொன்றையந் தாருடை யானுநல் லூரகத்தே
பறைமல்கு பாடல னாடல னாகிப் பரிசழித்தான்
பிறைமல்கு செஞ்சடை தாழநின் றாடிய பிஞ்ஞகனே. 8

5109. மன்னிய மாமறை யோர்மகிழ்ந் தேத்த மருவியெங்கும்
துன்னிய தொண்டர்க ளின்னிசை பாடித் தொழுதுநல்லூர்க்
கன்னியர் தாமுங் கனவிடை யுன்னிய காதலரை
அன்னிய ரற்றவ ரங்கண னேயருள் நல்கென்பரே. 9

5110. திருஅமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொள்நெய்தல்
குருஅமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி
மருஅமர் நீள்கொடி மாட மலிமறை யோர்கள்நல்லூர்
உருஅமர் பாகத் துமையவள் பாகனை யுள்குதுமே. 10

5111. செல்லேர் கொடியன் சிவன்பெருங் கோயில் சிவபுரமும்
வல்லேன் புகவும் மதில்சூ ழிலங்கையர் காவலனைக்
கல்லார் முடியொடு தோளிறச் செற்ற கழலடியான்
நல்லூ ரிருந்த பிரானல்ல னோநம்மை யாள்பவனே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 98. திருவையாறு : திருவிருத்தம்

5112. அந்திவட் டத்திங்கட் கண்ணியன் ஐயா றமர்ந்துவந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 1

5113. பாடகக் கால்கழற் கால்பரி திக்கதி ருக்கவந்தி
நாடகக் கால்நங்கை முன்செங்க ணேனத்தின் பின்நடந்த
காடகக் கால்கணங் கைதொழுங் காலெங்க ணாய்நின்றகால்
ஆடகக் காலரி மான்தேர் வலவன் ஐயாற்றனவே. 2

திருச்சிற்றம்பலம்

*****

## 99. திருவேகம்பம் : திருவிருத்தம்

5114. ஓதுவித் தாய்முன் அறவுரை காட்டி யமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி வாய்கச்சி யேகம்பனே. 1

5115. எத்தைக்கொண் டெத்தகை யேழை யமணொ டிசைவித்தெனைக்
கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டு வித்தென்னைக் கோகுசெய்தாய்
முத்திற் றிரளும் பளிங்கினிற் சோதியும் மொய்பவளத்
தொத்தினை யேய்க்கும் படியாய் பொழிற்கச்சி யேகம்பனே. 2

5116. மெய்யம்பு கோத்த விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
பொய்யம்பெய் தாவ மருளிச்செய் தாய்புர மூன்றெரியக்
கையம்பெய் தாய்நுன் கழலடி போற்றாக் கயவர்நெஞ்சில்
குய்யம்பெய் தாய்கொடி மாமதில் சூழ்கச்சி யேகம்பனே. 3

5117. குறிக்கொண் டிருந்துசெந் தாமரை ஆயிரம் வைகல்வைகல்
நெறிப்பட இண்டை புனைகின்ற மாலை நிறையழிப்பான்
கறைக்கண்ட நீயொரு பூக்குறை வித்துக்கண் சூல்விப்பதே
பிறைத்துண்ட வார்சடை யாய்பெருங் காஞ்சியெம் பிஞ்ஞகனே. 4

5118. உரைக்குங் கழிந்திங் குணர்வரி யானுள்கு வார்வினையைக்
கரைக்கு மெனக்கை தொழுவதல் லாற்கதி ரோர்களெல்லாம்
விரைக்கொண் மலரவன் மாலெண் வசுக்கள்ஏ காதசர்கள்
இரைக்கு மமிர்தர்க் கறியவொண் ணானெங்க ளேகம்பனே. 5

5119. கருவுற்ற நாள்முத லாகவுன் பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமும் நானுங் கிடந்தலந் தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங் காய்கச்சி யேகம்பனே. 6

5120. அரிஅய னிந்திரன் சந்திரா தித்தர் அமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலை யாருணங் காக்கிடந்தார்
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்
எரிதரு செஞ்சடை யேகம்ப என்னோ திருக்குறிப்பே. 7

5121. பாம்பரைச் சேர்த்திப் படருஞ் சடைமுடிப் பால்வண்ணனே
கூம்பலைச் செய்த கரதலத் தன்பர்கள் கூடிப்பன்னாள்
சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்சரணென்
றேம்பலிப் பார்கட் கிரங்குகண் டாய்கச்சி யேகம்பனே. 8

5122. ஏன்றுகொண் டாயென்னை யெம்பெரு மானினி யல்லமென்னில்
சான்றுகண் டாயிவ் வுலகமெல் லாந்தனி யேனென்றென்னை
ஊன்றிநின் றாரைவர்க் கொற்றிவைத் தாய்பின்னை யொற்றியெல்லாம்
சோன்றுகொண் டாய்கச்சி யேகம்ப மேய சுடர்வண்ணனே. 9

5123. உந்திநின் றாருன்ற னோலக்கச் சூளைகள் வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின் றாரய னுந்திரு மாலும் மதிற்கச்சியாய்
இந்தநின் றோமினி யெங்ஙன மோவந் திறைஞ்சுவதே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 100. திருவின்னம்பர் : திருவிருத்தம்

5124. மன்னும் மலைமகள் கையால் வருடின மாமறைகள்
சொன்ன துறைதொறுந் தூப்பொரு ளாயின தூக்கமலத்
தன்ன வடிவின அன்புடைத் தொண்டர்க் கமுதரும்பி
இன்னல் களைவன இன்னம்ப ரான்ற னிணையடியே. 1

5125. பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம்பங் கப்படுப்பான்
செய்தற் கரிய திருநடஞ் செய்தன சீர்மறையோன்
உய்தற் பொருட்டு வெங்கூற்றை யுதைத்தன உம்பர்க்கெல்லாம்
எய்தற் கரியன இன்னம்ப ரான்ற னிணையடியே. 2

5126. சுணங்குநின் றார்கொங்கை யாளுமை சூடின தூமலரால்
வணங்கிநின் றும்பர்கள் வாழ்த்தின மன்னு மறைகள்தம்மில்
பிணங்கிநின் றின்னன என்றறி யாதன பேய்க்கணத்தோ
டிணங்கிநின் றாடின இன்னம்ப ரான்ற னிணையடியே. 3

5127. ஆறொன் றியசம யங்களி னவ்வவர்க் கப்பொருள்கள்
வேறொன் றிலாதன விண்ணோர் மதிப்பன மிக்குவமன்
மாறொன் றிலாதன மண்ணொடு விண்ணகம் மாய்ந்திடினும்
ஈறொன் றிலாதன இன்னம்ப ரான்ற னிணையடியே. 4

5128. அரக்கர்தம் முப்புர மம்பொன்றி னாலட லங்கியின்வாய்க்
கரக்கமுன் வைதிகத் தேர்மிசை நின்றன கட்டுருவம்
பரக்கவெங் கானிடை வேடுரு வாயின பல்பதிதோ
றிரக்க நடந்தன இன்னம்ப ரான்ற ளிணையடியே. 5

5129. கீண்டுங் கிளர்ந்தும்பொற் கேழல்முன் தேடின கேடுபடா
ஆண்டும் பலபல வூழியு மாயின ஆரணத்தின்
வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின மேவுசிலம்
பீண்டுங் கழலின இன்னம்ப ரான்ற ளிணையடியே. 6

5130. போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப்புன்மை
ஆற்றுந் தகையன ஆறு சமயத் தவரவரைத்
தேற்றுந் தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றுந் தகையன இன்னம்ப ரான்ற ளிணையடியே. 7

5131. பயம்புன்மை சேர்தரு பாவந் தவிர்ப்பன பார்ப்பதிதன்
குயம்பொன்மை மாமல ராகக் குலாவின கூடவொண்ணாச்
சயம்புவென் றேதகு தாணுவென் றேசதுர் வேதங்கள்நின்
றியம்புங் கழலின இன்னம்ப ரான்ற ளிணையடியே. 8

5132. அயன்நெடு மாலிந்திரன் சந்திரா தித்த ரமரரெல்லாம்
சயசய வென்றுமுப் போதும் பணிவன தண்கடல்சூழ்
வியன்நில முற்றுக்கும் விண்ணுக்கு நாகர் வியன்நகர்க்கும்
இயபர மாவன இன்னம்ப ரான்ற ளிணையடியே 9

5133. தருக்கிய தக்கன்றன் வேள்வி தகர்த்தன தாமரைப்போ
துருக்கிய செம்பொன் உவம னிலாதன வொண்கயிலை
நெருக்கிய வாளரக் கன்தலை பத்து நெரித்தவன்றன்
இருக்கியல் பாயின இன்னம்ப ரான்ற ளிணையடியே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 101. திருவாரூர் : திருவிருத்தம்

5134. குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன லாரு ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்திரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.1

5135. மற்றிட மின்றி மனைதுறந் தல்லுணா வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட் டேனுக்கு முண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ டன்றொரு வேடுவனாய்ப்
புற்றிடங் கொண்டான்றன் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.2

5136. ஒருவடி வின்றிநின் றுண்குண்டர் முன்நமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புர மட்டவன் சென்றடையாத்
திருவுடை யான்திரு வாரூர்த் திருமூலட் டானன்செங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.3

5137. மாசினை யேறிய மேனியர் வன்கண்ணர் மொண்ணரைவிட்
டீசனை யேநினைந் தேசறு வேனுக்கு முண்டுகொலோ
தேசனை யாரூர்த் திருமூலட் டானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுரர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 4

5138. அருந்தும் பொழுதுரை யாடா அமணர் திறமகன்று
வருந்தி நினைந்தர னேயென்று வாழ்த்துவேற் குண்டுகொலோ
திருந்திய மாமதி லாரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 5

5139. வீங்கிய தோள்களுந் தாள்களு மாய்நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன் னேநமக் குண்டுகொலோ
தேங்கமழ் சோலைத் தென்னாரூர்த் திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 6

5140. பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள் பெற்றேற்கு முண்டுகொலோ
திண்ணிய மாமதி லாரூர்த் திருமூலட் டானனெங்கள்
புண்ணியன் தன்னடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. 7

5141. கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக் கச்சுக மென்னுங்குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
திருப்பொலி யாரூர்த் திருமூலட் டானன் திருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.8

5142. கையி லிடுசோறு நின்றுண்ணுங் காத லமணரைவிட்
டுய்யு நெறிகண்டிங் குய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
ஐய னணிவய லாரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாஅடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.9

5143. குற்ற முடைய அமணர் திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
மற்பொலி தோளா னிராவணன் தன்வலி வாட்டுவித்த
பொற்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 102. திருவாரூர் : திருவிருத்தம்

5144. வேம்பினைப் பேசி விடக்கினை ஓம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர்தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கை யாரூ ரமர்ந்தா னடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே.1

5145. ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாத னடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே. 2

5146. பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலு மாரூ ரினிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுதுய் மடநெஞ்சமே. 3

5147. துடிக்கின்ற பாம்பரை ஆர்த்துத் துளங்கா மதியணிந்து
முடித்தொண்ட ராகி முனிவர் பணிசெய்வ தேயுமன்றிப்
பொடிக்கொண்டு பூசிப் புகுந்தொண்டர் பாதம் பொறுத்தபொற்பால்
அடித்தொண்டர் நந்தியென் பானுள னாரூ ரமுதினுக்கே. 4

5148. கரும்பு பிடித்தவர் காயப்பட் டாரங்கோர் கோடலியால்
இரும்பு பிடித்தவ ரின்புறப் பட்டா ரிவர்கள்நிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழணி யாரூ ரமர்ந்தபெம்மான்
விரும்பு மனத்தினை யாதொன்று நானுன்னை வேண்டுவனே.5

5149. கொடிகொள் விதானங் கவரி பறைசங்கங் கைவிளக்கோ
டிடிவில் பெருஞ்செல்வ மெய்துவ ரெய்தியு மூனமில்லா
அடிகளு மாரூ ரகத்தின ராயினு மம்தவளப்
பொடிகொண் டணிவார்க் கிருளொக்கு நந்தி புறப்படிலே.6—9

5150. சங்கொலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலில்
குங்குலி யப்புகைக் கூட்டென்றுங் காட்டி யிருபதுதோள்
அங்குலம் வைத்தவன் செங்குரு திப்புன லோடஅஞ்ஞான்
றங்குலி வைத்தா னடித்தா மரையென்னை யாண்டனவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 103. திருநாகைக் காரோணம் : திருவிருத்தம்

5151. வடிவுடை மாமலை மங்கைபங் காகங்கை வார்சடையாய்
கடிகமழ் சோலை சுலவு கடல்நாகைக் காரோணனே
பிடிமத வாரணம் பேணுந் துரகநிற் கப்பெரிய
இடிகுரல் வெள்ளெரு தேறுமி தென்னைகொ லெம்மிறையே.1

5152. கற்றார் பயில்கடல் நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
வில்தாங் கியகரம் வேல்நெடுங் கண்ணி வியன்கரமேல்
நற்றாள் நெடுஞ்சிலை நாண்வலித் தகர நின்கரமே
செற்றார் புரஞ்செற்ற சேவக மென்னைகொல் செப்புமினே. 2

5153. தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழில்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக் காரோணநின்
நாமம் பரவி நமச்சிவா யவென்னு மஞ்செழுத்தும்
சாமன் றுரைக்கத் தருதிகண்டா யெங்கள் சங்கரனே. 3

5154. பழிவழி யோடிய பாவிப் பறிதலைக் குண்டர்தங்கள்
மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்
கழிவழி யோத முலவு கடல்நாகைக் காரோணவென்
வழிவழி யாளாகும் வண்ண மருளெங்கள் வானவனே. 4

5155. செந்துவர் வாய்க்கருங் கண்ணினை வெண்ணகைத் தேன்மொழியார்
வந்த வலஞ்செய்து மாநட மாட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கடல் நாகைக்கா ரோணமென்றும்
சிந்தைசெய் வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே. 5

5156. பனைபுரை கைம்மத யானை யுரித்த பரஞ்சுடரே
கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
மனைதுறந் தல்லுணா வல்லமண் குண்டர் மயக்கநீக்கி
எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினி யான்செயு மிச்சைகளே. 6

5157. சீர்மலி செல்வம் பெரிதுடை யசெம்பொன் மாமலையே
காா்மலி சோலை சுலவு கடல்நாகைக் காரோணனே
வாா்மலி மென்முலை யாா்பலி வந்திடச் சென்றிரந்து
ஊா்மலி பிச்சைகொண் டுண்பது மாதிமை யோவுரையே. 7

5158. வங்க மலிகடல் நாகைக்கா ரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானொர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கை சடையுட் கரந்தாயக் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற்பொல் லாதுகண் டாயெங்கள் நாயகனே. 8,9

5159. கருந்தடங் கண்ணியுந் தானுங் கடல்நாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்த தேமற்றுச் செய்தில னெம்மிறையே. 10

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 104. திருவதிகை : திருவிருத்தம்

5160. மாசிலொள் வாள்போன் மறியு மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசலை யாடியங் கொண்சிறை யன்ன முறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய வண்டுபண் பாடல்கண்டு
வீசுங் கெடில வடகரைத் தேயெந்தை வீரட்டமே. 1

5161. பைங்கால் தவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமே லாவி யுயிர்ப்ப அருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீர னருள்வைத்த வீரட்டமே. 2

5162. அம்மலர்க் கண்ணிய ரஞ்சனஞ் செந்துவர் வாயிளையார்
வெம்முலைச் சாந்தம் விலைபெறு மாலை யெடுத்தவர்கள்
தம்மருங் குற்கிரங் கார்தடந் தோள்மெலி யக்குடைவார்
விம்மு புனற்கெடி லக்கரைத் தேயெந்தை வீரட்டமே. 3

5163. மீனுடைத் தண்புனல் வீரட்ட ரேநும்மை வேண்டுகின்ற
யானுடைச் சில்குறை யொன்றுள தால்நறுந் தண்ணெருக்கின்
தேனுடைக் கொன்றைச் சடையுடைக் கங்கைத் திரைதவழும்
கூனுடைத் திங்கட் குழவியெப் போதுங் குறிக்கொண்மினே. 4

5164. ஆரட்ட தேனும் இரந்துண் டகமக வன்றிரிந்து
வேரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி நீர்ப்பரவைச்
சூரட்ட வேலவன் தாதையைச் சூழ்வய லாரதிகை
வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ வேதனையே. 5

5165. படர்பொற் சடையும் பகுவா யரவும் பனிமதியும்
சுடலைப் பொடியுமெல் லாமுள வேயவர் தூயதெண்ணீர்க்
கெடிலக் கரைத்திரு வீரட்ட ராவர்கெட் டேனடைந்தார்
நடலைக்கு நற்றுணை யாகுங்கண் டீரவர் நாமங்களே. 6

5166. காளங் கடந்ததொர் கண்டத்த ராகிக் கண்ணார்கெடில
நாளங் கடிக்கொர் நகரமு மாதிற்கு நன்கிசைந்த
தாளங்கள் கொண்டுங் குழல்கொண்டு மியாழ்கொண்டுந்
தாமங்களே
வேடங்கள் கொண்டும் விசும்புசெல் வாரவர் வீரட்டரே. 7—10

திருச்சிற்றம்பலம்

*****

## 105. திருப்புகலூர் : திருவிருத்தம்

5167. தன்னைச் சரணென்று தாளடைந் தேன்தன் அடியடையப்
புன்னைப் பொழில்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே. 1

5168. பொன்னை வகுத்தன்ன மேனிய னேபுணர் மென்முலையாள்
தன்னை வகுத்தன்ன பாகத்த னேதமி யேற்கிரங்காய்
புன்னை மலர்த்தலை வண்டுறங் கும்புக லூரரசே
என்னை வகுத்திலை யேலிடும் பைக்கிடம் யாதுசொல்லே. 2,3

5169. பொன்னள வார்சடைக் கொன்றையி னாய்புக லூரரசே
மன்னுள தேவர்கள் தேடு மருந்தே வலஞ்சுழியாய்
என்னள வேயுனக் காட்பட் டிடைக்கலத் தேகிடப்பார்
உன்னள வேயெனக் கொன்றுமி ரங்காத வுத்தமனே. 4—9

5170. ஓணப் பிரானு மொளிர்மா மலர்மிசை யுத்தமனும்
காணப் பராவியுங் காண்கின் றிலர்கர நாலைந்துடைத்
தோணப் பிரானை வலிதொலைத் தோன்தொல்லை நீர்புகலூர்க்
கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே. 10

திருச்சிற்றம்பலம்

## 106. திருக்கழிப்பாலை

5171. நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி நெருங்கிச்சென்று
கைதை மடல்புல்கு தென்கழிப் பாலை யதனுறைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன் வைத்த பரிசறியோம்
எய்தப் பெறினிரங் காதுகண் டாய்நம் மிறையவனே. 1

5172. பருமா மணியும் பவளமுத் தும்பரந் துந்திவரை
பொருமால் கரைமேற் றிரைகொணர்ந் தெற்றப் பொலிந்திலங்கும்
கருமா மிடறுடைக் கண்டனெம் மான்கழிப் பாலையெந்தை
பெருமா னவனென்னை யாளுடை யானிப் பெருநிலத்தே. 2

5173. நாட்பட் டிருந்தின்ப மெய்தலுற் றிங்கு நமன்றமரால்
கோட்பட் டொழிவதன் முந்துற வேகுளி ரார்தடத்துத்
தாட்பட்ட தாமரைப் பொய்கையந் தண்கழிப் பாலையண்ணற்
காட்பட் டொழிந்தமன் றேவல்ல மாயிவ் வகலிடத்தே. 3

திருச்சிற்றம்பலம்

*****

## 107. திருக்கடவூர் வீரட்டம் : திருவிருத்தம்

5174. மருள்துயர் தீரஅன் றர்ச்சித்த மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலுங்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம் பதைப்ப வுதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 1

5175. பதத்தெழு மந்திர மஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணித னின்னுயி ருண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு திப்புன லாறொழுக
உதைத்தெழு சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 2

5176. கரப்புறு சிந்தையர் காண்டற் கரியவன் காமனையும்
நெருப்புமிழ் கண்ணினன் நீள்புனற் கங்கையும் பொங்கரவும்
பரப்பிய செஞ்சடைப் பால்வண்ணன் காலனைப் பண்டொருகால்
உரப்பிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 3

5177. மறித்திகழ் கையினன் வானவர் கோனை மனமகிழ்ந்து
குறித்தெழு மாணித னாருயிர் கொள்வான் கொதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உறுக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 4

5178. குழைத்திகழ் காதினன் வானவர் கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமொ டர்ச்சித்த மாணித னாருயிர் கொள்ளவந்த
தழற்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் தானலற
உழக்கிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 5

5179. பாலனுக் காயன்று பாற்கட லீந்து பணைத்தெழுந்த
ஆலினிற் கீழிருந் தாரணம் ஓதி யருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த
காலனைக் காய்ந்த பிரான்கட வூருறை யுத்தமனே. 6

5180. படர்சடைக் கொன்றையும் பன்னக மாலை பணிகயிறா
உடைதலை கோத்துழல் மேனிய னுண்பலிக் கென்றுழல்வோன்
சுடர்பொதி மூவிலை வேலுடைக் காலனைத் துண்டமதா
உடறிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 7

5181. வெண்தலை மாலையுங் கங்கை கரோடி விரிசடைமேல்
பெண்தனி நாயகன் பேயுகந் தாடும் பெருந்தகையான்
கண்தனி நெற்றியன் காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட வூருறை யுத்தமனே. 8

5182. கேழல தாகிக் கிளறிய கேசவன் காண்பரிதாய்
வாழிநன் மாமலர்க் கண்ணிடந் திட்டஅம் மாலவற்கன்
றாழியு மீந்து அடுதிறற் காலனை யன்றடர்த்து
ஊழியு மாய பிரான்கட வூருறை யுத்தமனே. 9

5183. தேன்திகழ் கொன்றையுங் கூவிள மாலை திருமுடிமேல்
ஆன்திக ழைந்துகந் தாடும் பிரான்மலை யார்த்தெடுத்த
கூன்திகழ் வாளரக் கன்முடி பத்துங் குலைந்தவிழ
ஊன்றிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 108. திருமாற்பேறு : திருவிருத்தம்

5184. மாணிக் குயிர்பெறக் கூற்றை யுதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற் கரியன கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப் படுவன பேர்த்துமஃதே
மாணிக்க மாவன மாற்பே றுடையான் மலரடியே. 1

5185. கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண் டிருப்பன கோலமல்கும்
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே றுடையான் மலரடியே. 2

திருச்சிற்றம்பலம்

•••••

## 109. திருத்தூங்கானைமாடம் : திருவிருத்தம்

5186. பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேவிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே. 1

5187. ஆவா சிறுதொண்ட னென்நினைந் தானென் றரும்பிணிநோய்
காவா தொழியிற் கலக்குமுன் மேற்பழி காதல்செய்வார்
தேவா திருவடி நீறென்னைப் பூசுசெந் தாமரையின்
பூவார் கடந்தையுள் தூங்கானை மாடத்தெம் புண்ணியனே. 2—9

5188. கடவுந் திகிரி கடவா தொழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிர லொன்றுவைத் தாய்பனி மால்வரைபோல்
இடபம் பொறித்தென்னை யேன்றுகொள் ளாயிருஞ் சோலைதிங்கள்
தடவுங் கடந்தையுள் தூங்கானை மாடத்தெந் தத்துவனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 110. பசுபதி : திருவிருத்தம்

5189. சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்பரவி
ஏம்பலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங் கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்புண் வனமுலைமேல்
பாம்பலைக் குஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே. 1

5190. உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த உத்தமர்கள்
இடும்பைப் படாம லிரங்குகண் டாயிரு ளோடச்செந்தீ
அடும்பொத் தனைய அழன்மழு வாவழ லேயுமிழும்
படம்பொத் தரவரை யாயெம்மை யாளும் பசுபதியே. 2

5191. தாரித் திரந்த விராவடி யார்தடு மாற்றமென்னும்
மூரித் திரைப்பௌவ நீக்குகண் டாய்முன்னை நாளொருகால்
வேரித்தண் பூஞ்சுட ரைங்கணை வேள்வெந்து வீழச்செந்திப்
பாரித்த கண்ணுடை யாயெம்மை யாளும் பசுபதியே. 3

5192. ஒருவரைத் தஞ்சமென் றெண்ணா துன்பாத மிறைஞ்சுகின்றார்
அருவினைச் சுற்ற மகல்விகண் டாயண்ட மேயணவும்
பெருவரைக் குன்றம் பிளிறப் பிளந்துவேய்த் தோளியஞ்சப்
பருவரைத் தோலுரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 4

5193. இடுக்கொன்று மின்றி யெஞ்சாமை யுன்பாத மிறைஞ்சுகின்றார்க்
கடர்க்கின்ற நோயை விலக்குகண் டாயண்ட மெண்டிசையும்
சுடர்த்திங்கள் சூடிச் சுழல்கங்கை யோடுஞ் சுரும்புதுன்றிப்
படர்க்கொண்ட செஞ்சடை யாயெம்மை யாளும் பசுபதியே.5

5194. அடலைக் கடல்வழி வான்நின் னடியிணை யேயடைந்தார்
நடலைப் படாமை விலக்குகண் டாய்நறுங் கொன்றைதிங்கள்
சுடலைப் பொடிச்சுண்ண மாசுணஞ் சூளா மணிகிடந்து
படரச் சுடர்மகு டாவெம்மை யாளும் பசுபதியே. 6

5195. துறவித் தொழிலே புரிந்துன் சுரும்படி யேதொழுவார்
மறவித் தொழிலது மாற்றுகண் டாய்மதில் மூன்றுடைய
அறவைத் தொழில்புரிந் தந்தரத் தேசெல்லும் மந்திரத்தேர்ப்
பறவைப் புரமெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 7—9

5196. சித்தத் துருகிச் சிவனெம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்
மத்தத் தரக்க னிருபது தோளும் முடியுமெல்லாம்
பத்துற் றுறநெரித் தாயெம்மை யாளும் பசுபதியே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 111. சரக்கறை : திருவிருத்தம்

5197. விடையும் விடைப்பெரும் பாகாவென் விண்ணப்பம் வெம்மழுவாள்
படையும் படையாய் நிரைத்தபல் பூதமும் பாய்புலித்தோல்
உடையும் முடைதலை மாலையும் மாலைப் பிறையொதுங்கும்
சடையு மிருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 1

5198. விஞ்சத் தடவரை வெற்பாவென் விண்ணப்பம் மேலிலங்கு
சங்கக் கலனுஞ் சரிகோ வணமுந் தமருகமும்
அந்திப் பிறையு மனல்வா யரவும் விரவியெல்லாம்
சந்தித் திருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 2

5199. வீந்தார் தலைகல னேந்தியென் விண்ணப்பம் மேலிலங்கு
சாந்தாய வெந்த தவளவெண் நீறுந் தகுணிச்சமும்
பூந்தா மரைமேனிப் புள்ளி யுழைமா னதள்புலித்தோல்
தாந்தா மிருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 3

5200. வெஞ்சமர் வேழத் துரியாயென் விண்ணப்பம் மேலிலங்கு
வஞ்சமா வந்த வருபுனற் கங்கையும் வான்மதியும்
நஞ்சமா நாகம் நகுசிர மாலை நகுவெண் தலை
தஞ்சமா வாழுஞ் சரக்கரை யோவென் தனிநெஞ்சமே. 4

5201. வேலைக் கடல்நஞ்ச முண்டாயென் விண்ணப்பம் மேலிலங்கு
காலற் கடந்தா னிடங்கயி லாயமுங் காமர்கொன்றை
மாலைப் பிறையும் மணிவா யரவும் விரவியெல்லாம்
சாலக் கிடக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 5

5202. வீழிட்ட கொன்றையந் தாராயென் விண்ணப்பம் மேலிலங்கு
சூழிட் டிருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
ஏழிட் டிருக்குநல் லக்கு மரவுமென் பாமையோடும்
தாழிட் டிருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 6

5203. விண்டார் புரமூன்று மெய்தாயென் விண்ணப்பம் மேலிலங்கு
தொண்டா டியதொண் டடிப்பொடி நீறுந் தொழுதுபாதம்
கண்டார்கள் கண்டிருக் குங்கயி லாயமுங் காமர்கொன்றைத்
தண்தா ரிருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 7

5204. விடுபட்டி ஏறுகந் தேறீயென் விண்ணப்பம் மேலிலங்கு
கொடுகொட்டி கொக்கரை தக்கை குழல்தாளம் வீணைமொந்தை
வடுவிட்ட கொன்றையும் வன்னியும் மத்தமும் வாளரவும்
தடுகுட்ட மாடுஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 8

5205. வெண்டிரைக் கங்கை விகிர்தாவென் விண்ணப்பம் மேலிலங்கு
கண்டிகை பூண்டு கடிசூத் திரமேற் கபாலவடம்
குண்டிகை கொக்கரை கோணற் பிறைகுறட் பூதப்படை
தண்டிவைத் திட்ட சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 9

5206. வேதித்த வெம்மழு வாளீயென் விண்ணப்பம் மேலிலங்கு
சோதித் திருக்குநற் சூளா மணியுஞ் சுடலைநீறும்
பாதிப பிறையும் படுதலைத் துண்டமும் பாய்புலித்தோல்
சாதித் திருக்குஞ் சரக்கறை யோவென் தனிநெஞ்சமே. 10

5207. விவந்தா டியகழ லெந்தாயென் விண்ணப்பம் மேலிலங்கு
தவந்தா னெடுக்கத்தலைபத் திறுத்தனை தாழ்புலித்தோல்
சிவந்தா டியபொடி நீறுஞ் சிரமாலை சூடிநின்று
தவந்தா னிருக்குஞ் சரக்கரை யோவென் தனிநெஞ்சமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 112. தனி : திருவிருத்தம்

5208. வெள்ளிக் குழைத்துணி போலுங்
கபாலத்தன் வீழ்ந்திலங்கு
வெள்ளிப் புரியன்ன வெண்புரி
நூலன் விரிசடைமேல்
வெள்ளித் தகடன்ன வெண்பிறை
சூடிவெள் ளென்பணிந்து
வெள்ளிப் பொடிப்பவ ளப்புறம்
பூசிய வேதியனே. 1

5209. உடலைத் துறந்துல கேழுங்
கடந்துல வாததுன்பக்
கடலைக் கடந்துய்யப் போயிட
லாகுங் கனகவண்ணப்
படலைச் சடைப்பர வைத்திரைக்
கங்கைப் பனிப்பிறைவெண்
சுடலைப் பொடிக்கட வுட்கடி
மைக்கண் துணிநெஞ்சமே. 2

5210. முன்னே யுரைத்தால் முகமனே
யொக்குமிம் மூவுலகுக்
கன்னையு மத்தனு மாவா
யழல்வணா நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென்
னாளி கழிந்ததற்பின்

என்னை மறக்கப் பெறாயெம்
பிரானுன்னை வேண்டியதே. 3

5211. நின்னையெப் போது நினையலொட்
டாய்நீ நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப்
பேர்த்தொன்று நாடுவித்தி
உன்னையெப் போதும் மறந்திட்
டுனக்கினி தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு
வாழி யிறையவனே. 4

5212. முழுத்தழல் மேனித் தவளப்
பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள்
பிரானை யிகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு
வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மால்தொழு
விக்குந்தன் தொண்டரையே. 5

5213. விண்ணகத் தான்மிக்க வேதத்
துளான்விரி நீருடுத்த
மண்ணகத் தான்திரு மாலகத்
தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத்து
ளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத் தான்சென்னி
யானெங் கறைக்கண்டனே. 6

5214. பெருங்கடல் மூடிப் பிரளயங்
கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கும்
இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங்
கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை
நல்வீணை வாசிக்குமே. 7

5215. வானந் துளங்கிலென் மண்கம்ப
மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு
மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர்
வீழிலென் வேலைநஞ்சுண்
டுனமொன் றில்லா ஒருவனுக்
காட்பட்ட உத்தமர்க்கே. 8

5216. சிவனெனும் நாமந் தனக்கே
யுடையசெம் மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு
மாகி லவன்தனையான்
பவனெனு நாமம் பிடித்துத்
திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி
யானென் றெதிர்ப்படுமே. 9

5217. என்னையொப் பாருன்னை யெங்ஙனங்
காண்ப ரிகலியுன்னை
நின்னையொப் பார்நின்னைக் காணும்
படித்தன்று நின்பெருமை
பொன்னையொப் பாரித் தழலை
வளாவிச்செம் மானஞ்செற்று
மின்னையொப் பார மிளிருஞ்
சடைக்கற்றை வேதியனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 113. தனி : திருவிருத்தம்

5218. பவளத் தடவரை போலுந்திண் தோள்களத் தோள்மிசையே
பவளக் குழைதழைத் தாலொக்கும் பல்சடை அச்சடைமேல்
பவளக் கொழுந்தன்ன பைம்முக நாகமந் நாகத்தொடும்
பவளக்கண் வால மதியெந்தை சூடும் பனிமலரே. 1

5219. முருகார் நறுமல ரிண்டை தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைசடைக் கற்றையி னாய்பிணி மேய்ந்திருந்த

இருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் திருவடிக் கீழொர் தலைமறைவே. 2

5220.மூவா வுருவத்து மூக்கண் முதல்வமீக் கூரிடும்பை
காவா யெனக்கடை தூங்கு மணியைக் கையாலமரர்
நாவா யசைத்த வொலியொலி மாறிய தில்லையப்பால்
தீயா யெரிந்து பொடியாய்க் கழிந்த திரிபுரமே. 3

5221.பந்தித்த பாவங்க ளம்மையிற் செய்தன இம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென் னேவந் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடிதாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற ஆட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே. 4

5222.அந்திவட் டத்திளங் கண்ணியன் ஆறமர் செஞ்சடையான்
புந்திவட் டத்திடைப் புக்குநின் றானையும் பொய்யென்பனோ
சந்திவட் டச்சடைக் கற்றை யலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே. 5

5223.உன்மத் தகமலர் சூடி யுலகந் தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும் பலிதிரிவான்
என்மத் தகத்தே யிரவும் பகலும் பிரிவரியான்
தன்மத் தகத்தொ ரிளம்பிறை சூடிய சங்கரனே. 6

5224.அரைப்பா லுடுப்பன கோவணச் சின்னங்கள் ஐயமுணல்
வரைப்பா வையைக்கொண்ட தெக்குடி வாழ்க்கைக்கு வானிரைக்கும்
இரைப்பா படுதலை யேந்துகை யாமறை தேடுமெந்தாய்
உரைப்பா ருரைப்பன வேசெய்தி யாலெங்க ளுத்தமனே. 7

5225.துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப்பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோவென் றென்னுள்ளங் கிடந்து மறுகிடுமே. 8

5226.வேரி வளாய விரைமலர்க் கொன்றை புனைந்தனகன்
சேரி வளாயவென் சிந்தை புகுந்தான் திருமுடிமேல்
வாரி வளாய வருபுனற் கங்கை சடைமறிவாய்
ஏரி வளாவிக் கிடந்தது போலு மிளம்பிறையே. 9

5227.கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கடல் நீர்சுருங்கிப்
பன்னெடுங் காலம் மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டென்
றென்னொடுஞ் சூளறும் அஞ்சல்நெஞ் சேயிமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீரிப் புகலிடத்தே.10

5228.மேலு மறிந்திலன் நான்முகன் மேற்சென்று கீழிடந்து
மாலு மறிந்திலன் மாலுற்ற தேவழி பாடுசெய்யும்
பாலன் மிசைச்சென்று பாசம் விசிறி மறிந்தசிந்தைக்
கால னறிந்தா னறிதற் கரியான் கழலடியே. 11

**திருச்சிற்றம்பலம்**

ஃஃஃஃ

## நான்காம் திருமுறை முற்றிற்று

# ஐந்தாம் திருமுறை

## 1. கோயில் – திருக்குறுந்தொகை

5229.அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே. 1

5230.அரும்பற் றப்பட ஆய்மலர் கொண்டுநீர்
சுரும்பற் றப்படத் தூவித் தொழுமினோ
கரும்பற் றச்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பெரும்பற் றப்புலி யூரெம் பிரானையே. 2

5231. அரிச்சுற் றவினை யாலடர்ப் புண்டுநீர்
எரிச்சுற் றக்கிடந் தாரென் றயலவர்
சிரிச்சுற் றுப்பல பேசப்ப டாமுனம்
திருச்சிற் றம்பலஞ் சென்றடைந் துய்ம்மினே. 3

5232.அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. 4

5233.ஊனில் ஆவி யுயிர்க்கும் பொழுதெலாம்
நான் நிலாவி யிருப்பனென் னாதனைத்
தேன் நிலாவிய சிற்றம் பலவனார்
வான்நி லாவி யிருக்கவும் வைப்பரே. 5

5234.சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. 6

5235.ஒருத்த னார்உல கங்கட் கொருசுடர்
திருத்த னார்தில்லை சிற்றம் பலவனார்
விருத்த னாரிளை யார்விட முண்டவெம்
அருத்த னாரடி யாரை யறிவரே. 7

5236.விண்நி றைந்ததோர் வெவ்வழ லின்னுரு
எண்நி றைந்த இருவர்க் கறிவொணாக்
கண்நி றைந்த கடிபொழி லம்பலத்
துள்நி றைந்துநின் றாடு மொருவனே. 8

5237.வில்லை வட்டப் படவாங்கி யவுணர்தம்
வல்லைவட் டம்மதில் மூன்றுடன் மாய்த்தவன்
தில்லைவட் டந்திசை கைதொழு வார்வினை
ஒல்லைவட் டங்கடந் தோடுத லுண்மையே. 9

5238.நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் நெஞ்சு ளிருக்கவே 10

5239.மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் திருமலை
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 2. கோயில் – திருக்குறுந்தொகை

5240.பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ. 1

5241.தீர்த்த னைச்சிவ னைச்சிவ லோகனை
மூர்த்தி யைமுத லாய ஒருவனைப்
பார்த்த னுக்கருள் செய்தசிற் றம்பலக்
கூத்த னைக்கொடி யேன்மறந் துய்வனோ. 2

5242.கட்டும் பாம்புங் கபாலங்கை மான்மறி
இட்ட மாயிடு காட்டெரி யாடுவான்
சிட்டர் வாழ்தில்லை யம்பலக் கூத்தனை
எள்க னைப்பொழு தும்மறந் துய்வனோ. 3

5243. மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவென்
ஆணியைச் செம்பொ னம்பலத் துள்நின்ற
தாணு வைத்தமி யேன்மறந் துய்வனோ. 4

5244. பித்த னைப்பெருங் காடரங் காவுடை
முத்த னைமுளை வெண்மதி சூடியைச்
சித்தனைச் செம்பொ னம்பலத் துள்நின்ற
அத்த னையடி யேன்மறந் துய்வனோ. 5

5245. நீதி யைநிறை வைமறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கும் அறிவொண்ணாச்
சோதி யைச்சுடர் செம்பொனி னம்பலத்
தாதி யையடி யேன்மறந் துய்வனோ. 6

5246. மைகொள் கண்டனெண் தோளன்முக் கண்ணினன்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனார்
செய்ய மாதுரை சிற்றம்ப லத்தெங்கள்
ஐய னையடி யேன்மறந் துய்வனோ. 7

5247. முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினால்
எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை
இழுதை யேன்மறந் தெங்ஙன முய்வனோ. 8

5248. காரு லாமலர்க் கொன்றையந் தாரனை
வாரு லாமுலை மங்கைம ணாளனைத்
தேரு லாவிய தில்லையுட் கூத்தனை
ஆர்கி லாஅமு தைமறந் துய்வனோ. 9

5249. ஓங்கு மால்வரை யேந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற வூன்றிய தாளினான்
தேங்கு நீர்வயல் சூழ்தில்லைக் கூத்தனைப்
பாங்கி லாத்தொண்ட னேன்மறந் துய்வனோ. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 3. திருநெல்வாயில் அரத்துறை – திருக்குறுந்தொகை

5250. கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானையொப் பாரியி லாதவெம்
அடலு ளானை யரத்துறை மேவிய
சுடரு ளானைக்கண் டீர்நாந் தொழுவதே. 1

5251. கரும்பொப் பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பொப் பானைவிண் ணோரும் அறிகிலா
அரும்பொப் பானை யரத்துறை மேவிய
சுரும்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 2

5252. ஏறொப் பானையெல் லாவுயிர்க் கும்மிறை
வேறொப் பானைவிண் ணோரும் அறிகிலா
ஆறொப் பானை யரத்துறை மேவிய
ஊறொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 3

5253. பரப்பொப் பானைப் பகலிருள் நன்னிலா
இரப்பொப் பானை யிளமதி சூடிய
அரப்பொப் பானை யரத்துறை மேவிய
சுரப்பொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 4

5254. நெய்யொப் பானைநெய் யிற்சுடர் போல்வதோர்
மெய்யொப் பானைவிண் ணோரு மறிகிலார்
ஐயொப் பானை யரத்துறை மேவிய
கையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 5

5255. நிதியொப் பானை நிதியிற் கிழவனை
விதியொப் பானைவிண் ணோரு மறிகிலார்
அதியொப் பானை யரத்துறை மேவிய
கதியொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 6

5256. புனலொப் பானைப் பொருந்தலர் தம்மையே
மினலொப் பானைவிண் ணோரு மறிகிலார்
அனலொப் பானை யரத்துறை மேவிய
கனலொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 7

5257. பொன்னொப் பானைப்பொன் னிற்சுடர் போல்வதோர்
மின்னொப் பானைவிண் ணோரு மறிகிலார்
அன்னொப் பானை யரத்துறை மேவிய
தன்னொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 8

5258.காழி யானைக் கனவிடை யூருமெய்
வாழி யானைவல் லோருமென் றின்னவர்
ஆழி யான்பிர மற் கும ரத்துறை
ஊழி யானைக்கண் டீர்நாந் தொழுவதே. 9

5259.கலையொப் பானைக் கற்றார்க்கோ ரமுதினை
மலையொப் பானை மணிமுடி யூன்றிய
அலையொப் பானை யரத்துறை மேவிய
நிலையொப் பானைக்கண் டீர்நாந் தொழுவதே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 4. திருஅண்ணாமலை – திருக்குறுந்தொகை

5260.வட்ட னைம்மதி சூடியை வானவர்
சிட்ட னைத்திரு வண்ணா மலையனை
இட்ட னையிகழ்ந் தார்புர மூன்றையும்
அட்ட னையடி யேன்மறந் துய்வனோ. 1

5261. வான னைம்மதி சூடிய மைந்தனைத்
தேன னைத்திரு வண்ணா மலையனை
ஏன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
ஆன னையடி யேன்மறந் துய்வனோ. 2

5262.மத்த னைம்மத யானையு ரித்தவெஞ்
சித்த னைத்திரு வண்ணா மலையனை
முத்த னைம்முனிந் தார்புர மூன்றெய்த
அத்த னையடி யேன்மறந் துய்வனோ. 3

5263.காற்ற னைக்கலக் கும்வினை போயறத்
தேற்ற னைத்திரு வண்ணா மலையனைக்
கூற்ற னைக்கொடி யார்புர மூன்றெய்த
ஆற்ற னையடி யேன்மறந் துய்வனோ. 4

5264.மின்ன னைவினை தீர்த்தெனை ஆட்கொண்ட
தென்ன னைத்திரு வண்ணா மலையனை
என்ன னையிகழ்ந் தார்புர மூன்றெய்த
அன்ன னையடி யேன்மறந் துய்வனோ. 5

5265. மன்ற னைம்மதி யாதவன் வேள்விமேல்
சென்ற னைத்திரு வண்ணா மலையனை
வென்ற னைவெகுண் டார்புர மூன்றையுங்
கொன்ற னைக்கொடி யேன்மறந் துய்வனோ. 6

5266. வீர னைவிட முண்டனை விண்ணவர்
தீர னைத்திரு வண்ணா மலையனை
ஊர னையுண ரார்புர மூன்றெய்த
ஆர னையடி யேன்மறந் துய்வனோ. 7

5267. கருவி னைக்கடல் வாய்விட முண்டவெம்
திருவி னைத்திரு வண்ணா மலையனை
உருவி னையுண ரார்புர மூன்றெய்த
அருவி னையடி யேன்மறந் துய்வனோ. 8

5268. அருத்த னையர வைந்தலை நாகத்தை
திருத்த னைத்திரு வண்ணா மலையனைக்
கருத்த னைக்கடி யார்புர மூன்றெய்த
அருத்த னையடி யேன்மறந் துய்வனோ. 9

5269. அரக்க னையல றவ்விர லூன்றிய
திருத்த னைத்திரு வண்ணா மலையனை
இரக்க மாயென் உடலுறு நோய்களைத்
துரக்க னைத்தொண்ட னேன்மறந் துய்வனோ. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 5. திருஅண்ணாமலை – திருக்குறுந்தொகை

5270. பட்டி ஏறுகந் தேறிப் பலஇ(ல்)லம்
இட்ட மாக இரந்துண் டுழிதரும்
அட்ட மூர்த்தியன் ணாமலை கைதொழக்
கெட்டுப் போம் வினை கேடில்லை காண்மினே. 1

5271. பெற்ற மேறுவர் பெய்பலிக் கென்றவர்
சுற்ற மாமிகு தொல்புக ழாளொடும்
அற்றந் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நற்ற வத்தொடு ஞானத் திருப்பரே. 2

5272. பல்லி லோடுகை யேந்திப் பலஇ(ல்)லம்
ஒல்லை சென்றுணங் கல்கவர் வாரவர்
அல்லல் தீர்க்குமண் ணாமலை கைதொழ
நல்ல வாயின நம்மை யடையுமே. 3

5273. பாடிச் சென்று பலிக்கென்று நின்றவர்
ஓடிப் போயினர் செய்வதொன் றென்கொலோ
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போகும்நம் மேலை வினைகளே. 4

5274. தேடிச் சென்று திருந்தடி யேத்துமின்
நாடி வந்தவர் நம்மையு மாட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே. 5

5275. கட்டி யொக்குங் கரும்பி னிடைத்துணி
வெட்டி வீணைகள் பாடும் விகிர்தனார்
அட்ட மூர்த்தியண் ணாமலை மேவிய
நட்ட மாடியை நண்ணநன் காகுமே. 6

5276. கோணிக் கொண்டையர் வேடமுன் கொண்டவர்
பாணி நட்டங்க ளாடும் பரமனார்
ஆணிப் பொன்னினண் ணாமலை கைதொழப்
பேணி நின்ற பெருவினை போகுமே. 7

5277. கண்டந் தான்கறுத் தான்கால னாருயிர்
பண்டு கால்கொடு பாய்ந்த பரமனார்
அண்டத் தோங்குமண் ணாமலை கைதொழ
விண்டு போகுநம் மேலை வினைகளே. 8

5278. முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றனண் ணாமலை
சிந்தி யாவெழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே. 9

5279. மறையி னானொடு மாலவன் காண்கிலா
நிறையும் நீர்மையுள் நின்றருள் செய்தவன்
உறையும் மாண்பினண் ணாமலை கைதொழப்
பறையும் நாஞ்செய்த பாவங்க ளானவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 6. திருஆரூர் – திருக்குறுந்தொகை

5280.எப்போ தும்மிறை யும்மற வாதுநீர்
முப்போ தும்பிர மன்தொழ நின்றவன்
செப்போ தும்பொனின் மேனிச் சிவனவன்
அப்போ தைக்கஞ்ச லென்னுமா ரூரனே. 1

5281. சடையின் மேலுமொர் தையலை வைத்தவர்
அடைகி லாஅர வைஅரை யார்த்தவர்
படையின் நேர்தடங் கண்ணுமை பாகமா
அடைவர் போலிடு காடரா ரூரரே. 2

5282.விண்ட வெண்டலை யேகல னாகவே
கொண்ட கம்பலி தேருங் குழகனார்
துண்ட வெண்பிறை வைத்த இறையவர்
அண்ட வாணர்க் கருளுமா ரூரரே. 3

5283.விடையு மேறுவர் வெண்தலை யிற்பலி
கடைகள் தோறுந் திரியுமெங் கண்ணுதல்
உடையுஞ் சீரை யுறைவது காட்டிடை
அடைவர் போலரங் காகவா ரூரரே 4

5284.துளைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
வளைக்கை யாளையொர் பாக மகிழ்வெய்தித்
திளைக்குந் திங்கட் சடையில் திசைமுழு
தளக்குஞ் சிந்தையர் போலுமா ரூரரே. 5

5285.பண்ணி னின்மொழி யாளையொர் பாகமா
விண்ணி னார்விளங் கும்மதி சூடியே
சுண்ண நீறுமெய்ப் பூசிச் சுடலையின்
அண்ணி யாடுவர் போலுமா ரூரரே 6

5286. மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு வாங்கங் கனன்மழு மான்தனோ
டட்ட மாம்புய மாகுமா ரூரரே. 7

5287. தேய்ந்த திங்கள் கமழ்சடை யன்கனல்
ஏந்தி யெல்லியு ளாடு மிறைவனார்
காய்ந்து காமனை நோக்கின கண்ணினார்
ஆய்ந்த நான்மறை யோதுமா ரூரரே. 8

5288.உண்டு நஞ்சுகண் டத்து ளடக்கியங்
கிண்டை செஞ்சடை வைத்த இயல்பினான்
கொண்ட கோவண ஆடையன் கூரெரி
அண்ட வான ரடையுமா ரூரரே. 9

5289.மாலு நான்முக னும்மறி கிற்கிலார்
கால னாய அவனைக் கடந்திட்டுச்
சூல மான்மழு வேந்திய கையினார்
ஆல முண்டழ காயவா ரூரரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 7. திருஆரூர் – திருக்குறுந்தொகை

5290.கொக்க ரைகுழல் வீணை கொடுகொட்டி
பக்க மேபகு வாயன பூதங்கள்
ஒக்க ஆட லுகந்துடன் கூத்தராய்
அக்கி னோடர வார்ப்பரா ரூரரே. 1

5291.எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்த மில்புக ழாரூ ரரனெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே. 2

5292.வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்
கிண்டை மாலை புனைந்து மிராப்பகல்
தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்
கண்ட மாளவும் வைப்பரா ரூரரே. 3

5293.துன்பெ லாமற நீங்கிச் சுபத்தராய்
என்பெ லாம்நெக் கிராப்பக லேத்திநின்
றின்ப ராய்நினைந் தென்று மிடையறா
அன்ப ராமவர்க் கன்பரா ரூரரே. 4

5294.முருட்டு மெத்தையில் முன்கிடத் தாமுனம்
அரட்டர் ஐவரை ஆசறுத் திட்டுநீர்
முரட்ட டித்தவத் தக்கன்றன் வேள்வியை
அரட்ட டக்கித னாரூ ரடைமினே. 5

5295.எம்மை யாரிலை யானுமு ளேனலேன்
எம்மை யாரு மிதுசெய வல்லரே
அம்மை யாரெனக் கென்றென் றரற்றினேற்
கம்மை யாரைத்தந் தாராரு ரையரே. 6

5296.தண்ட வாளியைத் தக்கன்றன் வேள்வியைச்
செண்ட தாடிய தேவர கண்டனைக்
கண்டு கண்டிவள் காதலித் தன்பதாய்க்
கொண்டி யாயின வாறென்றன் கோதையே. 7

5297.இவள்ந மைப்பல பேசத் தொடங்கினாள்
அவண மன்றெனி லாரூ ரரனெனும்
பவனி வீதி விடங்கனைக் கண்டிவள்
தவனி யாயின வாறென்றன் தையலே. 8

5298.நீரைச் செஞ்டை வைத்த நிமலனார்
காரொத் தமிடற் றர்கனல் வாயரா
ஆரத் தருறை யும்மணி யாரூரைத்
தூரத் தேதொழு வார்வினை தூளியே. 9

5299.உள்ள மேயொன் றுறுதி யுரைப்பன்நான்
வெள்ளந் தாங்கு விரிசடை வேதியன்
அள்ளல் நீர்வய லாரூ ரமர்ந்தவெம்
வள்ளல் சேவடி வாழ்த்தி வணங்கிடே. 10

5300.விண்ட மாமலர் மேலுறை வானொடும்
கொண்டல் வண்ணனுங் கூடி யறிகிலா
அண்ட வாணந்த னாரூ ரடிதொழப்
பண்டை வல்வினை நில்லா பறையுமே. 11

5301.மையு லாவிய கண்டத்த னண்டத்தன்
கையு லாவிய சூலத்தன் கண்ணுதல்
ஐய னாரூ ரடிதொழு வார்க்கெலாம்
உய்ய லாம்அல்லல் ஒன்றிலை காண்மினே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருஅன்னியூர் – திருக்குறுந்தொகை

*5302.*பாற லைத்த படுவெண் தலையினன்
நீற லைத்தசெம் மேனியன் நேரிழை
கூற லைத்தமெய் கோளரா வாட்டிய
ஆற லைத்த சடையன்னி யூரனே. 1

*5303.*பண்டொத் தமொழி யாளையொர் பாகமாய்
இண்டைச் செஞ்சடை யன்னிருள் சேர்ந்ததோர்
கண்டத் தன்கரி யின்னுரி போர்த்தவன்
அண்டத் தம்புரத் தானன்னி யூரனே. 2

*5304.*பரவி நாளும் பணிந்தவர் தம்வினை
துரவை யாகத் துடைப்பவர் தம்மிடம்
குரவம் நாறுங் குழலுமை கூறராய்
அரவ மாட்டுவர் போலன்னி யூரரே. 3

*5305.*வேத கீதர்விண் ணோர்க்கு முயர்ந்தவர்
சோதி வெண்பிறை துன்று சடைக்கணி
நாதர் நீதியி னாலடி யார்தமக்
காதி யாகிநின் றாரன்னி யூரரே. 4

*5306.*எம்பி ரானிமை யோர்கள் தமக்கெலாம்
இன்ப ராகி யிருந்தவெம் மீசனார்
துன்ப வல்வினை போகத் தொழுமவர்க்
கன்ப ராகிநின் றாரன்னி யூரரே. 5

*5307.*வெந்த நீறுமெய் பூசுநன் மேனியர்
கந்த மாமலர் சூடுங் கருத்தினர்
சிந்தை யார்சிவ னார்செய்ய தீவண்ணர்
அந்த ணாளர்கண் டீரன்னி யூரரே. 6

*5308.*ஊனை யார்தலை யிற்பலி கொண்டுழல்
வானை வானவர் தாங்கள் வணங்கவே
தேனை யார்குழ லாளையொர் பாகமா
ஆனை யீருரி யாரன்னி யூரரே. 7

*5309.*காலை போய்ப்பலி தேர்வர்கண் ணார்நெற்றி
மேலை வானவர் வந்து விரும்பிய
சோலை சூழ்புறங் காடரங் காகவே
ஆலின் கீழறத் தாரன்னி யூரரே. 8

5310. எரிகொள் மேனிய ரென்பணிந் தின்பராய்த்
திரியு மூவெயில் தீயெழச் செற்றவர்
கரிய மாலொடு நான்முகன் காண்பதற்
கரிய ராகிநின் றாரன்னி யூரரே. 9

5311. வஞ்ச ரக்கன் கரமுஞ் சிரத்தொடும்
அஞ்சு மஞ்சுமோ ராறுநான் கும்மிறப்
பஞ்சின் மெல்விர லாலடர்த் தாயிழை
அஞ்ச லஞ்சலென் றாரன்னி யூரரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 9. திருமறைக்காடு – திருக்குறுந்தொகை

5312. ஓத மால்கடல் பாவி யுலகெலாம்
மாத ரார்வலங் கொண்மறைக் காடரைக்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்த பறையும்நம் பாவமே. 1

5313. பூக்குந் தாழை புறணி யருகெலாம்
ஆக்கந் தானுடை மாமறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீரடி யார்தம்மை
நோக்கிக் காண்பது நும்பணி செய்யிலே. 2

5314. புன்னை ஞாழல் புறணி யருகெலாம்
மன்னி னார்வலங் கொள்மறைக் காடரோ
அன்ன மெல்நடை யாளையொர் பாகமாச்
சின்ன வேட முகப்பது செல்வமே. 3

5315. அட்ட மாமலர் சூடி யடும்பொடு
வட்டப் புன்சடை மாமறைக் காடரோ
நட்ட மாடியும் நான்மறை பாடியும்
இட்ட மாக விருக்கு மிடமிதே. 4

5316. நெய்த லாம்பல் நிறைவயல் சூழ்தரும்
மெய்யி னார்வலங் கொண்மறைக் காடரோ
தையல் பாகங்கொண் டீர்கவர் புன்சடைப்
பைதல் வெண்பிறை பாம்புடன் வைப்பதே. 5

5317. துஞ்சும் போதுந் துயிலின்றி யேத்துவார்
வஞ்சின் றிவலங் கொண்மறைக் காடரோ
பஞ்சின் மெல்லடிப் பாவை பலிகொணர்ந்
தஞ்சி நிற்பது மைந்தலை நாகமே. 6

5318. திருவி னார்செல்வ மல்கு விழாவணி
மருவி னார்வலங் கொண்மறைக் காடரோ
உருவி னாளுமை மங்கையொர் பாகமாய்
மருவி னாய்கங்கை யைச்சென்னி தன்னிலே. 7

5319. சங்கு வந்தலைக் குந்தடங் கானல்வாய்
வங்க மார்வலங் கொண்மறைக் காடரோ
கங்கை செஞ்சடை வைப்பது மன்றியே
அங்கை யில்லன லேந்த லழகிதே. 8

5320. குறைக்காட் டான்விட்ட தேர்குத்த மாமலை
இறைக்காட் டியெடுத் தான்தலை யீரைந்தும்
மறைக்காட் டான்இறை யூன்றலும் வாய்விட்டான்
இறைக்காட் டாயெம் பிரானுனை யேத்தவே. 9

திருச்சிற்றம்பலம்

•••••

## 10. திருமறைக்காடு – திருக்குறுந்தொகை

5321. பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. 1

5322. ஈண்டு செஞ்சடை யாகத்து ளீசரோ
மூண்ட கார்முகி லின்முறிக் கண்டரோ
ஆண்டு கொண்டநீ ரேயருள் செய்திடும்
நீண்ட மாக்கத வின்வலி நீக்குமே. 2

5323. அட்ட மூர்த்திய தாகிய அப்பரோ
துட்டர் வான்புரஞ் சுட்ட சுவண்டரோ
பட்டங் கட்டிய சென்னிப் பரமரோ
சட்ட விக்கத வந்திறப் பிம்மினே. 3

5324. அரிய நான்மறை யோதிய நாவரோ
பெரிய வான்புரஞ் சுட்ட சுவண்டரோ
விரிகொள் கோவண ஆடை விருத்தரோ
பெரிய வான்கத வம்பிரி விக்கவே. 4

5325. மலையில் நீடிருக் கும்மறைக் காடரோ
கலைகள் வந்திறைஞ் சுங்கழ லேத்தரோ
விலையில் மாமணி வண்ண வுருவரோ
தொலைவி லாக்கத வந்துணை நீக்குமே. 5

5326. பூக்குந் தாழை புறணி யருகெலாம்
ஆக்குந் தண்பொழில் சூழ்மறைக் காடரோ
ஆர்க்குங் காண்பரி யீரடி கேளுமை
நோக்கிக் காணக் கதவைத் திறவுமே. 6

5327. வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தரோ
அந்த மில்லி யணிமறைக் காடரோ
எந்தை நீயடி யார்வந் திறைஞ்சிட
இந்த மாக்கத வம்பிணி நீக்குமே. 7

5328. ஆறு சூடும் அணிமறைக் காடரோ
கூறு மாதுமைக் கீந்த குழகரோ
ஏற தேறிய எம்பெரு மானிந்த
மாறி லாக்கத வம்வலி நீக்குமே. 8

5329. சுண்ண வெண்பொடிப் பூசுஞ் சுவண்டரோ
பண்ணி யேறுகந் தேறும் பரமரோ
அண்ண லாதி யணிமறைக் காடரோ
திண்ண மாக்கத வந்திறப் பிம்மினே. 9

5330. விண்ணு ளார்விரும் பியெதிர் கொள்ளவே
மண்ணு ளார்வணங் கும்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே. 10

5331. அரக்க னைவிர லாலடர்த் திட்டநீர்
இரக்க மொன்றிலீ ரெம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கத வந்திறப் பிம்மினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 11 திருமீயச்சூர் – திருக்குறுந்தொகை

5332.தோற்றுங் கோயிலுங் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையரற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. 1

5333.வந்த னையடைக் கும்மடித் தொண்டர்கள்
பந்த னைசெய்து பாவிக்க நின்றவன்
சிந்த னைதிருத் துந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. 2

5334.பஞ்ச மந்திரம் ஓதும் பரமனார்
அஞ்ச ஆனை யுரித்தன லாடுவார்
நெஞ்சம் வாழி நினைந்திரு மீயச்சூர்
எந்த மையுடை யாரிளங் கோயிலே. 3

5335.நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடையிடை
ஆறு கொண்டுகந் தான்திரு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. 4

5336.வெவ்வ வண்ணத்து நாகம் வெருவவே
கவ்வ வண்ணக் கனல்விரித் தாடுவர்
செவ்வ வண்ணந் திகழ்திரு மீயச்சூர்
எவ்வ வண்ணம் பிரானிளங் கோயிலே. 5

5337. பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும்
பின்னுஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று
மின்னு மேகலை யாளொடு மீயச்சூர்
இன்ன நாள்அக லாரிளங் கோயிலே. 6

5338.படைகொள் பூதத்தன் பைங்கொன்றைத் தாரினன்
சடைகொள் வெள்ளத்தன் சாந்தவெண் நீற்றினன்
விடைகொ ளூர்தியி னான்திரு மீயச்சூர்
இடைகொண் டேத்தநின் றாரிளங் கோயிலே. 7

5339.ஆறு கொண்ட சடையினர் தாமுமோர்
வேறு கொண்டதொர் வேடத்த ராகிலும்
கூறு கொண்டுகந் தாளொடு மீயச்சூர்
ஏறு கொண்டுகந் தாரிளங் கோயிலே. 8

5340. வேதத் தானென்பர் வேள்வியு ளானென்பர்
பூதத்தா னென்பர் புண்ணியன் தன்னையே
சீதத் தான்கிள ருந்திரு மீயச்சூர்
ஏதந் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 9

5341. கடுக்கண் டன்கயி லாய மலைதனை
எடுக்க லுற்ற இராவணன் ஈடற
விடுக்க ணின்றி வெகுண்டவன் மீயச்சூர்
இடுக்கண் தீர்க்கநின் றாரிளங் கோயிலே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 12. திருவீழிமிழலை – திருக்குறுந்தொகை

5342. கரைந்து கைதொழு வாரையுங் காதலன்
வரைந்து வைதெழு வாரையும் வாடலன்
நிரந்த பாரிடத் தோடவர் நித்தலும்
விரைந்து போவது வீழி மிழலைக்கே. 1

5343. ஏற்று வெல்கொடி யீசன்ற னாதிரை
நாற்றஞ் சூடுவர் நன்னறுந் திங்களார்
நீற்றுச் சந்தன வெள்ளை விரவலார்
வேற்றுக் கோலங்கொள் வீழி மிழலையே. 2

5344. புனைபொற் சூலத்தன் போர்விடை யூர்தியான்
வினைவெல் நாகத்தன் வெண்மழு வாளினான்
நினைய நின்றவ னீசனை யேயெனா
வினையி லார்தொழும் வீழி மிழலையே. 3

5345. மாடத் தாடு மனத்துடன் வைத்தவர்
கோடத் தார்குருக் கேத்திரத் தார்பலர்
பாடத் தார்பழிப் பார்பழிப் பல்லதோர்
வேடத் தார்தொழும் வீழி மிழலையே. 4

5346. எடுத்த வெல்கொடி யேறுடை யான்தமர்
உடுப்பர் கோவண முண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழி மிழலைக்கே. 5

5347. குழலை யாழ்மொழி யாரிசை வேட்கையால்
உழலை யாக்கையை யூணு முணர்விலீர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினோம்
மிழலை யானடி சாரவின் ணாள்வரே. 6

5348. தீரன் தீத்திர ளன்சடைத் தங்கிய
நீர னாடிய நீற்றன்வண் டார்கொன்றைத்
தாரன் மாலையன் தண்நறுங் கண்ணியன்
வீரன் வீழி மிழலை விகிர்தனே. 7

5349. எரியி னாரிறை யாரிடு காட்டிடை
நரியி னார்பரி யாமகிழ் கின்றதோர்
பெரிய னார்தம் பிறப்பொடு சாதலை
விரியி னார்தொழும் வீழி மிழலையே. 8

5350. நீண்ட சூழ்சடை மேலொர் நிலாமதி
காண்டு சேவடி மேலொர் கனைகழல்
வேண்டு வாரவர் வீதி புகுந்திலர்
மீண்டும் போவது வீழி மிழலைக்கே. 9

5351. பாலை யாழொடு செவ்வழி பண்கொள
மாலை வானவர் வந்து வழிபடும்
ஆலை யாரழ லந்தண ராகுதி
வேலை யார்தொழும் வீழி மிழலையே. 10

5352. மழலை யேற்று மணாளன் திருமலை
சுழல ஆர்த்தெடுத் தான்முடி தோளிறக்
கழல்கொள் காலில் திருவிர லூன்றலும்
மிழலை யானடி வாழ்கென விட்டதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 13. திருவீழிமிழலை – திருக்குறுந்தொகை

5353. என்பொ னேயிமை யோர்தொழு பைங்கழல்
நன்பொ னேநலந் தீங்கறி வொன்றிலேன்
செம்பொ னேதிரு வீழி மிழலையுள்
அன்ப னேயடி யேனைக் குறிக்கொளே. 1

5354. கண்ணி னாற்களி கூரத்தை யால்தொழு
தெண்ணு மாறறி யாதிளைப் பேன்றனை
விண்ணு ளார்தொழும் வீழி மிழலையுள்
அண்ண லேயடி யேனைக் குறிக்கொளே. 2

5355. ஞால மேவிசும் பேநலந் தீமையே
கால மேகருத் தேகருத் தாற்றொழும்
சீல மேதிரு வீழி மிழலையுள்
கோல மேயடி யேனைக் குறிக்கொளே. 3

5356. முத்த னேமுதல் வாமுகி ழும்முளை
ஒத்த னேயொரு வாவுரு வாகிய
சித்த னேதிரு வீழி மிழலையுள்
அத்த னேயடி யேனைக் குறிக்கொளே. 4

5357. கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலாம்
ஒருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழி மிழலையுள்
குருவ னேயடி யேனைக் குறிக்கொளே. 5

5358. காத்த னேபொழி லேழையுங் காதலால்
ஆத்த னேயம ரர்க்கயன் றன்தலை
சேர்த்த னேதிரு வீழி மிழலையுள்
கூத்த னேயடி யேனைக் குறிக்கொளே. 6

5359. நீதி வானவர் நித்தல் நியமஞ்செய்
தோதி வானவ ரும்முண ராததோர்
வேதி யாவிகிர் தாதிரு வீழியுள்
ஆதி யேயடி யேனைக் குறிக்கொளே. 7

5360. பழகி நின்னடி சூடிய பாலனைக்
கழகின் மேல்வைத்த காலனைச் சாடிய
அழக னேயணி வீழி மிழலையுள்
குழக னேயடி யேனைக் குறிக்கொளே. 8

5361. அண்ட வானவர் கூடிக் கடைந்தநஞ்
சுண்ட வானவ னேயுணர் வொன்றிலேன்
விண்ட வான்பொழில் வீழி மிழலையுள்
கொண்ட னேயடி யேனைக் குறிக்கொளே. 9

5362. ஒருத்தன் ஓங்கலைத் தாங்க லுற்றானுரம்
வருத்தி னாய்வஞ்ச னேன்மனம் மன்னிய
திருத்த னேதிரு வீழி மிழலையுள்
ஒருத்த னேயடி யேனைக் குறிக்கொளே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 14. திருவிடைமருது – திருக்குறுந்தொகை

5363. பாச மொன்றில ராய்ப்பல பத்தர்கள்
வாச நாண்மலர் கொண்டடி வைகலும்
ஈச னெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே. 1

5364. மறையின் நாண்மலர் கொண்டடி வானவர்
முறையி னால்முனி கள்வழி பாடுசெய்
இறைவ னெம்பெரு மானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமெ னுள்ளமே. 2

5365. கொன்றை மாலையுங் கூவிள மத்தமும்
சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்
என்று மெந்தை பிரானிடை மருதினை
நன்று கைதொழு வார்வினை நாசமே. 3

5366. இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளு மிடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. 4

5367. வண்ட ணைந்தன வன்னியுங் கொன்றையும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனார்
எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறும் மேலை வினைகளே. 5

5368. ஏற தேறு மிடைமரு தீசனார்
கூறு வார்வினை தீர்க்குங் குழகனார்
ஆறு செஞ்சடை வைத்த அழகனார்க்
கூறி யூறி யுருகுமெ னுள்ளமே. 6

5369. விண்ணு ளாரும் விரும்பப் படுபவர்
மண்ணு ளாரும் மதிக்கப் படுபவர்
எண்ணி னார்பொழில் சூழிடை மருதினை
நண்ணி னாரைநண் ணாவினை நாசமே. 7

5370. வெந்த வெண்பொடிப் பூசும் விகிர்தனார்
கந்த மாலைகள் சூடுங் கருத்தனார்
எந்தை யென்னிடை மருதினி லீசனைச்
சிந்தை யால்நினை வார்வினை தேயுமே. 8

5371. வேத மோதும் விரிசடை யண்ணலார்
பூதம் பாடநின் றாடும் புனிதனார்
ஏதந் தீர்க்கு மிடைமரு தாவென்று
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 9

5372. கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. 10

5373. முற்றி லாமதி சூடும் முதல்வனார்
ஒற்றி னார்மலை யாலரக் கன்முடி
எற்றி னார்கொடி யாரிடை மருதினைப்
பற்றி னாரைப் பற்றாவினைப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 15. திருவிடைமருது – திருக்குறுந்தொகை

5374. பறையி னோசையும் பாடலி னோசையும்
மறையி னோசையும் வைகும் வயலெலாம்
இறைவ னெங்கள் பிரானிடை மருதினில்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. 1

5375. மனத்துள் மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை
எனக்குத் தாயையெம் மானிடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்ததென் னுள்ளமே. 2

5376. வண்ட ணைந்தன வன்னியும் மத்தமும்
கொண்ட ணிந்த சடைமுடிக் கூத்தனை
எண்டி சைக்கு மிடைமரு தாவென
விண்டு போயறும் மேலை வினைகளே. 3

5377. துணையி லாமையில் தூங்கிருட் பேய்களோ
டணைய லாவ தெமக்கரி தேயெனா
இணையி லாவிடை மாமரு தில்லெழு
பணையி லாகமஞ் சொல்லுந்தன் பாங்கிக்கே. 4

5378. மண்ணை யுண்டமால் காணான் மலரடி
விண்ணை விண்டயன் காணான் வியன்முடி
மொண்ணை மாமரு தாவென்றென் மொய்குழல்
பண்ணை யாயமுந் தானும் பயிலுமே. 5

5379. மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கை மீரிடை மருதரிந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தா ரிதழியே. 6,7,8,9,10,11

திருச்சிற்றம்பலம்

•••••

## 16. திருப்பேரெயில் – திருக்குறுந்தொகை

5380. மறையும் ஓதுவர் மான்மறிக் கையினர்
கறைகொள் கண்ட முடைய கபாலியார்
துறையும் போகுவர் தூயவெண் நீற்றினர்
பிறையுஞ் சூடுவர் பேரெயி லாளரே. 1

5381. கணக்கி லாரையுங் கற்றுவல் லாரையும்
வணக்கி லாநெறி கண்டுகொண் டாரையும்
தணக்கு வார்தணிப் பாரெப் பொருளையும்
பிணக்கு வாரவர் பேரெயி லாளரே. 2

5382. சொரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி
எரிவிப் பார்தணிப் பாரெப் பொருளையும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே. 3

5383.செறுவிப் பார்சிலை யால்மதில் தீர்த்தங்கள்
உறுவிப் பார்பல பத்தர்க ளூழ்வினை
அறுவிப் பாரது வன்றியும் நல்வினை
பெறுவிப் பாரவர் பேரெயி லாளரே. 4

5384.மற்றை யாரறி யார்மழு வாளினார்
பற்றி யாட்டியோ ரைந்தலைப் பாம்பரைச்
சுற்றி யாரவர் தூநெறி யால்மிகு
பெற்றி யாரவர் பேரெயி லாளரே. 5

5385.திருக்கு வார்குழற் செல்வன சேவடி
இருக்கு வாய்மொழி யால்தனை யேத்துவார்
சுருக்கு வார்துயர் தோற்றங்க ளாற்றறப்
பெருக்கு வாரவர் பேரெயி லாளரே. 6

5386.முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தானோர் தலைமகன்
என்னை யாளுமி றையவ னெம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளரே. 7

5387.உழைத்துந் துள்ளியு முள்ளத்து ளேயுரு
இழைத்து மெந்தை பிரானென் றிராப்பகல்
அழைக்கு மன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயி லாளரே. 8

5388.நீரு லாநிமிர் புன்சடை யாவெனா
ஏரு லாவநங் கன்திறல் வாட்டிய
வாரு லாவன மென்முலை யாளொடும்
பேரு ளாரவர்பேரெயி லாளரே. 9

5389.பாணி யார்படு தம்பெயர்ந் தாடுவர்
தூணி யார்விச யற்கருள் செய்தவர்
மாணி யாய்மண் ணளந்தவன் நான்முகன்
பேணி யாரவர் பேரெயி லாளரே. 10

5390.மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம்
சிதைக்க வேதிரு மாமலைக் கீழ்ப்புக்குப்
பதைத்தங் கார்த்தெடுத் தான்பத்து நீண்முடி
பிதக்க வூன்றிய பேரெயி லாளரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 17. திருவெண்ணி – திருக்குறுந்தொகை

5391. முத்தி னைப்பவ ளத்தை முளைத்தவெம்
தொத்தி னைச்சுட ரைச்சுடர் போலொளிப்
பித்த னைக்கொலும் நஞ்சினை வானவர்
நித்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 1

5392. வெண்ணித் தொல்நகர் மேயவெண் திங்களார்
கண்ணித் தொத்த சடையர் கபாலியார்
எண்ணித் தம்மை நினைந்திருந் தேனுக்கு
அண்ணித் திட்டமு தூறுமென் நாவுக்கே. 2

5393. காற்றி னைக்கன லைக்கதிர் மாமணி
நீற்றி னைநினைப் பார்வினை நீக்கிடும்
கூற்றி னையுதைத் திட்ட குணமுடை
வீற்றி னைநெரு நற்கண்ட வெண்ணியே.. 3

5394. நல்ல னைத்திகழ் நான்மறை யோதியைச்
சொல்ல னைச்சுட ரைச்சுடர் போலொளிர்
கல்ல னைக்கடி மாமதில் மூன்றெய்த
வில்ல னைநெரு நற்கண்ட வெண்ணியே. 4

5395. சுடரைப் போலொளிர் சுண்ணவெண் ணீற்றனை
அடருஞ் சென்னியில் வைத்த அமுதினைப்
படருஞ் செஞ்சடை பான்மதி சூடியை
இடரை நீக்கியை யான்கண்ட வெண்ணியே. 5

5396. பூத நாதனைப் பூம்புக லூரனைத்
தாதெ னத்தவ ழும்மதி சூடியை
நாதனை நல்ல நான்மறை யோதியை
வேத னைநெரு நற்கண்ட வெண்ணியே. 6

5397. ஒருத்தி யையொரு பாகத் தடக்கியும்
பொருத்தி யபுனி தன்புரி புன்சடைக்
கருத்த னைக்கறைக் கண்டனைக் கண்ணுதல்
நிருத்த னைநெரு நற்கண்ட வெண்ணியே. 7

5398. சடைய னைச்சரி கோவண ஆடைகொண்
டுடைய னையுணர் வார்வினை தீர்த்திடும்
படைய னைமழு வாளொடு பாய்தரும்
விடைய னைநெரு நற்கண்ட வெண்ணியே. 8

5399. பொருப்ப னைப்புன லாளொடு புன்சடை
அருப்ப னையிளந் திங்களங் கண்ணியான்
பருப்ப தம்பர வித்தொழுந் தொண்டர்கள்
விருப்ப னைநெரு நற்கண்ட வெண்ணியே. 9

5400. சூல வஞ்சனை வல்லவெஞ் சுந்தரன்
கோல மாஅருள் செய்ததோர் கொள்கையான்
காலன் அஞ்ச வுதைத்திருள் கண்டமாம்
வேலை நஞ்சனைக் கண்டது வெண்ணியே. 10

5401. இலையி னார்கொன்றை சூடிய ஈசனார்
மலையி னாலரக் கன்திறல் வாட்டினார்
சிலையி னால்மதி லெய்தவன் வெண்ணியைத்
தலையி னால்தொழு வார்வினை தாவுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. திருக்கடம்பந்துறை – திருக்குறுந்தொகை

5402. முற்றி லாமுலை யாளிவ ளாகிலும்
அற்றந் தீர்க்கு மறிவில ளாகிலும்
கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்
பெற்றம் ஊர்தியென் றாளெங்கள் பேதையே. 1

5403. தனகி ருந்ததொர் தன்மைய ராகிலும்
முனகு தீரத் தொழுதெழு மின்களோ
கனகப் புன்சடை யான்கடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும் பாள்வரே. 2

5404. ஆரி யந்தமி ழோடிசை யானவன்
கூரி யகுணத் தார்குறி நின்றவன்
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. 3

5405. பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. 4

5406. மறைகொண் டம்மனத் தானை மனத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளூற வைம்மினோ
கறைகண் டன்னுறை யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. 5

5407. நங்கை பாகம்வைத் தந்நறுஞ் சோதியைப்
பங்க மின்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடை யான்கடம் பந்துறை
அங்க மோதி யரனுறை கின்றதே. 6

5408. அரிய நான்மறை யாறங்க மாயைந்து
புரியன் தேவர்க ளேத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னான்கடம் பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. 7

5409. பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்க ளுள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநம் தீவினை நாசமே. 8

5410. பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர்
கார ணன்கடம் பந்துறை மேவிய
ஆர ணங்கொரு பாலுடை மைந்தனே. 9

5411. நூலால் நன்றா நினைமின்கள் நோய்கெடப்
பாலா னைந்துட னாடும் பரமனார்
காலா லூன்றுகந் தான்கடம் பந்துறை
மேலா னாஞ்செய்த வல்வினை வீடுமே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 19. திருக்கடம்பூர் – திருக்குறுந்தொகை

5412. தளருங் கோளர வத்தொடு தண்மதி
வளருங் கோல வளர்சடை யார்க்கிடம்
கிளரும் பேரிசைக் கின்னரம் பாட்டறாக்
களருங் கார்க்கடம் பூர்க்கரக் கோயிலே. 1

5413. வெலவ லான்புல னைந்தொடு வேதமும்
சொலவ லான்சுழ லுந்தடு மாற்றமும்
அலவ லான்மனை யார்ந்தமென் தோளியைக்
கலவ லான்கடம் பூர்க்கரக் கோயிலே. 2

5414. பொய்தொ ழாது புலியுரி யோன்பணி
செய்தெ ழாவெழு வார்பணி செய்தெழா
வைதெ ழாதெழு வாரவ ரெள்கநீர்
கைதொ ழாவெழு மின்கரக் கோயிலே. 3

5415. துண்ணெ னாமனத் தால்தொழு நெஞ்சமே
பண்ணி னால்முனம் பாட லதுசெய்தே
எண்ணி லாரெயில் மூன்று மெரித்தமுக்
கண்ணி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 4

5416. சுனையுள் நீல மலரன கண்டத்தன்
புனையும் பொன்னிறக் கொன்றை புரிசடைக்
கனையும் பைங்கழ லான்கரக் கோயிலை
நினையு முள்ளத் தவர்வினை நீங்குமே. 5

5417. குணங்கள் சொல்லியுங் குற்றங்கள் பேசியும்
வணங்கி வாழ்த்துவ ரன்புடை யாரெலாம்
வணங்கி வான்மலர் கொண்டடி வைகலும்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 6

5418. பண்ணி னார்மறை பல்புல பூசனை
மண்ணி னார்செய்வ தன்றியும் வைகலும்
விண்ணி னார்கள் வியக்கப் படுவன
கண்ணி னார்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

5419. அங்கை ஆரழ லேந்திநின் றாடலன்
மங்கை பாட மகிழ்ந்துடன் வார்சடைக்
கங்கை யானுறை யுங்கரக் கோயிலைத்
தங்கை யால்தொழு வார்வினை சாயுமே. 8

5420. நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே. 9

5421. பணங்கொள் பாற்கடல் பாம்பணை யானொடும்
மணங்க மழ்மலர்த் தாமரை யானவன்
பிணங்கும் பேரழ லெம்பெரு மாற்கிடம்
கணங்கள் போற்றிசைக் குங்கரக் கோயிலே. 10

5422. வரைக்கண் நாலஞ்சு தோளுடை யான்தலை
அரைக்க வூன்றி யருள்செய்த ஈசனார்
திரைக்குந் தண்புனல் சூழ்கரக் கோயிலை
உரைக்கு முள்ளத் தவர்வினை யோயுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 20. திருக்கடம்பூர் – திருக்குறுந்தொகை

5423. ஒரவ ராயிரு மூவரு மாயவன்
குருவ தாய குழக னுறைவிடம்
பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ்
கருவ தாங்கடம் பூர்க்கரக் கோயிலே. 1

5424. வன்னி மத்தம் வளரிளந் திங்களோர்
கன்னி யாளைக் கதிர்முடி வைத்தவன்
பொன்னின் மல்கு புணர்முலை யாளொடும்
மன்னி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 2

5425. இல்லக் கோலமு மிந்த இளமையும்
அல்லற் கோல மறுத்துய வல்லிரே
ஒல்லைச் சென்றடை யுங்கடம் பூர்நகர்ச்
செல்வக் கோயில் திருக்கரக் கோயிலே. 3

5426. வேறு சிந்தை யிலாதவர் தீவினை
கூறு செய்த குழக னுறைவிடம்
ஏறு செல்வத் திமையவர் தாந்தொழும்
ஆறு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 4

5427. திங்கள் தங்கிய செஞ்சடை மேலுமோர்
மங்கை தங்கும் மணாள னிருப்பிடம்
பொங்கு சேர்மணற் புன்னையும் ஞாழலும்
தெங்கு சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 5

5428.மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலாம்
எல்லை யான பிரானா ரிருப்பிடம்
கொல்லை முல்லை கொழுந்தகை மல்லிகை
நல்ல சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 6

5429.தளரும் வாளர வத்தொடு தண்மதி
வளரும் பொற்சடை யாற்கிட மாவது
கிளரும் பேரொலி கின்னரம் பாட்டறாக்
களறி யார்கடம் பூர்க்கரக் கோயிலே. 7

5430.உற்றா ராயுற வாகி யுயிர்க்கெலாம்
பெற்றா ராய பிரானா ருறைவிடம்
முற்றார் மும்மதி லெய்த முதல்வனார்
கற்றார் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 8

5431.வெள்ளை நீறணி மேனிய வர்க்கெலாம்
உள்ள மாய பிரானா ருறைவிடம்
பிள்ளை வெண்பிறை சூடிய சென்னியான்
கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே. 9

5432.பரப்பு நீரிலங் கைக்கிறை வன்அவன்
உரத்தி னாலடுக் கல்எடுக் கல்லுற
இரக்க மின்றி யிறைவிர லாற்றலை
அரக்கி னான்கடம் பூர்க்கரக் கோயிலே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 21. திருஇன்னம்பர் – திருக்குறுந்தொகை

5433.என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே. 1

5434.மட்டுண் பார்கள் மடந்தையர் வாட்கண்ணால்
கட்டுண் பார்கள் கருதுவ தென்கொலோ
தட்டி முட்டித் தள்ளாடித் தழுக்குழி
எட்டு மூர்த்திய ரின்னம்ப ரீசனே. 2

5435. கனலுங் கண்ணியுந் தண்மதி யோடுடன்
புனலுங் கொன்றையுஞ் சூடும் புரிசடை
அனலுஞ் சூலமும் மான்மறிக் கையினர்
எனலு மென்மெனத் தின்னம்ப ரீசனே. 3

5436. மழைக்கண் மாமயி லாலு மகிழ்ச்சியான்
அழைக்குந் தன்னடி யார்கள்த மன்பினைக்
குழைக்குந் தன்னைக் குறிக்கொள வேண்டியே
இழைக்கு மென்மெனத் தின்னம்ப ரீசனே. 4

5437. தென்ன வன்னெனை யாளுஞ் சிவனவன்
மன்ன வன்மதி யம்மறை யோதியான்
முன்ன மன்னவன் சேர்வன பூழியான்
இன்னம் இன்புற்ற வின்னம்ப ரீசனே. 5

5438. விளக்கும் வேறு படப்பிற ருள்ளத்தில்
அளக்குந் தன்னடி யார்மனத் தன்பினைக்
குளக்கு மென்னைக் குறிக்கொள வேண்டியே
இளக்கு மென்மனத் தின்னம்ப ரீசனே. 6

5439. சடைக்க ணாள்புன லாள்அனல் கையதோர்
கடைக்க ணால்மங்கை நோக்கிம வான்மகள்
படைக்க ணால்பரு கப்படு வான்நமக்
கிடைக்க ணாய்நின்ற வின்னம்ப ரீசனே. 7

5440. தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே. 8

5441. விரியுந் தண்ணிள வேனிலில் வெண்பிறை
புரியுங் காமனை வேவப் புருவமும்
திரியு மெல்லையில் மும்மதில் தீயெழுந்
தெரிய நோக்கிய வின்னம்ப ரீசனே. 9

5442. சனியும் வெள்ளியுந் திங்களும் ஞாயிறும்
முனிவ னாய்முடி பத்துடை யான்றனைக்
கனிய வூன்றிய காரண மென்கொலோ
இனிய னாய்நின்ற வின்னம்ப ரீசனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. திருக்குடமூக்கு – திருக்குறுந்தொகை

5443. பூவ ணத்தவன் புண்ணிய னண்ணியங்
காவ ணத்துடை யானடி யார்களைத்
தீவ ணத்திரு நீறுமெய் பூசியோர்
கோவ ணத்துடை யான்குட மூக்கிலே. 1

5444. பூத்தா டிக்கழி யாதேநீர் பூமியீர்
தீத்தா டித்திறஞ் சிந்தையுள் வைம்மினோ
வேர்த்தா டுங்காளி தன்விசை தீர்கென்று
கூத்தா டிய்யுறை யுங்குட மூக்கிலே, 2

5445. நங்கை யாளுமை யாளுறை நாதனார்
அங்கை யாளொ டறுபதந் தாழ்சடைக்
கங்கை யாளவள் கன்னி யெனப்படும்
கொங்கை யாளுறை யுங்குட மூக்கிலே. 3

5446. ஓதா நாவன் திறத்தை யுரைத்திரேல்
ஏதா னும்மினி தாகும் மியமுனை
சேதா ஏறுடை யானமர்ந் தவிடம்
கோதா விரியுறை யுங்குட மூக்கிலே 4

5447. நக்க ரையனை நாடொறும் நன்னெஞ்சே
வக்க ரையுறை வானை வணங்குநீ
அக்க ரையோ டரவரை யார்த்தவன்
கொக்க ரையுடை யான்குட மூக்கிலே. 5

5448. துறவி நெஞ்சின ராகிய தொண்டர்காள்
பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்
மறவனாய்ப் பார்த்தன் மேற்கணை தொட்டவெம்
குறவ னாருறை யுங்குட மூக்கிலே. 6

5449. தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்ட வர்புரம் மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்னுறை யுங்குட மூக்கிலே. 7

5450. காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமியஞ் செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே. 8

5451. சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்ப்
பரம னைப்பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றொழிந் தார்க்கெலாம்
குரவ னாருரை யுங்குட மூக்கிலே. 9

5452. அன்று தானரக் கன்கயி லாயத்தைச்
சென்று தானெடுக் கவுமை யஞ்சலும்
நன்று தான்நக்கு நல்விர லூன்றிப்பின்
கொன்று கீதங்கேட் டான்குட மூக்கிலே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 23. திருநின்றியூர் – திருக்குறுந்தொகை

5453. கொடுங்கண் வெண்தலை கொண்டு குறைவிலைப்
படுங்க ணொன்றில ராய்ப்பலி தேர்ந்துண்பர்
நெடுங்கண் மங்கைய ராட்டயர் நின்றியூர்க்
கடுங்கைக் கூற்றுதைத் திட்ட கருத்தரே. 1

5454. வீதி வேல்நெடுங் கண்ணியர் வெள்வளை
நீதி யேகொளப் பாலது நின்றியூர்
வேத மோதி விளங்குவெண் தோட்டராய்க்
காதில் வெண்குழை வைத்தவெங் கள்வரே. 2

5455. புற்றி னாரர வம்புலித் தோல்மிசைச்
சுற்றி னார்சுண்ணப் போர்வைகொண் டார்சுடர்
நெற்றிக் கண்ணுடை யாரமர் நின்றியூர்
பற்றி னாரைப்பற் றாவினைப் பாவமே. 3

5456. பறையி னோசையும் பாடலி னோசையும்
மறையி னோசையும் மல்கி யயலெலாம்
நிறையும் பூம்பொழில் சூழ்திரு நின்றியூர்
உறையு மீசனை யுள்குமென் னுள்ளமே. 4

5457. சுனையுள் நீலஞ் சுளியும் நெடுங்கணாள்
இனைய னென்றென்று மேசுவ தென்கொலோ
நினையுந் தண்வயல் சூழ்திரு நின்றியூர்
பனையின் ஈருரி போர்த்த பரமரே. 5

5458. உரைப்பக் கேண்மின்நும் உச்சியு ளான்றனை
நிரைப்பொன் மாமதில் சூழ்திரு நின்றியூர்
உரைப்பொற் கற்றைய ராரிவ ரோவெனில்
திரைத்துப் பாடித் திரிதருஞ் செல்வரே. 6

5459. கன்றி யூர்முகில் போலுங் கருங்களி
றின்றி ஏறல னாலிது என்கொலோ
நின்றி யூர்பதி யாக நிலாயவன்
வென்றி யேறுடை யெங்கள் விகிர்தனே. 7

5460. நிலையி லாவெள்ளை மாலையன் நீண்டதோர்
கொலைவி லாலெயி லெய்த கொடியவன்
நிலையி னார்வயல் சூழ்திரு நின்றியூர்
உரையி னால்தொழு வார்வினை யோயுமே. 8

5461. அஞ்சி யாகிலு மன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ
இஞ்சி மாமதி லெய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே. 9

5462. எளிய னாமொழி யாவிலங் கைக்கிறை
களியி னாற்கயி லாய மெடுத்தவன்
நெளிய வூன்றவல் லானமர் நின்றியூர்
அளியி னாற்றொழு வார்வினை யல்குமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. திருவொற்றியூர் – திருக்குறுந்தொகை

5463. ஒற்றி யூரு மொளிமதி பாம்பினை
ஒற்றி யூருமப் பாம்பும் அதனையே
ஒற்றி யூர வொருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை யோயுமே. 1

5464. வாட்ட மொன்றுரைக் கும்மலை யான்மகள்
ஈட்ட வேயிரு ளாடி யிடுபிணக்
காட்டி லோரி கடிக்க எடுத்ததோர்
ஓட்டை வெண்தலைக் கையொற்றி யூரரே. 2

5465. கூற்றுத் தண்டத்தை யஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கு மரனடி
நீற்றுத் தண்டத்த ராய்நினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போலொற்றி யூரரே. 3

5466. சுற்றும் பேய்சுழ லச்சுடு காட்டெரி
பற்றி யாடுவர் பாய்புலித் தோலினர்
மற்றை யூர்களெல் லாம்பலி தேர்ந்துபோய்
ஒற்றி யூர்புக் குறையு மொருவரே. 4

5467. புற்றில் வாளர வாட்டி யுமையொடு
பெற்ற மேறுகந் தேறும் பெருமையான்
மற்றை யாரொடு வானவ ருந்தொழ
ஒற்றி யூருறை வானோர் கபாலியே. 5

5468. போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீர்
மாது தாழ்சடை வைத்த மணாளனார்
ஓது வேதிய னார்திரு வொற்றியூர்
பாத மேத்தப் பறையுநம் பாவமே. 6

5469. பலவும் அன்னங்கள் பன்மலர் மேல்துஞ்சும்
கலவ மஞ்ஞைகள் காரெண வெள்குறும்
உலவு பைம்பொழில் சூழ்திரு வொற்றியூர்
நிலவி னானடி யேயடை நெஞ்சமே. 7

5470. ஒன்று போலும் உகந்தவ ரேறிற்று
ஒன்று போலு முதைத்துக் களைந்தது
ஒன்று போலொளி மாமதி சூடிற்று
ஒன்று போலுகந் தாரொற்றி யூரரே. 8

5471. படைகொள் பூதத்தர் வேதத்தர் கீதத்தர்
சடைகொள் வெள்ளத்தர் சாந்தவெண் நீற்றினர்
உடையுந் தோலுகந் தாருறை யொற்றியூர்
அடையு முள்ளத் தவர்வினை யல்குமே. 9

5472. வரையி னாலுயர் தோளுடை மன்னனை
வரையி னார்வலி செற்றவர் வாழ்விடம்
திரையி னார்புடை சூழ்திரு வொற்றியூர்
உரையி னாற்பொலிந் தாருயர்ந் தார்களே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 25. திருப்பாசூர் – திருக்குறுந்தொகை

5473. முந்தி மூவெயி லெய்த முதல்வனார்
சிந்திப் பார்வினை தீர்த்திடுஞ் செல்வனார்
அந்திக் கோன்தனக் கேயருள் செய்தவர்
பந்திச் செஞ்சடைப் பாசூ ரடிகளே. 1

5474. மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போக்கிடுஞ் சோதியார்
கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தர் பாசூ ரடிகளே. 2

5475. நாறு கொன்றையும் நாகமுந் திங்களும்
ஆறுஞ் செஞ்சடை வைத்த அழகனார்
காறு கண்டத்தர் கையதோர் சூலத்தர்
பாறி னோட்டினர் பாசூ ரடிகளே. 3

5476. வெற்றி யூருறை வேதிய ராவர்நல்
ஒற்றி யேறுகந் தேறு மொருவனார்
நெற்றிக் கண்ணினர் நீளர வந்தனைப்
பற்றி யாட்டுவர் பாசூ ரடிகளே. 4

5477. மட்ட விழ்ந்த மலர்நெடுங் கண்ணிபால்
இட்ட வேட்கைய ராகி யிருப்பவர்
துட்ட ரேலறி யேனிவர் சூழ்ச்சிமை
பட்ட நெற்றியர் பாசூ ரடிகளே. 5

5478. பல்லில் ஓடுகை யேந்திப் பகலெலாம்
எல்லி நின்றிடு பெய்பலி யேற்பவர்
சொல்லிப் போய்ப்புகு மூரறி யேன்சொலீர்
பல்கு நீற்றினர் பாசூ ரடிகளே. 6

5479. கட்டி விட்ட சடையர் கபாலியர்
எட்டி நோக்கிவந் தில்புகுந் தவ்வவர்
இட்ட மாவறி யேனிவர் செய்வன
பட்ட. நெற்றியர் பாசூ ரடிகளே. 7

5480. வேத மோதிவந் தில்புகுந் தாரவர்
காதில் வெண்குழை வைத்த கபாலியார்
நீதி யொன்றறி யார்நிறை கொண்டனர்
பாதி வெண்பிறைப் பாசூ ரடிகளே. 8

5481. சாம்பல் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன் மூதெரு தேறு மொருவனார்
தேம்பல் வெண்மதி சூடுவர் தியதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே. 9

5482. மாலி னோடு மறையவன் தானுமாய்
மேலுங் கீழு மளப்பரி தாயவர்
ஆலின் நீழ லறம்பகர்ந் தார்மிகப்
பால்வெண் நீற்றினர் பாசூ ரடிகளே. 10

5483. திரியும் மூஎயில் செங்தணை யொன்றினால்
எரிய எய்தன தேனு மிலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்விர லொன்றினால்
பரியர் நுண்ணியர் பாசூ ரடிகளே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 26. திருவன்னியூர் – திருக்குறுந்தொகை

5484. காடு கொண்டரங் காக்கங்குல் வாய்க்கணம்
பாட மாநட மாடும் பரமனார்
வாட மானிறங் கொள்வர் மணங்கமழ்
மாட மாமதில் சூழ்வன்னி யூரரே. 1

5485. செங்கண் நாகம் அரையது தீத்திரள்
அங்கை யேந்திநின் றாரெரி யாடுவர்
கங்கை வார்சடை மேலிடங் கொண்டவர்
மங்கை பாகம்வைத் தார்வன்னி யூரரே. 2

5486. ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
தானங் காட்டித்தன் தாளடைந் தார்கட்கு
வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே. 3

5487. இம்மை அம்மை யெனவிரண் டும்மிவை
மெய்ம்மை தானறி யாது விளம்புவர்
மெய்ம்மை யால்நினை வார்கள்தம் வல்வினை
வம்மின் நீர்ப்பர்கண் டீர்வன்னி யூரரே. 4

5488. பிறைகொள் வாள்நுதற் பெய்வளைத் தோளியர்
நிறையைக் கொள்பவர் நீறணி மேனியர்
கறைகொள் கண்டத்தர்வெண்மழு வாளினர்
மறைகொள் வாய்மொழி யார்வன்னி யூரரே. 5

5489. திளைக்கும் வண்டொடு தேன்படு கொன்றையர்
துளைக்கை வேழத்தர் தோலர் சுடர்மதி
முளைக்கு மூரற் கதிர்கண்டு நாகம்நா
வளைக்கும் வார்சடை யார்வன்னி யூரரே. 6

5490. குணங்கொள் தோளெட்டு மூர்த்தி யிணையடி
இணங்கு வார்கட் கினியனு மாய்நின்றான்
வணங்கி மாமலர் கொண்டவர் வைகலும்
வணங்கு வார்மனத் தார்வன்னி யூரரே. 7

5491. இயலு மாலொடு நான்முகன் செய்தவம்
முயலிற் காண்பரி தாய்நின்ற மூர்த்திதான்
அயலெ லாமன்ன மேயுமந் தாமரை
வயலெ லாங்கயல் பாய்வன்னி யூரரே. 8—9

5492. நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா
விலங்கல் கோத்தெடுத் தானது மிக்கிட
இலங்கை மன்ன னிருபது தோளினை
மலங்க வூன்றிவைத் தார்வன்னி யூரரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 27. திருவையாறு – திருக்குறுந்தொகை

5493. சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்தலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பரை யாறரே. 1

5494. பாகம் மாலை மகிழ்ந்தனர் பால்மதி
போக ஆனையி னீருரி போர்த்தவர்
கோக மாலை குலாயதோர் கொன்றையும்
ஆக ஆன்நெயஞ் சாடுமை யாறரே. 2

5495. நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சுந் தோன்ற அருளுமை யாறரே. 3

5496. நினைக்கும் நெஞ்சினுள் ளார்நெடு மாமதில்
அனைத்தும் ஒள்ளழல் வாயெரி யுட்டினார்
பனைக்கை வேழத் துரியுடல் போர்த்தவர்
அனைத்து வாய்தலுள் ளாருமை யாறரே. 4

5497. பரியர் நுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரிய பாடல ராடல ரன்றியும்
கரிய கண்டத்தர் காட்சி பிறர்க்கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. 5

5498. புலரும் போது மிலாப்பட்ட பொற்சுடர்
மலரும் போதுக ளாற்பணி யச்சிலர்
இலரும் போது மிலாதது மன்றியும்
அலரும் போதும் அணியுமை யாறரே. 6

5499. பங்க மாலைக் குழலியொர் பால்நிறக்
கங்கை மாலையர் காதன்மை செய்தவர்
மங்கை மாலை மதியமுங் கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. 7

5500. முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனும் பேதைகாள்
மன்னை யாறு மருவிய மாதவன்
தன்னை யாறு தொழத்தவ மாகுமே. 8

5501. ஆனை யாறென ஆடுகின் றான்முடி
வானை யாறு வளாயது காண்மினோ
நானை யாறுபுக் கேற்கவ னின்னருள்
தேனை யாறு திறந்தாலே யொக்குமே. 9

5502. அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்
அரக்கின்சேவடி யாளஞ்ச அஞ்சலென்
றரக்க னீரைந்து வாயு மலறவே
அரக்கி னானடி யாலுமை யாறனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருவையாறு – திருக்குறுந்தொகை

5503. சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவணம்
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோர்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. 1

5504. மூல வண்ணத்த ராய்முத லாகிய
கோல வண்ணத்த ராகிக் கொழுஞ்சுடர்
நீல வண்ணத்த ராகி நெடும்பளிங்
கால வண்ணத்த ராவரை யாறரே. 2

5505. சிந்தை வண்ணமுந் தீயதோர் வண்ணமும்
அந்திப் போதழ காகிய வண்ணமும்
பந்திக் காலனைப் பாய்ந்ததோர் வண்ணமும்
அந்தி வண்ணமு மாவரை யாறரே. 3

5506. இருளின் வண்ணமு மேழிசை வண்ணமும்
சுருளின் வண்ணமுஞ் சோதியின் வண்ணமும்
மருளு நான்முகன் மாலொடு வண்ணமும்
அருளும் வண்ணமு மாவரை யாறரே. 4

5507. இழுக்கின் வண்ணங்க ளாகிய வெவ்வழல்
குழைக்கும் வண்ணங்க ளாகியுங் கூடியும்
மழைக்கண் மாமுகி லாகிய வண்ணமும்
அழைக்கும் வண்ணமு மாவரை யாறரே. 5

5508. இண்டை வண்ணமு மேழிசை வண்ணமும்
தொண்டர் வண்ணமுங் சோதியின் வண்ணமும்
கண்ட வண்ணங்க ளாய்க்கனல் மாமணி
அண்ட வண்ணமு மாவரை யாறரே. 6

5509. விரும்பும் வண்ணமும் வேதத்தின் வண்ணமும்
கரும்பின் இன்மொழிக் காரிகை வண்ணமும்
விரும்பு வார்வினை தீர்த்திடும் வண்ணமும்
அரும்பின் வண்ணமு மாவரை யாறரே. 7

5510. ஊழி வண்ணமு மொண்சுடர் வண்ணமும்
வேழ ஈருரி போர்த்ததோர் வண்ணமும்
வாழித் தீயுரு வாகிய வண்ணமும்
ஆழி வண்ணமு மாவரை யாறரே. 8

5511. செய்த வன்திரு நீறணி வண்ணமும்
எய்த நோக்கரி தாகிய வண்ணமும்
கைது காட்சி யரியதோர் வண்ணமும்
ஐது வண்ணமு மாவரை யாறரே. 9

5512. எடுத்த வாளரக் கன்திறல் வண்ணமும்
இடர்க்கள் போற்பெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பாலிசை வண்ணமும்
அடுத்த வண்ணமு மாவரை யாறரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 29. திருவாவடுதுறை – திருக்குறுந்தொகை

5513. நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை
மறைக்க வாலிய ளல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெரும்புன லாவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. 1

5514. தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை
அளவு கண்டில ளாவடு தண்டுறைக்
களவு கண்டன ளொத்தனள் கன்னியே. 2

5515. பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி யாவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. 3

5516. கார்க்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொண் மென்முலை சேர்ந்திறு மாந்திவள்
ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்
தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே. 4

5517. கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேயெனும் பண்பினன்
அருகு சென்றில ளாவடு தண்டுறை
ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே. 5

5518. குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்
அழக னாவடு தண்டுறை யாவெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. 6

5519. பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை
மஞ்ச னோடிவ ளாடிய மையலே. 7

5520. பிறையுஞ் சூடிநற் பெண்ணோ டாணாகிய
நிறையும் நெஞ்சமும் நீர்மையுங் கொண்டவன்
அறையும் பூம்பொழி லாவடு தண்டுறை
இறைவ னென்னை யுடையவ னென்னுமே. 8

5521. வையந் தானளந் தானும் அயனுமாய்
மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்
ஐய னாவடு தண்டுறை யாவெனக்
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. 9

5522. பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்
மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்
அக்க ணிந்தவ னாவடு தண்டுறை
நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 30. திருப்பராய்த்துறை – திருக்குறுந்தொகை

5523. கரப்பர் கால மடைந்தவர் தம்வினை
சுருக்கு மாறுவல் லார்கங்கை செஞ்சடைப்
பரப்பு நீர்வரு காவிரித் தென்கரைத்
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வரே. 1

5524. மூடி னார்களி யானையின் ஈருரி
பாடி னார்மறை நான்கினோ டாறங்கம்
சேட னார்தென்ப ராய்த்துறைச் செல்வரைத்
தேடிக் கொண்டடி யேன்சென்று காண்பனே. 2

5525.பட்ட நெற்றியர் பால்மதிக் கீற்றினர்
நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமும்
சிட்ட னார்தென்ப ராய்த்துறைச் செல்வனார்
இட்ட மாயிருப் பாரை யறிவரே. 3

5526.முன்பெ லாஞ்சில மோழைமை பேசுவர்
என்பெ லாம்பல பூண்டங் குழிதர்வர்
தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
அன்ப ராயிருப் பாரை யறிவரே. 4

5527.போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் சங்கரன் பாதத்துள்
வாதை தீர்க்கவென் றேத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுதெழுந் துய்ம்மினே. 5

5528.நல்ல நான்மறை யோதிய நம்பனைப்
பல்லில் வெண்டலை யிற்பலி கொள்வதனைத்
தில்லை யான்தென் பராய்த்துறைச் செல்வனை
வல்லை யாய்வணங் கித்தொழு வாய்மையே. 6

5529.நெருப்பி னாற்குவித் தாலொக்கு நீள்சடைப்
பருப்ப தம்மத யானை யுரித்தவன்
திருப்ப ராய்த்துறை யார்திரு மார்பின்நூல்
பொருப்ப ராவி யிழிபுனல் போன்றதே. 7

5530.எட்ட விட்ட விடுமண லெக்கர்மேல்
பட்ட நுண்துளி பாயும் பராய்த்துறைச்
சிட்டன் சேவடி சென்றடை கிற்றிரேல்
விட்டு நம்வினை யுள்ளன வீடுமே. 8

5531. நெருப்ப ராய்நிமிர்ந் தாலொக்கு நீள்சடை
மருப்ப ராய்வளைந் தாலொக்கும் வாண்மதி
திருப்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
விருப்ப ராயிருப் பாரை யறிவரே. 9

5532.தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்
இண்டை கட்டி யிணையடி யேத்தியும்
பண்ட ரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்
கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே. 10

5533. அரக்க னாற்ற லழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்
பொருக்க நும்வினை போயறுங் காண்மினே, 11

திருச்சிற்றம்பலம்

*****

## 31. திருவானைக்கா – திருக்குறுந்தொகை

5534. கோனைக் காவிக் குளிர்ந்த மனத்தராய்த்
தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்
ஆனைக் காவிலெம் மானை யணைகிலார்
ஊனைக் காவி யுழிதர்வ ருமரே. 1

5535. திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. 2

5536. துன்ப மின்றித் துயரின்றி யென்றுநீர்
இன்பம் வேண்டி விராப்பக லேத்துமின்
என்பொன் ஈச னிறைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடும் ஆனைக்கா வண்ணலே. 3

5537. நாவால் நன்று நறுமலர்ச் சேவடி
ஓவா தேத்தி யுளத்தடைத் தார்வினை
காவா யென்றுதங் கைதொழு வார்க்கெலாம்
ஆவா என்றிடும் ஆனைக்கா வண்ணலே. 4

5538. வஞ்ச மின்றி வணங்குமின் வைகலும்
வெஞ்சொ லின்றி விலகுமின் வீடற
நைஞ்சு நைஞ்சுநின் றுள்குளிர் வார்க்கெலாம்
அஞ்ச லென்றிடும் ஆனைக்கா வண்ணலே. 5

5539. நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன் றின்றியே தன்னடைந் தார்க்கெலாம்
அடைய நின்றிடும் ஆனைக்கா வண்ணலே. 6

5540. ஒழுகு மாடத்து ளொன்பது வாய்தலுங்
கழுக ரிப்பதன் முன்னங் கழலடி
தொழுது கைகளால் தூமலர் தூவிநின்
றழும வர்க்கன்ப னானைக்கா வண்ணலே. 7

5541. உருளும் போதறி வொண்ணா வுலகத்திர்
தெருளுஞ் சிக்கெனத் தீவினை சேராதே
இருள றுத்துநின் றீசனென் பார்க்கெலாம்
அருள்கொ டுத்திடும் ஆனைக்கா வண்ணலே. 8

5542. நேச மாகி நினைமட நெஞ்சமே
நாச மாய குலநலஞ் சுற்றங்கள்
பாச மற்றுப் பராபர ஆனந்த
ஆசை யுற்றிடும் ஆனைக்கா வண்ணலே. 9

5543. ஓத மாகடல் சூழிலங் கைக்கிறை
கீதங் கின்னரம் பாடக் கெழுவினான்
பாதம் வாங்கிப் பரிந்தருள் செய்தங்கோர்
ஆதி யாயிடும் ஆனைக்கா வண்ணலே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 32. திருப்பூந்துருத்தி – திருக்குறுந்தொகை

5544. கொடிகொள் செல்வ விழாக்குண லைஅறாக்
கடிகொள் பூம்பொழிற் கச்சியே கம்பனார்
பொடிகள் பூசிய பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 1

5545. ஆர்த்த தோலுடை கட்டியோர் வேடனாய்ப்
பார்த்த னோடு படைதொடு மாகிலும்
பூத்த நீள்பொழிற் பூந்துருத் திந்நகர்த்
தீர்த்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 2

5546. மாதி னைமதித் தானொரு பாகமாக்
காத லாற்கரந் தான்சடைக் கங்கையைப்
பூத நாயகன் பூந்துருத் திந்நகர்த்
காதி சேவடிக் கீழ்நா மிருப்பதே. 3

5547. மூவ னாய்முத லாயிவ் வுலகெலாம்
காவ னாய்க்கடுங் காலனைக் காய்ந்தவன்
பூவின் நாயகன் பூந்துருத் திந்நகர்த்
தேவன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 4

5548. செம்பொ னேயொக்கும் மேனியன் தேசத்தில்
உம்ப ராரவ ரோடங் கிருக்கிலும்
பொன்பொனார் செல்வப் பூந்துருத் திந்நகர்
நம்பன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 5

5549. வல்லம் பேசி வலிசெய்மூன் றூரினைக்
கொல்லம் பேசிக் கொடுஞ்சரம் நூறினான்
புல்லம் பேசியும் பூந்துருத் திந்நகர்ச்
செல்வன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 6

5550. ஒருத்த னாயுல கேழுந் தொழநின்று
பருத்த பாம்பொடு பால்மதி கங்கையும்
பொருத்த னாகிலும் பூந்துருத் திந்நகர்த்
திருத்தன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 7

5551. அதிரர் தேவ ரியக்கர் விச்சாதரர்
கருத நின்றவர் காண்பரி தாயினான்
பொருத நீர்வரு பூந்துருத் திந்நகர்ச்
சதுரன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 8

5552. செதுக றாமனத் தார்புறங் கூறினும்
கொதுக றாக்கண்ணி னோன்பிகள் கூறினும்
பொதுவி னாயகன் பூந்துருத் திந்நகர்க்
கதிபன் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 9

5553. துடித்த தோள்வலி வாளரக் கன்தனைப்
பிடித்த கைஞ்ஞெரிந் துற்றன கண்ணெலாம்
பொடிக்க வூன்றிய பூந்துருத் திந்நகர்ப்
படிக்கொள் சேவடிக் கீழ்நா மிருப்பதே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 33. திருச்சோற்றுத்துறை – திருக்குறுந்தொகை

5554. கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்
தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே
வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 1

5555. முத்தி யாக வொருதவஞ் செய்திலை
அத்தி யாலடி யார்க்கொன் றளித்திலை
தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே
பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 2

5556. ஒட்டி நின்ற உடலுறு நோய்வினை
கட்டி நின்ற கழிந்தவை போயறத்
தொட்டு நின்றுமச் சோற்றுத் துறையர்க்கே
பட்டி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 3

5557. ஆதியா னண்ட வாணர்க் கருள்நல்கு
நீதி யானென்றும் நின்மல னேயென்றும்
சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
வாதி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 4

5558. ஆட்டி னாயடி யேன்வினை யாயின
ஓட்டி னாயொரு காதி லிலங்குவெண்
தோட்டி னாயென்று சோற்றுத் துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே. 5

5559. பொங்கி நின்றெழுந் தகடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே. 6

5560. ஆணி போலநீ ஆற்ற வலியைகாண்
ஏணி போலிழிந் தேறியு மேங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 7

5561. பெற்ற மேறிலென் பேய்படை யாகிலென்
புற்றி லாடர வேயது பூணிலென்
சுற்றி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
பற்றி நீபணி செய்மட நெஞ்சமே. 8

5562. அல்லி யானர வைந்தலை நாகணைப்
பள்ளி யானறி யாத பரிசெலாம்
சொல்லி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
புல்லி நீபணி செய்மட நெஞ்சமே. 9

5563. மிண்ட ரோடு விரலியும் வீறிலாக்
குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ
தொண்டு செய்தென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. 10

5564. வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போயல றவ்விர லூன்றினான்
சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்
தாழ்ந்து நீபணி செய்மட நெஞ்சமே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 34. திருநெய்த்தானம் – திருக்குறுந்தொகை

5565. கொல்வி யான்குளிர் தூங்குகுற் றாலத்தான்
புல்லி யார்புரம் மூன்றெரி செய்தவன்
நெல்லி யானிலை யானநெய்த் தானனைச்
சொல்லி மெய்தொழு வார்சுடர் வாணரே. 1

5566. இரவ னையிடு வெண்தலை யேந்தியைப்
பரவ னைப்படை யார்மதில் மூன்றையும்
நிரவ னைநிலை யானநெய்த் தானனைக்
குரவ னைத்தொழு வார்கொடி வாணரே. 2

5567. ஆனிடை யைந்தும் ஆடுவ ராரிருள்
கானிடை நடம் ஆடுவர் காண்மினோ
தேனிடை மலர் பாயுநெய்த் தானனை
வானி டைத்தொழு வார்வலி வாணரே. 3

5568. விண்ட வர்புர மூன்றும்வெண் ணீறெழக்
கண்ட வன்கடி தாகிய நஞ்சினை
உண்ட வன்னொளி யானநெய்த் தானனைத்
தொண்ட ராய்த்தொழு வார்சுடர் வாணரே. 4

5569. முன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே
சங்கி யாது சமுத்திர நஞ்சுண்டான்
நங்கை யோடு நவின்றநெய்த் தானனைத்
தங்கை யால்தொழு வார்தலை வாணரே. 5

5570. சுட்ட நீறுமெய் பூசிச் சுடலையுள்
நட்ட மாடுவர் நள்ளிருள் பேயொடே
சிட்டர் வானவர் தேருநெய்த் தானனை
இட்ட மாய்த்தொழு வாரின்ப வாணரே. 6

5571. கொள்ளித் தீயெரி வீசிக் கொடியதோர்
கள்ளிக் காட்டிடை யாடுவர் காண்மினோ
தெள்ளித் தேறித் தெளிந்துநெய்த் தானனை
உள்ளத் தால்தொழு வாரும்பர் வாணரே. 7

5572. உச்சி மேல்விளங் கும்மிள வெண்பிறை
பற்றி யாடர வோடுஞ்ச டைப்பெய்தான்
நெற்றி யாரழல் கண்டநெய்த் தானனைச்
சுற்றி மெய்தொழு வார்சுடர் வாணரே. 8

5573. மாலொ டும்மறை யோதிய நான்முகன்
காலொ டும்முடி காண்பரி தாயினான்
சேலொ டுஞ்செருச் செய்யுநெய்த் தானனை
மாலொ டுந்தொழு வார்வினை வாடுமே. 9

5574. வலிந்த தோள்வலி வாளரக் கன்றனை
நெருங்க நீள்வரை யூன்றுநெய்த் தானனார்
புரிந்து கைந்நரம் போடிசை பாடலும்
பரிந்த னைப்பணி வார்வினை பாறுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருப்பழனம் – திருக்குறுந்தொகை

5575. அருவ னாய்அத்தி யீருரி போர்த்துமை
உருவ னாயொற்றி யூர்பதி யாகிலும்
பருவ ரால்வயல் சூழ்ந்த பழனத்தான்
திருவி னாற்றிரு வேண்டுமித் தேவர்க்கே. 1

5576. வையம் வந்து வணங்கி வலங்கொளும்
ஐய னையறி யார்சிலர் ஆதர்கள்
பைகொ ளாடர வார்த்த பழனன்பால்
பொய்யர் காலங்கள் போக்கிடு வார்களே. 2

5577. வண்ண மாக முறுக்கிய வாசிகை
திண்ண மாகத் திருச்சடைச் சேர்த்தியே
பண்ணு மாகவே பாடும் பழனத்தான்
எண்ணும் நீர்அவ னாயிர நாமமே. 3

5578. மூர்க்கப் பாம்பு பிடித்து மூச்சிட
வாக்கப் பாம்பினைக் கண்ட துணிமதி
பாக்கப் பாம்பினைப் பற்றும் பழனத்தான்
தார்க்கொண் மாலை சடைக்கணிந் திட்டதே. 4

5579. நீல முண்ட மிடற்றினன் நேர்ந்ததோர்
கோல முண்ட குணத்தால் நிறைந்ததோர்
பாலு முண்டு பழனன்பா லென்னிடை
மாலு முண்டிறை யென்றன் மனத்துளே. 5

5580. மந்த மாக வளர்பிறை சூடியோர்
சந்த மாகத் திருச்சடை சாத்துவான்
பந்த மாயின தீர்க்கும் பழனத்தான்
எந்தை தாய்தந்தை யெம்பெரு மானுமே. 6

5581. மார்க்க மொன்றறி யார்மதி யில்லிகள்
பூக்க ரத்திற் புரிகிலர் மூடர்கள்
பார்க்க நின்று பரவும் பழனத்தான்
தாள்கள் நின்று தலைவணங் கார்களே. 7

5582. ஏறி னாரிமை யோர்கள் பணிகண்டு
தேறு வாரலர் தீவினை யாளர்கள்
பாறி னார்பணி வேண்டும் பழனத்தான்
கூறி னானுமை யாளொடுங் கூடவே. 8

5583. சுற்று வார்தொழு வார்சுடர் வண்ணன்மேல்
தெற்றி னார்திரி யும்புரம் மூன்றெய்தான்
பற்றி னார்வினை தீர்க்கும் பழனனை
எற்றி னான்மறக் கேனெம் பிரானையே. 9

5584. பொங்கு மாகடல் சூழிலங் கைக்கிறை
அங்க மான இறுத்தருள் செய்தவன்
பங்க னென்றும் பழன னுமையொடும்
தங்கன் தாளடி யேனுடை யுச்சியே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 36. திருச்செம்பொன்பள்ளி – திருக்குறுந்தொகை

5585. கான றாத கடிபொழில் வண்டினம்
தேன றாத திருச்செம்பொன் பள்ளியான்
ஊன றாததோர் வெண்டலை யிற்பலி
தான றாததோர் கொள்கையன் காண்மினே. 1

5586. என்பு மாமையும் பூண்டங் குழிதர்வர்க்
கன்பு மாயிடும் ஆயிழை யீரினிச்
செம்பொன் பள்ளியு ளான்சிவ லோகனை
நம்பொன் பள்ளியுள் கவினை நாசமே. 2

5587. வேறு கோலத்த ராணலர் பெண்ணலர்
கீறு கோவண வைதுகி லாடையர்
தேற லாவதொன் றன்றுசெம் பொன்பள்ளி
ஆறு சூடிய அண்ண லவனையே. 3

5588. அருவ ராததோர் வெண்டலை யேந்திவந்
திருவ ராயிடு வார்கடை தேடுவார்
தெருவெ லாமுழல் வார்செம்பொன் பள்ளியார்
ஒருவர் தாம்பல பேருளர் காண்மினே. 4

5589. பூவு லாஞ்சடை மேற்புனல் சூடினான்
ஏவ லாலெயின் மூன்று மெரித்தவன்
தேவர் சென்றிறைஞ் சுஞ்செம்பொன் பள்ளியான்
மூவ ராய்முத லாய்நின்ற மூர்த்தியே. 5

5590. சலவ ராயொரு பாம்பொடு தண்மதிக்
கலவ ராவதின் காரண மென்கொலோ
திலக நீண்முடி யார்செம்பொன் பள்ளியார்
குலவில் லாலெயில் மூன்றெய்த கூத்தரே. 6

5591. கைகொள் சூலத்தர் கட்டுவாங் கத்தினர்
மைகொள் கண்டத்த ராகி யிருசுடர்
செய்ய மேனிவெண் ணீற்றர்செம் பொன்பள்ளி
ஐயர் கையதோ ரைந்தலை நாகமே. 7

5592. வெங்கண் நாகம் வெருவுற ஆர்த்தவர்
பைங்கண் ஆனையி னீருரி போர்த்தவர்
செங்கண் மால்விடை யார்செம்பொன் பள்ளியார்
அங்க ணாயடைந் தார்வினை தீர்ப்பரே. 8

5593. நன்றி நாரணன் நான்முக னென்றிவர்
நின்ற நீண்முடி யோடடி காண்புற்றுச்
சென்று காண்பரி யான் செம்பொன் பள்ளியான்
நின்ற சூழலில் நீளெரி யாகியே. 9

5594. திரியும் மும்மதில் செங்கணை யொன்றினால்
எரிய வெய்தன லோட்டி யிலங்கைக்கோன்
நெரிய வூன்றியிட் டார்செம்பொன் பள்ளியார்
அரிய வான மவரருள் செய்வரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 37. திருக்கடவூர்வீரட்டம் – திருக்குறுந்தொகை

5595. மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையுங் கொன்றிடு மாதலால்
கலைக்கை யானைகண் டீர்கட வூரரே. 1

5596. வெள்ளி மால்வரை போல்வதோ ரானையார்
உள்ள வாறெனை யுள்புகு மானையார்
கொள்ள மாகிய கோயிலு ளானையார்
கள்ள லானைகண் டீர்கட வூரரே. 2

5597. ஞான மாகிய நன்குண ரானையார்
ஊனை வேவ வுருக்கிய வானையார்
வேன வானை யுரித்துமை யஞ்சவே
கான லானைகண் டீர்கட வூரரே. 3

5598. ஆல முண்டழ காயதொ ரானையார்
நீல மேனி நெடும்பளிங் கானையார்
கோல மாய கொழுஞ்சுட ரானையார்
கால வானைகண் டீர்கட வூரரே. 4

5599. அளித்த ஆன்அஞ்சு மாடிய வானையார்
வெளுத்த நீள்கொடி யேறுடை யானையார்
எளித்த வேழத்தை எள்குவித் தானையார்
களித்த வானைகண் டீர்கட வூரரே. 5

5600. விடுத்த மால்வரை விண்ணுற வானையார்
தொடுத்த மால்வரை தூயதோ ரானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுத்த வானைகண் டீர்கட வூரரே. 6

5601. மண்ணு ளாரை மயக்குறு மானையார்
எண்ணு ளார்பல ரேத்திடு மானையார்
விண்ணு ளார்பல ரும்மறி யானையார்
கண்ணு ளானைகண் டீர்கட வூரரே. 7

5602. சினக்குஞ் செம்பவ ளத்திர ளானையார்
மனக்கும் வல்வினை தீர்த்திடு மானையார்
அனைக்கும் அன்புடை யார்மனத் தானையார்
கனைக்கு மானைகண் டீர்கட வூரரே. 8

5603. வேத மாகிய வெஞ்சுட ரானையார்
நீதி யானில னாகிய வானையார்
ஓதி யூழி தெரிந்துண ரானையார்
காத லானைகண் டீர்கட வூரரே. 9

5604. நீண்ட மாலொடு நான்முகன் தானுமாய்க்
காண்டு மென்றுபுக் கார்க ளிருவரும்
மாண்ட வாரழ லாகிய வானையார்
காண்ட லானைகண் டீர்கட வூரரே. 10

5605. அடுத்து வந்த இலங்கையர் மன்னனை
எடுத்த தோள்க ளிறநெரித் தானையார்
கடுத்த காலனைக் காய்ந்ததோ ரானையார்
கடுக்கை யானைகண் டீர்கட வூரரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 38. திருக்கடவூர்மயானம் – திருக்குறுந்தொகை

5606. குழைகொள் காதினர் கோவண ஆடையர்
உழையர் தாங்கட வூரின் மயானத்தார்
பழைய தம்மடி யார்செய்த பாவமும்
பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே. 1

5607. உன்னி வானவ ரோதிய சிந்தையில்
கன்னல் தேன்கட வூரின் மயானத்தார்
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை யென்னார் பெருமா னடிகளே. 2

5608. சூல மேந்துவர் தோலுடை ஆடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்
கால காலர் கடவூர் மயானத்தார்
மாலை மார்பர் பெருமா னடிகளே. 3

5609. இறைவ னாரிமை யோர்தொழு பைங்கழல்
மறவ னார்கட வூரின் மயானத்தார்
அறவ னாரடி யாரடி யார்தங்கள்
பிறவி தீர்ப்பர் பெருமா னடிகளே. 4

5610. கத்து காளி கதந்தணி வித்தவர்
மத்தர் தாங்கட வூரின் மயானத்தார்
ஒத்தொவ் வாதன செய்துழல் வாரொரு
பித்தர் காணும் பெருமா னடிகளே. 5

5611. எரிகொள் மேனி யிளம்பிறை வைத்தவர்
கரியர் தாங்கட வூரின் மயானத்தார்
அரிய ரண்டத்து ளோரயன் மாலுக்கும்
பெரியர் காணும் பெருமா னடிகளே. 6

5612. அணங்கு பாகத்தர் ஆரண நான்மறை
கணங்கள் சேர்கட வூரின் மயானத்தார்
வணங்கு வாரிடர் தீர்ப்பர் மயக்குறும்
பிணங்கொள் காடர் பெருமா னடிகளே. 7

5613. அரவு கையின ராதி புராணனார்
மரவு சேர்கட வூரின் மயானத்தார்
பரவு வாரிடர் தீர்ப்பர் பணிகொள்வர்
பிரமன் மாற்றும் பெருமா னடிகளே. 8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 39. திருமயிலாடுதுறை – திருக்குறுந்தொகை

5614. கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ள முள்கி யுரைக்குந் திருப்பெயர்
வள்ளல் மாமயி லாடு துறையுறை
வெள்ளந் தாங்கு சடையனை வேண்டியே. 1

5615. சித்தந் தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை தீரும்மென் பைங்கொடி பால்மதி
வைத்த மாமயி லாடு துறையரன்
கொத்தி னிற்பொலி கொன்றை கொடுக்கிலே. 2

5616. அண்டர் வாழ்வும் அமர ரிருக்கையும்
கண்டு வீற்றிருக் குங்கருத் தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே. 3

5617. வெஞ்சி னக்கடுங் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும் பிறப்பும் அறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறையுறை
அஞ்சொ லாளுமை பங்க னருளிலே. 4

5618. குறைவி லோங்கொடு மாநுட வாழ்க்கையால்
கறைநி லாவிய கண்டனென் தோளினன்
மறைவ லான்மயி லாடு துறையுறை
இறைவன் நீள்கழ லேத்தி யிருக்கிலே. 5

5619. நிலைமை சொல்லுநெஞ் சேதவ மென்செய்தாய்
கலைகள் ஆயவல் லான்கயி லாயநன்
மலையன் மாமயி லாடு துறையன்நம்
தலையின் மேலும் மனத்துளுந் தங்கவே. 6

5620. நீற்றி னான்நிமிர் புன்சடை யான்விடை
ஏற்றி னான்நமை யாளுடை யான்புலன்
மாற்றி னான்மயி லாடு துறையென்று
போற்று வார்க்குமுண் டோபுவி வாழ்க்கையே. 7

5621. கோலும் புல்லு மொருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்
நீல மாமயி லாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே. 8

5622.பணங்கொ ளாடர வல்குற் பகீரதி
மணங்கொ ளச்சடை வைத்த மறையவன்
வணங்கு மாமயி லாடு துறையரன்
அணங்கொர் பால்கொண்ட கோல மழகிதே. 9

5623.நீணி லாஅர வச்சடை நேசனைப்
பேணி லாதவர் பேதுற வோட்டினோம்
வாணி லாமயி லாடு துறைதனைக்
காணி லார்க்குங் கடுந்துய ரில்லையே. 10

5624.பருத்த தோளும் முடியும் பொடிபட
இருத்தி னானவ னின்னிசை கேட்டலும்
வரத்தி னான்மயி லாடு துறைதொழும்
கரத்தி னார்வினைக் கட்டறுங் காண்மினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 40. திருக்கழிப்பாலை – திருக்குறுந்தொகை

5625.வண்ண மும்வடி வுஞ்சென்று கண்டிலள்
எண்ணி நாமங்க ளேத்தி நிறைந்திலள்
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
அண்ண லேயறி வானிவள் தன்மையே. 1

5626.மருந்து வானவ ருய்யநஞ் சுண்டுகந்
திருந்த வன்கழிப் பாலையு ளெம்பிரான்
திருந்து சேவடி சிந்தையுள் வைத்திவள்
பரிந்து ரைக்கிலு மென்சொற் பழிக்குமே. 2

5627.மழலை தான்வரச் சொல்தெரி கின்றிலள்
குழலின் நேர்மொழி கூறிய கேண்மினோ
அழக னேகழிப் பாலையெம் மண்ணலே
இகழ்வ தோவெனை யேன்றுகொ ளென்னுமே. 3

5628.செய்ய மேனிவெண் ணீறணி வான்றனை
மைய லாகி மதிக்கில ளாரையும்
கைகொள் வெண்மழு வன்கழிப் பாலையெம்
ஐய னேயறி வானிவள் தன்மையே. 4

5629. கருத்த னைக்கழிப் பாலையுள் மேவிய
ஒருத்த னைஉமை யாளொரு பங்கனை
அருத்தி யாற்சென்று கண்டிட வேண்டுமென்
றொருத்தி யாருள மூசல தாடுமே. 5

5630. கங்கை யைச்சடை வைத்து மலைமகள்
நங்கை யையுட னேவைத்த நாதனார்
திங்கள் சூடி திருக்கழிப் பாலையான்
இங்கு வந்திடு மென்றிறு மாக்குமே. 6

5631. ஐய னேயழ கேயன லேந்திய
கைய னேகறை சேர்தரு கண்டனே
மையு லாம்பொழில் சூழ்கழிப் பாலையெம்
ஐய னேவிதி யேயரு ளென்னுமே.
7

5632. பத்தர் கட்கமு தாய பரத்தினை
முத்த னைமுடி வொன்றிலா மூர்த்தியை
அத்த னையணி யார்கழிப் பாலையெம்
சித்த னைச்சென்று சேருமா செப்புமே. 8,9

5633. பொன்செய் மாமுடி வாளரக் கன்தலை
அஞ்சு நான்குமொன் றும்மிறுத் தானவன்
என்செ யான்கழிப் பாலையு ளெம்பிரான்
துஞ்சும் போதும் துணையென லாகுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 41. திருப்பைஞ்ஞீலி – திருக்குறுந்தொகை

5634. உடையர் கோவண மொன்றுங் குறைவிலர்
படைகொள் பாரிடஞ் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
சடையிற் கங்கை தரித்த சதுரரை
அடைய வல்லவர்க் கில்லை அவலமே. 1

5635. மத்த மாமலர் சூடிய மைந்தனார்
சித்த ராய்த்திரி வார்வினை தீர்ப்பரால்
பத்தர் தாந்தொழு தேத்துபைஞ் ஞீலியெம்
அத்த னைத்தொழ வல்லவர் நல்லரே. 2

5636. விழுது சூலத்தன் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சிருள் காட்டகத் தாடலான்
பழுதொன் றின்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே. 3

5637. ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூல லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்துபைஞ் ஞீலியுள்
என்றும் மேவி யிருந்த அடிகளே. 4

5638. வேழத் தின்னுரி போர்த்த விகிர்தனார்
தாழச் செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
தாழைத் தண்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியார்
யாழின் பாட்டை யுகந்த அடிகளே. 5

5639. குண்டு பட்டுக் குறியறி யாச்சமண்
மிண்ட ரோடு படுத்துய்யப் போந்துநான்
கண்டங் கார்வயல் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
அண்ட வாண னடியடைந் துய்ந்தனே. 6

5640. வரிப்பை யாடர வாட்டி மதகரி
உரிப்பை மூடிய வுத்தம னாருறை
திருப்பைஞ் ஞீலி திசைதொழு வார்கள்போய்
இருப்பர் வானவ ரோடினி தாகவே. 7

5641. கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும்பைஞ் ஞீலியார்
பேடு மாணும் பிறரறி யாததோர்
ஆடு நாக மசைத்த அடிகளே. 8

5642. காரு லாமலர்க் கொன்றையந் தாரினான்
வாரு லாமுலை மங்கையோர் பங்கினன்
தேரு லாம்பொழில் சூழ்ந்தபைஞ் ஞீலியெம்
ஆர்கி லாவமு தையடைந் துய்ம்மினே. 9

5643. தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட அருளுமெம் மானிடம்
இருக்கை ஞீலியென் பார்க்கிட ரில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 42. திருவேட்களம் – திருக்குறுந்தொகை

5644. நன்று நாடொறும் நம்வினை போயறும்
என்று மின்பந் தழைக்கவி ருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே. 1

5645. கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்
பொருப்பு வெஞ்சிலை யாற்புரஞ் செற்றவன்
விருப்பன் மேவிய வேட்களங் கைதொழு
திருப்ப னாகி லெனக்கிட ரில்லையே. 2

5646. வேட்க ளத்துறை வேதிய னெம்மிறை
ஆக்க ளேறுவ ரானைஞ்சு மாடுவர்
பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றினால்
காப்பர் நம்மைக் கறைமிடற் றண்ணலே. 3

5647. அல்ல லில்லை அருவினை தானில்லை
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வ னார்திரு வேட்களங் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே. 4

5648. துன்ப மில்லைத் துயரில்லை யாமினி
நம்ப னாகிய நன்மணி கண்டனார்
என்பொ னாருறை வேட்கள நன்னகர்
இன்பன் சேவடி யேத்தி யிருப்பதே. 5

5649. கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்நீர்
சிட்ட னார்திரு வேட்களங் கைதொழப்
பட்ட வல்வினை யாயின பாறுமே. 6

5650. வட்ட மென்முலை யாளுமை பங்கனார்
எட்டு மொன்று மிரண்டுமூன் றாயினார்
சிட்டர் சேர்திரு வேட்களங் கைதொழு
திட்ட மாகி யிருமட நெஞ்சமே. 7

5651. நட்ட மாடிய நம்பனை நாள்தொறும்
இட்டத் தாலினி தாக நினைமினோ
வட்ட வார்முலை யாளுமை பங்கனார்
சிட்ட னார்திரு வேட்களந் தன்னையே. 8

5652. வட்ட மாமதில் மூன்றுடை வல்லரண்
சுட்ட கொள்கைய ராயினுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் பொற்றிரு வேட்களச் செல்வரே. 9

5653. சேட னாருறை யுஞ்செழு மாமலை
ஓடி ஆங்கெடுத் தான்முடி பத்திற
வாட வூன்றி மலரடி வாங்கிய
வேட னாருறை வேட்களஞ் சேர்மினே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 43. திருநல்லம் – திருக்குறுந்தொகை

5654. கொல்லத் தான்நம னார்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய்ய லாவதெ னேழைகாள்
நல்லத் தான்நமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேல்துயர் தீருமே. 1

5655. பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ
தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்
நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே. 2

5656. பிணிகொள் வார்குழற் பேதையர் காதலால்
பணிகண் மேவிப் பயனில்லைப் பாவிகாள்
அணுக வேண்டி லரன்நெறி யாவது
நணுகு நாதன் நகர்திரு நல்லமே. 3

5657. தமக்கு நல்லது தம்முயிர் போயினால்
இமைக்கும் போது மிராதிக் குரம்பைதான்
உமைக்கு நல்லவன் தானுறை யும்பதி
நமக்கு நல்லது நல்ல மடைவதே. 4

5658. உரை தளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிடம் நல்லமே
பரவு மின்பணி மின்பணி வாரொடே
விரவு மின்விர வாரை விடுமினே. 5

5659. அல்ல லாகஜம் பூதங்க ளாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்லம் மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே. 6

5660. மாத ராரொடு மக்களுஞ் சுற்றமும்
பேத மாகிப் பிரிவதன் முன்னமே
நாதன் மேவிய நல்லம் நகர்தொழப்
போது மின்னெழு மின்புக லாகுமே. 7

5661. வெம்மை யான வினைக்கடல் நீங்கிநீர்
செம்மை யாய சிவகதி சேரலாம்
சும்மை யார்மலர் தூவித் தொழுமினோ
நம்மை யாளுடை யானிடம் நல்லமே. 8

5662. கால மான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்
மாலும் மாமல ரானொடு மாமறை
நாலும் வல்லவர் கோனிடம் நல்லமே. 9

5663. மல்லை மல்கிய தோளரக் கன்வலி
ஒல்லை யில்லொழித் தானுறை யும்பதி
நல்ல நல்ல மெனும்பெயர் நாவினால்
சொல்ல வல்லவர் தூநெறி சேர்வரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 44. திருஆமாத்தூர் – திருக்குறுந்தொகை

5664. மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத் தேடியுங் காண்கிலர் தாள்முடி
ஆமாத் தூரர னேயரு ளாயென்றென்
றேமாப் பெய்திக்கண் டாரிறை யானையே. 1

5665. சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும்
அந்தி யானை ஆமாத்து ரழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே. 2

5666. காமாத் தம்மெனுங் கார்வலைப் பட்டுநான்
போமாத் தையறி யாது புலம்புவேன்
ஆமாத் தூரர னேயென் றழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத் தித்திக்குமே. 3

5667. பஞ்ச பூத வலையிற் படுவதற்
கஞ்சி நானு மாமாத்தூ ரழகனை
நெஞ்சி னால்நினைந் தேன்நினை வெய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே. 4

5668. குராமன் னுங்குழ லாளொரு கூறனார்
அராமன் னுஞ்சடை யான்திரு வாமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் யீசனை
நிராம யன்தனை நாளும் நினைமினே. 5

5669. பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்
அத்த னையணி யாமாத்தூர் மேவிய
முத்தி னையடி யேனுள் முயறலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே. 6

5670. நீற்றி னார்திரு மேனியன் நேரிழை
கூற்றி னான்குழற் கோலச் சடையிலோர்
ஆற்றி னானணி யாமாத்தூர் மேவிய
ஏற்றி னான்நமை யாளுடைய யீசனே. 7

5671. பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்
கண்ணித் தாகு மமுதினை யாமாத்தூர்
சண்ணிப் பானைத் தமர்க்கணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் னானவன் காண்மினே. 8

5672. குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்ட ரோடெனை வேறு படுத்துய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்
தண்ட னாரிட மாமாத்தூர் காண்மினே. 9

5673. வானஞ் சாடு மதியர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய வாமாத்தூ ரையனே. 10

5674. விடலை யாய்விலங் கல்லெடுத் தான்முடி
அடர வோர்விர லூன்றிய வாமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக் கென்னுளம்
இடம தாகக்கொண் டின்புற் றிருப்பனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 45. திருத்தோணிபுரம் – திருக்குறுந்தொகை

6575. மாதி யன்று மனைக்கிரு வென்றக்கால்
நீதி தான்சொல நீயெனக் காரெனும்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி யாவன்நா னென்னுமென் தையலே. 1

5676. நக்கம் வந்து பலியிடென் றார்க்கிட்ட
மிக்க தையலை வெள்வளை கொள்வது
தொக்க நீர்வயல் தோணி புரவர்க்குத்
தக்க தன்று தமது பெருமைக்கே. 2

5677. கெண்டை போல்நய னத்திம வான்மகள்
வண்டு வார்குழ லாளுட னாகவே
துண்ட வான்பிறைத் தோணி புரவரைக்
கண்டு காமுறு கின்றனள் கன்னியே. 3

5678. பாலை யாழ்மொழி யாளவள் தாழ்சடை
மேல ளாவது கண்டனள் விண்ணுறச்
சோலை யார்தரு தோணி புரவர்க்குச்
சால நல்லளா கின்றனள் தையலே. 4

5679. பண்ணின் நேர்மொழி யாள்பலி யிட்டவிப்
பெண்ணை மால்கொடு பெய்வளை கொள்வது
சுண்ண மாடிய தோணிபு ரத்துறை
அண்ண லாருக்குச் சால அழகிதே. 5

5680. முல்லை வெண்நகை மொய்குழ லாயுனக்
கல்ல னாவ தறிந்திலை நீகனித்
தொல்லை யார்பொழில் தோணி புரவர்க்கே
நல்லை யாயிடு கின்றனை நங்கையே. 6

5681. ஒன்று தானறி யாருல கத்தவர்
நின்று சொல்லி நிகழ்ந்த நினைப்பிலர்
துன்று வார்பொழில் தோணி புரவர்தம்
கொன்றை சூடுங் குறிப்பது வாகுமே. 7

5682. உறவு பேய்க்கண முண்பது வெண்தலை
உறைவ தீமம் உடலிலோர் பெண்கொடி
துறைக ளார்கடல் தோணி புரத்துறை
இறைவ னார்க்கிவ ளென்கண்டன் பாவதே. 8

5683. மாக யானை மருப்பேர் முலையினர்
போக யானு மவள்புக்க தேபுகத்
தோகை சேர்தரு தோணி புரவர்க்கே
ஆக யானு மவர்க்கினி யாளதே. 9

5684. இட்ட மாயின செய்வாளென் பெண்கொடி
கட்டம் பேசிய காரரக் கன்றனைத்
துட்ட டக்கிய தோணி புரத்துறை
அட்ட மூர்த்திக்கு அன்பது வாகியே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 46. திருப்புகலூர் – திருக்குறுந்தொகை

5685. துன்னக் கோவணச் சுண்ணவெண் ணீறணி
பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ
மின்னக் கன்னவெண் திங்களைப் பாம்புடன்
என்னுக் கோவுடன் வைத்திட் டிருப்பதே. 1

5686. இரைக்கும் பாம்பு மெறிதரு திங்களும்
நுரைக்குங் கங்கையும் நுண்ணிய செஞ்சடைப்
புரைப்பி லாத பொழிற்புக லூரரை
உரைக்கு மாசொல்லி யொள்வளை சோருமே. 2

5687. ஊச லாம்அர வல்குலென் சோர்குழல்
ஏச லாம்பழி தந்தெழில் கொண்டனர்
ஓசொ லாய்மக ளேமுறை யோவென்று
பூசல் நாமிடு தும்புக லூரர்க்கே. 3

5688. மின்னின் நேரிடை யாளுமை பங்கனைத்
தன்னை நேரொப் பிலாத தலைவனைப்
புன்னைக் கானற் பொழிற்புக லூரனை
என்னு ளாகவைத் தின்புற் றிருப்பனே. 4

5689. விண்ணி னார்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சுங்
கண்ணி னாற்கழல் காண்பிட மேதெனில்
புண்ணி யன்புக லுருமென் நெஞ்சுமே. 5

5690. அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு
பண்டு நான்மறை யோதிய பாடலன்
தொண்ட ராகித் தொழுது மதிப்பவர்
புண்ட ரீகத்து ளார்புக லூரே. 6

5691. தத்து வந்தலை கண்டறி வாரிலைத்
தத்து வந்தலை கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனலன் தண்புக லூரனே. 7

5692. பெருங்கை யாகிப் பிளிறி வருவதோர்
கருங்கை யானைக் களிற்றுரி போர்த்தவர்
வருங்கை யானை மதகளி றஞ்சினைப்
பொருங்கை யானைகண் டீர்புக லூரரே. 8

5693. பொன்னொத் தநிறத் தானும் பொருகடல்
தன்னொத் தநிறத் தானு மறிகிலாப்
புன்னைத் தாது பொழிற்புக லூரரை
என்னத்தாவென என்னிடர் தீருமே. 9

5694. மத்த னாய்மதி யாது மலைதனை
எத்தி னான்திரள் தோண்முடி பத்திற
ஒத்தி னான்விர லாலொருங் கேத்தலும்
பொத்தி னான்புக லூரைத் தொழுமினே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 47. திருவேகம்பம் – திருக்குறுந்தொகை

5695. பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே. 1

5696. நச்சி நாளும் நயந்தடி யார்தொழ
இச்சை யாலுமை நங்கை வழிபடக்
கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழில்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. 2

5697. ஊனி லாவி யியங்கி யுலகெலாம்
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்கவெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. 3

5698. இமையா முக்கண ரென்நெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணாத் தகைமையர்
இமையோ ரேத்த இருந்தவ னேகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. 4

5699. மருந்தி னோடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயவெம் புண்ணியன்
கருந்த டங்கண்ணி னாளுமை கைதொழ
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. 5

5700. பொருளி னோடுநற் சுற்றமும் பற்றிலர்க்
கருளு நன்மைதந் தாயவ ரும்பொருள்
சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்
இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே. 6

5701. மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வான்நமை நோய்வினை வாராமே
காக்கும் நாயகன் கச்சியே கம்பனே. 7

5702. பண்ணி லோசை பழத்தினி லின்சுவை
பெண்ணோ டாணென்று பேசற் கரியவன்
வண்ண மில்லி வடிவுவே றாயவன்
கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே. 8

5703. திருவின் நாயகன் செம்மலர் மேலயன்
வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்
ஒருவ னாயுணர் வாயுணர் வல்லதோர்
கருவுள் நாயகன் கச்சியே கம்பனே. 9

5704. இடுகு நுண்ணிடை யேந்திள மென்முலை
வடிவின் மாதர் திறம்மனம் வையன்மின்
பொடிகொள் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்
அடிக ளெம்மை யருந்துயர் தீர்ப்பரே. 10

5705. இலங்கை வேந்த னிராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செலவளித் தானெங்கள் நாதனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 48. திருவேகம்பம் – திருக்குறுந்தொகை

5706. பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாமே தேவ ரெனாமை நடுக்குறத்
தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ அல்லற் படவடி யோங்களே. 1

5707. அருந்தி றல்அம ரர்அயன் மாலொடு
திருந்த நின்று வழிபடத் தேவியோ
டிருந்த வன்னெழி லார்கச்சி யேகம்பம்
பொருந்தச் சென்று புடைபட் டெழுதுமே. 2

5708. கறைகொள் கண்டத்தெண் தோளிறை முக்கணன்
மறைகொள் நாவினன் வானவர்க் காதியான்
உறையும் பூம்பொழில் சூழ்கச்சி யேகம்பம்
முறைமை யாற்சென்று முந்தித் தொழுதுமே. 3

5709. பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நெறிப்ப டுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றும்மமு தாயவ னேகம்பம்
குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே. 4

5710. சிந்தை யுட்சிவ மாய்நின்ற செம்மையோ
டந்தி யாயன லாய்ப்புனல் வானமாய்ப்
புந்தி யாய்ப்புகுந் துள்ள நிறைந்தவெம்
எந்தை யேகம்பம் ஏத்தித் தொழுமினே. 5

5711. சாக்கி யத்தொடு மற்றுஞ் சமணபடும்
பாக்கி யம்மிலார் பாடுசெ லாதுறப்
பூக்கொள் சேவடி யான்கச்சி யேகம்பம்
நாக்கொ டேத்தி நயந்து தொழுதுமே. 6

5712. மூப்பி னோடு முனிவுறுத் தெந்தமை
ஆர்ப்ப தன்மன் னணியம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழி லேகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே. 7

5713. ஆலு மாமயிர் சாயல்நல் லாரொடும்
சால நீயுறு மால்தவிர் நெஞ்சமே
நீல மாமிடற் றண்ணலே கம்பனார்
கோல மாமலர்ப் பாதமே கும்பிடே. 8

5714. பொய்ய னைத்தையும் விட்டவர் புந்தியுள்
மெய்ய னைச்சுடர் வெண்மழு வேந்திய
கைய னைக்கச்சி யேகம்பம் மேவிய
ஐய னைத்தொழு வார்க்கில்லை யல்லலே. 9

5715. அரக்கன் தன்வலி யுன்னிக் கயிலையை
நெருக்கிச் சென்றெடுத் தான்முடி தோள்நெரித்
திரக்க இன்னிசை கேட்டவ னேகம்பம்
தருக்க தாகநாஞ் சார்ந்து தொழுதுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 49. திருவெண்காடு – திருக்குறுந்தொகை

5716. பண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக்
கண்காட் டிக்கண்ணில் நின்ற மணியொக்கும்
பெண்காட் டிப்பிறைச் சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே. 1

5717. கொள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்றிரு வெண்கா டடைநெஞ்சே. 2

5718. ஊனோக் குமின்பம் வேண்டி யுழலாதே
வானோக் கும்வழி யாவது நின்மினோ
தானோக் குந்தன் னடியவர் நாவினில்
தேனோக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே. 3

5719. பருவெண் கோட்டுப் பைங்கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் றானுமை யஞ்சவே
பெருவெண் காட்டிறை வன்னுறை யும்மிடம்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே. 4

5720. பற்ற வன்கங்கை பாம்பு மதியுடன்
உற்ற வன்சடை யானுயர் ஞானங்கள்
கற்ற வன்கய வர்புர மோரம்பால்
செற்ற வன்திரு வெண்கா டடைநெஞ்சே. 5

5721. கூடி னானுமை யாளொரு பாகமாய்
வேட னாய்விச யற்கருள் செய்தவன்
சேட னார்சிவ னார்சிந்தை மேயவெண்
காட னாரடி யேயடை நெஞ்சமே. 6

5722. தரித்த வன்கங்கை பாம்பு மதியுடன்
புரித்த புன்சடை யான்கய வர்புரம்
எரித்த வன்மறை நான்கினோ டாறங்கம்
விரித்த வன்னுறை வெண்கா டடைநெஞ்சே. 7

5723. பட்டம் இண்டை யவைகொடு பத்தர்கள்
சிட்ட னாதியென் றுசிந்தை செய்யவே
நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நின்ற
அட்ட மூர்த்திதன் வெண்கா டடைநெஞ்சே. 8

5724. ஏன வேடத்தி னானும் பிரமனும்
தான வேடமுன் தாழ்ந்தறி கின்றிலா
ஞான வேடன் விசயற் கருள்செயும்
கான வேடன்றன் வெண்கா டடைநெஞ்சே. 9

5725. பாலை யாடுவர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. 10

5726. இராவ ணஞ்செய மாமதி பற்றவை
இராவ ணம்முடை யான்றனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி யருள்செய்த
இராவ ணன்திரு வெண்கா டடைமினே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 50. திருவாய்மூர் – திருக்குறுந்தொகை

5727. எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ. 1

5728. மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி யுன்னி யுறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனா மாசொல்லி
என்னை வாவென்று போனார தென்கொலோ. 2

5729. தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சே லுன்னை யழைக்கவந் தேனென்றார்
உஞ்சே னென்றுகந் தேயெழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூ ரடிகளே. 3

5730. கழியக் கண்டிலேன் கண்ணெதி ரேகண்டேன்
ஒழியப் போந்திலே னொக்கவே யோட்டந்தேன்
வழியிற் கண்டிலேன் வாய்மூ ரடிகள்தம்
சுழியிற் பட்டுச் சுழல்கின்ற தென்கொலோ. 4

5731. ஒள்ளி யாரிவ ரன்றிமற் றில்லையென்
றுள்கி யுள்கி யுகந்திருந் தேனுக்குத்
தெள்ளி யாரிவர் போலத் திருவாய்மூர்க்
கள்ளி யாரவர் போலக் கரந்ததே. 5

5732. யாதே செய்துமி யாமலோ நீயென்னில்
ஆதே யேயு மளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூர் மருவினார்
போதே யென்றும் புகுந்ததும் பொய்கொலோ. 6

5733. பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப் போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயெனா
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ. 7

5734. திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே. 8

5735. தனக்கே றாமை தவிர்க்கென்று வேண்டினும்
நினைத்தேன் பொய்க்கருள் செய்திடு நின்மலன்
எனக்கே வந்தெதிர் வாய்மூருக் கேயெனாப்
புனற்கே பொற்கோயில் புக்கதும் பொய்கொலோ. 9

5736. தீண்டற் கரிய திருவடி யொன்றினால்
மீண்டற் கும்மிதித் தார்அரக் கன்தனை
வேண்டிக்கொண் டேன்திரு வாய்மூர் விளக்கினைத்
தூண்டிக் கொள்வன்நா னென்றலுந் தோன்றுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 51. திருப்பாலைத்துறை – திருக்குறுந்தொகை

5737. நீல மாமணி கண்டத்தர் நீள்சடைக்
கோல மாமதி கங்கையுங் கூட்டினார்
சூல மான்மழு ஏந்திச் சுடர்முடிப்
பால்நெய் யாடுவர்பாலைத் துறையரே. 1

5738. கவள மால்களிற் றின்உரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையொர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. 2

5739. மின்னின் நுண்ணிடைக் கன்னியர் மிக்கெங்கும்
பொன்னி நீர்மூழ்கிப் போற்றி யடிதொழ
மன்னி நான்மறை யோடுபல் கீதமும்
பன்னி னாரவர் பாலைத் துறையரே. 3

5740. நீடு காடிட மாய்நின்ற பேய்க்கணங்
கூடு பூதங் குழுமிநின் றார்க்கவே
ஆடி னாரழ காகிய நான்மறை
பாடி னாரவர் பாலைத் துறையரே. 4

5741. சித்தர் கன்னியர் தேவர்கள் தானவர்
பித்தர் நான்மறை வேதியர் பேணிய
அத்த னேநமை யாளுடை யாயெனும்
பத்தர் கட்கன்பர் பாலைத் துறையரே. 5

5742. விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்
மண்ணி னார்மற வாதுசி வாயவென்(று)
எண்ணி னார்க்கிட மாஎழில் வானகம்
பண்ணி னாரவர் பாலைத் துறையரே. 6

5743. குரவ னார்கொடு கொட்டியுங் கொக்கரை
விரவி னார்பண் கெழுமிய வீணையும்
மருவு நாண்மலர் மல்லிகை செண்பகம்
பரவு நீர்ப்பொன்னிப் பாலைத் துறையரே. 7

5744. தொடருந் தொண்டரைத் துக்கந் தொடர்ந்துவந்
தடரும் போதர னாயருள் செய்பவர்
கடலின் நஞ்சணி கண்டர் கடிபுனல்
படருஞ் செஞ்சடைப் பாலைத் துறையரே. 8

5745. மேகந் தோய்பிறை சூடுவர்மேகலை
நாகந் தோய்ந்த அரையினர் நல்லியல்
போகந் தோய்ந்த புனர்முலை மங்கையோர்
பாகந் தோய்ந்தவர் பாலைத் துறையரே. 9

5746. வெங்கண் வாளர வாட்டி வெருட்டுவர்
அங்க ணாரடி யார்க்கருள் நல்குவர்
செங்கண் மாலயன் தேடற் கரியவர்
பைங்க ணேற்றினர் பாலைத் துறையரே. 10

5747. உரத்தி னாலரக் கன்னுயர் மாமலை
நெருக்கி னானை நெரித்தவன் பாடலும்
இரக்க மாஅருள் செய்தபா லைத்துறை
கரத்தி னால்தொழு வார்வினை யோயுமே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 52. திருநாகேச்சரம் – திருக்குறுந்தொகை

5748. நல்லர் நல்லதோர் நாகங்கொண் டாட்டுவர்
வல்லர் வல்வினை தீர்க்குங் மருந்துகள்
பல்லில் ஓடுகை யேந்திப் பலிதிரி
செல்வர் போல்திரு நாகேச் சரவரே. 1

5749. நாவ லம்பெருந் தீவினில் வாழ்பவர்
மேவி வந்து வணங்கி வினையொடு
பாவ மாயின பற்றறு வித்திடும்
தேவர் போல்திரு நாகேச் சரவரே. 2

5750. ஓத மார்கட லின்விட முண்டவர்
ஆதி யாரய னோடம ரர்க்கெலாம்
மாதொர் கூறர் மழுவல னேந்திய
நாதர் போல்திரு நாகேச் சரவரே. 3

5751. சந்தி ரன்னொடு சூரியர் தாமுடன்
வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
ஐந்த லையர வின்பணி கொண்டருள்
மைந்தர் போல்மணி நாகேச் சரவரே. 4

5752. பண்டோர் நாளிகழ் வான்பழித் தக்கனார்
கொண்ட வேள்விக் குமண்டை யதுகெடத்
தண்ட மாவிதா தாவின் தலைகொண்ட
செண்டர் போல்திரு நாகேச் சரவரே. 5

5753. வம்பு பூங்குழல் மாது மறுகவோர்
கம்ப யானை யுரித்த கரத்தினர்
செம்பொ னாரித ழிம்மலர்ச் செஞ்சடை
நம்பர் போல்திரு நாகேச் சரவரே. 6

5754. மானை யேந்திய கையினர் மையறு
ஞானச் சோதிய ராதியர் நாமந்தான்
ஆன அஞ்செழுத் தோதவந் தண்ணிக்கும்
தேனர் போல்திரு நாகேச் சரவரே. 7

5755. கழல்கொள் காலினர் காலனைக் காய்ந்தவர்
தழல்கொள் மேனியர் சாந்தவெண் ணீறணி
அழக ரால்நிழற் கீழற மோதிய
குழகர் போல்குளிர் நாகேச் சரவரே. 8

5756. வட்ட மாமதில் மூன்றுடன் வல்லரண்
சுட்ட செய்கைய ராகிலுஞ் சூழ்ந்தவர்
குட்ட வல்வினை தீர்த்துக் குளிர்விக்கும்
சிட்டர் போல்திரு நாகேச் சரவரே. 9

5757. தூர்த்தன் தோண்முடி தாளுந் தொலையவே
சேர்த்தி னார்திருப் பாதத் தொருவிரல்
ஆர்த்து வந்துல கத்தவ ராடிடும்
தீர்த்தர் போல்திரு நாகேச் சரவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருஅதிகைவீரட்டம் – திருக்குறுந்தொகை

5758. கோணன் மாமதி சூடியோர் கோவணம்
நாணில் வாழ்க்கை நயந்தும் பயனிலை
பாணில் வீணை பயின்றவன் வீரட்டம்
காணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 1

5759. பண்ணி னைப்பவ ளத்திரள் மாமணி
அண்ண லையம ரர்தொழு மாதியைச்
சுண்ண வெண்பொடி யான்றிரு வீரட்டம்
நண்ணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 2

5760. உற்ற வர்தம் உறுநோய் களைபவர்
பெற்ற மேறும் பிறங்கு சடையினர்
சுற்றும் பாய்புனல் சூழ்திரு வீரட்டம்
கற்றி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 3

5761. முற்றா வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ
வில்தான் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்றா லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 4

5762. பல்லா ரும்பல தேவர் பணிபவர்
நல்லா ருந்நயந் தேத்தப் படுபவன்
வில்லால் மூவெயி லெய்தவன் வீரட்டம்
கல்லே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 5

5763. வண்டார் கொன்றையும் மத்தம் வளர்சடைக்
கொண்டான் கோல மதியோ டரவமும்
விண்டார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
கண்டா லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 6

5764. அரையார் கோவண ஆடைய னாறெலாந்
திரையா ரொண்புனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்குவீ ரட்டன்பால்
கரையே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 7

5765. நீறு டைத்தடந் தோளுடை நின்மலன்
ஆறு டைப்புனல் பாய்கெடி லக்கரை
ஏறு டைக்கொடி யான்திரு வீரட்டம்
கூறி லல்லதென் கண்துயில் கொள்ளுமே. 8

5766. செங்கண் மால்விடை யேறிய செல்வனார்
பைங்க ணானையி னீருரி போர்த்தவர்
அங்கண் ஞாலம தாகிய வீரட்டம்
கங்கு லாகவென் கண்துயில் கொள்ளுமே. 9

5767. பூணா ணாரம் பொருந்த வுடையவர்
நாணா கவ்வரை வில்லிடை யம்பினால்
பேணார் மும்மதி லெய்தவன் வீரட்டம்
காணே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 10

5768. வரையார்ந் தவயி ரத்திரள் மாணிக்கம்
திரையார்ந் தபுனல் பாய்கெடி லக்கரை
விரையார் நீற்றன் விளங்கிய வீரட்டம்
உரையே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 11

5769. உலந்தார் வெண்தலை உண்கல னாகவே
வலந்தான் மிக்கவவ் வாளரக் கன்றனைச்
சிலம்பார் சேவடி யூன்றினான் வீரட்டம்
புலம்பே னாகிலென் கண்துயில் கொள்ளுமே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 54. திருஅதிகைவீரட்டம் – திருக்குறுந்தொகை

5770. எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்ட லரிடு வார்வினை மாயுமால்
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருக்கே. 1

5771. நீள மாநினைந் தெண்மல ரிட்டவர்
கோள வல்வினை யுங்குறை விப்பரால்
வாள மாலிழி யுங்கெடி லக்கரை
வேளி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 2

5772. கள்ளி னாண்மல ரோரிரு நான்குகொண்
டுள்கு வாரவர் வல்வினை யோட்டுவார்
தெள்ளு நீர்வயல் பாய்கெடி லக்கரை
வெள்ளை நீறணி மேனிவீ ரட்டரே. 3

5773. பூங்கொத் தாயின மூன்றொடோ ரைந்திட்டு
வாங்கி நின்றவர் வல்வினை யோட்டுவார்
வீங்கு தண்புனல் பாய்கெடி லக்கரை
வேங்கைத் தோலுடை யாடைவீ ரட்டரே. 4

5774. தேனப் போதுகள் மூன்றொடோ ரைந்துடன்
தானப் போதிடு வார்வினை தீர்ப்பவர்
மீனத் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேன லானை யுரித்தவீ ரட்டரே. 5

5775. ஏழித் தொன்மலர் கொண்டு பணிந்தவர்
ஊழித் தொல்வினை யோட அகற்றுவார்
பாழித் தண்புனல் பாய்கெடி லக்கரை
வேழத் தின்னுரி போர்த்தவீ ரட்டரே. 6

5776. உரைசெய் நூல்வழி யொண்மல ரெட்டிடத்
திரைகள் போல்வரு வல்வினை தீர்ப்பரால்
வரைகள் வந்திழி யுங்கெடி லக்கரை
விரைகள் சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 7

5777. ஒலி வண்டறை யொண்மல ரெட்டினால்
காலை யேத்த வினையைக் கழிப்பரால்
ஆலி வந்திழி யுங்கெடி லக்கரை
வேலி சூழ்ந்தழ காயவீ ரட்டரே. 8

5778. தாரித் துள்ளித் தடமல ரெட்டினால்
பாரித் தேத்தவல் லார்வினை பாற்றுவார்
மூரித் தெண்திரை பாய்கெடி லக்கரை
வேரிச் செஞ்சடை வேய்ந்தவீ ரட்டரே. 9

5779. அட்ட புட்ப மவைகொளு மாறுகொண்
டட்ட மூர்த்தி அனாதிதன் பாலணைந்
தட்டு மாறுசெய் கிற்பவ திகைவீ
ரட்ட னாரடி சேரு மவர்களே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 55. திருநாரையூர் – திருக்குறுந்தொகை

5780. வீறு தானுடை வெற்பன் மடந்தையோர்
கூற னாகிலுங் கூன்பிறை சூடிலும்
நாறு பூம்பொழில் நாரையூர் நம்பனுக்
காறு சூடலும் அம்ம அழகிதே. 1

5781. புள்ளி கொண்ட புலியுரி யாடையும்
வெள்ளி கொண்டவெண் பூதிமெய் யாடலும்
நள்ளி தெண்டிரை நாரையூ ரான்நஞ்சை
அள்ளி யுண்டலு மம்ம வழகிதே. 2

5782. வேடு தங்கிய வேடமும் வெண்தலை
ஓடு தங்கிய வுண்பலி கொள்கையும்
நாடு தங்கிய நாரையூ ரான்நடம்
ஆடு பைங்கழ லம்ம வழகிதே. 3

5783. கொக்கின் தூவலுங் கூவிளங் கண்ணியும்
மிக்க வெண்டலை மாலை விரிசடை
நக்க னாகிலும் நாரையூர் நம்பனுக்
கக்கி னாரமு மம்ம வழகிதே. 4

5784. வடிகொள் வெண்மழு மான்அமர் கைகளும்
பொடிகொள் செம்பவ ளம்புரை மேனியும்
நடிகொள் நன்மயில் சேர்திரு நாரையூர்
அடிகள் தம்வடி வம்ம வழகிதே.

5785. சூலம் மல்கிய கையுஞ் சுடரொடு
பாலும் நெய்தயி ராடிய பான்மையும்
ஞாலம் மல்கிய நாரையூர் நம்பனுக்
கால நீழலு மம்ம வழகிதே. 6

5786. பண்ணி னால்மறை பாடலொ டாடலும்
எண்ணி லார்புர மூன்றெரி செய்ததும்
நண்ணி னார்துயர் தீர்த்தலும் நாரையூர்
அண்ண லார்செய்கை யம்ம வழகிதே. 7

5787. என்பு பூண்டெரு தேறி யிளம்பிறை
மின்பு ரிந்த சடைமேல் விளங்கவே
நன்ப கற்பலி தேரினும் நாரையூர்
அன்ப னுக்கது வம்ம வழகிதே. 8

5788. முரலுங் கின்னர மொந்தை முழங்கவே
இரவி னின்றெரி யாடலு நீடுலாம்
நரலும் வாரிநன் னாரையூர் நம்பனுக்
கரவும் பூணுத லம்ம வழகிதே. 9

5789. கடுக்கை யஞ்சடை யன்கயி லைம்மலை
எடுத்த வாளரக் கன்தலை யீரைஞ்சும்
நடுக்கம் வந்திற நாரையூ ரான்விரல்
அடுத்த தன்மையு மம்ம வழகிதே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 56. திருக்கோளிலி – திருக்குறுந்தொகை

5790. மைக்கொள் கண்ணுமை பங்கினன் மான்மழுத்
தொக்க கையினன் செய்யதோர் சோதியன்
கொக்க மர்பொழில் சூழ்தரு கோளிலி
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. 1

5791. முத்தி னைமுத லாகிய மூர்த்தியை
வித்தி னைவிளை வாய விகிர்தனைக்
கொத்த லர்பொழில் சூழ்தரு கோளிலி
அத்த னைத்தொழ நீங்கும்நம் அல்லலே. 2

5792. வெண்டி ரைப்பர வைவிட முண்டதோர்
கண்ட னைக்கலந் தார்தமக் கன்பனைக்
கொண்ட லம்பொழிற் கோளிலி மேவிய
அண்ட னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 3

5793. பலவும் வல்வினை பாறும் பரிசினால்
உலவுங் கங்கையுந் திங்களு மொண்சடை
குலவி னான்குளி ரும்பொழிற் கோளிலி
நிலவி னான்றனை நித்தல் நினைமினே. 4

5794. அல்ல லாயின தீரு மழகிய
முல்லை வெண்முறு வல்லுமை யஞ்சவே
கொல்லை யானை யுரித்தவன் கோளிலிச்
செல்வன் சேவடி சென்று தொழுமினே. 5

5795. ஆவின் பால்கண் டளவி லருந்தவப்
பாலன் வேண்டலுஞ் செல்லென்று பாற்கடல்
கூவி னான்குளி ரும்பொழிற் கோளிலி
மேவி னானைத் தொழவினை வீடுமே. 6

5796. சீர்த்த நன்மனை யாளுஞ் சிறுவரும்
ஆர்த்த சுற்றமும் பற்றிலை யாதலால்
கூத்த னாருறை யுந்திருக் கோளிலி
ஏத்தி நீர்தொழு மின்இடர் தீருமே. 7

5797. மால தாகி மயங்கும் மனிதர்காள்
காலம் வந்து கடைமுடி யாமுனம்
கோல வார்பொழிற் கோளிலி மேவிய
நீல கண்டனை நின்று நினைமினே. 8

5798. கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி யீசனைப்
பாடு மின்இர வோடு பகலுமே. 9

5799. மடுத்து மாமலை யேந்தலுற் றான்றனை
அடர்த்துப் பின்னு மிரங்கி யவற்கருள்
கொடுத்த வன்னுறை கோளிலி யேதொழ
விடுத்து நீங்கிடும் மேலை வினைகளே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 57. திருக்கோளிலி – திருக்குறுந்தொகை

5800. முன்ன மேநினை யாதொழிந் தேனுனை
இன்னம் நானுன சேவடி யேந்திலேன்
செந்நெல் ஆர்வயல் சூழ்திருக் கோளிலி
மன்ன னேயடி யேனை மறவலே. 1

5801. விண்ணு ளார்தொழு தேத்தும் விளக்கினை
மண்ணு ளார்வினை தீர்க்கும் மருந்தினைப்
பண்ணு ளார்பயி லுந்திருக் கோளிலி
அண்ண லாரடி யேதொழு துய்ம்மினே. 2

5802. நாளும் நம்முடை நாள்க ளறிகிலோம்
ஆளும் நோய்களோ ரைம்பதோ டாறெட்டும்
ஏழை மைப்பட் டிருந்துநீர் நையாதே
கோளிலி யரன் பாதமே கூறுமே. 3

5803. விழவி னோசை யொலியறாத் தண்பொழில்
பழகி னார்வினை தீர்க்கும் பழம்பதி
அழல்கை யான மருந்திருக் கோளிலிக்
குழக னார்திருப் பாதமே கூறுமே. 4

5804. மூல மாகிய மூவர்க்கும் மூர்த்தியைக்
கால னாகிய காலற்குங் காலனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலிச்
சூல பாணிதன் பாதந் தொழுமினே. 5

5805. காற்ற னைக்கடல் நஞ்சமு துண்டவெண்
நீற்ற னைநிமிர் புன்சடை யண்ணலை
ஆற்ற னையம ருந்திருக் கோளிலி
ஏற்ற னாரடி யேதொழு தேத்துமே. 6

5806. வேத மாயவின் ணோர்கள் தலைவனை
ஓதி மன்னுயி ரேத்து மொருவனைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. 7

5807. நீதி யாற்றொழு வார்கள் தலைவனை
வாதை யான விடுக்கும் மணியினைக்
கோதி வண்டறை யுந்திருக் கோளிலி
வேத நாயகன் பாதம் விரும்புமே. 8

5808. மாலும் நான்முக னாலு மறிவொணாப்
பாலின் மென்மொழி யாளொரு பங்கனைக்
கோல மாம்பொழில் சூழ்திருக் கோளிலி
நீல கண்டனை நித்தல் நினைமினே. 9

5809. அரக்க னாய இலங்கையர் மன்னனை
நெருக்கி யம்முடி பத்திறுத் தானவற்
கிரக்க மாகிய வன்றிருக் கோளிலி
அருத்தி யாயடி யேதொழு தும்ம்மினே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 58. திருப்பழையாறைவடதளி – திருக்குறுந்தொகை

5810. தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமே
அலையி னார்பொழி லாறை வடதளி
நிலையி னானடி யேநினைந் தும்ம்மினே. 1

5811. மூக்கி னால்முரன் றோதியக் குண்டிகை
தூக்கி னார்குலந் தூரறுத் தேதனக்
காக்கி னானணி யாறை வடதளி
நோக்கி னார்க்கில்லை யால்அரு நோய்களே. 2

5812. குண்ட ரைக்குண மில்லரைக் கூறையில்
மிண்ட ரைத்துரந் தவிம லன்றனை
அண்ட ரைப்பழை யாறை வடதளிக்
கண்ட ரைத்தொழு துய்ந்தன கைகளே. 3

5813. முடைய ரைத்தலை முண்டிக்கும் மொட்டரைக்
கடைய ரைக்கடிந் தார்கனல் வெண்மழுப்
படைய ரைப்பழை யாறை வடதளி
உடைய ரைக்குளிர்ந் துள்குமென் னுள்ளமே. 4

5814. ஒள்ள ரிக்கணார் முன்னமண் நின்றுணும்
கள்ள ரைக்கடிந் தகருப் பூறலை
அள்ள லம்புன லாறை வடதளி
வள்ள லைப்புக ழத்துயர் வாடுமே. 5

5815. நீதி யைக்கெட நின்றம ணேயுணும்
சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
ஆதி யைப்பழை யாறை வடதளிச்
சோதி யைத்தொழு வார்துயர் தீருமே. 6

5816. திரட்டி ரைக்க வளந்திணிக் குஞ்சமண்
பிரட்ட ரைப்பிரித் தபெரு மான்றனை
அருட் டிறத்தணி யாறை வடதளித்
தெருட்ட ரைத்தொழத் தீவினை தீருமே. 7

5817. ஓதி னத்தெழுத் தஞ்சுண ராச்சமண்
வேதி னைப்படுத் தானைவெங் கூற்றுதை
பாத னைப்பழை யாறை வடதளி
நாத னைத்தொழ நம்வினை நாசமே. 8

5818. வாயி ருந்தமி ழேபடித் தாளுறா
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினான்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே. 9

5819. செருத்த னைச்செயுஞ் சேணரக் கன்னுடல்
எருத்தி றவிர லாலிறை யூன்றிய
அருத்த னைப்பழை யாறை வடதளித்
திருத்த னைத்தொழு வார்வினை தேயுமே. 10

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 59. திருமாற்பேறு – திருக்குறுந்தொகை

5820. பொருமால் திண்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடும்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்தகு
திருமாற் பேறு தொழவினை தேயுமே. 1

5821. ஆலத் தார்நிழ லில்லற நால்வர்க்குக்
கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்
மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத் தான்தொழு வார்க்கிட ரில்லையே. 2

5822.துணிவண் ணச்சுட ராழிகொள் வானெண்ணி
அணிவண் ணத்தலர் கொண்டடி யர்ச்சித்த
மணிவண் ணற்கருள் செய்தவன் மாற்பேறு
பணிவண் ணத்தவர்க் கில்லையாம் பாவமே. 3

5823.தீதவை செய்து தீவினை வீழாதே
காதல் செய்து கருத்தினில் நின்றநன்
மாத வர்பயில் மாற்பேறு கைதொழப்
போது மின்வினை யாயின போகுமே. 4

5824.வார்கொள் மென்முலை மங்கையொர் பங்கினன்
வார்கொள் நன்முர சம்மறை யவ்வறை
வார்கொள் பைம்பொழில் மாற்பேறு கைதொழு
வார்கள் மன்னுவர் பொன்னுல கத்திலே. 5

5825.பண்டை வல்வினை பற்றறுக் கும்வகை
உண்டு சொல்லுவன் கேண்மி னொளிகிளர்
வண்டு சேர்பொழில் சூழ்திரு மாற்பேறு
கண்டு கைதொழத் தீருங் கவலையே. 6

5826.மழுவ லான்திரு நாமம் மகிழ்ந்துரைத்
தழுவ லார்களுக் கன்புசெய் தின்பொடும்
வழுவி லாவருள் செய்தவன் மாற்பேறு
தொழுவ லார்தமக் கில்லைத் துயரமே. 7

5827.முன்ன வன்னுல குக்கு முழுமணிப்
பொன்ன வன்திகழ் முத்தொடு போகமாம்
மன்ன வன்திரு மாற்பேறு கைதொழும்
அன்ன வரெமை யாளுடை யார்களே. 8

5828.வேட னாய்விச யன்னொடும் எய்துவெம்
காடு நீடுகந் தாடிய கண்ணுதல்
மாட நீடுய ருந்திரு மாற்பேறு
பாடு வார்பெறு வார்பர லோகமே. 9

5829.கருத்த னாய்க்கயி லாய மலைதனைத்
தருக்கி னாலெடுத் தானைத் தகரவே
வருத்தி யாரருள் செய்தவன் மாற்பேறு
அருத்தி யால்தொழு வார்க்கில்லை யல்லலே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 60. திருமாற்பேறு – திருக்குறுந்தொகை

5830. ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. 1

5831. அச்ச மில்லைநெஞ் சேயரன் நாமங்கள்
நிச்ச லுந்நினை யாய்வினை போயறக்
கச்ச மாவிட முண்டகண் டாவென
வைச்ச மாநிதி யாவர்மாற் பேறரே. 2

5832. சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்கு ளருளுமாற் பேறரே. 3

5833. இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. 4

5834. சாற்றிச் சொல்லுவன் கேண்மின் தரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம்பொ னாவர்மாற் பேறரே. 5

5835. ஈட்டும் மாநிதி சால இழக்கினும்
வீட்டுங் காலன் விரைய அழைக்கினுங்
காட்டில் மாநட மாடுவாய் காவெனில்
வாட்டந் தீர்க்கவும் வல்லர் மாற்பேறரே. 6

5836. ஐய னேயர னேயென் றரற்றினால்
உய்ய லாமுல கத்தவர் பேணுவர்
செய்ய பாத மிரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. 7,8,9

5837. உந்திச் சென்று மலையை யெடுத்தவன்
சந்து தோளொடு தாளிற வூன்றினான்
மந்தி பாய்பொழில் சூழுமாற் பேறென
அந்த மில்லதோ ரின்பம் அணுகுமே. 10

திருச்சிற்றம்பலம்

## 61. திருவரிசிற்கரைப்புத்தூர் – திருக்குறுந்தொகை

5838. முத்தூ ரும்புனல் மொய்யரி சிற்கரைப்
புத்தூ ரன்னடி போற்றியென் பாரெலாம்
பொய்த்தூ ரும்புல னைந்தொடு புல்கிய
மைத்தூ ரும்வினை மாற்றவும் வல்லரே. 1

5839. பிறைக்க ணிச்சடை யெம்பெரு மானென்று
கறைக்க ணித்தவர் கண்ட வணக்கத்தாய்
உறக்க ணித்துரு காமனத் தார்களைப்
புறக்க ணித்திடும் புத்தூர்ப் புனிதரே. 2

5840. அரிசி லின்கறை மேலனி யார்தரு
புரிசை நந்திருப் புத்தூர்ப் புனிதனைப்
பரிசொ டும்பர விப்பணி வார்க்கெலாம்
துரிசில் நன்னெறி தோன்றிடுங் காண்மினே. 3

5841. வேத னைமிகு வீணையில் மேவிய
கீத னைக்கிள ருந்நறுங் கொன்றையம்
போத னைப்புனல் சூழ்ந்தபுத் தூரனை
நாத னைநினைந் தென்மனம் நையுமே. 4

5842. அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் விட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றிலும் அண்ணிக்குங் காண்மினே. 5

5843. பாம்பொ டுமதி யும்படர் புன்சடைப்
பூம்புன லும்பொ திந்தபுத் தூருளான்
நாம்ப ணிந்தடி போற்றிட நாள்தொறும்
சாம்ப லென்பு தனக்கணி யாகுமே. 6

5844. கனல்அங் கைதனி லேந்திவெங் காட்டிடை
அனலங் கெய்திநின் றாடுவர் பாடுவர்
பினலஞ் செஞ்சடை மேற்பிறை யுந்தரு
புனலுஞ் சூடுவர் போலும்புத் தூரரே. 7

5845. காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு
நீற்றி னையணி வர்நினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே. 8

5846. முன்னும் முப்புரஞ் செற்றன ராயினும்
அன்ன மொப்பர் அலந்தடைந் தார்க்கெலாம்
மின்னு மொப்பர் விரிசடை மேனிசெம்
பொன்னு மொப்பர்புத் தூரெம் புனிதரே. 9

5847. செருத்த னால்தன தேர்செல வுய்த்திடும்
கருத்த னாய்க்கயி லையெடுத் தானுடல்
பருத்த தோள்கெடப் பாதத் தொருவிரல்
பொருத்தி னார்பொழி லார்ந்தபுத் தூரரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 62. கடுவாய்க்கரைத் திருப்புத்தூர் – திருக்குறுந்தொகை

5848. ஒருத்த னைமூ வுலகொடு தேவர்க்கும்
அருத்த னையடி யேன்மனத் துள்ளமர்
கருத்த னைக்கடு வாய்ப்புன லாடிய
திருத்த னைப்புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தெனே. 1

5849. யாவ ருமறி தற்கரி யான்றனை
மூவ ரின்முத லாகிய மூர்த்தியை
நாவி னல்லுரை யாகிய நாதனைத்
தேவனைப் புத்தூர்ச் சென்றுகண் டுய்ந்தெனே. 2

5850. அன்ப னையடி யாரிடர் நீக்கியைச்
செம்பொ னைத்திக ழுந்திருக் கச்சியே
கம்ப னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நம்ப னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 3

5851. மாத னத்தைமா தேவனை மாறிலாக்
கோத னத்திலைந் தாடியை வெண்குழைக்
காத னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
நாத னைக்கண்டு நானுய்யப் பெற்றெனே. 4

5852. குண்டு பட்டகுற் றந்தவிர்த் தென்னையாட்
கொண்டு நாற்றிறங் காட்டிய கூத்தனைக்
கண்ட னைக்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
அண்ட னைக்கண் டருவினை யற்றெனே. 5

5853. பந்த பாச மறுத்தெனை யாட்கொண்ட
மைந்த னைம்மண வாளனை மாமலர்க்
கந்த நீர்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எந்தை யீசனைக் கண்டினி தாயிற்றே. 6

5854. உம்ப ரானை யுருத்திர மூர்த்தியை
அம்ப ரானை யமலனை யாதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பி ரானைக்கண் டின்பம தாயிற்றே. 7

5855. மாசார் பாச மயக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்த மணாளனைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென இன்பம தாயிற்றே. 8

5856. இடுவா ரிட்ட கவளங் கவர்ந்திரு
கடுவா யிட்டவர் கட்டுரை கொள்ளாதே
கடுவாய்த் தென்கரைப் புத்தூ ரடிகட்காட
படவே பெற்றுநான் பாக்கியஞ் செய்தெனே. 9

5857. அரக்க னாற்ற லழித்தவன் பாடல்கேட்
டிரக்க மாகி யருள்புரி யீசனைத்
திரைக்கொள் நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
இருக்கு நாதனைக் காணப்பெற் றுய்ந்தெனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருதென்குரங்காடுதுறை – திருக்குறுந்தொகை

5858. இரங்கா வன்மனத் தார்க ளியங்குமுப்
புரங்கா வல்அழி யப்பொடி யாக்கினான்
தரங்கா டுந்தட நீர்பொன்னித் தென்கரைக்
குரங்கா டுதுறைக் கோலக்க பாலியே. 1

5859. முத்தி னைமணி யைப்பவ ளத்தொளிர்
தொத்தி னைச்சுடர்ச் சோதியைச் சேரலைசூழ்
கொத்த லர்குரங் காடு துறையுறை
அத்த னென்னஅண் ணித்திட் டிருந்ததே. 2

5860. குளிர்பு னற்குரங் காடுது றையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைந்நினைந் தேனுக்கென் னுள்ளமும்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே. 3

5861. மணவன் காண்மலை யாள்நெடு மங்கலக்
கணவன் காண்கலை ஞானிகள் காதலெண்
குணவன் காண்குரங் காடு துறைதனில்
அணவன் காண்அன்பு செய்யு மடியர்க்கே. 4

5862. ஞாலத் தார்தொழு தேத்திய நன்மையன்
காலத் தான்உயிர் போக்கிய காலினன்
நீலத் தார்மிடற் றான்வெள்ளை நீறணி
கோலத் தான்குரங் காடு துறையனே. 5

5863. ஆட்டி னான்முன் அமணரோ டென்றனைப்
பாட்டி னான்றன பொன்னடிக் கின்னிசை
வீட்டி னான்வினை மெய்யடி யாரொடும்
கூட்டி னான்குரங் காடு துறையனே. 6

5864. மாத்தன் தான்மறை யார்முறை யான்மறை
ஓத்தன் தாருகன் றன்னுயி ருண்டபெண்
போத்தன் தானவன் பொங்கு சினந்தணி
கூத்தன் தான்குரங் காடு துறையனே. 7

5865. நாடி நந்தம ராயின தொண்டர்கள்
ஆடு மின்அழு மின்தொழு மின்னடி
பாடு மின்பர மன்பயி லும்மிடம்
கூடு மின்குரங் காடு துறையையே. 8

5866. தென்றல் நன்னெடுந் தேருடை யானுடல்
பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்
அன்ற அந்தக னைஅயிற் சூலத்தால்
கொன்ற வன்குரங் காடு துறையனே. 9

5867. நற்ற வஞ்செய்த நால்வர்க்கு நல்லறம்
உற்ற நன்மொழி யாலருள் செய்தநல்
கொற்ற வன்குரங் காடு துறைதொழப்
பற்றுந் தீவினை யாயின பாறுமே. 10

5868. கடுத்த தேரரக் கன்கயி லைம்மலை
எடுத்த தோள்தலை யிற்றல றவ்விரல்
அடுத்த லும்மவ னின்னிசை கேட்டருள்
கொடுத்த வன்குரங் காடு துறையனே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 64. திருக்கோழம்பம் – திருக்குறுந்தொகை

5869. வேழம் பத்தைவர் வேண்டிற்று வேண்டிப்போய்
ஆழம் பற்றிவீழ் வார்பல வாதர்கள்
கோழம் பத்துறை கூத்தன் குரைகழல்
தாழும் பத்தர்கள் சாலச் சதுரரே. 1

5870. கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யல்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்பம் மேயவென்
உயிரி னைநினைந் துள்ளம் உருகுமே. 2

5871. வாழும் பான்மைய ராகிய வான்செல்வம்
தாழும் பான்மைய ராகித்தம் வாயினால்
தாழம் பூமணம் நாறிய தாழ்பொழில்
கோழம் பாவெனக் கூடிய செல்வமே. 3

5872. பாட லாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூட லாக்கிடுங் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் துள்மகிழ்ந்
தாடுங் கூத்தனுக் கன்புபட் டாளன்றே. 4

5873. தளிர்கொள் மேனியள் தான்மிக அஞ்சவோர்
பிளிறு வாரணத் தீருரி போர்த்தவன்
குளிர்கொள் நீர்வயற் கோழம்பம் மேவினான்
நளிர்கொள் நீர்சடை மேலு நயந்ததே. 5

5874. நாத ராவர் நமக்கும் பிறர்க்குந்தாம்
வேத நாவர் விடைக்கொடி யார்வெற்பில்
கோதை மாதொடுங் கோழம்பங் கோயில்கொண்
டாதி பாத மடையவல் லார்களே. 6

5875 முன்னை நான்செய்த பாவம் முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றதும்
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே. 7

5876. ஏழை மாரிடம் நின்றிரு கைக்கொடுண்
கோழை மாரொடுங் கூடிய குற்றமாங்
கூழை பாய்வயற் கோழம்பத் தானடி
ஏழை யேன்முன் மறந்தங் கிருந்ததே. 8

5877. அரவ ணைப்பயில் மாலயன் வந்தடி
பரவ னைப்பர மாம்பரஞ் சோதியைக்
குரவ னைக்குர வார்பொழிற் கோழம்பத்
துரவ னையொரு வர்க்குணர் வொண்ணுமே. 9

5878. சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாளுடை யார்களே. 10

5879. துட்ட னாகி மலையெடுத் தஃதின்கீழ்ப்
பட்டு வீழ்ந்து படர்ந்துய்யப் போயினான்
கொட்டம் நாறிய கோழம்பத் தீசனென்
றிட்ட கீத மிசைத்த அரக்கனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. திருப்பூவனூர் – திருக்குறுந்தொகை

5880. பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநூ றாயிர நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. 1

5881. என்ன னென்மனை யெந்தையெ னாருயிர்
தன்னன் தன்னடி யேன்தன மாகிய
பொன்னன் பூவனூர் மேவிய புண்ணியன்
இன்ன னென்றறி வொண்ணா னியற்கையே. 2

5882.குற்றங் கூடிக் குணம்பல கூடாதீர்
மற்றுந் தீவினை செய்தன மாய்க்கலாம்
புற்ற ராவினன் பூவனூ ரீசன்பேர்
கற்று வாழ்த்துங் கழிவதன் முன்னமே. 3

5883.ஆவின் மேவிய ஐந்தமர்ந் தாடுவான்
தூவெண் ணீறு துதைந்தசெம் மேனியான்
மேவ னூல்விரி வெண்ணியின் தென்கரைப்
பூவ னூர்புகு வார்வினை போகுமே. 4

5884.புல்லம் ஊர்தியூர் பூவனூர் பூம்புனல்
நல்ல மூர்திநல் லூர்நனி பள்ளியூர்
தில்லை யூர்திரு வாரூர்சீர் காழிநல்
வல்ல மூரென வல்வினை மாயுமே. 5

5885.அனுச யப்பட் டதுவிது வென்னாதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே. 6

5886.ஆதி நாதன் அமரர்க ளர்ச்சிதன்
வேத நாவன்வெற் பின்மடப் பாவையோர்
பாதி யானான் பரந்த பெரும்படைப்
பூத நாதன்தென் பூவனூர் நாதனே. 7

5887.பூவ னூர்தண் புறம்பயம் பூம்பொழில்
நாவ லூர்நள் ளாறொடு நன்னிலங்
கோவ லூர்குட வாயில் கொடுமுடி
மூவ லூருமுக் கண்ணனூர் காண்மினே. 8

5888.ஏவம் ஏது மிலாஅம ணேதலர்
பாவ காரிகள் சொல்வலைப் பட்டுநான்
தேவ தேவன் திருநெறி யாகிய
பூவ னூர்புகு தப்பெற்ற நாளின்றே. 9

5889.நார ணன்னொடு நான்முக னிந்திரன்
வார ணன்குமர ரன்வணங் குங்கழற்
பூர ணன்திருப் பூவனூர் மேவிய
கார ணன்னெனை யாளுடைக் காளையே. 10

5890.மைக்க டுத்த நிறத்தரக் கன்வரை
புக்கெ டுத்தலும் பூவனூ ரன்னடி
மிக்க டுத்த விரல்சிறி தூன்றலும்
பக்க டுத்தபின் பாடியுந் தானன்றே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருவலஞ்சுழி – திருக்குறுந்தொகை

5891. ஓத மார்கட லின்விட முண்டவன்
பூத நாயகன் பொற்கயி லைக்கிறை
மாதொர் பாகன் வலஞ்சுழி யீசனைப்
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 1

5892.கயிலை நாதன் கறுத்தவர் முப்புரம்
எயில்கள் தீயெழ வெல்வல வித்தகன்
மயில்க ளாலும் வலஞ்சுழி யீசனைப்
பயில்கி லார்சிலர் பாவித் தொழும்பரே. 2

5893.இளைய காலமெம் மானை யடைகிலாத்
துளையி லாச்செவித் தொண்டர்காள் நும்முடல்
வளையுங் காலம் வலஞ்சுழி யீசனைக்
களைக ணாகக் கருதிநீ ருய்ம்மினே. 3

5894.நறைகொள் பூம்புனல் கொண்டெழு மாணிக்காய்க்
குறைவி லாக்கொடுங் கூற்றுதைத் திட்டவன்
மறைகொள் நாவன் வலஞ்சுழி மேவிய
இறைவ னையினி யென்றுகொல் காண்பதே. 4

5895.விண்ட வர்புர மூன்று மெரிகொளத்
திண்தி றற்சிலை யாலெரி செய்தவன்
வண்டு பண்முர லுந்தண் வலஞ்சுழி
அண்ட னுக்கடி மைத்திறத் தாவனே. 5

5896 படங்கொள் பாம்பொடு பான்மதி யஞ்சடை
அடங்க வாழவல் லானும்பர் தம்பிரான்
மடந்தை பாகன் வலஞ்சுழி யானடி
அடைந்த வர்க்கடி மைத்திறந் தாவனே. 6

5897. நாக்கொண் டுபர வும்மடி யார்வினை
போக்க வல்ல புரிசடைப் புண்ணியன்
மாக்கொள் சோலை வலஞ்சுழி யீசன்றன்
ஏக்கொ ளப்புர மூன்றெரி யானவே. 7

5898. தேடு வார்பிர மன்திரு மாலவர்
ஆடு பாதம் அவரு மறிகிலார்
மாட வீதி வலஞ்சுழி யீசனைத்
தேடு வானுறு கின்றதென் சிந்தையே. 8

5899. கண்ப னிக்குங்கை கூப்புங்கண் மூன்றுடை
நண்ப னுக்கெனை நான்கொடுப் பேனெனும்
வண்பொன் னித்தென் வலஞ்சுழி மேவிய
பண்ப னிப்பொனைச் செய்த பரிசிதே. 9

5900. இலங்கை வேந்த னிருபது தோளிற
நலங்கொள் பாதத் தொருவிர லூன்றினான்
மலங்கு பாய்வயல் சூழ்ந்த வலஞ்சுழி
வலங்கொள் வாரடி யென்றலை மேலவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 67. திருவாஞ்சியம் – திருக்குறுந்தொகை

5901. படையும் பூதமும் பாம்புபுல் வாயதன்
உடையுந் தாங்கிய வுத்தம னார்க்கிடம்
புடைநி லாவிய பூம்பொழில் வாஞ்சியம்
அடைய வல்லவர்க் கல்லொன் றில்லையே. 1

5902. பறப்பை யும்பசு வும்படுத் துப்பல
திறத்த வும்முடை யோர்திக ழும்பதி
கறைப்பி றைச்சடைக் கண்ணுதல் சேர்தரு
சிறப்பு டைத்திரு வாஞ்சியஞ் சேர்மினே. 2

5903. புற்றில் ஆடர வோடு புனல்மதி
தெற்று செஞ்சடைத் தேவர்பி ரான்பதி
சுற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
பற்றிப் பாடுவார்க் குப்பாவ மில்லையே. 3

5904. அங்க மாறும் அருமறை நான்குடன்
தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்
செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
தங்கு வார்நம் அமரர்க் கமரரே. 4

5905. நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை
ஆறு சூடும் அடிக ளுறைபதி
மாறு தானொருங் கும்வயல் வாஞ்சியம்
தேறி வாழ்பவர்க் குச்செல்வ மாகுமே. 5

5906. அற்றுப் பற்றின்றி யாரையு மில்லவர்க்
குற்ற நற்றுணை யாவா னுறைபதி
தெற்று மாடங்கள் சூழ்திரு வாஞ்சியம்
கற்றுச் சேர்பவர்க் குக்கருத் தாவதே. 6

5907. அருக்க னங்கி யமனொடு தேவர்கள்
திருத்துஞ் சேவடி யான்றிக ழுந்நகர்
ஒருத்தி பாக முகந்தவன் வாஞ்சியம்
அருத்தி யாலடை வார்க்கில்லை யல்லலே. 7,8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருநள்ளாறு – திருக்குறுந்தொகை

5908. உள்ளா றாததோர் புண்டரி கத்திரள்
தெள்ளா றாச்சிவ சோதித் திரளினைக்
கள்ளா றாதபொற் கொன்றை கமழ்சடை
நள்ளா றாவென நம்வினை நாசமே. 1

5909. ஆர ணப்பொரு ளாமரு ளாளனார்
வார ணத்துரி போர்த்தம ணாளனார்
நாரணன் நண்ணி யேத்துநள் ளாறனார்
கார ணக்கலை ஞானக் கடவுளே. 2

5910. மேகம் பூண்டதோர் மேருவிற் கொண்டெயில்
சோகம் பூண்டழல் சோரத்தொட் டான்அவன்
பாகம் பூண்டமால் பங்கயத் தானொடு
நாகம் பூண்டுகூத் தாடுநள் ளாறனே. 3

5911. மலியுஞ் செஞ்சடை வாளர வம்மொடு
பொலியும் பூம்புனல் வைத்த புனிதனார்
நலியுங் கூற்றை நலிந்தநள் ளாறர்தம்
வலியுங் கண்டிறு மாந்து மகிழ்வனே. 4

5912. உறவ னாய்நிறைந் துள்ளங் குளிர்ப்பவன்
இறைவ னாகிநின் றெண்ணிறைந் தானவன்
நறவ நாறும் பொழிற்றிரு நள்ளாறன்
மறவ னாய்ப்பன்றிப் பின்சென்ற மாயமே. 5

5913. செக்க ரங்கழி செஞ்சுடர்ச் சோதியார்
நக்க ரங்கர வார்த்தநள் ளாறனார்
வக்க ரன்னுயிர் வவ்விய மாயற்குச்
சக்க ரம்மருள் செய்த சதுரரே. 6

5914. வஞ்ச நஞ்சிற் பொலிகின்ற கண்டத்தர்
விஞ்சை யிற்செல்வப் பாவைக்கு வேந்தனார்
வஞ்ச நெஞ்சத் தவர்க்கு வழிகொடார்
நஞ்ச நெஞ்சர்க் கருளுநள் ளாறரே. 7

5915. அல்ல னென்று மலர்க்கரு ளாயின
சொல்ல னென்றுசொல் லாமறைச் சோதியான்
வல்ல னென்றும்வல் லார்வளம் மிக்கவர்
நல்ல னென்றும்நல் லார்க்குநள் ளாறனே. 8

5916. பாம்ப ணைப்பள்ளி கொண்ட பரமனும்
பூம்ப ணைப்பொலி கின்ற புராணனும்
தாம்ப ணிந்தளப் பொண்ணாத் தனித்தழல்
நாம்ப ணிந்தடி போற்றுநள் ளாறனே. 9

5917. இலங்கை மன்ன னிருபது தோளிற
மலங்க மால்வரை மேல்விரல் வைத்தவர்
நலங்கொள் நீற்றர்நள் ளாறரை நாடொறும்
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 69. திருக்கருவிலிக்கொட்டிட்டை – திருக்குறுந்தொகை

*5918.* மட்டிட் டகுழ லார்சுழ லில்வலைப்
பட்டிட் டுமயங் கிப்பரி யாதுநீர்
கட்டிட் டவினை போகக் கருவிலிக்
கொட்டிட் டையுறை வான்கழல் கூடுமே. *1*

*5919.* ஞாலம் மல்கு மனிதர்காள் நாடொறும்
ஏல மாமல ரோடிலை கொண்டுநீர்
கால னார்வரு தன்முன் கருவிலிக்
கோல வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. *2*

*5920.* பங்க மாயின பேசப் பறைந்துநீர்
மங்கு மாநினை யாதே மலர்கொடு
கங்கை சேர்சடை யான்றன் கருவிலிக்
கொங்கு வார்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. *3*

*5921.* வாடி நீர்வருந் தாதே மனிதர்காள்
வேட னாய்விச யற்கருள் செய்தவெண்
காட னாருறை கின்ற கருவிலிக்
கோடு நீள்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. *4*

*5922.* உய்யு மாறிது கேண்மி னுலகத்தீர்
பைகொள் பாம்பரை யான்படை யார்மழுக்
கையி னானுறை கின்ற கருவிலிக்
கொய்கொள் பூம்பொழிற் கொட்டிட்டை சேர்மினே. *5*

*5923.* ஆற்ற வும்அவ லத்தழுந் தாதுநீர்
தோற்றுந் தீயொடு நீர்நிலந் தூவெளி
காற்று மாகிநின் றான்றன் கருவிலிக்
கூற்றங் காய்ந்தவன் கொட்டிட்டை சேர்மினே. *6*

*5924.* நில்லா வாழ்வு நிலைபெறு மென்றெண்ணிப்
பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதில் சூழ்தண் கருவிலிக்
கொல்லே றூர்பவன் கொட்டிட்டை சேர்மினே. *7*

5925.பிணித்த நோய்ப்பிற விப்பிரி வெய்துமா
றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர
கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே. 8

5926.நம்பு வீரிது கேண்மின் கள்நாடொறும்
எம்பி ரானென் றிமையவ ரேத்துமே
கம்ப னாருறை கின்ற கருவிலிக்
கொம்ப னார்பயில் கொட்டிட்டை சேர்மினே. 9

5927.பாரு ளீரிது கேண்மின் பருவரை
பேரு மாறெடுத் தானை யடர்த்தவன்
கார்கொள் நீர்வயல் சூழ்தண் கருவிலிக்
கூர்கொள் வேலினன் கொட்டிட்டை சேர்மினே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 70. திருக்கொண்டீச்சரம் – திருக்குறுந்தொகை

5928.கண்ட பேச்சினிற் காளையர் தங்கள்பால்
மண்டி யேச்சுணும் மாதரைச் சேராதே
சண்டி யீச்சுர வர்க்கருள் செய்தவக்
கொண்டி யீச்சுர வன்கழல் கூறுமே. 1

5929.சுற்ற முந்துணை நன்மட வாளொடு
பெற்ற மக்களும் பேண லொழிந்தனர்
குற்ற மில்புகழ்க் கொண்டீச் சுரவனார்
பற்ற லாலொரு பற்றுமற் றில்லையே. 2

5930.மாடு தானது வில்லெனின் மாநுடர்
பாடு தான் செல்வா ரில்லைபன் மாலையாற்
கூட நீர்சென்று கொண்டீச் சுரவனைப்
பாடு மின்பர லோகத் திருத்துமே. 3

5931. தந்தை தாயொடு தார மெனுந்தளைப்
பந்தம் ஆங்கறுத் துப்பயில் வெய்திய
கொந்த விழ்பொழிற் கொண்டீச் சுரவனைச்
சிந்தை செய்மின் அவனடி சேரவே. 4

5932.கேளு மின்இள மைய்யது கேடுவந்
தீளை யோடிரு மல்லது எய்தன்முன்
கோள ராவணி கொண்டீச் சுரவனை
நாளு மேத்தித் தொழுமின் நன்காகுமே. 5

5933.வெம்பு நோயும் இடரும் வெறுமையும்
துன்ப முந்துய ரும்மெனுஞ் சூழ்வினை
கொம்ப னார்பயில் கொண்டீச் சுரவனைப்
எம்பி ரானென வல்லவர்க் கில்லையே. 6

5934.அல்ல லோடரு நோயி லழுந்திநீர்
செல்லு மாநினை யாதே கனைகுரல்
கொல்லை யேறுடைக் கொண்டீச் சுரவனை
வல்ல வாறு தொழவினை மாயுமே. 7

5935.நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
மாறி லாமலை மங்கையொர் பாகமாக்
கூற னாருறை கொண்டீச் சுரநினைந்
தூறு வார்தமக் கூனமொன் றில்லையே. 8

5936.அயிலார் அம்பெரி மேருவில் லாகவே
எயிலா ரும்பொடி யாய்விழ எய்தவன்
குயிலா ரும்பொழிற் கொண்டீச் சுரவனைப்
பயில்வா ரும்பெரு மைபெறும் பாலரே. 9

5937.நிலையி னார்வரை நின்றெடுத் தான்றனை
மலையி னாலடர்த் துவிறல் வாட்டினான்
குலையி னார்பொழில் கொண்டீச் சுரவனைத்
தலையி னால்வணங் கத்தவ மாகுமே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 71. திருவிசயமங்கை – திருக்குறுந்தொகை

5938.குசையும் அங்கையிற் கோச முங்கொண்டவ்
வசையின் மங்கல வாசகர் வாழ்த்தவே
இசைய மங்கையுந் தானுமொன் றாயினான்
விசைய மங்கையுள் வேதியன் காணமினே. 1

5939. ஆதி நாத னடல்விடை மேலமர்
பூத நாதன் புலியத ளாடையன்
வேத நாதன் விசயமங் கையுளான்
பாத மோதவல் லார்க்கில்லை பாவமே. 2

5940. கொள்ளி டக்கரைக் கோவந்த புத்தூரில்
வெள்வி டைக்கருள் செய்விச யமங்கை
உள்ளி டத்துறை கின்ற வுருத்திரன்
கிள்ளி டத்தலை யற்ற தயனுக்கே. 3

5941. திசையு மெங்குங் குலுங்கத் திரிபுரம்
அசைய அங்கெய்திட் டாரழ லூட்டினான்
விசைய மங்கை விருத்தன் புறத்தடி
விசையின் மங்கி விழுந்தனன் காலனே. 4

5942. பொள்ள லாக்கை யகத்திலைம் பூதங்கள்
கள்ள மாக்கிக் கலக்கிய காரிருள்
விள்ள லாக்கி விசயமங் கைப்பிரான்
உள்ளம் நோக்கியென் னுள்ளுள் உறையுமே. 5

5943. கொல்லை யேற்றுக் கொடியொடு பொன்மலை
வில்லை யேற்றுடை யான்விச யமங்கைச்
செல்வ போற்றியென் பாருக்குத் தென்திசை
எல்லை யேற்றலு மின்சொலு மாகுமே. 6

5944. கண்பல் உக்கக் கபாலம்அங் கைக்கொண்டு
உண்ப லிக்குழ லுத்தம னுள்ளொளி
வெண்பி றைக்கண்ணி யான்விச யமங்கை
நண்ப னைத்தொழப் பெற்றது நன்மையே. 7

5945. பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டும் நல்வரங் கொள்விச யமங்கை
ஆண்ட வன்னடி யேநினைந் தாசையால்
காண்ட லேகருத் தாகி யிருப்பனே. 8

5946. வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்
வெந்த நீற்றன் விசயமங் கைப்பிரான்
சிந்தை யால்நினை வார்களைச் சிக்கெனப்
பந்து வாக்கி உய்யக்கொளுங் காண்மினே. 9

5947. இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்கல் சேர்விர லான்விச யமங்கை
வலஞ்செய் வார்களும் வாழ்த்திசைப் பார்களும்
நலஞ்செய் வாரவர் நன்னெறி நாடியே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 72. திருநீலக்குடி – திருக்குறுந்தொகை

5948. வைத்த மாடும் மனைவியும் மக்கள்நீர்
செத்த போது செறியார் பிறிவதே
நித்த நீலக் குடியர னைந்நினை
சித்த மாகிற் சிவகதி சேர்திரே. 1

5949. செய்ய மேனியன் தேனொடு பால்தயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மைய லாய்மற வாமனத் தார்க்கெலாம்
கையி லாமல கக்கனி யொக்குமே. 2

5950. ஆற்ற நீள்சடை ஆயிழை யாளொரு
கூற்றன் மேனியிற் கோலம தாகிய
நீற்றன் நீலக் குடியுடை யானடி
போற்றி னாரிடர் போக்கும் புநிதனே. 3

5951. நாலு வேதியர்க் கின்னருள் நன்னிழல்
ஆலன் ஆலநஞ் சுண்டகண் டத்தமர்
நீலன் நீலக் குடியுறை நின்மலன்
கால னாருயிர் போக்கிய காலனே. 4

5952. நேச நீலக் குடியர னேயெனா
நீச ராய்நெடு மால்செய்த மாயத்தால்
ஈச னோர்சரம் எய்ய எரிந்துபோய்
நாச மானார் திரிபுர நாதரே. 5

5953. கொன்றை சூடியைக் குன்ற மகளொடும்
நின்ற நீலக் குடியர னேயெனீர்
என்றும் வாழ்வுகந் தேயிறு மாக்குநீர்
பொன்றும் போது நுமக்கறி வொண்ணுமே. 6

5954. கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே. 7

5955. அழுகி யோமிளை யோமெனு மாசையால்
ஒழுகி ஆவி யுடல்விடு முன்னமே
நிழல தார்பொழில் நீலக் குடியரன்
கழல்கொள் சேவடி கைதொழு துய்ம்மினே. 8

5956. கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்திங்கள்
பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்
நெற்றிக் கண்ணுடை நீலக் குடியரன்
சுற்றித் தேவர் தொழுங்கழற் சோதியே. 9

5957. தருக்கி வெற்பது தாங்கிய வீங்குதோள்
அரக்க னாருட லாங்கொர் விரலினால்
நெரித்து நீலக் குடியரன் பின்னையும்
இரக்க மாயருள் செய்தன னென்பரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 73. திருமங்கலக்குடி – திருக்குறுந்தொகை

5958. தங்க லப்பிய தக்கன் பெருவேள்வி
அங்க லக்கழித் தாரருள் செய்தவன்
கொங்க லர்க்குழல் கொம்பனை யாளொடு
மங்க லக்குடி மேய மணாளனே. 1

5959. காவி ரியின் வடகரைக் காண்தகு
மாவிரி யும்பொ ழில்மங் கலக்குடித்
தேவ ரியும்பி ரமனுந் தேடொணாத்
தூமெ ரிச்சுடர்ச் சோதியுட் சோதியே. 2

5960. மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்க திர்ச்செல்வன் விண்ணொடு மண்ணும்நேர்
சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்க கத்திய னும்மர்ச்சித் தாரன்றே. 3

5961. மஞ்சன் வார்கடல் சூழ்மங் கலக்குடி
நஞ்ச மாரமு தாக நயந்துகொண்
டஞ்சு மாட லமர்ந்தடி யேனுடை
நெஞ்ச மாலய மாக்கொண்டு நின்றதே. 4

5962. செல்வம் மல்கு திருமங் கலக்குடி
செல்வம் மல்கு சிவநிய மத்தராய்ச்
செல்வம் மல்கு செழுமறை யோர்தொழச்
செல்வன் தேவியொ டுந்திகழ் கோயிலே. 5

5963. மன்னு சீர்மங் கலக்குடி மன்னிய
பின்னு வார்சடைப் பிஞ்ஞகன் தன்பெயர்
உன்னு வாரு முரைக்கவல் லார்களும்
துன்னு வார்நன் னெறிதொடர் வெய்தவே. 6

5964. மாத ரார்மரு வும்மங் கலக்குடி
ஆதி நாயகன் அண்டர்கள் நாயகன்
வேத நாயகன் வேதியர் நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 7

5965. வண்டு சேர்பொழில் சூழ்மங் கலக்குடி
விண்ட தாதையைத் தாளற வீசிய
சண்ட நாயக னுக்கருள் செய்தவன்
துண்ட மாமதி சூடிய சோதியே. 8

5966. கூசு வாரலர் குண்டர் குணமிலர்
நேச மேது மிலாதவர் நீசர்கள்
மாசர் பால்மங் கலக்குடி மேவிய
ஈசன் வேறு படுக்கவுய்ந் தேனன்றே. 9

5967. மங்க லக்குடி யான்கயி லைம்மலை
அங்க லைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்
தன்க ரத்தொடு தாள்தலை தோள்தகர்ந்
தங்க லைத்தழு துய்ந்தனன் தானன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. திருஎறும்பியூர் – திருக்குறுந்தொகை

5968. விரும்பி யூறு விடேல்மட நெஞ்சமே
கரும்பி னூறல்கண் டாய்கலந் தார்க்கவன்
இரும்பி னூறல றாததோர் வெண்தலை
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 1

5969. பிறங்கு செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணுசிர்க்
கறங்கு பூத கணமுடைக் கண்ணுதல்
நறுங்கு ழல்மட வாளொடு நாடொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 2

5970. மருந்து வானவர் தானவர்க் கின்சுவை
புரிந்த புன்சடைப் புண்ணியன் கண்ணுதல்
பொருந்து பூண்முலை மங்கைநல் லாளொடும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 3

5971. நிறங்கொள் கண்டத்து நின்மலன் எம்மிறை
மறங்கொள் வேல்கண்ணி வாள்நுதல் பாகமாய்
அறம்பு ரிந்தருள் செய்தவெம் அங்கணன்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 4

5972. நறும்பொன் நாண்மலர்க் கொன்றையும் நாகமும்
துறும்பு செஞ்சடைத் தூமதி வைத்துவான்
உறும்பொன் மால்வரைப் போதையோ டூர்தொறும்
எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே. 5

5973. கறும்பி யூர்வன ஐந்துள காயத்தில்
திறம்பி யூர்வன மற்றும் பலவுள
குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டெனை
எறும்பி யூரரன் செய்த இயற்கையே. 6

5974. மறந்து மற்றிது பேரிடர் நாடொறும்
திறம்பி நீநினை யேல்மட நெஞ்சமே
புறஞ்செய் கோலக் குரம்பையி லிட்டெனை
எறும்பி யூரரன் செய்த வியற்கையே. 7

5975. இன்ப மும்பிறப் பும்மிறப் பின்னொடு
துன்ப மும்முட னேவைத்த சோதியான்
அன்ப னேயர னேயென் றரற்றுவார்க்
கின்ப னாகு மெறும்பியூ ரீசனே. 8

5976. கண்ணி றைந்த கனபவ ளத்திரள்
விண்ணி றைந்த விரிசுடர்ச் சோதியான்
உள்நி றைந்துரு வாயுயி ராயவன்
எண்ணி றைந்த வெறும்பியூ ரீசனே. 9

5977. நிறங்கொள் மால்வரை ஊன்றி யெடுத்தலும்
நறுங்கு ழல்மட வாள்நடுக் கெய்திட
மறங்கொள் வாளரக் கன்வலி வாட்டினான்
எறும்பி யூர்மலை யெம்மிறை காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 75. திருக்குரக்குக்கா – திருக்குறுந்தொகை

5978. மரக்கொக் காமென வாய்விட் டலறிநீர்
சரக்குக் காவித் திரிந்தய ராதுகால்
பரக்குங் காவிரி நீரலைக் குங்கரைக்
குரக்குக் காவடை யக்கெடுங் குற்றமே. 1

5979. கட்டா றேகழி காவிரி பாய்வயல்
கொட்டா றேபுன லூறு குரக்குக்கா
முட்டா றாஅடி யேத்த முயல்பவர்க்
கிட்டா றாஇட ரோட எடுக்குமே. 2

5980. கைய னைத்துங் கலந்தெழு காவிரி
செய்ய னைத்திலுஞ் சென்றிடுஞ் செம்புனல்
கொய்ய னைத்துங் கொணருங் குரக்குக்கா
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 3

5981. மிக்க னைத்துத் திசையும் அருவிகள்
புக்குக் காவிரி போந்த புனற்கரைக்
கொக்கி னம்பயில் சோலைக் குரக்குக்கா
நக்க னைநவில் வார்வினை நாசமே. 4

5982.விட்டு வெள்ளம் விரிந்தெழு காவிரி
இட்ட நீர்வய லெங்கும் பரந்திடக்
கொட்ட மாமுழ வோங்கு குரக்குக்கா
இட்ட மாயிருப் பார்க்கிட ரில்லையே. 5

5983.மேலை வானவ ரோடு விரிகடல்
மாலும் நான்முக னாலும் அளப்பொணாக்
கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே. 6

5984.ஆல நீழ லமர்ந்த அழகனார்
கால னையுதை கொண்ட கருத்தனார்
கோல மஞ்ஞைக ளாலுங் குரக்குக்காப்
பால ருக்கருள் செய்வர் பரிவொடே. 7

5985.செக்க ரங்கெழு செஞ்சுடர்ச் சோதியார்
அக்க ரையரெம் மாதி புராணனார்
கொக்கி னம்வயல் சேருங் குரக்குக்கா
நக்க னைத்தொழ நம்வினை நாசமே. 8

5986.உருகி யூன்குழைந் தேத்தி யெழுமின்நீர்
கரிய கண்டன் கழலடி தன்னையே
குரவ னஞ்செழுங் கோயில் குரக்குக்கா
இரவு மெல்லியு மேத்தித் தொழுமினே. 9

5987.இரக்க மின்றி மலையெடுத் தான்முடி
உரத்தை யொல்க அடர்த்தா னுறைவிடம்
குரக்கி னங்குதி கொள்ளுங் குரக்குக்கா
வரத்த னைப்பெற வானுல காள்வரே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 76. திருக்கானூர் – திருக்குறுந்தொகை

5988.திருவின் நாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே. 1

5989.பெண்டிர் மக்கள் பெருந்துணை நன்னிதி
உண்டின் றேயென்று கவன்மி னேழைகாள்
கண்டு கொண்மின்நீர் கானூர் முளையினைப்
புண்ட ரீகப் பொதும்பி லொதுங்கியே. 2

5990.தாயத் தார்தமர் நல்நிதி யென்னுமிம்
மாயத் தேகிடந் திட்டு மயங்கிடேல்
காயத் தேயுளன் கானூர் முளையினை
வாயத் தால்வணங் கீர்வினை மாயவே. 3

5991.குறியில் நின்றுண்டு கூறையி லாச்சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய லுற்றிரேல் கானூர் முளையவன்
செறிவு செய்திட் டிருப்பதென் சிந்தையே. 4

5992.பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்த னென்று வியந்திட லேழைகாள்
சித்தர் பத்தர்கள் சேர்திருக் கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே. 5

5993.கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை
எல்லி யும்பக லும்மிசை வானவா
சொல்லி டீர்நுந் துயரங் கள்தீரவே. 6

5994.நீரும் பாரம் நெருப்பும் அருக்கனும்
காரும் மாருதங் கானூர் முளைத்தவன்
சேர்வு மொன்றறி யாது திசைதிசை
ஓர்வு மென்றில ரோடித் திரிவரே. 7

5995.ஓமத் தோடயன் மாலறி யாவணம்
வீமம் பேரொளி யாய விழுப்பொருள்
காமற் காய்ந்தவன் கானூர் முளைத்தவன்
சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே. 8—9

5996.வன்னி கொன்றை யெருக்கணிந் தான்மலை
உன்னி யேசென் றெடுத்தவ னொண்திறல்
தன்னை வீழத் தனிவிரல் வைத்தவன்
கன்னி மாமதிற் கானூர்க் கருத்தனே. 10

திருச்சிற்றம்பலம்

••••••

## 77. திருச்சேறை – திருக்குறுந்தொகை

5997. பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்றன் நாம நவிலவே. 1

5998. என்ன மாதவஞ் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெ லார்வயற் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே. 2

5999. பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே. 3

6000. மாடு தேடி மயக்கினில் வீழ்ந்துநீர்
ஓடி யெய்த்தும் பயனிலை ஊமர்காள்
சேடர் வாழ்சேறைச் செந்நெறி மேவிய
ஆட லான்தன் அடியடைந் துய்ம்மினே. 4

6001. எண்ணி நாளும் எரியயிற் கூற்றுவன்
துண்ணெனன் தோன்றிற் றுரக்கும் வழிகண்டேன்
திண்ணன் சேறைத் திருச்செந் நெறியுறை
அண்ண லாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 5

6002. தப்பி வானந் தரணிகம் பிக்கிலென்
ஒப்பில் வேந்தர் ஒருங்குடன் சீறிலென்
செப்ப மாஞ்சேறைச் செந்நெறி மேவிய
அப்ப னாருளர் அஞ்சுவ தென்னுக்கே. 6

6003. வைத்த மாடும் மடந்தைநல் லார்களும்
ஒத்தொவ் வாதவுற் றார்களு மென்செய்வார்
சித்தர் சேறைத் திருச்செந் நெறியுறை
அத்தர் தாமுள ரஞ்சுவ தென்னுக்கே. 7

6004. குலங்க ளென்செய்வ குற்றங்க ளென்செய்வ
துலங்கி நீநின்று சோர்ந்திடல் நெஞ்சமே
இலங்கு சேறையிற் செந்நெறி மேவிய
அலங்க னாருள ரஞ்சுவ தென்னுக்கே. 8

6005. பழகி னால்வரும் பண்டுள சுற்றமும்
விழவி டாவிடில் வேண்டிய எய்தொணா
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய
அழக னாருள ரஞ்சுவ தென்னுக்கே. 9

6006. பொருந்து நீண்மலை யைப்பிடித் தேந்தினான்
வருந்த வூன்றி மரைடி வாங்கினான்
திருந்து சேறையிற் செந்நெறி மேவியுங்
கிருந்த சோதியென் பார்க்கிட ரில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆◆

## 78. திருக்கோடிகா – திருக்குறுந்தொகை

6007. சங்கு லாமுன்கைத் தையலோர் பாகத்தன்
வெங்கு லாமத வேழம் வெகுண்டவன்
கொங்கு லாம்பொழிற் கோடிகா வாவென
எங்கி லாததோ ரின்பம்வந் தெய்துமே. 1

6008. வாடி வாழ்வதென் னாவது மாதர்பால்
ஓடி வாழ்வினை யுள்கிநீர் நாடொறும்
கோடி காவனைக் கூறீரேற் கூறினேன்
பாடி காவலிற் பட்டுக் கழிதிரே. 2

6009. முல்லை நன்முறு வல்லுமை பங்கனார்
தில்லை யம்பலத் தில்லுறை செல்வனார்
கொல்லை யேற்றினர் கோடிகா வாவென்றங்
கொல்லை யேத்துவார்க் கூனமொன் றில்லையே. 3

6010. நாவ ளம்பெரு மாறுமந் நன்னுதல்
ஆம ளஞ்சொல்லி யன்புசெ யின்அலால்
கோம ளஞ்சடைக் கோடிகா வாவென
ஏவ ளின்றெனை யேசுமவ் வேழையே. 4

6011. வீறு தான்பெறு வார்சில ராகிலும்
நாறு பூங்கொன்றை தான்மிக நல்கானேல்
கூறு வேன்கோடி காவுளா யென்றுமால்
ஏறு வேன்நும்மா லேசப் படுவனோ 5

6012. நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூறாத நாளெலாம்
பாடி காவலிற் பட்டுக் கழியுமே. 6,7,8,9

6013. வரங்க ளால்வரை யையெடுத் தான்றனை
அரங்க வூன்றி யருள்செய்த அப்பனூர்
குரங்கு சேர்பொழிற் கோடிகா வாவென
இரங்கு வேன்மனத் தேதங்கள் தீரவே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 79. திருப்புள்ளிருக்குவேளூர் – திருக்குறுந்தொகை

6014. வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கு முணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. 1

6015. மாற்ற மொன்றறி யீர்மனை வாழ்க்கைபோய்க்
கூற்றம் வந்துமைக் கொள்வதன் முன்னமே
போற்ற வல்லீரேற் புள்ளிருக்கு வேளூர்
சீற்ற மாயின தேய்ந்தறுங் காண்மினே. 2

6016. அரும றையனை ஆணொடு பெண்ணனைக்
கருவி டம்மிக வுண்டவெங் கண்டனைப்
புரிவெண் நூலனைப் புள்ளிருக்கு வேளூர்
உருகி நைபவ ருள்ளங் குளிருமே. 3

6017. தன்னு ருவை யொருவர்க் கறிவொணா
மின்னு ருவனை மேனிவெண் நீற்றனைப்
பொன்னு ருவனைப் புள்ளிருக்கு வேளூர்
என்ன வல்லவர்க் கில்லை யிடர்களே. 4

6018. செங்கண் மார்பிர மற்கும் அறிவொணா
அங்கி யின்னுரு வாகி யழல்வதோர்
பொங்க ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
மங்கை பாகனை வாழ்த்த வருமின்பே. 5

6019. குற்ற மில்லியைக் கோலச் சிலையினால்
செற்ற வர்புரஞ் செந்தழ லாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
பற்ற வல்லவர் பாவம் பறையுமே. 6

6020. கையி னோடுகால் கட்டி யுமரெலாம்
ஐயன் வீடின னென்பதன் முன்னம்நீர்
பொய்யி லாஅரன் புள்ளிருக்கு வேளூர்
மையு லாவிய கண்டனை வாழ்த்துமே. 7

6021. உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே. 8,9

6022. அரக்க னார்தலை பத்து மழிதர
நெருக்கி மாமலர்ப் பாதம் நிறுவிய
பொருப்ப னாருறை புள்ளிருக்கு வேளூர்
விருப்பி னால்தொழு வார்வினை வீடுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 80. திருஅன்பிலாலந்துறை – திருக்குறுந்தொகை

6023. வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோன்எஞ் செல்வனைக் கூறிட கிற்றியே. 1

6024. கார ணத்தர் கருத்தர் கபாலியார்
வார ணத்துரி போர்த்த மணாளனார்
ஆர ணப்பொரு ளன்பிலா லந்துறை
நார ணற்கரி யானொரு நம்பியே. 2

6025. அன்பின் ஆனஞ்ச மைந்துட னாடிய
என்பின் ஆனை யுரித்துக் களைந்தவன்

அன்பி லானையம் மானையள் ளூறிய
அன்பி னால்நினைந் தாரறிந் தார்களே. 3

6026. சங்கை யுள்ளதுஞ் சாவது மெய்புமை
பங்க னாரடி பாவியேன் நானுய்ய
அங்க ணெனெந்தை யன்பிலா லந்துறைச்
செங்க ணாரடிச் சேரவும் வல்லனே. 4

6027. கொக்கி றகர் குளிர்மதிச் சென்னியர்
மிக்க ரக்கர் புரமெரி செய்தவர்
அக்க ரையின ரன்பிலா லந்துறை
நக்கு ருவரும் நம்மை யறிவரே. 5

6028. வெள்ள முள்ள விரிசடை நந்தியைக்
கள்ள முள்ள மனத்தவர் காண்கிலார்
அள்ள லார்வய லன்பிலா லந்துறை
உள்ள வாறறி யார்சில ரூமரே. 6

6029. பிறவி மாயப் பிணக்கி லழுந்தினும்
உறவெ லாஞ்சிந்தித் துன்னி உகவாதே
அறவ னெம்பிரா னன்பிலா லந்துறை
மறவா தேதொழு தேத்தி வணங்குமே. 7

6030. நுணங்கு நூலயன் மாலு மிருவரும்
பிணங்கி யெங்குந் திரிந்தெய்த்துங் காண்கிலா
அணங்க னெம்பிரா னன்பிலா லந்துறை
வணங்கும் நும்வினை மாய்ந்தறும் வண்ணமே. 8

6031. பொய்யெ லாமுரைக் குஞ்சமண் சாக்கியக்
கையன் மாருரை கேளா தெழுமினோ
ஐய னெம்பிரா னன்பிலா லந்துறை
மெய்யன் சேவடி யேத்துவார் மெய்யரே. 9

6032. இலங்கை வேந்த னிருபது தோளிற்று
மலங்க மாமலை மேல்விரல் வைத்தவன்
அலங்க லெம்பிரா னன்பிலா லந்துறை
வலங்கொள் வாரைவா னோர்வலங் கொள்வரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. திருப்பாண்டிக்கொடுமுடி – திருக்குறுந்தொகை

6033. சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினை நாசமே. 1

6034. பிரமன் மாலறி யாத பெருமையன்
தரும மாகிய தத்துவ னெம்பிரான்
பரம னாருறை பாண்டிக் கொடுமுடி
கரும மாகத் தொழுமட நெஞ்சமே. 2

6035. ஊச லாளல்லள் ஒண்கழ லாளல்லள்
தேச மாந்திருப் பாண்டிக் கொடுமுடி
ஈச னேயெனு மித்தனை யல்லது
பேசு மாறறி யாளொரு பேதையே. 3

6036. தூண்டி யசுடர் போலொக்குஞ் சோதியான்
காண்ட லுமெளி யன்னடி யார்கட்குப்
பாண்டிக் கொடுமுடி மேய பரமனைக்
காண்டு மென்பவர்க் கேதுங் கருத்தொணான். 4

6037. நெருக்கி யம்முடி நின்றிசை வானவர்
இருக்கொ டும்பணிந் தேத்த விருந்தவன்
திருக்கொ டும்முடி யென்றலுந் தீவினைக்
கருக்கெ டும்மிது கைகண்ட யோகமே. 5,6,7,8,9,10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 82. திருவான்மியூர் – திருக்குறுந்தொகை

6038. விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன் தன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் மறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூ ரீசனே. 1

6039. பொருளுஞ் சுற்றமும் பொய்ம்மையும் விட்டுநீர்
மருளும் மாந்தரை மாற்றி மயக்கறுத்
தருளு மாவல்ல ஆதியா யென்றலும்
மருள றுத்திடும் வான்மியூ ரீசனே. 2

6040. மந்த மாகிய சிந்தை மயக்கறுத்
தந்த மில்குணத் தானை யடைந்துநின்
றெந்தை யீசனென் றேத்திட வல்லிரேல்
வந்து நின்றிடும் வான்மியூ ரீசனே. 3

6041. உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலால்
கள்ள முள்ளவ ருக்கருள் வான்அலன்
வெள்ள மும்மர வும்விர வுஞ்சடை
வள்ள லாகிய வான்மியூ ரீசனே. 4

6042. படங்கொள் பாம்பரைப் பால்மதி சூடியை
வடங்கொள் மென்முலை மாதொரு கூறனைத்
தொடர்ந்து நின்று தொழுதெழு வார்வினை
மடங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 5

6043. நெஞ்சி லைவர் நினைக்க நினைக்குறார்
பஞ்சின் மெல்லடி யாளுமை பங்கவென்
றஞ்சி நாண்மலர் தூவி யழுதிரேல்
வஞ்சந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 6

6044. நுணங்கு நூலயன் மாலு மறிகிலாக்
குணங்கள் தான்பர விக்குறைந் துக்கவர்
சுணங்கு பூண்முலைத் தூமொழி யாரவர்
வணங்க நின்றிடும் வான்மியூ ரீசனே. 7

6045. ஆதி யும்மர னாயயன் மாலுமாய்ப்
பாதி பெண்ணுரு வாய பரமனென்
றோதி யுள்குழைந் தேத்தவல் லாரவர்
வாதை தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 8

6046. ஒட்டை மாடத்தி லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே. 9

6047. பார மாக மலையெடுத் தான்றனைச்
சீர மாகத் திருவிர லூன்றினான்
ஆர்வ மாக அழைத்தவ னேத்தலும்
வார மாயினன் வான்மியூ ரீசனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 83. திருநாகைக்காரோணம் – திருக்குறுந்தொகை

6048. பாணத் தால்மதின் மூன்று மெரித்தவன்
பூணத் தானர வாமை பொறுத்தவன்
காணத் தானினி யான்கடல் நாகைக்கா
ரோணத் தானென நம்வினை யோயுமே. 1

6049. வண்ட லம்பிய வார்சடை யீசனை
விண்ட லம்பணிந் தேத்தும் விகிர்தனைக்
கண்ட லங்கமழ் நாகைக்கா ரோணனைக்
கண்ட லும்வினை யான கழலுமே. 2

6050. புனையும் மாமலர் கொண்டு புரிசடை
நனையும் மாமலர் சூடிய நம்பனைக்
கனையும் வார்கடல் நாகைக்கா ரோணனை
நினைய வேவினை யாயின நீங்குமே. 3

6051. கொல்லை மால்விடை யேறிய கோவினை
எல்லி மாநட மாடு மிறைவனைக்
கல்லி னார்மதில் நாகைக்கா ரோணனைச்
சொல்ல வேவினை யானவை சோருமே. 4

6052. மெய்ய னைவிடை யூர்தியை வெண்மழுக்
கைய னைக்கடல் நாகைக்கா ரோணனை
மைய னுக்கிய கண்டனை வானவர்
ஐய னைத்தொழு வார்க்கல்ல லில்லையே. 5

6053. அலங்கல் சேர்சடை யாதிபு ராணனை
விலங்கல் மெல்லியல் பாகம் விருப்பனைக்
கலங்கள் சேர்கடல் நாகைக்கா ரோணனை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 6

6054. சினங்கொள் மால்கரி சீறிய ஏறினை
இனங்கொள் வானவ ரேத்திய வீசனைக்
கனங்கொள் மாமதில் நாகைக்கா ரோணனை
மனங்கொள் வார்வினை யாயின மாயுமே. 7

6055. அந்த மில்புக ழாயிழை யார்பணிந்
தெந்தை யீசனென் றேத்து மிறைவனைக்
கந்த வார்பொழில் நாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக் கெடுந்துயர் திண்ணமே. 8

6056. கருவ னைக்கடல் நாகைக்கா ரோணனை
இருவ ருக்கறி வொண்ணா இறைவனை
ஒருவ னையுண ரார்புர மூன்றெய்த
செருவ னைத்தொழத் தீவினை தீருமே. 9

6057. கடல்க ழிதழி நாகைக்கா ரோணன்றன்
வடவ ரையெடுத் தார்த்த அரக்கனை
அடர வூன்றிய பாத மணைதரத்
தொடர அஞ்சுந் துயக்கறுங் காலனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. திருக்காட்டுப்பள்ளி – திருக்குறுந்தொகை

6058. மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோட லுறாமுனம்
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 1

6059. மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே. 2

6060. தேனை வென்றசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே. 3

6061. அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடும்
கருத்தன் கண்ணுத லண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே. 4

6062. சுற்ற முந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதணை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்ற மேறும் பிரானடி சேர்மினே. 5

6063. அடும்புங் கொன்றையும் வன்னியும் மத்தமும்
துடும்பல் செய்சடைத் தூமணிச் சோதியான்
கடம்பன் தாதை கருதுங்காட் டுப்பள்ளி
உடம்பி னார்க்கோர் உறுதுணை யாகுமே. 6

6064. மெய்யின் மாசுடை யாருடல் மூடுவார்
பொய்யை மெய்யென்று புக்குடன் வீழன்மின்
கையின் மானுடை யான்காட்டுப் பள்ளியெம்
ஐயன் தன்னடி யேயடைந் துய்ம்மினே. 7

6065. வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்
காலை யேதொழுங் காட்டுப்பள் ளிய்யுறை
நீல கண்டனை நித்தல் நினைமினே. 8

6066. இன்று ளார்நாளை யில்லை யெனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரு மூமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னார்காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே. 9

6067. எண்ணி லாஅரக் கன்மலை யேந்திட
எண்ணி நீண்முடி பத்து மிறுத்தவன்
கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை
நண்ணு வாரவர் தம்வினை நாசமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 85. திருச்சிராப்பள்ளி – திருக்குறுந்தொகை

6068. மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு நீத்தவர்க் கின்னரு ளேசெயும்
சிட்டர் போலுஞ் சிராப்பள்ளிச் செல்வரே. 1

6069. அரிய யன்தலை வெட்டிவட் டாடினார்
அரிய யன்தொழு தேத்து மரும்பொருள்
பெரிய வன்சிராப் பள்ளியைப் பேணுவார்
அரிய யன்தொழ அங்கிருப் பார்களே. 2

6070. அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கும் நடக்குமே. 3

6071. தாயு மாயெனக் கேதலை கண்ணுமாய்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே. 4,5,6,7,8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருவாட்போக்கி – திருக்குறுந்தொகை

6072. கால பாசம் பிடித்தெழு தூதுவர்
பால கர்விருத் தர்பழை யாரெனார்
ஆல நீழ லமர்ந்தவாட் போக்கியார்
சீல மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே. 1

6073. விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே. 2

6074. வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. 3

6075. கூற்றம் வந்து குமைத்திடும் போதினால்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும்வாட் போக்கிபால்
ஏற்று மின்விளக் கையிருள் நீங்கவே. 4

6076. மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே
ஆறு செஞ்சடை வைத்தவாட் போக்கியார்க்
கூறி யூறி யுருகுமென் னுள்ளமே. 5

6077. கான மோடிக் கடிதெழு தூதுவர்
தான மோடு தலைபிடி யாமுனம்
ஆனஞ் சாடி யுகந்தவாட் போக்கியார்
ஊன மில்லவர்க் குண்மையில் நிற்பரே. 6

6078. பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்
கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே
ஆர்த்த கங்கை யடக்கும்வாட் போக்கியார்
கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே. 7

6079. நாடி வந்து நமன்தமர் நல்லிருள்
கூடி வந்து குமைப்பதன் முன்னமே
ஆடல் பாட லுகந்தவாட் போக்கியை
வாடி யேத்தநம் வாட்டந் தவிருமே. 8

6080. கட்ட றுத்துக் கடிதெழு தூதுவர்
பொட்ட நூக்கிப் புறப்படா முன்னமே
அட்ட மாமலர் சூடும்வாட் போக்கியார்க்
கிட்ட மாகி இணையடி யேத்துமே. 9

6081. இரக்க முன்னறி யாதெழு தூதுவர்
பரக்க ழித்தவர் பற்றுதன் முன்னமே
அரக்க னுக்கருள் செய்தவாட் போக்கியார்
கரப்ப துங்கரப் பாரவர் தங்கட்கே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 87. திருமணஞ்சேரி – திருக்குறுந்தொகை

6082. பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறும்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே. 1

6083. துன்னு வார்குழ லாளுமை யாளொடும்
பின்னு வார்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்மணஞ் சேரி மருந்தினை
உன்னு வார்வினை யாயின வோயுமே. 2

6084. புற்றி லாடர வாட்டும் புனிதனார்
தெற்றி னார்புரந் தீயெழச் செற்றவர்
சுற்றி னார்மதில் சூழ்மணஞ் சேரியார்
பற்றி னாரவர் பற்றவர் காண்மினே. 3

6085. மத்த மும்மதி யும்வளர் செஞ்சடை
முத்தர் முக்கணர் மூசர வம்மணி
சித்தர் தீவணர் சீர்மணஞ் சேரியெம்
வித்தர் தாம்விருப் பாரை விருப்பரே. 4

6086. துள்ளு மான்மறி தூமழு வாளினர்
வெள்ள நீர்கரந் தார்சடை மேலவர்
அள்ள லார்வயல் சூழ்மணஞ் சேரியெம்
வள்ள லார்கழல் வாழ்த்தல்வாழ் வாவதே. 5

6087. நீர்ப ரந்த நிமிர்புன் சடையின்மேல்
ஊர்ப ரந்த உரகம் அணிபவர்
சீர்ப ரந்த திருமணஞ் சேரியார்
ஏர்ப ரந்தங் கிலங்குசூ லத்தரே. 6

6088. சுண்ணத் தர்சுடு நீறுகந் தாடலார்
விண்ணத் தம்மதி சூடிய வேதியர்
மண்ணத் தம்முழ வார்மணஞ் சேரியார்
வண்ணத் தம்முலை யாளுமை வண்ணரே. 7

6089. துன்ன வாடையர் தூமழு வாளினர்
பின்னு செஞ்சடை மேற்பிறை வைத்தவர்
மன்னு வார்பொழில் சூழ்மணஞ் சேரியெம்
மன்ன னார்கழ லேதொழ வாய்க்குமே. 8

6090. சித்தர் தேவர்கள் மாலொடு நான்முகன்
புத்தர் சேரமண் கையர் புகழவே
மத்தர் தாமறி யார்மணஞ் சேரியெம்
அத்த னாரடி யார்க்கல்ல லில்லையே. 9

6091. கடுத்த மேனி யரக்கன் கயிலையை
எடுத்த வன்னெடு நீண்முடி பத்திறப்
படுத்த லும்மணஞ் சேரி யருளெனக்
கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 88. திருமருகல் – திருக்குறுந்தொகை

6092. பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே. 1

6093. பாடங் கொள்பனு வல்திறங் கற்றுப்போய்
நாடங் குள்ளன தட்டிய நாணிலீர்
மாடஞ் சூழ்மரு கற்பெரு மான்திரு
வேடங் கைதொழ வீடெளி தாகுமே. 2

6094. சினத்தி னால்வருஞ் செய்தொழி லாமவை
அனைத்தும் நீங்கிநின் றாதர வாய்மிக
மனத்தி னால்மரு கற்பெரு மான்திறம்
நினைப்பி னார்க்கில்லை நீள்நில வாழ்க்கையே. 3

6095. ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடத்தான் தொடங்குமே. 4

6096. இன்ன வாறென்ப துண்டறி யேனின்று
துன்னு கைவளை சோரக்கண் நீர்மல்கும்
மன்னு தென்மரு கற்பெரு மான்திறம்
உன்னி யொண்கொடி யுள்ள முருகுமே. 5

6097. சங்கு சோரக் கலையுஞ் சரியவே
மங்கை தான்மரு கற்பெரு மான்வரும்
அங்க வீதி யருகணை யாநிற்கும்
நங்கை மீரிதற் கென்செய்கேன் நாளுமே. 6

6098. காட்சி பெற்றில ளாகிலுங் காதலே
மீட்சி யொன்றறி யாது மிகுவதே
மாட்சி யார்மரு கற்பெரு மானுக்குத்
தாழ்ச்சி சாலவுண் டாகுமென் தையலே. 7

6099. நீடு நெஞ்சுள் நினைந்துகண் நீர்மல்கும்
ஓடு மாலினோ டொண்கொடி மாதராள்
மாடம் நீள்மரு கற்பெரு மான்வரில்
கூடு நீயென்று கூட விழைக்குமே. 8

6100. கந்த வார்குழல் கட்டிலள் காரிகை
அந்தி மால்விடை யோடுமன் பாய்மிக
வந்தி டாய்மரு கற்பெரு மானென்று
சிந்தை செய்து திகைத்திடுங் காண்மினே. 9

6101. ஆதி மாமலை யன்றெடுத் தானிற்றுச்
சோதி யென்றலுந் தொல்லருள் செய்திடும்
ஆதி யான்மரு கற்பெரு மான்திறம்
ஓதி வாழ்பவர் உம்பர்க்கு மும்பரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 89. தனித் திருக்குறுந்தொகை

6102. ஒன்று வெண்பிறைக் கண்ணியோர் கோவணம்
ஒன்று கீளுமை யோடும் உடுத்தது
ஒன்று வெண்தலை யேந்தியெம் உள்ளத்தே
ஒன்றி நின்றங் குறையு மொருவனே. 1

6103. இரண்டு மாமவர்க் குள்ளன செய்தொழில்
இரண்டு மாமவர்க் குள்ளன கோலங்கள்
இரண்டு மில்லிள மானெமை யாளுகந்(து)
இரண்டு போதுமென் சிந்தையுள் வைகுமே. 2

6104. மூன்று மூர்த்தியுள் நின்றிய லுந்தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தன்
மூன்று கண்ணினன் தீத்தொழின் மூன்றினன்
மூன்று போதுமென் சிந்தையுள் மூழ்குமே. 3

6105. நாலின் மேன்முகஞ் செற்றது மன்னிழல்
நாலு நன்குணர்ந் திட்டது மின்பமாம்
நாலு வேதஞ் சரித்தது நன்னெறி
நாலு போலெம் அகத்துறை நாதனே. 4

6106. அஞ்சு மஞ்சுமோ ராடி யரைமிசை
அஞ்சு போலரை யார்த்ததின் தத்துவம்
அஞ்சு மஞ்சுமோ ரோரஞ்சு மாயவன்
அஞ்சு மாமெம் அகத்துறை யாதியே. 5

6107. ஆறு கால்வண்டு மூசிய கொன்றையன்
ஆறு சூடிய அண்ட முதல்வனார்
ஆறு கூர்மையர்க் கச்சம யப்பொருள்
ஆறு போலெம் அகத்துறை யாதியே. 6

6108. ஏழு மாமலை யேழ்பொழில் சூழ்கடல்
ஏழு போற்றுமி ராவணன் கைந்நரம்(பு)
ஏழு கேட்டருள் செய்தவன் பொற்கழல்
ஏழுஞ் சூழடி யேன்மனத் துள்ளவே. 7

6109. எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை
எட்டு மூர்த்தியு மெம்மிறை யெம்முளே
எட்டு மூர்த்தியு மெம்மு ளொடுங்குமே. 8

6110. ஒன்ப தொன்பதி யானை யொளிகளி(று)
ஒன்ப தொன்பது பல்கணஞ் சூழவே
ஒன்ப தாமவை தீத்தொழி லின்னுரை
ஒன்ப தொத்துநின் றென்னு ளொடுங்குமே. 9

6111. பத்து நூறவன் வெங்கண்வெள் ளேற்றண்ணல்
பத்து நூறவன் பல்சடை தோள்மிசை
பத்தி யாமில மாதலின் ஞானத்தால்
பத்தி யானிடங் கொண்டது பள்ளியே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 90. தனித் திருக்குறுந்தொகை

6112. மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே. 1

6113. நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 2

6114. ஆளா காரா ளானாரை யடைந்துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலா
தோளா தசுரை யோதொழும் பர்செவி
வாளா மாய்ந்துமண் ணாகிக் கழிவரே. 3

6115. நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. 4

6116. பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே. 5

6117. குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே. 6

6118. வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 7

6119. எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேயுழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே. 8

6120. நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே. 9

6121. விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. தனித் திருக்குறுந்தொகை

6122. ஏயி லானையெ னிச்சை யகம்படிக்
கோயி லானைக் குணப்பெருங் குன்றினை
வாயி லானை மனோன்மனி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் ஆவியே. 1

6123. முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. 2

6124. ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாயுனை நானுந் தொழுவனே. 3

6125. புழுவுக் குங்குணம் நான்கெனக் கும்மதே
புழுவுக் கிங்கெனக் குள்ளபொல் லாங்கில்லை
புழுவி னுங்கடை யேன்புனி தன்தமர்
குழுவுக் கெவ்விடத் தேன்சென்று கூடவே. 4

6126. மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே. 5

6127. கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக் கோநம னால்முனி வுண்பதே. 6

6128. மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈச னெனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே. 7

6129. என்னை யேது மறிந்தில னெம்பிரான்
தன்னை நானுமுன் ஏது மறிந்திலேன்

என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே. 8

6130. தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே. 9—10

திருச்சிற்றம்பலம்

•••••

## 92. காலபாசத் திருக்குறுந்தொகை

6131. கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே. 1

6132. நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க வெனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே. 2

6133. கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரங்கு நீங்குமே. 3

6134. சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களி பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே. 4

6135. இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே. 5

6136. வாம தேவன் வளநகர் வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமம் தூபமும் தண்நறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே. 6

6137. படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம தீச னடியரை
விடைகொ ளூர்தியி னானடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே. 7

6138. விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்சல் நீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி யருகணை யாதுநீர்
பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே. 8

6139. இன்னங் கேண்மி னிளம்பிறை சூடிய
மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையுஞ் சாரலே. 9

6140. மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடி யேயலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகவே. 10

6141. அரக்க னீரைந் தலையுமோர் தாளினால்
நெருக்கி யூன்றியிட் டான்தமர் நிற்கிலும்
சுருக்கெ னாதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. மறக்கிற்பனேயென்னும் திருக்குறுந்தொகை

6142. காச னைக்கன லைக்கதிர் மாமணித்
தேச னைப்புக ழார்சிலர் தெண்ணர்கள்
மாசி னைக்கழித் தாட்கொள வல்லவெம்
ஈச னையினி நான்மறக் கிற்பனே. 1

6143. புந்திக் குவிளக் காய புராணனைச்
சந்திக் கண்நட மாடுஞ் சதுரனை
அந்தி வண்ணனை ஆரழல் மூர்த்தியை
வந்தெ னுள்ளங்கொண் டானை மறப்பனே. 2

6144. ஈச னீசனென் றென்று மரற்றுவன்
ஈசன் தானென் மனத்திற் பிரிவிலன்
ஈசன் தன்னையு மென்மனத் துக்கொண்டு
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. 3

6145. ஈச னென்னை யறிந்த தறிந்தனன்
ஈசன் சேவடி யேற்றப் பெறுதலால்
ஈசன் சேவடி யேத்தப்பெற் றேனினி
ஈசன் தன்னையும் யான்மறக் கிற்பனே. 4

6146. தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை
வேனி லானை மெலிவுசெய் தீயழல்
ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே. 5

6147. கன்ன லைக்கரும் புறிய தேறலை
மின்ன னைமின் னனைய உருவனைப்
பொன்ன னைமணிக் குன்று பிறங்கிய
என்ன னையினி யான்மறக் கிற்பனே. 6

6148. கரும்பி னைக்கட்டி யைக்கந்த மாமலர்ச்
சுரும்பி னைச்சுடர்ச் சோதியுட் சோதியை
அரும்பி னிற்பெரும் போதுகொண் டாய்மலர்
விரும்பு மீசனை யான்மறக் கிற்பனே. 7

6149. துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே. 8

6150. புதிய பூவினைப் புண்ணிய நாதனை
நிதியை நீதியை நித்திலக் குன்றினைக்
நதியைக் கண்டங் கறுத்த கடவுளை
மதியை மைந்தனை [illegible] கிற்ப[illegible]. 9

6151. கருகு கார்முகில் போல்வதொர் கண்டனை
உருவ நோக்கியை யூழி முதல்வனைப்
பருகு பாலனைப் பால்மதி சூடியை
மருவு மைந்தனை நான்மறக் கிற்பனே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 94. தொழற்பாலதே என்னுந் திருக்குறுந்தொகை

6152. அண்டத் தானை யமரர் தொழப்படும்
பண்டத் தானைப் பவித்திர மார்திரு
முண்டத் தானைமுற் றாத இளம்பிறைத்
துண்டத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 1

6153. முத்தொப் பானை முளைத்தெழு கற்பக
வித்தொப் பானை விளக்கிடை நேரொளி
ஒத்தொப் பானை யொளிபவ ளத்திரள்
தொத்தொப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 2

6154. பண்ணொத் தானைப் பவளந் திரண்டதோர்
வண்ணத் தானை வகையுணர் வான்றனை
எண்ணத் தானை யிளம்பிறை போல்வெள்ளைச்
சுண்ணத் தானைக்கண் டீர்தொழற் பாலதே.. 3

6155. விடலை யானை விரைகமழ் தேன்கொன்றைப்
படலை யானைப் பவிதிரி வான்செலும்
நடலை யானை நரிபிரி யாததோர்
சுடலை யானைக்கண் டீர்தொழற் பாலதே. 4

6156. பரிதி யானைப்பல் வேறு சமயங்கள்
கருதி யானைக்கண் டார்மனம் மேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 5

6157. ஆதி யானை அமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை உணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே. 6

6158. ஞாலத் தானைநல் லானைவல் லார்தொழும்
கோலத் தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத் தானை முதல்வனை மூவிலைச்
சூலத் தானைக்கண் டீர்தொழற் பாலதே. 7

6159. ஆதிப் பாலட்ட மூர்த்தியை ஆனஞ்சும்
வேதிப் பானைநம் மேல்வினை வெந்தறச்
சாதிப் பானைத் தவத்திடை மாற்றங்கள்
சோதிப் பானைக்கண் டீர்தொழற் பாலதே. 8

6160. நீற்றி னானை நிகரில்வெண் கோவணக்
கீற்றி னானைக் கிளரொளிச் செஞ்சடை
ஆற்றி னானை யமரர்த மாருயிர்
தோற்றி னானைக்கண் டீர்தொழற் பாலதே. 9

6161. விட்டிட் டானைமெய்ஞ் ஞானத்து மெய்ப்பொருள்
கட்டிட் டானைக் கனங்குழை பாலன்பு
பட்டிட் டானைப் பகைத்தவர் முப்புரஞ்
சுட்டிட் டானைக்கண் டீர்தொழற் பாலதே. 10

6162. முற்றி னானை இராவணன் நீண்முடி
ஒற்றி னானை யொருவிர லாலுறப்
பற்றி னானையோர் வெண்டலைப் பாம்பரைச்
சுற்றி னானைக்கண் டீர்தொழல் பாலதே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை

6163. புக்க ணைந்து புரிந்தல ரிட்டிலர்
நக்க ணைந்து நறுமலர் கொய்திலர்
சொக்க ணைந்த சுடரொளி வண்ணனை
மிக்குக் காணலுற் றாரங் கிருவரே. 1

6164. அலரு நீருங்கொண் டாட்டித் தெளிந்திலர்
திலக மண்டலந் தீட்டித் திரிந்திலர்
உலக மூர்த்தி யொளிநிற வண்ணனைச்
செலவு காணலுற் றாரங் கிருவரே. 2

6165. ஆப்பி நீரோ டலகுகைக் கொண்டிலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்
காப்புக் கொள்ளி கபாலிதன் வேடத்தை
ஓப்பிக் காணலுற் றாரங் கிருவரே. 3

6166. நெய்யும் பாலுங்கொண் டாட்டி நினைந்திலர்
பொய்யும் பொக்கமும் போக்கிப் புகழ்ந்திலர்
ஐயன் வெய்ய அழல்நிற வண்ணனை
மெய்யைக் காணலுற் றாரங் கிருவரே. 4

6167. எருக்கங் கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்
தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. 5

6168. மரங்க ளேறி மலர்பறித் திட்டிலர்
நிரம்ப நீர்சுமந் தாட்டி நினைந்திலர்
உரம்பொ ருந்தி யொளிநிற வண்ணனை
நிரம்பக் காணலுற் றாரங் கிருவரே. 6

6169. கட்டு வாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்
அட்ட மாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்ட கட்டமுற் றாரங் கிருவரே. 7

6170. வெந்த நீறு விளங்க அணிந்திலர்
கந்த மாமல ரிண்டை புனைந்திலர்
எந்தை யேறுகந் தேறெரி வண்ணனை
அந்தங் காணலுற் றாரங் கிருவரே. 8

6171. இளவெ ழுந்த இருங்குவ ளைம்மலர்
பிளவு செய்து பிணைத்தடி யிட்டிலர்
களவு செய்தொழிற் காமனைக் காய்ந்தவன்
அளவு காணலுற் றாரங் கிருவரே. 9

6172. கண்டி பூண்டு கபாலங்கைக் கொண்டிலர்
விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்
அண்ட மூர்த்தி யழல்நிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற் றாரங் கிருவரே. 10

6173. செங்க ணானும் பிரமனுந் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென்றி லிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 96. மனத்தொகைத் திருக்குறுந்தொகை

6174. பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புறம்
மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை
நின்னுள் ளத்தருள் கொண்டிருள் நீங்குதல்
என்னுள் ளத்துள தெந்தை பிரானிரே. 1

6175. முக்க ணும்முடை யாய்முனி கள்பலர்
தொக்கெ ணுங்கழ லாயொரு தோலினோ
டக்க ணம்மரை யாயரு ளேயலா
தெக்க ணும்மில னெந்தை பிரானிரே. 2

6176. பனியாய் வெங்கதிர் பாய்படர் புன்சடை
முனியாய் நீயுல கம்முழு தாளினும்
தனியாய் நீசரண் நீசல மேபெரி
தினியாய் நீயெனக் கெந்தை பிரானிரே. 3

6177. மறையும் பாடுதிர் மாதவர் மாலினுக்
குறையு மாயினை கோளர வோடொரு
பிறையுஞ் சூடினை யென்பத லாற்பிறி
திறையுஞ் சொல்லிலை யெந்தை பிரானிரே. 4

6178. பூத்தார் கொன்றையி னாய்புலி யின்னதள்
ஆர்த்தா யாடர வோடன லாடிய
கூத்தா நின்குரை யார்கழ லேயல
தேத்தா நாவெனக் கெந்தை பிரானிரே. 5

6179. பைம்மா லும்மர வாபர மாபசு
மைம்மால் கண்ணியோ டேறுமைந் தாவெனும்
அம்மா லல்லது மற்றடி நாயினேற்
கெம்மா லும்மிலே னெந்தை பிரானிரே. 6

6180. வெப்பத் தின்மன மாசு விளக்கிய
செப்பத் தாற்சிவ னென்பவர் தீவினை
ஒப்பத் தீர்த்திடு மொண்கழ லாற்கல்ல
தெப்பற் றும்மில னெந்தை பிரானிரே. 7

6181. திகழுஞ் சூழ்சுடர் வானொடு வைகலும்
நிகழு மொண்பொரு ளாயின நீதியென்
புகழு மாறு மலானுன பொன்னடி
இகழு மாறிலே னெந்தை பிரானிரே. 8

6182. கைப்பற் றித்திரு மால்பிர மன்னுனை
எப்பற் றியறி தற்கரி யாயருள்
அப்பற் றல்லது மற்றடி நாயினேன்
எப்பற் றும்மிலே னெந்தை பிரானிரே. 9

6183. எந்தை யெம்பிரா னென்றவர் மேல்மனம்
எந்தை யெம்பிரா னென்றிறைஞ் சித்தொழு
தெந்தை யெம்பிரா னென்றடி யேத்துவார்
எந்தை யெம்பிரா னென்றடி சேர்வரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 97. சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை

6184. சிந்திப் பார்மனத் தான்சிவன் செஞ்சுடர்
அந்தி வான்நிறத் தானணி யார்மதி
முந்திச் சூடிய முக்கண்ணி னானடி
வந்திப் பாரவர் வானுல காள்வரே. 1

6185. அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதிய னென்பரே. 2

6186. ஆதி யாயவ னாரு மிலாதவன்
போது சேர்புனை நீண்முடிப் புண்ணியன்
பாதி பெண்ணுரு வாகிப் பரஞ்சுடர்ச்
சோதி யுட்சோதி யாய்நின்ற சோதியே. 3

6187. இட்ட திட்டதோ ரேறுகந் தேறியூர்
பட்டி துட்டங்க னாய்ப்பலி தேர்வதோர்
கட்ட வாழ்க்கைய னாகிலும் வானவர்
அட்ட மூர்த்திய ருளென் றடைவரே. 4

6188. ஈறில் கூறைய னாகி யெரிந்தவெண்
நீறு பூசி நிலாமதி சூடிலும்
வீறி லாதன செய்யினும் விண்ணவர்
ஊற லாயரு ளாயென் றுரைப்பரே. 5

6189. உச்சி வெண்மதி சூடிலும் ஊன்அறாப்
பச்சை வெண்தலை யேந்திப் பலவி(ல்)லம்
பிச்சை யேபுகு மாகிலும் வானவர்
அச்சந் தீர்த்தரு ளாயென் றடைவரே. 6

6190. ஊரி லாயென்றொன் றாக உரைப்பதோர்
பேரி லாய்ப்பிறை சூடிய பிஞ்ஞகா
காரு லாங்கண்ட னேயுன் கழலடி
சேர்பி லார்கட்குத் தீயவை தீயவே. 7

6191. எந்தை யேயெம் பிரானே யெனவுள்கிச்
சிந்திப் பாரவர் தீவினை தீருமால்
வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
அந்த மாவளப் பாரடைந் தார்களே. 8

6192. ஏன வெண்மருப் போடென்பு பூண்டெழில்
ஆனை யீருரி போர்த்தன லாடிலும்
தான வண்ணத்த னாகிலும் தன்னையே
வான நாடர் வணங்குவர் வைகலே. 9

6193. ஐயன் அந்தணன் ஆணொடு பெண்ணுமாம்
மெய்யன் மேதகு வெண்பொடி பூசிய
மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினான்
பைகொள் பாம்பரை யார்த்த பரமனே. 10

6194. ஒருவ னாகிநின் றானிவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்
அருவ ராஅரை ஆர்த்தவ னார்கழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. 11

6195. ஓத வண்ணனும் ஒண்மலர்ச் செல்வனும்
நாத னேயரு ளாயென்று நாடொறும்
காதல் செய்து கருதப் படுமவர்
பாத மேத்தப் பறையும்நம் பாவமே. 12

6196. ஔவ தன்மை யவரவ ராக்கையான்
வெவ்வ தன்மைய னென்ப தொழிமினோ
மௌவல் நீண்மலர் மேலுறை வானொடு
பவ்வ வண்ணனு மாய்ப்பணி வார்களே. 13

6197. அக்கு மாமையும் பூண்டன லேந்தியில்
புக்குப் பல்பலி தேரும் புராணனை
நக்கு நீர்கள் நரகம் புகேன்மினோ
தொக்க வானவ ராற்றொழு வானையே. 14

6198. கங்கை தங்கிய செஞ்சடை மேலினந்
திங்கள் சூடிய தீநிற வண்ணனார்
இங்க ணாரெழில் வானம் வணங்கவே
அங்க ணாற்கது வாலவன் தன்மையே. 15

6199. ஞகர வெல்கொடி யானொடு நன்னெஞ்சே
நுகர நீயுனைக் கொண்டுயப் போக்குறில்
மகர வெல்கொடி மைந்தனைக் காய்ந்தவன்
புகரில் சேவடி யேபுக லாகுமே. 16

6200. சரண மாம்படி யார்பிற ரியாவரோ
கரணந் தீர்த்துயிர் கைபி லிகழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூஎயில் எய்தவ னல்லனே. 17

6201. ஞமனென் பான்நர கர்க்கு நமக்கெலாம்
சிவனென் பான்செழு மான்மறிக் கையினான்
கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்
தமரென் றாலுங் கெடுந்தடு மாற்றமே. 18

6202. இடப மேறியு மில்பலி யேற்பவர்
அடவி காதலித் தாடுவ ரைந்தலைப்
படவம் பாம்பரை யார்த்த பரமனைக்
கடவி ராய்ச்சென்று கைதொழு தும்மினே. 19

6203. இணர்ந்து கொன்றைபொன் தாது சொரிந்திடும்
புணர்ந்த வாளர வம்மதி யோடுடன்
அணைந்த அஞ்சடை யானவன் பாதமே
உணர்ந்த வுள்ளத் தவருணர் வார்களே. 20

6204. தருமந் தான்தவந் தான்தவத் தால்வரும்
கருமந் தான்கரு மான்மறிக் கையினான்
அருமந் தன்ன அதிர்கழல் சேர்மினோ
சிரமஞ் சேரழல் தீவினை யாளரே. 21

6205. நமச்சி வாயவென் பாருள ரேலவர்
தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும்
இமைத்து நிற்பது சால அரியதே. 22

6206. பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல் காலநின் றேத்துமின் தொல்வினை
வெற்பில் தோன்றிய வெங்கதிர் கண்டவப்
புற்ப னிக்கெடு மாறது போலுமே. 23

6207. மணிசெய் கண்டத்து மான்மறிக் கையினான்
கணிசெய் வேடத்த ராயவர் காப்பினால்
பணிகள் தாஞ்செய வல்லவர் யாவர்தம்
பிணிசெ யாக்கையை நீக்குவர் பேயரே. 24

6208. இயக்கர் கின்னர ரிந்திரன் தானவர்
நயக்க நின்றவன் நான்முகன் ஆழியான்
மயக்க மெய்தவன் மாலெரி யாயினான்
வியக்குந் தன்மையி னானெம் விகிர்தனே. 25

6209. அரவ மார்த்தன லாடிய அண்ணலைப்
பரவு வாரவர் பாவம் பறைதற்குக்
குரவை கோத்தவ னுங்குளிர் போதின்மேல்
கரவில் நான்முக னுங்கரி யல்லரே. 26

6210. அழலங் கையினன் அந்தரத் தோங்கிநின்
றுழலும் மூவெயி லொள்ளழ லூட்டினான்
தழலுந் தாமரை யானொடு தாவினான்
கழலுஞ் சென்னியுங் காண்டற் கரியனே. 27

6211. இளமை கைவிட் டகறலு மூப்பினார்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாமொளி யாய்மதி யாயினான்
கிளமை யேகிளை யாக நினைப்பனே. 28

6212. தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் தலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே. 29

6213. இலங்கை மன்னனை யீரைந்து பத்துமன்
றலங்க லோடுட னேசெல வூன்றிய
நலங்கொள் சேவடி நாடொறும் நாடொறும்
வலங்கொண் டேத்துவார் வானுல் காள்வரே. 30

திருச்சிற்றம்பலம்

•••••

## 98. உள்ளத் திருக்குறுந்தொகை

6214. நீற லைத்ததோர் மேனி மிர்சடை
ஆற லைக்கநின் றாடும் அமுதினைத்
தேற லைத்தெளி யைத்தெளி வாய்த்ததோர்
ஊற லைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 1

6215. பொந்தை யைப்புக்கு நீக்கப் புகுந்திடும்
தந்தை யைத்தழல் போல்வதோர் மேனியைச்
சிந்தை யைத்தெளி வைத்தெளி வாய்த்ததோர்
எந்தை யைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 2

6216. வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனார்
கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்
றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே. 3

6217. அம்மா னையமு தின்னமு தேயென்று
தம்மா னைத்தத்து வத்தடி யார்தொழும்
செம்மா னநிறம் போல்வதோர் சிந்தையுள்
எம்மா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 4

6218. கூறே றும்உமை பாகமோர் பாலராய்
ஆறே றுஞ்சடை மேற்பிறை சூடுவர்
பாறே றுந்தலை யேந்திப் பலவி(ல்)லம்
ஏறே றுமெந்தை யைக்கண்டதெ னுள்ளமே. 5

6219. முன்னெஞ் சம்மின்றி மூர்க்கராய்ச் சாகின்றார்
தந்நெஞ் சந்தமக் குத்தாமி லாதவர்
வன்னெஞ் சம்மது நீங்குதல் வல்லீரே
என்னெஞ் சிலீச னைக்கண்டதெ னுள்ளமே. 6

6220. வென்றா னைப்புல னைந்துமென் தீவினை
கொன்றா னைக்குணத் தாலே வணங்கிட
நன்றா நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றா னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 7

6221. மருவி னைமட நெஞ்சம் மனம்புகும்
குருவி னைக்குணத் தாலே வணங்கிடும்
திருவி னைச்சிந்தை யுட்சிவ னாய்நின்ற
உருவி னைக்கண்டு கொண்டதே னுள்ளமே. 8

6222. தேச னைத்திரு மால்பிர மன்செயும்
பூச னைப்புண ரிற்புணர் வாயதோர்
நேச னைநெஞ்சி னுள்நிறை வாய்நின்ற
ஈச னைக்கண்டு கொண்டதெ னுள்ளமே. 9

6223. வெறுத்தா னைம்புல னும்பிர மன்தலை
அறுத்தா னையரக் கன்கயி லாயத்தைக்
கறுத்தா னைக்கா லில்விர லொன்றினால்
ஒறுத்தா னைக்ண்டு கொண்டதெ னுள்ளமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 99. பாவநாசத் திருக்குறுந்தொகை

6224. பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுகந் தாடு மவன்கழல்
மேவ ராய்மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே.

6225.கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஓங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீச னெனாதவர்க் கில்லையே. 2

6226.பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீச னெனாதவர்க் கில்லையே. 3

6227.வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்மோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே. 4

6228.காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
ஏல ஈசனென் பார்கன்றி யில்லையே. 5

6229.கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி யிரும்தவஞ் செய்யிலென்
ஊனை யுண்ட லொழிந்துவான் நோக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே. 6

6230.கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பய னில்லையே. 7

6231. நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்ற மேறி இருந்தவஞ் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்று மீசனென் பார்க்கன்றி யில்லையே. 8

6232.கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே. 9

6233. மற்று நற்றவஞ் செய்து வருந்திலென்
பொற்றை யுற்றெடுத் தானுடல் புக்கிறக்
குற்ற நற்குரை யார்கழற் சேவடி
பற்றி லாதவர்க் குப்பய னில்லையே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 100. ஆதிபுராணத் திருக்குறுந்தொகை

6234. வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயக னாதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே. 1

6235. செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே. 2

6236. நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே. 3

6237. வாது செய்து மயங்கும் மனத்தராய்
ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே. 4

6238. கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே. 5

6239. பேய்வ னத்தமர் வானைப் பிரார்த்தித்தார்க்
கீவ னையிமை யோர்முடி தன்னடிச்
சாய்வ னைச்சல வார்கள் தமக்குடல்
சிவ னைச்சிவ னைச்சிந்தி யார்களே. 6

6240. எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன
துருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை யயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே. 7

6241. அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழும்
கருத்தி னைநினை யார்கன் மனவரே. 8

6242. தாயி னும்நல்ல சங்கர னுக்கன்பர்
ஆய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை யுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே. 9

6243. அரக்கன் வல்லரட் டாங்கொழித் தாரருள்
பெருக்கச் செய்த பிரான்பெருந் தன்மையை
அருத்தி செய்தறி யப்பெறு கின்றிலர்
கருத்தி லாக்கய வக்கணத் தோர்களே. 10

**திருச்சிற்றம்பலம்**

ஃஃஃஃ

## ஐந்தாம் திருமுறை முற்றிற்று

# ஆறாம் திருமுறை

## 1. கோயில் – பெரிய திருத்தாண்டகம்

6244. அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

6245. கற்றானைக் கங்கைவார் சடையான் தன்னைக்
காவிரிசூழ் வலஞ்சுழியுங் கருதி னானை
அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய் வானை
ஆரூரும் புகுவானை யறிந்தோ மன்றே
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தானை
வானவர்க ளெப்பொழுதும் வணங்கி யேத்தப்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 2

6246. கருமானி னுரியதளே உடையா வீக்கிக்
கனைகழல்கள் கலந்தொலிப்ப அனல்கை யேந்தி
வருமானத் திரள்தோள்கள் மட்டித் தாட
வளர்மதியஞ் சடைக்கணிந்து மானோர் நோக்கி
அருமான வாண்முகத்தா ளமர்ந்து காண
அமரர்கணம் முடிவணங்க ஆடு கின்ற
பெருமானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 3

6247. அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன் தன்னை
அமரர்கள்தம் பெருமானை யரனை மூவா
மருந்தமரர்க் கருள்புரிந்த மைந்தன் தன்னை
மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருந்தொளிய தாரகையுந் திசைக ளெட்டுந்
திரிசுடர்கள் ஓரிரண்டும் பிறவு மாய
பெருந்தகையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 4

6248. அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 5

6249. கரும்பமரும் மொழிமடவான் பங்கன் தன்னைக்
கனவயிரக் குன்றனைய காட்சி யானை
அரும்பமரும் பூங்கொன்றைத் தாரான் தன்னை
யருமறையோ டாறங்க மாயி னானைச்
சுரும்பமருங் கடிபொழில்கள் சூழ்தென் னாரூர்ச்
சுடர்க்கொழுந்தைத் துளக்கில்லா விளக்கை மிக்க
பெரும்பொருளைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 6

6250. வரும்பயனை யெழுநரம்பி னோசை யானை
வரைசிலையா வானவர்கள் முயன்ற வாளி
அரும்பயஞ்செ யவுணர்புர மெரியக் கோத்த
அம்மானை யலைகடல்நஞ் சயின்றான் றன்னைச்
சுரும்பமருங் குழன்மடவார் கடைக்கண் நோக்கில்
துளங்காத சிந்தையராய்த் துறந்தோ ருள்ளப்
பெரும்பயனைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 7

6251. காரானை யீருரிவைப் போர்வை யானைக்
காமருபூங் கச்சியே கம்பன் தன்னை
யாரேனு மடியவர்கட் கணியான் தன்னை
யமரர்களுக் கறிவரிய அளவி லானைப்
பாரோரும் விண்ணோரும் பணிய நட்டம்
பயில்கின்ற பரஞ்சுடரைப் பரனை யெண்ணில்
பேரானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 8

6252. முற்றாத பால்மதியஞ் சூடி னானை
மூவுலகுந் தானாய முதல்வன் றன்னைச்

செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் றன்னைத்
திகழொளியை மரகதத்தைத் தேனைப் பாலை
குற்றாலத் தமர்ந்துறையுங் குழகன் தன்னைக்
கூத்தாட வல்லானைக் கோனை ஞானம்
பெற்றானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 9

6253. காரொளிய திருமேனிச் செங்கண் மாலுங்
கடிகமலத் திருந்தவனுங் காணா வண்ணம்
சீரொளிய தழல்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கும்
ஏரொளியை இருநிலனும் விசும்பும் விண்ணு
மேழுலகுங் கடந்தண்டத் தப்பால் நின்ற
பேரொளியைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 2. கோயில் – புக்க திருத்தாண்டகம்

6254. மங்குன் மதிதவழும் மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியாற் குற்றா லத்தார்
குடமூக்கி லுள்ளார்போய்க் கொள்ளம் பூதூர்
தங்குமிட மறியார் சால நாளார்
தருமபுரத் துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 1

6255. நாகமரைக் கசைத்த நம்ப ரிந்நாள்
நனிபள்ளி யுள்ளார்போய் நல்லூர் தங்கிப்
பாகப்பொ ழுதெல்லாம் பாசூர்த் தங்கிப்
பரிதிநிய மத்தார் பன்னி ருநாள்
வேதமும் வேள்விப் புகையு மோவா
விரிநீர் மிழலை யெழுநாள் தங்கிப்
போகமும் பொய்யாப் பொருளு மானார் :
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 2

6256.துறங்காட்டி யெல்லாம் விரித்தார் போலுந்
தூமதியும் பாம்பு முடையார் போலும்
மறங்காட்டி மும்மதிலு மெய்தார் போலும்
மந்திரமுந் தந்திரமுந் தாமே போலும்
அறங்காட்டி யந்தணர்க்கன் றால நீழல்
அறமருளிச் செய்த அரனா ரிந்நாள்
புறங்காட் டெரியாடிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 3

6257.வாரேறு வனமுலையாள் பாக மாக
மழுவாள்கை யேந்தி மயானத் தாடிச்
சீரேறு தண்வயல்சூ ழோத வேலித்
திருவாஞ்சி யத்தார் திருநள் ளாற்றார்
காரேறு கண்டத்தார் காமற் காய்ந்த
கண்விளங்கு நெற்றியார் கடல்நஞ் சுண்டார்
போரேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 4

6258.காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடிக்
கபாலங்கை யேந்திக் கணங்கள் பாட
ஊரா ரிடும்பிச்சை கொண்டு முலும்
உத்தமராய் நின்ற ஒருவ னார்தாம்
சீரார்கழல் வணங்குந் தேவ தேவர்
திருவாரூர்த் திருமூலட் டானம் மேயார்
போரார் விடையேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 5

6259.காதார் குழையினர் கட்டங் கத்தர்
கயிலாய மாமலையார் காரோ ணத்தார்
மூதாயர் மூதாதை யில்லார் போலும்
முதலு மிறுதியுந் தாமே போலும்
மாதாய மாதர் மகிழ அன்று
வன்மதவேள் தன்னுடலங் காய்ந்தா ரிந்நாள்
போதார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 6

6260.இறந்தார்க்கு மென்று மிறவா தார்க்கும்
இமையவர்க்கும் ஏகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கு மென்றும் பிறவா தார்க்கும்
பெரியான்றன் பெருமையே பேச நின்று
மறந்தார் மனத்தென்றும் மருவார் போலும்

மறைக்காட் டுறையும் மழுவாட் செல்வர்
புறந்தார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 7

6261. குலாவெண் தலைமாலை யென்பு பூண்டு
குளிர்கொன்றைத் தாரணிந்து கொல்லே றேறிக்
கலாவெங் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கையோ டனலேந்திக் காடு றைவார்
நிலாவெண் மதியுரிஞ்ச நீண்ட மாடம்
நிறைவயல்சூழ் நெய்த்தானம் மேய செல்வர்
புலால்வெண் தலையேந்திப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 8

6262. சந்தித்த கோவணத்தர் வெண்ணூன் மார்பர்
சங்கரனைக் கண்டீரோ கண்டோ மிந்நாள்
பந்தித்த வெள்விடையைப் பாய வேறிப்
படுதலையி லென்கொலோ ஏந்திக் கொண்டு
வந்திங்கென் வெள்வளையுந் தாமு மெல்லா
மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ளப்
பொன்றீ மணிவிளக்குப் பூதம் பற்றப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 9

6263. பாதங்கள் நல்லார் பரவி யேத்தப்
பத்திமையாற் பணிசெய்யுந் தொண்டர் தங்கள்
ஏதங்கள் தீர இருந்தார் போலும்
எழுபிறப்பும் ஆளுடைய ஈச னார்தாம்
வேதங்க ளோதியோர் வீணை யேந்தி
விடையொன்று தாமேறி வேத கீதர்
பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கிப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே. 10

6264. பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் றார்த்துப்
பகவனார் பாரிடங்கள் சூழ நட்டஞ்
சிட்டராய்த் தீயேந்திச் செல்வார் தம்மைத்
தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோ மிந்நாள்
விட்டிலங்கு சூலமே வெண்ணூ லுண்டே
ஓதுவதும் வேதமே வீணை யுண்டே
கட்டங்கங் கையதே சென்று காணீர்
கறைசேர் மிடற்றெங் கபாலி யார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 3. திரு அதிகைவீரட்டானம் – ஏழைத்திருத்தாண்டகம்

6265. வெறிவிரவு கூவிளநல் தொங்க லானை
வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப்
பொன்னிறத்தி னானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீ ரம்மான் றன்னை
அதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை
எறிகெடிலத் தானை யிறைவன் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 1

6266. வெள்ளிக் குன்றன்ன விடையான் றன்னை
வில்வலான் வில்வட்டங் காய்ந்தான் றன்னை
புள்ளிவரி நாகம் பூண்டான் றன்னைப்
பொன்பிதிர்ந் தன்ன சடையான் றன்னை
வள்ளி வளைத்தோள் முதல்வன் றன்னை
வாரா வுலகருள வல்லான் றன்னை
எள்கவிடு பிச்சை யேற்பான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 2

6267. முந்தி யுலகம் படைத்தான் றன்னை
மூவா முதலாய மூர்த்தி தன்னைச்
சந்த வெண்திங்க ளணிந்தான் றன்னைத்
தவநெறிகள் சாதிக்க வல்லான் றன்னைச்
சிந்தையில் தீர்வினையைத் தேனைப் பாலைச்
செழுங்கெடில வீரட்டம் மேவி னானை
எந்தை பெருமானை யீசன் தன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 3

6268. மந்திரமும் மறைப்பொருளு மானான் றன்னை
மதியமும் ஞாயிறுங் காற்றுந் தீயும்
அந்தரமு மலைகடலு மானான் றன்னை
யதியரைய மங்கை யமர்ந்தான் றன்னைக்
கந்தருவஞ் செய்திருவர் கழல்கை கூப்பிக்
கடிமலர்கள் பலதூவிக் காலை மாலை
இந்திரனும் வானவருந் தொழச்செல் வானை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 4

6269. ஒருபிறப்பி லானடியை யுணர்ந்துங் காணா
ருயர்கதிக்கு வழிதேடிப் போக மாட்டார்
வருபிறப்பொன் றுணராது மாசு பூசி

வழிகாணா தவர்போல்வார் மனத்த னாகி
அருபிறப்பை யறுப்பிக்கு மதிகை யூர
னம்மான்றன் அடியிணையே யணைந்து வாழா
திருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற்கேட்
டேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 5

6270. ஆறேற்க வல்ல சடையான் றன்னை
யஞ்சனம் போலு மிடற்றான் றன்னைக்
கூறேற்கக் கூறமர வல்லான் றன்னைக்
கோல்வளைக்கை மாதராள் பாகன் றன்னை
நீறேற்கப் பூசும் அகலத் தானை
நின்மலன் றன்னை நிமலன் றன்னை
ஏறேற்க வேறுமா வல்லான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 6

6271. குண்டாக்க னாயுழன்று கையி லுண்டு
குவிமுலையார் தம்முன்னே நாண மின்றி
உண்டியுகந் தமணே நின்றார் சொற்கேட்
டுடனாகி யுழிதந்தே னுணர்வொன் றின்றி
வண்டுலவு கொன்றையங் கண்ணி யானை
வானவர்க ளேத்தப் படுவான் றன்னை
எண்டிசைக்கும் மூர்த்தியாய் நின்றான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 7

6272. உறிமுடித்த குண்டிகைதங் கையிற் றூக்கி
யூத்தைவாய்ச் சமணர்க்கோர் குண்டாக் கனாய்க்
கறிவிரவு நெய்சோறு கையி லுண்டு
கண்டார்க்குப் பொல்லாத காட்சி யானேன்
மறிதிரைநீர்ப் பவ்வநஞ் சுண்டான் றன்னை
மறித்தொருகால் வல்வினையேன் நினைக்க மாட்டேன்
எறிகெடில நாடர் பெருமான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 8

6273. நிறைவார்ந்த நீர்மையாய் நின்றான் றன்னை
நெற்றிமேற் கண்ணொன் றுடையான் றன்னை
மறையானை மாசொன்றி லாதான் றன்னை
வானவர்மேல்மலரடியை வைத்தான் றன்னைக்
கறையானைக் காதார் குழையான் றன்னைக்
கட்டங்கம் ஏந்திய கையி னானை
இறையானை யெந்தை பெருமான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 9

6274. தொல்லைவான் சூழ்வினைகள் சூழப் போந்து
தூற்றியே னாற்றியேன் சுடராய் நின்று
வல்லையே இடர்தீர்த்திங் கடிமை கொண்ட
வானவர்க்குந் தானவர்க்கும் பெருமான் றன்னைக்
கொல்லைவாய்க் குருந்தொசித்துக் குழலு மூதுங்
கோவலனும் நான்முகனுங் கூடி யெங்கும்
எல்லைகாண் பரியானை யெம்மான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 10

6275. முலைமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கள்
முறைமுறையால் நந்தெய்வ மென்று தீண்டித்
தலைபறிக்குந் தன்மையர்க ளாகி நின்று
தவமேயென் றவஞ்செய்து தக்க தோரார்
மலைமறிக்கச் சென்ற இலங்கைக் கோனை
மதனழியச் செற்றசே வடியி னானை
இலைமறித்த கொன்றையந் தாரான் றன்னை
யேழையே னான்பண் டிகழ்ந்த வாறே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 4. திரு அதிகை வீரட்டானம் – அடையாளத் திருத்தாண்டகம்

6276. சந்திரனை மாகங்கைத் திரையால் மோதச்
சடாமகுடத் திருத்துமே சாம வேத
கந்தருவம் விரும்புமே கபால மேந்து
கையனே மெய்யனே கனக மேனிப்
பந்தணவு மெல்விரலாள் பாக னாமே
பசுவேறு மேபரம யோகி யாமே
ஐந்தலைய மாசுணங்கொண் டரையார்க் கும்மே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 1

6277. ஏறேறி யேழுலகு முழிதர் வானே
யிமையவர்கள் தொழுதேத்த இருக்கின் றானே
பாறேறு படுதலையிற் பலிகொள் வானே
படவரவந் தடமார்பிற் பயில்வித் தானே
நீறேறு செழும்பவளக் குன்றொப் பானே
நெற்றிமே லொற்றைக்கண் நிறைவித் தானே

ஆறேறுசடை முடிமேற் பிறைவைத் தானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 2

6278. முண்டத்திற் பொலிந்திலங்கு மேனி யானே
முதலாகி நடுவாகி முடிவா னானே
கண்டத்தில் வெண்மருப்பின் காறை யானே
கதநாகங் கொண்டாடுங் காட்சி யானே
பிண்டத்தி னியற்கைக்கோர் பெற்றி யானே
பெருநிலநீர் தீவளியா காச மாகி
அண்டத்துக் கப்பாலா யிப்பா லானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 3

6279. செய்யனே கரியனே கண்டம் பைங்கண்
வெள்ளெயிற்றா டரவனே வினைகள் போக
வெய்யனே தண்கொன்றை மிலைத்த சென்னிச்
சடையனே விளங்குமழுச் சூல மேந்துங்
கையனே காலங்கள் மூன்றா னானே
கருப்புவிற் றனிக்கொடும்பூண் காமற் காய்ந்த
ஐயனே பருத்துயர்ந்த ஆனேற் றானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 4

6280. பாடுமே யொழியாமே நால்வே தம்மும்
படர்சடைமே லொளிதிகழப் பனிவெண் திங்கள்
சூடுமே யரைதிகழத் தோலும் பாம்புஞ்
சுற்றுமே தொண்டைவா யுமையோர் பாகங்
கூடுமே குடமுழவம் வீணை தாளங்
குறுநடைய சிறுபூதம் முழக்க மாக்கூத்
தாடுமே யந்தடக்கை யனலேந் தும்மே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 5

6281. ஒழித்திடுமே யுள்குவா ருள்ளத் துள்ள
உறுபிணியுஞ் செறுபகையு மொற்றைக் கண்ணால்
விழித்திடுமே காமனையும் பொடியாய் வீழ
வெள்ளப் புனற்கங்கை செஞ்ச டைமேல்
இழித்திடுமே யேழுலகுந் தானா கும்மே
யியங்குந் திரிபுரங்க ளோரம் பினால்
அழித்திடுமே ஆதிமா தவத்து ளானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 6

6282.குழலோடு கொக்கரைகைத் தாளம் மொந்தை
குறட்பூதம் முன்பாடத் தானா டும்மே
கழலாடு திருவிரலாற் கரணஞ் செய்து
கனவின்கட் திருவுருவந் தான்காட் டும்மே
எழிலாருந் தோள்வீசி நடமா டும்மே
ஈமப் புறங்காட்டி லேமந் தோறும்
அழலாடு மேயட்ட மூர்த்தி யாமே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 7

6283.மாலாகி மதமிக்க களிறு தன்னை
வதைசெய்து மற்றதனி னுரிவை கொண்டு
மேலாலுங் கீழாலுந் தோன்றா வண்ணம்
வெம்புலால் கைகலக்க மெய்போர்த் தானே
கோலாலம் படவரைநட் டரவு சுற்றிக்
குரைகடலைத் திரையலறக் கடைந்து கொண்ட
ஆலால முண்டிருண்ட கண்டத் தானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 8

6284.செம்பொனாற் செய்தழகு பெய்தாற் போலுஞ்
செஞ்சடையெம் பெருமானே தெய்வம் நாறும்
வம்பினாள் மலர்க்கூந்த லுமையாள் காதன்
மணவாள னேவலங்கை மழுவா ளனே
நம்பனே நான்மறைகள் தொழநின் றானே
நடுங்காதார் புரமூன்று நடுங்கச் செற்ற
அம்பனே அண்டகோ சரத்து ளானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 9

6285.எழுந்ததிரை நதித்திவலை நனைந்த திங்கள்
இளநிலாத் திகழ்கின்ற வளர்ச டையனே
கொழும்பவளச் செங்கனிவாய்க் காமக் கோட்டி
கொங்கையினை யமர்பொருது கோலங் கொண்ட
தழும்புளவே வரைமார்பில் வெண்ணூ லுண்டே
சாந்தமொடு சந்தனத்தி னளறு தங்கி
அழுந்தியசெந் திருவுருவில் வெண்ணீற் றானே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 10

6286.நெடியானும் நான்முகனும் நேடிக் காணா
நீண்டானே நேரொருவ ரில்லா தானே

கொடியேறு கோலமா மணிகண் டனே
கொல்வேங்கை யதளனே கோவ ணவனே
பொடியேறு மேனியனே ஐயம் வேண்டிப்
புவலோகந் திரியுமே புரிநூ லானே
அடியாரை யமருலகம் ஆள்விக் கும்மே
அவனாகி லதிகைவீ ரட்ட னாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 5. திருவீரட்டானம் – போற்றித் திருத்தாண்டகம்

6287. எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங்கூற் றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றா ரிடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரண மெய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி. 1

6288. பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி
பல்லூழி யாய படைத்தாய் போற்றி
ஓட்டகத்தே யூணா உகந்தாய் போற்றி
உள்குவா ருள்ளத் துறைவாய் போற்றி
காட்டகத்தே யாடல் மகிழ்ந்தாய் போற்றி
கார்மேக மன்ன மிடற்றாய் போற்றி
ஆட்டுவதோர் நாக மசைத்தாய் போற்றி
யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 2

6289. முல்லையங் கண்ணி முடியாய் போற்றி
முழுநீறு பூசிய மூர்த்தீ போற்றி
எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி
ஏழ்நரம்பி னோசை படைத்தாய் போற்றி
சில்லைச் சிரைத்தலையி லூணா போற்றி
சென்றடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி
தில்லைச்சிற் றம்பலம் மேயாய் போற்றி
திருவீரட் டானத்தெஞ் செல்வா போற்றி. 3

6290.சாம்ப ரகலத் தணிந்தாய் போற்றி
தவநெறிகள் சாதித்து நின்றாய் போற்றி
கூம்பித் தொழுவார்தங் குற்றே வலைக்
குறிக்கொண் டிருக்குங் குழகா போற்றி
பாம்பும் மதியும் புனலுந் தம்மிற்
பகைதீர்த் துடன்வைத்த பண்பா போற்றி
ஆம்பல் மலர்கொண் டணிந்தாய் போற்றி
யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 4

6291.நீறேறு நீல மிடற்றாய் போற்றி
நிழல்திகழும் வெண்மழுவாள் வைத்தாய் போற்றி
கூறே றுமையொருபாற் கொண்டாய் போற்றி
கோளரவம் ஆட்டுங் குழகா போற்றி
ஆறேறு சென்னி யுடையாய் போற்றி
யடியார்கட் காரமுத மானாய் போற்றி
யேறேற என்றும் உகப்பாய் போற்றி
யிருங்கெடில வீரட்டத் தெந்தாய் போற்றி. 5

6292.பாடுவார் பாட லுகப்பாய் போற்றி
பழையாற்றுப் பட்டீச் சுரத்தாய் போற்றி
வீடுவார் வீடருள வல்லாய் போற்றி
வேழத் துரிவெருவப் போர்த்தாய் போற்றி
நாடுவார் நாடற் கரியாய் போற்றி
நாக மரைக்கசைத்த நம்பா போற்றி
ஆடும்ஆன் ஐந்தும் உகப்பாய் போற்றி
யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 6

6293.மண்துளங்க ஆடல் மகிழ்ந்தாய் போற்றி
மால்கடலும் மால்விசும்பு மானாய் போற்றி
விண்துளங்க மும்மதிலு மெய்தாய் போற்றி
வேழத் துரிமூடும் விகிர்தா போற்றி
பண்துளங்கப் பாடல் பயின்றாய் போற்றி
பார்முழுதும் ஆய பரமா போற்றி
கண்துளங்கக் காமனைமுன் காய்ந்தாய் போற்றி
கார்க்கெடிலங் கொண்ட கபாலீ போற்றி. 7

6294.வெஞ்சினவெள் ஏறூர்தி யுடையாய் போற்றி
விரிசடைமேல் வெள்ளம் படைத்தாய் போற்றி

துஞ்சாப் பலிதேருந் தோன்றால் போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
நஞ்சொடுங்குங் கண்டத்து நாதா போற்றி
நான்மறையோ டாறங்க மானாய் போற்றி
அஞ்சொலாள் பாகம் அமர்ந்தாய் போற்றி
யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 8

6295. சிந்தையாய் நின்ற சிவனே போற்றி
சீபர்ப்ப தஞ்சிந்தை செய்தாய் போற்றி
புந்தியாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி
புண்ணியனே போற்றி புனிதா போற்றி
சந்தியாய் நின்ற சதுரா போற்றி
தத்துவனே போற்றியென் தாதாய் போற்றி
அந்தியாய் நின்ற அரனே போற்றி
யலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி. 9

6296. முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றியென் தாதாய் போற்றி
தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணுங் கண்ணிலே னெந்தாய் போற்றி
யெறிகெடில வீரட்டத் தீசா போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 6. திருஅதிகை வீரட்டானம் – திருவடித் திருத்தாண்டகம்

6297. அரவணையான் சிந்தித் தரற்றும்மடி அருமறையான்
சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாரும்மடி சார்ந்தார்கட்
கெல்லாஞ் சரணாமடி
பரவுவார் பாவம் பறைக்கும்மடி பதினெண்
கணங்களும் பாடும்மடி
திரைவிரவு தென்கெடில நாடன்னடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 1

6298.கொடுவினையா ரென்றுங் குறுகாவடி குறைந்தடைந்தா
ராழாமைக் காக்கும்மடி
படுமுழவம் பாணி பயிற்றும்மடி பதைத்தெழுந்த
வெங்கூற்றைப் பாய்ந்தவடி
கடுமுரணே றூர்ந்தான் கழற்சேவடி கடல்வையங்
காப்பான் கருதும்மடி
நெடுமதியங் கண்ணியணிந் தானடி நிறைகெடில
வீரட்டம் நீங்காவடி. 2

6299.வைதெழுவார் காமம்பொய் போகாவடி வஞ்சவலைப்
பாடொன் றில்லாவடி
கைதொழுது நாமேத்திக் காணும்மடி கணக்கு
வழக்கைக் கடந்தவடி
நெய்தொழுது நாமேத்தி ஆட்டும்மடி நீள்விசும்பை
யூடறுத்து நின்றவடி
தெய்வப் புனற்கெடில நாடன்னடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 3

6300. அரும்பித்த செஞ்ஞாயி றேய்க்கும்மடி அழகெழுத
லாகா அருட்சேவடி
சுரும்பித்த வண்டினங்கள் சூழ்ந்தவடி சோமனையுங்
காலனையுங் காய்ந்தவடி
பெரும்பித்தர் கூடிப் பிதற்றும்மடி பிழைத்தார்
பிழைப்பறிய வல்லவடி
திருந்துநீர்த் தென்கெடில நாடன்னடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 4

6301. ஒருகாலத் தொன்றாகி நின்றவடி ஊழிதோ
றூழி யுயர்ந்தவடி
பொருகழலும் பல்சிலம்பும் ஆர்க்கும்மடி புகழ்வார்
புகழ்தகைய வல்லவடி
இருநிலத்தா ரின்புற்றங் கேத்தும்மடி யின்புற்றா
ரிட்டபூ ஏறும்மடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 5

6302.திருமகட்குச் செந்தா மரையாமடி சிறந்தவர்க்குத்
தேனாய் விளைக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி புகழ்வார்
புகழ்தகைய வல்லவடி
உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வாவடி உருவென்

..றுணரப் படாதவடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 6

6303. உரைமாலை யெல்லா முடையவடி உரையா
லுணரப் படாதவடி
வரைமாதை வாடாமை வைக்கும்மடி வானவர்கள்தாம்
வணங்கி வாழ்த்தும்மடி
அரைமாத் திரையில் லடங்கும்மடி யகலம்
அளக்கிற்பா ரில்லாவடி
கரைமாங் கலிக்கெடில நாடன்னடி கமழ்வீரட்
டானக் காபாலியடி. 7

6304. நறுமலராய் நாறும் மலர்ச்சேவடி நடுவா
யுலக நாடாயவடி
செறிகதிருந் திங்களுமாய் நின்றவடி தீத்திரளா
யுள்ளே திகழ்ந்தவடி
மறுமதியை மாசு கழுவும்மடி மந்திரமுந்
தந்திரமும் ஆயவடி
செறிகெடில நாடர் பெருமானடி திருவீரட்
டானத்தெஞ் செல்வன்னடி. 8

6305. அணியனவுஞ் சேயனவு மல்லாவடி யடியார்கட்
கார்முத மாயவடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லவடி பற்றற்றார்
பற்றும் பவளவடி
மணியடி பொன்னடி மாண்பாமடி மருந்தாய்ப்
பிணிதீர்க்க வல்லவடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி தகைசார்
வீரட்டத் தலைவன்னடி. 9

6306. அந்தா மரைப்போ தலர்ந்தவடி அரக்கனையும்
ஆற்ற லழித்தவடி
முந்தாகி முன்னே முளைத்தவடி முழங்கழலாய்
நீண்டவெம் மூர்த்தியடி
பந்தாடு மெல்விரலாள் பாகன்னடி பவளத்
தடவரையே போல்வானடி
வெந்தார் சுடலைநீ றாடும்மடி வீரட்டங்
காதல் விமலன்னடி. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 7. திருஅதிகைவீரட்டானம் – காப்புத் திருத்தாண்டகம்

6307. செல்வப் புனற்கெடில வீரட்ட முஞ் சிற்றேமமும்
பெருந்தண் குற்றாலமும்
தில்லைச்சிற் றம்பலமுந் தென்கூடலுந் தென்னானைக்
காவுஞ்சி ராப்பள்ளியும்
நல்லூருந் தேவன்குடி மருகலும் நல்லவர்கள்
தொழுதேத்து நாரையூரும்
கல்லலகு நெடும்புருவக் கபாலமேந்திக் கட்டங்கத்
தோடுறைவார் காப்புக்களே. 1

6308. தீர்த்தப் புனற்கெடில வீரட்டமுந் திருக்கோவல்
வீரட்டம் வெண்ணெய்நல்லூர்
ஆர்த்தருவி வீழ்சுனைநீ ரண்ணாமலை யறையணிநல்
லூரும் அரநெறியும்
ஏத்துமின்கள் நீரேத்த நின்றஈசன் இடைமரு
தின்னம்ப ரேகம்பமும்
கார்த்தயங்கு சோலைக் கயிலாயமுங் கண்ணுதலான்
றன்னுடைய காப்புக்களே. 2

6309. சிறையார் புனற்கெடில வீரட்டமுந் திருப்பா
திரிப்புலியூர் திருவாமாத்தூர்
துறையார் வனமுனிக ளேத்தநின்ற சோற்றுத்
துறைதுருத்தி நெய்த்தானமும்
அறையார் புனலொழுகு காவிரிசூழ் ஐயாற்
றமுதன் பழனம்நல்ல
கறையார் பொழில்புடைசூழ் கானப்பேருங் கழுக்குன்றுந்
தம்முடைய காப்புக்களே. 3

6310. திரையார் புனற்கெடில வீரட்டமுந் திருவாரூர்
தேவூர்திரு நெல்லிக்கா
உரையார் தொழநின்ற வொற்றியூரும் ஓத்தூரும்
மாற்பேறும் மாந்துறையும்
வரையா ரருவிசூழ் மாநதியும் மாகாளங்
கேதாரம் மாமேருவும்
கரையார் புனலொழுகு காவிரிசூழ் கடம்பந்
துறையுறைவார் காப்புக்களே. 4

6311. செழுநீர்ப் புனற்கெடில வீரட்டமுந் திரிபுராந்
தகந்தென்னார் தேவீச்சரம்
கொழுநீர் புடைசுழிக்குங் கோட்டுக்காவுங் குடமூக்குங்

கோகரணங் கோலக்காவும்
பழிநீர்மை யில்லாப் பனங்காட்டூரும் பனையூர்
பயற்றூர் பராய்த்துறையும்
கழுநீர் மதுவிரியுங் காளிங்கமுங் கணபதீச்
சரத்தார்தங் காப்புக்களே. 5

6312. தெய்வப் புனற்கெடில வீரட்டமுஞ் செழுந்தண்
பிடவூருஞ் சென்றுநின்று
பவ்வந் திரியும் பருப்பதமும் பறியலூர்
வீரட்டம் பாவநாசம்
மவ்வந் திரையுமணி முத்தமும் மறைக்காடும்
வாய்மூர் வலஞ்சுழியும்
கவ்வை வரிவண்டு பண்ணேபாடுங் கழிப்பாலை
தம்முடைய காப்புக்களே. 6

6313. தெண்ணீர்ப் புனற்கெடில வீரட்டமுஞ் சீர்காழி
வல்லந் திருவேட்டியும்
உண்ணீரா ரேடகமும் ஊறல்அம்பர்
உறையூர் நரையூர் அரணநல்லூர்
விண்ணார் விடையான் விளமர்வெண்ணி மீயச்சூர்
வீழி மிழலைமிக்க
கண்ணார் நுதலார் கரபுரமுங் காபாலி
யாரவர்தங் காப்புக்களே. 7

6314. தெள்ளும் புனற்கெடில வீரட்டமுந் திண்டீச்
சரமுந் திருப்புகலூர்
எள்ளும் படையான் இடைத்தானமு மேயீச்
சுரமுநல் லேமங்கூடல்
கொள்ளு மிலயத்தார் கோடிகாவுங் குரங்கணின்
முட்டமுங் குறும்பலாவும்
கள்ளருந்தத் தெள்ளியா ருள்கியேத்துங் காரோணந்
தம்முடைய காப்புக்களே. 8

6315. சீரார் புனற்கெடில வீரட்டமுந் திருக்காட்டுப்
பள்ளி திருவெண்காடும்
பாரார் பரவுஞ்சீர்ப் பைஞ்ஞீலியும் பந்தணைநல்
லூரும் பாசூர்நல்லம்
நீரார் நிறைவயல்சூழ் நின்றியூரும் நெடுங்களமும்
நெல்வெண்ணெய் நெல்வாயிலும்
காரார் கமழ்கொன்றைத் தாரார்க்கென்றுங்
கடவூரில் வீரட்டங் காப்புக்களே. 9

6316. சிந்தும் புனற்கெடில வீரட்டமுந் திருவாஞ்
சியமுந் திருநள்ளாறும்
அந்தண் பொழில்புடைசூழ் அயோகந்தியு மாக்கூரு
மாவூரு மான்பட்டியும்
எந்தம் பெருமாற் கிடமாவது இடைச்சுரமும்
எந்தை தலைச்சங்காடும்
கந்தங் கமழுங் கரவீரமுங் கடம்பூர்க்
கரக்கோயில் காப்புக்களே. 10

6317. தேனார் புனற்கெடில வீரட்டமுந் திருச்செம்பொன்
பள்ளி திருப்பூவணமும்
வானோர் வணங்கும் மணஞ்சேரியும் மதிலுஞ்சை
மாகாளம் வாரணாசி
ஏனோர்க ளேத்தும் வெகுளீச்சரம் இலங்கார்
பருப்பதத்தோ டேணார்சோலைக்
கானார் மயிலார் கருமாரியுங் கறைமிடற்றார்
தம்முடைய காப்புக்களே. 11

6318. திருநீர்ப் புனற்கெடில வீரட்டமுந் திருவளப்பூர்
தெற்கேறு சித்தவடம்
வருநீர் வளம்பெருகு மாநிருபமும் மயிலாப்பில்
மன்னினார் மன்னி யேத்தும்
பெருநீர் வளர்சடையான் பேணிநின்ற பிரமபுரஞ்
சுழியல் பெண்ணாகடம்
கருநீல வண்டரற்றுங் காளத்தியுங் கயிலாயந்
தம்முடைய காப்புக்களே. 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருக்காளத்தி – திருத்தாண்டகம்

6319. விற்றூணொன் றில்லாத நல்கூர்ந் தான்காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை யல்லால்
மற்றூணொன் றில்லாத மாசதுரான்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழுந் தாங்கி நின்ற

கற்றூன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காண்அவனென் கண்ணு ளானே. 1

6320. இடிப்பான்காண் என்வினையை ஏகம் பன்காண்
எலும்பா பரணன்காண் எல்லாம் முன்னே
முடிப்பான்காண் மூவுலகு மாயி னான்காண்
முறைமையால் ஐம்புரியும் வழுவா வண்ணம்
படித்தான் தலையறுத்த பாசு பதன்காண்
பராய்த்துறையான் பழனம்பைஞ் ஞீலி யான்காண்
கடித்தார் கமழ்கொன்றைக் கண்ணி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 2

6321. நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவாய் அன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் தான்காண்
புரிசடைமேற் புனலேற்ற புனிதன் தான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் தான்காண்
தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காண்அவனென் கண்ணு ளானே. 3

6322. செற்றான்காண் என்வினையைத் தீயாடி காண்
திருவொற்றி யூரான்காண் சிந்தை செய்வார்க்
குற்றான்காண் ஏகம்பம் மேவி னான்காண்
உமையாள்நற் கொழுநன்காண் இமையோ ரேத்தும்
சொற்றான்காண் சோற்றுத் துறையு ளான்காண்
சுறாவேந்தன் ஏவலத்தை நீறா நோக்கக்
கற்றான்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன்காண்அவனென் கண்ணு ளானே. 4

6323. மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 5

6324. எல்லாம்முன் றோன்றாமே தோன்றி னான்காண்
ஏகம்பம்மேயான் காண் இமையோ ரேத்தப்
பொல்லாப் புலனைந்தும் போக்கி னான்காண்
புரிசடைமேற் பாய்கங்கை பூரித் தான்காண்
நல்லவிடை மேல்கொண்டு நாகம் பூண்டு
நளிர்சிரமொன் றேந்தியோர் நாணா யற்ற
கல்லாடை மேல்கொண்ட காபாலி காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 6

6325. கரியுருவு கண்டத்தெங் கண்ணு ளான்காண் கண்டன்காண்
வண்டுண்ட கொன்றை யான்காண்
எரிபவள வண்ணன்காண் ஏகம் பன்காண் எண்டிசையுந்
தானாய குணத்தி னான்காண்
திரிபுரங்கள் தீயிட்ட தீயாடி காண் தீவினைகள்
தீர்த்திடுமென் சிந்தை யான்காண்
கரியுரிவை போர்த்துகந்த காபாலி காண் காளத்தி
யானவனென் கண்ணு ளானே. 7

6326. இல்லாடிச் சில்பலிசென் றேற்கின் றான்காண்
இமையவர்கள் தொழுதிறைஞ்ச இருக்கின் றான்காண்
வில்லாடி வேடனா யோடி னான்காண்
வெண்ணூலுஞ் சேர்ந்த அகலத் தான்காண்
மல்லாடு திரள்தோண்மேல் மழுவா ளன்காண்
மலைமகள்தன் மணாளன்காண் மகிழ்ந்து முன்னாள்
கல்லாலின் கீழிருந்த காபாலி காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 8

6327. தேனப்பூ வண்டுண்ட கொன்றை யான்காண்
திருவேகம் பத்தான்காண் தேனார்ந் துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத் தான்காண்
நம்பன்காண் ஞானத் தொளியா னான்காண்
வானப்பே ரூரு மறிய வோடி
மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 9

6328. இறையவன்கா ணேழுலகு மாயி னான்காண்
ஏழ்கடலுஞ் சூழ்மலையு மாயி னான்காண்

குறையுடையார் குற்றேவல் கொள்வான் தான்காண்
குடமூக்கிற் கீழ்க்கோட்டம் மேவி னான்காண்
மறையுடைய வானோர் பெருமான் தான்காண்
மறைக்காட் டுறையு மணிகண் டன்காண்
கறையுடைய கண்டத்தெங் காபா லிகாண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 10

6329. உண்ணா வருநஞ்ச முண்டான் தான்காண்
ஊழித்தீ யன்னான்காண் உகப்பார் காணப்
பண்ணாரப் பல்லியம் பாடி னான்காண்
பயின்றநால் வேதத்தின் பண்பி னான்காண்
அண்ணா மலையான்காண் அடியா ரீட்டம்
அடியிணைகள் தொழுதேத்த அருளு வான்காண்
கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 9. திரு ஆமாத்தூர் – திருத்தாண்டகம்

6330. வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கனலப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாங்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 1

6331. வெந்தார்வெண் பொடிப்பூசி வெள்ளை மாலை
விரிசடைமேற் றாஞ்சூடி வீணை யேந்திக்
கந்தாரந் தாம்முரலாப் போகா நிற்கக்
கறைசேர் மணிமிடற்றீ ரூரே தென்றேன்
நொந்தார்போல் வந்தென தில்லே புக்கு
நுடங்கே ரிடைமடவாய் நம்மூர் கேட்கில்
அந்தா மரைமலர்மே லளிவண் டியாழ்செய்
ஆமாத்தூர் என்றடிகள் போயி னாரே. 2

6332. கட்டங்கந் தாமொன்று கையி லேந்திக்
கடிய விடையேறிக் காபா லியார்
இட்டங்கள் தாம்பேசி யில்லே புக்கு
இடும்பலியும் இடக்கொள்ளார் போவா ரல்லர்
பட்டிமையும் படிறுமே பேசா நின்றார்
பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின் றார்தாம்
அட்டியசில் பலியுங் கொள்ளார் விள்ளார்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 3

6333. பசைந்தபல பூதத்தர் பாட லாடல்
படநாகக் கச்சையர் பிச்சைக் கென்றங்
கிசைந்ததோ ரியல்பின ரெரியின் மேனி
யிமையாமுக் கண்ணினர் நால்வே தத்தர்.
பிசைந்ததிரு நீற்றினர் பெண்ணோர் பாகம்
பிறிவறியாப் பிஞ்ஞகனார் தெண்ணீர்க் கங்கை
அசைந்ததிரு முடியர் அங்கைத் தீயர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 4

6334. உருளுடைய தேர்புரவி யோடும் யானை
யொன்றாலுங் குறைவில்லை யூர்தி வெள்ளே
றிருளுடைய கண்டத்தர் செந்தீ வண்ணர்
இமையவர்கள் தொழுதேத்தும் இறைவ னார்தாம்
பொருளுடைய ரல்ல ரிலரு மல்லர்
புலித்தோ லுடையாகப் பூதஞ் சூழ
அருளுடைய அங்கோதை மாலை மார்பர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 5

6335. வீறுடைய ஏறேறி நீறு பூசி
வெண்தோடு பெய்திடங்கை வீணை யேந்திக்
கூறுடைய மடவாளோர் பாகங் கொண்டு
குழையாடக் கொடுகொட்டி கொட்டா வந்து
பாறுடைய படுதலையோர் கையி லேந்திப்
பலிகொள்வா ரல்லர் படிறே பேசி
ஆறுடைய சடைமுடியெம் மடிகள் போலும்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 6

6336. கையோர் கபாலத்தர் மானின் தோலர்
கருத்துடையர் நிருத்தராய்க் காண்பார் முன்னே

செய்ய திருமேனி வெண்ணீ றாடித்
திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடி
மெய்யொரு பாகத் துமையை வைத்து
மேவார் திரிபுரங்கள் வேவச் செய்து
ஐயனார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 7

6337. ஒன்றாலுங் குறைவில்லை யூர்தி வெள்ளே
றொற்றியூர் உம்மூரே யுணரக் கூறீர்
நின்றுதான் என்செய்வீர் போவீ ராகில்
நெற்றிமேற் கண்காட்டி நிறையுங் கொண்டீர்
என்றுந்தான் இவ்வகையே யிடர்செய் கின்றீர்
இருக்குமூ ரினியறிந்தோ மேகம் பமோ
அன்றித்தான் போகின்றீர் அடிக ளெம்மோ
டழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 8

6338. கல்லலகு தாங்கொண்டு காள த்தியார்
கடிய விடையேறிக் காணக் காண
இல்லமே தாம்புகுதா இடுமின் பிச்சை
யென்றாருக் கெதிரெழுந்தே னெங்குங் காணேன்
சொல்லாதே போகின்றீர் உம்மூ ரேது
துருத்தி பழனமோ நெய்த்தா னமோ
அல்லலே செய்தடிகள் போகின் றார்தாம்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 9

6339. மழுங்கலா நீறாடும் மார்பர் போலும்
மணிமிழலை மேய மணாளர் போலும்
கொழுங்குவளைக் கோதைக் கிறைவர் போலுங்
கொடுகொட்டி தாள முடையார் போலும்
செழுங்கயி லாயத்தெஞ் செல்வர் போலுந்
தென்னதிகை வீரட்டஞ் சேர்ந்தார் போலும்
அழுங்கினா ரையுறவு தீர்ப்பார் போலும்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 10. திருப்பந்தணை நல்லூர் – திருத்தாண்டகம்

6340. நோதங்க மில்லாதார் நாகம் பூண்டார்
நூல்பூண்டார் நூன்மேலோ ராமை பூண்டார்
பேய்தங்கு நீள்காட்டில் நட்ட மாடிப்
பிறைசூடுங் சடைமேலோர் புனலுஞ் சூடி
ஆதங்கு பைங்குழலாள் பாகங் கொண்டா
ரனல்கொண்டார் அந்திவாய் வண்ணங் கொண்டார்
பாதங்க நீறேற்றார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 1

6341. காடலாற் கருதாதார் கடல்நஞ் சுண்டார்
களிற்றுரிவை மெய்போர்த்தார் கலன தாக
ஓடலாற் கருதாதா ரொற்றி யூரார்
உறுபிணியுஞ் செறுபகையு மொற்றைக் கண்ணால்
பீடுலாந் தனைசெய்வார் பிடவ மொந்தை
குடமுழவங் கொடுகொட்டி குழலு மோங்கப்
பாடலா ராடலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 2

6342. பூதப் படையுடையார் பொங்கு நூலார்
புலித்தோ லுடையினார் போரேற் றினார்
வேதத் தொழிலார் விரும்ப நின்றார்
விரிசடைமேல் வெண்திங்கட் கண்ணி சூடி
ஓதத் தொலிகடல்வாய் நஞ்ச முண்டார்
உம்பரோ டம்பொன் னுலக மாண்டு
பாதத் தொடுகழலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ரா்ரே. 3

6343. நீருலாஞ் சடைமுடிமேல் திங்க ளேற்றார்
நெருப்பேற்றார் அங்கையில் நிறையு மேற்றார்
ஊரெலாம் பலியேற்றார் அரவ மேற்றார்
ஒலிகடல் வாய்நஞ்சம் மிடற்றி லேற்றார்
வாருலா முலைமடவாள் பாகமேற்றார்
மழுவேற்றார் மான்மறியோர் கையி லேற்றார்
பாருலாம் புகழேற்றார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 4

6344. தொண்டர் தொழுதேத்துஞ் சோதி யேற்றார்
துளங்கா மணிமுடியார் தூய நீற்றார்
இண்டைச் சடைமுடியா ரீமஞ் சூழ்ந்த

இடுபிணக்காட் டாடலா ரேமந் தோறும்
அண்டத்துக் கப்புறத்தா ராதி யானார்
அருக்கனா யாரழலா யடியார் மேலைப்
பண்டை வினையறுப்பார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 5

6345. கடமன்னு களியானை யுரிவை போர்த்தார்
கானப்பேர் காதலார் காதல் செய்து
மடமன்னு மடியார்தம் மனத்தி னுள்ளார்
மானுரிதோல் மிசைத்தோளார் மங்கை காண
நடமன்னி யாடுவார் நாகம் பூண்டார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
படமன்னு திருமுடியார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 6

6346. முற்றா மதிச்சடையார் மூவ ரானார்
மூவுலகு மேத்தும் முதல்வ ரானார்
கற்றார் பரவுங் கழலார் திங்கள்
கங்கையாள் காதலார் காம்பேய் தோளி
பற்றாகும் பாகத்தார் பால்வெண் ணீற்றார்
பான்மையா லூழி யுலக மானார்
பற்றார் மதிலெரித்தார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 7

6347. கண்ணமரு நெற்றியார் காட்டார் நாட்டார்
கனமழுவாட் கொண்டதோர் கையார் சென்னிப்
பெண்ணமருஞ் சடைமுடியார் பேரொன் றில்லார்
பிறப்பிலா ரிறப்பிலார் பிணியொன் றில்லார்
மண்ணவரும் வானவரும் மற்றை யோரும்
மறையவரும் வந்தெதிரே வணங்கி யேத்தப்
பண்ணமரும் பாடலார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 8

6348. ஏறேறி யேழுலகு மேத்த நின்றார்
இமையவர்கள் எப்பொழுது மிறைஞ்ச நின்றார்
நீறேறு மேனியார் நீல முண்டார்
நெருப்புண்டார் அங்கை யனலு முண்டார்
ஆறேறு சென்னியார் ஆனஞ் சாடி
யனலுமிழும் ஐவா யரவு மார்த்தார்
பாறேறு வெண்டலையார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 9

6349. கல்லூர் கடிமதில்கள் மூன்று மெய்தார்
காரோணங் காதலார் காதல் செய்து
நல்லூரரார் ஞானத்தார் ஞான மானார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
மல்லூர் . மணிமலையின் மேலி ருந்து
வாளரக்கர் கோன்தலையை மாளச் செற்றுப்
பல்லூர் பலிதிரிவார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூ ராரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 11. திருப்புன்கூரும் திருநீடூரும் – திருத்தாண்டகம்

6350. பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னைப்
பேணாதார் அவர்தம்மைப் பேணா தானைத்
துறவாதே கட்டறுத்த சோதி யானைத்
தூநெறிக்குந் தூநெறியாய் நின்றான் தன்னைத்
திறமாய வெத்திசையுந் தானே யாகித்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிறமா மொளியானை நீடு ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 1

6351. பின்றானும் முன்றானு மானான் தன்னைப்
பித்தர்க்குப் பித்தனாய் நின்றான் தன்னை
நன்றாங் கறிந்தவர்க்குந் தானே யாகி
நல்வினையுந் தீவினையு மானான் தன்னைச்
சென்றோங்கி விண்ணளவுந் தீயா னானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நின்றாய நீடூர் நிலாவி னானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 2

6352. இல்லானை யெவ்விடத்தும் உள்ளான் தன்னை
யினிய நினையாதார்க் கின்னா தானை
வல்லானை வல்லடைந்தார்க் கருளும் வண்ணம்
மாட்டாதார்க் கெத்திறத்தும் மாட்டா தானைச்
செல்லாத செந்நெறிக்கே செல்விப் பானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நெல்லால் விளைகழனி நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 3

6353. கலைஞானங் கல்லாமே கற்பித் தானைக்
கடுநரகஞ் சாராமே காப்பான் தன்னைப்
பலவாய வேடங்கள் தானே யாகிப்
பணிவார்கட் கங்கங்கே பற்றா னானைச்
சிலையாற் புரமெரித்த தீயா டியைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிலையார் மணிமாட நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 4

6354. நோக்காதே யெவ்வளவும் நோக்கி னானை
நுணுகாதே யாதொன்றும் நுணுகி னானை
ஆக்காதே யாதொன்று மாக்கி னானை
யணுகாதா ரவர்தம்மை யணுகா தானைத்
தேக்காதே தெண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீக்காத பேரொளிசேர் நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினயா வாறே. 5

6355. பூணலாப் பூணானைப் பூசாச் சாந்த
முடையானை முடைநாறும் புன்க லத்தில்
ஊணலா வூணானை யொருவர் காணா
வுத்தமனை யொளிதிகழும் மேனி யானைச்
சேணுலாஞ் செழும்பவளக் குன்றொப் பானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீணுலா மலர்க்கழனி நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 6

6356. உரையார் பொருளுக் குலப்பி லானை
யொழியாமே யெவ்வுயிரு மானான் தன்னைப்
புரையாய்க் கனமாயாழ்ந் தாழா தானைப்
புதியனவு மாய்மிகவும் பழையான் தன்னைத்
திரையார் புனல்சேர் மகுடத் தானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிரையார் மணிமாட நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 7

6357. கூரரவத் தணையானுங் குளிர்தண் பொய்கை
மலரவனுங் கூடிச்சென் றறிய மாட்டார்
ஆரொருவ ரவர்தன்னை யறிவார் தேவ
றறிவோமென் பார்க்கெல்லா மறிய லாகாச்
சீரரவக் கழலானை நிழலார் சோலைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நீரரவத் தண்கழனி நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 8

6358. கையெலாம் நெய்பாயக் கழுத்தே கிட்டக்
கால்நிமிர்த்து நின்றுண்ணுங் கையர் சொன்ன
பொய்யெலாம் மெய்யென்று கருதிப் புக்குப்
புள்ளுவரா லகப்படா துய்யப் போந்தேன்
செய்யெலாஞ் செழுங்கமலப் பழன வேலித்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நெய்தல்வாய்ப் புனற்படப்பை நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினையா வாறே. 9

6359. இகழுமா றெங்ஙனே யேழை நெஞ்சே
யிகழாது பரந்தொன்றாய் நின்றான் தன்னை
நகழுமால் வரைக்கீழிட் டரக்கர் கோனை
நலனழித்து நன்கருளிச் செய்தான் தன்னைத்
திகழுமா மதகரியி னுரிபோர்த் தானைத்
திருப்புன்கூர் மேவிய சிவலோ கனை
நிகழுமா வல்லானை நீடூ ரானை
நீதனே னென்னேநான் நினயா வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 12. திருக்கழிப்பாலை – திருத்தாண்டகம்

6360. ஊனுடுத்தி யொன்பது வாசல் வைத்து
வொள்ளெலும்பு தூணா வுரோம மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார்
தயக்கம் பலபடைத்தார் தாம ரையினார்
கானெத்து மாமயில்க ளாலுஞ் சோலைக்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
வானிடத்தை யூடறுத்து வல்லைச் செல்லும்
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 1

6361. முறையார்ந்த மும்மதிலும் பொடியாச் செற்று
முன்னுமாய்ப் பின்னுமாய் முக்க ணெந்தை
பிறையார்ந்த சடைமுடிமேற் பாம்பு கங்கை
பிணக்கந்தீர் துடன்வைத்தார் பெரிய நஞ்சுக்
கறையார்ந்த மிடற்றடங்கக் கண்ட எந்தை
கழிப்பாலை மேய கபா லப்பனார்

மறையார்ந்த வாய்மொழியான் மாய யாக்கை
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 2

6362. நெளிவுண்டாக் கருதாதே நிமலன் தன்னை
நினைமின்கள் நித்தலும்நே ரிழையா ளாய
ஒளிவண்டார் கருங்குழலி யுமையாள் தன்னை
யொருபாகத் தமர்ந்தடியா ருள்கி யேத்தக்
களிவண்டார் கரும்பொழில்சூழ் கண்டல் வேலிக்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
வளியுண்டார் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 3

6363. பொடிநாறு மேனியர் பூதிப் பையர்
புலித்தோலர் பொங்கரவர் பூண நூலர்
அடிநாறுங் கமலத்த ராரூ ராதி
ஆனஞ்சு மாடுமா திரையி னார்தாங்
கடிநாறு பூஞ்சோலை கமழ்ந்து நாறுங்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மடிநாறு மேனியிம் மாயம் நீங்க
வழிவைத்தார் கவ்வழியே போதும் நாமே. 4

6364. விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பி வந்து
வேதத்தாய் கீதத்தாய் விரவி யெங்கும்
எண்ணானாய் எழுத்தானாய் கடலே ழானாய்
இறையானா யெம்மிறையே யென்று நிற்கும்
கண்ணானாய் காரானாய் பாரு மானாய்
கழிப்பாலை யுள்ளுறையுங் கபாலப்பனார்
மண்ணாய மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 5

6365. விண்ணப்ப விச்சா தரர்க ளேத்த
விரிகதிரோ னெரிசுடரான் விண்ணு மாகிப்
பண்ணப்பன் பத்தர் மனத்து ளேயும்
பசுபதி பாசுபதன் தேச மூர்த்தி
கண்ணப்பன் கண்ணப்பக் கண்டு கந்தார்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
வண்ணப் பிணிமாய யாக்கை நீங்கவழி
வைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 6

6366. பிணம்புல்கு பீறற் குரம்பை மெய்யாப்
பேதப் படுகின்ற பேதை மீர்காள்
நிணம்புல்கு சூலத்தர்நீல கண்டர் எண்டோளர்
எண்ணிறைந்த குணத்தி னாலே
கணம்புல்லன் கருத்துகந்தார் காஞ்சி யுள்ளார்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மணம்புல்கு மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 7

6367. இயல்பாய ஈசனை யெந்தை தந்தை
யென்சிந்தை மேவி யுறைகின் றானை
முயல்வானை மூர்த்தியைத் தீர்த்த மான
தியம்பகன் திரிசூலத் தன்ன கையன்
கயல்பாயுங் கண்டல்சூழ் வுண்ட வேலிக்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மயலாய மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 8

6368. செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து சிவமூர்த்தி
யென்றெழுவார் சிந்தை யுள்ளால்
உற்றதோர் நோய்களைந்திவ் வுலகமெல்லாங் காட்டுவா
னுத்த மன்றா னோதா தெல்லாம்
கற்றதோர் நூலினன் களிறு செற்றான்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மற்றிதோர் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 9

6369. பொருதலங்கல் நீண்முடியான் போர ரக்கன்
புட்பகந்தான் பொருப்பின்மீ தோடா தாக
இருநிலங்கள் நடுக்கெய்த எடுத்தி டுதலும்
ஏந்திழையாள் தான்வெருவ இறைவன் நோக்கிக்
கரதலங்கள் கதிர்முடியா றஞ்சி னோடு
கால்விரலா லூன்று கழிப்பா லையார்
வருதலங்க மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 13. திருப்புறம்பயம் – திருத்தாண்டகம்

6370. கொடிமாட நீடெருவு கூடல் கோட்டூர்
கொடுங்கோளூர் தண்வளவி கண்டி யூரும்
நடமாடு நன்மருகல் வைகி நாளும்
நலமாகு மொற்றியூ ரொற்றி யாகப்
படுமாலை வண்டறையும் பழனம் பாசூர்
பழையாறும் பாற்குளமுங் கைவிட் டிந்நாள்
பொடியேறு மேனியராய்ப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 1

6371. முற்றொருவர் போல முழுநீ றாடி
முளைத்திங்கள் சூடிமுந் நூலும் பூண்டு
ஒற்றொருவர் போல உறங்கு வேன்கை
யொளிவளையை யொன்றொன்றா எண்ணு கின்றார்
மற்றொருவ ரில்லைத் துணையெ னக்கு
மால்கொண்டாற் போல மயங்கு வேற்குப்
புற்றரவக் கச்சார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 2

6372. ஆகாத நஞ்சுண்ட அந்தி வண்ணர்
ஐந்தலைய மாசுணங்கொண் டம்பொற் றோண்மேல்
ஏகாச மாவிட்டோ டொன்றேந்தி வந்
திடுதிருவே பலியென்றார்க் கில்லே புக்கேன்
பாகேதுங் கொள்ளார் பலியுங் கொள்ளார்
பாவியேன் கண்ணுள்ளே பற்றி நோக்கிப்
போகாத வேடத்தர் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 3

6373. பன்மலிந்த வெண்தலை கையி லேந்திப்
பனிமுகில்போல் மேனிப் பவந்த நாதர்
நென்மலிந்த நெய்த்தானஞ் சோற்றுத் துறை
நியமந் துருத்தியும் நீடூர் பாச்சில்
கன்மலிந் தோங்கு கழுநீர்க் குன்றங்
கடனாகைக் காரோணங் கைவிட் டிந்நாள்
பொன்மலிந்த கோதையருந் தாமு மெல்லாம்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 4

6374. செத்தவர்தந் தலைமாலை கையி லேந்திச்
சிரமாலை சூடிச் சிவந்த மேனி
மத்தகத்த யானை யுரிவை மூடி
மடவா ளவளோடு மானொன் றேந்தி
அத்தவத்த தேவ ரறுப தின்ம
ராறுநூ றாயிரவர்க் காடல் காட்டிப்
புத்தகங் கைக்கொண்டு புலித்தோல் வீக்கிப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 5

6375. நஞ்சடைந்த கண்டத்தர் வெண்ணீ றாடி நல்லபுலி
யதள்மேல் நாகங் கட்டிப்
பஞ்சடைந்த மெல்விரலாள் பாகமாகப் பராய்த்
துறையே னென்றோர் பவள வண்ணர்
துஞ்சிடையே வந்து துடியுங் கொட்டத்
துண்ணென் றெழுந்திருந்தேன் சொல்ல மாட்டேன்
புன்சடையின் மேலோர் புனலுஞ் சூடிப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 6

6376. மறியிலங்கு கையர் மழுவொன் றேந்தி
மறைக்காட்டே னென்றோர் மழலை பேசிச்
செறியிலங்கு திண்தோள்மேல் நீறு கொண்டு
திருமுண்ட மாஇட்ட திலக நெற்றி
நெறியிலங்கு கூந்தலார் பின்பின் சென்று
நெடுங்கண் பனிசோர நின்று நோக்கிப்
பொறியிலங்கு பாம்பார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 7

6377. நில்லாதே பல்லூரும் பலிகள் வேண்டி நிரைவளையார்
பலிபெய்ய நிறையுங் கொண்டு
கொல்லேறுங் கொக்கரையுங் கொடுகொட் டியுங் குடமூக்கி
லங்கொழியக் குளிர்தண் பொய்கை
நல்லாளை நல்லூரே தவிரே னென்று நறையூரிற்
றாமுந் தவிர்வார் போலப்
பொல்லாத வேடத்தர் பூதஞ் சூழப் புறம்பயம்நம்
மூரென்று போயி னாரே. 8

6378. விரையேறு நீறணிந்தோ ராமை பூண்டு
வெண்தோடு பெய்திடங்கை வீணை யேந்தித்

திரையேறு சென்னிமேல் திங்கள் தன்னைத்
திசைவிளங்க வைத்துகந்த செந்தீ வண்ணர்
அரையேறு மேகலையாள் பாக மாக
ஆரிடத்தி லாட லமர்ந்த ஐயன்
புரையேறு தாமேறிப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 9

6379. கோவாய இந்திரனுள் ளிட்டா ராகக்
குமரனும் விக்கின விநாய கன்னும்
பூவாய பீடத்து மேல யன்னும்
பூமி யளந்தானும் போற்றி சைப்பப்
பாவாய இன்னிசைகள் பாடி யாடிப்
பாரிடமுந் தாமும் பரந்து பற்றிப்
பூவார்ந்த கொன்றை பொறிவண் டார்க்கப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. திருநல்லூர் – திருத்தாண்டகம்

6380. நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 1

6381. பொன்னலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்
புலியுரியின் அதள்வைத்தார் புனலும் வைத்தார்
மன்னலத்த திரள்தோள்மேல் மழுவாள் வைத்தார்
வார்காதிற் குழைவைத்தார் மதியும் வைத்தார்
மின்னலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்
வேழத்தி னுரிவைத்தார் வெண்ணூல் வைத்தார்
நன்னலத்த திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 2

6382. தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார்
துன்னெருக்கின் வடம் வைத்தார் துவலை சிந்தப்
பாடேறு படுதிரைக ளெறிய வைத்தார்
பனிமத்த மலர்வைத்தார் பாம்பும் வைத்தார்
சேடேறு திருநுதல்மேல் நாட்டம் வைத்தார்
சிலைவைத்தார் மலைபெற்ற மகளை வைத்தார்
நாடேறு திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 3

6383. வில்லருளி வருபுருவத் தொருத்தி பாகம்
பொருத்தாகி விரிசடைமே லருவி வைத்தார்
கல்லருளி வரிசிலையா வைத்தா ரூராக்
கயிலாய மலைவைத்தார் கடவூர் வைத்தார்
சொல்லருளி யறநால்வர்க் கறிய வைத்தார்
சுடுசுடலைப் பொடிவைத்தார் துறவி வைத்தார்
நல்லருளால் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 4

6384. விண்ணிரியுந் திரிபுரங்க ளெரிய வைத்தார்
வினைதொழுவார்க் கறவைத்தார் துறவி வைத்தார்
கண்ணெரியாற் காமனையும் பொடியா வைத்தார்
கடிக்கமல மலர்வைத்தார் கயிலை வைத்தார்
திண்ணெரியுந் தண்புனலு முடனே வைத்தார்
திசைதொழுது மிசையமரர் திகழ்ந்து வாழ்த்தி
நண்ணரிய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 5

6385. உற்றுலவு பிணியுலகத் தெழுமை வைத்தார்
உயிர்வைத்தார் உயிர்செல்லுங் கதிகள் வைத்தார்
மற்றமரர் கணம்வைத்தார் அமரர் காணா
மறைவைத்தார் குறைமதியம் வளர வைத்தார்
செற்றம்மலி யார்வமொடு காம லோபஞ்
சிறவாத நெறிவைத்தார் துறவி வைத்தார்
நற்றவர்சேர் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 6

6386. மாறுமலைந் தாரரண மெரிய வைத்தார்
மணிமுடிமேல் அரவைத்தார் அணிகொள் மேனி
நீறுமலிந் தெரியாடல் நிலவ வைத்தார்
நெற்றிமேற் கண்வைத்தார் நிலயம் வைத்தார்
ஆறுமலைந் தறுதிரைக ளெறிய வைத்தார்

ஆர்வத்தா லடியமரர் பரவ வைத்தார்
நாறுமலர்த் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 7

6387. குலங்கண்மிகு மலைகடல்கண் ஞாலம் வைத்தார்
குருமணிசே ரரவைத்தார் கோலம் வைத்தார்
உலங்கிளரும் அரவத்தி னுச்சி வைத்தா
ருண்டருளி விடம்வைத்தா ரெண்டோள் வைத்தார்
நிலங்கிளரும் புனல்கனலுள் அனிலம் வைத்தார்
நிமிர்விசும்பின் மிசைவைத்தார் நினைந்தா ரிந்நாள்
நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 8

6388. சென்றுருளுங் கதிரிரண்டும் விசும்பில் வைத்தார்
திசைபத்தும் இருநிலத்தில் திருந்த வைத்தார்
நின்றருளி யடியமரர் வணங்க வைத்தார்
நிறைதவமும் மறைபொருளும் நிலவ வைத்தார்
கொன்றருளிக் கொடுங்கூற்றம் நடுங்கி யோடக்
குரைகழற்சே வடிவைத்தார் விடையும் வைத்தார்
நன்றருளுந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 9

6389. பாம்புரிஞ்சி மதிகிடந் திரைக ளேங்கப்
பனிக்கொன்றை சடைவைத்தார் பணிசெய் வானோர்
ஆம்பரிசு தமக்கெல்லாம் அருளும் வைத்தார்
அடுசுடலைப் பொடிவைத்தார் அழகும் வைத்தார்
ஓம்பரிய வல்வினைநோய் தீர வைத்தார்
உமையையொரு பால்வைத்தார் உகந்து வானோர்
நாம்பரவும் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 10

6390. குலங்கிளரும் வருதிரைக ளேழும் வைத்தார்
குருமணிசேர் மலைவைத்தார் மலையைக் கையால்
உளங்கிளர எடுத்தவன்தோள் முடியும் நோவ
ஒருவிரலா லுறவைத்தார் இறைவா என்று
புலம்புதலும் அருளொடுபோர் வாளும் வைத்தார்
புகழ்வைத்தார் புரிந்தாளாக் கொள்ள வைத்தார்
நலங்கிளருந் திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 15. திருக்கருகாவூர் – திருத்தாண்டகம்

6391. குருகாம் வயிரமாங் கூறு நாளாங்
கொள்ளுங் கிழமையாங் கோளே தானாம்
பருகா அமுதமாம் பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணாம்
ஒருகா லுமையாளோர் பாக னுமாம்
உள்நின்ற நாவிற் குரையா டியாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 1

6392. வித்தாம் முளையாகும் வேரே தானாம்
வேண்டும் உருவமாம் விரும்பி நின்ற
பத்தாம் அடியார்க்கோர் பாங்க னுமாம் பால்நிறமு
மாம்பரஞ் சோதி தானாம்
தொத்தாம் அமரர்கணஞ் சூழ்ந்து போற்றத்
தோன்றாதென் உள்ளத்தி னுள்ளே நின்ற
கத்தாம் அடியேற்குக் காணா காட்டுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 2

6393. பூத்தானாம் பூவின் நிறத்தா னுமாம்
பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற
கோத்தானாங் கோல்வளையாள் கூற னாகுங்
கொண்ட சமயத்தார் தேவ னாகி
ஏத்தாதார்க் கென்று மிடரே துன்பம்
ஈவானா மென்னெஞ்சத் துள்ளே நின்று
காத்தானாங் கால னடையா வண்ணங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 3

6394. இரவனாம் எல்லி நடமா டியாம்
எண்திசைக்குந் தேவனாம் என்னு ளானாம்
அரவனாம் அல்ல லறுப்பா னுமாம்
ஆகாச மூர்த்தியாம் ஆனே றேறும்
குரவனாங் கூற்றை யுதைத்தான் தானாங்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கரவனாங் காட்சிக் கெளியானு மாங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 4

6395. படைத்தானாம் பாரை யிடந்தா னாகும்
பரிசொன் றறியாமை நின்றான் தானாம்
உடைத்தானாம் ஒன்னார் புரங்கள் மூன்றும்

ஒள்ளழலால் மூட்டி யொருக்கி நின்று
அடைத்தானாஞ் சூலம் மழுவோர் நாக
மசைத்தானா மானேறொன் றூர்ந்தா னாகும்
கடைத்தானாங் கள்ள மறிவார் நெஞ்சிற்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 5

6396. மூலனாம் மூர்த்தியாம் முன்னே தானாம்
மூவாத மேனிமுக் கண்ணி னானாம்
சீலனாஞ் சேர்ந்தா ரிடர்கள் தீர்க்குஞ்
செல்வனாஞ் செஞ்சுடர்க்கோர் சோதி தானாம்
மாலனாம் மங்கையோர் பங்க னாகும்
மன்றாடி யாம்வானோர் தங்கட் கெல்லாம்
காலனாங் காலனைக் காய்ந்தா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 6

6397. அரைசே ரரவனாம் ஆலத் தானாம்
ஆதிரைநா ளானாம் அண்ட வானோர்
திரைசேர் திருமுடித் திங்க ளானாந்
தீவினை நாசனென் சிந்தை யானாம்
உரைசே ருலகத்தா ருள்ளா னுமாம்
உமையாளோர் பாகனா மோத வேலிக்
கரைசேர் கடல்நஞ்சை யுண்டா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே.

6398. துடியாந் துடியின் முழக்கந் தானாஞ் சொல்லுவார்
சொல்லெல்லாஞ் சோதிப் பானாம்
படிதானாம் பாவ மறுப்பா னாகும் பால்நீற்ற
னாம்பரஞ் சோதி தானாம்
கொடியானாங் கூற்றை யுதைத்தா னாகுங் கூறாத
வஞ்சக் குயலர்க் கென்றும்
கடியானாங் காட்சிக் கரியா னாகுங் கண்ணாங்
கருகாவூ ரெந்தை தானே. 8

6399. விட்டுருவங் கிளர்கின்ற சோதி யானாம்
விண்ணவர்க்கும் அறியாத சூழ லானாம்
பட்டுருவ மால்யானைத் தோல்கீண் டானாம்
பலபலவும் பாணி பயின்றான் தானாம்
எட்டுருவ மூர்த்தியாம் எண்தோ ளானா
மென்னுச்சி மேலானா மெம்பி ரானாம்
கட்டுருவங் கடியானைக் காய்ந்தா னாகுங்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 9

6400. பொறுத்திருந்த புள்ளூர்வா னுள்ளா னாகி
உள்ளிருந்தங் குள்நோய் களைவான் தானாய்ச்
செறுத்திருந்த மும்மதில்கள் மூன்றும் வேவச்
சிலைகுனியத் தீமூட்டுந் திண்மை யானாம்
அறுத்திருந்த கையானா மந்தா ரல்லி
யிருந்தானை யொருதலையைத் தெரிய நோக்கிக்
கறுத்திருந்த கண்ட முடையான் போலுங்
கண்ணாய் கருகாவூ ரெந்தை தானே. 10

6401. ஒறுத்தானாம் ஒன்னார் புரங்கள் மூன்றும்
ஒள்ளழலை மாட்டி யுடனே வைத்து
இறுத்தானாம் எண்ணான் முடிகள் பத்தும்
இசைந்தானாம் இன்னிசைகள் கேட்டா னாகும்
அறுத்தானாம் அஞ்சும் அடக்கி யங்கே
யாகாய மந்திரமு மானா னாகும்
கறுத்தானாங் காலனைக் காலால் வீழக்
கண்ணாங் கருகாவூ ரெந்தை தானே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 16. திருவிடைமருதூர் – திருத்தாண்டகம்

6402. சூலப் படையுடையார் தாமே போலுஞ்
சுடர்த்திங்கட் கண்ணி யுடையார் போலும்
மாலை மகிழ்ந்தொருபால் வைத்தார் போலும்
மந்திரமுந் தந்திரமு மானார் போலும்
வேலைக் கடல்நஞ்ச முண்டார் போலும்
மேல்வினைகள் தீர்க்கும் விகிர்தர் போலும்
ஏலக் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 1

6403. காரார் கமழ்கொன்றைக் கண்ணி போலுங்
காரானை யீருரிவை போர்த்தார் போலும்
பாரார் பரவப் படுவார் போலும்
பத்துப் பல்லூழி பரந்தார் போலும்
சீரால் வணங்கப் படுவார் போலுந்
திசையனைத்து மாய்மற்று மானார் போலும்

ஏரார் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 2

6404. வேதங்கள் வேள்வி பயந்தார் போலும்
விண்ணுலகும் மண்ணுலகு மானார் போலும்
பூதங்க ளாய புராணர் போலும்
புகழ வளரொளியாய் நின்றார் போலும்
பாதம் பரவப் படுவார் போலும்
பத்தர்களுக் கின்பம் பயந்தார் போலும்
ஏதங்க ளான கடிவார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 3

6405. திண்குணத்தார் தேவர் கணங்க ளேத்தித்
திசைவணங்கச் சேவடியை வைத்தார் போலும்
விண்குணத்தார் வேள்வி சிதைய நூறி
வியன்கொண்டல் மேற்செல் விகிர்தர் போலும்
பண்குணத்தார் பாடலோ டாட லோவாப்
பரங்குன்றம் மேய பரமர் போலும்
எண்குணத்தா ரெண்ணா யிரவர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 4

6406. ஊக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த
உயர்பொழி லண்ணாவி லுறைகின் றாரும்
பாகம் பணிமொழியாள் பாங்க ராகிப்
படுவெண் தலையிற் பலிகொள் வாரும்
மாகமடை மும்மதிலு மெய்தார் தாமும்
அணிபொழில்சூழ் ஆரூ ருறைகின் றாரும்
ஏகம்பம் மேயாரு மெல்லா மாவா
ரிடைமருது மேவிய ஈச னாரே. 5

6407. ஐயிரண்டும் ஆறொன்று மானார் போலும்
அறுமூன்றும் நான்மூன்று மானார் போலும்
செய்வினைகள் நல்வினைக ளானார் போலுந்
திசையனைத்து மாய்நிறைந்த செல்வர் போலும்
கொய்மலரங் கொன்றைச் சடையார் போலுங்
கூத்தாட வல்ல குழகர் போலும்
எய்யவந்த காமனையுங் காய்ந்தார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 6

6408. பிரியாத குணமுயிர்கட் கஞ்சோ டஞ்சாய்ப்
பிரிவுடைய குணம்பேசிற் பத்தோ டொன்றாய்
விரியாத குணமொருகால் நான்கே யென்பர்
விரிவிலாக் குணநாட்டத் தாறே யென்பர்
தெரிவாய குணமஞ்சுஞ் சமிதை யஞ்சும்
பதமஞ்சுங் கதியஞ்சுஞ் செப்பி னாரும்
எரியாய தாமரைமே லியங்கி னாரும்
இடைமருது மேவிய ஈச னாரே. 7

6409. தோலிற் பொலிந்த வுடையார் போலுஞ்
சுடர்வா யரவசைத்த சோதி போலும்
ஆலம் அமுதாக வுண்டார் போலும்
அடியார்கட் காரமுத மானார் போலும்
காலனையுங் காய்ந்த கழலார் போலுங்
கயிலாயந் தம்மிடமாக் கொண்டார் போலும்
ஏலங் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 8

6410. பைந்தளிர்க் கொன்றையந் தாரார் போலும்
படைக்கணாள் பாக முடையார் போலும்
அந்திவாய் வண்ணத் தழகர் போலும்
மணிநீல கண்ட முடையார் போலும்
வந்த வரவுஞ் செலவு மாகி
மாறாதென் னுள்ளத் திருந்தார் போலும்
எந்தம் மிடர்தீர்க்க வல்லார் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே. 9

6411. கொன்றையங் கூவிள மாலை தன்னைக்
குளிர்சடைமேல் வைத்துகந்த கொள்கை யாரும்
நின்ற அனங்கனை நீறா நோக்கி
நெருப்புருவ மாய்நின்ற நிமல னாரும்
அன்ற அரக்கன் அலறி வீழ
அருவரையைக் காலா லழுத்தி னாரும்
என்று மிடுபிச்சை யேற்றுண் பாரும்
இடைமருது மேவிய ஈச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 17. திருவிடைமருதூர் – திருத்தாண்டகம்

6412. ஆறுசடைக் கணிவர் அங்கைத் தீயர்
அழகர்படை யுடைய ரம்பொற் றோண்மேல்
நீறு தடவந் திடப மேறி
நித்தம் பலிகொள்வர் மொய்த்த பூதம்
கூறுங் குணமுடையர் கோவ ணத்தர்
கோடால வேடத்தர் கொள்கை சொல்லின்
ஈறும் நடுவும் முதலு மாவா
ரிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 1

6413. மங்குன் மதிவைப்பர் வான நாடர்
மடமா னிடமுடையர் மாத ராளைப்
பங்கின் மிகவைப்பர் பால்போல் நீற்றர்
பளிக்கு வடம்புனைவர் பாவ நாசர்
சங்கு திரையுகளுஞ் சாய்க்கா டாள்வர்
சரிதை பலவுடையர் தன்மை சொல்லின்
எங்கும் பலிதிரிவ ரென்னுள் நீங்கா
ரிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 2

6414. ஆல நிழலிருப்ப ராகா யத்தர்
அருவரையி னுச்சிய ராணர் பெண்ணர்
காலம் பலகழித்தார் கறைசேர் கண்டர்
கருத்துக்குச் சேயார்தாங் காணா தார்க்குக்
கோலம் பலவுடையர் கொல்லை யேற்றர்
கொடுமழுவர் கோழம்பம் மேய வீசர்
ஏல மணநாறும் ஈங்கோய் நீங்கா
ரிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 3

6415. தேசர் திறம்நினைவார் சிந்தை சேருஞ்
செல்வர் திருவாரூ ரென்று முள்ளார்
வாச மலரின்கண் மான்தோல் போர்ப்பர்
மருவுங் கரியுரியர் வஞ்சக் கள்வர்
நேச ரடைந்தார்க் கடையா தார்க்கு
நிட்டுரவர் கட்டங்கர் நினைவார்க் கென்றும்
ஈசர் புனற்பொன்னித் தீர்த்தர் வாய்த்த
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 4

6416. கரப்பர் கரியமனக் கள்வர்க் குள்ளங்
கரவாதே தந்நினைய கிற்பார் பாவம்
துரப்பர் தொடுகடலின் நஞ்ச முண்பர்
தூய மறைமொழியர் தீயா லொட்டி
நிரப்பர் புரமூன்றும் நீறு செய்வர்
நீள்சடையர் பாய்விடைகொண் டெங்கும் ஐயம்
இரப்பர் எமையாள்வர் என்னுள் நீங்கார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 5

6417. கொடியா ரிடபத்தர் கூத்து மாடிக்
குளிர்கொன்றை மேல்வைப்பர் கோல மார்ந்த
பொடியாரு மேனியர் பூதிப் பையர்
புலித்தோலர் பொங்கரவர் பூண நூலர்
அடியார் குடியாவர் அந்த ணாளர்
ஆகுதியின் மந்திரத்தார் அமரர் போற்ற
இடியார் களிற்றுரியர் எவரும் போற்ற
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 6

6418. பச்சை நிறமுடையர் பாலர் சாலப்
பழையர் பிழையெலாம் நீக்கி யாள்வர்
கச்சைக் கதநாகம் பூண்ட தோளர்
கலனொன்று கையேந்தி யில்லந் தோறும்
பிச்சை கொளநுகர்வர் பெரியர் சாலப்
பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்டர்
இச்சை மிகஅறிவர் என்று முள்ளார்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 7

6419. காவார் சடைமுடியர் காரோ ணத்தர்
கயிலாயம் மன்னினார் பன்னு மின்சொல்
பாவார் பொருளாளர் வாளார் கண்ணி
பயிலுந் திருவுருவம் பாகம் மேயார்
பூவார் புனலணவு புன்கூர் வாழ்வர்
புரமூன்றும் ஒள்ளழலாக் காயத் தொட்ட
ஏவார் சிலைமலைய ரெங்குந் தாமே
யிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 8

6420. புரிந்தார் நடத்தின்கட் பூத நாதர்
பொழிலாரூர் புக்குறைவர் போந்து தம்மில்

பிரிந்தா ரகல்வாய பேயுந் தாமும்
பிரியாரொரு நாளும் பேணு காட்டில்
எரிந்தா ரனலுகப்ப ரேழி லோசை
யெவ்விடத்துந் தாமேயென் றேத்து வார்பால்
இருந்தார் இமையவர்கள் போற்ற என்றும்
இடைமருது மேவி யிடங்கொண் டாரே. 9

6421. விட்டிலங்கு மாமழுவர் வேலை நஞ்சர்
விடங்கர் விரிபுனல்சூழ் வெண்காட் டுள்ளார்
மட்டிலங்கு தார்மாலை மார்பில் நீற்றர்
மழபாடி யுள்ளுறைவர் மாகா ளத்தர்
சிட்டிலங்கு வல்லரக்கர் கோனை யன்று
செழுமுடியுந் தோளைந்நான் கடரக் காலால்
இட்டிரங்கி மற்றவனுக் கீந்தார் வென்றி
யிடைமருது மேவி யிடங்கொண் டாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. திருப்பூவணம் – திருத்தாண்டகம்

6422. வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியந் தோன்றுந் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றுங்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 1

6423. ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்
அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்
ஊணாகி வூர்திரிவா னாகித் தோன்றும்
ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல்
சேணாக வரைவில்லா லெரித்தல் தோன்றுஞ்
செத்தவர்தம் எலும்பினாற் செறியச் செய்த
பூணாணு மரைஞாணும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 2

6424. கல்லாலின் நீழலிற் கலந்து தோன்றுங்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றுஞ்
சூழரவும் மான்மறியுந் தோன்றுந் தோன்றும்
அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்
ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 3

6425. படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
ஊரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 4

6426. மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும்
மாசிலாப் புன்சடைமேல் மதியந் தோன்றும்
இயல்பாக இடுபிச்சை ஏற்றல் தோன்றும்
இருங்கடல்நஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 5

6427. பாரார்ழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிகள் தோன்றும்
ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன்
உடல்துணித்த இடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்ஈந்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 6

6428. தன்னடியார்க் கருள்புரிந்த தக்வு தோன்றுஞ்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்புந்

தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 7

6429. செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றுந்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்
நெற்றிமேல் கண்தோன்றும் பெற்றந் தோன்றும்
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்
மலைமகளுஞ் சலமகளும் மலிந்து தோன்றும்
பொறியரவும் இளமதியும் பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 8

6430. அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரு முருமென்ன அடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்றும் மணியார் வைகைத்
திருக்கோட்டி நின்றதோர் திறமுந் தோன்றுஞ்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 9

6431. ஆங்கணைந்த சண்டிக்கும் அருளி யன்று
தன்முடிமேல் அலர்மாலை யளித்தல் தோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும்
கோங்கணைந்த கூவிளமும் மதமத் தம்முங்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 10

6432. ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்
வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவுந் தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென அடர்த்திட்ட நிலையுந் தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 19. திருவாலவாய் – திருத்தாண்டகம்

6433. முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 1

6434. விண்ணுலகின் மேலார்கள் மேலான் தன்னை
மேலாடு புரமூன்றும் பொடிசெய் தானைப்
பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத் தானைப்
பசும்பொன்னின் நிறத்தானைப் பால்நீற் றானை
உண்ணிலவு சடைக்கற்றைக் கங்கை யாளைக்
கரந்துமையோ டுடனாகி யிருந்தான் தன்னைத்
தெண்ணிலவு தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 2

6435. நீர்த்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை
நிலமருவி நீரோடக் கண்டான் தன்னைப்
பாற்றிரளைப் பயின்றாட வல்லான் தன்னைப்
பகைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான் தன்னைக்
காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று
கடுங்குரலா யிடிப்பானைக் கண்ணோர் நெற்றித்
தீத்திரளைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 3

6436. வானமிது வெல்லா முடையான் தன்னை
வரியரவக் கச்சானை வன்பேய் சூழக்
கானமதில் நடமாட வல்லான் தன்னைக்
கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல்
ஊனமது வெல்லா மொழித்தான் தன்னை
யுணர்வாகி யடியேன துள்ளே நின்ற
தேனமுதைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 4

6437. ஊரானை யுலகேழாய் நின்றான் தன்னை
யொற்றைவெண் பிறையானை யுமையோ டென்றும்
பேரானைப் பிறர்க்கென்று மரியான் தன்னைப்

பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும்
ஆரானை அமரர்களுக் கமுதீந் தானை
அருமறையால் நான்முகனும் மாலும் போற்றும்
சீரானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 5

6438. மூவனை மூர்த்தியை மூவா மேனி
யுடையானை மூவுலகுந் தானே யெங்கும்
பாவனைப் பாவ மறுப்பான் தன்னைப்
படியெழுத லாகாத மங்கை யோடும்
மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு
விரிகடலின் நஞ்சுண் டமுத மீந்த
தேவனைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 6

6439. துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைத்
துன்பந் துடைத்தாள வல்லான் தன்னை
இறந்தார்க ளென்பே யணிந்தான் தன்னை
யெல்லி நடமாட வல்லான் தன்னை
மறந்தார் மதில்மூன்றும் மாய்த்தான் தன்னை
மற்றொருபற் றில்லா வடியேற் கென்றும்
சிறந்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 7

6440. வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 8

6441. பகைச்சுடராய்ப் பாவ மறுப்பான் தன்னைப்
பழியிலியாய் நஞ்சுண் டமுதீந் தானை
வகைச்சுடராய் வல்லசுரர் புரமட் டானை
வளைவிலியா யெல்லார்க்கு மருள்செய் வானை
மிகைச்சுடரை விண்ணவர்கண் மேலப் பாலை
மேலாய தேவாதி தேவர்க் கென்றும்
திகைச்சுடரைத் தென்கூடல் திருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 9

6442. மலையானை மாமேரு மன்னி னானை
வளர்புன் சடையானை வானோர் தங்கள்
தலையானை யென்தலையி னுச்சி யென்றுந்
தாபித் திருந்தானைத் தானே யெங்கும்
துலையாக வொருவரையு மில்லா தானைத்
தோன்றாதார் மதில்மூன்றுந் துவள எய்த
சிலையானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 10

6443. தூர்த்தனை தோள்முடிபத் திறுத்தான் தன்னைத்
தொன்னரம்பின் இன்னிசைகேட் டருள்செய் தானைப்
பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான் தன்னைப்
பரிந்தவர்க்குப் பாசுபதம் ஈந்தான் தன்னை
ஆத்தனை யடியேனுக் கன்பன் தன்னை
யளவிலாப் பல்லூழி கண்டு நின்ற
தீர்த்தனைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 20. திருநள்ளாறு – திருத்தாண்டகம்

6444. ஆதிக்கண் நான்முகத்தி லொன்று சென்று
அல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளால்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல
சிவலோக நெறிவகுத்துக் காட்டு வானை
மாதிமைய மாதொருகூ றாயி னானை
மாமலர்மே லயனோடு மாலுங் காணா
நாதியை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 1

6445. படையானைப் பாசுபத வேடத் தானைப்
பண்டனங்கற் பார்த்தானைப் பாவ மெல்லாம்
அடையாமைக் காப்பானை யடியார் தங்கள்
அருமருந்தை ஆவாவென் றருள்செய் வானைச்
சடையானைச் சந்திரனைத் தரித்தான் தன்னைச்
சங்கத்த முத்தனைய வெள்ளை யேற்றின்

நடையானை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப் பெற்றுய்ந்த வாறே. 2

6446. படஅரவ மொன்றுகொண் டரையி லார்த்த
பராபரனைப் பைஞ்ஞீலி மேவி னானை
அடலரவம் பற்றிக் கடைந்த நஞ்சை
யமுதாக வுண்டானை யாதி யானை
மடலரவம் மன்னுபூங் கொன்றை யானை
மாமணியை மாணிக்காய்க் காலன் தன்னை
நடலரவஞ் செய்தானை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 3

6447. கட்டங்க மொன்றுதங் கையி லேந்திக்
கங்கணமுங் காதில்விடு தோடு மிட்டுச்
சுட்டங்கங் கொண்டு துதையப் பூசிச்
சுந்தரனாயிச் சூலங்கை யேந்தி னான்னைப்
பட்டங்க மாலை நிறையச் சூடிப்
பல்கணமுந் தாமும் பரந்த காட்டில்
நட்டங்க மாடியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 4

6448. உலந்தார்தம் அங்கங்கொண் டுலக மெல்லாம்
ஒருநொடியி லுழல்வானை யுலப்பில் செல்வம்
சிலந்திதனக் கருள்செய்த தேவ தேவைத்
திருச்சிராப் பள்ளியெஞ் சிவலோகனைக்
கலந்தார்தம் மனத்தென்றுங் காத லானைக்
கச்சியே கம்பனைக் கமழ்பூங் கொன்றை
நலந்தாங்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 5

6449. குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் றன்னைக்
குலவரையன் மடப்பாவை யிடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறைய்வனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 6

6450. பூவிரியும் மலர்க்கொன்றைச் சடையி னானைப்
புறம்பயத்தெம் பெருமானைப் புகலூ ரானை
மாவிரியக் களிறுரித்த மைந்தன் தன்னை
மறைக்காடும் வலிவலமும் மன்னி னானைத்
தேவிரியத் திகழ்தக்க வேள்வி யெல்லாஞ்
சிதைத்தானை யுதைத்தவன்றன் சிரங்கொண் டானை
நாவிரிய மறைநவின்ற நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 7

6451. சொல்லானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத்
தொல்லவுணர் புரமூன்று மெரியச் செற்ற
வில்லானை யெல்லார்க்கும் மேலா னானை
மெல்லியலாள் பாகனை வேதம் நான்கும்
கல்லாலின் நீழற்கீ ழறங்கண் டானைக்
காளத்தி யானைக் கயிலை மேய
நல்லானை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 8

6452. குன்றாத மாமுனிவன் சாபம் நீங்கக்
குரைகழலாற் கூற்றுவனைக் குமைத்த கோனை
அன்றாக அவுணர்புரம் மூன்றும் வேவ
ஆரழல்வா யோட்டி யடர்வித் தானைச்
சென்றாது வேண்டிற்றொன் றீவான் றன்னைச்
சிவனேயெம் பெருமானென் றிருப்பார்க் கென்றும்
நன்றாகும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 9

6453. இறவாமே வரம்பெற்றே னென்று மிக்க
இராவணனை யிருபதுதோள் நெரிய வூன்றி
உறவாகி யின்னிசைகேட் டிரங்கி மீண்டே
யுற்றபிணி தவிர்த்தருள வல்லான் தன்னை
மறவாதார் மனத்தென்றும் மன்னி னானை
மாமதியம் மலர்க்கொன்றை வன்னி மத்தம்
நறவார்செஞ் சடையானை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 21. திருஆக்கூர் – திருத்தாண்டகம்

6454. முடித்தா மரையணிந்த மூர்த்தி போலும்
மூவுலகுந் தாமாகி நின்றார் போலும்
கடித்தா மரையேய்ந்த கண்ணார் போலுங்
கல்லலகு பாணி பயின்றார் போலும்
கொடித்தா மரைக்காடே நாடுந் தொண்டர்
குற்றேவல் தாம்மகிழ்ந்த குழகர் போலும்
அடித்தா மரைமலர்மேல் வைத்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 1

6455. ஓதிற் றொருநூலு மில்லை போலும்
உணரப் படாததொன் றில்லை போலும்
காதிற் குழையிலங்கப் பெய்தார் போலுங்
கவலைப் பிறப்பிடும்பை காப்பார் போலும்
வேதத்தோ டாறங்கஞ் சொன்னார் போலும்
விடஞ்சூழ்ந் திருண்ட மிடற்றார் போலும்
ஆதிக் களவாகி நின்றார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 2

6456. மையார் மலர்க்கண்ணாள் பாகர் போலும்
மணிநீல கண்ட முடையார் போலும்
நெய்யார் திரிசூலங் கையார் போலும்
நீறேறு தோளெட் டுடையார் போலும்
வையார் மழுவாட் படையார்போலும்
வளர்ஞாயி றன்ன வொளியார் போலும்
ஐவா யரவமொன் றார்த்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 3

6457. வடிவிளங்கு வெண்மழுவாள் வல்லார் போலும்
வஞ்சக் கருங்கடல்நஞ் சுண்டார் போலும்
பொடிவிளங்கு முந்நூல்சேர் மார்பர் போலும்
பூங்கங்கை தோய்ந்த சடையார் போலும்
கடிவிளங்கு கொன்றையந் தாரார் போலும்
கட்டங்க மேந்திய கையார் போலும்
அடிவிளங்கு செம்பொற் கழலார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 4

6458. ஏகாச மாம்புலித்தோல் பாம்பு தாழ
இடுவெண் தலைகலனா ஏந்தி நாளும்
மோகாசங் கட்டழித்த வெள்ளி மாலை
புனலார் சடைமுடிமேற் புனைந்தார் போலும்
மாகாச மாயவெண் ணீருந் தீயும்
மதியும் மதிபிறந்த விண்ணும் மண்ணும்
ஆகாச மென்றிவையு மானார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 5

6459. மாதூரும் வாள்நெடுங்கண் செவ்வாய் மென்தோள்
மலைமகளை மார்பத் தணைத்தார் போலும்
மூதூர் முதுதிரைக ளானார் போலும்
முதலும் இறதியு மில்லார் போலும்
தீதூர நல்வினையாய் நின்றார் போலுந்
திசையெட்டுந் தாமேயாஞ் செல்வர் போலும்
ஆதிரை நாளா யமர்ந்தார் போலும்
ஆக்கூரில் தான்தோன்றி யப்ப னாரே. 6

6460. மால்யானை மத்தகத்தைக் கீண்டார் போலும்
மான்தோ லுடையா மகிழ்ந்தார் போலும்
கோலானைக் கோவழலாற் காய்ந்தார் போலுங்
குழவிப் பிறைசடைமேல் வைத்தார் போலும்
காலனைக் காலாற் கடந்தார் போலுங்
கயிலாயந் தம்மிடமாக் கொண்டார் போலும்
ஆலானைந் தாடல் உகப்பார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 7

6461. கண்ணார்ந்த நெற்றி யுடையார் போலுங்
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தார் போலும்
உண்ணா அருநஞ்ச முண்டார் போலும்
ஊழித்தீ யன்ன வொளியார் போலும்
எண்ணா யிரங்கோடி பேரார் போலும்
ஏறேறிச் செல்லும் இறைவர் போலும்
அண்ணாவு மாரூரும் மேயார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 8

6462. கடியார் தளிர்கலந்த கொன்றை மாலை
கதிர்போது தாதணிந்த கண்ணி போலும்

நெடியானுஞ் சதுர்முகனும் நேட நின்ற
நீலநற் கண்டத் திறையார் போலும்
படியே லழல்வண்ணஞ் செம்பொன் மேனி
மணிவண்ணந் தம்வண்ண மாவார் போலும்
அடியார் புகலிடம தானார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 9

6463. திரையானுஞ் செந்தா மரைமே லானுந்
தேர்ந்தவர்கள் தாந்தேடிக் காணார் நாணும்
புரையா னெனப்படுவார் தாமே போலும்
போரேறு தாமேறிச் செல்வார் போலும்
கரையா வரைவில்லே நாகம் நாணாக்
காலத்தீ யன்ன கனலார் போலும்
வரையார் மதிலெய்த வண்ணர் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 22. திருநாகைக்காரோணம் – திருத்தாண்டகம்

6464. பாரார் பரவும் பழனத் தானைப்
பருப்பதத் தானைப்பைஞ் ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத்
திகழுந் திருமுடிமேல் திங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் தன்னைப்
பிறர்தன்னைக் காட்சிக் கரியான் தன்னைக்
காரார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 1

6465. விண்ணோர் பெருமானை வீரட் டானை
வெண்ணீறு மெய்க்கணிந்த மேனி யானைப்
பெண்ணானை யாணானைப் பேடி யானைப்
பெரும்பற்றத் தண்புலியூர் பேணி னானை
அண்ணா மலையானை ஆனைந் தாடும்
அணியாரூர் வீற்றிருந்த அம்மான் தன்னைக்
கண்ணார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 2

6466. சிறையார் வரி வண்டு தேனே
பாடுந் திருமறைக்காட் டெந்தை சிவலோகனை
மறையான்ற வாய்மூருங் கீழ்வே ளூரும்
வலிவலமுந் தேவூரும் மன்னி யங்கே
உறைவானை உத்தமனை ஒற்றி யூரிற்
பற்றியாள் கின்ற பரமன் தன்னைக்
கறையார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 3

6467. அன்னமாம் பொய்கைசூழ் அம்ப ரானை
ஆச்சிரா மந்நகரும் ஆனைக் காவும்
முன்னமே கோயிலாக் கொண்டான் தன்னை
மூவுலகுந் தானாய மூர்த்தி தன்னைச்
சின்னமாம் பன்மலர்கள் அன்றே சூடிச்
செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி னானைக்
கன்னியம் புன்னைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 4

6468. நடையுடைய நல்லெருதொன் றூர்ந் வான்
தன்னை ஞானப் பெருங்கடலை நல்லூர்மேய
படையுடைய மழுவாளொன் றேந்தி னானைப்
பன்மையே பேசும் படிறன் தன்னை
மடையிடையே வாளை யுகளும் பொய்கை
மருகல்வாய்ச் சோதி மணிகண் டனைக்
கடையுடைய நெடுமாட மோங்கு நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 5

6469. புலங்கொள்பூந் தேறல்வாய்ப் புகலிக் கோனைப்
பூம்புகார்க் கற்பகத்தைப் புன்கூர் மேய
அலங்கலங் கழனிசூ ழணிநீர்க் கங்கை
யவிர்சடைமேல் ஆதரித்த அம்மான் தன்னை
இலங்கு தலைமாலை பாம்புகொண் டேகாச
மிட்டி யங்கு மீசன் தன்னைக்
கலங்கற் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 6

6470. பொன்மணியம் பூங்கொன்றை மாலை யானைப்
புண்ணியனை வெண்ணீறு பூசி னானைச்
சின்மணிய மூவிலைய சூலத் தானைத்
தென்சிராப் பள்ளிச் சிவலோ கனை
மன்மணியை வான்சுடலை யூராப் பேணி

வல்லெருதொன் றேறும் மறைவல் லானைக்
கன்மணிகள் வெண்திரைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 7

6471. வெண்தலையும் வெண்மழுவும் ஏந்தி னானை
விரிகோ வணமசைத்த வெண்ணீற் றானைப்
புண்தலைய மால்யானை யுரிபோர்த் தானைப்
புண்ணியனை வெண்ணீ றணிந்தான் தன்னை
எண்டிசையும் எரியாட வல்லான் தன்னை
யேகம்பம் மேயானை யெம்மான் தன்னைக்
கண்டலங் கழனிசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 8

6472. சொல்லார்ந்த சோற்றுத் துறையான் தன்னைத்
தொல்நரகம் நன்னெறியால் தூர்ப்பான் தன்னை
வில்லானை மீயச்சூர் மேவி னானை
வேதியர்கள் நால்வர்க்கும் வேதஞ் சொல்லிப்
பொல்லாதார் தம்அரணம் மூன்றும் பொன்றப்
பொறியரவம் மார்பாரப் பூண்டான் தன்னைக்
கல்லாலின் கீழானைக் கழிசூழ் நாகைக்
காரோணத் தெஞ்ஞானன்றுங் காண லாமே. 9

6473. மனைதுறந்த வல்லமணர் தங்கள் பொய்யும்
மாண்புரைக்கும் மனக்குண்டர் தங்கள் பொய்யும்
சினைபொதிந்த சீவரத்தர் தங்கள் பொய்யும்
மெய்யென்று கருதாதே போத நெஞ்சே
பனையுரியைத் தன்னுடலிற் போர்த்த எந்தை
யவன்பற்றே பற்றாகக் காணின் அல்லால்
கனைகடலின் தென்கழிசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 10

6474. நெடியானும் மலரவனும் நேடி யாங்கே
நேருருவங் காணாமே சென்று நின்ற
படியானைப் பாம்புரமே காத லானைப்
பாம்பரையோ டார்த்த படிறன் தன்னைச்
செடிநாறும் வெண்தலையிற் பிச்சைக் கென்று
சென்றானை நின்றியூர் மேயான் தன்னைக்
கடிநாறு பூஞ்சோலை யந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 23. திருமறைக்காடு – திருத்தாண்டகம்

6475. தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 1

6476. கைகிளரும் வீணை வலவன் கண்டாய்
கபாலி கண்டாய் திகழுஞ் சோதி
மெய்கிளரும் ஞான விளக்குக் கண்டாய்
மெய்யடியார் உள்ளத்து வித்துக் கண்டாய்
பைகிளரும் நாக மசைத்தான் கண்டாய்
பராபரன் கண்டாய் பாசூரான் கண்டாய்
வைகிளருங் கூர்வாட் படையான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 2

6477. சிலந்திக் கருள்முன்னஞ் செய்தான் கண்டாய்
திரிபுரங்கள் தீவாய்ப் படுத்தான் கண்டாய்
நிலந்துக்க நீர்வளிதீ யானான் கண்டாய்
நிருபியாய் ரூபியுமாய் நின்றான் கண்டாய்
சலந்துக்க சென்னிச் சடையான் கண்டாய்
தாமரையான் செங்கண்மால் தானே கண்டாய்
மலந்துக்க மால்விடையொன் றூர்ந்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 3

6478. கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்
காலனையுங் காலாற் கடந்தான் கண்டாய்
புள்ளி யுழைமானின் தோலான் கண்டாய்
புலியுரிசே ராடைப் புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமுடிமேற் சூடி கண்டாய்
வெண்ணீற்றான் கண்டாய் நஞ்செந்தின் மேய
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 4

6479. மூரி முழங்கொலிநீ ரானான் கண்டாய்
முழுத்தழல்போல் மேனி முதல்வன் கண்டாய்

ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்
இன்னடியார்க் கின்பம் விளைப்பான் கண்டாய்
ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்
அண்ணா மலையுறையெம் அண்ணல் கண்டாய்
வாரி மதகளிறே போல்வான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 5

6480. ஆடல்மால் யானை யுரித்தான் கண்டாய்
அகத்தியான் பள்ளி யமர்ந்தான் கண்டாய்
கோடியான் கண்டாய் குழகன் கண்டாய்
குளிராரூர் கோயிலாக் கொண்டான் கண்டாய்
நாடிய நன்பொருள்க ளானான் கண்டாய்
நன்மையோ டிம்மைமற் றம்மை யெல்லாம்
வாடிய வாட்டந் தவிர்ப்பான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 6

6481. வேலைசேர் நஞ்சம் மிடற்றான் கண்டாய்
விண்தடவு பூங்கயிலை வெற்பன் கண்டாய்
ஆலைசேர் வேள்வி யழித்தான் கண்டாய்
அமரர்கள் தாமேத்தும் அண்ணல் கண்டாய்
பால்நெய்சேர் ஆனஞ்சும் ஆடி கண்டாய்
பருப்பதத்தான் கண்டாய் பரவை மேனி
மாலையோர் கூறுடைய மைந்தன் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 7

6482. அம்மை பயக்கும் அமிர்து கண்டாய்
அந்தேன் தெளிகண்டாய் ஆக்கஞ் செய்திட்
டிம்மை பயக்கும் இறைவன் கண்டாய்
என்னெஞ்சே யுன்னில் இனியான் கண்டாய்
மெய்ம்மையே ஞான விளக்குக் கண்டாய்
வெண்காடன் கண்டாய் வினைகள் போக
மம்ம ரறுக்கும் மருந்து கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 8

6483. மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்
முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்
ஆதியும் அந்தமு மானான் கண்டாய்
பால விருத்தனு மானான் கண்டாய்
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 9

6484. அயனவனும் மாலவனும் அறியா வண்ணம்
ஆரழலாய் நீண்டுகந்த அண்ணல் கண்டாய்
துயரிலங்கை வேந்தன் துளங்க அன்று
சோதிவிர லாலுற வைத்தான் கண்டாய்
பெயரவற்குப் பேரருள்கள் செய்தான் கண்டாய்
பேரும் பெரும்படையோ டீந்தான் கண்டாய்
மயருறு வல்வினைநோய் தீர்ப்பான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 24. திருவாரூர் – திருத்தாண்டகம்

6485. கைம்மான மதகளிற்றி னுரிவை யான்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
அம்மான்காண் ஆடரவொன் றாட்டி னான்காண்
அனலாடி காண்அயில்வாய்ச் சூலத் தான்காண்
எம்மான்காண் ஏழுலகு மாயி னான்காண்
எரிசுடரோன் காண்இலங்கு மழுவா ளன்காண்
செம்மானத் தொளியன்ன மேனி யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 1

6486. ஊனேறு படுதலையி லுண்டி யான்காண்
ஓங்காரன் காண்ஊழி முதலா னான்காண்
ஆனேறொன் றூர்ந்துழலும் ஐயா றன்காண்
அண்டன்காண் அண்டத்துக் காப்பா லான்காண்
மானேறு கரதலத்தெம் மணிகண் டன்காண்
மாதவன்காண் மாதவத்தின் விளைவா னான்காண்
தேனேறும் மலர்க்கொன்றைக் கண்ணி யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 2

6487. ஏவணத்த சிலையால்முப் புரமெய் தான்காண்
இறையவன்காண் மறையவன்காண் ஈசன் தான்காண்
தூவணத்த சுடர்ச்சூலப் படையி னான்காண்
சுடர்மூன்றுங் கண்மூன்றாக் கொண்டான் தான்காண்
ஆவணத்தால் என்றன்னை யாட்கொண் டான்காண்
அனலாடிகாண் அடியார்க் கமிர்தா னான்காண்
தீவணத்த திருவுருவிற் கரியுரு வன்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 3

6488. கொங்குவார் மலர்க்கண்ணிக் குற்றா லன்காண்
கொடுமழுவன் காண்கொல்லை வெள்ளேற் றான்காண்
எங்கள்பால் துயர்கெடுக்கு மெம்பி ரான்காண்
ஏழ்கடலு மேழ்மலையு மாயி னான்காண்
பொங்குமா கருங்கடல்நஞ் சுண்டான் தான்காண்
பொற்றூண்காண் செம்பவளத் திரள்போல் வான்காண்
செங்கண்வா ளராமதியோ டுடன்வைத் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 4

6489. காரேறு நெடுங்குடுமிக் கயிலா யன்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
போரேறு நெடுங்கொடிமே லுயர்த்தி னான்காண்
புண்ணியன்காண் எண்ணரும்பல் குணத்தி னான்காண்
நீரேறு சுடர்ச்சூலப் படையி னான்காண்
நின்மலன்காண் நிகரேது மில்லா தான்காண்
சீரேறு திருமாலோர் பாகத் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 5

6490. பிறையரவக் குறுங்கண்ணிச் சடையி னான்காண்
பிறப்பிலிகாண் பெண்ணோடா ணாயி னான்காண்
கறையுருவ மணிமிடற்று வெண்ணீற் றான்காண்
கழல்தொழுவார் பிறப்பறுக்குங் காபா லிகாண்
இறையுருவக் கனவளையாள் இடப்பா கன்காண்
இருநிலன்காண் இருநிலத்துக் கியல்பா னான்காண்
சிறையுருவக் களிவண்டார் செம்மை யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 6

6491. தலையுருவச் சிரமாலை சூடி னான்காண்
தமருலகந் தலைகலனாப் பலிகொள் வான்காண்
அலையுருவச் சுடராழி யாக்கி னான்காண்
அவ்வாழி நெடுமாலுக் கருளி னான்காண்
கொலையுருவக் கூற்றுதைத்த கொள்கை யான்காண்
கூரெரிநீர் மண்ணொடுகாற் றாயி னான்காண்
சிலையுருவச் சரந்துரந்த திறத்தி னான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 7

6492.ஐயன்காண் குமரன்காண் ஆதி யான்காண்
அடல்மழுவாள் தானொன்று பியன்மே லேந்து
கையன்காண் கடற்பூதப் படையி னான்காண்
கண்ணெரியால் ஐங்கணையோன் உடல்காய்ந் தான்காண்
வெய்யன்காண் தண்புனல்சூழ் செஞ்சடை யான்காண்
வெண்ணீற்றான் காண்விசயற் கருள்செய் தான்காண்
செய்யன்காண் கரியன்காண் வெளியோன் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 8

6493.மலைவளர்த்த மடமங்கை பாகத் தான்காண்
மயானத்தான் காண்மதியஞ் சூடி னான்காண்
இலைவளர்த்த மலர்க்கொன்றை மாலை யான்காண்
இறையவன்காண் எறிதிரைநீர் நஞ்சுண் டான்காண்
கொலைவளர்த்த மூவிலைய சூலத் தான்காண்
கொடுங்குன்றன் காண்கொல்லை யேற்றி னான்காண்
சிலைவளர்த்த சரந்துரந்த திறத்தி னான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 9

6494.பொற்றாது மலர்க்கொன்றை சூடி னான்காண்
புரிநூலன் காண்பொடியார் மேனி யான்காண்
மற்றாருந் தன்னொப்பா ரில்லா தான்காண்
மறையோதி காண்எறிநீர் நஞ்சுண் டான்காண்
எற்றாலுங் குறைவொன்று மில்லா தான்காண்
இறையவன்காண் மறையவன்காண் ஈசன் றான்காண்
செற்றார்கள் புரமூன்றுஞ் செற்றான் தான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 25. திருவாரூர் – திருத்தாண்டகம்

6495.உயிரா வணமிருந் துற்று நோக்கி
யுள்ளக் கிழியி னுரு வெழுதி
உயிரா வணஞ் செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
யமரர்நா டாளாதே யாரூ ராண்ட

அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே. 1

6496. எழுது கொடியிடையார் ஏழை மென்றோள்
இளையார்கள் நம்மை யிகழா முன்னம்
பழுது படநினையேல் பாவி நெஞ்சே
பண்டுதான் என்னோடு பகைதா னுண்டோ
முழுதுலகில் வானவர்கள் முற்றுங் கூடி
முடியால் உறவணங்கி முற்றம் பற்றி
அழுது திருவடிக்கே பூசை செய்ய
இருக்கின்றான் ஊர்போலும் ஆரூர் தானே. 2

6497. தேரூரார் மாவூரார் திங்க ளூரார்
திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடிக்
காரூரா நின்ற கழனிச் சாயற்
கண்ணார்ந்த மாடங் கலந்து தோன்றும்
ஓரூரா வுலகெலா மொப்பக் கூடி
உமையாள் மணவாளா என்று வாழ்த்தி
ஆரூரா ஆரூரா என்கின் றார்கள்
அமரர்கள்தம் பெருமானே யெங்குற் றாயே. 3

6498. கோவணமோ தோலோ உடையாவது கொல்லேறோ
வேழமோ ஊர்வதுதான்
பூவணமோ புறம்பயமோ அன்றா யிற்றான்
பொருந்தாதார் வாழ்க்கை திருந்தா மையோ
தீவணத்த செஞ்சடைமேல் திங்கள் சூடித்
திசைநான்கும் வைத்துகந்த செந்தீ வண்ணர்
ஆவணமோ வொற்றியோ அம்மா னார்தாம்
அறியேன்மற் றூராமா றாரூர் தானே. 4

6499. ஏந்து மழுவாளர் இன்னம்பரார் எரிபவள
வண்ணர் குடமூக்கிலார்
வாய்ந்த வளைக்கையாள் பாக மாக
வார்சடையார் வந்து வலஞ்சுழியார்
போந்தா ரடிகள் புறம்ப யத்தே
புகலூர்க்கே போயினார் போரே றேறி
ஆய்ந்தே யிருப்பார்போ யாரூர் புக்கா
ரண்ணலார் செய்கின்ற கண்மாயமே. 5

6500. கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
கருநரம்பும் வெள்ளேலும்புஞ் சேர்ந்தொன் றாகி
உருவாகிப் புறப்பட்டிங் கொருத்தி தன்னால்
வளர்க்கப்பட் டுயிராருங் கடைபோ காரால்
மருவாகி நின்னடியே மறவே னம்மான்
மறித்தொருகாற் பிறப்புண்டேல் மறவா வண்ணம்
திருவாரூர் மணவாளா திருத்தெங் கூராய்
செம்பொனே கம்பனே திகைத்திட் டேனே. 6

6501. முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள் அகன்றாள்
அகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே. 7

6502. ஆடுவாய் நீநட்டம் அளவிற் குன்றா
அவியடுவார் அருமறையோ ரறிந்தே னுன்னைப்
பாடுவார் தும்புருவும் நார தாதி
பரவுவார் அமரர்களும் அமரர் கோனும்
தேடுவார் திருமாலும் நான் முகனுந்
தீண்டுவார் மலைமகளுங் கங்கை யாளும்
கூடுமே நாயடியேன் செய்குற் றேவல்
குறையுண்டே திருவாரூர் குடிகொண் டீர்க்கே. 8

6503. நீருருஞ் செஞ்சடையாய் நெற்றிக் கண்ணாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நின்னைத் தேடி
ஓருரு மொழியாமே யொற்றித் தெங்கும்
உலகமெலாந் திரிதந்து நின்னைக் காண்பான்
தேருரும் நெடுவீதி பற்றி நின்று
திருமாலும் நான்முகனுந் தேர்ந்துங் காணா
தாரூரா ஆரூரா என்கின் றார்கள்
அமரர்கள்தம் பெருமானே ஆரூ ராயே. 9

6504. நல்லூரே நன்றாக நட்ட மிட்டு
நறையேற்றைப் பழையாறே பாய ஏறிப்

பல்லூரும் பலிதிரிந்து சேற்றூர் மீதே
பலர்காணத் தலையாலங் காட்டி னூடே
இல்லார்ந்த பெருவேளூர்த் தளியே பேணி
யிராப்பட்டீச் சரங்கடந்து மணற்கால் புக்கு
எல்லாருந் தளிச்சாத்தங் குடியிற் காண
இறைப்பொழுதில் திருவாரூர் புக்கார் தாமே. 10

6505. கருத்துத்திக் கதநாகங் கையி லேந்திக்
கருவரைபோற் களியானைக் கதறக் கையால்
உரித்தெடுத்துச் சிவந்ததன்தோல் பொருந்த மூடி
உமையவளை யச்சுறுத்தும் ஒளிகொள் மேனித்
திருத்துருத்தி திருப்பழனந் திருநெய்த் தானந்
திருவையா றிடங்கொண்ட செல்வர் இந்நாள்
அரிப்பெருத்த வெள்ளேற்றை அடரவேறி
யப்பனார் இப்பருவ மாரூ ராரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 26. திருவாரூர் – திருத்தாண்டகம்

6506. பாதித்தன் திருவுருவிற் பெண்கொண் டானைப்
பண்டொருகால் தசமுகனை அழுவித் தானை
வாதித்துத் தடமலரான் சிரங்கொண் டானை
வன்கருப்புச் சிலைக்காம னுடல்அட் டானைச்
சோதிச்சந் திரன்மேனி மறுச்செய் தானைச்
சுடரங்கி தேவனையோர் கைக்கொண் டானை
ஆதித்தன் பற்கொண்ட அம்மான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 1

6507. வெற்புறுத்த திருவடியாற் கூற்றட் டானை
விளக்கினொளி மின்னினொளி முத்தின் சோதி
ஒப்புறுத்த திருவுருவத் தொருவன் தன்னை
யோதாதே வேத முணர்ந்தான் தன்னை
அப்புறுத்த கடல்நஞ்ச முண்டான் தன்னை
யமுதுண்டார் உலந்தாலும் உலவா தானை
அப்புறுத்த நீரகத்தே யழலா னானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 2

6508. ஒருகாலத் தொருதேவர் கண்கொண் டானை
யூழிதோ றூழி யுயர்ந்தான் தன்னை
வருகாலஞ் செல்கால மாயி னானை
வன்கருப்புச் சிலைக்காம னுடலட் டானைப்
பொருவேழக் களிற்றுரிவைப் போர்வை யானைப்
புள்ளரைய னுடல்தன்னைப் பொடிசெய் தானை
அருவேள்வி தகர்த்தெச்சன் தலைகொண் டானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 3

6509. மெய்ப்பால்வெண் நீறணிந்த மேனி யானை
வெண்பளிங்கி னுட்பதித்த சோதி யானை
ஒப்பானை யொப்பிலா வொருவன் தன்னை
உத்தமனை நித்திலத்தை யுலக மெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப் பானை
வல்வினையேன் மனத்தகத்தே மன்னி னானை
அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 4

6510. பிண்டத்திற் பிறந்ததொரு பொருளை மற்றைப்
பிண்டத்தைப் படைத்ததனைப் பெரிய வேதத்
துண்டத்தில் துணிபொருளைச் சுடு தீயாகிச்
சுழல்காலாய் நீராகிப் பாரா யிற்றைக்
கண்டத்திற் றீதில்நஞ் சமுது செய்து
கண்மூன்று படைத்ததொரு கரும்பைப் பாலை
அண்டத்துக் கப்புறத்தார் தமக்கு வித்தை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 5

6511. நீதியாய் நிலனாகி நெருப்பாய் நீராய்
நிறைகாலாய் இவையிற்றின் நியம மாகிப்
பாதியா யொன்றாகி யிரண்டாய் மூன்றாய்ப்
பரமாணு வாய்ப்பழுத்த பண்க ளாகிச்
சோதியா யிருளாகிச் சுவைக ளாகிச்
சுவைகலந்த அப்பாலாய் வீடாய் வீட்டின்
ஆதியா யந்தமாய் நின்றான் தன்னை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே. 6, 7, 8, 9, 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 27. திருவாரூர் – திருத்தாண்டகம்

6512. பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்துதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 1

6513. ஐம்பொருமா பூதங்காள் ஒருவீர் வேண்டிற்
றொருவீர்வேண் டீர்ஈண்டிவ் வவனி யெல்லாம்
உம்பரமே உம்வசமே யாக்க வல்லீர்க்
கில்லையே னுகர்போகம் யானேல் வானோர்
உம்பருமா யூழியுமா யுலகே ழாகி
யொள்ளாரூர் நள்ளமிர்தாம் வள்ளல் வானோர்
தம்பெருமா னாய்நின்ற அரனைக் காண்பேன்
தடைப்படுவே னாக்கருதித் தருக்கேன் மின்னே. 2

6514. சில்லுருவிற் குறியிருத்தி நித்தல் பற்றிச்
செழுங்கணால் நோக்குமிது வூக்க மன்று
பல்லுருவில் தொழில்பூண்ட பஞ்ச பூதப்
பளகீரும் வசமன்றே பாரே லெல்லாம்
சொல்லுருவிற் சுடர்மூன்றாய் உருவம் மூன்றாய்
தூநயனம் மூன்றாகி ஆண்ட ஆரூர்
நல்லுருவிற் சிவனடியே யடைவேன் நும்மால்
நமைப்புண்ணேன் கமைத்துநீர் நடமின்களே. 3

6515. உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னாரூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப் புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை யெந்தை தன்னைத்
தலைப்படுவேன் துலைப்படுப்பான் தருக்கேன் மின்னே. 4

6516. துப்பினைமுன் பற்றறா விறலே மிக்க
சோர்வுபடு சூட்சியமே சுகமே நீங்கள்
ஒப்பினையைப் பாவித்திவ் வுலக மெல்லா
முழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யென்றன்
வைப்பினைப்பொன் மதிலாரூர் மணியை வைகன்
மணாளனையெம் பெருமானை வானோர் தங்கள்
அப்பனைச்செப் பிடவடைவேன் நும்மால் நானும்
ஆட்டுணே னோட்டந்தீங் கலையேன் மின்னே. 5

6517. பொங்குமத மானமே ஆர்வச் செற்றக்
குரோதமே யுலோபமே பொறையே நீங்கள்
உங்கள்பெரு மாநிலத்தி னெல்லை யெல்லா
முழறுமிது குறைமுடிப்பீர்க் கரிதே யானேல்
அங்கமலத் தயனொடுமா லாகி மற்று
மதற்கப்பா லொன்றாகி யறிய வொண்ணாச்
செங்கனகத் தனிக்குன்றைச் சிவனை யாரூர்ச்
செல்வனைச்சேர் வேன்நும்மாற் செலுத்து ணேனே. 6

6518. இடர்பாவ மெனமிக்க துக்க வேட்கை
வெறுப்பேயென் றனைவீரு முலகை யோடிக்
குடைகின்றீர்க் குலகங்கள் குலுங்கி நுங்கள்
குறிநின்ற தமையாதே யானேல் வானோர்
அடையார்தம் புரமூன்று மெரிசெய் தானை
அமரர்கள்தம் பெருமானை யரனை யாரூர்
உடையானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா
லாட்டுணே னோட்டந்தீங் கலையேன் மின்னே. 7

6519. விரைந்தாளும் நல்குரவே செல்வே பொல்லா
வெகுட்சியே மகிழ்ச்சியே வெறுப்பே நீங்கள்
நிரைந்தோடி மாநிலத்தை யதித்துத் தின்பீர்க்
கில்லையே நுகர்போகம் யானேல் வானோர்
கரைந்தோட வருநஞ்சை யமுது செய்த
கற்பகத்தைத் தற்பரத்தைத் திருவா ரூரில்
பரஞ்சோதி தனைக்காண்பேன் படேன்நும் பண்பிற்
பரிந்தோடி யோட்டந்து பகட்டன் மின்னே. 8

6520. மூள்வாய தொழிற்பஞ்சேந் திரிய வஞ்ச
முகரிகாண் முழுதுமிவ் வுலகை யோடி

நாள்வாயு நும்முடைய மம்ம ராணை
 நடாத்துகின்றீர்க் கமையாதே யானேல் வானோர்
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
 நெடுந்தூணைப் பாதாளக் கருவை யாரூர்
ஆள்வானைக் கடுகச்சென் றடைவேன் நும்மா
 லாட்டுணே னோட்டந்தீங் கலையேன் மின்னே. 9

6521. சுருக்கமொடு பெருக்கநிலை நித்தல் பற்றிச்
 துப்பறையென் றனைவீரிவ் வுலகை யோடிச்
செருக்கிமிகை செலுத்தியும செய்கை வைகல்
 செய்கின்றீர்க் கமையாதே யானேன் மிக்க
தருக்கிமிக வரையெடுத்த அரக்கன் ஆகந்
 தளரவடி யெடுத்தவன்றன் பாடல் கேட்டு
இரக்கமெழுந் தருளியவெம் பெருமான் பாதத்
 திடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருஆரூர் – திருத்தாண்டகம்

6522. நீற்றினையும் நெற்றிமே லிட்டார் போலும்
 நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார் போலும்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங்
 கண்ணின்மேற் கண்ணொன்று உடையார் போலும்
கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலுங்
 கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
 அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 1

6523. பரியதோர் பாம்பரைமே லார்த்தார் போலும்
 பாசுபதம் பார்த்தற் களித்தார் போலும்
கரியதோர் களிற்றுரிவை போர்த்தார் போலுங்
 காபாலங் கட்டங்கக் கொடியார் போலும்
பெரியதோர் மலைவில்லா எய்தார் போலும்
 பேர்நந்தி யென்னும் பெயரார் போலும்
அரியதோ ரரணங்க ளட்டார் போலும்
 அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 2

6524.துணியுடையார் தோலுடைய ரென்பார் போலுந்
தூயதிரு மேனிச் செல்வர் போலும்
பிணியுடைய அடியாரைத் தீர்ப்பார் போலும்
பேசுவார்க் கெல்லாம் பெரியார் போலும்
மணியுடைய மாநாகம் ஆர்ப்பார் போலும்
வாசுகிமா நாணாக வைத்தார் போலும்
அணியுடைய நெடுவீதி நடப்பார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 3

6525.ஒட்டகத்தே ஊணாக வுகந்தார் போலும்
ஒருருவாய்த் தோன்றி உயர்ந்தார் போலும்
நாட்டகத்தே நடைபலவும் நவின்றார் போலும்
ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும்
காட்டகத்தே யாட லுடையார் போலுங்
காமரங்கள் பாடித் திரிவார் போலும்
ஆட்டகத்தில் ஆனைந் துகந்தார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 4

6526.ஏனத் திளமருப்புப் பூண்டார் போலும்
இமையவர்க ளேத்த இருந்தார் போலும்
கானக்கல் லாற்கீழ் நிழலார் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
வானத் திளமதிசேர் சடையார் போலும்
வான்கயிலை வெற்பின் மகிழ்ந்தார் போலும்
ஆனத்து முன்னெழுத்தாய் நின்றார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 5

6527.காமனையும் கரியாகக் காய்ந்தார் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
சோமனையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலுஞ்
சொல்லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும்
நாமனையும் வேதத்தார் தாமே போலும்
நங்கையோர் பால்மகிழ்ந்த நம்பர் போலும்
ஆமனையுந் திருமுடியார் தாமே போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 6

6528.முடியாமர் மதியரவம் வைத்தார் போலும்
மூவுலகுந் தாமேயாய் நின்றார் போலும்
செடியார் தலைப்பலிகொண் டுழல்வார் போலுஞ்
செல்கதிதான் கண்ட சிவனார் போலும்
கடியார்நஞ் சுண்டிருண்ட கண்டர் போலுங்

கங்காள வேடக் கருத்தர் போலும்
அடியா ரடிமை யுகப்பார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 7

6529. இந்திரத்தை யினிதாக ஈந்தார் போலும்
இமையவர்கள் வந்திறைஞ்சு மிறைவர் போலும்
சுந்தரத்த பொடிதன்னைத் துதைந்தார் போலுந்
தூத்தூய திருமேனித் தோன்றல் போலும்
மந்திரத்தை மனத்துள்ளே வைத்தார் போலும்
மாநாகம் நாணாக வளைத்தார் போலும்
அந்திரத்தே யணியாநஞ் சுண்டார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 8

6530. பிண்டத்தைக் காக்கும் பிரானார் போலும்
பிறவி யிறவி யிலாதார் போலும்
முண்டத்து முக்கண் ணுடையார் போலும்
முழுநீறு பூசும் முதல்வர் போலும்
கண்டத் திறையே கறுத்தார் போலுங்
காளத்தி காரோணம் மேயார் போலும்
அண்டத்துக் கப்புறமாய் நின்றார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 9

6531. ஒருகாலத் தொன்றாகி நின்றார் போலும்
ஊழி பலகண் டிருந்தார் போலும்
பெருகாமே வெள்ளந் தவிர்த்தார் போலும்
பிறப்பிடும்பை சாக்காடொன் றில்லார் போலும்
உருகாதார் உள்ளத்து நில்லார் போலும்
உகப்பார்தம் மனத்தென்றும் நீங்கார் போலும்
அருகாக வந்தென்னை யஞ்சே லென்பார்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 10

6532. நன்றாக நடைபலவும் நவின்றார் போலும்
ஞானப் பெருங்கடற்கோர் நாதர் போலும்
கொன்றாகிக் கொன்றதொன் றுண்டார் போலுங்
கோளரக்கர் கோன்தலைகள் குறைத்தார் போலும்
சென்றார் திரிபுரங்க ளெய்தார் போலுந்
திசையனைத்து மாயனைத்து மானார் போலும்
அன்றாகி லாயிரம் பேரார் போலும்
அணியாரூர்த் திருமூலட் டான னாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 29. திருஆரூர் – திருத்தாண்டகம்

6533. திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத்
தீங்கரும்பின் இன்சுவையைத் தெளிந்த தேறல்
குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை
கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப்
பருமணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப்
பருப்பதத்தி லருங்கலத்தைப் பாவந் தீர்க்கும்
அருமணியை ஆரூரி லம்மான் றன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 1

6534. பொன்னேபோல் திருமேனி யுடையான் தன்னைப்
பொங்குவெண் நூலானைப் புனிதன் தன்னை
மின்னானை மின்னிடையாள் பாகன் தன்னை
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்தான் தன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தத்துவனை யுத்தமனைத் தழல்போல் மேனி
அன்னானை ஆரூரி லம்மான் தன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 2

6535. ஏற்றானை யேழுலகு மானான் தன்னை
யேழ்கடலு மேழ்மலையு மானான் தன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக் கொடு
மழுவாள் கொண்டதோர் கையான் தன்னைக்
காற்றானைத் தீயானை நீரு மாகிக்
கடிகமழும் புன்சடைமேற் கங்கை வெள்ள
ஆற்றானை ஆரூரி லம்மான் தன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 3

6536. முந்திய வல்வினைகள் தீர்ப்பான் தன்னை
மூவாத மேனிமுக் கண்ணி னானைச்
சந்திரனும் வெங்கதிரு மாயி னானைச்
சங்கரனைச் சங்கக் குழையான் தன்னை
மந்திரமும் மறைப்பொருளு மானான் தன்னை
மறுமையும் இம்மையு மானான் தன்னை
அந்திரனை யாரூரி லம்மான் தன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 4

6537. பிறநெறியாய்ப் பீடாகிப் பிஞ்ஞ கனுமாய்ப்
பித்தனாய் பத்தர் மனத்தி னுள்ளே
உறநெறியாய் ஓமமாய் ஈமக் காட்டி
லோரிபல விடநட்ட மாடி னானைத்

துறநெறியாய்த் தூபமாய்த் தோற்ற மாகி
நாற்றமாய் நன்மலர்மே லுறையா நின்ற
அறநெறியை ஆரூரி லம்மான் தன்னை யறியா
தடிநாயே னயர்த்த வாறே. 5

6538. பழகியவல் வினைகள் பாற்று வானைப்
பசுபதியைப் பாவகனைப் பாவந் தீர்க்குங்
குழகனைக் கோளரவொன் றாட்டு வானைக்
கொடுகொட்டி கொண்டதோர் கையான் தன்னை
விழவனை வீரட்டம் மேவி னானை
விண்ணவர்க ளேத்தி விரும்பு வானை
அழகனை ஆரூரி லம்மான் தன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 6

6539. சூளா மணிசேர் முடியான் தன்னைச்
சுண்ணவெண் ணீறணிந்த சோதி யானைக்
கோள்வா யரவ மசைத்தான் தன்னைக் கொல்
புலித்தோ லாடைக் குழகன் தன்னை
நாள்வாயும் பத்தர் மனத்து ளானை
நம்பனை நக்கனை முக்க ணானை,
ஆள்வானை ஆரூரி லம்மான் தன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே. 7

6540. முத்தினை மணிதன்னை மாணிக் கத்தை
மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னைக்
கொத்தினை வயிரத்தைக் கொல்லே றூர்ந்து
கோளரவொன் றாட்டுக் குழகன் தன்னைப்
பத்தனைப் பத்தர் மனத்து ளானைப்
பரிதிபோல் திருமேனி யுடையான் தன்னை
அத்தனை ஆரூரில் அம்மான் தன்னை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 8

6541. பையா டரவங்கை யேந்தி னானைப்
பரிதிபோல் திருமேனிப் பால்நீற் றானை
நெய்யாடு திருமேனி நிமலன் தன்னை
நெற்றிமேல் மற்றொருகண் நிறைவித் தானைச்
செய்யானைச் செழும்பவளத் திரளொப் பானைச்
செஞ்சடைமேல் வெண்திங்கள் சேர்த்தி னானை
ஐயாறு மேயானை ஆரூ ரானை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 9

6542. சீரார் முடிபத் துடையான் தன்னைத்
தேசழியத் திருவிரலாற் சிதைய நூக்கிப்
பேரார் பெருமை கொடுத்தான் தன்னைப்
பெண்ணிரண்டும் ஆணுமாய் நின்றான் தன்னைப்
போரார் புரங்கள் புரள நூறும்
புண்ணியனை வெண்ணீ றணிந்தான் தன்னை
ஆரானை ஆரூரி லம்மான் தன்னை
அறியா தடிநாயேன் அயர்த்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 30. திருஆரூர் – திருத்தாண்டகம்

6543. எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டான்காண்
ஏழ்கடலும் ஏழுலகும் ஆயி னான்காண்
வம்புந்து கொன்றையந்தார் மாலை யான்காண்
வளர்மதிசேர் கண்ணியன்காண் வானோர் வேண்ட
அம்பொன்றால் மூவெயிலு மெரிசெய் தான்காண்
அனலாடி யானஞ்சு மாடி னான்காண்
செம்பொன்செய் மணிமாடத் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 1

6544. அக்குலாம் அரையினன்காண் அடியார்க் கென்றும்
ஆரமுதாய் அண்ணிக்கும் ஐயாற் றான்காண்
கொக்குலாம் பீலியொடு கொன்றை மாலை
குளிர்மதியுங் கூரரவும் நீருஞ் சென்னித்
தொக்குலாஞ் சடையினன்காண் தொண்டர்
செல்லுந் தூநெறிகாண் வானவர்கள் துதிசெய்தேத்தும்
திக்கெலாம் நிறைந்தபுகழ்த் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 2

6545. நீரேறு சடைமுடியெந் நிமலன் தான்காண்
நெற்றிமேல் ஒற்றைக்கண் நிறைவித் தான்காண்
வாரேறு வனமுலையாள் பாகத் தான்காண்
வளர்மதிசேர் சடையான்காண் மாதே வன்காண்
காரேறு முகிலனைய கண்டத் தான்காண்
கல்லாலின் கீழறங்கள் சொல்லி னான்காண்

சீரேறு மணிமாடத் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 3

6546. கானேறு களிற்றுரிவைப் போர்வை யான்காண்
கற்பகங்காண் காலனையன் றுதைசெய் தான்காண்
ஊனேறு முடைதலையிற் பலிகொள் வான்காண்
உத்தமன்காண் ஒற்றியூர் மேவி னான்காண்
ஆனேறொன் றதுவேறும் அண்ணல் தான்காண்
ஆதித்தன் பல்லிறுத்த ஆதி தான்காண்
தேனேறு மலர்ச்சோலைத் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 4

6547. பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்
பெண்ணுருவோ டாணுருவ மாயி னான்காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்
வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 5

6548. சங்கரன்காண் சக்கரம்மாற் கருள்செய் தான்காண்
தருணேந்துசேக ரன்காண் தலைவன் தான்காண்
அங்கமலத் தயன்சிரங்கள் ஐந்தி லொன்றை
அறுத்தவன்காண்அணிபொழில்சூழ் ஐயாற் றான்காண்
எங்கள்பெரு மான்காண்என் னிடர்கள் போக
அருள்செய்யும் இறைவன்காண் இமையோ ரேத்துஞ்
செங்கமல வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 6

6549. நன்றருளித் தீதகற்றும் நம்பி ரான்காண்
நான்மறையோ டாறங்க மாயி னான்காண்
மின்திகழுஞ் சோதியன்காண் ஆதி தான்காண்
வெள்ளேறு நின்றுலவு கொடியி னான்காண்
துன்றுபொழிற் கச்சியே கம்பன் தான்காண்
சோற்றுத் துறையான்காண் சோலை சூழ்ந்த
தென்றலார் மணங்கமழுந் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 7

6550. பொன்நலத்த நறுங்கொன்றைச் சடையி னான்காண்
புகலூரும் பூவணமும் பொருந்தி னான்காண்
மின்நலத்த நுண்ணிடையாள் பாகத் தான்காண்
வேதியன்காண் வெண்புரிநூன் மார்பி னான்காண்
கொன்னலத்த மூவிலைவேல் ஏந்தி னான்காண்
கோலமா நீறணிந்த மேனி யான்காண்
செந்நலத்த வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 8

6551. விண்டவர்தம் புரமூன்று மெரிசெய் தான்காண்
வேலைவிட முண்டிருண்ட கண்டத் தான்காண்
மண்டலத்தி லொளிவளர விளங்கி னான்காண்
வாய்மூரும் மறைக்காடும் மருவி னான்காண்
புண்டரிகக் கண்ணானும் பூவின் மேலைப்
புத்தேளுங் காண்பரிய புராணன் தான்காண்
தெண்டிரைநீர் வயல்புடைசூழ் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 9

6552. செருவளருஞ் செங்கண்மா லேற்றி னான்காண்
தென்னானைக் காவன்காண் தீயில் வீழ
மருவலர்தம் புரமூன்று மெரிசெய் தான்காண்
வஞ்சகர் பாலணுகாத மைந்தன் தான்காண்
அருவரையை யெடுத்தவன்தன் சிரங்கள் பத்தும்
ஐந்நான்கு தோளுநெரிந் தலற அன்று
திருவிரலால் அடர்த்தவன்காண் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 31. திருஆரூர் – திருத்தாண்டகம்

6553. இடர்கெடுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
இலங்கொளிசேர் கங்கைச் சடையா யென்றும்
சுடரொளியா யுள்விளங்கு சோதீ யென்றுந்
தூநீறு சேர்ந்திலங்கு தோளா வென்றும்
கடல்விட முண்டிருண்ட கண்டா வென்றுங்
கலைமான் மறியேந்து கையா வென்றும்

அடல்விடையாய்ஆரமுதே ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 1

6554. செடியேறு தீவினைகள் தீரும் வண்ணஞ்
சிந்தித்தே நெஞ்சமே திண்ண மாகப்
பொடியேறு திருமேனி யுடையா யென்றும் புரந்
தரன்றன் தோள்துணித்த புனிதா வென்றும்
அடியேனை யாளாகக் கொண்டா யென்றும்
அம்மானே ஆரூரெம் மரசே யென்றும்
கடிநாறு பொழிற்கச்சிக் கம்பா வென்றுங்
கற்பகமே யென்றென்றே கதறா நில்லே. 2

6555. நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே. 3

6556. புண்ணியமும் நன்னெறியும் ஆவ தெல்லாம்
நெஞ்சமே யிதுகண்டாய் பொருந்தக் கேள்நீ
நுண்ணியவெண் நூல்கிடந்த மார்பா என்றும்
நுந்தாத வொண்சுடரே யென்று நாளும்
விண்ணியங்கு தேவர்களும் வேதம் நான்கும்
விரைமலர்மேல் நான்முகனும் மாலுங் கூடி
எண்ணரிய திருநாம முடையா யென்றும்
எழிலாரு ராவென்றே ஏத்தா நில்லே. 4

6557. இழைத்தநா ளெல்லை கடப்ப தென்றால்
இரவினொடு நண்பகலு மேத்தி வாழ்த்திப்
பிழைத்ததெலாம் பொறுத்தருள்செய் பெரியோ யென்றும்
பிஞ்ஞகனே மைஞ்ஞவிலுங் கண்டா வென்றும்
அழைத்தலறி அடியேனுன் னரணங் கண்டாய்
அணியாரூர் இடங்கொண்ட அழகா வென்றும்
குழற்சடையெங் கோனென்றுங் கூறு நெஞ்சே
குற்றமில்லை யென்மேல்நான் கூறி னேனே. 5

6558. நீப்பரிய பல்பிறவி நீக்கும் வண்ணம்
நினைந்திருந்தேன் காண்நெஞ்சே நித்த மாகச்
சேப்பிரியா வெல்கொடியி னானே யென்றுஞ்
சிவலோக நெறிதந்த சிவனே யென்றும்
பூப்பிரியா நான்முகனும் புள்ளின் மேலைப்
புண்டரிகக் கண்ணானும் போற்றி யென்னத்
தீப்பிழம்பாய் நின்றவனே செல்வ மல்குந்
திருவாரூ ராவென்றே சிந்தி நெஞ்சே. 6

6559. பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கே னென்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா வென்றும்
பொழிலாரூ ராவென்றே போற்றா நில்லே. 7

6560. மதிதருவன் நெஞ்சமே உஞ்சு போக
வழியாவ திதுகண்டாய் வானோர்க் கெல்லாம்
அதிபதியே ஆரமுதே ஆதீ யென்றும்
அம்மானே ஆரூரெம் ஐயா வென்றும்
துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச்
சூழும்வலஞ் செய்து தொண்டு பாடிக்
கதிர்மதிசேர் சென்னியனே கால காலா
கற்பகமே யென்றென்றே கதறா நில்லே. 8

6561. பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே
பரஞ்சோதீ பண்டரங்கா பாவ நாசா
தேசத் தொளிவிளக்கே தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டானா வென்றும்
நேசத்தை நீபெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோ ரேறே யென்றும்
எம்பெருமா னென்றென்றே யேத்தா நில்லே. 9

6562. புலன்கள்ஐந்தா லாட்டுண்டு போது போக்கிப்
புறம்புறமே திரியாதே போது நெஞ்சே

சலங்கொள்சடை முடியுடைய தலைவா என்றுந்
தக்கன்செய் பெருவேள்வி தகர்த்தா யென்றும்
இலங்கையர்கோன் சிரநெரித்த இறைவா வென்றும்
எழிலாரூ ரிடங்கொண்ட எந்தா யென்றும்
நலங்கொளடி யென்தலைமேல் வைத்தா யென்றும்
நாடோறும் நவின்றேத்தாய் நன்மை யாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 32. திருஆரூர் – போற்றித் திருத்தாண்டகம்

6563. கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 1

6564. வங்கமலி கடல்நஞ்ச முண்டாய் போற்றி
மதயானை யீருரிவை போர்த்தாய் போற்றி
கொங்கலரும் நறுங்கொன்றைத் தாராய் போற்றி
கொல்புலித்தோ லாடைக் குழகா போற்றி
அங்கணனே அமரர்கள்தம் இறைவா போற்றி
யாலமர நீழலறஞ் சொன்னாய் போற்றி
செங்கனகத் தனிக்குன்றே சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 2

6565. மலையான் மடந்தை மணாளா போற்றி
மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி
நிலையாக என்னெஞ்சில் நின்றாய் போற்றி
நெற்றிமே லொற்றைக்கண் ணுடையாய் போற்றி
இலையார்ந்த மூவிலைவே லேந்தீ போற்றி
ஏழ்கடலு மேழ்பொழிலு மானாய் போற்றி
சிலையாலன் றெயிலெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 3

6566. பொன்னியலும் மேனியனே போற்றி போற்றி
பூதப் படையுடையாய் போற்றி போற்றி
மன்னியசீர் மறைநான்கு மானாய் போற்றி
மறியேந்து கையானே போற்றி போற்றி
உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி
உலகுக் கொருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

6567. நஞ்சுடைய கண்டனே போற்றி போற்றி
நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே போற்றி
வெண்மதியங் கண்ணி விகிர்தா போற்றி
துஞ்சிருளி லாட லுகந்தாய் போற்றி
தூநீறு மெய்க்கணிந்த சோதீ போற்றி
செஞ்சடையாய் நின்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 5

6568. சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத் தயனோடு மாலுங் காணா
அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 6

6569. வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி
கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி
குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி
நால்வேதம் ஆறங்க மானாய் போற்றி
செம்பொனே மரகதமே மணியே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 7

6570. உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி
உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி

வள்ளலே போற்றி மணாளா போற்றி
வானவர்கோன் தோள்துணித்த மைந்தா போற்றி
வெள்ளையே றேறும் விகிர்தா போற்றி
மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாய் போற்றி
தெள்ளுநீர்க் கங்கைச் சடையாய் போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 8

6571. பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி
புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி
தேவார்ந்த தேவர்க்குந் தேவே போற்றி
திருமாலுக் காழி யளித்தாய் போற்றி
சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி
சங்கொத்த நீற்றெஞ் சதுரா போற்றி
சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 9

6572. பிரமன்தன் சிரமரிந்த பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய் நின்றாய் போற்றி
கரநான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி
காதலிப்பார்க் காற்ற எளியாய் போற்றி
அருமருந்த தேவர்க் கரசே போற்றி
யன்றரக்கன் ஐந்நான்கு தோளுந் தாளுஞ்
சிரம்நெரித்த சேவடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 33. திருஆரூர்அரநெறி – திருத்தாண்டகம்

6573. பொருங்கைமத கரியுரிவைப் போர்வை யானைப்
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி னானைக்
கரும்புதரு கட்டியையின் னமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
இருங்கனக மதிலாரூர் மூலட் டானத்
தெழுந்தருளி யிருந்தானை யிமையோ ரேத்தும்
அருந்தவனை அரநெறியி லப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 1

6574. கற்பகமு மிருசுடரு மாயி னானைக்
காளத்தி கயிலாய மலையு ளானை
விற்பயிலும் மதனழிய விழித்தான் தன்னை
விசயனுக்கு வேடுவனாய் நின்றான் தன்னைப்
பொற்பமரும் பொழிலாரூர் மூலட் டானம்
பொருந்தியவெம் பெருமானைப் பொருந்தார் சிந்தை
அற்புதனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 2

6575. பாதியொரு பெண்முடிமேற் கங்கை யானைப்
பாசூரும் பரங்குன் றும்மேயான் தன்னை
வேதியனைத் தன்னடியார்க் கெளியான் தன்னை
மெய்ஞ்ஞான விளக்கானை விரையே நாறும்
போதியலும் பொழிலாரூர் மூலட் டானம்
புற்றிடங்கொண் டிருந்தானைப் போற்று வார்கள்
ஆதியனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினை நோய் அறுத்த வாறே. 3

6576. நந்திபணி கொண்டருளும் நம்பன் தன்னை
நாகேச் சரமிடமா நண்ணி னானைச்
சந்திமல ரிட்டணிந்து வானோ ரேத்துந்
தத்துவனைச் சக்கரம்மாற் கீந்தான் தன்னை
இந்துநுழை பொழிலாரூர் மூலட் டான
மிடங்கொண்ட பெருமானை யிமையோர் போற்றும்
அந்தணனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 4

6577. சுடர்ப்பவளத் திருமேனி வெண்ணீற் றானைச்
சோதிலிங்கத் தூங்கானை மாடத் தானை
விடக்கிடுகா டிடமாக வுடையான் தன்னை
மிக்கரண மெரியூட்ட வல்லான் தன்னை
மடற்குலவு பொழிலாரூர் மூலட் டானம்
மன்னியவெம் பெருமானை மதியார் வேள்வி
அடர்த்தவனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 5

6578. தாயவனை யெவ்வுயிர்க்குந் தன்னொப் பில்லாத்
தகுதில்லை நடம்பயிலுந் தலைவன் தன்னை
மாயவனும் மலரவனும் வானோ ரேத்த
மறிகடல்நஞ் சுண்டுகந்த மைந்தன் தன்னை

மேயவனைப் பொழிலாரூர் மூலட் டானம்
விரும்பியவெம் பெருமானை யெல்லாம் முன்னே
ஆயவனை அரநெறியில் அப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 6

6579. பொருளியல்நற் சொற்பதங்க ளாயி னானைப்
புகலூரும் புறம்பயமும் மேயான் தன்னை
மருளியலுஞ் சிந்தையர்க்கு மருந்துதன்னை
மறைக்காடுஞ் சாய்க்காடும் மன்னி னானை
இருளியல்நற் பொழிலாரூர் மூலட் டானத்
தினிதமரும் பெருமானை யிமையோ ரேத்த
அருளியனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 7

6580. காலனைக்கா லாற்காய்ந்த கடவுள் தன்னைக்
காரோணங் கழிப்பாலை மேயான் தன்னைப்
பாலனுக்குப் பாற்கடலன் றீந்தான் தன்னைப்
பணியுகந்த அடியார்கட் கினியான் தன்னைச்
சேலுகளும் வயலாரூர் மூலட் டானஞ்
சேர்ந்திருந்த பெருமானைப் பவள மீன்ற
ஆலவனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 8

6581. ஒப்பொருவ ரில்லாத ஒருவன் தன்னை
ஒத்தூரு முறையூரும் மேவி னானை
வைப்பவனை மாணிக்கச் சோதி யானை
மாருதமுந் தீவெளிநீர் மண்ணா னானைப்
பொ. . . . 9

6582. பகலவன்தன் பல்குத்த படிறன் தன்னைப்
பராய்த்துறைபைஞ் ஞீலியிடம் பாவித் தானை
இகலவனை இராவணனை யிடர்செய் தானை
யேத்தாதார் மனத்தகத்துள் இருளா னானைப்
புகழ்நிலவு பொழிலாரூர் மூலட் டானம்
பொருந்தியவெம் பெருமானைப் போற்றார் சிந்தை
அகலவனை அரநெறியி லப்பன் தன்னை
யடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 34. திருஆரூர் – திருத்தாண்டகம்

6583. ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும்விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 1

6584. மலையார்பொற் பாவையொடு மகிழ்ந்த நாளோ
வானவரை வலியமுத மூட்டி யந்நாள்
நிலைபேறு பெறுவித்து நின்ற நாளோ
நினைப்பரிய தழற்பிழம்பாய் நிமிர்ந்த நாளோ
அலைசாமே அலைகடல்நஞ் சுண்ட நாளோ
அமரர்கணம் புடைசூழ விருந்த நாளோ
சிலையால்முப் புரமெரித்த முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 2

6585. பாடகஞ்சேர் மெல்லடிநற் பாவை யாளும்
நீயும்போய்ப் பார்த்தனது பலத்தைக் காண்பான்
வேடனாய் வில்வாங்கி யெய்த நாளோ
விண்ணவர்க்குங் கண்ணவனாய் நின்ற நாளோ
மாடமொடு மாளிகைகள் மல்கு தில்லை
மணிதிகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தை
ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 3

6586. ஓங்கி உயர்ந்தெழுந்து நின்ற நாளோ
ஒருகம்போல் ஏழுகமாய் நின்ற நாளோ
தாங்கியசீர்த் தலையான வானோர் செய்த
தக்கன்தன் பெருவேள்வி தகர்த்த நாளோ
நீங்கியநீர்த் தாமரையான் நெடுமா லோடு
நில்லாயெம் பெருமானே யென்றங் கேத்தி
வாங்கிமதி வைப்பதற்கு முன்னோ பின்னோ
வளராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 4

6587. பாலனாய் வளர்ந்திலாப் பான்மை யானே
பணிவார்கட் கங்கங்கே பற்றா னானே
நீலமா மணிகண்டத் தெண்டோ ளானே

நெருநலையாய் இன்றாகி நாளை யாகுஞ்
சீலமே சிவலோக நெறியே யாகுஞ்
சீர்மையே கூர்மையே குணமே நல்ல
கோலம்நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ
குளிராரூர் கோயிலாக் கொண்ட நாளே. 5

6588. திறம்பலவும் வழிகாட்டிச் செய்கை காட்டிச்
சிறியையாய்ப் பெரியையாய் நின்ற நாளோ
மறம்பலவு முடையாரை மயக்கந் தீர்த்து
மாமுனிவர்க் கருள்செய்தங் கிருந்த நாளோ
பிறங்கியசீர்ப் பிரமன்தன் தலைகை யேந்திப்
பிச்சையேற் றுண்டுழன்று நின்ற நாளோ
அறம்பலவு முரைப்பதற்கு முன்னோ பின்னோ
அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 6

6589. நிலந்தரத்து நீண்டுருவ மான நாளோ
நிற்பனவும் நடப்பனவும் நீயே யாகிக்
கலந்துரைக்கக் கற்பகமாய் நின்ற நாளோ
காரணத்தால் நாரணனைக் கற்பித் தன்று
வலஞ்சுருக்கி வல்லசுரர் மாண்டு வீழ
வாசுகியை வாய்மடுத்து வானோ ருய்யச்
சலந்தரனைக் கொல்வதற்கு முன்னோ பின்னோ
தண்ணாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 7

6590. பாதத்தால் முயலகனைப் பாது காத்துப்
பாரகத்தே பரஞ்சுடராய் நின்ற நாளோ
கீதத்தை மிகப்பாடும் அடியார்க் கென்றுங்
கேடிலா வானுலகங் கொடுத்த நாளோ
பூதத்தான் பொருநீலி புனிதன் மேவிப்
பொய்யுரையா மறைநால்வர் விண்ணோர்க் கென்றும்
வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ
விழவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 8

6591. புகையெட்டும் போக்கெட்டும் புலன்க ளெட்டும்
பூதலங்க ளவையெட்டும் பொழில்க ளெட்டும்
கலையெட்டுங் காப்பெட்டுங் காட்சி யெட்டுங்
கழற்சே வடியடைந்தார் களைக ளெட்டும்
நகையெட்டும் நாளெட்டும் நன்மை யெட்டும்
நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்க ளெட்டும்
திகையெட்டுந் தெரிப்பதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.

6592.ஈசனா யுலகேழும் மலையு மாகி
இராவணனை யீடழித்திட் டிருந்த நாளோ
வாசமலர் மகிழ்தென்ற லான நாளோ
மதயானை யுரிபோர்த்து மகிழ்ந்த நாளோ
தாதுமலர் சண்டிக்குக் கொடுத்த நாளோ
சகரர்களை மறித்திட்டாட் கொண்ட நாளோ
தேசமுமை யறிவதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருவெண்காடு – திருத்தாண்டகம்

6593.தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச்
சூலங்கை யேந்தியோர் சுழல்வாய் நாகம்
பூண்டு பொறியரவங் காதிற் பெய்து
பொற்சடைக ளவைதாழப் புரிவெண் ணூலர்
நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி
நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார்
வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 1

6594.பாதந் தனிப்பார்மேல் வைத்த பாதர்
பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர்
ஏதம் படாவண்ணம் நின்ற பாதர்
ஏழுலகு மாய்நின்ற ஏக பாதர்
ஓதத் தொலிமடங்கி யூருண் டேறி
யொத்துலக மெல்லா மொடுங்கி யபின்
வேதத் தொலிகொண்டு வீணை கேட்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 2

6595.நென்னலையோ ரோடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேனென் றில்லே புக்கேன்
அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்ளார்
அருகே வருவார்போல் நோக்கு கின்றார்
நுந்நிலைமை யேதோநும் மூர்தா னேதோ
வென்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்

மென்முலையார் கூடி விரும்பி யாடும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 3

6596. ஆகத் துமையடக்கி யாறு சூடி
ஐயவா யரவசைத்தங் கானே றேறிப்
போகம் பலவுடைத்தாய்ப் பூதஞ் சூழப்
புலித்தோ லுடையாப் புகுந்து நின்றார்
பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கிப்
பரிசழித்தென் வளைகவர்ந்தார் பாவி யேனை
மேக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 4

6597. கொள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங்
கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட
உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல
உழிதருவர் நான்தெரிய மாட்டேன் மீண்டேன்
கள்ள விழிவிழிப்பர் காணாக் கண்ணாற்
கண்ணுளார் போலே கரந்து நிற்பர்
வெள்ளச் சடை முடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 5

6598. தொட்டிலங்கு சூலத்தர் மழுவா ளேந்திச்
சுடர்க்கொன்றைத் தாரணிந்து சுவைகள் பேசிப்
பட்டிவெள் ளேறேறிப் பலியுங் கொள்ளார்
பார்ப்பாரைப் பரிசழிப்பா ரொக்கின் றாரால்
கட்டிலங்கு வெண்ணீற்றர் கனலப் பேசிக்
கருத்தழித்து வளைகவர்ந்தார் காலை மாலை
விட்டிலங்கு சடைமுடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 6

6599. பெண்பா லொருபாகம் பேணா வாழ்க்கைக்
கோள்நாகம் பூண்பனவும் நாணாஞ் சொல்லார்
உண்பர ருறங்குவா ரொவ்வா நங்கா
யுண்பதுவும் நஞ்சன்றே லோபி யுண்ணார்
பண்பால் அவிர்சடையர் பற்றி நோக்கிப்
பாலைப் பரிசழியப் பேசு கின்றார்
விண்பால் மதிசூடி வேத மோதி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 7

6600. மருதங்க ளாமொழிவர் மங்கை யோடு
வானவரும் மாலயனங் கூடித் தங்கள்
சுருதங்க ளாற்றுதித்துத் தூநீ ராட்டித்
தோத்திரங்கள் பலசொல்லித் தூபங் காட்டிக்
கருதுங்கொ லெம்பெருமான் செய்குற் றேவல்
என்பார்க்கு வேண்டும் வரங்கொ டுத்து
விகிர்தங்க ளாநடப்பர் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 8

6601. புள்ளானும் நான்முகனும் புக்கும் போந்துங்
காணார் பொறியழலாய் நின்றான் தன்னை
உள்ளானை யொன்றல்லா உருவி னானை
யுலகுக் கொருவிளக்காய் நின்றான் தன்னைக்
கள்ளேந்து கொன்றைதூய்க் காலை மூன்றும்
ஓவாமே நின்று தவங்கள் செய்த
வெள்ளானை வேண்டும் வரங்கொ டுப்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 9

6602. மாக்குன் றெடுத்தோன்தன் மைந்த னாகி
மாவேழம் வில்லா மதித்தான் தன்னை
நோக்குந் துணைத்தேவ ரெல்லாம் நிற்க
நொடிவ்வரையில் நோவ விழித்தான் தன்னைக்
காக்குங் கடலிலங்கைக் கோமான் தன்னைக்
கதிர்முடியுங் கண்ணும் பிதுங்க வூன்றி
வீக்கந் தவிர்த்த விரலார் போலும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 36. திருப்பழனம் – திருத்தாண்டகம்

6603. அலையார் கடல்நஞ்ச முண்டார் தாமே
அமரர்களுக் கருள்செய்யு மாதி தாமே
கொலையாய கூற்ற முதைத்தார் தாமே
கொல்வேங்கைத் தோலொன் றசைத்தார் தாமே
சிலையால் புரமூன் றெரித்தார் தாமே
தீநோய் களைந்தென்னை யாண்டார் தாமே

பலிதேர்ந் தழகாய பண்பர் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 1

6604. வெள்ள மொருசடைமே லேற்றார் தாமே
மேலார்கண் மேலார்கண் மேலார் தாமே
கள்ளங் கடிந்தென்னை யாண்டார் தாமே
கருத்துடைய பூதப் படையார் தாமே
உள்ளத் துவகை தருவார் தாமே
யுறுநோய் சிறுபிணிகள் தீர்ப்பார் தாமே
பள்ளப் பரவைநஞ் சுண்டார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 2

6605. இரவும் பகலுமாய் நின்றார் தாமே
எப்போதும் என்நெஞ்சத் துள்ளார் தாமே
அரவ மரையி லசைத்தார் தாமே
அனலாடி யங்கை மறித்தார் தாமே
குரவங் கமழுங் குற்றாலர் தாமே
கோலங்கண் மேன்மே லுகப்பார் தாமே
பரவு மடியார்க்குப் பாங்கர் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 3

6606. மாறில் மதில்மூன்று மெய்தார் தாமே
வரியரவங் கச்சாக ஆர்த்தார் தாமே
நீறு சேர்திருமேனி நிமலர் தாமே
நெற்றி நெருப்புக்கண் வைத்தார் தாமே
ஏறுகொடுஞ் சூலக் கையார் தாமே
யென்பா பரண மணிந்தார் தாமே
பாறுண் தலையிற் பலியார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 4

6607. சீரால் வணங்கப் படுவார் தாமே
திசைக்கெல்லாந் தேவாகி நின்றார் தாமே
ஆரா அமுதமு மானார் தாமே
யளவில் பெருமை யுடையார் தாமே
நீரார் நியம முடையார் தாமே நீள்வரை
வில்லாக வளைத்தார் தாமே
பாரார் பரவப் படுவார் தாமே பழன
நகரெம் பிரானார் தாமே. 5

6608. காலனுயிர் வௌவ வல்லார் தாமே
கடிதோடும் வெள்ளை விடையார் தாமே
கோலம் பலவு முகப்பார் தாமே
கோள்நாக நாணாகப் பூண்டார் தாமே
நீலம் பொலிந்த மிடற்றார் தாமே
நீள்வரையி னுச்சி யிருப்பார் தாமே
பால விருத்தரு மானார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 6

6609. ஏய்ந்த வுமைநங்கை பங்கர் தாமே
யேழூழிக் கப்புறமாய் நின்றார் தாமே
ஆய்ந்து மலர்தூவ நின்றார் தாமே
அளவில் பெருமை யுடையார் தாமே
தேய்ந்த பிறைசடைமேல் வைத்தார் தாமே
தீவா யரவதனை யார்த்தார் தாமே
பாய்ந்த படர்கங்கை யேற்றார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 7

6610. ஓராதா ருள்ளத்தில் நில்லார் தாமே
யுள்ளூறும் அன்பர் மனத்தார் தாமே
பேராதென் சிந்தை யிருந்தார் தாமே
பிறர்க்கென்றுங் காட்சிக் கரியார் தாமே
ஊராரு மூவுலகத் துள்ளார் தாமே
யுலகை நடுங்காமற் காப்பார் தாமே
பாரரார் முழவத் திடையார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 8

6611. நீண்டவர்க்கோர் நெருப்புருவ மானார் தாமே
நேரிழையை யொருபாகம் வைத்தார் தாமே
பூண்டரவைப் புலித்தோல்மே லார்த்தார் தாமே
பொன்னிறத்த வெள்ளச் சடையார் தாமே
ஆண்டுலகே ழனைத்தினையும் வைத்தார் தாமே
அங்கங்கே சிவமாகி நின்றார் தாமே
பாண்டவரிற் பார்த்தனுக்குப் பரிந்தார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 9

6612. விடையேறி வேண்டுலகத் திருப்பார் தாமே
விரிகதிரோன் சோற்றுத் துறையார் தாமே

புடைசூழத் தேவர் குழாத்தார் தாமே
பூந்துருத்தி நெய்த்தானம் மேயார் தாமே
அடைவே புனல்சூழ் ஐயாற்றார் தாமே
அரக்கனையு மாற்ற லழித்தார் தாமே
படையாப் பல்பூத முடையார் தாமே
பழன நகரெம் பிரானார் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 37. திருவையாறு – திருத்தாண்டகம்

6613. ஆரார் திரிபுரங்கள் நீறா நோக்கும்
அனலாடி ஆரமுதே யென்றேன் நானே
கூரார் மழுவாட் படையொன் றேந்திக்
குறட்பூதப் பல்படையா யென்றேன் நானே
பேரா யிரமுடையா யென்றேன் நானே
பிறைசூடும் பிஞ்ஞகனே யென்றேன் நானே
ஆரா அமுதேயென் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 1

6614. தீவாயின் முப்புரங்கள் நீறா நோக்குந்
தீர்த்தா புராணனே யென்றேன் நானே
மூவா மதிசூடி யென்றேன் நானே
முதல்வாமுக் கண்ணனே யென்றேன் நானே
ஏவார் சிலையானே யென்றேன் நானே
யிடும்பைக் கடல்நின்று மேற வாங்கி
ஆவாவென் றருள்புரியும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 2

6615. அஞ்சுண்ண வண்ணனே யென்றேன் நானே
அடியார்கட் காரமுதே யென்றேன் நானே
நஞ்சணி கண்டனே யென்றேன் நானே
நாவலர்கள் நான்மறையே யென்றேன் நானே
நெஞ்சுணர வுள்புக் கிருந்த போது
நிறையு மமுதமே யென்றேன் நானே
அஞ்சாதே யாள்வானே ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 3

6616. தொல்லைத் தொடுகடலே யென்றேன் நானே
துலங்கும் இளம்பிறையா யென்றேன் நானே
எல்லை நிறைந்தானே யென்றேன் நானே
ஏழ்நரம்பின் இன்னிசையா யென்றேன் நானே
அல்லற் கடல்புக் கழுந்து வேனை
வாங்கியருள் செய்தா யென்றேன் நானே
எல்லையாம் ஐயாறா என்றேன் நானே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 4

6617. இண்டைச் சடைமுடியா யென்றேன் நானே
யிருசுடர் வானத்தா யென்றேன் நானே
தொண்டர் தொழப்படுவா யென்றேன் நானே
துருத்திநெய்த் தானத்தா யென்றேன் நானே
கண்டங் கறுத்தானே யென்றேன் நானே
கனலாகுங் கண்ணானே யென்றேன் நானே
அண்டத்துக் கப்பாலாம் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 5

6618. பற்றார் புரமெரித்தா யென்றேன் நானே
பசுபதீ பண்டரங்கா என்றேன் நானே
கற்றார்கள் நாவினா யென்றேன் நானே
கடுவிடையொன் றூர்தியா யென்றேன் நானே
பற்றானார் நெஞ்சுளா யென்றேன் நானே
பார்த்தற் கருள்செய்தா யென்றேன் நானே
அற்றார்க் கருள்செய்யும் ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

6619. விண்ணோர் தலைவனே யென்றேன் நானே
விளங்கு மிளம்பிறையா யென்றேன் நானே
எண்ணா ரெயிலெரித்தா யென்றேன் நானே
யேகம்பம் மேயானே யென்றேன் நானே
பண்ணார் மறைபாடி யென்றேன் நானே
பசுபதீ பால்நீற்றா யென்றேன் நானே
அண்ணாவை யாறனே யென்றேன் நானே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே 7

6620. அவனென்று நானுன்னை யஞ்சா தேனை
யல்லல் அறுப்பானே யென்றேன் நானே

சிவனென்று நானுன்னை யெல்லாஞ் சொல்லச்
செல்வந் தருவானே யென்றேன் நானே
பவனாகி யென்னுள்ளத் துள்ளே நின்று
பண்டை வினையறுப்பா யென்றேன் நானே
அவனென்றே யாதியே ஐயா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 8

6621. கச்சியே கம்பனே யென்றேன் நானே
கயிலாயா காரோணா என்றேன் நானே
நிச்சன் மணாளனே யென்றேன் நானே
நினைப்பார் மனத்துளா யென்றேன் நானே
உச்சம்போ தேறேறீ யென்றேன் நானே
உள்குவா ருள்ளத்தா யென்றேன் நானே
அச்சம் பணிதீர்க்கு மையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 9

6622. வில்லாடி வேடனே யென்றேன் நானே
வெண்ணீறு மெய்க்கணிந்தா யென்றேன் நானே
சொல்லாய சூழலா யென்றேன் நானே
சுலாவாய தொல்நெறியே யென்றேன் நானே
எல்லாமா யென்னுயிரே யென்றேன் நானே
யிலங்கையர்கோன் தோளிறுத்தா யென்றேன் நானே
அல்லா வினைதீர்க்கு மையா றன்னே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 38. திருவையாறு - திருத்தாண்டகம்

6623. ஓசை யொலியெலா மானாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலா மானாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே
பேசப் பெரிதும் இனியாய் நீயே
பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலா மானாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 1

6624. நோக்கரிய திருமேனி யுடையாய் நீயே
நோவாமே நோக்கருள வல்லாய் நீயே
காப்பரிய ஐம்புலனுங் காத்தாய் நீயே
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தாய் நீயே
ஆர்ப்பரிய மாநாக மார்த்தாய் நீயே
அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தீர்ப்பரிய வல்வினை நோய் தீர்ப்பாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 2

6625. கனத்தகத்துக் கடுஞ்சுடராய் நின்றாய் நீயே
கடல்வரைவா னாகாய மானாய் நீயே
தனத்தகத்துத் தலைகலனாக் கொண்டாய் நீயே
சார்ந்தாரைத் தகைந்தாள வல்லாய் நீயே
மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே
மலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
சினத்திருந்த திருநீல கண்டன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 3

6626. வானுற்ற மாமலைக ளானாய் நீயே வடகயிலை
மன்னி யிருந்தாய் நீயே
ஊனுற்ற வொளிமழுவாட் படையாய் நீயே
ஒளிமதியோ டரவுபுனல் வைத்தாய் நீயே
ஆனுற்ற ஐந்தும் அமர்ந்தாய் நீயே
அடியானென் றடியென்மேல் வைத்தாய் நீயே
தேனுற்ற சொல்மடவாள் பங்கன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 4

6627. பெண்ணான் பிறப்பிலியாய் நின்றாய் நீயே
பெரியார்கட் கெல்லாம் பெரியாய் நீயே
உண்ணா வருநஞ்ச முண்டாய் நீயே
ஊழி முதல்வனாய் நின்றாய் நீயே
கண்ணா யுலகெலாங் காத்தாய் நீயே
கழற்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்ணார் மழுவாட் படையாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 5

6628. உற்றிருந்த உணர்வெலா மானாய் நீயே
உற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய் நீயே
கற்றிருந்த கலைஞான மானாய் நீயே
கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்றாய் நீயே

பெற்றிருந்த தாய்அவளின் நல்லாய் நீயே
பிரானா யடியென்மேல் வைத்தாய் நீயே
செற்றிருந்த திருநீல கண்டன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 6

6629. எல்லா வுலகமு மானாய் நீயே
யேகம்பம் மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 7

6630. ஆவினில் ஐந்து மமர்ந்தாய் நீயே
அளவில் பெருமை யுடையாய் நீயே
பூவினில் நாற்றமாய் நின்றாய் நீயே
போர்க்கோலங் கொண்டெயி லெய்தாய் நீயே
நாவில் நடுவுரையாய் நின்றாய் நீயே
நண்ணி யடியென்மேல் வைத்தாய் நீயே
தேவ ரறியாத தேவன் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 8

6631. எண்டிசைக்கும் ஒண்சுடராய் நின்றாய் நீயே
ஏகம்பம் மேய இறைவன் நீயே
வண்டிசைக்கும் நறுங்கொன்றைத் தாராய் நீயே
வாரா வுலகருள வல்லாய் நீயே
தொண்டிசைத்துன் அடிபரவ நின்றாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்சிலைக்கோர் சரங்கூட்ட வல்லாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 9

6632. விண்டார் புரமூன்று மெய்தாய் நீயே
விண்ணவர்க்கும் மேலாகி நின்றாய் நீயே
கண்டாரைக் கொல்லுநஞ் சுண்டாய் நீயே
காலங்க ளூழியாய் நின்றாய் நீயே
தொண்டாய் அடியேனை ஆண்டாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்டோள்விட் டெரியாட லுகந்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ. 10

6633. ஆரு மறியா இடத்தாய் நீயே
ஆகாயந் தேருர வல்லாய் நீயே
பேரும் பெரிய இலங்கை வேந்தன்
பெரிய முடிபத் திறுத்தாய் நீயே
ஊரும் புரமூன்றும் அட்டாய் நீயே
ஒண்தா மரையானும் மாலுங்கூடித் தேரும்
அடியென்மேல் வைத்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 39. திருமழபாடி – திருத்தாண்டகம்

6634. நீறேறு திருமேனி யுடையான் கண்டாய்
நெற்றிமே லொற்றைக்கண் நிறைந்தான் கண்டாய்
கூறாக உமைபாகங் கொண்டான் கண்டாய்
கொடியவிட முண்டிருண்ட கண்டன் கண்டாய்
ஏறேறி யெங்குந் திரிவான் கண்டாய்
ஏழுலகு மேழ்மலையு மானான் கண்டாய்
மாறானார் தம்அரணம் அட்டான் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 1

6635. கொக்கிறகு சென்னி யுடையான் கண்டாய்
கொல்லை விடையேறுங் கூத்தன் கண்டாய்
அக்கரைமே லாட லுடையான் கண்டாய்
அனலங்கை யேந்திய ஆதி கண்டாய்
அக்கோ டரவ மணிந்தான் கண்டாய்
அடியார்கட் காரமுத மானான் கண்டாய்
மற்றிருந்த கங்கைச் சடையான் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 2

6636. நெற்றித் தனிக்க ணுடையான் கண்டாய்
நேரிழையோர் பாகமாய் நின்றான் கண்டாய்
பற்றிப்பாம் பாட்டும் படிறன் கண்டாய்
பல்லூர் பலிதேர் பரமன் கண்டாய்
செற்றார் புரமூன்றுஞ் செற்றான் கண்டாய்
செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய்

மற்றொரு குற்ற மிலாதான் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 3

6637. அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய்
அண்டத்துக் கப்பாலாய் நின்றான் கண்டாய்
கொலையான கூற்றங் குமைத்தான் கண்டாய்
கொல்வேங்கைத் தோலொன் றுடுத்தான் கண்டாய்
சிலையாற் றிரிபுரங்கள் செற்றான் கண்டாய்
செழுமா மதிசென்னி வைத்தான் கண்டாய்
மலையார் மடந்தை மணாளன் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 4

6638. உலந்தார்தம் அங்கம் அணிந்தான் கண்டாய்
உவகையோ டின்னருள்கள் செய்தான் கண்டாய்
நலந்திகழுங் கொன்றைச் சடையான் கண்டாய்
நால்வேதம் ஆறங்க மானான் கண்டாய்
உலந்தார் தலைகலனாக் கொண்டான் கண்டாய்
உம்பரார் தங்கள் பெருமான் கண்டாய்
மலர்ந்தார் திருவடியென் தலைமேல் வைத்த
மழபாடி மன்னும் மணாளன் றானே. 5

6639. தாமரையான் தன்தலையைச் சாய்த்தான் கண்டாய்
தகவுடையார் நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய்
பூமலரான் ஏத்தும் புனிதன் கண்டாய்
புணர்ச்சிப் பொருளாகி நின்றான் கண்டாய்
ஏமருவு வெஞ்சிலையொன் றேந்தி கண்டாய்
இருளார்ந்த கண்டத் திறைவன் கண்டாய்
மாமருவுங் கலைகையி லேந்தி கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 6

5640. நீராகி நெடுவரைக ளானான் கண்டாய்
நிழலாகி நீள்விசும்பு மானான் கண்டாய்
பாராகிப் பௌவமே ழானான் கண்டாய்
பகலாகி வானாகி நின்றான் கண்டாய்
ஆரேனுந் தன்னடியார்க் கன்பன் கண்டாய்
அணுவாகி ஆதியாய் நின்றான் கண்டாய்
வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 7

6641. பொன்னியலுந் திருமேனி உடையான் கண்டாய்
பூங்கொன்றை தாரரோன் றணிந்தான் கண்டாய்
மின்னியலும் வார்சடையெம் பெருமான் கண்டாய்
வேழத்தி னுரிவிரும்பி போர்த்தான் கண்டாய்
தன்னியல்பார் மற்றொருவ ரில்லான் கண்டாய்
தாங்கரிய சிவந்தானாய் நின்றான் கண்டாய்
மன்னிய மங்கையோர் கூறன் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 8

6642. ஆலாலம் உண்டுகந்த ஆதி கண்டாய்
அடையலர்தம் புரமூன்று மெய்தான் கண்டாய்
காலாலக் காலனையுங் காய்ந்தான் கண்டாய்
கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்
பாலாரும் மொழிமடவாள் பாகன் கண்டாய்
பசுவேறிப் பலிதிரியும் பண்பன் கண்டாய்
மாலாலு மறிவரிய மைந்தன் கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 9

6643. ஒருசுடரா யுலகேழு மானான் கண்டாய்
ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்
விரிசுடராய் விளங்கொளியாய் நின்றான் கண்டாய்
விழவொலியும் வேள்வொலியு மானான் கண்டாய்
இருசுடர்மீ தோடா இலங்கைக் கோனை
யீடழிய இருபதுதோ ளிறுத்தான் கண்டாய்
மருசுடரின் மாணிக்கக் குன்று கண்டாய்
மழபாடி மன்னும் மணாளன் றானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 40. திருமழபாடி – திருத்தாண்டகம்

6644. அலையடுத்த பெருங்கடல்நஞ் சமுதா வுண்டு
அமரர்கள்தந் தலைகாத்த ஐயர் செம்பொன்
சிலையெடுத்து மாநாக நெருப்புக் கோத்துத்
திரிபுரங்கள் தீயிட்ட செல்வர் போலும்
நிலையடுத்த பசும்பொன்னால் முத்தால் நீண்ட
நிரைவயிரப் பலகையாற் குவையார்த் துற்ற

மலையடுத்த மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 1

6645. அறைகலந்த குழல்மொந்தை வீணை யாழும்
அந்தரத்திற் கந்தருவ ரமர ரேத்த
மறைகலந்த மந்திரமும் நீருங் கொண்டு
வழிபட்டார் வானாளக் கொடுத்தி யன்றே
கறைகலந்த பொழிற்கச்சிக் கம்பம் மேய
கனவயிரத் திரள்தூணே கலிசூழ் மாடம்
மறைகலந்த மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 2

6646. உரங்கொடுக்கு மிருண்மெய்யர் மூர்க்கர் பொல்லா
ஊத்தைவாய்ச் சமணர்தமை யுறவாக் கொண்ட
பரங்கெடுத்திங் கடியேனை யாண்டு கொண்ட
பவளத்தின் திரள்தூணே பசும்பொன் முத்தே
புரங்கெடுத்துப் பொல்லாத காமன் ஆகம்
பொடியாக விழித்தருளிப் புவியோர்க் கென்றும்
வரங்கொடுக்கும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 3

6647. ஊனிகந்தூ ணுறிகையர் குண்டர் பொல்லா
வூத்தைவாய்ச் சமணருற வாகக் கொண்டு
ஞானகஞ்சேர்ந் துள்ளவயி ரத்தை நண்ணா
நாயேனைப் பொருளாக ஆண்டு கொண்ட
மீனகஞ்சேர் வெள்ளநீர் விதியாற் சூடும்
வேந்தனே விண்ணவர்தம் பெருமான் மேக
வானகஞ்சேர் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 4

6648. சிரமேற்ற நான்முகன்றன் தலையும் மற்றைத்
திருமால்தன் செழுந்தலையும் பொன்றச் சிந்தி
உரமேற்ற இரவிபல் தகர்த்துச் சோமன்
ஒளிர்கலைகள் படவுழக்கி யுயிரை நல்கி
நரையேற்ற விடையேறி நாகம் பூண்ட
நம்பியையே மறைநான்கும் ஓல மிட்டு
வரமேற்கும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 5

6649. சினந்திருத்துஞ் சிறுப்பெரியார் குண்டர் தங்கள்
செதுமதியார் தீவினைக்கே விழுந்தேன் தேடிப்
புனந்திருத்தும் பொல்லாத பிண்டி பேணும்
பொறியிலியேன் தனைப்பொருளா ஆண்டு கொண்டு
தனந்திருத்து மவர்திறத்தை யொழியப் பாற்றித்
தயாமூல தன்வழி யெனக்கு நல்கி
மனந்திருந்தும் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 6

6650. சுழித்துணையாம் பிறவிவழித் துக்கம் நீக்குஞ்
சுருள்சடையெம் பெருமானே தூய தெண்ணீர்
இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும்
என்துணையே யென்னுடைய பெம்மான் தம்மான்
பழிப்பரிய திருமாலு மயனுங் காணாப்
பரிதியே சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையாம் மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே. 7, 8, 9, 10

திருச்சிற்றம்பலம்

## 41. திருநெய்த்தானம் – திருத்தாண்டகம்

6651. வகையெலா முடையாயும் நீயே யென்றும்
வான்கயிலை மேவினாய் நீயே யென்றும்
மிகையெலாம் மிக்காயும் நீயே யென்றும்
வெண்காடு மேவினாய் நீயே யென்றும்
பகையெலாந் தீர்த்தாண்டாய் நீயே யென்றும்
பாசூ ரமர்ந்தாயும் நீயே யென்றும்
திகையெலாந் தொழச்செல்வாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 1

6652. ஆர்த்த எனக்கன்பன் நீயே யென்றும்
ஆதிக் கயிலாயன் நீயே யென்றும்
கூர்த்த நடமாடி நீயே யென்றுங்
கோடிகா மேய குழகா வென்றும்
பார்த்தற் கருள்செய்தாய் நீயே யென்றும்
பழையனூர் மேவிய பண்பா வென்றும்
தீர்த்தன் சிவலோகன் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 2

6653. அல்லாய்ப் பகலானாய் நீயே யென்றும்
ஆதிக் கயிலாயன் நீயே யென்றும்

கல்லா லமர்ந்தாயும் நீயே யென்றுங்
காளத்திக் கற்பகமும் நீயே யென்றும்
சொல்லாய்ப் பொருளானாய் நீயே யென்றுஞ்
சோற்றுத் துறையுறைவாய் நீயே யென்றும்
செல்வாய்த் திருவானாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 3

6654. மின்னே ரிடைபங்கன் நீயே யென்றும்
வெண்கயிலை மேவினாய் நீயே யென்றும்
பொன்னேர் சடைமுடியாய் நீயே யென்றும்
பூத கணநாதன் நீயே யென்றும்
என்னா விரதத்தாய் நீயே யென்றும்
ஏகம்பத் தென்னீசன் நீயே யென்றும்
தென்னூர்ப் பதியுளாய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 4

6655. முந்தி யிருந்தாயும் நீயே யென்றும்
முன்கயிலை மேவினாய் நீயே யென்றும்
நந்திக் கருள்செய்தாய் நீயே யென்றும்
நடமாடி நள்ளாறன் நீயே யென்றும்
பந்திப் பரியாயும் நீயே யென்றும்
பைஞ்ஞீலி மேவினாய் நீயே யென்றும்
சிந்திப் பரியாயும் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 5

6656. தக்கா ரடியார்க்கு நீயே யென்றுந்
தலையார் கயிலாயன் நீயே யென்றும்
அக்காரம் பூண்டாயும் நீயே யென்றும்
ஆக்கூரில் தான்றோன்றி நீயே யென்றும்
புக்காய ஏழுலகும் நீயே யென்றும்
புள்ளிருக்கு வேளூராய் நீயே யென்றும்
தெக்கார மாகோணத் தானே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 6

6657. புகழும் பெருமையாய் நீயே யென்றும்
பூங்கயிலை மேவினாய் நீயே யென்றும்
இகழுந் தலையேந்தி நீயே யென்றும்
இராமேச் சுரத்தின்பன் நீயே யென்றும்
அகழும் மதிலுடையாய் நீயே யென்றும்
ஆலவாய் மேவினாய் நீயே யென்றும்
திகழும் மதிசூடி நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் நெஞ்சு ளாயே. 7

6658. வானவர்க்கு மூத்திளையாய் நீயே யென்றும் வானக்
கயிலாயன் நீயே யென்றும்
கான நடமாடி நீயே யென்றுங் கடவூரில்
வீரட்டன் நீயே யென்றும்
ஊனார் முடியறுத்தாய் நீயே யென்றும் ஒற்றியூ
ராரூராய் நீயே யென்றும்
தேனா யமுதானாய் நீயே யென்றும் நின்றநெய்த்
தானவென் னெஞ்சு ளாயே. 8

6659. தந்தைதா யில்லாதாய் நீயே யென்றுந்
தலையார் கயிலாயன் நீயே யென்றும்
எந்தாயெம் பிரானானாய் நீயே யென்றும்
ஏகம்பத் தென்னீசன் நீயே யென்றும்
முந்திய முக்கணாய் நீயே யென்றும்
மூவலூர் மேவினாய் நீயே யென்றும்
சிந்தையாய் தேனுராய் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 9

6660. மறித்தான் வலிசெற்றாய் நீயே யென்றும்
வான்கயிலை மேவினாய் நீயே யென்றும்
வெறுத்தார் பிறப்பறுப்பாய் நீயே யென்றும்
வீழி மிழலையாய் நீயே யென்றும்
அறத்தாய் அமுதீந்தாய் நீயே யென்றும்
யாவர்க்குந் தாங்கொணா நஞ்ச முண்டு
பொறுத்தாய் புலனைந்தும் நீயே யென்றும்
நின்றநெய்த் தானாவென் னெஞ்சு ளாயே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 42. திருநெய்த்தானம் – திருத்தாண்டகம்

6661. மெய்த்தானத் தகம்படியுள் ஐவர் நின்று
வேண்டிற்றுக் குறைமுடித்து வினைக்குக் கூடாம்
இத்தானத் திருந்திங்ங னுய்வா னெண்ணும்
இதனையொழி யியம்பக்கே ளேழை நெஞ்சே
மைத்தான நீள்நயனி பங்கன் வங்கம்
வருதிரைநீர் நஞ்சுண்ட கண்டன் மேய

நெய்த்தான நன்னகரென் றேத்தி நின்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 1

6662. ஈண்டா இரும்பிறவித் துறவா ஆக்கை
யிதுநீங்க லாம்விதியுண் டென்று சொல்ல
வேண்டாவே நெஞ்சமே விளம்பக் கேள்நீ
விண்ணவர்தம் பெருமானார் மண்ணி லென்னை
ஆண்டானன் றருவரையாற் புரமூன் றெய்த
அம்மானை யரியயனுங் காணா வண்ணம்
நீண்டா னுறைதுறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 2

6663. பரவிப் பலபலவுந் தேடி யோடிப்
பாழாங் குரம்பையிடைக் கிடந்து வாளா
குரவிக் குடிவாழ்க்கை வாழ வெண்ணிக்
குலைகை தவிர்நெஞ்சே கூறக் கேள்நீ
இரவிக் குலமுதலா வானோர் கூடி
யெண்ணிறந்த கோடி யமர ராயம்
நிரவிக் கரியவன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 3

6664. அலையார் வினைத்திறஞ்சே ராக்கை யுள்ளே
யகப்பட்டு ளாசையெனும் பாசந் தன்னுள்
தலையாய்க் கடையாகும் வாழ்வி லாழ்ந்து
தளர்ந்துமிக நெஞ்சமே அஞ்ச வேண்டா
இலையார் புனற்கொன்றை யெறிநீர்த் திங்கள்
இருஞ்சடைமேல் வைத்துகந்தான் இமையோ ரேத்தும்
நிலையா னுறைநிறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 4

6665. தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப்
பொருளென்று மிகவுன்னி மதியா லிந்தா
அனைத்துலகும் ஆளலா மென்று பேசும்
ஆங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க் காக
முனைத்துவரு மதில்மூன்றும் பொன்ற
அன்று முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீமூழ்க
நினைத்தபெருங் கருணையன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 5

6666. மிறைபடுமிவ் வுடல்வாழ்வை மெய்யென் றெண்ணி
வினையிலே கிடந்தழுந்தி வியவேல் நெஞ்சே
குறைவுடையார் மனத்துளான் குமரன் தாதை
கூத்தாடுங் குணமுடையான் கொலைவேற் கையான்
அறைகழலுந் திருவடிமேற் சிலம்பு மார்ப்ப
அவனிதலம் பெயரவரு நட்டம் நின்ற
நிறைவுடையா னிடமாம்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 6

6667. பேசப் பொருளலாப் பிறவி தன்னைப்
பெரிதென்றுன் சிறுமனத்தால் வேண்டி யீண்டு
வாசக் குழல்மடவார் போக மென்னும்
வலைப்பட்டு வீழாதே வருக நெஞ்சே
தூசக் கரியுரித்தான் தூநீ றாடித்
துதைந்திலங்கு நூல்மார்பன் தொடர கில்லா
நீசர்க் கரியவன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 7

6668. அஞ்சப் புலனிவற்றா லாட்ட வாட்டுண்
டருநோய்க் கிடமாய வுடலின் தன்னை
தஞ்ச மெனக்கருதித் தாழேல் நெஞ்சே
தாழக் கருதுதியே தன்னைச் சேரா
வஞ்ச மனத்தவர்கள் காண வொண்ணா
மணிகண்டன் வானவர்தம் பிரானென் றேத்தும்
நெஞ்சர்க் கினியவன்நெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 8

6669. பொருந்தாத உடலகத்திற் புக்க ஆவி
போமா றறிந்தறிந்தே புலைவாழ் வுன்னி
இருந்தாங் கிடர்ப்படநீ வேண்டா நெஞ்சே
யிமையவர்தம் பெருமானன் றுமையா ளஞ்சக்
கருந்தாள் மதகரியை வெருவச் சீறுங்
கண்ணுதல்கண் டமராடிக் கருதார் வேள்வி
நிரந்தரமா இனிதுறைநெய்த் தான மென்று
நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 9

6670. உரித்தன் றுனக்கிவ் வுடலின் தன்மை
உண்மை யுரைத்தேன் விரத மெல்லாந்

தரித்துந் தவமுயன்றும் வாழா நெஞ்சே
　　தம்மிடையி லில்லார்க்கொன் றல்லார்க் கன்னன்
எரித்தா னனலுடையா னெண்டோ ளானே
　　யெம்பெருமா னென்றேத்தா இலங்கைக் கோனை
நெரித்தானை நெய்த்தானம் மேவி னானை
　　நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 43. திருப்பூந்துருத்தி – திருத்தாண்டகம்

6671. நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
　　நினையாவென் நெஞ்சை நினைவித் தானைக்
கல்லா தனவெல்லாங் கற்பித் தானைக்
　　காணா தனவெல்லாங் காட்டி னானைச்
சொல்லா தனவெல்லாஞ் சொல்லி யென்னைத்
　　தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு
பொல்லாவென் நோய்தீர்த்த புனிதன் தன்னைப்
　　புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 1

6672. குற்றாலங் கோகரணம் மேவி னானைக்
　　கொடுங்கைக் கடுங்கூற்றைப் பாய்ந்தான் தன்னை
உற்றாலம் நஞ்சுண் டொடுக்கி னானை
　　யுணராவென் நெஞ்சை யுணர்வித் தானைப்
பற்றாலின் கீழங் கிருந்தான் தன்னைப்
　　பண்ணார்ந்த வீணை பயின்றான் தன்னைப்
புற்றா டரவார்த்த புனிதன் தன்னைப்
　　புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 2

6673. எனக்கென்றும் இனியானை யெம்மான் தன்னை
　　யெழிலாரும் ஏகம்பம் மேயான் தன்னை
மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில்
　　நில்லானை நின்றியூர் மேயான் தன்னைத்
தனக்கென்று மடியேனை யாளாக் கொண்ட
　　சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப்
புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப்
　　பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 3

6674. வெறியார் மலர்க்கொன்றை சூடி னானை
வெள்ளானை வந்திறைஞ்சும் வெண் காட்டானை
அறியா தடியே னகப்பட் டேனை
அல்லற் கடல்நின்று மேற வாங்கி
நெறிதா னிதுவென்று காட்டி னானை
நிச்சல் நலிபிணிகள் தீர்ப்பான் தன்னைப்
பொறியா டரவார்த்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 4

6675. மிக்கானை வெண்ணீறு சண்ணித் தானை
விண்டார் புரமூன்றும் வேவ நோக்கி
நக்கானை நான்மறைகள் பாடி னானை
நல்லார்கள் பேணிப் பரவ நின்ற
தக்கானைத் தண்தா மரைமே லண்ணல்
தலைகொண்டு மாத்திரைக்க ணுலக மெல்லாம்
புக்கானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 5

6676. ஆர்த்தானை வாசுகியை யரைக்கோர் கச்சா
அசைத்தானை அழகாய பொன்னார் மேனிப்
பூத்தானத் தான்முடியைப் பொருந்தா வண்ணம்
புணர்த்தானைப் பூங்கணையா னுடலம் வேவப்
பார்த்தானைப் பரிந்தானைப் பனிநீர்க் கங்கை
படர்சடைமேற் பயின்றானைப் பதைப்ப யானை
போர்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 6

6677. எரித்தானை எண்ணார் புரங்கள் மூன்றும்
இமைப்பளவிற் பொடியாக எழிலார் கையால்
உரித்தானை மதகரியை யுற்றுப் பற்றி
யுமையதனைக் கண்டஞ்சி நடுங்கக் கண்டு
சிரித்தானைச் சீரார்ந்த பூதஞ் சூழத்
திருச்சடைமேல் திங்களும் பாம்பும் நீரும்
புரித்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 7

6678. வைத்தானை வானோ ருலக மெல்லாம்
வந்திறைஞ்சி மலர்கொண்டு நின்று போற்றும்

வித்தானை வேண்டிற்றொன் றீவான் தன்னை
விண்ணவர்தம் பெருமானை வினைகள் போக
உய்த்தானை யொலிகங்கை சடைமேற் றாங்கி
யொளித்தானை யொருபாகத் துமையோ டாங்கே
பொய்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 8

6679. ஆண்டானை வானோ ருலக மெல்லாம்
அந்நா ளறியாத தக்கன் வேள்வி
மீண்டானை விண்ணவர்க ளோடுங் கூடி
விரைமலர்மேல் நான்முகனும் மாலுந் தேர
நீண்டானை நெருப்புருவ மானான் தன்னை
நிலையிலார் மும்மதிலும் வேவ வில்லைப்
பூண்டானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 9

6680. மறுத்தானை மலைகோத்தங் கெடுத்தான் தன்னை
மணிமுடியோ டிருபதுதோள் நெரியக் காலால்
இறுத்தானை யெழுநரம்பி னிசைகேட் டானை
யெண்டிசைக்குங் கண்ணானான் சிரமே லொன்றை
அறுத்தானை யமரர்களுக் கமுதீந் தானை
யாவர்க்குந் தாங்கொணா நஞ்ச முண்டு
பொறுத்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 44. திருச்சோற்றுத்துறை – திருத்தாண்டகம்

6681. மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே
முறைமையால் எல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனாய் ஏழுலகு மாயி னானே
இன்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனாய் எல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 1

6682. தலையவனாய் உலகுக்கோர் தன்மை யானே
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே
நிலையவனாய் நின்னொப்பா ரில்லா தானே
நின்றுணராக் கூற்றத்தைச் சீறிப் பாய்ந்த
கொலையவனே கொல்யானைத் தோல்மே லிட்ட
கூற்றுவனே கொடிமதில்கள் மூன்று மெய்த
சிலையவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 2

6683. முற்றாத பான்மதியஞ் சூடி னானே
முளைத்தெழுந்த கற்பகத்தின் கொழுந்தொப் பானே
உற்றாரென் றொருவரையு மில்லா தானே
யுலகோம்பும் ஒண்சுடரே யோதும் வேதங்
கற்றானே யெல்லாக் கலைஞா னமுங்
கல்லாதேன் தீவினைநோய் கண்டு போகச்
செற்றானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 3

6684. கண்ணவனாய் உலகெல்லாங் காக்கின் றானே
காலங்க ளூழிகண் டிருக்கின் றானே
விண்ணவனாய் விண்ணவர்க்கும் அருள்செய் வானே
வேதனாய் வேதம் விரித்திட் டானே
எண்ணவனே யெண்ணார் புரங்கள் மூன்றும்
இமையாமுன் எரிகொளுவ நோக்கி நக்க
திண்ணவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 4

6685. நம்பனே நான்மறைக ளாயி னானே
நடமாட வல்லானே ஞானக் கூத்தா
கம்பனே கச்சிமா நகரு ளானே
அடிமதில்கள் மூன்றினையும் பொடியா எய்த
அம்பனே அளவிலாப் பெருமை யானெ
அடியார்கட் காரமுதே ஆனே றேறுஞ்
செம்பொனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே.

6686. ஆர்ந்தவனே யுலகெலாம் நீயே யாகி
யமைந்தவனே யளவிலாப் பெருமை யானே
கூர்ந்தவனே குற்றாலம் மேய கூத்தா
கொடுமூ இலையதோர் சூல மேந்திப்
பேர்ந்தவனே பிரளயங்க ளெல்லா மாய

பெம்மானென் றெப்போதும் பேசும் நெஞ்சிற்
சேர்ந்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 6

6687. வானவனாய் வண்மை மனத்தி னானே
மாமணிசேர் வானோர் பெருமான் நீயே
கானவனாய் ஏனத்தின் பின்சென் றானே
கடிய அரணங்கண் மூன்றட் டானே
தானவனாய்த் தண்கயிலை மேவி னானே
தன்னொப்பா ரில்லாத மங்கைக் கென்றுந்
தேனவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 7

6688. தன்னவனாய் உலகெல்லாந் தானே யாகித்
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே
என்னவனா யென்னிதயம் மேவி னானே
யீசனே பாச வினைகள் தீர்க்கும்
மன்னவனே மலைமங்கை பாக மாக
வைத்தவனே வானோர் வணங்கும் பொன்னித்
தென்னவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 8

6689. எறிந்தானே யெண்டிசைக்குங் கண்ணா னானே
யேழுலக மெல்லாமுன் னாய்நின் றானே
அறிந்தார்தாம் ஓரிருவ ரறியா வண்ணம்
ஆதியு மந்தமு மாகி யங்கே
பிறிந்தானே பிறரொருவ ரறியா வண்ணம்
பெம்மானென் றெப்போதும் ஏத்து நெஞ்சிற்
செறிந்தானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 9

6690. மையனைய கண்டத்தாய் மாலும் மற்றை
வானவரு மறியாத வண்ணச் சூலக்
கையவனே கடியிலங்கைக் கோனை யன்று
கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற
மெய்யவனே யடியார்கள் வேண்டிற் றீயும்
விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்குஞ்
செய்யவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொழியே சிவனேயுன் னபயம் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 45. திருவொற்றியூர் – திருத்தாண்டகம்

6691. வண்டோங்கு செங்கமலக் கழுநீர் மல்கும்
மதமத்தஞ் சேர்சடைமேல் மதியஞ் சூடித்
திண்டோள்க ளாயிரமும் வீசி நின்று
திசைசேர நடமாடிச் சிவலோ கனார்
உண்டார்நஞ் சுலகுக்கோ ருறுதி வேண்டி
ஒற்றியூர் மேய வொளிவண் ணனார்
கண்டேன்நான் கனவகத்திற் கண்டேற் கென்றன்
கடும்பிணியுஞ் சுடுந்தொழிலுங் கைவிட் டவே. 1

6692. ஆகத்தோர் பாம்பசைத்து வெள்ளே றேறி
அணிகங்கை செஞ்சடைமே லார்க்கச் சூடிப்
பாகத்தோர் பெண்ணுடையா ராணு மாவர்
பசுவேறி யுழிதருமெம் பரம யோகி
காமத்தா லைங்கணையான் தன்னை வீழக்
கனலா எரிவிழித்த கண்மூன் றினார்
ஓமத்தால் நான்மறைக ளோத லோவா
வொளிதிகழு மொற்றியூ ருறைகின் றாரே. 2

6693. வெள்ளத்தைச் செஞ்சடைமேல் விரும்பி வைத்தீர்
வெண்மதியும் பாம்பு முடனே வைத்தீர்
கள்ளத்தை மனத்தகத்தே கரந்து வைத்தீர்
கண்டார்க்குப் பொல்லாது கண்டீ ரெல்லே
கொள்ளத்தா னிசைபாடிப் பலியுங் கொள்ளீர்
கோளரவுங் குளிர்மதியுங் கொடியுங் காட்டி
உள்ளத்தை நீர்கொண்டீ ரோத லோவா
வொளிதிகழு மொற்றியு ருடைய கோவே. 3

6694. நரையார்ந்த விடையேறி நீறு பூசி
நாகங்கச் சரைக்கார்த்தோர் தலைகை யேந்தி
உரையாவந் தில்புகுந்து பலிதான் வேண்ட
எம்மடிக ளும்மூர்தா னேதோ வென்ன
விரையாதே கேட்டியேல் வேற்கண் நல்லாய்
விடுங்கலங்கள் நெடுங்கடலுள் நின்று தோன்றுந்
திரைமோதக் கரையேறிச் சங்க மூருந்
திருவொற்றி யூரென்றார் தீய வாறே. 4

6695. மத்தமா களியானை யுரிவை போர்த்து
வானகத்தார் தானகத்தா ராகி நின்று
பித்தர்தாம் போலங்கோர் பெருமை பேசிப்
பேதையரை யச்சுறுத்திப் பெயரக் கண்டு

பத்தர்கள்தாம் பலருடனே கூடிப் பாடிப்
பயின்றிருக்கு மூரேதோ பணியீ ரென்ன
ஒத்தமைந்த வுத்திரநாள் தீர்த்த மாக
வொளிதிகழு மொற்றியூ ரென்கின் றாரே. 5

6696. கடிய விடையேறிக் காள கண்டர்
கலையோடு மழுவாளோர் கையி லேந்தி
இடிய பலிகொள்ளார் போவா ரல்ல
ரெல்லாந்தா னிவ்வடிகள் யாரென் பாரே
வடிவுடைய மங்கையுந் தாமு மெல்லாம்
வருவாரை யெதிர்கண்டோம் மயிலாப் புள்ளே
செடிபடுவெண் தலையொன் றேந்தி வந்து
திருவொற்றி யூர்புக்கார் தீய வாறே. 6

6697. வல்லராய் வானவர்க ளெல்லாங் கூடி
வணங்குவார் வாழ்த்துவார் வந்து நிற்பார்
எல்லேயெம் பெருமானைக் காணோ மென்ன
எவ்வாற்றா லெவ்வகையாற் காண மாட்டார்
நல்லார்கள் நான்மறையோர் கூடி நேடி
நாமிருக்கு மூர்பணியீ ரடிகே ளென்ன
ஒல்லைதான் திரையேறி யோதம் மீளு
மொளிதிகழு மொற்றியூ ரென்கின் றாரே. 7

6698. நிலைப்பாடே நான்கண்ட தேடீ கேளாய்
நெருநலைநற் பகலிங்கோ ரடிகள் வந்து
கலைப்பாடுங் கண்மலருங் கலக்க நோக்கிக்
கலந்து பலியிடுவே னெங்குங் காணேன்
சலப்பாடே யினியொருநாட் காண்பே னாகில்
தன்னாகத் தென்னாக மொடுங்கும் வண்ணம்
உலைப்பாடே படத்தழுவிப் போக லொட்டே
னொற்றியூ ருறைந்திங்கே திரிவா னையே. 8

6699. மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை
யிரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை
பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை
உணர்வரிய வொற்றியூ ருடைய கோவே. 9

6700. மருவுற்ற மலர்க்குழலி மடவா ளஞ்ச
மலைதுளங்கத் திசைநடுங்கச் செறுத்து நோக்கிச்
செருவுற்ற வாளரக்கன் வலிதான் மாளத்
திருவடியின் விரலொன்றா லலற வூன்றி
உறுவொற்றி யங்கிருவ ரோடிக் காண
ஓங்கினவவ் வொள்ளழலா ரிங்கே வந்து
திருவொற்றி யூர்நம்மூ ரென்று போனார்
செறிவளைக ளொன்றொன்றாச் சென்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 46. திருஆவடுதுறை – திருத்தாண்டகம்

6701. நம்பனை நால்வேதங் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக்
கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை யாவடுதண் டுறையுள் மேய
அரனடியே யடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 1

6702. மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை
வெண்முகிலா யெழுந்துமழை பொழிவான் தன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி
என்னானை யெந்தை பெருமான் தன்னை
யிருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே
அன்னானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 2

6703. பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின்
தொத்தினைத் தூநெறியாய் நின்றான் தன்னைச்
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும்

அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 3

6704. பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை யிடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்குந்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 4

6705. ஒருமணியை உலகுக்கோ ருறுதி தன்னை
உதயத்தி னுச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப்
பவித்திரனைப் பசுபதியைப் பவளக் குன்றைத்
திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பின் இன்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 5

6706. ஏற்றானை யெண்டோ ளுடையான் தன்னை
யெல்லில் நடமாட வல்லான் தன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் தன்னைக்குரை
கடல்வாய் நஞ்சுண்ட கண்டன் தன்னை
நீற்றானை நீளரவொன் றார்த்தான் தன்னை
நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை
ஆற்றானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 6

6707. கைம்மான மதகளிற்றை யுரித்தான் தன்னைக்
கடல்வரைவான் ஆகாச மானான் தன்னைச்
செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயா னானை
எம்மானை யென்மனமே கோயி லாக
இருந்தானை யென்புருகு மடியார் தங்கள்
அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 7

6708. மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை
வெள்ளடையைத் தண்நிழலை வெந்தீ யேந்துங்
கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த
கண்ணானைக் கண்மூன் றுடையான் தன்னைப்
பையா டரவமதி யுடனே வைத்த
சடையானைப் பாய்புலித்தோ லுடையான் தன்னை
ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 8

6709. வேண்டாமை வேண்டுவது மில்லான் தன்னை
விசயனை முன்னசைவித்த வேடன் தன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட வுதைசெய்த மைந்தன் தன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 9

6710. பந்தணவு மெல்விரலாள் பாகன் தன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் தன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் தன்னைச்
செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பிற் புரிவெண்ணூல் திகழப் பூண்ட
அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 10

6711. தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான் தன்னைப்
பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பெருவலியால் மலையெடுத்த அரக்கன் தன்னை
நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை
நீசனேன் உடலுறுநோ யான தீர
அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 47. திருஆவடுதுறை – திருத்தாண்டகம்

6712. திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேஎன் னுறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 1

6713. மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின்
மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன்
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
மேற்றான்நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளு நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 2

6714. வரையார் மடமங்கை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம்
உரையா உயிர்போகப் பெறுவே னாகில்
உறுநோய்வந் தெத்தனையு முற்றா லென்னே
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே யேத்து மன்பர்க்
கரையா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 3

6715. சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச்
சிலைவளைவித் துமையவளை யஞ்ச நோக்கிக்
கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடுங்
களிறுரித்த கங்காளா எங்கள் கோவே
நிலத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்
நில்லா வுயிரோம்பு நீத னேனான்
அலுத்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
அவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 4

6716. நறுமா மலர்கொய்து நீரின் மூழ்கி
நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித்
துறவாத துன்பந் துறந்தேன் தன்னைச்
சூழுலகி லூழ்வினைவந் துற்றா லென்னே
உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரைநீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 6

6717. கோன்நா ரணன்அங்கந் தோள்மேற் கொண்டு
கொழுமலரான் தன்சிரத்தைக் கையி லேந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர்
நானார் உமக்கோர் வினைக்கே டனேன்
நல்வினையுந் தீவினையு மெல்லாம் முன்னே
ஆனாய் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.

6718. உழையுரித்த மானுரிதோ லாடை யானே
உமையவள்தம் பெருமானே இமையோர் ஏறே
கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா
கயிலாய மலையானே உன்பா லன்பர்
பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன்
கடனன்றே பேரருளுன் பால தன்றே
அழையுறுத்து மாமயில்க ளாலுஞ் சோலை
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 7

6719. உலந்தார் தலைகலனொன் றேந்தி வானோ
ருலகம் பலிதிரிவா யுன்பா லன்பு
கலந்தார் மனங்கவருங் காத லானே
கனலாடுங் கையவனே யையா மெய்யே
மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காய
மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்
அலந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 8

6720. பல்லார்ந்த வெண்தலை கையி லேந்திப்
பசுவேறி யூருரன் பலிகொள் வானே
கல்லார்ந்த மலைமகளு நீயு மெல்லாங்

கரிகாட்டி லாட்டுகந்தீர் கருதீ ராகில்
எல்லாரு மென்தென்னை யிகழ்வர் போலும்
ஏழையமண் குண்டர்சாக் கியர்க ளொன்றுக்
கல்லாதார் திறத்தொழிந்தேன் அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமரர் ஏறே. 9

6721. துறந்தார்தந் தூநெறிக்கட் சென்றே னல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயே னல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லாற்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் தன்னைச்
செறுவரைக்கீ ழடர்த்தருளிச் செய்கை யெல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமரர் ஏறே.

திருச்சிற்றம்பலம்

*****

## 48. திருவலிவலம் – திருத்தாண்டகம்

6722. நல்லான்காண் நான்மறைக ளாயி னான்காண்
நம்பன்காண் நணுகாதார் புரமூன் றெய்த
வில்லான்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண்
மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச்
சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண்
தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈய
வல்லான்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 1

6723. ஊனவன்காண் உடல்தனக்கோ ருயிரா னான்காண்
உள்ளவன்காண் இல்லவன்காண் உமையாட் கென்றுந்
தேனவன்காண் திருவவன்காண் திசையா னான்காண்
தீர்த்தன்காண் பார்த்தன்றன் பணியைக் கண்ட
கானவன்காண் கடலவன்காண் மலையா னான்காண்
களியானை யீருரிவை கதறப் போர்த்த
வானவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 2

6724. ஏயவன்காண் எல்லார்க்கு மியல்பா னான்காண்
இன்பன்காண் துன்பங்க ளில்லா தான்காண்
தாயவன்காண் உலகுக்கோர் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் உத்தமன்காண் தானே யெங்கும்
ஆயவன்காண் அண்டத்துக் கப்பா லான்காண்
அகங்குழைந்து மெய்வருந்தி அழுவார் தங்கள்
வாயவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 3

6725. உய்த்தவன்காண் உடல்தனக்கோ ருயிரா னான்காண்
ஓங்காரத் தொருவன்காண் உலகுக் கெல்லாம்
வித்தவன்காண் விண்பொழியும் மழையா னான்காண்
விளைவவன்காண் விரும்பாதார் நெஞ்சத் தென்றும்
பொய்த்தவன்காண் பொழிலேழுந் தாங்கி னான்காண்
புனலோடு வளர்மதியும் பாம்புஞ் சென்னி
வைத்தவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 4

6726. கூற்றவன்காண் குணமவன்காண் குறியா னான்காண்
குன்றங்க ளனைத்துங்காண் கோல மாய
நீற்றவன்காண் நிழலவன்காண் நெருப்பா னான்காண்
நிமிர்புன் சடைமுடிமேல் நீரார் கங்கை
ஏற்றவன்காண் ஏழுலகு மாயி னான்காண்
இமைப்பளவிற் காமனைமுன் பொடியாய் வீழ
மாற்றவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 5

6727. நிலையவன்காண் தோற்றவன்காண் நிறையா னான்காண்
நீரவன்காண் பாரவன்காண் ஊர்மூன் றெய்த
சிலையவன்காண் செய்யவாய்க் கரிய கூந்தல்
தேன்மொழியை ஒருபாகஞ் சேர்த்தி னான்காண்
கலையவன்காண் காற்றவன்காண் காலன் வீழக்
கறுத்தவன்காண் கயிலாய மென்னுந் தெய்வ
மலையவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 6

6728. பெண்ணவன்காண் ஆணவன்காண் பெரியோர்க் கென்றும்
பெரியவன்காண் அரியவன்காண் அயனா னான்காண்

எண்ணவன்காண் எழுத்தவன்காண் இன்பக் கேள்வி
இசையவன்காண் இயலவன்காண் எல்லாங் காணுங்
கண்ணவன்காண் கருத்தவன்காண் கழிந்தோர் செல்லுங்
கதியவன்காண் மதியவன்காண் கடலேழ் சூழ்ந்த
மண்ணவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 7

6729. முன்னவன்காண் பின்னவன்காண் மூவா மேனி
முதலவன்காண் முடிவவன்காண் மூன்று சோதி
அன்னவன்காண் அடியார்க்கும் அண்டத் தார்க்கும்
அணியவன்காண் சேயவன்காண் அளவில் சோதி
மின்னவன்காண் உருமவன்காண் திருமால் பாகம்
வேண்டினன்காண் ஈண்டுபுனற் கங்கைக் கென்றும்
மன்னவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 8

6730. நெதியவன்காண் யாவர்க்கும் நினைய வொண்ணா
நீதியன்காண் வேதியன்காண் நினைவார்க் கென்றுங்
கதியவன்காண் காரவன்காண் கனலா னான்காண்
காலங்க ளூழியாய்க் கலந்து நின்ற
பதியவன்காண் பழமவன்காண் இரதந் தான்காண்
பாம்போடு திங்கள் பயில வைத்த
மதியவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 9

6731. பங்கயத்தின் மேலானும் பால கனா
யுலகளந்த படியானும் பரவிக் காணா
தங்கைவைத்த சென்னியரா யளக்க மாட்டா
அனலவன்காண் அலைகடல்சூ ழிலங்கை வேந்தன்
கொங்கலர்த்த முடிநெரிய விரலா லூன்றுங்
குழகன்காண் அழகன்காண் கோல மாய
மங்கையர்க்கோர் கூறன்காண் வானோ ரேத்தும்
வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 49. திருக்கோகரணம் – திருத்தாண்டகம்

6732. சந்திரனுந் தண்புனலுஞ் சந்தித் தான்காண்
தாழ்சடையான்காண் சார்ந்தார்க் கமுதா னான்காண்
அந்தரத்தி லசுரர்புரம் மூன்றட் டான்காண்
அவ்வுருவி லவ்வுருவ மாயி னான்காண்
பந்தரத்து நான்மறைகள் பாடி னான்காண்
பலபலவும் பாணி பயில்கின் றான்காண்
மந்திரத்து மறைப்பொருளு மாயி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 1

6733. தந்தவத்தன் தன்தலையைத் தாங்கி னான்காண்
சாரணன்காண் சார்ந்தார்க்கின் னமுதா னான்காண்
கெந்தத்தன் காண்கெடில வீரட் டன்காண்
கேடிலிகாண் கெடுப்பார்மற் றில்லா தான்காண்
வெந்தொத்த நீறுமெய் பூசி னான்காண்
வீரன்காண் வியன்கயிலை மேவி னான்காண்
வந்தொத்த நெடுமாற்கும் அறிவொ ணான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 2

:4. தன்னுருவம் யாவருக்குந் தாக்கா தான்காண்
தாழ்சடையெம் பெருமான்காண் தக்கார்க் குள்ள
பொன்னுருவச் சோதிபுன லாடி னான்காண்
புராணன்காண் பூதங்க ளாயி னான்காண்
மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்காண்
வேழத்தி னுரிவெருவப் போர்த்தான் தான்காண்
மன்னுருவாய் மாமறைக ளோதி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 3

6735. ஆறேறு செஞ்சடையெம் ஆரூ ரன்காண்
அன்பன்காண் அணிபழனம் மேயான் றான்காண்
நீறேறி நிழல்திகழும் மேனி யான்காண்
நிருபன்காண் நிகரொன்று மில்லா தான்காண்
கூறேறு கொடுமழுவாட் படையி னான்காண்
கொக்கரையன் காண்குழுநற் பூதத் தான்காண்
மாறாய மதில்மூன்றும் மாய்வித் தான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 4

6736. சென்றச் சிலைவாங்கிச் சேர்வித் தான்காண்
தீயம்பன் காண்திரி புரங்கள் மூன்றும்
பொன்றப் பொடியாக நோக்கி னான்காண்
பூதன்காண் பூதப் படையா ளிகாண்
அன்றப் பொழுதே அருள்செய் தான்காண்
அனலாடிகாண் அடியார்க் கமுதா னான்காண்
மன்றல் மணங்கமழும் வார்சடை யான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 5

6737. பிறையோடு பெண்ணொருபால் வைத்தான் றான்காண்
பேரவன்காண் பிறப்பொன்று மில்லா தான்காண்
கறையோடு மணிமிடற்றுக் காபா லிகாண்
கட்டங்கன் காண்கையிற் கபால மேந்திப்
பறையோடு பல்கீதம் பாடி னான்காண்
ஆடினான் காண்பாணி யாக நின்று
மறையோடு மாகீதங் கேட்டான் றான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 6

6738. மின்னளந்த மேல்முகட்டின் மேலுற் றான்காண்
விண்ணவர்தம் பெருமான்காண் மேவி லெங்கும்
முன்னளந்த மூவர்க்கும் முதலா னான்காண்
மூவிலைவேற் சூலத்தெங் கோலத் தான்காண்
எண்ணளந்தென் சிந்தையே மேவி னான்காண்
ஏவலன்காண் இமையோர்க ளேத்த நின்று
மண்ணளந்த மாலறியா மாயத் தான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 7

6739. பின்னு சடைமேற் பிறைசூடி னான்காண்
பேரருளன் காண்பிறப்பொன் றில்லா தான்காண்
முன்னி யுலகுக்கு முன்னா னான்காண்
மூஎயிலுஞ் செற்றுகந்த முதல்வன் றான்காண்
இன்னவுரு வென்றறிவொண் ணாதான் றான்காண்
ஏழ்கடலு மேழுலகு மாயி னான்காண்
மன்னும் மடந்தையோர் பாகத் தான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 8

6740. வெட்ட வெடித்தார்க்கோர் வெவ்வழ லன்காண்
வீரன்காண் வீரட்டம் மேவி னான்காண்
பொட்ட அனங்கனையும் நோக்கி னான்காண்
பூதன்காண் பூதப் படையி னான்காண்
கட்டக் கடுவினைகள் காத்தாள் வான்காண்
கண்டன்காண் வண்டுண்ட கொன்றை யான்காண்
வட்ட மதிப்பாகஞ் சூடி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 9

6741. கையாற் கயிலை யெடுத்தான் தன்னைக்
கால்விரலால் தோள்நெரிய வூன்றி னான்காண்
மெய்யின் நரம்பிசையாற் கேட்பித் தாற்கு
மீண்டே யவற்கருள்கள் நல்கி னான்காண்
பொய்யர் மனத்துப் புறம்பா வான்காண்
போர்ப்படையான் காண்பொருவா ரில்லா தான்காண்
மைகொள் மணிமிடற்று வார்சடை யான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 50. திருவீழிமிழலை – திருத்தாண்டகம்

6742. போரானை ஈருரிவைப் போர்வை யானைப்
புலியதளே யுடையாடை போற்றி னானைப்
பாரானை மதியானைப் பகலா னானைப்
பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற
நீரானைக் காற்றானைத் தீயா னானை
நினையாதார் புரமெரிய நினைந்த தெய்வத்
தேரானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 1

6743. சவந்தாங்கு மயானத்துச் சாம்ப லென்பு
தலையோடு மயிர்க்கயிறு தரித்தான் தன்னைப்
பவந்தாங்கு பாசுபத வேடத் தானைப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாங்
கவர்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னைக்
கழலடைந்தான் மேற்கறுத்த காலன் வீழச்

சிவந்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 2

6744. அன்றாலின் கீழிருந்தங் கறஞ்சொன் னானை
அகத்தியனை யுகப்பானை அயன்மால் தேட
நின்றானைக் கிடந்தகடல் நஞ்சுண் டானை
நேரிழையைக் கலந்திருந்தே புலன்க ளைந்தும்
வென்றானை மீயச்சூர்மேவி னானை மெல்லியலாள்
தவத்தினிறை யளக்க லுற்றுச்
சென்றானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 3

6745. தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானைத் தோன்றிய்
எவ்வுயிர்க்குந் துணையுயாய் நின்ற
தாயானைச் சக்கரமாற் கீந்தான் தன்னைச் சங்கரனைச்
சந்தோக சாமம் ஓதும்
வாயானை மந்திரிப்பார் மனத்து ளானை வஞ்சனைபா
லஞ்செழுத்தும் வழுத்து வார்க்குச்
சேயானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 4

6746. நற்றவத்தின் நல்லானைத் தீதாய் வந்த
நஞ்சமுது செய்தானை அமுத முண்ட
மற்றமரர் உலந்தாலும் உலவா தானை
வருகாலஞ் செல்காலம் வந்த காலம்
உற்றவத்தை யுணர்ந்தாலும் உணர லாகாஒரு
சுடரை யிருவிசும்பி னூர்மூன் றொன்றச்
செற்றவனைத் திருவீழி மிழலை. யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 5

6747. மைவான மிடற்றானை யவ்வான் மின்போல்
வளர்சடைமேல் மதியானை மழையா யெங்கும்
பெய்வானைப் பிச்சாட லாடு வானைப்
பிலவாய பேய்க்கணங்க ளார்க்கச் சூலம்
பொய்வானைப் பொய்யிலா மெய்யன் தன்னைப்
பூதலமும் மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை
செய்வானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 6

6748. மிக்கானைக் குறைந்தடைந்தார் மேவ லானை
வெவ்வேறாய் இருமூன்று சமய மாகிப்
புக்கானை எப்பொருட்கும் பொதுவா னானைப்
பொன்னுலகத் தவர்போற்றும் பொருளுக் கெல்லாந்
தக்கானைத் தானன்றி வேறொன் றில்லாத்
தத்துவனைத் தடவரையை நடுவு செய்த
திக்கானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே.

6749. வானவர்கோன் தோளிறுத்த மைந்தன் தன்னை
வளைகுளமும் மறைக்காடும் மன்னி னானை
ஊனவனை உயிரவனை யொருநாட் பார்த்தன்
உயர்தவத்தின் நிலையறிய லுற்றுச் சென்ற
கானவனைக் கயிலாயம் மேவி னானைக்
கங்கைசேர் சடையானைக் கலந்தார்க் கென்றுந்
தேனவனைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 8

6750. பரத்தானை யிப்பக்கம் பலவா னானைப்
பசுபதியைப் பத்தர்க்கு முத்தி காட்டும்
வரத்தானை வணங்குவார் மனத்து ளானை
மாருதமால் எரிமூன்றும் வாய்அம் பீர்க்காஞ்
சரத்தானைச் சரத்தையுந்தன் தாட்கீழ் வைத்த
தபோதனனைச் சடாமகுடத் தணிந்த பைங்கட்
சிரத்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே. 9

6751. அறுத்தானை அயன்தலைகள் அஞ்சி லொன்றை
அஞ்சாதே வரையெடுத்த அரக்கன் தோள்கள்
இறுத்தானை யெழுநரம்பி னிசைகேட் டானை
யிந்துவினைத் தேய்த்தானை யிரவி தன்பல்
பறித்தானைப் பகீரதற்காய் வானோர் வேண்டப்
பரந்திழியும் புனற்கங்கை பணிபோ லாங்குச்
செறித்தானைத் திருவீழி மிழலை யானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின் றாரே.

திருச்சிற்றம்பலம்

•••••

## 51. திருவீழிமிழலை – திருத்தாண்டகம்

6752. கயிலாய மலையுள்ளார் காரோ ணத்தார்
கந்தமா தனத் துளார் காளத்தியார்
மயிலாடு துறையுளார் மாகா ளத்தார்
வக்கரையார் சக்கரம் மாற்கீந்தார் வாய்ந்த
அயில்வாய சூலமுங் காபா லமும்
அமருந் திருக்கரத்தார் ஆனே றேறி
வெயிலாய சோதி விளங்கு நீற்றார்
வீழி மிழலையே மேவி னாரே. 1

6753. பூதியணி பொன்னிறத்தர் பூண நூலர்
பொங்கரவர் சங்கரர்வெண் குழையோர் காதர்
கேதிசரம் மேவினார் கேதா ரத்தார்
கெடில வடஅதிகை வீரட் டத்தார்
மாதுயரந் தீர்த்தென்னை உய்யக் கொண்டார்
மழபாடி மேய மழுவா ளனார்
வேதிகுடி யுள்ளார் மீயச் சூரார்
வீழி மிழலையே மேவி னாரே. 2

6754. அண்ணா மலையமர்ந்தார் ஆரூ ருள்ளார்
அளப்பூரார் அந்தணர்கள் மாடக் கோயில்
உண்ணா ழிகையா ருமையா ளோடும்
இமையோர் பெருமானார் ஒற்றி யூரார்
பெண்ணா கடத்துப் பெருந்தூங் கானை
மாடத்தார் கூடத்தார் பேரா வூரார்
விண்ணோர்க ளெல்லாம் விரும்பி யேத்த
வீழி மிழலையே மேவி னாரே. 3

6755. வெண்காட்டார் செங்காட்டங் குடியார் வெண்ணி
நன்னகரார் வேட்களத்தார் வேத நாவார்
பண்காட்டும் வண்டார் பழனத் துள்ளார்
பராய்த்துறையார் சிராப்பள்ளி யுள்ளார் பண்டோர்
வெண்கோட்டுக் கருங்களிற்றைப் பிளிறப் பற்றி
யுரித்துரிவை போர்த்த விடலை வேடம்
விண்காட்டும் பிறைநுதலி அஞ்சக் காட்டி
வீழி மிழலையே மேவி னாரே. 4

6756. புடைசூழ்ந்த பூதங்கள் வேதம் பாடப்
புலியூர்ச்சிற் றம்பலத்தே நடமா டுவார்
உடைசூழ்ந்த புலித்தோலர் கலிக்கச் சிமேற்
றளியுளார் குளிர்சோலை யேகம் பத்தார்
கடைசூழ்ந்து பலிதேருங் கங்கா ளனார்
கழுமலத்தார் செழுமலர்த்தார்க் குழலி யோடும்
விடைசூழ்ந்த வெல்கொடியார் மல்கு செல்வ
வீழி மிழலையே மேவி னாரே. 5

6757. பெரும்புலியூர் விரும்பினார் பெரும்பா ழிய்யார்
பெரும்பற்றப் புலியூர் மூலட் டானத்தார்
இரும்புதலார் இரும்பூளை யுள்ளார் ஏரார்
இன்னம்ப ரார்ஈங்கோய் மலையார் இன்சொற்
கரும்பனையாள் உமையோடுங் கருகா வூரார்
கருப்பறிய லூரார் கரவீரத்தார்
விரும்பமரர் இரவுபகல் பரவி யேத்த
வீழி மிழலையே மேவி னாரே. 6

6758. மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார்
வாழ்கொளி புத்தூர் மாகா ளத்தார்
கறைக்காட்டுங் கண்டனார் காபா லிய்யார்
கற்குடியார் விற்குடியார் கானப் பேரார்
பறைக்காட்டுங் குழிவிழிகண் பல்பேய் சூழப்
பழையனூர் ஆலங்காட் டடிகள் பண்டோர்
மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப் பாய்ந்தார்
வீழி மிழலையே மேவி னாரே. 7

6759. அஞ்சைக் களத்துள்ளார் ஐயாற் றுள்ளார்
ஆரூரார் பேரூரா ரழுந்தூ ருள்ளார்
தஞ்சைத் தளிக்குளத்தார் தக்க ளூரார்
சாந்தை அயவந்தி தங்கி னார்தாம்
நஞ்சைத் தமக்கமுதா வுண்ட நம்பர்
நாகேச் சரத்துள்ளார் நாரை யூரார்
வெஞ்சொற் சமண்சிறையி லென்னை மீட்டார்
வீழி மிழலையே மேவி னாரே. 8

6760. கொண்டலுள்ளார் கொண்டீச் சரத்தி னுள்ளார்
கோவலூர் வீரட்டங் கோயில் கொண்டார்

தண்டலையார் தலையாலங் காட்டி லுள்ளார்
தலைச்சங்கைப் பெருங்கோயில் தங்கி னார்தாம்
வண்டலொடு மணற்கொணரும் பொன்னி நன்னீர்
வலஞ்சுழியார் வைகலின்மேல் மாடத் துள்ளார்
வெண்டலையைக் கைக்கொண்ட விகிர்த வேடர்
வீழி மிழலையே மேவி னாரே. 9

6761. அரிச்சந் திரத்துள்ளார் அம்ப ருள்ளார்
அரிபிரம ரிந்திரர்க்கும் அரிய ரானார்
புரிச்சந் திரத்துள்ளார் போகத் துள்ளார்
பொருப்பரையன் மகளோடு விருப்ப ராகி
எரிச்சந் திரவேட்கு மிடத்தார் ஏம
கூடத்தார் பாடத்தே னிசையார் கீதர்
விரிச்சங்கை யெரிக்கொண்டங் காடும் வேடர்
வீழி மிழலையே மேவி னாரே. 10

6762. புன்கூரார் புறம்பயத்தார் புத்தூ ருள்ளார்
பூவணத்தார் புலிவலத்தார் வலியின் மிக்க
தன்கூர்மை கருதிவரை யெடுக்க லுற்றான்
தலைகளொடு மலைகளன்ன தாளுந்தோளும்
பொன்கூருங் கழலடியோர் விரலா லூன்றிப்
பொருப்பதன்கீழ் நெரித்தருள்செய் புவன நாதர்
மின்கூருஞ் சடைமுடியார் விடையின் பாகர்
வீழி மிழலையே மேவி னாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 52. திருவீழிமிழலை – திருத்தாண்டகம்

6763. கண்ணவன்காண் கண்ணொளிசேர் காட்சி யான்காண்
கந்திருவம் பாட்டிசையிற் காட்டு கின்ற
பண்ணவன்காண் பண்ணவற்றின் திறலா னான்காண்
பழமாகிச் சுவையாகிப் பயக்கின் றான்காண்
மண்ணவன்காண் தீயவன்காண் நீரா னான்காண்
வந்தலைக்கும் மாருதன்காண் மழைமே கஞ்சேர்
விண்ணவன்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 1

6764. ஆலைப் படுகரும்பின் சாறு போல
அண்ணிக்கும் அஞ்செழுத்தின் நாமத் தான்காண்
சீல முடையடியார் சிந்தை யான்காண்
திரிபுரமுன் றெரிபடுத்த சிலையி னான்காண்
பாலினொடு தயிர்நறுநெய் யாடி னான்காண்
பண்டரங்க வேடன்காண் பலிதேர் வான்காண்
வேலை விடமுண்ட மிடற்றி னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 2

6765. தண்மையொடு வெம்மைதா னாயி னான்காண்
சக்கரம் புட்பாகற் கருள்செய் தான்காண்
கண்ணுமொரு மூன்றுடைய காபாலி காண்
காமனுடல் வேவித்த கண்ணி னான்காண்
எண்ணில்சமண் தீர்த்தென்னை யாட்கொண் டான்காண்
இருவர்க் கெரியா யருளி னான்காண்
விண்ணவர்கள் போற்ற இருக்கின் றான்காண்
விண்ணிழிதன் வீழி மிழலை யானே. 3

6766. காதிசைந்த சங்கக் குழையி னான்காண்
கனக மலையனைய காட்சி யான்காண்
மாதிசைந்த மாதவமுஞ் சோதித் தான்காண்
வல்லேன வெள்ளெயிற்றா பரணத் தான்காண்
ஆதியன்காண் அண்டத்துக் கப்பா லான்காண்
ஐந்தலைமா நாகம்நாண் ஆக்கி னான்காண்
வேதியன்காண் வேதவிதி காட்டி னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 4

6767. நெய்யினொடு பாலிளநீ ராடி னான்காண்
நித்தமண வாளனென நிற்கின் றான்காண்
கையின்மழு வாளொடுமா னேந்தி னான்காண்
காலனுயிர் காலாற் கழிவித் தான்காண்
செய்யதிரு மேனிவெண் ணீற்றி னான்காண்
செஞ்சடைமேல் வெண்மதியஞ் சேர்த்தி னான்காண்
வெய்யகனல் விளையாட் டாடி னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 5

6768. கண்துஞ்சுங் கருநெடுமால் ஆழி வேண்டிக்
கண்ணிடந்து சூட்டக்கண் டருளு வான்காண்
வண்டுண்ணும் மதுக்கொன்றை வன்னி மத்தம்
வான்கங்கை சடைக்கரந்த மாதே வன்காண்
பண்தங்கு மொழிமடவாள் பாகத் தான்காண்

பரமன்காண் பரமேட்டி யாயி னான்காண்
வெண்திங்க ளரவொடுசெஞ் சடைவைத் தான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 6

6769. கற்பொலிதோள் சலந்தரனைப் பிளந்த ஆழி
கருமாலுக் கருள்செய்த கருணை யான்காண்
விற்பொலிதோள் விசயன்வலி தேய்வித் தான்காண்
வேடுவனாய்ப் போர்பொருது காட்டி னான்காண்
தற்பரமாந் தற்பரமாய் நிற்கின் றான்காண்
சதாசிவன்காண் தன்னொப்பா ரில்லா தான்காண்
வெற்பரையன் பாவை விருப்பு ளான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 7

6770. மெய்த்தவன்காண் மெய்த்தவத்தில் நிற்பார்க் கெல்லாம்
விருப்பிலா இருப்புமன வினையர்க் கென்றும்
பொய்த்தவன்காண் புத்தன் மறவா தோடி
யேறிசல்லி புதுமலர்க ளாக்கி னான்காண்
உய்த்தவன்காண் உயர்கதிக்கே உள்கி னாரை
உலகனைத்தும் ஒளித்தளித்திட் டுய்யச் செய்யும்
வித்தகன்காண் வித்தகர்தாம் விரும்பி யேத்தும்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 8

6771. சந்திரனைத் திருவடியால் தளர்வித் தான்காண்
தக்கனையும் முனிந்தெச்சன் தலைகொண் டான்காண்
இந்திரனைத் தோள்முறிவித் தருள்செய் தான்காண்
ஈசன்காண் நேசன்காண் நினைவோர்க் கெல்லாம்
மந்திரமும் மறைப்பொருளு மாயி னான்காண்
மாலொடயன் மேலொடுகீழ் அறியா வண்ணம்
வெந்தழலின் விரிசுடராய் ஓங்கி னான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 9

6772. ஈங்கைப்பே ரீமவனத் திருக்கின் றான்காண்
எம்மான்காண் கைம்மாவி னுரிபோர்த் தான்காண்
ஓங்குமலைக் கரையன்றன் பாவை யோடும்
ஒருருவாய் நின்றான்காண் ஓங்கா ரன்காண்
கோங்குமலர்க் கொன்றையந்தார்க் கண்ணி யான்காண்
கொல்லேறு வெல்கொடிமேற் கூட்டி னான்காண்
வேங்கைவரிப் புலித்தோல்மே லாடை யான்காண்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருவீழிமிழலை – திருத்தாண்டகம்

6773. மானேறு கரமுடைய வரதர் போலும்
மால்வரைகால் வளைவில்லா வளைத்தார் போலுங்
கானேறு கரிகதற வுரித்தார் போலுங்
கட்டங்கங் கொடிதுடிகைக் கொண்டார் போலுந்
தேனேறு திருஇதழித் தாரார் போலுந்
திருவீழி மிழலையமர் செல்வர் போலும்
ஆனேற தேறும் அழகர் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 1

6774. சமரம்மிகு சலந்தரன்போர் வேண்டி னானைச்
சக்கரத்தாற் பிளப்பித்த சதுரர் போலும்
நமனையொரு கால்குறைத்த நாதர் போலும்
நாரணனை யிடப்பாகத் தடைத்தார் போலுங்
குமரனையும் மகனாக வுடையார் போலுங்
குளிர்வீழி மிழலையமர் குழகர் போலும்
அமரர்கள்பின் அமுதுணநஞ் சுண்டார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 2

6775. நீறணிந்த திருமேனி நிமலர் போலும்
நேமிநெடு மாற்கருளிச் செய்தார் போலும்
ஏறணிந்த கொடியுடையெம் மிறைவர் போலும்
எயில்மூன்றும் எரிசரத்தா லெய்தார் போலும்
வேறணிந்த கோலமுடை வேடர் போலும்
வியன்வீழி மிழலையுறை விகிர்தர் போலும்
ஆறணிந்த சடாமகுடத் தழகர் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 3

6776. கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலுங்
கயாசுரனை யவனாற்கொல் வித்தார் போலுஞ்
செய்வேள்வித் தக்கனைமுன் சிதைத்தார் போலுந்
திசைமுகன்றன் சிரமொன்று சிதைத்தார் போலும்
மெய்வேள்வி மூர்த்திதலை யறுத்தார் போலும்
வியன்வீழி மிழலையிடங் கொண்டார் போலும்
ஐவேள்வி ஆறங்க மானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 4

6777. துன்னத்தின் கோவணமொன் றுடையார் போலுஞ்
சுடர்மூன்றுஞ் சோதியுமாய்த் தூயார் போலும்
பொன்னொத்த திருமேனிப் புனிதர் போலும்

பூதகணம் புடைசூழ வருவார் போலும்
மின்னொத்த செஞ்சடைவெண் பிறையார் போலும்
வியன்வீழி மிழலைசேர் விமலர் போலும்
அன்னத்தே ரயன்முடிசே ரடிகள் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 5

6778. மாலாலும் அறிவறிய வரதர் போலும்
மறவாதார் பிறப்பறுக்க வல்லார் போலும்
நாலாய மறைக்கிறைவ ரானார் போலும்
நாமவெழுத் தஞ்சாய நம்பர் போலும்
வேலார்கை வீரியைமுன் படைதார்போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
ஆலாலம் மிடற்றடக்கி அளித்தார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 6

6779. பஞ்சடுத்த மெல்விரலாள் பங்கர் போலும்
பைந்நாகம் அரைக்கசைத்த பரமர் போலும்
மஞ்சடுத்த மணிநீல கண்டர் போலும்
வடகயிலை மலையுடைய மணாளர் போலுஞ்
செஞ்சடைக்கண் வெண்பிறைகொண் டணிந்தார் போலுந்
திருவீழி மிழலையமர் சிவனார் போலும்
அஞ்சடக்கும் அடியவர்கட் கணியார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 7

6780. குண்டரொடு பிரித்தெனையாட் கொண்டார் போலுங்
குடமூக்கி லிடமாக்கிக் கொண்டார் போலும்
புண்டரிகப் புதுமலரா தனத்தார் போலும்
புள்ளரசைக் கொன்றுயிர்பின் கொடுத்தார் போலும்
வெண்டலையிற் பலிகொண்ட விகிர்தர் போலும்
வியன்வீழி மிழலைநக ருடையார் போலும்
அண்டத்துப் புறத்தப்பா லானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 8

6781. முத்தனைய முகிழ்முறுவ லுடையார் போலும்
மொய்பவளக் கொடியனைய சடையார் போலும்
எத்தனையும் பத்திசெய்வார்க் கினியார் போலும்
இருநான்கு மூர்த்திகளு மானார் போலும்
மித்திரவச் சிரவணற்கு விருப்பர் போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
அத்தனொடும் அம்மையெனக் கானார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 9

6782. கரியுரிசெய் துமைவெருவக் கண்டார் போலுங்
கங்கையையுஞ் செஞ்சடைமேற் கரந்தார் போலும்
எரியதொரு கைதரித்த இறைவர் போலும்
ஏனத்தின் கூனெயிறு பூண்டார் போலும்
விரிகதிரோ ரிருவரைமுன் வெகுண்டார் போலும்
வியன்வீழி மிழலையமர் விமலர் போலும்
அரிபிரமர் துதிசெயநின் றளித்தார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 10

6783. கயிலாய மலையெடுத்தான் கதறி வீழக்
கால்விரலா லடர்த்தருளிச் செய்தார் போலுங்
குயிலாய மென்மொழியாள் குளிர்ந்து நோக்கக்
கூத்தாட வல்ல குழகர் போலும்
வெயிலாய சோதிவிளக் கானார் போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
அயிலாய மூவிலைவேற் படையார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 54. திருப்புள்ளிருக்குவேளூர் – திருத்தாண்டகம்

6784. ஆண்டானை அடியேனை ஆளாக் கொண்டு
அடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் தன்னை
நேமிவான் படையால்நீ ளுரவோன் ஆகங்
கீண்டானைக் கேதாரம் மேவினானைக் கேடிலியைக்
கிளர் பொறிவா ளரவோ டென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 1

6785. சீர்த்தானைச் சிறந்தடியேன் சிந்தை யுள்ளே
திகழ்ந்தானைச் சிவன்தன்னைத் தேவ தேவைக்
கூர்த்தானைக் கொடுநெடுவேற் கூற்றந் தன்னைக்
குரைகழலாற் குமைத்துமுனி கொண்ட அச்சம்
பேர்த்தானைப் பிறப்பிலியை இறப்பொன் றில்லாப்
பெம்மானைக் கைம்மாவி னுரிவை பேணிப்

போர்த்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 2

6786. பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை
எம்மானை என்னுள்ளத் துள்ளே யூறும்
அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்குந் தீங்கரும்பை அரனை ஆதிப்
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 3

6787. இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி
யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை ஆதிமா தவத்து ளானை
ஆறங்கம் நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 4

6788. மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தி லிரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலின் நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 5

6789. அறையார்பொற் கழலார்ப்ப அணியார் தில்லை
அம்பலத்துள் நடமாடும் அழகன் தன்னைக்
கறையார்மூ விலைநடுவேற் கடவுள் தன்னைக்
கடல்நாகைக் காரோணங் கருதி னானை
இறையானை என்னுள்ளத் துள்ளே விள்ளா
திருந்தானை ஏழ்பொழிலுந் தாங்கி நின்ற
பொறையானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 6

6790. நெருப்பனைய திருமேனி வெண்ணீற் றானை
நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற
விருப்பவனை வேதியனை வேதவித்தை வெண்காடும்
வியன் துருத்தி நகரும் மேவி
இருப்பவனை யிடைமருதோ டீங்கோய் நீங்கா
இறையவனை யெனையாளுங் கயிலை யென்னும்
பொருப்பவனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 7

6791. பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமுந் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 8

6792. பண்ணியனைப் பைங்கொடியாள் பாகன் தன்னைப்
படர்சடைமேற் புனல்கரந்த படிறன் தன்னை
நண்ணியனை யென்னாக்கித் தன்னா னானை
நான்மறையின் நற்பொருளை நளிர்வெண் திங்கள்
கண்ணியனைக் கடியநடை விடையொன் றேறுங்
காரணனை நாரணனைக் கமலத் தோங்கும்
புண்ணியனைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 9

6793. இறுத்தானை யிலங்கையர்கோன் சிரங்கள் பத்தும்
எழுநரம்பின் இன்னிசைகேட் டின்புற் றானை
அறுத்தானை அடியார்தம் அருநோய் பாவம்
அலைகடலில் ஆலால முண்டு கண்டங்
கறுத்தானைக் கண்ணழலாற் காமன் ஆகங்
காய்ந்தானைக் கனன்மழுவுங் கலையு மங்கை
பொறுத்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 55. திருப்பிலாயம் – போற்றித் திருத்தாண்டகம்

6794. வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

6795. பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

6796. மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
யுள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

6797. வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

6798. ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
யெராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

6799. சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

6800. பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

6801. இமையா துயிரா யிருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழி யேழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

6802. மூவாய்ப் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி

தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
யல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

6803. நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியு மிகலி போற்றி
யங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடிய வன்கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

6804. உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 56. திருகயிலாயம் – போற்றித்திருத்தாண்டகம்

6805. பொறையுடைய பூமிநீ ரானாய் போற்றி
பூதப் படையாள் புனிதா போற்றி
நிறையுடைய நெஞ்சின் இடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி
வானோர் வணங்கப் படுவாய் போற்றி
கறையுடைய கண்டமுடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

6806. முன்பாகி நின்ற முதலே போற்றி
மூவாத மேனிமுக் கண்ணா போற்றி
அன்பாகி நின்றார்க் கணியாய் போற்றி
ஆறேறு சென்னிச் சடையாய் போற்றி
என்பாக எங்கும் அணிந்தாய் போற்றி
யென்சிந்தை நீங்கா இறைவா போற்றி
கண்பாவி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

6807. மாலை யெழுந்த மதியே போற்றி
மன்னியென் சிந்தை யிருந்தாய் போற்றி
மேலை வினைக ளறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி
அடியார்கட் காரமுத மானாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

6808. உடலின் வினைக ளறுப்பாய் போற்றி
ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி
படருஞ் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரில் திகழ்கின்ற சோதி போற்றி
தோன்றியென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கடலி லொளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

6809. மைசேர்ந்த கண்ட முடையாய் போற்றி
மாலுக்கும் ஓராழி யீந்தாய் போற்றி
பொய்சேர்ந்த சிந்தை புகாதாய் போற்றி
போகாதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
மெய்சேரப் பால்வெண்ணீ றாடீ போற்றி
மிக்கார்க ளேத்தும் விளக்கே போற்றி
கைசே ரனலேந்தி யாடீ போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

6810. ஆறேறு சென்னி முடியாய் போற்றி
அடியார்கட் காரமுதாய் நின்றாய் போற்றி
நீறேறு மேனி யுடையாய் போற்றி
நீங்காதென் னுள்ளத் திருந்தாய் போற்றி
கூறேறு மங்கை மழுவா போற்றி

கொள்ளுங் கிழமையே ழானாய் போற்றி
காறேறு கண்ட மிடற்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

6811. அண்டமே ழுன்று கடந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
பண்டை வினைக எறுப்பாய் போற்றி
பாரோர் விண்ணேத்தப் படுவாய் போற்றி
தொண்டர் பரவு மிடத்தாய் போற்றி
தொழில்நோக்கி யாளுஞ் சுடரே போற்றி
கண்டங் கறுக்கவும் வல்லாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

6812. பெருகி யலைக்கின்ற ஆறே போற்றி
பேராநோய் பேர விடுப்பாய் போற்றி
உருகி நினைவார்தம் முள்ளாய் போற்றி
ஊனந் தவிர்க்கும் பிரானே போற்றி
அருகி மிளிர்கின்ற பொன்னே போற்றி
யாரு மிகழப் படாதாய் போற்றி
கருகிப் பொழிந்தோடு நீரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

6813. செய்ய மலர்மேலான் கண்ணன் போற்றித்
தேடி யுணராமை நின்றாய் போற்றி
பொய்யாநஞ் சுண்ட பொறையே போற்றி
பொருளாக வென்னையாட் கொண்டாய் போற்றி
மெய்யாக ஆனஞ் சுகந்தாய் போற்றி
மிக்கார்க ளேத்துங் குணத்தாய் போற்றி
கையானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

6814. மேல்வைத்த வானோர் பெருமான் போற்றி
மேலாடு புரமூன்று மெய்தாய் போற்றி
சீலத்தான் தென்னிலங்கை மன்னன் போற்றிச்
சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி
கோலத்தாற் குறைவில்லான் தன்னை யன்று
கொடிதாகக் காய்ந்த குழகா போற்றி
காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 57. ஸ்ரீகயிலாயம் – போற்றித்திருத்தாண்டகம்

6815. பாட்டான நல்ல தொடையாய் போற்றி
பரிசை யறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கள் முடியாய் போற்றி
தூமாலை மத்த மணிந்தாய் போற்றி
ஆட்டான தஞ்சு மமர்ந்தாய் போற்றி
அடங்கார் புரமெரிய நக்காய் போற்றி
காட்டானை மெய்த்தோ லுரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

6816. அதிரா வினைக ளறுப்பாய் போற்றி
ஆல நிழற்கீ ழமர்ந்தாய் போற்றி
சதுரா சதுரக் குழையாய் போற்றி
சாம்பர் மெய்பூசுந் தலைவா போற்றி
எதிரா வுலக மமைப்பாய் போற்றி
யென்றும் மீளாவருள் செய்வாய் போற்றி
கதிரார் கதிருக்கோர் கண்ணே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

6817. செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வ முடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
ஆகாய வண்ண முடையாய் போற்றி
வெய்யாய் தணியா யணியாய் போற்றி
வேளாத வேள்வி யுடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

6818. ஆட்சி யுலகை யுடையாய் போற்றி
அடியார்க் கமுதெலாம் ஈவாய் போற்றி
சூட்சி சிறிது மிலாதாய் போற்றி
சூழ்ந்த கடல்நஞ்ச முண்டாய் போற்றி
மாட்சி பெரிது முடையாய் போற்றி
மன்னியென் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிது மரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

6819. முன்னியா நின்ற முதல்வா போற்றி
மூவாத மேனி யுடையாய் போற்றி
என்னியா யெந்தை பிரானே போற்றி
யேழி னிசையே யுகப்பாய் போற்றி
மன்னிய மங்கை மணாளா போற்றி

மந்திரமுந் தந்திரமு மானாய் போற்றி
கன்னியார் கங்கைத் தலைவா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

6820. உரியா யுலகினுக் கெல்லாம் போற்றி
உணர்வென்னும் ஊர்வ துடையாய் போற்றி
எரியாய தெய்வச் சுடரே போற்றி
யேசுமா முண்டி யுடையாய் போற்றி
அரியா யமரர்கட் கெல்லாம் போற்றி
அறிவே யடக்க முடையாய் போற்றி
கரியானுக் காழியன் றீந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

6821. எண்மேலு மெண்ண முடையாய் போற்றி
யேறரிய வேறுங் குணத்தாய் போற்றி
பண்மேலே பாவித் திருந்தாய் போற்றி
பண்ணொடி யாழ்வீணை பயின்றாய் போற்றி
விண்மேலும் மேலும் நிமிர்ந்தாய் போற்றி
மேலார்கண் மேலார்கண் மேலாய் போற்றி
கண்மேலுங் கண்ணொன் றுடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

6822. முடியார் சடையின் மதியாய் போற்றி
முழுநீறு சண்ணித்த மூர்த்தி போற்றி
துடியா ரிடையுமையாள் பங்கா போற்றி
சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி
அடியா ரடிமை அறிவாய் போற்றி
அமரர் பதியாள வைத்தாய் போற்றி
கடியார் புரமூன்று மெய்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

6823. போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி
யெண்ணா யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கும் மாற்கும் அரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9—10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 58. திருவலம்புரம் – திருத்தாண்டகம்

6824. மண்ணளந்த மணிவண்ணர் தாமும் மற்றை
மறையவனும் வானவருஞ் சூழ நின்று
கண்மலிந்த திருநெற்றி யுடையா ரொற்றைக்
கதநாகங் கையுடையார் காணீ ரன்றே
பண்மலிந்த மொழியவரும் யானு மெல்லாம்
பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல
மண்மலிந்த வயல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 1

6825. சிலைநவின்ற தொருகணையாற் புரமூன் றெய்த
தீவண்ணர் சிறந்திமையோ ரிறைஞ்சி யேத்தக்
கொலைநவின்ற களியானை யுரிவை போர்த்துக்
கூத்தாடித் திரிதருமக் கூத்தர் நல்ல
கலைநவின்ற மறையவர்கள் காணக் காணக்
கடுவிடைமேற் பாரிடங்கள் சூழக் காதல்
மலைமகளுங் கங்கையுந் தாமு மெல்லாம்
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 2

6826. தீக்கூருந் திருமேனி யொருபால் மற்றை
யொருபாலும் அரியுருவந் திகழ்ந்த செல்வர்
ஆக்கூரில் தான்தோன்றி புகுவார் போல
அருவினையேன் செல்வதுமே யப்பா லெங்கும்
நோக்கா ரொருவிடத்து நூலுந் தோலுந்
துதைந்திலங்குந் திருமேனி வெண்ணீ றாடி
வாக்கால் மறைவிரித்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 3

6827. மூவாத மூக்கப்பாம் பரையிற் சாத்தி
மூவ ருருவாய முதல்வ ரிந்நாள்
கோவாத எரிகணையைச் சிலைமேற் கோத்த
குழகனார் குளிர்கொன்றை சூடி யிங்கே
போவாரைக் கண்டடியேன் பின்பின் செல்லப்
புறக்கணித்துத் தம்முடைய பூதஞ் சூழ
வாவா வெனவுரைத்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 4

6828. அனலொருகை யதுவேந்தி யதளி னோடே
ஐந்தலைய மாநாகம் அரையிற் சாத்திப்
புனல்பொதிந்த சடைக்கற்றைப் பொன்போல் மேனிப்

புனிதனார் புரிந்தமர ரிறைஞ்சி யேத்தச்
சினவிடையை மேல்கொண்டு திருவா ரூருஞ்
சிரபுரமும் இடைமருதுஞ் சேர்வார் போல
மனமுருக வளைகழல மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 5

6829. கறுத்ததொரு கண்டத்தர் காலன் வீழக்
காலினாற் காய்ந்துகந்த காபா லியார்
முறித்ததொரு தோலுடுத்து முண்டஞ் சாத்தி
முனிகணங்கள் புடைசூழ முற்றந் தோறுந்
தெறித்ததொரு வீணையராய்ச் செல்வார் தம்வாய்ச்
சிறுமுறுவல் வந்தெனது சிந்தை வௌவ
மறித்தொருகால் நோக்காதே மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 6

6830. பட்டுடுத்துப் பவளம்போல் மேனி யெல்லாம்
பசுஞ்சாந்தங் கொண்டணிந்து பாதம் நோவ
இட்டெடுத்து நடமாடி யிங்கே வந்தார்க்
கெவ்வூரீ ரெம்பெருமா னென்றே னாவி
விட்டிடுமா றதுசெய்து விரைந்து நோக்கி
வேறொர் பதிபுகப் போவார் போல
வட்டணைகள் படநடந்து மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 7

6831. பல்லார் பயில்பழனம் பாசூ ரென்று
பழனம் பதிபழமை சொல்லி நின்றார்
நல்லார் நனிபள்ளி யின்று வைகி
நாளைப்போய் நள்ளாறு சேர்து மென்றார்
சொல்லா ரொருவிடமாத் தோள்கை வீசிச்
சுந்தரராய் வெந்தநீ றாடி யெங்கும்
மல்லார் வயல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 8

6832. பொங்கா டரவொன்று கையிற் கொண்டு
போர்வெண் மழுவேந்திப் போகா நிற்பர்
தங்கா ரொருவிடத்துந் தம்மே லார்வந்
தவிர்த்தருளார் தத்துவத்தே நின்றே னென்பர்
எங்கே யிவர்செய்கை யொன்றொன் றொவ்வா
என்கண்ணில் நின்றகலா வேடங் காட்டி
மங்குல் மதிதவழும் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே. 9

6833. செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ் சேதுபந்
 தனஞ்செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற போரரக்கன்
 நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலா லிறையே யூன்றி யடர்த்தவற்கே
 அருள்புரிந்த அடிக ளிந்நாள்
வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி வலம்புரமே
 புக்கங்கே மன்னி னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 59. திருவெண்ணியூர் – திருத்தாண்டகம்

6834. தொண்டிலங்கும் அடியவர்க்கோர் நெறியி னாருந்
 தூநீறு துதைந்திலங்கு மார்பி னாரும்
புண்டரிகத் தயனொடுமால் காணா வண்ணம்
 பொங்குதழற் பிழம்பாய புராண னாரும்
வண்டமரும் மலர்க்கொன்றை மாலை யாரும்
 வானவர்க்கா நஞ்சுண்ட மைந்த னாரும்
விண்டவர்தம் புரமூன்று மெரிசெய் தாரும்
 வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 1

6835. நெருப்பனைய மேனிமேல் வெண்ணீற் றாரும்
 நெற்றிமே லொற்றைக்கண் நிறைவித் தாரும்
பொருப்பரையன் மடப்பாவை யிடப்பா லாரும்
 பூந்துருத்தி நகர்மேய புராண னாரும்
மருப்பனைய வெண்மதியக் கண்ணி யாரும்
 வளைகுளமும் மறைக்காடும் மன்னி னாரும்
விருப்புடைய அடியவர்தம் முள்ளத் தாரும்
 வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 2

6836. கையுலா மூவிலைவே லேந்தி னாருங்
 கரிகாட்டி லெரியாடுங் கடவு ளாரும்
பையுலா நாகங்கொண் டாட்டு வாரும்
 பரவுவார் பாவங்கள் பாற்று வாரும்
செய்யுலாங் கயல்பாய வயல்கள் சூழ்ந்த
 திருப்புன்கூர் மேவிய செல்வ னாரும்

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 3

6837. சடையேறு புனல்வைத்த சதுர னாருந்
தக்கன்றன் பெருவேள்வி தடைசெய் தாரும்
உடையேறு புலியதள்மேல் நாகங் கட்டி
யுண்பலிக்கென் றூரூரி னுழிதர் வாரும்
மடையேறிக் கயல்பாய வயல்கள் சூழ்ந்த
மயிலாடு துறையுறையும் மணாள னாரும்
விடையேறு வெல்கொடியெம் விமல னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 4

6838. மண்ணிலங்கு நீரனல்கால் வானு மாகி
மற்றவற்றின் குணமெலா மாய்நின் றாரும்
பண்ணிலங்கு பாடலோ டாட லாரும்
பருப்பதமும் பாசூரும் மன்னி னாருங்
கண்ணிலங்கு நுதலாருங் கபால மேந்திக்
கடைதோறும் பலிகொள்ளுங் காட்சி யாரும்
விண்ணிலங்கு வெண்மதியக் கண்ணி யாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 5

6839. வீடுதனை மெய்யடியார்க் கருள்செய் வாரும்
வேலைவிட முண்டிருண்ட கண்டத் தாருங்
கூடலர்தம் மூவெயிலு மெரிசெய் தாருங்
குரைகழலாற் கூற்றுவனைக் குமைசெய் தாரும்
ஆடுமர வரைக்கசைத்தங் காடு வாரும்
ஆலமர நீழலிருந் தறஞ்சொன் னாரும்
வேடுவனாய் மேல்விசையற் கருள்செய் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 6

6840. மட்டிலங்கு கொன்றையந்தார் மாலை சூடி
மடவா ளவளோடு மானொன் றேந்திச்
சிட்டிலங்கு வேடத்த ராகி நாளுஞ்
சில்பலிக்கென் றூரூர் திரிதர் வாருங்
கட்டிலங்கு பாசத்தால் வீச வந்த
காலன்றன் கால மறுப்பார் தாமும்
விட்டிலங்கு வெண்குழைசேர் காதி னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 7

6841. செஞ்சடைக்கோர் வெண்திங்கள் சூடி னாருந்
திருவால வாயுறையுஞ் செல்வ னாரும்
அஞ்சனக்கண் அரிவையொரு பாகத் தாரும்
ஆறங்கம் நால்வேத மாய்நின் றாரும்
மஞ்சடுத்த நீள்சோலை மாட வீதி
மதிலாரூர் புக்கங்கே மன்னி னாரும்
வெஞ்சினத்த வேழமது வுரிசெய் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 8

6842. வளங்கிளர்மா மதிசூடும் வேணி யாரும்
வானவர்க்காய் நஞ்சுண்ட மைந்த னாருங்
களங்கொளவென் சிந்தையுள்ளே மன்னி னாருங்
கச்சியே கம்பத்தெங் கடவு ளாரும்
உளங்குளிர அமுதூறி யண்ணிப் பாரும்
உத்தமரா யெத்திசையும் மன்னி னாரும்
விளங்கிளரும் வெண்மழுவொன் றேந்தி னாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 9

6843. பொன்னிலங்கு கொன்றையந்தார் மாலை சூடிப்
புகலூரும் பூவணமும் பொருந்தி னாருங்
கொன்னிலங்கு மூவிலைவே லேந்தி னாருங்
குளிரார்ந்த செஞ்சடையெங் குழக னாருந்
தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள் பத்துந்
திருவிரலா லடர்த்தவனுக் கருள்செய் தாரும்
மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 60. திருக்கற்குடி – திருத்தாண்டகம்

6844. மூத்தவனை வானவர்க்கும் மூவா மேனி
முதலவனைத் திருவரையின் மூர்க்கப் பாம்பொன்
றார்த்தவனை யக்கரவ மார மாக
அணிந்தவனைப் பணிந்தடியா ரடைந்த வன்போ
டேத்தவனை யிறுவரையில் தேனை ஏனோர்க்
கின்னமுத மளித்தவனை யிடரை யெல்லாங்

காத்தவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

6845. செய்யானை வெளியானைக் கரியான் தன்னைத்
திசைமுகனைத் திசையெட்டுஞ் செறிந்தான் தன்னை
ஐயானை நொய்யானைச் சீரி யானை
அணியானைச் சேயானை ஆனஞ் சாடும்
மெய்யானைப் பொய்யாது மில்லான் தன்னை
விடையானைச் சடையானை வெறித்த மான்கொள்
கையானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 2

6846. மண்ணதனில் ஐந்தை மாநீரில் நான்கை
வயங்கெரியில் மூன்றை மாருதத் திரண்டை
விண்ணதனி லொன்றைவிரி கதிரைத் தண்மதியைத்
தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனி லெழுத்தை ஏழிசையைக் காம
னெழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 3

6847. நற்றவனைப் புற்றரவம் நாணி னானை
நாணாது நகுதலையூண் நயந்தான் தன்னை
முற்றவனை மூவாத மேனி யானை
முந்நீரின் நஞ்சமுகந் துண்டான் தன்னைப்
பற்றவனைப் பற்றார்தம் பதிகள் செற்ற
படையானை அடைவார்தம் பாவம் போக்கக்
கற்றவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 4

6848. சங்கைதனைத் தவிர்த்தாண்ட தலைவன் தன்னைச்
சங்கரனைத் தழலுறுதாள் மழுவாள் தாங்கும்
அங்கையனை அங்கமணி ஆகத் தானை
ஆகத்தோர் பாகத்தே அமர வைத்த
மங்கையனை மதியொடுமா சுணமுந் தம்மின்
மருவவிரி சடைமுடிமேல் வைத்த வான்நீர்க்
கங்கையனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 5

6849. பெண்ணவனை ஆணவனைப் பேடா னானைப்
பிறப்பிலியை யிறப்பிலியைப் பேரா வாணி
விண்ணவனை விண்ணவர்க்கும் மேலா னானை
வேதியனை வேதத்தின் கீதம் பாடும்
பண்ணவனைப் பண்ணில்வரு பயனா னானைப்
பாரவனைப் பாரில்வாழ் உயிர்கட் கெல்லாங்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 6

6850. பண்டானைப் பரந்தானைக் குவிந்தான் தன்னைப்
பாரானை விண்ணாயிவ் வுலக மெல்லாம்
உண்டானை உமிழ்ந்தானை உடையான் தன்னை
யொருவருந்தன் பெருமைதனை அறிய வொண்ணா
விண்டானை விண்டார்தம் புரங்கள் மூன்றும்
வெவ்வழலில் வெந்துபொடி யாகி வீழக்
கண்டானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 7

6851. வானவனை வானவர்க்கும் மேலா னானை
வணங்குமடி யார்மனத்துள் மருவிப் புக்க
தேனவனைத் தேவர்தொழு கழலான் தன்னைச்
செய்குணங்கள் பலவாகி நின்ற வென்றிக்
கோனவனைக் கொல்லைவிடை யேற்றி னானைக்
குழல்முழவ மியம்பக்கூத் தாட வல்ல
கானவனைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 8

6852. கொலையானை யுரிபோர்த்த கொள்கை யானைக்
கோளரியைக் கூரம்பா வரைமேற் கோத்த
சிலையானைச் செம்மைதரு பொருளான் தன்னைத்
திரிபுரத்தோர் மூவர்க்குச் செம்மை செய்த
தலையானைத் தத்துவங்க ளானான் தன்னைத்
தையலோர் பங்கினனைத் தன்கை யேந்து
கலையானைக் கற்குடியில் விழுமி யானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 9

6853. பொழிலானைப் பொழிலாரும் புன்கூ ரானைப்
புறம்பயனை அறம்புரிந்த புகலூ ரானை

*ஏழிலானை இடைமருதி னிடங்கொண் டானை*
*ஈங்கோய்நீங் காதுறையும் இறைவன் தன்னை*
*அழலாடு மேனியனை அன்று சென்றக்*
*குன்றெடுத்த அரக்கன்தோள் நெரிய வூன்றுங்*
*கழலானைக் கற்குடியில் விழுமி யானைக்*
*கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.* 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 61. திருக்கன்றாப்பூர் – திருத்தாண்டகம்

*6854. மாதினையோர் கூறுகந்தாய் மறைகொள் நாவா*
*மதிசூடி வானவர்கள் தங்கட் கெல்லாம்*
*நாதனே யென்றென்று பரவி நாளும்*
*நைந்துருகி வஞ்சகமற் றன்பு கூர்ந்து*
*வாதனையால் முப்பொழுதும் பூநீர் கொண்டு*
*வைகல் மறவாது வாழ்த்தி யேத்திக்*
*காதன்மையால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.* 1

*6855. விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற் பூசி*
*வெளுத்தமைந்த கீளொடுகோ வணமுந் தற்றுச்*
*செடியுடைய வல்வினைநோய் தீர்ப்பாய் என்றுஞ்*
*செல்கதிக்கு வழிகாட்டுஞ் சிவனே யென்றுந்*
*துடியனைய இடைமடவாள் பங்கா வென்றுஞ்*
*சுடலைதனில் நடமாடுஞ் சோதீ யென்றுங்*
*கடிமலர்தூய்த் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.* 2

*6856. எவரேனுந் தாமாக விலாடத் திட்ட*
*திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி*
*உவராதே யவரவரைக் கண்ட போது*
*உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி*
*யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி*
*யிரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்*
*கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.* 3

6857. இலங்காலஞ் செல்லாநா ளென்று நெஞ்சத்
திடையாதே யாவர்க்கும் பிச்சை யிட்டு
விலங்காதே நெறிநின்றங் கறிவே மிக்கு
மெய்யன்பு புகப்பெய்து பொய்யை நீக்கித்
துலங்காமெய் வானவரைக் காத்து நஞ்சம்
உண்டபிரா னடியிணைக்கே சித்தம் வைத்துக்
கலங்காதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 4

6858. விருத்தனே வேலைவிட முண்ட கண்டா
விரிசடைமேல் வெண்திங்கள் விளங்கச் சூடும்
ஒருத்தனே யுமைகணவா வுலக மூர்த்தி
நுந்தாத வொண்சுடரே அடியார் தங்கள்
பொருத்தனே யென்றென்று புலம்பிநாளும் புலனைந்தும்
அகத் தடக்கிப் புலம்பி நோக்கிக்
கருத்தினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 5

6859. பொசியினால் மிடைந்துபுழுப் பொதிந்த போர்வைப்
பொல்லாத புலாலுடம்பை நிலாசு மென்று
பசியினால் மீதூரப் பட்டே யீட்டிப்
பலர்க்குதவ லதுவொழிந்து பவள வாயார்
வசியினா லகப்பட்டு வீழா முன்னம்
வானவர்கோன் திருநாமம் அஞ்சுஞ் சொல்லிக்
கசிவினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 6

6860. ஐயினால் மிடறடைப்புண் டாக்கை விட்டு
ஆவியார் போவதுமே அகத்தார் கூடி
மையினாற் கண்ணெழுதி மாலை சூட்டி
மயானத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும்
ஐயனார்க் காளாகி அன்பு மிக்கு
அகங்குழைந்து மெய்யரும்பி அடிகள் பாதங்
கையினால் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 7

6861. திருதிமையால் ஐவரையுங் காவ லேவித்
திகையாதே சிவாயநம வென்னுஞ் சிந்தைச்

சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப வெள்ளக்
கடல்நீந்திக் கரையேறுங் கருத்தே மிக்குப்
பரிதிதனைப் பற்பறித்த பாவ நாசா
பரஞ்சுடரே யென்றென்று பரவி நாளுங்
கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதுறியைக் காண லாமே. 9

6862. குனிந்தசிலை யாற்புரமூன் றெரித்தாய் என்றுங்
கூற்றுதைத்த குரைகழற்சே வடியாய் என்றுந்
தனஞ்சயற்குப் பாசுபத மீந்தாய் என்றுந்
தசக்கிரிவன் மலையெடுக்க விரலா லூன்றி
முனிந்தவன்தன் சிரம்பத்துந் தாளுந் தோளும்
முரணழித்திட் டருள்கொடுத்த மூர்த்தி யென்றுங்
கனிந்துமிகத் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 62. திருவானைக்கா – திருத்தாண்டகம்

6863. எத்தாய ரெத்தந்தை யெச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவா ரொருவ ரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 1

6864. ஊனாகி உயிராகி யதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே யென்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்
தேனாருங் கொன்றையனே நின்றி யூராய்
திருவானைக் காவிலுறை சிவனே ஞானம்
ஆனாயுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 2

6865. ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வான்
ஒன்றலாத் தவத்தாரோ டுடனே நின்று
துப்பாருங் குறையடிசி றுற்றி நற்றுன்திறம்
மறந்து திரிவேனைக் காத்து நீவந்
தெப்பாலும் நுன்உணர்வே யாக்கி யென்னை
ஆண்டவனே யெழிலானைக் காவா வானோர்
அப்பாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 3

6866. நினைத்தவர்கள் நெஞ்சுளாய் வஞ்சக் கள்வா
நிறைமதியஞ் சடைவைத்தா யடையா துன்பான்
முனைந்தவர்கள் புரமூன்று மெரியச் செற்றாய்
முன்னானைத் தோல்போர்த்த முதல்வா வென்றுங்
கனைத்துவரு மெருதேறுங் காளை கண்டா
கயிலாய மலையாநின் கழலே சேர்ந்தேன்
அனைத்துலகும் ஆள்வானே ஆனைக் காவா
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 4

6867. இம்மாயப் பிறப்பென்னுங் கடலாந் துன்பத்
திடைச்சுழிப்பட் டிளைப்பேனை இளையா வண்ணங்
கைம்மான மனத்துதவிக் கருணைசெய்து
காதலரு ளவைவைத்தாய் காண நில்லாய்
வெம்மான மதகரியி னுரிவை போர்த்த
வேதியனே தென்னானைக் காவுள் மேய
அம்மான்நின் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியே னென்செய் கேனே. 5

6868. உரையாரும் புகழானே யொற்றி யூராய்
கச்சியே கம்பனே காரோ ணத்தாய்
விரையாரும் மலர்தூவி வணங்கு வார்பால்
மிக்கானே யக்கரவம் ஆரம் பூண்டாய்
திரையாரும் புனற்பொன்னித் தீர்த்தம் மல்கு
திருவானைக் காவிலுறை தேனே வானோர்
அரையாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 6

6869. மையாரும் மணிமிடற்றாய் மாதோர் கூறாய்
மான்மறியும் மாமழுவும் அனலு மேந்துங்

கையானே காலனுடல் மாளச் செற்ற
கங்காளா முன்கோளும் விளைவு மானாய்
செய்யானே திருமேனி யரியாய் தேவர்
குலக்கொழுந்தே தென்னானைக் காவுள் மேய
ஐயாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 7

6870. இலையாருஞ் சூலத்தாய் எண்தோ ளானே
யெவ்விடத்தும் நீயல்லா தில்லை யென்று
தலையாரக் கும்பிடுவார் தன்மை யானே
தழல்மடுத்த மாமேருக் கையில் வைத்த
சிலையானே திருவானைக் காவுள் மேய
தீயாடீ சிறுநோயால் நலிவுண் டுள்ளம்
அலையாதே நின்னடியே அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 8

6871. விண்ணாரும் புனல்பொதிசெஞ் சடையாய் வேத
நெறியானே யெறிகடலின் நஞ்ச முண்டாய்
எண்ணாரும் புகழானே உன்னை யெம்மா
னென்றென்றே நாவினில்எப் பொழுதும் உன்னிக்
கண்ணாரக் கண்டிருக்கக் களித்தெப் போதுங்
கடிபொழில்சூழ் தென்னானைக் காவுள் மேய
அண்ணாநின் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 9

6872. கொடியேயும் வெள்ளேற்றாய் கூளி பாடக்
குறட்பூதங் கூத்தாட நீயும் ஆடி
வடிவேயும் மங்கைதனை வைத்த மைந்தா
மதிலானைக் காவுளாய் மாகா ளத்தாய்
படியேயுங் கடலிலங்கைக் கோமான் தன்னைப்
பருமுடியுந் திரள்தோளும் அடர்த்து கந்த
அடியேவந் தடைந்தடிமை யாகப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 63. திருவானைக்கா – திருத்தாண்டகம்

6873. முன்னானைத் தோல்போர்த்த மூர்த்தி தன்னை
மூவாத சிந்தையே மனமே வாக்கே
தன்னானை யாப்பண்ணி யேறி னானைச்
சார்தற் கரியானைத் தாதை தன்னை
என்னானைக் கன்றினையென் ஈசன் தன்னை
யெறிநீர்த் திரையுகளுங் காவி ரிசூழ்
தென்னானைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 1

6874. மருந்தானை மந்திரிப்பார் மனத்து ளானை
வளர்மதியஞ் சடையானை மகிழ்ந்தென் உள்ளத்
திருந்தானை யிறப்பிலியைப் பிறப்பி லானை
இமையவர்தம் பெருமானை யுமையா ளஞ்சக்
கருந்தான மதகளிற்றி னுரிபோர்த் தானைக்
கனமழுவாட் படையானைப் பலிகொண் டூரூர்
திரிந்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 2

6875. முற்றாத வெண்திங்கள் கண்ணி யானை
முந்நீர்நஞ் சுண்டிமையோர்க் கமுதம் நல்கும்
உற்றானைப் பல்லுயிர்க்குந் துணையா னானை
ஓங்காரத் துட்பொருளை உலக மெல்லாம்
பெற்றானைப் பின்னிரக்கஞ் செய்வான் தன்னைப்
பிரானென்று போற்றாதார் புரங்கள் மூன்றுஞ்
செற்றானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 3

6876. காராரும் மணிமிடற்றெம் பெருமான் தன்னைக்
காதில்வெண் குழையானைக் கமழ்பூங் கொன்றைத்
தாரானைப் புலியதளி னாடை யானைத்
தானன்றி வேறொன்று மில்லா ஞானப்
பேரானை மணியாரம் மார்பி னானைப்
பிஞ்ஞகனைத் தெய்வநான் மறைகள் பூண்ட
தேரானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 4

6877. பொய்யேது மில்லாத மெய்யன் தன்னைப்
புண்ணியனை நண்ணாதார் புரம்நீ றாக
எய்தானைச் செய்தவத்தின் மிக்கான் தன்னை

ஏறமரும் பெருமானை யிடமான் ஏந்து
கையானைக் கங்காள வேடத் தானைக்
கட்டங்கக் கொடியானைக் கனல்போல் மேனிச்
செய்யானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 5

6878. கலையானைப் பரசுதர பாணி யானைக்
கனவயிரத் திரளானை மணிமா ணிக்க
மலையானை யென்தலையி னுச்சி யானை
வார்தருபுன் சடையானை மயானம் மன்னும்
நிலையானை வரியரவு நாணாக் கோத்து
நினையாதார் புரமெரிய வளைத்த மேருச்
சிலையானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 6

6879. ஆதியனை யெறிமணியி னோசை யானை
அண்டத்தார்க் கறிவொண்ணா தப்பால் மிக்க
சோதியனைத் தூமறையின் பொருளான் தன்னைச்
சுரும்பமரும் மலர்க்கொன்றைத் தொன்னூல் பூண்ட
வேதியனை அறமுரைத்த பட்டன் தன்னை
விளங்குமல ரயன்சிரங்கள் ஐந்தி லொன்றைச்
சேதியனைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 7

6880. மகிழ்ந்தானைக் கச்சியே கம்பன் தன்னை
மறவாது கழல்நினைந்து வாழ்த்தி ஏத்திப்
புகழ்ந்தாரைப் பொன்னுலகம் ஆள்விப் பானைப்
பூதகணப் படையானைப் புறங்காட் டாடல்
உகந்தானைப் பிச்சையே யிச்சிப் பானை
ஒண்பவளத் திரளையென் னுள்ளத் துள்ளே
திகழ்ந்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 8

6881. நசையானை நால்வேதத் தப்பா லானை
நல்குரவுந் தீப்பிணிநோய் காப்பான் தன்னை
இசையானை யெண்ணிறந்த குணத்தான் தன்னை
யிடைமருதும் ஈங்கோயும் நீங்கா தேற்றின்
மிசையானை விரிகடலும் மண்ணும் விண்ணும்
மிகுதீயும் புனலெறிகாற் றாகி யெட்டுத்
திசை யானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 9

6882.பார்த்தானைக் காமனுடல் பொடியாய் வீழப்
பண்டயன்மால் இருவர்க்கும் அறியா வண்ணஞ்
சீர்த்தானைச் செந்தழல்போ லுருவி னானைத்
தேவர்கள்தம் பெருமானைத் திறமுன் னாதே
ஆர்த்தோடி மலையெடுத்த இலங்கை வேந்தன்
ஆண்மையெலாங் கெடுத்தவன்தன் இடரப் போதே
தீர்த்தானைத் திருவானைக் காவு ளானைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 64. திருவேகம்பம் – திருத்தாண்டகம்

6883.கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண்
குவலயன்காண் குவலயத்தின் நீரா னான்காண்
காற்றவன்காண் கனலவன்காண் கலிக்கும் மின்காண்
கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை
நீற்றவன்காண் நிலவூருஞ் சென்னி யான்காண்
நிறையார்ந்த புனற்கங்கை நிமிர்ச டைமேல்
ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 1

6884.பரந்தவன்காண் பல்லுயிர்க ளாகி யெங்கும்
பணிந்தெழுவார் பாவமும் வினையும் போகத்
துரந்தவன்காண் தூமலரங் கண்ணி யான்காண்
தோற்ற நிலையிறுதிப் பொருளாய் வந்த
மருந்தவன்காண் வையங்கள் பொறைதீர்ப் பான்காண்
மலர்தூவி நினைந்தெழுவா ருள்ளம் நீங்கா
திருந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 2

6885.நீற்றவன்காண் நீராகித் தீயா னான்காண்
நிறைமழுவுந் தமருகமும் எரியுங் கையில்
தோற்றவன்காண் தோற்றக்கே டில்லா தான்காண்
துணையிலிகாண் துணையென்று தொழுவா ருள்ளம்
போற்றவன்காண் புகழ்கள்தமைப் படைத்தான் தான்காண்
பொறியரவம் விரிசடைமேற் புனலுங் கங்கை
ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 3

6886. தாயவன்காண் உலகிற்குத் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் மலைமங்கை பங்கா வென்பார்
வாயவன்காண் வரும்பிறவி நோய்தீர்ப் பான்காண்
வானவர்க்குந் தானவர்க்கும் மண்ணு ளோர்க்குஞ்
சேயவன்காண் நினைவார்க்குச் சித்த மாரத்
திருவடியே உள்கிநினைந் தெழுவா ருள்ளம்
ஏயவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 4

6887. அடுத்தானை யுரித்தான்காண். . . . . . . 5

6888. அழித்தவன்காண் எயில்மூன்றும் அயில்வா யம்பால்
ஐயாறும் இடைமருதும் ஆள்வான் தான்காண்
பழித்தவன்காண் அடையாரை அடைவார் தங்கள்
பற்றவன்காண் புற்றரவ நாணி னான்காண்
சுழித்தவன்காண் முடிக்கங்கை அடியே போற்றுந்
தூயமா முனிவர்க்காய்ப் பார்மேல் நிற்க
இழித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் கான்அவனென் எண்ணத் தானே. 6

6889. அசைந்தவன்காண் நடமாடிப் பாடல் பேணி
அழல்வண்ணத் தில்லடியும் முடியுந் தேடப்
பசைந்தவன்காண் பேய்க்கணங்கள் பரவி யேத்தும்
பான்மையன்காண் பரவிநினைந் தெழுவார் தம்பால்
கசிந்தவன்காண் கரியினுரி போர்த்தான் தான்காண்
கடல்விடம் உண்டமரர்க் கமுத மீய
இசைந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 7

6890. முடித்தவன்காண் வன்கூற்றைச் சீற்றத் தீயால்
வலியார்தம் புரமூன்றும் வேவச் சாபம்
பிடித்தவன்காண் பிஞ்ஞகனாம் வேடத் தான்காண்
பிணையல்வெறி கமழ்கொன்றை அரவு சென்னி
முடித்தவன்காண் மூவிலைநல் வேலி னான்காண்
முழங்கியுரு மெனத்தோன்றும் மழையாய் மின்னி
இடித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 8

6891. வருந்தான்காண் மனமுருகி நினையா தார்க்கு
வஞ்சகன்காண் அஞ்செழுத்து நினைவார்க் கென்றும்
மருந்தவன்காண் வான்பிணிகள் தீரும் வண்ணம்
வானகமும் மண்ணகமும் மற்று மாகிப்
பரந்தவன்காண் படர்சடையெட் டுடையான் தான்காண்
பங்கயத்தோன் தன்சிரத்தை யேந்தி யூரூர்
இரந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 9

6892. வெம்மான உழுவையத ளுரிபோர்த் தான்காண்
வேதத்தின் பொருளான்காண் என்றி யம்பி
விம்மாநின் றழுவார்கட் களிப்பான் தான்காண்
விடையேறித் திரிவான்காண் நடஞ்செய் பூதத்
தம்மான்காண் அகலிடங்கள் தாங்கி னான்காண்
அற்புதன்காண் சொற்பதமுங் கடந்து நின்ற
எம்மான்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 10

6893. அறுத்தான்காண் அயன்சிரத்தை அமரர் வேண்ட
ஆழ்கடலின் நஞ்சுண்டங் கணிநீர்க் கங்கை
செறுத்தான்காண் தேவர்க்குந் தேவன் தான்காண்
திசையனைத்துந் தொழுதேத்தக் கலைமான் கையில்
பொறுத்தான்காண் புகலிடத்தை நலிய வந்து
பொருகயிலை எடுத்தவன்தன் முடிதோள் நாலஞ்
சிறுத்தான்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 65. திருவேகம்பம் – திருத்தாண்டகம்

6894. உரித்தவன்காண் உரக்களிற்றை உமையாள் ஒல்க
ஓங்காரத் தொருவன்காண் உணர்மெய்ஞ் ஞானம்
விரித்தவன்காண் விரித்தநால் வேதத் தான்காண்
வியனுலகிற் பல்லுயிரை விதியி னாலே
தெரித்தவன்காண் சில்லுருவாய்த் தோன்றி யெங்குந்
திரண்டவன்காண் திரிபுரத்தை வேவ வில்லால்

எரித்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 1

6895. நேசன்காண் நேசர்க்கு நேசந் தன்பால்
இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக்
கூசன்காண் கூசாதார் நெஞ்சு தஞ்சே
குடிகொண்ட குழகன்காண் அழகார் கொன்றை
வாசன்காண் மலைமங்கை பங்கன் றான்காண்
வானவர்கள் எப்பொழுதும் வணங்கி யேத்தும்
ஈசன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 2

6896. பொறையவன்காண் பூமியேழ் தாங்கி யோங்கும்
புண்ணியன்காண் நண்ணியபுண் டரீகப் போதில்
மறையவன்காண் மறையவனைப் பயந்தோன் தான்காண்
வார்சடைமா சுணமணிந்து வளரும் பிள்ளைப்
பிறையவன்காண் பிறைதிகழும் எயிற்றுப் பேழ்வாய்ப்
பேயோடங் கிடுகாட்டில் எல்லி யாடும்
இறையவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 3

6897. பாரவன்காண் விசும்பவன்காண் பவ்வந் தான்காண்
பனிவரைகள் இரவினொடு பகலாய் நின்ற
சீரவன்காண் திசையவன்காண் திசைக ளெட்டுஞ்
செறிந்தவன்காண் சிறந்தடியார் சிந்தை செய்யும்
பேரவன்காண் பேரா யிரங்க ளேத்தும்
பெரியவன்காண் அரியவன்காண் பெற்றம் ஊர்ந்த
ஏரவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 4

6898. பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூ டிகாண்
பேதையேன் வாதையுறு பிணியைத் தீர்க்கும்
மருந்தவன்காண் மந்திரங்க ளாயி னான்காண்
வானவர்கள் தாம்வணங்கும் மாதே வன்காண்
அருந்தவத்தாள் ஆயிழையாள் உமையாள் பாகம்
அமர்ந்தவன்காண் அமரர்கள்தாம் அர்ச்சித் தேத்த
இருந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 5

6899.ஆய்ந்தவன்காண் அருமறையோ டங்கம் ஆறும்
அணிந்தவன்காண் ஆடரவோ டென்பு மாமை
காய்ந்தவன்காண் கண்ணழலாற் காமன் ஆகங்
கனன்றெழுந்த காலனுடல் பொடியாய் வீழப்
பாய்ந்தவன்காண் பண்டுபல சருகால் பந்தர்
பயின்றநூற் சிலந்திக்குப் பாராள் செல்வம்
ஈந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 6

6900.உமையவளை யொருபாகஞ் சேர்த்தி னான்காண்
உகந்தொலிநீர்க் கங்கைசடை யொழுக்கி னான்காண்
இமய வடகயிலைச் செல்வன் தான்காண்
இல்பலிக்குச் சென்றுழலும் நல்கூர்ந் தான்காண்
சமயமவை யாறினுக்குந் தலைவன் தான்காண்
தத்துவன்காண் உத்தமன்காண் தானே யாய
இமையவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 7

6901.தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான் தான்காண்
தூமலர்ச்சே வடியிணையெம் சோதி யான்காண்
உண்டுபடு விடங்கண்டத் தொடுக்கி னான்காண்
ஒலிகடலில் அமுதமரர்க் குதவி னான்காண்
வண்டுபடு மலர்க்கொன்றை மாலை யான்காண்
வாண்மதியாய் நாண்மீனு மாயி னான்காண்
எண்டிசையும் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 8

6902.முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தந்தைகாண் தண்கடமா முகத்தி னாற்குத்
தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும்
எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே. 9

6903.பொன்னிசையும் புரிசடையெம் புனிதன் தான்காண்
பூதகண நாதன்காண் புலித்தோ லாடை

*தன்னிசைய வைத்தஏழி லரவி னான்காண்*
*சங்கவெண் குழைக்காதிற் சதுரன் தான்காண்*
*மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டு வெற்பை*
*யெடுக்கஅடி யடர்ப்பமீண் டவன்றன் வாயில்*
*இன்னிசைகேட் டிலங்கொளிவா ளீந்தோன் கச்சி*
*ஏகம்பன் காண்அவனென் எண்ணத் தானே.* 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருநாகேச்சரம் – திருத்தாண்டகம்

6904. *தாயவனை வானோர்க்கும் ஏனோ ருக்குந்*
*தலையவனை மலையவனை உலக மெல்லாம்*
*ஆயவனைச் சேயவனை அணியான் தன்னை*
*அழலவனை நிழலவனை அறிய வொண்ணா*
*மாயவனை மறையவனை மறையோர் தங்கள்*
*மந்திரனைத் தந்திரனை வளரா நின்ற*
*தீயவனைத் திருநாகேச் சரத்து ளானைச்*
*சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே.* 1

6905. *உரித்தானை மதவேழந் தன்னை மின்னா*
*ரொளிமுடியெம் பெருமானை உமையோர் பாகந்*
*தரித்தானைத் தரியலர்தம் புரமெய் தானைத்*
*தன்னடைந்தார் தம்வினைநோய் பாவ மெல்லாம்*
*அரித்தானை ஆலதன்கீழ் இருந்து நால்வர்க்*
*கறம்பொருள்வீ டின்பமா றங்கம் வேதந்*
*தெரித்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்*
*சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே.* 2

6906. *காரானை உரிபோர்த்த கடவுள் தன்னைக்*
*காதலித்து நினையாத கயவர் நெஞ்சில்*
*வாரானை மதிப்பவர்தம் மனத்து ளானை*
*மற்றொருவர் தன்னொப்பா ரொப்பி லாத*
*ஏரானை இமையவர்தம் பெருமான் தன்னை*
*இயல்பாகி உலகெலாம் நிறைந்து மிக்க*
*சீரானைத் திருநாகேச் சரத்து ளானைச்*
*சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே.* 3

6907. தலையானை எவ்வுலகுந் தானா னானைத்
தன்னுருவம் யாவர்க்கும் அறிய வொண்ணா
நிலையானை நேசர்க்கு நேசன் தன்னை
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
மலையானை வரியரவு நாணாக் கோத்து
வல்லசுரர் புரமூன்றும் மடிய எய்த
சிலையானைத் திருநாகேச் சரத்து ளானைத்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 4

6908. மெய்யானைத் தன்பக்கல் விரும்பு வார்க்கு
விரும்பாத அரும்பாவி யவர்கட் கென்றும்
பொய்யானைப் புறங்காட்டி லாட லானைப்
பொன்பொதிந்த சடையானைப் பொடிகொள் பூதிப்
பையானைப் பையரவ மசைத்தான் தன்னைப்
பரந்தானைப் பவளமால் வரைபோல் மேனிச்
செய்யானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 5

6909. துறந்தானை அறம்புரியாத் துரிசர் தம்மைத்
தோத்திரங்கள் பலசொல்லி வானோ ரேத்த
நிறைந்தானை நீர்நிலந்தீ வெளிகாற் றாகி
நிற்பனவும் நடப்பனவு மாயி னானை
மறந்தானைத் தன்னினையா வஞ்சர் தம்மை
அஞ்செழுத்தும் வாய்நவில வல்லோர்க் கென்றுஞ்
சிறந்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 6

6910. மறையானை மால்விடையொன் றூர்தியானை
மால்கடல்நஞ் சுண்டானை வானோர் தங்கள்
இறையானை யென்பிறவித் துயர்தீர்ப் பானை
இன்னமுதை மன்னியசீர் ஏகம் பத்தில்
உறைவானை ஒருவருமீங் கறியா வண்ணம்
என்னுள்ளத் துள்ளே யொளித்து வைத்த
சிறையானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 7

6911. எய்தானைப் புரமூன்றும் இமைக்கும் போதில்
இருவிசும்பில் வருபுனலைத் திருவார் சென்னிப்

பெய்தானைப் பிறப்பிலியை அறத்தில் நில்லாப்
பிரமன்தன் சிரமொன்றைக் கரமொன் றினால்
கொய்தானைக் கூத்தாட வல்லான் தன்னைக்
குறியிலாக் கொடியேனை அடியே னாகச்
செய்தானைத் திருநாகேச் சரத்து ளானைத்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 8

6912. அளியானை அண்ணிக்கும் ஆன்பால் தன்னை
வான்பயிரை அப்பயிரின் வாட்டந் தீர்க்குந்
துளியானை அயன்மாலுந் தேடிக் காணாச்
சுடரானைத் துரிசறத் தொண்டு பட்டார்க்
கெளியானை யாவர்க்கும் அரியான் தன்னை
இன்கரும்பின் தன்னுள்ளா லிருந்த தேறல்
தெளியானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 9

6913. சீர்த்தானை யுலகேழுஞ் சிறந்து போற்றச்
சிறந்தானை நிறைந்தோங்கு செல்வன் தன்னைப்
பார்த்தானை மதனவேள் பொடியாய் வீழப்
பனிமதியஞ் சடையானைப் புனிதன் தன்னை
ஆர்த்தோடி மலையெடுத்த அரக்கன் அஞ்ச
அருவிரலா லடர்த்தானை அடைந்தோர் பாவந்
தீர்த்தானைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 67. திருக்கீழ்வேளூர் – திருத்தாண்டகம்

6914. ஆளான அடியவர்கட் கன்பன் தன்னை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
தாளானைத் தன்னொப்பா ரில்லா தானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப் பானைத்
தூவெளுத்த கோவணத்தை அரைமி லார்த்த
கீளானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 1

6915. சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை
நற்பான்மை அறியாத நாயி னேனை
நன்னெறிக்கே செலும்வண்ணம் நல்கி னானைப்
பற்பாவும் வாயாரப் பாடி யாடிப்
பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம் போக்க
கிற்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 2

6916. அளைவாயி லரவசைத்த அழகன் தன்னை
ஆதரிக்கும் அடியவர்கட் கன்பே யென்றும்
விளைவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை
வித்தகனை எத்தனையும் பத்தர் பத்திக்
குளைவானை அல்லாதார்க் குளையா தானை
உலப்பிலியை யுள்புக்கென் மனத்து மாசு
கிளைவானைக் கீழ்வேளூ ராளுங்கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 3

6917. தாட்பாவு கமலமலர் தயங்கு வானைத்
தலையறுத்து மாவிரதந் தரித்தான் தன்னைக்
கோட்பாவு நாளெல்லா மானான் தன்னைக்
கொடுவினையேன் கொடுநரகக் குழியில் நின்றால்
மீட்பானை வித்துருவின் கொத்தொப் பானை
வேதியனை வேதத்தின் பொருள்கொள் வீணை
கேட்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 4

6918. நல்லானை நரைவிடையொன் றூர்தி யானை
நால்வேதத் தாறங்கம் நணுக மாட்டாச்
சொல்லானைச் சுடர்மூன்று மானான் தன்னைத்
தொண்டாகிப் பணிவார்கட் கினியான் தன்னை
வில்லானை மெல்லியலோர் பங்கன் தன்னை
மெய்யராய் நினையாதார் வினைகள் தீர்க்க
கில்லானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 5

6919. சுழித்தானைக் கங்கைமலர் வன்னி கொன்றை
தூமத்தம் வாளரவஞ் சூடி னானை
அழித்தானை அரணங்கள் மூன்றும் வேவ
ஆலால நஞ்சதனை உண்டான் தன்னை
விழித்தானைக் காமனுடல் பொடியாய்வீழ மெல்லியலோர்

பங்கனை முன் வேனி லானைக்
கிழித்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 6

6920. உளரொளியை உள்ளத்தி னுள்ளே நின்ற
ஓங்காரத் துட்பொருள்தான் ஆயி னானை
விளரொளியை விடுசுடர்கள் இரண்டும் ஒன்றும்
விண்ணொடுமண் ணாகாச மாயி னானை
வளரொளியை மரகதத்தி னுருவி னானை
வானவர்க ளெப்பொழுதும் வாழ்த்தி யேத்துங்
கிளரொளியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 7

6921. தடுத்தானைக் காலனைக் காலாற் பொன்றத்
தன்னடைந்த மாணிக்கன் றருள்செய் தானை
உடுத்தானைப் புலியதளோ டக்கும் பாம்பும்
உள்குவா ருள்ளத்தி னுள்ளான் தன்னை
மடுத்தானை அருநஞ்சம் மிடற்றுள் தங்க
வானவர்கள் கூடியவத் தக்கன் வேள்வி
கெடுத்தானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 8

6922. மாண்டா ரெலும்பணிந்த வாழ்க்கை யானை
மயானத்திற் கூத்தனைவா ளரவோ டென்பு
பூண்டானைப் புறங்காட்டி லாட லானைப்
போகாதென் னுள்புகுந் திடங்கொண் டென்னை
ஆண்டானை யறிவரிய சிந்தை யானை
அசங்கையனை அமரர்கள்தஞ் சங்கை யெல்லாங்
கீண்டானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 9

6923. முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும்
முதுகிறமுன் கைந்நரம்பை யெடுத்துப் பாடப்
பறிப்பான்கைச் சிற்றரிவாள் நீட்டி னானைப்
பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது
பொறித்தானைப் புரமூன்றும் எரிசெய் தானைப்
பொய்யர்களைப் பொய்செய்து போது போக்கிக்
கிறிப்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருமுதுகுன்றம் – திருத்தாண்டகம்

6924. கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக்
கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக்
குருமணியைக் கோளரவம் ஆட்டு வானைக்
கொல்வேங்கை யதளானைக் கோவணவன் தன்னை
அருமணியை அடைந்தவர்கட் கமுதொப் பானை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 1

6925. காரொளிய கண்டத்தெங் கடவுள் தன்னைக்
காபாலி கட்டங்க மேந்தி னானைப்
பாரொளியை விண்ணொளியைப் பாதாளத் தானைப்
பால்மதியஞ் சூடியோர் பண்பன் தன்னைப்
பேரொளியைப் பெண்பாகம் வைத்தான் தன்னைப்
பேணுவார் தம்வினையைப் பேணி வாங்குஞ்
சீரொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 2

6926. எத்திசையும் வானவர்கள் தொழநின் றானை
ஏறூர்ந்த பெம்மானை யெம்மா னென்று
பத்தனாய்ப் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
முத்தினை யென்மணியை மாணிக் கத்தை
முளைத்தெழுந்த செம்பவளக் கொழுந்தொப் பானைச்
சித்தனையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 3

6927. ஊன்கருவின் உள்நின்ற சோதி யானை
உத்தமனைப் பத்தர்மனம் குடிகொண் டானைக்
கான்திரிந்து காண்டீப மேந்தி னானைக்
கார்மேக மிடற்றானைக் கடலைக் காற்றைத்
தான்தெரிந்தங் கடியேனை யாளாக் கொண்டு
தன்னுடைய திருவடியென் தலைமேல் வைத்த
தீன்கரும்பைத் திருமுதுகுன் றுடையான்
தன்னைத் தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 4

6928. தக்கனது பெருவேள்வி தகர்த்தா னாகித்
தாமரையான் நான்முகனுந் தானே யாகி
மிக்கதொரு தீவளிநீ ராகா சமாய்

மேலுலகுக் கப்பாலா யிப்பா லானை
அக்கினொடு முத்தினையு மணிந்து தொண்டர்க்
கங்கங்கே அறுசமய மாகி நின்ற
திக்கினையென் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 5

6929. புகழொளியைப் புரமெரித்த புனிதன் தன்னைப்
பொன்பொதிந்த மேனியனைப் புராணன் தன்னை
விழவொலியும் விண்ணொலியு மானான் தன்னை
வெண்காடு மேவிய விகிர்தன் தன்னைக்
கழலொலியுங் கைவளையும் ஆர்ப்ப ஆர்ப்பக்
கடைதோறு மிடுபிச்சைக் கென்று செல்லுந்
திகழொளியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 6

6930. போர்த்தானை யின்னுரிதோல் பொங்கப் பொங்கப்
புலியதளே உடையாகத் திரிவான் தன்னைக்
காத்தானை ஐம்புலனும் புரங்கள் மூன்றுங்
காலனையுங் குரைகழலாற் காய்ந்தான் தன்னை
மாத்தாடிப் பத்தராய் வணங்குந் தொண்டர்
வல்வினைவே றறும்வண்ணம் மருந்து மாகித்
தீர்த்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 7

6931. துறவாதே யாக்கை துறந்தான் தன்னைச்
சோதி முழுமுதலாய் நின்றான் தன்னைப்
பிறவாதே யெவ்வுயிர்க்குந் தானே யாகிப்
பெண்ணினோ டாணுருவாய் நின்றான் தன்னை
மறவாதே தன்திறமே வாழ்த்துந் தொண்டர்
மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற
திறலானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 8

6932. பொற்றூணைப் புலால்நாறு கபால மேந்திப்
புவலோக மெல்லா முழிதந் தானை
முற்றாத வெண்திங்கட் கண்ணி யானை
முழுமுதலாய் மூவுலகம் முடிவொன் றில்லாக்
கற்றூணைக் காளத்தி மலையான் தன்னைக்
கருதாதார் புரமூன்றும் எரிய அம்பால்
செற்றானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 9

6933. இகழ்ந்தானை இருபதுதோள் நெரிய வூன்றி
எழுநரம்பி னிசைபாடல் இனிது கேட்டுப்
புகழ்ந்தானைப் பூந்துருத்தி மேயான் தன்னைப்
புண்ணியனை விண்ணவர்கள் நிதியந் தன்னை
மகிழ்ந்தானை மலைமகளோர் பாகம் வைத்து
வளர்மதியஞ் சடைவைத்து மாலோர் பாகந்
திகழ்ந்தானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 69. திருப்பள்ளியின்முக்கூடல் – திருத்தாண்டகம்

6934. ஆராத இன்னமுதை அம்மான் தன்னை
அயனொடுமா லறியாத ஆதி யானைத்
தாராரும் மலர்க்கொன்றைச் சடையான் தன்னைச்
சங்கரனைத் தன்னொப்பா ரில்லா தானை
நீரானைக் காற்றானைத் தீயா னானை
நீள்விசும்பாய் ஆழ்கடல்க ளேழுஞ் சூழ்ந்த
பாரானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 1

6935. விடையானை விண்ணவர்கள் எண்ணத் தானை
வேதியனை வெண்திங்கள் சூடுஞ் சென்னிச்
சடையானைச் சாமம்போல் கண்டத் தானைத்
தத்துவனைத் தன்னொப்பா ரில்லா தானை
அடையாதார் மும்மதிலுந் தீயில் மூழ்க
அடுகணைகோத் தெய்தானை அயில்கொள் சூலப்
படையானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 2

6936. பூதியனைப் பொன்வரையே போல்வான் தன்னைப்
புரிசடைமேல் புனல்கரந்த புனிதன் தன்னை
வேதியனை வெண்காடு மேயான் தன்னை
வெள்ளேற்றின் மேலானை விண்ணோர்க் கெல்லாம்
ஆதியனை ஆதிரைநன் னாளான் தன்னை
அம்மானை மைம்மேவு கண்ணி யாளோர்

பாதியனைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 3

6937. போர்த்தானை ஆனையின்தோல் புரங்கள் மூன்றும்
பொடியாக எய்தானைப் புனிதன் தன்னை
வார்த்தாங்கு வனமுலையாள் பாகன் தன்னை
மறிகடலுள் நஞ்சுண்டு வானோ ரச்சந்
தீர்த்தானைத் தென்திசைக்கே காமன் செல்லச்
சிறிதளவில் அவனுடலம் பொடியா வங்கே
பார்த்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 4

6938. அடைந்தார்தம் பாவங்கள் அல்லல் நோய்கள்
அருவினைகள் நல்குரவு செல்லா வண்ணங்
கடிந்தானைக் கார்முகில்போற் கண்டத் தானைக்
கடுஞ்சினத்தோன் தன்னுடலை நேமி யாலே
தடிந்தானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தத்துவனை உத்தமனை நினைவார் நெஞ்சில்
படிந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 5

6939. கரந்தானைச் செஞ்சடைமேல் கங்கை வெள்ளங்
கனலாடு திருமேனிக் கமலத் தோன்தன்
சிரந்தாங்கு கையானைத் தேவ தேவைத்
திகழொளியைத் தன்னடியே சிந்தை செய்வார்
வருந்தாமைக் காப்பானை மண்ணாய் விண்ணாய்
மறிகடலாய் மால்விசும்பாய் மற்று மாகிப்
பரந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 6

6940. நதியாருஞ் சடையானை நல்லூ ரானை
நள்ளாற்றின் மேயானை நல்லத் தானை
மதுவாரும் பொழில்புடைசூழ் வாய்மூ ரானை
மறைக்காடு மேயானை ஆக்கூ ரானை
நிதியாளன் தோழனை நீடூ ரானை
நெய்த்தானை மேயானை ஆரூ ரென்னும்
பதியானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 7

6941. நற்றவனை நான்மறைக ளாயி னானை
நல்லானை நணுகாதார் புரங்கள் மூன்றுஞ்
செற்றவனைச் செஞ்சடைமேல் திங்கள் சூடுந்
திருவாரூர்த் திருமூலட் டானம் மேய
கொற்றவனைக் கூரரவம் பூண்டான் தன்னைக்
குறைந்தடைந்து தன்திறமே கொண்டார்க் கென்றும்
பற்றவனைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 8

6942. ஊனவனை உடலவனை உயிரா னானை
உலகேழு மானானை உம்பர் கோவை
வானவனை மதிசூடும் வளவி யானை
மலைமகள்முன் வராகத்தின் பின்பே சென்ற
கானவனைக் கயிலாய மலையு ளானைக்
கலந்துருகி நைவார்தம் நெஞ்சி னுள்ளே
பானவனைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 9

6943. தடுத்தானைத் தான்முனிந்து தன்தோள் கொட்டித்
தடவரையை இருபதுதோள் தலையி னாலும்
எடுத்தானைத் தாள்விரலால் மாள வூன்றி
எழுநரம்பின் இசைபாடல் இனிது கேட்டுக்
கொடுத்தானைப் பேரோடுங் கூர்வாள்
தன்னைக் குரைகழலாற் கூற்றுவனை மாள அன்று
படுத்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநான் உழன்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 70. க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்

6944. தில்லைச்சிற் றம்பலமுஞ் செம்பொன் பள்ளி
தேவன்குடி சிராப் பள்ளி தெங்கூர்
கொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல்
வீரட்டங் கோகரணங் கோடி காவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி
முளையூர் பழையாறை சத்தி முற்றங்

கல்லில் திகழ் சீரார் காளத்தியுங்
கயிலாய நாதனையே காண லாமே. 1

6945. ஆரூர்மூ லட்டானம் ஆனைக் காவும்
ஆக்கூரில் தான்தோன்றி மாடம் ஆவூர்
பேரூர் பிரமபுரம் பேரா வூரும்
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணுங்
கூரார் குறுக்கைவீ ரட்டா னமுங்
கோட்டூர் குடமூக்குக் கோழம் பமுங்
காரார் கழுக்குன்றுங் கானப் பேருங்
கயிலாய நாதனையே காண லாமே. 2

6946. இடைமரு தீங்கோ யிராமேச் சுரம்
இன்னம்பர் ஏரிடவை ஏமப் பேறூர்
கடைமுடி சாலைக் குடிதக் களூர்
தலையாலங் காடு தலைச்சங் காடு
கொடுமுடி குற்றாலங் கொள்ளம் பூதூர்
கோத்திட்டை கோட்டாறு கோட்டுக் காடு
கடைமுடி கானூர் கடம்பந் துறை
கயிலாய நாதனையே காண லாமே. 3

6947. எச்சில் இளம ரேம நல்லூர்
இலம்பையங் கோட்டூர் இறையான் சேரி
அச்சிறு பாக்க மளப்பூர் அம்பர்
ஆவடு தண்டுறை யழுந்தூர் ஆறை
கச்சினங் கற்குடி கச்சூர் ஆலக்
கோயில் கரவீரங் காட்டுப் பள்ளி
கச்சிப் பலதளியும் ஏகம் பத்துங்
கயிலாய நாதனையே காண லாமே. 4

6948. கொடுங்கோளூ ரஞ்சைக் களஞ்செங் குன்றூர்
கொங்கணங் குன்றியூர் குரக்குக் காவும்
நெடுங்களம் நன்னிலம் நெல்லிக் காவும்
நின்றியூர் நீடூர் நியம நல்லூர்
இடும்பா வனமெழுமூர் ஏழூர் தோழூர்
ஏறும்பியூர் ஏராரு மேம கூடங்
கடம்பை யிளங்கோயில் தன்னி லுள்ளுங்
கயிலாய நாதனையே காண லாமே. 5

6949. மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வார ணாசி
வெண்ணி விளத்தொட்டி வேள்விக் குடி
விளமர் விராடபுரம் வேட்க ளத்தும்
பெண்ணை யருட்டுறை தண்பெண் ணாகடம்
பிரம்பில் பெரும்புலியூர் பெருவே ளூருங்
கண்ணை களர்க்காறை கழிப் பாலையுங்
கயிலாய நாதனையே காண லாமே. 6

6950. வீழி மிழலைவெண் காடு வேங்கூர்
வேதிகுடி விசய மங்கை வியலூர்
ஆழி யகத்தியான் பள்ளி யண்ணா
மலையாலங் காடும் அரதைப் பெரும்
பாழி பழனம் பனந்தாள் பாதாளம்
பராய்த்துறை பைஞ்ஞீலி பனங்காட் டூர்தண்
காழி கடல்நாகைக் காரோ ணத்துங்
கயிலாய நாதனையே காண லாமே.

6951. உஞ்சேனை மாகாளம் ஊறல் ஒத்தூர்
உருத்திர கோடி மறைக்காட் டுள்ளும்
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர்
வீரட்டம் மாதானங் கேதா ரத்தும்
வெஞ்சமாக் கூடல் மீயச்சூர் வைகா
வேதீச்சுரம் விவீசுரம் வெற்றி யூருங்
கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக் கையுங்
கயிலாய நாதனையே காண லாமே. 8

6952. திண்டீச்சரஞ் சேய்ஞலூர் செம்பொன் பள்ளி
தேவூர் சிரபுரஞ் சிற்றேமம் சேறை
கொண்டீச்சரங் கூந்தலூர் கூழையூர் கூடல்
குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு
அண்டர்தொழும் அதிகை வீரட் டானம்
ஐயா றசோகந்தி ஆமாத் தூருங்
கண்டியூர் வீரட்டங் கருகா வூருங்
கயிலாய நாதனையே காண லாமே. 9

6953. நறையூரிற் சித்தீச் சரம்நள் ளாறு
நாரையூர் நாகேச்சரம் நல்லூர் நல்ல

துறையூர் சோற்றுத்துறை சூல மங்கை
தோணிபுரந் துருத்தி சோமீச் சரம்
உறையூர் கடலொற்றி யூரூர் றத்து
ரோமாம் புலியூர் ஓர்ஏட கத்துங்
கறையூர் கருப்பறியல் கன்றாப் பூருங்
கயிலாய நாதனையே காண லாமே. 10

6954. புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவலம் மாற்பேறு வாய்மூர் வைகல்
வலஞ்சுழி வாஞ்சியம் மருகல் வன்னி
நிலமலிநெய்த் தானத்தோ டெத்தா னத்தும்
நிலவுபெருங் கோயில்பல கண்டால் தொண்டீர்
கலிவலிமிக் கோனைக்கால் விரலாற் செற்ற
கயிலாய நாதனையே காண லாமே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 71. அடைவுத் திருத்தாண்டகம்

6955. பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் செழுநனி
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனி பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப் பள்ளி யென்றென்று பகர்வோ
ரெல்லாம் பரலோகத் தினிதாகப் பாலிப்பாரே. 1

6956. காவிரியின் கரைக்கண்டி வீரட் டானங்
கடவூர்வீ ரட்டானங் காமருசீ ரதிகை
மேவியவீ ரட்டானம் வழுவை வீரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாங்
கோவல்நகர் வீரட்டங் குறுக்கைவீ ரட்டங்
கோத்திட்டை குடிவீரட் டானமிவை கூறி
நாவில் நவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்றால்
நமன்தமருஞ் சிவன்தமரென் றகல்வர் நன்கே. 2

6957. நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன் செம்பங்
குடிநல்லக் குடிநளி நாட்டியத் தான்குடி
கற்குடிதென் களக்குடி செங்காட் டங்குடி
கருந்திட்டைக் .குடிகடையக் குடிகா ணுங்கால்
விற்குடிவேள் விக்குடி நல்வேட் டக்குடி
வேதிகுடி மாணிகுடி விடைவாய்க்குடி
புற்குடி மாகுடி தேவன்குடி நீலக்குடி
புதுக்குடியும் போற்றஇடர் போகு மன்றே. 3

6958. பிறையூருஞ் சடைமுடியெம் பெருமா னாரூர்
பெரும்பற்றப் புலியூரும் பேரா வூரும்
நறையூரும் நல்லூரும் நல்லாற் றூரும்
நாலூருஞ் சேற்றூரும் நாரை யூரும்
உறையூரும் ஓத்தூரும் ஊற்றத் தூரும்
அளப்பூரோ மாம்புலியூ ரொற்றி யூருந்
துறையூருந் துவையூருந் தோழூர் தானுந்
துடையூருந் தொழஇடர்கள் தொடரா வன்றே. 4

6959. பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயி லெழுபதினோ டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே. 5

6960. மலையார்தம் மகளொடுமா தேவன் சேரும்
மறைக்காடு வண்பொழில்சூழ் தலைச்சங் காடு
தலையாலங் காடுதடங் கடல்சூ ழந்தண்
சாய்க்காடு தள்ளுபுனற் கொள்ளி காடு
பலர்பாடும் பழயனூ ராலங் காடு
பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க
விலையாடும் வளைதிளைக்கக் குடையும் பொய்கை
வெண்காடும் அடையவினை வேறா மன்றே. 6

6961. கடுவாயர் தமைநீக்கி யென்னை யாட்கொள்
கண்ணுதலோன் நண்ணுமிடம் அண்ணல் வாயில்
நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல் வாயில்
நிகழ்முல்லை வாயிலொடு ஞாழல் வாயில்
மடுவார்தென் மதுரைநக ரால வாயில்

மறிகடல்சூழ் புனவாயில் மாடம் நீடு
குடவாயில் குணவாயி லான வெல்லாம்
புகுவாரைக் கொடுவினைகள் கூடா வன்றே. 7

6962. நாடகமா டிடநந்தி கேச்சுரமா காளேச்
சுரநாகேச் சுரநாக ளேச்சுரநன் கான
கோடீச்சுரங் கொண்டீச் சுரந்திண் டீச்சுரங்
குக்குடேச் சுரமக்கீச் சுரங்கூ றுங்கால்
ஆடகேச் சுரமகத்தீச் சுரமய னீச்சுர
மத்தீச் சுரஞ்சித்தீச் சுரமந் தண்கானல்
ஈடுதிரை யிராமேச்சுர மென்றென் றேத்தி
யிறைவனுறை சுரம்பலவு மியம்பு வோமே. 8

6963. கந்தமா தனங்கயிலை மலைகே தாரங்
காளத்தி கழுக்குன்றங் கண்ணா ரண்ணா
மந்தமாம் பொழிற்சாரல் வடபர்ப் பதம்
மகேந்திரமா மலைநீலம் ஏம கூடம்
விந்தமா மலைவேதஞ் சைய மிக்க
வியன்பொதியின் மலைமேரு வுதயம் மத்தம்
இந்துசே கரனுறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெடநின் றேத்து வோமே. 9

6964. நள்ளாறும் பழையாறுங் கோட்டாற் றோடு
நலந்திகழும் நாலாறுந் திருவை யாறுந்
தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்கு ளமுநல்
லிடைக் குளமுந் திருக்குளத்தோ டஞ்சைக்களம்
விள்ளாத நெடுங்களம் வேட்களம் நெல்லிக்கா
கோலக்கா ஆனைக்கா வியன்கோ டிகா
கள்ளார்ந்த கொன்றையான் நின்ற ஆறுங்
குளம்களம்கா எனஅனைத்துங் கூறு வோமே. 10

6965. கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு
சிரங்களுரம் நெரியக்கால் விரலாற் செற்றோன்
பயில்வாய பராய்த்துறைதென் பாலைத் துறை
பண்டெழுவர் தவத்துறைவெண் துறைபைம் பொழிற்
குயிலாலந்துறை சோற்றுத் துறைபூந் துறை
பெருந்துறையுங் குரங்காடு துறையி னோடு
மயிலாடுதுறை கடம்பந் துறையாவடு துறைமற்றுந்
துறை யனைத்தும் வணங்கு வோமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருவலஞ்சுழி – திருத்தாண்டகம்

6966. அலையார் புனற்கங்கை நங்கை காண
அம்பலத்தில் அருநட்ட மாடி வேடந்
தொலையாத வென்றியார் நின்றி யூரும்
நெடுங்களமும் மேவிவிடை யைமேல் கொண்டு
இலையார் படைகையி லேந்தி யெங்கும்
இமையவரும் உமையவளும் இறைஞ்சி யேத்த
மலையார் திரளருவிப் பொன்னி சூழ்ந்த
வலஞ்சுழியே புக்கிடமா மருவி னாரே. 1

திருச்சிற்றம்பலம்

•••••

## 73. திருவலஞ்சுழியும் – திருக்கொட்டையூர்க்கோடீச்சரமும்

6967. கருமணிபோற் கண்டத் தழகன் கண்டாய்
கல்லால் நிழற்கீ ழிருந்தான் கண்டாய்
பருமணிமா நாகம் பூண்டான் கண்டாய்
பவளக் குன்றன்ன பரமன் கண்டாய்
வருமணிநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் வரதன் கண்டாய்
குருமணிபோ லழகமருங் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 2

6968. கலைக்கன்று தங்கு கரத்தான் கண்டாய்
கலைபயில்வோர் ஞானக்கண் ஆனான் கண்டாய்
அலைக்கங்கை செஞ்சடைமேல் ஏற்றான் கண்டாய்
அண்ட கபாலத்துப் பாலான் கண்டாய்
மலைப்பண்டங் கொண்டு வருநீர்ப்பொன்னி
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
குலைத்தெங்கஞ் சோலைசூழ் கொட்டை யூரிற்
கோடிச் சரத்துறையுங் கோமான் தானே. 3

6969. செந்தா மரைப்போ தணிந்தான் கண்டாய்
சிவன்கண்டாய் தேவர் பெருமான் கண்டாய்
பந்தாடு மெல்விரலாள் பாகன் கண்டாய்
பாலோடு நெய்தயிர்தே னாடி கண்டாய்
மந்தாரம் உந்தி வருநீர்ப் பொன்னி

வலஞ்சுழியின் மன்னு மணாளன் கண்டாய்
கொந்தார் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 3

6970. பொடியாடு மேனிப் புனிதன் கண்டாய்
புட்பாகற் காழி கொடுத்தான் கண்டாய்
இடியார் கடுமுழக்கே றூர்ந்தான் கண்டாய்
எண்திசைக்கும் விளக்காகி நின்றான் கண்டாய்
மடலார் திரை புரளுங் காவிரிவாய்
வலஞ்சுழியின் மேவிய மைந்தன் கண்டாய்
கொடியாடு நெடுமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 4

6971. அக்கரவம் அரைக்கசைத்த அம்மான் கண்டாய்
அருமறைக ளாறங்க மானான் கண்டாய்
தக்கனது பெருவேள்வி தகர்த்தான் கண்டாய்
சதாசிவன்காண் சலந்தரனைப் பிளந்தான் கண்டாய்
மைக்கொண்மயில் தழைகொண்டு வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியான் கண்டாய் மழுவன் கண்டாய்
கொக்கமரும் வயல்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 5

6972. சண்டனைநல் லண்டர்தொழச் செய்தான் கண்டாய்
சதாசிவன் கண்டாய் சங்கரன்றான் கண்டாய்
தொண்டர்பலர் தொழுதேத்துங் கழலான் கண்டாய்
சுடரொளியாய்த் தொடர்வரிதாய் நின்றான் கண்டாய்
மண்டுபுனல் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிவர் தம்முடைய மருந்து கண்டாய்
கொண்டல்தவழ் கொடிமாடக் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 6

6973. அணவரியான் கண்டாய் அமலன் கண்டாய்
அவிநாசி கண்டாய் அண்டத்தான் கண்டாய்
பணமணிமா நாக முடையான் கண்டாய்
பண்டரங்கன் கண்டாய் பகவன் கண்டாய்
மணல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாதவற்கும் நான்முகற்கும் வரதன் கண்டாய்
குணமுடைநல் லடியார்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 7

6974. விரைகமழும் மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய்
வேதங்கள் தொழநின்ற நாதன் கண்டாய்
அரையதனிற் புள்ளியத ளுடையான் கண்டாய்
அழலாடி கண்டாய் அழகன் கண்டாய்
வருதிரைநீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன் கண்டாய்
குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 8

6975. தளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய்
தசரதன்றன் மகன்அசைவு தவிர்த்தான் கண்டாய்
இளம்பிறையும் முதிர்சடைமேல் வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையு மானான் கண்டாய்
வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிகள் தொழுதெழுபொற் கழலான் கண்டாய்
குளங்குளிர்செங் குவளைகிளர் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 9

6976. விண்டார் புரமூன்று எரித்தான் கண்டாய்
விலங்கலில்வல் லரக்கனுட லடர்த்தான் கண்டாய்
தண்தா மரையானு மாலுந் தேடத்
தழற்பிழம்பாய் நீண்ட கழலான் கண்டாய்
வண்டார்பூஞ் சோலைவலஞ் சுழியான் கண்டாய்
மாதேவன் கண்டாய் மறையோ டங்கங்
கொண்டாடு வேதியர்வாழ் கொட்டை யூரிற்
கோடீச் சரத்துறையுங் கோமான் தானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. திருநாரையூர் – திருத்தாண்டகம்

6977. சொல்லானைப் பொருளானைச் சுருதி யானைச்
சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானை
அல்லானைப் பகலானை அரியான் தன்னை
அடியார்கட் கெளியானை அரண்மூன் றெய்த
வில்லானைச் சரம்விசயற் கருள்செய் தானை
வெங்கதிரோன் மாமுனிவர் விரும்பி யேத்தும்

நல்லானைத் தீயாடு நம்பன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 1

6978. பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கன் தன்னைப்
பாரோடுநீர் சுடர்படர்காற் றாயி னானை
மஞ்சுண்ட வானாகி வானந் தன்னில்
மதியாகி மதிசடைமேல் வைத்தான் தன்னை
நெஞ்சுண்டென் நினைவாகி நின்றான் தன்னை
நெடுங்கடலைக் கடைந்தவர்போய் நீங்க வோங்கும்
நஞ்சுண்டு தேவர்களுக் கமுதீந் தானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 2

6979. மூவாது யாவர்க்கும் மூத்தான் தன்னை
முடியாதே முதல்நடுவு முடிவா னானைத்
தேவாதி தேவர்கட்குந் தேவன் தன்னைத் திசை
முகன்றன் சிரமொன்று சிதைத்தான் தன்னை
ஆவாத அடலேறொன் றுடையான் தன்னை
அடியேற்கு நினைதோறும் அண்ணிக் கின்ற
நாவானை நாவினில்நல் லுரையா னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 3

6980. செம்பொன்னை நன்பவளந் திகழும் முத்தைச்
செழுமணியைத் தொழுமவர்தஞ் சித்தத் தானை
வம்பவிழும் மலர்க்கணைவேள் உலக்கநோக்கி
மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற
கம்பனையெங் கயிலாய மலையான் தன்னைக்
கழுகினொடு காகுத்தன் கருதி யேத்தும்
நம்பனையெம் பெருமானை நாதன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 4

6981. புரையுடைய கரியுரிவைப் போர்வை யானைப்
புரிசடைமேற் புனலடைத்த புனிதன் தன்னை
விரையுடைய வெள்ளெருக்கங் கண்ணி யானை
வெண்ணீறு செம்மேனி விரவி னானை
வரையுடைய மகள்தவஞ்செய் மணாளன் தன்னை
வருபிணிநோய் பிரிவிக்கும் மருந்து தன்னை
நரைவிடைநற் கொடியுடைய நாதன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 5

6982.பிறவாதும் இறவாதும் பெருகி னானைப்
பேய்பாட நடமாடும் பித்தன் தன்னை
மறவாத மனத்தகத்து மன்னி னானை
மலையானைக் கடலானை வன்த்து ளானை
உறவானைப் பகையானை உயிரா னானை
உள்ளானைப் புறத்தானை ஓசை யானை
நறவாரும் பூங்கொன்றை சூடி னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 6

6983.தக்கனது வேள்விகெடச் சாடி னானைத்
தலைகலனாப் பலியேற்ற தலைவன் தன்னைக்
கொக்கரைசச் சரிவீணை பாணி யானைக்
கோணாகம் பூணாகக் கொண்டான் தன்னை
அக்கினொடும் என்பணிந்த அழகன் தன்னை
அறுமுகனோ டானைமுகற் கப்பன் தன்னை
நக்கனைவக் கரையானை நள்ளாற் றானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 7

6984.அரிபிரமர் தொழுதேத்தும் அத்தன் தன்னை
அந்தகனுக் கந்தகனை அளக்க லாகா
எரிபுரியு மிலிங்கபுரா ணத்து ளானை
எண்ணாகிப் பண்ணா ரெழுத்தா னானைத்
திரிபுரஞ்செற் றொருமூவர்க் கருள்செய் தானைச்
சிலந்திக்கும் அரசளித்த செல்வன் தன்னை
நரிவிரவு காட்டகத்தி லாட லானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 8

6985.ஆலாலம் மிடற்றணியா அடக்கி னானை
ஆலதன்கீழ் அறநால்வர்க் கருள்செய் தானைப்
பாலாகித் தேனாகிப் பழமு மாகிப்
பைங்கரும்பா யங்கருந்துஞ் சுவையா னானை
மேலாய வேதியர்க்கு வேள்வி யாகி
வேள்வியினின் பயனாய விமலன் தன்னை
நாலாய மறைக்கிறைவ னாயி னானை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 9

6986.மீளாத ஆளென்னை உடையான் தன்னை
வெளிசெய்த வழிபாடு மேவி னானை

மாளாமை மறையவனுக் குயிரும் வைத்து
வன்கூற்றி னுயிர்மாள உதைத்தான் தன்னைத்
தோளாண்மை கருதிவரை யெடுத்த தூர்த்தன்
தோள்வலியுந் தாள்வலியுந் தொலைவித் தாங்கே
நாளோடு வாள்கொடுத்த நம்பன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 75. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் – திருத்தாண்டகம்

6987. சொன்மலிந்த மறைநான்கா றங்க மாகிச்
சொற்பொருளுங் கடந்தசுடர்ச் சோதி போலும்
கன்மலிந்த கயிலைமலை வாணர் போலுங்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டர் போலும்
மன்மலிந்த மணிவரைத்திண் தோளர் போலும்
மலையரையன் மடப்பாவை மணாளர் போலுங்
கொன்மலிந்த மூவிலைவேற் குழகர் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 1

6988. கானல்இளங் கலிமறவ னாகிப் பார்த்தன்
கருத்தளவு செருத்தொகுதி கண்டார் போலும்
ஆன்நல்இளங் கடுவிடையொன் றேறி யண்டத்
தப்பாலும் பலிதிரியும் அழகர் போலுந்
தேனவிளந் துவலைமலி தென்றல் முன்றில்
செழும்பொழிற்பூம் பாளைவிரி தேறல் நாறுங்
கூனல்இளம் பிறைதடவு கொடிகொள் மாடக்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 2

6989. நீறலைத்த திருவுருவும் நெற்றிக் கண்ணும்
நிலாஅலைத்த பாம்பினொடு நிறைநீர்க் கங்கை
ஆறலைத்த சடைமுடியும் அம்பொன் தோளும்
அடியவர்க்குக் காட்டியருள் புரிவார் போலும்
ஏறலைத்த நிமிர்கொடியொன் றுடையர் போலும்
ஏழுலகுந் தொழுகழலெம் மீசர் போலுங்
கூறலைத்த மலைமடந்தை கொழுநர் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 3

6990. தக்கனது பெருவேள்வி தகர்த்தார் போலுஞ்
சந்திரனைக் கலைகவர்ந்து தரித்தார் போலுஞ்
செக்கரொளி பவளவொளி மின்னின்சோதி செழுஞ்
சுடர்த்தீ ஞாயிறெனச் செய்யர் போலும்
மிக்கதிறல் மறையவரால் விளங்கு வேள்வி
மிகுபுகைபோய் விண்பொழியக் கழனி யெல்லாங்
கொக்கினிய கனிசிதறித் தேறல் பாயுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 4

6991. காலன்வலி தொலைத்தகழற் காலர் போலுங்
காமனெழி லழல்விழுங்கக் கண்டார் போலும்
ஆலதனி லறநால்வர்க் களித்தார் போலும்
ஆணொடுபெண் அலியல்ல ரானார் போலும்
நீலவுரு வயிரநிரை பச்சை செம்பொன்
நெடும்பளிங்கென் றறிவரிய நிறத்தார் போலுங்
கோலமணி கொழித்திழியும் பொன்னி நன்னீர்க்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 5

6992. முடிகொண்ட வளர்மதியும் மூன்றாய்த் தோன்றும்
முளைஞாயி றன்னமலர்க் கண்கள் மூன்றும்
அடிகொண்ட சிலம்பொலியும் அருளார் சோதி
அணிமுறுவற் செவ்வாயும் அழகாய்த் தோன்றத்
துடிகொண்ட இடைமடவாள் பாகங் கொண்டு
சுடர்ச்சோதிக் கடிச்செம்பொன் மலைபோ லிந்நாள்
குடிகொண்டென் மனத்தகத்தே புகுந்தார் போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 6

6993. காரிலங்கு திருவுருவத் தவற்கும் மற்றைக்
கமலத்திற் காரணற்குங் காட்சி யொண்ணாச்
சீரிலங்கு தழற்பிழம்பிற் சிவந்தார் போலுஞ்
சிலைவளைவித் தவுணர்புரஞ் சிதைத்தார் போலும்
பாரிலங்கு புனலனல்கால் பரமா காசம்
பரிதிமதி சுருதியுமாய்ப் பரந்தார் போலுங்
கூரிலங்கு வேற்குமரன் தாதை போலுங்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 7

6994. பூச்சூழ்ந்த பொழில்தழுவு புகலூ ருள்ளார்
புறம்பயத்தார் அறம்புரிபூந் துருத்தி புக்கு

மாச்சூழ்ந்த பழனத்தார் நெய்த்தா னத்தார்
 மாதவத்து வளர்சோற்றுத் துறையார் நல்ல
தீச்சூழ்ந்த திகிரிதிரு மாலுக் கீந்து திருவானைக்
 காவிலோர் சிலந்திக் கந்நாள்
கோச்சோழர் குலத்தரசு கொடுத்தார் போலுங்
 குடந்தைக்கீழ் கோட்டத்தெங் கூத்த னாரே. 8

6995. பொங்கரவர் புலித்தோலர் புராணர் மார்பிற்
 பொறிகிளர்வெண் பூணநூல் புனிதர் போலுஞ்
சங்கரவக் கடன்முகடு தட்ட விட்டுச்
 சதுரநடம் ஆட்டுகந்த சைவர் போலும்
அங்கரவத் திருவடிக்காட் பிழைப்பத் தந்தை
 அந்தணனை அறஎறிந்தார்க் கருளப் போதே
கொங்கரவச் சடைக்கொன்றை கொடுத்தார் போலுங்
 குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 9

6996. ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
 யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவிஅம ருலகனைத்து முருவிப் போகக்
 குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலுந்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
 சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
 குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே. 10

6997. செறிகொண்ட சிந்தைதனுள் தெளிந்து தேறித்
 தித்திக்குஞ் சிவபவனத் தமுதம் போலும்
நெறிகொண்ட குழலியுமை பாக மாக
 நிறைந்தமரர் கணம்வணங்க நின்றார் போலும்
மறிகொண்ட கரதலத்தெம் மைந்தர் போலும்
 மதிலிலங்கைக் கோன்மலங்க வரைக்கீ ழிட்டுக்
குறிகொண்ட இன்னிசைகேட் டுகந்தார் போலும்
 குடந்தைக்கீழ்க் காட்டத்தெம் கூத்த னாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 76. திருப்புத்தூர் – திருத்தாண்டகம்

6998.புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ்தக் கோன்காண்
போர்விடையின் பாகன்காண் புவன மேழும்
விரிந்துபல வுயிராகி விளங்கி னான்காண்
விரைக்கொன்றைக் கண்ணியன்காண் வேதம் நான்குந்
தெரிந்துமுதல் படைத்தோனைச் சிரங்கொண் டோன்காண்
தீர்த்தன்காண் திருமாலோர் பங்கத் தான்காண்
திருந்துவயல் புடைதழுவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 1

6999.வாராரும் முலைமங்கை பங்கத் தான்காண்
மாமறைக ளாயவன்காண் மண்ணும் விண்ணுங்
கூரார்வெந் தழலவனுங் காற்றும் நீருங்
குலவரையும் ஆயவன்காண் கொடுநஞ் சுண்ட
காராருங் கண்டன்காண் எண்தோ ளன்காண்
கயிலைமலைப் பொருப்பன்காண் விருப்போ டென்றுந்
தேராரும் நெடுவீதித் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 2

7000. மின்காட்டுங் கொடிமருங்கு லுமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவில் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 3

7001. ஏடேறு மலர்க்கமலத் தயனும் மாலும்
இந்திரனும் பணிந்தேத்த இருக்கின் றான்காண்
தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந்
துன்னியசெஞ் சடையான்காண் துகள்தீர் சங்கம்
மாடேறி முத்தீனுங் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள் மேதி
சேடேறி மடுப்படியுந் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 4

7002. கருமருவு வல்வினைநோய் அகற்றி னான்காண்
காமருபூங் கச்சியே கம்பத் தான்காண்
பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும்

பெரும்பற்றத் தன்புலியூர் மன்றாடி காண்
தருமருவு கொடைத்தடக்கை யளகைக் கோன்றன்
சங்காத்தி ஆரூரில் தனியா னைகாண்
திருமருவு பொழில்புடைசூழ் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 5

7003. காம்பாடு தோளுமையாள் காண நட்டங்
கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய
பாம்பாடப் படுதலையிற் பலிகொள் வோன்காண்
பவளத்தின் பருவரைபோல் படிமத் தான்காண்
தாம்பாடு சினவிடையே பகடாக் கொண்ட
சங்கரன்காண் பொங்கரவக் கச்சை யோன்காண்
சேம்பாடு வயல்புடைசூழ் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6

7004. வெறிவிரவு மலர்க்கொன்றை விளங்கு திங்கள்
வன்னியொடு விரிசடைமேல் மிலைச்சி னான்காண்
பொறிவிரவு கதநாகம் அக்கினோடு பூண்டவன்காண்
பொருபுலித்தோ லாடை யான்காண்
அறிவரிய நுண்பொருள்க ளாயி னான்காண்
ஆயிரம்பே ருடையவன்காண் அந்தண் கானல்
செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 7

7005. புக்கடைந்த வேதியற்காய்க் காலற் காய்ந்த
புண்ணியன்காண் வெண்ணகைவெள் வளையா ளஞ்ச
மிக்கெதிர்ந்த கரிவெருவ உரித்த கோன்காண்
வெண்மதியைக் கலைசேர்த்த திண்மை யோன்காண்
அக்கரும்பு பெரும்புன்னை நெருங்கு சோலை
ஆரூருக் கதிபதிகாண் அந்தண் தென்றல்
திக்கணைந்து வருமருங்கில் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 8

7006. பற்றவன்காண் ஏனோர்க்கும் வானோ ருக்கும்
பராபரன்காண் தக்கன்றன் வேள்வி செற்ற
கொற்றவன்காண் கொடுஞ்சினத்தை யடங்கச் செற்று
ஞானத்தை மேன்மிகுத்தல் கோளாக் கொண்ட
பெற்றியன்காண் பிறங்கருவிக் கழுக்குன்றத்தெம்
பிஞ்ஞகன்காண் பேரெழிலார் காம வேளைச்
செற்றவன்காண் சீர்மருவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே 9

7007. உரம்மதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட
வோராழி படைத்தவன்காண் உலகு சூழும்
வரமதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண்
வானவர்கோன் புயம்நெரித்த வல்லா ளன்காண்
அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா
அணிந்தவன்காண் அலைகடல்சூழ் இலங்கை வேந்தன்
சிரம்நெரித்த சேவடிகாண் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 77. திருவாய்மூர் – திருத்தாண்டகம்

7008. பாட வடியார் பரவக் கண்டேன்
பத்தர்கணங் கண்டேன் மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்
அங்கைஅனல் கண்டேன் கங்கை யாளைக்
கோட லரவார் சடையிற் கண்டேன்
கொக்கினிதழ் கண்டேன் கொன்றை கண்டேன்
வாடல் தலையொன்று கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 1

7009. பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
பதினெண் கணமும் பயிலக் கண்டேன்
நீல நிறமுண்ட கண்டங் கண்டேன்
நெற்றிநுதல் கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேல் தோன்றக் கண்டேன்
மாலைச் சடையும் முடியுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 2

7010. மண்ணைத் திகழ நடம தாடும்
வரைசிலம் பார்க்கின்ற பாதங் கண்டேன்
விண்ணில் திகழும் முடியுங் கண்டேன்
வேடம் பலவாஞ் சரிதை கண்டேன்
நண்ணிப் பிரியா மழுவுங் கண்டேன்
நாலுமறை யங்கம் ஓதக் கண்டேன்

வண்ணம் பொலிந்திலங்கு கோல்ங் கண்டேன்
வாய்மூ ரடிகளை நான்கண்ட வாறே. 3

7011. விளைத்த பெரும்பத்தி கூர நின்று
மெய்யடியார் தம்மை விரும்பக் கண்டேன்
இளைக்குங் கதநாகம் மேனி கண்டேன்
என்பின் கலந்திகழ்ந்து தோன்றக் கண்டேன்
திளைக்குந் திருமார்பில் நீறு கண்டேன்
சேணார் மதில்மூன்றும் பொன்ற அன்ற
வளைத்த வரிசிலையுங் கையிற் கண்டேன்
வாய்மூ ரடிகளை நன்கண்ட வாறே. 4

7012. கான்மறையும் போதகந்தி னுரிவை கண்டேன்
காலிற் கழல்கண்டேன் கரியின் தோல்கொண்
டுன்மறையப் போர்த்த வடிவுங் கண்டேன்
உள்கமனம் வைத்த உணர்வுங் கண்டேன்
நான்மறை யானோடு நெடிய மாலும்
நண்ணி வரக்கண்டேன் திண்ண மாக
மான்மறிதங் கையின் மருவக் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 5

7013. அடியார் சிலம்பொலிக ளார்ப்பக் கண்டேன்
அவ்வவர்க்கே யீந்த கருணை கண்டேன்
முடியார் சடைமேல் அரவம் மூழ்க
மூரிப் பிறைபோய் மறையக் கண்டேன்
கொடியா ரதன்மே லிடபங் கண்டேன்
கோவணமுங் கீளுங் குலாவக் கண்டேன்
வடியாரும் மூவிலைவேல் கையில் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 6

7014. குழையார் திருத்தோடு காதிற் கண்டேன்
கொக்கரையுஞ் சச்சரியுங் கொள்கை கண்டேன்
இழையார் புரிநூல் வலத்தே கண்டேன்
ஏழிசை யாழ்வீணை முரலக் கண்டேன்
தழையார் சடைகண்டேன் தன்மை கண்டேன்
தக்கையொடு தாளங் கறங்கக் கண்டேன்
மழையார் திருமிடறும் மற்றுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 7

7015. பொருந்தாத செய்கை பொலியக் கண்டேன்
போற்றிசைத்து விண்ணோர் புகழக் கண்டேன்
பரிந்தார்க் கருளும் பரிசுங் கண்டேன்
பாராகிப் புனலாகி நிற்கை கண்டேன்
விருந்தாய்ப் பரந்த தொகுதி கண்டேன்
மெல்லியலும் விநாயகனுந் தோன்றக் கண்டேன்
மருந்தாய்ப் பிணிதீர்க்கு மாறு கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 8

7016. மெய்யன்ப ரானார்க் கருளுங் கண்டேன்
வேடுவனாய் நின்ற நிலையுங் கண்டேன்
கையம் பரணெரித்த காட்சி கண்டேன்
கங்கணமும் அங்கைக் கனலுங் கண்டேன்
ஐயம் பலவூர் திரியக் கண்டேன்
அன்றவன்றன் வேள்வி யழித்து கந்து
வையம் பரவ இருத்தல் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே. 9

7017. கலங்க இருவர்க் கழலாய் நீண்ட காரணமுங்
கண்டேன் கருவாய் நின்று
பலங்கள் தரித்துகந்த பண்புங் கண்டேன் பாட
லொலியெலாங் கூடக் கண்டேன்
இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும் இறுத்தவனுக்
கீந்த பெருமை கண்டேன்
வலங்கைத் தலத்துள் அனலுங் கண்டேன் வாய்மூ
ரடிகளைநான் கண்ட வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 78. திருவாலங்காடு – திருத்தாண்டகம்

7018. ஒன்றா வுலகனைத்து மானார் தாமே
ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி யெங்கும் நிமிர்ந்தார் தாமே
நீர்வளித் தீ யாகாச மானார் தாமே
கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே
கோலப் பழனை உடையார் தாமே

சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

7019. மலைமகளைப் பாக மமர்ந்தார் தாமே
வானோர் வணங்கப் படுவார் தாமே
சலமகளைச் செஞ்சடைமேல் வைத்தார் தாமே
சரணென் றிருப்பார்கட் கன்பர் தாமே
பலபலவும் வேடங்க ளானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சிலைமலையா மூவெயிலும் அட்டார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 2

7020. ஆவுற்ற ஐந்தும் உகந்தார் தாமே
அளவில் பெருமை யுடையார் தாமே
பூவுற்ற நாற்றமாய் நின்றார் தாமே
புனிதப் பொருளாகி நின்றார் தாமே
பாவுற்ற பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேவுற் றடிபரவ நின்றார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 3

7021. நாறுபூங் கொன்றை முடியார் தாமே
நான்மறையோ டாறங்கஞ் சொன்னார் தாமே
மாறிலா மேனி யுடையார் தாமே
மாமதியஞ் செஞ்சடைமேல் வைத்தார் தாமே
பாறினார் வெண்தலையி லுண்டார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தேறினார் சித்தத் திருந்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 4

7022. அல்லும் பகலுமாய் நின்றார் தாமே
அந்தியுஞ் சந்தியு மானார் தாமே
சொல்லும் பொருளெலா மானார் தாமே
தோத்திரமுஞ் சாத்திரமு மானார் தாமே
பல்லுரைக்கும் பாவெலா மானார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 5

7023. தொண்டாய்ப் பணிவார்க் கணியார் தாமே
தூநீ றணியுஞ் சுவண்டர் தாமே
தண்தா மரையானும் மாலுந் தேடத்
தழலுருவா யோங்கி நிமிர்ந்தார் தாமே
பண்தான் இசைபாட நின்றார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்டோள்க ளெட்டு முடையார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 6

7024. மையாருங் கண்ட மிடற்றார் தாமே
மயானத்தி லாடல் மகிழ்ந்தார் தாமே
ஐயாறும் ஆரூரும் ஆனைக் காவும்
அம்பலமுங் கோயிலாக் கொண்டார் தாமே
பையா டரவ மசைத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செய்யாள் வழிபட நின்றார்தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 7

7025. விண்முழுதும் மண்முழுது மானார் தாமே
மிக்கோர்க ளேத்துங் குணத்தார் தாமே
கண்விழியாற் காமனையுங் காய்ந்தார் தாமே
காலங்களூழி கடந்தார் தாமே
பண்ணியலும் பாட லுகப்பார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
திண்மழுவா ளேந்து கரத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 8

7026. காரார் கடல்நஞ்சை யுண்டார் தாமே
கயிலை மலையை உடையார் தாமே
ஊரா ஏகம்ப முகந்தார் தாமே
ஒற்றியூர் பற்றி யிருந்தார் தாமே
பாரார் புகழப் படுவார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
தீராத வல்வினைநோய் தீர்ப்பார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 9

7027. மாலைப் பிறைசென்னி வைத்தார் தாமே
வண்கயிலை மாமலையை வந்தி யாத

நீலக் கடல்சூ ழிலங்கைக் கோனை
நெரிய விரலா லடர்த்தார் தாமே
பாலொத்த மேனி நிறத்தார் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
சீலத்தா ரேத்துந் திறத்தார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 79. திருத்தலையாலங்காடு – திருத்தாண்டகம்

7028. தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைச்
சூழ்நரகில் வீழாமே காப்பான் தன்னை
அண்டத்துக் கப்பாலைக் கப்பா லானை
ஆதிரைநா ளாதரித்த அம்மான் தன்னை
முண்டத்தின் முளைத்தெழுந்த தீயா னானை
மூவுருவத் தோருருவாய் முதலாய் நின்ற
தண்டத்தில் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 1

7029. அக்கிருந்த அரையானை அம்மான் தன்னை
அவுணர்புர மொருநொடியி லெரிசெய் தானைக்
கொக்கிருந்த மகுடத்தெங் கூத்தன் தன்னைக்
குண்டலஞ்சேர் காதானைக் குழைவார் சிந்தை
புக்கிருந்து போகாத புனிதன் தன்னைப்
புண்ணியனை யெண்ண ருஞ்சீர்ப் போகமெல்லாந்
தக்கிருந்த தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 2

7030. மெய்த்தவத்தை வேதத்தை வேத வித்தை
விளங்கிளமா மதிசூடும் விகிர்தன் தன்னை
எய்த்தவமே உழிதந்த ஏழை யேனை
யிடர்க்கடலில் வீழாமே யேற வாங்கிப்
பொய்த்தவத்தா ரறியாத நெறிநின் றானைப்
புனல்கரந்திட் டுமையொடொரு பாகம் நின்ற
தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 3

7031. சிவனாகித் திசைமுகனாய்த் திருமா லாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீரு மாகிப்
புவனாகிப் புவனங்க ளனைத்து மாகிப்
பொன்னாகி மணியாகி முத்து மாகிப்
பவனாகிப் பவனங்க ளனைத்து மாகிப்
பசுவேறித் திரிவானோர் பவனாய் நின்ற
தவனாய தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 4

7032. கங்கையெனுங் கடும்புனலைக் கரந்தான் தன்னைக்
காமருபூம் பொழிற்கச்சிக் கம்பன் தன்னை
அங்கையினில் மான்மறியொன் றேந்தி னானை
ஐயாறு மேயானை ஆரூ ரானைப்
பங்கமிலா அடியார்க்குப் பரிந்தான் தன்னைப்
பரிதிநிய மத்தானைப் பாசூ ரானைச்
சங்கரனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 5

7033. விடம்திகழும்அரவரைமேல் வீக்கி னானை
விண்ணவர்க்கு மெண்ணரிய அளவி லானை
அடைந்தவரை அமருலகம் ஆள்விப் பானை
அம்பொன்னைக் கம்பமா களிறட் டானை
மடந்தையொரு பாகனை மகுடந் தன்மேல்
வார்புனலும் வாளரவும் மதியும் வைத்த
தடங்கடலைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 6

7034. விடையேறிக் கடைதோறும் பலிகொள் வானை
வீரட்டம் மேயானை வெண்ணீற் றானை
முடைநாறு முதுகாட்டி லாட லானை
முன்னானைப் பின்னானை யந்நா ளானை
உடையாடை யுரிதோலே உகந்தான் தன்னை
உமையிருந்த பாகத்து ளொருவன் தன்னைச்
சடையானைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 7

7035. கரும்பிருந்த கட்டிதனைக் கனியைத் தேனைக்
கன்றாப்பின் நடுதறியைக் காறை யானை
இரும்பமர்ந்த மூவிலைவேல் ஏந்தி னானை
யென்னானைத் தென்னானைக் காவான் தன்னைச்

சுரும்பமரும் மலர்க்கொன்றை சூடி னானைத்
தூயானைத் தாயாகி உலகுக் கெல்லாந்
தரும் பொருளைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 8

7036. பண்டளவு நரம்போசைப் பயனைப் பாலைப்
படுபயனைக் கடுவெளியைக் கனலைக் காற்றைக்
கண்டளவிற் களிகூர்வார்க் கெளியான் தன்னைக்
காரணனை நாரணனைக் கமலத் தோனை
எண்டளவி லென்நெஞ்சத் துள்ளே நின்ற
எம்மானைக் கைம்மாவி னுரிவை பேணுந்
தண்டரனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 9

7037. கைத்தலங்க ளிருபதுடை அரக்கர் கோமான்
கயிலைமலை அதுதன்னைக் கருதா தோடி
முத்திலங்கு முடிதுளங்க வளைக ளெற்றி
முடுகுதலுந் திருவிரலொன் றவன்மேல் வைப்பப்
பத்திலங்கு வாயாலும் பாடல்கேட்டுப்
பரிந்தவனுக் கிராவணனென் றீந்த நாம
தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாள் போக்கி னேனே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 80. திருமாற்பேறு – திருத்தாண்டகம்

7038. பாரானைப் பாரினது பயனா னானைப்
படைப்பாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தங்கட்
கனைத்துலகு மானானை அமரர் கோனைக்
காராருங் கண்டனைக் கயிலை வேந்தைக்
கருதுவார் மனத்தானைக் காலற் செற்ற
சீரானைச் செல்வனைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 1

7039. விளைக்கின்ற நீராகி வித்து மாகி
விண்ணோடு மண்ணாகி விளங்கு செம்பொன்
துளைக்கின்ற துளையாகிச் சோதி யாகித்
தூண்டரிய சுடராகித் துளக்கில் வான்மேல்
முளைக்கின்ற கதிர்மதியும் அரவுமொன்றி முழங்கொலிநீர்க்
கங்கையொடு மூவா தென்றுந் திளைக்கின்ற
சடையானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 2

7040. மலைமகள்தங் கோனவனை மாநீர் முத்தை
மரகதத்தை மாமணியை மல்கு செல்வக்
கலைநிலவு கையானைக் கம்பன் தன்னைக்
காண்பினிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
விலைபெரிய வெண்ணீற்று மேனி யானை
மெய்யடியார் வேண்டுவதே வேண்டு வானைச்
சிலைநிலவு கரத்தானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 3

7041. உற்றானை யுடல்தனக்கோர் உயிரா னானை
ஓங்காரத் தொருவனையங் குமையோர் பாகம்
பெற்றானைப் பிஞ்ஞகனைப் பிறவா தானைப்
பெரியனவும் அரியனவும் எல்லாம் முன்னே
கற்றானைக் கற்பனவுந் தானே யாய
கச்சியே கம்பனைக் காலன் வீழச்
செற்றானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 4

7042. நீறாகி நீறுமிழும் நெருப்பு மாகி
நினைவாகி நினைவினிய மலையான் மங்கை
கூறாகிக் கூற்றாகிக் கோளு மாகிக்
குணமாகிக் குறையாத வுவகைக் கண்ணீர்
ஆறாத ஆனந்தத் தடியார் செய்த
அனாசாரம் பொறுத்தருளி அவர்மே லென்றுஞ்
சீறாத பெருமானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 5

7043. மருவினிய மறைப்பொருளை மறைக்காட் டானை
மறப்பிலியை மதியேந்து சடையான் தன்னை
உருநிலவு மொண்சுடரை உம்ப ரானை
உரைப்பினிய தவத்தானை உலகில் வித்தைக்
கருநிலவு கண்டனைக் காளத் தியைக்

கருதுவார் மனத்தானைக் கல்வி தன்னைச்
செருநிலவு படையானைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 6

7044. பிறப்பானைப் பிறவாத பெருமை யானைப்
பெரியானை அரியானைப் பெண்ஆண் ஆய
நிறத்தானை நின்மலனை நினையா தாரை
நினையானை நினைவோரை நினைவோன் தன்னை
அறத்தானை அறவோனை ஐயன் தன்னை
அண்ணல்தனை நண்ணரிய அமர ரேத்துந்
திறத்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 7

7045. வானகத்தில் வளர்முகிலை மதியந் தன்னை
வணங்குவார் மனத்தானை வடிவார் பொன்னை
ஊனகத்தில் உறுதுணையை உலவா தானை
ஒற்றியூ ருத்தமனை ஊழிக் கன்றைக்
கானகத்துக் கருங்களிற்றைக் காளத் தியைக்
கருதுவார் கருத்தானைக் கருவை மூலத்
தேனகத்தி லின்சுவையைத் திருமாற் பேற்றெஞ்
செம்பளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 8

7046. முற்றாத முழுமுதலை முளையை மொட்டை
முழுமலரின் மூர்த்தியை முனியா தென்றும்
பற்றாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னைப்
பராபரனைப் பரஞ்சுடரைப் பரிவோர் நெஞ்சில்
உற்றானை உயர்கருப்புச் சிலையோன் நீறாய்
ஒள்ளல்வாய் வேவவுரு நோக்கத் தானைச்
செற்றானைத் திரிபுரங்கள் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 9

7047. விரித்தானை நான்மறையோ டங்க மாறும்
வெற்பெடுத்த இராவணனை விரலா லூன்றி
நெரித்தானை நின்மலனை யம்மான் தன்னை
நிலாநிலவு செஞ்சடைமேல் நிறைநீர்க் கங்கை
தரித்தானைச் சங்கரனைச் சம்பு தன்னைத்
தரியலர்கள் புரமூன்றுந் தழல்வாய் வேவச்
சிரித்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெஞ்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. திருக்கோடிகா – திருத்தாண்டகம்

7048. கண்தலஞ்சேர் நெற்றியிளங் காளை கண்டாய்
கல்மதில்சூழ் கந்தமா தனத்தான் கண்டாய்
மண்டலஞ்சேர் மயக்கறுக்கும் மருந்து கண்டாய்
மதில்கச்சி யேகம்பம் மேயான் கண்டாய்
விண்தலஞ்சேர் விளக்கொளியாய் நின்றான் கண்டாய்
மீயச்சூர் பிரியாத விகிர்தன் கண்டாய்
கொண்டலஞ்சேர் கண்டத்தெங் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 1

7049. வண்டாடு பூங்குழலாள் பாகன் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் கண்டாய்
பண்டாடு பழவினைநோய் தீர்ப்பான் கண்டாய்
பரலோக நெறிகாட்டும் பரமன் கண்டாய்
செண்டாடி அவுணர்புரஞ் செற்றான் கண்டாய்
திருவாரூர்த் திருமூலட் டானன் கண்டாய்
கொண்டாடும் அடியவர்தம் மனத்தான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 2

7050. அலையார்ந்த புனற்கங்கைச் சடையான் கண்டாய்
அடியார்கட் காரமுத மானான் கண்டாய்
மலையார்ந்த மடமங்கை பங்கன் கண்டாய்
வானோர்கள் முடிக்கணியாய் நின்றான் கண்டாய்
இலையார்ந்த திரிசூலப் படையான் கண்டாய்
ஏழுலகு மாய்நின்ற எந்தை கண்டாய்
கொலையார்ந்த குஞ்சரத்தோல் போர்த்தான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 3

7051. மற்றாருந் தன்னொப்பா ரில்லான் கண்டாய்
மயிலாடு துறையிடமா மகிழ்ந்தான் கண்டாய்
புற்றா டரவணிந்த புனிதன் கண்டாய்
பூந்துருத்திப் பொய்யிலியாய் நின்றான் கண்டாய்
அற்றார்கட் கற்றானாய் நின்றான் கண்டாய்
ஐயா றகலாத ஐயன் கண்டாய்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 4

7052. வாரார்ந்த வனமுலையாள் பங்கன் கண்டாய்
மாற்பேறு காப்பா மகிழ்ந்தான் கண்டாய்
போரார்ந்த மால்விடையொன் றூர்வான் கண்டாய்
புகலூரை அகலாத புனிதன் கண்டாய்
நீரார்ந்த நிமிர்சடையொன் றுடையான் கண்டாய்
நினைப்பார்தம் வினைப்பாரம் இழிப்பான் கண்டாய்
கூரார்ந்த மூவிலைவேற் படையான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 5

7053. கடிமலிந்த மலர்க்கொன்றைச் சடையான் கண்டாய்
கண்ணப்ப விண்ணப்புக் கொடுத்தான் கண்டாய்
படிமலிந்த பல்பிறவி யறுப்பான் கண்டாய்
பற்றற்றார் பற்றவனாய் நின்றான் கண்டாய்
அடிமலிந்த சிலம்பலம்பத் திரிவான் கண்டாய்
அமரர்கணந் தொழுதேத்தும் அம்மான் கண்டாய்
கொடிமலிந்த மதில்தில்லைக் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 6

7054. உழையாடு கரதலமொன் றுடையான் கண்டாய்
ஒற்றியூ ரொற்றியா வுடையான் கண்டாய்
கழையாடு கழுக்குன்றம் அமர்ந்தான் கண்டாய்
காளத்திக் கற்பகமாய் நின்றான் கண்டாய்
இழையாடும் எண்புயத்த இறைவன் கண்டாய்
என்நெஞ்சத் துள்நீங்கா எம்மான் கண்டாய்
குழையாட நடமாடுங் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 7

7055. படமாடு பன்னகக்கச் சசைத்தான் கண்டாய்
பராய்த்துறையும் பாசூரும் மேயான் கண்டாய்
நடமாடி யேழுலகுந் திரிவான் கண்டாய்
நான்மறையின் பொருள்கண்டாய் நாதன் கண்டாய்
கடமாடு களிறுரித்த கண்டன் கண்டாய்
கயிலாயம் மேவி யிருந்தான் கண்டாய்
குடமாடி யிடமாகக் கொண்டான் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையுங் குழகன் தானே. 8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 82. திருச்சாய்க்காடு – திருத்தாண்டகம்

7056. வானத் திளமதியும் பாம்புந் தன்னில்
வளர்சடைமே லாதரிப்ப வைத்தார் போலுந்
தேனைத் திளைத்துண்டு வண்டு பாடுந்
தில்லைநட மாடுந் தேவர் போலும்
ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
நன்மையுந் தீமையு மானார் போலுந்
தேனொத் தடியார்க் கினியார் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 1

7057. விண்ணோர் பரவநஞ் சுண்டார் போலும்
வியந்துருத்தி வேள்விக் குடியார் போலும்
அண்ணா மலையுறையும் அண்ணல் போலும்
அதியரைய மங்கை யமர்ந்தார் போலும்
பண்ணார் களிவண்டு பாடி யாடும்
பராய்த் துறையுள் மேய பரமர் போலுந்
திண்ணார் புகார்முத் தலைக்குந் தெண்ணீர்த்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 2

7058. கானிரிய வேழ முரித்தார் போலுங்
காவிரிப்பூம் பட்டினத் துள்ளார் போலும்
வானிரிய வருபுரமூன் றெரித்தார் போலும்
வடகயிலை மலையதுதம் மிருக்கை போலும்
ஊனிரியத் தலைகலனா வுடையார் போலும்
உயர்தோணி புரத்துறையும் ஒருவர் போலுந்
தேனிரிய மீன்பாயுந் தெண்ணீர்ப் பொய்கைத்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 3

7059. ஊனுற்ற வெண்தலைசேர் கையர் போலும்
ஊழி பலகண் டிருந்தார் போலும்
மானுற்ற கரதலமொன் றுடையார் போலும்
மறைக்காட்டுக் கோடி மகிழ்ந்தார் போலுங்
கானுற்ற ஆட லமர்ந்தார் போலுங்
காமனையுங் கண்ணழலாற் காய்ந்தார் போலுந்
தேனுற்ற சோலை திகழ்ந்து தோன்றுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 4

7060. கார்மல்கு கொன்றையந் தாரார் போலுங்
காலனையும் ஒருதையால் கண்டார் போலும்
பார்மல்கி யேத்தப் படுவார் போலும்
பருப்பதத்தே பல்லூழி நின்றார் போலும்
ஊர்மல்கு பிச்சைக் குழன்றார் போலும்
ஒத்தூ ரொருநாளும் நீங்கார் போலுஞ்
சீர்மல்கு பாட லுகந்தார் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 5

7061. மாவாய்ப் பிளந்துகந்த மாலுஞ் செய்ய
மலரவனுந் தாமேயாய் நின்றார் போலும்
மூவாத மேனி முதல்வர் போலும்
முதுகுன்ற மூதூ ருடையார் போலுங்
கோவாய முனிதன்மேல் வந்த கூற்றைக்
குரைகழலா லன்று குமைத்தார் போலுந்
தேவாதி தேவர்க் கரியார் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 6

7062. கடுவெளியோ டோரைந்து மானார் போலுங்
காரோணத் தென்று மிருப்பார் போலும்
இடிகுரல்வாய்ப் பூதப் படையார் போலும்
ஏகம்பம் மேவி யிருந்தார் போலும்
படியொருவ ரில்லாப் படியார் போலும்
பாண்டிக் கொடுமுடியுந் தம்மூர் போலுஞ்
செடிபடுநோ யடியாரைத் தீர்ப்பார்போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 7

7063. விலையிலா ஆரஞ்சேர் மார்பர் போலும்
வெண்ணீறு மெய்க்கணிந்த விகிர்தர் போலும்
மலையினார் மங்கை மணாளர் போலும்
மாற்பேறு காப்பாய் மகிழ்ந்தார் போலுந்
தொலைவிலார் புரமூன்றுந் தொலைத்தார் போலுஞ்
சோற்றுத் துறைதுருத்தி யுள்ளார் போலுஞ்
சிலையினார் செங்க ணரவர் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 8

7064. அல்ல லடியார்க் கறுப்பார் போலும்
அமருலகந் தம்மடைந்தார்க் காட்சி போலும்
நல்லமும் நல்லூரும் மேயார் போலும்
நள்ளாறு நாளும் பிரியார் போலும்
முல்லை முகைநகையாள் பாகர் போலும்
முன்னமே தோன்றி முளைத்தார் போலுந்
தில்லை நடமாடுந் தேவர் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 9

7065. உறைப்புடைய இராவணன்பொன் மலையைக் கையால்
ஊக்கஞ்செய் தெடுத்தலுமே உமையா ளஞ்ச
நிறைப்பெருந்தோள் இருபதும்பொன் முடிகள் பத்தும்
நிலஞ்சேர விரல்வைத்த நிமலர் போலும்
பிறைப்பிளவு சடைக்கணிந்த பெம்மான் போலும்
பெண்ணா ணுருவாகி நின்றார் போலுஞ்
சிறப்புடைய அடியார்கட் கினியார் போலுந்
திருச்சாய்க்காட் டினிதுறையுஞ் செல்வர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 83. திருப்பாசூர் – திருத்தாண்டகம்

7066. விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
எண்ணாகி எழுத்தாகி இயல்பு மாகி
ஏழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சி யாகிக்
காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி இன்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 1

7067. வேதமோர் நான்காய் ஆறங்க மாகி
விரிக்கின்ற பொருட்கெல்லாம் வித்து மாகிக்
கூதலாய்ப் பொழிகின்ற மாரி யாகிக்
குவலயங்கள் முழுதுமாய்க் கொண்ட லாகிக்
காதலால் வானவர்கள் போற்றி யென்றுங்
கடிமலர்கள் அவைதூவி ஏத்த நின்ற

பாதியோர் மாதினனைப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 2

7068. தடவரைக ளேழுமாய்க் காற்றாய்த் தீயாய்த்
தண்விசும்பாய்த் தண்விசும்பி னுச்சி யாகிக்
கடல்வலயஞ் சூழ்ந்ததொரு ஞால மாகிக்
காண்கின்ற கதிரவனும் மதியு மாகிக்
குடமுழவச் சதிவழியே அனல்கை யேந்திக்
கூத்தாட வல்ல குழக னாகிப்
படவரவொன் றதுவாட்டிப் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 3

7069. நீராருஞ் செஞ்சடைமேல் அரவங் கொன்றை
நிறைமதிய முடன்சூடி நீதி யாலே
சீராரும் மறையோதி யுலக முய்யச்
செழுங்கடலைக் கடைந்தகடல் நஞ்ச முண்ட
காராருங் கண்டனைக் கச்சி மேய
கண்ணுதலைக் கடலொற்றி கருதி னானைப்
பாரோரும் விண்ணோரும் பரசும் பாசூர்ப்
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 4

7070. வேடனாய் விசயன்தன் வியப்பைக் காண்பான்
வில்பிடித்துக் கொம்புடைய ஏனத் தின்பின்
கூடினார் உமையவளுங் கோலங் கொள்ளக்
கொலைப்பகழி உடன்கோத்துக் கோரப் பூசல்
ஆடினார் பெருங்கூத்துக் காளி காண
அருமறையோ டாறங்கம் ஆய்ந்து கொண்டு
பாடினார் நால்வேதம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 5

7071. புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால்
பொதுப்பந்தர் அதுஇழைத்துச் சருகால் மேய்ந்த
சித்தியினா லரசாண்டு சிறப்புச் செய்யச்
சிவகணத்துப் புகப்பெய்தார் திறலால் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு
விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப்
பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 6

7072. இணையொருவர் தாமல்லால் யாரு மில்லார்
இடைமருதோ டேகம்பத் தென்றும் நீங்கார்
அணைவரியர் யாவர்க்கு மாதி தேவர்
அருமந்த நன்மையெலா மடியார்க் கீவர்
தணல்முழுகு பொடியாடுஞ் செக்கர் மேனித்
தத்துவனைச் சாந்தகிலி னளறு தோய்ந்த
பணைமுலையாள் பாகனையெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 7

7073. அண்டவர்கள் கடல்கடைய அதனுள் தோன்றி
அதிர்ந்தெழுந்த ஆலாலம் வேலை ஞாலம்
எண்டிசையுஞ் சுடுகின்ற வாற்றைக் கண்டு
இமைப்பளவி லுண்டிருண்ட கண்டர் தொண்டர்
வண்டுபடுமது மலர்கள் தூவி நின்று
வானவர்கள் தானவர்கள் வணங்கி யேத்தும்
பண்டரங்க வேடனையெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 8

7074. ஞாலத்தை யுண்டதிரு மாலும் மற்றை
நான்முகனு மறியாத நெறியான் கையிற்
சூலத்தால் அந்தகனைச் சுருளக் கோத்துத்
தொல்லுலகிற் பல்லுயிரைக் கொல்லுங் கூற்றைக்
காலத்தா லுதைசெய்து காதல் செய்த
அந்தணனைக் கைக்கொண்ட செவ்வான் வண்ணர்
பாலொத்த வெண்ணீற்றர் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே. 9

7075. வேந்தன்நெடு முடியுடைய அரக்கர் கோமான்
மெல்லியலாள் உமைவெருவ விரைந்திட் டோடிச்
சாந்தமென நீறணிந்தான் கயிலை வெற்பைத்
தடக்கைகளா லெடுத்திடலுந் தாளா லூன்றி
ஏந்துதிரள் திண்தோளுந் தலைகள் பத்தும்
இறுத்தவன்தன் இசைகேட்டு இரக்கங் கொண்ட
பாந்தளணி சடைமுடியெம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் ண்டடியேன் உய்ந்த வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. திருச்செங்காட்டங்குடி – திருத்தாண்டகம்

7076. பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக் கத்தைப்
பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி
இருந்தமணி விளக்கதனை நின்ற பூமே
லெழுந்தருளி யிருந்தானை யெண்தோள் வீசி
அருந்திறல்மா நடமாடும் அம்மான் தன்னை
அங்கனகச் சுடர்க்குன்றை அன்றா லின்கீழ்த்
திருந்துமறைப் பொருள்நால்வர்க் கருள்செய் தானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 1

7077. துங்க நகத்தாலன்றித் தொலைய வென்றித்
தொகுதிறலவ் விரணியனை ஆகங் கீண்ட
அங்கனகத் திருமாலும் அயனுந் தேடும்
ஆரழலை அனங்கனுடல் பொடியாய் வீழ்ந்து
மங்கநகத் தான்வல்ல மருந்து தன்னை
வண்கயிலை மாமலைமேல் மன்னி நின்ற
செங்கனகத் திரள் தோளெஞ் செல்வன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 2

7078. உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை
உம்பர்மணி முடிக்கணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
பேணியஅந் தணர்க்குமறைப் பொருளைப் பின்னும்
முருகுவிரி நறுமலர்மே லயற்கும் மாற்கும்
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 3

7079. கந்தமலர்க் கொன்றையணி சடையான் தன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
கந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்
சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூல் தமிழ்மாலை பாடு வித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு அருளி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 4

7080. நஞ்சடைந்த கண்டத்து நாதன் தன்னை
நளிர்மலர்ப்பூங் கணைவேளை நாச மாக
வெஞ்சினத்தீ விழித்ததொரு நயனத் தானை
வியன்கெடில வீரட்டம் மேவி னானை
மஞ்சடுத்த நீள்சோலை மாட வீதி
மதிலாரூர் இடங்கொண்ட மைந்தன் தன்னைச்
செஞ்சினத்த திரிசூலப் படையான் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 5

7081. கன்னியையங் கொருசடையிற் கரந்தான் தன்னைக்
கடவூரில் வீரட்டங் கருதி னானைப்
பொன்னிசூழ் ஐயாற்றெம் புனிதன் தன்னைப்
பூந்துருத்தி நெய்த்தானம் பொருந்தி னானைப்
பன்னியநான் மறைவிரிக்கும் பண்பன் தன்னைப்
பரிந்திமையோர் தொழுதேத்திப் பரனே யென்று
சென்னிமிசைக் கொண்டணிசே வடியி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 6

7082. எத்திக்கு மாய்நின்ற இறைவன் தன்னை
யேகம்பம் மேயானை யில்லாத் தெய்வம்
பொத்தித்தம் மயிர்பறிக்குஞ் சமணர் பொய்யிற்
புக்கழுந்தி வீழாமே போத வாங்கிப்
பத்திக்கே வழிகாட்டிப் பாவந் தீர்த்துப்
பண்டைவினைப் பயமான எல்லாம் போக்கித்
தித்தித்தென் மனத்துள்ளே ஊறுந் தேனைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

7083. கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக்
கற்றார்கள் உற்றோருங் காத லானைப்
பொல்லாத நெறியுகந்தார் புரங்கள் மூன்றும்
பொன்றிவிழ அன்றுபொரு சரந்தொட் டானை
நில்லாத நிணக்குரம் பைப்பிணக்கம் நீங்க
நிறைதவத்தை அடியேற்கு நிறைவித் தென்றுஞ்
செல்லாத நெந்நெறிக்கே செல்விப் பானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 8

7084. அரியபெரும் பொருளாகி நின்றான் தன்னை
அலைகடலி லாலாலம் அமுது செய்த

கரியதொரு கண்டத்துச் செங்கண் ஏற்றுக்
கதிர்விடுமா மணிபிறங்கு காட்சி யானை
உரியபல தொழில்செய்யும் அடியார் தங்கட்
குலகமெலாம் முழுதளிக்கும் உலப்பி லானைத்
தெரிவையொரு பாகத்துச் சேர்த்தி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 9

7085. போரரவ மால்விடையொன் றூர்தி யானைப்
புறம்பயமும் புகலூரும் மன்னி னானை
நீரரவச் செஞ்சடைமேல் நிலாவெண் திங்கள்
நீங்காமை வைத்தானை நிமலன் தன்னைப்
பேரரவப் புட்பகத்தே ருடைய வென்றிப்
பிறங்கொளிவா ளரக்கன்முடி யிடியச் செற்ற
சீரரவக் கழலானைச் செல்வன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 85. திருமுண்டீச்சரம் – திருத்தாண்டகம்

7086. ஆர்த்தான்காண் அழல்நாகம் அரைக்கு நாணா
அடியவர்கட் கன்பன்காண் ஆனைத் தோலைப்
போர்த்தான்காண் புரிசடைமேல் புனலேற் றான்காண்
புறங்காட்டி லாடல் புரிந்தான் தான்காண்
காத்தான்காண் உலகேழுங் கலங்கா வண்ணங்
கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத் துள்ளே
சேர்த்தான்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 1

7087. கருத்தன்காண் கமலத்தோன் தலையி லொன்றைக்
காய்ந்தான்காண் பாய்ந்தநீர் பரந்த சென்னி
ஒருத்தன்காண் உமையவளோர் பாகத் தான்காண்
ஒருருவின் மூவுருவா யொன்றாய் நின்ற
விருத்தன்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண்
மெய்யடியா ருள்ளத்தே விரும்பி நின்ற
திருத்தன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 2

7088. நம்பன்காண் நரைவிடையொன் றேறி னான்காண்
நாதன்காண் கீதத்தை நவிற்றி னான்காண்
இன்பன்காண் இமையாமுக் கண்ணி னான்காண்
ஏசற்று மனமுருகும் அடியார் தங்கட்
கன்பன்காண் ஆரழல தாடி னான்காண்
அவனிவனென் றியாவர்க்கும் அறிய வொண்ணாச்
செம்பொன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 3

7089. மூவன்காண் மூவர்க்கும் முதலா னான்காண்
முன்னுமாய்ப் பின்னுமாய் முடிவா னான்காண்
காவன்காண் உலகுக்கோர் கண்ணா னான்காண்
கங்காளன் காண்கயிலை மலையி னான்காண்
ஆவன்காண் ஆவகத்தஞ் சாடி னான்காண்
ஆரழலாய் அயற்கரிக்கு மறிய வொண்ணாத்
தேவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 4

7090. கானவன்காண் கானவனாய்ப் பொருதான் றான்காண்
கனலாட வல்லான்காண் கையி லேந்தும்
மானவன்காண் மறைநான்கு மாயி னான்காண்
வல்லேறொன் றதுவேற வல்லான் றான்காண்
ஊனவன்காண் உலகத்துக் குயிரா னான்காண்
உரையவன்காண் உணர்வவன்காண் உணர்ந்தார்க் கென்றுந்
தேனவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 5

7091. உற்றவன்காண் உறவெல்லா மாவான் றான்காண்
ஒழிவறநின் றெங்கு முலப்பி லான்காண்
புற்றரவே யாடையுமாய்ப் பூணு மாகிப்
புறங்காட்டி லெரியாடல் புரிந்தான் றான்காண்
நற்றவன்காண் அடியடைந்த மாணிக் காக
நணுகியதோர் பெருங்கூற்றைச் சேவ டியினால்
செற்றவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 6

7092. உதைத்தவன்காண் உணராத தக்கன் வேள்வி
உருண்டோடத் தொடர்ந்தருக்கன் பல்லை யெல்லாந்

தகர்த்தவன்காண் தக்கன்றன் தலையைச் செற்ற
தலையவன்காண் மலைமகளாம் உமையைச் சால
மதிப்பொழிந்த வல்லமரர் மாண்டார் வேள்வி
வந்தவியுண் டவரோடு மதனை யெல்லாஞ்
சிதைத்தவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 7

7093. உரிந்தவுடை யார்துவரா லுடம்பை மூடி
உழிதருமவ் வூமரவ ருணரா வண்ணம்
பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்ட மெல்லாம்
பரித்துடனே நிரந்துவரு பாய்நீர்ப் பெண்ணை
நிரந்துவரும் இருகரையுந் தடவா வோடி
நின்மலனை வலங்கொண்டு நீள நோக்கித்
திரிந்துலவு திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 8,9

7094. அறுத்தவன்காண் அடியவர்கள் அல்ல லெல்லாம்
அரும்பொருளாய் நின்றவன்காண் அனங்க னாகம்
மறுத்தவன்காண் மலைதன்னை மதியா தோடி
மலைமகள்தன் மனம்நடுங்க வானோ ரஞ்சக்
கறுத்தவனாய்க் கயிலாய மெடுத்தான் கையுங்
கதிர்முடியுங் கண்ணும் பிதுங்கி யோடச்
செறுத்தவன்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காண்அவனென் சிந்தை யானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருவாலம்பொழில் – திருத்தாண்டகம்

7095. கருவாகிக் கண்ணுதலாய் நின்றான் தன்னைக்
கமலத்தோன் தலையரிந்த காபா லியை
உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை
உணர்வெலா மானானை ஓசை யாகி
வருவானை வலஞ்சுழியெம் பெருமான் தன்னை
மறைக்காடும் ஆவடுதண் டுறையும் மேய
திருவானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 1

7096. உரித்தானை களிறதன்தோல் போர்வை யாக
வுடையானை யுடைபுலியி னதளே யாகத்
தரித்தானைச் சடையதன்மேற் கங்கை யங்கைத்
தழலுருவை விடமமுதா வுண்டி தெல்லாம்
பரித்தானைப் பவளமால் வரையன் னானைப்
பாம்பணையான் தனக்கன்றங் காழி நல்கிச்
சிரித்தானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 2

7097. உருமூன்றாய் உணர்வின்கண் ஒன்றா னானை
ஓங்கார மெய்ப்பொருளை உடம்பி னுள்ளால்
கருவீன்ற வெங்களவை யறிவான் தன்னைக்
காலனைத்தன் கழலடியாற் காய்ந்து மாணிக்
கருளீன்ற ஆரமுதை அமரர் கோனை
யள்ளூறி யெம்பெருமா னென்பார்க் கென்றுந்
திருவீன்ற தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 3

7098. பார்முழுதாய் விசும்பாகிப் பாதா ளமாம்
பரம்பரனைச் சுரும்பமருங் குழலாள் பாகத்
தாரமுதாம் அணிதில்லைக் கூத்தன் தன்னை
வாட்போக்கி யம்மானை யெம்மா னென்று
வாரமதா மடியார்க்கு வார மாகி
வஞ்சனைசெய் வார்க்கென்றும் வஞ்ச னாகுஞ்
சீரரசைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 4

7099. வரையார்ந்த மடமங்கை பங்கன் தன்னை
வானவர்க்கும் வானவனை மணியை முத்தை
அரையார்ந்த புலித்தோல்மே லரவ மார்த்த
அம்மானைத் தம்மானை அடியார்க் கென்றும்
புரையார்ந்த கோவணத்தெம் புனிதன் தன்னைப்
பூந்துருத்தி மேயானைப் புகலூ ரானைத்
திரையார்ந்த தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 5

7100. விரிந்தானைக் குவிந்தானை வேத வித்தை
வியன்பிறப்போ டிறப்பாகி நின்றான் தன்னை

அரிந்தானைச் சலந்தரன்தன் உடலம் வேறாய்
ஆழ்கடல்நஞ் சுண்டிமையோ ரெல்லா முய்யப்
பரிந்தானைப் பல்லசுரர் புரங்கள் மூன்றும்
பாழ்படுப்பான் சிலைமலைநாண் ஏற்றி யம்பு
தெரிந்தானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 6

7101. பொல்லாத என்னழுக்கிற் புகுவா னென்னைப்
புறம்புறமே சோதித்த புனிதன் தன்னை
எல்லாருந் தன்னையே யிகழ அந்நாள்
இடுபலியென் றகந்திரியு மெம் பிரானைச்
சொல்லாதா ரவர்தம்மைச் சொல்லா தானைத்
தொடர்ந்துதன் பொன்னடியே பேணு வாரைச்
செல்லாத நெறிசெலுத்த வல்லான் தன்னைத்
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 7

7102. ஐந்தலைய நாகவணைக் கிடந்த மாலோ
டயன்தேடி நாடரிய அம்மான் தன்னைப்
பந்தணவு மெல்விரலாள் பாகத் தானைப்
பராய்த்துறையும் வெண்காடும் பயின்றான் தன்னைப்
பொந்துடைய வெண்தலையிற் பலிகொள் வானைப்
பூவணமும் புறம்பயமும் பொருந்தி னானைச்
சிந்தியவெந் தீவினைகள் தீர்ப்பான் தன்னைத்
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 8

7103. கையிலுண் டுழல்வாருஞ் சாக்கியருங் கல்லாத
வன்மூடர்க் கல்லா தானைப்
பொய்யிலா தவர்க்கென்றும் பொய்யி லானைப்
பூண்நாகம் நாணாகப் பொருப்பு வில்லாக்
கையினா ரம்பெரிகா லீர்க்குக் கோலாக்
கடுந்தவத்தோர் நெடும்புரங்கள் கனல்வாய் வீழ்த்த
செய்யினார் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே. 9—10

திருச்சிற்றம்பலம்

•••••

## 87. திருச்சிவபுரம் – திருத்தாண்டகம்

7104. வானவன்காண் வானவர்க்கும் மேலா னான்காண்
வடமொழியுந் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண் ஆனைந்தும் ஆடி னான்காண்
ஐயன்காண் கையிலன லேந்தி யாடும்
கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவா ரிதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 1

7105. நக்கன்காண் நக்கரவம் அரையி லார்த்த
நாதன்காண் பூதகண மாட ஆடும்
சொக்கன்காண் கொக்கிறகு சூடி னான்காண்
துடியிடையாள் துணைமுலைக்குச் சேர்வ தாகும்
பொக்கன்காண் பொக்கணத்த வெண்ணீற் றான்காண்
புவனங்கள் மூன்றினுக்கும் பொருளாய் நின்ற
திக்கன்காண் செக்கரது திகழு மேனிச்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 2

7106. வம்பின்மலர்க் குழலுமையாள் மணவா ளன்காண்
மலரவன்மால் காண்பரிய மைந்தன் தான்காண்
கம்பமதக் கரிபிளிற வுரிசெய் தோன்காண்
கடல்நஞ்ச முண்டிருண்ட கண்டத் தான்காண்
அம்பர்நகர்ப் பெருங்கோயி லமர்கின் றான்காண்
அயவந்தி யுள்ளான்காண் ஐயா றன்காண்
செம்பொனெனத் திகழ்கின்ற வுருவத் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 3

7107. பித்தன்காண் தக்கன்தன் வேள்வி யெல்லாம்
பீடழியச் சாடி யருள்கள் செய்த
முத்தன்காண் முத்தீயு மாயி னான்காண்
முனிவர்க்கும் வானவர்க்கும் முதலாய் மிக்க
அத்தன்காண் புத்தூரில் அமர்ந்தான் தான்காண்
அரிசிற் பெருந்துறையே ஆட்சி கொண்ட
சித்தன்காண் சித்தீச் சரத்தான் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 4

7108. தூயவன்காண் நீறு துதைத்த மேனி
துளங்கும் பளிங்கனைய சோதி யான்காண்
தீயவன்காண் தீயவுணர் புரஞ்செற் றான்காண்
சிறுமான்கொள் செங்கையெம் பெருமான் தான்காண்
ஆயவன்காண் ஆரூரி லம்மான் தான்காண்
அடியார்கட் காரமுத மாயி னான்காண்
சேயவன்காண் சேமநெறி யாயி னான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 5

7109. பாரவன்காண் பாரதனிற் பயிரா னான்காண்
பயிர்வளர்க்குந் துளியவன்காண் துளியில் நின்ற
நீரவன்காண் நீர்சடைமேல் நிகழ்வித் தான்காண்
நிலவேந்தர் பரிசாக நினைவுற் றோங்கும்
பேரவன்காண் பிறையெயிற்று வெள்ளைப் பன்றிப்
பிரியாது பலநாளும் வழிபட் டேத்தும்
சீரவன்காண் சீருடைய தேவர்க் கெல்லாஞ்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 6

7110. வெய்யவன்காண் வெய்யகன லேந்தி னான்காண்
வியன்கெடில வீரட்டம் மேவி னான்காண்
மெய்யவன்காண் பொய்யர்மனம் விரவா தான்காண்
வீணையோ டிசைந்துமிகு பாடல் மிக்க
கையவன்காண் கையில்மழு வேந்தி னான்காண்
காமரங்கம் பொடிவிழித்த கண்ணி னான்காண்
செய்யவன்காண் செய்யவளை மாலுக் கீந்த
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 7,8,9

7111. கலையாரு நூலங்க மாயி னான்காண்
கலைபயிலுங் கருத்தன்காண் திருத்த மாகி
மலையாகி மறிகடலேழ் சூழ்ந்துநின்ற மண்ணாகி
விண் ணாகி நின்றான் தான்காண்
தலையாய மலையெடுத்த தகவி லோனைத்
தகர்ந்துவிழ வொருவிரலாற் சாதித் தாண்ட
சிலையாரும் மடமகளோர் கூறன் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 88. திருவோமாம்புலியூர் – திருத்தாண்டகம்

7112. ஆர்ஆரும் மூவிலைவே லங்கை யானை
அலைகடல்நஞ் சயின்றானை அமர ரேத்தும்
ஏராரும் மதிபொதியுஞ் சடையி னானை
எழுபிறப்பும் எனையாளா வுடையான் தன்னை
ஊராரும் படநாகம் ஆட்டு வானை
உயர்புகழ்சேர் தருமோமாம் புலியூர் மன்னுஞ்
சீராரும் வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 1

7113. ஆதியா னரியயனென் றறிய வொண்ணா
அமரர்தொழுங் கழலானை யமலன் தன்னைச்
சோதிமதி கலைதொலையத் தக்க னெச்சன்
சுடரிரவி அயிலெயிறு தொலைவித் தானை
ஓதிமிக அந்தணர்க ளெரிமூன் றோம்பும்
உயர்புகழார் தருமோமாம் புலியூர் மன்னுந்
தீதில்திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 2

7114. வருமிக்க மதயானை யுரித்தான் தன்னை
வானவர்கோன் தோளனைத்தும் மடிவித் தானைத்
தருமிக்க குழலுமையாள் பாகன் தன்னைச்
சங்கரனெம் பெருமானைத் தரணி தன்மேல்
உருமிக்க மணிமாடம் நிலாவு வீதி
உத்தமர்வாழ் தருமோமாம் புலியூர் மன்னுந்
திருமிக்க வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 3

7115. அன்றினவர் புரமூன்றும் பொடியாய் வேவ
அழல்விழித்த கண்ணானை அமரர் கோனை
வென்றிமிகு காலனுயிர் பொன்றி வீழ
விளங்குதிரு வடியெடுத்த விகிர்தன் தன்னை
ஒன்றியசீ ரிருபிறப்பர் முத்தீ யோம்பும்
உயர்புகழ்நான் மறையோமாம் புலியூர் நாளுந்
தென்றல்மலி வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 4

7116. பாங்குடைய எழிலங்கி யருச்சனைமுன் விரும்பப்
பரிந்தவனுக் கருள்செய்த பரமன் தன்னைப்
பாங்கிலா நரகதனில் தொண்ட ரானார்
பாராத வகைபண்ண வல்லான் தன்னை

ஓங்குமதில் புடைதழுவும் எழிலோமாம் புலியூ
ருயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றுந்
தீங்கில் திரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 5

7117. அருந்தவத்தோர் தொழுதேத்தும் அம்மான் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தம்மேல்
வருந்துயரந் தவிர்ப்பானை உமையாள் நங்கை
மணவாள நம்பியையென் மருந்து தன்னைப்
பெருந்துபுனல் தழுவு வயல்நிலவு துங்கப்
பொழில்கெழுவு தருமோமாம் புலியூர் நாளுந்
திருந்துதிரு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 6

7118. மலையானை வருமலையன் றுரிசெய் தானை
மறையானை மறையாலும் அறிய வொண்ணாக்
கலையானைக் கலையாருங் கையி னானைக்
கடிவானை அடியார்கள் துயர மெல்லாம்
உலையாத அந்தணர்கள் வாழு மோமாம்
புலியூரெம் உத்தமனைப் புரமூன் றெய்த
சிலையானை வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 7

7119. சேர்ந்தோடு மணிக்கங்கை சூடி னானைச்
செழுமதியும் படஅரவும் உடன்வைத் தானைச்
சார்ந்தோர்கட் கினியானைத் தன்னொப் பில்லாத்
தழலுருவைத் தலைமகனைத் தகைநால் வேதம்
ஓர்ந்தோதிப் பயில்வார்வாழ் தருமோமாம் புலியூ
ருள்ளானைக் கள்ளாத அடியார் நெஞ்சிற்
சேர்ந்தானை வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 8

7120. வார்கெழுவு முலையுமையாள் வெருவ அன்று
மலையெடுத்த வாளரக்கன் தோளுந் தாளும்
ஏர்கெழுவு சிரம்பத்தும் இறுத்து மீண்டே
இன்னிசைகேட் டிருந்தானை யிமையோர் கோனைப்
பார்கெழுவு புகழ்மறையோர் பயிலும் மாடப்
பைம்பொழில்சேர் தருமோமாம் புலியூர் மன்னுஞ்
சீர்கெழுவு வடதளியெஞ் செல்வன் தன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே. 9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 89. திருவின்னம்பர் – திருத்தாண்டகம்

7121. அல்லிமலர் நாற்றத் துள்ளார் போலும்
அன்புடையார் சிந்தை அகலார் போலுஞ்
சொல்லின் அருமறைகள் தாமே போலுந்
தூநெறிக்கு வழிகாட்டுந் தொழிலார் போலும்
வில்லிற் புரமூன் றெரித்தார் போலும்
வீங்கிருளும் நல்வெளியு மானார் போலும்
எல்லி நடமாட வல்லார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 1

7122. கோழிக் கொடியோன்தன் தாதை போலுங்
கொம்பனாள் பாகங் குளிர்ந்தார் போலும்
ஊழி முதல்வருந் தாமே போலும்
உள்குவா ருள்ளத்தி னுள்ளார் போலும்
ஆழித்தேர் வித்தகருந் தாமே போலும்
அடைந்தவர்கட் கன்பராய் நின்றார் போலும்
ஏழு பிறவிக்குந் தாமே போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 2

7123. தொண்டர்கள் தம்தகவி னுள்ளார் போலுந்
தூநெறிக்குந் தூநெறியாய் நின்றார் போலும்
பண்டிருவர் காணாப் படியார் போலும்
பத்தர்கள்தம் சித்தத் திருந்தார் போலுங்
கண்ட மிறையே கறுத்தார் போலுங்
காமனையுங் காலனையுங் காய்ந்தார் போலும்
இண்டைச் சடைசேர் முடியார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 3

7124. வானத் திளந்திங்கட் கண்ணி தன்னை
வளர்சடைமேல் வைத்துகந்த மைந்தர் போலும்
ஊனொத்த வேலொன் றுடையார் போலும்
ஒளிநீறு பூசு மொருவர் போலுந்
தானத்தின் முப்பொழுதுந் தாமே போலுந்
தம்மிற் பிறர்பெரியா ரில்லை போலும்
ஏனத் தெயிறிலங்கப் பூண்டார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 4

7125. சூழுந் துயரம் அறுப்பார் போலுந்
தோற்றம் இறுதியாய் நின்றார் போலும்
ஆழுங் கடல்நஞ்சை யுண்டார் போலும்
ஆட லுகந்த அழகர் போலுந்

தாழ்வில் மனத்தேனை யாளாக் கொண்டு
தன்மை யளித்த தலைவர் போலும்
ஏழு பிறப்பு மறுப்பார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 5

7126. பாதத் தணையுஞ் சிலம்பர் போலும்
பாரூர் விடையொன் றுடையார் போலும்
பூதப் படையாள் புனிதர் போலும்
பூம்புகலூர் மேய புராணர் போலும்
வேதப் பொருளாய் விளைவார் போலும்
வேடம் பரவித் திரியுந் தொண்டர்
ஏதப் படாவண்ணம் நின்றார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 6

7127. பல்லார் தலையோட்டில் ஊணார் போலும்
பத்தர்கள்தம் சித்தத் திருந்தார் போலுங்
கல்லாதார் காட்சிக் கரியார் போலுங்
கற்றவர்கள் ஏதங் களைவார் போலும்
பொல்லாத பூதப் படையார் போலும்
பொருகடலும் ஏழ்மலையுந் தாமே போலும்
எல்லாரு மேத்தத் தகுவார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 7

7128. மட்டு மலியுஞ் சடையார் போலும்
மாதையோர் பாக முடையார் போலுங்
கட்டம் பிணிகள் தவிர்ப்பார் போலுங்
காலன்தன் வாழ்நாள் கழிப்பார் போலும்
நட்டம் பயின்றாடும் நம்பர் போலும்
ஞாலமெரிநீர் வெளிகா லானார் போலும்
எட்டுத் திசைகளுந் தாமே போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 8

7129. கருவுற்ற காலத்தே யென்னை ஆண்டு
கழற்போது தந்தளித்த கள்வர் போலுஞ்
செருவிற் புரமூன்றும் அட்டார் போலுந்
தேவர்க்குந் தேவராஞ் செல்வர் போலும்
மருவிப் பிரியாத மைந்தர் போலும்
மலரடிகள் நாடி வணங்க லுற்ற
இருவர்க் கொருவராய் நின்றார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 9

7130. அலங்கற் சடைதாழ ஐய மேற்று
அரவம் அரையார்க்க வல்லார் போலும்
வலங்கை மழுவொன் றுடையார் போலும்
வான்தக்கன் வேள்வி சிதைத்தார் போலும்
விலங்க லெடுத்துகந்த வெற்றி யானை
விறலழித்து மெய்ந்நரம்பால் கீதங் கேட்டன்(று)
இலங்கு சுடர்வாள் கொடுத்தார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி யீச னாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 90. திருக்கஞ்சனூர் – திருத்தாண்டகம்

7131. மூவிலைநற் சூலம்வலன் ஏந்தி னானை
மூன்றுசுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை
நால்வேதம் ஆறங்க மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோவை
அயன்திருமா லானானை அனலோன் போற்றுங்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 1

7132. தலையேந்து கையானை யென்(பு)ஆர்த் தானைச்
சவந்தாங்கு தோளானைச் சாம்ப லானைக்
குலையேறு நறுங்கொன்றை முடிமேல் வைத்துக்
கோணாக மசைத்தானைக் குலமாங் கைலை
மலையானை மற்றொப்பா ரில்லா தானை
மதிகதிரும் வானவரும் மாலும் போற்றுங்
கலையானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 2

7133. தொண்டர்குழாம் தொழுதேத்த அருள்செய் வானைச்
சுடர்மழுவாள் படையானைச் சுழிவான் கங்கைத்
தெண்டிரைகள் பொருதிழிசெஞ் சடையி னானைச்
செக்கர்வா னொளியானைச் சேரா தெண்ணிப்
பண்டமரர் கொண்டுகந்த வேள்வி யெல்லாம்
பாழ்படுத்துத் தலையறுத்துப் பற்கண் கொண்ட

கண்டகனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 3

7134. விண்ணவனை மேருவில்லா வுடையான் தன்னை
மெய்யாகிப் பொய்யாகி விதியா னானைப்
பெண்ணவனை ஆணவனைப் பித்தன் தன்னைப்
பிணமிடுகா டுடையானைப் பெருந்தக் கோனை
எண்ணவனை யெண்டிசையுங் கீழும் மேலும்
இருவிசும்பும் இருநிலமு மாகித் தோன்றுங்
கண்ணவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 4

7135. உருத்திரனை உமாபதியை உலகா னானை
உத்தமனை நித்திலத்தை ஒருவன் தன்னைப்
பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி னானைப்
பகலிரவாய் நீர்வெளியாய்ப் பரந்து நின்ற
நெருப்பதனை நித்திலத்தின் தொத்தொப் பானை
நீறணிந்த மேனியராய் .நினைவார் சிந்தைக்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 5

7136. ஏடேறு மலர்க்கொன்றை யரவு தும்பை
யிளமதியம் எருக்குவா னிழிந்த கங்கை
சேடெறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளுங்
காடவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 6

7137. நாரணனும் நான்முகனும் அறியா தானை
நால்வேதத் துருவானை நம்பி தன்னைப்
பாரிடங்கள் பணிசெய்யப் பலிகொண் டுண்ணும்
பால்வணனைத் தீவணனைப் பகலா னானை
வார்பொதியும் முலையாளோர் கூறன் தன்னை
மானிடங்கை யுடையானை மலிவார் கண்டங்
கார்பொதியுங் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 7

7138. வானவனை வலிவலமும் மறைக்காட் டானை
மதிசூடும் பெருமானை மறையோன் தன்னை
ஏனவனை யிமவான்றன் பேதை யோடும்
இனிதிருந்த பெருமானை யேத்து வார்க்குத்
தேனவனைத் தித்திக்கும் பெருமான் தன்னைத்
தீதிலா மறையோனைத் தேவர் போற்றுங்
கானவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 8

7139. நெருப்புருவு திருமேனி வெண்ணீற் றானை
நினைப்பார்தம் நெஞ்சானை நிறைவா னானைத்
தருக்கழிய முயலகன்மேல் தாள்வைத் தானைச்
சலந்தரனைத் தடிந்தோனைத் தக்கோர் சிந்தை
விருப்பவனை விதியானை வெண்ணீற் றானை
விளங்கொளியாய் மெய்யாகி மிக்கோர் போற்றுங்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 9

7140. மடலாழித் தாமரைஆ யிரத்தி லொன்று
மலர்க்கணிடந் திடுதலுமே மலிவான் கோலச்
சுடராழி நெடுமாலுக் கருள்செய் தானைத்
தும்பியுரி போர்த்தானைத் தோழன் விட்ட
அடலாழித் தேருடைய இலங்கைக் கோனை
அருவரைக்கீழ் அடர்த்தானை அருளார் கருணைக்
கடலானைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திரு எறும்பியூர் – திருத்தாண்டகம்

7141. பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டேன்
எண்ணோடு பண்நிறைந்த கலைக ளாய
தன்னையுந்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமு மறிவித்து நெறியுங் காட்டி
அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை யாளாக் கொண்..

தென்னெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 1

7142. பளிங்கின்நிழ லுட்பதித்த சோதி யானைப்
பசுபதியைப் பாசுபத வேடத் தானை
விளித்தெழுந்த சலந்தரனை வீட்டி னானை
வேதியனை விண்ணவனை மேவி வையம்
அளந்தவனை நான்முகனை அல்லல் தீர்க்கும்
அருமருந்தை ஆமா றறிந்தென் உள்ளந்
தெளிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 2

7143. கருவையென்றன் மனத்திருந்த கருத்தை ஞானக்
கடுஞ்சுடரைப் படிந்துகிடந் தமர
ரேத்தும் உருவையண்டத் தொருமுதலை யோதவேலி
யுலகினிறை தொழிலிறுதி நடுவாய் நின்ற
மருவைவென்ற குழல்மடவாள் பாகம் வைத்த
மயானத்து மாசிலா மணியை வாசத்
திருவெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 3

7144. பகழிபொழிந் தடலரக்கர் புரங்கள் மூன்றும்
பாழ்படுத்த பரஞ்சுடரைப் பரிந்து தன்னைப்
புகழுமன்பர்க் கின்பமரும் அமுதைத் தேனைப்
புண்ணியனைப் புவனியது முழுதும் போக
உமிழும்அம்பொற் குன்றத்தை முத்தின் தூணை
உமையவள்தம் பெருமானை இமையோ ரேத்துந்
திகழெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 4

7145. பாரிடங்க ளுடன்பாடப் பயின்று நட்டம்
பயில்வானை அயில்வாய சூல மேந்தி
நேரிடும்போர் மிகவல்ல நிமலன் தன்னை
நின்மலனை அம்மலர்கொண் டயனும் மாலும்
பாரிடந்தும் மேலுயர்ந்துங் காணா வண்ணம்
பரந்தானை நிமிர்ந்துமுனி கணங்க ளேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 5

7146. கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முந்நீர்
கரப்பானைக் கடியநடை விடையொன் றேறி
ஊர்பலவுந் திரிவானை ஊர தாக
ஒற்றியூ ருடையனாய் முற்றும் ஆண்டு
பேரெழுத்தொன் றுடையானைப் பிரம னோடு
மாலவனும் இந்திரனும் மந்திரத்தா லேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 6

7147. நீணிலவும் அந்தியும் நீரும் மற்றை நெறியிலங்கு
மிருகாலு மாகா சம்மும்
வாணிலவு தாரகையும் மண்ணும் விண்ணும்
மன்னுயிரும் என்னுயிருந் தானாஞ் செம்பொன்
ஆணியென்று மஞ்சனமா மலையே யென்றும்
அம்பவளத் திரளென்றும் அறிந்தோ ரேத்துஞ்
சேணெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 7

7148. அறந்தெறியா ஊத்தைவாய் அறிவில் சிந்தை
யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்துமரன் திருவடிகள் நினைய மாட்டா
மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேற்
பிறந்தநாள் நாளல்ல வாளா ஈசன்
பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்து ளன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 8

7149. அறிவிலங்கு மனத்தானை அறிவார்க் கன்றி
அறியாதார் தந்திறத்தொன் றறியா தானைப்
பொறியிலங்கு வாளரவம் புனைந்து பூண்ட
புண்ணியனைப் பொருதிரைவாய் நஞ்ச முண்ட
குறியிலங்கு மிடற்றானை மடல்தேன் கொன்றைச்
சடையானை மடைதோறுங் கமல மென்பூச்
செறியெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 9

7150. அருந்தவத்தின் பெருவலியா லறிவ தன்றி
அடலரக்கன் தடவரையை யெடுத்தான் திண்தோள்
முரிந்துநெரிந் தழிந்துபா தாள முற்று
முன்கைநரம் பினையெடுத்துக் கீதம் பாட
இருந்தவனை யேழுலகு மாக்கி னானை

யெம்மானைக் கைம்மாவி னுரிவை போர்த்த
திருந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 92. திருக்கழுக்குன்றம் – திருத்தாண்டகம்

7151. மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோனை
ஆலால முண்டுகந்த ஐயன் தன்னைப்
பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப்
புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னைக்
காவலனைக் கழுக்குன்றம் அமர்ந்தான் தன்னைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே. 1

7152. பல்லாடு தலைசடைமே லுடையான் தன்னைப்
பாய்புலித்தோ லுடையானைப் பகவன் தன்னைச்
சொல்லோடு பொருளனைத்து மானான் தன்னைச்
சுடருருவி லென்பறாக் கோலத் தானை
அல்லாத காலனைமுன் னடர்த்தான் தன்னை
ஆலின்கீழ் இருந்தானை அமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளுங் காபா லியைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.

(2,3,4,5,6,7,8,9,10)

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. பலவகைத் திருத்தாண்டகம்

7153. நேர்ந்தொருத்தி யொருபாகத் தடங்கக் கண்டு
நிலைதளர ஆயிரமா முகத்தி னோடு
பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக் கண்டு
படஅரவும் பனிமதியும் வைத்த செல்வர்
தாந்திருத்தித் தம்மனத்தை யொருக்காத் தொண்டர்
தனித்தொருதண் டூன்றிமெய் தளரா முன்னம்
பூந்துருத்தி பூந்துருத்தி யென்பீ ராகில்
பொல்லாப் புலால்துருத்தி போக்க லாமே. 1

7154. ஐத்தானத் தகமிடறு சுற்றி யாங்கே
யகத்தடைந்தால் யாதொன்று மிடுவா ரில்லை
மைத்தானக் கண்மடவார் தங்க ளோடு
மாயமனை வாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
பைத்தானத் தொண்மதியும் பாம்பும் நீரும்
படர்சடைமேல் வைத்துகந்த பண்பன் மேய
நெய்த்தானம் நெய்த்தான மென்பீ ராகில்
நிலாவாப் புலால்தானம் நீக்க லாமே. 2

7155. பொய்யாறா வாறே புனைந்து பேசிப்
புலர்ந்தெழுந்த காலைப் பொருளே தேடிக்
கையறாக் கரண முடையோ மென்று
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
நெய்யாறா ஆடிய நீல கண்டர்
நிமிர்புன் சடைநெற்றிக் கண்ணர் மேய
ஐயாறே ஐயாறே யென்பீ ராகில்
அல்லல்தீர்ந் தமருலகம் ஆள லாமே. 3

7156. இழவொன்று தாமொருவர்க் கிட்டொன் றியார்
ஈன்றெடுத்த தாய்தந்தை பெண்டீர் மக்கள்
கழனங்கோ வையாதல் கண்டுந் தேறார்
களித்த மனத்தராய்க் கருதி வாழ்வீர்
அழனம்மை நீக்குவிக்கும் அரைய னாக்கும்
அமருலகம் ஆள்விக்கும் அம்மான் மேய
பழனம் பழனமே யென்பீ ராகில்
பயின்றெழுந்த பழவினைநோய் பாற்ற லாமே. 4

7157. ஊற்றுத் துறையொன்ப துள்நின் றோரீர்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டீர்
மாற்றுத் துறைவழிகொண் டோடா முன்னம்
மாய மனைவாழ்க்கை மகிழ்ந்து வாழ்வீர்
வேற்றுத் தொழில்பூண்டார் புரங்கள் மூன்றும்
வெவ்வழல்வாய் வீழ்விக்கும் வேந்தன் மேய
சோற்றுத் துறைசோற்றுத் துறையென்பீ ராகில்
துயர்நீங்கித் தூநெறிக்கட் சேர லாமே. 5

7158. கலஞ்சுழிக்குங் கருங்கடல்சூழ் வையந் தன்னிற்
கள்ளக் கடலி லழுந்தி வாளா
நலஞ்சுழியா எழுநெஞ்சே யின்பம் வேண்டில்
நம்பன்றன் அடியிணைக்கே நவில்வா யாகில்
அலஞ்சுழிக்கும் மன்னாகந் தன்னான் மேய

அருமறையோ டாறங்க மானார் கோயில்
வலஞ்சுழியே வலஞ்சுழியே யென்பீ ராகில்
வல்வினைகள் தீர்ந்துவா னாள லாமே. 6

7159. தண்டி குண்டோ தரன்பிங் கிருடி
சார்ந்த புகழ்நந்தி சங்கு கன்னன்
பண்டை யுலகம் படைத்தான் தானும்
பாரை யளந்தான் பல்லாண் டிசைப்பத்
திண்டி வயிற்றுச் சிறுகட் பூதஞ்
சிலபாடச் செங்கண் விடையொன் றூர்வான்
கண்டியூர் கண்டியூ ரென்பீ ராகிற்
கடுகநும் வல்வினையைக் கழற்ற லாமே. 7

7160. விடமூக்கப் பாம்பேபோற் சிந்தி நெஞ்சே
வெள்ளேற்றான் தன்தமரைக் கண்ட போது
வடமூக்க மாமுனிவர் போலச் சென்று
மாதவத்தார் மனத்துளார் மழுவாட் செல்வர்
படமூக்கப் பாம்பணையிற் பள்ளி யானும்
பங்கயத்து மேலயனும் பரவிக் காணாக்
குடமூக்கே குடமூக்கே யென்பீ ராகிற்
கொடுவினைகள் தீர்ந்தரனைக் குறுக லாமே. 8

7161. தண்காட்டாச் சந்தனமுந் தவள நீறுந்
தழையணுகுங் குறுங்கொன்றை மாலை சூடிக்
கண்காட்டாக் கருவரைபோ லனைய காஞ்சிக்
கார்மயிலஞ் சாயலார் கலந்து காண
எண்காட்டாக் காடங் கிடமா நின்று
எரிவீசி யிரவாடும் இறைவர் மேய
வெண்காடே வெண்காடே என்பீ ராகில்
வீடாத வல்வினைநோய் வீட்ட லாமே. 9

7162. தந்தையார் தாயா ருடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேதும் மகிழ வேண்டா
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின் திகழ்மதியும்
வாளரவுந் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சி வாய
என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க லாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 94. நின்ற திருத்தாண்டகம்

7163. இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிக்
பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே. 1

7164. மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானந் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோ ராணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோ ரண்ட மாகி
எண்ணாகி யெண்ணுக்கோ ரெழுத்து மாகி
யெழுஞ்சுடரா யெம்மடிகள் நின்ற வாறே. 2

7165. கல்லாகிக் களறாகிக் கானு மாகிக்
காவிரியாய்க் கால்ஆறாய்க் கழியு மாகிப்
புல்லாகிப் புதலாகிப் பூடு மாகிப்
புரமாகிப் புரமூன்றுங் கெடுத்தா னாகிச்
சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளு மாகிச்
சுலாவாகிச் சுலாவுக்கோர் சூழ லாகி
நெல்லாகி நிலனாகி நீரு மாகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே. 3

7166. காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மூன்றாய்க்
கனவாகி நனவாகிக் கங்கு லாகிக்
கூற்றாகிக் கூற்றுதைத்த கொல்களிறு மாகிக்
குரைகடலாய்க் குரைகடற்கோர் கோமா னுமாய்
நீற்றானாய் நீறேற்ற மேனி யாகி
நீள்விசும்பாய் நீள்விசும்பி னுச்சி யாகி
ஏற்றானா யேறூர்ந்த செல்வ னாகி
யெழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 4

7167. தீயாகி நீராகித் திண்மை யாகித்
திசையாகி அத்திசைக்கோர் தெய்வ மாகித்
தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித்

தாரகையும் ஞாயிறுந்தண் மதியு மாகிக்
காயாகிப் பழமாகிப் பழத்தில் நின்ற
இரதங்கள் நுகர்வானுந் தானே யாகி
நீயாகி நானாகி நேர்மை யாகி
நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே. 5

7168. அங்கமா யாதியாய் வேத மாகி
அருமறையோ டைம்பூதந் தானே யாகிப்
பங்மாய்ப் பலசொல்லுந் தானே யாகிப்
பால்மதியோ டாதியாய்ப் பான்மை யாகிக்
கங்கையாய்க் காவிரியாய்க் கன்னி யாகிக்
கடலாகி மலையாகிக் கழியு மாகி
எங்குமாய் ஏறூர்ந்த செல்வ னாகி
எழுஞ்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 6

7169. மாதா பிதாவாகி மக்க ளாகி
மறிகடலும் மால்விசும்புந் தானே யாகிக்
கோதா விரியாய்க் குமரி யாகிக்
கொல்புலித்தோ லாடைக் குழக னாகிப்
போதாய மலர்கொண்டு போற்றி நின்று
புனைவார் பிறப்பறுக்கும் புனித னாகி
யாதானு மெனநினைந்தார்க் கெளிதே யாகி
அழல்வண்ண வண்ணர்தாம் நின்ற வாறே. 7

6170. ஆவாகி ஆவினில் ஐந்து மாகி
அறிவாகி அழலாகி அவியு மாகி
நாவாகி நாவுக்கோர் உரையு மாகி
நாதனாய் வேதத்தி னுள்ளோ னாகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்ற மாகிப்
புக்குளால் வாசமாய் நின்றா னாகித்
தேவாகித் தேவர் முதலு மாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே. 8

7171. நீராகி நீளகலந் தானே யாகி
நிழலாகி நீள்விசும்பி னுச்சி யாகிப்
பேராகிப் பேருக்கோர் பெருமை யாகிப்
பெருமதில்கள் மூன்றினையு மெய்தா னாகி
ஆரேனுந் தன்னடைந்தார் தம்மை யெல்லாம்
ஆட்கொள்ள வல்லவெம் மீச னார்தாம்
பாராகிப் பண்ணாகிப் பாட லாகிப்
பரஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே. 9

7172. மாலாகி நான்முகனாய் மாபூ தமாய்
மருக்கமாய் அருக்கமாய் மகிழ்வு மாகிப்
பாலாகி யெண்டிசைக்கும் எல்லை யாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானே யாகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்களாய்ப் புராணன் தானே யாகி
ஏலா தனவெல்லாம் ஏல்விப் பானாய்
எழுச்சுடராய் எம்மடிகள் நின்ற வாறே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. தனித் திருத்தாண்டகம்

7173. அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஒரூ ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத் தும்நீ
யிறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே. 1

7174. வெம்பவரு கிற்பதன்று கூற்றம் நம்மேல்
வெய்யவினைப் பகையும் பைய நையும்
எம்பரிவு தீர்ந்தோம் இடுக்கண் இல்லோம்
எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவளச் செஞ்சடைமேல் ஆறு சூடி
அனலாடி ஆன்அஞ்சம் ஆட்டு கந்த
செம்பவள வண்ணர் செங்குன்ற வண்ணர்
செவ்வான வண்ணரென் சிந்தை யாரே. 2

7175. ஆட்டுவித்தால் ஆரொருவ ராடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவ ரடங்கா தாரே
ஒட்டுவித்தால் ஆரொருவ ரோடா தாரே
யுருகுவித்தால் ஆரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே

காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே. 3

7176. நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தீ
நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னுள்
நிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்
கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே. 4

7177. திருக்கோயி லில்லாத திருவி லூரும்
திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
பாங்கினொடு பலதளிக ளில்லா வூரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும்
விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே. 5

7178. திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே. 6

7179. நின்னாவார் பிறரின்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாய்ஆ றங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே யுன்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்து கேனே. 7

7180. அத்தாவுன் அடியேனை அன்பா லார்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்
எத்தனையும் அரியநீ யெளியை யானாய்
எனையாண்டு கொண்டிரங்கி யேன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை யிருந்த வாறே. 8

7181. குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே. 9

7182. சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவு ளாரே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 96. தனித் திருத்தாண்டகம்

7183. ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்
அதிகைவீ ரட்டானம் ஆட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற் கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவாம் தன்மை
வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்
மானிடங்கொண் டார்வலங்கை மழுவாட் கொண்டார்

காமயையும் உடல்கொண்டார் கண்ணால் நோக்கிக்
கண்ணப்பர் பணியுங்கொள் கபாலி யாரே. 1

7184. முப்புரிநூல் வரைமார்பின் முயங்கக் கொண்டார்
முதுகேழல் முளைமருப்புங் கொண்டார் பூணாச்
செப்புருவ முலைமலையாள் பாகங் கொண்டார்
செம்மேனி வெண்ணீறு திகழக் கொண்டார்
துப்புரவார் சுரிசங்கின் தோடு கொண்டார்
சுடர்முடிசூழ்ந் தடியமரர் தொழவுங் கொண்டார்
அப்பலிகொண் டாயிழையார் அன்புங் கொண்டார்
அடியேனை ஆளுடைய அடிக ளாரே. 2

7185. முடிகொண்டார் முளையிளவெண் திங்க ளோடு
மூசுமிள நாகமுட னாகக் கொண்டார்
அடிகொண்டார் சிலம்பலம்பு கழலு மார்ப்ப
அடங்காத முயலகனை யடிக்கீழ்க் கொண்டார்
வடிகொண்டார்ந் திலங்குமழு வலங்கைக் கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார்
துடிகொண்டார் கங்காளந் தோள்மேற் கொண்டார்
சூலைதீர்த் தடியேனை யாட்கொண் டாரே. 3

7186. பொக்கணமும் புலித்தோலும் புயத்திற் கொண்டார் பூதப்
படைகள்புடை சூழக் கொண்டார்
அக்கினொடு படஅரவம் அரைமேற் கொண்டார்
அனைத்துலகும் படைத்தவையும் அடங்கக் கொண்டார்
கொக்கிறகுங் கூவிளமுங் கொண்டை கொண்டார்
கொடியானை யடலாழிக் கிரையாக் கொண்டார்
செக்கர்நிறத் திருமேனி திகழக் கொண்டார்
செடியேனை யாட்கொண்ட சிவனார் தாமே. 4

7187. அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார்
அருமறையைத் தேர்க்குதிரை யாக்கிக் கொண்டார்
சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்
சுடுகாடு நடமாடு மிடமாக் கொண்டார்
மந்தரம்நற் பொருசிலையா வளைத்துக் கொண்டார்
மாகாளன் வாசல்காப் பாகக் கொண்டார்
தந்திரமந் திரத்தரா யருளிக் கொண்டார்
சமண்தீர்த்தென் தன்னையாட் கொண்டார் தாமே. 5

7188. பாரிடங்கள் பலகருவி பயிலக் கொண்டார்
பவளநிறங் கொண்டார் பளிங்குங் கொண்டார்
நீரடங்கு சடைமுடிமேல் நிலாவுங் கொண்டார்
நீலநிறங் கோலநிறை மிடற்றிற் கொண்டார்
வாரடங்கு வனமுலையார் மைய லாகி
வந்திட்ட பலிகொண்டார் வளையுங் கொண்டார்
ஊரடங்க வொற்றிநகர் பற்றிக் கொண்டார்
உடலுறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 6

7189. அணிதில்லை அம்பலமா டரங்காக் கொண்டார்
ஆலால அருநஞ்சம் அமுதாக் கொண்டார்
கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார்
காதலார் கோடிகலந் திருக்கை கொண்டார்
மணிபணத்த அரவந்தோள் வளையாக் கொண்டார்
மால்விடைமேல் நெடுவீதி போதக் கொண்டார்
துணிபுலித்தோ லினையாடை புடையாக் கொண்டார்
சூலங்கைக் கொண்டார்தொண் டெனைக்கொண் டாரே.7

7190. படமூக்கப் பாம்பணையா னோடு வானோன்
பங்கயனென் றங்கவரைப் படைத்துக் கொண்டார்
குடமூக்கிற் கீழ்க்கோட்டங் கோயில் கொண்டார்
கூற்றுதைத்தோர் வேதியனை உய்யக் கொண்டார்
நெடுமூக்கிற் கரியினுரி மூடிக் கொண்டார்
நினையாத பாவிகளை நீங்கக் கொண்டார்
இடமாக்கி யிடைமருதுங் கொண்டார் பண்டே
யென்னை இந்நாள் ஆட்கொண்ட இறைவர் தாமே. 8

7191. எச்சன்நிணத் தலைகொண்டார் பகன்கண் கொண்டார்
இரவிகளி லெர்ருவன்பல் லிறுத்துக் கொண்டார்
மெச்சன்வியாத் திரன்தலையும் வேறாக் கொண்டார்
விறலங்கி கரங்கொண்டார் வேள்வி காத்த
உச்சநமன் தாளறுத்தார் சந்திரனை யுதைத்தா
ருணர்விலாத் தக்கன்றன் வேள்வி யெல்லாம்
அச்சமெழ அழித்துக்கொண் டருளுஞ் செய்தார்
அடியேனை யாட்கொண்ட அமலர் தாமே. 9

7192. சடையொன்றிற் கங்கையையுந் தரித்துக் கொண்டார்
சாமத்தின் இசைவீணை தடவிக் கொண்டார்

உடையொன்றிற் புள்ளியுழைத் தோலுங் கொண்டார்
உள்குவார் உள்ளத்தை ஒருக்கிக் கொண்டார்
கடைமுன்றிற் பலிகொண்டார் கனலுங் கொண்டார்
காபால வேடங் கருதிக் கொண்டார்
விடைவென்றிக் கொடியதனில் மேவக் கொண்டார்
வெந்துயரந் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 10

7193. குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனாக் கொண்டார்
சிராமலைதஞ் சேர்விடமாத் திருந்தக் கொண்டார்
தென்றல்நெடுந் தேரோனைப் பொன்றக் கொண்டார்
பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பேர் இயம்பக் கொண்டார்
இடருறுநோய் தீர்த்தென்னை யாட்கொண் டாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 97. திருவினாத் திருத்தாண்டகம்

7194. அண்டங் கடந்த சுவடு முண்டோ
அனலங்கை யேந்திய ஆட லுண்டோ
பண்டை யெழுவர் படியு முண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
கண்ட மிறையே கறுத்த துண்டோ
கண்ணின்மேற் கண்ணொன்று கண்ட துண்டோ
தொண்டர்கள் சூழத் தொடர்ச்சி யுண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே. 1

7195. எரிகின்ற இளஞாயி றன்ன மேனி
யிலங்கிழையோர் பாலுண்டோ வெள்ளே றுண்டோ
விரிகின்ற பொறியரவத் தழலு முண்டோ
வேழத்தி னுரியுண்டோ வெண்ணூ லுண்டோ
வரிநின்ற பொறியரவச் சடையு முண்டோ
அச்சடைமேல் இளமதியம் வைத்த துண்டோ
சொரிகின்ற புனலுண்டோ சூலம் உண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே. 2

7196. நிலர்மலை செஞ்சடைமேல் வைத்த துண்டோ
நெற்றிமேற் கண்ணுண்டோ நீறு சாந்தோ
புலால்நாறு வெள்ளெலும்பு பூண்ட துண்டோ
பூதந்தற் சூழ்ந்தனவோ போரே றுண்டோ
கலாமாலை வேற்கண்ணாள் பாகத் துண்டோ
கார்க்கொன்றை மாலை கலந்த துண்டோ
சுலாமாலை யாடரவந் தோள்மே லுண்டோ
சொல்லீரெம் பிரானாரைக் கண்ட வாறே. 3

7197. பண்ணார்ந்த வீணை பயின்ற துண்டோ
பாரிடங்கள் பலசூழப் போந்த துண்டோ
உண்ணா வருநஞ்ச முண்ட துண்டோ
ஊழித்தீ யன்ன ஒளிதா னுண்டோ
கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ
காமனையுங் கண்ணழலாற் காய்ந்த துண்டோ
எண்ணார் திரிபுரங்க ளெய்த துண்டோ
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே. 4

7198. நீறுடைய திருமேனி பாக முண்டோ
நெற்றிமே லொற்றைக்கண் முற்று முண்டோ
கூறுடைய கொடுமழுவாள் கையி லுண்டோ
கொல்புலித்தோ லுடையுண்டோ கொண்ட வேடம்
ஆறுடைய சடை யுண்டோ அரவ முண்டோ
அதனருகே பிறையுண்டோ அள விலாத
ஏறுடைய கொடியுண்டோ இலய முண்டோ
எவ்வகையெம் பிரானாரைக் கண்ட வாறே. 5

7199. பட்டமுந் தோடுமோர் பாகங் கண்டேன்
பார்திகழப் பலிதிரிந்து போதக் கண்டேன்
கொட்டிநின்றி லயங்க ளாடக் கண்டேன்
குழைகாதிற் பிறைசென்னி யிலங்கக் கண்டேன்
கட்டங்கக் கொடிதிண்டோள் ஆடக் கண்டேன்
கனமழுவாள் வலங்கையில் இலங்கக் கண்டேன்
சிட்டனைத் திருவால வாயிற் கண்டேன்
தேவனைக் கனவில்நான் கண்ட வாறே. 6

7200. அலைத்தோடு புனற்கங்கை சடையிற் கண்டேன்
அலர்கொன்றைத் தாரணிந்த வாறு கண்டேன்
பலிக்கோடித் திரிவார்கைப் பாம்பு கண்டேன்
பழனம் புகுவாரைப் பகலே கண்டேன்
கலிக்கச்சி மேற்றளியே யிருக்கக் கண்டேன்

கறையிடறுங் கண்டேன் கனலுங் கண்டேன்
வலித்துடுத்த மான்தோல் அரையிற் கண்டேன்
மறைவல்ல மாதவனைக் கண்ட வாறே. 7

7201. நீறேறு திருமேனி நிகழக் கண்டேன்
நீள்சடைமேல் நிறைகங்கை யேறக் கண்டேன்
கூறேறு கொடுமழுவாள் கொள்ளக் கண்டேன்
கொடுகொட்டி கையலகு கையிற் கண்டேன்
ஆறேறு சென்னியணி மதியுங் கண்டேன்
அடியார்கட் காரமுத மாகக் கண்டேன்
ஏறேறி யிந்நெறியே போதக் கண்டேன்
இவ்வகையெம் பெருமானைக் கண்ட வாறே. 8

7202. விரையுண்ட வெண்ணீறு தானு முண்டு வெண்தலைகை
யுண்டொருகை வீணை யுண்டு
சுரையுண்டு சூடும் பிறையொன் றுண்டு சூலமுந்
தண்டுஞ் சுமந்த துண்டு
அரையுண்ட கோவண ஆடை யுண்டு வலிக்கோலுந்
தோலு மழகா வுண்டு
இரையுண் டறியாத பாம்பு முண்டு இமையோர்
பெருமா னிலாத தென்னே. 9

7203. மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓரூரன் அல்லன் ஓருவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே
கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன்
என்றெழுதிக் காட்டொ ணாதே. 10

7204. பொன்னொத்த மேனிமேற் பொடியுங் கண்டேன்
புலித்தோ லுடைகண்டேன் புணரத் தன்மேல்
மின்னொத்த நுண்ணிடையாள் பாகங் கண்டேன்
மிளிர்வதொரு பாம்பும் அரைமேற் கண்டேன்
அன்னத்தே ரூர்ந்த அரக்கன் தன்னை
அலற அடர்த்திட்ட அடியுங் கண்டேன்
சின்ன மலர்க்கொன்றைக் கண்ணி கண்டேன்
சிவனைநான் சிந்தையுட் கண்ட வாறே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 98. மறுமாற்றத் திருத்தாண்டகம்

7205. நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே. 1

7206. அகலிடமே இடமாக ஊர்கள் தோறும்
அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமிதேவி யுடன்கிடந்தாற்
புரட்டாள் பொய் யன்று மெய்யே
இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான்
இனியேதுங் குறைவிலோம் இடர்கள் தீர்ந்தோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லுஞ்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற் றோமே. 2

7207. வாரண்ட கொங்கையர்சேர் மனையிற் சேரோம்
மாதேவா மாதேவா என்று வாழ்த்தி
நீராண்ட புரோதாயம் ஆடப் பெற்றோம்
நீறணியுங் கோலமே நிகழப் பெற்றோம்
காரண்ட மழைபோலக் கண்ணீர் சோரக்
கன்மனமே நன்மனமாக் கரையப் பெற்றோம்
பாரண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற் றோமே. 3

7208. உறவாவார் உருத்திரபல் கணத்தி னோர்கள்
உடுப்பனகோ வணத்தொடுகீ ளுளவா மன்றே
செறுவாருஞ் செறமாட்டார் தீமை தானும்
நன்மையாய்ச் சிறப்பதே பிறப்பிற் செல்லோம்
நறவார்பொன் னிதழிநறுந் தாரோன் சீரார்
நமச்சிவா யஞ்சொல்ல வல்லோம் நாவால்
சுறவாருங் கொடியானைப் பொடியாக் கண்ட
சுடர்நயனச் சோதியையே தொடர்வுற் றோமே. 4

7209. என்றும்நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரு மில்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோஞ்

சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோ மல்லோ மன்றே
உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை யணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே. 5

7210. மூவுருவின் முதலுருவாய் இருநான் கான
மூர்த்தியே யென்றுமுப் பத்து மூவர்
தேவர்களும் மிக்கோருஞ் சிறந்து வாழ்த்துஞ்
செம்பவளத் திருமேனிச் சிவனே யென்னும்
நாவுடையார் நமையாள வுடையா ரன்றோ
நாவலந்தீ வகத்தினுக்கு நாத ரான
காவலரே யேவி விடுத்தா ரேனுங்
கடவமலோங் கடுமையொடு களவற் றோமே. 6

7211. நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
நெருப்பினொடு காற்றாகி நெடுவா னாகி
அற்பமொடு பெருமையுமாய் அருமை யாகி
அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க லாகாத்
தற்பரமாய் சதாசிவமாய்த் தானும் யானும்
ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்
பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
பேசுவன பேசுதுமோ பிழையற் றோமே. 7

7212. ஈசனையெவ் வுலகினுக்கும் இறைவன் தன்னை
இமையவர்தம் பெருமானை எரியாய் மிக்க
தேசனைச் செம்மேனி வெண்ணீற் றானைச்
சிலம்பரையன் பொற்பாவை நலஞ்செய் கின்ற
நேசனை நித்தலும் நினையப் பெற்றோம்
நின்றுண்பார் எம்மை நினையச் சொன்ன
வாசக மெல்லாம் மறந்தோ மன்றே
வந்தீரார் மன்னவனா வான்றா னாரே. 8

7213. சடையுடையான் சங்கக் குழையோர் காதன்
சாம்பலும் பாம்பும் அணிந்த மேனி
விடையுடையான் வேங்கை அதள்மே லாடை
வெள்ளிபோற் புள்ளியுழை மான்தோல் சார்ந்த
உடையுடையான் நம்மை யுடையான் கண்டீர்
உம்மோடு மற்று முளராய் நின்ற
படையுடையான் பணிகேட்கும் பணியோ மல்லோம்
பாசமற வீசும் படியோ நாமே. 9

7214. நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
ஆவாஎன் றெமைபாள்வான் அமரர் நாதன்
அயனொடுமாற் கறிவரிய அனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன் தானே வந்து
கோவாடிக் குற்றேவல் செய்கென் றாலுங்
குணமாகக் கொள்ளோமெண் குணத்து ளோமே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 99. திருப்புகலூர் – திருத்தாண்டகம்

7215. எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 1

7216. அங்கமே பூண்டாய் அனலா டினாய்
ஆதிரையாய் ஆல்நிழலாய் ஆனே றூர்ந்தாய்
பங்கமொன் றில்லாத படர்ச டையினாய்
பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்
சங்கையொன் றின்னியே தேவர் வேண்டச்
சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே உன்னடிக்கே போது கின்றேன்
திருப்புகலூர் மேவிய தேவ தேவே. 2

7217. பையரவக் கச்சையாய் பால்வெண் ணீற்றாய்
பளிக்குக் குழையினாய் பண்ணா ரின்சொல்
மைவிரவு கண்ணாளைப் பாகங் கொண்டாய்
மான்மறிகை ஏந்தினாய் வஞ்சக் கள்வர்
ஐவரையும் என்மேற் றரவ றுத்தாய்
அவர்வேண்டுங் காரியமிங் காவ தில்லை

பொய்யுரையா துன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 3

7218. தெருளாதார் மூவெயிலுந் தீயில் வேவச்
சிலைவளைத்துச் செங்கணையாற் செற்ற தேவே
மருளாதார் தம்மனத்தில் வாட்டந் தீர்ப்பாய்
மருந்தாய்ப் பிணிதீர்ப்பாய் வானோர்க் கென்றும்
அருளாகி ஆதியாய் வேத மாகி
அலர்மேலான் நீர்மேலான் ஆய்ந்துங் காணாப்
பொருளாவாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 4

7219. நீரேறு செஞ்சைடமேல் நிலாவெண் திங்கள்
நீங்காமை வைத்துகந்த நீதி யானே
பாரேறு படுதலையிற் பலிகொள் வானே
பண்டநங்கற் காய்ந்தானே பாவ நாசா
காரேறு முகிலனைய கண்டத் தானே
கருங்கைக் களிற்றுரிவை கதறப் போர்த்த
போரேறே உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 5

7220. விரிசடையாய் வேதியனே வேத கீதா
விரிபொழில்சூழ் வெண்காட்டாய் மீயச் சூராய்
திரிபுரங்கள் எரிசெய்த தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டானம் மேயாய்
மருவினியார் மனத்துளாய் மாகா ளத்தாய்
வலஞ்சுழியாய் மாமறைக்காட் டெந்தா யென்றும்
புரிசடையாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 6

7221. தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந்
திருவடிமேல் அலரிட்டு தேடி நின்று
நாவார்ந்த மறைபாடி நட்டம் ஆடி
நான்முகனும் இந்திரனும் மாலும் போற்றக்
காவார்ந்த பொழிற்சோலைக் கானப் பேராய்
கழுக்குன்றத் துச்சியாய் கடவு ளேநின்
பூவார்ந்த பொன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 7

7222.நெய்யாடி நின்மலனே நீல கண்டா
நிறையுடையாய் மறைவல்லாய் நீதி யானே
மையாடு கண்டமடவாள் பாகத் தானே
மான்தோல் உடையாய் மகிழ்ந்து நின்றாய்
கொய்யாடு கூவிளங் கொன்றை மாலை
கொண்டடியேன் நானிட்டுக் கூறி நின்று
பொய்யாத சேவடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 8

7223.துன்னஞ்சேர் கோவணத்தாய் தூய நீற்றாய்
துதைந்திலங்கு வெண்மழுவாள் கையி லேந்தித்
தன்னனையுந் தண்மதியும் பாம்பும் நீருஞ்
சடைமுடிமேல் வைத்துகந்த தன்மை யானே
அன்ன நடை மடவாள் பாகத் தானே
யக்காரம் பூண்டானே ஆதி யானே
பொன்னங் கழலடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 9

7224.ஒருவனையும் அல்லா துணரா துள்ளம்
உணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையும் மூவரையும் என்மேல் ஏவி
இல்லாத தரவறுத்தாய் கில்லேன் ஏலக்
கருவரைசூழ் கானல் இலங்கை வேந்தன்
கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே. 10

**திருச்சிற்றம்பலம்**

ஃஃஃஃ

**ஆறாம் திருமுறை முற்றிற்று**

# சுந்தரமூர்த்தி சுவாமிகள்
# அருளிச்செய்த
# தேவாரப் பாடல்கள்

**ஏழாம் திருமுறை**

**100 பதிகங்கள் 1026 பாடல்கள்**

# ஏழாம் திருமுறை

## 1. திருவெண்ணெய் நல்லூர் : பண் – இந்தளம்

7225.பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 1

7226.நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாஅருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 2

7227.மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொருது) உந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 3

7228.முடியேன்இனிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்றம் ஊர்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொள்நீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அடிகேளுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 4

7229.பாதம்பணி வார்கள்பெறு பண்டம்அது பணியாய்
ஆதன்பொரு ளானேன்அறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆதியுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 5

7230.தண்ணார்மதி சூடிதழல் போலுந்திரு மேனீ
எண்ணார்புர மூன்றும்எரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அண்ணாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 6

7231. ஊனாய்உயி ரானாய்உட லானாய்உல கானாய்
வானாய்நிலன் ஆனாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 7

7232. ஏற்றார்புர மூன்றும்எரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்
ஏற்றாய்பெய்யைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆற்றாயுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 8

7233. மழுவாள்வலன் ஏந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தல்உன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அழகாவுனக் காளாய்இனி அல்லேனென லாமே. 9

7234. காரூர்புனல் எய்திக்கரை கல்வித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி உந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரன்எம் பெருமாற்(கு) ஆளல்லேனென லாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 2. திருப்பரங்குன்றம் : பண் – இந்தளம்
## (திருக்கோத்திட்டையும்–திருக்கோவலூரும்)

7235. கோத்திட் டையுங்கோ வலுங்கோ யில்கொண்டீ
 ருமைக்கொண் டுழல்கின் றதோர்கொல் லைச்சில்லைச்
சேத்திட்டுக் குத்தித் தெருவே திரியுஞ்
 சில்பூ தமும்நீ ருந்திசை திசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும்
 அரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந்
தார்த்திட் டதும்பாம் புகைக்கொண் டதும்பாம்(பு)
 அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 1

7236. முண்டம் தரித்தீர் முதுகா டுறைவீர்
 முழுநீ றுமெய்பூ சுதிர்மூக்கப் பாம்பைக்
கண்டத்தி லுந்தோளி லுங்கட்டி வைத்தீர்
 கடலைக் கடைந்திட்ட தோர்நஞ்சை யுண்டீர்
பிண்டஞ் சுமந்தும் மொடுங்கூட மாட்டோம்
 பெரியா ரொடுநட் பினிதென் றிருத்தும்
அண்டம் கடந்தப் புறத்து மிருந்தீர்
 அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 2

7237. மூடாய முயலகன் மூக்கப் பாம்பு
 முடைநாறி யவெண் தலைமொய்த்த பல்பேய்
பாடாவ ருபூதங் கள்பாய் புலித்தோல்

பரிசொன் றறியா தனபா ரிடங்கள்
தோடார்ம லர்க்கொன்றை யுந்துன் னெருக்குந்
துணைமா மணிநா கமரைக் கசைத்தொன்
றாடாதெ னவேசெய் தீரெம் பெருமான்
அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 3

7238. மஞ்சுண்ட மாலைம திசூடு சென்னி
மலையான் மடந்தை மணவாள நம்பி
பஞ்சுண்ட அல்குற் பணைமென் முலையா
ளொடுநீரு மொன்றா யிருத்த லொழியீர்
நஞ்சுண்டு தேவர்க் கமுதங் கொடுத்த
நலமொன் றறியோம்உங் கைநா கமதற்(கு)
அஞ்சுண்டு படமது போகவிடீ ரடியோம்
உமக்காட் செயஅஞ் சுதுமே. 4

7239. பொல்லாப் புறங்காட் டகத்(து)ஆட் டொழியீர்
புலால்வா யனபே யொடுபூச் சொழியீர்
எல்லா மறிவீர் இதுவே யறியீ
ரென்றிரங் குவேன்எல் லியும்நண் பகலுங்
கல்லால் நிழற்கீ ழொருநாள் கண்டதுங்
கடம்பூர்க் கரக்கோயி லின்முன் கண்டதும்
அல்லால் விரகொன் றிலமெம் பெருமான்
அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 5

7240. தென்னாத் தெனாத்தெத் தெனாஎன்று பாடிச்
சிலபூ தமும்நீ ருந்திசை திசையன
பன்னான் மறைபா டுதிர்பா சூருளீர்
படம்பக் கங்கொட்டுந் திருவொற்றி யூரீர்
பண்ணார் மொழியாளை யோர்பங் குடையீர்
படுகாட் டகத்தென்று மோர்பற் றொழியீர்
அண்ணா மலையேனென் றீர்ஆ ரூருளீர்
அடியோம் உமக்காட் செயஅஞ் சுதுமே. 6

7241. சிங்கத் துரிமூ டுதிர்தே வர்கணம்
தொழநிற்றீர் பெற்றம் உகந்தே றிடுதீர்
பங்கம் பலபே சிடப்பாடுந் தொண்டர்
தமைப்பற்றிக் கொண்டாண்டு விடவுங் கில்லீர்
கங்கைச் சடையீ ருங்கருத் தறியோங்
கண்ணு(ம்)மூன் றுடையீர் கண்ணேயா யிருந்த
அங்கத் துறுநோய் களைந்தாள கில்லீ
ரடியோ முமக்காட் செயஅஞ் சுதுமே. 7

7242. பிணிவண் ணத்தவல் வினைதீர்த் தருளீர்
பெருங்காட் டகத்திற் பெரும்பேயும் நீருந்
துணிவண்ணத் தின்மேலு மோர்தோ லுடுத்துச்
சுற்றுநா கத்தராய்ச் சுண்ண நீறுபூசி
மணிவண் ணத்தின்மே லுமோர்வண் ணத்தராய்
மற்று மற்றும்பல் பலவண் ணத்தராய்
அணிவ்ண் ணத்தராய் நிற்றீரெம் பெருமான்
அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 8

7243. கோளா ளியகுஞ் சரங்கோ ளிழைத்தீர்
மலையின் தலையல்லது கோயில் கொள்ளீர்
வேளா ளியகா மனைவெந் தழிய
விழித்தீ ரதுவன்றி யும்வேய் புரையுந்
தோளாள் உமைநங்கை யோர்பங் குடையீர்
உடுகூறை யுஞ்சோறுந் தந்தாள கில்லீர்
ஆளா ளியவேகற் றீரெம் பெருமான்
அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமே. 9

7244. பாரோடு விண்ணும் பகலு மாகிப்
பனிமால் வரையாகிப் பரவையாகி
நீரோடு தீயும் நெடுங்காற் றுமாகி
நெடுவெள் ளிடையாகி நிலனுமாகித்
தேரோ டவரை யெடுத்த அரக்கன்
சிரம்பத்து) இறுத்தீ ருமசெய்கை எல்லாம்
ஆரோடுங் கூடா அடிகே ளிதுவென்
அடியோ முமக்காட் செயஅஞ் சுதுமே. 10

7245. அடிகே ளுமக்காட் செயஅஞ் சுதுமென்
றமரர் பெருமானை ஆரூர னஞ்சி
முடியா லுலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந்தாறு மோர்நான்கு மோரொன் றினையும்
படியா இவைகற்று வல்ல அடியார்
பரங்குன்றம் மேய பரமனடிக்கே
குடியாகி வானோர்க்கு மோர்கோவு மாகிக்
குலவேந்த ராய்விண் முழுதாள் பவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 3. திருநெல்வாயில் : திருஅரத்துறை. பண் – இந்தளம்

7246. கல்வாய்அகி லுங்கதிர் மாமணியும்
கலந்துந்தி வரும்நிவ வின்கரைமேல்
நெல்வாயி லரத்துறை நீடுறையும்
நிலவெண்மதி சூடிய நின்மலனே
நல்வாயில்செய் தார்நடந் தாருடுத்தார்
நரைத்தாரிறந் தார் என்று நானிலத்திற்
சொல்லாய்க்கழி கின்ற(து) அறிந்தடியேன் தொடர்ந்தே
னுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 1

7247. கறிமாமிள கும்மிகு வன்மரமும்
மிகஉந்தி வரும்நிவ வின்கரைமேல்
நெறிவார்குழ லாரவர் காணநடஞ்செய்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
வறிதேநிலை யாதஇம் மண்ணுலகின்
நரனாக வகுத்தனை நான்நிலையேன்
பொறிவாயிலிவ் வைந்தினை யும்அவியப்
பொரு(து)உன்னடி யேபுகும் சூழல்சொல்லே. 2

7248. புற்றாடர வம்அரை ஆர்த்துகந்தாய்
புனிதாபொரு வெள்விடை ஊர்தியினாய்
எற்றேஒரு கண்ணிலன் நின்னையல்லால்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
மற்றேலொரு பற்றிலன் எம்பெருமான்
வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே
அற்றார்பிற விக்கடல் நீந்தியேறி
யடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 3

7249. கோடுயர் கோங்கலர் வேங்கையலர்
மிகஉந்தி வரும்நிவ நின்கரைமேல்
நீடுயர் சோலைநெல் வாயிலரத்
துறைநின்மல னேநினை வார்மனத்தாய்
ஓடு புனற்கரை யாம்இளமை
உறங்கிவிழித் தாலொக்கு மிப்பிறவி
வாடியி ருந்து வருந்தல் செய்யா(து)
அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 4

7250. உலவும்முகி லில்தலை கற்பொழிய
உயர்வேயோ டிழிநிவ வின்கரைமேல்
நிலவும்மயி லாரவர் தாம்பயிலும்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
புலனைந்தும் மயங்கி அகங்குழையப்
பொருவேலொர் நமன்தமர் தாம்நலிய
அலமந்து மயங்கி அயர்வதன்முன்
அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 5

7251. ஏலம்இல வங்கம் எழிற்கனகம்
மிகவுந்தி வரும்நிவ வின்கரைமேல்
நீலம்மலர்ப் பொய்கையில் அன்னம்மலி
நெல்வாயி லரத்துறை யாயொருநெல்
வாலூன்ற வருந்தும் உடம்பிதனை
மகிழா(து)அழ காஅலந் தேனினியான்
ஆலந்நிழலி லமர்ந்தாய் அமரா
அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 6

7252. சிகரம்முகத்தில் திரளா ரகிலும்
மிகவுந்தி வரும்நிவ வின்கரைமேல்
நிகரின்மயி லாரவர் தாம்பயிலும்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
மகரக்குழை யாய்மணக் கோலமதே
பிணக்கோலம தாம்பிற வியிதுதான்
அகரம்முத லின்எழுத் தாகிநின்றாய்
அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 7

7253. திண்தேர்நெடு வீதிஇ லங்கையர்கோன்
திரள்தோளிரு பஃதும் நெரித்தருளி
ஞெண்டாடு நெடுவயல் சூழ்புறவின்
நெல்வாயி லரத்துறை நின்மலனே
பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற்
பரஞ்சோதி நின்னாமம் பயிலப்பெற்றேன்
அண்டாஅம ரர்க்கமரர் பெருமா
னடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 8

7254. மாணாஉரு வாகியோர் மண்ணளந்தான்
மலர்மேலவன் நேடியுங் காண்பரியாய்
நீணீண்முடி வானவர் வந்திறைஞ்சும்

நெல்வாயி லரத்துறை நின்மலனே
வாணார்நுத லார்வலைப் பட்டடியேன்
பலவின்கனி ஈயது போல்வதன்முன்
ஆணோடுபெண் ணாமுரு வாகிநின்றாய்
அடியேனுய்யப் போவதோர் சூழல்சொல்லே. 9

7255. நீரூரும் நெடுவயல் சூழ்புறவின்
நெல்வயி லரத்துறை நின்மலனைத்
தேரூர்நெடு வீதிநன் மாட(ம்) மலி
தென்நாவலர் கோனடித் தொண்டனணி
ஆரூர னுரைத்தன நற்றமிழின்
மிகுமாலையோர் பத்திவை கற்றுவல்லார்
காரூர்களி வண்டறை யானைமன்னர்
அவராகியோர் விண்முழு தாள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 4. திரு அஞ்சைக்களம் : பண் – இந்தளம்

7256. தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே
சடைமேற்கங்கை வெள்ளம் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல்கொண் டசைத்த தென்னே
அதன்மேற் கதநாகம் கச்சார்த்த தென்னே
மலைக்கு நிகரொப் பனவன் திரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டலைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 1

7257. பிடித்தாட்டி யொர்நாகத் தைப்பூண்ட தென்னே
பிறங்கும் சடைமேற் பிறைசூடிற் றென்னே
பொடித் தான்கொண் டுமெய்முற் றும்பூசிற் றென்னே
புகர்ஏறு கந்(து)ஏறல் புரிந்த தென்னே
மடித்(து)ஓட்டந் துவன்திரை யெற்றியிட
வளர்சங்கம் அங்காந்து முத்தஞ் சொரிய
அடித்தார் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 2

7258. சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே
சிறியார் பெரியார் மனத்(து)ஏற லூற்றால்
முந்தித் தொழுவா ரிறவார் பிறவார்
முனிகள் முனியே அமரர்க் கமரா
சந்தித் தடமால் வரைபோல் திரைகள்
தணியா(து) இடறுங் கடலங் கரைமேல்
அந்தித் தலைச்செக்கர் வானே யொத்தியா
லணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 3

7259. இழைக்கும் எழுத்துக் குயிரே யொத்தியால்
இலையே யொத்தியா லுனையே யொத்தியால்
குழைக்கும் பயிர்க்கோர் புயலே ஒத்தியால்
அடியார் தமக்கோர் குடியே யொத்தியால்
மழைக்கு நிகரொப் பனவன் திரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டழைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 4

7260. வீடின் பயனென் பிறப்பின் பயனென்
விடையே றுவதென் மதயானை நிற்கக்
கூடும் மலைமங்கை யொருத்தியுடன் சடைமேற்
கங்கையாளை நீசூடிற் றென்னே
பாடும் புலவர்க் கருளும் பொருளென்
நிதியம் பலசெய் தகலச் செலவில்
ஆடுங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 5

7261. இரவத் திடுகாட் டெரிஆடிற் றென்னே
இறந்தார் தலையிற் பலிகோட லென்னே
பரவித் தொழுவார் பெறுபண்ட மென்னே
பரமா பரமேட்டி பணித்தருளாய்
உரவத் தொடுசங்க மோடிப்பி முத்தம்
கொணர்ந்தெற்றி முழங்கி வலம்புரி கொண்(டு)
அரவக் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 6

7262. ஆக்கும் அழிவும் அமைவும்நீ என்பன்நான்
சொல்லுவார் சொற்பொரு ளவைநீ யென்பன்நான்
நாக்கும் செவியும் கண்ணும்நீ என்பன்நான்
நலனே இனிநா னுனைநன் குணர்ந்தேன்
நோக்கும் நிதியம் பலவெத் தனையுங்

கலத்திற் புகப்பெய்து கொண்(டு)ற நுந்தி
ஆர்க்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 7

7263. வெறுத்தேன் மனைவாழ்க் கையைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக்காதுடை வேதியனே
இறுத்தாய் இலங்கைக் கிறையா யவனைத்
தலைபத்தொடு தோள்பல இற்று விழக்
கறுத்தாய் கடல்நஞ் சமுதுண்டு கண்டம்
கடுகப் பிரமன் தலைஐந் திலுமொன்
றறுத்தாய் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 8

7264. பிடிக்குக் களிறே யொத்தியா லெம்பிரான்
பிரமற்கும் பிரான்மற்றை மாற்கும்பிரான்
நொடிக்கும் அளவிற் புரமூன்றெரியச் சிலைதொட்
டவனே உனைநான் மறவேன்
வடிக்கின் றனபோற் சிலவன் திரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம் புரிகொண்
டடிக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. 9

7265. எந்தம் அடிகளிமையோர் பெருமா னெனக்கென்
றும்அளிக் கும்மணி மிடற்றன்
அந்தண கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனை
மந்தம் முழவுங் குழலும் இயம்பும்
வளர்நாவ லர்கோன் நம்பியூ ரன்சொன்ன
சந்தம் மிகுதண் தமிழ்மாலை கள்கொண்
டடிவீழ வல்லார் தடுமாற் றிலரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 5. திருஓணகாந்தன்தளி : பண் – இந்தளம்

7266. நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தல்பூசனை செய்யலுற்றார்
கையிலொன்றுங் காணம்இல்லைக் கழலடிதொழு துய்யினல்லால்
ஐவர்கொண்டிங் காட்டவாடி ஆழ்குழிப்பட் டழுந்துவேனுக்(கு)
உய்யுமாறொன் றருளிச்செய்யீர் ஓணகாந்தன் தளியுளீரே. 1

7267. திங்கள் தங்கு சடையின்மேலோர் திரைகள்வந்து புரளவீசும்
கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
அங்கைவேலோன் குமரன்பிள்ளை தேவியார்கோற் றட்டியாளால்
உங்களுக்காட் செய்யமாட்டோம் ஓணகாந்தன் தளியுளீரே. 2

7268. பெற்றபோழ்தும் பெறாதபோழ்தும் பேணிஉம்கழல் ஏத்துவார்கள்
மற்றோர்பற்றில ரென்றிரங்கி மதியுடையவர் செய்கைசெய்யீர்
அற்றபோழ்தும் அலந்தபோழ்தும் ஆபற்காலத் தடிகேளும்மை
ஒற்றிவைத்திங் குண்ணலாமோ ஓணகாந்தன் தளியுளீரே. 3

7269. வல்லதெல்லாம் சொல்லிஉம்மை வாழ்த்தினாலும் வாய்திறந்தொன்(று)
இல்லையென்னீர் உண்டுமென்னீ ரெம்மையாள்வா னிருப்பதென்நீர்
பல்லையுக்க படுதலையிற் பகலெலாம்போய்ப் பலிதிரிந்திங்
கொல்லைவாழ்க்கை யொழியமாட்டீர் ஓணகாந்தன் தளியுளீரே. 4

7270. கூடிக்கூடித் தொண்டர்தங்கள் கொண்டபாணி குறைபடாமே
ஆடிப்பாடி அழுதுநெக்கங் கன்புடையவர்க் கின்பமோரீர்
தேடித்தேடித் திரிந்தெய்த்தாலுஞ் சித்தமென்பால் வைக்கமாட்டீர்
ஓடிப்போகீர் பற்றுந்தாரீர் ஓணகாந்தன் தளியுளீரே. 5

7271. வாரிருங்குழல் வாள்நெடுங்கண் மலைமகள்மது விம்முகொன்றைத்
தாரிருந்தட(ம்) மார்புநீங்காத் தையலால்உல குய்யவைத்த
காரிரும்பொழிற் கச்சிமூதூர்க் காமக்கோட்டம் உண்டாகநீர்போய்
ஊரிடும்பிச்சை கொள்வதென்னே ஓணகாந்தன் தளியுளீரே. 6

7272. பொய்ம்மையாலே போது போக்கிப் புறத்துமில்லை அகத்துமில்லை
மெய்ம்மைசொல்லி ஆளமாட்டீர் மேலைநாளொன் றிடவுங்கில்லீர்
எம்மைப்பெற்றா லேதும்வேண்டீர் ஏதுந்தாரீர் ஏதும்ஓதீர்
உம்மையன்றே எம்பெருமான் ஓணகாந்தன் தளியுளீரே. 7

7273. வலையம்வைத்த கூற்ற(ம்)மீவான் வந்துநின்ற வார்த்தைகேட்டுச்
சிலையமைத்த சிந்தையாலே திருவடிதொழு(து) உய்யினல்லால்
கலையமைத்த காமச்செற்றக் குரோதலோபம் மதவருடை
உலையமைத்திங் கொன்றமாட்டேன் ஓணகாந்தன் தளியுளீரே. 8

7274. வாரமாகித் திருவடிக்குப் பணிசெய்தொண்டர் பெறுவதென்னே
ஆரம்பாம்பு வாழ்வதாரூர் ஒற்றியூரேல் உம்மதன்று
தாரமாகக் கங்கையாளைச் சடையில்வைத்த அடிகேள்உந்தம்
ஊரும்காடு உடையுந்தோலே ஓணகாந்தன் தளியுளீரே. 9

7275. ஓவணமேல் எருதொன்றேறும் ஓணகாந்தன் றளியுளார்தாம்
ஆவணஞ்செய் தாளுங்கொண்டு அரைதுகிலோடு பட்டுவீக்கிக்
கோவணமேற் கொண்டவேடங் கோவையாகஆ ரூரன்சொன்ன
பாவணத்தமிழ் பத்தும்வல்லார் பறையும்தாஞ்செய்த பாவந்தானே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 6. திருவெண்காடு : பண் – இந்தளம்

7276. படங்கொள்நாகஞ் சென்னிசேர்த்திப் பாய்புலித்தோ லரையில் வீக்கி
அடங்கலார்ஊர் எரியச்சீறி அன்றுமூவர்க் கருள்புரிந்தீர்
மடங்கலானைச் செற்றுகந்தீர் மனைகள்தோறும் தலைகையேந்தி
விடங்கராகித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 1

7277. இழித்துகந்தீர் முன்னைவேடம் இமையவர்க்கும் உரைகள்பேணா
தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட உயர்தவத்தை அமரர்வேண்ட
அழிக்கவந்த காமவேளை அவனுடைய தாதைகாண
விழித்துகந்த வெற்றியென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 2

7278. படைகளேந்திப் பாரிடம்உம் பாதம்போற்ற மாது(ம்)நீரும்
உடையோர்கோவ ணத்தராகி உண்மைசொல்லீ ரும்மையன்றே
சடைகள்தாழக் கரணமிட்டுத் தன்மைபேசி இல்பலிக்கு
விடையதேறித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.3

7279. பண்ணுளீராய்ப் பாட்டுமானீர் பத்தர்சித்தம் பரவிக்கொண்டீர்
கண்ணுளீராய்க் கருத்திலும்மைக் கருதுவார்கள் காணும்வண்ணம்
மண்ணுளீராய் மதியம்வைத்தீர் வானநாடர் மருவியேத்த
விண்ணுளீராய் நிற்பதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.4

7280. குடமெடுத்து நீரும்பூவுங் கொண்டுதொண்ட ரேவல்செய்ய
நடமெடுத்தொன் றாடிப்பாடி நல்குவீர்நீர் புல்கும்வண்ணம்
வடமெடுத்த கொங்கைமாதோர் பாகமாக வார்கடல்வாய்
விடம்மிடற்றில் வைத்ததென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 5

7281. மாறுபட்ட வனத்தகத்தின் மருவவந்த வன்களிற்றைப்
பீறிஇட்ட மாகப்போர்த்தீர் பெய்பலிக்கென் றில்லந்தோறுங்
கூறுபட்ட கொடியும்நீருங் குலாவியேற்றை அடரவேறி
வேறுபட்டுத் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 6

7282.காதலாலே கருதுந்தொண்டர் காரணத்த ராகிநின்றே
பூதம்பாடப் புரிந்துநட்டம் புவனியேத்த ஆடவல்லீர்
நீதியாக ஏழிலோசை நித்தராகிச் சித்தர்சூழ
வேதமோதித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 7

7283.குரவுகொன்றை மதியம்மத்தங் கொங்கைமாதர் கங்கைநாகம்
விரவுகின்ற சடையுடையீர் விருத்தரானீர் கருத்திலும்மைப்
பரவுமென்மேற் பழிகள்போக்கீர் பாகமாய மங்கையஞ்சி
வெருவவேழம் செற்றதென்னே வேலைசூழ்வெண் காடனீரே.8

7284.மாடங்காட்டும் கச்சியுள்ளீர் நிச்சயத்தால் நினைப்புளார்பால்
பாடுங்காட்டில் ஆடலுள்ளீர் பரவும்வண்ணம் எங்ஙனேதான்
நாடுங்காட்டி லயனும்மாலும் நணுகாவண்ணம் அனலுமாய
வேடங்காட்டித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 9

7285.விரித்தவேதம் ஓதவல்லார் வேலைசூழ்வெண் காடுமேய
விருத்தனாய வேதன்றன்னை விரிபொழில்திரு நாவலூரன்
அருத்தியாலா ரூரன்தொண்ட னடியன்கேட்ட மாலைபத்துந்
தெரித்தவண்ணம் மொழியவல்லார் செம்மையாளர் வானுளாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 7. திருஎதிர்கொள்பாடி : பண் – இந்தளம்

7286.மத்த யானை யேறி மன்னர் சூழவரு வீர்காள்
செத்த போதில் ஆரு மில்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த வுள்ளம் மாற்ற வேண்டா வம்மின் மனத்திரே
அத்தர் கோயி லெதிர்கொள் பாடி என்ப தடைவோமே. 1

7287.தோற்ற முண்டேல் மரண முண்டு துயர மனைவாழ்க்கை
மாற்ற முண்டேல் வஞ்ச முண்டு நெஞ்ச மனத்தீரே
நீற்றர் ஏற்றர் நீல கண்டர் நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 2

7288.செடிகொ ளாக்கை சென்றுசென்று தேய்ந்தொல்லை வீழாமுன்
வடிகொள் கண்ணார் வஞ்சனையுட் பட்டு மயங் காதே
கொடிகொ ளேற்றர் வெள்ளை நீற்றர் கோவண ஆடையுடை
அடிகள் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 3

7289.வாழ்வர் கண்டீர் நம்முள் ஐவர் வஞ்ச மனத்தீரே
யாவ ராலும் இகழப் பட்டிங்(கு) அல்லலில் வீழாதே.

மூவ ராயும் இருவ ராயும் முதல்வன் அவனேயாம்
தேவர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 4

7290. அரித்து நம்மேல்ஐவர் வந்திங்(கு) ஆறலைப்பான் பொருட்டால்
சிரித்த பல்வாய் வெண்தலைபோய் ஊர்ப்புறஞ் சேராமுன்
வரிக்கொ டுத்திவ் வாள ரக்கர் வஞ்ச மதில்மூன்றும்
எரித்த வில்லி யெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 5

7291. பொய்யர் கண்டீர் வாழ்க்கை யாளர் பொத்தடைப்பான் பொருட்டால்
மையல் கொண்டீ ரெம்மோ டாடி நீரும் மனத்தீரே
நைய வேண்டா இம்மை யேத்த அம்மை நமக்கருளும்
ஐயர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 6

7292. கூசம் நீக்கிக் குற்றம் நீக்கிச் செற்ற மனநீக்கி
வாசம் மல்கு குழலி னார்கள் வஞ்ச மனைவாழ்க்கை
ஆசை நீக்கி அன்பு சேர்த்தி என்பணிந்(து) ஏறேறும்
ஈசர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 7

7293. இன்ப முண்டேல் துன்ப முண்டு ஏழை மனைவாழ்க்கை
முன்பு சொன்னால் மோழை மையான் முட்டை மனத்தீரே
அன்ப ரல்லால் அணிகொள் கொன்றை அடிகள் அடிசேரார்
என்பர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 8

7294. தந்தை யாருந் தவ்வை யாரும் எட்டனைச் சார்வாகார்
வந்து நம்மோ டுள்ளளாவி வான நெறி காட்டும்
சிந்தை யீரே நெஞ்சி னீரே திகழ்மதியஞ் சூடும்
எந்தை கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 9

7295. குருதி சோர ஆனை யின்தோல் கொண்ட குழற்சடையன்
மருது கீறி ஊடு போன மாலயனும் அறியாச்
சுருதி யார்க்குஞ் சொல்ல வொண்ணாச் சோதியெம் ஆதியான்
கருது கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே. 10

7296. முத்து நீற்றுப் பவள மேனிச் செஞ்சடை யானுறையும்
பத்தர் பந்தத் தெதிர்கொள் பாடிப் பரமனையே பணியச்
சித்தம் வைத்த தொண்டர் தொண்டன் சடையனவன் சிறுவன்
பத்த னூரன் பாடல் வல்லார் பாதம்பணி வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 8. திருவாரூர் : பண் – இந்தளம்

7297. இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியான் நோக்கி னேற்குத்
திறைகொணர்ந்(து) ஈண்டித் தேவர் செம்பொனும் மணியுந் தூவி
அறைகழ லிறைஞ்சும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 1

7298. ஊன்மிசை உதிரக் குப்பை யொருபொரு ளிலாத மாயம்
மான்மறித் தனைய நோக்கி மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆன்நல்வெள் ளேற்ற ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 2

7299. அறுபதும் பத்து மெட்டும் ஆறினோ டஞ்சு நான்கும்
துறுபறித் தனைய நோக்கிச் சொல்லிற்றொன் றாகச் சொல்லார்
நறுமலர்ப் பூவும் நீரும் நாடொறும் வணங்கு வார்க்கு
அறிவினைக் கொடுக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 3

7300. சொல்லிடில் எல்லை யில்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு நலம்மிக அறிந்தேன் அல்லேன்
மல்லிகை மாடம் நீடு மருங்கொடு நெருங்கி எங்கும்
அல்லிவண்(டு) இயங்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 4

7301. நரம்பினோ டெலும்பு கட்டி நசையினோ டிசைவொன் றில்லாக்
குரம்பைவாய்க் குடியி ருந்து குலத்தினால் வாழ மாட்டேன்
விரும்பிய கமழும் புன்னை மாதவித் தொகுதி யென்றும்
அரும்புவாய் மலரும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 5

7302. மணமென மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டேன் நாயேன்
பணையிடைச் சோலை தோறும் பைம்பொழில் விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 6

7303. தாழ்வெனுந் தன்மைவிட்டுத் தனத்தையே மனத்தில் வைத்து
வாழ்வதே கருதித் தொண்டர் மறுமைக்கொன் றீய கில்லார்
ஆழ்குழிப் பட்ட போது அலக்கணி லொருவர்க் காவர்
யாழ்முயன் றிருக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 7

7304. உதிரநீ றிறைச்சிக் குப்பை எடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக் கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமா லயனுந் தேடிக் கழலடி காண மாட்டா
அரியனாய் நின்ற ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 8

7305. பொய்த்தன்மைத் தாய மாயப் போர்வையை மெய்யென் றெண்ணும்
வித்தகத் தாய வாழ்வு வேண்டிநான் விரும்ப கில்லேன்
முத்தினைத் தொழுது நாளும் முடிகளால் வணங்கு வார்க்கு
அத்தன்மைத் தாகும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 9

7306. தஞ்சொலா ரருள்ப யக்கும் தமியனேன் தடமு லைக்கண்
அஞ்சொலார் பயிலும் ஆரூ ரப்பனை யூரன் அஞ்சிச்
செஞ்சொலால் நயந்த பாடல் சிந்தியா ஏத்த வல்லார்
நஞ்சுலாங் கண்டத் தெங்கள் நாதனை நணுகு வாரே. 10

திருச்சிற்றம்பலம்

◇◇◇◇◇

## 9. திருஅரிசிற்கரைப் புத்தூர் : பண் – இந்தளம்

7307. மலைக்கு மகள்அஞ்ச மதகரியை உரித்தீர்
எரித்தீர் வருமுப் புரங்கள்
சிலைக்குங் கொலைச்சே உகந்தேற் றொழியீர்
சில்பலிக்(கு) இல்கடோறுஞ் செலவொழியீர்
கலைக்கொம் புங்கரி மருப்பும் இடறிக்
கலவம் மயிற்பீ லியுங்கா ரகிலும்
அலைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. 1

7308. அருமல ரோன்சிர மொன்ற றுத்தீர்
செறுத்தீர் அழற்கூ லத்தில் அந்தகனைத்
திருமகள் கோன்நெடு மால்பலநாள் சிறப்பா
கியபூ சனைசெய் பொழுதில்
ஒருமல ராயிரத் திற்குறை வால்நிறை
வாகவோர் கண்மலர் சூட்டலுமே
பொருவிற லாழி புரிந்தளித் தீர்பொழி
லார்திருப் புத்தூர்ப் புனிதனீரே. 2

7309. தரிக்குந் தரைநீர் தழல்காற்(று) அந்தரஞ்
சந்திரன் சவிதா இயமான னானீர்
சரிக்கும் பலிக்குத் தலைஅங்கை யேந்தித்
தையலார் பெய்யக் கொள்வது தக்கதன்றால்
முரிக்குந் தளிர்ச்சந் தனத்தொடு வேயுமுழங்குந்
திரைக்கைக ளால்வாரி மோதி
அரிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூ ரழகனீரே. 3

7310. கொடியுடை மும்மதில் வெந்தழியக் குன்றம்
வில்லா நாணி யிற்கோ லொன்றினால்
இடிபட எய்தெரித்தீர் இமைக்கும் அளவில்
உமக்கா ரெதிரெம் பெருமான்
கடிபடு பூங்கணை யான்கருப் புச்சிலைக்
காமனை வேவக் கடைக்கண்ணினால்
பொடிபட நோக்கிய தென்னை கொல்லோ
பொழிலார் திருப்புத்தூர் புனிதனீரே. 4

7311. வணங்கித் தொழுவா ரவர்மால் பிரமன்
மற்றும் வானவர் தானவர் மாமுனிவர்
உணங்கல் தலையில் பணிகொண்ட லென்னே
உலகங்க ளெல்லா முடையீர் உரையீர்
இணங்கிக் கயல்சே லிளவாளை பாய
இனக்கெண்டை துள்ளக்கண் டிருந்த அன்னம்
அணங்கிக் குணங்கொ ளரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. 5

7312. அகத்தடி மைசெய்யும் அந்தணன்தான்
அரிசிற் புனல்கொண்(டு) உவந்தாட்டு கின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும் நும்முடி
மேல்விழுத் திட்டு நடுங்குதலும்
வகுத்தவ னுக்கு நித்தற் படியும்
வருமென் றொருகாசி னைநின்ற நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்து கந்தீர்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. 6

7313. பழிக்கும் பெருந்தக்கன் எச்சம் மழியப்
பகலோன் முதலாப் பல தேவரையுந்
தெழித்திட்(டு) அவரங்கஞ் சிதைத்தருளுஞ்
செய்கை யென்னைகொலோ மைகொள்செம் மிடற்றீர்
விழிக்குந் தழைப்பீலி யொடேலம் உந்தி
விளங்கும் மணிமுத் தொடுபொன் வரன்றி
அழிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. 7

7314. பறைக்கண் நெடும்பேய்க் கணம்பாடல் செய்யக்
குறட்பா ரிடங்கள் பறைத்தாம் முழக்கப்
பிறைக்கொள் சடைதாழப் பெயர்ந்து நட்டம்

பெருங்கா(டு) அரங்காக நின்றாட லென்னே
கறைக்கொள் மணிகண்ட மும்திண்டோள்களுங்
கரங்கள் சிரந்தன்னி லுங்கச்சு மாகப்
பொறிக்கொள் ளரவம் புனைந்தீர் பலவும்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. 8

7315. மழைக்கண் மடவாளை ஓர்பாகம் வைத்தீர்
வளர்புன் சடைக்கங்கை யைவைத் துகந்தீர்
முழைக்கொள் அரவோ டென்பணி கலனா
முழுநீறு மெய்பூசு தலென்னை கொலோ
கழைக்கொள் கரும்புங் கதலிக் கனியுங்
கமுகின் பழுக்காயுங் கவர்ந்து கொண்டிட்
டழைக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூர் ரழகனீரே. 9

7316. கடிக்கும் அரவால் மலையா லமரர்
கடலைக் கடைய எழுகாள கூடம்
ஒடிக்கும் உலகங் களையென் றதனை
உமக்கே அமுதாக வுண்டீ ருமிழீர்
இடிக்கும் மழைவீழ்த் திழுத்திட் டருவி
யிருபாலு மோடி யிரைக்குந் திரைக்கை
அடிக்கும் புனல்சே ரரிசிற் றென்கரை
யழகார் திருப்புத்தூ ரழகனீரே. 10

7317. காரூர் மழைபெய் துபொழி யருவிக்
கழையோ டகில்உந்திட் டிருகரையும்
போரூர் புனல்சே ரரிசிற் றென்கரைப்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதர் தம்மை
ஆரூரன் அருந்தமி ழைந்தினோ டைந்தழ
காலுரைப் பார்களுங் கேட்பவரும்
சீரூர் தருதேவர் கணங்க ளொடும்
இணங்கிச் சிவலோகம தெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 10. திருக்கச்சியநேகதங்காவதம் : பண் – இந்தளம்

7318. தேன்நெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு
மான(து) இடம்திக ழைங்கணையக்
கோனை எரித்தெரி யாடி யிடம்குல
வான திடம்குறை யாமறையாம்
மானை யிடத்ததொர் கைய னிடம்மத
மாறு படப்பொழி யும்மலைபோல்
யானை யுரித்த பிரான திடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 1

7319. கூறு நடைக்குழி கட்பகு வாயன
பேயுகந் தாடநின் றோரியிட
வேறு படக்குட கத்தி(ல்)லை யம்பல
வாணன்நின் றாடல் விரும்புமிடம்
ஏறு விடைக்கொடி எம்பெரு மான்இமை
யோர்பெரு மான்உமை யாள்கணவன்
ஆறு சடைக்குடை யப்ப னிடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 2

7320. கொடிக ளிடைக்குயில் கூவு மிடம்மயி
லாலும் மிடம்மழு வாளுடைய
கடிகொள் புனற்சடை கொண்ட
நுதற்கறைக் கண்ட னிடம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள் வினைப்பகை தீரு மிடம்திரு
வாகு மிடந்திரு மார்பகலத்(து)
அடிக ளிடம்அழல் வண்ண னிடங்கலிக்
கச்சி யனேகதங் காவதமே 3

7321. கொங்கு நுழைத்தன வண்டறை கொன்றையுங்
கங்கையுந் திங்களுஞ் சூடுசடை
மங்குல் நுழைமலை மங்கையை
நங்கையைப் பங்கினிற் றங்க உவந்தருள்செய்
சங்கு குழைச்செவி கொண்டரு வித்திரள்
பாயவி யாத்தழல் போலுடைத்தம்
அங்கை மழுத்திகழ் கைய னிடங்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 4

7322. பைத்த படத்தலை ஆடர வம்பயில்
கின்ற விடம்பயி லப்புகுவார்
சித்த மொருநெறி வைத்த விடம்திகழ்

கின்ற விடம்திரு வானடிக்கே
வைத்த மனத்தவர் பத்தர் மனங்கொள
வைத்த விடம்மழு வாளுடைய
அத்த னிடம்அழல் வண்ண னிடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 5

7323. தண்ட முடைத்தரு மன்தம ரென்றம
ரைச்செயும் வன்துயர் தீர்க்குமிடம்
பிண்ட முடைப்பிற வித்தலை நின்று
நினைப்பவ ராக்கையை நீக்குமிடம்
கண்ட முடைக்கரு நஞ்சை நுகர்ந்த
பிரான திடங்கட லேழுகடந்(து)
அண்ட முடைப்பெரு மான திடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 6

7324. கட்டு மயக்கம் அறுத்தவர் கைதொழு
தேத்து மிடம்கதி ரோனொளியால்
விட்ட விடம்விடை யூர்தி யிடங்குயிற்
பேடைதன் சேவலொ டாடுமிடம்
மட்டு மயங்கி அவிழ்ந்த மலரொரு
மாதவி யோடு மணம்புணரும்
அட்ட புயங்கப் பிரான திடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 7

7325. புல்லி யிடந்தொழு துய்துமெ(ன்) னாதவர்
தம்புரம் மூன்றும் பொடிபடுத்த
வில்லி யிடம்விர வாதுயி ருண்ணும்வெங்
காலனைக் கால்கொடு வீந்(து)அவியக்
கொல்லி யிடங்குளிர் மாதவி மவ்வல்
குராவகு ளங்குருக் கத்திபுன்னை
அல்லி யிடைப்பெடை வண்டுறங் குங்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 8

7326. சங்கை யவர்புணர் தற்கரி யான்றள
வேனகை யாள்தவி ராமிகுசீர்
மங்கை யவள்மகி ழச்சுடு காட்டிடை
நட்ட(ம்)நின் றாடிய சங்கரனெம்
அங்கையி னல்லன லேந்து மவன்கனல்
சேரொளி யன்னதோர் பேரகலத்
தங்கைய வன்னுறை கின்ற விடங்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 9

7327. வீடு பெறப்பல வூழிகள் நின்று
நினைக்கு மிடம்வினை தீருமிடம்
பீடு பெறப்பெரி யோரதி டங்கொண்டு
மேவினர் தங்களைக் காக்கும்இடம்
பாடு மிடத்தடி யான்புக லூர
னுரைத்தவிம் மாலைகள் பத்தும்வல்லார்
கூடு மிடம்சிவ லோக னிடம்கலிக்
கச்சி யனேகதங் காவதமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 11. திருப்பூவணம் : பண் – இந்தளம்

7328. திருவுடை யார்திரு மாலய னாலும்
உருவுடை யாருமை யாளையோர் பாகம்
பரிவுடை யார்அடை வார்வினை தீர்க்கும்
புரிவுடை யார்உறை பூவணம் ஈதோ. 1

7329. எண்ணி யிருந்து கிடந்தும் நடந்தும்
அண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னாருறை பூவண மீதோ. 2

7330. தெள்ளிய பேய்பல பூதம வற்றொடு
நள்ளிருள் நட்டம தாடல் நவின்றோர்
புள்ளுவ ராகு மவர்க்கவர் தாமும்
புள்ளுவ னாருறை பூவண மீதோ. 3

7331. நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்
அனலுடை யாரழ கார்தரு சென்னிப்
புனலுடை யாருறை பூவண மீதோ. 4

7332. நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி என்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பில்
பொடியணி வாருறை பூவண மீதோ. 5

7333. மின்னனை யாள் திரு மேனிவி ளங்கவோர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்நினை யார்புரம் மூன்றெரி யூட்டிய
பொன்னனை யானுறை பூவண மீதோ. 6

7334. மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட
நக்கிறை யேவிர லால்இற வூன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வான்உறை பூவண மீதோ. 7,8,9

7335. சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்
ஆர விருப்பிட மாவுறை வானை
ஊர னுரைத்தசொன் மாலைகள் பத்திவை
பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 12. திருநாட்டுத் தொகை : பண் – இந்தளம்

7336. வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந் தானிடங் கொண்டதுங் கோவலூர்
தாழை யூர்தக டூர்தக்க ளூர்தரு மபுரம்
வாழை காய்க்கும் வளர்மரு கல்நாட்டு மருகலே. 1

7337. அண்டத் தண்டத்தின் அப்புறத் தாடும் அமுதனூர்
தண்டந் தோட்டந்தண் டங்குறை தண்டலை ஆலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ்கழிப் பாலை கடற்கறை
கொண்டல் நாட்டுக்கொண் டல்குறுக் கைநாட்டுக் குறுக்கையே. 2

7338. மூல னூர்முத லாயமுக் கண்ணன் முதல்வனூர்
நால னூர்நரை யேறுகந் தேறிய நம்பனூர்
கோல நீற்றன்குற் றாலம் குரங்கணின் முட்டமும்
வேல னூர்வெற்றி யூர்வெண்ணிக் கூற்றத்து வெண்ணியே. 3

7339. தேங்கூ ருந்திருச் சிற்றம்ப லமுஞ் சிராப்பள்ளி
பாங்கூ ரெங்கள் பிரானுறை யுங்கடம் பந்துறை
பூங்கூ ரும்பர மன்பரஞ் சோதி பயிலுமூர்
நாங்கூர் நாட்டுநாங் கூர்நறை யூர்நாட்டு நறையூரே. 4

7340. குழலை வென்ற மொழிமட வாளையோர் கூறனாம்
மழலை யேற்று மணாள னிடம்தட மால்வரைக்
கிழவன் கீழை வழிப்பழை யாறு கிழையமும்
மிழலை நாட்டு மிழலைவெண் ணிநாட்டு மிழலையே. 5

7341. தென்னூர் கைம்மைத் திருச்சுழி யல்திருக் கானப்பேர்
பன்னூர் புக்குறை யும்பர மர்க்கிடம் பாய்நலம்
என்னூ ரெங்கள் பிரானுறை யுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப்பொன் னூர்புரி சைநாட்டுப் புரிசையே.6

7342. ஈழ நாட்டுமாந் தோட்டம்தென் னாட்டிரா மேச்சுரம்
சோழ நாட்டுத் துருத்திநெய்த் தானம் திருமலை
ஆழி யூரன நாட்டுக்கெல் லாமணி யாகிய
கீழை யில்லர னார்க்கிடங் கிள்ளி குடியதே. 7

7343. நாளு நன்னிலம் தென்பனை யூர்வட கஞ்சனூர்
நீள நீள்சடை யான்நெல்லிக் காவு நெடுங்களம்
காள கண்ட னுறையுங் கடைமுடி கண்டியூர்
வேளார் நாட்டுவே ளூர்விளத் தூர்நாட்டு விளத்தூரே. 8

7344. தழலும் மேனியன் தையலோர் பாகம் அமர்ந்தவன்
தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற சோதிசோற் றுத்துறை
கழலுங் கோவை யுடையவன் காதலிக் கும்மிடம்
பழனம் பாம்பணி பாம்புரந் தஞ்சைதஞ் சாக்கையே. 9

7345. மைகொள் கண்டனெண் தோளன்முக் கண்ணன் வலஞ்சுழி
பைகொள் வாளர வாட்டித் திரியும் பரமனூர்
செய்யில் வாளைகள் பாய்ந்(து) உகளுந்திருப் புன்கூர்நன்
றையன் மேயபொ ழிலணி யாவடு துறையதே. 10

7346. பேணி நாடத னிற்றிரி யும்பெரு மான்றனை
ஆனை யாமடி யார்கள் தொழப்படும் ஆதியை
நாணி யூரன் வனப்பகை யப்பன்வன் தொண்டன்சொல்
பாணி யாலிவை யேத்துவார் சேர்பர லோகமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 13. திருத்துறையூர் : பண் – தக்கராகம்

7347. மலையார் அருவித் திரள்மா மணியுந்திக்
குலையாரக் கொணர்ந்தெற்றி யோர் பெண்ணை வடபால்
கலையா ரல்குற் கன்னியராடுந் துறையூர்த்
தலைவா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 1

7348. மத்தம் மதயா னையின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப் பரவுந் துறையூர்
அத்தா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 2

7349. கந்தம் கமழ்காரகில் சந்தனம் உந்திச்
செந்தண் புனல்வந் திழிபெண்ணை வடபால்
மந்தி பலமா நடமாடும் துறையூர்
எந்தாய் உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 3

7350. அரும்பார்ந்தன மல்லிகை செண்பகஞ் சாடிச்
சுரும்பா ரக்கொணர்ந் தெற்றி யோர்பெண்ணை வடபால்
கரும்பார் மொழிக்கன் னியராடும் துறையூர்
விரும்பா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 4

7351. பாடார்ந் தனமாவும் பலாக்களுஞ் சாடி
நாடார வந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
மாடார்ந்தன மாளிகை சூழுந் துறையூர்
வேடா உனைவேண்டிக் கொள்வேன் தவெநெறியே. 5

7352. மட்டார் மலர்க்கொன்றையும் வன்னியும் சாடி
மொட்டாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கொட்டாட்டொடு பாட்டொலி ஓவாத் துறையூர்ச்
சிட்டா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 6

7353. மாதார்மயிற் பீலியும் வெண்ணுரை உந்தித்
தாதாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
போதார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்
நாதா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 7

7354. கொய்யாமலர்க் கோங்கொடு வேங்கையுஞ் சாடிச்
செய்யா ரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணைவடபால்
மையார்தடங் கண்ணிய ராடுந் துறையூர்
ஐயா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 8

7355. விண்ணார்ந்தன மேகங்கள் நின்று பொழிய
மண்ணா ரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணைவடபால்
பண்ணார்மொழிப் பாவைய ராடுந் துறையூர்
அண்ணா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 9

7356. மாவாய்ப் பிளந்தானும் மலர்மிசை யானும்
ஆவா அவர்தேடித் திரிந்(து)அல மந்தார்
பூவார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்த்
தேவா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 10

7357. செய்யார் கமல மலர்நாவ லூர்மன்னன்
கையாற் றொழுதேத் தப்படுந் துறையூர்மேல்
பொய்யாத் தமிழூர னுரைத்தன வல்லார்
மெய்யே பெறுவார்கள் தவநெறி தானே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 14. திருப்பாச்சிலாச்சிராமம் : பண் – தக்கராகம்

7358. வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
யுரைத்தக்கால் உவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 1

7359. அன்னையே யென்னேன் அத்தனே யென்னேன்
அடிகளே அமையுமென் றிருந்தேன்
என்னையு மொருவ னுளனென்று கருதி
இறையிறை திருவருள் காட்டாய்
அன்னமாம் பொய்கை சூழ்தரு பாச்சி
லாச்சிரா மத்துறை யடிகள்
பின்னையே அடியார்க் கருள்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 2

7360. உற்றபோ தல்லால் உறுதியை யுணரேன்
உள்ளமே அமையுமென் றிருந்தேன்
செற்றவர் புரம்மூன் றெரியெழச் செற்ற

செஞ்சடை நஞ்சடை கண்டர்
அற்றவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பெற்றபோ துகந்து பெறாவிடி லிகழில்
இவரால தில்லையோ பிரானார். 3

7361. நாச்சில பேசி நமர்பிற ரென்று
நன்றுதீ தென்கிலர் மற்றோர்
பூச்சிலை நெஞ்சே பொன்விளை கழனிப்
புள்ளினம் சிலம்புமாம் பொய்கைப்
பாச்சிலாச் சிராமத் தடிகளென் றிவர்தாம்
பலரையும் ஆட்கொள்வர் பரிந்தோர்
பேச்சிலர் ஒன்றைத் தரவில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 4

7362.வரிந்தவெஞ் சிலையால் அந்தரத் தெயிலை
வாட்டிய வகையின ரேனும்
புரிந்தவந் நாளே புகழ்தக்க அடிமை
போகுநாள் வீழுநா ளாகிப்
பரிந்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பிரிந்திறைப் போதிற் பேர்வதே யாகில்
இவரால தில்லையோ பிரானார். 5

7363. செடித்தவஞ் செய்வார் சென்றுழிச் செல்லேன்
தீவினை செற்றிடு மென்று
அடித்தவ மல்லா லாரையும் அறியே
னாவதும் அறிவரெம் மடிகள்
படைத்தலைச் சூலம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிடித்தவெண் ணீறே பூசுவ தானா
லிவரலா தில்லையோ பிரானார். 6

7364. கையது கபாலங் காடுறை வாழ்க்கை
கட்டங்கம் ஏந்திய கையர்
மெய்யது புரிநூல் மிளிரும்புன் சடைமேல்
வெண்திங்கள் சூடிய விகிர்தர்
பையர வல்குற் பாவைய ராடும்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
மெய்யரே யொத்தோர் பொய்செய்வ தாகி
லிவரலா தில்லையோ பிரானார். 7

7365. நிணம்படும் உடலை நிலைமையென் றோரேன்
நெஞ்சமே தஞ்சமென் றிருந்தேன்
கணம்படிந் தேத்திக் கங்குலும் பகலும்
கருத்தினாற் கைதொழு தெழுவேன்
பணம்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணம்படு காட்டி லாடுவ தாகி
லிவரலா தில்லையோ பிரானார். 8

7366. குழைத்துவந் தோடிக் கூடுதி நெஞ்சே
குற்றேவல் நாடொறுஞ் செய்வான்
இழைத்தநாள் கடவார் அன்பில ரேனும்
எம்பெரு மானென்றெப் போதும்
அழைத்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தாம் யாதுசொன் னாலும்
பிழைத்தது பொறுத்தொன் றீகில ராகி
லிவரலா தில்லையோ பிரானார். 9

7367. துணிப்படும் உடையுஞ் சுண்ணவெண் ணீறுந்
தோற்றமுஞ் சிந்தித்துக் காணில்
மணிப்படு கண்டனை வாயினாற் கூறி
மனத்தினாற் றொண்டனேன் நினைவேன்
பணிப்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணிப்பட ஆண்டு பணிப்பில ராகி
லிவரலா தில்லையோ பிரானார். 10

7368. ஒருமையே யல்லேன் எழுமையு மடியே
னடியவர்க் கடியனு மானேன்
உரிமையா லுரியேன் உள்ளமும் உருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்
அருமையாம் புகழார்க் கருள்செயும் பாச்சி
லாச்சிரா மத்தெம் மடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யி
லிவரலா தில்லையோ பிரானார். 11

7369. ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல
எம்பெரு மானென்றெப் போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்

தடிகளை அடிதொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்
வளவயல் நாவலா ரூரன்
பேசின் பேச்சைப் பொறுத்தில ராகி
லிவரலா தில்லையோ பிரானார். 12

திருச்சிற்றம்பலம்

•••••

## 15. திருநாட்டியத்தான்குடி : பண் – தக்கராகம்

7370. பூணா ணாவதோர் அரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணீ ராகிலும் பெருமையை யுணர்வேன்
பிறவே னாகிலும் மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தாற்
கருதீ ராகிலுங் கருதி
நாணே லும்மடி பாடுத லொழியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 1

7371. கச்சேர் பாம்பொன்று கட்டிநின் றிடுகாட்
டெல்லியி லாடலைக் கவர்வன்
துச்சே னென்மனம் புகுந்திருக் கின்றமை
சொல்லாய் திப்பிய மூர்த்தீ
வைச்சே இடர்களைக் களைந்திட வல்ல
மணியே மாணிக்க வண்ணா
நச்சே னொருவரை நானுமை யல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 2

7372. அஞ்சா தேயுமக் காட்செய வல்லேன்
யாதினுக் காசைப் படுகேன்
பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை
பங்கா எம்பர மேட்டீ
மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த
மணியே மாணிக்க வண்ணா
நஞ்சேர் கண்டா வெண்தலை ஏந்தீ
நாட்டியத் தான்குடி நம்பீ. 3

7373. கல்லே னல்லேன் நின்புக ழடிமை
கல்லா தேபல கற்றேன்
நில்லே னல்லேன் நின்வழி நின்றார்
தம்முடை நீதியை நினைய
வல்லே னல்லேன் பொன்னடி பரவ
மாட்டேன் மறுமையை நினைய
நல்லே னல்லேன் நானுமக் கல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 4

7374. மட்டார் பூங்குழல் மலைமகள் கணவனைக்
கருதா தார்தம்மைக் கருதேன்
ஒட்டீ ராகிலும் ஒட்டுவன் அடியே
னும்மடி யடைந்தவர்க் கடிமைப்
பட்டே னாகிலும் பாடுத லொழியேன்
பாடியும் நாடியும் அறிய
நட்டே னாதலால் நான்மறக் கில்லேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 5

7375. படப்பாற் றன்மையில் நான்பட்ட தெல்லாம்
படுத்தா யென்றல்லல் பறையேன்
குடப்பாச் சில்லுறை கோக்குளிர் வானே
கோனே கூற்றுதைத் தானே
மடப்பால் தயிரொடு நெய்மகிழ்ந் தாடும்
மறையோதீ மங்கை பங்கா
நடப்பீ ராகிலும் நடப்பன்நும் மடிக்கே
நாட்டியத் தான்குடி நம்பீ. 6

7376. ஐவாய் அரவினை மதியுடன் வைத்த
அழகா அமரர்கள் தலைவா
எய்வான் வைத்ததோ ரிலக்கினை யணைதர
நினைந்தே னுள்ளமுள் ளளவும்
உய்வா னெண்ணிவந் தும்மடி யடைந்தேன்
உகவீ ராகிலும் உகப்பன்
நைவா னன்றுமக் காட்பட்ட தடியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 7

7377. கலியேன் மானுட வாழ்க்கையொன் றாகக்
கருதிடிற் கண்கள்நீர் பில்கும்
பலிதேர்ந் துண்பதோர் பண்புகண் டிகழேன்

பசுவே யேறிலும் பழியேன்
வலியே யாகிலும் வணங்குத லொழியேன்
மாட்டேன் மறுமையை நினையேன்
நலியேன் ஒருவரை நானுமை யல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 8

7378. குண்டா டிச்சமண் சாக்கியப் பேய்கள்
கொண்டா ராகிலுங் கொள்ளக்
கண்டா லுங்கரு தேனெரு தேறுங்
கண்ணா நின்னல தறியேன்
தொண்டா டித்தொழு வார்தொழக் கண்டு
தொழுதே னென்வினை போக
நண்டா டும்வயல் தண்டலை வேலி
நாட்டியத் தான்குடி நம்பீ. 9

7379. கூடா மன்னரைக் கூடத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன்
திருவா ரூர னுரைத்த
பாடூ ராகிலும் பாடுமின் தொண்டீர்
பாடநும் பாவம் பற்றறுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 16. திருக்கலயநல்லூர் : பண் – தக்கராகம்

7380. குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவம் கண்டு
குறிப்பினொடு சென்றவள்தன் குணத்தினைநன் கறிந்து
விரும்புவரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்
அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட
அணிமயில்கள் நடமாடு மணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முகமலருங் கலயநல்லூர் காணே. 1

7381. செருமேவு சலந்தரனைப் பிளந்தசுட ராழி
செங்கண்மலர் புங்கயமாச் சிறந்தானுக் கருளி
இருள்மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி
இந்திரனைத் தோள்முரித்த இறையவனூர் வினவில்
பெருமேதை மறையொலியும் பேரிமுழ வொலியும்
பிள்ளையினம் துள்ளிவிளை யாட்டொலியும் பெருகக்
கருமேதி புனல்மண்டக் கயல்மண்டக் கமலம்
களிவண்டின் கணம்இரியுங் கலயநல்லூர் காணே. 2

7382. இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கம தியற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதா தையைத்தாள்
துண்டமிடு சண்டியடி யண்டர்தொழு தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனூர் வினவில்
மண்டபமுங் கோபுரமும் மாளிகைசூ ளிகையும்
மறையொலியும் விழவொலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கண் மனம்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே. 3

7383. மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தால்
மகிழ்ந்தவள்கண் புதைத்தலுமே வல்லிருளா யெல்லா
உலகுடன்றான் மூடஇரு ளோடும்வகை நெற்றி
யொற்றைக்கண் படைத்துகந்த உத்தமனூர் வினவில்
அலையடைந்த புனல்பெருகி யானைமருப் பிடறி
யகிலொடுசந் துந்திவரும் அரிசிலின்தென் கரைமேல்
கலையடைந்த கலிகடியந் தணரோமப் புகையாற்
கணமுகில்போன் றணிகிளருங் கலயநல்லூர் காணே. 4

7384. நிற்பானுங் கமலத்தி லிருப்பானும் முதலா
நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி யவர்க்காய்
வெற்பார்வில் அரவுநாண் எரிஅம்பால் விரவார்
புரமூன்றும் எரிவித்த விகிர்தனூர் வினவில்
சொற்பால பொருட்பால சுருதியொரு நான்கும்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறைதன் திறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கும் நன்கார்
கலைபயிலந் தணர்வாழுங் கலயநல்லூர் காணே. 5

7385. பெற்றிமையொன் றறியாத தக்கனது வேள்விப்
பெருந்தேவர் சிரம்தோள்பற் கரம்கண்பீ டழியச்
செற்றுமதிக் கலைசிதையத் திருவிரலால் தேய்வித்

தருள்பெருகு சிவபெருமான் சேர்தருமூர் வினவில்
தெற்றுகொடி முல்லையொடு மல்லிகைசெண் பகமுந்
திரைபொருது வருபுனல்சேர் அரிசிலின்தென் கரைமேல்
கற்றினம்நன் கரும்பின்முளை கறிகற்கக் கறவை
கமழ்கமுநீர் கவர்கழனிக் கலயநல்லூர் காணே. 6

7386. இலங்கையர்கோன் சிரம்பத்தோ டிருபதுதிண் தோளும்
இற்றலற ஒற்றைவிரல் வெற்பதன்மே லூன்றி
நிலங்கிளர்நீர் நெருப்பொடுகாற் றாகாச மாகி
நிற்பனவும் நடப்பனவாம் நின்மலனூர் வினவில்
பலங்கள்பல திரையுந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசிலின்தென் கரைமேற்
கயலுகளும் வயல்புடைசூழ் கலயநல்லூர் காணே. 7

7387. மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை வைத்தவன் மொய்த்தெழுந்த
வேலைவிடம் உண்டமணி கண்டன்விடை ஊரும்
விமலனுமை யவளோடு மேவியவூர் வினவில்
சோலைமலி குயில்கூவக் கோலமயி லாலச்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளிசொல் துதிக்கக்
காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே. 8

7388. பொரும்பலம துடையசுரன் தாருகனைப் பொருது
பொன்றுவித்த பொருளினைமுன் படைத்துகந்த புனிதன்
கரும்புவில்லின் மலர்வாளிக் காமனுடல் வேவக்
கனல்விழித்த கண்ணுதலோன் கருதுமூர் வினவில்
இரும்புனல்வெண் திரைபெருகி ஏலமில வங்கம்
இருகரையும் பொருதலைக்கு மரிசிலின்தென் கரைமேல்
கரும்பு(ன்)னைவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக்
கவின்காட்டுங் கடிபொழில்சூழ் கலயநல்லூர் காணே. 9

7389. தண்கமலப் பொய்கைபுடை சூழ்ந்தழகார் தலத்தில்
தடங்கொள்பெருங் கோயில்தனில் தக்கவகை யாலே
வண்கமலத் தயன்முன்னாள் வழிபாடு செய்ய
மகிழ்ந்தருளி யிருந்தபரன் மருவியவூர் வினவில்
வெண்கவரி கரும்பீலி வேங்கையொடு கோங்கின்
விரைமலரும் விரவுபுன லரிசிலின்தென் கரைமேல்
கண்கமுகின் பூம்பாளை மதுவாசங் கலந்த
கமழ்தென்றல் புகுந்துலவு கலயநல்லூர் காணே. 10

7390. தண்புனலும் வெண்மதியுந் தாங்கியசெஞ் சடையன்
தாமரையோன் தலைகலனாக் காமர(ம்)முன் பாடி
உண்பலிகொண் டுழல்பரமன் உறையுமூர் நிறைநீர்
ஒழுகுபுன லரிசிலின்தென் கலயநல்லூ ரதனை
நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
நாவலர்கோ னாரூரன் நாவில்நயந் துரைசெய்
பண்பயிலும் பத்துமிவை பத்திசெய்து நித்தம்
பாடவல்லார் அல்லலொடு பாவமிலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 17. திருவெண்ணெய்நல்லூருந் திருநாவலூரும்

### பண் – நட்டராகம்

7391. கோவலன் நான்முகன் வானவர் கோனுங்குற் றேவல்செய்ய
மேவலார் முப்புரம் தீயெழு வித்தவன் ஒரம்பினால்
ஏவல னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்ட
நாவல னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 1

7392. தன்மையி னாலடி யேனைத்தா மாட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்தொண்ட னென்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந் தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையி னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 2

7393. வேகங்கொண் டோடிய வெள்விடை ஏறியோர் மெல்லியலை
ஆகங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்டார்
போகங்கொண் டார்கடற் கோடியின் மோடியைப் பூண்பதாக
நாகங்கொண் டார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 3

7394. அஞ்சுங்கொண் டாடுவர் ஆவினிற் சேவினை ஆட்சிகொண்டார்
தஞ்சங்கொண் டார்அடிச் சண்டியைத் தாமென வைத்துகந்தார்
செஞ்சங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்டு
நஞ்சங்கொண் டார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 4

7395. உம்பரார் கோனைத்திண் தோள்முரித் தாருரித் தார்களிற்றைச்
செம்பொனார் தீவண்ணர் தூவண்ண நீற்றர்ஓர் ஆவணத்தால்
எம்பிரா னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்ட
நம்பிரா னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 5

7396. கோட்டங்கொண் டார்குட மூக்கிலுங் கோவலுங் கோத்திட்டையும்
வேட்டங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்டார்
ஆட்டங்கொண் டார்தில்லைச் சிற்றம் பலத்தே அருக்கனைமுன்
நாட்டங்கொண் டார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 6

7397. தாயவ ளாய்த்தந்தை யாகிச் சாதல் பிறத்தலின்றிப்
போயக லாமைத்தன் பொன்னடிக் கென்னைப் பொருந்தவைத்த
வேயவ னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை யாளுங் கொண்ட
நாயக னார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 7

7398. வாயாடி மாமறை ஓதியோர் வேதிய னாகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்ட
நாயாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 8

7399. படமாடும் பாம்பணை யானுக்கும் பாவைநல் லாள்தனக்கும்
வடமாடு மால்விடை ஏற்றுக்கும் பாகனாய் வந்தொருநாள்
இடமாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தென்னை ஆளுங்கொண்ட
நடமாடி யார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 9

7400. மிடுக்குண டென் றோடியோர் வெற்பெடுத் தான்வலி யைநெரித்தார்
அடக்கங்கொண் டாவணங் காட்டிநல் வெண்ணெயூர் ஆளுங்கொண்டார்
தடுக்கவொண் ணாததோர் வேழத்தி னையுரித் திட்டுமையை
நடுக்கங்கண் டார்க்கிட மாவது நந்திரு நாவலூரே. 10

7401. நாதனுக் கூர்நமக் கூர்நர சிங்க முனையரையன்
ஆதரித் தீசனுக் காட்செயு மூர்அணி நாவலூரென்
றோதநற் றக்கவன் தொண்டன் ஆரூரன் உரைத்ததமிழ்
காதலித் துங்கற்றுங் கேட்பவர் தம்வினை கட்டறுமே.. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 18. வேள்விக்குடியும் துருத்தியும் : பண் – நட்டராகம்

7402. மூப்பதுமில்லை பிறப்பதுமில்லை யிறப்பதில்லைச்
சேர்ப்பதுகாட்டகத்தூரினுமாகச் சிந்திக்கினல்லால்
காப்பது வேள்விக்குடிதண்துருத்தியெங்கோனரைமேல்
ஆர்ப்பதுநாகமறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே. 1

7403. காட்டக்காட்டின்னடமாடுவரியாவர்க்குங்காட்சியொண்ணார்
சுட்டவெண்ணீறணிந்தாடுவர்பாடுவர் தூயநெய்யால்
வட்டக்குண்டத்திலெரிவளர்த்தோம்பிமறைபயில்வார்
அட்டக்கொண்டுண்பதறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே.

7404. பேருமோராயிரம்பேருடையார்பெண்ணோடாணுமல்லர்
ஊருமதொற்றியூர்மற்றையூர்பெற்றவாநாமறியோம்
காருங்கருங்கடல்நஞ்சமுதுண்டுகண்டங்கறுத்தார்க்
காரம்பாம்பாவதறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே. 3

7405. ஏனக்கொம்புமிளவாமையும் பூண்டங்கோரேறுமேறிக்
கானக்காட்டிற்றொண்டர்காண்டனசொல்லியுங்காமுறவே
மானைத்தோலொன்றையுடுத்துப்புலித்தோல்பியற்குமிட்டு
யானைத்தோல் போர்ப்பதறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 4

7406. ஊட்டிக்கொண்டுண்பதோரூணிலாரூரிடுபிச்சையல்லால்
பூட்டிக்கொண்டேற்றினையேறுவரேறியோர்பூதந்தம்பால்
பாட்டிக்கொண்டுண்பவர்பாழிதொறும்பலபாம்புபற்றி
ஆட்டிக் கொண்டுண்பத்றிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 5

7407. குறவனார்தம்மகள்தம்மகனார்மணவாட்டிகொல்லை
மறவனாராயங்கோர்பன்றிப்பின்போவதுமாயங்கண்டீர்
இறைவனாராதியார்சோதியராயங்கோர்சோர்வுபடா
அறவனாராவதறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே. 6

7408. பித்தரையொத்தொருபெற்றியர்நற்றவையென்னைப்பெற்ற
முற்றவைதம்மனைதந்தைக்குந்தவ்வைக்குந்தம்பிரானார்
செத்தவர்தந்தலையிற்பலிகொள்வதேசெல்வமாகில்
அத்தவமாவதறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே. 7

7409. உம்பரானூழியானாழியானோங்கிமலருறைவான்
தம்பரமல்லவர்சிந்திப்பவர்தடுமாற்றறுப்பார்
எம்பரமல்லவரென்னெஞ்சத்துள் ளுமிருப்பதாகில்
அம்பரமாவதறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 8

7410. இந்திரனுக்குமிராவணனுக்குமருள்புரிந்தார்
மந்திரமோதுவர்மாமறைபாடுவர்மான்மறியர்
சிந்துரக்கண்ணனுநான் முகனும் முடனாய்த் தனியே
அந்தரஞ்செல்வதறிந்தோமேல்நாமிவர்க்காட்படோமே. 9

7411. கூடலர்மன்னன்குலநாவ லூர்க்கோன் நலத்தமிழைப்
பாடவல்லபரமன்னடியார்க்கடிமைவழுவா
நாடவல்லதொண்டனாரூரனாட்படுமாறுசொல்லிப்
பாடவல்லார்பரலோகத்திருப்பதுபண்டமன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 19. திருநின்றியூர் : பண் – நட்டராகம்

7412. அற்றவ னாரடி யார்தமக் காயிழை பங்கினராம்
பற்றவ னாரெம் பராபர ரென்று பலர்விரும்பும்
கொற்றவ னார்குறு காதவ ரூர்நெடு வெஞ்சரத்தால்
செற்றவ னார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. 1

7413. வாசத்தின் ஆர்மலர்க் கொன்றையுள் ளார்வடி வார்ந்தநீறு
பூசத்தி னார்புக லிந்நகர் போற்றுமெம் புண்ணியத்தார்
நேசத்தி னாலென்னை யாளுங்கொண் டார்நெடு மாகடல்சூழ்
தேசத்தி னார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. 2

7414. அங்கையின் மூவிலை வேலர் அமரர் அடிபரவச்
சங்கையை நீங்க அருளித் தடங்கடல் நஞ்சமுண்டார்
மங்கையோர் பாகம் மகிழ்ந்த விடம்வளம் மல்குபுனற்
செங்கயல் பாயும் வயல்பொலி யுந்திரு நின்றியூரே. 3

7415. ஆறுகந் தார்அங்கம் நான்மறை யாரெங்கு மாகிஅடல்
ஏறுகந் தார்இசை யேழுகந் தார்முடிக் கங்கைதன்னை
வேறுகந் தார்விரி நூலுகந் தார்பரி சாந்தமதாம்
நீறுகந் தாருறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 4

7416. வஞ்சங்கொண் டார்மனம் சேரகில் லார்நறு நெய்தயிர்பால்
அஞ்சுங்கொண் டாடிய வேட்கையி னாரதி கைப்பதியே
தஞ்சங்கொண் டார்தமக் கென்றும் இருக்கை சரணடைந்தார்
நெஞ்சங்கொண் டார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. 5

7417. ஆர்த்தவர் ஆடர வம்அரை மேற்புலி யீருரிவை
போர்த்தவ ரானையின் தோலுடல் வெம்புலால் கையகலப்
பாத்தவர் இன்னுயிர் பார்படைத் தான்சிரம் அஞ்சிலொன்றைச்
சேர்த்தவ ருக்குறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 6

7418. தலையிடை யார்பலி சென்றகந் தோறுந் திரிந்தசெல்வர்
மலையுடை யாளொரு பாகம்வைத் தார்கல்து தைந்தநன்னீர்
அலையுடை யார்சடை எட்டுஞ் சுழல அருநடம்செய்
நிலையுடை யாருறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 7

7419. எட்டுகந் தார்திசை ஏழுகந் தாரெழுத் தாறுமன்பர்
இட்டுகந் தார்மலர்ப் பூசையிச் சிக்கும் இறைவர்முன்னாள்
பட்டுகும் பாரிடைக் காலனைக் காய்ந்து பலியிரந்தூண்
சிட்டுகந் தார்க்கிட மாவது நந்திரு நின்றியூரே. 8

7420. காலமும் ஞாயிறு மாகிநின் றார்கழல் பேணவல்லார்
சீலமுஞ் செய்கையுங் கண்டுகப் பார்அடி போற்றிசைப்ப
மாலொடு நான்முக னிந்திரன் மந்திரத் தால்வணங்க
நீலநஞ் சுண்டவ ருக்கிட மாந்திரு நின்றியூரே. 9

7421. வாயார் மனத்தால் நினைக்கு மவருக் கருந்தவத்தில்
தூயார் சுடுபொடி யாடிய மேனியர் வானிலென்றும்
மேயார் விடையுகந் தேறிய வித்தகர் போந்தவர்க்குச்
சேயார் அடியார்க் கணியவ ரூர்திரு நின்றியூரே. 10

7422. சேரும் புகழ்த்தொண்டர் செய்கை யறாத்திரு நின்றியூரில்
சீருஞ் சிவகதி யாயிருந் தானைத் திருநாவலா
ரூர னுரைத்த உறுதமிழ் பத்தும்வல் லார்வினைபோய்ப்
பாரும் விசும்புந் தொழப்பர மன்னடி கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 20. திருக்கோளிலி : பண் – நட்டராகம்

7423. நீள நினைந்தடியேன் உமைநித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவையட்டித் தரப்பணியே. 1

7424. வண்டம ருங்குழலா ளுமைநங்கையோர் பங்குடையாய்
விண்டவர் தம்புரம்மூன் றெரிசெய்தவெம் வேதியனே
தெண்டிரை நீர்வயல்சூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டம தாயவனே யவையட்டித் தரப்பணியே. 2

7425. பாதியோர் பெண்ணைவைத்தாய் படருஞ்சடைக் கங்கைவைத்தாய்
மாதர்நல் லார்வருத்தம் அதுநீயும் அறிதியன்றே
கோதில் பொழில்புடைசூழ் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆதியே அற்புதனே யவையட்டித் தரப்பணியே. 3

7426. சொல்லுவ தென்னுனைநான் தொண்டைவாயுமை நங்கையைநீ
புல்கியி டத்தில்வைத்தாய்க் கொருபூசல்செய் தாருளரோ
கொல்லை வளம்புறவிற் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அல்லல் களைந்தடியேற் கவையட்டித் தரப்பணியே. 4

7427. முல்லை முறுவல்உமை யொருபங்குடை முக்கணனே
பல்லயர் வெண்தலையிற் பலிகொண்டுழல் பாசுபதா
கொல்லை வளம்புறவிற் றிருக்கோளிலி யெம்பெருமான்
அல்லல் களைந்தடியேற் கவையட்டித் தரப்பணியே. 5

7428. குரவ மருங்குழலா ளுமைநங்கையோர் பங்குடையாய்
பரவை பசிவருத்த மதுநீயு மறிதியன்றே
குரவ மரும்பொழில்சூழ் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அரவ மசைத்தவனே யவையட்டித் தரப்பணியே. 6

7429. எம்பெரு மானுனையே நினைந்தேத்துவ னெப்பொழுதும்
வம்பம ருங்குழலா ளொருபாகம் அமர்ந்தவனே
செம்பொனின் மாளிகைசூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அன்பது வாய்அடியேற் கவையட்டித் தரப்பணியே. 7

7430. அரக்கன் முடிகரங்கள் அடர்த்திட்டவெம் மாதிப்பிரான்
பரக்கும் அரவல்குலாள் பரவையவள் வாடுகின்றாள்
குரக்கினங் கள்குதிகொள் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
இரக்கம தாயடியேற் கவையட்டித் தரப்பணியே. 8

7431. பண்டைய மால்பிரமன் பறந்தும்மிடந் தும்அயர்ந்தும்
கண்டில ராயவர்கள் கழல்காண்பரி தாயபிரான்
தெண்திரை நீர்வயல்சூழ் திருக்கோளிலி யெம்பெருமான்
அண்டம தாயவனே யவையட்டித் தரப்பணியே. 9

7432. கொல்லை வளம்புறவிற் றிருக்கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திருநாவல வூரனவன்
நெல்லிட ஆட்கள்வேண்டி நினைந்தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகின் அண்டர்வானுல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 21. கச்சித்திருமேற்றளி : பண் – நட்டராகம்

7433. நொந்தா வொண்சுடரே நுனையேநி னைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமேபு குந்துநின்ற
சிந்தா யெந்தைபிரான் திருமேற்ற ளியுறையும்
எந்தா யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. 1

7434. ஆள்தான் பட்டமையா லடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திருமேற்ற ளியுறையும்
மாட்டே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 2

7435. மோறாந் தோரொருகால் நினையாதி ருந்தாலும்
வேறா வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே
சேறார் தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
ஏறே யுன்னையல்லா லினியேத்த மாட்டேனே. 3

7436. உற்றார் சுற்றமெனும் அதுவிட்டு நுன்னடைந்தேன்
எற்றா லென்குறைவென் இடரைத் துறந்தொழிந்தேன்
செற்றாய் மும்மதிலுந் திருமேற்ற ளியுறையும்
பற்றே நுன்னையல்லால் பணிந்தேத்த மாட்டேனே. 4

7437. எம்மா னெம்அ(ன்)னையென் றவரிட் டிறந்தொழிந்தார்
மெய்ம்மா லாயினதீர்த் தருள்செய்யும் மெய்ப்பொருளே
கைம்மா ஈருரியாய் கனமேற்ற ளியுறையும்
பெம்மா னுன்னையல்லால் பெரிதேத்த மாட்டேனே. 5

7438. நானே யுன்னடியே நினைந்தேன் நினைதலுமே
ஊனே ரிவ்வுடலம் புகுந்தாயென் ஒண்சுடரே
தேனே யின்னமுதே திருமேற்ற ளியுறையும்
கோனே யுன்னையல்லாற் குளிர்ந்தேத்த மாட்டேனே. 6

7439. கையார் நெஞ்சிலைநா ணதன்மேற் சரங்கோத்தே
எய்தாய் மும்மதிலும் எரியுண்ண எம்பெருமான்
செய்யார் பைங்கமலத் திருமேற்ற ளியுறையும்
ஐயா வுன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 7

7440. விரையார் கொன்றையினாய் விமலாஇனி யுன்னையல்லால்
உரையேன் நாவதனால் உடலில்லுயி ருள்ளளவும்.
திரையார் தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
அரையா வுன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 8

*****

7441. நிலையாய் நின்னடியே நினைந்தேன் நினைதலுமே
தலைவா நின்னினைப் பணித்தாய்ச லமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திருமேற்ற ளியுறையும்
மலையே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 9

7442. பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரு ரும்புறவிற் றிருமேற்ற ளிச்சிவனை
ஆரூ ரன்னடியா னடித்தொண்டனா ரூரன்சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 22. திருப்பழமண்ணிப்படிக்கரை : பண் – நட்டராகம்

7443. முன்னவ னெங்கள்பிரான் முதல்காண்பரி தாயபிரான்
சென்னியி லெங்கள் பிரான் திருநீலமி டற்றெம்பிரான்
மன்னிய வெங்கள்பிரான் மறைநான்குங்கல் லால்நிழற்கீழ்ப்
பன்னிய வெங்கள்பிரான் பழமண்ணிப் படிக்கரையே. 1

7444. அண்டம் கபாலஞ்சென்னி அடிமேல்அல ரிட்டுநல்ல
தொண்டங் கடிபரவித் தொழுதேத்திநின் றாடுமிடம்
வெண்திங்கள் வெண்மழுவன் விரையார்கதிர் மூவிலைய
பண்டங்கன் மேயவிடம் பழமண்ணிப் படிக்கரையே. 2

7445. ஆடுமின் அன்புடையீ ரடிக்காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின் தொண்டருள்ளீர் உமரோடெமர் சூழவந்து
வாடுமின் வாழ்க்கைதன்னை வருந்தாமல் திருந்தச்சென்று
பாடுமின் பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே. 3

7446. அடுதலை யேபுரிந்தா னவைஅந்தர மூஎயிலும்
கெடுதலை யேபுரிந்தான் கிளருஞ்சிலை நாணியிற்கோல்
அடுதலை யேபுரிந்தான் அரிகான்றிட்ட வெச்சில்வெள்ளைப்
படுதலை யேபுரிந்தான் பழமண்ணிப் படிக்கரையே. 4

7447. உங்கைக ளாற்கூப்பி உகந்தேத்தித் தொழுமின்தொண்டீர்
மங்கையொர் கூறுடையான் வானோர்முத லாயபிரான்
அங்கையில் வெண்மழுவன் அலையார்கதிர் மூவிலைய
பங்கய பாதனிடம் பழமண்ணிப் படிக்கரையே. 5

7448. செடிபடத் தீவிளைத்தான் சிலையார்மதில், செம்புனஞ்சேர்
கொடிபடு மூரிவெள்ளை யெருதேற்றையும் மேற்கொண்டான்
கடியவன் காலன்றன்னைக் கறுத்தான்கழற் செம்பவளப்
படியவன் பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. 6

7449. கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயிலாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவா யரக்கன்முடி பத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் பழமண்ணிப் படிக்கரையே. 7

7450. திரிவன மும்மதிலும் எரித்தானிமை யோர்பெருமான்
அரியவன் அட்டபுட்ப மவைகொண்டடி போற்றிநல்ல
கரியவன் நான்முகனும் அடியும்முடி காண்பரிய
பரியவன் பாசுபதன் பழமண்ணிப் படிக்கரையே. 8

7451. வெற்றரைக் கற்றமணும் விரையாதுவிண் டாலமு(ண்)ணும்
துற்றரைத் துற்றறுப்பான் துன்னஆடைத் தொழிலுடையீர்
பெற்றரைப் பித்தரென்று கருதேன்மின் படிக்கரையுள்
பற்றரைப் பற்றிநின்று பழிபாவங்கள் தீர்மின்களே. 9

7452. பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழமண்ணிப் படிக்கரையை
அல்லியந் தாமரைத்தார் ஆரூர னுரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டல்வல்லா ரவர்க்குந் தமர்க்குங்கிளைக்கும்
எல்லியும் நண்பகலும் இடர்கூருத லில்லையன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 23. திருக்கழிப்பாலை : பண் – நட்டராகம்

7453. செடியேன் தீவினையில் தடுமாற்றங் கண்டாலும்
அடியான் ஆவவெனா தொழிதல் தகவாமே
முடிமேல் மாமதியும் அரவுமு டன்துயிலும்
வடிவே தாமுடையார் மகிழுங்கழிப் பாலையதே. 1

7454. எங்கே னுமிருந்துன் அடியேன்உனை நினைந்தால்
அங்கே வந்தென்னோடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளுங்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே 2

7455. ஒறுத்தாய் நின்னருளில் அடியேன் பிழைத்தனகள்
பொறுத்தாய் எத்தனையும் நாயேனைப் பொருட்படுத்திச்

செறுத்தாய் வேலைவிடம் மறியாம லுண்டுகண்டம்
கறுத்தாய் தண்கழனிக் கழிப்பாலை மேயானே. 3

7456. சுரும்பார் விண்டமல ரவைதூவித் தூங்குகண்ணீர்
அரும்பா நிற்குமனத் தடியாரொடும் அன்புசெய்வன்
விரும்பே னுன்னையல்லா லொருதெய்வம் என்மனத்தால்
கரும்பா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. 4

7457. ஒழிப்பாய் என்வினையை உகப்பாய் முனிந்தருளிச்
தெழிப்பாய் மோதுவிப்பாய் விலையாவ ணமுடையாய்
கழிப்பால் கண்டடங்கச் சுழியேந்து மாமாறுகிற்
கழிப்பா லைமருவுங் கனலேந்து கையானே. 5

7458. ஆர்த்தாய் ஆடரவை அரையார் புலிஅதள்மேற்
போர்த்தாய் யானையின்தோ லுரிவை புலால்நாறக்
காத்தாய் தொண்டுசெய்வார் வினைக ளவைபோகப்
பார்த்தா னுக்கிடமாம் பழியில்கழிப் பாலையதே. 6

7459. பருத்தாள் வன்பகட்டைப் படமாகமுன் பற்றிஅதள்
உரித்தாய் யானையின்தோல் உலகந்தொழும் உத்தமனே
எரித்தாய் முப்புரமும் இமையோர்கள் இடர்கடியுங்
கருத்தா தண்கழனிக் கழிப்பாலை மேயானே. 7

7460. படைத்தாய் ஞாலமெலாம் படர்புன்சடை எம்பரமா
உடைத்தாய் வேள்விதனை உமையாளையோர் கூறுடையாய்
அடர்த்தாய் வல்லரக்கன் தலைபத்தொடு தோள்நெரியக்
கடற்சா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. 8

7461. பொய்யா நாவதனாற் புகழ்வார்கள் மனத்ினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கேயொத்த தேவர்பிரான்
செய்யா னுங்கரிய நிறத்தானுந் தெரிவரியான்
மையார் கண்ணியொடு மகிழ்வான்கழிப் பாலையதே. 9

7462. பழிசே ரில்புகழான் பரமன் பரமேட்டி
கழியார் செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவான் நாவலர்கோன் ஆரூரன் உரைத்ததமிழ்
வழுவா மாலைவல்லார் வானோருல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 24. திருமழபாடி : பண் – நட்டராகம்

7463. பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே. 1

7464. கிளார் கோவணமும் திருநீறுமெய் பூசியுன்றன்
தாளே வந்தடைந்தேன் தலைவாவெனை ஏன்றுகொள்நீ
வாளார் கண்ணிபங்கா மழபாடியுள் மாணிக்கமே
கேளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 2

7465. எம்மா னெம்அ(ன்)னையென் றனக்கெள்தனைச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 3

7466. பண்டே நின்னடியேன் அடியாரடி யார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன் தொடராமைத் துரிசறுத்தேன்
வண்டார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்டா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 4

7467. கண்ணாய் ஏழுலகும் கருத்தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 5

7468. நாளார் வந்தணுகி நலியாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடியேனையும் ஏன்றுகொள்நீ
மாளா நாளருளும் மழபாடியுள் மாணிக்கமே
ஆளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 6

7469. சந்தா ருங்குழையாய் சடைமேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடையேறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 7

7470. வெய்யா விரிசுடரோன் மிகுதேவர்க ணங்களெல்லாம்
செய்ய மலர்களிட மிகுசெம்மையுள் நின்றவனே
மையார் பூம்பொழில்சூழ் மழபாடியுள் மாணிக்கமே
ஐயா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 8

7471. நெறியே நின்மலனே நெடுமாலயன் போற்றிசெய்யும்
குறியே நீர்மையனே கொடியேரிடை யாள்தலைவா
மறிசே ரங்கையனே மழபாடியுள் மாணிக்கமே
அறிவே நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 9

7472. ஏரார் முப்புரமும் எரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழபாடியுள் மேயவனைச்
சீரார் நாவலர்கோ னாரூர னுரைத்த தமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 25. திருமுதுகுன்றம் : பண் – நட்டராகம்

7473. பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
முன்செய்த மூஎயிலும் எரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவள் தன்முகப்பே
என்செய்த வாறடிகேள் அடியேன் இட்டளங்கெடவே. 1

7474. உம்பரும் வானவரும் உடனேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திகழும்முது குன்றமர்ந்தீர்
வம்ப ருங்குழலாள் பரவையிவள் வாடுகின்றாள்
எம்பெரு மானருளீர் அடியேனிட் டளங்கெடவே. 2

7475. பத்தா பத்தர்களுக் கருள்செய்யும் பரம்பரனே
முத்தா முக்கணனே முதுகுன்றம் அமர்ந்தவனே
மைத்தா ருந்தடங்கண் பரவையிவள் வாடாமே
அத்தா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. 3

7476. மங்கையோர் கூறமர்ந்தீர் மறைநான்கும் விரித்துகந்தீர்
திங்கள் சடைக்கணிந்தீர் திகழும்முது குன்றமர்ந்தீர்
கொங்கைநல் லாள்பரவை குணங்கொண்டிருந்தாள்முகப்பே
அங்கண னேயருளாய் அடியேனிட் டளங்கெடவே. 4

7477. மையா ரும்மிடற்றாய் மருவார்புரம் மூன்றெரித்த
செய்யார் மேனியனே திகழும்முது குன்றமர்வாய்
பையா ரும்அரவேர் அல்குலாளிவள் வாடுகின்றாள்
ஐயா தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. 5

7478. நெடியோன் நான்முகனும் இரவியொடும் இந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முதுகுன்றம் அமர்ந்தவனே
படியா ரும்மியலாள் பரவையிவள் தன்முகப்பே
அடிகேள் தந்தருளீ ரடியேனிட் டளங்கெடவே. 6

7479. கொந்தண வும்பொழில்சூழ் குளிர்மாமதில் மாளிகைமேல்
வந்தண வும்மதிசேர் சடைமாமுது குன்றுடையாய்
பந்தண வும்விரலாள் பரவையிவள் தன்முகப்பே
அந்தண னேஅருளா யடியேனிட் டளங்கெடவே. 7

7480. பரசா ருங்கரவா பதினென்கண முஞ்சூழ
முரசார் வந்ததிர முதுகுன்றம் அமர்ந்தவனே
விரைசே ருங்குழலாள் பரவையிவள் தன்முகப்பே
அரசே தந்தருளா யடியேனிட் டளங்கெடவே. 8

7481. ஏத்தா திருந்தறியேன் இமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கெல்லாம் முதுகுன்றம் அமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள் பரவையிவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேனிட் டளங்கெடவே. 9

7482. பிறையா ருஞ்சடையெம் பெருமானரு ளாயென்று
முறையால் வந்தமரர் வணங்கும்முது குன்றர்தம்மை
மறையார் தங்குரிசில் வயல்நாவலா ரூரன்சொன்ன
இறையார் பாடல்வல்லார்க் கெளிதாம்சிவ லோகமதே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 26. திருக்காளத்தி : பண் – நட்டராகம்

7483. செண்டா டும்விடையாய் சிவனேயென் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலாள் உமைபாகம் மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கணநாதனெங் காளத்தியாய்
அண்டா உன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. 1

7484. இமையோர் நாயகனே இறைவாஎன் னிடர்த்துணையே
கமையார் கருணையினாய் கருமாமுகில் போல்மிடற்றாய்
உமையோர் கூறுடையா யுருவேதிருக் காளத்தியுள்
அமைவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. 2

7485. படையார் வெண்மழுவா பகலோன்பல் லுகுத்தவனே
விடையார் வேதியனே விளங்குங்குழைக் காதுடையாய்
கடையார் மாளிகைசூழ் கணநாதனெங் காளத்தியாய்
உடையாய் உன்னையல்லா லுகந்தேத்த மாட்டேனே. 3

7486. மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குருவேயுன்குற் றேவல்செய்வேன்
நெறியே நின்றடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. 4

7487. செஞ்சே லன்னகண்ணார் திறத்தேகிடந் துற்றலறி
நஞ்சேன் நான்அடியேன் நலமொன்றறி யாமையினால்
துஞ்சேன் நானொருகால் தொழுதேன்திருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. 5

7488. பொய்யவ னாயடியேன் புகவேநெறி யொன்றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிடரானவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்குந்திருக் காளத்தியென்
ஐயநுன் றன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே. 6

7489. கடியேன் காதன்மையாற் கழற்போதறி யாதவென்னுள்
குடியாக் கோயில் கொண்ட குளிர்வார்சடை யெங்குழகா
முடியால் வானவர்கள் முயங்குந்திருக் காளத்தியாய்
அடியே னுன்னையல்லா லறியேன்மற் றொருவரையே. 7

7490. நீறார் மேனியனே நிமலாநினை யன்றிமற்றுக்
கூறேன் நாவதனால் கொழுந்தேயென் குணக்கடலே
பாறார் வெண்டலையிற் பலிகொண்டுழல் காளத்தியாய்
ஏறே யுன்னையல்லா லினிதேத்த மாட்டேனே. 8

7491. தளிர்போல் மெல்லடியாள் தனைஆகத் தமர்ந்தருளி
எளிவாய் வந்தென்னுள்ளம் புகுதவல்ல எம்பெருமான்
களியார் வண்டறையுந் திருக்காளத்தி யுள்ளிருந்த
ஒளியே யுன்னையல்லா லினியொன்றும் உணரேனே. 9

7492. காரா ரும்பொழில்சூழ் கணநாதனெங் காளத்தியுள்
ஆரா இன்னமுதை அணிநாவலா ரூரன்சொன்ன
சீரூர் செந்தமிழ்கள் செப்புவார்வினை யாயினபோய்ப்
பேரா விண்ணுலகம் பெறுவார்பிழைப் பொன்றிலரே. 10.

திருச்சிற்றம்பலம்

•••••

## 27. திருக்கற்குடி : பண் – நட்டராகம்

7493. விடையா ருங்கொடியாய் வெறியார்மலர்க் கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பரமாய பரம்பரனே
கடியார் பூம்பொழிசூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அடிகே ளெம்பெருமான் அடியேனையும் அஞ்சலென்னே. 1

7494. மறையோர் வானவரும் தொழுதேத்தி வணங்கநின்ற
இறைவா எம்பெருமான் எனக்கின்னமு தாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அறவா அங்கணனே அடியேனையும் அஞ்சலென்னே. 2

7495. சிலையால் முப்புரங்கள் பொடியாகச் சிதைத்தவனே
மலைமேல் மாமருந்தே மடமாதிடங் கொண்டவனே
கலைசேர் கையினனே திருக்கற்குடி மன்னிநின்ற
அலைசேர் செஞ்சடையா யடியேனையு மஞ்சலென்னே. 3

7496. செய்யார் மேனியனே திருநீல மிடற்றினனே
மையார் கண்ணிபங்கா மதயானை யுரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக்கற்குடி மன்னிநின்ற
ஐயா எம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. 4

7497. சந்தார் வெண்குழையாய் சரிகோவண ஆடையனே
பந்தா ரும்விரலா ளொருபாகம் அமர்ந்தவனே
கந்தார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
எந்தா யெம்பெருமா னடியேனையும் ஏன்றுகொள்ளே. 5

7498. அரையார் கீளொடுகோ வணமும்அர வும்அசைத்து
விரையார் கொன்றையுடன் விளங்கும்பிறை மேலுடையாய்
கரையா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அரையா எம்பெருமா னடியேனையு மஞ்சலென்னே. 6

7499. பாரோர் விண்ணவரும் பரவிப்பணிந் தேத்தநின்ற
சீரார் மேனியனே திகழ்நீல மிடற்றினனே
காரார் பூம்பொழில்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
ஆரா இன்னமுதே அடியேனையு மஞ்சலென்னே. 7

7500. நிலனே நீர்வளிதீ நெடுவானக மாகிநின்ற
புலனே புண்டரிகத் தயன்மாலவன் போற்றிசெய்யும்
கனலே கற்பகமே திருக்கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே யடியேனையு மஞ்சலென்னே. 8

7501. வருங்கா லன்னுயிரை மடியத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்தனக்காய்ப் பிரிவித்த பெருந்தகையே
கரும்பா ரும்வயல்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
விரும்பா எம்பெருமா னடியேனையும் வேண்டுதியே. 9

7502. அலையார் தண்புனல்சூழ்ந் தழகாகி விழவமரும்
கலையார் மாதவர்சேர் திருக்கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாணுதலாள் நல்லசிங்கடி யப்பனுரை
விலையார் மாலைவல்லார் வியன்மூவுல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 28. திருக்கடவூர் : பண் – நட்டராகம்

7503. பொடியார் மேனியனே புரிநூலொரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர்கங்கையின் மங்கையொடுங்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகே ளென்னமுதே எனக்கார்துணை நீயலதே. 1

7504. பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறையின்பொரு ளானவனே
கறையா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. 2

7505. அன்றா லின்நிழற்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலனுயிர் கொடுத்தாய்மறை யோனுக்குமான்
கன்றா ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமா னெனக்கார்துணை நீயலதே. 3

7506. போரா ருங்கரியின் உரிபோர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையா ளொருபாகம் மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கடவூர்தனுள் வீரட்டானத்(து)
ஆரா வென்னமுதே எனக்கார்துணை நீயலதே. 4

7507. மையார் கண்டத்தினாய் மதமாவுரி போர்த்தவனே
பொய்யா தென்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்
கையா ராடரவா கடவூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா என்னமுதே எனக்கார் துணை நீயலதே. 5

7508. மண்நீர் தீவெளிகால் வருபூதங்க ளாகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணா ருண்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா என்னமுதே எனக்கார்துணை நீயலதே. 6

7509. எரியார் புன்சடைமே லிளநாகம் அணிந்தவனே
நரியா ருஞ்சுடலை நகுவெண்தலை கொண்டவனே
கரியார் ஈருரியாய் கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அரியாய் என்னமுதே எனக்கார்துணை நீயலதே. 7

7510. வேறா வுன்னடியேன் விளங்குங்குழைக் காதுடையாய்
தேறேன் உன்னையல்லால் சிவனேயென் செழுஞ்சுடரே
காறார் வெண்மருப்பா கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஆறார் செஞ்சடையா யெனக்கார்துணை நீயலதே. 8

7511. அயனோ டன்றரியும் அடியும்முடி காண்பரிய
பயனே எம்பரனே பரமாய பரஞ்சுடரே
கயமா ருஞ்சடையாய் கடவூர்த்திரு வீரட்டத்துள்
அயனே என்னமுதே யெனக்கார்துணை நீயலதே. 9

7512. காரா ரும்பொழில்சூழ் கடவூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணையாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்னடியா னடித்தொண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 29. திருக்குருகாவூர் : பண் – நட்டராகம்

7513. இத்தனை யாம்ஆற்றை அறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 1

7514. ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
வாவியில் கயல்பாயக் குளத்திடை மடைதோறுங்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 2

7515. பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக் குழல்வானே
காடுநல் விடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.. 3

7516. வெப்பொடு பிணியெல்லாந் தவிர்த்தெனை ஆட்கொண்டாய்
ஒப்புடை யொளிநீலம் ஓங்கிய மலர்பொய்கை
அப்படி யழகாய அணிநடை மடவன்னம்
மெய்ப்படு குருகாவூர் வெள்ளடை. நீயன்றே. 4

7517. வரும்பழி வாராமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச் சுண்ணவெண் நீற்றானே
அரும்புடை மலர்ப்பொய்கை அல்லியும் மல்லிகையும்
விரும்பிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 5

7518. பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுவிருட் சுடரொப்பாய்
மண்ணிடை யடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 6

7519. போந்தனை தரியாமே நமன்தமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலும் நுன்னல தறியேன்நான்
சாந்தனை வருமேலுந் தவிர்த்தென்னை யாட்கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 7

7520. மலக்கில்நின் அடியார்கள் மனத்திடை மால்தீர்ப்பாய்
சலச்சலம் மிடுக்குடைய தருமனார் தமரென்னைக்
கலக்குவான் வந்தாலுங் கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 8

7521. படுவிப்பாய் உனக்கேயாட் பலரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடுபொன் தோலுடுத் துழல்வானே
கெடுவிப்பாய் அல்லாதார் கேடிலாப் பொன்னடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 9

7522. வளங்கனி பொழில்மல்கு வயலணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானை
இளங்கிளை ஆரூரன் வனப்பகை யவளப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 30. திருக்கருப்பறியலூர் : பண் – நட்டராகம்

7523. சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில்
வைத்துகந்து திறம்பா வண்ணம்
கைம்மாவி னுரிவைபோர்த் துமைவெருவக்
கண்டானைக் கருப்ப றியலூர்க்
கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட
மயிலாடுங் கொகுடிக் கோயில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 1

7524. நீற்றாரும் மேனியராய் நினைவார்தம்
உள்ளத்தே நிறைந்து தோன்றும்
காற்றானைத் தீயானைக் கதிரானை
மதியானைக் கருப்ப றியலூர்க்
கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக் கோயில்
ஏற்றானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 2

7525. முட்டாமே நாடோறும் நீர்மூழ்கிப்
பூப்பறித்து மூன்று போதும்
கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்தும்
அந்தணர்தங் கருப்ப றியலூர்க்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்
குழகனைக் கொகுடிக் கோயில்
எட்டான மூர்த்தியை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 3

7526. விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி
வினைபோக வேலி தோறும்
கருந்தாள வாழைமேற் செங்கனிகள்
தேன்சொரியுங் கருப்ப றியாலூர்க்
குருந்தாய முள்ளெயிற்றுக் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக் கோயில்
இருந்தானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 4

7527. பொடியேறு திருமேனிப் பெருமானைப்
பொங்கரவக் கச்சை யானைக்
கடிநாறு பூம்பொய்கைக் கயல்வாளை

குதிகொள்ளும் கருப்ப றியலூர்க்
கொடியேறி வண்டினமுந் தண்தேனும்
பண்செய்யுங் கொகுடிக் கோயில்
அடியேறு கழலானை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 5

7528. பொய்யாத வாய்மையாற் பொடிபூசிப்
போற்றிசைத்துப் பூசை செய்து
கையினா லெரியோம்பி மறைவளர்க்கும்
அந்தணர்தங் கருப்ப றியலூர்க்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ
மயிலாலுங் கொகுடிக் கோயில்
ஐயனையென் மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 6

7529. செடிகொள்நோய் உள்ளனவுந் தீவினையுந்
தீர்ந்தொழியச் சிந்தை செய்மின்
கடிகொள்பூந் தடம்மண்டிக் கருமேதி
கண்படுக்குங் கருப்ப றியலூர்க்
கொடிகொள்பூ நுண்ணிடையாள் கோல்வளையா
ளவளோடுங் கொகுடிக் கோயில்
அடிகளையென் மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 7

7530. பறையாத வல்வினைகள் பறைந்தொழியப்
பன்னாளும் பாடி யாடிக்
கறையார்ந்த கண்டத்தன் எண்தோளன்
முக்கண்ணன் கருப்ப றியலூர்க்
குறையாத மறைநாவர் குற்றேவ
லொழியாத கொகுடிக் கோயில்
உறைவானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 8

7531. சங்கேந்து கையானுந் தாமரையின்
மேலானும் தன்மை காணாக்
கங்கார்ந்த வார்சடைக ளுடையானை
விடையானைக் கருப்ப றியலூர்க்
கொங்கார்ந்த பொழிற்சோலை சூழ்கனிகள்
பலஉதிர்க்குங் கொகுடிக் கோயில்
எங்கோனை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 9

7532. பண்டாழின் இசைமுரலப் பன்னாளும்
பாவித்துப் பாடி யாடிக்
கண்டார்தங் கண்குளிருங் களிக்கமுகம்
பூஞ்சோலைக் கருப்ப றியலூர்க்
குண்டாடுஞ் சமணருஞ் சாக்கியரும்
புறங்கூறுங் கொகுடிக் கோயில்
எண்டோளெம் பெருமானை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 10

7533. கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம்
இடர்தீர்க்குங் கருப்ப றியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கும் மட்டொழுகும்
பூஞ்சோலைக் கொகுடிக் கோயில்
இலைமலிந்த மழுவானை மனத்தினால்
அன்புசெய் தின்ப மெய்தி
மலைமலிந்த தோளூரன் வனப்பகையப்
பன்னுரைத்த வண்த மிழ்களே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 31. திரு இடையாற்றுத்தொகை : பண் – கொல்லி

7534. முந்தையூர் முதுகுன்றம் குரங்கணில் முட்டம்
சிந்தையூர் நன்றுசென் றடைவான் திருவாரூர்
பந்தையூர் பழையாறு பழனம் பைஞ்ஞீலி
எந்தையூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 1

7535. சுற்றுமூர் சுழியல்திருச் சோபுரந் தொண்டர்
ஒற்றுமூ ரொற்றியூர் திருவூற லொழியாப்
பெற்றமேறி பெண்பாதி யிடம்பெண்ணைத் தெண்ணீர்
எற்றுமூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 2

7536. கடங்களூர் திருக்காரிக் கரைகயி லாயம்
விடங்களூர் திருவெண்ணி அண்ணாமலை வெய்ய
படங்களூர் கின்றபாம் பரையான் பரஞ்சோதி
இடங்கொள்ஊர் எய்தமான் இடையா றிடைமருதே. 3

7537. கச்சையூர் காவங் கழுக்குன்றங் காரோணம்
பிச்சையூர் திரிவான் கடவூர் வடபேறூர்

கச்சியூர் கச்சி சிக்கல்நெய்த் தான(ம்)மிழலை
இச்சையூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 4

7538. நிறையனூர் நின்றியூர் கொடுங்குன்றம் அமர்ந்த
பிறையனூர் பெருமூர் பெரும்பற்றப் புலியூர்
மறையனூர் மறைக்காடு வலஞ்சுழி வாய்த்த
இறைவனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 5

7539. திங்களூர் திருவாதிரை யான்பட் டினமூர்
நங்களூர் நறையூர் நனிநாலிசை நாலூர்
தங்களூர் தமிழா னென்றுபா விக்கவல்ல
எங்களூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 6

7540. கருக்கநஞ் சமுதுண்ட கல்லாலன் கொல்லேற்றன்
தருக் கருக் கனைச்செற் றுகந்தான்தன் முடிமேல்
எருக்கநாண் மலரிண்டை யு(ம்)மத்த முஞ்சூடி
இருக்குமூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 7

7541. தேசனூர் வினைதேய நின்றான் திருஆக்கூர்
பாசனூர் பரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் நனிபள்ளி நள்ளாற்றை யமர்ந்த
ஈசனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 8

7542. பேறனூர் பிறைச்சென் னியினான் பெருவேளூர்
தேறனூர் திருமா மகள்கோன் திருமாலோர்
கூறனூர் குரங்காடு துறைதிருக் கோவல்
ஏறனூ ரெய்தமான் இடையா றிடைமருதே. 9

7543. ஊறுவா யினநாடிய வன்தொண்ட னூரன்
தேறுவார் சிந்தைதே றுமிடம்செங் கண்வெள்ளே(று)
ஏறுவா ரெய்தமான் இடையா றிடைமருதைக்
கூறுவார் வினையெவ் விடமெய் குளிர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 32. திருக்கோடிக்குழகர் : பண் – கொல்லி

7544. கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதானய லேயிருந் தாற்குற்ற மாமோ
கொடியேன் கண்கள்கண் டனகோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார் துணையாக இருந்தீரே. 1

7545. முன்தான் கடல்நஞ்ச முண்ட அதனாலோ
பின்தான் பரவைக் குபகாரஞ் செய்தாயோ
குன்றாப் பொழிசூழ் தருகோடிக் குழகா
என்தான் தனியே இருந்தாய் எம்பிரானே. 2

7546. மத்தம்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
பத்தர்பலர் பாட இருந்த பரமா
கொத்தார்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
எத்தால்தனி யேஇருந் தாயெம் பிரானே. 3

7547. காடேல்மிக வாலிது காரிகை அஞ்சக்
கூடிப்பொந்தி லாந்தைகள் கூகை குழற
வேடித்தொண்டர் சாலவுந் தீயர் சழக்கர்
கோடிக்குழ காஇடங் கோயில் கொண்டாயே. 4

7548. மையார் தடங்கண்ணி பங்காகங் கையாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிட மில்லை
கையார் வளைக்காடு களோடு முடனாய்க்
கொய்யார் பொழிற்கோடி யேகோயில் கொண்டாயே. 5

7549. அரவேரல்கு லாளை யோர்பாகம் அமர்ந்து
மரவங்கமழ் மாமறைக் காடதன் தென்பால்
குரவம்பொழில் சூழ்தரு கோடிக் குழகா
இரவேதுணை யாயிருந் தாயெம் பிரானே. 6

7550. பறையுங் குழலும் ஒலிபாட லியம்ப
அறையுங் கழலார்க்க நின்றாடும் அமுதே
குறையாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
இறைவாதனி யேயிருந் தாயெம் பிரானே. 7

7551. ஒன்றியூரென்ற வூனத்தி னாலது தானோ
அற்றப்பட ஆரூர தென் றகன் றாயோ
முற்றாமதி சூடிய கோடிக் குழகா
எற்றால்தனி யேயிருந் தாயெம் பிரானே. 8

7552. நெடியானொடு நான்முக னும்அறி வொண்ணாப்
படியான்பலி கொள்ளு மிடங்குடி யில்லை
கொடியார்பலர் வேடர்கள் வாழுங் கரைமேல்
அடிகேள்அன்ப தாயிடங் கோயில்கொண் டாயே. 9

7553. பாரூர்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
ஏரார்பொழில் சூழ்தரு கோடிக் குழகை
ஆரூர னுரைத்தன பத்திவை வல்லார்
சீரார்சிவ லோகத் திருப்பவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 33. நமக்கடிகளாகிய அடிகள் : பண் – கொல்லி

7554. பாறுதாங்கிய காடரோபடு தலைய்ரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட் டிள
ஏறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோவிளங் கும்பிறை
ஆறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய அடிகளே. 1

7555. இட்டிதாகவந் துரைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
கட்டிவாழ்வது நாகமோசடை மேலு(ம்)நாறுக ரந்தையோ
பட்டிஏறுகந் தேறரோபடு வெண்தலைப்பலி கொண் டுவந்
தட்டியாளவுங் கிற்பரோநமக் கடிகளாகிய வடிகளே. 2

7556. ஒன்றிநீர்கள்வந் துறைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
குன்றிபோல்வதோ ருருவரோகுறிப் பாகிநீறுகொண் டணிவரோ
இன்றியேயில ராவரோவன்றி யுடையராயில ராவரோ
அன்றியேமிக அறவரோநமக் கடிகளாகிய வடிகளே. 3

7557. தேனையாடுமுக் கண்ணரோமிகச் செய்யரோவெள்ளை நீற்றரோ
பால்நெய்ஆடலும் பயில்வரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
மானைமேவிய கண்ணினாள்மலை மங்கைநங்கையை அஞ்சவோர்
ஆனையீருரி போர்ப்பரோநமக் கடிகளாகிய வடிகளே. 4

7558. கோணல்மாமதி சூடரோடுகொடு கொட்டிகாலர் கழலரோ
வீணைதானவர் கருவியோவிடை யேறுவேதமு தல்வரோ
நாணதாகவோர் நாகங்கொண்டரைக் கார்ப்பரோநல மார்தர
ஆணையாகநம் மடிகளோநமக் கடிகளாகிய வடிகளே. 5

7559. வந்துசொல்லுமின் மூடனேனுக்கு வல்லவாநினைந் தேத்துவீர்
வந்தசாயினை யறிவரோதம்மை வாழ்த்தினார்கட்கு நல்லரோ
புந்தியாலுரை கொள்வரோஅன்றிப் பொய்யில் மெய்யுரைத் தாள்வரோ
அன்றியேமிக அறவரோநமக் கடிகளாகிய வடிகளே. 6

7560. மெய்யென்சொல்லுமின் நமரங்காளுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
கையிற்சூலம துடையரோகரி காடரோகறைக் கண்டரோ
வெய்யபாம்பரை ஆர்ப்பரோவிடை யேறரோகடை தோறுஞ்சென்(று)
ஐயங்கொள்ளுமவ் வடிகளோநமக் கடிகளாகிய வடிகளே. 7

7561. நீடுவாழ்பதி யுடையரோஅயன் நெடியமாலுக்கும் நெடியரோ
பாடுவாரையும் உடையரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
காடுதானரங் காகவேகைக வெட்டினோ டில யம்பட
ஆடுவாரெனப் படுவரோநமக் கடிகளாகிய வடிகளே. 8

7562. நமணநந்தியுங் கருமவீரனுந் தருமசேனனும் என்றிவர்
குமணமாமலைக் குன்றுபோல்நின்று தங்கள்கூறையொன் றின்றியே
ஞமணஞாஞண ஞாணஞோணமென் றோதியாரையும் நாணிலா
அமணராற்பழிப் புடையரோநமக் கடிகளாகிய வடிகளே. 9

7563. படிசெய்நீர்மையிற் பத்தர்காள்பணிந் தேத்தினேன்பணி யீரருள்
வடிவிலான்திரு நாவலூரன் வனப்பகையப்பன் வன்தொண்டன்
செடியனாகிலுந் தீயனாகிலுந் தம்மையேமனஞ் சிந்திக்கும்
அடியனூரனை யாள்வரோநமக் கடிகளாகிய வடிகளே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 34. திருப்புகலூர் : பண் – கொல்லி

7564. தம்மையேபுகழ்ந் திச்சைபேசினுஞ்
சார்வினுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதேயெந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதரும் சோருங்கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம்ஆள்வதற்(கு)
யாதும்ஐயுற வில்லையே. 1

7565. மிடுக்கிலாதானை வீமனேவிறல்
விசயனேவில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியேயென்று
கூறினுங்கொடுப் பாரிலை
பொடிக்கொள்மேனியெம் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்

அடுக்குமேல்அம ருலகம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 2

7566. காணியேற்பெரி துடையனேகற்று
நல்லனேசுற்றம் நன்கிளை
பேணியேவிருந் தோம்புமேயென்று
பேசினுங்கொடுப் பாரிலை
பூணிபூண்டுழப் புட்சிலம்புந்தண்
புகலூர்பாடுமின் புலவீர்கள்
ஆணியாய்அம ருலகம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 3

7567. நரைகள்போந்துமெய் தளர்ந்துமூத்துடல்
நடுங்கிநிற்குமிக் கிழவனை
வரைகள்போல்திரள் தோளனேயென்று
வாழ்த்தினுங்கொடுப் பாரிலை
புரைவெள்ளேறுடைப் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அரையனாயம ருலகம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 4

7568. வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப்
பாவியைவழக் கில்லியைப்
பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று
பாடினுங்கொடுப் பாரிலை
பொன்செய்செஞ்சடைப் புண்ணியன்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
நெஞ்சில்நோயறுத் துஞ்சுபோவதற்
கியாதுமையுற வில்லையே. 5

7569. நலமிலாதானை நல்லனேயென்றும்
நரைத்தமாந்தரை யிளையனே
குலமிலாதானைக் குலவனேயென்று
கூறினுங்கொடுப் பாரிலை
புலமெலாம்வெறி கமழும்பூம்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அலமரா தமருலகம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 6

7570. நோயனைத்தடந் தோளனேயென்றும்
நொய்யமாந்தரை விழுமிய
தாயன்றோபுல வோர்க்கெலாமென்று
சாற்றினுங் கொடுப் பாரிலை
போயுழன்றுகண் குழியாதேயெந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள்
ஆயமின்றிபோய் அண்டம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 7

7571. எள்விழுந்திடம் பார்க்குமாகிலும்
ஈக்குமீகில னாகிலும்
வள்ளலேயெங்கள் மைந்தனேயென்று
வாழ்த்தினுங்கொடுப் பாரிலை
புள்ளெலாஞ்சென்று சேரும்பூம்புக
லூரைப்பாடுமின் புலவீர்கள்
அள்ளற்பட்டழுந் தாதுபோவதற்
கியாதுமையுற வில்லையே. 8

7572. கற்றிலாதானைக் கற்றுநல்லனே
காமதேவனை யொக்குமே
முற்றிலாதானை முற்றனேயென்று
மொழியினுங்கொடுப் பாரிலை
பொத்திலாந்தைகள் பாட்டறாப்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
அத்தனாயம ருலகமாள்வதற்
கியாதுமையுற வில்லையே. 9

7573. தையலாருக்கோர் காமனேசால
நலவழகுடை யையனே
கையுலாவிய வேலனேயென்று
கழறினுங்கொடுப் பாரிலை
பொய்கைவாவியின் மேதிபாய்புக
லூரைப்பாடுமின் புலவீர்காள்
ஐயனாரம ருலகம்ஆள்வதற்
கியாதுமையுற வில்லையே. 10

7574. செறுவினிற்செழுங் கமலமோங்குதென்
புகலூர்மேவிய செல்வனை
நறவம்பூம்பொழில் நாவலூரன்

வனப்பகையப்பன் சடையன்றன்
சிறுவன்வன்றொண்ட னூரன்பாடிய
பாடல்பத்திவை வல்லவர்
அறவனாரடி சென்றுசேர்வதற்
கியாதுமையுற வில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 35. திருப்புறம்பயம் : பண் – கொல்லி

7575. அங்கமோதியோர் ஆறைமேற்றளி
நின்றும்போந்துவந் தின்னம்பர்த்
தங்கினோமையும் இன்னதென்றிலர்
ஈசனாரெழு நெஞ்சமே
கங்குலேமங்கள் கொண்டுதேவர்க
ளேத்திவானவர் தாந்தொழும்
பொங்குமால்விடை யேறிசெல்வப்
புறம்பயந்தொழப் போதுமே. 1

7576. பதியுஞ்சுற்றமும் பெற்றமக்களும்
பண்டையரல்லர் பெண்டிரும்
நிதியிலிம்மனை வாழும்வாழ்க்கையும்
நினைப்பொழிமட நெஞ்சமே
மதியஞ்சேர்சடைக் கங்கையானிடம்
மகிழும்மல்லிகை செண்பகம்
புதியபூமலர்ந் தெல்லிநாறும்
புறம்பயந்தொழப் போதுமே. 2

7577. புறம்திரைந்து நரம்பெழுந்து
நரைத்துநீயுரை யாற்றளர்ந்
தறம்புரிந்து நினைப்பதாண்மை
யரிதுகாண்இஃ தறிதியேல்
திறம்பியதெழு நெஞ்சமேசிறு
காலைநாமுறு வாணியம்
புறம்பயத்துறை பூதநாதன்
புறம்பயந்தொழப் போதுமே. 3

7578. குற்றொருவ்வரைக் கூறைக்கொண்டு
கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைப் செய்ததீமைகள்
இம்மையேவரும் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற
வாதெழுமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி
புறம்பயந்தொழப் போதுமே. 4

7579. கள்ளிநீசெய்த தீமையுள்ளன
பாவமும்பறை யும்படி
தெள்ளிதாவெழு நெஞ்சமேசெங்கண்
சேவுடைச்சிவ லோகனூர்
துள்ளிவெள்ளிள வாளைபாய்வயல்
தோன்றும்தாமரைப் பூக்கள்மேல்
புள்ளிநள்ளிகள் பள்ளிகொள்ளும்
புறம்பயந்தொழப் போதுமே. 5

7580. படையெலாம் பகடார ஆளிலும்
பவ்வஞ்சூழ்ந்தர சாளிலும்
கடையெலாம்பிணைத் தேரைவால்கவ
லாதெழுமட நெஞ்சமே
மடையெலாங்கழு நீர்மலர்ந்து
மருங்கெலாங்கரும் பாடத்தேன்
புடையெலாம்மணம் நாறுசோலைப்
புறம்பயந்தொழப் போதுமே. 6

7581. முன்னைச்செய்வினை இம்மையில்வந்து
மூடுமாதலின் முன்னமே
என்னைநீதியக் காதெழுமட
நெஞ்சமேயெந்தை தந்தையூர்
அன்னச்சேவலோ டுடிப்பேடைகள்
கூடிச்சேரும் அணிபொழில்
புன்னைக்கன்னி கழிக்கண்நாறும்
புறம்பயந்தொழப் போதுமே. 7

7582. மலமெலாம்அறும் இம்மையேமறு
மைக்கும்வல்வினை சார்கிலா
சலமெலாம்ஒழி நெஞ்சமேயெங்கள்

*சங்கரன்வந்து தங்குமூர்*
*கலமெலாங்கடல் மண்டுகாவிரி*
*நங்கையாடிய கங்கைநீர்*
*புலமெலாமண்டிப் பொன்விளைக்கும்*
*புறம்பயந்தொழப் போதுமே.* 8

*7583. பண்டரியன செய்ததீமையும்*
*பாவமும்பறை யும்படி*
*கண்டரியன கேட்டியேற்கவ*
*லாதெழுமட நெஞ்சமே*
*தொண்டரியன பாடித்துள்ளிநின்*
*றாடிவானவர் தாந்தொழும்*
*புண்டரீகம் மலரும்பொய்கைப்*
*புறம்பயந்தொழப் போதுமே.* 9

*7584. துஞ்சியும்பிறந் துஞ்சிறந்துந்*
*துயக்கறாத மயக்கியவை*
*அஞ்சியூரன் திருப்புறம்பயத்*
*தப்பனைத் தமிழ்ச்சீரினால்*
*நெஞ்சினாலே புறம்பயந்தொழு*
*துய்துமென்று நினைத்தன*
*வஞ்சியாதுரை செய்யவல்லவர்*
*வல்லவானுல காள்வரே.* 10

திருச்சிற்றம்பலம்

*****

## 36. திருப்பைஞ்ஞீலி : பண் – கொல்லி

*7585. காருலாவிய நஞ்சையுண்டிருள்*
*கண்டர்வெண்தலை யோடுகொண்(டு)*
*ஊரெலாந்திரிந் தென்செய்வீர்பலி*
*யோரிடத்திலே கொள்ளும்நீர்*
*பாரெலாம் பணிந் தும்மையேபர*
*விப்பணியும்பைஞ் ஞீலியீர்*
*ஆரமாவது நாகமோசொலும்*
*ஆரணீய விடங்கரே.* 1

7586. சிலைத்துநோக்கும்வெள் ளேறுசெந்தழல்
வாயபாம்பது மூசெனும்
பலிக்குநீர்வரும் போதுநுங்கையிற்
பாம்புவேண்டா பிரானிரே
மலைத்தசந்தொடு வேங்கைகோங்கமும்
மன்னுகாரகில் சண்பகம்
அலைக்கும்பைம்புனல் சூழ்பைஞ்ஞீலியி
லாரணீய விடங்கரே. 2

7587. தூயவர்கண்ணும் வாயும்மேனியுந்
துன்னவாடை சுடலையில்
பேயோடாடலைத் தவிரும்நீரொரு
பித்தரோவெம்பி ரானிரே
பாயுநீர்க்கிடங் கார்கமலமும்
பைந்தண்மாதவி புன்னையும்
ஆயபைம்பொழில் சூழ்பைஞ்ஞீலியி
லாரணீய விடங்கரே. 3

7588. செந்தமிழ்த்திறம் வல்லிரோசெங்க
ணரவமுன்கையி லாடவே
வந்துநிற்குமி தென்கொலோபலி
மாற்றமாட்டோ மிடகிலோம்
பைந்தண்மாமல ருந்துசோலைகள்
கந்தம்நாறுபைஞ் ஞீலியீர்
அந்தி வானமும் மேனியோசொலு
மாரணீய விடங்கரே. 4

7589. நீறுநுந்திரு மேனிநித்திலம்
நீள்நெடுங்கண்ணி னாளொடு
கூறராய்வந்து நிற்றிரால்கொணர்ந்
திடுகிலோம்பலி நடமினோ
பாறுவெண்தலை கையிலேந்திப்பைஞ்
ஞீலியேனென்றீ ரடிகள்நீர்
ஆறுதாங்கிய சடையரோசொலு
மாரணீய விடங்கரே. 5

7590. குரவம்நாறிய குழலினார்வளை
கொள்வதேதொழி லாகிநீர்
இரவுமிம்மனை யறிதிரேயிங்கே
நடந்துபோகவும் வல்லிரே

பரவிநாடொறும் பாடுவார்வினை
பற்றறுக்கும்பைஞ் ஞீலியீர்
அரவ மாட்டவும் வல்லிரோசொலு
மாரணீய விடங்கரே. 6

7591. ஏடுலாமலர்க் கொன்றைசூடுதிர்
என்பெலாமணிந் தென்செய்வீர்
காடுநும்பதி ஓடுகையது
காதல்செய்பவர் பெறுவதென்
பாடல்வண்டிசை யாலுஞ் சோலைப்பைஞ்
ஞீலியேனென்று நிற்றிரால்
ஆடல் பாடலும் வல்லிரோசொலு
மாரணீய விடங்கரே. 7

7592. மத்தமாமலர்க் கொன்றைவன்னியுங்
கங்கையாளொடு திங்களும்
மொய்த்தவெண்டலை கொக்கிறகொடு
வெள்ளெருக்கமும் சடையதாம்
பத்தர்சித்தர்கள் பாடியாடும்பைஞ்
ஞீலியேனென்று நிற்றிரால்
அத்தியீருரி போர்த் திரோசொலு
மாரணீய விடங்கரே. 8

7593. தக்கைதண்ணுமை தாளம்வீணை
தகுணிச்சங்கிணை சல்லரி
கொக்கரைகுட முழவினோடிசை
கூடிப்பாடிநின் றாடுவீர்
பக்கமேகுயில் பாடுஞ்சோலைப்பைஞ்
ஞீலியேனென்று நிற்றிரால்
அக்குமாமையும் பூண்டிரோசொலு
மாரணீய விடங்கரே. 9

7594. கையொர்பாம்பரை ஆர்த்தோர்பாம்பு
கழுத்தொர்பாம்பவை பின்புதாழ்
மெய்யெலாம்பொடிக் கொண்டுபூசுதிர்
வேதமோதுதிர் கீதமும்
பையவேவிடங் காகநின்றுபைஞ்
ஞீலியேனென்றீ ரடிகள்நீர்
ஐயம் ஏற்குமி தென்கொலோசொலு
மாரணீய விடங்கரே. 10

7595. அன்னஞ்சேர்வயல் சூழ்பைஞ்ஞீலியி
லாரணிய விடங்கரை
மின்னும்நுண்ணிடை மங்கைமார்பலர்
வேண்டிக்காதல் மொழிந்தசொல்
மன்னுதொல்புகழ் நாவலூரன்வன்
தொண்டன்வாய்மொழி பாடல்பத்
துன்னியின்னிசை பாடுவாருமை
கேள்வன்சேவடி சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 37. திருவாரூர் : பண் — கொல்லி

7596. குருகுபா யாக்கொழுங் கரும்புகள் நெரிந்தாசா(று)
அருகுபா யும்வயல் அந்தண்ஆ ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்(து)
உருகுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 1

7597. பறக்குமெங் கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்
அறக்கண்என் னத்தகும் அடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே. 2

7598. சூழுமோ டிச்சுழன் றுழலும்வெண் நாரைகாள்
ஆளும்அம் பொற்கழல் அடிகளா ரூரர்க்கு
வாழுமா றும்வளை கழலுமா றும்மெனக்(கு)
ஊழுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 3

7599. சக்ரவா ளத்திளம் பேடைகாள் சேவல்காள்
அக்ரமங் கள்செயும் அடிகளா ரூரர்க்கு
வக்ரமில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உக்ரமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே. 4

7600. இலைகள்சோ லைத்தலை இருக்கும்வெண் நாரைகாள்
அலைகொள்சூ லப்படை அடிகளா ரூரர்க்குக்
கலைகள்சோர் கின்றதும் கனவளை கழன்றதும்
முலைகள்பீர் கொண்டதும் மொழியவல் லீர்களே. 5

7601. வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் குருகுகாள்
அண்டவா ணர்தொழும் அடிகளா ரூரரைக்

கண்டவா றுங்காமத் தீக்கனன் றெரிந்துமெய்
உண்டவா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 6

7602. தேன்நலங் கொண்டதேன் வண்டுகாள் கொண்டல்காள்
ஆன்நலங் கொண்டஎம் அடிகளா ரூரர்க்குப்
பால்நலங் கொண்டஎம் பணைமுலை பயந்துபொன்
ஊன்நலங் கொண்டதும் உணர்த்தவல் லீர்களே. 7

7603. சுற்றுமுற் றுஞ்சுழன் றுழலும்வெண் நாரைகாள்
அற்றமுற் றப்பகர்ந் தடிகளா ரூரர்க்குப்
பற்றுமற் றின்மையும் பாடுமற் றின்மையும்
உற்றுமற் றின்மையும் உணர்த்தவல் லீர்களே. 8

7604. குரவம்நா றக்குயில் வண்டினம் பாடநின்(று)
அரவமா டும்பொழில் அந்தணா ரூரரைப்
பரவிநா டும்மதும் பாடிநா டும்மதும்
உருகிநா டும்மதும் உணர்த்தவல் லீர்களே. 9

7605. கூடும்அன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
ஆடுமம் பொற்கழல் அடிகளா ரூரரைப்
பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி
ஊடுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே. 10

7606. நித்தமா கந்நினைந் துள்ளமேத் தித்தொழும்
அத்தன்அம் பொற்கழல் அடிகளா ரூரரைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி அப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 38. திருவதிகைத் திருவீரட்டானம் : பண்– கொல்லிக்கௌவாணம்

7607. தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில் ஆடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்றன் அடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 1

7608. முன்னேயெம் பெருமானை மறந்தென்கொல் மறவா
தொழிந்தென்கொல் மறவாத சிந்தையால் வாழ்வேன்
பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே ஈசனென் றுன்னையே புகழ்வேன்
அன்னேயென் னத்தாவென் றமரரால் அமரப்
படுவானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னேயென் னெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 2

7609. விரும்பினேற்கு எனதுள்ளம் வீடிலா விதியே
விண்ணவர்தம் பெருமானே மண்ணவர்நின் றேத்தும்
கரும்பேயென் கட்டியென் றுள்ளத்தா லுள்கிக்
காதல்சேர் மாதராள் கங்கையாள் நங்கை
வரும்புனலுஞ் சடைக்கணிந்து வளராத பிறையும்
வரியரவும் உடன்துயில வைத்தருளு மெந்தை
இரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 3

7610. நாற்றானத் தொருவனை நானாய பரனை
நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக்
காற்றானைத் தீயானைக் கடலானை மலையின்
தலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள
ஆற்றானை பிறையானை அம்மானை யெம்மான்
தம்மானை யாவர்க்கும் அறிவரிய செங்கண்
ஏற்றானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 4

7611. சேர்ந்தர்தாய் மலைமங்கை திருநிறமும் பரிவும்
உடையானை அதிகைமா நகருள்வாழ் பவனைக்
கூந்தல்தாழ் புனல்மங்கை குயிலன்ன மொழியாள்
சடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி
வாய்ந்தநீர் வரவுந்தி மராமரங்கள் வணக்கி
மறிகடலை யிடங்கொள்வான் மலையார வாரி
ஏந்துநீர் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 5

7612. மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்
வல்லேனக் கொம்பணிந்த மாதவனை வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம்புந்
தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை வென்ற
எம்மானை மதகரியி னுரியானை வேத

விதியானை வெண்ணீறு சண்ணித்த மேனி
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 6

7613. வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு
மிகஇரங்கி யருள்புரிந்து வீடுபே றாக்கம்
பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங் கண்டத்(து)
எண்டோளெம் பெருமானைப் பெண்பாக மொருபாற்
செய்தானைச் செக்கர்வா னொளியானைத் தீவாய்
அரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ
எய்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 7

7614. பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள்தம் பெருமானைக் கருமானின்
உரியானை யதிகைமா நகருள்வாழ் பவனை
என்னானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 8

7615. திருந்தாத வாளவுணர் புரம்மூன்றும் வேவச்
சிலைவளைவித் தொருகணையால் தொழில்பூண்ட சிவனைக்
கருந்தாள மதக்களிற்றி னுரியானைப் பெரிய
கண்மூன்றும் உடையானைக் கருதாத அரக்கன்
பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும்
உடையானைப் பேயுருவம் மூன்றுமுற மலைமேல்
இருந்தானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 9

7616. என்பினையே கலனாக அணிந்தானை யெங்கள்
எருதேறும் பெருமானை இசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயல்நாவ லூர்க்கோன்
வன்றொண்டன் ஆரூரன் மதியாது சொன்ன
அன்பனை யாவர்க்கும் அறிவரிய அத்தர்
பெருமானை அதிகைமா நகருள் வாழ்பவனை
என்பொன்னை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 39. திருத்தொண்டத்தொகை : பண் – கொல்லிக் கௌவாணம்

7617. தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

7618. இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

7619. மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 3

7620. திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி அப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக்கு காளே. 4

7621. வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்

ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
நாட்டம்மிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 5

7622. வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுதொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 6

7623. பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 7

7624. கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 8

7625. கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப்
.....பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த் துணைக்குமடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 9

7626. பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 10

7627. மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 40. திருக்கானாட்டு முள்ளூர் : பண் – கொல்லிக்கௌவாணம்

7628. வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை
மறையவனை வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கியுமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூல் நான்முகத்தி னானை
முள்வாய மடல்தழுவி முடத்தாழை யீன்று
மொட்டலர்ந்து விரைநாறு முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 1

7629. ஒருமேகம் முகிலாகி ஒத்துலகந் தானாய்
ஊர்வனவும் நிற்பனவும் ஊழிகளுந் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி னானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க அந்தணர்கள் ஓதுநக ரெங்கும்
கருமேதி செந்தாம ரைமேயுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 2

7630. இரும்புயர்ந்த மூஇலைய சூலத்தி னானை
இறையவனை மறையவனை எண்குணத்தி னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடுஞ்
சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை
அரும்புயர்ந்த அரவிந்தத் தனிமலர்க ளேறி
அன்னங்கள் விளையாடும் அகன்துறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 3

7631. பூளைபுனை கொன்றையொடு புரிசடையி னானைப்
புனலாகி அனலாகிப் பூதங்கள் ஐந்தாய்
நாளையின்று நெருநலாய் ஆகாய மாகி
ஞாயிறாய் மதியமாய் நின்றஎம் பரனைப்
பாளைபடு பைங்கமுகின் சூழலிளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழும்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயி லாலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 4

7632. செருக்குவாய்ப் பைங்கண்வெள் அரவரையி னானைத்
தேவர்கள்சூ ளாமணியைச் செங்கண்விடை யானை
முருக்குவாய் மலரொக்குந் திருமேனி யானை
முன்னிலையாய் முழுதுலகம் ஆயபெரு மானை
இருக்குவாய் அந்தணர்கள் எழுபிறப்பு ளெங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநக ரெங்கும்
கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்குமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 5

7633. விடையரவக் கொடியேந்தும் விண்ணவர்தங் கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுத லானும்
அடியிணையுந் திருமுடியுங் காணஅரி தாய
சங்கரனைத் தத்துவனைத் தையல்மட வார்கள்
உடையவிழக் குழலவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்கள் உந்திவருங் கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 6

7634. அருமணியை முத்தினை ஆனஞ்சும் ஆடும்
அமரர்கள்தம் பெருமானை அருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேல்
கருமணிகள் போல்நீலம் மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 7

7635. இழைதழுவு வெண்நூலும் மேவுதிரு மார்பின்
ஈசன்றன் எண்டோள்கள் வீசியெரி யாடக்
குழைதழுவு திருக்காதிற் கோளரவம் அசைத்துக்
கோவணங்கொள் குழகனைக் குளிர்சடையி னானைத்
தழைதழுவு தண்ணிறத்த செந்நெலதன் அயலே
தடந்தரளம் மென்கரும்பின் தாழ்கிடங்கி னருகே
கழைதழுவித் தேன்தொடுக்குங் கழனிசூழ் பழனக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 8

7636. குனிவினிய கதிர்மதியம் சூடு சடையானைக்
குண்டலஞ்சேர் காதவனை வண்டிணனங்கள் பாடப்
பனியுதிருஞ் சடையானைப் பால்வெண்ணீற் றானைப்
பலவுருவுந் தன்னுருவே யாயபெரு மானைத்
துனிவினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலம் கண்வளருஞ் சூழ்கிடங்கி னருகே
கனிவினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 9

7637. தேவியம்பொன் மலைக்கோமான் தன்பாவை யாகத்
தனதுருவ மொருபாகஞ் சேர்த்துவித்த பெருமான்
மேவியவெந் நரகத்தில் அழுந்தாமை நமக்கு
மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுத லானைத்
தூவிவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக்கெண்டை மிளிர்ந்துகயல் துள்ளிவிளை யாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 10

7638. திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனல்தழுவு கொள்ளிடத்தின் கரைமேற்

*கானாட்டு முள்ளூரிற் கண்டுகழல் தொழுது*
*உரையினார் மதயானை நாவலா ரூரன்*
*உரிமையா லுரைசெய்த வொண்தமிழ்கள் வல்லார்*
*வரையினார் வகைஞாலம் ஆண்டவர்க்கும் தாம்போய்*
*வானவர்க்கும் தலைவராய் நிற்பரவர் தாமே.* 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 41. திருக்கச்சூர் ஆலக்கோயில் : பண் – கொல்லிக் கெளவாணம்

7639. *முதுவாயோரி கதறமுதுகாட்*
*டெரிகொண்டாடல் முயல்வானே*
*மதுவார்கொன்றைப் புதுவீசூடும்*
*மலையான்மகள்தன் மணவாளா*
*கதுவாய்த்தலையில் பலிநீகொள்ளக்*
*கண்டாலடியார் கவலாரே*
*அதுவேயாமா றிதுவோகச்சூ*
*ராலக்கோயி லம்மானே.* 1

7640. *கச்சேரரவொன் றரையிலசைத்துக்*
*கழலுஞ்சிலம்புங் கலிக்கப்பலிக்கென்*
*றுச்சம்போதா வூர்திரியக்*
*கண்டாலடியார் உருகாரே*
*இச்சைஅறியோ மெங்கள்பெருமா*
*னேழேழ்பிறப்பும் எனையாள்வாய்*
*அச்சமில்லாக் கச்சூர்வடபால்*
*ஆலக்கோயி லம்மானே.* 2

7641. *சாலக்கோயி லுளநின்கோயில்*
*அவையென் தலைமேற்கொண்டாடி*
*மாலைத்தீர்ந்தேன் வினையுந்துரந்தேன்*
*வானோரறியா நெறியானே*
*கோலக்கோயில் குறையாக்கோயில்*
*குளிர்பூங்கச்சூர் வடபாலை*
*ஆலக்கோயில் கல்லால்நிழற்கீழ்*
*அறங்களுரைத்த அம்மானே.* 3

7642. விடையுங்கொடியுஞ் சடையுமுடையாய்
மின்னேருருவத் தொளியானே
கடையும்புடைசூழ் மணிமண்டபமுங்
கன்னிமாடம் கலந்தெங்கும்
புடையும்பொழிலும் புனலுந்தழுவிப்
பூமேல்திருமா மகள்புல்கி
அடையுங்கழனிப் பழனக்கச்சூ
ராலக்கோயி லம்மானே. 4

7643. மேலைவிதியே வினையின்பயனே
விரவார்புரம்மூன் றெரிசெய்தாய்
காலையெழுந்து தொழுவார்தங்கள்
கவலைகளைவாய் கறைக்கண்டா
மாலைமதியே மலைமேல்மருந்தே
மறவேனடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக்கழனிப் பழனக்கச்சூ
ராலக்கோயி லம்மானே. 5

7644. பிறவாயிறவாய் பேணாய்மூவாய்
பெற்றமேறிப் பேய்சூழ்தல்
துறவாய்மறவாய் சுடுகாடென்றும்
இடமாக்கொண்டு நடமாடி
ஒறுவாய்த்தலையில் பலிநீகொள்ளக்
கண்டாலடியார் உருகாரே
அறவேஒழியாய் கச்சூர்வடபால்
ஆலக்கோயி லம்மானே. 6

7645. பொய்யேயுன்னைப் புகழ்வார்புகழ்ந்தால்
அதுவும்பொருளாக் கொள்வானே
மெய்யேயெங்கள் பெருமானுன்னை
நினைவாரவரை நினைகண்டாய்
மையார்தடங்கண் மடந்தைபங்கா
கங்கார்மதியஞ் சடைவைத்த
ஐயாசெய்யாய் வெளியாய்கச்சூ
ராலக்கோயி லம்மானே. 7

7646. ஊனைப்பெருக்கி உன்னைநினையா
தொழிந்தேன்செடியேன் உணர்வில்லேன்

கானக்கொன்றை கமழமலருங்
கடிநாறுடையாய் கச்சூராய்
மானைப்புரையும் மடமென்னோக்கி
மடவாளஞ்ச மறைத்திட்ட
ஆனைத்தோலாய் ஞானக்கண்ணா
யாலக்கோயி லம்மானே. 8

7647. காதல்செய்து களித்துப்பிதற்றிக்
கடிமாமலரிட் டுனையேத்தி
ஆதல்செய்யும் அடியாரிருக்க
ஐயங்கொள்வ தழகிதே
ஓதக் கண்டேன் உன்னைமறவேன்
உமையாள்கணவா எனையாள்வாய்
ஆதற்பழனக் கழனிக்கச்சூ
ராலக்கோயி லம்மானே. 9

7648. அன்னம்மன்னும் வயல்சூழ்கச்சூ
ராலக்கோயி லம்மானை
உன்னமுன்னும் மனத்தாரூரன்
ஆரூரன்பேர் முடிவைத்த
மன்னுபுலவன் வயல்நாவலர்கோன்
செஞ்சொல்நாவன் வன்றொண்டன்
பன்னுதமிழ்நூல் மாலைவல்லா
ரவரெந்தலைமேல் பயில்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 42. திருவெஞ்சமாக்கூடல் : பண் – கொல்லிக்கௌவாணம்

7649. எறிக்குங்கதிர்வேய் உதிர்முத்தமொடே
லம்இலவங்கம் தக்கோலமிஞ்சி
செறிக்கும்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
முறிக்குந்தழைமா முடப்புன்னைஞாழல்
குருக்கத்திகள்மேற் குயில்கூவலறா
வெறிக்குங்கலைமா வெஞ்சமாக்கூடல்
விகிர்தா அடியே னையும்வேண்டுதியே. 1

7650. குளங்கள்பலவுங் குழியும்நிறையக்
குடமாமணிசந் தனமும்அகிலுந்
துளங்கும்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
வளங்கொள்மதில்மா ளிகைகோபுரமும்
மணிமண்டபமும் இவைமஞ்சுதன்னுள்
விளங்குமதிதோய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 2

7651. வரைமான்அனையார் மயிற்சாயல்நல்லார்
வடிவேற்கண்நல்லார் பலர்வந்திறைஞ்சத்
திரையார்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
நிரையார்கமுகும் நெடுந்தாள்தெங்குங்
குறுந்தாட்பலவும் விரவிக்குளிரும்
விரையார்பொழில்சூழ் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 3

7652. பண்நேர்மொழியா ளையொர்பங்குடையாய்
படுகாட்டகத்தென்று மோர்பற்றொழியாய்
தண்ணாரகிலும் நலசாமரையும்
அலைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
மண்ணார்முழவுங் குழலுமியம்ப
மடவார்நடமா டுமணியரங்கில்
விண்ணார்மதிதோய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 4

7653. துணைவெண்குழையுஞ் சுருள்வெண்தோடுந்
தூங்குங்காதிற் றுளங்கும்படியாய்
களையேகமழும் மலர்க்கொன்றையினாய்
கலந்தார்க்கருள்செய் திடுங்கற்பகமே
பி(ள்)ளைவெண்பிறையாய் பிறங்குஞ்சடையாய்
பிறவாதவனே பெறுதற்கரியாய்
வெ(ள்)ளைமால்விடையாய் வெஞ்சமாக்கூடல்
விகிர்தா்அடியே னையும்வேண்டுதியே. 5

7654. தொழுவார்க்கெளியாய் துயர்தீரநின்றாய்
சுரும்பார்மலர்க்கொன்றை துன்றுஞ்சடையாய்
உழுவார்க்கரிய விடையேறியொன்னார்
புரந்தீயெழவோடு வித்தாயழகார்
முழவாரொலிபாட லோடாடலறா

முதுகாடரங்கா நடமாடவல்லாய்
விழவார்மறுகில் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 6

7655. கடமாகளியா னையுரித்தவனே
கரிகாடிடமா அனல்வீசிநின்று
நடமாடவல்லாய் நரையேறுகந்தாய்
நல்லாய்நறுங்கொன்றை நயந்தவனே
படமாயிரமாம் பருந்துத்திப்பைங்கண்
பகுவாயெயிற்றோ டழலேயுமிழும்
விடவார்அரவா வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 7

7656. காடும்மலையும் நாடும்இடறிக்
கதிர்மாமணிசந் தனமும்மகிலும்
சேடன்னுறையும் மிடந்தான்விரும்பித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
பாடல்முழவுங் குழலும்மியம்பப்
பணைத்தோளியர்பாட லொடாடலறா
வேடர்விரும்பும் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 8

7657. கொங்கார்மலர்க்கொன்றை யந்தாரவனே
கொடுகொட்டியோர் வீணையுடையவனே
பொங்காடரவம் புனலுஞ்சடைமேற்
பொதியும்புனிதா புனஞ்சூழ்ந்தழகார்
துங்கார்புனலுட் பெய்துகொண்டுமண்டித்
திளைத்தெற்றுசிற்றா றதன்கீழ்க்கரைமேல்
வெங்கார்வயல்சூழ் வெஞ்சமாக்கூடல்
விகிர்தாஅடியே னையும்வேண்டுதியே. 9

7658. வஞ்சிநுண்ணிடையார் மயிற்சாயல்அன்னார்
வடிவேற்கணநல்லார் பலர்வந்திறைஞ்சும்
வெஞ்சமாக்கூடல் விகிர்தாஅடியே
னையும்வேண்டுதியே யென்றுதான்விரும்பி
வஞ்சியாதளிக்கும் வயல்நாவலர்கோன்
வனப்பகையப்பன் வன்தொண்டன்சொன்ன
செஞ்சொற்றமிழ்மாலை கள்பத்தும்வல்லார்
சிவலோகத்திருப்பது திண்ணமன்றே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 43. திருமுதுகுன்றம் : பண் – கொல்லிக்கௌவாணம்

7659. நஞ்சி யிடையின்று நாளையென் றும்மை நச்சுவார்
துஞ்சி யிட்டாற்பின் னைச்செய்வ தென்னடி கேள்சொலீர்
பஞ்சி யிடப்புட்டில் கீறு மோபணி யீரருள்
முஞ்சி யிடைச்சங்க மார்க்குஞ் சீர்முது குன்றரே. 1

7660. ஏரிக் கனகக் கமல மலரன்ன சேவடி
ஊரித் தனையுந் திரிந்தக் காலவை நோங்கொலோ
வாரிக் கட்சென்று வளைக்கப் பட்டு வருந்திப்போய்
மூரிக் களிறு முழக்க றாமுது குன்றரே. 2

7661. தொண்டர்கள் பாட விண்ணோர்க ளேத்த உழிதர்வீர்
பண்டகந் தோறும் பலிக்குச் செல்வது பான்மையே
கண்டகர் வாளிகள் வில்லி கள்புறங் காக்குஞ்சீர்
மொண்டகை வேள்வி முழக்க றாமுது குன்றரே. 3

7662. இளைப்பறி "ரிம்மை யேத்துவார்க் கம்மை செய்வதென்
விளைப்பறி யாதவெங் கால னையுயிர் வீட்டினீர்
அளைப்பிரி ட ாஅர வல்கு லாளொடு கங்கைசேர்
முளைப்பிறைச் சென்னிச் சடைமு டிமுது குன்றரே. 4

7663. ஆடி யசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
பாடிப் படைத்த பொருளெ லாமுமை யாளுக்கோ
மாட மதிலணி கோபு ரமணி மண்டபம்
மூடி முகில்தவழ் சோலை சூழ்முது குன்றரே. 5

7664. இழைவளர் நுண்ணிடை மங்கை யோடிடு காட்டிடைக்
குழைவளர் காதுகள் மோத நின்று குனிப்பதே
மழைவள ரும்நெடுங் கோட்டி டைமத யானைகள்
முழைவளர் ஆளி முழக்க றாமுது குன்றரே. 6

7665. சென்றில் இடைச்செ டிநாய் குரைக்கச் சேடிச்சிகள்
மன்றி லிடைப்பலி தேரப் போவது வாழ்க்கையே
குன்றி லிடைக்களி றாளி கொள்ளக் குறத்திகள்
முன்றி லிடைப்பிடி கன்றி டும்முது குன்றரே. 7

7666. அந்தி திரிந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
சந்திகள் தோறும் பலிக்குச் செல்வது தக்கதே
மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
முந்தி யடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 8

7667. செட்டிநின் காதலி ஊர்கள் தோறும் அறஞ்செய
அட்டுமின் சில்பலிக் கென் றகங்கடை நிற்பதே
பட்டிவெள் ளேறுகந் தேறு வீர்பரி சென்கொலோ
முட்டி யடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 9

7668. எத்திசை யுந்திரிந் தேற்றக் கால்பிற ரென்சொலார்
பத்தியி னாலிடு வாரி டைப்பலி கொள்மினோ
எத்திசை யுந்திரை யேற மோதிக் கரைகள்மேல்
முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரே. 10

7669. முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரைப்
பித்தனொப் பானடித் தொண்ட னூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிக ளாயி னார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களும் ஏத்து வார்க்கிட ரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 44. முடிப்பது கங்கை (திருவஞ்சைக்களம்) : பண் – கொல்லிக்கௌவாணம்

7670. முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெ ழக்கணை நூறினார்
கடிப்பது மேறுமென் றஞ்சு வன்திருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி இல்லை யோஎம் பிரானுக்கே. 1

7671. தூறன்றி ஆடரங் கில்லை யோசுட லைப்பொடி
நீறன்றிச் சாந்தம்மற் றில்லை யோஇம வான்மகள்
கூறன்றிக் கூறுவ தில்லை யோகொல்லைச் சில்லைவெள்
ஏறன்றி ஏறுவ தில்லை யோஎம் பிரானுக்கே. 2

7672. தட்டெனுந் தட்டெனுந் தொண்டர் காள்தடு மாற்றத்தை
ஒட்டெனும் ஒட்டெனும் மாநி லத்துயிர் கோறலைச்
சிட்டன் திரிபுரஞ் சுட்ட தேவர்கள் தேவனை
வெட்டெனப் பேசன்மின் தொண்டர் காள்எம் பிரானையே. 3

7673. நரிதலை கவ்வநின் றோரி கூப்பிட நள்ளிருள்
எரிதலைப் பேய்புடை சூழ ஆரிருட் காட்டிடைச்
சிரிதலை மாலை சடைக்கணிந் தஎஞ் செல்வனைப்
பிரிதலைப் பேசன்மின் தொண்டர் காள்எம் பிரானையே. 4

7674. வேயன தோளி மலைம களைவி ரும்பிய
மாயமில் மாமலை நாட னாகிய மாண்பனை
ஆயன சொல்லிநின் றார்கள் அல்லல் அறுக்கிலும்
பேயனே பித்தனே என்பரால் எம்பி ரானையே. 5

7675. இறைவ னென்றெம் பெருமானை வானவ ரேத்தப்போய்த்
துறையொன் றித்தூ மலரிட் டடியிணை போற்றுவார்
மறையன்றிப் பாடுவ தில்லை யோமல்கு வானிளம்
பிறையன்றிச் சூடுவ தில்லை யோஎம் பிரானுக்கே. 6

7676. தாருந்தண் கொன்றையுங் கூவி ளந்தனி மத்தமும்
ஆரு மளவறி யாத ஆதியும் அந்தமும்
ஊருமொன் றில்லை உலகெ லாம்உகப் பார்தொழப்
பேருமோ ராயிரம் என்பரால் எம்பி ரானுக்கே. 7

7677. அரியொடு பூமிசை யானும் ஆதியும் அறிகிலார்
வரிதரு பாம்பொடு வன்னி திங்களும் மத்தமும்
புரிதரு புன்சடை வைத்த எம்புனி தற்கினி
எரியன்றி அங்கைக் கொன்றில்லை யோஎம் பிரானுக்கே. 8

7678. கரிய மனச்சமண் காடி யாடு கழுக்களால்
எரிய வசவுணுந் தன்மை யோஇம வான்மகள்
பெரிய மனந்தடு மாற வேண்டிப்பெம் மான்மதக்
கரியி னுரியல்ல தில்லை யோஎம் பிரானுக்கே. 9

7679. காய்சின மால்விடை மாணிக் கத்தெங் கறைக்கண்டத்(து)
ஈசனை யூரனெட் டோடி ரண்டு விரும்பிய
வாயின சீர்ப்பகை ஞானி யப்பனடித் தொண்டன்தான்
ஏசின பேசுமின் தொண்டர் காள்எம் பிரானையே. 10

திருச்சிற்றம்பலம்

••••

## 45. திரு ஆமாத்தூர் : பண் – கொல்லிக்கௌவாணம்

7680. காண்டனன் காண்டனன் காரிகை யாள்தன் கருத்தனாய்
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத் தூரெம் மடிகட்காட்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன் கேண்மின்கள்
மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே. 1

7681. பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்னடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவ னாடுவன் ஆமாத் தூரெம் மடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்பொடே. 2

7682. காய்ந்தவன் காய்ந்தவன் கண்அழ லால்அன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத் தூரெம் மடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி ராட்டியைப் பாகமே. 3

7683. ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள் ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூ ரைய னருளதே. 4

7684. வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக் கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவ னன்றவன் செய்யரு ளாமாத்தூ ரையனே. 5

7685. காண்டவன் காண்டவன் காண்டற் கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன் நான்முகன் நேடவே
ஆண்டவ னாண்டவ னாமாத்தூ ரையுமென் னையுமாட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற் புரிநூல் புரளவே. 6

7686. எண்ணவ னெண்ணவ னேழுல கத்துயிர் தங்கட்குக்
கண்ணவன் கண்ணவன் காண்டுமென் பாரவர் தங்கட்குப்
பெண்ணவன் பெண்ணவன் மேனியோர் பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவ னண்ணவ னாமாத் தூரெம் மடிகளே. 7

7687. பொன்னவன் பொன்னவன் பொன்னைத்தந் தென்னைப் போகவிடா
மின்னவன் மின்னவன் வேதத்தி னுட்பொரு ளாகிய
அன்னவன் அன்னவன் ஆமாத்தூ ரையனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என்மனத் தின்புற் றிருப்பனே. 8

7688. தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூரெம் மடிகட்கே. 9

7689. உற்றனன் உற்றவர் தம்மை யொழிந்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத் தூர்மேயான் அடியார்கட்காள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே. 10

7690. ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்தூ ரண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை
மையனை மையணி கண்டனை வன்தொண்ட னூரன்சொல்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 46. திருநாகைக்காரோணம் : பண் – கொல்லிக்கௌவாணம்

7691. பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 1

7692. வேம்பினொடு தீங்கரும்பு விரவினைத் தீர்த்தீர்
விருத்திநா னுமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப்
பகட்டநான் ஒட்டுவனோ பலகாலும் உழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கில் திகழுந்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 2

7693. பூண்பதோர் இளவாமை பொருவிடையொன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்

காண்பினிய மணிமாடம் நிறைந்தநெடு வீதிக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 3

7694. விட்டதோர் சடைதாழ வீணைவிடங் காக
வீதிவிடை ஏறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநட மாடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே
வட்டவார் குழல்மடவார் தம்மைமயல் செய்தல்
மாதவமோ மாதிமையோ வாட்டமெலாந் தீரக்
கட்டிஎமக் கீவதுதா னெப்போது சொல்லீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 4

7695. மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றுஞ்
சுந்தரனே கந்தம்முத லாடையா பரணம்
பண்டாரத் தேஎனக்குப் பணித்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாண மொன்றுண்டே நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 5

7696. இலவஇதழ் வாயுமையோ டெருதேறிப் பூதம்
இசைபாட இடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலஅகம்புக் குழிதருவீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறோ
உலவுதிரைக் கடல்நஞ்சை அன்றமரர் வேண்ட
உண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணா திடவே
கலவமயில் இயலவர்கள் நடமாடுஞ் செல்வக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 6

7697. தூசுடைய அகலல்குல் தூமொழியா ளூடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரையெடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை யருந்த
நிறைமறையோ ருறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீரின் றெனக்கருள வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 7

7698. மாற்றமே லொன்றுரையீர் வாளாநீ ரிருந்தீர்
வாழ்விப்ப னெனவாண்டீர் வழியடியே னுமக்கு
ஆற்றவேல் திருவுடையீர் நல்கூர்ந்தீ ரல்லீர்
அணியாரூர் புகப்பெய்த அருநிதிய மதனில்
தோற்றமிகு முக்கூறி லொருகூறு வேண்டுந்
தாரீரே லொருபொழுதும் அடியெடுக்க லொட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 8

7699. மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன் கணபதியொன் றறியான்
எம்பெருமா னிதுதகவோ இயம்பியருள் செய்யீர்
திண்ணெனஎன் னுடல்விருத்தி தாரீரே யாகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றே னாளைக்
கண்ணறையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 9

7700. மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநிதியந் தருவனென்று வல்லீரா யாண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீ ரடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை யுண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவும் நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 10

7701. பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரென்(று)
அண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
அருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே. 11

திருச்சிற்றம்பலம்

••••

## 47. ஊர்த்தொகை : பண் – பழம்பஞ்சுரம்

7702. காட்டூர் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே யழுந்தூ ரரசே கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட் டூரானே
மாட்டூ ரறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே. 1

7703. கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா குற்றாலா
மங்குல் திரிவாய் வானோர் தலைவா வாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியா அழகா அவியா அனலேந்திக்
கங்குல் புறங்காட் டாடீ அடியார் கவலை களையாயே. 2

7704. நிறைக்காட் டானே நெஞ்சத் தானே நின்றி யூரானே
மிறைக்காட் டானே புனல்சேர் சடையாய் அனல்சேர் கையானே
மறைக்காட் டானே திருமாந் துறையாய் மாகோ ணத்தானே
இறைக்காட் டாயே எங்கட் குன்னை எம்மான் தம்மானே. 3

7705. ஆரூ ரத்தா ஐயாற் றமுதே அளப்பூ ரம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவில் கருகா வூரானே
பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாசூ ரம்மானே. 4

7706. மருக லுறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியாய் அடியார்க் குன்னைப் பவளப் படியானே. 5

7707. தாங்கூர் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
வேங்கூ ருறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூ ருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே. 6

7708. தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே பரனே அண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே. 7

7709. துருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத் துறைவாய் வெயிலாய்ப் பலவாய்க் காற்றானாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா
அருத்தித் துன்னை அடைந்தார் வினைகள் அகல அருளாயே. 8

7710. புலியூர்ச் சிற்றம் பலத்தாய் புகலூர்ப் போதா மூதூரா
பொலிசேர் புரமுன் றெரியச் செற்ற புரிபுன் சடையானே
வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான் கடர்த்த மதிசூடி
கலிசேர் புறவிற் கடவூ ராளீ காண அருளாயே. 9

7711. கைம்மா வுரிவை யம்மான் காக்கும் பலவூர் கருத்துன்னி
மைம்மாந் தடங்கண் மதுரம் அன்ன மொழியாள்மடச்சிங்கடி
தம்மா னூரன் சடையன் சிறுவ னடியன் தமிழ்மாலை
செம்மாந் திருந்து திருவாய் திறப்பார் சிவலோ கத்தாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 48. திருப்பாண்டிக்கொடுமுடி : பண் – பழம்பஞ்சுரம்

7712. மற்றுப்பற்றெனக் கின்றிநின்திருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேன்இனிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 1

7713. இட்டன்நும்மடி ஏத்துவாரிகழ்ந் திட்டநாள்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலால்கரு தேன்கிளர்புனற் காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழு தேத்துபாண்டிக் கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே.2

7714. ஓவுநாளுணர் வழியும்நாளுயிர் போகுநாளுயர் பாடைமேல்
காவுநாளிவை யென்றலால்கரு தேன்கிளர்புனற் காவிரிப்
பாவுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண்டிக் கொடுமுடி
நாவலாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 3

7715. எல்லையில்புகழ் எம்பிரானெந்தை தம்பிரானென்பொன் மாமணி
கல்லைஉந்தி வளம்பொழிந்திழி காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 4

7716. அஞ்சினார்க்கரண் ஆதியென்றடி யேனும்நான்மிக அஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கருள் நல்கினாய்க்கழி கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார்குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி
நஞ்சணிகண்ட நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 5

7717. ஏடுவான்இளந் திங்கள்சூடினை யென்பின்கொல்புலித் தோலின்மேல்
ஆடுபாம்பத ரைக்கசைத்த அழகனேயந்தண் காவிரிப்
பாடுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண்டிக் கொடுமுடிச்
சேடனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 6

7718. விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந் தேன்வினைகளும் விண்டன
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற நின்றகாவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதைமார்குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 7

7719. செம்பொன்நேர்சடை யாய்திரிபுரந் தீயெழச்சிலை கோலினாய்
வம்புலாங்குழ லாளைப்பாகம் அமர்ந்துகாவிரிக் கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில் கூவமாமயி லாடுபாண்டிக் கொடுமுடி
நம்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 8

7720. சாரணன்றந்தை எம்பிரானெந்தை தம்பிரானென்பொன் மாமணியென்று
பேரெணாயிர கோடிதேவர் பிதற்றிநின்று பிரிகிலார்
நாரணன்பிர மன்தொழுங்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடிக்
காரணாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 9

7721. கோணியபிறை சூடியைக்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி,
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லியைப்
பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 49. திருமுருகன்பூண்டி : பண் – பழம்பஞ்சுரம்

7722. கொடுகுவெஞ்சிலை வடுகவேடுவர் விரவ லாமைசொல்லித்
திடுகுமொட்டெனக் குத்திக்கூறைகொண் டாற லைக்குமிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ்முரு கன்பூண்டி மாநகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடும் எத்துக்கிங்கிருந் தீரெம்பிரானீரே. 1

7723. வில்லைக்காட்டி வெருட்டிவேடுவர் விரவலாமை சொல்லிக்
கல்லினாலெறிந் திட்டுமோதியுங் கூறைகொள்ளுமிடம்
முல்லைத்தாது மணங்கமழ்முரு கன்பூண்டி மாநகர்வாய்
எல்லைக்காப்பதொன் றில்லையாகில் நீர்எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 2

7724. பசுக்களேகொன்று தின்றுபாவிகள் பாவ மொன்றறியார்
உசிர்க்கொலைபல நேர்ந்துநாடொறுங் கூறை கொள்ளுமிடம்
முசுக்கள்போற்பல வேடர்வாழ்முரு கன்பூண்டி மாநகர்வாய்
இசுக்கழியப்பயிக் கங்கொண்டுநீர் எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 3

7725. பீறற்கூறை யுடுத்தோர்பத்திரங் கட்டி வெட்டனராய்ச்
சூறைப்பங்கிய ராகிநாடொறுங் கூறை கொள்ளுமிடம்
மோறைவேடுவர் கூடிவாழ்முரு கன்பூண்டி மாநகர்வாய்
ஏறுகாலிற்ற தில்லையாய்விடில் எத்துங்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே 4

7726. தயங்குதோலை யுடுத்தசங்கர சாம வேதமோதீ
மயங்கியூரிடு பிச்சைக்கொண்டுணும் மார்க்க மொன்றறியீர்
முயங்குபூண்முலை மங்கையாளொடு முருகன்பூண்டி மாநகர்வாய்
இயங்கவும்மிடுக் குடையராய்விடில் எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 5

7727. விட்டிசைப்பன கொக்கரைகொடு கொட்டித் தத்தளகம்
கொட்டிப்பாடுமித் துந்துமியொடு குடமுழா நீர்மகிழ்வீர்
மொட்டலர்ந்து மணங்கமழ்முரு கன்பூண்டி மாநகர்வாய்
இட்டபிச்சைகொண் டுண்பதாகில்நீர் எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 6

7728. வேதமோதிவெண் ணீறுபூசிவெண் கோவணந் தற்றயலே
ஓதம்மேவிய ஒற்றியூரையு முத்திநீர் மகிழ்வீர்
மோதிவேடுவர் கூறைகொள்ளும்முரு கன்பூண்டி மாநகர்வாய்
ஏதுகாரணம் ஏதுகாவல்கொண் டெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 7

7729. படவரவுநுண் ணேரிடைப்பணைத் தோள்வரி நெடுங்கண்
மடவரல்உமை நங்கைதன்னையோர் பாகம் வைத்துகந்தீர்
முடவரல்லீர் இடரிலீர்முரு கன்பூண்டி மாநகர்வாய்
இடவமேறியும் போவதாகில்நீர் எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 8

7730. சாந்தமாகவெண் ணீறுபூசிவெண் பல்தலை கலனா
வேய்ந்தவெண்பிறைக் கண்ணிதன்னையோர் பாகம் வைத்துகந்தீர்
மோந்தையோடு முழக்கறாமுரு கன்பூண்டி மாநகர்வாய்
ஏந்துபூண்முலை மங்கைதன்னொடும் எத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானீரே. 9

7731. முந்திவானவர் தாந்தொழும்முரு கன்பூண்டி மாநகர்வாய்ப்
பந்தணைவிரற் பாவைதன்னையோர் பாகம் வைத்தவனைச்
சிந்தையிற்சிவ தொண்டனூரன் உரைத்தன பத்துங்கொண்(டு)
எந்தம்அடிகளை ஏத்துவாரிட ரொன்றுந் தாமிலரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 50. திருப்புனவாயில் : பண் – பழம்பஞ்சுரம்

7732. சித்த(ம்) நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே. 1

7733. கருது நீமன மென்னொடு சூளறும் வைகலும்
எருது மேற்கொளு மெம்பெரு மாற்கிட மாவது
மருத வானவர் வைகு மிடம்மற வேடுவர்
பொருது சாத்தொடு பூசல றாப்புன வாயிலே. 2

7734. தொக்கா யமன மென்னொடு சூளறும் வைகலும்
நக்கான் நமையா ளுடை யான்நவி லும்மிடம்
அக்கோ டரவார்த்த பிரானடிக் கன்பராய்ப்
புக்காரவர் போற்றொழி யாப்புன வாயிலே. 3

7735. வற்கென் றிருத்திகண் டாய்மன மென்னொடு சூளறும்வைகலும்
பொற்குன் றஞ்சேர்ந்த தோர்காக்கை பொன்னாமது வேபுகல்
கற்குன்றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்
புற்கென்று தோன்றிடு மெம்பெரு மான்புன வாயிலே. 4

7736. நில்லாய்மன மென்னொடு சூளுறும் வைகலும்
நல்லான்நமை யாளுடை யான்நவி லும்மிடம்
வில்லாய்க்கணை வேட்டுவ ராட்டவெ ருண்டுபோய்ப்
புல்வாய்க்கணம் புக்கொளிக் கும்புன வாயிலே. 5

7737. மறவல் நீமன மென்னொடு சூளறும் வைகலும்
உறவும் ஊழியு மாயபெம் மாற்கிட மாவது
பிறவு கள்ளியின் நீள்கவட் டேறித்தன் பேடையைப்
புறவங் கூப்பிடப் பொன்புனஞ் சூழ்புன வாயிலே. 6

7738. ஏசற்று நீநினை யென்னொடு சூளறும் வைகலும்
பாசற்றவர் பாடிநின் றாடும் பழம்பதி
தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்
பூசற் றுடிப்பூச லறாப்புன வாயிலே. 7

7739. கொள்ளி வாயின கூரெயிற் றேனங் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை
கள்ளி வற்றிப்புற் றீந்துவெங் கானங் கழிக்கவே
புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே. 8

7740. எற்றேநினை யென்னொடு சூளறும் வைகலும்
மற்றேதும் வேண்டா வல்வினை யாயின மாய்ந்தறக்
கற்றூறு கார்க்காட் டிடைமேய்ந்தகார்க் கோழிபோய்ப்
புற்றேறிக் கூகூ வெனவழைக் கும்புன வாயிலே. 9

7741. பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியா ரடியன் நாவல வூர னுரைத்தன
மடியாது கற்றிவை யேத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகப் பாடிநின் றாடவல் லார்கில்லை குற்றமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 51. திருவாரூர் : பண் — பழம்பஞ்சுரம்

7742. பத்திமையும் அடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த் தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே. 1

7743. ஐவணமாம் பகழியுடை அடல்மதனன் பொடியாகச்
செவ்வணமாம் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி
மையணவுங் கண்டத்து வளர்சடையெம் ஆரமுதை
எவ்வணம்நான் பிரிந்திருக்கேன் என்னாரூ ரிறைவனையே. 2

7744. சங்கலக்குந் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்துவிடம் உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 3

7745. இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வேன் அயராமே
அங்ஙனம்வந் தெனையாண்ட அருமருந்தென் னாரமுதை
வெங்கனல்மா மேனியனை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 4

7746. செப்பரிய அயனொடுமால் சிந்தித்துந் தெரிவரிய
அப்பெரிய திருவினையே அறியாதே அருவினையேன்
ஒப்பரிய குணத்தானை இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 5

7747. வன்நாகம் நாண்வரையில் அங்கிகணை அரிபகழி
தன்னாகம் உறவாங்கிப் புரமெரித்த தன்மையனை
முன்னாக நினையாத மூர்க்கனேன் ஆக்கைசுமந்(து)
என்னாகப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 6

7748. வன்சயமாய் அடியான்மேல் வருங்கூற்றின் உரம்கிழிய
முன்சயமார் பாதத்தால் முனிந்துகந்த மூர்த்திதனை
மின்செயும்வார் சடையானை விடையானை அடைவின்றி
என்செயநான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 7

7749. முன்னெறிவா னவர்கூடித் தொழுதேத்தும் முழுமுதலை
அந்நெறியை அமரர்தொழும் நாயகனை அடியார்கள்
செந்நெறியைத் தேவர்குலக் கொழுந்தைமறந் திங்ஙனநான்
என்னறிவான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 8

7750. கற்றுளவான் கனியாய கண்ணுதலைக் கருத்தார
உற்றுளனாம் ஒருவனைமுன் இருவர்நினைந் தினிதேத்தப்
பெற்றுள்னாம் பெருமையனைப் பெரிதடியேன் கையகன்றிட்(டு)
எற்றுளனாய்ப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 9

7751. ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 10

7752. வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய
நுங்கிஅமு தவர்க்கருளி நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே. 11

7753. பேரூரும் மதகரியின் உரியானைப் பெரியவர்தஞ்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
ஆரூரன் அடித்தொண்டன் அடியன்சொல் அகலிடத்தில்
ஊரூர னிவைவல்லார் உலகவர்க்கு மேலாரே. 12

திருச்சிற்றம்பலம்

*****

## 52. திருவாலங்காடு : பண் – பழம்பஞ்சுரம்

7754. முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டுஞ் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாவுன் அடியார்க் கடியேன் ஆவேனே. 1

7755. பொய்யே செய்து புறம்புறமே திரிவேன் தன்னைப் போகாமே
மெய்யே வந்திங் கெனையாண்ட மெய்யா மெய்யர் மெய்ப்பொருளே
பையா டரவம் அரைக்கசைத்த பரமா பழைய னூர்மேய
ஐயா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. 2

7756. தூண்டா விளக்கின் நற்சோதீ தொழுவார் தங்கள் துயர்தீர்ப்பாய்
பூண்டாய்எ லும்பைப் புரமூன்றும் பொடியாச் செற்ற புண்ணியனே
பாண்டாழ் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
ஆண்டா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. 3

7757. மறிநே ரொண்கண் மடநல்லார் வலையிற் பட்டு மதிமயங்கி
அறிவே அழிந்தேன் ஐயாநான் மையார் கண்டம் உடையானே
பறியா வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அறிவே ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. 4

7758. வேலங் காடு தடங்கண்ணார் வலையுட் பட்டுன் நெறிமறந்து
மாலங்காடி மறந்தொழிந்தேன் மணியே முத்தே மரகதமே
பாலங் காடீ நெய்யாடீ படர்புன் சடையாய் பழையனூர்
ஆலங் காடா உன்னுடைய அடியார்க் கடியே னாவேனே. 5

7759. எண்ணார் தங்கள் எயிலெய்த எந்தாய் எந்தை பெருமானே
கண்ணாய் உலகங் காக்கின்ற கருத்தா திருத்த லாகாதாய்
பண்ணார் இசைகள் அதுகொண்டு பலரும் ஏத்தும் பழையனூர்
அண்ணா ஆலங் காடாவுண் அடியார்க் கடியே னாவேனே 6

7760. வண்டார் குழலி உமைநங்கை பங்கா கங்கை மணவாள
விண்டார் புரங்கள் எரிசெய்த விடையாய் வேத நெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. 7

7761. பேழ்வாய் அரவின் அணையானும் பெரியமலர் மேல் உறைவானும்
தாழா துன்றன் சரண்பணியத் தழலாய் நின்ற தத்துவனே
பாழாம் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்தன்னை
ஆள்வாய் ஆலங் காடாவுன் னடியார்க் கடியே னாவேனே. 8

7762. எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ் படிகால் எமையாண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற் பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்க ளவைகொண்டு பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாவுன் அடியார்க் கடியே னாவேனே. 9

7763. பத்தர் சித்தர் பலரேத்தும் பரமன் பழைய னூர்மேய
அத்தன் ஆலங் காடன்றன் அடிமைத் திறமே அன்பாகிச்
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவ னூரன் ஒண்டமிழ்கள்
பத்தும் பாடி ஆடுவார் பரம னடியே பணிவாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 53. திருக்கடவூர் மயானம் : பண் – பழம்பஞ்சுரம்

7764. மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரமன் இந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 1

7765. விண்ணோர் தலைவர் வெண்புரிநூல் மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர் கால காலர் கடவூரர்
எண்ணார் புரமூன் றெரிசெய்த இறைவ ருமையோ ரொருபாகம்
பெண்ஆண் ஆவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 2

7766. காயும் புலியின் அதளுடையர் கண்ட ரெண்தோட் கடவூரர்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமே யாய தலைவனார்
பாயும் விடையொன் றதுவேறிப் பலிதேர்ந் துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழும் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 3

7767. நறைசேர் மலரைங் கணையானை நயனத் தீயாற் பொடிசெய்த
இறையா ராவர் எல்லார்க்கும் இல்லை யென்னா தருள்செய்வார்
பறையார் முழவம் பட்டோடு பயிலுந் தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 4

7768. கொத்தார் கொன்றை மதிசூடிக் கோள்நா கங்கள் பூணாக
மத்த யானை உரிபோர்த்து மருப்பு மாமைத் தாலியார்
பத்தி செய்து பாரிடங்கள் பாடி யாடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 5

7769. துணிவார் கீளுங் கோவணமுந் துதைந்து சுடலைப் பொடியணிந்து
பணிமே லிட்ட பாசுபதர் பஞ்ச வடிமார் பினர்கடவூர்த்
திணிவார் குழையார் புரமூன்றுந் தீவாய்ப் படுத்த சேவகனார்
பிணிவார் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 6

7770. காரார் கடலின் நஞ்சுண்ட கண்டர் கடவூ ருறைவாணர்
தேரார் அரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலா லூன்றினார்
ஊர்தா னாவ துலகேழும் உடையார்க் கொற்றி யூர்ஆரூர்
பேரா யிரவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 7

7771. வாடா முலையாள் தன்னோடு மகிழ்ந்து கானில் வேடுவனாய்க்
கோடார் கேழற் பின்சென்று குறுகி விசையன் தவம் அழித்து
நாடா வண்ணம் செருச்செய்து ஆவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 8

7772. வேழம் உரிப்பர் மழுவாளர் வேள்வி அழிப்பர் சிரமறுப்பர்
ஆழி யளிப்பர் அரிதனக்கன் றானைந் துகப்ப ரறமுரைப்பர்
ஏழைத் தலைவர் கடவூரில் இறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 9

7773. மாடம் மல்கு கடவூரில் மறையோ ரேத்தும் மயானத்துப்
பீடை தீர அடியாருக் கருளும் பெருமான் அடிகள்சீர்
நாடி நாவ லாரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடும் அடியார் கேட்பார்மேற் பாவ மான பறையுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 54. திருவொற்றியூர் : பண் – தக்கேசி

7774. அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவும் நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே.

7775. கட்ட னேன்பிறந் தேனுனக் காளாய்க்
காதற் சங்கிலி காரண மாக
எட்டி னால்திக ழுந்திரு மூர்த்தி
யென்செய் வானடி யேனெடுத் துரைக்கேன்

பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன்
பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை
ஒட்டி னேனென்னை நீசெய்வ தெல்லா
மொற்றி யூரெனும் ஊருறை வானே. 2

7776. கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே
கட்டி யேபலர்க் குங்களை கண்ணே
அங்கை நெல்லியின் பழத்திடை யமுதே
அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன்
சங்கும் இப்பியுஞ் சலஞ்சலம் முரல
வயிரம் முத்தொடு பொன்மணி வரன்றி
ஒங்கு மாகடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 3

7777. ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்றால் யாவ
ராகிலென் அன்புடை யார்கள்
தோன்ற நின்றருள் செய்தளித் திட்டாற் சொல்லு
வாரையல் லாதன சொல்லாய்
மூன்று கண்ணுடை யாயடி யேன்கண் கொள்வ
தேகணக் குவழக் காகில்
ஊன்று கோலெனக் காவதொன் றருளாய் ஒற்றி
யூரெனும் ஊருறை வானே. 4

7778. வழித்த லைப்படு வான்முயல் கின்றேன்
உன்னைப்போ லென்னைப் பாவிக்க மாட்டேன்
சுழித்தலைப் பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம்
கழித்தலைப் பட்ட நாயது போல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்து நீயரு ளாயின செய்யாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 5

7779. மானை நோக்கியர் கண்வலைப் பட்டு
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித்
தேனை யாடிய கொன்றையி னாயுன்
சீலமுங் குணமுஞ் சிந்தி யாதே
நானு மித்தனை வேண்டுவ தடியேன்
உயிரொ டுந்நர கத்தழுந் தாமை
ஊன முள்ளன தீர்த்தருள் செய்யாய்
ஒற்றியூரெனும் ஊருறை வானே. 6

7780. மற்றுத் தேவரை நினைந்துனை மறவேன்
எஞ்சி னாரொடு வாழவு மாட்டேன்
பெற்றி ருந்து பெறாதொழி கின்ற
பேதை யேன்பிழைத் திட்டதை யறியேன்
முற்றும் நீயெனை முனிந்திட அடியேன்
கடவ தென்னுனை நான்மற வேனேல்
உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 7

7781. கூடி னாய்மலை மங்கையை நினையாய்
கங்கை யாயிர முகமுடை யாளைச்
சூடி னாயென்று சொல்லிய புக்கால்
தொழும்ப னேனுக்குஞ் சொல்லலு மாமே
வாடி நீயிருந் தென்செய்தி மனனே
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி
ஊடி னாலினி யாவதொன் றுண்டே
யொற்றி யூரெனும் ஊருறை வானே. 8

7782. மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேற் போகுரு டாஎனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்வேன்
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 9

7783. ஓதம் வந்துல வுங்கரை தன்மேல்
ஒற்றி யூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்மறை அங்கம் ஓதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல
சிறுவன் வன்தொண்டன் ஊர னுரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரகதி திண்ணம் நண்ணுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 55. திருப்புன்கூர் : பண் – தக்கேசி

7784. அந்த ணாளனுன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்தன் ஆருயி ரதனை
வவ்வினாய்க் குன்தன் வண்மைகண் டடியேன்
எந்தை நீஎனை நமன்தமர் நலியில்
இவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தையால் வந்துன் திருவடி யடைந்தேன்
செழும் பொழில்திருப் புன்கூ ருளானே. 1

7785. வையகம் முற்றும் மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யும் மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும் பொழில்திருப் புன்கூ ருளானே. 2

7786. ஏதம் நன்னிலம் ஈரறு வேலி
ஏயர்கோ னுற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்தன்மேற் சென்ற
தாதை தாளற எறிந்தசண் டிக்குன்
சடைமிசை மலர் அருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 3

7787. நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தன்
நாவினுக் கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம்புல் லன்என் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூ ருளானே. 4

7788. கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோளரவு சுற்றிக் கடைந்து எழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்டருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடந்தனை யுண்டு
கண்டத் தேவைத்த பித்தநீ செய்த
சீலங் கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 5

7789. இயக்கர் கின்னரர் யமனொடு வருண
ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானரம் நாகம்
வசுக்கள் வான்வர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை
அர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 6

7790. போர்த்த நீள்செவி யாளர்அந் தணர்க்குப்
பொழில்கொள் ஆல்நிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத்
தருளினாய் பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்தனே நின்தன் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 7

7791. மூவெயில் செற்றஞான் றுய்ந்த மூவரி
லிருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
யொருவன், நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ,
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 8

7792. அறிவி னால்மிக்க அறுவகைச் சமயம்
அவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்து

எறியும் மாகடல் இலங்கையர் கோனைத்
துலங்க மால்வரைக் கீழடர்த் திட்டுக்
குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த
செறிவு கண்டுநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே. 9

7793. கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானை
உம்ப ராளியை உமையவள் கோனை
ஊரன் வன்தொண்டன் உள்ளத் தாலுகந்(து)
அன்பி னாற்சொன்ன அருந்தமி ழைந்தோ
டைந்தும் வல்லவர் அருவினை யிலரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 56. திருநீடூர் : பண் – தக்கேசி

7794. ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை
ஒண்ணு தல்தனிக் கண்ணுத லானைக்
கார தார்கறை மாமிடற் றானைக்
கருத லார்புரம் மூன்றெரித் தானை
நீரில் வாளை வரால்குதி கொள்ளும்
நிறைபு னற்கழ னிச்செல்வ நீடூர்ப்
பாரு ளார்பர வித்தொழ நின்ற
பரம னைப்பணி யாவிட லாமே. 1

7795. துன்னு வார்சடைத் தூமதி யானைத்
துயக்கு றாவகை தோன்றுவிப் பானைப்
பன்னும் நான்மறை பாடவல் லானைப்
பார்த்த னுக்கருள் செய்த பிரானை
என்னை இன்னரு ளெய்துவிப் பானை
ஏதி லார்தமக் கேதிலன் றன்னைப்
புன்னை மாதவி போதலர் நீடூர்ப்
புனித னைப்பணி யாவிட லாமே. 2

7796. கொல்லும் மூவிலை வேலுடை யானைக்
கொடிய காலனை யுங்குமைத் தானை
நல்ல வாநெறி காட்டுவிப் பானை
நாளும் நாம்உகக் கின்ற பிரானை
அல்ல லில்லரு ளேபுரி வானை
ஆடும் நீர்வயல் சூழ்புனல் நீடூர்க்
கொல்லை வெள்ளெரு தேறவல் லானைக்
கூறி நாம்பணி யாவிட லாமே. 3

7797. தோடு காதிடு தூநெறி யானைத்
தோற்ற முந்துறப் பாயவன் றன்னைப்
பாடும் மாமறை பாடவல் லானைப்
பைம்பொழிற் குயில் கூவிட மாடே
ஆடும் மாமயில் அன்னமோ டாட
அலைபு னற்கழ னித்திரு நீடூர்
வேட னாய பிரானவன் றன்னை
விரும்பி நாம்பணி யாவிட லாமே. 4

7798. குற்ற மொன்றடி யார்இல ரானாற்
கூடு மாறத னைக்கொடுப் பானைக்
கற்ற கல்வியி லும்மினி யானைக்
காணப் பேணும வர்க்கெளி யானை
முற்ற ஐஞ்சுந் துறந்திருப் பானை
மூவ ரின்முத லாயவன் றன்னைச்
சுற்று நீள்வயல் சூழ்திரு நீடூர்த்
தோன்ற லைப்பணி யாவிட லாமே. 5

7799. காடி லாடிய கண்ணுத லானைக்
கால னைக்கடிந் திட்ட பிரானை
பாடி யாடும் பரிசே புரிந்தானைப்
பற்றி னோடுசுற் றம்மொழிப் பானைத்
தேடி மாலயன் காண்பரி யானைச்
சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்
கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க்
கூத்த னைப்பணி யாவிட லாமே. 6

7800. விட்(டி) லங்கெரி யார்கையி னானை
வீடி லாத வியன்புக ழானைக்
கட்டு வாங்கந் தரித்த பிரானைக்
காதி லார்கன கக்குழை யானை
விட்டி லங்குபுரி நூலுடை யானை

வீந்த வர்தலை யோடுகை யானைக்
கட்டி யின்கரும் போங்கிய நீடூர்க்
கண்டு நாம்பணி யாவிட லாமே. 7

7801. மாய மாய மனங்கெடுப் பானை
மனத்து ளேமதி யாயிருப் பானைக்
காய மாயமும் ஆக்குவிப் பானைக்
காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை
ஓயு மாறுறு நோய்புணர்ப் பானை
ஒல்லை வல்வினை கள்கெடுப் பானை
வேய்கொள் தோளுமை பாகனை நீடூர்
வேந்த னைப்பணி யாவிட லாமே. 8

7802. கண்ட முங்கறுத் திட்டபி ரானைக்
காணப் பேணு மவர்க்கெளி யானைத்
தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத்
துன்ப முந்துறந் தின்பினி யானைப்
பண்டை வல்வினை கள்கெடுப் பானைப்
பாக மாம்மதி யானவன் றன்னைக்
கெண்டை வாளை கிளர்புனல் நீடூர்க்
கேண்மை யாற்பணி யாவிட லாமே. 9

7803. அல்ல லுள்ளன தீர்த்திடு வானை
அடைந்த வர்க்கமு தாயிடு வானைக்
கொல்லை வல்லர வம்மசைத் தானைக்
கோல மார்கரி யின்னுரி யானை
நல்ல வர்க்கணி யானவன் றன்னை
நானுங் காதல்செய் கின்ற பிரானை
எல்லி மல்லிகை யேகமழ் நீடு
ரேத்தி நாம்பணி யாவிட லாமே. 10

7804. பேரோ ராயிர மும்முடை யானைப்
பேசினாற் பெரி தும்மினி யானை
நீரூர் வார்சடை நின்மலன் றன்னை
நீடூர் நின்றுகந் திட்ட பிரானை
ஆரூ ரன்னடி காண்பதற் கன்பாய்
ஆதரித் தழைத் திட்டவிம் மாலை
பாரூ ரும்பர வித்தொழ வல்லார்
பத்த ராய்முத்தி தாம்பெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 57. திருவாழ்கொளிபுத்தூர் : பண் – தக்கேசி

7805. தலைக்க லன்தலை மேல்தரித் தானைத்
தன்னை யென்னை நினைக்கத் தருவானைக்
கொலைக்கை யானையுரி போர்த்துகந் தானைக்
கூற்று தைத்த குரைசேர் கழலானை
அலைத்த செங்கண்விடை யேற வல்லானை
ஆணை யாலடி யேனடி நாயேன்
மலைத்தசெந் நெல்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந்(து) தென்நினைக் கேனே. 1

7806. படைக்கட் சூலம் பயிலவல் லானைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானைக்
கடைக்கட் பிச்சைக்கிச்சை காதலித்தானைக்
காமன் ஆகம்தனைக் கட்டழித் தானைச்
சடைக்கட் கங்கையைத் தாழ வைத்தானைத்
தண்ணீர் மண்ணிக்கரை யானைத் தக்கானை
மடைக்கண் நீல(ம்)மலர் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 2

7807. வெந்த நீறுமெய் பூசவல் லானை
வேத மால்விடை யேறவல் லானை
அந்தம் ஆதி யறிதற் கரியானை
ஆற லைத்த சடையானை யம்மானைச்
சிந்தை என்தடு மாற்றறுப் பானைத்
தேவ தேவனென் சொல்முனி யாதே
வந்தெனுள் எம்புகும் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 3

7808. தடங்கை யால்மலர் தூய்த்தொழு வாரைத்
தன்னடிக் கேசெல்லு மாறுவல் லானைப்
படங்கொள் நாகம்அரை யார்த்துகந் தானை
பல்லின் வெள்ளைத்தலை ஊணுடை யானை
நடுங்க ஆனையுரி போர்த்துகந் தானை
நஞ்ச முண்டுகண் டங்கறுத் தானை
மடந்தை பாகனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 4

7809. வளைக்கை முன்கை மலைமங்கை மணாளன்
மார னாருடல் நீறெழச் செற்றுத்
துளைத்த அங்கத்தொடு தூமலர்க் கொன்றை

தோலு(ம்) நூலுந்துதைந் தவரை மார்பன்
திளைக்குந் தெவ்வர் திரிபுரம் மூன்றும்
அவுணர் பெண்டிரும் மக்களும் வேவ
வளைத்த வில்லியை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 5

7810. திருவின் நாயக னாகிய மாலுக்
கருள்கள் செய்திடுந் தேவர் பிரானை
உருவி னானைஒன் றாஅறி வொண்ணா
மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவில் ஏந்தியோர் கேழற்பின் சென்று
செங்கண் வேடனாய் என்னொடும் வந்து
மருவி னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 6

7811. எந்தையை யெந்தை தந்தை பிரானை
ஏத மாயஇடர் தீர்க்கவல் லானை
முந்தி யாகிய மூவரின் மிக்க
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைக்
கந்தின் மிக்க கரியின் மருப்போடு
கார கிற்கவ ரிம்மயிர் மண்ணி
வந்து வந்திழி வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 7

7812. தேனை யாடிய கொன்றையி னானைத்
தேவர் கைதொழுந் தேவர் பிரானை
ஊன மாயின தீர்க்கவல் லானை
ஒற்றை ஏற்றனை நெற்றிக்கண் ணானைக்
கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த
கள்ளப் பிள்ளைக்குங் காண்பரி தாய
வான நாடனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 8

7813. காளை யாகி வரையெடுத் தான்றன்
கைக ளிற்றவன் மொய்தலை யெல்லாம்
மூளை போத ஒருவிரல் வைத்த
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைப்
பாளை தெங்கு பழம்விழ மண்டிச்
செங்கண் மேதிகள் சேடெறிந் தெங்கும்
வாளை பாய்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 9

7814. திருந்த நான்மறை பாடவல் லானைத்
தேவர்க் குந்தெரி தற்கரி யானைப்
பொருந்த மால்விடை யேறவல் லானைப்
பூதிப்பை புலித் தோலுடை யானை
இருந்துண் தேரரும் நின்றுண் சமணும்
ஏச நின்றவன் ஆருயிர்க் கெல்லாம்
மருந்தன் னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 10

7815. மெய்யனை மெய்யில் நின்றுணர் வானை
மெய்யி லாதவர் தங்களுக் கெல்லாம்
பொய்ய னைப்புர மூன்றெரித் தானைப்
புனித னைப்புலித் தோலுடை யானைச்
செய்ய னைவெளி யதிரு நீற்றில்
திகழும் மேனியன் மான்மறி யேந்தும்
மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனே. 11

7816. வளம்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்னினைக் கேனென்(று)
உளங்கு ளிர்தமிழ் ஊரன்வன் தொண்டன்
சடையன் காதலன் வனப்பகை யப்பன்
நலம்கி ளர்வயல் நாவலர் வேந்தன்
நங்கை சிங்கடி தந்தை பயந்த
பலம்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற்
பறையு மாஞ்செய்த பாவங்கள் தானே. 12

திருச்சிற்றம்பலம்

••••

## 58. திருக்கழுமலம் : பண் – தக்கேசி

7817. சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தஎந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கோர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தஎம் மானை
ஏதிலென் மனத்துக் கோரிரும் புண்டநீரை
எண்வகை யொருவனை எங்கள் பிரானைக்

காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 1

7818. மற்றொரு துணையினி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணையென்று கருதேன்
துணையென்று நான்தொழப் பட்டவொண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவ ரறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 2

7819. திருத்தினை நகருறை சேந்தனப் பனென்
செய்வினை யறுத்திடுஞ் செம்பொனை யம்பொன்
ஒருத்தனை யல்லதிங் காரையும் உணரேன்
உணர்வுபெற் றேன்உய்யுங் காரணந் தன்னால்
விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்தெங்குங் காணமாட் டாதுவிட் டிருந்தேன்
கருத்தனை நிருத்தஞ்செய் காலனை வேலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 3

7820. மழைக்கரும் பும்மலர்க் கொன்றையி னானை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு காலினிப் போய்ப்பிற வாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்
குழைக்கருங் கண்டனைக் கண்டுகொள் வானே
பாடுகின்றேன் சென்று கூடவும் வல்லேன்
கழைக்கரும் புங்கத லிப்பல சோலைக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 4

7821. குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங்
கொடுமழு வாட்படைக் குழகனே யென்றும்
வண்டலம் பும்மலர்க் கொன்றைய னென்றும்
வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே
பண்டைநம் பலமன முங்களைந் தொன்றாய்ப்
பசுபதி பதிவின விப்பல நாளுங்
கண்டலங் கழிக்கரை ஓதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 5

7822. வரும்பெரும் வல்வினை யென்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பியென் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டிநின் றேதொழு தேன்விதி யாலே
அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவனென் பிறவிவே ரறுக்குங்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 6

7823. அயலவர் பரவவும் அடியவர் தொழவும்
அன்பர்கள் சாயலுள் அடையலுற் றிருந்தேன்
முயல்பவர் பின்சென்று முயல்வலை யானை
படுமென மொழிந்தவர் வழிமுழு தெண்ணிப்
புயலினைத் திருவினைப் பொன்னின தொளியை
மின்னின துருவை என்னிடைப் பொருளைக்
கயலினம் சேலொடு வயல்விளை யாடுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 7

7824. நினைதரு பாவங்கள் நாசங்க ளாக
நினைந்துமுன் தொழுதெழப் பட்டவொண் சுடரை
மலைதரு மலைமகள் கணவனை வானோர்
மாமணி மாணிக்கத் தைம்மறைப் பொருளைப்
புனைதரு புகழினை எங்கள தொளியை
இருவரு மொருவனென் றுணர்வரி யவனைக்
கனைதரு கருங்கடல் ஓதம்வந் துலவுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 8

7825. மறையிடைத் துணிந்தவர் மனையிடை யிருப்ப
வஞ்சனை செய்தவர் பொய்கையு மாயத்
துறையுறக் குளித்துள தாகவைத் துய்த்த
உண்மையெ னுந்தக வின்மையை யோரேன்
பிறையுடைச் சடையனை எங்கள் பிரானைப்
பேரரு ளாளனைக் காரிருள் போன்ற
கறையணி மிடறுடை யடிகளை யடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 9

7826. செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்
விரவிய சடைமுடி அடிகளை நினைந்திட்(டு)

அழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லால்
அறிவரி தவன்திரு வடியிணை இரண்டுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்துந்
தொழுமல ரெடுத்தகை யடியவர் தம்மைத்
துன்பமும் இடும்பையுஞ் சூழகி லாவே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 59. திருவாரூர் : பண் — தக்கேசி

7827. பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக மும்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி யொண்ணா
எம்மா னையெளி வந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 1

7828. கட்ட மும்பிணி யுங்களை வானைக்
காலற் சீறிய காலுடை யானை
விட்ட வேட்கைவெந் நோய்களை வானை
விரவி னால்விடு தற்கரி யானைப்
பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை
வாரா மேதவி ரப்பணிப் பானை
அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 2

7829. கார்க்குன் றமழை யாய்ப்பொழி வானைக்
கலைக்கெ லாம்பொரு ளாயுடன் கூடிப்
பார்க்கின் றவுயிர்க் குப்பரிந் தானைப்
பகலுங் கங்குலு மாகிநின் றானை
ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை
உணரும் நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின் றகட லைமலை தன்னை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 3

7830. செத்த போதினில் முன்நின்று நம்மைச்
சிலர்கள் கூடிச் சிரிப்பதன் முன்னம்
வைத்த சிந்தையுண் டேமன முண்டே
மதியுண் டேவிதி யின்பய னுண்டே
முத்த னெங்கள் பிரானென்று வானோர்
தொழநின் றதிமி லேறுடை யானை
அத்த னெந்தை பிரானெம் பிரானை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 4

7831. செறிவுண் டேல்மனத் தாற்றெளி வுண்டேல்
தேற்றத் தால்வருஞ் சிக்கன வுண்டேல்
மறிவுண் டேல்மறு மைப்பிறப் புண்டேல்
வாணாள் மேற்செல்லும் வஞ்சனை யுண்டேல்
பொறிவண்(டு) யாழ்செயும் பொன்மலர்க் கொன்றைப்
பொன்போ லுஞ்சடை மேற்புனைந் தானை
அறிவுண் டேஉட லத்துயி ருண்டே
ஆரூ ரானை மறக்கலு மாமே. 5

7832. பொள்ள லிவ்வுட லைப்பொரு ளென்று
பொருளுஞ் சுற்றமும் போகமு மாகி
மெள்ள நின்றவர் செய்வன வெல்லாம்
வாரா மேதவிர்க் கும்விதி யானை
வள்ளல் எந்தமக் கேதுணை யென்று
நாள்நா ளும்அம ரர்தொழு தேத்தும்
அள்ள லங்கழ னிப்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 6

7833. கரியா னையுரி கொண்டகை யானைக்
கண்ணின் மேலொரு கண்ணுடை யானை
வரியா னைவருத் தம்களை வானை
மறையா னைக்குறை மாமதி சூடற்
குரியா னையுல கத்துயிர்க் கெல்லாம்
ஒளியா னைஉகந் துள்கிநண் ணாதார்க்(கு)
அரியா னையடி யேற்கெளி யானை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 7

7834. வாளா நின்று தொழும்அடி யார்கள்
வான்ஆ ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்

நாள்நா ளும்மல ரிட்டு வணங்கார்
நம்மை ஆள்கின்ற தன்மையை யோரார்
கேளா நான்கிடந் தேயுழைக் கின்றேன்
கிளைக்கெ லாந்துணை யாமெனக் கருதி
ஆளா வான்பலர் முன்பழைக் கின்றேன்
ஆரூ ரானை மறக்கலு மாமே. 8

7835. விடக்கை யேபெருக் கிப்பல நாளும்
வேட்கை யாற்பட்ட வேதனை தன்னைக்
கடக்கி லேன்நெறி காணவு மாட்டேன்
கண்கு ழிந்திரப் பார்கையி லொன்றும்
இடக்கி லேன்பர வைத்திரைக் கங்கைச்
சடையா னையுமை யாளையோர் பாகத்
தடக்கி னானைஅந் தாமரைப் பொய்கை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 9

7836. ஒட்டி யாட்கொண்டு போயொளித் திட்ட
உச்சிப் போதனை நச்சர வார்த்த
பட்டி யைப்பக லையிருள் தன்னைப்
பாவிப் பார்மனத் தூறுமத் தேனைக்
கட்டி யைக்கரும் பின்றெளி தன்னைக்
காத லாற்கடற் சூர்தடிந் திட்ட
செட்டி யப்பனைப் பட்டனைச் செல்வ
ஆரூ ரானை மறக்கலு மாமே. 10

7837. ஓரூ ரென்றுல கங்களுக் கெல்லாம்
உரைக்க லாம்பொரு ளாயுடன் கூடிக்
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
முடியன் காரிகை காரண மாக
ஆரூ ரைம்மறத் தற்கரி யானை
யம்மான் றன்றிருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரூ ரன்னடி நாயுரை வல்லார்
அமர லோகத் திருப்பவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 60. திருவிடைமருதூர் : பண் — தக்கேசி

7838. கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தாற்
கைப்பர் பாழ்புக மற்றது போலப்
பழுது நானுழன் றுள்தடு மாறிப்
படுசு ழித்தலைப் பட்டனன் எந்தாய்
அழுது நீயிருந் தென்செய்தி மனனே
அங்க ணாஅர னேயென மாட்டா
இழுதை யேனுக்கோர் உய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. 1

7839. நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே
நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை யறிந்தேன்
அஞ்சி னேன்நம னாரவர் தம்மை
உரைப்பன் நானுன சேவடி சேர
வுணரும் வாழ்க்கையை யொன்றறி யாத
இரைப்ப னேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. 2

7840. புல்நு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருளிலை நாளும்
என்னெ னக்கினி இற்றைக்கு நாளை
யென்றி ருந்திட றுற்றனன் எந்தாய்
முன்ன மேயுன சேவடி சேரா
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
இன்னம் என்றனக் குய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. 3

7841. முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவும் மாட்டேன்
சிறுச்சிறி தேஇரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடுமெம் மானே
ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா
எந்தை நீயெனக் குய்வகை யருளாய்
இடைம ருதுறை யெந்தை பிரானே. 4

7842. அழிப்ப ரைவர் புரவுடை யார்கள்
ஐவ ரும்புர வாசற வாண்டு
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றையுனக் கேபொறை யானேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள் தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கையீ தாகில்
இழித்தே னென்றனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. 5

7843. குற்றம் தன்னொடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய வாயின கொடுமைகள் செய்தேன்
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்
எற்று ளேனெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. 6

7844. கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்
குற்றம் செற்றம் இவைமுத லாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டில் ஐம்புல னென்வச மல்ல
நடுக்க முற்றதோர் மூப்புவந் தெய்த
நமன் தமர்நர கத்திட லஞ்சி
இடுக்க ணுற்றன னுய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. 7

7845. ஐவ கையரை யர்அவ ராகி
ஆட்சி கொண்டொரு காலவர் நீங்கார்
அவ்வ கையவர் வேண்டுவ தானால்
அவர வர்வழி யொழுகிநான் வந்து
செய்வ கையறி யேன்சிவ லோகா
தீவ ணாசிவ னேயெரி யாடீ
எவ்வ கையெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. 8

7846. ஏழை மானுட இன்பினை நோக்கி
இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
வாழை தான்பழுக் கும்நமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போத மும்பொரு ளொன்றறி யாத
ஏழை யேனுக்கோ ருய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே. 9

7847. அரைக்குஞ் சந்தனத் தோடகில் உந்தி
ஐவ னம்சுமந் தார்த்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல்
இடைம ருதுறை யெந்தை பிரானை
உரைக்கு மூர னொளிதிகழ் மாலை
உள்ளத் தாலுகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையு மின்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 61. திருவேகம்பம் : பண் – தக்கேசி

7848. ஆலந் தான்உகந் தமுதுசெய் தானை
ஆதி யைஅம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 1

7849. உற்ற வர்க்குத வும்பெரு மானை
ஊர்வ தொன்றுடை யானும்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை
அற்ற மில்புக ழாளுமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற

கற்றை வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 2

7850. திரியும் முப்புரந் தீப்பிழம் பாகச்
செங்கண் மால்விடை மேல்திகழ் வானைக்
கரியி னீருரி போர்த்துகந் தானைக்
காம னைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாளுமை நங்கை
மருவி யேத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை யெங்கள் பிரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 3

7851. குண்ட லம்திகழ் காதுடை யானைக்
கூற்று தைத்த கொடுந்தொழி லானை
வண்ட லம்புமலர்க் கொன்றையி னானை
வாள ராமதி சேர்சடை யானைக்
கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை
கெழுமி யேத்தி வழிபடப் பெற்ற
கண்டம் நஞ்சுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 4

7852. வெல்லும் வெண்மழு ஒன்றுடை யானை
வேலை நஞ்சுண்ட வித்தகன் தன்னை
அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை
அரும றையவை அங்கம்வல் லானை
எல்லை யில்புக ழாளுமை நங்கை
யென்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை யெங்கள் பிரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 5

7853. திங்கள் தங்கிய சடையுடை யானைத்
தேவ தேவனைச் செழுங்கடல் வளருஞ்
சங்க வெண்குழைக் காதுடை யானைச்
சாம வேதம் பெரிதுகப் பானை
மங்கை நங்கை மலைமகள் கண்டு
மருவி யேத்தி வழிபடப் பெற்ற
கங்கை யாளனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 6

7854. விண்ண வர்தொழு தேத்தநின் றானை
வேதம் தான்விரித் தோதவல் லானை
நண்ணி னார்க்கென்றும் நல்லவன் றன்னை
நாளும் நாமுகக் கின்ற பிரானை
எண்ணில் தொல்புக ழாளுமை நங்கை
யென்றும் யேத்தி வழிபடப் பெற்ற
கண்ணு மூன்றுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 7

7855. சிந்தித் தென்றும் நினைந்தெழு வார்கள்
சிந்தை யில்திக ழுஞ்சிவன் றன்னைப்
பந்தித் தவினைப் பற்றறுப் பானைப்
பாலோ டானைஞ்சும் ஆட்டுகந் தானை
அந்த மில்புக ழாளுமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற
கந்த வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 8

7856. வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம்
வாலி யபுரம் மூன்றெரித் தானை
நிரம்பி யதக்கன் றன்பெரு வேள்வி
நிரந்த ரஞ்செய்த நிட்கண் டகனைப்
பரந்த தொல்புக ழாளுமை நங்கை
பரவி யேத்தி வழிபடப் பெற்ற
கரங்க ளெட்டுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 9

7857. எள்க லின்றி யிமையவர் கோனை
ஈச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துமை நங்கை
வழிப டச்சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட வஞ்சி
வெருவி யோடித் தழுவவெளிப் பட்ட
கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 10

7858. பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப்
பெரிய எம்பெரு மானென் றெப்போதுங்

கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக்
குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை ஈரைந்தும் வல்லார்
நன்னெறி யுல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 62. திருக்கோலக்கா : பண் – தக்கேசி

7859. புற்றில் வாளர(வு) ஆர்த்த பிரானை
பூத நாதனைப் பாதமே தொழுவார்
பற்று வான்துணை யெனக்கெளி வந்த
பாவ நாசனை மேவரி யானை
முற்ற லார்திரி புரமொரு மூன்றும்
பொன்ற வென்றிமால் வரைஅரி அம்பாக்
கொற்ற வில்அங்கை ஏந்திய கோனைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 1

7860. அங்கம் ஆறும்மா மறையொரு நான்கும்
ஆய நம்பனை வேய்புரை தோளி
தங்கு மாதிரு வுருவுடை யானைத்
தழலம திச்சடை மேற்புனைந் தானை
வெங்கண் ஆனையின் ஈருரி யானை
விண்ணு ளாரொடு மண்ணுளார் பரசும்
கொங்கு லாம்பொழிற் குரவெறி கமழுங்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 2

7861. பாட்ட கத்திசை யாகிநின் றானைப்
பத்தர் சித்தம் பரிவினி யானை
நாட்ட கத்தேவர் செய்கையு ளானை
நட்ட மாடியை நம்பெரு மானைக்
காட்ட கத்துறு புலியுரி யானைக்
கண்ணோர் மூன்றுடை அண்ணலை அடியேன்
கோட்ட கப்புன லார்செழுங் கழனிக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 3

7862. ஆத்தம் என்றெனை ஆளுகந் தானை
அமரர் நாதனைக் குமரனைப் பயந்த
வார்த்த யங்கிய முலைமட மானை
வைத்து வான்மிசைக் கங்கையைக் கரந்த
தீர்த்த னைச்சிவ னைச்செழுந் தேனைத்
தில்லை யம்பலத் துள்நிறைந் தாடுங்
கூத்த னைக்குரு மாமணி தன்னைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 4

7863. அன்று வந்தெனை அகலிடத் தவர்முன்
ஆள தாகஎன் றாவணங் காட்டி
நின்று வெண்ணெய்நல் லூர்மிசை யொளித்த
நித்தி லத்திரள் தொத்தினை முத்திக்
கொன்றி னான்றனை உம்பர் பிரானை
உயரும் வல்லர ணங்கெடச் சீறுங்
குன்ற வில்லியை மெல்லிய லுடனே
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 5

7864. காற்றுத் தீப்புன லாகிநின் றானைக்
கடவு ளைக்கொடு மால்விடை யானை
நீற்றுத் தீயுரு வாய்நிமிர்ந் தானை
நிரம்பு பல்கலை யின்பொரு ளாளே
போற்றித் தன்கழல் தொழுமவ னுயிரைப்
போக்கு வானுயிர் நீங்கிடத் தாளால்
கூற்றைத் தீங்குசெய் குரைகழ லானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 6

7865. அன்ற யன்சிரம் அரிந்ததிற் பலிகொண்
டமர ருக்கருள் வெளிப்படுத் தானைத்
துன்று பைங்கழ லிற்சிலம் பார்த்த
சோதி யைச்சுடர் போலொளி யானை
மின்த யங்கிய இடைமட மங்கை
மேவும் ஈசனை வாசமா முடிமேல்
கொன்றை யஞ்சடைக் குழகனை யழகார்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 7

7866. நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்

தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை யெண்கணம் இறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 8

7867. அரக்கன் ஆற்ற லழித்தவன் பாட்டுக்
கன்றி ரங்கிய வென்றியி னானைப்
பரக்கும் பாரளித் துண்டுகந் தவர்கள்
பரவி யும்பணி தற்கரி யானைச்
சிரக்கண் வாய்செவி மூக்குயர் காய
மாகித் தீவினை தீர்த்தஎம் மானைக்
குரக்கி னம்குதி கொண்டுகள் வயல்சூழ்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 9

7868. கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக் காவுளெம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி அடியவர் விரும்பப்
பயிலும் நாவலா ரூரன்வன் தொண்டன்
நாடி ரங்கிமுன் னறியுமந் நெறியால்
நவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடம்நவின் றான்பாற்
கதியு மெய்துவர் பதியவர்க் கதுவே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 63. நம்பி யென்ற திருப்பதிகம் : பண் – தக்கேசி

7869. மெய்யை முற்றப்பொடிப் பூசியோர் நம்பி
வேதம்நான் கும்விரித் தோதியோர் நம்பி
கையிலோர் வெண்மழு வேந்தியோர் நம்பி
கண்ணுமூன் றுமுடை யாயொரு நம்பி
செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்த நம்பியென்னை ஆளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 1

7870. திங்கள் நம்பிமுடி மேல்அடி யார்பாற்
சிறந்த நம்பிபிறந் தவுயிர்க் கெல்லாம்
அங்கண் நம்பியருள் மால்விசும் பாளும் அ
மரர் நம்பிகும ரன்முதற் றேவர்
தங்கள் நம்பிதவத் துக்கொரு நம்பி
தாதை யென்றுன் சரண்பணிந் தேத்தும்
எங்கள் நம்பியெனை ஆளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 2

7871. வருந்த அன்றுமத யானை யுரித்த
வழக்கு நம்பிமுழக் குங்கடல் நஞ்சம்
அருந்து நம்பியம ரர்க்கமு தீந்த
அருளென் நம்பிபொரு ளால்வரு நட்டம்
புரிந்த நம்பிபுரி நூலுடை நம்பி
பொழுதும்விண் ணும்முழு தும்பல வாகி
இருந்த நம்பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 3

7872. ஊறு நம்பிஅமு தாஉயிர்க் கெல்லாம்
உரியநம் பிதெரி யம்மறை யங்கங்
கூறும் நம்பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்தநம் பிகுமை யாப்புல னைந்துஞ்
சீறு நம்பிதிரு வெள்ளடை நம்பி
செங்கண்வெள் ளைச்செழுங் கோட்டெரு தென்றும்
ஏறு நம்பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 4

7873. குற்ற நம்பிகுறு காரெயில் மூன்றைக்
குலைத்தநம் பிசிலை யாவரை கையில்
பற்று நம்பிபர மானந்த வெள்ளம்
பணிக்கும்நம் பியெனப் பாடுத லல்லால்
மற்று நம்பியுனக் கென்செய வல்லேன்
மதியி லேன்படு வெந்துய ரெல்லாம்
எற்று நம்பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 5

7874. அரித்த நம்பிஅடி கைதொழு வார்நோய்
ஆண்டநம்பி முன்னை யீண்டுல கங்கள்
தெரித்த நம்பியொரு சேவுடை நம்பி

சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடந்
தரித்த நம்பிசம யங்களின் நம்பி
தக்கன்றன் வேள்விபுக் கன்றிமை யோரை
இரித்த நம்பியென்னை யாளுடை நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 6

7875. பின்னைநம் பும்புயத் தான்நெடு மாலும்
பிரமனும் என்றிவர் நாடியுங் காணா
உன்னை நம்பியொரு வர்க்கெய்த லாமே
உலகுநம் பியுரை செய்யும தல்லால்
முன்னை நம்பிபின்னும் வார்சடை நம்பி
முழுதிவை யித்தனை யுந்தொகுத் தாண்ட
தென்னை நம்பியெம் பிரானாய நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 7

7876. சொல்லை நம்பிபொரு ளாய்நின்ற நம்பி
தோற்ற மீறுமுத லாகிய நம்பி
வல்லை அம்பிஅடி யார்க்கருள் செய்ய
வருந்தி நம்பிஉனக் காட்செய கில்லார்
அல்லல் நம்பிபடு கின்றதென் நாடி
அணங்கொரு பாகம்வைத் தெண்கணம் போற்ற
இல்ல நம்பியிடு பிச்சைகொள் நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 8

7877. காண்டு நம்பிகழற் சேவடி யென்றுங்
கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை
ஆண்டு நம்பியவர் முன்கதி சேர
அருளு நம்பிகுரு மாப்பிறை பாம்பைத்
தீண்டு நம்பிசென்னி யிற்கன்னி தங்கத்
திருத்து நம்பிபொய்ச் சமண்பொரு ளாகி
ஈண்டு நம்பியிமை யோர்தொழு நம்பி
யெழுபிறப் புமெங்கள் நம்பிகண் டாயே. 9

7878. கரத்தி நம்பிகசி யாதவர் தம்மைக்
கசிந்தவர்க் கிம்மையோ டம்மையி லின்பம்
பெருக்கு நம்பிபெரு கக்கருத்தா. . . . . . . . 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 64. திருத்தினை நகர் : பண் – தக்கேசி

7879. நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்ற மில்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரிவரால் உகளுஞ்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 1

7880. பிணிகொ ளாக்கை பிறப்பிறப் பென்னும்
இதனைநீக்கி ஈசன் திருவடி யிணைக்காள்
துணிய வேண்டிடிற் சொல்லுவன் கேள்நீ
அஞ்சல் நெஞ்சமே வஞ்சர்வாழ் மதில்மூன்(று)
அணிகொள் வெஞ்சிலை யாலுகச் சீறும்
ஐயன் வையகம் பரவிநின் றேத்துந்
திணியும் வார்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 2

7881. வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேல்எரு தேறு
மூர்த்தி யைமுத லாய பிரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்தும்
அப்பன் ஒப்பிலா முலையுமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருள்
சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே. 3

7882. பாவ மேபுரிந் தகலிடம் தன்னிற்
பலப கர்ந்தல மந்துஉயிர் வாழ்க்கைக்(கு)
ஆவ வென்றுழந் தயர்ந்துவீ ழாதே
அண்ணல் தன்திறம் அறிவினாற் கருதி
மாவின் ஈருரி உடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 4

7883. ஒன்ற லாவுயிர் வாழ்க்கையை நினைந்திட்
டுடல்த ளர்ந்தரு மாநிதி யியற்றி
என்றும் வாழலா மெமக்கெனப் பேசும்

இதுவும் பொய்யென வேநினை யுளமே
குன்று லாவிய புயமுடை யானைக்
கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்
சென்றெ லாம்பயில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 5

7884. வேந்த ராய்உல காண்டறம் புரிந்து
வீற்றி ருந்தஇவ் வுடல்இது தன்னைத்
தேய்ந்தி றந்துவெந் துயருழந் திடுமிப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே
பாந்தள் அங்கையி லாட்டுகந் தானைப்
பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 6

7885. தன்னில் ஆசறு சித்தமு மின்றித்
தவம்மு யன்றவ மாயின பேசிப்
பின்ன லார்சடை கட்டியென் பணிந்தால்
பெரிதும் நீந்துவ தரிதது நிற்க
முன்னெ லாம்முழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 7

7886. பரிந்த சுற்றமும் மற்றுவன் துணையும்
பலருங் கண்டழு தெழவுயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சயம் அறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்த டங்கண்ணி பங்கனை உயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 8

7887. நமையெ லாம்பலர் இகழ்ந்துரைப் பதன்முன்
நன்மை யொன்றிலாத் தேரர்புன் சமணாஞ்
சமய மாகிய தவத்தினார் அவத்தத்
தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்
உமையோர் கூறனை ஏறுகந் தானை
யும்பர் ஆதியை யெம்பெரு மானைச்
சிமயம் ஆர்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 9

7888. நீடு பொக்கையிற் பிறவியைப் பழித்து
நீங்கலா மென்று மனத்தினைத் தெருட்டிச்
சேடு லாம்பொழிற் றிருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினை திருவடி யிணைதான்
நாடெ லாம்புகழ் நாவலூ ராளி
நம்பி வன்றொண்ட னூர னுரைத்த
பாட லாந்தமிழ் பத்திவை வல்லார்
முத்தி யாவது பரகதிப் பயனே. 10

திருச்சிற்றம்பலம்

◆◆◆◆◆

## 65. திருநின்றியூர் : பண் – தக்கேசி

7889. திருவும் வண்மையும் திண்திற லரசுஞ்
சிலந்தி யார்செய்த செய்பணி கண்டு
மருவு கோச்செங்க ணான்தனக் களித்த
வார்த்தை கேட்டுநுன் மலரடி யடைந்தேன்
பெருகு பொன்னிவந் துந்துபன் மணியைப்
பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித்
தெருவுந் தெற்றியும் முற்றமும் பற்றித்
திரட்டுந் தென்திரு நின்றியூ ரானே. 1

7890. அணிகொ ளாடையம் பூணணி மாலை
யமுது செய்தமு தம்பெறு சண்டி
இணைகொ ளேழெழு நூறிரு பனுவ
லீன்ற வன்திரு நாவினுக் கரையன்
கணைகொள் கண்ணப்ப னென்றிவர் பெற்ற
காத லின்னரு ளாதரித் தடைந்தேன்
திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியுஞ்
செல்வத் தென்திரு நின்றியூ ரானே. 2

7891. மொய்த்த சீர்முந்நூற் றறுபது வேலி
மூன்று நூறுவே தியரொடு நுனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி
ஓங்கு நின்றியூ ரென்றுனக் களிப்பப்
பத்தி செய்தவப் பரசு ராமற்குப்
பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்குஞ்
செல்வத் தென்திரு நின்றியூ ரானே. 3

7892.இரவி நீள்சுட ரெழுவதன் முன்னம்
எழுந்து தன்முலைக் கலசங்க ளேந்திச்
சுரபி பால்சொரிந் தாட்டிநின் பாதம்
தொடர்ந்த வார்த்தை திடம்படக் கேட்டுப்
பரவி உள்கிவன் பாசத்தை யறுத்துப்
பரம வந்துநுன் பாதத்தை யடைந்தேன்
நிரவி நித்திலம் அத்தகு செம்பொ
னளிக்குந் தென்திரு நின்றியூ ரானே. 4

7893.வந்தோ ரிந்திரன் வழிபட மகிழ்ந்து
வான நாடுநீ ஆள்கென அருளிச்
சந்தி மூன்றிலுந் தாபரம் நிறுத்திச்
சகளி செய்திறைஞ்(சு) அகத்தியர் தமக்குச்
சிந்து மாமணி யணிதிருப் பொதியிற்
சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன்
செந்தண் மாமலர்த் திருமகள் மருவுஞ்
செல்வத் தென்திரு நின்றியூ ரானே. 5

7894.காது பொத்தரைக் கின்னர ருழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயம்
கோதில் மாதவர் குழுவுடன் கேட்பக்
கோல ஆல்நிழற் கீழறம் பகர
வேதஞ் செய்தவ ரெய்திய இன்பம்
யானுங் கேட்டுநின் இணையடி யடைந்தேன்
நீதி வேதியர் நிறைபுக ழுலகில்
நிலவு தென்திரு நின்றியூ ரானே. 6

7895.கோடு நான்குடைக் குஞ்சரம் குலுங்க
நலங்கொள் பாதம்நின் றேத்திய பொழுதே
பீடு விண்மிசைப் பெருமையும் பெற்ற
பெற்றி கேட்டுநின் பொற்கழ லடைந்தேன்
பேடை மஞ்ஞையும் பிணைகளின் கன்றும்
பிள்ளைக் கிள்ளையு மெனப்பிறை நுதலார்
நீடு மாடங்கள் மாளிகை தோறும்
நிலவு தென்திரு நின்றியூ ரானே. 7,8,9,10

திருச்சிற்றம்பலம்

•••••

## 66. திருவாவடுதுறை : பண் – தக்கேசி

7896. மறைய வனொரு மாணிவந் தடைய
வார மாய்அவ னாருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவ னெம்பெரு மானென்றெப் போதும்
ஏத்தி யேத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதியெம் மானே. 1

7897. தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. 2

7898. திகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வானொரு நீண்மலர் குறையப்
புகழி னாலவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல் கண்டடியேன்
திகழும் நின்றிருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதி யெம்மானே. 3

7899. வீரத் தாலொரு வேடுவ னாகி
விசைந்தோர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விசை யன்தனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தாலுன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடுவந் தடியிணை யடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. 4

7900. ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னாலருள் ஈந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதி யாஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மானுனை யடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. (5,6,7,8,9,10)

திருச்சிற்றம்பலம்

•••••

## 67. திருவலிவலம் : பண் – தக்கேசி

7901. ஊன்அங் கத்துயிர்ப் பாயுல கெல்லாம்
ஓங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் கும்அளப் பரிய
வள்ள லைஅடி யார்கள்தம் முள்ளத்
தேனங் கைத்தமு தாகியுள் ளூறுந்
தேச னைத்திளைத் தற்கினி யானை
மான்அங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 1

7902. பல்லடி யார்பணிக் குப்பரி வானைப்
பாடியா டும்பத்தர்க் கன்புடை யானைச்
செல்லடி யேநெருக் கித்திறம் பாது
சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை
நல்லடி யார்மனத்து எய்ப்பினில் வைப்பை
நானுறு குறையறிந் தருள்புரி வானை
வல்லடி யார்மனத் திச்சையு ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 2

7903. ஆழிய னாய்அகன் றேஉயர்ந் தானை
ஆதியந் தம்பணி வார்க்கணி யானைக்
கூழைய ராகிப்பொய் யேகுடி யோம்பிக்
குழைந்து மெய்யடி யார்குழுப் பெய்யும்
வாழியர்க் கேவழு வாநெறி காட்டி
மறுபிறப் பென்னை மாசறுத் தானை
மாழையொண் கண்ணுமை யைமகிழ்ந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 3

7904. நாத்தான் உன்திற மேதிறம் பாது
நண்ணிஅண் ணித்தமு தம்பொதிந் தூறும்
ஆத்தா னைஅடி யேன்றனக் கென்றும்
அளவிறந் தபல தேவர்கள் போற்றும்
சோத்தா னைச்சுடர் மூன்றிலும் ஒன்றித்
துருவி மால்பிர மன்னறி யாத
மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 4

7905. நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்இயல் மனத்தைக் கசிவித்துக் கழலடி
காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 5

7906. பாடு மாபாடிப் பணியுமா றறியேன்
பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன்
தேடுமா தேடித் திருத்துமா றறியேன்
செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்
கூடுமா றெங்ஙன மோவென்று கூறக்
குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை யாண்டு
வாடிநீ வாளா வருந்தலென் பானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 6

7907. பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்
சந்தித் ததிற லாற்பணி பூட்டித்
தவத்தை ஈட்டிய தம்மடி யார்க்குச்
சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 7

7908. எவ்வவர் தேவர் இருடிகள் மன்னர்
எண்ணிறந் தார்கள்மற் றெங்கும்நின் றேத்த

அவ்வவர் வேண்டிய தேயருள் செய்து
அடைந்தவர்க் கேஇட மாகிநின் றானை
இவ்வவர் கருணையெங் கற்பகக் கடலை
எம்பெரு மானரு ளாயென்ற பின்னை
வவ்வியென் னாவி மனங்கலந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 8

7909. திரியும் முப்புரஞ் செற்றதுங் குற்றத்
திறல ரக்கனைச் செறுத்ததும் மற்றைப்
பெரிய நஞ்சமு துண்டதும் முற்றும்
பின்னை யாய்முன்ன மேமுளைத் தானை
அரிய நான்மறை அந்தண ரோவாது
அடிபணிந்தறி தற்கரி யானை
வரையின் பாவை மணாளனெம் மானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 9

7910. ஏன்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க மாலுதி ரத்தினை யேற்றுத்
தோன்று தோள்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மாவிர தத்தகங் காளன்
சான்று காட்டுதற் கரியவ னெளியவன்
தன்னைத் தன்னி லாமனத் தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 10

7911. கலிவ லங்கெட ஆரழ லோம்புங்
கற்ற நான்மறை முற்றன லோம்பும்
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன்
மன்னு நாவலா ரூரன்வன் தொண்டன்
ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும்
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவ ரேத்த
விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 68. திருநள்ளாறு : பண் – தக்கேசி

7912. செம்பொன் மேனிவெண் நீறணி வானைக்
கரிய கண்டனை மாலயன் காணாச்
சம்பு வைத்தழல் அங்கையி னானைச்
சாம வேதனைத் தன்னொப்பி லானைக்
கும்ப மாகரி யின்னுரி யானைக்
கோவின் மேல்வருங் கோவினை யெங்கள்
நம்பனை நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 1

7913. விரைசெய் மாமலர்க் கொன்றையி னானை
வேத கீதனை மிகச்சிறந் துருகிப்
பரசு வார்வினைப் பற்றறுப் பானைப்
பாலொ டானைஞ்சும் ஆடவல் லானைக்
குரைக டல்வரை யேழுல குடைய
கோனை ஞானக் கொழுந்தினைத் தொல்லை
நரைவிடை யுடையநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 2

7914. பூவில் வாசத்தைப் பொன்னினை மணியைப்
புவியைக் காற்றினைப் புனல்அனல் வெளியைச்
சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவ தேவனைத் தித்திக்குந் தேனைக்
காவி யங்கண்ணி பங்கனைக் கங்கைச்
சடைய னைக்காம ரத்திசை பாட
நாவி லூறும்நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 3

7915. தஞ்ச மென்றுதன் தாளது அடைந்த
பாலன் மேல்வந்த காலனை யுருள
நெஞ்சி லோருதை கொண்ட பிரானை
நினைப்ப வர்மனம் நீங்ககில் லானை
விஞ்சை வானவர் தானவர் கூடிக்
கடைந்த வேலையுள் மிக்கெழுந் தெரியும்
நஞ்ச முண்டநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 4

7916. மங்கை பங்கனை மாசிலா மணியை
வான நாடனை ஏனமோ டன்னம்

எங்கும் நாடியுங் காண்பரி யானை
ஏழை யேற்கெளி வந்த பிரானை
அங்கம் நான்மறை யால்நிறை கின்ற
அந்த ணாளர் அடியது போற்றும்
நங்கள் கோனைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 5

7917. கற்ப கத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
சொற்ப தப்பொருள் இருளறுத் தருளுந்
தூய சோதியை வெண்ணெய்நல் லூரில்
அற்பு தப்பழ ஆவணங் காட்டி
அடியனா வென்னை ஆளது கொண்ட
நற்ப தத்தைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 6

7918. மறவனை அன்று பன்றிப்பின் சென்ற
மாயனை நால்வர்க் (கு)ஆலின்கீ ழுரைத்த
அறவ னையம ரர்க்கரி யானை
அமரர் சேனைக்கு நாயக னான
குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற
கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்கும்
நறைவி ரியு(ம்)நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 7

7919. மாதி னுக்குடம்பு இடங்கொடுத் தானை
மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும்
வேதனை வேத வேள்வியர் வணங்கும்
விமல னைஅடி யேற்கெளி வந்த
தூதனைத் தன்னைத் தோழமை யருளித்
தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும்
நாத னைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 8

7920. இலங்கை வேந்தன் எழில்திகழ் கயிலை
யெடுப்ப ஆங்கிம வான்மக ளஞ்சத்
துலங்கும் நீண்முடி யொருபதுந் தோள்க
ளிருப துந்நெரித் தின்னிசை கேட்டு
வலங்கை வாளொடு நாமமுங் கொடுத்த
வள்ள லைப்பிள்ளை மாமதிச் சடைமேல்
நலங்கொள் சோதிநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்னினைக் கேனே. 9

7921. செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெஞ்
சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை
மறந்து நான்மற்று நினைப்ப தேதென்று
வனப்பகை யப்ப னூரரன்வன் தொண்டன்
சிறந்த மாலைக ளஞ்சினொ டஞ்சுஞ்
சிந்தை யுள்ளுரு கிச்செப்ப வல்லார்க்
கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி
இன்ப வெள்ளத்து ளிருப்பர்கள் இனிதே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 69. திருவடமுல்லைவாயில் : பண் — தக்கேசி

7922. திருவும்மெய்ப் பொருளும் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்களென் றெண்ணி
ஒருவரை மதியா(து) உறாமைகள் செய்து
மூடியும் உறைப்பனாய்த் திரிவேன்
முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினா லுன்னைப்
பரவிடும் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 1

7923. கூடிய இலயஞ் சதிபிழை யாமைக்
கொடியிடை உமையவள் காண
ஆடிய அழகா அருமறைப் பொருளே
அங்கணா எங்குற்றா யென்று
தேடிய வானோர் சேர்திரு முல்லை
வாயிலாய் திருப்புகழ் விருப்பால்
பாடிய அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 2

7924. விண்பணிந் தேத்தும் வேதியா மாதர்
வெருவிட வேழம்அன் றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் தேவர்தம் அரசே
தண்பொழில் ஒற்றி மாநக ருடையாய்
சங்கிலிக் காஎன் கண்கொண்ட
பண்பநின் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 3

7925. பொன்னலங் கழனிப் புதுவிரை மருவிப்
பொறிவரி வண்டிசை பாட
அந்நலங் கமலத் தவிசின்மேல் உறங்கும்
அலவன்வந் துலவிட வள்ளல்
செந்நெலங் கழனி சூழ்திரு முல்லை
வாயிலாய் திருப்புகழ் விருப்பால்
பன்னலந் தமிழாற் பாடுவேற் கருளாய்
பாசுப தாபரஞ் சுடரே. 4

7926. சந்தன வேருங் காரகிற் குறடுந்
தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுந் தரளக் குவைகளும் பவளக்
கொடிகளுஞ் சுமந்துகொண் டுந்தி
வந்திழி பாலி வடகரை முல்லை
வாயிலாய் மாசிலா மணியே
பந்தனை கெடுத்தென் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 5

7927. மற்றுநான் பெற்ற தார்பெற வல்லார்
வள்ளலே கள்ளமே பேசிக்
குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளுங்
கொள்கையால் மிகைபல செய்தேன்
செற்றுமீ தோடுந் திரிபுர மெரித்த
திருமுல்லை வாயிலாய் அடியேன்
பற்றிலேன் உற்ற படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 6

7928. மணிகெழு செவ்வாய் வெண்ணகைக் கரிய
வார்குழல் மாமயிற் சாயல்
அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார்
அருநடம் ஆடல் அறாத
திணிபொழில் தழுவு திருமுல்லை வாயிற்
செல்வனே எல்லியும் பகலும்
பணியது செய்வேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 7

7929. நம்பனே அன்று வெண்ணெய்நல் லூரில்
நாயினேன் தன்னைஆட் கொண்ட
சம்புவே உம்ப ரார்தொழு தேத்துந்
தடங்கடல் நஞ்சுண்ட கண்டா
செம்பொன்மா ளிகைசூழ் திருமுல்லை வாயில்
தேடியான் திரிதர்வேன் கண்ட
பைம்பொனே அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 8

7930. மட்டுலா மலர்கொண் டடியிணை வணங்கும்
மாணிதன் மேல்மதி யாதே
கட்டுவான் வந்த காலனை மாளக்
காலினால் ஆருயிர் செகுத்த
சிட்டனே செல்வத் திருமுல்லை வாயிற்
செல்வனே செழுமறை பகர்ந்த
பட்டனே அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 9

7931. சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்(டு)
எல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட்
டருளிய இறைவனே என்றும்
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில்
நாதனே நரைவிடை ஏறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 10

7932. விரைதரு மலர்மேல் அயனொடு மாலும்
வெருவிட நீண்ட எம்மானைத்
திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற்
செல்வனை நாவலா ரூரன்
உரைதரு மாலை ஒரைஞ்சி னோடைஞ்சும்
உள்குளிர்ந் தேத்தவல் லார்கள்
நரைதிரை மூப்பும் நடலையு மின்றி
நண்ணுவர் விண்ணவர்க் கரசே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 70. திருவாவடுதுறை : பண் – தக்கேசி

7933. கங்கை வார்சடை யாய்கண நாதா
காலகாலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடம்மிடற் றானே
பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற(வு) அமரர்க ளேறே. 1

7934. மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்லடுநோயாற்
கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்
தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 2

7935. ஒப்பி லாமுலை யாளொரு பாகா
உத்தமா மத்தம் ஆர்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப ஆல்நிழற் கீழிருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 3

7936. கொதியி னால்வரு காளிதன் கோபம்
குறைய ஆடிய கூத்துடை யானே
மதியி லேன்உடம் பில்லடு நோயால்
மயங்கி னேன்மணி யேமண வாளா
விதியி னாலிமை யோர்தொழு தேத்தும்
விகிர்த னேதிரு வாவடு துறையுள்
அதிப னேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 4

7937. வந்த வாளரக் கன்வலி தொலைத்து
வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே
வெந்த வெண்பொடி பூசவல் லானே
வேட னாய்விச யற்கருள் புரிந்த
இந்து சேகர னேயிமை யோர்சீ
ரீச னேதிரு வாவடு துறையுள்
அந்த ணாவெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 5

7938. குறைவி லாநிறை வேகுணக் குன்றே
கூத்த னேகுழைக் காதுடை யானே
உறவி லேனுனை யன்றிமற் றடியேன்
ஒருபிழை பொறுத் தாலிழி வுண்டே
சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்
செம்பொ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 6

7939. வெய்ய மாகரி ஈருரி யானே
வேங்கை ஆடையி னாய்விதி முதலே
மெய்ய னேஅட லாழியன்(று) அரிதான்
வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா
செய்ய மேனிய னேதிக ழொளியே
செங் கணாதிரு வாவடு துறையுள்
ஐய னேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 7

7940. கோதி லாஅமு தேஅருள் பெருகு
கோல மேயிமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே
பசுப தீபர மாபர மேட்டீ
தீதி லாமலை யேதிரு வருள்சேர்
சேவ காதிரு வாவடு துறையுள்
ஆதி யேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 8

7941. வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே

ஏன மாஎயி றாமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடை யானே
தேன்நெய் பால்தயி ராட்டுகந் தானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
ஆனை யேயெனை யஞ்சலென் றருளாய்
யாரெ னக்குற வமரர்க ளேறே. 9

7942. வெண்த லைப்பிறை கொன்றையும் அரவும்
வேரி மத்தமும் விரவிமுன் முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை
ஈச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்பன்
அணுக்க வன்தொண்டன் ஆர்வத்தா லுரைத்த
தண்த மிழ்மலர் பத்தும்வல் லார்கள்
சாத லும்பிறப் பும்அறுப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 71. திருமறைக்காடு : பண் – காந்தாரம்

7943. யாழைப்பழித் தன்னமொழி மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தானிடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே. 1

7944. சிகரத்திடை இளவெண்பிறை வைத்தானிடம் தெரியில்
முகரத்திடை முத்தின்னொளி பவளத்திர ளோதத்
தகரத்திடை தாழைத்திரள் ஞாழற்றிரள் நீழல்
மகரத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 2

7945. அங்கங்களும் மறைநான்குடன் விரித்தானிடம் அறிந்தோம்
தெங்கங்களும் நெடும்பெண்ணையும் பழம்வீழ்மணற் படப்பைச்
சங்கங்களும் இலங்கிப்பியும் வலம்புரிகளும் இடறி
வங்கங்களும் உயர்கூம்பொடு வணங்கும்மறைக் காடே. 3

7946. நரைவிரவிய மயிர்தன்னொடு பஞ்சவ்வடி மார்பன்
உரைவிரவிய உத்தமனிடம் உணரல்லுறு மனமே
குரைவிரவிய குலைசேகரக் கொண்டல்தலை விண்ட
வரைபுரைவன திரைபொருதிழிந் தெற்றும்மறைக் காடே. 4

7947. சங்கைப்பட நினையாதெழு நெஞ்சேதொழு தேத்தக்
கங்கைச்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
அங்கைக்கடல் அருமாமணி உந்திக்கரைக் கேற்ற
வங்கத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 5

7948. அடல்விடையினன் மழுவாளினன் அலராலணி கொன்றைப்
படருஞ்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவைக்
கடலிடையிடை கழியருகினிற் கடிநாறுதண் கைதை
மடலிடையிடை வெண்குருகெழு மணிநீர்மறைக் காடே. 6

7949. முளைவளரிள மதியுடையவர் முன்செய்தவல் வினைகள்
களைகளைந்தெனை ஆளல்லுறு கண்டன்னிடஞ் செந்நெல்
வளைவிளைவயற் கயல்பாய்தரு குணவார்மணற் கடல்வாய்
வளைவளையொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 7

7950. நலம்பெரியன சுரும்பார்ந்தன நங்கோனிடம் அறிந்தோம்
கலம்பெரியன சாருங்கடற் கரைபொருதிழி கங்கைச்
சலம்புரிசடை முடியுடையவர்க் கிடமாவது பரவை
வலம்புரியொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 8

7951. குண்டாடியுஞ் சமணாடியுங் குற்றுடுக்கையர் தாமும்
கண்டார்கண்ட காரணம்மவை கருதாதுகை தொழுமின்
எண்தோளினன் முக்கண்ணினன் ஏழிசையினன் அறுகால்
வண்டாடுதண் பொழில்சூழ்ந்தெழு மணிநீர்மறைக் காடே. 9

7952. பாரூர்பல புடைசூழ்வள வயல்நாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 72. திருவலம்புரம் : பண் – காந்தாரம்

7953. எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்றன(து) இடம்வலம் புரமே. 1

7954. புரமவை யெரிதர வளைந்தவில் லினன்அவன்
மரவுரி புலியதள் அரைமிசை மருவினன்
அரவுரி யிரந்தவன் இரந்துண விரும்பிநின்
றிரவெரி யாடிதன் இடம்வலம் புரமே. 2

7955. நீறணி மேனியன் நெருப்புமிழ் அரவினன்
கூறணி கொடுமழு வேந்தியோர் கையினன்
ஆறணி அவிர்சடை அழல்வளர் மழலைவெள்
ஏறணி யடிகள்தம் இடம்வலம் புரமே. 3

7956. கொங்கணை சுரும்புண நெருங்கிய குளிரிளம்
தெங்கொடு பனைபழம் படுமிடம், தேவர்கள்
தங்கிடு மிடந்தடங் கடற்றிரை புடைதர
எங்கள தடிகள்நல் இடம்வலம் புரமே. 4

7957. கொடுமழு விரகினன் கொலைமலி சிலையினன்
நெடுமதில் சிறுமையின் நிரவவல் லவனிடம்
படுமணி முத்தமும் பவளமும் மிகச்சுமந்
திடுமண லடைகரை யிடம்வலம் புரமே. 5

7958. கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்
நெருங்கிய நெடும்பணை யடும்பொடு விரவிய
மருங்கொடு வலம்புரி சலஞ்சலம் மணம்புணர்ந்
திருங்கட லணைகரை யிடம்வலம் புரமே. 6

7959. நரிபுரி காடரங் காநட மாடுவர்
வரிபுரி பாடநின் றாடுமெம் மானிடம்
புரிசுரி வரிகுழல் அரிவையோர் பால்மகிழ்ந்(து)
எரியெரி யாடித னிடம்வலம் புரமே. 7

7960. பாறணி முடைதலை கலனென மருவிய
நீறணி நிமிர்சடை முடியினன் நிலவிய
மாறணி வருதிரை வயலணி பொழிலது
ஏறுடை யடிகள்தம் இடம்வலம் புரமே. 8

7961. சடசட விடுபெணை பழம்படும் இடவகை
படவட கத்தொடு பலிகலந் துலவிய
கடைகடை பலிதிரி கபாலித னிடமது
இடிகரை மணலடை யிடம்வலம் புரமே. 9

7962. குண்டிகைப் படப்பினில் விடக்கினை யொழித்தவர்
கண்டவர் கண்டடி வீழ்ந்தவர் கனைகழல்
தண்டுடைத் தண்டித னினமுடை யரவுடன்
எண்டிசைக் கொருசுட ரிடம்வலம் புரமே. 10

7963. வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்த மிடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமி ழூரன்வன் தொண்டன்சொல்
பெருங்குலத் தவரொடு பிதற்றுதல் பெருமையே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 73. திருவாரூர் : பண் – காந்தாரம்

7964. கரையுங் கடலும் மலையுங் காலையும் மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்
அரைய னிருப்பதும் ஆரூர் அவ ரெம்மையும் ஆள்வரோ கேளீர்.1

7965. தனியனென் றெள்கி யறியேன் தம்மைப் பெரிதும் உகப்பன்
முனிபவர் தம்மை முனிவன் முகம்பல பேசி மொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக் காய்க்குலை யீன்ற கமுகின்
இனிய னிருப்பதும் ஆரூர் அவ ரெம்மையும் ஆள்வரோ கேளீர்.2

7966. சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன் தொடர்ந்தவர்க் குந்துணை யல்லேன்
கல்லில் வலிய மனத்தேன் கற்ற பெரும்புல வாணர்
அல்லல் பெரிதும் அறுப்பான் அருமறை ஆறங்கம் ஓதும்
எல்லை யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.3

7967. நெறியும் அறிவுஞ் செறிவும் நீதியும் நான்மிகப் பொல்லேன்
மிறையுந் தறியும் உகப்பன் வேண்டிற்றுச் செய்து திரிவன்
பிறையும் அரவும் புனலும் பிறங்கிய செஞ்சடை வைத்த
இறைவ னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.4

7968. நீதியி லொன்றும் வழுவேன் நிட்கண்ட கஞ்செய்து வாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டவர்க் குந்துணை யாகேன்

சோதியிற் சோதியெம் மானைச் சுண்ணவெண் நீறணிந் திட்ட
ஆதி யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 5

7969. அருத்தம் பெரிதும் உகப்பன் அலவலை யேனலந் தார்கள்
ஒருத்தர்க் குதவியேன் அல்லேன் உற்றவர்க் குந்துணை யல்லேன்
பொருத்தமே லொன்றுமி லாதேன் புற்றெடுத் திட்டிடங் கொண்ட
அருத்த னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 6

7970. சந்தம் பலவறுக் கில்லேன் சார்ந்தவர் தம்மடிச் சாரேன்
முந்திப் பொருவிடை யேறி மூவுல குந்திரி வானே
கந்தம் கமழ்கொன்றை மாலைக் கண்ணியன் விண்ணவ ரேத்தும்
எந்தை யிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 7

7971. நெண்டிக்கொண் டேயுங்கி லாய்ப்பன் நிச்சய மேயிது திண்ணம்
மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன் மெய்ப்பொரு ளன்றி யுணரேன்
பண்டங் கிலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த் திட்ட
அண்ட னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 8

7972. நமர்பிற ரென்ப தறியேன் நான்கண்ட தேகண்டு வாழ்வேன்
தமரம் பெரிதும் உகப்பன் தக்கவா றொன்றுமி லாதேன்
குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும்
அமர னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 9

7973. ஆசை பலஅறுக் கில்லேன் ஆரையும் அன்றி யுரைப்பேன்
பேசிற் சழக்கலாற் பேசேன் பிழைப்புடை யேன்மனந் தன்னால்
ஓசை பெரிதும் உகப்பேன் ஒலிகடல் நஞ்சமு துண்ட
ஈச னிருப்பதும் ஆரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர். 10

7974. எந்தை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோ வென்று
சிந்தை செயுந்திறம் வல்லான் திருமரு வுந்திரள் தோளான்
மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவலா ரூரன்
சந்த மிசையொடும் வல்லார் தாம்புக ழெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 74. திருத்துருத்தியும் – திருவேள்விக்குடியும் :
### பண் – காந்தாரம்

7975. மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாங் காவிரி அகன்கரை யுறைவார்
அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
என்னுடம்(பு) அடும்பிணி யிடர்கெடுத் தானை. 1

7976. கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங்
கொய்புன ஏனலோ டைவனஞ் சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது
மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி
ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
பாடுமா றறிகிலே னெம்பெரு மானைப்
பழவினை யுள்ளன பற்றறுத் தானை. 2

7977. கொல்லுமால் யானையின் கொம்பொடு வம்பார்
கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட் டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும் போந்துத வஞ்செய்யும்
போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச்
செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
சொல்லுமா றறிகிலேன் எம்பெரு மானைத்
தொடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வறுத் தானை. 3

7978. பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொழிந்திழிந் தருவிகள் புன்புலங் கவரக்
கறியுமா மிளகொடு கதலியும் உந்திக்
கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோய்
எறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
அறியுமா றறிகிலேன் எம்பெரு மானை
யருவினை யுள்ளன ஆசறுத் தானை. 4

7979. பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும்
பொன்மலர் வேங்கையின் நன்மல ருந்தி
இழிந்திழிந் தருவிகள் கடும்புன லீண்டி

எண்திசை யோர்களும் ஆடவந் திங்கே
சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
ஒழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை
உற்றநோய் இற்றையே உறவொழித் தானை. 5

7980. புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியு நன்மல ருந்தி
அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி
ஆடுவார் பாவந்தீர்த் தஞ்சனம் அலம்பித்
திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
இகழுமா றறிகிலேன் எம்பெரு மானை
இழித்தநோய் இம்மையே யொழிக்கவல் லானை. 6

7981. வரையின்மாங் கனியொடு வாழைபின் கனியும்
வருடியும் வணக்கியும் மராமரம் பொருது
கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
காம்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய்
விரையுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
உரையுமா றறிகிலேன் எம்பெரு மானை
உலகறி பழவினை அறவொழித் தானை. 7

7982. ஊருமா தேசமே மனமுகந்(து) உள்ளிப் புள்ளினம்
பலபடிந் தொண்கரை யுகளக்
காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க் கவரிமா
மயிர்சுமந் தொண்பளிங் கிடறித்
தேருமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
ஆருமா றறிகிலேன் எம்பெரு மானை
அம்மைநோய் இம்மையே ஆசறுத் தானை. 8

7983. புலங்களை வளம்படப் போக்கறப் பெருகிப்
பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப
இலங்குமார் முத்தினோ டினமணி யிடறி
யிருகரைப் பெருமரம் பீழ்ந்துகொண் டெற்றிக்
கலங்குமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
விலங்குமா றறிகிலேன் எம்பெரு மானை
மேலைநோய் இம்மையே வீடுவித் தானை. 9

7984. மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற
அங்கையான் கழலடி யன்றிமற் றறியான்
அடியவர்க் கடியவன் தொழுவனா ரூரன்
கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் சேர்த்திய பாடல்
தங்கையால் தொழுதுதந் நாவின்மேற் கொள்வார்
தவநெறி சென்றம ருலகமாள் பவரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 75. திருவானைக்கா : பண் – காந்தாரம்

7985. மறைக ளாயின நான்கும் மற்றுள பொருள்களு மெல்லாத்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையும் நன்மையும் ஆய
அறையும் பூம்புன லானைக் காவுடை ஆதியை நாளும்
இறைவ னென்றடி சேர்வா ரெம்மையும் ஆளுடை யாரே. 1

7986. வங்கம் மேவிய வேலை நஞ்செழ வஞ்சர்கள் கூடித்
தங்கள் மேலட ராமை யுண்ணென உண்டிருள் கண்டன்
அங்க மோதிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
எங்க ளீசனென் பார்கள் எம்மையும் ஆளுடை யாரே. 2

7987. நீல வண்டறை கொன்றை நேரிழை மங்கையொர் திங்கள்
சால வாளர வங்கள் தங்கிய செஞ்சடை யெந்தை
ஆல நீழலு ளானைக் காவுடை யாதியை நாளும்
ஏலு மாறுவல் லார்கள் எம்மையு மாளுடை யாரே. 3

7988. தந்தை யாயுல குக்கோர் தத்துவன் மெய்த்தவத் தோர்க்குப்
பந்த மாயின பெருமான் பரிசுடை யவர்திரு வடிகள்
அந்தண் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளும்
எந்தை யென்றடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. 4

7989. கணைசெந் தீயர வம்நாண் கல்வளை யுஞ்சிலை யாகத்
துணைசெய் மும்மதில் மூன்றுஞ் சுட்டவ னேயுல குய்ய
அணையும் பூம்புன லானைக் காவுடை யாதியை நாளும்
இணைகொள் சேவடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. 5

7990. விண்ணின் மாமதி சூடி விலையிலி கலனனி விமலன்
பண்ணின் நேர்மொழி மங்கை பங்கினன் பசுவுகந் தேறி
அண்ண லாகிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
எண்ணு மாறுவல் லார்கள் எம்மையு மாளுடை யாரே. 6

7991. தார மாகிய பொன்னித் தண்துறை யாடி விழுத்தும்
நீரின் நின்றடி போற்றி நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங் கொண்டஎம் மானைக் காவுடை யாதியை நாளும்
ஈர முள்ளவர் நாளும் எம்மையு மாளுடை யாரே. 7

7992. உரவ முள்ளதோர் உழையின் உரிபுலி அதளுடை யானை
விரைகொள் கொன்றையி னானை விரிசடை மேற்பிறை யானை
அரவம் வீக்கிய ஆனைக் காவுடை யாதியை நாளும்
இரவு மெல்லியும் பகலு மேத்துவா ரெமையுடை யாரே. 8

7993. வலங்கொள் வாரவர் தங்கள் வல்வினை தீர்க்கும் மருந்து
கலங்கக் காலனைக் காலாற் காமனைக் கண்சிவப் பானை
அலங்கல் நீர்பொரு மானைக் காவுடை யாதியை நாளும்
இலங்கு சேவடி சேர்வா ரெம்மையு மாளுடை யாரே. 9

7994. ஆழி யாற்கரு ளானைக் காவுடை ஆதிபொன் னடியின்
நீழ லேசர ணாக நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் தொண்டன் வண்தமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று எம்மையு மாளுடை யாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 76. திருவாஞ்சியம் : பண் – பியந்தைக்காந்தாரம்

7995. பொருவ னார்புரி நூலர் புணர்முலை உமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால் வருவது மில்லைநம் மடிகள்
திருவ னார்பணிந் தேத்துந் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னார்அடி யாரை ஊழ்வினை நலியவொட் டாரே. 1

7996. தொறுவில் ஆனிள ஏறு துண்ணென இடுகுரல் வெருவிச்
செறுவில் வாளைக ளோடச் செங்கயல் பங்கயத் தொதுங்கக்
கருவி லாமனத் தார்கள் காண்தகு வாஞ்சியத் தடிகள்
மறுவி லாதவெண் ணீறு பூசுதல் மன்னுமொன் றுடைத்தே. 2

7997. தூர்த்தர் மூவெயி லெய்து சுடுநுனைப் பகழிய தொன்றால்
பார்த்த னார்திரள் தோள்மேற் பன்னுனைப் பகழிகள் பாய்ச்சித்
தீர்த்த மாமலர்ப் பொய்கைத் திகழ்திரு வாஞ்சியத் தடிகள்
சாத்தும் மாமணிக்கச்சங் கொருதலை பலதலை யுடைத்தே. 3

7998. சள்ளை வெள்ளையங் குருகு தானது வாமெனக் கருதி
வள்ளை வெண்மல ரஞ்சி மறுகியோர் வாளையின் வாயில்
துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத் துறைமல்கு வாஞ்சியத் தடிகள்
வெள்ளை நுண்பொடிப் பூசும் விகிர்தமொன் றொழிகிலர் தாமே. 4

7999. மைகொள் கண்டரெண் தோளர் மலைமக ளுடனுறை வாழ்க்கைக்
கொய்த கூவிள மாலை குலவிய சடைமுடிக் குழகர்
கைதை நெய்தலங் கழனி கமழ்புகழ் வாஞ்சியத் தடிகள்
பைதல் வெண்பிறை யோடு பாம்புடன் வைப்பது பரிசே. 5

8000. கரந்தை கூவிள மாலை கடிமலர்க் கொன்றையுஞ் சூடிப்
பரந்த பாரிடஞ் சூழ வருவர்நம் பரமர்தம் பரிசால்
திருந்து மாடங்கள் நீடு திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மருந்த னாரடி யாரை வல்வினை நலியவொட் டாரே. 6

8001. அருவி பாய்தரு கழனி அலர்தரு குவளையங் கண்ணார்
குருவி யாய்கிளி சேர்ப்பக் குருகினம் இரிதரு கிடங்கில்
பருவ ரால்குதி கொள்ளும் பைம்பொழில் வாஞ்சியத் துறையும்
இருவ ராலறி யொண்ணா இறைவன தறைகழல் சரணே. 7

8002. களங்க ளார்தரு கழனி அளிதரக் களிதரு வண்டு
உளங்க ளார்கலிப் பாடல் உம்பரில் ஒலித்திடுங் காட்சி
குளங்கள் ஆல்நிழற் கீழ்நற் குயில்பயில் வாஞ்சியத் தடிகள்
விளங்கு தாமரைப் பாதம் நினைப்பவர் வினைநலி விலரே. 8

8003. வாழை யின்கனி தானும் மதுவிம்மு வருக்கையின் சுளையும்
கூழை வானரந் தம்மிற் கூறிது சிறிதெனக் குழறித்
தாழை வாழையந் தண்டாற் செருச்செய்து தருக்குவாஞ் சியத்துள்
ஏழை பாகனை யல்லால் இறையெனக் கருதுத லிலமே. 9

8004. செந்நெ லங்கலங் கழனித் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மின்ன லங்கலஞ் சடையெம் இறைவன தறைகழல் பரவும்
பொன்ந லங்கலநன் மாடப் பொழிலணி நாவலா ரூரன்
பல்ந லம்கல்நன் மாலை பாடுமின் பத்தரு ளீரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 77. திருவையாறு : பண் – காந்தாரபஞ்சமம்

8005. பரவும் பரிசொன் றறியேன்நான் பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும் எய்த நினைய மாட்டேன்நான்
கரவில் அருவி கமுகுண்ணத் தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாளை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத்தையா றுடைய அடிகளோ. 1

8006. எங்கே போவே னாயிடினும் அங்கே வந்தென் மனத்தீராய்ச்
சங்கை யொன்றும் இன்றியே தலைநாள் கடைநா ளொக்கவே
கங்கை சடைமேற் கரந்தானே கலைமான் மறியும் கனல்மழுவும்
தங்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 2

8007. மருவிப் பிரிய மாட்டேன்நான் வழிநின் றொழிந்தே னொழிகிலேன்
பருவி விச்சி மலைச்சாரற் பட்டை கொண்டு பகடாடிக்
குருவி யோப்பிக் கிளிகடிவார் குழல்மேல் மாலை கொண்டோட்டம்
தரவந் திரக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 3

8008. பழகா நின்று பணிசெய்வார் பெற்ற பயனொன் றறிகிலேன்
இகழா துமக்காட் பட்டோர்க்கு வேக படமொன் றரைச்சார்த்தி
குழகா வாழைக் குலைத்தெங்கு கொணர்ந்து கரைமே லெறியவே
அழகார் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 4

8009. பிழைத்த பிழையொன் றறியேன்நான் பிழையைத் தீரப் பணியாயே
மழைக்கண் நல்லார் குடைந்தாட மலையும் நிலனுங் கொள்ளாமைக்
கழைக்கொள் பிரசங் கலந்தெங்குங் கழனி மண்டிக் கையேறி
அழைக்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 5

8010. கார்க்கொள் கொன்றை சடைமேலொன் றுடையாய் விடையாய் நகையினால்
மூர்க்கர் புரம்மூன் றெறிசெய்தாய் முன்நீ பின்நீ முதல்வன்நீ
வார்க்கொ ளருவி பலவாரி மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டார்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 6

8011. மலைக்கண் மடவாள் ஒருபாலாய்ப் பற்றி யுலகம் பலிதேர்வாய்
சிலைக்கொள் கணையால் எயிலெய்த செங்கண் விடையாய் தீர்த்தன்நீ
மலக்கொ ளருவி பலவாரி மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டலைக்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 7

8012. போழும் மதியம் புனக்கொன்றைப் புனல்சேர் சென்னிப் புண்ணியா
சூழும் அரவச் சுடர்ச்சோதீ யுன்னைத் தொழுவார் துயர்போக
வாழு மவர்க ளங்கங்கே வைத்த சிந்தை உய்த்தாட்ட
ஆழுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 8

8013. கதிர்க்கொள் பசியை யொத்தேநான் கண்டேன் உம்மைக் காணாதேன்
எதிர்த்து நீந்த மாட்டேன்நான் எம்மான் தம்மான் தம்மானே
விதிர்த்து மேகம் மழைபொழிய வெள்ளம் பரந்து நுரைசிதறி
அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ.9

8014. கூசி அடியா ரிருந்தாலும் குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்
தேச வேந்தன் திருமாலும் மலர்மேல் அயனுங் காண்கிலாத்
தேச மெங்குந் தெளித்தாடத் தெண்ணீர் அருவி கொணர்ந்தெங்கும்
வாசந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 10

8015. கூடி அடியா ரிருந்தாலுங் குணமொன் றில்லீர் குறிப்பில்லீர்
ஊடி யிருந்தும் உணர்கிலேன் உம்மைத் தொண்டன் ஊரனேன்
தேடி எங்குங் காண்கிலேன் திருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத் தையா றுடைய அடிகளோ. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 78. திருக்கேதாரம் : பண் – நட்டபாடை

8016. வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே. 1

8017. பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளும் நாளால்அறம் உளவே
அறிவானிலும் அறிவான்ந(ல்) நாறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே. 2

8018. கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்நமை யாள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 3

8019. உழக்கேஉண்டு படைத்திட்டிவைத் திழப்பார்களுஞ் சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர் மதிமாந்திய மாந்தர்
சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமே னீரே. 4

8020.வாளோடிய தடங்கண்ணியர் வலையிலழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நாணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிட மதுவேயெனி லிதுவே
கிளோடா வசைத்தானிடங் கேதாரமெ னீரே. 5

8021. தளிசாலைகள் தவமாவது தம்மைப்பெறி லன்றே
குளியீருளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளியீருளஞ் சீபர்ப்பதந் தெற்குவடக் காகக்
கிளிவாழையொண் கனிகீறியுண் கேதாரமெ னீரே. 6

8022.பண்ணின்தமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. 7

8023.முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை யிறுத்துத்
துளைக்கைக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயில்மான்பிணை நிலத்தைக்
கிளைக்கமணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 8

8024.பொதியேசுமந் துழல்வீர்பொதி அவமாவதும் அறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கதிசூழ்கட லிலங்கைக்கிறை மலங்கவரை யடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. 9

8025.நாவின்மிசை அரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாஇன்தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 79. சீபர்ப்பதம் : பண் – நட்டபாடை

8026.மானும்மரை யினமும்மயில் இனமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமாமரம் உரிஞ்சிப்பொழி லூடேசென்று புக்குத்
தேமாம்பொழில் நீழல்துயில் சீபர்ப்பத மலையே. 1

8027. மலைச்சாரலும் பொழிற்சாரலும் புறமேவரும் இனங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட மலங்கித்தன களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை அலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தன் பிடிதேடிடுஞ் சீபர்ப்பத மலையே. 2

8028. மன்னிப்புனங் காவல்மட மொழியாள்புனம் காக்கக்
கன்னிக்கிளி வந்துகவைக் கோலிக்கதிர் கொய்ய
என்னைக்கிளி மதியாதென்று எடுத்துக்கவண் ஒலிப்பத்
தென்னற்கிளி திரிந்தேறிய சீபர்ப்பத மலையே. 3

8029. மையார்தடங் கண்ணாள்மட மொழியாள்புனம் காக்கச்
செவ்வேதிரிந் தாயோவெனப் போகாவிட விளிந்து
கைபாவிய கவணால்மணி யெறிய இரிந் தோடிச்
செவ்வாயின கிளிபாடிடுஞ் சீபர்ப்பத மலையே. 4

8030. ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலில் திரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
மானக்குற அடல்வேடர்கள் இலையாற்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ் சீபர்ப்பத மலையே. 5

8031. மாற்றுக்களி றடைந்தாயென்று மதவேழங்கை யெடுத்தும்
மூற்றிக்கன லுமிழ்ந்துமதம் பொழிந்தும்முகஞ் சுழியத்
தூற்றத்தரிக் கில்லேனென்று சொல்லிஅய லறியத்
தேற்றிச்சென்று பிடிசூழறுஞ் சீபர்ப்பத மலையே. 6

8032. அப்போதுவந் துண்டீர்களுக் கழையாது முன்னிருந்தேன்
எப்போதும்வந் துண்டாலெமை யெமர்கள்சுளி யாரோ
இப்போதுமக் கிதுவேதொழி லென்றோடியக் கிளியைச்
செப்பேந்திள முலையாளெறி சீபர்ப்பத மலையே. 7

8033. திரியும்புரம் நீறாக்கிய செல்வன்தன கழலை
அரியதிரு மாலோடயன் றானும்மவ ரறியார்
கரியின்னின மோடும்பிடி தேனுண்டவை களித்துத்
திரிதந்தவை திகழ்வாற்பொலி சீபர்ப்பத மலையே. 8

8034. ஏனத்திரள் கிளைக்களரி போலமணி சிதர்த்தி
ஏனல்லவை மலச்சாரலில் திரியுங்கர டீயும்
மானும்மரை யினமும்மயில் மற்றும்பல வெல்லாம்
தேனுண்பொழில் சோலைமிகு சீபர்ப்பத மலையே. 9

8035. நல்லாரவர் பலர்வாழ்தரு வயல்நாவல வூரன்
செல்லலுற வரியசிவன் சீபர்ப்பத மலையை
அல்லலவை தீரச்சொன தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லைச்செல உயர்வானகம் ஆண்டங்கிருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 80. திருக்கேதீச்சரம் : பண் – நட்டபாடை

8036. நத்தார்படை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானைஉரி போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே. 1

8037. சுடுவார்பொடி நீறுந்நல்ல துண்டப்பிறை கீளும்
கடமார்களி யானையுரி அணிந்தகறைக் கண்டன்
படஏரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாவுறை கின்றான்திருக் கேதீச்சரத் தானே. 2

8038. அங்கம்மொழி யன்னாரவர் அமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்திருக் கேதீச்சரத் தானே. 3

8039. கரியகறைக் கண்டன்நல்ல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்(டு)யாழ்செயும் மாதோட்டநன் னகருள்
பரியதிரை எறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியுமறை வல்லான்திருக் கேதீச்சரத் தானே. 4

8040. அங்கத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே. 5

8041. வெய்யவினை யாயஅடி யார்மேலொழித் தருளி
வையம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பையேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்திருக் கேதீச்சரத் தானே. 6

8042.ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடல் மாதோட்டநன் னகரில்
பால்நத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான்திருக் கேதீச்சரத் தானே. 7

8043.அட்டன்அழ காகஅரை தன்மேலர(வு) ஆர்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழில் மாதோட்டநன் னகரில்
பட்டவரி நுதலாளொடு பாலாவியின் கரைமேல்
சிட்டன்நமை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே. 8

8044.மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்னெனை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே. 9

8045.கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்(டு)யாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டனுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 81. திருக்கழுக்குன்றம் : பண் – நட்டபாடை

8046.கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவ வினைகள் தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 1

8047.இறங்கிச் சென்று தொழுமின் இன்னிசை பாடியே
பிறங்கு கொன்றைச் சடைய னெங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிகள் நித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை யருவித் தண்கழுக் குன்றமே. 2

8048.நீள நின்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி யழிந்திடத்
தோளு மெட்டு முடைய மாமணிச் சோதியான்
காள கண்ட னுறையுந் தண்கழுக் குன்றமே. 3

8049.வெளிறு தீரத் தொழுமின் வெண்பொடி யாடியை
முளிறி லங்கு மழுவாளன் முந்தி உறைவிடம்
பிளிறு தீரப் பெருங்கைப் பெய்ம்மதம் மூன்றுடைக்
களிறி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 4

8050.புலைகள் தீரத் தொழுமின் புன்சடைப் புண்ணியன்
இலைகொள் சூலப் படைய னெந்தைபி ரானிடம்
முலைக ளுண்டு தழுவிக் குட்டியொ டுமுசுக்
கலைகள் பாயும் புறவில் தண்கழுக் குன்றமே. 5

8051. மடமு டைய அடியார் தம்மனத் தேயுற
விடமு டைய மிடறன் விண்ணவர் மேலவன்
படமு டைய அரவன் தான்பயி லும்மிடம்
கடமு டைய புறவிற் றண்கழுக் குன்றமே. 6

8052.ஊன மில்லா அடியார் தம்மனத் தேயுற
ஞான மூர்த்தி நட்ட மாடி நவிலும்மிடம்
தேனும் வண்டும் மதுவுண் டின்னிசை பாடியே
கான மஞ்ஞை உறையுந் தண்கழுக் குன்றமே. 7

8053.அந்த மில்லா அடியார் தம்மனத் தேயுற
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்கள் நித்தலுஞ் சேரவே
கந்தம் நாறும் புறவிற் றண்கழுக் குன்றமே. 8

8054.பிழைகள் தீரத் தொழுமின் பின்சடைப் பிஞ்ஞகன்
குழைகொள் காதன் குழகன் தானுறை யும்மிடம்
மழைகள் சாலக் கலித்து நீடுயர் வேயவை
குழைகொள் முத்தஞ் சொரியுந் தண்கழுக் குன்றமே. 9

8055.பல்லில் வெள்ளைத் தலையன் தான்பயி லும்மிடம்
கல்லில் வெள்ளை யருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரள்தோ ளூரன் வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு மின்களே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 82. திருச்சுழியல் : பண் – நட்டபாடை

8056. ஊனாய்உயிர் புகலாய்அக லிடமாய்முகில் பொழியும்
வானாய்வரு மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
தேனாதரித்(து) இசைவண்டினம் மிழற்றுந்திருச் சுழியல்
நானாவிதம் நினைவார்தமை நலியார்நமன் தமரே. 1

8057. தண்டேர்மழுப் படையான்மழ விடையான்எழு கடல்நஞ்
சுண்டேபுர மெரியச்சிலை வளைத்தானிமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவன் உறையுந்திருச் சுழியல்
தொண்டேசெய வல்லாரவர் நல்லார்துய ரிலரே. 2

8058. கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச் சுழியல்
தெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவாரடி தொழுவார்
அவ்வத்திசைக் கரசாகுவர் அலரால்பிரி யாளே. 3

8059. மலையான்மகள் மடமாதிடம் ஆகத்தவள் மற்றுக்
கொலையானையின் உரிபோர்த்தஎம் பெருமான்திருச் சுழியல்
அலையார்சடை யுடையானடி தொழுவார்பழு துள்ளம்
நிலையார்திகழ் புகழால்நெடு வானத்துயர் வாரே. 4

8060. உற்றான்நமக் குயரும்மதிச் சடையான்புல னைந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றான்இனி துறையத்திறம் பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட்செல்வர் ஏத்தும்மது கடனே. 5

8061. மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியானமர்ந் திடமாந்திருச் சுழியல்
நிலந்தாங்கிய மலராற்கொழும் புகையால்நினைந் தேத்தும்
தலந்தாங்கிய புகழான்மிகு தவமாஞ்சதுராமே. 6

8062. சைவத்தசெவ் வுருவன்திரு நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையால்அரண் மூன்றும்எரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்திருச் சுழியல்
மெய்வைத்தடி நினைவார்வினை தீர்தல்எளி தன்றே. 7

8063. பூவேந்திய பீடத்தவன் தானும்அட லரியுங்
கோவேந்திய வினயத்தொடு குறுகப்புக லறியார்
சேவேந்திய கொடியானவ னுறையுந்திருச் சுழியல்
மாவேந்திய கரத்தானெம சிரத்தான்தன தடியே. 8

8064. கொண்டாடுதல் புரியாவரு தக்கன்பெரு வேள்வி
செண்டாடுதல் புரிந்தான்திருச் சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமண்ஆதர்கள் குடைச்சாக்கியர் அறியா
மிண்டாடிய அதுசெய்தது வானால்வரு விதியே. 9

8065. நீரூர்தரு நிமலன்திரு மலையார்க்கய லருகே
தேரூர்தரும் அரக்கன்சிரம் நெரித்தான்திருச் சுழியல்
பேரூரென உறைவானடி பெயர்நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 83. திருவாரூர் : பண் – புறநீர்மை

8066. அந்தியும் நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
முந்தியெ ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்(கு)
எந்தை பிரானாரை என்றுகொ லெய்துவதே. 1

8067. நின்ற வினைக்கொடுமை நீங்க இருபொழுதும்
துன்று மலரிட்டுச் சூழும் வலஞ்செய்து
தென்றல் மணங்கமழுந் தென்திரு வாரூர்புக்(கு)
என்றன் மனங்குளிர என்றுகொ லெய்துவதே. 2

8068. முன்னை முதற்பிறவி மூதறி யாமையினால்
பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்
செந்நெல் வயற்கழனித் தென்திரு வாரூர்புக்(கு)
என்னுயிர்க் கின்னமுதை யென்றுகொ லெய்துவதே. 3

8069. நல்ல நினைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்
கொல்ல நினைப்பனவுங் குற்றமும் அற்றொழியச்
செல்வ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்(கு)
எல்லை மிதித்தடியே னென்றுகொ லெய்துவதே. 4

8070. கடுவரி மாக்கடலுட் காய்ந்தவன் தாதையைமுன்
சுடுபொடி மெய்க்கணிந்த சோதியை வன்தலைவாய்
அடுபுலி ஆடையனை ஆதியை யாரூர்புக்(கு)
இடுபலி கொள்ளியைநா னென்றுகொ லெய்துவதே. 5

8071. சூழொளி நீர்நிலந்தீத் தாழ்வளி யாகாசம்
வானுயர் வெங்கதிரோன் வண்தமிழ் வல்லவர்கள்
ஏழிசை யேழ்நரம்பி னோசையை யாரூர்புக்(கு)
ஏழுல காளியைநா னென்றுகொ லெய்துவதே. 6

8072. கொம்பன நுண்ணிடையாள் கூறனை நீறணிந்த
வம்பனை யெவ்வுயிர்க்கும் வைப்பினை ஒப்பமராச்
செம்பொனை நன்மணியைத் தென்றிரு வாரூர்புக்(கு)
என்பொனை யென்மணியை யென்றுகொ லெய்துவதே. 7

8073. ஆறணி நீண்முடிமேல் ஆடர வம்சூடிப்
பாறணி வெண்தலையிற் பிச்சைகொள் நச்சரவன்
சேறணி தண்கழனித் தென்றிரு வாரூர்புக்(கு)
ஏறணி யெம்மிறையை யென்றுகொ லெய்துவதே. 8

8074. மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை மாதினொடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்றிரு வாரூர்புக்(கு)
எண்ணிய கண்குளிர என்றுகொ லெய்துவதே. 9

8075. மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய ஆரூரை
நன்னெடுங் காதன்மையால் நாவலர் கோனூரன்
பன்னெடுஞ் சொன்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலகம் நண்ணுவர் புண்ணியரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 84. திருக்கானப்பேர் : பண் – புறநீர்மை

8076. தொண்ட ரடித்தொழலுஞ் சோதி இளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்ட ரிகப்பரிசாம் மேனியும் வானவர்கள்
பூச லிடக்கடல்நஞ் சுண்ட கருத்தமரும்
கொண்ட லெனத்திகழுங் கண்டமும் எண்தோளுங்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 1

8077. கூத லிடுஞ்சடையுங் கோளர வும்விரவுங்
கொக்கிற குங்குளிர்மா மத்தமும் ஒத்துனதாள்
ஓத லுணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்

துள்ளுரு காவிரசும் ஓசையைப் பாடலுநீ
ஆத லுணர்ந்தவரோ டன்பு பெருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 2

8078. நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்
தேனிடை இன்னமுதை மற்றத னில்தெளிவைத்
தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்அனலும் மண்டல மும்மாய
கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 3

8079. செற்றவர் முப்புரமன் றட்ட சிலைத்தொழிலார்
சேவக முந்நினைவார் பாவக மும்நெறியும்
குற்றமில் தன்னடியார் கூறும் இசைப்பரிசுங்
கோசிக மும்அரையிற் கோவண மும்அதளும்
மல்திகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழக்
கற்றன வும்பரவிக் கைத்தொழ லென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 4

8080. கொல்லை விடைக்கழகுங் கோல நறுஞ்சடையிற்
கொத்தல ரும்மிதழித் தொத்து மதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபால்
மோக மிகுத்திலகுங் கூறுசெ யெப்பரிசுந்
தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்
திண்மழு வுங்கைமிசைக் கூரெரி யும்மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 5

8081. பண்ணு தலைப்பயனார் பாடலும் நீடுதலும்
பங்கய மாதனையார் பத்தியும் முத்தியளித்
தெண்ணுத லைப்பெருமா னென்றெழு வாரவர்தம்
ஏசற வும்இறையாம் எந்தையை யும்விரவி
நண்ணுத லைப்படுமா றெங்ஙன மென்றயலே
நைகிற என்னைமதித் துய்யும்வ(ண்) ணம்அருளும்
கண்ணுத லைக்கனியைக் காண்பது மென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 6

8082.மாவை யுரித்ததள்கொண் டங்கம் அணிந்தவனை
வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை
மூவ ருருத்தனதாம் மூல முதற்கருவை
மூசிடு மால்விடையின் பாகனை ஆகமுறப்
பாவக மின்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்
பால்நறு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவ லெனக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 7

8083.தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
தூய மறைப்பொருளாம் நீதியை வார்கடல்நஞ்(சு)
உண்டத னுக்கிறவா தென்று மிருந்தவனை
ஊழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா
அண்டனை அண்டர்தமக் காகம நூல்மொழியும்
ஆதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்
கண்டனை அன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 8

8084.நாதனை நாத(ம்)மிகுத் தோசைய தானவனை
ஞான விளக்கொளியாம் ஊனுயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
பற்றுவி டாதவனைக் குற்றமில் கொள்கையனைத்
தூதனை யென்றனைஆள் தோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையுந் தோடும் அணிந்ததிருக்
காதனை நாயடியே னெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 9

8085.கன்னலை இன்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையொண் சீருறை தண்தமிழால்
உன்னி மனத்தயரா உள்ளுரு கிப்பரவும்
ஒண்பொழில் நாவலர்கோ னாகிய ஆரூரன்
பன்னும் இசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினராய் எத்திசை யும்புகழ
மன்னி யிருப்பவர்கள் வானி னிழிந்திடினும்
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 85. திருக்கூடலையாற்றூர் : பண் – புறநீர்மை

8086. வடிவுடை மழுவேந்தி மதகரி உரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழல் உமையோடும்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகளிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 1

8087. வையகம் முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையிள அரவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரில்
ஐயன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 2

8088. ஊர்தொறும் வெண்தலை கொண்டுண்பலி யிடுமென்று
வார்தரு மென்முலையாள் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரில்
ஆர்வனிவ் வழிபோந்த அதிசய மறியேனே. 3

8089. சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த அதிசயம் அறியேனே. 4

8090. வேதியர் விண்ணவரும் மண்ணவருந் தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழ லுமையோடும்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரில்
ஆதியிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 5

8091. வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்த(ன்)ன வெண்முறுவல் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அத்தன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 6

8092. மழைநுழை மதியமொடு வாளர வம்சடைமேல்
இழைநுழை துகிலல்குல் ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரில்
அழகன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 7

8093. மறைமுதல் வானவரும் மாலயன் இந்திரனும்
பிறைநுதல் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறள்படை யதனோடுங் கூடலை யாற்றூரில்
அறவனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 8

8094.வேலையின் நஞ்சுண்டு விடையது தானேறிப்
பாலன்ன மென்மொழியாள் பாவையொ டும்முடனே
கோலம தருவாகிக் கூடலை யாற்றூரில்
ஆலனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 9

8095.கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆட லுகந்தானை அதிசய மிதுவென்று
நாடிய இன்தமிழால் நாவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 86. திருவன்பார்த்தான் பனங்காட்டூர் : பண் – சீகாமரம்

8096.விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையிலன் புடையானை யாவர்க்கும் அறியொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்வென்னே. 1

8097.அறையும்பைங் கழலார்ப்ப அரவாட அனலேந்திப்
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானார்
பறையும்சங் கொலியோவாப் படிறன்றன் பனங்காட்டூர்
உறையுமெங் கள்பிரானை உணராதா ருணர்வென்னே. 2

8098.தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாண் மலர்கொண்டங் கிசைந்தேத்தும் அடியார்கள்
பண்ணார் பாடலறாத படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெண்ணாணா யபிரானைப் பேசாதார் பேச்சென்னே. 3

8099.நெற்றிக்கண் ணுடையானை நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக் கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. 4

8100. உரமென்னும் பொருளானை உருகிலுள் உறைவானைச்
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை
வரம்முன்னம் அருள்செய்வான் வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பரமனெங் கள்பிரானைப் பரவாதார் பரவென்னே. 5

8101. எயிலார்பொக்க மெரித்த எண்தோள்முக்க ணிறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ யெனநின்றான்
மயிலார்சோலை கள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்
பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. 6

8102. மெய்யன்வெண் பொடிபூசும் விகிர்தன்வேத முதல்வன்
கையின்மான் மழுவேந்திக் காலன்காலம் அறுத்தான்
பைகொள்பாம் பரையார்த்த படிறன்றன் பனங்காட்டூர்
ஐயனெங்கள் பிரானை அறியாதா ரறிவென்னே. 7

8103. வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங்கள் பிரானை நினையாதார் நினைவென்னே. 8

8104. மழையானுந் திகழ்கின்ற மலரோனென் றிருவர்தாம்
உழையாநின் றவர்உள்க உயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. 9

8105. பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் அடித்தொண்டன் அடியன்சொல் லடிநாய்சொல்
ஊரூரன் உரைசெய்வா ருயர்வானத் துயர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 87. திருப்பனையூர் : பண் – சீகாமரம்

8106. மாட மாளிகை கோபு ரத்தொடு மண்டபம் வளரும் வளர்பொழில்
பாடல் வண்டறை யும்பழ னத்திருப் பனையூர்த்
தோடு பெய்தொரு காதி னிற்குழை தூங்கத் தொண்டர்கள் துள்ளிப்பாடநின்
றாடு மாறுவல் லாரவ ரேஅழ கியரே. 1

8107. நாறு செங்கழு நீர்மலர் நல்ல மல்லிகை சண்ப கத்தொடு
சேறு செய்கழ னிப்பழ னத்திருப் பனையூர்
நீறு பூசிநெய் யாடி தன்னை நினைப்ப வர்தம் மனத்த னாகிநின்
றாறு சூடவல் லாரவ ரேயழ கியரே. 2

8108. செங்கண் மேதிகள் சேடெ றிந்து தடம்ப டிதலிற் சேலினத்தொடு
பைங்கண் வாளைகள் பாய்பழ னத்திருப் பனையூர்த்
திங்கள் சூடிய செல்வ னாரடி யார்தம் மேல்வினை தீர்ப்பராய்விடில்
அங்கி ருந்துறை வாரவ ரேயழ கியரே. 3

8109. வாளை பாய மலங்(கு) இளங்கயல் வரிவ ரால்உக ளுங்கழனிப்
பாளை யொண்கமு கம்புடை சூழ்திருப் பனையூர்த்
தோளும் ஆகமுந் தோன்ற நட்டமிட் டாடு வாரடித்தொண்டர் தங்களை
ஆளு மாறுவல் லாரவ ரேயழ கியரே. 4

8110. கொங்கை யார்பல ருங்குடைந் தாட நீர்க்குவளை மலர் தரப்
பங்க யம்மல ரும்பழனத்திருப் பனையூர்
மங்கை பாகமும் மாலொர் பாகமுந் தாமுடை யவர்மான் மழுவினொ(டு)
அங்கைத் தீயுகப் பாரவ ரேயழ கியரே. 5

8111. காவிரி புடைசூழ் சோணாட் டவர்தாம் பரவிய கருணை யங்கடலப்
பாவிரி புலவர் பயிலுந்திருப் பனையூர்
மாஇரி மடநோக் கியஞ்ச மதக ரியுரி போர்த்து கந்தவர்
ஆவி லைந்துகப் பாரவ ரேயழ கியரே. 6

8112. மரங்கள் மேல்மயி லால மண்டபம் மாட மாளிகை கோபுரத்தின்மேல்
திரங்கல் வன்முக வன்புகப் பாய்திருப் பனையூர்த்
துரங்கன் வாய்பிளந் தானுந் தூமலர்த் தோன்ற லும்அறி யாமற்றோன்றிநின்(று)
அரங்கி லாடவல் லாரவ ரேயழ கியரே. 7

8113. மண்ணெலாம் முழவம் அதிர்தர மாட மாளிகை கோபு ரத்தின்மேல்
பண்(ணி)யாழ் முரலும் பழனத்திருப் பனையூர்
வெண்ணி லாச்சடை மேவிய விண்ணவ ரொடுமண் ணவர் தொழ
அண்ண லாகிநின் றாரவ ரேயழ கியரே. 8

8114. குரக்கி னங்குதி கொள்ளத் தேனுகக் குண்டு தண்வயற் கெண்டை பாய்தரப்
பரக்குந் தண்கழ னிப்பழ னத்திருப் பனையூர்
இரக்க மில்லவ ரைந்தொ டைந்தலை தோளிருபது தாள்நெரிதர
அரக்க னைஅடர்த் தாரவ ரேயழ கியரே. 9

8115. வஞ்சி நுண்ணிடை மங்கை பங்கினர் மாதவர் வளரும் வளர்பொழில்
பஞ்சின் மெல்லடி யார்பயி லுந்திருப் பனையூர்
வஞ்சி யும்வளர் நாவலூரன்வ னப்பகை யவ ளப்பன் வன்றொண்டன்
செஞ்சொற் கேட்டுகப் பாரவ ரேயழ கியரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 88. திருவீழிமிழலை : பண் – சீகாமரம்

8116. நம்பி னார்க்கருள் செய்யு மந்தணர் நான்மறைக் கிடமாய வேள்வியுள்
செம்பொன் நேர்மட வாரணி பெற்ற திருமிழலை
உம்ப ரார்தொழு தேத்த மாமலை யாளொடும் முடனே யுறைவிடம்
அம்பொன் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 1

8117. விடங்கொள் மாமிடற் றீர்வெள்ளைச் சுருளொன் றிட்டு விட்டகாதினீ ரென்று
திடங்கொள் சிந்தையி னார்கலி காக்குந் திருமிழலை
மடங்கல் பூண்ட விமானம் மண்மிசை வந்திழிச் சியவான நாட்டையும்
அடங்கல் வீழிகொண் டீரடி யேற்கும் அருளுதிரே. 2

8118. ஊனை உற்றுயி ராயினீர் ஒளிமுன் றுமாய்த் தெளிநீரோ டானஞ்சின்
தேனை யாட்டுகந் தீர்செழு மாடத் திருமிழலை
மானை மேவிய கையினீர் மழுவேந்தி னீர்மங்கை பாகத் தீர் விண்ணில்
ஆன வீழிகொண் டீரடி யேற்கும் அருளுதிரே. 3

8119. பந்தம் வீடிவை பண்ணினீர் படிறீர் மதிப்பிதிர்க் கண்ணி யீரென்று
சிந்தை செய்திருக் குஞ்செங்கை யாளர் திருமிழலை
வந்து நாடகம் வான நாடியர் ஆட மாலயன் ஏத்த நாடொறும்
அந்தண் வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 4

8120. புரிசை மூன்றையும் பொன்றக் குன்றவில் ஏந்தி வேதப் புரவித்தேர்மிசைத்
திரிசெய் நான்மறை யோர்சிறந் தேத்துந் திருமிழலைப்
பரிசி னாரடி போற்று பத்தர்கள் பாடியா டப்பரிந் துநல்கினீர்
அரிய வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 5

8121. எறிந்த சண்டி இடந்தகண் ணப்பன் ஏத்து பத்தர்கட் கேற்றம் நல்கினீர்
செறிந்த பூம்பொழில் தேன்துளி வீசுந் திருமிழலை
நிறைந்த அந்தணர் நித்தம் நாடொறும் நேசத் தாலுமைப் பூசிக்குமிடம்
அறிந்து வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 6

8122. பணிந்த பார்த்தன் பகீரதன் பலபத்தர் சித்தர்க்குப் பண்டு நல்கினீர்
திணிந்த மாடந் தொறுஞ்செல்வம் மல்கு திருமிழலைத்
தணிந்த அந்தணர் சந்தி நாடொறும் அந்திவா னிடுபூச் சிறப்பவை
அணிந்து வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 7

8123. பரந்த பாரிடம் ஊரிடைப் பலிபற்றிப் பார்த்துணுஞ் சுற்ற மாயினீர்
தெரிந்த நான்மறை யோர்க்கிட மாய திருமிழலை
இருந்து நீர்தமி ழோடிசை கேட்கும் இச்சையாற் காசு நித்தல் நல்கினீர்
அருந்தண் வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 8

8124. தூய நீரமு தாய வாறது சொல்லுகென் றுமைக்கேட்கச் சொல்லினீர்
தீய ராக்குலை யாளர் செழுமாடத் திருமிழலை
மேய நீர்பலி யேற்றதென் னென்றுவிண் ணப்பஞ்செய் பவர்க்கு மெய்ப்பொருள்
ஆய வீழிகொண் டீரடி யேற்கு மருளுதிரே. 9

8125. வேத வேதியர் வேத நீதிய ரோதுவார் விரிநீர் மிழலையுள்
ஆதி வீழிகொண் டீர் அடியேற்கும் அருளுகென்று
நாத கீதம்வண் டோதுவார் பொழில்நாவ லூரன் வன்தொண்டன் நற்றமிழ்
பாத மோதவல் லார்பர னோடு கூடுவரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 89. திருவெண்பாக்கம் : பண் – சீகாமரம்

8126. பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயில் உளாயேஎன்ன
உழையுடையான் உள்ளிருந்(து) உளோம்போகீர் என்றானே. 1

8127. இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணமென்பேன்
அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான் எனையுடையான் உளோம்போகீர் என்றானே. 2

8128. செய்வினையொன் றறியாதேன் திருவடியே சரணென்று
பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ வேண்டாவோ
பையரவா இங்கிருந்தா யோஎன்னப் பரிந்தென்னை
உய்யஅருள் செய்யவல்லான் உளோம்போகீர் என்றானே. 3

8129. கம்பமருங் கரியுரியன் கறைமிடற்றன் காபாலி
செம்பவளத் திருவுருவன் சேயிழையோ டுடனாகி
நம்பியிங்கே யிருந்தீரே என்றுநான் கேட்டலுமே
உம்பர்தனித் துணையெனக்(கு) உளோம்போகீர் என்றானே. 4

8130. பொன்இலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க
மின்இலங்கு நுண்ணிடையாள் பாகமா எருதேறித்
துன்னியிரு பாலடியார் தொழுதேத்த அடியேனும்
உன்னதமாய்க் கேட்டலுமே உளோம்போகீர் என்றானே. 5

8131. கண்ணுதலாற் காமனையுங் காய்ந்ததிறற் கங்கைமலர்
தெண்ணிலவு செஞ்சடைமேல் தீமலர்ந்த கொன்றையினான்
கண்மணியை மறைப்பித்தாய் இங்கிருந்தா யோஎன்ன
ஒண்ணுதலி பெருமானார் உளோம்போகீர் என்றானே. 6

8132. பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்யத்
தார்நிலவு நறுங்கொன்றைச் சடையனார் தாங்கரிய
கார்நிலவு மணிமிடற்றீர் இங்கிருந்தீ ரேஎன்ன
ஊரரவம் அரைக்கசைத்தான் உளோம்போகீர் என்றானே. 7

8133. வாரிடங்கொள் வனமுலையாள் தன்னோடு மயானத்துப்
பாரிடங்கள் பலசூழப் பயின்றாடும் பரமேட்டி
காரிடங்கொள் கண்டத்தன் கருதுமிடம் திருஒற்றி
ஊரிடங்கொண் டிருந்தபிரான் உளோம்போகீர் என்றானே. 8

8134. பொன்நவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீழ் இருஎன்று
சொன்னஎனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தா யோஎன்ன
ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம்போகீர் என்றானே. 9

8135. மான்திகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றஅருள் செய்தளித்தா யென்றுரைக்க உலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயி லிங்கிருந்தா யோவென்ன
ஊன்றுவதோர் கோலருளி யுளோம்போகீ ரென்றானே. 10

8136. ஏராரும் பொழில்நிலவு வெண்பாக்கம் இடங்கொண்ட
காராரும் மிடற்றானைக் காதலித்திட்(டு) அன்பினொடும்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் தமிழ்வல்லார்க்(கு) அடையாவல் வினைதானே. 11

திருச்சிற்றம்பலம்

*****

## 90. கோயில் : பண் – குறிஞ்சி

8137. மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனனேநீ வாழுநாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுங் கரதலத்தில் தமருகமும் எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. 1

8138. பேராது காமத்திற் சென்றாற்போ லன்றியே பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழுந் திருவினாரை
ஓராது தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.2

8139. நரியார்தங் கள்ளத்தால் பக்கான பரிசொழிந்து நாளும் உள்கிப்
பிரியாத அன்பராய்ச் சென்றுமுன் அடிவீழுஞ் சிந்தை யாரைத்
தரியாது தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.3

8140. கருமையார் தருமனார் தமர்நம்மைக் கட்டியகட் டறுப்பிப் பானை
அருமையாம் தன்னுலகம் தருவானை மண்ணுலகம் காவல் பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.4

8141. கருமானி னுரியாடைச் செஞ்சடைமேல் வெண்மதியக் கண்ணி யானை
உருமன்ன கூற்றத்தை உருண்டோட வுதைத்துகந்(து) உலவா இன்பந்
தருவானைத் தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
பெருமானார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.5

8142. உய்த்தாடித் திரியாதே உள்ளமே யொழிகண்டாய் ஊன்க ணோட்டம்
எத்தாலுங் குறைவில்லை யென்பர்காண் நெஞ்சமே நம்மை நாளும்
பைத்தாடும் அரவினன் படர்சடையன் பரஞ்சோதி பாவந் தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.6

8143. முட்டாத முச்சந்தி மூவா யிரவர்க்கு மூர்த்தி யென்னப்
பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார் பாவமும் வினையும் போக
விட்டானை மலையெடுத்த இராவணனைத் தலைபத்தும் நெரியக் காலால்
தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.7

8144. கல்தானுங் குழையுமா றன்றியே கருதுமா கரத கிற்றார்க்(கு)
எற்றாலுங் குறைவில்லை யென்பர்காண் உள்ளமே நம்மை நாளுஞ்
செற்றாட்டித் தருமனார் தமர்செக்கி லிடும் போது தடுத்தாட் கொள்வான்
பெற்றேறிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.8

8145. நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ் செய்மனமே நம்மை நாளுந்
தாடுடைய தருமனார் தமர்செக்கி லிடும்போது தடுத்தாட் கொள்வான்
மோடுடைய சமணர்க்கும் முடையுடைய சாக்கியர்க்கும் மூடம்வைத்த
பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே.9

8146. பாரூரும் அரவல்கு லுமைநங்கை யவள்பங்கன் பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர்செக்கி விடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீகொங்கி லணிகாஞ் சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்றா மன்றே.10

திருச்சிற்றம்பலம்

•••••

## 91. திருஒற்றியூர் : பண் – குறிஞ்சி

8147. பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஒட்டுந் திரைவாய் ஒற்றி யூரே. 1

8148. பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் அடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்தும் திரைவாய் ஒற்றி யூரே. 2

8149. பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றின் உரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளுந் திரைவாய் ஒற்றி யூரே. 3

8150. என்ன தெழிலும் நிறையுங் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவா னொற்றி யூரே. 4

8151. பணங்கொள் அரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவா ரிட்ட
உணங்கல் கவர்வா னொற்றி யூரே. 5

8152. படையார் மழுவன் பால்வெண் நீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைக ளறுப்பா னென்னை
உடையான் உறையும் ஒற்றி யூரே. 6

8153. சென்ற புரங்கள் தீயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட
நன்று நல்ல நாதன் நரையே
றொன்றை யுடையா னொற்றி யூரே. 7

8154. கலவம் மயில்போல் வளைக்கை நல்லார்
பலரும் பரவும் பவளப் படியான்
உலகி லுள்ளார் வினைகள் தீர்ப்பான்
உலவுந் திரைவா யொற்றி யூரே. 8

8155. பற்றி வரையை யெடுத்த அரக்கன்
இற்று முரிய விரலால் அடர்த்தார்
எற்றும் வினைகள் தீர்ப்பார் ஓதம்
ஒற்றுந் திரைவா யொற்றி யூரே. 9

8156. ஒற்றி யூரும் அரவும் பிறையும்
பற்றி யூரும் பவளச் சடையான்
ஒற்றி யூர்மேல் ஊர னுரைத்த
கற்றுப் பாடக் கழியும் வினையே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 92. திருப்புக்கொளியூர் அவிநாசி : பண் – குறிஞ்சி

8157. எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே உள்குகின் றேனுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே. 1

8158. வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாமணிநீ
ஒழிவ தழகோசொல் லாயரு ளோங்கு சடையானே
பொழிலாருஞ் சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணி எ(ன்)னைக்கிறி செய்ததே. 2

8159. எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்
கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பாரிலை
பொங்காடரவா புக்கொளி யூரவி நாசியே
எங்கோ னேயுனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே. 3

8160. உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. 4

8161. அரங்காவ தெல்லாம் ஆயிடு காடது அன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கெட எய்தாய் புக்கொளி யூரவி நாசியே
குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே. 5

8162. நாத்தா னுமுனைப் பாடலன் றிநவி லாதெனாச்
சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே. 6

8163. மந்தி கடுவனுக் குணப்பழம் நாடி மலைப்புறஞ்
சந்திகள் தோறுஞ் சலபுட்ப மிட்டு வழிபடப்
புந்தி யுறைவாய் புக்கொளி யூரவி நாசியே
நந்தி யுனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே. 7

8164. பேணா தொழிந்தே னுன்னை யல்லாற்பிற தேவரைக்
காணா தொழிந்தேன் காட்டுதி யேலின்னம் காண்பன்நான்
பூணாண் அரவா புக்கொளி யூரவி நாசியே
காணாத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. 8

8165. நள்ளாறு தெள்ளா றரத்துறை வாயெங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணி யெ(ன்)னைக்கிறி செய்ததே. 9

8166. நீரேற வேறுநிமிர் புன்சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 93. திருநறையூர்ச் சித்தீச்சரம் : பண் – குறிஞ்சி

8167. நீரும் மலரும் நிலவுஞ் சடைமேல்
ஊரும் அரவம் உடையான் இடமாம்
வாரும் அருவி மணிபொன் கொழித்துச்
சேரும் நறையூர்ச் சித்தீச் சரமே. 1

8168. அளைப்பை அரவேர் இடையாள் அஞ்சத்
துளைக்கைக் கரித்தோல் உரித்தா னிடமாம்
வளைக்கைம் மடவார் மடுவில் தடநீர்த்
திளைக்கும் நறையூர்ச் சித்தீச் சரமே. 2

8169. இகழுந் தகையோ ரெயில்மூன் றெரித்த
பகழி யொடுவில் லுடையோன் பதிதான்
முகிழ்மென் முலையார் முகமே கமலம்
திகழும் நறையூர்ச் சித்தீச் சரமே. 3

8170. மறக்கொ ளரக்கன் வரைதோள் வரையால்
இறக்கொள் விரற்கோன் இருக்கும் இடமாம்
நறக்கொள் கமலம் நனிபள் ளியெழத்
திறக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. 4

8171. முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர்மை கொள்வான் அமரும் இடமாம்
கழுநீர் கமழக் கயல்சேர் உகளும்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. 5

8172. ஊனார் உடைவெண் தலையுண் பலிகொண்(டு)
ஆனார் அடலே றமர்வா னிடமாம்
வானார் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனார் நறையூர்ச் சித்தீச் சரமே. 6

8173. காரூர் கடலில் விடமுண் டருள்செய்
நீரூர் சடையன் நிலவும் மிடமாம்
வாரூர் முலையார் மருவும் மருகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே.. 7

8174. கரியின் உரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையா னிடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 8

8175. பேணா முனிவ(ா)ன் பெருவேள் வியெலாம்
மாணாமை செய்தான் மருவும் மிடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. 9

8176. குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த
எறியும் மழுவாட் படையா னிடமாம்
நெறியில் வழுவா நியமத் தவர்கள்
செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 10

8177. போரார் புரமெய் புனிதன் அமருஞ்
சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை
ஆரூ ரன்சொல் இவைவல் லவர்கள்
ஏரா ரிமையோ ருலகெய் துவரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 94. திருச்சோற்றுத்துறை : பண் – கௌசிகம்

8178. அழல்நீ ரொழுகி அனைய சடையும்
உழைஈ ருரியும் உடையா னிடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. 1

8179. பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வன் அமலன் னிடமாம்
இண்டை கொண்டன் பிடைய றாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. 2

8180. கோல அரவுங் கொக்கின் இறகும்
மாலை மதியும் வைத்தா னிடமாம்
ஆலும் மயிலும் ஆட லளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. 3

8181. பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் ஆத்தி அல்லால் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. 4

8182. உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்தன் இடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. 5

8183. ஓதக் கடல்நஞ் சினையுண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. 6

8184. இறந்தா ரென்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றம் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7

8185. காமன் பொடியாக் கண்ணொன் றிமைத்த
ஓமக் கடலார் உகந்த இடமாம்
தேமென் குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. 8

8186. இலையால் அன்பால் ஏத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்
தலையால் தாழுந் தவத்தோர்க் கென்றுந்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. 9

8187. சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றா ரடியார் அடிநா யூரன்
சொற்றா ளிவைகற் றார்துன் பிலரே. 10

திருச்சிற்றம்பலம்

•••••

## 95. திருவாரூர் : பண் – செந்துருத்தி

8188. மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 1

8189. விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. 2

8190. அன்றில் முட்டா தடையுஞ் சோலை ஆரூ ரகத்தீரே
கன்று முட்டி யுண்ணச் சுரந்த காலி யவைபோல
என்றும் முட்டாப் பாடும் அடியார் தங்கண் காணாது
குன்றின் முட்டிக் குழியில் வீழ்ந்தால் வாழ்ந்து போதீரே. 3

8191. துருத்தி உறைவீர் பழனம் பதியாச் சோற்றுத் துறையாள்வீர்
இருக்கை திருவா ரூரே உடையீர் மனமே எனவேண்டா
அருத்தி யுடைய அடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமை பணித்தால் வாழ்ந்து போதீரே. 4

8192. செந்தண் பவளம் திகழுஞ் சோலை இதுவோ திருவாரூர்
எந்தம் அடிகள் இதுவே யாமா றுமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் அடியார் தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ என்றால் வாழ்ந்து போதீரே.5

8193. தினைத்தாள் அன்ன செங்கால் நாரை சேருந் திருவாரூர்ப்
புனத்தார் கொன்றைப் பொன்போல் மாலைப் புரிபுன் சடையீரே
தனத்தா லின்றித் தாந்தாம் மெலிந்து தங்கண் காணாது
மனத்தால் வாடி அடியா ரிருந்தால் வாழ்ந்து போதீரே. 6

8194. ஆயம் பேடை அடையுஞ் சோலை ஆரூ ரகத்தீரே
ஏ(ய்!)யெம் பெருமான் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்கு
மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்நீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. 7

8195. கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை இகழா தேத்துவோம்
பழிதான் ஆவ தறியீ ரடிகேள் பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந் திருந்தால் வாழ்ந்து போதீரே. 8

8196. பேயோ டேனும் பிரிவொன் றின்னா தென்பர் பிறரெல்லாங்
காய்தான் வேண்டிற் கனிதா னன்றோ கருதிக் கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 9

8197. செருந்தி செம்பொன் மலருஞ் சோலை இதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே இடமாக் கொண்டீரே
இருந்தும் நின்றுங் கிடந்தும் உம்மை இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே. 10

8198. காரூர் கண்டத் தெண்தோள் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே அடிப்பேர் ஆரூரன்
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 96. திருவாரூர்ப் பரவையுண்மண்டளி : பண் – பஞ்சமம்

8199. தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயா கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்(கு)
ஆவாஎன் பரவையுண் மண்டளி அம்மானே. 1

8200. பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னானே செக்கர்வா னத்திள ஞாயிறு)
அன்னானே பரவையுண் மண்டளி அம்மானே. 2

8201. நாமாறா துன்னையே நல்லன சொல்லுவார்
போமாறென் புண்ணியா புண்ணிய மானானே
பேய்மாறாப் பிணம்இடு காடுகந் தாடுவாய்க்(கு)
ஆமாறென் பரவையுண் மண்டளி அம்மானே. 3

8202. நோக்குவேன் நுன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றாய் கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னை என்மனத்(து)
ஆர்க்கின்றேன் பரவையுண் மண்டளி அம்மானே. 4

8203. பஞ்சேரும் மெல்லடி யாளையோர் பாகமாய்
நஞ்சேரும் நன்மணி கண்டம் உடையானே
நெஞ்சேர நின்னையே உள்கி நினைவாரை
அஞ்சேலென் பரவையுண் மண்டளி அம்மானே. 5

8204. அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்தமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே. 6

8205. விண்டானே மேலையார் மேலையார் மேலாய
எண்தானே எழுத்தோடு சொற்பொரு ளெல்லாம்முன்
கண்டானே கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி அம்மானே. 7

8206. காற்றானே கார்முகில் போல்வதோர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளையோர் பாகமாய்
நீற்றானே நீள்சடை மேல்நிறை வுள்ளதோர்
ஆற்றானே பரவையுண் மண்டளி அம்மானே. 8

8207. செடியேன்நான் செய்வினை நல்லன செய்யாத
கடியேன்நான் கண்டதே கண்டதே காமுறும்
கொடியேன்நான் கூறுமா றுன்பணி கூறாத
அடியேன்நான் பரவையுண் மண்டளி அம்மானே. 9

8208. கரந்தையும் வன்னியும் மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை
நிரம்பிய வூரன் உரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே. 10

திருச்சிற்றம்பலம்

*****

## 97. திருநனிபள்ளி : பண் – பஞ்சமம்

8209. ஆதியன் ஆதிரை யன்அயன் மாலறி தற்கரிய
சோதியன் சொற்பொரு ளாய்ச்சுருங் காமறை நான்கினையும்
ஓதியன் உம்பர்தங் கோனுல கத்தினு ளெவ்வுயிர்க்கும்
நாதியன் நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 1

8210. உறவிலி ஊன மிலியுண ரார்புரம் மூன்றெரியச்
செறுவி(ல்)லி தன்நினை வார்வினை யாயின தேய்ந்தழிய
அறவில கும்அரு ளான்மரு ளார்பொழில் வண்டறையும்
நறைவிரி கொன்றையி னான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 2

8211. வானுடை யான்பெரி யான்மனத் தாலும் நினைப்பரியான்
ஆனிடை ஐந்தமர்ந் தானணு வாகியொர் தீயுருக்கொண்(டு)
ஊனுடை யிவ்வுட லமொடுங் கிப்புகுந் தான்பரந்தான்
நானுடை மாடெம்பி ரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 3

8212. ஓடுடை யன்கல னாஉடை கோவண வன்உமையோர்
பாடுடை யன்பலி தேர்ந்துணும் பண்புடை யன்பயிலக்
காடுடை யன்னிட மாமலை யேழுங் கருங்கடல்சூழ்
நாடுடை நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 4

8213. பண்ணற் கரிய தொருபடை ஆழித னைப்படைத்துக்
கண்ணற் கருள்புரிந் தான்கரு தாதவர் வேள்விஅவி
உண்ணற் கிமையவ ரைஉருண் டோட வுதைத்துகந்து
நண்ணற் கரியபி ரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 5

8214. மல்கிய செஞ்சடை மேல்மதி யும்அர வும்முடனே
புல்கிய ஆரண னெம்புனி தன்புரி நூல்விகிர்தன்
மெல்கிய விற்றொழி லான்விருப் பன்பெரும் பார்த்தனுக்கு
நல்கிய நம்பெரு மான்நண்ணு மூர்நனி பள்ளியதே.

8215. அங்கமோர் ஆறவை யும்அரு மாமறை வேள்விகளும்
எங்குமி ருந்தந் தணரெரி மூன்றவை யோம்புமிடம்
பங்கய மாமுகத் தாளுமை பங்கன் உறைகோயில்
செங்கயல் பாயும் வயற்றிரு வூர்நனி பள்ளியதே. 7

8216. திங்கட் குறுந்தெரி யல்திகழ் கண்ணியன் நுண்ணியனாய்
நங்கட் பிணிகளை வான்அரு மாமருந் தேழ்பிறப்பும்
மங்கத் திருவிர லாலடர்த் தான்வல் லரக்கனையும்
நங்கட் கருளும் பிரான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 8

8217. ஏன மருப்பி னொடும்எழி லாமையும் பூண்டுகந்து
வான மதில்அர ண(ம்)மலை யேசிலை யாய்வளைத்தான்
ஊனமில் காழிதன் னுள்உயர் ஞானசம் பந்தர்க்கன்று
ஞான மருள்புரிந் தான்நண்ணு மூர்நனி பள்ளியதே. 9

8218. காலமும் நாள்கழி யுந்நனி பள்ளி மனத்தினுள்கிக்
கோலம தாய வனைக்குளிர் நாவல வூரன்சொன்ன
மாலை மதித்துரைப் பார்மண் மறந்துவா னோருலகில்
சாலநல் லின்பமெய்தித் தவலோகத் திருப்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

• • • • •

## 98. திருநன்னிலத்துப் பெருங்கோயில் : பண் – பஞ்சமம்

8219. தண்ணியல் வெம்மையினான் தலையிற்கடை தோறும்பலி
பண்ணியல் மென்மொழியா ரிடங்கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையாலடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 1

8220. வலங்கிளர் மாதவஞ்செய் மலைமங்கையோர் பங்கினனாய்ச்
சலங்கிளர் கங்கைதங்கச் சடையொன்றிடை யேதரித்தான்
பலங்கிளர் பைம்பொழில்தண் பனிவெண்மதி யைத்தடவ
நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 2

8221. கச்சியன் இன்கருப்பூர் விருப்பன் கருதிக்கசிவார்
உச்சியன் பிச்சையுண்ணி உலகங்களெல் லாமுடையான்
நொச்சியம் பச்சிலையால் நுரைதீர்புன லாற்றொழுவார்
நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 3

8222 பாடிய நான்மறையான் படுபல்பிணக் காடரங்கா
ஆடிய மாநடத்தான் அடிபோற்றியென் றன்பினராய்ச்

சூடிய செங்கையினார் பலதோத்திரம் வாய்த்தசொல்லி
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 4

8223. பிலந்தரு வாயினொடு பெரிதும்வலி மிக்குடைய
சலந்தரன் ஆகமிரு பிளவாக்கிய சக்கரம்முன்
நிலந்தரு மாமகள்கோன் நெடுமாற்கருள் செய்தபிரான்
நலந்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 5

8224. வெண்பொடி மேனியினான் கருநீல மணிமிடற்றான்
பெண்படி செஞ்சடையான் பிரமன்சிரம் பீடழித்தான்
பண்புடை நான்மறையோர் பயின்றேத்திப்பல் கால்வணங்கும்
நண்புடை நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 6

8225. தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடையன்சுடர் வெண்மழுவான்
படைமலி கையன்மெய்யிற் பகட்டீருரிப் போர்வையினான்
மடைமலி வண்கமலம் மலர்மேன்மட அன்ன(ம்)மன்னி
நடைமலி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 7

8226. குளிர்தரு திங்கள்கங்கை குரவோடரக் கூவிளமும்
மிளிர்தரு புன்சடைமே லுடையான்விடை யான்விரைசேர்
தளிர்தரு கோங்குவேங்கை தடமாதவி சண்பகமும்
நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 8

8227. கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவனாய்
அமர்பயில் வெய்திஅருச் சுனற்கருள் செய்தபிரான்
தமர்பயில் தண்விழவிற் றகுசைவர் தவத்தின்மிக்க
நமர்பயில் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 9

8228. கருவரை போலரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிர லாரடர்த்தின் னருள்செய்த உமாபதிதான்
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்திகழ் செம்பியர்கோன்
நரபதி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 10

8229. கோடுயர் வெங்களிற்றுத் திகழ்கோச்செங்க ணான்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடையன்திரு வாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துளே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 99. திருநாகேச்சுரம் : பண் – பஞ்சமம்

8230.பிறையணி வாள்நுதலாள் உமையாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீலமால்விடம் உண்டதென்னே
குறையணி குல்லைமுல்லை அளைந்துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே. 1

8231.அருந்தவ மாமுனிவர்க் கருளாகியொர் ஆலதன்கீழ்
இருந்தற மேபுரிதற் கியல்பாகிய தென்னைகொலாம்
குருந்தய லேகுரவம் அரவின்னெயி றேற் றரும்பச்
செருந்திசெம் பொன்மலருந் திருநாகேச் சரத்தானே. 2

8232.பாலன தாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித்துக் கருத்தாக்கிய தென்னைகொலாம்
கோல மலர்க்குவளை கழுநீர்வயல் சூழ்கிடங்கில்
சேலொடு வாளைகள்பாய் திருநாகேச் சரத்தானே. 3

8233.குன்ற மலைக்குமரி கொடியேரிடை யாள்வெருவ
வென்றி மதகரியின் உரிபோர்த்தது மென்னைகொலாம்
முன்றில் இளங்கமுகின் முதுபாளை மதுஅளைந்து
தென்றல் புகுந்துலவுந் திருநாகேச் சரத்தானே. 4

8234.அரைவிரி கோவணத்தோ டரவார்த்தொரு நான்மறைநூல்
உரைபெரு கவ்வுரைத்தன் றுகந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணியும் வரைச்சந்தகி லோடும்உந்தித்
திரைபொரு தண்பழனத் திருநாகேச் சரத்தானே. 5

8235.தங்கிய மாதவத்தின் தழல்வேள்வியின் நின்றெழுந்த
சிங்கமும் நீள்புலியுஞ் செழுமால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே
செங்கயல் பாய்கழனித் திருநாகேச் சரத்தானே. 6

8236.நின்றவிம் மாதவத்தை யொழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேல் மதுவுண்டுவண் தேன்முரலச்
செங்கயல் பாய்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. 7

8237.வரியர நாணதாக மாமேரு வில்லதாக
அரியன முப்புரங்கள் அவைஆரழல் ஊட்டலென்னே
விரிதரு மல்லிகையும் மலர்ச்சண்பக மும்மளைந்து
திரிதரு வண்டுபண்செய் திருநாகேச் சரத்தானே. 8

8238.அங்கியல் யோகுதன்னை அழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேல் மதுவுண்டுபண் வண்டறையச்
செங்கயல் நின்றுகளுந் திருநாகேச் சரத்தானே. 9

8239.குண்டரைக் கூறையின்றித் திரியுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன்மை விரவாகிய தென்னைகொலோ
தொண்டிரைத் து'வணங்கித் தொழில்பூண்டடி யார்பரவும்
தெண்டிரைத் தண்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. 10

8240.கொங்கணை வண்டரற்றக் குயிலும்மயி லும்பயிலும்
தெங்கணை பூம்பொழில்சூழ் திருநாகேச் சரத்தானை
வங்கம் மலிகடல்சூழ் வயல்நாவல வூரன்சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

•••••

## 100. திருநொடித்தான்மலை : (திருக்கைலாய மலை)
## பண் – பஞ்சமம்

8241. தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 1

8242.ஆனை யுரித்தபகை யடியேனொடு மீளக்கொலோ
ஊனை யுயிர்வெருட்டி யொள்ளியானை நினைந்திருந்தேன்
வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை ஏறவைக்க
ஆனை யருள்புரிந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 2

8243.மந்திர மொன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களால் துரிசேசெயுந் தொண்டனெனை
அந்தர மால்விசும்பில் அழகானை யருள்புரிந்த
துந்தர மோநெஞ்சமே நொடித்தான்மலை யுத்தமனே. 3

8244.வாழ்வை உகந்தநெஞ்சே மடவார்தங்கள் வல்வினைப்பட்(டு)
ஆழ முகந்தஎன்னை யதுமாற்றி அமரரெல்லாம்
சூழ அருள்புரிந்து தொண்டனேன்பர மல்லதொரு
வேழ மருள்புரிந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 4

8245.மண்ணுல கிற்பிறந்து நும்மைவாழ்த்தும் வழியடியார்
பொன்னுல கம்பெறுதல் தொண்டனேன்இன்று கண்டொழிந்தேன்
விண்ணுல கத்தவர்கள் விரும்பவெள்ளை யானையின்மேல்
என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 5

8246.அஞ்சினை ஒன்றிநின்று அலர்கொண்டடி சேர்வறியா
வஞ்சனை என்மனமே வைகிவானநன் னாடர்முன்னே
துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன்பர மல்லதொரு
வெஞ்சின ஆனைதந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 6

8247.நிலைகெட விண்அதிர நிலமெங்கும் அதிர்ந்தசைய
மலையிடை யானையேறி வழியேவரு வேனெதிரே
அலைகட லாலரையன் அலர்கொண்டுமுன் வந்திறைஞ்ச
உலையணை யாதவண்ணம் நொடித்தான்மலை யுத்தமனே. 7

8248.அரவொலி ஆகமங்கள் அறிவாரறி தோத்திரங்கள்
விரவிய வேதஒலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழிதந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தான் நொடித்தான்மலை யுத்தமனே. 8

8249.இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ ரிவனாரென எம்பெருமான்
நந்தமர் ஊரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே. 9

8250.ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்தமிழால் இசைந்தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே. 10

**திருச்சிற்றம்பலம்**

ஃஃஃஃ

**ஏழாம் திருமுறை முற்றிற்று**

உ

# தலச்சிறப்பகராதி

ம. பாலசுப்பிரமணிய முதலியார்

இவ்வகராதியில் தலங்களின் தேவாரப்பெயர், வழங்கும் பெயர், அருகிலுள்ள ரயில் ஸ்டேஷன், ரயில் பகுதி, ஸ்டேஷனிலிருந்து தலம் எத்தனை மைல், தலப்பாசுர எண்கள், தலச்சிறப்புச் சுருக்கம், சில முக்கிய தலங்களிலுள்ள கல்வெட்டு எண்கள் முதலிய விவரங்கள் உள்ளன. தலப்பெயர்கள்முன் **திரு** என்று சேர்த்துக் கொள்க. கல்வெட்டு எண்களில் தெஇக என்பன தென் இந்திய கல்வெட்டுத் தொகுதியில் இந்த எண்ணுள்ள புத்தகத்தில் இந்த எண்கள் உள்ள கல்வெட்டுக்களின் தமிழ் மூலங்கள் என்று பொருள்படும். [தெஇக *8 (57—167)* என்றால் S. I. I. Vol. VIII No. *57* to *167*] *170—201 / 1909* என்றால் *1909*ம் ஆண்டறிக்கையில் *170—201* எண்களுள்ள கல்வெட்டுக்களின் சுருக்கம் ஆங்கிலத்தில் என்று பொருள்படும். அ, ச, சு என்பன முறையே அப்பர் (திருநாவுக்கரசு சுவாமிகள்), சம்பந்தர் (திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்) சுந்தரர் (சுந்தர மூர்த்தி சுவாமிகள்) திருவாக்குக்களைக் குறிக்கும். a முதல் w வரை உள்ளன கீழ்வரும் ரயில் பகுதிகளைக் குறிக்கும். a சென்னப்பட்டணம் எழும்பூர், செங்கல்பட்டு, விழுப்புரம், மாயவரம், தஞ்சாவூர், திரிசிராப்பள்ளி, திண்டுக்கல், மதுரை, மானாமதுரை, பாம்பன், ராமேஸ்வரம். b செங்கல்பட்டு, காஞ்சிபுரம், அரக்கோணம். c புதுச்சேரி, விழுப்புரம், திருவண்ணாமலை, காட்டுப்பாடி, ரேணுகுண்டா, கூடூர். d விழுப்புரம் விருத்தாசலம், லால்குடி, திரிசிராப்பள்ளி, புதுக்கோட்டை, காரைக்குடி, மானாமதுரை. e கூடலூர், வடலூர், விருத்தாசலம், சேலம். f மாயவரம், தரங்கம்பாடி. g மாயவரம், பேரளம், திருவாரூர், திருத்துறைப்பூண்டி, காரைக்குடி. h பேரளம், காரைக்கால். j தஞ்சாவூர், நீடாமங்கலம், திருவாரூர், நாகூர். k நீடாமங்கலம், மன்னார்குடி. l திருத்துறைப்பூண்டி, வேதாரண்யம், கோடிக்கரை. m மதுரை, விருதுநகர், மணியாச்சி, திருநெல்வேலி. n விருதுநகர், சங்கரன் கோயில், தென்காசி. p பாம்பன், தனுஷ்கோடி, தலைமன்னார், திருக்கேஸ்வரம், மதவாச்சி, மாஹோ, திருக்கோணமலை. q சென்னப்பட்டணம் சென்ட்ரல், அரக்கோணம், காட்டுப்பாடி, ஜோலார்பேட்டை, சேலம், ஈரோடு, போத்தனூர், ஷோரனூர், திருச்சூர், இருஞாலக்குடா, கொச்சித் துறைமுகம். r ஈரோடு, திருசிராப்பள்ளி. s சென்னப்பட்டணம் சென்ட்ரல், திருவொற்றியூர், பெஜவாடா, நாக்பூர், டில்லி. t சென்னை

பட்டணம் செண்ட்ரல், குண்டக்கல், பம்பாய். u பெஜவாடா, நந்தியால், குண்டக்கல், ஹுப்ளி. v மதராஸ், கல்கத்தா, லக்நோ, ஹரித்வார், ரிஷிகேஸ், டேராடூன் w லக்நோ, பரெய்லி, காதகோடாம். x கல்கத்தா, பகால்பூர், தார்பங்கா, ரக்சூல், பிக்நதொரி.

**1. அகத்தியான்பள்ளி** *(அகஸ்தியாம்பள்ளி) l. அகஸ்தியாம் பள்ளி 1/4 மைல். பார்வதி தேவியாருக்கு இமயமலையில் நடந்த திருமணத்தை அகத்தியர் இத் தலத்திலிருந்தே தரிசித்தனர். கடற் கரைத் தலம் 2291—3201 (ச).* **2. அச்சிறுபாக்கம்** *(அச்சரவாக்கம்)* a அச்சரவாக்கம் ¼ மைல். முப்புரம் எரிக்கச் சிவபெருமான் தேர் ஏறிச் செல்லத் தொடங்கும்போது, தேரின் உறுப்புக்களாக அமைந்த தேவர்கள், விநாயகரை வணங்காமல் இறுமாப்புக் கொள்ள, அவர்கட்கு நல்லறிவூட்ட, விநாயகர் அருளால் தேர் அச்சு இற்று ஒடிந்தது, *(அச்சு இறு பாக்கம்)* விநாயகரை வணங்கிய பின், தேர்புறப்பட்டுத் திருவதிகை சேர்ந்தது. மூலஸ்தான மூர்த்தி கள் இருவர். முக்கியமானவர் கோபுரவாயிலுக்குச் சற்று வடபுறத் தில், நந்தி பலிபீடம் துவஜஸ்தம்பங்களோடு "எமையாட்சீசர்" அல்லது ஆட்சி கொண்டாராக விளங்குகிறார். கோபுர வாயிலுக் கெதிரிலுள்ளவர் உமையாட்சீசர் எனப்படுகிறார். கல்வெட்டுக்கள் தெஇக 7 (447—476) 12 (83) இவற்றுள் "ஆட்சிகொண்ட மகாதேவர்" என்பதே சுவாமிபெயர். 831—841 (ச) **3. அஞ்சைக் களம்** *(திருவஞ்சிக்குளம்)* q திருச்சூர் 30 மைல். திருச்சூரிலிருந்து கொடுங் கோளூர் (Cranganore) போகும் பஸ் ஏறிக் கொடுங்கோளூ ருக்கு எதிர் கரையில் இறங்கி உப்பங்கழி (Backwaters) வழியே வஞ்சி *(சிறுபடகு)* அமர்த்தி நேரே அம்பலம் (=கோயில்) போகலாம். கொடுங்கோளூர் சென்று, சேரன் செங்குட்டுவன் எடுப்பித்த கண்ணகிகோயில் என்று கருதப்படும் பகவதி கோயிலைத் தரிசித்து, பஸ்மூலம் அம்பலம் சேரலாம். சேரநாட்டு முறைப்படி நீராடி ஈர உடையோடு அல்லது பட்டுடுத்தியே உட்செல்ல வேண்டும். அஞ்சைக் களத்தப்பர் தரைமட்டத்திற்கு மேல் சில அங்குல உயரமே உள்ளார். "தலைக்குத் தலைமாலை" என்று 7256ம் பாசுரம் கூறுவதைத் திருமேனியின் சிரசில் தரிசிக்கலாம். முதற் பிரகாரத்தில் ஒரு சிறு அறையில் சேரமான் பெருமாள் நாயனாரும் அவர் தோழரும் (=சுந்தரரும்) செப்புத் திருமேனிகளாகப் பிரதிஷ்டை செய்யப் பெற்றுள்ளனர். ஆடி சுவாதியன்று தமிழ்நாட்டு மக்கள் திரளாகச் சென்று வழி படுகின்றனர். இத்தலத்திலிருந்து சுந்தரமூர்த்தி சுவாமிகள்

*இறைவன் அனுப்பிய வெள்ளானை மீதேறிக் கயிலாயம் சென்றனர். 7256—65 (சு).* **4. அண்ணாமலை** *(திருவண்ணாமலை)* c *திருவண்ணாமலை 1 மைல். தெஇக 8 (57—165) பஞ்ச பூதத்தலங்களுக்குள் இது தேஜஸ் எனும் தீயைக் குறிக்கும். "பிரமன் அரி என்றிருவரும் தம் பேதைமையால், பரமம் யாம்பரம் என்றவர்கள் பதைப்பொடுங்க, அரனார் அழல் உருவாய் அங்கே அளவிறந்து, பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ'' என்று திருவாசகம் 326ம் பாடல் கூறும் அழல் உருவே இப்போது மலை யுருவாயுள்ளது. மலையின் உயரம் கடல்மட்டத்துக்கு மேல் 2668 அடி. மலைகள் நான்குவகை யென்று நிலநூல்* (geology) *கூறுவதுள் இம்மலை நெருப்பினால் வந்தது* (igneous rock) *என்று நிலநூல் வல்லுநர் கூறுகின்றனர். அண்ணாமலையார், உண்ணாமுலையம்மை திருவுருவங்கள் அழகும் அருளும் நிரம்பியன. சாதாரணமாகக் கோயில்களில் அஷ்டபந்தன மருந்து சாத்திப் பிரதிஷ்டை செய்வது போலன்றி, இக்கோயிலில் அண்ணாமலையார் சுவர்ணபந்தனம் (சுத்தமான தங்கத்தால் பந்தணம்) செய்யப் பெற்றுள்ளார். அபிஷேகத்தின்போது தரிசிக்க லாம். நினைத்தாலே முத்திதரும் தலம். அருணகிரி நாதர் வாழ்ந்து முத்திபெற்ற தலம். அவர் பாடலுக் கிரங்கிப் பிரபுடதேவமா ராஜனுக்குக் காட்சியளித்த முருகன் சந்நிதி, கீழைக்கோபுர வாயிலுக்கருகில், திருக்குளத்தின் வடபாலுள்ள 16 கால் மண்டபத் தில் ஒரு காலில் உள்ள "கம்பத்திளையனார் கோயிலாக'' உள்ளது. அங்கிருந்து மேற்கே சென்று வல்லாள மகாராஜன் கோபுர வாயிலுள் நுழையும்போது வடபுறம் இருக்கும் முருகனே, இக் கோபுரத்தின் மேலிருந்து அருணகிரிநாதர் குதிக்கும்போது, அவருக்குத் தீங்கு வாராமல் தாங்கிக் காத்தருளிய பெருமான். திருவாசகத்துள் திருவெம்பாவை என்ற பனுவல், இத்தலத்துப் பெண்கள் மார்கழி நீராட்டுக்கு அதிகாலையில் ஒருவரை ஒருவர் எழுப்பிச் சென்றதை அடிப்படையாகக் கொண்டது. தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலியவற்றோடு அருணகிரியந்தாதி, அண்ணாமலை வெண்பா, சோணசைலமாலை, அருணைக் கலம்பகம் முதலியனவும் புகழ்பெற்றவை. சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய "அருணாசலபுராணம்'' இலக்கியச் சுவை மிக்க நூல். மலைவலம் (8 மைல்) வரும் வழியில் பற்பல தீர்த்தங்கள் (மொத்தம் 360) அணி அணாமலை (அடியண்ணாமலையென வழங்குவது) பஞ்சமுக தரிசனம் என்னும் மலையின் ஐந்து சிகரக் காட்சி முதலியன புழ்பெற்றன. மலைமேலேறிச் செல்லும் வழியில் முலைப்பால் தீர்த்தம், குகை நமச்சிவாயர் கோயில், குருநமச்*

சிவாயர் சந்நிதி முதலியன உள்ளன. கார்த்திகை மாதம் நடை பெறும் திருவிழாவில் 4ம் நாள் வெள்ளிக்கற்பக விருக்ஷகம் காமதேனு. 5ம் நாள் வெள்ளி ரிஷபம். 6ம் நாள் வெள்ளி ரதம். 10ம் நாள் தீபதரிசனம் மிகப் பிரபலம். 10ம் திருநாளன்று அதி காலையில் பரணி தீபதரிசனம் நடைபெறும். அண்ணாமலையார் சந்நிதிக் கெதிரில் 5 பெரிய நெய் அக்ண்டங்கள் ஏற்றிப் பஞ்ச ப்ரஹ்ம மந்திரங்கள் முதலியவற்றோடு பூசித்து வைப்பார்கள். மாலை 5½ மணிக்குள்ளாகப் பஞ்சமூர்த்திகளும், மேளவாத்தியம் தீ வத்திகள் முதலியன இன்றி, சுவாமி சந்நிதிக்கெதிரிலுள்ள பெரிய மண்டபத்தில், அழகிய பெருவிமானங்களில் மிகப் பருத்த மாலைகளால் அலங்கரிக்கப் பெற்று, மலையைத் திருக்கண் சாத்துகின்ற நிலையில் எழுந்தருளியிருப்பார்கள். சுவாமி சந்நிதி யில் அர்த்தநாரீசுவரர், பரணி தீபங்கள் ஐந்தையும் சரியாக மாலை 6 ம்ணிக்கு, வெளியே கொண்டுவந்து, திருக்கொடி மரத்துக்கெதிரிலுள்ள ஒரு பெரிய கொள்கலத்திற் சேர்ப்பார். பரணி தீபம் வெளிவரும் நேரத்தில் மலைமீது தீபக் காட்சி, கோயில் முழுமையும் எலெக்ட்ரிக் விளக்குகள், பல பெரிய தீவத்திகள், வாணவேடிக்கை, உடல் மேளங்களின் இடிமுழக்கம் எல்லாம் ஒரே விநாடிக்குள் ஒருங்கே நிகழும். அண்ணாமலை யாரே அழலுருவாகி மலையாகக் காட்சியளிக்கிறார் என்பதற்கு அறிகுறியாக, அர்த்தநாரீசுவரர் வெளிவரும்போது, சுவாமி கோயிலைத் தாளிட்டு, அடுத்தநாள் காலையில்தான் திறப்பார்கள். இந்த தீபதரிசனத்தை அனுபவிக்கப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கோயிலுக்குள் மாலை 3 மணியிலிருந்தே வந்து சேர்வார் கள். தைமீ 2ம் தேதி திருவூடல் உத்ஸவம் சிறப்பாக நடைபெறும். 97—107, 743—53 (சூ2); 4767—76, 5260—79 (அ3) ஆஉ 5 பதிகம். **5. அதிகைவீரட்டானம்** (திருவதிகை) a பண்ணுருட்டி 2 மைல். கல் வெட்டுக்கள் 28—60/1903, 358—419¬1921 தெஇக 8 (301—335) 12 (71, 73, 133, 255) சிவஸ்தலங்களுள் அதிகப்பட்டது (மேம்பட்டது) அதிகா, அதிகை. பழைய பல்லவச் சிற்ப முறையில் கோயிலும் சிவலிங்க மூர்த்தியும் அமைந்துள்ள சிறப்பை நேரில் அனுபவிக்க வேண்டும். அப்பர் சுவாமிகளை நீதியற்ற பல முறைகளில் துன் புறுத்திக் கடைசியில் அவர் திருவடிகளில் வணங்கிச் சமணசமயம் விடுத்துச் சைவனாகிய மஹேந்திரவர்மபல்லவ மன்னன், சமண் பாழிகளை இடித்து, அக்கற்கள் கொண்டே எடுப்பித்த குணபரேசுவரம், வீரட்டேசர் திருக்கோயிலுக் கருகில் உள்ளது. அப்பர் சுவாமிகட்குச் சூலைநோய் நீக்கி "நாவுக்கரசு" என்ற பட்டம் அளித்தவர் வீரட்டேசரே. அப்பரும் அவர் தமக்கையார்

திலகவதியாரும் சரியைத்தொண்டு செய்த அருமைத் தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகட்குத் திருவடி தீக்ஷை செய்த திருவிளையாடல் நிகழ்ந்த சித்தவடமடம் கோயிலின் தெற்கு வீதியிலுள்ளது. அருகில் கெடில நதி ஓடுகின்றது. அஷ்ட வீரட்டங்களுள் இது "திரிபுரம் தீஎழ வில்தான் கொண்டு எயில் எய்தவர் வீரட்டம் (5761ம் பாசுரம்). திரிபுரதகன உத்ஸவம் சித்திரைப் பெருவிழாவில் திருத் தேரோட்டத் தன்று நடக்கிறது. 493—503 (ச) ; 4159—78, 4252—61, 4397—4441, 5160—66, 5758—79, 6265—6318 (அ); 7607—16 (சு). ஆ 18 பதிகம். பல தலங்களிலுள்ள கல்வெட்டுக்களில் திருவிழாவிற்கு முன் திருவீதி ஆண்டார்கள் திருவதிகைக்கு ஒப்பாக வீதிகளைத் துப்புரவு செய்யவேண்டு மென்றுள்ளது அப்பர் சுவாமிகளுடைய உழவாரத் தொண்டுக்குச் சான்று பகர்வதாகும். பாண்டி நாட்டுத் தலங்கள் பலவற்றுள் திருக்கொடி யேற்றத்திற்கு முன்னாள் அப்பர் சுவாமிகள் திருவீதித் திருக்கண் சாத்தும் உத்ஸவம் நடக்கிறது. **6. அம்பர்பெருந் திருக்கோயில்** (அம்பல் கோயில்) g பூந்தோட்டம் 2 மைல். கோச்செங்கட் சோழ நாயனார் எடுப்பித்த "எண்தோள் முக்கண் ஈசற்கு எழில்மாடம் எழுபதுள் இக்கோயிலும் ஒன்று. செயற்கையாலான கட்டுமலைமேல், யானை உள்நுழையாதபடிச் சிறுவாயில் வைத்துக் கட்டப்பெறும் இவ்வகைக் கோயிலுக்கு மாடக் கோயில், பெருங்கோயில் என்று பெயர். சோமாசி மாறநாயனார் தமது மறையோர் குலத்துக் கேற்ப நாடோறும் முத்தீ வளர்த்து வழிபட்டு முத்திபெற்ற தலம். 2998—3008 (ச). **7. அம்பர் மாகாளம்** (திருமாளம்) g பூந்தோட்டம் 1 மைல். இங்கு வைகாசி ஆயில்யத்தன்று சோமாயாஜியாக உத்ஸவம், அரனும் உமையும் புலையன் புலைச்சி உருவில் யாகசாலைக் கெழுந்தருளி அவிர்ப்பாகம் ஏற்கும் முறையில் மிகப்பிரபலமாக நடக்கிறது. பெரியபுராணத்துள் இது கூறப்படவேயில்லை. "காளியேத்தும் அம்பர்மாகாளம் (3804) என்றபடி காளி வழிபட்ட தலம் 893—903, 2583—93, 3799—3809(ச3). **8. அரசிலி** (ஒழுந்தியாப்பட்டு) c புதுச்சேரி 7 மைல். 2497—2506 (ச). **9.அரதைப் பெரும்பாழி** (அரித்வார மங்கலம்) j கோயில் வெண்ணி 4 மைல் தெஇக 8 (208) வராஹ அவதார மூர்த்தியின் கொம்பை முறித்துச் சிவபெருமான் தமது அணிகலன்களுள் ஒன்றாக்கியதலம். 3118—28 (ச). **10. அரிசிற்கரைப் புத்தூர்** (அழகார் புத்தூர்) a கும்பகோணம் 4 மைல். தளர்வெய்திய கிழப்பருவத்திலும், தவிராது நாள்தோறும் முப்போதும் திருமேனி தீண்டிப் பூசிக்கும் புகழ்த்துணை நாயனார் திருமுழுக்காட்டும் போது, ஒருநாள் குடம் நழுவிச் சிவலிங்கத் திருமேனியின்மேல் விழுந்தது. இந்த அபராதத்திற்கு மிக மிக அஞ்சிய நாயனாருக்கு

இறைவன் அபயம் அளித்து ஒய்வு கொடுத்து அவர் உணவுக்காக நாடோறும் ஒரு பொற்காசு கொடுத்த வரலாற்றை 2152, 7312ம் பாசுரங்கள் கூறும். 2146—56 (ச); 5838,47(அ); 7307—17 (சு). ஆ 3.பதிகம். **11. அவளிவணல்லூர்** j கோயில் வெண்ணி 5 மைல். தெஇக 8 (200—203) 3679—89(ச); 4726—35(அ). **12. அவிநாசி** q திருப்பூர் 8 மைல். கல்வெட்டு 170—201/1909. இத்தலத்துச் சுவாமி யின் பெயரே தலத்துக்கும் பெயராயிற்று. அவிநாசி=விநாசம் இல்லாதவன்=அயன் அரி முதலியோர் நாசகாலத்திலும் இருப் பவன். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலம் சென்றபோது, ஒரு வீட்டில் மங்கல வாத்திய கோஷமும், எதிர்வீட்டில் அழுகுரலும் கேட்டது. இருமறைச் சிறுவர்கள் ஒரு மடுவில் நீராடச் சென்ற போது ஒருவனை முதலை விழுங்கிற்றென்றும், மற்றவனுக்கு உபநயனச் சடங்கு வாத்திய கோஷத்தோடு நடக்கிறதென்றும், எதிர் வீட்டில் மாண்ட சிறுவனின் தாய், தன் மகனும் உயிரோடிருந்தால் அவனுக்கும் உபநயனம் சிறப்பாக நடை பெறுமே என நினைந்து அழுகிறாள் என்றும், அங்குள்ள முதியோர்கள் கூறக் கேட்டார். இறந்த சிறுவனின் தாய் தந்தையர் விழுந்து வணங்கினர். இரக்கம் மிக்க சுந்தரர் மடுவிற்குச் சென்று, அதில் முதலையை வரவழைத்து, வளர்ச்சி பெற்ற மறைச்சிறவனை அது தரும்படியாகக் காலனுக்குக் கட்டளையிடுமாறு அவிநாசி யப்பனுக்குப் பதிகம் பாடி வேண்டுகோள் விடுத்தார் (8160). உடனே முதலை மறைச்சிறுவனை மடுக்கரையிற் சேர்த்தது. அவனுக்கும் அப்பொழுதே உபநயனம் செய்வித்தார். இந்த மடு இப்போது தாமரைக்குளம் எனப்படுகிறது. இதன் கரையில் சுந்தரர் கோயிலும், முதலை வாயினின்றும் மறைச்சிறுவன் வெளிவரும் கற்சித்திரமும் உள்ளன. ஹரதத்தாசாரிய சுவாமிகள் "ஹரிஹரதாரதம்யம்" என்ற வடமொழி நூலில் ஒரு சுலோகத்தில் இதைப் புகழ்கின்றார். சிறுவன் முதலை வாயினுட் புக்கு ஒளிந்த ஊர் புக்கொளியூர். 8157—66 சு **13. அழுந்தூர்** (தேரெழுந்தூர்) a தேரழுந்தூர்ரோட்ஹால்ட் 1/4 மைல். ஒரே வீதியின் ஒருமுனையில் இத்தலமும், எதிர்முனையில் பாடல் பெற்ற விஷ்ணுஸ்தலமும் உள்ளன. கவிச்சக்கரவர்த்தி கம்பர் வீடு இருந்த இடம் எனும் கம்பர் மேடு ஒன்றும் இங்குண்டு. 1677—87(ச). **14.அறையணிநல்லூர்** (அறகண்ட நல்லூர்) c திருக்கோயிலூர் 1/4 மைல். ஸ்டேஷனுக் கெதிரிலுள்ள கோயில். கல்வெட்டுக்கள் 386—91/1902, 26/1905, 111—199/1935 தெஇக 7(1018—23) 12 (137, 145, 217, 226). கற்பாறையில் குடையப்பெற்ற குகைக்கோயில் வேறொன்றுளது. மலைமேல் வலம் வரும்போது ஓரிடத்தில் நின்று பார்த்தால் திருஅண்ணா

மலை நன்கு தெரியும். அன்பர்கள் இதைக் காட்டக் கண்ட சம்பந்தர் இங்கிருந்தே "உண்ணாமுலை உமையாளொடும்'' எனத் தொடங்கும் (97—107) பதிகத்தைப் பாடினார். 2302—12 (ச). **15. அனேகதங்காவதம்** (கௌரிகுண்டம்) SV சென்னையிலிருந்து ரிஷிகேசம் போய் அங்கிருந்து பஸ்மூலமாகவும் கால் நடையாக வும் இமயமலை யேறிச் செல்லவேண்டும். வழி விவரம் முழுமை யும் **107 கேதாரம்** என்ற தலக்குறிப்பில் பார்க்க. இத்தலம் கடல் மட்டத்தின்மேல் 12000 அடி உயரத்திலுள்ளது. வழிக்குறிப்பில் சட்டி என்றால் தங்கும் இடம் என்றும், பிரயாகை என்றால் இரண்டு ஆறுகள் கூடுமிடம் என்றும் பொருள். இத்தலம் செல்லும் வழியில் தேவப்பிரயாகையில் அலக்நந்த, பாகீரதி என்ற இருநதிகள் கூடுகின்றன. ருத்ரப்ரயாகையில் அலக்நந்த, மந்தாகினி நதிகள் கூடுகின்றன. தேவப்ரயாகை என்பது மங்களா சாசனம் பெற்ற கண்டங்கடிநகர் எனும் விஷ்ணுதலம். உமாதேவியார் தவமி ருந்தமையால் கௌரிகுண்டம் என்று அநேகதங்காவதத்திற்கு வழங்கும் பெயர் ஏற்பட்டது. சம்பந்தர் காளத்தியிலிருந்தே இத்தலப் பதிகத்தை ஓதியருளினார் 1513—23(ச). **16. அன்பில் ஆலந்துறை** (அன்பில்) d லால்குடி 3 மைல். தெஇக 8 (192—195, 657—73) கொள்ளிடக் கரையிலுள்ள தலம். 349—59 (ச); 6023—32 (அ). **17. அன்னியூர்** (பொன்னூர்) a நீடூர் 3 மைல். 1036—46 (ச). 5302—5311(அ). **18. ஆக்கூர்** f ஆக்கூர் ¼ மைல். சிறப்புலி நாயனார் தலம். ஆலயப் பெயர் தான்தோன்றி மாடம் (தான்தோன்றி =சுயம்பு) இத் தலத்து வேளாளர் வள்ளன்மையை 1919—ம் பாசுரம் கூறும். 1917—27 (ச); 6454—63 (அ). **19. ஆடானை** (திருவாடானை) d காரைக்குடி 32 மைல். (தொண்டிபஸ்) ஒரு ரிஷியின் சாபத்தால் ஆட்டுத்தலையும் ஆனை உடலும் பெற்ற ஒரு தேவகுமாரன் இங்கு வழிபட்டு மீண்டும் தேவசரீரம் பெற்றதால் ஆடானை தலப் பெயராயிற்று. 2681—91 (ச). **20. ஆப்பனூர்** (திருவாப்புடையார் கோயில்) a மதுரை ஜஞ்ஷன் 1 மைல். வைகையாற்றின் வடகரையி லுள்ளது. ஆற்று வெள்ளத்தால் தடைப்பட்ட ஒரு பாண்டிய மன்னன் ஆப்பு ஒன்றைத் தாபித்துச் சிவபூசை செய்தமையால் தலப்பெயர் ஏற்பட்டது, 948—58 (ச). **21. ஆப்பாடி** a ஆடுதுறை 7 மைல். தெஇக 12 (233) சண்டேசுவர நாயனார் பூசித்ததை 4627—ம் பாசுரம் கூறும். 4624—33(அ). **22. ஆமாத்தூர்** (திருவாமாத்தூர்) a விழுப்புரம் 4 மைல். தெஇக 3 (95) 8 (718—751) 12 (141—43, 181, 196). இவற்றுள் 8 (749) மிக முக்கியம். 16 குருடர்கள் நாடோறும் கோயிலில் திருப்பதிகம் விண்ணப்பிக்கவும் (=தேவாரம் ஓதவும்) அவர்கட்குக் கண்காட்டுவார் இருவர் (=விழிப்பார்வையுடைய

வேறு இருவர்) வழித்துணையாக அவர்களைக் கையிற் பிடித்து நடத்திச் செல்லவும் திட்டம் செய்யப்பட்டதை இக்கல்வெட்டு விரிவாகக் கூறுகிறது. 700 ஆண்டுகட்கு முன்னரே, திருக்கோயில் களில் குருடர்கள் இவ்வாறு ஆதரிக்கப் பெற்ற செய்தி, இக் காலத்திய கோயிலதிகாரிகட்கு வழிகாட்டுகின்றது. இராமபிரான் வழிபட்டதை 5668—ம் கூறும். இத்தலப் பாசுரங்கள் சிலவற்றில் இறைவன் அழகியரே என்று அழைக்கப்படுவதற்கேற்பக் கல்வெட்டுக்களிலும் அழகிய நாயனார் என்ற பெயர் காணப்படுகின்றது. வடமொழியில் இதையே அபிராமேசுவரர் என்கிறார்கள். தாம் சகமார்க்கம் ஆகிய யோகநெறியில் நின்று வழிபடுவதைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெளிப்படையாக 7688—ம் பாசுரத்தில் (செம்மலர்ப்பாதங்கள் நாடோறும் நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்) கூறுகிறார். 1939—2004—14 (ச2). 5664—74, 6330—39 (அ2); 7680—90 (சு). ஆ. 5 பதிகம்.

**23. ஆரூர்** (திருவாரூர்) ௨ திருவாரூர் 1 மைல் கல்வெட்டுக்கள் 73, 74/1890, 164/1894, 269/1901, 533—79/1904, 553/1918 669—81/1919 தெஇக 4(397, 398) 5 (456, 457) 7 (485) மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறந்தது. மூர்த்தி—புற்றிடங் கொண்டார். வன்மீ கநாதர், திருமூலட்டானநாதர். கச்சியேகம்பத்தையும் இத்தலத்தை யும் பஞ்சபூதஸ்தலங்களுள் பிருதிவித்தலமாகக் கருதுவதுண்டு. மூலஸ்தானத்திலுள்ள சிவலிங்க மூர்த்திக்கு (ஏகம்பத்தில் செய்வது போலவே) புனுகு சட்டமே சாத்தப் பெறுகிறது. அபிஷேகம் ஆவுடையாருக்கே. சந்நிதிக்குத் தெற்கில் தலைச் சந்நிதியாக உள்ள தியாகராஜஸ்வாமி சந்நிதி மிகப்பிரபலம். திருமால் நாடோறும் இம்மூர்த்தியைப் பூசித்துத் தமது இருதயத் தானத்திலேயே எழுந்தருளுவித்தனர். மூச்சிழுத்தல் விடுதல் காரணமாக ஏற்படும் அசைவே திருநடனம். முசுகுந்த சக்கரவர்த்தி பெற்ற ஏழு விடங்க மூர்த்திகளுள் இங்குள்ள மூர்த்தியே திருமால் பூசித்தது. இவரை "பவனி வீதிவிடங்கன்" என்று 5297—ம் பாசுரம் கூறும். இத்தலத்து நடனம் அஜபாநடனம். பங்குனி உத்திரப் பெரு விழாவின் தொடக்க நாளாகிய வசந்தன் உத்ஸவத்திலும் திருத்தேர் விழாவிலுமே தியாகராஜஸ்வாமி, தாம் இருக்கும் திருஓலக்க மண்டபத்தை விட்டு வெளிவருகிறார். அப்பர் காலத்தில் நடந்த ஆதிரை விழாவின் சிறப்பை 4366—75ம் பாசுரங்கள் கூறும். சிதம்பரத்தில் ஸ்படிகலிங்கபூசை நடப்பதுபோலவே, உச்சிக் காலத் தில் ஏழுவிடங்கங்களிலும் நடக்கிறது. ஆரூரண்ணல் தம்மைச் சுந்தரமூர்த்தி சுவாமிகட்குத் தோழராகத் தந்தருளி, அவருக்குப் பரவை நாச்சியாரை உலகறியத் திருமணம் செய்வித்து, அவ

வம்மையார் புலவிதீர்க்க நள்ளிரவில் ஒருமுறைக்கு இருமுறை நடந்துசென்ற பெருமையைத் தெய்வச் சேக்கிழாரே கூறவல்லார். திருமூலட்டானத்தின் பெயர் "பூங்கோயில் (4249—ம் பாசுரம்). ஆரூரர்க்கோயில் 5 வேலி பரப்புள்ளது (4672—ம் பாசுரம்). தலம் மூர்த்தியின் சிறப்புக்க ஒத்த சிறப்புடையது. சோழ மன்னர்கள் முடிசூட்டு விழா கொண்டாடிய 5 நகரங்களுள் ஒன்று. அவர்களுள் பலருடைய இராஜதானித் தலைநகர். இறந்த பசுங்கன்றின் கொலை வழக்கைத் தாய்ப்பசு, ஆராய்ச்சி மணியை ஒலிப்பித்து அறிவிக்க, அவ்வழக்கை விசாரித்துத் தன் மகன்மேல் தேர் செலுத்தி நீதி வழங்கிய மனுச்சோழன் பெரும்புகழ், அன்றும் இன்றும் என்றும் நலிவுவதால் "திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவாரூர்" (6544—ம் பாசரம்) ஆயிற்று. சிவபெருமானும் எமதர்மனுமே பசுவும் கன்றுமாக வந்தனர். இவ்வரலாறு அழகிய கல்சித்திரமாகக் கீழைக் கோபுரவாயிலருகிலுள்ளது. சேக்கிழார் செய்யுள் வடிவிலும், வடலூரடிகள் உரைநடையிலும் இதை விவரித்துள்ளனர். பிறந்தாலே முத்திதரும் பெரும் பதி. ஆரூரிற் பிறந்தார் எல்லாம் சிவசாரூப்பிய லக்ஷணம் பொருந்திய சிவகணங் கள் என்று நமிநந்தியடிகட்கு ஆரூர் அண்ணல் கண்கூடாகக் காட்டினர். "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" (7626) என்று சுந்தரர் கூறுகின்றார். ஏயர்கோன் கலிக்காமர், காடவர்கோன், கழற்சிங்கர், செருத்துணையார், தண்டியடிகள், திருநீலகண்ட யாழ்ப்பாணர், நமிநந்தியடிகள், விறன்மிண்டர் முதலிய நாயன்மார்கள் வாழ்க்கைத் தொடர்புடைய தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகள் பரவை நாச்சியாரோடு இல்லறம் நடத்திச் சிவனடியார்களை ஆதரித்த தலம். மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத் தீதிலாத் திருத்தொண்டத் தொகை அருளப்பெற்றதும் இத்திருக் கோயிலிலுள்ள தேவாசிரிய மண்டபத்திலே நிகழ்ந்தது. கீழைக் கோபுரவாயிலுக்குள் நுழைந்தவுடன் காணப்படும் ஆயிரக் கால் மண்டபமே இத்தேவாசிரிய மண்டபம். கழறிற்றறிவாரை வரவேற்று நன்கு உபசரித்து, அவரோடு சுந்தரரும் தலயாத்திரை தொடங்கியதும் முடித்ததும் இத்தலத்தில் நிகழ்ந்தன. "நீளநினைந் தடியேன்" (7423—32) என்ற பதிகம் பாடிப் பெற்ற நெல், மலையாகக் குவிந்து விநியோகம் செய்யப்பெற்றதும் இத்தலத்தில் நிகழ்ந்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் கச்சியேகம்பத்தில் இடக்கண் பெற்று இங்கு வந்து வலக்கண் பார்வையும் பெற்றனர். இலக்குமி முதலிய பல வானோர் பூசித்துப் பேறுபெற்ற தலம். "நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்" (6547ம் பாசுரம்) இத் தலப் பெயரையே தேவாரம் அருளிய மூவர் முதலிகளும் நன்றாக

அனுபவித்தனர். ஆரூர் என்பது ஆர்+ஊர் எனப்பிரிந்து இரு வகைப் பொருள்தரும் 1. ஆர்=அருமைமிக்க, ஊர்=தலம், 2.ஆர்= யாருடைய? ஊர்=இடம், ஆரூரண்ணலே! இத்தலம் யாருக்குச் சொந்தமானது? உம்முடையதல்லவோ? (7274, 7551) முதலிய பாசுரங்கள் பார்க்க.) தீர்த்தம் மூர்த்தி, தலச் சிறப்புக்கள் போலவே தீர்த்தச் சிறப்பும் அமைந்துள்ளது. கமலாலயம் என்ற திருக்குளம் திருக்கோயிலை ஒத்து 5 வேலி அளவுள்ளது. குளத்தின் நடுவில் ஒருசிறு தீவில் ஒருசிறு கோயிலில் நடுநாயக சுவாமி உள்ளார். படகிற் சென்று தரிசிக்கலாம். இக்குளத்து நீர்கொண்டே நமிநந்தி யடிகள் திருவிளக் கேற்றினர். (5145—ம் பாசுரம்). பிறவிக் குருடர் ஆகிய தண்டியடிகள் இக்குளத்தின் மேற்குப் புறத்தை அகழ்ந்து விரிவாக்கும்போது, தடை செய்த சமணர்களைக் குருடர்களாக்கி வென்று, தாம் பார்வை பெற்று "நாட்டம் மிகுதண்டி" அடிக ளாயினர். முதுகுன்றில் மணிமுத்தாற்றில் விடுத்த 12000 பொன்னையும், இக்குளத்தில் இறங்கி 7481—ம் பாசம் பாடும் போது, பரவை நாச்சியார் எதிரே சுந்தரர் எடுத்த பெருமையும் இக்குளத்துக்குண்டு. இப்பொன்னுக்கு மாற்றுரைத்துக் காட்டிய விநாயகரும், மேலைக் கோபுரவாயிலுக்கு எதிரில் இக்குளப்படித் துறையில் கோயில் கொண்டுள்ளார். பெருமான் பங்குனி உத்திரப் பெருவிழாவின் இறுதியில் "ருத்ரபாததீர்த்தம்" கொடுத்தருள்வதும் இத்திருக்குளதில் நிகழ்வது. இவ்வாறு மூர்த்திதலம் தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறந்திருப்பதனால் "அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட அயிராவணமே" (6495) என்று அப்பர் வாயாரப் புகழ்கின்றார். ஏழுதிருமுறைகளிலும் மிகுதியான பாசுரங்கள் இத்தலத்துக்கே உண்டு (ஆரூர், கச்சியேகம்ப, மறைக்காடு ஆகிய மூன்று தலங்கட்கே ஏழுதிருமுறைகளிலும் பதிகங்களுண்டு சீகாழிக்கு மிகுதியான பதிக எண்ணிக்கை 71 இருப்பினும், ஆறாம் திருமுறையுள் ஒரு பாசுரங்கூட சீகாழிக்கில்லை) 981—91, 1133—42, 2324—34, 2561—71, 3277—87, 3967—77, (ச6); 4190—4209, 4345—75, 4656—75, 5134—50, 5280—5301, 6485—6572, 6583—92 (அ21); 7297—7306, 7596—7606, 7617—27, 7742—53, 7827—37, 7964—74, 8066—75, 8188—98, (சு3); ஆ 35 பதிகம். **24. ஆரூர் அறநெறி** இது ஆரூர்க் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் மேற்கு சந்நிதித் தலைக் கோயிலாக உள்ளது. இக்கோயிலிலேயே நமிநந்தியடிகள் பல தொண்டுகள் புரிந்து நீர்விளக்கேற்றியது. 3424—34, 6573—93) (அ2). **25. ஆரூர்ப்பரவையுண்மண்டளி** (துலா நாயனார் கோயில்) ஆரூரில் கீழைதா வீதியில் திருத்தேர் நிலையின் அருகிலுள்ளது 8100—8208 (சு). **26. ஆலங்காடு** (திருவாலங்காடு) ҁ திருவாலங்காடு 3 மைல்.

கல்வெட்டுக்கள் 14,—16, 408/1896, 452—98/1905 தெஇக 3 (65, 205) 5 (878, 879) 12 (64, 66) இவற்றுள் தெஇக 3 (205) மிக முக்கியமானது. 8¼ மணங்கு எடையுள்ள 31 செப்பேடுகளில் கங்கை கொண்ட சோழன் என்ற முதல் இராஜேந்திரசோழன், பழையனூர் கிராமத்தைத் திருஆலங்காடுடைய மகாதேவர்க்குத் தானமாகக் கொடுத்த செய்தி விவரிக்கப் பெற்றுள்ளது. தானச் செய்தியை ஊரார் அறியும் பொருட்டுப் பிடிசூழ்ந்து படாகை நடப்பித்து பிரசுரம் செய்யப்பட்டது. (பெண்யானையைக் கிராம எல்லை முழுமையும் சுற்றிவரச் செய்து, ஆங்காங்கு கள்ளியும் சூலக்கல்லும் நாட்டப்பட்டது). இவ்வூரில் "தெங்கும் பனையும் ஈழவர் ஏறப்பெறாததாகவும்'' என்ற குறிப்பு, அக்காலத்தில் கோயில் நிலங்களிலிருந்து, கள் இறக்குதல் இல்லையென்பது, மதுவிலக்குக் கொள்கைக்கு ஆதரவாகும். காளியோடு தாண்டவம் புரிந்த சிவபெருமான், அவள் சமமாக ஆடுவதைக் கண்டு, அவளைத் தோற்கடிக்கக் கருதித் தமது இடது காலைத் தலையளவு உயரத்தூக்கி "ஊர்த்வ தாண்டவம்'' புரிந்த அருமைத் தலம். ஊர்த்வதாண்டவ மூர்த்தி 8 கைகளுடைய கவர்ச்சி மிக்க திருவுருவத்தோடு விளங்குகிறார். காரைக்காலம்மையார் தலையாலே நடந்த வந்து "அறவா நீ ஆடம்போதுன் அடியின்கீழ் இருக்க'' வேண்டிப் பெற்றவரத்தால் இங்கு பதஞ்சலி வியாக்ர பாதர்களோடு அம்மையார் திருவுருவமும் நடராஜர் சபையிலிருக்கின்றது. அம்மையார் தலையால் நடந்த வந்த இத்தலத்தைத் தமது காலால் மிதிக்க அஞ்சிய சம்பந்தர் ஊருக்கு வெளியில் ஓரிடத்தில் இறங்கி, அன்று இரவு துயிலும்போது, அவர்கனவில் வந்து ஆலங்காட்டப்பன் "நம்மை அயர்த்தனையோ பாடுதற்கு'' என்று நினைவூட்ட அடுத்தநாள் தலத்துக்குள் சென்று கோயிலில் இறைவனைப் பதிகம்பாடி வணங்கினர். ஆலங்காட்டு நீலி வஞ்சனையால் உயிர்நீத்த வணிகனுக்கு, உறுதியளித்த 70 வேளாளர்கள் தாங்கள் உயிர்விட்ட செய்தியும் இத்தலவரலாற்றின் ஒரு பகுதியாகும். இவ்விரண்டையும் சேர்த்து 481ம் பாசுரத்தில் சம்பந்தர் கூறுகிறார். கூத்தப்பிரான் சபைகள் ஐந்தனுள் இது இரத்தின சபை அல்லது மணிமன்று எனப்படும். பழையனூர், ஆலங்காட்டிற்கு ¾ மைல் தொலைவிலுள்ளது. அங்கு காரைக் காலம்மையார் கோயில் ஒன்றுண்டு. தேவாரமுதலிகள் மூவர் கட்கும் அம்மையார் முற்பட்டவர் ஆகையால் அவர் திருவாக்கு மூத்த திருப்பதிகம் எனப்படுகின்றது. அற்புதத் திருவந்தாதியோடு அம்மை திருவாக்கு முழுமையும் 11ம் திருமுறையுள் இடம்பெற்றுள் ளது. ஊர்த்துவதாண்டவமூர்த்தி திருவீதிக் கெழுந்தருளிப்

பழையனூர் சென்று வருவதுபங்குனி உத்திரத்தன்றும், மார்கழித் திருவாதிரையன்றுமாக ஆண்டுக்கிருமுறை. முஞ்சிகேச முனிவர், கார்க்கோட முனிவர் ஆகிய இருவருக்கும் காட்சியளிப்பர். *481.92 (ச); 4817—26, 7018—27 (அ2); 7754—63 (சு).* ஆ. 4 பதிகம். (ஆலந்துறை *க206* புள்ளமங்கை பார்க்க); **27. ஆலம்பொழில்** a தஞ்சாவூர் *7* மைல், சப்தஸ்தானஸ்தலங்களுக்குள் திருப்பூந்துருத்தி லியிருந்து *1* மைல். *7095—7103(அ).* **28. ஆலவாய்** (மதுரை) a மதுரை ஜங்ஷன் 1 மைல். கல்வெட்டுக்கள் *46—48, 50/180, 56—82/1905, 502—511/1907, 35, 36/1908, 557—60/1911, 4—7/1915, 340/1918, 203/1936, 161/1938.* தெஇக *4 (369—71, 373)* பாண்டிநாட்டுத் தலைநகர். தமிழ்ச் சங்கங்கள் மூன்றும் திகழ்ந்த தலம். சிவபெருமான் 64 திருவிளை யாடல்கள் புரிந்த சிறப்பைப் பரஞ்சோதி முனிவர் திருவிளை யாடற்புராணத்துட் காண்க. அங்கயற் கண்ணியார் அவதாரம் செய்து, பாண்டியன் திருமகளாக வளர்க்கப்பெற்று, சோமசுந்தர ராக வந்த சிவபெருமானைத் திருமணம் செய்து கொண்டு அரசு புரிந்த பழம்பதி. மும்மையால் உலகாண்ட மூர்த்தி நாயனார், நின்ற சீர்நெடுமாற நாயனார் மங்கையர்க்கரசியார், குலச்சிறை நாயனார் முதலியோர் வரலாற்றுத் தொடர்புடைய வளநகர். திருஞானசம்பந்தர் அனல் வாதம் புனல்வாதம் முதலியன செய்த சமணர்களைத் திருத்திச் சைவம் பரப்பிய வெற்றித்திருநகர். பரதநாட்டியக் கலை நிபுணனாகிய ஒரு பாண்டியனுக்குக் காலை மாற்றி ஆடிய கூத்தப்பிரான் கற்சிலையுருவில் வெள்ளியம்பலத்துள் காட்சியளிக்கிறார். புலவர்கள் "பொன்னுக்கு வெள்ளி கால்மாற்று அதிகம்'' என்று தில்லையோடு ஒப்பிட்டு, இக்கால் மாறிய திருவிளையாடலை நயம்பெறக் கூறுவர். அங்கயற்கண்ணி அம்மைார் சந்நிதி மிகப் பிரபலம். அழகும் அருளும் நிரம்பிய திருவுருவம். அம்மையார் கோயில் வெளிப்பிரகாரத்தில், திருமலை நாயக்க மன்னர் தமது தேவியரோடு சிலையுருவிலுள்ளார். அம்மையின் சந்நிதிக்கெதிரில் பொற்றாமரை தீர்த்தம் உள்ளது. இத்திருக்குளத்தின் பெருமை சங்க காலத் தொடர்புடையது. சங்கப் பலகை மிதந்து தக்க புலவர்களையும் அவர்கள் நூல்களையும் தாங்கி, ஏனையோரையும் அவர்கள் நூல்களையும் கவிழ்த்துவிடும் அற்புதம் சங்ககாலத்தில் இத்திருக்குளத்தில் நிகழ்ந்தது. "நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே'' என்ற நக்கீரர், தமது பிழையை யுணர்ந்து, இக்குளத்தில் மூழ்கிக் "கோபப்பிரசாதம்'' என்ற (11ம் திருமுறையிலுள்ள) பனுவலை இயற்றி மன்னிப்புப் பெற்றதும் இங்கு நிகழ்ந்தது. இப்பொற்றா மரைத் தீர்த்தத்திலே தான் தருமபுர ஆதீனத் தாபகர் கையில்

அவ்வாதீன வழிபடு மூர்த்தியாகிய சொக்கலிங்கக் கடவுள் திருவுருவம் திருவருளால் கிடைத்தது. குமரகுருபர சுவாமிகள் "மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்'' பாடி அரங்கேற்றியபோது, அம்மை ஓர் இளம் பெண்ணாக வந்த தமது கழுத்திலிருந்த பொற் சங்கிலி ஒன்றைக் கழற்றி அவருக்குப் பரிசாக வழங்கியதும் இத்தலத்தில் சில நூற்றாண்டுகட்கு முன் நிகழ்ந்த திருவிளை யாடல். சித்திரைப் பெருவிழாவில் மீனாக்ஷியம்மன் திக்குவிஜயம் திருக்கலியாணம் முதலியனவும், ஆவணி மூலத்திருவிழாவில் பாண்டியன் ஜ்வரம் தீர்த்தது, சமணரைக் கழுவேறச் செய்தது, பிட்டுக்கு மண் சுமந்தது முதலியனவும், ஏனைய மாதங்களில் வெவ்வேறு திருவிளையாடல்களும் உத்ஸவங்களாக நடைபெறு கின்றன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டித்துரைத் தேவர் முதலிய பெரியார்களால் நான்காவது தமிழ்ச்சங்கம் நிறுவப் பெற்று அரிய தமிழ்த்தொண்டாற்றி வருகின்றது. திருக்கோயில் வெளிப் பிரகாரத்தில் சங்கப்புலவர் நாற்பத் தொன்பதிமர், கற்சிலையுருவில் ஒரு சிறு கோயிலறையில் காட்சியளிக்கிறார். சுவாமி சந்நிதிக்கு எதிரில் இருகற்றூண்களில் துர்க்கையும் வீர பத்திரரும் பெரிய சிலையுருவில் வெண்ணெய் சாத்தப் பெற்ற நிலையில் உள்ளனர். வாதவூரடிகள் வரலாற்றுத் தொடர்பும் இத் தலத்துக்குண்டு. "நரியைக் குதிரைப் பரியாக்கி.......பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் திருவிளையாடலும், "பிட்டுநேர் படமண் சுமந்த'' திருவிளையாடலும், "மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு புண்சுமந்த'' திருவிளையாடலும் இத் தலத்தே வாதவூரடிகள் பெருமையை உலகறியுமாறு நிகழ்ந்தனவே. *65—75, 1014—24, 2178—88, 3211—21, 3298—3308, 3339—60, 3956—66, 4035—45, 4090—4100 (ச10); 4757—66, 6433—43 (அ2).* ஆ. 12 பதிகம். **29. ஆவடுதுறை** *(திருவாவடுதுறை)* a நாரசிங்கன் பேட்டை ½ மைல். கல்வெட்டுக்கள் *101—172/1925, 59—72/1926.* திருமூலநாயனார் திருமந்திரம் அருளியதலம். சம்பந்தர் தமது தந்தையார் வேள்வி செய்தற் பொருட்டு இறைவனைப்பாடி *1000* பொன்பெற்று அதைக் கொடுத்ததை *4696*ம் பாசுரம் கூறும். திருவிசைப்பா பாடிய திருமாளிகைத் தேவர் தொடர்பும் இத்தலத்துக்குண்டு. திருவாவடுதுறை யாதீனத் தலைமைத் திருமடம் இங்குளது. *2834—44 (ச);4696—4715, 5513—22, 6701—21 (அ5); 7896—7900, 7933—42 (சு2);* ஆஉ 8 பதிகம். **30. ஆவூர்ப்பசுபதீச்சரம்** a சுந்தரப் பெருமாள் கோயில் 4 மைல். *76—86 (ச).* **31. ஆனைக்கா** (ஜம்பு கேஸ்வரம்) d ஸ்ரீரங்கம் ½ மைல் கல்வெட்டுக்கள் *18—32/1891, 61—67/1903. 499—508/1905, 480—87/1908, 92/1910, 103—136/1937, 1—79/1938* [illegible]

*4 (419—33) 8 (336—343).* பஞ்சபூதஸ்தலங்களுள் இது நீர் அல்லது அப்புஸ்தலம். காவிரி கொள்ளிடம் ஆகிய இரண்டு ஆறுகளும் முறையே திருக்கோயிலுக்குத் தெற்கிலும் வடக்கிலும் ஓட, இவ் விரண்டாறுகட்கும் இடைபட்ட இத்தலத்திலுள்ள மூலஸ்தான மூர்த்தியிருக்கும் இடம், இவ்வாறுகளின் தரைமட்டத்திற்கும் கீழிருப்பதால் எப்போதும் தண்ணீர்க் கசிவுள்ளது. ஆறுகளில் வெள்ளம் போகும்போது, ஓயாமல் இறைத்துக்கொண்டே இருந்தா லன்றி ஜம்புகேசுவரமூர்த்தியைத் தரிசிக்க முடியாது. இறைப் பதற்கே ஓர் ஆயில் எஞ்சின் தனியாக உள்ளது. இத்தலத்தில் மிகப் பழைய காலத்தில் வெண் நாவல் மரங்கள் நிறைந்த காடு இருந்தது. இக்காட்டில் ஒரு முனிவர் தவம் புரிந்தார். ஒரு நாள் அவரெதிரே ஒரு வெண்ணாவற்பழம் விழுந்தது. அதை முனிவர் திருக்கயிலாயம் சென்று இறைவனுக்கு நிவேதித்துப் பிரசாதமாக உண்டார். பிரசாதமாகையால் நாவற்கொட்டையையும் உமிழாமல் விழுங்கினார். இறைவன் இறைவன் திருவிளையாடலால் அக் கொட்டை முளைத்து முனிவர் தலை வெடிக்கும்படி மரமாக வளர்ந்தது. முனிவர் விண்ணப்பிக்க, இறைவன் கட்டளைப்படி முனிவர் மீண்டும் நாவற்பழம் விழுந்த இடத்திற்கே மரமாக நடந்து வந்து சேர்ந்தார். இறைவன் இம்மரத்தடியில் அவர் பூசையை ஏற்று ஜம்புலிங்கம் ஆயினான். ஜம்பு நாவல் மரமும் ஸ்தல விருக்ஷம் ஆயிற்று. திருக்கயிலாயத்தில் புஷ்பதந்தன், மாலியவான் என்ற கணநாதர் இருவர் போட்டியிட்டுத் தொண்டாற்றுவதில் பொறாமை கொண்டு ஒருவரை ஒருவர் சபித்து முறையே யானையும் சிலந்தியுமாயினர். இருவரும் முறையிடுதற் கிரங்கிய சிவபெருமான், இத்தலத்தில் வழிபட்டு விமோசனம் பெறுமாறு அருளினான். யானையும் சிலந்தியும் ஜம்புலிங்கத்தை வழிபட்டன. யானை பூவும் நீரும் கொண்டு வழிபட்டது. மரத்திலிருந்து சருகுகள் விழாதபடி ஜம்புலிங்கத் திற்குச் சிலந்தி தனது வாய் நூலால் பந்தர் செய்தது. இப்பந்தர் அனுசிதம் (ஒட்டடை, ஒட்டரை என்று கூறப்படுவது) என்று யானை இதை நாடோறும் அழித்து வழிபட்டுச் சென்ற பிறகு, சிலந்தி நாடோறும் புதிய பந்தர் செய்துவந்தது. பந்தரையழிக்கும் யானையைத் தண்டிக்க எண்ணிய சிலந்தி, துதிக்கைக்குள் நுழைந்து மூளையைக் கடித்தது. யானை யிறந்தது, உள்ளிருந்த சிலந்தியுமிறந்தது. இறந்தவுடன் யானையும் சிலந்தியும் முறையே புஷ்பதந்தனும் மாலியவானும் ஆயினர். ஜம்புகேசுவர் அவர்கள் முன்தோன்றி, புஷ்பதந்தனைப் பழையபடி கணநாதனாகும்படியும், அவன் யானைவடிவ நினைவுக்குறியாக இத்தலம் ஆனைக்கா

என்று பெயரெய்தும்படியும், மாலியவன் சோழமன்னனாகப் பிறந்து பல தொண்டுகள் புரிந்து பிறகு வீடெய்தும்படியும் அருள் புரிந்தார். சிலந்தியும் கோச்செங்கட் சோழனாக வந்தது. இம்மன்னன் சிவபெருமானுக்கு 70 மாடக்கோயில்கள் (யானை உள் நுழையாதபடி சிறிய வாயில் வைத்து) எடுப்பித்தான். அவ்வாறு எடுப்பித்தக் கோயில்களுள் இக்கோயிலும் ஒன்று. உமாதேவியார் பூசித்த தலங்களுள் ஒன்று. நாடோறும் அம்மன் கோயில் பூசகர் பெண்ணுடை தரித்துக்கொண்டு உச்சிக்கால பூசை வேளையில் சுவாமி கோயிலில் வழிபாடு செய்கிறார். பிரமோத் ஸவத்தில் பங்குனி மாதம் சித்திரை நக்ஷத்திரத்தன்று பஞ்சப்ராகார உத்ஸவம் மிக விமரிசையாக நடைபெறும். சோமாஸ்கந்தர் அம்மன் வேடமும், அம்மன் சுவாமி வேடமும் பூண்டு ஐந்து வீதிகளிலும் வலம் வருவார்கள். ஆயிரக்கணக்கில் மக்கள் தரிசிப்பார்கள். திருநீறிட்டான் மதில் இன்றும் உள்ளது. சோழமன்னன் ஒருவன் காவிரியில் நீராடும்போது கழுத்திலிருந்த பதக்கம் நழுவி வெள்ளத்தோடு போயிற்று. அவனும் சிவார்ப் பணம் என்று போயினான். நாடோறும் ஆற்றிலிருந்து வரும் திருமஞ்சனக் குடத்தில் அது அகப்பட்டுத் திருமஞ்சனம் செய்யும் போது இறைவன் திருமேனியில் விழுந்தது. (3367, 7791ம் பாசுரங்கள் காண்க.) அம்பிகை அகிலாண்டேசுவரி திருவுருவம் அழகும் அருளும் நிரம்பியது. இத்தலத்துக்கு அருமையான புராணத்தைக் கச்சியப்ப முனிவர் இயற்றியுள்ளார். 1710—19, 3361—71, 3967—77 (ச3); 5534—43, 6863—82 (அ3); 7985—94 (சு). ஆ. 7பதிகம். **32. இடும்பாவனம்** g பாண்டி 3 மைல். 174—184(ச). **33. இடைச்சுரம்** (திருவடி சூலம்) a செங்கல்பட்டு 3 மைல். மூலஸ்தான லிங்கம் மிகவும் பளபளப்பானது. சிதம்பரம் இரத்தின சபாபதியைத் தரிசிப்பது போல் பின் புறம் கற்பூரம் காட்டினால் நன்றாகத் தெரியும். "இடைச்சுரம் மேவிய இவர்வணம் என்னே " என்று ஒவ்வொரு பாசுரத்திலும் சம்பந்தர் புகழ்கிறார். 842—52 (ச). **34. இடைமருதூர்** (திருவிடைமருதூர்)a திருவிடை மருதூர். கல்வெட்டுக் கள் 130—159/1895, 193—313/1907. தெஇக 3 (72, 124, 138, 202, 203) 5 (694—723) 12 (59). வரகுணபாண்டியன் பெரும்புகழ் வரலாற்றுத் தொடர்புடையது. பட்டினத்தடிகள் வழிபட்டதலம். அவர் அருளிய மும்மணிக்கோவை பெற்றது. இங்கு தைப்பூசத்தில் காவிரியில் நீராடுதல் சிறந்தது. (2074 பாசுரம்) 338—48, 1025—35, 1185—95, 1304—25, 2070—80, (ச6); 4502—11, 5363—79, 6402—21 (அ3); 7838—47 (சு); ஆ. 12 பதிகம். **35. இடையாறு** d திருவெண்ணெய் நல்லூர் ரோட் 7 மைல். 7534—43 (சு). **36. இந்திர நீல பருப்பதம்**

VX—சென்னையிலிருந்து கல்கத்தா போய் அங்கிருந்து (பழைய B.N.W.Ry. வழியாக) பகால்பூர், தார்பங்கா, ரக்சூல், பிக்நதொரி (Raxaul, Bhikna Thorce) செல்லும் பாதையில் ரச்சூலிலாவது பிக்நதொரியிலாவது இறங்கி அங்கிருந்து சுமார் 60 மைல் தொலைவிலுள்ள நேபாள தேசத்திலுள்ள காட்மாண்டு (Khatmandu) என்னும் தலைநகர் செல்ல வேண்டும். இங்கு பசுபதிநேபாளம் என்று பெரியபுராணத்தில் திருமூலர் வரலாற்றிலுள்ள பசுபதி கோயிலைத் தரிசித்து அங்கிருந்து வடகிழக்கில் மலை மேலேறி, ஏறக்குறைய 100 மைல் சென்றால் இந்திர நீல பருப்பதம் சேரலாம். இது கடல் மட்டத்தின்மேல் சுமார் 18000 அடி உயரமுள்ளதெனக் கணிக்கப்பட்டுள்ளது. கேதாரம் கயிலாயம் செல்வது போலவே, பனிக்கட்டியின்மீது நடந்து செல்ல வேண்டிய பகுதியுமுண்டு. ஒருமலை நாகப்படம் போற்கவிந்து ஈசானதிக்கை நோக்கியிருக்கிறது. கட்டப்பட்ட கோயிலில்லை. மூர்த்தி "ஸ்தல சுயம்பு" ஆகிய மலையின் பகுதியே, குவிவான கீழ்ப்பகுதியே பீடம். இந்தக் கீழ்ப்பகுதி நீலமயமான கற்பாறை. இதற்கு வடமேற்கில் ஒரு பள்ளத்தாக்கில் ஓடுவது நீல்கங்கா எனும் சிறிய ஆறு. ஈசன் சந்நிதிக்குச் சிறிது வடகிழக்கில் பச்சை நிறமுள்ள கற்பாறையே சுயம்பு அம்பிகை. சுவாமியின் அருகில் அர்த்தசித்திர வடிவில் ஒரு பாறையே இந்திரன். இப்பாறையில் கண்கள் போன்ற பலகுழிவுகள், பக்கத்தில் கிரீடம் வஜ்ராயுதம் போன்ற வடிவங்கள் உள்ளன. இந்திரன் பூசித்த தலம். சம்பந்தர் காளத்தியிலிருந்தே பதிகம் அருளினார். 1753—63 (ச). **37. இராமனதீச்சரம்** g நன்னிலம் 4½ மைல். திருப்புகலூரிலிருந்து முடிகொண்டான் ஆற்றைக் கடந்து திருக்கண்ணபுரம் எனும் விஷ்ணு ஸ்தலம் போகும் வழியிலுள்ளது. 1238—48(ச). **38. இராமேச்சுரம்** (ராமேஸ்வரம்) a ராமேஸ்வரம் 1 மைல். கல்வெட்டுக்கள் 97—105/1903, 89—90/1905, 8,9/1915. தெஇக 8 (382—391). கடற்கரைத் தலம், ஒரு தீவிலிருக்கிறது. மண்டபம் ஸ்டேஷனிலிருந்து பாம்பன் ஸ்டேஷனுக்கு ரயில் போகும்வழியில் கடலின்மேற் பாலம் உளது. இப்பாலத்தின் ஒரு பகுதி திறக்கவும் மூடவும் பெரிய இயந்திரங்கள் மூலமாகத் திட்டம் செய்யப் பெற்றுள்ளது. சில ஆண்டுகட்கு முன்பு வரையில் இராமேஸ்வரத்திலிருந்து நேரே தனுஷ்கோடி தீர்த்தக் கட்டத்திற்கு ரயில் போயிற்று. மணல்காற்றினால் ரயில்போகும் வழி தூர்ந்து போவதைத் தடுப்பதற்குப் பெரும் பொருள் செலவழிவதால், இவ்வழியில் இப்போது ரயில்போவதில்லை. இதற்குப் பதிலாகக் கடலின் தென்கரையோரமாகவே பாம்பனிலிருந்து நேரே தனுஷ்கோடி ஸ்டேஷன் வரையில் மட்டும் ரயில்போகிறது. தனுஷ்கோடி

ஸ்டேஷனிலிருந்து தீர்த்த ஸ்நான கட்டம் (சேது ஸ்நான கட்டம்) 3 மைல் மணல் வழியில் நடக்க வேண்டும். காலை 9 மணிக்குள் போய்த் திரும்ப வேண்டும். பிறகு கால் கொப்பளிக்கும்படி மணல்சுடும். காசிக்குச் செல்பவர்கள் கங்காதீர்த்தம் கொண்டு வந்து, இராமலிங்க மூர்த்திக்கு அபிஷேகம் செய்து, காசி யாத்திரையை முடிப்பது மரபு. ஆண்டு முழுமையும் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருந்து திரளாக மக்கள் வருகிறார்கள். தீர்த்தங்களில் ஸ்நான சங்கல்பம், பிண்டம், தர்ப்பணம், தென் புலத்தார் வழிபாடுகள், நாகப்பிரதிஷ்டை முதலியவற்றிற்குப் புரோஹிதம் செய்து பிழைக்கும் பண்டாக்களும் அவர்கள் தரகர் களும் திருச்சிராப்பள்ளி ஜங்ஷனிலிருந்து வழிநெடுகப் பிரயாணி களை உபத்திரவம் செய்வார்கள். சிக்கிக் கொள்ளாமல், ஸ்டேஷனில் இறங்கி, ஸ்டேஷனுக்கு ½ பர்லாங்கு தொலைவி லுள்ள மோஹாபீர் தர்ம சாலையில் தங்குவது மிகமிக நல்லது. மாடியில் 24 மணி நேரத்திற்கு 8 அணா வீதம் வாடகையுள்ள நல்ல அறைகளுண்டு. கீழே சமையல் செய்ய இடமுண்டு. சாப்பாடு சிற்றுண்டி ஓட்டல்கள் நிரம்பவுண்டு. நாமே சங்கல்பம் செய்துகொள்வது நல்லது. தேவையானால் தீர்த்தங்களில் நூற்றுக் கணக்கில் காத்துக்கொண்டிருக்கும் புரோஹிதரைக் கொண்டு, ஓரணா, 2 அணா, 4 அணா கொடுத்துச் சங்கல்பம் செய்தால் போதும். இராமேஸ்வரத்தில் சிவராத்திரியை ஒட்டி 10 நாள் பெரு விழா நடக்கிறது. சிவராத்திரியன்று வெள்ளிரதம். ஆடி அமாவாசையை ஒட்டியும் 10 நாள் அயனோத்ஸவமுண்டு. ஒவ்வொரு அமாவாசையிலும் சேதுக்கரையில் ஸ்நானம் விசேஷம். அர்த்தோதயம், மஹோதயம் முதலிய புண்யகாலங்களில் பஞ்சமூர்த்திகளோடு இராமநாதசுவாமி சேதுக்கரையில் அதி காலையில் தீர்த்தம் கொடுப்பதை 100000 பேருக்குமேல் தரிசிப்பதுண்டு. இராவண சம்ஹாரத்தால் ஏற்பட்ட பழிபோக இராமபிரான் சிவபூசை செய்ததை 2901ம் பாசுரம் கூறும். காசி யிலிருந்து ஒருலிங்கம் கொண்டுவரும்படி ஆஞ்சநேயரை அனுப்பினர். காலந்தாழ்த்தும் வரவில்லை. சீதாபிராட்டியார் மணலைப் பிடித்து இலிங்கமாக்க இதை இராமர் வழிபட்டனர். அந்த லிங்கமே இராமலிங்கம் மூலஸ்தானத்திலிருப்பது. ஆஞ்சநேயர் தாமதித்துக் கொணர்ந்த காசிலிங்கம், இராமலிங்கம் சந்நிதியின் வடக்கில் சில அடி தூரத்துக்குள் இருக்கிறது. பிரயாணிகள் இரு லிங்கங்களையும் தரிசிப்பதே முறையாக உள்ளது. நிரம்ப அழகிய தேசிகர் இயற்றிய சேதுப்புராணம் முதலியன இத்தலத்துக்குண்டு. அம்பிகை அழகும் அருளும்

நிரம்பிய பர்வதவர்த்தினி (மலைவளர் காதலி). தாயுமானார் பாடல்கள் அம்மையின் சிறப்பை நன்கு விளக்கும். மூன்றாம் பிராகாரம் வெளிநாட்டு ஐரோப்பியர்கள் பார்த்துப் பார்த்து மகிழ்வது. ஆஞ்சநேயர், சேதுமாதவர், காலபைரவர் முதலியோர் உட்கோயில்கள் சிறந்தவை. 2900—2909, 3879—89(ச2); 4746—569(அ). ஆ. 3 பதிகம். **39. இரும்பூளை** (ஆலங்குடி) j நீடாமங்கலம் 4 மைல். இங்கு தக்ஷிணாமூர்த்தி சந்நிதி பிரபலம். வியாழக்கிழமை களில் வழிபாடு சிறப்புடைத்து. தக்ஷிணாமூர்த்தியே திருத்தேரில் எழுந்தருளுவார். 1852—61 (ச). **40. இரும்பை மாகாளம்** (இரும்பை) c புதுச்சேரி 5 மைல். 2736—46 (ச). **41. இலம்பையங்கோட்டூர்** a கடம்பத்தூர் 7 மைல்.சென்னையிலிருந்து நேரே கூவத்திற்குப் பஸ் மூலம் போய் கூவம் ஏரியினுள் குறுக்கே 1 மைல் போகவேண்டும். ஏரியில் தண்ணீர் மிகுதியாயிருப்பின், கரைவழியே சுற்றிப்போக வேண்டும். இவ்வூரில் கிறிஸ்தவர்களே மிகுதி. கூவத்திலிருந்து பூஜை செய்யப்போகும் குருக்களோடு போய்த் திரும்புதல் வசதி. 820—30 (ச). **42. இன்னம்பர்** (இன்னம்பூர்) கும்பகோணம் 4½ மைல். 3820—30 (ச); 4855—64, 5124—33, 5433—42, 7121—30 (அ4). ஆ. 5 பதிகம். **43. ஈங்கோய்மலை** (திருவிங்கநாதமாலை) குழித்தலை 2 மைல். அகத்திய முனிவர் ஈ உருவங்கொண்டு பூசித்த தலம். காலையில் 61 கடம்பந்துறை, கட்டுச்சியில் 251 வாட் கோக்கி, மாலையில் இத்தலம் ஆகிய மூன்றையும் கார்த்திகை சோமவாரங் களில் தரிசிப்பது இந்நாட்டு மக்களுடைய புண்ணியச் செயல். 754—64 (ச). **44. உசாத்தானம்** (கோயிலூர்) முத்துப்பேட்டை 2 மைல். இங்கு சங்கரவேதாந்திகள் மடம் ஒன்றுளது. இராமர், இலக்குமணர், அனுமான் முதலியோர் பூசித்ததை 3150—ம் பாசுரம் கூறும், 3150—58 (ச). **45. ஊறல்** (தக்கோலம்) தக்கோலம் 3 மைல். தெஇக 3 (166, 173, 184, 190) 5 (1364— 82). கோயிலின் மேற்புறம் மலைச்சரிவில் ஓர் இயற்கை ஊற்று (artesian source) உள்ளது. இதிலிருந்து தண்ணீர் கோயிலின் உட்பிராகாரத்தில் தரைமட்டத் தில் ஓர் நந்தி வாயின் வழியாக வந்து, நாற்புறமும் ஓடி, கோயிலுக்கெதிரில் மற்றொரு நந்தி வாயின் வழியாக விழுந்து ஒரு சிறு குளத்தை நிரப்பி வழிந்து ஓடுகிறது. சோழமன்னனுக்கும் மேலைச் சாளுக்கிய மன்னனுக்கும் போர் நிகழ்ந்த இடம் இங்கு மணற் பெருவெளியாக உள்ளது. 1143—51 (ச). **46. எதிர்கொள்பாடி** (மேலைத் திருமணஞ்சேரி) a குத்தாலம் 3½ மைல். 7286—96 (சு). **47. எருக்கத்தம்புலியூர்** (ராஜேந்திர பட்டனம்) d விருத்தாசலம் 7 மைல். திருநீலகண்டயாழ்ப்பாணர் அவதாரத்தலம் 959—68(ச). **48. எரும்பியூர்** (திருவெறும்பூர்) a திருவெறும்பூர் ¼ மைல். எறும்பு

பூசித்ததலம். கோயில் சிறுகுன்றின் மேலுளது. *5968—77, 7141—50 (அ2).* **49. ஏடகம்** (திருவேடகம்) a சோழவந்தான் 3 மைல் சம்பந்தர் "வாழ்க அந்தணர்'' என்று தொடங்கும் (3372—83) பதிகம் எழுதி, மதுரையில் வைகையாற்றிலிட்ட ஏடு, மருவுறும் பிறவியாற்றில் மாதவர் மனம் சென்றாற்போல், ஆற்றோட்டத்தை எதிர்த்துச் சென்று தங்கிய இடம். திருக்கோயில் ஆற்றோரத்தே யுளது. (3140—49) (ச). **50. ஐயாறு** (திருவையாறு, திருவாடி) a தஞ்சாவூர் 9 மைல். தெஇக 5 (512—555). தஞ்சாவூரிலிருந்து இத்தலம் செல்லும் வழியில் 5 ஆறுகளையும் பாலத்தின்மீது கடப்பதைக் காணலாம். திருக்கயிலை காணச்சென்று அப்பர் அத்தலம் போகும் வழியில் ஒரு குளத்தில் மூழ்கி, "யாதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்ற போது'' கயிலாயக் காட்சி கண்டனர். இதன் ஞாபகார்த்தமாகத் தென்கயிலாயம் என்ற உட்கோயிலில் ஆடி அமாவாசை யன்று உத்ஸவம் நடக்கின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ள மிகுதியால் காவிரிக்கரையில் நின்று, எதிர்க்கரையிலுள்ள கோயிலுள்ளிருக்கும் ஐயாற்றப்பரை நோக்கி 8013ம் பாசுரத்தில் "எதிர்த்து நீந்தமாட்டேன்...ஐயாறுடைய அடிகளோ'' எனும்போது ஆற்றில் மணல்வழி தோன்ற அவ் வழியிற் சென்று தரிசித்து மீண்டவுடன், அவ்வழி மறைந்து, மீண்டும் வெள்ளம் முன்போல் ஓடிய செய்தியைப் பெரியபுராணம் கூறும். இந்திரன், வாலி முதலியோர் வழிபட்டதை இந்ததலப் பாசுரங்கள் கூறும். சித்திரைப் பெரு விழாவில் இத்தலத்து இறைவன் தன்னைத்தானே பூசித்தது ஆத்மபூஜை யென்ற உத்ஸவமாக நடக்கிறது. இப்பெருவிழாவின் இறுதியில் சப்தஸ்தான உத்ஸவம் (ஏழூர்த்திருவலம்) மிகப்பிரபலம். நந்திகேசுவரரும் அவர் தேவியாரும் வெட்டிவேர்ப் பல்லக்கில் முன்செல்ல, ஐயாற்றப்பரும் அறம் வளர்த்த நாயகியும் அழகிய கண்ணாடிப் பல்லக்கில் திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் ஆகிய ஆறு தலங்கட்குச் சென்று, அங்கங்குள்ள மூர்த்திகளோ டெழுந்தருளி மீண்டும் திருவையாறடையும்போது ஏழூர் மூர்த்திகளும் ஒருங்கே காட்சியளித்து, கோயில் பிராகாரத்தில் மௌனப் பிரதக்ஷணம் செய்வது ஏறக்குறைய 30 மணிநேரம் நடைபெறும் நிகழ்ச்சியாகும். ஆற்றிலிருந்து தெற்குச் சந்நிதிக்குள் நுழையும்போது ஆட் கொண்டார் சந்நிதியும் குங்குலியக் குழியும் உள்ளன. அம்மையார் அறம் வளர்த்த நாயகியின் மூலத்தானத் திருவுருவம் மிகக்கெம்பீரமானது. தெலுங்கு மொழியிற் பல கீர்த்தனைகளியற்றிய தியாகராஜர் கோயில் ஆற்றங்கரையில்

உண்டு. தமிழ்மொழி வடமொழிக் கல்லூரிகள் மகாராஷ்ட்ர மன்னர் அரண்மனை முதலியனவும் இத்தலத்திலுண்டு. 382—92, 1293—1303, 1394—1404, 1524—35, 1808—18 (ச5) ; 4179—89, 4282—91, 4532/61, 5031—60. 5112—13, 5493—5512, 6613—33, (அ 12) ; 8005—15 (சு). ஆ.18 பதிகம். **51. ஒற்றியூர்** (திருவொத்தியூர்)8 S திருவொத்தியூர் ¼ மைல். சென்னை தங்கசாலை பஸ் நிலையத்திலிருந்து அடிக்கடி பஸ் போகின்றது. கல்வெட்டுக்கள் 1892 (104—110) 1896 (399—405) 1911 (366—372) 1912 (98—246) 1938 (162—167). தெஇக 3 (64, 103—105, 108, 115, 143, 145) 4 (552—57) 5 (1354—60) 12 (70, 87, 88, 90—93, 99, 100, 103, 105). புற்றிடங் கொண்டார் வன்மீகநாதர், படம்பக்கநாதர் என்பன மூலஸ்தானத்திலுள்ள மூர்த்தியின் பெயர். கார்த்திகைப் பௌர்ணமி, அடுத்த இரண்டு நாட்கள்புற்றின் மேலுள்ள கவசம் எடுத்துவிடப்படும். புற்றாகவே உள்ள மூர்த்தியைத் தரிசிக்கலாம். கவசம் சாத்தியிருக்கும்போது புற்றின் ஒரு சிறு பகுதியை மட்டும் பார்க்கலாம். பஞ்சம் ஏற்பட்ட காலத்தில், சோழமன்னன் எல்லாத் தலங்களின் படித்தரத்தையும் குறைத்தனுப்பிய கட்டளை ஓலையில் இவ்வூர் இறைவன் ஒருவருமறியாதபடி "ஒற்றியூர் நீங்கலாக மற்றை யூர்க்கிக் கட்டளை'' என்று எழுதியபடியால், எழுத்தறியும் பெருமான் எனப்படுகிறான். வடிவுடையம்மை சந்நிதியில் மலையாளத்து அந்தணர்கள் பூஜை. சப்தவிடங்கக் கணக்கில் சேராத தியாகராஜ ஸ்தலம். மாசி பௌர்ணமியைத் தீர்த்தமாகக் கொண்ட பத்துநாள் விழாவில் ஆறாம்நாளிரவு ஆறாம் பவனியும் ஒன்பதாம் நாள் மாலை மகிழடி சேவையும் மிகப்பிரபலம். கோயில் கர்ப்பக் கிரஹம் கஜப்ருஷ்ட வடிவுள்ளது (யானையின் புட்டம் போன்ற அரை வட்டவடிவு). வாவியெல்லாம் தீர்த்தம் மணலெல்லாம் சிவலிங்கம் என்று பட்டினத்தடிகள் போற்றிய தலம். அவருடைய முத்தித் தலம். அவர் கோயில் தேர்நிலையிலிருந்து ½ மைல் தொலைவிலுள்ளது. கலியநாயனார் தொண்டு செய்து முத்தியடைந்த தலம். சங்கிலி நாச்சியார் புஷ்பத்தொண்டு செய்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருமணம் புரிந்து வாழ்ந்த தலம். அவ்வம்மையாருக்கு மகிழ மரத்தடியில் கொடுத்த வாக்குறுதிக்கு மாறாகச் சுந்தரர் திருவாரூருக்குச் செல்ல, ஒற்றியூர் எல்லை தாண்டி ஒரு காலடி வைத்தவுடன் கண் பார்வை இழந்த இடம் இன்றும் காலடிப்பேட்டை (காலாட்டிப் பேட்டை) என வழங்குகின்றது. கண் இழந்தது முதல் சுந்தரர் உருகிக் கசிந்து பாடிய பதிகங்கள் நமக்கு நல்லறிவூட்டும் முறையில் அமைந்துள்ளன. ஒற்றியூர்க் கோயிலின் வடமேற்குப் பகுதியில் ஆதிபுரீசர் கோயில் திருப்பணி

மிக அழகிய முறையில் செய்யப் பெற்றுள்ளது. ஆதிசங்கரர், லகுலீசர் முதலிய சமயத்தலைவர்கள் உருவங்கள் ஒற்றியூர்க் கோயில் உட்பிராகாரத்திலும், தியாகராஜர் சந்நிதியின் பின்புறத் திலும் உள்ளன. *3405—15 (ச) ; 4502—13, 4980—90, 5463—72, 6691—6700 (அ5) ; 7774—83, 8147—56 (சு2)* ;ஆ. *8* பதிகம். **52. ஓணகாந்தன்தளி** b காஞ்சிபுரம் *1* மைல். சர்வதீர்த்தத்திற்கு அருகிலுள்ளது. சுந்தரர் பொன்பெற்ற தலங்களுள் ஒன்று. *7266—75 (சு).* **53. ஒத்தூர்** *(திருவேதிபுரம், திருவத்தூர்)* b காஞ்சிபுரம் *19*மைல். காஞ்சிபுரத்திலிருந்து வந்தவாசி போகும் பஸ்வழி. கோயிலின் மேற்கில் சேயாறு (செய்யாறு) ஓடுகின்றது. சிவபெருமான் தேவர்கள் முனிவர்கட்கு வேதப்பொருளை ஓதிய தலம். (ஒத்து= வேதம்). சம்பந்தர் அடியார் வேண்டுகோளுக் கிணங்கி ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கிய அற்புதம் நிகழ்ந்த தலம். தைமாதம் இரத சப்தமியைத் தேர்த்திருநாளாகக் கொண்ட பத்துநாள் திருவிழா நடக்கிறது. *580—90 (ச).* **54. ஓமாம்புலியூர்** a குத்தாலம் *11* மைல் (கொள்ளிடம் கடக்க வேண்டும்) a சிதம்பரம் *19* மைல். காட்டுமன்னார்குடி வழியாகப் பஸ்மூலம் போகலாம். *4111—20 (ச) ; 7112—20 (அ).* **55. கச்சிஅநேகதங்காவதம்** b காஞ்சிபுரம் $1^1/_2$ மைல். புத்தேரித் தெருவிற் கருகிலுள்ளது. கல்வெட்டுக்கள் தெஇக *4(345—347)* காஞ்சிபுரத்திள்ள சிவாலயங்களில் அம்பிகை யின் மூலஸ்தானம் கிடையாது. காமாக்ஷியம்மன் சந்நிதி தனிக் கோயிலாக உள்ளது. *7318—27 (சு).* **56. கச்சிஏகம்பம்** *(ஏகாம்பரேசு வரர் கோயில்)* b காஞ்சிபுரம் *1* மைல். கல்வெட்டுக்கள் *1890 (25—28) 1893 ( 1—13, 54) 1906 (2—4).* தெஇக*4 (348—51, 813—815* a, *816—20, 867) 7 (52—54 12 (14).* அரசாங்கம் வெளியிடாத நிரம்பவுள. ஐயடிகள் காடவர்கோன், மறவாது கல்எறிந்த சாக்கியர், திருக்குறிப்புத் தொண்டர் முத்திபெற்ற தலம். கரம்தரு பயன் இதுவெனக் கம்பையாற்றங்கரையில் மணலாற் சிவலிங்கம் எடுத்து ஆகம முறைப்படி பூசை செய்யும் உமையம்மையாரின் பேரன்பை வெளிப்படுத்தச் சிவபெருமான் திடீரென ஆற்றில் வெள்ளம் வரச்செய்ய, உமையாள் மணலிலிங்கத்தைக் காக்கத் தழுவினள். முலைக்குவடும் வளைத்தழும்பும் சிவலிங்கத்தின் திருமேனியில் பதிந்தன. இதனால் தழுவக்குழைந்தகம்பன் என்ற பெயர் நிலவிற்று. என்றும் அழியாத மாவடியின்கீழ் இறைவன் இருத்தலால் ஏகாம்பரம் ஆயினன் (ஏகஆம்ரன்=ஒரு மாவின் கீழிருப்பவன்). காஞ்சிப்பதியிலுள்ள எல்லா சிவாலயங்களும் ("கச்சிப் பலதளியும்" என்று *6947*—ம் பாசுரம் கூறுவதால்) தேவார வைப்புத் தலங்களே. இப்பலதளிகள் வரலாற்றைச் சிவஞான

முனிவர் அருளிய காஞ்சிப்புராணத்துட் காண்க. மூலஸ்தானம் மணலாதலால் அதற்கு அபிடேகமில்லை. புனுகுச் சட்டமே சாத்தப்பெறுவது. ஆவுடையாருக்கே அபிடேகம். சிவலிங்கத்தின் பின்புறம் மாடத்தின் திருமணக் கோல உருவில் பார்வதியும் பரமேசுவரரும் காட்சி யளிக்கின்றார்கள். காஞ்சிபுரத்திலுள்ள எந்த சிவாலயத்திலும் அம்மன் சந்நிதி கிடையாது. இவ்வாலயங் களிலுள்ள சிவபெருமானுக்கு அம்பிகை காமாட்சியம்மையாகத் தனிக்கோயிலில் உள்ளார். இவ்வம்மையாரே இருநாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறமும் வளர்ப்பவர். ஏகாம்பரேசர் ஆலயத்திற்கும் காமக் கோட்டத்துக்கும் இடையில் (சோமஸ்கந்த உருவத்தமைப்பே போல்) குமரகோட்டத்துள் முருகப்பெருமான் காட்சியளிக்கிறார். இங்கு பூசை செய்த கச்சியப்ப சிவாசாரியரே கந்தபுராண ஆசிரியர். இவர் காப்புச் செய்யுளின் முதலடியிலுள்ள (திகடசக்கரம்=திகழ்+தசக்கரம்) புணர்ச்சிக்கு இலக்கணங் கூறவே முருகப்பிரான் தமிழ்ப்புலவனாக வீரசோழிய இலக்கணச் சுவடி யோடு வந்து சிவாசாரியருக்கு வெற்றி யளித்தனன். பஞ்சபூதஸ் தலங்களுள், மணல் இலிங்கமுள்ள இத்தலம் பிருதிவித்தலம். சுந்தர மூர்த்தி சுவாமிகள் கண்ணிழந்த நிலைமையில் யாத்திரை செய்து இத்தலத்தில் இடக்கண் பெற்றனர். "அயோத்யா மதுரா'' எனத் தொடங்கும் சுலோகத்தின்படி இத்தலம் முத்திதரும் நகரங்கள் ஏழினுள் ஒன்று. விஷ்ணுஸ்தலங்கள் 108ல் (=திவ்யதேசங்கள்) 14 காஞ்சியிலுள்ளன. சோழன் கரிகாற் பெருவளத்தான் காலத்தில் காஞ்சிபுரம் மிகச் செம்மையாக்கப் பெற்று நான்கு ராஜவீதிகளும் ஏற்பட்டன. இவை போன்ற அகன்ற மாடவீதிகள் வேறு எத்தலத்திலும் இல்லை. அரண்செய்யும் முறையில் இச்சோழனே நாற்புறத்திலும் உயர்ந்த பருத்த மதில்களை எழுப்பினன். 1432, 4228, 5116, 7442 முதலிய பல பாசுரங்களில் கச்சியின் மதில் கூறப் படுகிறது. கச்சியை நடுவில் வைத்த தொண்ட நாட்டுப்பகுதியும் எயிற்கோட்டம் என்று பெயரிடப்பட்டது ( எயில்=மதில்) சங்க காலத்தில் காஞ்சிபுரம் கச்சிப்பேடு என வழங்கிற்று. கச்சிப்பேட்டு இளந்தச்சனார், பெருந்தச்சனார், காஞ்சிக் கொற்றனார், நன்னாகையார் முதலிய புலவர்கள் நற்றிணை குறுந்தொகை முதலிய சங்கஇலக்கியங்களுட் பாடியன நமக்குக் கிடைத்துள்ளன. மணிமேகலை என்ற தமிழ்க் காப்பியத்தில் கச்சிமா நகர் புக்க காதை, சமயக் கணக்கர் தந்திறம் கேட்ட காதை முதலியவற்றுள் இந்நகரின் சிறப்பு, வாணிபச் சிறப்பு, பற்பல சமயப்பேரறிஞர்கள் வாழ்ந்த சிறப்பு கூறப்பட்டுள்ளன. சங்க காலத்திற்குப் பிறகு பல்லவ மன்னர்கள் காலத்திலும் இது சிறந்த தலைநகராக

விளங்கியது. "பாரூர் பல்லவனூர்'' (7442) என்ற சுந்தரர் திருவாக்காலறியப்படும். 200 ஆண்டுகட்கு முன்பு மாதவச் சிவஞான யோகிகள் இத்தலத்திலுறைந்து காஞ்சிப்புராணம், சிவஞான போதமா பாடியம் முதலிய பல நூல்களை அருளிக் கச்சியப்பரோடு சிறந்த தமிழ்த் தொண்டும் புரிந்ததும் இத்தலச் சிறப்பினுள் பொன்னெழுத்தால் பொறித்தற்குரிய பகுதியாகும். "கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர்'' (4589 பார்க்க) என்று அப்பர் சுவாமிகள் அன்று புகழ்ந்தது இன்றும் உண்மையாகவே உள்ளது. வடமொழியிலும். "நகரேஷு காஞ்சி'' எனப்படுதல் மிகையன்று. ஏழு திருமுறைகளிலும் கச்சியேகம்பத்திற்குப் பதிகங் களுண்டு. பதினோராந் திருமுறையிலும் மூவர்திருவாக்கிற் பல பாடல்கள் உண்டு. வாசகம் திருக்கோவையாரிலும் இத்தலம் குறிக்கப்பெற்றுள்ளது. 1427—36, 1590—1600, 3233—43, 4024—34 (சு4); 4220.—29, 4592—4601, 5114—24, 2695, 6883—6903 (அ7); 7848—58 (சு). 12 பதிகம். **57. கச்சி நெறிக்காரைக்காடு** (திருக்காலீசுவரன் கோயில்) b காஞ்சிபுரம் 1½ மைல். 3492—3502 (ச). **58. கச்சித்திருமேற்றளி** (பிள்ளைப்பாளையம்) b காஞ்சிபுரம் 1½ மைல். இக்கோயிலில் சிவபெருமான் சந்நிதிகள் இரண்டுள. ஒன்று, திருமாலுருவம் சம்பந்தர் பதிகம் ஓத உருகிச் சிவலிங்கமாகிய ஓதவுருகீசர் சந்நிதி—மற்றொன்று திருமேற்றளிநாதர் சந்நிதி—சந்நிதித் தெருவின் கோடியில் ஆளுடையபிள்ளையார் (=சம்பந்தர்) கோயிலுளது. இவர் வருகையால் இப்பகுதி பிள்ளையார் பாளையம் எனப் பெயர் பெற்றது. சம்பந்தர் பதிகம் கிடைத்திலது. 4582—91 (அ); 74333—42(சு). ஆ 2 பதிகம். **59. கச்சூர்** (திருக்கச்சூர்) a சிங்கப் பெருமாள் கோயில் 1½ மைல். சுந்தரமூர்த்தி சுவாமிகட்காக இறைவன் பிச்சையெடுத்துச் சோறூட்டிய தலம். சப்தவிடங்கக் கணக்கில் சேராத தியாக ராஜஸ்தலம். ஆலக்கோயில் என்பது கோயிற்பெயர். இத்தலப் பதிகத்தில் "மலைமேல் மருந்தே'' என வருதலால், இங்குள்ள மலைமேல் மருந்தீசர் கோயிலும் உண்டு. 7639—48 (சு). **60. கஞ்சனூர்** a நாரசிங்கன் பேட்டை 1 மைல். கஞ்சன்(=பிரமன்) பூசித்த தலம். அக்கினி வழிபட்டதை 7131ம் பாசுரம் கூறும். ஹரதத்தாசாரிய சுவாமிகள் பழுக்கக் காய்ச்சிய பீடத்தின் மேலமர்ந்து சிவபரத்வத்தையும் சைவ சமய மேன்மை யையும் நிலைநாட்டிப் பல வடமொழி நூல்களருளிச் செய்த தலம். 7131—40(அ). **61. கடம்பந்துறை** (கடம்பர் கோயில்) r குழித்தலை 1 மைல். காலையில் இத்தலம், கட்டுச்சியில் 251 வாட்போக்கி, மாலையில் 43 ஈங்கோய்மலை ஆகிய மூன்றையும் கார்த்திகை சோமவாரங்களில் இந்நாட்டு மக்கள் தரிசிப்பதுண்டு.

5402—5411 (அ). **62. கடம்பூர்** a சிதம்பரம் 15 மைல். காட்டு மன்னார் குடியிலிருந்து 3 மைல். ஆலயம் கரக்கோயில். ரதம், சக்கரம், குதிரை யமைந்துள்ள சிற்பமுறையில் மூலஸ்தானம் 2200—10 (ச). 5412—32 (அ2). ஆ. 3 பதிகம். **63. கடவூர் மயானம்** (திருமெய்ஞ்ஞானம்) ſ திருக்கடையூர் 1½ மைல். தெஇக 3 (90) பிரம தேவனை நீறாக்கிய மயானம். 2335—45 (ச); 5606—13 (அ); 7764—73 (சு). **64. கடவூர் வீரட்டம்** ſ திருக்கடையூர் ¼ மைல். கல்வெட்டு 1906 (15—52) 1925 (241—58) தமக்குப் பதினாறு ஆண்டுகளே வயதென்று, தமது தந்தையார் பெற்ற வரத்தை மாற்றக் கருதிய மார்க்கண்டேயர் என்ற மறைச் சிறுவர், தமது ஆயுள் இறுதி நாளன்று இத்தலத்து அண்ணலை இடைவிடாது வழிபாடு செய்து கொண்டிருக்கும் போது, காலன் தம்மீது பாசக் கயிறு வீசத் தாம் சிவலிங்க மூர்த்தியைச் சேர்த்துக் கட்டிக்கொள்ள, இலிங்கத்தையும் உட்படுத்திக் கயிறு வீசிய காலனை, இலிங்கத்திலிருந்து வெளிப்பட்ட கால சம்ஹாரமூர்த்தி உதைத்துத் தள்ளி மார்க்கண்டேயரை விடுவித்து அவருக்கு என்றும் பதினாறு வயதெனும் சிரஞ்சீவிப் பேறளித்த அருந்தலம். அமிர்தகடமே சிவலிங்கமாயிருத்தலின் அமிர்தகடேசுவரர் என்பது இறைவன் பெயர். இறைவி அபிராமி. காலசம்ஹாரமூர்த்தி சந்நிதி தெற்கு நோக்கியது. குங்கிலியக்கலய நாயனாரும் காரி நாயனாரும் தொண்டு செய்து முத்தி பெற்ற தலம். "திருக்களிற்றுப்படியார்" என்ற சித்தாந்த சாத்திரம் இயற்றிய உய்ய வந்ததேவ நாயனார் அவதரித்த தலம். அபிராமிப்பட்டர் "அபிராமியந்தாதி" பாடி, அபிராமி அம்மையின் அருளால் அமாவாசையன்று முழுமதியை ஆகாயத்திற் காட்டிய அற்புதம் நிகழ்ந்த தலம். சித்திரைப் பெருவிழாவில் 6ம் நாள் காலசம்ஹார உத்ஸவம் மிகப் பிரபலம். கார்த்திகை சோமவாரந்தோறும் 1008 சங்காபிஷேகமும் பிரபலம். காலசம்ஹாரமூர்த்தியின் அருள் பெறுவதற்கு, அன்பர்கள் தமது 60ம் ஆண்டு நிறைவை (சஷ்டியப்த பூர்த்தியை) இத்தலத்தில் ஆயுஷ்ஹோமம் முதலியன செய்து கொண்டாடுவதுண்டு. அஷ்ட வீரட்டானங்களுள் இத்தலம் ஒன்று. 2878—88 (ச); 4462—71, 5174—83, 5595—5605 (அ3); 7503—12 (சு). ஆ. 5 பதிகம். **65. கடிக்குளம்** (கற்பகனார் கோயில்) g பாண்டி 4 மைல். 2594—2604 (ச). **66. கடுவாய்க்கரைத் தென்புத்தூர்** (ஆண்டான் கோயில்) a கும்பகோணம் 6 மைல். 5848—57 (அ). **67. கடைமுடி** (கீழூர்) ſ செம்பொனார் கோயில் 3 மைல். 1196—1206 (ச). **68. கண்டியூர் வீரட்டம்** a தஞ்சாவூர் 6 மைல். தெஇக 3 (134) 5 (568—79). ஆதி காலத்தில் ஐம்முகச்சிவனாரைப் போல் பிரமனுக்கும் ஐந்து

சிரங்களிருந்தபடியால், பிரமன் சமத்வம் கொண்டாடிச் செருக் குற்றனன். பற்பல உயிர்கட்குத் துன்பம் விளைத்தனன். தேவர் வேண்டுகோளுக் கிரங்கி, அவனுடைய ஐந்தாவது சிரசைச் சிவபெருமான் கண்டித்தெறிந்தமையால் கண்டியூர் வீரட்டம் ஆயிற்று. சப்தஸ்தான ஸ்தலங்களுள் ஒன்று. 3200—10 (ச) ; 5061—70 (அ). **69. கண்ணார் கோயில்** (குறு மாணக்குடி) a வைத்தீஸ்வரன் கோயில் 1½ மைல். அகலிகையைப் புணர்ந்த காரணமாகத் தேவேந்திரன் உடல் முழுமையும் ஆயிரம் பெண்குறி நிரம்பப் பெற்ற சாபம் நீங்க இத்தலத்து இறைவனைப் பூசித்து, அக்குறிகள் கண்களாக மாற்றப்பெற்றதால் தலப்பெயர் கண்ணார் கோயி லாயிற்று. வாமனாவதாரத்தில் மாவலியிடம் மூவடி மண் இரந்து பெற்று உலகளந்த திருமால் செருக்கை ஒடுக்கி நெற்றியிலிருந்து இரத்தம் இறுத்த சிவபெருமானை வழிபட்டு அருள் பெற்ற தலமாகையால் குறுமாணிக்குடி என்பது குறுமாணக்குடி என மருவித்தலத்தின் வழங்கும் பெயராயிற்று. இவ்விரு வரலாறுகளை யும் 1097, 1905ம் பாசுரங்களிற் காண்க. 1901—1101 (ச). **70. கயிலாயம்** vw சென்னையிலிருந்து கல்கத்தா போய் அங்கிருந்து டேராடூன் எக்ஸ்பிரஸில் ஏறி லக்நோ சென்று அங்கிருந்து பரெய்லி (Bareilly) வழியாகத் காதகோடாம் (Kathagodam) ரயில் ஸ்டேஷனிலிருந்து அல்மோராவில் சுவாமி விவேகாநந்தர் நிறுவிய மாயாவதி இராம கிருஷ்ணர் திருமடம் சென்று அங்கிருந்து புறப்பட்டுக் கால்நடை யாகவோ அல்லது குதிரை மீதோ இமயமலை ஏறிச்செல்ல வேண்டும். காதகோடாம் ரயில் ஸ்டேஷனிலிருந்து அல்மோரா விற்கு ஏறக்குறைய 100 மைல். அல்மோரா—பரிச்சீனா 8 மைல், பரிச்சீனா—கனெரிச்சீனா 11 மைல், கனெரிச்சீனா—கனாய் 12 மைல், தால்—டிடிஹட் 10 மைல். டிடிஹட்—ஆஸ்கோட்டை 9 மைல். ஆஸ்கோட்டை—பலவக்கோட்டை 12 மைல், பலவக் கோட்டை—டார்ச்சுலா 11 மைல், டார்ச்சுலா—கேலா 10 மைல், கேலா—சிர்க்கா 10 மைல், சிர்க்கா—ஜிப்தி 11 மைல், ஜிப்தி—மால்ப்பா 10 மைல், மால்ப்பா—கர்பியாங் 12 மைல், கர்பியாங்—காலபானி 10 மைல், காலபானி—லிப்புத் தடாகக் கணவாய் 7 மைல், லி—கணவாய்—தக்களக்கோட்டை 12 மைல், த—கோட்டை—தீர்த்தாபுரி 75 மைல், தீ—புரி — கயிலை அடிவாரம் 45 மைல் ஆகமொத்தம் அல்மோராவலிருந்து 297 மைல். முழுவிவரங்களை இராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சுவாமி சித்பவாநந்தர் வெளி யிட்டுள்ள "திருக்கைலாயகிரி யாத்திரை" என்ற நூலிற் காண்க. கயிலாயம் இமயமலையின் சிகரங்களுள் ஒன்று. 22980 அடி உயரம். பனிக்கட்டியாலாகிய ஒரு பெரிய ஸ்தூபி போலிருக்கிறது.

ழிதைப் பிரதக்ஷிணம் செய்ய 29 மைல் ஆகிறது. மிக மிகக் கடின மான யாத்திரை. சம்பந்தர் காளத்தியிலிருந்தே பதிகம் ஓதினர். அப்பர் கயிலாயம் செல்லும் வழியில், ஒரு முனிவர் வடிவில் சிவபெருமான் தோன்றி ஒரு தீர்த்தத்தில் முழுகச் சொல்லி, யாதும் சுவடுபடாமல் திருஐயாற்றில் அவரை எழச்செய்து அங்குக் கயிலாயக் கோலம் காட்டியருளினார். சுந்தரர் கயிலாயத்திற்குச் சிவபெருமான் அனுப்பிய வெள்ளானையின் மீதேறிச் சென்றனர். காரைக்காலம்மையார், தமது தூல உடலை உதறியெறிந்து, எலும்புக் கூட்டோடுள்ள பேய் வடிவத்தோடு தலையினால் நடந்துசென்று சிவசந்நிதி யடையும்போது சிவபெருமான் "அம்மையே என்னும் செம்மை ஒருமொழி உலகமெல்லாம் உய்யவே அருளிச்செய்தார்." அங்கு வரம்பெற்றுத் திருவாலங்காடு சேர்ந்து நடனங் கண்டார். சேரமான் பெருமாள் நாயனார் தமது குதிரையின் செவியில் பஞ்சாக்கரம் ஓதி, வான் வழியாகச் சுந்தரரை எதிர் சேவித்துக் கயிலை சேர்ந்து கயிலைநாதன் சந்நிதி யில் "திருக்கயிலாய ஞானஉலா" பாடினார். பன்னிரு திருமுறைக ளுள் இப்பனுவல் ஒன்றே கயிலாய நாதன் திருமுன்பு நேரே விண்ணப்பிக்கப் பெற்ற பெருமையுடைத்து. சுந்தரர் தோழரான பெருமிழலைக்குறும்ப நாயனார் யோகக் காட்சியில் சுந்தரர் கயிலைக்குச் செல்வதை முன்னாளே யறிந்து, யோகநெறியில் பிரமநாடி வழியாகக் கபாலமோக்ஷம் எய்திக் கயிலை சேர்ந்து சுந்தரரை எதிர்கொண்டழைத்தார். ஔவை மூதாட்டியார் "சீதக்களப" எனத் தொடங்கும் அகவல் பாடி, விநாயகர் பூசை செய்யப் பூசையின் இறுதியில் விநாயகருடைய தும்பிக்கையால் தூக்கப்பெற்று நேரே கயிலை சேர்ந்தார். கயிலாயநாதன் அருளி னால் தான் அவன் காட்டக் கண்டு அவன் திருவுருவைத் தரிசிக்க இயலும். இன்றேல் பனிமலைச் சிகரம் ஒன்றையே கண்டு திரும்ப வேண்டும். 733—42, 3526—36, 3967—77 (சுஃ3) ; 4614—23, 6794—6823 (அ4) ; 8241—8250 (சு). ஆ. 8 பதிகம். கயிலாய கிரியின் அடிவாரத்தில் இராவணன் கயிலையை எடுக்க முயன்ற இடம் முதலியன காட்டப்படுகின்றன. கயிலைமலை தெற்கு நோக்கி யுள்ளது. எதிரில் பல மைல் தூரம் ஒரே சமவெளி. **71. கரவீரம்** (கரையபுரம்) j குழிக்கரை 4 மைல் 623—33(ச). **72. கருகாவூர்** (திருக்களாவூர்) a பாபநாசம் 4 மைல். 3288—97 (ச); 6391—6401 (அ). **73. கருக்குடி** (மருதாந்த நல்லூர்) a கும்பகோணம் 2½ மைல் 3020—30 (ச). **74. கருப்பறியலூர்** (தலைஞாயிறு) வைத்தீஸ்வரன் கோயில் 5 மைல். கோயிற் பெயர் "கொகுடிக் கோயில்" 1797—1807 (ச) ; 7523—33 (சு). **75. கருவிலிக் கொட்டிட்டை** a கும்பகோணம் 12

மைல். நாச்சியார் கோயில் குடவாயில் போகும் பஸ் வழி. *5918—27 (அ).* **76. கருவூர் ஆனிலை** *(கரூர்)* r கரூர் ¼ மைல். தெஇக *3 (20—26) 4 (387—90).* எறிபத்தர், புகழ்ச்சோழர், கருவூர்த்தேவர் முதலியோர் வரலாறுகள் விளங்கும் தலம். காமதேனு பூசித்தமையால் கோயில் ஆன்நிலை, ஆனிலையாயிற்று. *1764—74 (ச).* **77. கலயநல்லூர்** *(சாக்கோட்டை)* a கும்பகோணம் 2 மைல். *7380—90 (சு).* **78. கலிக்காமூர்** *(அன்னப்பன் பேட்டை)* a சீகாழி 7 மைல். *3923—33 (ச).* **79. கழிப்பாலை** *(திருக்கழிப்பாலை)* a சிதம்பரம் 3 மைல். பழைய தலம், கொள்ளிடநதி வெள்ளத்திற்போயிற்று. இப்போதுள்ள கோயில் 176 நெல்வாயில் ஆகிய சிவபுரியில் ஒரு தனிக் கோயிலாக உள்ளது. *1688—98, 3266—76 (ச2) ; 4210—19, 4452—61, 5171—73, 5625—33, 6360—69 (அ5) ; 7453—62 (சு).* ஆ. *8* பதிகம். **80 கழுக்குன்றம்** *(திருகழுக்குன்றம்)* a செங்கல்பட்டு 9 மைல். பஸ்வழி. வடநாட்டார் பக்ஷி தீர்த்தம் என்பர். கல்வெட்டுக்கள் *1894 (167—89) 1909 (57—75) 1911 (329—31) 1933 (121—91)* தெஇக *3 (69, 75) 5 (460—88) 12 (16, 130, 238, 243).* வேதமே மலையாதலின் வேதகிரி வேதாசலம் என்ற பெயருமுண்டு. மலையுச்சியில் அருமையாகக் குடைந்தெடுக்கப் பெற்றது இக்கோயில். (cave temple carved out of rock in situ) கர்ப்பக்கிரகச் சுவர்களில் பல அழகிய சிவபராக்ரம வரலாறுகள் செதுக்கப் பெற்றுள்ளன. பாடல் பெற்ற தலங்களுள் இங்கும் திருப்பரங்குன்றத்திலுமே இன்றும் பூசிக்கப் பெறும் குகைக்கோயில்கள் உள்ளன. கோயிலுக்கு வடபுறம் ஒரு கற்பாறையின்மீது, உச்சி வேளையில் இரண்டு கழுகுகட்கு நெய்யும் சர்க்கரைப் பொங்கலும் "பக்ஷி பண்டாரம்" என்பவரால் நாடோறும் அளிக்கப்படுகிறது. இராமாயண காலத்திலிருந்த ஜடாயு, சம்பாதி என்ற இரு கழுகுகள் கழுக்குன்றத் துச்சியானை வழிபட்டன என்றும், இக்கழுகுகளின் வழித் தோன்றல்களே இப்போது வருவன என்றும் கூறப்படுகிறது. மாணிக்க வாசகருக்குக் "கணக்கிலாத் திருக்கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்று கூறப்படும் அனுபவம் நிகழ்ந்த இடம் மலைவலம் வரும் வழியில் இன்று மாணிக்கவாசகர் கோயிலாக உள்ளது. தேவார முதலிகள் மூவரும் தங்கியிருந்த இடம் "மூவர்பேட்டை" என வழங்குகின்றது. உடல் நலிவுற்ற பலர் இத் தலத்தில் ஒரு மண்டலம் க்ஷேத்திரவாஸம் பண்ணி, நாடோறும் மலையேறிக் கழுக்குன்றத் துச்சியான் அருளையும், சஞ்சீவிக் காற்றின் (Ozone) நன்மையையும் ஒருங்கே பெற்று, மாலையில் மலைவலம் வந்து திடம் பெறுவதால் இத்தலம் நலப்பேறா (sanatorium) ஆகின்றது. அடிவாரத்தில் பக்தவத்ஸலர் ஆலய

கிழக்கு சந்நிதி வீதியின் இறுதியில் சங்கு தீர்த்தத்தில் 12 ஆண்டுகட் கொருமுறை ஒரு சங்கு தோன்றி, நாடோறும் சங்கபிஷேகத்திற்கு உதவுகின்றது. சித்திரை விழாவில் 3ம் நாள் காலை அதிகாரநந்தி சேவையன்று பஞ்சமூர்த்திகள் 63 நாயன்மார் களோடு மலைவலம் வருதல் சிறந்த காட்சி. (இத்தலத்திற்கு 12 மைல் தொலைவில் திருப்போரூர் என்ற முருகன் தலமும் 9 மைலில் மாமல்லாபுரம் (Seven pagodas) அல்லது மஹாபலிபுரம் என்ற விஷ்ணு ஸ்தலமும் உள்ளன. இங்குப் பல பல்லவக்கற் சிற்பங்கள் உள்ளன. 1112—21(ச) ; 7151—52 (அ) 8046—55 (சு). திருவாசகத்துள் திருக்கழுக்குன்றப் பதிகம். (468—474 திருவாசகப் பாட்டெண்) தலபுராண ஆசிரியர் அந்தகக் கவி வீரராகவ முதலியார். **81.** **களர்** (திருக்களர், பாரிஜாதவனம்) g திருத்துறைப் பூண்டி 4½ மைல். 2015—15 (ச). **82.** **கள்ளில்** (திருக்கள்ளம்) s பொன்னேரி 11 மைல். சென்னை தங்கசாலை பஸ் நிலையத்தில் பெரியபாளையம் நாகலாபுரம் பஸ் ஏறிக் கன்னிப்புத்தூர் (கன்னிப் பேர்) என்ற இடத்தில் இறங்கி 2 மைல் சென்றால் இத்தலம் போகலாம் (21 மைல்) சென்னை பர்மாஷெல் தலைமை நிலையத் தருகிலிருக்கும் பஸ் நிலையத்தில் பூண்டி, திருத்தணி, திருவள்ளூர் போகும் பஸ் ஏறி அத்திப்பேட்டிலிறங்கிக் கொடுதலையாற்றையும், பூண்டி வாய்க்காலையும் கடந்து சென்றாலும் இத்தலம் சேரலாம் (19 மைல்). திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து பஸ் வழியாக அத்திப் மேட்டிலிறங்கியும் போகலாம் (19 மைல்). 1282—92 (ச). **83.** **கற்குடி** (உய்யக்கொண்டான் மலை) d திருச்சி டவுன் 2 மைல். சிறியமலை மேற்கோயில் 459—69 (ச); 6844—53 (அ) 7493—7502 (சு). ஆ 3 பதிகம். **84.** **கன்றாப்பூர்** (கோயில் கன்றாப்பூர்) g மாவூர் ரோட் 5½ மைல். கன்றுக் குட்டியைக் கட்டிவைக்கும் தறியிலிருந்து இறைவன் வழிபாடு ஏற்றனன். "கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே'' என வருதல் காண்க. 6854—62 (அ). **85.** **காட்டுப்பள்ளி** (கீழைத் திருக்காட்டுப்பள்ளி) ஆரணீஸ்வரர் கோயில் என்றும் பெயர் வழங்கும் a சீகாழி 9 மைல். வழியில் திருவெண்காடு உளது. 45—54 (ச). **86.** **காட்டுப்பள்ளி** (மேலை) (திருக்காட்டுப்பள்ளி) a பூதலூர் 5 மைல். பஸ் வழி 3107—17 (ச) ; 6085—67 (அ). **87.** **காவிரிப் பூம்பட்டினத்துப்** பல்லவனீச்சரம் (காவேரிப் பூம்பட்டணம், சங்கமம்) a சீகாழி 10 மைல். சங்ககாலத்தில், சோழ கரிகாற் பெருவளத்தான் அரசு புரிந்த "புகார்'' என்னும் தலைநகர். இங்கிருந்த துறைமுகம், வாணிபம், மக்கள் செல்வநிலை முதலியவற்றைப் "பட்டினப் பாலை" என்ற சங்கநூல் கண்ணாடி போற் காட்டும். கோவலன், கண்ணகி, மாதவி, மணிமேகலை முதலியோர் வரலாற்றுத்

தொடர்புடையது. நுதல்விழிநாட்டத் திறையோன் முதலாப் பதிவாழ் சதுக்கத்துப்பூதம் ஈறாக, எல்லாக் கடவுளர் கோயிலும் இருந்த நகர். இந்திரவிழா மிகச் சிறப்பாக நடந்ததைச் சிலப்பதிகாரம் புகார் காண்டத்துட் காண்க. கடல் கொண்டதால் முடிவுற்ற புகார் நகரச் சிதைவு இன்றும் கடலுட் காணப்படுகிறது. 706, 708, 709—ம் பாசுரங்களில் "புகார்'' என்றே சம்பந்தர் குறித்துள்ளார். பல்லவன் திருப்பணி செய்தபின்பு பல்லவனீச்சரம் என்ற பெயர் வந்தது. இயற்பகை நாயனாரும் பட்டினத்தடிகளும் வாழ்ந்த தலம். 701—711, 4011. 4011 (ச). **88. காழி** *(சீகாழி, ஸ்ரீகாழி)* a சிய்யாழி 1 மைல். கல்வெட்டுக்கள் 1896 (123—125) 1910 (140) 1918 (360—401) தெஇக 5 (988—890) 12 (210, 211, 252, 253) திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருஅவதாரம் செய்து, ஞானப்பால் உண்டு, மூன்றாம் வயது முதல் பதினாறாம் ஆண்டு வரையில் தமிழ்நாடு முழுமையும் தலயாத்திரை செய்து, சமண சமயத் தவறுகளைத் திருத்திச் சைவசமயம் தழைத்தோங்கத் தொண்டு புரிந்த தலம். இத்தலத்தில் கணநாத நாயனார் பயிற்சிக் கல்லூரி வைத்துத் தொண்டரை ஆக்கும் தொண்டு புரிந்தனர். பிரமபுரீசுவரர் சந்நிதி தரைமட்டத்திலும், வடக்குப் பிரகாரத்தில் சிலபடிகள் ஏறிச் சென்றால் தோணியில் உமாதேவியாருடனிருக்கும் தோணியப்பர் சந்நிதியும், அங்கிருந்து மேலும் சில படிகள் ஏறிச் சென்றால் சட்டைநாதர் சந்நிதியும் உள்ளன. ஞானப்பால் உத்ஸவம் சித்திரைப் பெருவிழாவில் 2—ம் நாள் நண்பகலில் நடக்கிறது. தலத்தின் பெயர்கள் பன்னிரண்டிற்கும் காரணங்கள் இவை யென்பதை அருணாசலக் கவிராயர் இயற்றிய தலபுராணத் துட் காணலாம். பாடல் பெற்ற தலங்கள் மிகுதியான பதிகத் தொகை (71) இத்தலத்துக்கே யுண்டு. தலப்பெயர்கள் அகர வரிசையிலும் அவ்வப் பெயரோடுள்ள பதிகங்களின் பாசுரத் தொடக்க எண்களும் கீழே தரப்படுகின்றன. **கழுமலம்** *195, 853, 1359, 1383, 3052, 4012, 4068ஆ 7* ; **காழி** *250, 360, 875, 1102, 1580, 1993, 2102, 2280, 2507, 2518, 2692, 3255, 4057ஆ 13*, **கொச்சைவயம்** *2367, 2432, 3756ஆ 3;* **சண்பை நகர்** *712, 3603ஆ 2;* **சிரபுரம்** *504, 1174, 2572ஆ 3;* **தோணிபுரம்** *645, 3668, 3872ஆ 3;* **பிரமபுரம்** *1, 678, 696, 1259, 1370, 1382, 1895, 2167, 2222, 2256, 2268, 3190, 3395, 3514, 3978ஆ 15;* **புகலி** *34, 316, 1122, 1731, 1175, 2048, 2791, 2823, 2867 ஆ 9;* **புறவம்** *798, 1047, 3701ஆ 3;* **பூந்தராய்** *1470, 2812, 2845, 2932 ஆ 4;* **வெங்குரு** *809, 3810ஆ 2;* **வேணுபுரம்** *87, 1645, 2346ஆ 3.* சம்பந்தர் பதிகம் (67) **கழுமலம்** *4948, 4958* ; **தோணிபுரம்** *5675ஆ* அப்பர் பதிகம் (3) **கழுமலம்** *7817* சுந்தரர் பதிகம் (1). ஆ மூவர்

- நிகம் (71). **89. காளத்தி** (ஸ்ரீகாளஹஸ்தி) c காளஹஸ்தி 1 மைல். கல்வெட்டுக்கள். 1892 )195—202, 1903 (92—96, 166—203), 1904 (276—303) 1922 (82—184) 1924 (150—186) தெஇக 4 (643—50) 8 (377—81 463—502) சிலந்தி (=ஸ்ரீ) பாம்பு (=காளம்) யானை (=ஹஸ்தி) ஆகிய மூன்றும் பூசித்து முத்தியடைந்த தலம்; மலைமேல் உச்சியிலிருந்த குடுமித்தேவர் வழிபாடே கண்ணப்ப நாயனார் செய்ததென்பதும், மலைமேலேறியே தேவார முதலிகள் மூவரும் வழிபட்டனர் என்பதும் பெரியபுராணத்தா லறியப்படும். ஆனால் நாம் இப்போது பொன் முகலியாற்றங் கரையில் ஊர்த் தரைமட்டத் திலுள்ள கோயிலுக்குள் இருக்கும் மூர்த்தியையே வணங்குகிறோம். ஆற்றிலிருந்து சில படிகளேறிஆலயம் செல்வதால், இப்போதுள்ள ஆலயமும் மலைமீதுள்ள தென்பாரும் உளர். பஞ்சபூத ஸ்தலங்களுள் இது வாயுஸ்தலம். மூலஸ்தானத்துள்ளிருக்கும் விளக்குகள் எப்போதும் காற்றில் அசைந்து கொண்டேயிருக்கும். மூலஸ்தானத்துள்ள சிவலிங்க மூர்த்தியின் திருவுருவில் சிலந்தி, பாம்பு, யானை மூன்றுமுள்ளன. சுயம்புலிங்கம். நீண்ட பல செங்குத்தான உட்குழிந்த குடைவுகள் நிரம்பிய திருமேனி (Shape of a fluted pillar). பச்சைக் கருப்பூரம் சேர்ந்த நீரே அபிஷேகம். திருநீற்றோடு இவ்வபிஷேக தீர்த்தமும் விநியோகிக்கப்படுகிறது. கருப்பக் கிரக வாயிற்படிக்கருகில் கண்ணப்ப நாயனார் காட்சி யளிக்கிறார். 11ம் திருமுறையிலுள்ள கயிலைபாதி காளத்திபாதி யந்தாதியும் திருக்கண்ணப்ப தேவர் திருமறமும் நக்கீரரால் பாடப் பெற்ற தலம். தென்கயிலாயம் எனக் கூறப்படும் தலங்களுள் இத் தலமும் ஒன்று. சிவராத்திரியை 5 ம் திருநாளாகக் கொண்ட திருவிழா மாசி மாதத்தில் நடக்கிறது. 3181—89, 3537—47, (ச2) ; 6319—29 (அ) ; 7483—92 (சு). **90. காறாயில்** (திருக்காறைவாசல்) g மாவூர்ரோட் 3 மைல். சப்தவிடங்களுள் ஒன்று. ஆதிவிடங்கர், குக்குடநடனம் 1623—33 (ச). **91. கானப்பேர்** (காளையார் கோயில்) a நாட்டரசன்கோட்டை 6 மைல் தேவகோட்டை. போகும் பஸ் வழியிலுள்ளது. தெஇக 8(166—183) சுந்தரர் கனவில் காளையாகத் தோன்றித் தாமிருப்பது கானப்பேர் எனக் கூறி அவரை வணங்கச் செய்து பதிகம் பெற்றபடியால் காளையார் கோயில் என்று தலப்பெயர் வழங்குகிறது. கோயிலும் திருக்குளமும் பெரிது. காளையீசுவரர், சுந்தரேசுவரர், சோமேசுவரர் ஆகிய மூன்று சந்நிதி கள் உள்ளன. ஐராவதம் பூசித்துச் சாபவிமோசனம் பெற்றதை 3080ம் பாசுரம் கூறும். 3073—84 (ச) ; 8076—85 (சு). **92. கானாட்டுமுள்ளூர்** (கர்னாட்டாம் புலியூர்) a சிதம்பரம் 10 மைல். 7628—38 (சு). **93. கானூர்** a பூதலூர் 7 மைல். மண்மூடிப் போயின

கோயில் சென்ற நூற்றாண்டில் அகழ்ந்தெடுக்கப் பெற்றது. 787—97 (ச) ; 5988—96 (அ). **94. கீழ்வேளூர்** j கீவளூர் ½ மைல், கட்டு மலைக் கோயில் முருகன் பூசித்த தலங்களுள் ஒன்று. 2605—15 (ச); 6914—23 (அ). **95. குடந்தைக் காரோணம்** (காசி விசுவநாதர் கோயில் a கும்பகோணம் ½மைல். மகாமகக் குளத்தின் வடகரையி லுள்ளது. 776—86 (ச). **96. குடந்தைக் கீழ்க்கோட்டம்** (நாகேசுவரன் கோயில்) a கும்பகோணம் ½ மைல். ஊர்நடுவேயுள்ள பெரிய கோயில். கல்வெட்டுக்கள் தெஇக 3 (91, 131, 137, 200, 201, 204). சித்திரைமாதம் 3 நாள் (11, 12, 13ம் தேதிகள்) சூரிய கிரணங்கள் காலையில் மூலஸ்தானத்திலுள்ள மூர்த்தியின்மேல் படுகின்றன (இதையே சூரிய பூசை என்பது மரபு) 6987—97 (அ). **97. குடமுக்கு** (கும்பேசுவரர் கோயில்) a கும்பகோணம் 1 மைல். பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெறும் மகாமகத்தில் (மாமாங்கம் என்று உலக வழக்கிலுள்ள பெருவிழாவில்) கும்பேசுவரர் வெள்ளி ரிஷப வாகனத்தில் பஞ்ச மூர்த்திகளோடு எழுந்தருளி வந்து மகாமகக் குளக்கரையில் தீர்த்தம் கொடுப்பர். அப்போது பல லக்ஷக்கணக்கான மக்கள் குளத்துள் முழுவதும் நின்று முழுகித் தரிசனம் செய்வார்கள். குளத்தில் நீர்முழுமையும் பல நாட்களாகப் பெரிய எஞ்சின்களால் இறைக்கப்பட்டு, முழங்கால் ஆழம் நீரே இருக்கும். இக்குள நீரில் மூழ்குவதால் இந்தியாவி லுள்ள கங்கை, யமுனை, கோதாவிரி, கிருஷ்ணா, பெண்ணை. தண் பொருநை, குமரி முதலிய எல்லா தீர்த்தங்களிலும் மூழ்கும் பலன் கிடைக்குமென்பது புராண வரலாறு. இதன் சுருக்கம் 5446, 5450ம் பாசுரங்களிலும் கூறப்படுகிறது. மகாமகம் 1945 வருடம் வந்தது. அடுத்த மகாமகம் 1957ம் வருடம் வரப்போகிறது. 3427—37(ச) ; 5443—52 (அ). **98 குடவாயில்** (கொடவாசல்) j கொரடாச்சேரி 7மைல். கும்பகோணத்திலிருந்து திருவாரூர்போகும் பஸ் வழியிலுள்ளது. 1699—1709, 2092—2101 (ச). **99. குரக்குக்கா** a வைத்தீஸ்வரன் கோயில் 6 மைல். ஆஞ்சநேயர் பூசித்ததால் **குரக்குக்கா** 5976—87 (அ). **100. குரங்கணில் முட்டம்** a காஞ்சிபுரம் 6 மைல். வாலி (குரங்கு) அணில், காக்கை (முட்டம்) பூசித்ததலம். 327—337 (ச). **101. குரங்காடுதுறை** (தென்) (ஆடுதுறை) a ½ மைல். காவிரியாற்றின் தென்கரையிலிருப்பதால் இது தென்குரங்காடு துறையாயிற்று. வடகுரங்காடு துறைக்கு வடகிழக்கே இத்தலம் உள்ளது. சுக்ரீவன் பூசித்த தலம் a 1841—51 (ச) ; 5858—58 (அ). **102. குரங்காடுதுறை (வட)** a ஐயம்பேட்டை 3 மைல். வாலி பூசித்ததை 3783, 3784ம் பாசுரங்கள் கூறும். 3778—87 (ச). **103. குருகாவூர்** (திருக்கடாவூர்) a சீகாழி 3½ மைல். இறைவன் சுந்தரருக்குக்

கட்டமுது கொடுத்ததை 7515ம் பாசுரம் கூறும். 4131—46 (ச) 7513—22 (சு). **104. குறுக்கை வீரட்டம்** a நீடூர் 5 மைல். மன்மதனை எரித்த வீரட்டம் 4634—45 (அ2) **105. குறும்பலா**, குற்றாலம் (திருக்குற்றாலம்) n தென்காசி 3½ மைல். கல்வெட்டுக்கள் 1917 (404—489) தெஇக 5 (767, 768) இங்குள்ள சாரல் நீர்வீழ்ச்சி முதலியவற்றை அனுபவிக்க ஜூலை ஆகஸ்ட் மாதங்களில் மக்கள் திரண்டு வருகிறார்கள். ஒரே காலத்தில் கோயிலுக்கருகிலுள்ள நீரருவியில் 500 பேர் குளிப்பதற்குத் தக்க சிமிட்டிநிலை கட்டப்பட்டுள்ளது. மலைமே உள்ள சண்பகாடவி யருவியும் தேனருவியும் 3 மைல் தொலைவி லுள்ள ஐந்தருவியும் நெடுநேரம் அமைதியாக நீராடுவதற்கு வசதி. அகத்திய முனிவர் திருமால் உருவைக் குறுகச்செய்து சிவலிங்க மாக்கியதால் குற்றாலம் எனவும், பலாமரம் தலவிருக்ஷமாதல் பற்றிக் குறும்பலா எனவும் தலப்பெயர் ஏற்பட்டது. நடராஜர் 5 சபைகளுள் இங்குள்ளது கல்லாலாகிய சித்ரசபை. சித்திரை விஷு புண்ணிய காலம் பிரபலம். குற்றால ஸ்தலபுராணம், குற்றாலக் குறவஞ்சி முதலிய நூல்கள் இலக்கியச் சுவை நிரம்பியவை. 1969—79, 2234—44 (ச2). **106. கூடலையாற்றூர்** d விருத்தாசலம் 12 மைல். விருத்தாசலத்திலிருந்து புவனகிரி போகும் பஸ்வழியில் வளையமா தேவியில் இறங்கிச் சென்றால் வெள்ளாறும் மணி முத்தாறும் கூடும் இடமே கூடலை ஆற்றூர். விருத்தாசலம் செல்லும் சுந்தரரை, இவ்வழியாகத்தான் போக வேண்டும் என்று சொல்லி இறைவன் மறைந்து இத்தலப்பதிகம் பெற்றதைப் பாசுரம் தோறும் காண்க. 8086—95 (சு). **107. கேதாரம்** (பத்திகேதார்) sv சென்னையிலிருந்து நேரே Grand Trunk Express ஏறி 1363 மைல் சென்று டில்லி (இந்தியாவின் தலைநகரம்) சேர்ந்து, அங்கிருந்து 169 மைல் தொலைவிலுள்ள ரிஷிகேசம் (இது கல்கத்தாவிலிருந்து டேராடூன் போகும் v வழியிலுள்ள ஸ்டேஷன்) போய், அங்கிருந்து தேவப்ரயாகை 44 மைல், கீர்த்திநகர் 20 மைல் ஆக 64 மைல் மேட்டார் பஸ் மூலம் போய், அங்கிருந்து 3 மைல் தொலைவில் உள்ள ஸ்ரீநகர் வரையில் நடந்துபோய், அங்கிருந்து 23 மைல் பஸ் ஏறிப்போய் ருத்தரப்ரயாகை சேர்ந்து, அங்கிருந்து மலைஏறி நடந்து சத்தோலி 5 மைல், ராம்பூர் 2 மைல், அகஸ்தியமுனி 4 மைல், சவுர்ஹி 2 மைல், சந்திரவுரி 2 மைல், குண்டசட்டி 6 மைல், குப்தகாசி 2 மைல் போய், குப்தகாசியில் ஸ்ரீ ஆனந்த நடராஜரைத் தரிசித்துக்கொண்டு அங்கிருந்து நளசட்டி 1½ மைல், நாராயண் கோடி 2 மைல், மேகண்டா 4 மைல், பாடாசட்டி 2 மைல், பதல்பூர் 3 மைல், ராம்பூர் 2 மைல், கௌரி குண்டம் 6 மைல் போகவேண்டும். (கௌரிகுண்டம் என்பது அனேகதங்காவதம்

என்று மேலே 15ம் எண்ணுள்ள தலம்) இங்கே வெந்நீர் ஊற்றில் ஸ்நானம் செய்து, தவம் செய்து கொண்டிருக்கும் அம்மையையும் உமாமஹேசுவரரையும் தரிசிக்கவேண்டும். பிறகு இங்கிருந்து மிகக் கஷ்டமான ஏற்றமாகிய வழியில் ஜங்கல் சட்டி 2 மைல், ராம்பர்ஹ 2 மைல், கேதார் நாத் 3 மைல் சென்றால் திருக்கேதாரம் என்ற ஸ்தலம் உளது. இங்குத் திருக்கேதார நாதரைத் தரிசிக்கலாம். பார்வதி தேவியார் இத்தலத்தில் நோன்பிருந்து கேதாரீசுவரரை வழிபட்டு, அர்த்தநாரீசுவரப் பேறு பெற்றனர். பிருங்கிரிஷி தம்மைப் பிரதக்ஷண நமஸ்காரம் செய்யாமற் பிரித்துப் பரமசிவனை மட்டும் வணங்கியதால், பிரிக்க இயலாத அர்த்தநாரீசுவரக் கோலத்துள் இடம் பெறுதற்கே பார்வதி தேவியார் நோன்பு நோற்றனர் என்பது புராண வரலாறு. இந்த நோன்பு, தீபாவளியை ஒட்டித் தமிழ் நாடெங்கும் கொண்டாடப் பெறுகின்றது. இத்தலம் கடல் மட்டத்தின்மேல் 14000 அடி உயரமுள்ளது. சித்திரை மாதம் 15ம் தேதி கோயில் திறப்பார்கள். ஐப்பசி மாதம் தீபாவளி முடிந்தவுடன் கோயில் மூடிவிடப்படும். பனிக்கட்டி விழுந்து கோயிலையே மூடிவிடும். கடைசிநாள் பூசித்த மலர்கள் பனிக்குளிர்ச்சியால் (cold storage) திறக்கும் நாளன்று வாடாதிருக்கும். மூடியிருக்கும் 6 மாதங்களில் தேவர்கள் பூசிப்பதால் மலர்கள் வாடுவதில்லை என்பது புராண வரலாறு. சம்பந்தரும் அப்பரும் காளத்தியிலிருந்தே இத்தலப் பதிகங்களை ஓதினார்கள். 2703—13 (ச) ; 8016—25 (சு). ஆ 2பதிகம். **108. கேதீச்சரம்** (திருக்கேஸ்வரம்) p திருக்கேஸ்வரம் 3 மைல். தலைமன்னார் பியரிலிருந்து 23 மைல் தொலைவிலுள்ள இத்தலம் பாலாவியாற்றின் கரையில் ஈழநாட்டிலுள்ளது. பழைய கோயில் போர்த்துக் கேசியர் ஆட்சியில் தகர்க்கப்பட்டது. சம்பந்தரும் சுந்தரரும் இத்தலப் பதிகங்களை இராமேஸ்வரத்திலிருந்தே ஓதினார்கள். 2627—37 (ச) ; 8036—45 (சு). **109. கைச்சினம்** (கைச்சினம்) g ஆலத்தம்பாடி 1 மைல். இந்திரன் பூசித்த கைவிரற்குறி (கைச்சினம்) இலிங்கத்திற் காணப்படுகிறது. 1950—59 (ச) **110. கொடிமாடச் செங்குன்றூர்** (திருச்செங்கோடு) q சங்கரி துர்க்கம் 6 மைல். பஸ் போகிறது. மலை உயரம் 1901 அடி. மலைமேல் கோயில். அர்த்தநாரீஸ்வரர் மூலஸ்தானத் திருவுருவம் சலவைக் கல்லாலாகியது, மிக அழகியது. திருவடியில் நீரூற்று. அர்த்தநாரீஸ்வரர் எழுந்தருள்வது வைகாசித் திருவிழாவில் திருத்தேர் விழாவிற்கு. முருகன் சந்நிதி பெரிது. இம்முருகனைத் தரிசித்தற்கு "நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே" என்கிறார் அருணகிரி நாதர். சம்பந்தர் முன் பனிக்காலத்தில்

இங்கெழுந் தருளியபோது, உடன் வந்த தொண்டர்குழாம் குளிர்க்காய்ச்சலால் வருந்தின போது திருநீல கண்டப்பதிகம்பாடி அதைப் போக்கு வித்தனர். 1152—62 (ச). **111. கொடுங்குன்றம்** (பிரான்மலை) d காரைக்குடி 27 மைல். திருப்புத்தூர் வரையில் பஸ் ஏறிச் சென்று, வேறு பஸ் மாறிச் சிங்கம் புணரி பஸ்மூலம் 7 மைல் சென்று சதுர்வேதமங்கலம் (மட்டியூர்) எனும் இடத்தில் இறங்கி மாட்டு வண்டியில் 5 மைல் போனால் இத்தலம் சேரலாம். மலை உயரம் 2452 அடி. திரிசிராப்பள்ளியிலிருந்து மதுரைபோகும் பஸ் வழியில் 50 மைல் சென்று பள்ளப்பட்டியில் இறங்கி 3 மைல் மாட்டு வண்டியில் போனாலும் இத்தலம் சேரலாம். கல்வெட்டு தெஇக 8 (425—442) 1903 (38—154) 1924 (192—236). பாடல் பெற்றதலம் அடிவாரத்திலுள்ளது. மலை மேல் வயிரவர் கோயிலும் சிவன்கோயிலும் உண்டு. 141—51 (ச). **112. கொட்டையூர்க் கோடீச்சரம்** a கும்பகோணம் 3 மைல். 6967—76 (அ). **113. கொண்டீச்சரம்** g நன்னிலம் 1½ மைல். பார்வதிதேவியார் பூசித்த தலங்களுள் ஒன்று 4807—16, 5928—37 (அ2). **114. கொள்ளம் பூதூர்** (திருக்களம்பூர்) j கொரடாச்சேரி 4 மைல். கோயிலின் பக்கத்தில் ஓடுகின்ற முள்ளியாற்றுக்கு எதிர்கரையில் சம்பந்தர் வந்தபோது வெள்ளம்போயிற்று. ஓடக்கோல் நிலைக்காமையால், ஓடத்தைக் கரையிலுள்ள மரத்தில் கட்டிவிட்டு ஓடக்காரன் வீட்டிலிருந்தான். சம்பந்தர் ஓடத்தை அவிழ்த்து விட்டு ஏறிக் கொண்டு "கொட்டமே கமழும்'' எனும் பதிகம்பாட, "நாவலமே கோலாக'' ஓடம் கோயிலருகிற் சேர்ந்தது. இது ஐப்பசி அமாவாசையன்று உத்ஸவமாக நடக்கிறது. 2856—66 (ச). **115. கொள்ளிக்காடு** g ஆலத்தம்பாடி 4 மைல். 2965—75 (ச). **116. கோகரணம்** (கோகரண்) u ஹுப்ளி 90 மைல். பஸ் போகிறது. வழி நெடுகத் தேக்குமரக் காடுகளும், மலைச்சரிவுகளும், இயற்கை வனப்பு மிக்க சோலைகளுமுள்ளன. தலம் மேல்முத்திரக் கரையில் (Arabian Sea Coast) உள்ளது. பம்பாய் ஸ்டேட் வடகன்னர ஜில்லாவிலுள்ளது. கயிலையிலிருந்து இராவணன் ஒரு சிவலிங்கம் கொண்டு வந்தான். மாலைக்கடன் முடித்தற் பொருட்டுத் தரையில் வைக்கக் கூடாதென்று நினைத்தபோது, விநாயகர் ஒரு சிறுவன் போல எதிர்வந்து, தமது கையில் சிவலிங்கத்தை ஏற்று, மீண்டும் விரைவில் பெற்றுக் கொள்ளாவிடில் தரையில் வைத்து விடுவதாகச் சொன்னார். கொஞ்ச நேரமானவுடன் வைத்து விட்டார். மாலைக்கடன் முடிந்தவுடன் இராவணன் எடுக்க முயன்றான். இலிங்கம் வேரூன்றியபடியால் எவ்வளவு முயன்றும் பெயர்க்க முடியவில்லை. பலமெல்லாம் பயன்படாதபடியால்

இலிங்கம் மஹாபல லிங்கமாகிக் கீழேயே போய், மேலை ஒரு பசுவின் காதுநுனியளவே தெரிந்தபடியால், தலப்பெயர் கோகர்ணம் ஆயிற்று. இத்தலத்தில் நாமே மஹாபல லிங்கத்தைத் தொட்டு அபிஷேகம் செய்து வழிபடலாம். விநாயகர் திருவுருவம் நின்ற கோலமாக அழகு நிரம்பியுள்ளது. மகா சிவராத்திரியில் திருத்தேர். ஒரு லக்ஷம் பக்தர்கட்கு மேல் தரிசனம் செய்வார்கள். *3646—56 (ச) ; 6732—41 (அ).* 117. கோடி *(குழகர் கோயில், கோடிக்கரை) 1 கோடிக்கரை 3 மைல். 7544—53 (சு).* **118. கோடிகா** *(திருக்கோடிகாவல்)* a *நாரசிங்கன் பேட்டை 1 மைல். 2539—49 (ச); 4646—55, 6007—13, 7048—55 (அ3).* ஆ*₀* 4 பதிகம். **119. கோட்டாறு** h பாதிக்குடி 2½ மைல். யானை பூசித்ததை 2027ம் பாசுரம் கூறும். *2026—36, 2921—31 (ச2).* **120. கோட்டூர்** k மன்னார்குடி *10* மைல். *2648—58 (ச).* **121. கோணமலை** *(திருக்கணாமலை)* p ட்ரிங்காமலி தலைமன்னார் (Trincomalle) பியரிலிருந்து மதவாச்சி, மாஹோ ஜங்ஷன்கள் வழியாக 221 மைல். ஈழநாட்டுத்தலம். இலங்கையி... கீழ்க் கடற்கரையிலுள்ளது. பழைய கோயில் போர்த்துக்கேசியரால் இடித்து விடப்பட்டது. இப்போது கடலினுள் இருக்கும் பாறைக்கு (Swamy Rock) வெள்ளிக்கிழமைகளில் வழிபாடு நடக்கிறது. இராமேஸ்வரத்திலிருந்தே சம்பந்தர். இத்தலப்பதிகம் ஓதினார். *4121—30 (ச).* **122. கோயில்** *(சிதம்பரம்)* a சிதம்பரம் ¼ மைல். கல்வெட்டுக்கள் *1888 (115—124) 1892 (170—84) 1902 (445—68) 1903 (390—401) 1913 (260—376) 1915 (1) 1918 (545—51) 1930 (610—616) 1935 (103—109) 1936 (1—48)* தெஇக *3 (86, 87) 4 (220—29, 618—32) 8 (43—56, 706—717) 12 (149, 151, 152, 154, 157, 159, 160, 171—75, 201, 209, 215. 216, 245, 249—251).* மிகப் பழைய காலத்தில் இது தில்லை வனமாயிருந்தது. புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்) இவ் வனத்தில் தவம் புரிந்து சிவபூசை செய்திருந்தனர். பின்பு இரணியவர்மன் கோயில் கட்டிய வரலாறு உமாபதிசிவம் அருளிச் செய்த கோயிற் புராணத்துட் கூறப்பட்டுள்ளது. இக்கோயிலில் 5 சபைகள் உண்டு. *(1)* நடராஜப் பெருமான் (இருக்கும் சிற்றம்பலம் அல்லது சிற்சபை (வடமொழியில் தப்ரசபா — Dhabra sabha) *(2)* சிற்சபைக் கெதிரிலுள்ள கனகசபை (பொன்னம்பலம்) இங்கு நாடோறும் ஸ்படிகலிங்கத்திற்கு 6 காலபூஜை நடக்கிறது. *(3)* நிருத்தசபை. இது நடராஜருக்கெதிரிலுள்ள திருக்கொடி மரத்திற்குச் சிறிது தெற்கிலுள்ளது. இங்கு ஊர்த்துவதாண்டவ மூர்த்தியைக் கற்சிலையுருவில் தரிசிக்கலாம். *(4)* தேவசபை (...ம்பலம்) யாகசாலைக்கருகில் ஈசான மூலையிலுள்ளது. ... மூர்த்திகள் இருக்குமிடம். *(5)* ராஜசபை (ஆயிரக்கா...

மண்டபம்). சிற்றம்பலத்தின் மேலுள்ள ஸ்தூபி ஏனைய தலங்களில் உள்ளது போன்றதன்று. சாதாரண வீடுகளுக்குள்ள கூரை போன்றது. 21600 தங்க ஓடுகளால் ஆகியது. ஒரு நிமிஷத்திற்கு 15 மூச்சு வீதம் 24 மணிநேரம் கொண்ட ஒரு நாளுக்கு 21600 மூச்சு ஆகின்றது. இது தங்க ஓடுகளின் மொத்த எண்ணிக்கை. சிற்சபையின் கூரைக்குளிருப்பவன், உயிருக்குயிராயிருப்பவன், இதயப் பெரு வெளியில் நட்டம் புரிபவன் என்றெல்லாம் தத்துவ உட்கருத்துக்கள் கூறப்படுவதுண்டு. சிற்சபையின் தங்கவிமானத்தின் மேலுள்ள 11 கலசங்கள், கனகசபையிலுள்ள தூண்களின் எண்ணிக்கை, கீழே பாவியிருக்கும் கற்களின் தொகை முதலியவற்றிற்கும் இவ்வாறு பல உட்கருத்துக்கள் கூறப்படுகின்றன. கனகசபையிலிருந்து சிற்சபைக்கு ஏறுவதற்கு 5 படிகள் உண்டு. இவை பஞ்சாக்ஷரப்படிகள். பஞ்சாக்ஷர ஜபத்தின் வழி இறைவனைக் காணலாம் என்பது கருத்து. படியின் இருபுறமும் யானையுருவங்கள் உள்ளன. சித்தாந்த சாத்திரம் 14ல் ஒன்று பஞ்சாக்கரப்படியில் வைக்கப் பெற்றபோது, இந்த யானைகளுள் ஒன்று, தும்பிக்கையால் இந்தச் சுவடியை தில்லைக் கூத்தன் திரு வடியில் சேர்ப்பித்தபடியால், இந்த நூலுக்குத் **திருக்களிற்றுப்படியார்** என்று பெயரிடப்பெற்றது. பல சோழ மன்னர்கள் மகுடாபிஷேகம் இப்பஞ்சாக்ஷரப்படியில் நடைபெற்றது. திருமால், பிரமன் முதலியோர் இசைக்கருவிகளை ஒலிக்கக் கூத்தபிரான் என்றும் திருநடனம் புரிகின்றான். "தோற்றம் துடியதனில்'' என்ற செய்யுளிற் காணுமாறு, திருநடனம் ஐம்பெருந்தொழில்களை (சிருஷ்டி முதல் அனுக்ரஹம் வரையுள்ள பஞ்சக்ருத்யங்களை)க் குறிக்கும். நடனம் நின்றால் உலக இயக்கமும் நிற்கும். அம்மை சிவகாம சுந்தரி இத்திரு நடனத்தை இடைவிடாது தரிசிக்கிறாள். "பாலுண்குழவி பசுங்குடர் பொறாதென, நோயுண் மருந்து தாயுண்டாங்கு'' நமது பிறவிப் பிணி போக்கவே நம்பொருட்டு அம்மை தரிசிக்கிறாள் என்பர் குமரகுருபர அடிகள். கூத்தப்பிரான் இடது பக்கம் அம்மையிருக்க, வலது புறம் ரஹஸ்யம் உள்ளது. பஞ்சபூதஸ்தலங்களுள் இது ஆகாயத்தலம் என்பதை அறிவுறுத்த ஆகாயத்திற்குப் பல பொன் வில்வமாலைகள் தொங்கவிடப்பட்டு உள்ளன. (திரையை நீக்கித் தரிசிப்பதால் இது ரஹஸ்யம் எனப்படுகிறது). தரிசித்தால் முத்திதரும் தலம் என்பது கூறப் படுவது. தரிசிப்பதே பிறவிப் பெரும்பயன் என்பதை அப்பர் "குனித்த புருவமும்... காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' (4941ம் பாசுரம்) என்பதனால் தெரிவிக்கிறார். "என்று வந்தாய் என்னும் எம்பெருமான்தன்''

திருக்குறிப்பை (4939ம் பாசுரம்) இன்று தரிசிப்போரும் அனுபவிக்கலாம். திருவிசைப்பா ஆசிரியர்கள் பாதாதிகேசம் அனுபவித்ததைத் திருவிசைப்பாவில் 12—22, 215—225 பாடல்களிற் காணலாம். தில்லைக் கூத்தன் திருவிளையாடல்கள் கணக்கற்றன. பாலுக்குப் பாலகன் வேண்டியமுதிடப் பாற்கடல் ஈந்தான். இப்பாற் கடலையுண்ட உபமன்னிய முனிவரே கண்ணனுக்குத் திருவடி தீக்ஷை செய்து பஞ்சாக்ஷர உபதேசம் அருளியவர். கயிலையில் இவரே முனி கணங்கட்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றை உரைத்தவர். பாற்கடல் வற்றியதால் திருமால் இங்கு நடனம் தரிசிக்கிறார். கூத்தப்பிரான் சந்நிதிக்கெதிலுள்ள ஒரு சதுரத்தில் நின்றால் சிவன் மால் ஆகிய இருபெருங் கடவுளரையும் ஒருங்கே தரிசிக்கலாம். இப்பெரும் பேறு வேறு எத்தலத்திலுமில்லை. கழறிற்றறிவார் வழிபாட்டில் சிலம்பொலி கேட்பிக்கக் காலந் தாழ்த்துப் பிறகு அக்காரணங் கொண்டே அவருக்குச் சுந்தரர் தோழமையைத் தந்ததும் கூத்தன் பெருவிளையாடலே. திருநீல கண்டத்துக் குயவனார்க்கு இளமை யளித்தாலும், கணம் புல்லர், கோச்செங்கட் சோழன், கூற்றுவ நாயனார் முதலியோருக்கு முத்தி யளித்தலும் அவன் செயலே. திருக்கொடியேற்றமாகாதபோது உமாபதிசிவம் கொடிக்கவி பாடக் கொடியேறியதால், அவர் பெருமையை உணராத தில்லைவாழ் அந்தணர்கட்கு உணர வைத்த திருவிளையாடலும் புரிந்தனன். அவருக்குச் சீட்டெழுதி யனுப்பிப் பெற்றான் சாம்பான் என்ற ஆதித்திராவிடத் தொண்டருக்கு முத்தியளித்ததும் அவன் செயலே. ஒரு விழாவில் திருத்தேர் ஓடாது தடைப்பட, சேந்தனார் திருப்பல்லாண்டு பாடிய பின்பு ஓட வைத்து அவர் நிவேதித்த களியமுதையும் உண்ட திருவிளையாடலும் அவன் அடியார்க் கெளியன் என்பதை விளக்கும். மாணிக்கவாசகரைக்கொண்டு ஈழநாட்டுப் புத்தர்களை வாதில் வென்று, ஊமைப் பெண்ணைப் பேசவைத்துத் **திருச்சாழல்** கொண்டதோடு, "பாவைபாடிய வாயால் கோவைபாடு என்று வேண்டி, மாணிக்கவாசகர் பாடும்போது ஏடும் எழுத்தாணியும் கொண்டெழுதி இறுதியில் "அழகிய சிற்றம்பலவன்" என்று கைச்சாத்தும் இட்டு சிற்சபையில் வைத்த திருவிளை யாடலும் புரிந்தனன். மாணிக்கவாசகரையும், திருநாளைப் போவாரையும் அனைவரும் காணும்போதே தனது திருவடியில் மறைந்து முத்தியடையும்படி அருளிய திருவிளையாடலும் புரிந்தனன். நம்பியாண்டார் நம்பிகட்குத் திருமுறைகள் சேமிக்கப் பெற்றிருந்த அறையைந் காட்டி, திருமுறை கண்ட சோழனுக்கருளி திருமுறைகளை வெளிப்படுத்தியதும் அவன்

கருணைச் செயலே. சேக்கிழார் பெருமானுக்கு "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டர் புராணத்தை எழுதி முடிக்க அருள்புரிந்து அநபாய சோழனைக் கொண்டு ராஜசபையில் அரங்கேற்றச் செய்து, சேக்கிழாரையும் புராணத்தையும் யானைமேலேற்றி அரசன் பின்னிருந்து துணைக்கரத்தால் இணைக்கவரி வீசி நகர்வலம் வரச்செய்து சைவம் வளர்த்ததும் கூத்தப்பிரான் அருஞ்செயலே. இத்தலப்பெருமை, கூத்தப்பிரான் கருணை முதலியவற்றை "அளந்தறிதல் மன்னுயிர்க் கருமை" யாதலின் இம்மட்டில் விடுத்தாம். அர்த்தஜாம முடிந்தவுடன் எல்லா ஆலயங்களிலுமுள்ள சிவகலைகள் எல்லாம் இத்தலத்தி லுள்ள மூலஸ்தான லிங்கத்தில் ஒடுங்குவதால் இம்மூர்த்திக்குத் திருமூலட்டான நாதர் என்றே பெயர். சிவகாமியம்மன் தனிக்கோயில், பாண்டி நாயகம் எனும் அறுமுகப் பரமன்கோயில் முக்குறுணிப் பிள்ளையார், சிவகங்கை தீர்த்தம் முதலியனவும் சிறப்புடையன. இத்தலத்தில் இளமையாக்கினார் கோயில், திருப்புலீச்சரம், பதஞ்சலியார் கோயில், தில்லை மாகாளிக் கோயில் முதலியனவும் சிறந்தன. கொற்றங்குடி யில் உமாபதி சிவம் திருக்கோயிலுண்டு. மார்கழித் திருவாதிரை, ஆனி உத்திரம் ஆகியவற்றைப் பத்தாம் திருநாளாகக் கொண்ட இரண்டு பிரஹ்மோத்ஸவங்கள் நடக்கின்றன. ஒன்பதாம் திருநாள் காலையில் தில்லைக்கூத்தன் திருத்தேருக் கெழுந்தருளி அன்று நான்கு வீதிகளிலும் தரிசனமளித்து, இரவு 1000 கால் மண்டபம் சென்று, விடியற் காலை 6 மணிக்குள் அபிஷேகம் செய்யப்பெற்று, 10ம்நாள் பகல்12 மணிக்குமேல் 2 மணிக்குள்ளாகச் சிற்சபைக் கெழுந்தருளும் அநுக்கிரஹ தரிசனத்தைப் பல்லாயிரக் கணக்கான அன்பர்கட்கு வழங்கிப் பின்புசிற்சபையுட் பிரவேசித்து நாடோறும். ஆறுகால பூசை ஸ்படிகலிங்கத்திற்கும், காலை 2ம் கால பூஜையில் இரத்தினசபாபதிக்கும் அபிஷேகம் வழிபாடு. மாசி, சித்திரை, ஆவணி, புரட்டாசி மாதங்களில் நடக்கும் நான்கு அபிஷேகங்கள் சிற்சபைக் கெதிரிலுள்ள கனகசபையில் நடைபெறும். 864—74, 2801—11 (ச2) ; 4376—96, 4928—47, 5229—49, 6244—64 (அ8) ; 8137—46 (சு). ஆ. 11 பதிகம். **123. கோலக்கா** (திருத்தாள முடையார் கோயில்) a சீகாழி ½ மைல். சம்பந்தர் கையினால் தாளம் போட்டுப் பாடும்போது இத்தலத்து ஈசன் ஐந்தெழுத்து வரையப் பெற்ற பொற்றாளங்கள் இரண்டை அவருக்குத் தந்தான். அம்பிகை தாளங்கட்கு ஓசை தந்தாள். 239—49 (ச); 7859—68 (சு). **124. கோவலூர் வீரட்டம்** (கீழூர்) c திருக்கோயிலூர் 1மைல். கல்வெட்டு தெஇக 3 (82)7 (857—935) பெண்ணையாற்றின்

தென்கரையிலுள்ளது. அந்தகாசுரனைச் சங்கரித்த வீரட்டம். மெய்ப்பொருள் நாயனார் அரசுபுரிந்து முத்தியடைந்த தலம். *2550—60 (ச) ; 4827—36 (அ).* **125. கோழம்பம்** a நாரசிங்கன்பேட்டை 2 மைல். *1601—11 (ச) ; 5869—79 (அ).* **126. கோளிலி** (திருக்குவளை) g திருநெல்லிக்காவல் 6 மைல். சப்தவிடங்களுள் இங்குள்ளவர் அவனிவிடங்கர், நடனம் பிருங்கநடனம். குண்டையூரிற் பெற்ற நெல்லைத் திருவாரூருக்கு எடுத்துச்செல்ல ஆள்வேண்டிப் பதிகம் பாடிச் சுந்தரர் பூதகணங்களால் ஆரூருக்குக் கொண்டுசேர்த்த அற்புதம் நிகழ்ந்த தலம். குண்டையூர் இங்கிருந்து சுமார் ¾ மைல் தொலைவிலுள்ளது. குண்டையூரிலிருந்து திருவாரூர் சுமார் 16 மைல் இருக்கும். *667—77 (ச) 5790—3809 (அ2) ; 7423—32 (சு)* ஆ 4 பதிகம். **127. சக்கரப்பள்ளி** a அய்யம்பேட்டை ½ மைல் *3085—95 (ச).* **128. சத்திமுத்தம்** (சத்தி முற்றம்) a தாராசுரம் 2 மைல். சத்தி சிவத்தை முத்தமிட்ட தலம். திருவடி தீக்ஷை இத்தலத்தில் விண்ணப்பித்த அப்பருக்கு (158) நல்லூரில் அது கிடைத்தது. *5091—5100 (அ).* **129. சாத்தமங்கை** (சீயாத்த மங்கை) g நன்னிலம் 7 மைல். பஸ்வழியில திருப்புகலூர் உளது. திருநீலநக்க நாயனார் தொண்டுபுரிந்த தலம். *3416, 26 (ச).* **130. சாய்க்காடு** (சாயாவனம்) a சீகாழி 9 மைல். f ஆக்கூர் 5மைல். திருவெண் காட்டிலிருந்து 1 மைல். *1873—83, 1906—16 (ச2) ; 4787—96, 7056—65 (அ2)* ஆ 4 பதிகம். **131. சிக்கல்** j சிக்கல் ¼ மைல். வெண்ணெய் லிங்கம் சிக்கிக்கொண்டதால் தலப்பெயர். கட்டுமலைக் கோயில். முருகப் பெருமான் பெயர்சிங்காரவேலர். ஸ்கந்தர்சஷ்டி விழாவில் 5ம் நாள் வேல் பெறுவதும் 6ம் நாள் மேஷவாகனத்தின் மீதேறிச் சூரனைச் சங்கரிப்பதும் மிகப் பிரபலமான உத்ஸவங்கள். *1547—57 (ச).* **132. சிராப்பள்ளி** (திரிச்சிராப்பள்ளி, திருச்சி) d திருச்சிடவுன் ½ மைல். கல்வெட்டுக்கள் 1888 (62—64) 1904 (411—14) 1905 (134)1938 (130—42) தெஇக 1 (33, 34) 12 (8,9) திரிசிரன் என்ற அரக்கன் வழிபட்டதாலும், ஆதிசேடனுக்கும் வரயுதேவனுக்கும் ஏற்பட்ட சச்சரவில் வாயு வன்மையால் திருக்கயிலாயத்திலிருந்து மூன்று துண்டுகளுள் ஒரு சிகரம் இங்கு வந்து மலையாயினமையாலும் தலப்பெயர் ஏற்பட்டதென்பது புராண வரலாறு. காளத்தி, சிராப்பள்ளி, திருக்கோணமலை ஆகிய மூன்றும் இதுபற்றித் தென்கயிலை யெனப்படும். இரத்தினாவதியென்ற வணிகப்பெண் பிரசவ சமயத்தில் தன் தாய் வருகையை எதிர்பார்த்தாள். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து தாயும் விரைந்து வரும்போது, காவிரியில் வெள்ளம் மிகுதியாயிருந்தது. ஆற்றுக்குப் பாலமில்லாத அக்காலத்தில், இரத்தினாவதியின் தாய் போலவே இறைவன்

வந்து உதவி செய்து காப்பாற்றினான். வெள்ளம் வடிந்த பிறகு உண்மைத் தாய் வந்தனள். அப்போதுதான் பிரசவ காலத்து உதவியவன் இத்தலத்து இறைவன் என்பது வெளியாயிற்று. இறைவனுக்குத் தாயுமானவன் என்ற பெயரும் வழங்கிற்று. இவ்வற்புதம் சித்திரைப் பெருவிழாவில் 5ம் நாளன்று காலை உத்ஸவத்தில் நடக்கிறது. திரிசிராப்பள்ளி மலை தரைமட்டத்தி லிருந்து 273 அடி உயரம், ஏறுதற்கு 417 படிகளுண்டு. மலைக் கோயிலுக்குமேல் உச்சிப்பிள்ளையார் கோயிலிருக்கிறது. அங்கிருந்து பார்த்தால் காவிரி, கொள்ளிடம், திருவானைக்கா, ஸ்ரீரங்கம் முதலியன காட்சிப் பெருவிருந்தளிக்கும். உச்சிப்பிள்ளையார் கோயில் போகும் வழியில் மஹேந்திர வர்ம பல்லவமன்னன் எடுப்பித்த குகைக்கோயிலுண்டு. மலைவலம் வரும் வழியிலும் ஒரு குகைக்கோயிலுண்டு. 300 ஆண்டுகட்கு முன்பிருந்த தாயுமான ஸ்வாமிகள் அவதரித்து, மூலன்மரபில் வரு மௌனகுருவினிடம் உபதேசம் பெற்று உருக்கமான பல பாடல்களை அருளிய தலம். இந்த மௌனகுரு இருந்த திருமடம் கோயிலுக்குச் செல்லும் படித் துறையில் உள்ளது. தலபுராணம் சைவ எல்லப்ப நாவலர் இயற்றியது. செவ்வந்திப் புராணம் என்ற பெயருடையது. 1058—68 (ச); 6068—71 (அ). **133. சிவபுரம்** a கும்பகோணம் 1½ மைல். திருமால் வராகவுருவிற் பூசித்ததை 223, 7109ம் பாசுரங்கள் கூறும். 217—27, 1207—17, 1348—58 (ச) 3 ; 7104—11 (அ). 4பதிகம். **134. சிறுகுடி** g பேரளம் 5 மைல். 3842—52 (ச). **135. சிற்றேமம்** (சிற்றாய்மூர், சிற்றாம்பூர் a ஆலத்தம்பாடி 4 மைல். 3244—54 ச. **136. சுழியல்** a மதுரை 24 மைல். மதுரையிலிருந்து அருப்புக்கோட்டை பஸ்மூலம் 17 மைல். அங்கிருந்து இத்தலம். m விருதுநகரில் இருந்து 19மைல் (அருப்புக் கோட்டைக்கு விருதுநகரிலிருந்து பஸ் 12 மைல். அங்கிருந்து மேற் கூறியபடி தலம் 7 மைல். 8056—65 (சு). **137. செங்காட்டங்குடி** (திருச்செங்காட்டங்குடி) g நன்னிலம் 6 மைல். வழியில் திருப்புகலூர், இராமனதீச்சரம், கண்ணபுரம் (விஷ்ணு ஸ்தலம்) உள்ளன. சிறுத்தொண்ட நாயனார் பிள்ளைக் கறியளித்த அற்புதத்தலம். இவ்வற்புதம் அமுது படையல் உத்ஸவம் என்று சித்திரை மாதம் பரணியன்று மிகப் பிரபலமாக நடக்கிறது. உத்தராபதி சுவாமி திருவெழுச்சி, அவர் தங்கியிருந்த திருஆத்திமரம் முதலியன காணலாம். சிறுத்தொண்டர் வாதாவிப் போர்வென்று கொணர்ந்த கணபதி பூசித்ததால் கோயிற் பெயர் கணபதீச்சரம் ஆயிற்று. 55—64, 656—66, 3471—80 (ச3) ; 7076—85 (அ). ஆ 4பதிகம். **138. செம்பொன் பள்ளி** (செம்பொனார் கோயில்) f செம்பொனார் கோயில் 261—71 (ச) ; 4442—51, 5585—94 (அ2).

**139. சேய்ஞலூர்** a *ஆடுதுறை 7 மைல். முருகப்பிரான் பூசித்த தலங்களுள் ஒன்று. சண்டேசுவர நாயனார் அவதரித்துப் பூசித்து முத்தி பெற்ற தலம். 515—25 (ச).* **140. சேறை** *(உடையார் கோயில்)* a *கும்பகோணம் 8 மைல். பஸ்வழி 3723—33 (ச) ; 4865—73, 5997—6006 (அ2).* **141. சோபுரம்** *(தியாகவல்லி)* a *ஆலப்பாக்கம் 2 மைல். உப்பங்கழியைப் படகேறிக் கடக்கவேண்டும். கோயில் மணல் மூடியிருந்து சென்ற நூற்றாண்டில் அகழ்ந்தெடுக்கப்பட்டது. 548—58 (ச).* **142. சோற்றுத் துறை** a *தஞ்சாவூர் 7½ மைல். கல்வெட்டு தெஇக 5 (610—21). சப்ஸ்தானத் தலங்களுள் ஒன்று 294—304 (ச) ; 4562—71; 4970—79, 5554—64, 6681—90 (அ4) ; 8178—87 (சு). ஆ. 6 பதிகம்.* **143. தண்டலைநீணெறி** *(தண்டலைச்சேரி)* g *திருத்துறைப்பூண்டி 2½ மைல். இத்தலத் திறைவனுக்கு நாடோறும் (½ மைல் தொலைவி லுள்ள) கணமங்கலத்திலிருந்து அரிவாட்டாய நாயனார் மாவடு செங்கீரை செந்நெல் அமுது முதலியன நிவேதித்து வர, ஒருநாள் அவை கமரில் வழுக்கிவிழத் தாம் கழுத்தையரிய முற்பட்டபோது, கமரில் இறைவன் கைதோன்றி அவர் கழுத்தை அரிவதைத் தடுத்து அவருக்கு முத்தியளித்த தலம். 3331—38 (ச).* **144. தருமபுரம்** h *காரைக்கால் 1 மைல். சம்பந்தர் யாழ்முரிப் பதிகம் பாடிய அற்புதத் தலம் 1459—69 (ச).* **145. தலச்சங்காடு** f *ஆக்கூர் 3 மைல். 2059—69 (ச).* **146. தலையாலங்காடு** j *கொரடாச்சேரி 6 மைல். 7028—37 (அ).* **147. திருந்துதேவன்குடி** a *திருவடமருதூர் 5 மைல். 3063—73 (ச).* **148. திலதைப்பதி** *(செதலைப்பதி, திலதர்ப்பணபுரி)* g *பூந்தோட்டம் 1½ மைல். 2747—57 (ச).* **149. திணைநகர் (தீர்த்தனகிரி)** a *ஆலப்பாக்கம் 5½ மைல். 7879—88 (சு).* **150. துருத்தி** *(குத்தாலம்)* a *குத்தாலம் ½மைல். இறைவன் கட்டளைப்படி இங்குள்ள குளத்தில் மூழ்கிய சுந்தரர், தமது உடலுறுபிணி நீங்கி மணி ஒளிசேர் திருமேனி ஆயினார். 2528—38, 3767—77 (ச2); 4572—81 (அ) ; 7402—11, 7975—84 (சு2). ஆ. 5 பதிகம்.* **151. துறையூர்** *(திறைத்துறையூர்)* a *திருத்துறையூர் 1½ மைல். சிவஞான சித்தியார் என்ற சிறந்த சாத்திரத்தின் ஆசிரியர் அருணந்தி சிவாசாரியர் ஸ்தலம். அவருடைய கோயிலும் இங்குளது. சுந்தரர் காலத்தில் இத்தலம் பெண்ணையாற்றின் வடக்கேயிருந்தது. இப்பழைய பெண்ணை யாறு இப்போது மலட்டாறு எனப்படுகின்றது. இப்போதுள்ள பெண்ணையாறு தலத்தின் வடக்கேயுள்ளது. தலம் இவ்விரண்டிற்கும் நடுவேயுள்ளது 7347—57 (சு). தூங்கானைமாடம்—பெண்ணா கடம் பார்க்க.* **152. தெங்கூர்** g *திருநெல்லிக்காவல் ½ மைல். 2475—85 (ச).* **153. தெளிச்சேரி** *(கோயில் பத்து)* h *காரைக்கால் ¾ மைல். சம்பந்தர்*

திருக்கூட்டத்தார் "பரசமய கோளரி வந்தார்" என்று விருது கூறிச் செல்வதைத் தடுத்த புத்தர்கள் தலையில் இடி விழும் படியாகத் திருமுறை எழுதும் தொண்டர் 3040ம் பாசுரம் ஓதியவுடன் அவ்வாறே இடிவிழுந்தது. பிறகு அவர்களுட் சிலரோடு வாதம் செய்து இத்தொண்டரே வென்றார். 1491—1501 (ச). **154. தென்குடித்திட்டை** a திட்டை 1 மைல். 3170—80 (ச). **155. தேவூர்** j கீவளூர் 2 மைல். கட்டுமலைக் கோயில் 2356—66, 3592—3602 (ச2). **156. நணா** (பவானி) q ஈரோட். 9 மைல். பவானியாறு காவிரியிற் கூடும் இடம். நல்ல இயற்கைக் காட்சி. ஜமக்காளத் தறிகள் மிகுதி. 2245—55 (4). **157. நல்லம்** (கோனேரி ராஜபுரம்) a ஆடுதுறை 5 மைல். கல்வெட்டுக்கள் தெஇக 3 (130, 146, 147, 151, 151a) 1908 (450) 1909 (622—662) திருவிசைப்பா பாடிய கண்டராதித்தர், அவர் தேவியாகிய செம்பியன் மஹாதேவியார் ஆகிய இருவர் திருவுருவும் தெஇக 3 (146, 147) என்ற கல்வெட்டுக் களின்கீழ் உள்ளது. 915—25 (ச); 5654—63 (அ). **158. நல்லூர்** a சுந்தரப் பெருமாள் கோயில் 2 மைல். கல்வெட்டு 1911 (40—62) தெஇக 3 6). அப்பருக்குத் திருவடி தீக்ஷை செய்ததலம். அமர் நீதி நாயனார் இறைவன் தந்த கோவணத்துக்குப் பதிலாகத் தாமும் புதல்வனும் மனைவியும் தராசேறிக் கோவணக் குவியலோடு அர்ப்பணம் செய்ததலம். இவ்விரண்டையும் 6380—90, 5107ம் பாசுரங்களில் அப்பர் முறையே கூறுகின்றார். அமர்நீதி நாயனார், இடுப்பிற் குழந்தையோடு மனைவியுருவங்கள் கற்சிலையிலும் செப்புத் திருமேனியிலம் உள்ளன. 926—36, 2081—91, 3690—3700 (ச3); 5101—5111, 6380—90 (அ2). **159. நல்லூர்ப் பெருமணம்** (ஆச்சாபுரம்) a கொள்ளிடம் 3 மைல். சம்பந்தர் திருக்கலியாணம் நடத்த தலம். சம்பந்தர் கலியாணத்திற்கு வந்தோர் அனைவருக்கும் கொள்ளை கொள வீடருளிய அற்புதத் தலம். திருநீலநக்கர், முருகநாயனார், நீலகண்ட யாழ்ப்பாணர், சிவபாத இருதயர், நம்பாண்டார் நம்பிகள், முத்துச் சிவிகை தாங்குவோர் முதலிய பரிசனங்கள், கலியாணம் காண வந்தோர் ஆண்பெண் அனைவரும் சோதியுட் சென்ற பின்பு, காதலியைக் கைப்பற்றிச் சம்பந்தர் சோதியுட்புக்கு ஒன்றி உடனாய் முத்திபெற்ற தலம். இதைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலிய பல பெரியார்கள் பாராட்டியுள்ளனர். இத்திருநாள் வைகாசி மூலம் தோறும் பிரபலமாக நடக்கிறது. 4137—47 (ச). **160. நள்ளாறு** h திருநளார் ½ மைல். சப்தவிடங்களுள் இங்கு நகவிடங்கர், உன்மத்த நடனம். மதுரையில் சம்பந்தர் அனல்வாதம் செய்தபோது, தமது தேவார ஏடுகளில் ஒன்றையெடுத்து அனலில் இடும்போது

இத்தலப் பதிகம் வரைந்த ஏடுகிடைத்தது. அனல் வாதத்தில் இந்த ஏடு எரியாமல் பச்சென்றிருந்த படியால் இப்பதிகம் (526—36) "பச்சைப்பதிகம்" எனப் பெயர் பெற்றது. நளன் பூசித்துக் கலி நீங்கப்பெற்ற தலம். கோயிலுக்குள் போகும் வாயிலின் ஒருபுறம் சனீச்சரன் உருவமுள்ளது. 12 ராசிகளுள் ஒன்றைவிட்டு மற்றொன்றிற்கு முன்னாகவோ அல்லது வக்ரமாகப் பின்னாகவோ பெயர்வது சனிப்பெயர்ச்சி யாகும். இந்தச் சனிப் பெயர்ச்சி விழா ஒவ்வொன்றும் இத்தலத்தில் மிகப் பிரபலம். பல்லாயிரக் கணக்கான மக்கள் நளதீர்த்தத்தில் எண்ணெய் முழுக்காடி, எள் மூட்டைக்கட்டி எண்ணெய் விளக்கேற்றி, "பகவான்" எனும் சனீச்சரனுக்கு அர்ச்சனை முதலியன செய்து வழிபடுகிறார்கள். "பகவான்" வெள்ளிக் காக்கை வாகனத்தில் வீதி வலம் வருதல் முதலியன நடைபெறும். 65—75, 526—36, 1819—29 3734—44 (ச4); 5908—17, 6444—53 (அ2) ; 7912—21 (சு). ஆ 7 பதிகம். **161. நறையூர்ச்சித்தீச்சரம்** a கும்பகோணம் 5 மைல். நாச்சியார்கோயில் போகும் பஸ்வழி. 305—15, 765—75, 2410—20 (ச3) ; 8167—77 (சு). ஆ 4 பதிகம். **162. நனிபள்ளி** (புஞ்சை) f செம்பொனார் கோயில் 2½ மைல். சம்பந்தர் தாயார் பிறந்த ஊர். சம்பந்தர் தமது அத்தர்பியல் மேலிருந்து (தந்தையார் இடுப்பில் தாங்கப்பெற்று) தம்மேல் ஆணை வைத்துப் பாடிய தலப்பதிகம் சிறப்புடைத்து. 2377—87 (ச) ; 4837—45 (அ) ; 8209—18 (சு). ஆ 3 பதிகம். **163. நன்னிலத்துப் பெருங்கோயில்** g நன்னிலம் 3 மைல். கோச்செங்கட் சோழன் எடுப்பித்த கட்டுமலைக் கோயில். 8219—29 (சு). **164. நாகேச்சரம்** (திருநாகேஸ்வரம்) a திருநாகேஸ்வரம் 1 மைல். சேக்கிழார் சுவாமிகள் பெரிதும் இத்தலத்தில் ஈடுபட்டனர். தாம் குன்றத்தூரிற் கட்டிய ஆலயத்திற்கும் திருநாகேஸ்வரம் என்றே பெயரிட்டனர். சந்திரன் சூரியன் ஐந்தலை நாகம் பூசித்ததை 5751ம் பாசுரம் கூறும். 1720—30, 2758—68 (ச2) ; 4797—4806, 5748—57, 6904—13, (அ3); 8230—49 (சு). ஆ 6 பதிகம். **165. நாகைக்காரோணம்** (நாகப்பட்டணம்) j நாகபட்டணம் ½ மைல். ஒரு ரிஷியைக் காயத்தோடு வானுலகுக்கு ஆரோஹணம் செய்யும் படி இறைவன் அருளியதால் காயாரோஹணம் என்பது மருவிக் காரோணம் எனத்தலப்பெயருட் சேர்ந்தது. அதிபத்த நாயனார் அவதரித்துப் பொன்மீனைச் சிவார்ப்பணம் செய்து முத்திபெற்ற தலம். சுந்தரர் பொன்பெற்ற தலங்களுள் ஒன்று. சப்த விடங்கங்களுள் இங்கு சுந்தர விடங்கர், பாராவாரதரங்க நடனம். 904—14, 2725—35 (ச2) ; 4846—54, 5151—59, 6048—57, 6464—74 (அ4) ; 7691—7701 (சு). ஆ 7 பதிகம். **166. நாட்டியத்தான்குடி** (திருநாட்டியத்தான் குடி) g

மாவூர்ரோட் ¾ மைல். கோட்புலிநாயனார் தொண்டு புரிந்த தலம். சிங்கடி, வனப்பகை என்ற தமது புதல்வியரைச் சுந்தரருக்கு அளித்து அவர்களை வாழ்க்கைத் துணைவியராக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிய கோட்புலியாருக்கு, அவர்களைத் தமது மக்களாக ஏற்று அருள் புரிந்து, தம்மை வனப்பகையப்பன், சிங்கடியப்பன் என்று சில பாசுரங்களிற் சுந்தரர் பாராட்டினார். 7370—79 (சு). **167. நாரையூர்** (திருநாரையூர்) a சிதம்பரம் 10 மைல். காட்டுமன்னார்குடி போகும் பஸ்வழி. நாரை வழிபட்ட தலம். கோயில் பூசகர் ஒரு நாள் வெளியூர் போக நேர்ந்தது. தமது இளம் புதல்வனைப் பூசிக்குமாறு சொல்லிச் சென்றார். புதல்வன் முதலில் விநாயகரைப் பூசித்து நிவேதனத்தை உட்கொள்ளுமாறு விண்ணப்பிக்க, விநாயகர் வழக்கம்போல் பேசாதிருந்தார். உடனே புதல்வன் தனது தலையைத் திருவடியில் மோதி வருந்த "நம்பி பொறு'' என்று விநாயகர் நிவேதனத்தை உட்கொண்டார். நம்பி ஆண்டார் நம்பிகளும் "இனி நான் பள்ளிக்குச் சென்றால் ஆசிரியர் அடிப்பார். தாங்களே எனக்குப் பாடம் சொல்லித் தரவேண்டும்'' என்று விண்ணப்பிக்க, விநாயகர் அன்ற முதல் நம்பியாண்டார் நம்பிகட்கு எல்லாக் கலைகளையும் கற்பித்தார். உளியினால் பொள்ளப்படாது சுயம்புவாகிய இவ்விநாயகருக்குப் பொல்லாப் பிள்ளையார் என்பது பெயர். (திருவெண்ணெய் நல்லூரிலுள்ள ஸ்தல விநாயகரும் இக்காரணம் பற்றியே பொல்லாப் பிள்ளையார் எனப்படுகிறார்.) முதல் ராஜராஜ சோழன் தேவாரத் திருமுறைகளைக் கண்டெடுக்க முயற்சித்து நம்பியாண்டார் நம்பிகள் பெருமையைக் கேள்வியுற்று நாறையூர் நாற்பாங் கெல்லையிலும் பத்துக்காதம் சுற்றளவிற்கு முப்பழம் நிரம்பி நம்பிகளை யணுகிப் பெல்லாப் பிள்ளையாருக்கு அவற்றை நிவேதித்தருள வேண்டினன். நம்பிகளும் நாற்சுத்தி செய்து நிவேதித்தனர். பிள்ளையார் துதிக்கை புறப்பட்டு எல்லாவற்றையும் எடுத்த உட்கொண்டது. அரசன் திருமுறைகளைக் கண்டெடுக்க உதவிபுரியுமாறு நம்பிகளை வேண்டினான். நம்பிகள் பொல்லாப் பிள்ளையார் அருளால் சிதம்பரத்தில் திருமுறை சேமித்திருந்த அறையைத் திறப்பித்து ஏடுகளை எடுத்துச் செல்லரித்தன போக எஞ்சியவற்றைத் தொகுத்துப் பண்முறை வகுத்துத் தேவாரத் திரு முறைகள் ஏழையும் கோவை செய்து, பிறகு 8, 9, 10ம் திருமுறை களையும் வகுத்தனர். ஏனைய விவரங்களைத் திருமுறை கண்ட புராணம் கூறும். இத்தலத்தில் நம்பியாண்டார் நம்பிகளுடைய செப்புத் திருமேனி மிகமிகக் கவர்ச்சியுடையது, 2399—2409, 3890—3900, 3945—55 (ச3) ; 5780—89, 6977—86 (அ2). ஆ 5 பதிகம்.

**168. நாலூர்மயானம்** a *கும்பகோணம் 8½ மைல். கொடவாசல் பஸ்வழி. 1960—70 (ச).* **169. நாவலூர்** *(திருநாம நல்லூர், திருநாவலூர்)* d *பரிக்கல் 2 மைல். கல்வெட்டுக்கள் 1902 (325—80) தெஇக 7 (954—1010).* சுந்தரமூர்த்தி சுவாமிகள் திரு அவதாரம் செய்து நரசிங்க முனையரையரால் வளர்க்கப் பெற்றதலம். "நாதனுக்கூர் நமக்கூர் நரசிங்கமுனையரையன், ஆதரித்தீசனுக்காட் செய்மூர் அணி நாவலூர்'' *(7401ம் பாசுரம்).* பழைய பல்லவச் சிற்பச் சிதைவுகள் பல கோயிலிலுண்டு. சுந்தரர், நரசிங்க முனையரையர் எழுந்தருளும் திருமேனிகள் கவர்ச்சியுடையன. *7391—7401 (சு).* **170. நின்றியூர்** a *ஆனதாண்டவபுரம் 2 மைல். திருமகள் பூசித்ததை 7893ம் பாசுரம் கூறும். 185—94 (ச) ; 5453—62 (அ) ; 7412—22, 7889—95 (சு2). ஆ 4 பதிகம்* **171. நீடூர்** a *நீடூர் 1 மைல். முனையடுவார் நாயனார் தொண்டு புரிந்த தலம். 6350—59 (அ) 7794—7804 (சு).* **172. நீலக்குடி** *(தென்னல் குடி)* a *ஆடுதுறை 2மைல். 5948—57 (அ)* **173. நெடுங்களம்**a *சோழகம்பட்டி 2 மைல். 559—69 (ச).* **174. நெய்த்தானம்** *(தில்லைஸ்தானம்)* a *தஞ்சாவூர் 10மைல். கல்வெட்டுக் கள் 1895 (24—52) 1911 (276—291) தெஇக 3 (89, 113, 127) 5 (580—609) சப்தஸ்தானத் தலங்களுள் ஒன்று. 152—62 (ச) ; 4522—31, 5011—20, 5565—74, 6651—70 (அ5). ஆ 6 பதிகம்.* **175. நெல்லிக்கா** *(திருநெல்லிக்காவல்)* g *திருநெல்லிக்காவல் ½ மைல்.* தீபாவளி முதல் 7 நாளும் மாசி 18ம் தேதிமுதல் 7 நாளும் அஸ்தமனத்தின் போது, சூரிய கிரணங்கள் மூலஸ்தான மூர்த்தி மேல் விழுகின்ற சூரிய பூஜைத்தலம். *1666—76 (ச).* **176. நெல்வாயில்** *(சிவபுரி)* a *சிதம்பரம் 3 மைல். 1742—52 (ச).* **177. நெல்வாயில் அரத்துறை** d *பெண்ணாடம் 4மைல்.* நிவா எனும் வெள்ளாற்றின் கரையில் உள்ளது. சம்பந்தருக்கு முத்துச்சிவிகை, குடை, சின்னங்கள் சிவ பெருமானால் தரப்பட்ட அற்புதத் தலம். *2442—52 (ச) ; 5250—59 (அ) ; 7246—55 (சு).* **178. நெல்வெண்ணெய்** *(நெய் வெணை)* d *உளுந்தூர்பேட்டை 4 மைல். 3831—41 (ச).* **179. நெல்வேலி** *(திரு நெல்வேலி)* m *திருநெல்வேலி டவுன் ½ மைல். கல்வெட்டுக்கள் 1894 (118—163) 1912 (15) 1927 (28—87) தெஇக 5 (407—455).* தாம்ர பரணி எனவழங்கும் தண்பொருநை ஆற்றங்கரையிலுள்ளது. ஆற்று வெள்ளச் சேதமின்றிச் சிவபெருமான் நிவேதனத்துக்குச் சேமிக்கப் பெற்ற நெற்களஞ்சியத்தை வேலிகட்டிக் காத்தமையால் நெல்வேலி ஆயிற்று. நடராஜர் 5 சபைகளுள் இங்குள்ளது தாம்பிரசபை எனும் செப்பறை. சுவாமி சந்நிதிக் கெதிரில் ஏழிசை ஒலி எழும்பும் கருங்கல் தூண்கள் உள்ளன. ஒரு சிறு குச்சியால் தட்டிக்

கேட்கலாம். அம்மை காந்திமதியின் திருவுருவம் அழகும் அருளும் நிரம்பியது. ஆற்றின் நடுவில் குறுக்குத்துறை முருகன் கோயில் சிறப்புடையது. "மதுத்திவலை **சிந்துபூந்துறை** கமழ் திருநெல்வேலி" என்று 3795ம் பாசுரத்திலுள்ளதை ஒட்டி ஆற்றங்கரையிலுள்ள ஒரு ஊர்ப்பகுதி **சிந்துபூந்துறை** என்று இன்றும் வழங்கப் பெறுகிறது. 3788—98 (ச). **180. பட்டீச்சரம்** a தாராசுரம் 2 மைல். சம்பந்தருக்கு முத்துப் பந்தர் கொடுத்தருளிய தலம். 3581—91 (ச). **181. பந்தணை நல்லூர்** a குத்தாலம் 6 மைல். 4101—10 (ச); 6340—49 (அ). **182. பயற்றூர்** (திருப்பயத்தங்குடி) g விற்குடி 4 மைல். 4472—81 (அ). **183. பரங்குன்றம்** (திருப்பரங் குன்றம்) m திருப்பரங்குன்றம் ½ மைல். மதுரையிலிருந்து பஸ் வழியாக 4 மைல் மிக வசதி. கல்வெட்டுக்கள் 1890 (49) 1908 (37, 333) 1917 (860, 861) 1918 (336—39) தெஇக 4 (372). கோயில் மலைச்சரிவில் உள்ளது. முருகப்பிரான், சிவப்பெருமான், திருமால் முதலியோர் மூலஸ்தானங்கள் இருக்கும் கோயிற் பகுதி அருமையான நுட்பம் செறிந்த சிற்பம் நிறைந்த குகைக்கோயில் (Cave temple carved out of rock in situ). நக்கீரதேவர் **திருமுருகாற்றுப் படை** விண்ணப்பித்துத் தம்மோடு 999 உயிர்களைக் காப்பாற்றிய அற்புதத்தலம். அவர் சிவபூசை செய்த சரவணப் பொய்கை கோயிலுக்கருகிலுள்ளது. முருகன் 6 படை வீடுகளுள் இதுவே முதலாவது. "**சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேல் சினமிகு முருகன் தண்பரங்குன்று**" (அகநானூறு—59), "**கொடி நுடங்கு மருங்கிற் கூடல்குடா அதுபல் பொறி மஞ்ஞைவெல் கொடி உயரிய ஓடியாவிழவின் நெடியோன் குன்றம்**" (அகநானூறு 152), "**ஒன்னாதார்கடந்தடூ. உம் உரவு நீர்மாகொன்ற வெல்வேலோன் குன்று**" (பாலைக்கலி 26) என்று சங்கநூல்களுள் இத்தலமும் முருகனும் குறிக்கப் பெறுதல் காண்க. இத்தலத்திலே முருகன் தெய்வயானை அம்மையாரைத் திருமணம் புரிந்தனன். இங்கு முருகனுக்கு உபய நாச்சியார் கிடையாது. தெய்வயானை அம்மையார் ஒருவரே இடது பக்கத்தில் நாச்சியாராக உள்ளனர். ஒவ்வொரு கிருத்திகையிலும் மக்கள் ஆயிரக்கணக்கில் வழிபடு கின்றனர். சுந்தரர் மூவேந்தரொடும் இத்தலத்தில் தரிசனம் செய்ததை 7245ம் பாசுரம் கூறும். 1080—90 (ச), 7235—45 (சு). **184. பராய்த்துறை** (திருப்பளாத்துறை) r திருப்பிராய்த்துறை ரோட் ஹால்ட். கல்வெட்டுக்கள் 1903 (244—290) 1907 (169—180) 1908 (562—86) தெஇக 3 (111, 112, 133, 150) 8 (545—599). அகண்ட காவிரிக்கரை யிலுள்ளது. 1448—58 (ச) ; 5523—33 (அ). **185. பரிதிநியமம்** (பரித்தியப்பார் கோயில்) j சாலியமங்கலம் 8 மைல். தஞ்சாவூரில் இருந்து பட்டுக்கோட்டை போகும் பஸ் வழியாக 10 மைல். 3912—

22 (ச). **186. பருப்பதம்** (ஸ்ரீசைலம்) சென்னையிலிருந்து t வழியாகக் குண்டக்கல் ஜங்ஷன் போய், வண்டிமாறி (u) வழியாக நந்தியால் ஸ்டேஷன் போய், அங்கிருந்து ஆத்மகூர் (30 மைல்) பஸ் ஏறிச் சென்று, பிறகு காட்டு வழியாக 20 மைல் டாக்ஸி மோடார் அல்லது மாட்டு வண்டி மூலம் சென்று பெத்தசெருவு என்ற ஏரிக்கரை சேர்ந்து, அங்கிருந்து 10 மைல் மலையேறிச் சென்றால் இத்தலத்தை யடையலாம். கல்வெட்டுக்கள் 1915 (10—52). "செல்லலுற அரியசிவன் சீபர்ப்பதமலை" (8035ம் பாசுரம்) என்ற படி மிகவும் கஷ்டமான வழி. மலையேறிச்செல்லும் வழி முழுமையும் வறட்சிமிக்க காடாகையால் மண்கூஜா நிறையத் தண்ணீர் கொண்டு போனால் அவ்வப்போது தாகம் தணியும். காய்ந்த மரங்கள் ஒன்றோடொன்று மோதி உராய்வதால் தீப்பற்றித் தீபமாமரங்களாக இரவில் இருளைப் போக்கும் (forest fires). சிவராத்திரி சமயம் போவது வசதி. மற்றக் காலங்களில் காட்டுவழி போதல் மிக ஆபத்து. கோயில் மிகப் பெரிது, விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவராயர் பல திருப்பணிகள் செய்த தலம். மக்கள் மலையேறிச் சென்றவுடன் நீராடாமல் மூலஸ்தானத் திலுள்ள சிவலிங்கத்தைத் தழுவித் தரிசிக்கின்றது **"தூளி தரிசனம்"** என்று சிறப்பாகக் கூறப்படுகிறது. திருநந்திதேவரே மலையாகப் பரமசிவனைத் தாங்குகிறார் என்று புராணம் கூறும். இத்தலத்தில் மூலஸ்தான இலிங்கத்தைத் தொட்டு அபிஷேகம் அர்ச்சனை முதலியன செய்து நாமே வழிபடலாம். கோயிலிலிருந்து 3 மைல் செங்குத்தான இறக்கப்படிகள் வழியிற்சென்றால் **கிருஷ்ணா நதி** சேரலாம். கற்பாறைகளின் வழியில் நதி ஓடுவதால் வெகு ஜாக்கிரதையாக ஸ்நானம் செய்யவேண்டும். கற்பிளவுகளும் முதலைகளும் ஆபத்தைத்தரும். பலர் இங்கு ஸ்நானம் செய்து நதி தீர்த்தம் கொண்டு வந்து கோயிலில் மூலஸ்தான மூர்த்திக்கு அபிஷேகம் செய்வதுண்டு. சுவாமி பெயர் மல்லிகார்சுனேசுவரர், தேவியார் பிரமராம்பிகை. இலிங்கம் தரித்த ஜங்கமர் பூஜையே கோயிலில் நடக்கிறது. காலரா முதலிய கொள்ளைநோய்கள் சிற்சில ஆண்டுகளில் பீடிப்பதால் தண்ணீரைக் காய்ச்சியே சமையலுக்கும் குடிப்பதற்கும் உபயோகிக்க வேண்டும். சிவராத்திரி முன்னாள் மாலை சென்று சிவராத்திரி மறுநாள் காலை திரும்பி விடுவதால் மிக நல்லது. அப்பர் சுவாமிகள் நேரிற் சென்று தரிசித்தார். சம்பந்தரும் சுந்தரரும் காளத்தியிலிருந்தே பதிகம் ஓதினார்கள். ஸ்ரீ சைலமலையின் உயரம் கடல் மட்டத்தின் மேல் 1563 அடி உயரம் என்று அரசாங்கத்தாரால் கூறப்பட்டுள்ளது. 1271—81 (ச) ; 4716—25 (அ); 8026—35 (சு). **187. பழனம்** a தஞ்சாவூர்

*10 மைல். கல்வெட்டுக்கள் 1895 (123—129) 1928 (134—191) தெஇக 5 (684—93) சப்தஸ்தான ஸ்தலங்களுள் ஒன்று. காவிரிக்கரையிலுள்ளது. ஐயாற்றிலிருந்து இத்தலம் போகும் வழியில் அப்பூதியடிகள் தொண்டு செய்த திங்களூர் உள்ளது. 722—32 (ச) ; 4272—81, 4512—21, 4991—5000, 5575—84, 6603—6612 (அ5) ஆ 6 பதிகம்.* **188. பழவூர்** d *கல்லகம் 4 மைல். 1830—40 (ச).* **189. பழையாறை வடதளி** a *தாராசுரம் 1½ மைல். அமர்நீதி நாயனார் வாழ்ந்த தலம். 5810—19 (அ).* **190. பள்ளியின் முக்கூடல்** *(திருப்பள்ளி முக்கூடல், அரிக்கரியான்பள்ளி)* g *விற்குடி 1½ மைல். 6934—43 (அ).* **191. பறியலூர்வீரட்டம்** *(பறசலூர்)* f *செம்பொனார்கோயில் 1½ மைல். தக்கன்வேள்வி தகர்த்த வீரட்டம். அவ்வேள்விக்கு வந்த வானோர் குற்றத்தைப் பறித்தமையால் பறியலூர் ஆயிற்று. 1437—47 (ச).* **192. பனங்காட்டூர்** *(வன்பார்த்தான் பனங்காட்டூர், திருப்பனங்காடு)* b *காஞ்சிபுரம் 9 மைல். பஸ் வழி. 8096—8105 (சு).* **193. பனந்தாள்** *(திருப்பனந்தாள்)* a *ஆடுதுறை 6 மைல். பஸ் வழி. தாடகையெனும் அசுரப்பெண் வழிபடும்போது அவள் உடை நெகிழ, அவள் கையிற் சேர்த்தணைத்து வழிபாட்டை விடாது செய்ய, மூலஸ்தான மூர்த்தி சாய்ந்து வழிபாட்டை ஏற்றனன். இதை நிமிர்த்த, மன்னன் யானைகளால் கயிறு சாத்தியிழுத்து முயன்றான். குங்குலியக்கலய நாயனார் தம் கழுத்திற் கயிறு சாத்தி அன்போடு இழுக்க, அன்புக்குச் சாய்ந்த பரமன் அன்புக்காக நிமிர்ந்தனன். குமரகுருபர சுவாமிகள் தாபித்த காசி மடத்தின் தலைமைத்தானம். 3460—70 (ச).* **194. பனையூர்** g *நன்னிலம் 1½ மைல். 393—403 (ச); 8106—8115 (சு).* **195. பாசூர்** *(திருப்பாச்சூர்)* q *திருவள்ளூர் 4½ மைல். 2113—23 (ச); 5473—83, 7066—75 (அ2).* **196. பாச்சிலாச்சிராமம்** *(திருவாசி)* d *பிக்ஷாண்டார் கோயில் 2½ மைல். கொல்லிமழவன் புதல்வியின் முயலகன் நோயைச் சம்பந்தர் தீர்த்த அற்புதத் தலம். இத்தலத்து நடராசர் ஊன்றிய திருவடியின் கீழ் முயலகனில்லை 470—80 (ச) ; 7358—69 (சு).* **197. பாண்டிக்கொடுமுடி** *(கொடுமுடி)* r *கொடுமுடி ¼ மைல். அகண்ட காவிரிக்கரையில் உள்ளது. 2211—21 (ச); 6033—37 (அ); 7712—21 (சு).* **198. பாதாளீச்சரம்** *(பாமணி)* k *மன்னார்குடி 1 மைல். 1163—73* **199. பாதிரிப்புலியூர்** *(திருப்பாப்புலியூர்)* a *திருப்பாபுலியூர். ¼ மைல். கல்வெட்டுக்கள் 1902 (115—135) தெஇக 7 (739—759). கடற்கரைத் தலம். கெடில நதியின் தென்கரையிலுள்ளது. புலிக்கால் முனிவர் (வியாக்ரபாதர்) பாதிரி மரத்தின் கீழிருந்த சிவலிங்கத்தைப் பூசித்தமையால் பாதிரிப்புலியூர் என்பது தலப் பெயர். மங்கணர் என்ற முனிவர், சாபத்தாற் பெற்ற முடக்கால் முயல் உருவிற்*

பூசித்து அவ்வுரு நீங்கப்பெற்ற வரலாற்றுக் குறிப்பை 2780ம் பாசுரம் கூறும். கல்லிற் பூட்டிக் கடலிற் பாய்ச்சப்பட்ட அப்பர் சுவாமிகள், அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு ஐந்தெழுத் தோதிக் கரையேறிய இத்தலத் தின் பகுதி கரையேறவிட்ட குப்பம் என வழங்கப்படுகிறது. 2780—90 (ச); 5071—80 (அ). **200.** பாம்புரம் (திருப்பாம்புரம்) g பேரளம் $4\frac{1}{2}$ மைல் 437—47 (ச). **201.** பாலைத் துறை a பாபநாசம் 1 மைல். 5737—47 (அ). **202.** பாற்றுறை d ஸ்ரீரங்கம் 5 மைல். 601—611 (ச). **203.** புகலூர் (திருப்புகலூர்) g நன்னிலம் 4 மைல். கல்வெட்டுக்கள் 1928 (42—108. கோயிலைச் சுற்றி நாற்புறமும் திருக்குளம் அகழ்போலுள்ளது. கோயிலுக்குப் போகமட்டும் ஒரு வழியுள்ளது. இறைவன் சிறிது சாய்ந்துள்ள படியால் கோணப்பிரான் என்று 5170ம் பாசுரம் கூறும். முருக நாயனார் நாடோறும் பூத்தொடுத்து இறைவனுக் கலங்கரித்துத் தொண்டாற்றியதை 2468ம் பாசுரம் கூறும்.. சுந்தரர் செங்கல்லைத் தலையணையாக வைத்து உறங்கும்போது அதைப் பொன்னாக்கி அவருக்களித்த அற்புதத் தலம். அப்பர் சுவாமிகள் முத்தி பெற்ற தலம். அவருக்குச் சித்திரைச் சதயத்தை முடிவாகக் கொண்ட 10 நாள் விழா நடக்கிறது. சூலைநோய் நீங்கியது முதல் முத்தி பெற்றது வரையுள்ள வரலாற்றுப் பகுதிகள் காட்டப்பெறு கின்றன. ஆனால் முத்தி பெறுகிற நிகழ்ச்சி பெரியபுராணத்திற்கு மாறான முறையிலுள்ளது. திருவதிகை முதலிய எல்லாத் தலங்களி லும் சோதியிற் கலத்தலே நிகழும். இத்தலத்தில் கோணப் பிரானைச் சந்தனத்தால் சிங்கமுகம்போல் அலங்கரித்து அப்பர் சுவாமிகளை எல்லா விளக்குகளையும் தீவத்திகளையும் அணைத்துவிட்டு ஒரே இருள் மயத்தில் சிங்கப்பிரானிடம் சேர்க்கிறார்கள். சேக்கிழார் "அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர சமர்ந்திருந்தார்" என்கிறார், சிங்கம் விழுங்கிற்றென்று கூறவில்லை. சைவப் பற்றுடைய பெரியார்கள் இத்தலத்தில் நடைபெறும் முறையை மாற்ற முயன்று வெற்றி பெறுதற்கு அப்பரே துணைசெய்வாராக. 12—22, 2714—24 (ச2) ; 4314—23, 4676—85, 5167—70, 5685—94, 7215—24 (அ5); 7564—74 (சு). ஆ 8 பதிகம். **204.** புகலூர்வர்த்தமானீச்சரம் இது மேலே கூறிய புகலூர்க்கோயிலில் கோணப்பிரான் சந்நிதியின் வடக்குப் பக்கத்திலுள்ளது. முருக நாயனார் திருவுருவம் இங்குளது. 2464—74 (ச). **205.** புத்தூர் (திருப்பத்தூர்) d காரைக்குடி 15 மைல். ஸ்டேஷனிலிருந்து 3 மைல் டவுன் பஸ் ஏறிப் போய், அங்கிருந்து 12 மைல் பஸ்மூலம் போகலாம். திருப்பத்தூர் பெரிய பஸ் ஜங்ஷன். பல திசைகளிலும் பஸ்வண்டிகள் போகும்— கல்வெட்டுக்கள் 1908 (89—140) 1924 (237) 1936 (163—191).

வைரவர் சந்நிதி சிறப்புடைத்து. 272—82 (ச); 6998—7007 (அ); **206. புள்ளமங்கை ஆலந்துறை** (பசுபதி கோயில்) a பசுபதி கோயில் ½ மைல். 163—73(ச). **207. புள்ளிருக்குவேளூர்** (வைத்தீஸ்வரன் கோயில்) a வைத்தீஸ்வரன் கோயில் 1 மைல். கல்வெட்டு 1918 (419—423). புள் (ஜடாயு, சம்பாதி) இருக்கு (ரிக்வேதம்) வேள் (முருகன்) பூசித்த தலம். இறைவன் வைத்திய நாதன் "தீராநோய் தீர்த்தருள வல்லான்" (6791ம் பாசுரம்) அம்பிகை தையல்நாயகியின் அருட் பார்வையிலிருப்பது சித்தாமிர தீர்த்தம். சிறப்பெல்லாம் செல்வ முத்துக்குமாரசுவாமி யெனும் முருகனுக்கே. கிருத்திகைதோறும் பகலில் மகாபிஷேகமும் இரவில் உத்ஸவமும் செல்வமுத்தையாவிற்குண்டு. அடியார்கள் ஆயிரக் கணக்கில் தரிசித்துச் சந்தனக் குழம்பு பெறுவர். நாடோறும் அர்த்தஜாம பூஜையில் முதலில் செல்ல முத்தையாவிற்குப் பால் நிவேதனம், நேத்திரப் பிடிசந்தன அர்ப்பணம் செய்தபிறகே, மற்ற மூர்த்திகட்கு வழிபாடு. பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாவில் வலத்தில் வைத்தியநாதர் நடுவில் செல்வமுத்துக் குமாரசுவாமி இடத்தில் தையல்நாயகி (சோமாஸ்கந்த அமைப்பு வரிசையில்) எழுந்தருளுவர். அங்காரக தோஷம் போக்கும் தலம். செவ்வாய்க் கிழமை தோறும் மேஷ வாகனத்தில் அங்காரகன் பிராகாரத்தில் வலம் வருவதுண்டு. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் குமரகுருபர சுவாமிகள் அருளியது. தலபுராணம் வடுகநாத தேசிகர் இயற்றியது. 1928—38 (ச) ; 6014—22, 6784—93 (அ2). **208. புறம்பயம்** (திருப்புறம்பியம்) a கும்பகோணம் 6 மைல். கல்வெட்டுக் கள் 1897 (69—80) 1927 (323.57) 1932 (146—161) தெஇக (18—30). இங்கு சங்ககாலத்தில் பாண்டியனுக்கும் சோழனுக்கும் போர் நடந்தது. கோச்செங்கட் சோழன் வெற்றி பெற்றுத் தென்னவனாய் உலகாண்டான். (7627ம் பாசுரம்) திருமருகல் வரலாற்றைப்போல் இங்கும் ஒரு வணிகப்பெண் திருமணத்தை மெய்ப்பிக்க இறைவன் சாக்ஷி சொல்லியதால் தலத்து இறைவனுக்குச் சாக்ஷிநாதேசுவரர் என்று பெயர். 1786—96 (ச) ; 6370—79 (அ) ; 7575—84 (சு). **209. புறவார் பனங்காட்டூர்** (பனையபுரம்) a முண்டியம் பாக்கம் 1 மைல். 2037—47 (ச). **210. புனவாயில்** (திருப்புனவாசல்) g அறந்தாங்கி 29 மைல். அறந்தாங்கியிலிருந்து 22 மைலிலுள்ள மீமிசல் போய், 7 மைல் மாட்டுவண்டியில் சென்றால் இத்தலம் சேரலாம். ஆடானை சென்று 12 மைல் போனாலும் இத்தலம் சேரலாம். கல்வெட்டு 1902 (612—616) தெஇக 8 (209—213) கடற்கரைத் தலம். மூலஸ்தான லிங்கம் மிகப்பெரிது. ஆவுடையாரைச் சுற்றியுடுத்த 30 முழம் நீளமுள்ள பரிவட்டம் தேவை. தஞ்சைப் பெரிய

கோயில் பிருஹதேசுவரர் நினைவு வரும். 2910—20 (ச) ; 7732—41 (சு). **211. புன்கூர்** (திருப்புன்கூர்) a வைத்தீஸ்வரன் கோயில் 2 மைல். திருநாளைப் போவாருக்குத் (திருக்கோயிலுள் ஆதி திராவிட மக்கள் சட்டப்படி உட்செல்லும் உரிமை பெறாத அக்காலத்துத்) தேர்நிலையிலிருந்தே இறைவன் காட்சியளிக்கத் திருநந்தி தேவரை விலகியிருக்கும்படி கட்டளையிட நந்தி தேவரும் அவ்வாறே விலகியிருக்கும் தலம். திருநாளைப் போவார் திருப்பணியாகக் கோயிலின் மேற்கில் நந்தன் குளம் உளது. ஏயர்கோன் கலிக்காம நாயனாரிடத்தில் 12 வேலி நிலங்கொண்டு மழை பெய்வித்ததை 7785ம் பாசுரம் கூறும். 283—93 (ச) ; 6350—59 (அ) ; 7784—93 (சு). **212. பூந்துருத்தி** (திருப்பூந்துருத்தி) a தஞ்சாவூர் 8 மைல். கல்வெட்டு 1894 (166) 1931 (75—120) தெஇக 5 (459). சப்தஸ்தான ஸ்தலங்களுள் ஒன்று அப்பர் சுவாமிகள் இங்கு திருமடம் அமைத்துப் பல பொதுப்பதிகங்கள் அருளினர். அத்திருமடச் சிதைவு இன்றுமுளது. பாண்டிநாட்டில் சைவம் பரப்பித் திரும்பும் வழியில் சம்பந்தர் அப்பரைக் காண இத்தலத்திற்கருகில் வரும்போது, ஒருவரும் காணாதபடி, முத்துச் சிவிகையைத் தாங்கும் தொண்டர்களோடு அப்பர் உள்நுழைந்து தாங்கி வந்தனர். இதை யறிந்தவுடன் சம்பந்தர் கீழ் இழிந்து ஒருவரை ஒருவர் வணங்கி அளவளாவினர். 5001—10, 5544—53, 6671—80 (அ3). **213. பூவணம்** (திருப்பூவணம்) a திருப்புவனம் ½ மைல். வைகையாற்றங் கரையிலுள்ளது. தமிழ் வேந்தர் மூவரும் வழிபட்ட தலம். 690—700. 3009—19 (ச2) ; 6422—32 (அ); 7328—85 (சு). **214. பூவனூர்** j நீடாமங்கலம் 4 மைல். 5800—90 (அ). **215. பெண்ணாகடம்** (பெண்ணாகடம்) a பெண்ணாடம் 1 மைல். தலப்பெயர் சுருக்கமாகக் **கடந்தை** என்றும் ஆலயப் பெயர் தூங்கானை மாடம் என்றும் வழங்கும். கலிக்கம்ப நாயனார் தலம். அப்பர் சுவாமிகள் தம்மைச் சிவன் சொத்து என்று உலகம் அறியச் சூல முத்திரையும் இடபமுத்திரையும் தமது தூல உடலிற் பொறிக்கும் படி வேண்டி அவ்வாறே பெற்ற அற்புதத் தலம். அச்சுத களப்பாளர் என்ற வேளாளர், திருவெண்காட்டு முக்குள நீராடி வழிபாடு செய்து **மெய்கண்டார்** என்ற புதல்வரைப் பெற்ற தலம். மெய்கண்டார் **சிவஞானபோதம்** அருளிச் செய்து, திருக்கைலாய பரம்பரையைத் தமிழ் நாட்டில் தாபித்த சந்தான முதற்குரவர். 634—44 (ச); 5186—88 (அ) **216. பெரும்புலியூர்** a தஞ்சாவூர் 11 மைல். திருவையாற்றிலிருந்து 2 மைல். 2189—99 (ச). **217. பெருவேளூர்** (காட்டூர் ஐயம்பேட்டை) j கொரடாச்சேரி 8½ மைல். 3481—91 (ச) ; 4736—45 (அ). **218. பேணுபெருந்துறை** (திருப்பந்துறை) a கும்பகோணம் 6 மைல். பஸ்வழி 448—58 (ச).

**219. பேரெயில்** *(ஓகைப்பேரையூர்)* j குழிக்கரை *3 மைல். 5380—90 (அ).* **220. பைஞ்ஞீலி** d *பிக்ஷாண்டார் கோயில் 3 மைல். அப்பர் சுவாமிகட்கு இறைவன் கட்டமுது கொடுத்த அற்புதத்தலம். 2943—53 (ச); 5634—43 (அ); 7585—95 (சு). ஆ 3 பதிகம்.* **221. மங்கலக்குடி** *(சூரியனார் கோயில்)* a *ஆடுதுறை* $1^1/_2$ *மைல். சூரியன், திருமால், பிரமன், காளி, அகத்திய முனி பூசித்த தலம். (4960ம் பாசுரம்) 1569—79 (ச); 5958—67 (அ).* **222. மணஞ்சேரி** *(கீழைத் திருமணஞ் சேரி)* a *குத்தாலம் 3 மைல். 1634—44 (ச) 6082—91 (அ).* **223. மண்ணிப்படிக்கரை** *(இலுப்பப்பட்டு)* a *வைத்தீஸ்வரன் கோயில் 9 மைல். 7443—52 (சு).* **224. மயிலாடுதுறை** *(மாயவரம்)* f *மாயவரம் டவுன்* $^1/_4$ *மைல். மாயவரம் ஜங்ஷனிலிருந்தும் பஸ்மூலம் போகலாம். உமையம்மை மயில் உருவில் இறைவனை வழிபட்ட தலம். காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. ஐப்பசி மாதம் முழுமையும் இங்கு காவிரியில் துலாஸ்நானம் விசேஷம், ஐப்பசி கடைசி நாளன்று கடைமுழுக்கு மிகப் பிரபலம். கார்த்திகை முதல் தேதியன்று முடவன் முழுக்கு ; 404—414. 3548—58 (ச2) ; 5614—24 (அ).* **225. மயிலை** *(மயிலாப்பூர்)* a *சென்னப்பட்டணம் எழும்பூர் 4 மைல்.* (q, s, t, v) *மதராஸ் சென்ட்ரல் ஸ்டேஷன் 4 மைல். கல்வெட்டு 215—223/1923. உமாதேவியார் மயிலுருவில் சிவபெருமானைப் பூசித்துத் தமது சுயரூபம் பெற்று இறைவனைத் திருமணம் செய்துகொண்ட தலம். கோயிற் பெயர் கபாலீச்சரம்.* **"மடமயிலைக்கட்டு இட்டம் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்''** *என்று 1971ம் பாசுரம் கூறும். பழைய காலத்தில் திருக்கோயில் கடற்கரை யோரத்தில் (இப்போது* Santhome Cathedral *எனும்) கிறிஸ்தவர்கள் கோயிலுள்ள இடத்திலிருந்தது கி.பி. 16ம் நூற்றாண்டில் போர்த்துக்கேசியர்கள் கைப்பற்றிக் கோயிலைத் தகர்த்து அங்கு ஒரு கோட்டை கட்டினர். அக் கோட்டையிலிருந்த கொடி மரச்சிதைவு இன்றும் காணப்படுகிறது. மேலே குறித்துள்ள கல்வெட்டறிக்கையிற் பார்த்தால், இப்பழைய கோயிற் கற்கள் இப்போது இக்கிறிஸ்தவர் கோயிலின் பக்கத்தி லுள்ள பிஷப் உறைவிடத்திலுள்ளன என்பது விளங்கும். பழைய கோயில் கடற்கரையில் (இப்போது திருச்செந்தூர்க் கோயிலுள்ளது போல) மதிற் சுவர்களில் அலைவீச இருந்தது.* **"ஊர் திரை வேலை உலாவும் உயர்மயிலை''** *என்று 1974ம் பாசுரத்திலுள்ள குறிப்பால் அறியப்படும். இத்தலத்திலிருந்த சிவநேசர் எனும் வணிகர் தமது ஒரே புதல்வியாகிய பூம்பாவையைத் திருஞான சம்பந்தருக்கே அர்ப்பணம் செய்வதாக உறுதிகொண்டு வளர்த்து வந்தனர். பூம்பாவை பாம்புகடித் திறந்தாள். ஈமக்கடன் முடித்து*

என்புகளைக் குடத்தில் சேமித்துக் கன்னி மாடத்தில் பூசித்து வந்தார். சம்பந்தர் திருவொற்றியூரிலிருக்கும்போது, அங்கிருந்து மயிலாப்பூர் வரையில் (10 மைல்) "துன்னுநீள் நடைக்காவணம் துகில் விதானித்து'', "மகரதோரணம் வண்குலைக் கமுகொடு கதலி, நிகரில் பல்கொடித் தாமங்கள் அணிபெற நிரைத்து'' ஞானசம்பந்தப் பெருமானை மயிலைக்கு வரவேற்றார். மயிலை யில் தரிசனம் முடிந்தவுடன் சிவநேசர் பூம்பாவை வரலாற்றைச் சொல்லக் கேட்டு, என்புக்குடத்தை இறைவன் சந்நிதிக் கெதிரில் கோபுர வாயிலுக்கு வெளியில் வைக்கச் சொல்லி, "மட்டிட்ட'' என்று தொடங்கும் பதிகம் பாடி, ஒவ்வொரு பாசுரத்தின் இறுதியிலும் "போதியோ பூம்பாவாய்'' என்று உருக்கத்தோடு சம்பந்தர் செப்பினார், "போதியோ என்னும் அன்னமெய்த் திருவாக்கெனும் அமுதம் அவ்வங்கம் துன்னவந்து வந்துருவமாய்த் தொக்கதக் குடத்துள்'' "உரிஞ்சாய'' எனத் தொடங்கும் 10ம் பாசுரமாகிய சமண்பாட்டில், என்புக் குடத்தை உடைத்துக் கொண்டு பூம்பாவை உயிரோடு வெளிவந்தனள். என்பு (=அங்கம்) பெண்ணுருவான படியால் பூம்பாவைக்கு அங்கம்பூம்பாவை என்பது பெயராயிற்று. அங்கம்பூம்பாவையின் பேரழகைச் சேக்கிழார் 15 பாடல்களில் வருணிக்கிறார். சிவநேசர் அங்கம் பூவையைத் திருமணம் செய்து கொள்ளுமாறு சம்பந்தரை வேண்டுதலும் "நீர் பெற்ற பெண்விடத்தினால் வீந்த பின்னை யான் கற்றைவார் சடையவர் கருணை காண்வர உற்பவிப்பித்த லால் உரை தகாதென'' மறுமொழி கூறினார் காழிவேந்தர். இத் தலப் பதிகத்தில் பாசுரந்தோறும் ஒவ்வொரு விழா குறிக்கப் பெறுகிறது. பங்குனிப் பெருவிழாவில் 3ம் நாள் காலை வெள்ளி அதிகார நந்திசேவை, 5ம் நாள் இரவு விருஷபோத்ஸவம், 8ம் நாள் மாலை வெள்ளி விமானத்தில் அறுபத்துமூன்று நாயன்மார்க ளோடு, திவ்விய சேவை, எலும்பைப் பெண்ணாக்கும் ஐதீகம், 10ம் நாள் புன்னை மரத்தடியில் உமையம்மை மயிலுருவாகப் பூசித்துச் சுயரூபம் பெற்று இறைவனைப் திருமணம் புரிதல் முதலியன மிகப் பிரபலமாக நடைபெறும். வாயிலார் நாயனார் மௌன விரதம் பூண்டு அகப்பூசை செய்து முத்தி பெற்ற தலம். மூலஸ் தான முருகப்பிரான் ஆறுமுகங்களோடு விளங்குகிறான். திருக் கொடி யேற்றமாகி, ஸ்கந்தர் ஷஷ்டி விழா 6 நாள் நடக்கிறது. 6ம் நாள் மாலை சூரசம்ஹாரம், அடுத்த நாள் திருக்கலியாணம். உலகப் பொதுமறையாகிய **திருக்குறள்** ஆசிரியர் திருவள்ளுவ நாயனார் வாழ்ந்த தலம். அவர் திருக்கோயில் கபாலீச்சரத்தின் வடக்கில் ½ மைல் தொலைவிலுள்ளது. 1971—81 (ச) **226. மயேந்திரப்**

**பள்ளி** *(கோயிலடிப்பாளையம்)* a *கொள்ளிடம் 7 மைல். 3129—39, 3967—77(ச2).* **227. மருகல்** *(திருமருகல்)* g *நன்னிலம் 7 மைல். விஷம் தீண்டிய செட்டிப் பிள்ளையை உயிர்ப்பித்து, அவனுடன் வந்த பெண்ணை அவனுக்குத் திருஞானசம்பந்தர் திருமணம் செய்வித்த அற்புதத் தலம். 55—64, 1655—65 (ச2) ; 6092—6101 (அ).* **228. மழபாடி** *(திருமழுவாடி)* d *புள்ளம்பாடி 10 மைல். திருவையாற்றிலிருந்து 4 மைல். (கொள்ளிட நதியைக் கடக்க வேண்டும்). தெஇக 3 (79) 5 (627—660). திருமால் வழிபட்டதை 3101—ம் பாசுரம் கூறும். பங்குனி உத்திரத்தில் திருநந்தி தேவர் திருக்கலியாணத்தைத் திருவையாற்றி லிருந்து ஐயாற்றப்பர் எழுந்தருளி வந்து நடத்தி வைக்கிறார். திருநந்தி தேவரும் அவர் தேவியாரும் வெட்டிவேர்ச் சிவிகையில் முன்செல்லப் பின்னணியில் ஐயாற்றப்பரும் அறம் வளர்த்த நாயகி யும் அழகிய கண்ணாடிச் சிவிகையில் எழிந்தருளி ஏழூர் வலம் வருவதுதான் பிரபலமான சப்தஸ்தான மஹோத்ஸவம். 1558—68, 3096—3106, 3309—19, (ச3); 6634—50(அ2); 7463—77 (சு). ஆ 6 பதிகம்.* **229. மறைக்காடு** *(வேதாரண்யம்) வேதாரண்யம் ½ மைல். கல்வெட்டு 1904 (415—503), சப்தவிடங்களுள் ஒன்று. புவனி விடங்கர், ஹம்ஸபாத நடனம், வேதங்கள் பூசித்து மூடிவிட்டுப் போயிருந்த கதவுகளைப் பதிகம் பாடி அப்பர் திறக்கவும் சம்பந்தர் மூடவும் செய்த அற்புதத் தலம். தமிழ் மொழியிலுள்ள தேவாரம் வடமொழி வேதத்திற்குத் தாழ்ந்ததல்ல என்பதைக் கட்புலனாக உலகுக்கு அறிவித்தது இவ்வற்புதம். பாண்டி நாட்டுக்குக் கெழுந் தருளும்படி, சம்பந்தருக்கு அழைப்பு இத்தலத்திலிருக்கும் போது வந்தது. கோயிலில் உள்ள விளக்கு ஒன்றைத் தனது மூக்கினால் தூண்டிய எலி, அப்புண்ணியத்தின் பயனாக மறுபிறவியில் மாவலி சக்கரவர்த்தியான வரலாற்றை 4641ம் பாசுரங் கூறும். மேலைக் கோபுரவாயிலெதிரிலுள்ள விநாயகர் சந்நிதி பிரபலம். 228—38, 1862—72, 2453—63, 3614—23 (ச4); 4482—4501, 5312—31, 6475—84(அ5); 7943—52(சு). ஆ 10 பதிகம்.* **230. மாகறல்** *(மாகறல்)* b *காஞ்சிபுரம் 10 மைல். பஸ் வழி. 3570—80 (ச).* **231. மாணிகுழி** *(திருமாணி குழி)* a *கடலூர் என்—டி. 3½ மைல். கல்வெட்டுக்கள் 1902 (148—170) தெஇக 3 (85) 7 (772—797) போகும் வழியில் திருவஹீந்திரபுரம் என்ற விஷ்ணுஸ்தலம் உள்ளது. திருமால் வாமனாவதாரத்தில் (=மாணி) பூசித்ததை 3627ம் பாசுர்ம் கூறும். 3624—34 (ச)* **232. மாந்துறை** *(வடகரை மாந்துறை)* d *லால்குடி 2 மைல். 2659—69 (ச).* **233. மாற்பேறு** *(திருமால்பூர்)* b *திருமால்பூர் 3 மைல். திருமால் சக்ராயுதம் வேண்டிச் சிவனை வழிபட்டுப் பெற்றதை 5820ம் பாசுரம் கூறும். 591—600, 1228—37 (ச2) 5184—85, 5820—37, 7038—*

47.(அ4) ஆ 6 பதிகம். **234. மீயச்சூர்** g பேரளம் ½ மைல். தேவியார் திருவுருவம் அமர்ந்ததிருக்கோலமாய் மிகஅழகு நிரம்பியது. 2135—45 (ச). **235. மீயச்சூர் இளங்கோயில்** (இது 234 மீயச்சூர் கோயிலின் பிரகாரத்திலுள்ளது.) இளங்கோயில் என்பதை பாலாலயம் என்று வடமொழியிற் கூறுவர். கோயில் திருப்பணி நடைபெறுங் காலத்தில் மூலஸ்தான மூர்த்தியைக் கலாகர்ஷணம் செய்து ஒருபாலாலயத்தில் வேறொரு மூர்த்தியில் ஆவாஹனம் செய்து பூசிப்பது ஆகமமுறை. அப்பர் சுவாமிகள் இத்தலம் சென்ற காலத்தில் திருப்பணி நடந்தது போலும். அவர் திருவாக்கில் மீயச்சூருக்குப் பதிகமிராமல் இளங்கோயிலுக்கே பதிகம் இருப்பதும், இப்பதிகத்திலும் "தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்'' என்ற குறிப்பிருப்பதும், சம்பந்தர் திருவாக்கில் இளங்கோயிலுக்கில்லாதிருப்பதும் மீயச்சூருக்கே பதிகமிருப்பதும், மேற்கூறிய உண்மையை வலியுறுத்தும். 5332—41 (அ). **236. முண்டீச்சரம்** (கிராமம்) d திருவெண்ணெய் நல்லூர் ரோட் ¾ மைல். பஸ்வழி. 7086—94 (அ). **237. முதுகுன்றம்** (விருத்தாசலம்) d விருத்தாசலம் டவுன் ரோட் ஹால்ட் ½ மைல். கோயில் சில அடிகளே உயரமுள்ள ஒரு சிறு கற்பாறையின் மேலுள்ளது. இதற்கே விருத்தாசலம் அல்லது பழமலை என்று பெயர். ஸ்தலவிநாயகர் (ஆழத்துப் பிள்ளையார்) பல படிகள் இறங்கிச் சென்று சேரும் பள்ளமான இடத்திலுள்ளார். இங்கிருந்து தண்ணீர் வெளியே செல்ல வழியிருப்பதால், பழமலையின் உயரத்தை ஊகிக்கலாம். கோயிலுக்கெதிரில் மணிமுத்தாறு. சுந்தரர் இத்தலத்தில் பதிகம்பாடி 12000 பொன்பெற்று இந்த ஆற்றிலிட்டு ஆரூரில் குளத்தில் எடுத்தார். காசியில் இறந்தால் முத்தி என்பது போல் இத்தலத்தில் இறந்தால் சாரூப பதமுத்தி கிடைக்கும் என்று கந்தபுராணம் கூறுகின்றது. (வழிநடைப்பலம் காண்க). திருமால், பிரமன், இந்திரன், சூரியன் பூசித்ததை 7478ம் பாசுரம் கூறும். துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலிய பல பெரியார்கள் இத்தலத்தில் பெரிதும் ஈடுபட்டவர்கள். மாசிமகத்தைத் தீர்த்தமாகக் கொண்ட 10 நாள் விழாவில் 6ம் நாள் பகலில் ரிஷபோத்ஸவம் பிரபலம். காசியிலும் வீசம் பெரியதால் விருத்தகாசி என இத்தலம் கூறப்படுதுண்டு. 119—129, 570—79, 1003—13, 1405—15, 2157—66, 3159—69, 3864—71 (ச7); 6924—33(அ); 7473—82, 7659—69, 7869—78 (சு3) ஆ 11பதிகம். கல்வெட்டுக்கள் 1900 (132—140) 1918 (39—92) 1935 (94—102) தெஇக 7 (145—153) 12 (118, 121, 123, 124, 131, 144, 167, 192, 227, 239, 260, 263) **238. முருகன் பூண்டி** (திருமுருகன் பூண்டி) q திருப்பூர் 5 மைல். பஸ்வழி. கல்வெட்டுக்கள் 1893 (571.579) 1915 சேரமான் பெருமாள் நாயனார்

சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் கொடுத்த பெரும்பொருளைச் சிவ பெருமான் வடுகவேடுவர் உருவில் பூதகணங்களை விட்டுக் கொள்ளையடிக்கச் செய்து, பிறகு சுந்தரர் பதிகத்தைப் பெற்று அப்பொருளைத் திரும்பக் கொடுத்த அற்புதம் நிகழ்ந்ததலம். "பொருவிடையார் நம்பிக்குத் தாமே பொன் கொடுப்பதலால் ஒருவர் கொடுப்பக் கொள்ள ஒண்ணாமைக்கது வாங்கிப் பெருகருளால் தாம் கொடுக்கப் பெறுவதற்கோ'' என்று இதனைச் சேக்கிழார் நயம்பெறக் கூறுகிறார். *7722—31 (சு).* **239. முல்லைவாயில்(தென்)** a *சீகாழி 8 மைல். கடற்கரைத்தலம் 2421—31 (ச).* **240. முல்லைவாயில்(வட)** q *அம்பத்தூர் 3 மைல். கல்வெட்டுக்கள் 1904 (662—684) தெஇக. 3 (141, 196) பழங்காலத்தில் இத்தலம் முல்லைக்காடாயிருந்தது. தொண்டை நாட்டு மன்னன் ஒருவன் வேட்டையாடி வரும்போது, அவனுடைய யானையின் காலில் முல்லைக்கொடி சிக்கிக் கொள்ளவே, யானை நின்று விட்டது. மன்னன் கீழே இறங்கி முல்லைக் கொடியை வெட்டும்போது, அங்கிருந்து இரத்தம் வெளிப்பட்டது. அகழ்ந்து பார்க்கும்போது, ஒரு சிவலிங்கம் காட்சியளித்து வெட்டுண்ட இடமும் தெரிந்தது. உடனே மன்னன் காட்டை யழித்துக் கோயிலமைத்தான். இப்போதுள்ள மூலஸ்தான மூர்த்தியின் சிரசில் வெட்டுக்குறி இன்றுமுளது. இம்மூர்த்திக்கு வெந்நீரிலே அபிஷேகம். இவ் வரலாற்றை 7931ம் பாசுரம் கூறும். தலத்திறைவன் பெயர்* **மாசிலாமணி** *என்பதை 7926ம் பாசுரம் கூறும். சந்நிதியில் இரண்டு பருத்த எருக்கமரத்தூண்கள் உண்டு. பிரஹ்ம ஸூத்திரங்கட்குச் சிவாத்துவித முறையில் பாஷ்யம் இயற்றிய நீலகண்ட சிவாசாரியார் கற்சிலையுருவம் இக்கோயிலில் வழிபடப் பெறுகின்றது. இத்தலத் தருகில் பெரிய மணல் வெளியுண்டு. பாலாற்றின் கிளையொன்று பழைய காலத்தில் இவ்வழிச் சென்று வறண்டதென்பது 7926ம் பாசுரத்தாலறியப்படும். கண்பார்வை இழந்த பிறகு சுந்தரர் முதன் முதலாக வணங்கிய தலம் இஃதே யாம். "படுதுயர் களையாய் பாசுபதாபரஞ்சுடரே'' என்று ஒவ்வொரு பாசுரத்திலும் விண்ணப்பிக்கிறார். 7922—32(சு).* **241. முக்கீச்சரம்** *(உறையூர்)* r *திருச்சி கோட்டை 1 மைல். சோழ மன்னன் ஏறிச் செல்லும் யானையின் தலையை ஒரு கோழி கொத்தியதால் அம்மன்னன் இவ்விடத்தில் தலை நகரமைத்துக் "கோழி'' என்றே பெயரிட்டான். அரசன் உறைவிடம் உறை யூராயிற்று. சங்க காலத்திய வரலாற்றுத் தொடர்புடைய பழம்பதி. 2769—79 (ச).* **242. வக்கரை** *(திருவக்கரை)* a *மயிலம் 12 மைல். மயிலம் தலத்திற்குப்போய் அங்கிருந்து புதுச்சேரி செல்லும்*

வழியில் 4 மைல் போய்ப் பிறகு எரையூர், நெமிலி வழியாக 5 மைல் போனால் தலத்தை யடையலாம். வக்கரையிலுள்ள கருங் கற்கள் மரங்களைப் போல் தோன்றும். கல்வெட்டுக்கள் 1904 (1904 (166—208) தெஇக 12 (246). மூலஸ்தான லிங்கம் மூன்று முகமுடை யது. நடராஜர் வக்ரதாண்டவமூர்த்தி. 3438—48 (ச). **243. வடுகூர்** c (ஆண்டார்கோயில்) சின்னபாபு சமுத்திரம் 2 மைல். 937—47 (ச). **244. வலஞ்சுழி** (திருவலஞ்சுழி) a சுவாமி மலை ½ மைல். கல்வெட்டுக்கள் 1902— (618—634) 1928 (192—213) தெஇக 8 (215—238) 12 (223, 224). வெள்ளைப் பிள்ளையார் சந்நிதி மிகப்பிரபலம் 1480—90, 2616—26, 3934—44 (ச3); 5891—5900, 6966—76 (அ3); ஆ 6 பதிகம். **245. வலம்புரம்** (பெரும் பள்ளம்) a சீகாழி 8½ மைல். 3901—3911 (ச). 4686—95, 6824—33 (அ2); 7953—63 (சு). ஆ 4 பதிகம். **246. வலிதாயம்** (பாடி) q வில்லிவாக்கம் 2 மைல். 23—33 (ச). **247. வலிவலம்** g மாவூர் ரோட் 5½ மைல். கட்டுமலைக் கோயில், சுற்றிலும் அகழ் 537—47, 1326—36 (ச2); 6722—31 (அ); 7901—7911 (சு). ஆ 4 பதிகம். **248. வல்லம்** (திருவலம்) திருவலம் 1½ மைல். கல்வெட்டுக்கள் 1889 (75—82) 1890 (1—18) 1894 (190) 1897 (298—304) 1898 (149, 150) 1921 (208—240) தெஇக 3 (42—63) 4 (304—311, 323—341) 5 (489) 7 (82, 83) நிவா நதிக்கரையிலுள்ளது. (இத்தலத்திலிருந்து 8 மைல் சென்றால் வள்ளிமலை எனும் முருகன் தலம் உளது. தினைப்புனம், நீராடிய சுனை முதலியன உள்ளன. 1218—27 (ச) ; (வன்பார்த்தான் பனங்காட்டூர் 192 பனங்காட்டூர் பார்க்க). **249. வன்னியூர்** g பூந்தோட்டம் 7மைல். வன்னி (=அக்கினி) பூசித்த தலம் 5484—92 (அ). **250. வாஞ்சியம்** (ஸ்ரீ வாஞ்சியம்) g நன்னிலம் 6மைல். திருமால் ஸ்ரீ எனும் இலக்குமியை வாஞ்சித்துச் சிவபூசை செய்து பெற்றமையால் ஸ்ரீ வாஞ்சியம் ஆயிற்று. காசிக்கு நிகர் எனப்படும் தலங்களுள் ஒன்று. 1536—46 (ச); 5901—07 (அ); 7995—8004 (சு).ஆ 3 பதிகம். **251. வாட்போக்கி** (ரத்னகிரி) r குழித்தலை 5 மைல். உயர்ந்த மலை, கடல்மட்டத்தின்மேல் 1178அடி உயரமுள்ளது. (952 படிகள்). காலையில் 61 கடம்பந்துறை, கட்டுச்சியில் இத்தலம், மாலையில் 43 ஈங்கோய்மலை ஆகிய மூன்றையும் கார்த்திகை சோமவாரங் களில் இந்நாட்டு மக்கள் தரிசிப்பதுண்டு. 6072—81 (அ). **252. வாய்மூர்** g திருநெல்லிக்காவல் 8 மைல். அப்பருக்கு வருமாறு இறைவன் கட்டளையிட, அவர் சென்று தரிசித்ததை 5727, 5728ம் பாசுரங்கள் கூறும். சப்தவிடங்களுள், இங்கு கமல நடனம் புரியும் நீலவிடங்கர் உள்ளார். 2670—80 (ச). 5727—36, 7008—17 (அ2). **253. வாழ்கொளிப்புத்தூர்** (திருவாளப்புத்தூர்) a வைத்தீஸ்வரன் கோயில் 5 மைல். வாள் ஒளிப் புற்றூர், வாள் ஒளிக்கப்பட்ட புற்று உள்ள

ஊர் என்றும் கூறப்படுகிறது. 426—36 2486—96 (ச2) ; 7805—16 (சு). ஆ 3 பதிகம். **254. வான்மியூர்** (திருவாமூர்) a சைதாப்பேட்டை 4 மைல் பஸ் வழி. வால்மீகிரிஷிக்குத் திருநடன தரிசனம் கொடுத்த தலம். சப்தவிடங்கக் கணக்கில் சேராத தியாகராஜஸ்தலம். மூலஸ்தான சிவலிங்கத்தைக் காராம்பசு பால் சுரந்த அபிஷேபிக்க, உருகியதால், மூர்த்தி அந்நிலையில் காட்சி யளிக்கிறார். கடற்கரை தலம். 1502—12, 3384—93 (ச2) ; 6038—47 (அ). **255. விசயமங்கை** a சுந்தரப் பெருமாள் கோயில் 4 மைல். விசயன் (=அருச்சுனன்) வழிபட்டு வரம் பெற்றதை 5945ம் பாசுரம் கூறும். 2976—86 (ச) ; 5938—47 (அ). (விடைவாய்—274 பார்க்க.) **256. வியலூர்** a கும்பகோணம் 4 மைல். 130—140 (ச). **257. விளநகர்** a மாயவரம் 4 மைல். 2313—23 (ச) **258. விளமர்** g திருவாரூர் 2 மைல் 3745—55 (ச). **259. விற்குடி வீரட்டம்** g விற்குடி $1\frac{1}{2}$ மைல். சலந்தராசுரனைச் சங்கரித்த வீரட்டம் 2638—47 (ச). **260. விற்கோலம்** (கூவம்) q கடம்பத்தூர் 6 மைல். சென்னையிலிருந்து நேரே கூவத்திற்குப் பஸ் போகிறது. திரிபுரமெரிக்கச் செல்லும் வழியில் இத்தலத்தில் தேரின்கூவரம் (=ஏர்க்கால்) ஒடிந்தமையால், சிவபெருமான் விற்கோலமாகக் காட்சி யளித்தமையால், தலப்பெயர் திரு விற்கோலம் என்றும் கூவம் என்றும் வழங்குகிறது. சம்பந்தர் 3047, 3048ம் பாசுரங்களில் கூறும் கூகம் என்பது மருவி கூவம் ஆயிற் றென்பதும் பொருந்தும். மூலஸ்தான மூர்த்தி தீண்டாத் திருமேனி. கல்வெட்டுக்கள் 1909 (322—350) 1912 (30) துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய தலபுராணம் அருமையானது. 3042—51 (ச). **261. வீழிமிழலை** (திருவீழிமிழலை) g பூந்தோட்டம் 7 மைல். கல்வெட்டுக்கள் 382—499/1908. சக்கராயுதம் பெறுதற்காகத் திருமால் நாடோறும் இத்தலத் திறைவனை 1000 தாமரை மலர் களைக் கொண்டு அருச்சித்து வர, ஒருநாள் ஒரு மலர் குறையத் தனது கண்ணையே எடுத்து அருச்சனையை முடித்ததை 4784ம் பாசுரம் கூறும். திருமால் விண்ணிலிருந்து கொணர்ந்த விமானமே கோயிலாயிற் றென்பதை 4085ம் பாசுரம் கூறும். மூலஸ்தான இலிங்க மூர்த்தியின் பின்புறம் பார்வதி பரமேசுவரர் திருமணக் கோலம் உளது. பஞ்சம் வந்தபோது, அப்பருக்கும் சம்பந்தருக்கும் (அடியார்கட் கமுதளிக்க) இறைவன் நாடோறும் காசுபடி கொடுத்ததை 8123ம் பாசுரம் கூறும். இக்காசுகளுள் அப்பருக் களித்த காசு சுலபமாக மாறிற்று. சம்பந்தருக்களித்த காசு வாசியுள்ளதாயிருந்தது. "இமயப் பாவை திருமுலைப்பால் தேசம் உய்ய உண்டவர் தாம் திருமா மகனார் ஆகலினால் காசு வாசியுடன் பெற்றார், கைத்தொண்டாகும் படிமையினால் வாசி

இல்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர்'' என்று சேக்கிழார் இதை நயம்படக் கூறுகிறார். சம்பந்தர் (992—1002) "வாசி தீரவே'' எனும் பதிகம் பாடிய பிறகு வாசியிலாக் காசு பெற்றார். சித்திரைப் பெருவிழாவில் 6ம் நாள் காத்யாயனி கலியாண உத்ஸவம் மிகப் பிரபலம். 34—44, 108—118, 206—216, 371—81, 882—92, 992—1002, 1337—47, 1416—26, 2889—99, 3657—56, 3712—22, 3853—63, 3990—4000, 4046—56, 4076—89 (ச15); 4777—86, 5081—90, 5342—62, 6742—83 (அ8) 8116—25 (சு). ஆ 24 பதிகம் **262. வெஞ்சமாக் கூடல்** r கரூர் 15 மைல். 7649—58 (சு). **263. வெண்காடு** (திருவெண்காடு) a சீகாழி 7 மைல். கல்வெட்டுக்கள் 1896 (110—122) 1918 (449—521) தெஇக 5 (973—987) கோயிலுக்குள் சூரிய தீர்த்தம், சந்திர தீர்த்தம், அக்கினி தீர்த்தம் எனும் முக்குளங்கள் உள்ளன. இம்முக்குள நீராடி இறைவனை வழிபடுவோர் புத்திரப் பேறுடன் வேண்டிய வரமெலாம் பெறுவர் என்று 1983ம் பாசுரம் கூறும். இவ்வாறு வழிபட்ட அச்சுத களப்பாளர் **மெய்கண்டார்** எனும் சந்தான குரவரைப் பெற்றெடுத்தார். தேவேந்திரனும் ஐராவதமும் வழிபட்டதை 1984, 1988ம் பாசுரங்கள் கூறும் இத்தலத்தில், பஞ்சப் பிரஹ்ம மூர்த்தங்களுள் தென்முகமாயுள்ள அகோரமூர்த்தி சந்நிதியும் வழிபாடும் பிரபலம். இவர் எண் தோள் முக்கண் ஈசராகக் காட்சி யளிக்கிறார். மாசிமகப் பெருவிழாவில் 5ம் நாளன்று இவர் திருவீதி யுலா வருதல் சிறப்புடைத்து. இவர் சந்நிதிக் கருகில் சிதம்பரத்திலுள்ளது போலவே நடராஜா சபை ரஹஸ்யம் முதலியன உள்ளன. "எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும் மண்மிசை மால் பலர் மாண்டனர்'' என்ற கணக்கில் இறந்தவர்கள் ஈமச்சுடலை, இக்கோயில் சந்திர தீர்த்தத்தின் அருகிலுள்ளது. கயாக்ஷேத்திரத்தில உள்ளதுபோலவே இங்கும் அக்ஷய வடம் எனும் அழியாத ஆலமரமும் உளது. இங்கு முக்குள நீராடிப் பலர் தென்புலத்தார் வழிபாடும் செய்கின்றனர். திருவெண்காடர் எனப்பெயரிய பட்டினத்தடிகள் வரலாற்றுத் தொடர்பும் இத்தலத்திற்குண்டு 1982—92, 2124—34, 2954—64 (ச3); 5716—26, 6593—6602 (அ2); 7276—85 (சு). ஆ 6 பதிகங்கள். **264. வெண்டுறை** (திருவண்டுதுறை) k மன்னார்குடி 6 மைல். 3449—59 (ச). **265, வெண்ணியூர்** (கோயில் வெண்ணி) j கோயில் வெண்ணி ½ மைல். 1612—22 (ச); 5391—5401, 6834—43 (அ2). **266. வெண்ணெய் நல்லூர்** (திருவெண்ணெய் நல்லூர்) d திருவெண்ணெய் நல்லூர் ரோட் 4 மைல். கல்வெட்டுக்கள் 1902 (309—324) 1902 (309—324) 1921 (420—512) தெஇக 7 (938—953) 12 (140, 150, 162, 177, 189, 193—95, 206, 229, 256, 264) உமாதேவியார் அருள் பெற்றமையால்

அருட்டுறை ஆயிற்று. அப்பர் திருவாக்கில் "பெண்ணை அருட்டுறை'' என்று 6949ம் பாசுரம் கூறுதல் காண்க. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமணத்தைத் தடுத்து ஆவணப் பழஓலை காட்டி ஆட்கொண்ட அற்புதத்தலம். மெய்கண்டார் தமது நல்லம்மானால் வளர்க்கப்பெற்றுச் சிவஞான போதம் அருளிச் செய்ததும். சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப் பெற்று, இராமாயணத்தைக் கவிச்சசக்ரவர்த்தி கம்பர் பாடியதும் இத்தலத்தில் நிகழ்ந்தவை. விருத்தவேதியனாக வந்த இறைவன் சுந்தரர் வழக்கை வென்ற இடம், வழக்கு வென்ற திருவம்பலம் என்று கல்வெட்டிற் குறிக்கப்பட்டுளது. இது கோபுரவாயிலுக் கெதிரிலுள்ள 100 கால் மண்டபமாகும். 7225—34(சு). **267. வெண்பாக்கம்** (திருவுளம்பூதூர்) q திருவள்ளூர் 7 மைல். சென்னைக்குக் குடிதண்ணீர் சேமிக்கப்பட்டிருக்கும் பூண்டி நீர்த்தேக்கத்துள் (Poondi Reservoir) இத்தலமும் கோயிலும் மூழ்கியுள்ளன. கோயிலிலிருந்த மூர்த்திகள் இத்தேக்கத்தின் கரையில் ஒரு அறையில் காட்சியளிக்கும். கண்ணிழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்தில் ஊன்றுகோல் பெற்றனர். 8126—36(சு). **268. வேட்களம்** a சிதம்பரம் 1 மைல். இப்போது அண்ணாமலைப் பல்கலைக்கழகம் இருக்கும் அண்ணாமலை நகரின் கிழக்கெல்லையிலுள்ளது. அருச்சுனன் பாசுபதாஸ்த்திரம் பெற்ற தலம். சம்பந்தர் தமது தங்குமிடத்தை இத்தலத்தில் வைத்துத் தில்லைக்குத் தரிசனம் செய்ய அவ்வப்போது சென்றனர் எனப் பெரியபுராணம் கூறும். 415—25 (ச); 5644—53 (அ) **269. வேட்டக்குடி** h காரைக்கால் 5½ மைல். 3503—13 (ச). **270. வேதிகுடி** (திரு வேதிகுடி) a திட்டை 3 மைல். சப்தஸ்தான ஸ்தலங்களுள் ஒன்று. 3635—15 (ச); 5021—30 (அ). **271. வேள்விக்குடி** a குத்தாலம் 3 மைல். 3767—77 (ச); 7402—11, 7975—84 (சு2). **272. வேற்காடு** (திருவேற்காடு) q ஆட்டி 4 மைல். மூர்க்கநாயனார் தலம். அகத்தியருக்குத் திருமணக் கோலம் காட்டியது மூலஸ்தான லிங்கத்தின் பின்புறம் உளது 612—22 (ச). **273. வைகன் மாடக்கோயில்** (வைகல்) a ஆடுதுறை 4 மைல். கோச் செங்கட்சோழன் கட்டிய 70 கோயில்களுள் ஒன்று. 2987—97 (ச). **274. வைகாவூர்** a சுந்தரப் பெருமான் கோயில் 5 மைல், கும்பகோணத்திலிருந்தும் 5 மைல். 3559—69 (ச). **274–a. விடைவாய்** (திருவிடைவாசல்) j கொரடாச்சேரி 3 மைல். திருமுறை கண்ட காலத்திற் கிடைக்காமல், 1918 வருடம் அரசாங்கத்து கல்வெட்டிலாகா அதிகாரிகளாற் கண்டு பிடிக்கப்பட்ட சம்பந்தர் பதிகம். இப்பதிப்பில் 3ம் திருமுறை முடிந்த பிறகு, 4ம் திருமுறை

தொடங்குமுன், திருமுறைக் கணக்கில் சேராத வகையில் 4148—58 என்ற எண்களோடு அச்சிடப் பெற்றுள்ளது.

அஷ்ட வீரட்டத் தலங்கள் 5, 63, 68, 104, 124, 191, 259, வழுவூர் (இது வைப்புத்தலம் என்பது 6951ம் பாசுரத்தில் வைத்துள்ளதால் அறியப்படும். ௨ மங்கா நல்லூரிலிருந்து 1 மைல்). கடவுளர் பூசித்த தலங்களுள் ஆனைமுகன் 137, இராமன் 22, 37, 38, இலக்குமி 23, 170, உமாதேவியார் 56, 107, 128, 224, 225 காளி 7, 88 திருமால் 69, 127, 145, 231, 233, 245, 250, முருகவேள் 94, 139, 207, 217, 238 (முனிவர் முதலியோர் சிற்சில காரணங்கட்காக விலங்குகள் உருக் கொண்டு பூசித்த வரலாறுகளை ஒட்டி) விலங்குகள் பூசித்த தலங்களுள் அணில் பூசித்தது 100, ஆ (—பசு) 22, 29, 30, 76, 215, ஆனை 31, 89, 119, 215, ஈ 43, எறும்பு 48, கழுகு 80, 207, காக்கை 100, குரங்கு 99—102, சிலந்தி 31, 89 நாரை 167 பாம்பு 39, 96, 122, 164, 165, 198, 200 புலி 47, 54, 122, 199, 216 மயில் 224, 225 கடற்கரைத் தலங்கள் 1, 3, 38, 51, 87, 108, 116, 117, 121, 130, 141, 144, 153, 159, 165, 199, 210, 225, 229, 239, 245, 254, 269 ஆ. 23 தலங்கள். கயிலைக்கு நிகரெனப்படும் தலங்கள் 89, 121, 132 (இவற்றைத் தக்ஷிணகயிலாயங்கள் என்பது புராண வரலாறு) காசிக்கு நிகரெனப்படுவன 6, 34, 50, 130, 224, 250, 263.. சப்தவிடங்கங்கள் (தியாகராஜ ஸ்தலங்கள்) 23, 90, 126, 160, 165, 229, 252, சப்தஸ்தான ஸ்தலங்கள் (ஐயாற்று ஏழூர் வலம் வரும் விழாத்தலங்கள்) 50, 68, 142, 174, 187, 212, 270. பஞ்ச சபைகள் உள்ள தலங்கள் 26, 28, 105, 122, 179. பஞ்ச பூதஸ்தலங்கள் 4, 31, 56, 89, 122 (56 விட்டு 23 கொள்வாருமுளர்), மலைத்தலங்கள் 4, 15, 36, 43, 48, 70, 80, 83, 89, 105, 110, 111, 121, 132, 183, 186, 237, 251 (18 தலங்கள்) முத்தியளிக்கும் தலங்கள் (நினைத்தாலே முத்தி 4, தரிசித்தால் முத்தி 122, பிறந்தாலே முத்தி 23, இறந்தாலே முத்தி 6949ம் பாசுரத்துள் கூறப்படும் வாரணாசி அல்லது காசி எனும் வைப்புத் தலம் சேர சோழ பாண்டிய மன்னர்கள் செங்கோல் செலுத்திய காலத்தில் ஏற்பட்ட நாட்டுப் பிரிவினையின்படி, சேரநாடு அல்லது மலைநாட்டுத் தலம் 3, துளுவநாட்டுத் தலம் 116, ஈழநாட்டுத் தலங்கள் கொங்குநாட்டுத் தலங்கள் 12, 76, 110, 156, 197, 238, 262 (ஆ. 7), பாண்டி நாட்டுத் தலங்கள் 19, 20, 28, 38, 49, 91, 105, 111, 136, 179, 183, 205, 210, 213 (ஆ. 14), நடுநாட்டுத் தலங்கள் 4, 5, 14, 22, 35, 47, 106, 124, 141, 149, 151, 169, 177, 178, 199, 209, 215, 231, 236, 237, 243, 266 (ஆ. 22), தொண்டை நாட்டுத் தலங்கள் 2, 8, 26, 33, 40, 41, 45, 51, 52, 53, 55, 56, 57, 58, 59, 80, 82, 89, 100, 192, 195, 225, 230, 233, 239, 242, 246, 248, 254, 260, 267, 272 (ஆ. 32), சோழ

